# திருக்குறள் புத்தாய்வு

டாக்டர் இரா. அருளப்பா




மெய்ப்பொருள் பதிப்பகம்
278, கொன்னூர் நெடுஞ்சாலை,
அயன்புரம், சென்னை-600 023.

# என் முன்னுரை

நான் உயர்நிலைப்பள்ளியில் கல்வி பயின்ற காலத்தில், தமிழ்ப்பாட நூலில் கம்ப இராமாயணம், மகாபாரதம், பெரிய புராணம், திருவாசகம், தாயுமானவர் பாடல்கள் போன்ற நூல் களிலிருந்து சில பகுதிகள் இருந்தன. திருக்குறளிலிருந்து பகுதிகள் இருந்தனவா என்பது இன்று நினைவுக்கு வரவில்லை இருந்திருக்கலாம்.

1939—1940ஆம் ஆண்டுகளில் சென்னை சாந்தோமில், இளங்குருகுல மாணவர்க்குத் தமிழ் கற்றுக் கொடுக்க வேண்டு மென எனக்குப் பணிக்கப்பட்டது. தனித்தமிழ் இயக்கம் தொடங்கி உரம் பெற்றுக்கொண்டிருந்த காலம் அது. அஃது என்னை மிகவும் கவர்ந்தது. மாணவர்க்கு எதைப் பாடநூலாகப் பயன்படுத்த லாம் என்று எண்ணியபோது எப்படியோ திருக்குறள் நினைவுக்கு வந்தது. முதல் அதிகாரம் தொடங்கியவுடன் 'ஐந்தவித்தான்' என்கிற சொல் தொடர்க்குத் தரப்பட்டிருந்த விளக்கம் கடவுளுக்கு எங்ஙனம் பொருந்தும் எனக் கேள்வி எழுந்தது? விடை கிடைக் காமலே ஆண்டுகள் பல கழிந்தன. கடவுள் வாழ்த்துக்கு அடுத்த படியாக மழையை அத்துணை சிறப்பித்துக் கூறியது ஏன்? என்கிற கேள்விக்கும் விடைகாண முடியவில்லை. 'நீத்தார் பெருமை' அதிகாரத்தில் வரும் ஐந்தவித்தான் ஆற்றலைப் பற்றிய குறளில், அவ்வாற்றலுக்குச் சான்று இந்திரனே என்னும் கருத்தும் மனநிறைவு அளிக்கவில்லை.

ஆனால், இதற்கெல்லாம் மேலாக மூன்றாம் பகுதியில் (காமத்துப்பாலில்- இன்பத்துப்பாலில்) உள்ள பாக்களைப்பற்றி மிகப் பெரிய ஐயமொன்று கிளம்பியது. முதல் இரண்டு பால் களில் மிகமிக உயர்ந்த அரிய கருத்துகளைக் கூறிய திருவள்ளுவர், மூன்றாம் பாலில் காமத்தைப்பற்றிப் 'பச்சை' யாகவே கூறியுள்ளதன் நோக்கம் என்ன? இதில் கூறப்படுவது காமந்தானா? அல்லது விவிலியத்தில் காணும் 'உன்னத சங்கீதம்' எனப்படும் பகுதியைத் தழுவி இயற்றப்பட்டதா?......இக் கேள்விகளுக்கு விடைகாண முடியாத நிலையிலே ஆண்டுகள் கழிந்தன.

இந்த நிலையில், புலவர் (இப்போது டாக்டர்) மு. தெய்வநாயகம் அவர்கள், திருவள்ளுவர் கிறிஸ்தவரா? என்கிறதொரு நூலை அச்சிட்டு, அணிந்துரை தருமாறு

என்னைக் கேட்டுக்கொண்டார். அந்நூலை வன்மையாகக் கண்டித்து, அணிந்துரை தர மறுத்துவிட்டேன். ஆனால் புலவர், நூலிலிருந்த கருத்துகள் சிலவற்றை அழுத்தமாக விளக்கினார். ஒரு சிறிது மனநிறைவு ஏற்பட்டாலும், முழுமையாக ஏற்றுக் கொள்ளும் நிலை ஏற்படவில்லை. நூல் வெளியாயிற்று. பின்னர் 'ஐந்தவித்தான் யார்?' என்கிற நூலை எழுதி என்னிடம் படித்துக் காட்ட வந்தார். பல வினாக்கள் தொடுத்தேன். விளக்கம் தந்தார். மனநிறைவு வளர்ந்தது. அதன் பின்னர், 'வான் சிறப்பு,' 'நீத்தார்' இவற்றை விளக்கி நூல்கள் எழுதிக் கொணர்ந் தார். சிறிது சிறிதாக ஆய்வு ஏற்புடையதாயிற்று. அதன் பின்னர் 'சான்றோர்', 'இயல்புடைய மூவர்,' 'எழுபிறப்பு,' 'அருட் செல்வம்' பற்றிய நூல்களையும் இயற்றினார். இங்ஙனம் ஆய்வு மனப்பான்மை என்னுள்ளும் வளர்ந்த காரணத்தால் ,வள்ளுவர் கூறும் சான்றாண்மை,' 'வள்ளுவர் கூறும் அறம்' என்னும் இரு நூல்களை யானே இயற்றலானேன். இங்ஙனம் தொடக்கத்தில் எனக்கு ஏற்பட்ட ஐயப்பாடுகள் பேரளவில் நீங்கி விட்டன. ஆனால், 'மூன்றாம் பால்' பற்றி என்ன நினைப்பது? அதில் காணும் 250 குறட்பாக்களுள் மறைந்திருக்கும் கருத்துகள் எவை? அப்பால் கூறுவது காமமா? அஃதாவது சிற்றின்பமா? அல்லது பேரின்பமா? பேரின்பமே எனின் 250 குறட்பாக்களின் கருத்தை விளக்கவேண்டுமே, என்செய்வது? என்று மீண்டும் மீண்டும் எண்ணிக்கொண்டிருந்தபோது, என்னையுமறியாமல் ஏதோ ஓர் அருள் உந்துதலால் 'பேரின்ப விளக்கம்' எழுதலா னேன். இஃது, 'அவன் அருளால் அவன்தாள் வணங்கி' என்பதற்கு ஒப்ப, அவன் அருளால் அருட் கருத்து அறிந்தேன்!

இந்நூல்களின் தொகுப்பே இப்போது வெளியாகும் 'திருக்குறள் புத்தாய்வு'. இஃது என் பெயரில் வெளியிடப்பட்டிருந்தபோதிலும், டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களுடைய பங்கு சிறிதன்று என்பது தெளிவு. அன்னார்க்கு என் நன்றி உரித்தாகுக.

**திருக்குறள் புத்தாய்வு விளக்கம்**

இந்நூலில் விரிவான விளக்கம் தேவைப்படும் பகுதிகளுக்கு விரிவான விளக்கமும், அதே பகுதிகளுக்குச் சுருக்க உரையும், விரிவான விளக்கம் தேவைப்படாத பகுதிகளுக்குச் சுருக்க உரையும் காணலாம். 133 அதிகாரங்களுக்கும் இத்தகைய உரை தரப்பட்டுள்ளது.

இரா. அருளப்பா.

செந்தமிழ்ச்செல்வர், கலைமாமணி, பேரவைச்செம்மல்
பன்மொழிப்புலவர் டாக்டர் கா. அப்பாத்துரையார்
10, அப்பாத்துரை தெரு
சென்னை-18.

டாக்டர் அருளப்பாவின் திருக்குறள் பற்றிய ஆய்வு நூல்கள் மிகப்பல. அவற்றுள் முழுமையான சிறந்த புத்தம்புதிய நூலாகத் திருக்குறள் புத்தாய்வு என்னும் இவ்வாராய்ச்சியேடு விளங்குகிறது. இது திருக்குறள் ஆராய்ச்சி வரலாற்றில் ஒரு புரட்சிகரமான புத்தம்புதிய திருப்பத்தை உண்டு பண்ணும் ஏடு ஆகும். ஏனெனில் திருவள்ளுவரின் திருக்குறளே உலகில் நீண்ட காலமாகப் புரட்சிகரமான மாறுதல்களை ஏற்படுத்தி வரும் பழமை வாய்ந்த இலக்கிய ஏடு ஆகும். இந்தப் புத்தாய்வுக்கும் அதே சிறப்பு உண்டு. மூல ஆசிரியராகிய திருவள்ளுவரின் பெருமை இந்தப் புத்தாராய்ச்சி ஆசிரியர் மீதும் படிகின்றது எனலாம். இப்பெரு நூலின் உரையாசிரியர்களிடையேயும், ஆராய்ச்சியாளர்களிடையேயும் அவருக்குத் திருவள்ளுவரைப் போன்ற ஒரு தனியிடம் உரியதாகும்.

திருவள்ளுவருடைய திருக்குறள் உலகத்தில் மிகப்பல மொழிகளில் மொழிபெயர்க்கப்படும் பெருமையை உடையது. இவ்வகையில் இந்த ஏடு விவிலியத் திருமறை, திருக்குரான் ஆகிய இரண்டினுக்கும் மட்டும்தான் முதலிடம் தருவதாய் உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. திருவள்ளுவர் இந்த ஏட்டை இயற்றி ஆயிரக்கணக்கான ஆண்டுகள் ஆகிவிட்டன. இத்தனை ஆண்டுகளிலும் பத்துக்குக் குறையாத பழமைவாய்ந்த உரையாசிரியர்கள் பெயர்களும், ஐந்துக்குக் குறையாத பழைய உரைகளும் நமக்கு வந்து எட்டியுள்ளன. இவையல்லாமல் கடந்த இரண்டு நூற்றாண்டுகளாக இதற்கு எத்தனையோ மொழி பெயர்ப்புகளும், உரைகளும், உரைவிளக்க ஆராய்ச்சிகளும் ஏற்பட்டுள்ளன. அண்மைக்காலமாகப் பல உரையாசிரியர்களும் ஆராய்ச்சியாளர்களும் மூல ஆசிரியரின் கருத்துக்களை ஆராய்ந்து விளக்கியும், திருத்தியும், மறுதிருத்தங்கள் ஏற்படுத்தியும் இதன் புகழையும், செல்வாக்கையும் உலகளாவ வளர்த்துள்ளனர். திருக்குறள் புத்தாய்வு என்ற இந்த ஏடு, இந்தப் புதிய ஆராய்ச்சிகளின் இறுதி முத்தாய்ப்பு ஆகவும் அவற்றின் போக்கில் ஒரு புதிய திருப்பமாகவும் அமைந்துள்ளது. இவ்வாறாக இந்த ஏடு புதிய திருத்தங்களின் ஒரு புதிய திருப்பமாகவும், புதிய விளக்கங்களின் ஒரு விளக்கமாகவும் அமைகிறது,

இந்த மறு விளக்க மறு ஆய்வு இயக்கத்திற்குத் தலைமை வகிக்கும் முறையில் டாக்டர் அருளப்பாவின் தகுதி மிகப்பெரிது. இதை நாம் அறிய வேண்டுமானால் மூல நூலின் தோற்ற வளர்ச்சிக்குரிய வரலாற்றுச் சுற்றுச்சார்பையும் அதன் செல்வாக்குக்குரிய ஏற்ற இறக்க அலைபாய்வுகளையும் நாம் ஆராய்தல் வேண்டும்.

புதிய விடுதலை இந்தியாவின் வரலாற்றை ஆக்கும் பொறுப்புடைய அறிஞர்களின் பார்வையில் அஃது, உலகளாவிய மூன்று மிகப்பெரிய வரலாற்று இயக்கங்களின் வழி வந்தது என்பது தெளிவாகும். அவையாவன: முதலாவதாக இந்தியாவின் பகுத்தறிவு புரட்சி பேரியக்கம் கி. மு. 7ஆம் நூற்றாண்டை மையமாகக்கொண்டு எழுந்து உபநிடத இலக்கிய முழுவதையும் ஆக்கிப்படைத்து, புத்தம், சமணம் ஆகிய சமயங்கள் தோன்றக் காரணமாய் அமைந்திருந்தது. இந்த இயக்கம் அதனுடன் சமகால வாழ்வுடைய கன்புசியஸ், லயோட்சி ஆகியோர் காலத்திய சீனா, ஜரதுருஷ்டிரரின் காலத்திய இரான், பித்தகோரஸ் காலத்திய கிரீஸ், இசயா காலத்திய இஸ்ரேல் ஆகிய நாடுகளின் நாகரிகங்களின்மீது, தன் தாக்கத்தைச் செலுத்தியிருந்தது. இரண்டாவதாக இந்திய பக்தி இயக்கம் தமிழகத்தில் மூன்றாம் நூற்றாண்டில் தோன்றி நம் காலம்வரை இந்தியாவெங்கும் பரவி வருகின்றது. மூன்றாவதாக இந்தியாவின் மிகப் பழங்கால தேசிய திட்ட அமைப்பு இயக்கமே இன்றைய உலகில் திட்ட அமைப்பு இயக்கங்களுக்கு மூலமுதல் ஆகும். திருக்குறள் இந்த மூன்று இயக்கங்களில் முதல் இரண்டுடனும் நெருங்கிய தொடர்புடையது. தமிழின ஆய்வாளர் மறைமலையடிகள், இந்திய நாகரிக ஆய்வாளர் திருத்தந்தை ஹிராசு, ஆல்பர்ட் ஸ்வைட்சர், ஏ. எல். பாஷம் ஆகியோர் திருக்குறளின் இந்தக் கால கட்டச் சூழலை மிகவும் வலியுறுத்தியுள்ளனர். திருக்குறள் இந்த மரபில் வந்த இந்தியாவில் பண்டை ஞானம் அஃதாவது, திராவிட இன சிந்தனையாளரின் மூலக் கோட்பாடு ஆகும் என்று அவர்கள் கருத்துரைத்துள்ளனர்.

திருவள்ளுவர் 2000 ஆண்டுகளுக்கு முன் அஃதாவது கி.மு. 31க்கும் கி.பி. 50க்கும் இடைப்பட்ட காலத்தில் திருக்குறளைத் தமிழ் மொழியில் இயற்றினார் என்று கருதப்படுகிறது. ஆனால் இந்த ஏட்டில் திருவள்ளுவருடைய குரல் ஒரு மொழியின் குரலாகவோ ஒரு நாட்டின் குரலாகவோ ஒரு சமயத்தின்

குரலாகவோ ஓரினத்தின் குரலாகவோ அமையவில்லை; மனித இனத்தின் முழுக்குரலாக அஃதாவது, எல்லா இனத்தினர், சமயத்தினர், நாட்டினர், மொழியினர் அறிந்துகொள்ளக்கூடிய மனிதயினத்துக்குப் பொதுவான ஒரு கடவுள் மொழியின் குரலாகஅஃது அமைந்துள்ளது.

திருவள்ளுவரின் இந்த மனிதயினப் பொதுமைப்பற்றி இந்திய விடுதலை இயக்கம் பாடிய தமிழ் தேசிய கவிஞரான பாரதி,

> "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
> வான்புகழ் கொண்ட தமிழ்நாடு"

என்று குறிப்பிடுகிறார்.

இந்தப் மனிதயினப் பொதுமைக் கருத்து தற்கால நாகரிகத் தாக்குதலால் ஏற்பட்டதன்று. ஏனெனில் காலம் குறிக்கப் படாத, ஆனால் கி.பி. 9-ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட திருவள்ளுவ மாலை என்ற ஏடு இதனை,

> 'ஒன்றே பொருள் என்னின் வேறென்ப; வேறெனின்
> அன்றென்ப ஆறு சமயத்தார்—நன்றென்ன
> எப்பாலவரும் இயைபவே வள்ளுவனார்
> முப்பால் மொழிந்த மொழி'

என்று பாராட்டுகிறது.

திருவள்ளுவரின் பொதுமை நிலை தற்கால உலகின் சமயங்களுக்குரிய சமரச மனப்பான்மையன்று. ஏனெனில் திருக்குறள் சைவர்களாலும், வைணவர்களாலும், இவர்களினும் ஆர்வமாக சமணர்களாலும், புத்தர்களாலும், கிறித்தவர்களாலும், முஸ்லிம்களாலும் தங்கள் தங்கள் சமயத்துக்கே உரியதென்று வழக்காடப் படும் சிறப்பை உடையது. சைவ, வைணவ பக்தி இயக்கத்தின் அண்மைக்கால இயக்கங்களான சீக்கிய சமயம், கபீர்பாந்த், ராதா சத்சங்கம், கோரக்பாந்த் ஆகியவைகூட இந்தப் பொதுமை நிலையை ஏற்று வாதாடுகின்றன.

இங்கிலாந்தில் விக்டோரியா அரசியின் காலத்தை ஓர் இடை நிலைப்பட்ட காலமென்று வரலாற்றாசிரியர் குறிப்பிடுவதுண்டு. இந்தக்காலத்தில் இங்கிலாந்து சாம்ராஜ்ய ஆட்சிச்செருக்காலும் செல்வவளச்செருக்காலும் தன்னை மறந்திருந்தது. ஆனாலும் இதே காலத்தில் தொழிலாள இயக்கங்களும் சமதர்ம, பொது

வுடைமை இயக்கங்களும் எங்கும் வளர்ந்து வந்தன. இந் நிலையில் பல அறிஞர்கள் பழமையை புதுமையின் வண்ணத் திலும், புதுமையை பழமையின் வண்ணத்திலும் எழுதிச் சமாளித்து வந்தனர். தற்காலப் பொதுவுடைமைவாதிகள் இவ் வறிஞர்களைப் போலிப் பொதுவுடைமை போலீச்சமதர்மவாதிகள் என்று கூறுவது வழக்கம். இந்தியாவிலும், ஐரோப்பாவிலும் நாம் இதுபோன்ற இடைநிலைப்பட்ட காலங்களைக் காண் கிறோம்.

ஐரோப்பிய வரலாற்றை அறிஞர் மூன்று ஊழிகளாகப் பிரித்துக்காண்பர்: முதலாவது பண்டைக்காலம் (கி.மு. 1000 முதல் கி.பி. 500 வரை), இரண்டாவது இடைநிலைக்காலம் அல்லது இருண்ட காலம் (கி.பி. 500 முதல் 1500 வரை), மூன்றாவது தற்காலம் (கி.பி. 1500 முதல் இன்று வரை). இந்தியாவிலும், ஐரோப்பாவிலுள்ள இதே காலப்பிரிவுகளை நாம் காண்கிறோம். ஐரோப்பாவில் பண்டைக்காலத்தில் உயர்தனிச் செம்மொழிகளாகிய கிரேக்கமும், இலத்தீனும் உலகம் இன்று வரை கண்டிராத மிக உயரிய ஒரு நாகரிகத்தையும் மொழி இலக்கியங்களையும் படைத்து உருவாக்கியிருந்தன, இதே காலக்கட்டத்தில் ஐரோப்பாவில் விஞ்ஞான வளர்ச்சியின் அடித்தளமும் கட்டமைக்கப்பட்டது. ஆயினும் இவ்வூழியின் இறுதிக்குள் இந்த இரண்டு மொழிகளும் வழக்கிறந்துபட்டன. இந்தியாவிலும் இதே ஊழி. வேத, உபநிடத புராண கால சமஸ் கிருத இலக்கியங்களின் தோற்ற வளர்ச்சி அழிவுகளைக்கண்டன. அதோடு இவ்வூழியின் இறுதியில் இலக்கியகால சமஸ்கிருதமும் தலைதூக்கிற்று. இடைநிலைக் காலத்திலோ ஐரோப்பாவில் இலக்கியம், நாகரிகம், விஞ்ஞானம் ஆகிய கதிரவனொளிகள் இருண்ட மேகங்களின் மறைப்பால் ஒளியிழந்து தாழ்வுற்றன. இந்தியாவில் இவ்வூழியின் தொடக்கத்தில் சமஸ்கிருத இலக் கியமும், விஞ்ஞானமும் வளர்ந்தன. ஐரோப்பாவில் மூன்றாம் ஊழியில் மாண்டுபோன கிரேக்க இலத்தீனமொழி இலக்கியங் களின் மறுமலர்ச்சியாலும், ஆசிய நாகரிகங்களின் தொடர் பாலும், கலை இலக்கிய நாகரிகங்ளும், விஞ்ஞானங்களும் புது மலர்ச்சி எய்தின.

தென்னிந்தியா சிறப்பாக தமிழகத்திலும் ஹீப்ரு, அரபு முதலிய பண்டை மொழிகளின் பரப்பாகிய மேற்கு ஆசியா விலும் இந்த மூன்று ஊழிப்பிரிவுக்கு இடம் ஏற்படவில்லை. ஏனெனில் இந்த இரண்டு பரப்புகளிலும் இடைநிலைக்காலம் அல்லது இருண்ட காலம் என்ற ஒரு பிரிவு இருந்ததே இல்லை.

இந்த மேற்காசியப்பகுதியில் பண்டைக்காலத்தில் ஹீப்ரு, கிரேக்க, அரபு ஆகிய பண்டை மொழிகளின் பெரு வளர்ச்சி களையும் அதேபோல யூதசமயம், கிறித்தவ சமயம் ஆகியவற்றின் பேரெழுச்சிகளையும் காண்கிறோம். இஸ்லாமிய சமயம் கூட இந்த முதல் ஊழியின் முடிவுகாலம் சார்ந்ததே என்று கூறலாம். தமிழகத்தில் உயர்தனிச் செம்மொழியாகிய தமிழின் இலக்கியமும் சைவ, வைணவ, புத்த, சமண சமயங்களின் புத்தெழுச்சிகளும் இம் முதலூழிக்கே உரியன. இந்த மொழிகளும் சமயங்களும் இடைநிலைக்காலம் என்று கருதப்படும் காலகட்டத்தில் ஒரு சிறிதே நிறமாற்றம் அடைந்தன. இதே நிலை மேற்கு ஆசியா வுக்கும் உரியதாகும். ஏனெனில் சைவம், வைணவம், கிறித்தவம் இஸ்லாம் ஆகிய சமயங்களின் உச்ச வளர்ச்சிகளும் இதுபோலவே தமிழ், ஹீப்ரு, கிரேக்கம், அரபு ஆகிய மொழிகளின் உச்ச வளர்ச்சிகளும் பண்டைக்காலத்திலிருந்து தொடர்ந்து இடைக் காலத்திலும் இக்காலத்திலும் தளராமல் வளர்ந்து கொண்டே இருக்கின்றன.

டாக்டர் அருளப்பா தம் புரட்சிகரமான ஆராய்ச்சி ஏட்டின் முதல் 64 பக்கங்களில் ‘திருக்குறளுக்கு இத்தகைய ஒரு புத்தாய்வு ஏன் தேவைப்படுகிறது’ என்ற வினாவை எழுப்பி அதற்கு விடை யாக இவ்வகையான வரலாற்றுச் சூழல்களை விளக்குகிறார். மேலே கூறியபடி திருக்குறள் ஏடானது முதல் ஊழியிலே அஃதாவது, ஏசுநாதரின் வாழ்க்கைக் காலத்திலோ அதற்கு அருகாமையிலோ கிட்டத்தட்ட கி.பி.50 வாக்கில் எழுதப் பட்டது என்று தெரியவருகிறது. இப்போதும் மயிலாப்பூரில் திருவள்ளுவர் பெயரால் ஒரு கோவில் இருந்து வருகிறது. அதுவே அவர் வீடு இருந்த இடம் என்று கூறப்படுகிறது. அதோடு ஏசுநாதரின் டன்னிரு மாணவருள் ஒருவராகிய தூய திரு தாமஸ் இக்காலக் கட்டத்தில் பரங்கிமலையில் சமயத்தின் பெயரால் உயிர் நீக்சப்பெற்று தியாகியானார் என்று வரலாறு கூறுகிறது. அத்தோடு அவர் கல்லறை மீது எழுப்பப்பட்ட சாந்தோம் கோவில் அருகிலோ அல்லது பரங்கிமலை மீதோ தூய திரு. தாமஸ் பேசிய சமய சொற் பொழிவுகளைத் திருவள்ளுவர் கேட்டிருக்கக் கூடுமென்றும் இயல்பாக நம்பப் படுகிறது. ஆனால் மேனல வரலாற்று ஆசிரியர்கள் இவ்வளவு பழங்காலத்திலேயே மற்ற எந்த நாட்டுக்கும் முற்பட்டு தமிழ கத்தில் ஏசுநாதரின் நற்போதனைகள் வந்து பரவியிருக்கும் என்டதை நப்ப மறுத்து வந்தார்கள். ஆனால் ஏசுநாதர் வாழ்க்கைக்காலத்திய உரோமச் சக்கரவர்த்தியான அகஸ்தஸ் ஸீசருக்கு தமிழகத்தில் அன்று கோயில் எழுப்பப்பட்டிருந்தது

என்றும், ரோம வீரர்களும், வணிகர்களும் இந்நாட்டில் குடியேறி யிருந்தனர் என்றும் இப்போது உறுதியாகத் தெரிகிறது. தம்பட்ட சாலையிலிருந்து புதிதாக அடித்துவந்த தங்க நாணயங்களும் அகஸ்தஸ் ஸீசரின் முத்திரையுடனே தமிழகத்தில் ஏராளமாகப் புதையல்களாகக் கிடைக்கின்றன. இந்நிலையில் மேற்கூறிய நம்பிக்கை வளர்ந்து வருகிறது.

இன்று திருவள்ளுவரைப்பற்றியும் அவரது குடும்பத்தைப் பற்றியும் புராணக்கதைகள் போன்ற நம்பமுடியாத செய்திகள் கதையாக வழங்குகின்றன. இவை பழைய ஆதாரமற்ற புதிய கதைகளே என்பதில் ஐயமில்லை. ஏனெனில் பழைய உரையாசிரி யர்கள் எவரும் இதை அறிந்திருந்ததாகத் தோன்றவில்லை. ஆயினும் திருக்குறள் என்ற ஏட்டுப்பெயரும் திருவள்ளுவர் என்ற ஆசிரியர் பெயரும் உரையாசிரியர்கள் காலத்திலும் அதற்குமுன் திருவள்ளுவமாலையின் காலத்திலும் வழங்கி வந்துள்ளன. ஆனால் திருவள்ளுவமாலை மூலமாகவே கி. பி. 9ஆம் நூற் றாண்டுக்கு முன்பு மக்களிடையே இந்தப் பெயர்களையல்லாமல் வேறு பெயர்களும் பெயரளவாக வழங்கின என்று அறிகிறோம். அதன்படி ஆசிரியர் பெயர்கள் இறையனார், பொய்யில் புலவர் போன்றும், ஏட்டின் பெயர் உத்தரவேதம் போன்றும் பலவாராக வழங்கப்பட்டுள்ளன. இதற்கு முற்பட்ட சங்க இலக்கியங்களிலோ, ஆசிரியருக்கும் ஏட்டுக்கும் இன்னும் உயர்வான மதிப்புநிலை உள்ள பெயர்கள் தரப்படடு இருக்கின்றன. புறநானூறு, சிலப் பதிகாரம், மணிமேகலை ஆகிய நூல்கள் ஆசிரியரை பொய்யில் புலவரென்றும் ஏட்டை அறம் என்றுமே குறிக்கின்றன. இவ்வாறு பிரிட்டனின் விக்டோரியா அரசி கால இடைநிலை மாறுபாடு போன்ற ஒரு மாறுபாடு தமிழகத்தில் சங்ககாலத்திலிருந்தே தொடங்குவதைக் காண்கிறோம். ஏட்டுக்கு வேதமென்றும் ஆசிரியருக்கு இறைவன் என்றும் வழங்கும் மரபு அக்கால எழுத் தாளருக்கு நன்கு தெரிந்திருந்தும் அதை அவர்கள் கூறத் தயங்குவது நமக்குத் தெரிய வருகிறது. இஃது உண்மையில் அயலாட்சி காலத்தில் இந்தியாவில் காந்தியடிகள், ஜவஹர்லால் நேரு ஆகிய தேசத் தலைவர்களின் பெயர்கள் மக்கள் நாவிலிருந் தாலும் நம் தலைவர்கள் என்று மட்டுமே சொல்லும் நிலையை நினைவுபடுத்துகிறது. உண்மையில் கம்பர் காலம் வரை கம்பநாடர் உட்பட எல்லா தமிழ் இலக்கிய ஆசிரியர்களும் திருக்குறளின் சொற்களையும், அடிகளையும், கருத்துக்களையும் ஓயாது எடுத்தாண்டாலும் மறந்தும் திருக்குறள் என்ற நூல் பெயரையோ, திருவள்ளுவர் என்ற ஆசிரியர் பெயரையோ தமிழ் நாயன்மார், ஆழ்வார்கள் பெயர்களையோ குறிப்பிடுவ தில்லை என்று காண்கிறோம்.

தமிழகத்தின் வரலாற்றை இடைநிலைக்காலம் அல்லது இருண்டகாலம் என்று வரலாற்றாசிரியர்களால் கூறப்படும் பிரிவு ஒரு சிறிதும் தாக்கவில்லையானாலும் இந்த இடைநிலைக் கால மாறுதலின் அலைவீச்சு திருக்குறளின் பொருள்விளக்க வகையில் ஓரளவு தாக்கம் ஏற்படுத்தாமல் இல்லை. இந்தக் காலத்திலும் (கி. பி. 9 முதல் 14 நூற்றாண்டு) திருவள்ளுவர் மதிப்போ திருக்குறளின் மதிப்போ ஒரு சிறிதும் குறையவில்லை. ஆனால் இந்த இடைநிலைக்கால உரையாசிரியர்களும் சிறப்பாக அவர்களிடையே காலத்தினால் பிந்தினாலும், பண்பினால் இடைநிலைக்கால கருத்துக்களுக்குப் பேரளவான ஆதரவு தந்த உரையாசிரியர் பரிமேலழகரும் திருவள்ளுவரின் திருக்குறள் சுமிருதிகளுக்கும் மற்ற சமஸ்கிருத ஏடுகளுக்கும் மாறுபடவில்லை என்று காட்டவும் திருவள்ளுவருக்கிருந்த பெருமதிப்பின் மூலம் அந்த ஏடுகளின் மதிப்பை மக்களிடையே உயர்த்தவும் அரும்பாடு பட்டுள்ளனர். இவ்வகையில் தமிழகத்தில் பரிமேலழகருக்கிருந்த புலமை பெருமதிப்பு 19ஆம் நூற்றாண்டு வரைகூட மாறாமல் தொடர்ந்து இருந்ததனால் திருக்குறளின் இந்தப்பொருள் மாறுபாடு அசைக்க முடியாததாகவே நீடித்தது.

இந்நிலையில் டாக்டர் அருளப்பா திருக்குறளுக்கு விளக்கம் கூறுகையில் முதலில் பரிமேலழகர் முதலிய இந்தப் பழைய உரையாசிரியர்களின் பொருள் விளக்கங்களையெல்லாம் வரிசை யாக எடுத்துக்காட்டுகிறார். இதன்பின் நாம் மேலே எடுத்துக் காட்டிய தமிழக இந்திய நாகரிக வரலாற்றாசிரியர்களின் விளக்கப் பின்னணியுடன் வளர்ந்துவந்த புதிய உரைவிளக்க மரபுகளை எடுத்து விளக்க முற்படுகிறார். இந்தப் புதிய உரை விளக்க ஆசிரியர்கள் திரு. கே. கல்யாணசுந்தரனார், நாமக்கல் கவிஞர் இராமலிங்கனார், திருவாசகமணி கே. எம். பாலசுப்பிர மணியன், நான் (டாக்டர் கா. அப்பாதுரை) இவர்கள் எல் லோரையும்விட முக்கியமாகப் புலவர். டாக்டர் மு. தெய்வநாயகம் ஆகியோர்களே. இவர்களில் கடைசியாக கூறப்பட்டவரின் உரைவிளக்கங்களை டாக்டர் அருளப்பா மிகப் பேரளவாக மேற்கோள் காட்டாவிட்டாலும் அவர் உரைவிளக்கங்களே தமக்குப் பேரளவு வழி காட்டியதாக ஒத்துக்கொண்டிருக்கிறார். டாக்டர் அருளப்பாவின் பேரறிவும், பெருமதிப்பும் இந்தப் புதிய விளக்கத்துக்கு முழுநிறைவும் புதிய வேகமும் தந்து இப்புதிய மரபுக்கு அவரையே தனித்தலைவராக ஆக்கியுள்ளன என எண்ணல் வேண்டும்.

இவ்வாறு பழைய உரையாசிரியரின் விளக்கங்களையெல்லாம் தொகுத்துக்கூறியபின், டாக்டர் அருளப்பா புதிய மரபினரின் பொருள் விளக்கங்களையும் சுருக்கமாக எடுத்துரைத்து தமது சீரிய கருத்துரையையும் முடிவையும் அவற்றுடன் சேர்த்து முடிக்கிறார். இடைநிலைக்கால உரையாசிரியர்களின் நோக்கமெல்லாம் சுமிருதிகளின் கருத்துகளுக்கு திருவள்ளுவரது திருக்குறளை மேற்கோளாகக் காட்டி அவற்றுக்கு வலிமை சேர்ப்பதேயாகும். புதிய பொருள் விளக்க மரபினரின் கருத்துப் போக்கின் முதல் அலை இவ்வாறு திருவள்ளுவர் காலத்துக்கும் இந்தியாவின் தொல்பழங்காலமாகிய உபநிடத காலங்களின்மரபுக்கும் புறம் பான இடைச்செருகல்களை நீக்குவதாய் அமைந்திருந்தது. இரண்டாவது படி புத்த சமண சமயங்களால் ஏற்பட்ட இடைக் காலப் புதிய கருத்துக்களை அகற்றி, தூய பழமரபை எடுத்துக் காட்டுவதாகும். புதிய தமிழகத் தந்தை பெரியார் ஈ. வெ. ரா. அவர்களின் அறிவுரைகளைப் பின்பற்றி நானும், டாக்டர் தெய்வநாயகம் அவர்களும் இந்தக் கடுமையான வேலையில் முனைந்து ஒளி காண முயன்றோம். இதுவரை எதிர்மறையாகவே சென்றிருந்த இந்தப் புது முயற்சிகளின் பின் பேராசிரியர் கே. டி. திருநாவுக்கரசு என்பவரின் திருவள்ளுவர் கால உலக நாகரிக ஒப்பீடுகள் மூலம் தெரியவந்த ஆக்கக் கருத்துக்களில் டாக்டர் அருளப்பா அவர்கள் முனைந்துள்ளார்.

டாக்டர் அருளப்பாவின் கிரேக்கம், இலத்தீன் போன்ற பன்டை மொழிகளின் புலமையும் உலக சமய ஒப்பீடு. உலக ஆத்திக சமய இறைக்கோட்பாடுகளின் ஒப்பீடு ஆகிய வற்றின் பேராற்றலும் இத்திசையில் அவருக்குப் பேருதவியா யிருந்திருக்கின்றனஎன்பதில் ஐயமில்லை. எல்லாச் சமயங்களின் அடிப்படைக் கருத்துக்களும் அச்சமய முதல்வர்களின் தூய பண்பு களும் திருவள்ளுவர் இதயத்தைக்காண அவருக்கு உதவின. ஆயினும் வாழ்க்கையின் பெரும் பகுதியையும் ஏசுநாதரின் திருப் பணிகளிலும், விவிலியப் புலமையிலுமே ஆழ்ந்து ஈடுபடுத்தி வாழ்ந்த டாக்டர் அருளப்பா அவர்கள் மற்ற சமயங்களிலிருந்தோ அவற்றின் திரு ஏடுகளில் இருந்தோ மிகுதி மேற்கோள் காட் டாமல் விவிலிய மேற்கோள்களை மட்டுமே மிகப் பேரளவாகக் காட்டியுள்ளார். எனவே கிறித்தவ வாசகர்களும் சரி, கிறித்தவர் அல்லாத வாசகர்களும் சரி அவரது கருத்துக்களுக்கு முழுஉருவம் கொடுக்கும்போது கிறித்தவக் கருத்தை எல்லாச் சமயங்களின் கருத்தாகவும் ஏசுநாதர் பற்றிய கருத்துக்களை எல்லாச் சமய முதல்வர்களின் கருத்துக்களாகவும் மனதில் உருவகப்படுத்திக் கொள்ளுதல் நலம் என்று நான் கருதுகிறேன்.

எடுத்துக்காட்டாக, திருக்குறள் அதிகாரம் ஒன்று, குறட்பா ஒன்பதிலுள்ள எண்குணத்தான் என்ற சொற்றொடருக்கு டாக்டர் அருளப்பா எல்லா மனிதர்களுடனும் எளிதாகப்பழகும் இயல்புடைய கடவுளின் புதல்வனாகிய இறைவன் என்று பொருள் கூறுகிறார். இவ்விடத்தில் வைணவராகிய வாசகர் பக்தவத்சலன் அல்லது அடியார்க்கெளியன் என்ற வைணவ கடவுட் பெயரை அதற்கிணையாக நினைவில் கொள்ளலாம்: இதேபோல முதலாவது, மூன்றாவது அதிகாரங்களில் கையாளப் படும் ஐந்தவித்தான் என்ற தொடருக்கு, டாக்டர் அருளப்பா கடவுள் திருமகன், மனிதயினத்தைக் காப்பதற்காகத் தன்னையே ஒப்புக்கொடுத்தவர் என்று பொருள் கூறியுள்ளார். இங்கே சைவர்கள், இதற்கிணையான தியாகராஜன் அஃதாவது, மனித இனத்தைக் காப்பதற்காக நஞ்சை உண்டு அதைக் கழுத்தில் அடக்கியவன் (நீலகண்டன்) என்ற பெயரை நினைவில் கொள்ளல் வேண்டும். இங்கே நாம் இஸ்லாமிய சமயத்தையோ பிற சமயங்களையோ தனியாகக்கூற வேண்டியதில்லை. ஏனென்றால் இஸ்லாமும், கிறித்தவமும் ஒரே சமய மரபைச் சேர்ந்தவை, மற்ற சமயங்களும் ஒரே மூலசமயத்தின் உலகளாவிய மாறுபாடுகளே.

இவ்வாறு டாக்டர் அருளப்பா உலக சமயங்களின் கருத்துக் களை ஏசுநாதர் மூலமாகவும் கிறித்தவசமயம் மூலமாகவும் காண் கிறார். ஏனெனில் கிறித்தவ சமயமே அவர் தேர்ந்துகொண்ட ஆத்ம சமயமாகும். (இது போலவே நானும், நான் தேர்ந்து கொண்ட என் ஆத்ம சமயமான சைவசமயம் மூலமே எல்லா உலக சமயங்களின் அடிப்படையையும் காண்கிறேன்).

(எடுத்துக்காட்டாக, திருக்குறளின் முதல் மூன்று அதிகாரங்கள் தந்தையாகிய கடவுள், தூய ஆவியாகிய கடவுள், புதல்வனாகிய கடவுள் என்ற கடவுளின் மூவொருமை வடிவங் களைப்பரவுகின்றன. இஃது உண்மையில் புராணகால சமயத்தில் அழிப்புக்கடவுளாகிய சிவன், பாதுகாப்புக்கடவுளாகிய திருமால், படைப்புக்கடவுளாகிய நான்முகன் ஆகியவற்றுடன் ஒப்பாகும். இதுவே இன்னும் பழமையான சைவ சமயத்தின் தந்தை சிவபெருமான், தாய் உமாதேவி, புதல்வன் முருகன் ஆகிய மும்மையுடன் இன்னும் நெருங்கிய பொருத்தமுடையது ஆகும். இந்த சைவ மும்மை, உண்மையில் இறைக் குடும்பத்தின் மிகப் பழைய வடிவத்தை நன்கு காட்டுவதாகும். சூபீ (இஸ்லாமிய மறைஞானி) உமர்கையாம் இந்த இறை மும்மையை, பெண் (தந்தை இறைவன்), மதுக் கிண்ணம் (தூய ஆவியாகிய கடவுள்),

திருஏடு, அஃதாவது வேதம், அஃதாவது விவிலிய நூலில் கூறப் படும் ''சொல்'' என்ற கடவுள் புதல்வன் என்று கூறியுள்ளார். இங்கே உமர் கய்யாமின் இறை மும்மையில் மூன்றாம் வடிவம் உலக சமயங்களின் இறை மும்மை கருத்துக்களை எல்லாம் ஒருங் கிணைத்து வேதமே கடவுளின் புதல்வன் என்பதை விளக்குதல் காணலாம். அதுபோவே சொல் அல்லது வேதமே கடவுளின் புதல்வன் என்ற தூய ஜானின் கருத்தும் இதில் அடங்கியுள்ளது காணலாம்.

திருக்குறள் முப்பால் என்று பெயர் பெற்று அறத்துப்பால், பொருட்பால், இன்பத்துப்பால் என மூன்று பால்களையே உடையதாய் இருந்தாலும், உண்மையில் அஃது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாற்பொருள்களையும் ஒருங்கே தரும் திருஏடு ஆகும் என்பதை டாக்டர் அருளப்பா தம் புத்தாய்வில் விளக்குகிறார். அத்துடன் முதல் நான்கு அதிகாரங்களை உட் கொண்ட பாயிரம், திருக்குறள் என்ற நூலுடன் தொடர்புடைய தாகத் தோன்றவில்லை என்று கூறும் சில அறிஞர்கள் கருத்தை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. (எனவே, பாயிரத்தில் நான்கு அதிகாரங்களில் முதல் மூன்று அதிகாரங்களும் முறையே தந்தை வடிவக் கடவுள், தூய ஆவி வடிவக் கடவுள், மகன் வடிவக் கடவுள் ஆகிய மூவரையும் குறிப்பிடுகின்றன என்றும் நான்காவது அதிகாரமாகிய அறன் வலியுறுத்தல் இறைமகனால் திட்டமிட்டு வகுக்கப்பட்ட அறத்தை அவருடன் தொடர்புபடுத்துவது என்றும் டாக்டர் அருளப்பா இங்குத் தெரிவிக்கிறார்.) அறம், பொருளாகிய இரண்டும் இவ்வுலகத்திற்கே உரியவை என்று பிறர் கருதுவர். ஆனால் டாக்டர் அருளப்பா அவை இவ்வுலகத்திற்கு மட்டுமன்றி மறுமை அஃதாவது, சாகா வாழ்வாகிய பேரின்பத் திற்கும் உரியன என்று கருதுகிறார். தவிர மூன்றாவது பால் சிலர் கருதுவது போல் காமம் என்ற பெயருடையது அன்று, இன்பம் என்ற பெயரே உடையது என்றும் அது சிற்றின்பம் ஆகிய இவ்வுலக இன்பத்தைக் கூறவில்லை, பேரின்பமாகிய மறுமை இன்பத்தை மட்டுமே குறிக்கோளாகக் கொள்கின்றது என்றும் டாக்டர் அருளப்பா அந்தப் பால் முழுவதும் விளக்குகிறார். பாயிரமும் திருக்குறளின் நான்காவது பொருளாகிய வீடு பற்றியதே. அதுதான் மற்ற மூன்று பால்களின் அஃதாவது, இந்த உலக வாழ்வு, மறு உலக வாழ்வு ஆகிய இரண்டின் மொத்த குறிக்கோள் என்றும் டாக்டர் அருளப்பா கூறுகிறார்.

மேற் கூறப்பட்ட திருக்குறளின் கருத்துக்கள் எல்லாம் விவிலிய நூலில் சொல்லுக்குச்சொல், எழுத்துக்கெழுத்து முழுமை யாக விளக்கப்பட்டிருப்பதை டாக்டர்அருளப்பா விரிவாக எடுத்துக்

காட்டுகிறார். மற்ற சமய அறிஞர்களும் இதுபோலவே தங்கள் தங்கள் திருஏடுகளில் இருந்து திருக்குறள் கருத்துக்களுக்கு ஆதரவான மேற்கோள்கள் விரிவாகத் தருதல் நலமாகும்.

திருவள்ளுவர் அடிக்கடி பிறப்பு அல்லது பிறவி என்று கூறுகிறார். இவை முற்பிறப்பு அல்லது பிற்பிறப்பு ஆகியவற்றைக் கூறும் என முந்தைய உரையாசிரியர் கூறினர். டாக்டர் அருளப்பா இந்தச் சொற்கள் தலைமுறையைத்தான் குறிக்கும் என்று விளக்கியுள்ளார்.

''ஆதிபகவான்'', ''ஐத்தவிந்தான்'' முதலிய இறைவனைப் பற்றிய தொடர்கள் திருக்குறளில் கடவுளையோ மனிதனையோ குறிக்கவில்லை. கடவுள் – மனிதன், அல்லது மனிதக் கடவுளாகிய கடவுளின் புதல்வன் வடிவம் அல்லது ஏசுநாதரையேக் குறிக்கும்.

திருக்குறளின் மூன்றாவது பாலுக்கு சில உரையாசிரியர் காமம் என்றும் வேறு சிலர் இன்பம் என்றும் தலைப்புக் கொண்டுள்ளனர். இரண்டு சொற்களும் குறட்பாக்களில் வந்தாலும், தமிழ் மரபில் நாற்பொருட்களை அறம், பொருள், இன்பம், வீடு என்பதுதான் வழக்கமாய் உள்ளது. தவிர இன்பம் என்ற சொல் தமிழில், இவ்வுலகச் சிற்றின்பம், அவ்வுலகப் பேரின்பம் என இரண்டு இன்பத்திற்கும் பொதுவாய் இருக்கிறது. காமம் என்ற சொல்லை பயன்படுத்துபவர் இம் மூன்றாம் பால், சமஸ்கிருத மரபின்படி இவ்வுலகச் சிற்றின்பமே என்று கொள்கின்றனர். என்னைப் (டாக்டர் கா. அப்பாத்துரை) போன்ற சிலர் இன்பம் என்றச் சொல் இப்பாலில் இரண்டு இன்பத்தையும் பொதுவாகவும் பேரின்பத்தை சிறப்பாகவும் விளக்குவதாகக் கொள்கின்றனர் ஆனால் சென்னைப் பல்கலைக் கழகப் பேராசிரியர் திரு. மகாதேவன் போன்ற பலர் போலவே டாக்டர் அருளப்பாவும் இந்த மூன்றாம் பால் பேரின்ப தெய்வீக காதலாகிய கடவுளின் ஆன்மீகக் காதலாக மட்டுமே கொள்கின்றனர். அத்துடன் களவியல் என்ற திருமணத்திற்கு முற்பட்ட காதலைக் கூறும் முதல் இயலில் கடவுள் பெண்ணாகவும் ஆன்மாக்கள் ஆணாகவும் காதலிப்பதாகத் திருவள்ளுவர் சொல்லுகிறார் என்று டாக்டர். அருளப்பா விளக்குகின்றார். கற்பியல் என்ற திருமணத்திற்குப் பிற்பட்ட காதலைக் கூறும் இயலில் திருவள்ளுவர் ஆன்மாவைப் பெண்ணாகவும் கடவுளை ஆண் அல்லது மணமகனாவும் வர்ணிக்கிறார். இங்கே கடவுள் உள்ளூர ஆன்மாவிடம் எல்லையற்ற காதல் கொண்டாலும் அதன்

நன்மைக்காகத் துன்பம் மூலம் அதன் அன்பைப் பெருக்கி, அழியாத மேலுலகப் பேரின்பத்திற்கு அதைத் தகுதிப்படுத்து கிறார். இந்தநாடகம் முழுமைக்கும் அவர் விரிவான ''விவிலிய'' மேற்கோள் காட்டுகிறார்.

ஜாமி என்ற பாரசீகச் சூபிக்கவிஞர் சூபிகளின் கடவுட் காதல் மரபில் இரண்டு தத்துவங்களைக் கூறுகிறார். முதலாவதின்படி கடவுளின் பேரழகை, ஏழு மாயத் திரைகளின் ஊடாக இவ்வுலக வாழ்வில் நாம் காணும் நிழலே பெண்ணழகு என்றும், கடவுளின் பேரருளுக்கு ஏழு வானவில் நிறங்களைக் கொண்ட அதே திரை யினூடாக உலக வாழ்வில் நாம் காணும் நிழலே பெண்கள் காதல் என்றும் அவர் கூறுகிறார். இவற்றை விரிவாக விளக்க அவர் அப்சலாம் - அக்கிடோவேல் என்ற கடவுட் காதல் காப்பியத்தை இயற்றியுள்ளார்.

மொழிப் பெரும் புலவராகிய டாக்டர் அருளப்பா தமிழிலும் ஆங்கிலத்திலும் மிகப் பல அறிவேடுகள் இயற்றியுள்ளார். ஆனால் இந்தத் ''திருக்குறள் புத்தாய்வு'' நூலை அவருடைய தலைசிறந்த வாழ்க்கைப் பெரும் பணி என்று கூறவேண்டும். ஏன் எனில் திருக்குறள் என்ற விவிலிய ஏடு வெறும் இலக்கிய நூலோ, ஒழுக்க நூலோ கூட அன்று; அது மிகப் பேரளவில் ஒரு பக்திநூலாகவும், தலை சிறந்த சமய நூலாகவுமே விளங்குகிறது. இதனால் இத்தகைய ஒருபுத்தாய்வு விளக்கத்தை இயற்றுவதற்கு, முந்திய பழைய உரையாசிரியர்களையும், பிந்திய புதிய உரை விளக்க ஆசிரியர்களையும் விட டாக்டர் அருளப்பாவே மிகச் சிறந்த தகுதியுடையவராவார்.

மேலீடாகப் பார்ப்பவர்களுக்கு டாக்டர் அருளப்பாவின் திருக்குறள் புத்தாய்வு, திருக்குறளுக்கு ஒரு கிறித்தவ சமயச் சார்பான உரை என்றுகூட தோன்றக்கூடும். ஆனால் இது முழு உண்மை அன்று, ஒரு சிறு பகுதி உண்மை மட்டுமே. ஏனெனில் திருவள்ளுவர் ஏசு பெருமானின் மலைச் சொற்பொழிவைத் தூய திரு. தாமஸின் மலைச் சொற்பொழிவின் மூலம் கேட்டிருந்தார் என்று நம்பக்கூடும். ஆயினும், இன்று இருக்கும் ''விவிலிய'' ஏட்டை அவர் அன்று அறிந்திருக்க முடியாது. உண்மையில் அஃது இன்று இருக்கும் வடிவில் கி. பி. 4ம் நூற்றாண்டில்தான் தொகுக்கப்பட்டது. மேலும் டாக்டர் அருளப்பா மேற்கோளாக எடுத்துக்காட்டும் பகுதிகளுள் மிகப் பல ''மடல்கள்'' என்பவை போன்ற இராண்டாம், மூன்றாம்

நூற்றாண்டுகளுக்குரிய பேச்சுகளும் எழுத்துகளும் ஆகும். எனவே திருவள்ளுவருடைய கருத்துக்களுக்கும் அவர் பின்வந்த மிகப்பலரின் கருத்துக்களுக்கும் இடையே காணப்படும் விரிவான ஒப்பீடுகள் வெறும் வெளி உலகப் பழக்கங்களாலோ ஏடுகள், பேச்சுகளைக் கேட்பதாலோ மட்டும் ஏற்படக் கூடியதாக இருக்க முடியாது. அத்துடன் ஒப்புமைக்குரிய இந்த விவிலிய மேலோர்கள் பொது நிலை மக்கள் அல்லர்; ஏசுபிரானின் சீடர்களும், அவரது திருக்கோவிலின் (Church) அடித்தளத்தைக் கட்டி அமைத்தவர்களும் விவிலிய நூலை உருவாக்கியவர்களுமே ஆவர் என்பதை நோக்கும் போது, காணப்படும் இவ்வொப்புமை, ஒரே ஆன்மீக நிலைக்கும் ஒரே ஆன்மீக மரபுக்கும் உரிய ஒப்புமையே ஆக வேண்டும் என்பது தெளிவு.

இங்ஙனமாக, திருவள்ளுவரின் கருத்துக்களுக்கும் ஏசு பிரானின் கிறித்தவ சமய மரபுக் கருத்துகளுக்குமிடையேயுள்ள இந்த வியத்தகு ஒப்புமை இந்த ஒரு சமயத்திற்கு மட்டும் பொதுவான ஒப்புமை அன்று. இதற்கு முற்பட்டும், பிற்பட்டும் தோன்றிய இதே மரபிற்குரிய சமய முதல்வர்கள், சமயங்கள் மேற்கொள்ளும் கருத்துக்களுக்கும் இதே ஒப்புமை பொருந்துவதாகும். இவ்வாறாகத் திருக்குறளுக்கு டாக்டர் அருளப்பா தரும் கிறித்தவப் பொருள்கள் அனைத்தும் பெரும்பாலும் மற்ற சமயத்தவர்கள், அவர்கள் சமய நூலிலிருந்து காட்டும் மேற்கோளுடன் பொருந்துபவையாகவே அமையுமென்று கருதலாம்.

திருக்குறள் போன்ற ஒரு திரு ஏட்டுக்கு உரை விளக்கம் காண்போருக்குரிய உண்மையான தகுதி அவரது பரந்த அறிவோ இலக்கணப் புலமையோ அறநூல் அறிவோ அல்ல; இவற்றை எல்லாம்விட முக்கியமாக அவருக்கு சூபீகள், பக்தர்கள், வேதாந்திகள் ஆகியவர்களை ஒத்த கடவுள் பற்று ஆர்வமும் கடவுள் பண்பின் பயிற்சியும் மிக முக்கியமானவையாகும். திருக்குறள் புத்தாய்வில் முன்பின் உரையாசிரியர்கள், மறுவிளக்காசிரியர்கள் ஆகியவர்களைவிட டாக்டர் அருளப்பாவிற்கு இருக்கும் மிக மிகச் சிறந்த தகுதி அவர் ஒரு பக்தர், இறைஞானி, இறை பண்பின் பயிற்சி பெற்றவர் என்பதே. இதனால் டாக்டர் அருளப்பாவின் திருக்குறள் புத்தாய்வு மேற்கூறியபடி முந்திய உரைவிளக்கங்கள் மறுவிளக்கங்கள் ஆகியவற்றின் ஒரு முத்தாய்ப்பாகவோ திருக்குறளின் ஒரு கிறித்தவ சார்பான உரையாகவோ மட்டும் விளங்குவதன்று; அதுவே

திருக்குறளுக்குரிய பக்திச்சார்பும் சமயச்சார்பும் கொண்ட ஒரு வள்ளுவ உள்ளத்தின் விளக்கமாகவும், அதுபோல இனிவரும் இதுபோன்ற உரை மரபு விளக்க சமய பக்தி, புதுவிளக்க ஏடுகளுக்கு உரிய ஒரு புது வழிகாட்டியாகவும் அமையத்தக்கதாகும்.

கா. அப்பாத்துரையார்

டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி
சென்னை-600 113.

திருக்குறளின் சிறப்பினையும் பெருமையினையும் உலக மக்களும் எல்லாச் சமயங்களும் உணர்ந்துள்ளன. திருக்குறளை ஜைன நூல் என்றும், பௌத்த நூல் என்றும், சைவ நூல் என்றும், கிறித்தவ நூல் என்றும் பல கோணங்களில் பார்க்கின்றனர். தோண்டத் தோண்டக் குறையாத சுரங்கம் போன்று எல்லாச் சமயங்களின் கருத்துக்களையும் வாரிவாரி வழங்குகின்றது வள்ளுவரின் குறள்.

திருக்குறள் தோன்றி ஏறத்தாழ ஈராயிரம் ஆண்டுகள் ஆன பின்பும் இன்னும் புத்துரைகள் தோன்றிக்கொண்டிருக்கின்றன. இதுவரை மரபு உரைகளாகப் பத்து உரைகளுக்கு மேல் உள்ளன.

இப்போது உங்கள் கைகளில் தவழும், பேராயர் அருளப்பா அவர்களின் திருக்குறள் புத்துரை புதிய கோணத்தில் பார்க்கப்பட்டுள்ளது. பல ஆண்டுகளாக, புத்துரை ஆசிரியர் பேராயர் அவர்கள், திருக்குறளை ஆய்வு செய்து கொண்டு வருகின்றார். ஏற்கெனவே காமத்துப்பாலுக்குத் தனி விளக்கம் எழுதி, 'அது சிற்றின்பம் உணர்த்தவில்லை; பேரின்பத்தை உணர்த்துகிறது' என எழுதியுள்ளார். இப்புத்துரையில் பொருளாட்சி, அருளாட்சி என்ற இரண்டு அடிப்படைகளை அமைத்துக்கொண்டு, அருளாட்சி நோக்கில் பொருட்பால் பகுதிக்கு விளக்கம் எழுதியுள்ளார்.

திருக்குறளுக்கு விவிலிய நோக்கில் பல புதிய உரை விளக்கங்களை அவர் உரையில் தருகின்றார். அவை வரவேற்கத்தக்கன. அறிவு வளர்ச்சியடைய அடைய ஆய்வு வளர்ச்சி வளருகின்றது. இப்புத்துரைக்கு, இடனளிக்கின்ற திருக்குறளை எந்நிலையில் பாராட்டினாலும் தகும்.

இப்புத்துரையைக் காணும்போது, எனக்கு ஓர் உதாரணம் நினைவுக்கு வருகிறது. ஒரு மனிதன் தந்தைக்கு மகனாக இருக்கிறான்; உடன் பிறந்தோருக்குச் சகோதரனாக இருக்கிறான், மனைவிக்குக் கணவனாக இருக்கிறான். அவன் குழந்தைகளுக்குத் தந்தையாக இருக்கிறான். பொதுநிலையில் மனித

னாகவும் இருக்கிறான். ஒரே மனிதன் மகனாக, தந்தையாக, கணவனாக, சகோதரனாகப் பல நிலைகளில் இருக்கிறான். அனைவரிடமும் அவரவர்க்குரிய அன்பினைச் செலுத்து கின்றான். ஆயின் அனைவரும் தன்னிடம்தான் மிகுதியான அன்பைச் செலுத்துவதாக நினைக்கின்றனர். அதே போன்று, திருக்குறள் எல்லாச் சமயக் கருத்துகளையும் கொண்டுள்ளது அதன் பெருமை. ஒவ்வொரு சமயத்தினரும் தங்கள் கருத்து களையே வள்ளுவர் பிரதிபலிக்கிறார் என்று கூறுவது தங்களிடமே மிகுதியான அன்பை செலுத்துகிறார் என்று கூறுவதை ஒக்கும். இப்புத்துரையால், திருக்குறளின் பெருமை இன்னும் உயர்கிறது. அதற்காக இப்புத்துரையை வழங்கிய பேராயர் அருளப்பா அவர்களை வணங்கி, போற்றி, பாராட்டி மகிழ்கின் றேன். அவர்கள் முன்னுரையில் எழுதியுள்ளது போன்று, அவருக்கு இப்புத்துரைக்குத் துணைபுரிந்த என் மாணாக்கர் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்களுக்கு என் வாழ்த்துக்களைத் தெரிவிக்கிறேன்,

சென்னை
16—4—87

அன்புள்ள
ச. வே. சுப்பிரமணியன்.

டாக்டர் சூ. இன்னாசி

பேராசிரியர் — தலைவர்

கிறித்தவத் தமிழ் இலக்கியத்துறை

சென்னைப் பல்கலைக் கழகம்

சென்னை-600 005.

'பேரருள்நிறை பேராயர் அருளப்பா ஆண்டகை அவர்கள் இறையடியார் மட்டுமல்லர்; தமிழடியாருமாவர். அவர்தம் பணி, இறைப்பணியாக மட்டுமன்று; இலக்கியப் பணியாகவும் அமைந்தது'என்பதற்குத் தக்கதொரு சான்றாகஅமைந்துள்ளதே 'திருக்குறள் - புத்தாய்வு' என்னும் நூல்.

முதிர்ந்த தமிழ் ஞானத்தாலும் பழுத்த குறள் அனுபவத் தாலும் தமிழ்த்தாய்க்குத் தக்கதொரு பனுவலைப் புதிய கோணத்தில் தம் ஆய்வின் பிழிவாகத் தந்துள்ளார்.

பல்வேறு கொள்கையாளர்தம் உரைகட்கும் இடனாகி அவற்றிற்குப் பொருந்தும்வகையில் துலங்கி வருதல் திருக்குறளின் தனிச் சிறப்பாகும்; அஃது ஒரு வகையில் ஏற்புடைத்துமாகும். எவ் வாறெனில் தமிழகத்தில் பிறந்தான் ஒருவன் தமிழனேயாவான். எனினும் ஒரு சமயம் அவனே இந்தியன் எனப்படுகிறான். ஒரு பொழுதில் மாணவன் என அவனைச் சுட்டுகிறோம். பிறிதொரு பொழுதில் அவனையே ஆடவன் எனவும் குறிப்பிடுகிறோம். இவ்வாறு சுட்டுவதில் முரண் இல்லை. சுட்டுமிடம், காலம், சூழ்நிலை அடிப்படையில் பல்வகையாக அவன் அழைக்கப் பெறினும் அனைத்தும் அவனுக்குப் பொருந்துவனவே. அவ்வாறே திருக்குறளுக்கு முன்னோர் கண்ட உரைகளை இதுகாறும் உள்ளத்தில் கொண்டிருந்த ஆய்வாளர்கட்குப் பேராயரின் புதிய விளக்கங்களும், உரைகளும் சிந்தனைக்குப் புதியதொரு விருந்தாகவே அமையும்.

ஆய்வென்பது முற்ற முடிந்த முடிபாதல் சாலாது. ஒரு காலத்திய முடிபுகள் காலப்போக்கில் புதிய கண்டுபிடிப்புகளால் மாறிவிட நேரலாம் என்பதனை அறிவியல் முடிபுகளிலேயே கண்டு தெளியலாம். அவ்வாறிருக்க, இலக்கியக் கொள்கை களிலும், அவற்றுக்கான விளக்கங்களிலும், புதிய அணுகுமுறை களினால், புதிய பொருள்களை நிலைநாட்ட முற்படுவது போற்றத்தக்கதே. அவற்றை ஏற்ற பெற்றி ஏற்றுக் கொள்வது ஆய்வாளர்தம் கடன்.

பேரருள்நிறை பேராயர் அருளப்பா ஆண்டகை, கிறித்தவரான காரணத்தாலேயே அவர் அச்சமயத்தோடு பொருத்திக் காட்டுவனவற்றைப் புறந்தள்ளல் ஒருபாற்கோடலாகும். இயலுமேல் அவற்றில் படிந்துள்ள வன்மை, மென்மைகளில் ஆய்வை மேற்கொண்டு, அவற்றுள் எவையெவை எவ்வெக் காரணங்களால் ஒவ்வாதன எனக் காட்ட முயலல் வேண்டும். அவ்வாறு நிறுவப்படுமேல் அக்கருத்தே எதிர்காலத்தில் உறுதிப்படும். அதுகாறும் பேராயரின் ஆய்வுக் கருத்துக்களின் ஆழமும், அவற்றை நிறுவ அவர் மேற்கொண்ட சான்றுகளும் பாராட்டிப் போற்றும் தகைமைத்தேயாகும்.

இடையறாச் சமயப்பணிகட்கிடையேயும் இத்தகையதொரு சீரிய இலக்கியப்பணியில் ஈடுபட்டு அதனை வெற்றிபெற முடித்திருக்கும் பேராயர் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். அன்னாரின் பொன்னார் திருவடிகட்கு எளியனின் பாராட்டுதல்களையும், இறைவேண்டுதல்களையும் பணிவுடன் படைத்துக் கொள்கிறேன்.

சூ. இன்னாசி.

# பொருளடக்கம்



  

# திருக்குறள் புத்தாய்வு

## திருக்குறளும் பிறவிச் சுழற்சிக் கொள்கையும்

பிறவிச் சுழற்சிக் கொள்கை திருவள்ளுவருக்கு ஏற்புடைய தென்றே திருக்குறள் உரையாளர் கருதுகின்றனர். இஃது உண்மைதானா? என்பது ஆய்ந்தறிய வேண்டியதொன்றே. இப்புத்தாய்வுக்கு இது மிகமிகத் தேவையானதும்கூட. இக் கொள்கை வள்ளுவருக்கு ஏற்புடையதாயிருப்பின் இவ்வொரு காரணத்தாலேயே இவ்வாய்வு முழுவதும் பொருளற்றதாய் முடியும். ஆகவே, இஃது ஆழ்ந்து ஆராயவேண்டியதொன் றாகும்.

காலாகாலமாக இக்கொள்கை இந்திய மக்களுடைய உள்ளத்தில் எவ்வளவு ஊறிப்போய் உள்ளதென்றால், திருக் குறளில் பிறவி, பிறப்பு, எழுபிறப்பு, எழுமை என்ற சொற்கள் வருமிடத்திலெல்லாம் இக்கொள்கையையே காண்கின்றனர். ஆனால், சிறிது ஆழ்ந்து நோக்கும்போது அச்சொற்களால் குறிக்கப்படுவது முற்றும் வேறான கருத்து என்பதைக் காண் கிறோம்.

இதை ஆய்வதற்குமுன் இப்பிறவிச் சுழற்சிக் கொள்கை எப்படி நுழைந்தது? என்பதை ஆய்வோம்.

உலகில் துன்பம் இருப்பது ஏன்? நல்லவர்களும் பல சமயங்களில் துன்புறக் காண்கிறோமே, ஏன்? என்னும் கேள்வி களுக்கு ஒரு விடை காணுமுகத்தான் ஏறக்குறைய வலிந்து கொள்ளப்பட்ட கொள்கை இஃது என எண்ணவேண்டியிருக் கிறது. துன்பத்திற்கு இறைவன் காரணமாயிருக்க முடியாது. ஆகவே மனிதன்தான் காரணமாயிருக்க வேண்டும். ஆனால் நல்லவர்களும் (அஃதாவது, இப்பிறப்பில் நல்லவர்கள் போல் காணப்படுபவர்களும்) துன்புறுகிறார்களே ஏன்? ஒருவேளை முன்பிறப்பில் அவர்கள் தீமை, பாவம் செய்திருக்கவேண்டும் என்ற முறையில் விவாதிக்கப்பட்டதன் விளைவாகத் தோன் றியதே. ஆனால் இப்பிறப்பில், கெட்டவர்கள் பல சமயங்களில் இன்ப வாழ்வு வாழ்கின்றார்களே, அஃது ஏன்? என்ற கேள்வி எழுந்தால், அவர்கள் அடுத்த பிறவியில் துன்புறுவார்கள் என்று கூறிவிடுவதுண்டு.

இத்தகைய முன் பிறப்புப் பற்றி யாருக்கும் நினைவிருப்ப தாகத் தெரியவில்லையே என்று கேட்டால், அபூர்வமாக இரண் டொருவர் அத்தகைய நினைவு உள்ளதாகச் சொல்வதை வைத்துக்கொண்டு கொள்கையை உறுதிப்படுத்தப் பார்ப் பார்கள். இஃது எங்ஙனமாயிருப்பினும், திருக்குறளில் இக் கொள்கை போதிக்கப்படுகின்றதா? என்பதுதான் நம் கேள்வி யாதலால் இதை மட்டும் ஆய்வோம்.

இந்நூலின் முதல் அதிகாரத்திலும், நான்காம் அதிகாரத் திலும், அருளுடைமை என்னும் அதிகாரத்திலும் **இம்மை மறுமை** பற்றி இந்நூல் கூறும் கருத்துகளிலிருந்து மட்டுமே இக்கொள்கை, இந்நூல் ஆசிரியருக்கு ஏற்புடையதன்று என முதலிலேயே முடிவு கட்ட முடியும்.

1. முதல் அதிகாரத்தில்

மனித வாழ்க்கையின் இறுதி நிலை 'இறைவனடி சேர்தலே' என மீண்டும் மீண்டும் வலியுறுத்துவது காண்கிறோம். முதல் இரு குறட்பாக்களில், இறைவனையே முதலாக உடையது உலகம். அவன் தாள் தொழாவிடில் எதைக் கற்றும் பயனில்லை என்றுரைத்த பின் அவன் 'மாணடி சேர்ந்தார்' மட்டுமே 'நீடுவாழ்வார்' (கு. 3), 'அவனடி சேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பை இல' (4), அவனது 'புகழ்,புரிந்தார் மாட்டு' 'இருள்சேர் இருவினையும் சேரா' (5), ஐந்தவித்த அவனது 'பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார்' மட்டுமே 'நீடு வாழ்வார்' (6), அவன் 'தாள் சேர்ந்தார்க்கல்லால் மனக்கவலை மாற்றல் அரிது' (7), 'அறக்கடல் போன்ற அவன் தாள் சேர்ந்தார்கல்லால்' துன்பம்) தீமை முதலியவற்றைக் கடப்பது அரிது (8), அவன் 'தாளை வணங்காத தலை' இருந்தென்ன ஒழிந்தென்ன (9), 'பிறவி யிலேயே மனித இனம் அனைத்தையும் தீண்டுகின்ற பாவ நிலையைக் கடந்து செல்ல இயலார் 'இறைவனடி சேராதார்' (10) என மிக மிக அழுத்தமாகக் கூறுகின்றார்.

**குறிப்பு:** பத்தாம் குறளின் 'பிறவிப் பெருங்கடல்' என் பதன் உட்கருத்து பின்னர் விரிவாக விளக்கப்படும்.

இனி, 'இறைவன் அடி' என்பது இறைவனையே குறிக்கு மென்பதில் ஐயமில்லை. **இவ்வாழ்வுக்குப் பின் மனிதன் இறைவனை அடைவதையே குறிக்கோளாகக் கொண்டு வாழவேண்டும்** என்னும் கருத்து இதனினும் அழுத்தமாகக் கூற முடியாது எனலாம். அங்ஙனம் அவன் வாழவில்லையேல்

நிலைத்து நிற்கும் 'நிலமிசை' அவன் நீடு வாழ்வு பெறான், மாறாக வாழ்வு இருளில் சென்று முடிந்துவிடும். மாற்றற்கரிய மனக்கவலையில் ஆழ்ந்துவிடும். எத்துன்ப நிலையையும் வெல்ல இயலாது என்னும் கருத்துகள் இம்மை வாழ்வுக்குப் பின், ஒன்று இன்பமான நீடுவாழ்வு அல்லது இருள்சேர் துன்ப வாழ்வு என்ற உண்மையையே அழுத்தமாகக் கூறுவது காண்கிறோம். சுருங்கக் கூறின் வாழ்நாளில் நன்மை (அறம்) செய்தால் இறுதியில் இன்பம் கிடைக்கும். இல்லையேல் துன்பமே உண்டு.

2. இக்கருத்து பாயிரத்தின் நான்காம் அதிகாரத்தில் பலபடக் கூறப்படுகிறது. அறத்தைவிட சிறப்போ செல்வமோ ஆக்கமோ மனிதனுக்கு இல்லை (கு. 31), அதை மறந்தால் அதைவிடக் கேடு வேறில்லை (32), மனத்துக்கண் மாசிலன் ஆதலே அனைத்தறன் (34), பின்னர் பார்த்துக் கொள்வோம் என்று எண்ணாது இன்றே அறம் செய்தல் வேண்டும். இவ்வாழ்வு 'பொன்றுங்கால்' முடிவுறுங்கால் அதுவே அழியாத துணை (36), அறவாழ்க்கை கடினமானதேயாயினும் கடைப்பிடித்தல் வேண்டும் (37), வாழ்நாளை வீணாக்காமல் நன்மை செய்யின் அந்நன்மையே வாழ்வின் இறுதியில் துன்பத்தில் விழாமல் காக்கும் கருவியாய் அமையும் (38). இங்ஙனம் அறச்செயல்களால் வருவதே உண்மையான இன்பம். மற்றவையெல்லாம் வீண். இன்பத்துக்கு மாறாகத் துன்பத்துள் ஆழ்த்திவிடக்கூடியவை (39). ஆகவே இவ்வாழ்க்கையில் ஒருவன் செய்ய வேண்டியது அறன் ஒன்றே. எவ்வகையாலும் தவிர்க்க வேண்டியது பழிபாவம் (40). மேலும், 'ஒழுக்கம் உடைமை' அதிகாரத்தில்,

நன்றிக்கு வித்தாகும் நல்ஒழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும் (கு. 138)

என்னும் போது வாழ்நாளில் நன்மை செய்யாவிடில் உலக வாழ்வுக்குப் பின் தீராத இடும்பே விளையும் என்றுள்ளது. இக் கருத்தே முந்திய குறளிலும் 'எய்துவர் எய்தாப் பழி' என்றுள்ள அடியில் மறைந்துள்ளது, எய்தாப்பழி என்பதில், ஒழுக்கத்தினால் நன்மை எய்தினால், 'ஒழுக்கக்கேட்டினால் தீமையே எய்துவர் — அதுவும் தீராத தீமை—(எய்தாப்பழி) எய்தியபின்னர் தீர்க்கமுடியாத பழி - தீமை என்னும் கருத்து உள்ளது காண்க.

**3. அருளுடைமை அதிகாரத்தில் :**

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல். (கு. 223)

ஆகவே, அருள் சேராத நெஞ்சினார்க்கு இன்னா உலகம் புகுதலே இறுதி நிலை. இக்கருத்து அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை என்னும் அடியிலும் காணப்படுகிறது. அவ்வுலகம் என்றது இன்ப உலகை என்று உணர்க. இக்கருத்து மீண்டும் 'அருளற்றார் அற்றார்' பூப்பதேயில்லை (கு. 248) என்று வலியுறுத்தப்படுகிறது. அருளற்றவர்க்கு வாழ்வே இல்லை; அல்லது இன்னா உலக வாழ்வே உண்டு என்பது கருத்து.

'அருள்' என்பதற்கு யாம் தரும் புத்தாய்வு விளக்கம் வேறிடத்தில் காண்க.

**4. இம்மை, மறுமை :** திருக்குறள் இம்மை, மறுமை வாழ்வு பற்றிக் கூறுவது தெளிவு. இம்மை மறுமை என வெளிப் படையாக இரண்டொரு குறட்பாக்களில் மட்டுமே (98,1042) ஒருசேரக் குறிப்பிட்டிருந்தாலும் **மறுமை** என்பது மட்டும் 459,904 என்னும் பாக்களிலும் காண்கிறோம். ஆனால் இம்மை குறிக்கப்படும் உட்கருத்து 'இவ்வுலகம்' எனவும் மறு உலகம் 'அவ்வுலகம்' எனவும் (குறள் 247), **மறுமை** என்பதன் உட்கருத்தை 'இறைவனடி சேர்தல்' எனவும் (முதல் அதி), அல்லது 'இன்னா உலகம்' எனவும் (கு. 243), 'புத்தேள் உலகம்' எனவும் (213), இம்மை மறுமை இரண்டையும் குறிப்பிட்டு 'இருமை' எனவும் (33) குறிப்பிடப்படுவது காண் கிறோம்.

இதுவரை கூறியவற்றினின்று பின்வரும் உண்மைகள் வெளியாகின்றன.

1) மனித வாழ்க்கையின் இறுதி நோக்கம் இறைவனடி சேர்தலே (முதல் அதி).

2) இறைவனடி சேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பை இல (கு. 4).

3) தீயொழுக்கம் என்றும் (அஃதாவது முடிவற்ற) இடும்பை தரும் (138).

4) 'அறத்தை மறத்தலின் கேடு வேறில்லை' (32).

5) 'வாழ்நாள் வழி அடைக்கும் கல்'லாக நன்மை செய்தல் அவசியம் (38).

6) நன்மை செய்ய இறைவன் அருள்வேண்டும். அருள் அற்றார் ஒரு பயனுமடைய இயலாதவர் (248).

7) இவ்வருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை. அவர்கள் பூப்பதே இல்லை. (247-248).

8) அறத்தான் வருவதே இன்பம் (மறத்தால் வருவது துன்பம்). ஆகவே இகவாழ்விலேயே அறம் செய்க (39, 36).

9) இறந்தபின் (பொன்றுங்கால்) துணை வேறில்லை(36).

இவ்வுண்மைகளை நன்கு ஆய்ந்து பார்க்குங்கால், இறந்தபின், ஒன்று இறைவனடி சேர்ந்து இன்புறுதல், அங்ஙனம் சேராவிடில் முடிவில்லா துன்புறுதல் என்னும் பேருண்மை ஒன்றே வெளிப்படுகிறது. இன்புறுநிலையைப் பேரின்பம் என்றும், முடிவில்லாத் துன்ப நிலை (இறைவனது அருளையும் அன்பையும் இழந்த நிலை) நரகம் என்றும் கூறு கிறோம்.

இந்நிலையில் மீண்டும் மீண்டும் பிறப்பதற்கோ இப் பிறவிகள் எல்லாம் முடிந்தபின் இறைவனடி சேர்வதற்கோ எங்கே இடமுண்டு? ஆகவே, திருக்குறளுக்கு பிறவிச் சுழற்சிக் கொள்கை ஏற்புடையதன்று.

அங்ஙனமாயின், பிறவி, பிறப்பு, எழுமை, எழுபிறப்பு, பிறப்பறுக்கல் முதலியன கூறும் குறட்பாக்களின் பொருள் என்ன? ஆய்ந்து பார்ப்போம்.

இதற்கு முன்னர், 'இருள்சேர் இருவினை' என்னும் குறள் அடிக்கு நல்வினை, தீவினை எனப் பொருள் தந்து, இவ்விரண்டுமே இருளாகிய பிறப்புக்குக் காரணமாகும் என்று உரையாளர் பொருள் கூறுவதால், இவ்விருவினை யாவை? என்று முதற்கண் அறியவேண்டும்.

தீவினை, இருளில் (மறுபிறப்பில்) கொண்டு சேர்த்துவிடும் என்று வைத்துக் கொண்டாலும் நல்வினையும் அங்ஙனம் செய்யுமா? என்ற கேள்வி எழாமல் போகாது. நற்செயல்கள், அறச்செயல்கள், நல் ஒழுக்கச் செயல்கள் பல எத்தனையோ செய்தல் வேண்டும் என்று மேலும் மேலும் வற்புறுத்திக்கூறும்

ஆசிரியர், அந்நற் செயல்கள் எல்லாம் இறுதியில் இருளில் கொண்டு சேர்க்கும் என்னும் கருத்தை எங்ஙனம் கூறியிருக்க முடியும்? 'மேலுலகம் இல் எனினும் ஈதலே நன்று' என நன்மை செய்வதன் இன்றியமையையைக் கூறும் அவர் இருள் அன்றி ஒளியேயாம் அம்மேலுலகம் சேர்வதற்கு நல்வினை வேண்டா என எங்ஙனம் கூறுவார்? ஆகவே, இங்குக் குறிப்பிடப்படும் இருவினை வேறாயிருத்தல் வேண்டும் என்பதும் அவை இரண்டுமே இருளில் சேர்ப்பவை என்பதும் தெளிவாகிறது.

இவ்விருவினை யாவை என்பதை விவிலியம் தெளிவாகக் கூறுகின்றது என்பது எம் துணிபு.

1. "ஒரே மனிதனால் பாவமும் பாவத்தால் சாவும் இந்த உலகத்தில் நுழைந்தது.......... இவ்வாறு எல்லாரும் பாவம் செய்தமையால் எல்லா மனிதர்களுள்ளும் சாவு பரவியது." (உரோ. 5:12)

2. எல்லா மனிதர்களும் "ஆதாம் கட்டளையை மீறிச் செய்த பாவத்தைப் போன்ற பாவம் செய்யாவிடினும் அவர்கள் மேலும் சாவு ஆட்சிச் செலுத்திற்று." (உரோ. 5:14)

3. "ஒரே ஒருவன் செய்த குற்றத்தாலே அந்த ஒருவன் வழியாகச் சாவு ஆட்சிச் செலுத்தினது." (உரோ. 5:17)

4. "ஒரே ஒருவனின் குற்றம் எல்லா மனிதர்க்கும் தண்டனைத் தீர்ப்பாய் முடிந்தது." (உரோ. 5:18)

5. "ஒரு மனிதனின் கீழ்ப்பாடியாமையால் அனைவரும் பாவிகள் ஆயினர்". (உரோ. 5:19)

மனித இனத்தின் முதல் மனிதனான ஆதாம் என்பவனால் உலகில் பாவம் ஏற்பட்டது. பாவத்திற்குத் தண்டனையாக உலகில் சாவு என்னும் துன்பம் ஏற்பட்டது— ஒருவன் செய்த குற்றத்தால் அவ்வொருவன் வழியாக ஒரு மனிதனின் கீழ்ப்படியாமையால் பாவமும் சாவும் உலகுக்கு வந்தன என்று விவிலியம் கூறுவது தெளிவு. அதுமட்டுமல்ல, அந்த ஒரு மனிதன் செய்த குற்றம், "அவன் செய்தபாவத்தைப் போன்ற பாவம் செய்யாவிடினும் எல்லா மனிதர்களையும் தீண்டியது" எனவும் கொண்கிறோம். (இதைத்தான் 'ஆதிபாவம்' என்கிறோம்.) இதன் பொருள் என்ன? இஃது எங்ஙனம் நிகழலாயிற்று? ஆதி மனிதன் செய்த பாவத்தைப் போன்ற பாவம் செய்யாவிடினும் அவன் வழி தோன்றிய எல்லா மானிடரையும் தீண்டிய

தெங்ஙனம்? இங்கு நாம் உணர்ந்து கொள்ளவேண்டியதொரு உண்மை. இஃது, ''இயற்கை நியதிப்படி நிகழ்ந்ததன்று, இறைவனுடைய விசேட திட்டத்தின்படி நிகழ்ந்தது'' என்பதாகும்.

அத்திட்டம் என்ன?

இறைவன் மனிதனை படைத்தபோது அவனைச் சாதாரண இயற்கை நிலையில் விட்டுவிடாமல், தம்மோடு அன்புறவு கொண்டு மிகமிக நெருங்கிய முறையில் 'நண்பென்னும் நாடாச் சிறப்பை' (அஃதாவது, மனிதன் இயற்கையாக நாட இயலாத-எதிர்பார்க்க இயலாத இறைவனுடைய நட்புறவை) துய்க்கவேண்டுமெனத் திருவுளங் கொண்டான். இச்சிறப்பை ஆதிப்பெற்றோர் மட்டுமன்று, அவர்களிடமிருந்து பிறக்கும் அனைத்து மக்களுமே - மனித இனம் அனைத்துமே - துய்க்க வேண்டுமெனத் திட்டமிட்டான். இத்தகைய தெய்வீக நட்பை யும் உறவையும் அருள் எனப்படும் 'செல்வத்துட் செல்வத்தை யும்' மேலுலகத்தில் இறைவன் பேரின்பத்தை அடைவிக்கக் கூடிய ஆற்றலாகிய சக்தியையும் மனிதன் பிறப்பிலேயே பெற வேண்டுமாறு அருள்கூர்ந்து திட்டமிட்டான். அதே சமயத்தில் அவர்களைச் சிறியதொரு பரிசோதனைக்கு உட்படுத்தினான். இறைநட்பு, அருட்சக்தி என்னும் செல்வத்துட் செல்வம் ஆதலால் அதை இறைவன் மனிதன்மீது திணிக்க முடியாது. இறைவனுடைய வரங்களுள் மிகமிக மேலான வரமான இது விரும்பி ஏற்றுக்கொள்ளப்பட வேண்டியது. வரம், நன்கொடை என்பதன் இலக்கணமே அவ்வாறு. அஃதாவது, தருபவன் விரும்பித் தரவேண்டும்; பெறுபவன் விரும்பி ஏற்க வேண்டும். இங்ஙனம் விரும்பி ஏற்றுக்கொள்வதற்கு ஒரு சிறு சந்தர்ப்பமாக அமைந்தது அப்பரிசோதனை. இறைவன் தந்ததொரு சிறு கட்டளை மிகச்சிறிய பரிசோதனை. (எத்தனையோ மரங்கள் இருக்க ஒன்றன் பழத்தை மட்டும் தொடலாகாது என்பதன் உட்கருத்து இதுவே. எபிரேய மொழியில் இதுபோன்ற சொல் சித்திரங்கள் பல உண்டு.) இக்கட்டளையை மீறினால் விளையும் கேட்டையும் இறைவன் எச்சரித்திருந்தான். ''மீறினால், யாம் தந்த அருட்செல்வத்தை நீ மட்டுமன்று உன் சந்ததி அனைத்தும் இழந்து, அருளற்ற நிலையில், இறைநட்பு இல்லாத நிலையில் பிறப்பர்'' என்பது அவ்வெச்சரிக்கை! முதல் மனிதன் மீறினான். 'தீவினை என்னும் செருக்கினால்' முதல் தீவினை பாவம் உலகில் நுழைந்தது. ''அருள் இழந்த நிலை ஆதி மனிதனுக்கு மட்டு மன்று, அவன் சந்ததியனைத்தையும் மேற்கூறிய இறைவன் திட்டப்படி தீண்டலாயிற்று.'' இதுவே 'ஆதிப்பாவம்' அல்லது 'ஆதிவினை' எனப்படுவது.

ஆதிமனிதனாகிய ஆதாமைப் பொறுத்தமட்டில் இஃது அவன் அறிந்து விழைந்து செய்த பாவம். அவனது சந்ததியைப் பொறுத்தமட்டில், இறைநட்பும் அருளும் இழந்த 'நிலை'. ஆதிமனிதனுக்கு ஏற்பட்ட அருள் இழந்த நிலையால் அவனுக்கும் அவனது சந்ததிக்கும் ஒருவித மனத் தடுமாற்றம், மயக்கம், மருள்நிலை ஏற்படலாயிற்று. இதனால் தீவினைகள் பெருக லாயின. இதுவே அனைத்து மக்களுக்கும் ஏற்பட்ட ஆன்மீக 'இருள்' நிலை. ஆதி மனிதன் செய்த தீவினையும் அவன் சந்ததியார் செய்யும் தீவினைகளுமே 'இருள்சேர் இருவினை' என்பது இதனின்று புலப்படுகிறது.

இவ்விளக்கத்தைப் பின்னணியாகக் கொண்டு, 'பிறவி' 'பிறப்பு' 'எழுமை' 'எழுபிறப்பு' முதலியவை கூறும் உண்மை விளக்கம் காண்போம்:

1. **பிறவிப் பெருங்கடல்** — இது முதல் அதிகாரத்தில் இருள்சேர் இருவினையுள் 'ஆதிவினை'க்கு விளக்கம் கூறுமுகத் தான் உள்ளது என்பது எம் துணிபு.

ஆதிப்பாவத்தால் நிகழ்ந்த இறை அருள் இழந்த நிலை முதல் மனிதனை மட்டுமன்று, அவன் வாயிலாய்ப் பிறக்கும் (பெருங்கடல்போல்) எண்ணற்ற தலைமுறைகளைப் பாதித்து வருகின்றது என்பது கிறிஸ்தவக் கருத்து. விவிலியம் கூறுவது போல், ஆதாம் இறைவன் தந்த 'கட்டளையை மீறிச் செய்த பாவத்தைப் போன்ற பாவம் செய்யாவிடினும்' மானிடர் அனைவர் மீதும் பாவ நிலையும் அதன் தண்டனையாக வந்த சாவும் அஃதாவது, சாகவேண்டிய நிலையும் ஏற்பட்டது (உரோ. 5:14காண்க). பாவம், பாவநிலை என்னும் சொற்களால் இறைவனது நட்பும் அருளும் நீங்கிய நிலை என்றுணர்க. அருள் நிலை என்பது இறைவனுடன் நட்புறவு உள்ளநிலை — அஃதாவது, பாவமில்லாத நிலை.

இந்நிலையில் எண்ண முடியாத மனித தலைமுறைகள் (பிறப்புகள்) தோன்றியதாலும், இன்னும் அதே நிலையில் தலைமுறைகள் தோன்றிக் கொண்டேயிருப்பதாலும், இத் தலைமுறைகளைக் கணக்கிட முடியாததாலும் 'பெருங்கடல்' என உவமையாகக் கூறப்பட்டது.

மானிடர் செய்த, செய்யும் தீவினைகளுக்கெல்லாம் இந்த ஆதிவினை ஒருவித வேர் போல் இருப்பதால் இஃது 'உலகின் பாவம்' எனப்படுவதுண்டு. கிறிஸ்துவை மக்களுக்கு அறிவிக்க

வந்த அவரது முன்னோடி 'இதோ உலகின் பாவத்தைப் போக்க வந்த செம்மறி' எனக் குறிப்பிட்டார். (செம்மறி என்பது பலியாகின்றவர் என்பதைக் குறிப்பிடும்.) கிறிஸ்து உலகுக்கு வந்தது பொதுவாக உலகின் பாவங்களையெல்லாம் போக்கவே. எனினும், ஆதிப்பாவத்தைப் போக்குவதே அவரது முக்கிய நோக்கம் என்று வேதசாஸ்திரி புனித தோமாஸ் அக்வினா கூறுகிறார். வேரிலுள்ள நஞ்சைப் போக்கினால் செடியும் கனியும் நன்றாவது போல என உவமையாகக் கொள்ளலாம்.

இனி மற்றக் குறள்களை ஆய்வோமா?

இறைவனடி சேராதார் - அஃதாவது, அவனது அருளையும் அன்பு உறவையும் அவனது திருவருட் சக்தியையும் நாடி அடையாதவர்கள். கணக்கற்ற தலைமுறைகளைத் தீண்டி வந்து கொண்டிருக்கும் மேற்சொன்ன அருளிழந்த நிலையை வெல்ல முடியாது - அஃதாவது, அவனது அருள் பெற்று வாழ இயலாது.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார் (கு. 10)

என்ற குறளின் கருத்து இதுவே.

எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். (கு. 62)

எழு என்பதும் 'ஏழ்' என்பதும் ஒன்றே. 'ஏழ்' என்பது அதற்கு மேலாய மிக்க 'பன்மை குறித்து நின்றது' என்று பரிமேலழகர் பொருள் கூறுவது குறிப்பிடத்தக்கது. ஆகவே, 'எழு' என்பது 'பல' என்ற பொருளைக் குறிக்குமேயன்றி ஏழு என்னும் எண்ணைக் குறிக்க வேண்டுவது இல்லை என்பது தெளிவாகிறது. வேறு உரையாளரும் இப்பொருளைக் கூறு கின்றனர். ஆகவே, இக்குறளின் பொருள் பிறர் பழிப்பிற்கு இடமில்லாத மக்களைப் பெற்றால் அவர்களால் பல தலை முறைகளுக்கும் தீமை என்பது நிகழாது. நன்மக்களால் பல தலைமுறைகளுக்கும் நன்மை நிகழ்வது காண்கிறோம் அன்றோ!

எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு. (கு. 107)

'எழுமை' என்ற சொல்லை ஓரறிவுயிர் முதல் தேவர்கள் வரை யிலுள்ள ஏழு வகையான பலகோடி உயிர்கள் என்ற பொருளில் உரையாளர் கொள்கின்றனர். இங்கு எழுவகைப் 'பிறப்புகள்'

என்ற கருத்தில் இது கூறப்படுகிறது. ஆனால் எழு, ஏழு என்ற சொற்கள் 'பல' என்ற கருத்தில் ஆளப்பட்டுள்ளது போல 'எழுமை' என்னும் சொல் 'பலவகைப்பட்ட நிலைகள்' என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது என்பது ஏற்புடைய கருத்தாகத் தோன்றுகிறது.

இக்குறளின் கருத்து : தங்களுக்கு நேர்ந்த துன்பத்தைக் களைந்தவரது நட்பை (நன்மைகள்) பலவகைப் பட்ட நிலைகளிலும், தலைமுறைத் தலைமுறையாக எண்ணிப் பார்ப்பர்.

ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து. (கு. 126)

'எழுமை' என்பது பல நிலைகளைச் சுட்டுவது போல் 'ஒருமை' என்பது 'ஒருநிலை'யைச் சுட்டவல்லது. ஆகவே, இக்குறளின் பொருள் ஒரே நிலையில் ஐம்புலன்களை அடக்க ஆற்றல் உண்டாயின் பல வகைகளிலும் நன்மை விளையும். (பிறப்புப் பற்றி இங்கு ஒன்றுமேயில்லை). 'எழுமை' என்ற சொல்லுக்கு எழுவகைப் பிறப்பு எனப் பொருள் கொண்டதால் எழுந்த தடுமாற்றம்.

மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை. (கு. 345)

துறவற இயலில் வரும் இக்குறளில் காணும் பிறப்பறுக்கல் என்பது துறவு பூண்டதால் பிறப்பை (குழந்தை பிறப்பதை)த் துண்டித்துவிடுவதை மட்டுமே குறிக்கமுடியும். இத்தகையோர்கு உடம்பும் மிகையே! பிறவிச் சுழற்சி பற்றி எக் கருத்தும் ஈண்டில்லை.

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும். (கு. 349)

உலக (உடல்) இன்பத்தின்மீது பற்று அற்றால் மேற் சொன்னவாறு பிறப்பு துண்டிக்கப்படும். இதனால் உலக வாழ்வின் நிலையாமையும் காணப்படும்.

ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. (கு. 357)

'உள்ளவன்,' 'உண்மைப் பொருள்,' 'மெய்ப்பொருள்' 'செம் பொருள்' எனப்படும் இறைவனை ஆய்ந்தறிந்து உள்ளத்தில் ஏற்று மெய்யுணர்வு பெற்றால், சிற்றின்பத்தின் வாயிலாக நிகழும் பிறப்புத் தேவையில்லை. மெய்ப்பொருள் இன்பமே சாலும் மனிதனுக்கு மெய்யான மன நிறைவு தர.

> பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
> செம்பொருள் காண்பது அறிவு. (கு. 358)

மெய்யுணர்தல்' அதிகாரத்தில் வருவது இக்குறள். செம் பொருளாகிய இறைவனைக் காண்டலே மெய்யுணர்வு. இவ் வுணர்வு பெறின் மேற்சொன்னவாறு 'பிறப்பு' என்பது பேதைமை என உணரப்படும். பேரின்பத்தை எண்ணுங்கால் சிற்றின்பத்தில் ஈடுபடுவது பேதைமைதானே!

> அவாஎன்ப எல்லா உயிர்க்குமஎஞ் ஞான்றும்
> தவாஅப் பிறப்பீனும் வித்து. (கு. 361)

அவா அறுத்தல் அதிகாரத்தில் வரும் இக்குறளில், சிற்றின்பத் தின் விளைவாக வரும் பிறப்புக்கு அவாதான் வித்து என்னும் கருத்து கூறப்படுகிறது. அதைக் கட்டுப்படுத்த வேண்டும் என்றவாறு 'நீடுவாழ்வார்', என நூலின் தொடக்கத்திலேயே இருமுறை கூறப்பட்டது. மானிடர்க்கு இம்மை வாழ்வு முடிந்த பின்னர் நிகழும் ஒரே நிலையான - நிலைத்துள்ளதொரு வாழ்வைக் குறிப்பிடும். ஆன்மாக்கள் வெவ்வேறு உடல்களில் மாறிமாறிப் பிறக்கும் என்னும் கொள்கைக்கு இங்கு இடமில்லை.

மேலும், இறைவடி சேர்ந்தார்க்கு 'யாண்டும் இடும்பை இல' என்றது, இடும்பையான நிலையை மீண்டும் மீண்டும் உண்டாக்கும் பிறவிச் சுழற்சிக்கு இடமில்லாமல் செய்கிறது.

'மனக்கவலை மாற்றல் அரிது' என்பதையும் இக்கருத்தி லேயே கொள்ள இடமுண்டு. பிறவிச் சுழற்சியுள்ள நிலையில் மனக்கவலை மாற்ற இடமேது?

'இருள்சேர் இருவினை'யுள் ஒன்று ஆதிமனிதன் ஆதாமின் வாயிலாக வந்ததென விளக்கினோம். இதைக் குறித்த விவிலிய வசனங்களை மேலே விளக்கினோம். ஒரு மனிதனின் குற்றத்தால் அனைத்து மானிடரும் பெருங்கடல் போன்று

தொடர்ந்து வரும் தலைமுறைகள் எல்லாம் தீண்டப் பெற்றனர் என்றோம். இதைக் குறித்து விவிலியத்தில் கூறப்படும் மற்றோர் அரிய செய்தியின் விளக்கம் பின்வருமாறு:

குற்றத்தின் (அஃதாவது, ஆதிமனிதன் செய்த குற்றத்தின்) தன்மை வேறு. குறித்த காலத்தில் மீட்பர் இயேசு அருளிய அருட்கொடையின் தன்மை வேறு. ஒருவன் (ஆதிமனிதன்) செய்த குற்றத்தால் அனைவரும் உடலின் சாவுக்கு மட்டுமன்றி அருள் என்னும் உயிர் இழந்து ஆன்மீக சாவுக்கும் ஆளானார்கள் அல்லவா? கடவுளின் அருளும் இயேசுகிறிஸ்து என்னும் இறைவனும் மனிதருமான ஒருவரின் அருளால் கிடைக்கும் கொடையும் அனைவருக்கும் (எல்லாத் தலை முறைகளுக்கும்) எவ்வளவோ மிகுதியாய்ப் பெருகியுள்ளன. இத்த அருட் கொடையின் 'பயன் வேறு.' அந்த ஒரு மனிதன் செய்த பாவத்தின் விளைவு வேறு. ஒருவன் செய்த குற்றத்தால் விளைந்த தீர்ப்பு தண்டனைத் தீர்ப்பு. அனைவருடைய குற்றங் களுக்கும் கிடைத்த தீர்ப்போ அருட்கொடையாக வந்த விடு தலைத் தீர்ப்பு...... ஆகவே, ஒரே ஒருவனின் குற்றம் எல்லா மனிதர்க்கும் தண்டனைத் தீர்ப்பாய் முடிந்தது போல, ஒரே ஒருவருடைய செயல் எல்லா மனிதர்க்கும் வாழ்வளிக்கும் விடுதலைத் தீர்ப்பாய் மலர்ந்தது................ பாவம் பெருகிய இடத்தில் அருள் அணை கடந்து பெருக்கெடுத்தது.

இவ்வாறு இயேசு கிறிஸ்து 'வழியாய் முடிவில்லா வாழ்வுக் காக இறை அருள் மனிதரை இறைவனுக்கு ஏற்புடையவராக்கி ஆட்சி செய்கிறது (உரோ. 5:15-21 வசனங்களின் கருத்து.)

வாழ்வளிக்கும் விடுதலை, அருள் ஆட்சி என்றெல்லாம் உள்ள இடத்தில், மீண்டும் மீண்டும் பிறப்பெடுத்து பிறவிச் சுழற்சிக்கு அடிமையாதல் எங்ஙனம்? அருள் ஆட்சி செய்யும் நிலையில் பிறவிக்கு அடிமையாதல் எங்ஙனம்? ஆகவே, இக் கோணத்திலிருந்தும் பிறவிச் சுழற்சிக்கு இடமில்லை எனத் தெளியலாம்.

# திருக்குறள் புத்தாய்வு தேவைதானா?

## திருக்குறள் உரைகளுள் காணப்படும் பொருந்தாப் பொருள் மேற்கோள்கள் சில :

**குறள் 4**

**"வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு யாண்டும் இடும்பை இல"**

**இறைவன் 'வேண்டுதல் வேண்டாமை இலான்'**

கூறப்படும் பொருள்:

1. 'ஒரு பொருளையும் விழைதலும் வெறுத்தலும் இல்லாதவன்'. (பரிமேலழகர்)
2. 'இன்பமும் வெகுளியும் இல்லாதவன்.' (மணக்குடவர்)
3. 'பொருளும் காமமும் ஆகா என்றற்கு வேண்டுதல் வேண்டாமை யிலான்' என்று பெயரிட்டார். (மணக்குடவர்)
4. **'விருப்பு வெறுப்பு இல்லாதவன்' (பரிதியார்)**
5. **'உலகத்து யாதானும் ஒரு பொருளை விரும்புதலும் விரும்பாமையும் இல்லாத இறைவன்' (காலிங்கர்)**
6. 'விருப்பு வெறுப்பு அற்றவன்' — (புலவர் குழந்தை)
7. 'யாதொரு பொருளையும் விரும்புதலும் வெறுத்தலும் இல்லாதான்' — (கா. சுப்பிரமணியப் பிள்ளை)
8. '(ஒரு பொருளை) விரும்புதலும் (ஒரு பொருளை) வெறுத்தலும் இல்லாதான்'. (தண்டபாணிப்பிள்ளை)

நான்கு விதமாகப் பொருள் கூறப்படுவதைக் காண்கிறோம்.

1. எதையும் விழைதலும் (விரும்புதலும்) - வெறுத்தலும் (விரும்பாமையும்) இல்லாதவன்.

2. ஒரு பொருளை விழைதலும் ஒரு பொருளை வெறுத்தலும் இல்லாதவன்.

3. இன்பமும் வெகுளியும் இல்லாதவன்.

4. பொருளும் காமமும் ஆகாதவன்.

எதையுமே விரும்புதலும் வெறுத்தலும் இல்லாதவன் எனில், இறைவனுக்கு அறியும் ஆற்றலும் பண்பும் விரும்பும் ஆற்றலும் இல்லையென்று ஆகிவிடும். ஏனெனில், அறியும் ஆற்றலும் பண்பும் உள்ளவர்க்கே ஒன்றை விரும்பவோ விரும்பாதிருக்கவோ இயலும். ஆறறிவுள்ள மனிதர்க்குப் பகுத்தறிவு உண்டு என்கிறோம். எது விரும்பத் தக்கது? எது விரும்பத் தகாதது? எது நன்மை? எது தீமை? என்று பகுத்தறிவதற்குள்ள பண்பே பகுத்தறிவு என்று பெயர் பெறும். இஃது அன்றாட அனுபவத்தாலேயே அறியக் கூடியது. பகுத்தறிவு உள்ள மனிதன் நன்மையானதை அல்லது தனக்கு நன்மை எனத் தவறாக எண்ணுவதை விரும்புவதும் தீமையானதை அல்லது தனக்குத் தீமை எனத் தவறாக எண்ணுவதை வெறுப்பதும் யாவரும் அறிந்ததே.

அளவுள்ள அறிவுடைய மனிதனுக்கு இப்பண்பு இன்றியமையாதது எனின், அறிவே வடிவினன், தன்வயத்தன், இயற்கை அறிவினனாதல், முற்றுணர்வுடைமை, பேராற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை ஆகிய பண்புகளுடன் கூடியுள்ள இறைவனுக்கு விரும்பவும் விரும்பாதிருக்கவும் அறிவோ உணர்வோ ஆற்றலோ இல்லை என்பது சிறிதும் பொருந்தாது.

இனி, ஒரு பொருளை விழைதல், ஒரு பொருளை வெறுத்தல் என்பதற்கு இருவிதக் கருத்துகள் கூறவியலும். அதாவது, எதையும் விரும்புதலோ வெறுத்தலோ என்று பொருள் கொண்டால், மேற் கூறியது இதற்கும் பொருந்தும். குறிப்பிட்ட ஒன்றை விரும்புவதும் குறிப்பிட்ட வேறொன்றை வெறுப்பதும் எனப் பொருள் கொண்டால், இதை நன்மையை விரும்புவது,

தீமையை வெறுப்பது என்கிற பொருளில் கொள்வோமாயின் பொருத்தமானதே. நன்மையே வடிவினனான இறைவன் எங்ஙனம் நன்மையை விரும்பாமலும், தீமையை வெறுக்காமலும் இருத்தல் இயலும்?

'இன்பமும் வெகுளியும் இல்லாதான்', 'பொருளும் காமமும் ஆகா என்றற்கு இங்ஙனம் பெயரிட்டார்' என மணக்குடவர் கூறும் பொருளும் பொருந்தாது. ஏனெனில் இன்பம், வெகுளி என்பன விருப்பு - வெறுப்பேயாம். பொருளை வேண்டுதலும், வேண்டாதிருத்தலும் இறைவனுக்கு எவ்வகையிலும் பொருந்தாது. காமமும் அப்படியே. ஆகவே, வேண்டுதல் வேண்டாமை என்றற்கு **'இன்னவர் வேண்டியோர், இன்னவர் வேண்டாதோர் என்னாமல் உலகில் எம் மக்களையும் ஒன்றெனத் தழுவிய பண்புடையனாய்'** என மு. கோவிந்தசாமியவரது 'நயவுரை' மிகப் பொருத்த மானதாய்த் தோன்றும்.

கிறிஸ்தவக் கண்ணோட்டத்தில் யூத மதத்தில் இருந்த யூதர் எனப்படும் மக்கள் வேண்டியோர்; பிறர் எல்லாம் வேண்டாதோர் என்ற நிலை இயேசு கிறிஸ்து (ஐந்தவித்தான்) வருகையால் நீங்கியது. அனைத்துலகையும் அணைத்தவர் என்ற கருத்தே ஓங்குகின்றது. 'வேண்டுதல் வேண்டாமை யிலான்' என்பதற்கு விருப்பு வெறுப்பற்ற 'நீதிபதி' (Day of Judgement)— 'ஒருபால் கோடாமை' - (குறள் 118) முதலியன கொள்ளத்தக்கன.

**குறள் 5**

**இருள் சேர் இருவினை.....' எவை?**
கூறப்படும் பொருள்:-

> 'மயக்கத்தைப் பற்றி வரும் நல்வினை தீவினை' —
> (பரிமேலழகர், மணக்குடவர்)
>
> 'தம் அறியாமையாகின்ற இருள் காரணமாக வந்து இயைகின்ற நல்வினை, தீவினை'—(காலிங்கர்-தருமர்)
> —தண்டபாணிப்பிள்ளை கூறுவதும் இஃதே.
>
> 'அஞ்ஞானத்தினால் உண்டாகும் நல்வினை, தீவினை'
> —(தாமத்தர், நச்சர்)

'அறிவின்மையால் உண்டாகும் **பெரிய துன்பங்கள்**'-
—(புலவர் குழந்தை)

'இருவினை' என்றற்கு, 'இருவினைப் பயன்களாகிய இன்ப துன்பங்கள்' என்று கா. சுப்பிரமணியப் பிள்ளை கூறுகிறார்.

அறியாமை, ஆன்ம மயக்கம் (மருள்) அஞ்ஞானம் இவற்றால் தீவினை நிகழ்வதுண்டு என்பது ஏற்புடைய கருத்து. **நல்வினையும்** அத்தகைய அறிவு மயக்கத்தால் நிகழ்வதே என்பது எங்ஙனம் ஏற்புடைய கருத்தாகும்? அதே பொருளில் **நன்மை, நன்று, நன்றி** என்பன பற்றி வள்ளுவரே கூறிய பல கருத்துகள நல்வினையும் அறிவு மயக்கத்தோடு தொடர்பு கொண்டனவே என்னும் கருத்தோடு எங்ஙனம் இணைதல் கூடும்? ஓரறுபது குறள்களில் இக்கருத்து கூறப்படுவது காண்க. உதாரணத்துக்கு

'வீழ்நாள் படா முன்னர் நன்றாற்றுதல் வேண்டும்'...... (38)
'நன்றி மறப்பது நன்றன்று' ...... (108)
'தகுதி எனவொன்று நன்றே' ...... (111)
'அறனல்ல செய்யாமை நன்று' ...... (157)
'தந்தை மகற்காற்றும் நன்றி' ...... ( 67)
'நயன் ஈன்று நன்றி பயக்கும்' ...... ( 97)
'காலத்தினாற் செய்த நன்றி ...... பெரிது' ...... (102)
'தினைத்துணை நன்றி' ...... (104)
'உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு' ...... (110)
'நன்மை கடலிற் பெரிது' ...... (103)
'புரை தீர்ந்த நன்மை' ...... (292)

இக் குறள்களிலும் மற்றவற்றிலும் கூறப்படும் கருத்துகளை ஆய்வோமாயின், நல்வினை என்பது, அறிவு மயக்கத்தால் நிகழ்வதால் தவிர்க்கப்பட வேண்டியது என்பதற்கு மாறாக வாழ்நாள் முடியுமுன் முழு மூச்சுடன் செய்ய வேண்டுவதொன்றென்பது நன்கு புலப்படும்.

'மேலுலகு இல்லெனினும் ஈதலே நன்று' என்னும் குறளிலும் இக்கருத்துப் புலப்படுவது காண்க.

ஆகவே, **இருவினை** என்னும் தொடரால் ஈண்டுக் குறிக்கப் படுவது நல்வினை தீவினையன்றென்பது தெளிவு. 'இருள்' என்னும் சொல்லை எப்பொருளில் கொண்டாலும், நல்வினையும் இருளில் சேர்ப்பதொன்று எனும் கருத்து எவ்வாற்றானும் ஏற்கத் தக்கதன்று.

இனி இவ்விருவினை யாவை என்னும் வினாவுக்கு விடை யாது?

இவ்விடை வள்ளுவர் கூறும் 'பிறப்பு' பற்றிய கருத்தோடு இணையும் என்பது எம் கருத்து. அச்சொல்லால் வள்ளுவர் குறிப்பிடுவது பல பிறப்பு - பிறவிச் சுழற்சியையன்று; தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்து வரும் பிறப்பையே குறிக்கும் எனலாம்.

இப்பொருளை ஏற்றுக் கொண்டால், இருவினைக்குப் பொருள் பின்வருமாறு: தலைமுறை தலை முறையாகத் தொடர்ந்து வரும் வினை, அதாவது, ஆதியில் நிகழ்ந்த தீவினையின் விளைவாக இறைவனது அருள் இழக்கப் பெற்று, அருளுக்கு எதிரான மருளிலும் இருளிலும் ஆன்மாவைச் சேர்த்துள்ள அருளிழந்த நிலை - என்பது ஒன்று. ஈண்டு **வினை** என்னும் சொல் வினையின் விளைவாக நிகழ்ந்த (அருள் இழந்த) நிலையைக் குறிப்பது காண்க.

மற்றொரு வினை - அவனவன் உணர்ந்து, தெரிந்து, அல்லது ஒரு வித மயக்கத்தால் புரியும் தீவினை - பாவம்.

இப்பொருளே இங்குப் பொருந்தும்.

---

குறிப்பு :- நம் நாட்டுத் தத்துவ விளக்கத்திலும் ஆதி அவித்யை ஆதிமூல மலம் என்பதுபற்றிய கருத்துகள் விளங்கு வது காண்க.

குறள் - 6

'பொறிவாயில் ஐந்தவித்தான்......' உரையாளர் கூறும் பொருள் :

1. மெய், வாய் முதலிய பொறிகளை வழியாகவுடைய ஐந்தவாவினையும் **அறுத்தான.** ...... (பரிமேலழகர்)

2. மெய், வாய் முதலிய ஐம்பொறிகளின் வழியாக வரும் ஊறு, சுவை முதலிய ஐந்தின் கண்ணும் செல்லும் மன நிகழ்ச்சியை **அடக்கினான்.** ...... (மணக்குடவர்)

3. சத்த, பரிச முதலிய பொறியை வழியாகவுடைய வற்றிற்கு மனசைப் போக்காமல் **காக்கவல்லார்** ...... (பரிதியார்)

4. சுவை, ஒளி முதலிய ஐம்புலன்களை நுகர்தற்கு வழிக் கருவியாகிய மெய், வாய் முதலிய ஐம்பொறிகளையும் **அகத்தடக்கி** ...... (காலிங்கர்-தருமர்)

5. உடம்பு, வாய் முதலிய ஐந்து பொறிகளை வழியாக உடைய ஐந்து ஆசைகளையும் **அறுத்தவன்** ...... (தாமத்தர்)

6. ஐம்பொறிகளின் வழியாக நுகரப்படும் ஐம்புலன் களையும் **வென்றான்** ...... (நச்சர்)

7. மெய், வாய் முதலிய பொறிகளை வழிகளாகவுடைய ஐந்தவாவினையும் **(அநாதியே) அவித்த** இறைவன் (தண்டபாணிப்பிள்ளை)

8. ஐம்பொறி வழியே செல்லும் ஐம்புலன்களையும் **அடக்கினவன்** ...... (புலவர் குழந்தை)

9. மெய், வாய் முதலிய ஐம்பொறிகளிடம் உள்ள உணர்ச்சி, சுவை முதலிய ஆசைகளையும் **அடக்கிய** கடவுள் ...... (சாமி சிதம்பரனார்)

10. ஐம்பொறிகளின் வழியாக எழும் ஐந்து வகை ஆசை களும் இயல்பாகவே இல்லாது **அடங்கப்பெற்ற** கடவுள் ...... (கா. சுப்பிரமணியப் பிள்ளை)

இவ்வுரைகளினின்று - **அவித்தல்** என்னும் சொல்லுக்கு **அறுத்தல், அடக்குதல், காக்க வலிமை கொள்ளல், அகத்தடக்கல், வெல்லல், அநாதியே அவித்தல், அடங்குதல், அடங்கப் பெறுதல்** எனப் பலபடப் பொருள் கூறப்படுவதைக் காணலாம்.

ஐம்புலன்களைப்பற்றிக் கருத்துக் கூறும் வள்ளுவர், அவற்றைக் **காத்தல்** வேண்டும்; அங்ஙனம் காப்பவனே 'வரன் என்னும் வைப்பிற்கு வித்தாவான்' (24). அவற்றின் **வகைதெரிதல்** வேண்டும்; அவனுக்கு மட்டுமே உலகம் கட்டுப் படும் (27). அவற்றை **அடக்குதல்** வேண்டும். அவனுக்கே ஏமாப்பு உடைத்தாகும் (126). அவற்றை **அடல்** வேண்டும், (343) என்றெல்லாம் தெளிவாகக் கூறுகின்றார். ஆகவே, 6-ஆம் குறளில் காணும் **அவித்தான்** என்னும் சொல்லுக்கு உரையாளர் கூறும் **அறுத்தல், அடக்குதல், அகத் தடக்குதல், காக்க வல்லவராதல், வெல்லல், அடங்குதல், அடங்கப் பெறுதல்** என்னும் பொருள் எங்ஙனம் பொருந்தும் என்பது புலப்படவில்லை. ஆசிரியர், **அவித்தான்** என்னும் சொல்லுக்கு இப்பொருள் (அதாவது அறுத்தல், அடக்குதல் முதலிய பதங்களுக்குள்ள பொருளைக் கூற விரும்பியிருந்தால்) வேறொரு புதிய சொல்லைப் பயன்படுத்த வேண்டிய தேவை எங்கிருந்து வந்தது? உரையாளருள் தண்டபாணிப்பிள்ளை யவர்கள் அறுத்தல், அடக்குதல் முதலிய பொருள்கள் பொருந்தாததை உணர்ந்தே **'அநாதியே அவித்தல்'** என்று பொருள் கூறினாரோ? 'அநாதியே' அவித்தல் என்றால் இறைவனுக்கு அநாதியாய்ப் புலன்கள் இருந்தனவென்றும், அவற்றை அநாதியே அவித்து விட்டான் என்றும் பொருளாகும். இஃது எங்ஙனம் பொருந்தும்? கடவுளுக்குப் புலன்கள் எங்ஙனம் அமையக்கூடும்? **திருவாசகமணியவர்கள்** கூறுவதைக் காண்போம்:

'ஐந்தவித்தான்' என்னும் சொல், உரையாளர் கூறுவது போல் அப்படியே இறைவனுக்கும் பொருத்தி நோக்கினால், உள்ளக் கிளர்ச்சியை விளைவிக்கும் ஒன்றாக (intriguing) வும், கேட்பதற்கே பிடிக்காததாகவும் (Jarring), ஏன் சிறிதும் பொருத்தமற்றதாகவும் (in appropriate) உள்ளது'.

"மகாவீரர், புத்தர், இயேசு கிறிஸ்து இவர்களோடு பொருத்தி நோக்கினால், புலன்களைப் பொசுக்கியவர் (scorch), அல்லது தடுத்து நிறுத்தியவர் (scotch) என்கிற பொருள் கிடைக்கும். இஃது ஓரளவு பொருந்தும். ஆனால், இறைவனோடு இணைத்துப் பொருள் கூறுவது சற்றும் பொருந்தாது. (absurd). ஏன்? தூஷணத்துக்குரியது.'' (blasphemous) - இச்சொல் தொடர்க்குப் பொருள் காணவியலாத நிலையில் அறிஞர் சிலர் கூறுவதைக் காண்போம்.

"காலமும் வருங்கால ஆராய்ச்சிகளுமே ஒரு வேளை (ஐந்தவித்தானைப் பற்றிய) அப்பழங்கால மரபை நமக்குக் கட்புலப்படுத்த வேண்டும்.''—

- பன்மொழிப்புலவர் அப்பாத்துரையார்.

"ஐந்தவித்தானைப்பற்றி ஆசிரியர் கருதியது ஒன்றிருத்தல் வேண்டும். - அஃது இன்று அறியப்படவில்லை.''

- பாவாணர்

"இக்குறளின் பொருள் முடிவை நோக்க, இஃது இடைச் செருகல் போலக் காணப்படுகிறது'' - இலக்குவனார்.

ஏறத்தாழ இரண்டாயிரமாண்டுகள் இதற்குப் பொருள் கூற முடியவில்லை என்றால் விந்தையல்லவா? யாம் கூறும் பொருள், இவ்வருங்கால ஆராய்ச்சியாய் இருந்தால் ஆகாதோ?

பாவாணர் கூறும் 'கதை ஒன்று', அதாவது 'நிகழ்ச்சி' யாம் கூறுவதாயிருத்தலாகாதோ?

பொருள் காணவியலாத நிலையில், இடைச்செருகல் என்று கூறிவிடுவது எளிதான முறையே!

**குறள் 11**

**"வான்நின்று உலகம் வழங்கி வருதலான்**
**தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று.''**

இவ்வதிகாரம் முழுதும் 'வான்' என்னும் சொல், **மழை** என்னும் பொருளில்தான் ஆளப்பட்டுள்ளது என்பது உரையாளர்

---

* Thiruvachakamani Thirukkural Translation . 1982
Pages 282-283

கருத்து. 'வான்' என்னும் சொல் 'விண்', 'புயல் என்னும் வாரி', 'விசும்பு', 'தடிந்தெழிலி' என்றும் கூறப்படுவது ஏன் என்று உரையாளர் விளக்காமல் விடுவது ஏன்?

குறள் - 14

"ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்"

"மழை என்னும் வருவாய், தன் பயன் குன்றின் உழவர் ஏரான் உழுதலைச் செய்யார்," என்கிறார் பரிமேலழகர், 'வருவாய்' என்னும் சொல்லுக்குச் சாதாரணப் பொருள் கொண்டால், உழுதலைச் செய்யாவிடின் வருவாய் குன்றும் என்றும் பொருள் கூறலாமே!

இக்குறளில் கூறப்படும் உழவர் யார்? புயல் என்னும் வாரி எது? என்பதற்குப் பொருள் நன்கு விளங்காமலேயுள்ளது காண்க. மேலும், 'புயல் என்னும் வாரி' என்று மழையைக் கூறுவது ஏன்?

குறள் - 16

"விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண் பரிது"

மழை பெய்யாவிடில் புல் முளைக்காது என்று வள்ளுவர் சொல்லித்தான் தெரிந்து கொள்ள வேண்டுமா? இங்குப் 'புல்' என்று குறிக்கப்படுவது வேறொன்றாகத்தான் இருக்க வேண்டும். அஃது எது?

குறள் - 20

"நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு"

இக்குறளில் 'ஒழுக்கு' என்னும் சொல்லுக்கு 'நீர் இடையறாது ஒழுகும் ஒழுக்கு' (பரிமேலழகர்), 'நீரின் ஓட்டம்' (கா. சுப்பிரமணியப் பிள்ளை), 'தண்ணீரின் வருகை' (புலவர் குழந்தை) ஆகிய உரைகள் எங்ஙனம் பொருந்தக் கூடும்?

உரையாளர் ஒரு சிலரே, உதாரணமாக, கா. சுப்பிரமணியப் பிள்ளை "கடவுளுடைய தண்ணருளைக் குறிப்பதற்கு மழையே

அறிகுறியாக இருக்கின்றது. மழைச் சிறப்புக் கூறுதல் திருவருட் சக்தி வணக்கம் கூறுதலாக முடிகின்றது'' என்கிறார். இக் கருத்திலேயே தண்டபாணிப் பிள்ளையும் கூறுகின்றார். ஆகவே மழை, வான் முதலிய சொற்களை இறைவனின் அருட்சக்தியின் அறிகுறிகளாகவே கொள்ள வேண்டும். அங்ஙனம் கொண்டால்தான் குறள்-20ல் காணும் 'யார் யார்க்கும் வான் இன்று அமையாது ஒழுக்கு' என்பதற்கு உண்மையான பொருள் கிடைக்கும். சாதாரண மழையின்றி 'யார் யார்க்கும் ஒழுக்கம் அமையாது' என்பதைவிட 'இறையருட் சக்தியின்றி எத்தகையோர்க்கும் ஒழுக்கம் நிலை பெறாது' என்பதே பொருந்தும்.

**குறள் - 21 முதல் 30**

இப்பாக்களுக்கு 'நீத்தார் பெருமை' என்னும் தலைப் புள்ளது. நீத்தார் என்றால், துறந்தவர் என்னும் பொருளே, அனைவராலும் கூறப்படுகிறது. அறன் வலியுறுத்தலையடக்கிய முதல் நான்கு அதிகாரங்கள் 'பாயிரம்' என எல்லாராலுமே கருதப்படுவதால், *'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்று பாயிரத்திலேயே கூறும் வள்ளுவர், அதே பாயிரத்தில், துறந்தவர் பெருமையைக் கூறுகின்றார் என்பது எங்ஙனம் பொருந்தும்?

துறந்தார் பெருமை கூற விரும்பியவர் 'வையத்திறந்தாரை எண்ணிக் கொண்டற்று' என்பதன் கருத்தென்ன? **அத்தனை** பெருமைகள் கொண்டவர் என்பது பொருளா? **'அளவு படாமையான்'** எனப் பரிமேலழகர் கூறுவது பொருத்தம் தானா?

இவ்வதிகாரத்தில் 'ஐந்தவித்தான் ஆற்றல்' குறித்துக் கூறுவது ஏன்?

---

* ''ஏன் 'நான்கு' என்ற கேள்வி நெடுக நிகழ்ந்து வருவதுண்டு. இதற்குத் தக்க விடை இதுகாறும் பெறப்பட்டதில்லை'' என இத்தனை நூற்றாண்டு களுக்குப் பின்னரும் மு. இராகவய்யங்கார் போன் றோர் கூறுவதேன்? (தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி).

'கடவுள் வாழ்த்'தில், 'தனக்குவமை இல்லாதான்' எனக் கடவுளின் தனித் தன்மையைச் சிறப்பித்துக் கூறும் வள்ளுவர், கடவுளை 'ஐந்தவித்தான்' (6) எனக் கூறுகிறார். 'நீத்தார் பெருமை'யில், நீத்தாரையும் 'ஐந்தவித்தான்' (25) என்றே கூறுகிறார். அவ்வாறானால், வள்ளுவர் கூறும் 'ஐந்தவித்தான்' கடவுளா? மனிதனா? என்னும் வினாக்கள் எழுகின்றன.

நீத்தார் மனிதர் அல்லர்; அருவ நிலையிலிருந்து நீத்து, ஐம்புலனையுடைய உருவ நிலைக்கு வந்த கடவுள் என்று கொண்டாலொழிய, 'தனக்குவமை இல்லாதான்,' 'ஐந்தவித்தான்' என வள்ளுவரால் பாராட்டப்படும் கடவுள் விளக்கம் சரியானதாக அமையாது.

**குறள் - 41**

**''இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை''**

பாயிரம் முடிந்து இல்வாழ்க்கைபற்றிக் கூறத்தொடங்கும் போது, 'இயல்புடைய மூவர்க்கும் இல்வாழ்வான் துணை' என்கிறார். இம் மூவர் யார்? என்னும் வினாவுக்கு,

உறவினர், நண்பர், ஏழைகள்
தாய், தந்தை, மனைவி
பெற்றோர், மனைவி, மக்கள்
அந்தணர், அரசர், வணிகர்
சேரர், சோழர், பாண்டியர்
அறவோர், ஒழுக்கத்து நீத்தார், அந்தணர் —

என்றெல்லாம் விடை கூறப்படுவதேன்? இத்தகைய ஐயப்பாடுகள் நிலைத்திருக்குமாறு ஆசிரியர் தம் குறளை யாத்தாரா?

இதில் சிக்கல் உள்ளதென திரு. வி. க. போன்ற பேரறிஞர் இன்றும் கூறுவது வியப்பாக இல்லையா?

திரு. வி. க. அவர்கள் கூறுவது : 'ஆசிரியர் உள்ளத்தைக் காண்டல் அருமையாகவே தோன்றுகிறது. எவரை உளங்கொண்டு 'மூவர்க்கும்' என அருளினாரோ தெரியவில்லை. இது பற்றி யான் பலமுறை நினைத்ததுண்டு. என் உள்ளத்தில்

எத்தனையோ பொருள்கள் தோன்றித் தோன்றி மறைந்தன...... 'மூவர்க்கும்' என்னும் சொற்குப் பொருள் காண்பதில் பழைய உரையாசிரியர்களுக்குச் சிறிது மயக்கம் தோன்றியிருக்கும் என்பது அவரவர் உரைகளால் தெரிகிறது.*

இத்தனை நூற்றாண்டுகளுக்குப் பின்னரும் பாயிரத்துக்கே முழுப்பொருள் காண முடியவில்லை எனின், புத்தாய்வுக்கு ஏன் இடமில்லை?

---

* திரு. வி. க. - திருக்குறள் விளக்க உரை - பக்-443 பக்-441

# 1. 'ஒருவன் செய்தி'யும் திருக்குறளும்

திருக்குறள் என்னும் அரிய நூலின் உட்கருத்து என்ன? எந் நோக்கத்துடன் இதன் ஆசிரியர் இந்நூலை இயற்றினார்? எக் கருத்துகளை வலியுறுத்த இதனைச் செய்தார்?

'கடவுள் வாழ்த்து' எனப்படும் முதலதிகாரத்திலேயே இந்நோக்கம் கூறப்படுகின்றதென்பதில் ஐயமில்லை. 'வாலறிவன் நற்றாள்' தொழச் செய்தல்; நிலைத்துள்ள 'நிலமிசை' (அதாவது 'வீடு' எனப்படும் பேற்றினைப் பெற்று) நீடுவாழச் செய்தல்; இறைவனடி சேர்ந்து 'யாண்டும்' உள்ள 'இடும்பை'யினையும் — 'இருள்சேர்' தீவினை ஆகிய இரண் டனையும் வெல்ல வழிகாட்டுதல்; 'ஐந்தவித்தான்' காட்டிய பொய்தீர் ஒழுக்க நெறி நின்று, நீடுவாழ்வு பெற வழி செய்தல்; இவையே நூலின் நோக்கமெனத் தெளியலாம்.

சுருங்கக் கூறின், மனிதனை இறைவன் தாள்— இறைவன் அடி சேர்ப்பித்தலே என்னலாம். தாள், அடி என ஏழு முறை முதல் அதிகாரத்திலேயே உள்ளது நோக்குதற் குரியது.

பாயிரத்தின் முதல் அதிகாரத்தில் கூறியது வேறு வகையில் 4-ஆம் அதிகாரத்திலும் கூறப்படுகிறது.

சிறப்பும் (அருட்)செல்வமும் ஈனுகின்ற அறத்தை வலி யுறுத்தல்; 'மனத்துக்கண் மாசிலனாதல்' ஆகும் 'அனைத் தறனை' அறிவித்தல்; அவ் அறத்தால் வரும் இன்பத்தை எய்த வழிகாட்டுதல் என அங்குக் கூறப்படுவது காண்க.

இக்கருத்துகள் எல்லாம் 'புறநானூறு' என்னும் சங்க இலக்கியத்தில் அழுத்தமாகக் காணப்படுகின்றன. அவை பின்வருமாறு :

"ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும்,
மாணிழை மகளிர்க் கருச்சிதைத் தோர்க்கும்,
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்
**செய்தி கொன்றோர்க் குய்தி இல்லென**
**அறம் பாடிற்றே......"** (புறம். 34)

இவ்வடிகட்குப் பெரும்பாலும் கூறப்படும் உரையாவது : ஆனினது (பசுவினது) முலையாற் பெறும் பயனைக் (ஆவினை வதைத்து) கெடுத்த தீவினையாளர்க்கும், அரிய ஆபரணங்களை யுடைய பெண்டிரது கருவை அழித்தவர்க்கும், தாய் தந்தை யர்க்குக் கொடுமை செய்தவர்க்கும், இவர்கள் செய்த பெரும் பிழைகளை நோக்கின் இப்பிழைகளுக்கும் கழுவாய் உண்டு. எனினும், உலகம் கீழ் மேலாயினும் 'ஒருவன் செய்த நன்றி **யைச் சிதைத்தோர்க்கு நரகம் நீங்குதல் இல்லை'** என அறநூல் கூறிற்று — என்பதாம்.

'செய்தி கொன்றார்,' 'உய்தி இல்' என்னும் தொடர்கள்—

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு" — (110)

என்னும் குறளுடன் மிகமிக நெருங்கியுள்ளது வெளிப்படை.

மேலும் 'செய்தி கொன்றார்க்கு உய்தி இல்' என்னும் அடி 110ஆம் குறளை நினைவுபடுத்துவதாக உள்ளது.

மேலும், குறள் 110ல் உள்ள 'எந்நன்றி' என்னும் தொடருக் குள்ள முழுமையான பொருள், 'ஆன் முலையறுத்த ..........' என்ற மேற்கூறிய அடிகளில் காணவியலும் என்பது எம் துணிபு.

'எந்நன்றி' என்கிற தொடர்க்குச் சாதாரணமாக 'எவ்வகைப் பட்ட பெரிய நன்மை' எனப் பொருள் கூறுவர் உரையாளர். ஆனால், திருக்குறள் ஆசிரியர் 'ஆன் முலையறுத்த......' எனத் தொடங்கும் முதல் மூன்று அடிகளில் கூறப்படும் மாபெரும் குற்றங்களை மனத்தில் கொண்டே 'எந்நன்றி' எனக் கூறியிருக்கக் கூடும் என்று தோன்றுகிறது.

பசுவதை, சிசுவதை, பெற்றோர்*க்கு இழைக்கப்படும் கொடுமை இத்தகைய மாபெரும் குற்றங்களைச் செய்தவர்க்கும் கழுவாய் உண்டு. ஆனால், 'ஒருவன் செய்தி கொன்றால் உய்தி இல்லை' - எனக் கூறப்பட்டுள்ளது. ஆகவே, இச் '**செய்தி கொல்லுதல்**' மேற்கூறிய பாதகங்களிலும் மிகமிகக் கொடுமையானது. கழுவாய்க்கே இடம் தராதது என்று சொல்ல வேண்டியுள்ளது. அத்தகைய செய்தி எதுவாயிருத்தல் கூடும்?

மேலும் '**செய்தி**' என்னும் சொல்லுடன் '**ஒருவன்**' என்றுள்ளது. இந்த 'ஒருவன் செய்தி' யாது? இதற்கு 'ஒருவன் செய்த நன்றி' எனப் பொருள் கூறுவர் உரையாளர். இது பொருந்துமா? 'ஒருவன் செய்த நன்றி' என்னும் போது பெற்றோர் செய்த நன்மையைக் கொன்றாலும் கழுவாய் உண்டு; என்னும் கருத்து எங்ஙனம் பொருந்தும்? பெற்றோரை விட **யாரோ ஒருவன்** செய்த நன்மை பெரிதா? அதைக் கொல்வது கழுவாய்க்கே இடமில்லாததாகி விடமுடியுமா?

ஆகவே, ஈண்டுக் கூறப்படும் 'ஒருவன்' யாரோ ஒருவனை யன்று; '**ஒருவனாய் உள்ள ஒருவனை**'யே குறிப்பிட வேண்டும். அதாவது ஒருவனாய் உள்ள இறைவனையே குறிப்பிட வேண்டும். இதற்கும் புறநானூற்றில் சான்று காண்கிறோம்.

'நீல மணிமிடற் **றொருவன்** போல ......' (புறம். 91)
என்னும் அடிக்கு உரை பின்வருமாறு கூறுவர்:

'**ஒருவன்**' என்பது இறைவன் பெயர்களுள் ஒன்று. 'ஒருவன்' என்றும் 'ஒருவ போற்றி' என்றும் சான்றோர் கூறியிருத்தல் காண்க. தன்னை நெடிது வாழப்பண்ண வேண்டுமெனக் கருதிய அவன்† கருத்தை வியந்த ஔவையார், அவனும் இறைவன் போன்ற செய்கையுடையனாயது பற்றி, அவ்விறைவனே போல் நிலை பெறுதல் வேண்டு மென்றெண்ணி, 'ஒருவன் போல மன்னுக பெரும நீயே' என்றார்.

---

* 'குரவர்த் தப்பிய' என்கிற தொடர்க்குப் பதிலாக 'பார்ப் பார்த்தப்பிய' எனவும் பாடம் இருப்பதாகத் தோன்று கிறது. இது பரிமேலழகர் காலத்தில் மாற்றப்பட்டது என உரையாளர் கருதுவர்.

† அதியமான் நெடுமான் அஞ்சி

ஆகவே, 'ஒருவன்' என்னும் சொல் இறைவனைக் குறிப்பிடத் தடையில்லை.

இனி, 'ஒருவன் செய்தி' என்னும் தொடர்க்குப் பொருள் எதுவாயிருக்கும்?

'செய்தி' என்றால் 'செய்கை', செயல் - காரியம் என்றும் பொருள்படும். இறைவனின் செயல் சாதாரணச் செயலாயன்றி அளவிடவியலா மாபெரும் செயலாகத்தான் இருக்குமாதலின் 'இறைவன் செய்த மாபெரும் செயல் அல்லது நன்மை' என்று பொருள் கொள்வதில் தவறில்லை.

இப்பொருள் குறள் 110-ல் 'செய்ந்நன்றி' என்னும் தொடரில் மறைந்துள்ளது காண்க. செய்ந்நன்றி (வினைத்தொகை) எனின், முக்காலத்தும் இறைவன் செய்த, செய்கின்ற, செய்யப் போகும் மாபெரும் நன்மை, செயல் எனப் பொருள்படத்தான் வேண்டும்.

செய்த நன்மை - ஆதியிலிருந்து, கடந்த காலத்தில் இறைவன் மனித இனத்துக்குச் செய்த நன்மை. இவற்றுள் மிக மிக மேலானது - மாபெரும் நன்மை - ஐந்தவித்தானாக உலகுக்கு வந்து, மனிதர் இறைவனடி சேர 'பொய்தீர் ஒழுக்க நெறி' காட்டியது - இறுதியில் (எதிர்காலத்தில்) அவனடி சேரச் செய்வது. நிகழ்காலத்திலும் அவன் செய்து கொண்டேயிருக்கும் நன்மைகளை யார் மறுக்கவியலும்?

இந்த மாபெரும் செயலை - நன்மையைக் 'கொன்றவர்க்கு' கழுவாய் இல்லை - உய்வு இல்லை எனின் பொருள் சிறக்கிறது. இதைக் குறிப்பிட்டே, கிறிஸ்து **''மனுமகனுக்கு எதிராகப் பேசுகிறவன் எவனும் மன்னிப்புப் பெறுவான். பரிசுத்த ஆவியைப் பழிப்பவனோ மன்னிப்புப் பெறான் என்றார்.'' (லூக் 12;10)** இங்கு '**மனுமகன்**' என்றது தம்மையே குறிப்பதாகும்.

செய்த 'கருமத்தால் நாணுதல்', அதாவது செய்த தவற்றுக்கு வருந்தி, நாணி, மன்னிப்புக் கோரும் வரையில் எத்தகைய குற்றத்துக்கும் மன்னிப்பு — கழுவாய் உண்டு. ஆனால், இறைவனின் அருளாகிய வான்சக்தி வடிவாம் பரிசுத்த

ஆவியைப் பழிப்பவன் செய்த குற்றத்துக்கு வருந்தும் அருளைப் பெறான். ஆகவே, மன்னிப்புப் பெறான்; கழுவாய் இன்றி உய்வு பெறான்.

'யார் யார்க்கும் வான் இன்றி அமையாது ஒழுக்கு அன்றோ!' (20-ஆம் குறள்)

இவ்விளக்கத்தினின்று பெறப்படுவது யாதெனில், 'அறம்' பாடுவது — இறைவன் செய்த மாபெரும் நன்மையே என்பதும், அந்நன்மையைக் 'கொல்வது' அதாவது, செய்த நன்மையை மதியாமல் — அதனை அடையாமல், அதற்காக இறையருள் வான்சக்தியைப் பெற விரும்பாமல், இறைவனின் ஆவியாகிய வான்வரத்தை மதியாமல், அவ் ஆவியைப் பழிப்பது போன்ற செயலைப் புரிந்தால் உய்தி பெறார் என்றவாறு.

ஆகவே,

திருக்குறள் என்னும் அறநூல் கூறுவது இறைவனின் செய்தியும் அதை ஏற்றுப் பயன்அடையாவிடில் நேரக் கூடிய கேடும் — ஆகும்.

இறைவனின் இந் நற்செய்தியை வாயினால் எடுத்துக் கூறுதலே வாய்மையாகும். எங்ஙனம் என ஆய்வோம்.

**வாய்மை :**

''வாய்மையும் பொய்மையும் கண்டோர்ச் சுட்டித்
தாய் நிலை நோக்கித் தலைப்பெயர்த்துக் கொளினும்.....''
(தொல் — பொருளதிகாரம் - 42)

''வாய்மை கூறலும், பொய்தலைப் பெய்தலும்
நல்வகை யுடைய நயத்தின் கூறியும்
பல்வகை யானும் படைக்கவும் பெறுமே.''
(தொல் — பொருளியல் - 233)

இம் மேற்கோள்களில் வாய்மை என்பது பொய்ம்மைக்கு எதிர் மொழியாகக் கூறப்படுகிறது.

திருக்குறளோ, வாய்மை என்னும் சொல்லுக்குப் புதுப் பொருள் தருவதாகத் தோன்றுகிறது. தொல்காப்பியம் வாய்மை

பற்றிக் கூறியுள்ளதை நன்கறிந்திருக்க வேண்டிய வள்ளுவர் **'வாய்மை எனப்படுவது யாதெனின்......'** எனக் குறளைத் தொடங்குகையில் இதுவரை அச்சொல்லுக்கிருந்த பொருளினும் வேறுபட்டதொரு பொருளைக் கூறுவதாகவே காணப்படுகிறார். கூறும் பொருளும் வேறாகவே உள்ளது.

அதாவது : **'யாதொன்றும் தீமையிலாத சொலல்'** இத்தொடர்க்கு :

'பொய்ம்மை இலாத சொல்லல்' என்றோ,

பொதுவாகத் தீமையல்லாததை சொல்லல் என்றோ பொருள் கொள்வது அத்துணைப் பொருத்தமாகத் தோன்றவில்லை. தொல்காப்பியம் தந்துள்ள பொருளையே வள்ளுவர் கூற விரும்பியிருந்தால், **'யாதெனின்'** என்று ஏதோ முதன் முறையாகப் பொருள் கூறுவது போல் தொடங்கியிருக்க மாட்டார். அப்பொருளையே கூற விரும்பியிருந்தால்,

'வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
பொய்மை இலாத சொலல்,'

என்னும் பொருளில் மட்டுமே குறளையாத்திருக்கலாம். 'தீமையிலாத சொலல்' என்றோ, அதுவும் 'யாதொன்றும் தீமையிலாத சொலல்'என்றோ யாத்திருக்கத் தேவையில்லை.

பொய்மையும் தீமையும் ஒரே பொருளைக் குறிக்கும் சொற்கள் அல்ல. பொய்மை தனக்கோ பிறர்க்கோ தீமை விளைவிக்கக் கூடும்; ஆனால், தீமை என்பதெல்லாம் பொய்மையே என்பதற்கில்லை. வேறு செயலாகவும் இருக்கலாமன்றோ?

மேலும், 'யாதொன்றும் தீமை இலாத சொலல்' என்னும் போது, தீமை எதுவும் பயக்காத சொல்லைக் கூறுதல் என்று மட்டுமே பொருள் கொள்ளலாம். ஆனால், 'தீமை' என்னும் சொல், பேச்சுடன் மட்டுமன்று, செயலுடனும் தொடர்பு கொண்டது.

தீமை தருவதைப் பேசுவது ஒன்று;
தீமை யானதைச் செய்வது வேறு;

ஆகவே, இங்கு வள்ளுவர் கூற விரும்புவது தீமை எதுவும் பயக்காத சொல்லைப் பேசுதல் குறித்து மட்டுமன்று, **தீமை எதுவும் இல்லாத ஒன்றைச் சொல்லுதலுமாம்.**

தீமையல்லாததைப் பேசாதிருத்தல் மட்டுமன்று*, தீமை எதுவுமே இராத ஒன்றை ஆர்வமுடன் கூறுவது பற்றியேயாம்.

இங்ஙனம் யாதொன்றும் தீமையில்லாதது எது? இறைவனும் அவன் செயலும் (ஒருவன் செய்தி) தவிர யாதொன்றும் தீமையில்லாதது வேறு எது?

ஆகவே, இங்குக் கூறப்படும் புதுப்பொருள்

''இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்''. (91)

என்னும் குறளுடன் இணைந்தது. இக்குறளுக்கு யாம் கூறியுள்ள பொருளை இந் நூலில் வேறிடத்திற் காண்க.

இவ் இன்சொல்லைச் சொல்வதே — பிறர்க்கு எடுத்துரைப்பதே வாய்மை என்க.

இவ்வாய்மை அதிகாரத்திலேயே கூறப்படும் மற்றக் குறள்களினின்றும் இக்கருத்துப் புலப்படும். சிறப்பாக,

'பொய்ம்மையும் வாய்மை இடத்த'......(292)

'யாமெய்யாக் கண்ட வற்றுள்' (30) என்னும் குறட்பாக்கள் மேற்கூறிய கருத்தையே வலியுறுத்தும்.

---

* இப்பொருள் பற்றிக் குறள் இனியவை கூறல், புறம் கூறாமை, பயனில சொல்லாமை முதலிய பகுதிகளில் விரிவாகக் கூறியிருப்பதால் ஈண்டு இப்பொருளில் கூறுவது பொருந்தாது. மேலும், 'தீமையான எதையும் சொல்லாதிருத்தல்' என்பதற்கும் 'யாதொன்றும் தீமையிலாததைச் சொல்லுதல்' என்பதற்கும் வேறுபாடுள்ளது காண்க.

இங்ஙனம் சில சொற்களுக்குப் புதுப்பொருள் தருவது 'நாண்' என்னும் சொல்லுக்கு வள்ளுவர் கூறும் விளக்கத்தினின்றும் நன்கு புலப்படும்.

> ''அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்
> நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப.''
>
> (தொல் — பொருளதிகாரம் 96)

> 'நாணும் மடனும் பெண்மைய ஆகலின்' ......
>
> (தொல் — பொருளதிகாரம் 106)

தொல்காப்பியம் இங்ஙனம் **நாண்** என்பது பெண்மைக்குரிய பண்பாகக் கூற, திருக்குறளோ,

> ''கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்
> நல்லவர் நாணுப் பிற'' (1011)

எனப் பெண்களுக்குரிய நாணத்தினின்று பிரித்து 'தீவினை, செய்வதால் ஏற்பட வேண்டிய நாண்' என்னும் பொருளில், 'கருமத்தால் நாணுதல்' என்பது காண்க.

இவை போன்ற கருத்துகளே விரிவாக இந்நூலில் விளக்கப் படுகின்றன.

# 2. திருக்குறள் - அமைப்பும் நோக்கும்

உலகப் புகழ் பெற்ற திருக்குறளின் உட்பொருளை ஆய்ந்தறிவதே இந்நூலின் நோக்கம்.

ஆகவே, இந்நூலை இயற்றியவரின் நோக்கத்தை ஆழ்ந்தாராய்ந்து ஓரளவு மறைந்து கிடக்கும் பொருளை வெளிக்கொணர முயல்வோம்.

நூலின் நோக்கத்தை நன்கறிய வேண்டுமாயின் வினாக்கள் பலவற்றை முதலில் அலசிப் பார்த்தல் தேவைப்படுகிறது. அவ் வினாக்கள் பின்வருபவை :

1. அன்றைய நூலாசிரியர்களைப் போலவே திருவள்ளுவரும் தம் நூலை அறம், பொருள், இன்பம், வீடு என வகுத்துள்ளார் எனக் கருதப்படுகிறது. ஆனால், நூலில் அறம், பொருள், இன்பம் என மூன்று பகுதிகள்தாம் காண்கிறோம். 'வீடு' பற்றி ஒன்றையும் காணோமே என்பாருளர். 'திருவள்ளுவ மாலை' யில் திருக்குறள் 'முப்பால்' நூல் எனவும் கூறப்படுகிறது. நாற்பாலும் இம் முப்பாலுள் உள்ளன என்றும் கூறப்படுகிறது. இதன் கருத்தென்ன?

மேலும் மூன்றாம் பகுதியாகிய 'இன்பம்' — இன்பத்துப் பால் எனவும் கூறப்படுகிறது; காமத்துப்பால் எனவும் கூறப்படுகிறது. ஏன்?

2. 'கடவுள் வாழ்த்து'எனப் பொதுவாக உரையாசிரியரால் கூறப்படும் முதல் பத்துக் குறட்பாக்களில் 'கடவுள்' என்னும் சொல்லே இல்லை. நூல் முழுவதுமே இச்சொல் காணப்படவில்லை. 'ஆதிபகவன்,' 'வாலறிவன்', 'மலர்மிசை ஏகினான்,' 'வேண்டுதல் வேண்டாமையிலான்', 'இறைவன்', 'ஐந் தவித்தான்', 'அறவாழி அந்தணன்', 'எண்குணத்தான்' என்னும் பெயர்களே காணப்படுகின்றன. இவையெல்லாம் ஒருவரையே குறிக்கின்றனவா? பலரைக் குறிக்கின்றனவா?

ஒருவரையே குறிக்குமானால், இப்பெயர்களுள் மறைந்திருக்கும் கருத்தென்ன சிறப்பாக, 'ஐந்தவித்தான்' என்னும் பெயர், ''ஐம் பொறிகள் வழியாக ஏற்படும் ஐந்தவாவினையும் அறுத்தான்'' (பரிமேலழகர்) என்று பொருள்படுமாயின் இறைவனுக்கு எங்ஙனம் பொருந்தும்? அவனுக்கு ஐம்பொறிகள் உண்டா? அவன் காட்டிய 'பொய்தீர் ஒழுக்க நெறி' யாது? அந்நெறியைத் தான் திருவள்ளுவர் தம் நூலில் கூறுகின்றாரா? இதுதான் நூலின் நோக்கமா?

3. தமிழ் இலக்கிய ஆசிரியர்கள் அத்தனை பேருமே தாம் வணங்கும் தெய்வத்தை வாழ்த்தியே நூலைத் தொடங்குவது மரபு. திருவள்ளுவர் எந்தக் குறிப்பிட்ட தெய்வத்தையும் குறிப் பிடாமல் 'இறைவன்', 'ஆதிபகவன்' எனப் பொதுவாகவே கூறுகிறார். இது ஏன்?

4. திருக்குறளின் முதல் நான்கு அதிகாரங்கள் 'பாயிரம்' என வழங்கப்படுவது ஏன்? என்பதை யாரும் தெளிவாகக் கூற வில்லை.

'கடவுள் வாழ்த்து' என்னும் முதல் அதிகாரத்துக்குப் பின் உள்ள 'வான் சிறப்பு' மழை பற்றியதே எனப்படுகிறது. இதன் முழுப்பொருளும் விளங்கவில்லை. 'அறன் எனப்பட்டதே இல் வாழ்க்கை' என்று கூறும் வள்ளுவர் பாயிரத்திலேயே, 'துறவியர்' என்னும் பொருளில் 'நீத்தார் பெருமை' குறித்துப் பேசுகிறார் எனப்படுகிறது. இதன் உட்கருத்து என்ன? நீத்தாரைப்பற்றிப் பேசும் அதிகாரத்திலும் 'ஐந்தவித்தான்' குறித்துப் பேசப்படுகிறது ஏன்? 'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' யெனின், துறவைச் சிறப்பித்துக் கூறுவதேன்?

5. பாயிரம் முடிந்ததும் நூலைத் தொடங்கும்போது இப் பகுதியின் முதற் குறளிலேயே 'இயல்புடைய **மூவர்**' குறித்துப் பேசப்படுகிறது. இந்த 'மூவர்' யார்? என்பதுபற்றி இதுவரை சரியான விளக்கம் இல்லையெனத் திரு.வி.க. போன்ற அறிஞர் களும் கூறியுள்ளனர்!

6. அருள், அருளாட்சி என ஆசிரியர் கூறுவதன் முழுக் கருத்தென்ன? உயிர்களிடத்துக் காட்டப்பட வேண்டிய

இரக்கமே அருள் எனப் பெரும்பாலும் உரையாளர் கூறுவது முழுமையாக ஏற்றுக் கொள்ளப்பட வேண்டியதொன்றா?

7. நூலில் பன்முறை 'சான்றோர்' பற்றிக் கூறப்படுகிறது. இச்சொல்லால் குறிக்கப்படுபவர் யார்? பொதுவாக மேலோர், நல்லோர், உயர்ந்தோர் என்னும் பொருள் மட்டும்தான் இச் சொல்லுக்கு உண்டா?

8. 'சான்றாண்மை' என்றோர் அதிகாரம் உள்ளது. இஃது அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்னும் ஐந்து தூண்களைக் கொண்டது என்று கூறப்படுகிறது. இவற்றின் முழுப்பொருள் யாது?

9. இத்தூண்களுள் 'அன்பு', 'ஒப்புரவு' எனப்படுவன இல்லறவியலிலும், 'வாய்மை' எனப்படுவது துறவறவியலிலும், 'கண்ணோட்டம்', 'நாண்' எனப்படுவனவும், 'சான்றாண்மை' என்னும் பொது அதிகாரமும் பொருட்பாலிலும் காணப்படுகின்றன. இவ்வைப்பு முறையின் விளக்கம் என்ன?

10. 'பொருள்' என்னும் சொல் பொதுவாகப் பணம், செல்வம், சொத்து என்னும் பொருளில் ஆளப்படுகிறது. திருவள்ளுவர் 'அருட்பொருள்', 'பொருட் பொருள்' எனப் பிரித்துக் கூறுவதன் கருத்தென்ன?

11. பிறவிப் பெருங்கடல், பிறப்பு என்னும் பேதைமை, எழு பிறப்பு முதலிய சொற்றொடர்கள் கர்மவினையால் நிகழும் பிறவிச் சுழற்சிக் கொள்கையைத்தான் குறிப்பிடுகின்றனவா?

12. 'ஊழ்' என்னும் சொல்லால் ஆசிரியர் குறிப்பிடுவது 'தலைவிதியா'? வேறு கருத்தா?

13. 'காமம்' என்னும் பெயரே கூடாது (360) என்றும் 'சிற்றின்பம் வெஃகி அறன் அல்ல செய்யார் மற்றின்பம் (பேரின்பம்) வேண்டுபவர்' என்றும் கூறும் வள்ளுவர் சிற்றின்பக் காமத்தைக் குறித்து விரிவாகக் (250 குறட்பாக்களில்) கூறியிருப்பாரா? ஆகவே, நூலின் மூன்றாம் பகுதிக்குக் 'காமத்துப் பால்' என்னும் பெயர் எங்ஙனம் பொருந்தும்? இன்பத்துப்பால் எனின்' குறிப்பிடப்படுவது சிற்றின்பமா? பேரின்பமா?

14. நூலின் இறுதிப் பகுதியான காமம், சிற்றின்பத்தையே குறித்து உள்ளதெனில், அதுதான் மனிதப் பிறவி அடைய வேண்டிய வீடு பேறா?

'உரை' என்றதும் ஒவ்வொரு குறளுக்கும் தனித்தனியாகப் பொழிப்புரை தருவது என்பதன்று எம் கருத்து. மேற் கூறிய வினாக்களுக்குத் தக்க விடை கூறு முகத்தான், திருக்குறளின் மையக் கருத்துகளை விரிவாகவும், பிறவற்றைச் சுருக்கமாகவும் விளக்குவதே எம் நோக்கம்.

இவ்விளக்கத்தைத் தொடங்குமுன் திருக்குறளின் அமைப்புப் பற்றிச் சிறிது விளக்கமாகக் கூறுவது நலமெனத் தோன்றுகிறது

திருக்குறளின் முதற்பகுதியாகிய அறத்துப் பாலினின்று எழும் வினாக்கள் மேலே கூறப்பட்டன. அவ்வினாக்களே இந் நூலின் முற்பகுதியின் அமைப்பைப் போதிய அளவு எடுத்துக் காட்டுகின்றன. 40 குறட்பாக்கள் கொண்ட பாயிரத்தோடு சேர்த்து 380 குறட்பாக்கள் இவ்வறத்துப் பாலில் பொதிந்துள்ள- ஓரளவு மறைந்துள்ள அடிப்படையான அரிய கருத்துகளை விளக்குவோம்.

திருக்குறளின் மிகப் பெரும் பகுதியாகிய — 700 குறட் பாக்களைக் கொண்ட **பொருட்பால்** என்னும் பகுதியின் முழு நோக்கம் ஆசிரியர் உள்ளத்தில் எதுவாயிருந்திருக்கும் என்பதை நன்கு ஆய்ந்து விளக்க வேண்டியதொன்றாகத் தெரிகிறது.

'முழு நோக்கம்' என்றேன். ஏனென்றால் 'பொருள்' என்னும் சொல்லால் பெரும்பாலும் மக்கள் அக்காலத்தில் கூற விரும்பியது இம்மை வாழ்வுக்குரிய, அதற்கேற்ற பொருளின் கூறுகளைக் கூறுவதே நோக்கமாயிருத்தல் வேண்டும் என எவரும் எளிதாகக் கூறலாம். ஆனால், வள்ளுவர் இப்பொருட் பால் பகுதியைக் கூறியிருக்கும் முறையையும், அதில் காணும் சில சிறப்புக் கருத்துகளையும் ஆயும்போது 'பொருள்' என்னும் சொல்லால் அவர் கூற விரும்பியது இம்மைக்குரிய (பொருட்) பொருள் மட்டுமன்று; ஓரளவு மறுமைக்குரிய (அருட்) பொரு ளையும் மனத்தில் கொண்டிருந்தார் எனப் புலனாகிறது.

'ஒழுக்கத்து நீத்தார்', அதாவது உலகில் ஒழுக்கத்தை நிலைநாட்டத் தமக்குரிய 'பெருமை'யைத் துறந்தவர்; இம்மை,

மறுமை என்னும் 'இருமை வகை தெரிந்து ஈண்டறம் பூண்டார்' என்கிறார் பாயிரத்திலேயே. ஆகவே, அறத்துப்பாலில் மட்டுமன்று, பொருட் பாலிலும் சில பகுதிகளிலேனும், மறுமைப் பொருள்பற்றியும் கூறியிராமல் இருக்கவியலாது. இனி இதற்குச் சான்றுகளைக் கூறுவோம்.

1. திருக்குறள் முழுவதும் 'சான்றோர்' எனப்படுவோருக்குரிய ஒழுக்கத்தையே கூறுகிறது என்பது எவரும் ஒப்புக்கொள்வதொன்று. 'சான்றோர்' (சான்றவர்) என்னும் சொற்கள் பல குறட்பாக்களில் வருவது காண்க. உதாரணமாக 69, 197, 656, 657, 802, 840, 923, 982, 985, 990, 1078; 115, 118, 148, 299, 328, 458, 1014.

சான்றோர்க்குரிய மிக உயரிய பண்பினை 'ஆண்மை'யுடன் சேர்த்து **சான்றாண்மை** என ஒரு தனி அதிகாரமே (99-அதி) கூறியுள்ளார். இச் 'சான்றாண்மை'க்குச் 'சால்பு' என்னும் சொல்லையும் ஆண்டுள்ளார். (956, 983, 984, 986, 987, 988, 1013, 1064 ஆகிய பாக்களைக் காண்க.)

அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்னும் ஐந்தும் 'சால்பு ஊன்றிய தூண்கள்' என்கிறார் (982). சான்றாண்மையைத் தாங்கும் தூண்கள் என்றும் பொருள்படும். இவ்வைந்திற்கும் ஐந்து தனி அதிகாரங்கள் கூறியுள்ளார். இவற்றை ஆய்ந்து நோக்கும்போது, இவை பெரும்பாலும் மறுமைப் பொருளைச் சுட்டுபவையாகவே காணப்படுகின்றன.

'சான்றோர்', 'சால்பு' என்னும் சொற்களை, மேற்கூறிய ஐந்து தூண்களுடன் இணைத்துக் கூறுவதும் கவனித்தற்பாலது.

2. இவ்வைந்து தூண்களையும் நூலில் ஓரிடத்தில் வைக்காமல் அறத்துப்பால் இல்லறப் பகுதியில் அன்பு, (8) ஒப்புரவு அறிதல் (22) ஆகியவற்றையும் துறவறப்பகுதியில் வாய்மையையும் (30) வைத்துள்ளார்.

பொருட்பாலிலோ சான்றாண்மையைப் (99) பொதுவாக விளக்குவதோடு, கண்ணோட்டம் (58), நாண் (102) என்னும் தூண்களை விரிவாக விளக்குகிறார்.

இதற்குத் தக்க காரணம் இல்லாமலில்லை. திருக்குறள் மனித வாழ்க்கைக்குரிய சிறப்பான அம்சங்களை விளக்குவதாகும். மனிதன் உலகில் தோன்றும்போது ஒரு சிறிய குடும்பத்தின் உறுப்பினனாகப் பிறக்கிறான். வளர வளரத் தனக்குச் சில உரிமைகள், கடமைகள், பொறுப்புகள் உண்டு என உணர்கிறான். இவற்றை எங்ஙனம் நிறைவேற்றுவது என எண்ணிச் செயல்படத் தொடங்குகிறான். இக்கடமைகள், பொறுப்புகள் சில தனக்கு நீடுவாழ்வு தர வந்த — பொய்தீர் ஒழுக்க நெறிகாட்ட வந்த, ஆதிபகவன், இறைவன், ஐந்தவித்தான்பால் செலுத்த வேண்டுபவையென்றும், வேறு சில தன்னைப் போன்ற வேறு மனிதப் பிறவிகள்பால் செலுத்த வேண்டியவை எனவும் உணர்கிறான். தானே உணராவிட்டால் திருக்குறள் போன்ற நூல்கள் வாயிலாகவும், ஆதிக்குருவின் 'உழவர்' (14-ஆம் குறள்) சீடர் வாயிலாகவும் உணர்கிறான். குறிப்பிட்டதொரு பருவம் அடைந்ததும் தான் தனிப்பட்ட மனிதன் மட்டுமல்லன்; சமுதாயம் எனப்படும் உலகக் குடும்பத்தைச் சேர்ந்தவன்; ஆகவே அச்சமுதாயத்திற்கும் தான் ஆற்ற வேண்டிய கடமைகள் சில உண்டு என்றும், தான் அச்சமுதாயத்தின் வாயிலாகப் பெற வேண்டிய நன்மைகளும் உண்டு என்றும் உணர்கிறான். உணர்ந்த பின் அதற்கேற்றவாறு தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முற்பட வேண்டியவனாகின்றான். இங்ஙனம் அமைத்துக்கொள்ள அவன் செய்ய வேணிடியது யாது? தவிர்க்க வேண்டியது யாது? என்பதைத் தெளிவாகவும் அழுத்தமாகவும் அவன் அறிய வேண்டும்.

இனி, சமுதாய வாழ்க்கையோடு அவனது வாழ்க்கை முடிந்து விடுவதில்லை. அவனது இம்மை வாழ்க்கை முடிவடையலாம். அதற்குப் பின் மறுமை ஒன்றுண்டே! அதற்காக அவன் எங்ஙனம் ஆயத்தமாகிக்கொள்ள வேண்டும்? அம்மறுமை வாழ்வு எதில் அடங்கும் என்பதை நூலின் தொடக்கத்திலேயே குறிப்பிட்டு விட்டார். நீடுவாழ்வு, இறைவனடி சேர்தல் எனப் பன்முறை குறிப்பிட்டு விட்டார். ஆதிபகவன், ஐந்தவித்தான், இறைவனடி சேர்ந்து நீடு வாழ்தலே மனித வாழ்வின் இறுதிக் கட்டம் — அதுவே **வீடு** எனக் கூறாமல் கூறுகின்றார். அறமும் பொருளும் இன்பமும் என்று மூன்றே பகுதிகளில் தம் நூலை யாத்திருந்த போதிலும் **இன்பம்** என்பது பேரின்பமே; அதுவே

வீடு பேறு என்று ஆசிரியர் குறிப்பிட விரும்பினார் என்பது இவ் விளக்க வுரையில் தெளிவாகும் என்பது எம் துணிபு. ஆகவே, திருக்குறள் நூலின் அமைப்பைப் பின்வருமாறு கூறலாம்.

எல்லாத் தமிழ் நூல்களுக்கும் உள்ள பொது அம்சம் இறை வாழ்த்து. இது திருக்குறளில் 3 அதிகாரங்களைக் கொண் டுள்ளது. நான்காவது — அறனை வலியுறுத்தலாக அமை கின்றது. இந்நான்கு அதிகாரங்களும் **பாயிரம்** எனப் பொது வாகக் கூறப்படுகின்றது.

பாயிரம் முடிந்ததும் நூலைத் தொடங்கும்போது, முதற் குறளிலேயே (41) பாயிரத்தின் முதல் மூன்று அதிகாரங்களில் வழுத்திய இறைவனை — இயல்புடைய மூவர் எனக் குறிப்பிட்டு, இல்வாழ்க்கை விளக்கத்தைத் தொடங்குகிறார்.

இல்வாழ்க்கையோடு தொடர்புள்ள அவ்வாழ்க்கைத் துணை நலம், அவ்வாழ்க்கையின் பயனாய் உண்டாகும் மக்கட் பேறு, இவை குறித்தும் விளக்குகிறார்.

இல்வாழ்க்கை என்பது உடலும் உடலும் இணையும் வாழ்க்கையென்றே பெரும்பாலும் உலகில் எண்ணப்படுகிறது. அது முழு உண்மையன்று என்பதை அறிவுறுத்த, மக்கட் பேற்றுக்கு அடுத்த படியாக இல்வாழ்க்கையின் இலக்கணத்தைக் கூறுமுகத்தான், அவ்வாழ்க்கை, ‘என்பும் உரியர் பிறர்க்கு’ (அதாவது கணவன், மனைவிக்கும் - மனைவி, கணவனுக்கும் உரிமையாவர்) என்னும் அடிப்படையில் அமைய வேண்டும். ‘என்போடியைந்த தொடர்பு’ போலத் தோன்றினாலும், அது ‘அன்போடு இயைந்த வழக்கு’. ஒருவர் மீது ஒருவர்க்கு ஏற்பட வேண்டிய ஆர்வமே அதன் அடிப்படை. அவ் ஆர்வத்தை ஈனுவதே அன்பு; இறுதியில் நண்பென்னும் நாடாச் சிறப்பை அது ஈனும்; அப்போது தான் இல்வாழ்வு உறவில் ‘இன்புற்றார் எய்தும் சிறப்பு’, ‘அன்புற்று அமர்ந்த வழக்கு’ ஆகும். இத்தகைய அன்பில்லாத இல்லறம் அறமேயாகாது. அது ‘வற்றல் மரம் தளிர்த்தற்று’, ‘இவ்அன்பின் வழியதே உயிர் நிலை’யெல்லாம் என்று மிக மிக அழுத்தமாகக் கூறுகிறார்.

இல்வாழ்க்கையின் இவ்விலக்கணத்தைக் கூறும் அதே சமயத்தில் அன்பின் பொது இலக்கணத்தையும் கூறுவது காண்க.

'அன்பின் வழியது உயிர் நிலை' என்று முடிக்கும் போது, அது இல்வாழ்க்கைக்கு மட்டுமேயன்று; மனித வாழ்க்கைக்கே பொருந்தும் எனக் கூறுவது காண்க. ஆகவேதான், அன்பின் இலக்கணத்தைக் கூறியவுடன், அன்பு தொடர்புடையாரிடம் மட்டுமன்று, எத்தொடர்புமில்லாத விருந்தினர் (புதிதாக வருபவர், அறிமுகமில்லாதவர், அந்நியர்) அனைவர் பாலும் செலுத்த வேண்டியதொன்றாகும் என்னும் கருத்தை வலியுறுத்த 'விருந்தோம்பல்' பற்றிக் கூறுகிறார்.

அடுத்து, இத்தகைய அன்புடன் கூடிய அறம் உளதாயின் யாவரிடத்தும் இனியவை கூறல், நன்றி செலுத்துவது, நடுவு நிலைமை, அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, பிறனில் விழையாமை, பொறையுடைமை, அழுக்காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை, பொதுவாகத் தீவினை அச்சம் ஆகிய பண்புகள் எல்லாம் தலை சிறந்து விளங்கும். 'ஆனால், இப்பண்புகள் எளிதில் ஒருவற்கு உண்டாகக்கூடியவை யல்ல. ஆதி பகவானாகிய இறைவன் ஐந்தவித்தானாகி, தாளாற்றித் தந்த பொருள்' ஒன்று உண்டு. (அதுவே அருட் பொருள்.) அப்பொருளைத் தக்க முறையில் அடைந்தால்தான் அப்பண்புகள் உளவாகும். அப்பொருளைத் 'தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டு' ஆதிபகவனே ஏற்பாடு செய்துள்ளான். (பின்னர் விளக்கப்படும்). அவ்வேற்பாட்டை ஏற்றுப் பயன் அடைவோர்க்கே இந்நன்மைகள் கிட்டும் என்க. இல்லையேல் இருள் சேர் இருவினையும் முனைந்து நின்று, இல்வாழ்க்கையை மட்டுமன்று, மனித வாழ்க்கையையே பாழ் படுத்திவிடும் என்பதில் ஐயமில்லை. 'தீவினை என்னும் செருக்கு' முனைந்து நிற்கும் வரையில் ஒழுக்கமுடைமை, பொறையுடைமை, நன்றியுடைமை என மேற் கூறப்பட்ட அரிய பண்புகள் வளர்வதற்கு இடமிராது. சான்றாண்மையின் இரு தூண்களாகிய 'அன்பு', 'ஒப்புரவு' இவை உரையாளரால் தரப் படும் அதிகாரப் பகுப்பின்படி இல்லறத்தின் கீழ் வைக்கப் பட்டுள்ளன. துறவறத்தார்க்கு இவை தேவைப்படா என்ப தன்று கருத்து. சான்றோர் வாழ்க்கைக்கு இவை இன்றியமை யாதவை. மனித வாழ்க்கை இல்லறத்தினின்றே தோன்றும். துறவறம் ஏற்பவரும் அதனின்றே தோன்றுவர் - சமுதாயமோ உலகக் குடும்பமேயன்றி வேறன்று. ஆகவே, அன்பும் ஒப்புரவும் தொடக்கத்திலேயே அடிப்படைத் தூண்களாக வைக்கப்

பட்டுள்ளன. 'அன்பின்றி மனித வாழ்வே இல்லை. ஒப்புரவாகிய இறைவன் தாளாற்றித் தந்த (அருட்) பொருளின்றி அன்பு மில்லை, பண்புமில்லை என்பதை வலியுறுத்தவே இத்தகைய அமைப்பு என்க.

இந்த ஒப்புரவுப் பொருளை இறைவன் (ஆதிபகவன்) தாளாற்றித் தந்தது 'தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டு' ஆதலின், ஒப்புரவு அறிதல் அதிகாரத்திற்குப் பின்னர், 'ஈகை' என்னும் பகுதி வைக்கப்பட்டுள்ளது. இவ் ஈகை என்பது பொருளாகிய பொருளை வறியார்க்கு ஈவது மட்டுமன்று, உடலின் பசியைத் தீர்க்க ஈவது மட்டுமன்று, மனிதனது 'உள் நின்றுடற்றும் பசியை'யும், அதாவது ஆன்மீகப் பசியையும் தீர்த்து வைக்க முயல்வதே 'ஆற்றுவார் ஆற்றல்' செயல்களுள் சிறந்தது என்னும் கருத்துகளை உணர்த்துவதாகும். இதுவே உண்மையான புகழைத் தேடித் தருவது என்பதை உணர்த்தப் 'புகழ்' என்னும் அதிகாரம் வைக்கப்பட்டுள்ளது.

ஆனால், இத்தகைய புகழ் பெற்ற வாழ்வுக்கு இன்றியமை யாதது இறைவன் தாளாற்றித் தந்த (அருட்) பொருளே என்பதை மேலும் வலியுறுத்த 'அருளுடைமை' அதிகாரம் உள்ளது. இன்றைய அதிகார முறைப்படி இது துறவற இயலின் முதல் அதிகாரமாக உள்ளது. துறவறத்தார்க்கு மட்டுமே அருள் தேவைப்படும் என்பதா? அன்று. 'அருள் அற்றார் பூப்ப'தேயில்லை என்று கூறப்பட்டிருப்பதால் எவ்வறத் தினர்க்கும் அருள் இன்றி அற வாழ்வே இல்லை என்னும் கருத்து நன்கு புலனாகிறது. அருட் செல்வம் செல்வத்துட் செல்வம், அருள் சேராத நெஞ்சினார் இருள் சேர்ந்த இன்னா உலகம் புகுவர் என்பதாலும் அனைவர்க்கும் அருள் தேவை என்னும் இக்கருத்து மேலும் வலியுறுத்தப்படுகிறது.

மேலும் இவ்வதிகாரத்திலும், அடுத்து வரும் 'புலால் மறுத்தல்' அதிகாரத்திலும், 'அருள் ஆள்க', 'எங்ஙனம் ஆளும் அருள்', 'அருளாட்சி' ஆகிய சொற்றொடர்கள் வருவது காண்க. 'ஆள்க', 'ஆட்சி' என்னும் சொற்களால் வள்ளுவர் குறிப்பிட விரும்புவது என்ன? வழக்கத்துக்குக் கொண்டு வருதல், எடுத்து வழங்குதல் என்னும் பொருள் கொண்ட (மதுரைப் பேரகராதி) **கையாளுதல்** என்பதன் கருத்தையா? அதாவது, பயன்படுத்தல்

என்னும் பொருளை மட்டுமா? தனக்கு மட்டுமன்றிப் பிறர்க்கும் பயன்படுமாறு எடுத்து வழங்குதல் என்னும் பொருளிலும் கூடவா? என்பது ஆயத்தக்கது. பிறர்க்கு 'ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல்' (228) எனக் கூறும் பாவில் வள்ளுவர், 'தாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்னும் அடிப்படையில் தம் வாழ்க்கையை அமைத்துக் கொள்பவரே உண்மையான அற வாழ்க்கை வாழ்பவர் எனக் கூறியிருக்கிறார் என்பதில் ஐய மில்லை. ஆகவே, அறவாழ்க்கையைக் கடைப்பிடிக்க வேண்டிய இல்லறத்தாரும் தம்மால் இயன்ற அளவிலும் முறையிலும் அருளை இக்கருத்தில் ஆளவேண்டியவர்களே. எனினும், பிறர்க் கென்றே சிறப்பாக அருளை ஆள வேண்டிய கடமையையும் பொறுப்பையும் துறவறத்தாரே சிறப்பாகத் தம் மீது சுமந்து கொள்கின்றனர். இல்லறத்தார்க்குக் குடும்பக் கவலைகள் பல உளவாதலால் அதில் தம் கவனத்தைப் பெரும்பாலும் செலுத்த வேண்டிய கடமையை மேற்கொள்வாராகின்றனர். துறவறத் தார்க்கோ வேறு எக்கவலையும் இல்லையாதலால் தம் முழுக் கவலையையும் கவனத்தையும் **பிறர்க்கு அருளை** வழங்கு வதில், அருளை ஆள்வதில் செலுத்த வேண்டியவர்களாகின்றார் கள். இவ்விரு கருத்துகளையும் இல்லறம் துறவறம் ஆகிய பகுதி களுக்கிடையில் இந்த 'அருளுடைமை' அதிகாரத்திலும் அடுத்த அதிகாரத்திலும் ஆசிரியர் வலியுறுத்துகிறார். (விரிவான விளக்கம் இப்பகுதிகளை விளக்கும் போது காண்க.)

அடுத்து வரும் 'தவம்' சிறப்பாகத் துறவறத்தார் கடைப் பிடிக்க வேண்டிய ஒழுக்கத்தைச் சாரும். இது தெளிவு. இங்ஙனமே கூடாவொழுக்கமும் கள்ளாமையும். ஆனால், இக் கூடாவொழுக்கமும் கள்ளாமையும் இல்லறத்தார்க்குத் தேவை யில்லை என்பதன்று பொருள். வஞ்ச மனமும், 'நெஞ்சில்' தவறானதைத் 'துறவாமல்' வெளிப்படையாக மட்டும் 'துறந்தார் போல்' அதாவது நல்லவர் போல் ஒழுகுதலும், 'மனத்தது மாசாக' மறைந்தொழுகுவதும், உலகம் பழித்ததை ஒழித்து விடுதலும் எல்லாருக்குமே பொருந்துவனவாகும். துறவறத்தார் இவ்வொழுக்கத்தில் மிகமிகச் சிறந்தோங்க வேண்டியவர் என்பது கருத்து. அங்ஙனமே, 'உள்ளத்தால் உள்ளலும் தீதே', 'கள்ளாமை காக்க தன் நெஞ்சு', ஆகியவை அனைவருக்குமே உரிய ஒழுக்கமாகும்.

இத்தகைய ஒழுக்கத்தை உலகில் நிலைநாட்ட வேண்டு மாயின் 'யாதொன்றும் தீமை இலாத' இறைவனைச் 'சொலல்' அவசியமாகும். மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன் ஆதலால், அவ்வகத் தூய்மை 'வாய்மையால் காணப்படும்.' ஆகவே, 'வாய்மை' பற்றிய அதிகாரம் வைக்கப்பட்டுள்ளது.

இதன் பின் 'வெகுளாமை', 'இன்னா செய்யாமை' பகுதிகள் கூறப்பட்டுள்ளன. இவை துறவறத்தார்க்கு மட்டுந்தாம் பொருந்துபவையா? இல்லறத்தார் வெகுள்வதும், இன்னா செய்தலும் பொருந்துமா? இல்லை; வெகுளாமை அற வாழ்க்கைக்குத் தேவை என்பது அறன் வலியுறுத்தல் பகுதியிலேயே கூறப்பட்டது. ஆகவே, அறவாழ்க்கை ஏற்போர் அனைவர்க்கும் வெகுளாமை தேவையே. அதே பகுதியில் காணும் 'இன்னாச் சொல்'லும் அறத்துடன் பொருந்தாது. இப்போது இன்னா செய்யாமை (32-அதி) துறவறத்தோடு மட்டும் பொருந்தாது எனக் கொள்ள இடமுண்டா? இல்லறத்தார் இன்னா செய்வது சரியென்பது கருத்தா? எவ்வறத்தார்க்கும் அது தேவை என்பது தெளிவு.

அங்ஙனமே 'கொல்லாமை' துறவற இயலில் கூறப்படுகிறது. ஆனால், 'அறவினை யாதெனில் கொல்லாமை' எனத் தொடங்கு கிறார் இப்பகுதியை. ஆகவே, எல்லா அறத்தார்க்கும் அது பொருந்தும் என்க. ஏன் இந்த அமைப்பு என்பது பின்னர் விளக்குவோம்.

அடுத்து வரும் 'நிலையாமை' என்பதும் அனைவருக்கும் ஏற்ற கருத்து. 'நீரிற் குமிழி இளமை, நிறை செல்வம்......' என்றது உலக வாழ்வின் நிலையாமையை வலியுறுத்தவே எனினும், துறவறம் ஏற்றோர் பிறரைவிடச் சிறப்பாகக் கடைப் பிடிக்க வேண்டியது இந் 'நிலையாமை' என்க. 'துறவு' என்பது, சிறப்பாக, முழுமையாகத் துறவறத்தார்க்கே என்பது தெளிவு. அங்ஙனமே மெய்யுணர்தலும், அவா அறுத்தலும் சிறப்பாகத் துறவறத்தார் வாழ்க்கைக்கு மையப் பொருளாக அமைதல் வேண்டும் எனினும், இல்லறத்தார் பொருளல்ல வற்றைப் பொருள் என்று உணர்ந்து ஏமாற்றம் அடைதல் என்பது கருத்தன்று. அங்ஙனமே, அவா அறுத்தலும். ஆகவே தான், அறன் வலியுறுத்தும் பகுதியில் 'அவா...... இழுக்கா இயன்ற

தறம்,' எனப்பட்டது. அழுக்காறாமையும் வெஃகாமையும் இந்த அவாவினை அடக்கியாளத் தேவைப்படுபவை. துறவியரோ அவாவினை அடக்குவதோடு நில்லாமல், அதை அடியோடு அறுத்துவிடல் வேண்டும். இந்நிலையெய்த ஐந்தும் அவித் தானின் அருள் மிக வேண்டும் என்றே, இறைவன் ஐந்தவித் தானாகி, தன் ஐந்தையும் அவனோடு இணைத்து அவித்துவிட, அறுத்துவிடப் பயிலுதல் தேவைப்படும்.

அறத்துப்பாலின் இவ்வமைப்பைக் கூர்ந்து நோக்குங்கால், இல்லற இயல், துறவற இயல் எனக் கச்சிதமாகப் பிரிவு படுத்தி உரையாளர் கூறியிருப்பது அத்துணை பொருத்தமானதாகத் தோன்றவில்லை. அறத்துப்பாலை விளக்குகையில் அடிப் படைக் கருத்துகளைக் கூறுகையில் துறவறத்தார்க்கும் பொருந்தும் சில சிறந்த கருத்துகளைக் கூறியுள்ளார் என்றே கொள்ள வேண்டியிருக்கிறது. அறத்துப்பாலின் இறுதிப் பகுதி 'ஊழ்', வகுத்தான் (இறைவன், ஆதிபகவன்) வகுத்த வகை யில் இல்லறத்தாரும் சரி, துறவறத்தாரும் சரி, தமக்குத் தேவை யான அருள் பெற்றால் அன்றி வேறு வழியில் வாழ்க்கையின் குறிக்கோளை நிறைவேற்ற இயலாது. ஆதிபகவன்-உயிர் களுக்குப் படியளப்பவன் என்பவன் என்றால், இங்குக் கூறப்படும் 'ஊழ் முதல்வனும்' அவனே என்று கொள்ள வேண்டும். (விளக்கம் பின் தருவோம்.)

**பொருட்பால்**

இனிப் பொருட்பாலின் கூறுகளை ஆய்வோம். இதில் இம்மைக்குரிய பொருள்பற்றி மட்டுமின்றி, மறுமைக்குரிய பொருள்பற்றியும் கூறப்படுகிறது என்பது குறித்துச் சுருக்கமாக மேலே கூறினோம்; இனி விளக்குவோம்.

திருவள்ளுவர் இம்மை குறித்து மட்டுமன்று, மறுமைக் குரியவை குறித்தும் கூறுவது காண்கிறோம்.

இன்சொல் பற்றிப் பேசும் போது, அது 'மறுமையும் இம்மை யும் இன்பம் தரும்' (98) என்கிறார். முதலில் மறுமையைக் குறிப்பிடுவது கவனிக்கத் தக்கது. இன்சொல்லுக்கு இத்துணை மதிப்புத் தருகிறார் என்றால், நூலில் எத்தனையோ அரிய கருத்துகளைக் கூறும் போது முதன்மையாக 'மறுமை'யை உள்ளத்தில் கொண்டே நூலை இயற்றியிருக்க வேண்டும்

என்பதில் ஐயமில்லை. மறுமைக்குரிய பொருள் பல குறட்பாக் களில் வெளிப்படையாகக் காணப்படாவிடினும்,

> ''செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
> வானகமும் ஆற்ற லரிது.'' (101)

என்பதில் வானகமும் ஆற்றலரிதாயின், அது மறுமையையன்றி வேறெதைக் குறிக்கக்கூடும்? இது போலப் பல குறட்பாக்களில் மறுமைக் கருத்து மறைந்துள்ளது.

மேற்குறிப்பிட்டவாறு, சான்றாண்மை பற்றிய பொது அதிகாரமும், அச்சான்றாண்மையின் இரு தூண்களாகிய நாணும் கண்ணோட்டமும், இம்மை மறுமை சார்ந்த கருத்து களை உணர்த்துவன என்பது அவற்றின் விளக்கத்தில் தெளிவாகும்.

மேலும், 'பொருள்' என்னும் சொல்லை இம்மைப் பொருள் என்னும் கருத்தில் 'பொருட் பொருள்' எனவும் மறுமைப் பொருள் என்னும் கருத்தில் 'அருட் பொருள்' எனவும் கூறு படுத்திக் கூறுவது கவனித்தற்குரியது. இவ்வேறுபாட்டை 'வரைவின் மகளிர்' எனும் அதிகாரத்தில் கூறுவது கவனிக்கத் தக்கது. 'பொருள் விழையும் ஆய்தொடியார்,' 'பொருட் பெண்டிர்' என்னும்போதும், 'பொருட்பொருள் புன்னலம் தோயார்,' என்னும் குறளிலும் பணமாகிய பொருளைப்பற்றியே பேச்சு என்பது ஐயத்துக்கிடம் இல்லாமல் கூறப்படுவது காண்க. 'அருட்பொருள் ஆயும் அறிவினார்' என்று அதே குறளில் கூறப் படுவது அருளாகிய தெய்வீகப் பொருள் - இறைவன் தாளாற்றித் தந்த பொருள் என்பதும் ஐயத்துக்கிடமில்லாமல் கூறப்படுகிறது.

'பொருள் செயல் வகை' (76) என்னும் அதிகாரத்தில் கூறப்படும் பொருளும் அருட்பொருளே— மறுமைப் பொருளே என்பதும் அவ்வதிகார விரிவுரையினின்று புலப்படும்.

பொருட்பாலில் அரசு, அமைச்சு இவைபற்றியும் இவற்றின் பிரிவுகள்பற்றியும் கூறப்படுகின்றன. அரசர், வேந்தன், அரசு, மன்னவன், இறை என்னும் சொற்கள் ஏறக்குறைய ஒரே

பொருளில் ஆளப்படுகின்றன. அரசர்கள் ஆண்ட காலத்தில் குறிப்பிட்ட அரசன் என்ற ஆளை அச்சொற்கள் குறிப்பிட்டிருக்கும். அரசர்களே இல்லாத இன்றைய சூழ்நிலையில் அரசு, அதிகாரத்தையும் பொறுப்பையும் குறிக்கும் என்பதில் தவறில்லை. இன்று அரசாங்கம் (Government) என்னும் சொல்லுக்கு இணையாக அரசு என்கிற சொல் வழக்கிலிருப்பது காண்க.

அரசர்க்குரிய (அரசுக்குரிய) படை, குடிகள், உணவுப் பொருள்கள், நல்ல அமைச்சர்கள், பகைமையால் நாட்டுக்கு ஊறு விளைவிக்காத நண்பர்கள், பாதுகாப்புக்காக அரண் இவையெல்லாம் இன்றைய அரசுக்குத் தேவைப்படுகின்றன என்பது தெளிவு.

அரசர்களுக்கு (அரசினர்கட்கு) அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம், விழிப்பு, கல்வி, துணிவுடைமை ஆகியவற்றோடு வருவாய்க்கு வழி செய்தலும், பொருளைச் சேகரித்தலும், சேகரித்ததைக் காத்தலும், காத்ததைத் தேவைக்கு ஏற்பச் செலவு செய்தலும் எங்ஙனம் அன்று தேவைப்பட்டனவோ அங்ஙனமே இன்றைக்கும் தேவைப்படுகின்றன.

மேலும், இன்றைய அரசினரும், சிறப்பாக ஏழை, எளியோர் வந்து காண்பதற்கும், தங்கள் குறைகள் கூறி உதவி பெறுவதற்கும் ஏற்ற மனப்பாங்குடையராய் இருத்தல் வேண்டும். இப்பண்புகள் எல்லாம் நன்கு விளங்க வேண்டுமாயின் கல்வி, கேள்வி, அறிவு, தக்க காலத்தில் குற்றம் கடிதல், பெரியாரைத் துணைக் கோடல், சிற்றின்பம் சேராதிருத்தல், தெரிந்து செயல் வகை, தன்வலி மாற்றான் வலி அறிதல், செயல் புரியத்தக்க காலம் அறிதல், ஏற்ற இடம் அறிதல், எதையும் தெரிந்து தெளிதல், தெரிந்து வினையாடல், சுற்றத்தாரைப் பேணுதல், எதிலும் சோர்வின்மை, செம்மையாக ஆளும் செங்கோன்மை (கொடுங்கோன்மை நீங்குதல், அநீதியின்றி ஆளுதல்), அஞ்சத் தக்க அல்லது நாணத்தக்க செயல்களைச் செய்யாமை, மன்னிக்கும் மனப்பான்மை (கண்ணோட்டம்), ஒற்றாடல், ஊக்கமுடைமை, மடியின்மை, விடாமுயற்சி (ஆள்வினை) யுடைமை, இடுக்கண் வருங்கால் கலங்காமை ஆகிய பல அரிய பண்புகள் உடையவராய் அரசினர் விளங்க வேண்டும்.

இன்றும் இவை எத்துணை வேண்டப்படும் என்பது எளிதில் புலப்படும். இவை இம்மையைச் சார்ந்த அரசுக்கும் தேவை; மறுமையைச் சார்ந்த அரசுக்கும் தேவை. அருட் பொருட் பொருளை ஆளும் இம்மை அரசுக்கு எங்ஙனம் தேவையோ அங்ஙனமே மறுமையைச் சார்ந்த அரசுக்கும் தேவைப்படும். இதுவே இறையரசு.

அரசுக்குத் துணையாக இருக்க வேண்டிய அமைச்சர்கள் கருவியும் காலமும் செய்கையும் செய்யும் அருவினையும் முற்றும் அறிந்தவராய், குடிகளைக் காத்தலும், பகைவர்களைப் பிரித்தலும், தமக்குத் துணையானவரைத் தழுவிக் கொள்ளலும், மதி நுட்பம், சொல்வன்மை, வினைத்தூய்மை, வினைத்திட்பம் செய்ய வேண்டிய செயல்களைச் (வினை) செய்யும் வகை முதலிய பண்புகளுடன் விளங்க வேண்டும்.

இப்பண்புகள் இம்மை அரசினைச் சார்ந்த அமைச்சர்களுக்கும் தேவை; மறுமையைச் சார்ந்த அமைச்சர்களுக்கும் தேவை; இம்மை அரசில் அரச அதிகாரமும் அவ்வதிகாரத்துக்குத் துணையாக அமைச்சர்களும் உள்ளது போல, மறுமை (இறைவன்) அரசிற்குரிய அதிகாரத்திற்கும் துணையாக அமைச்சர்கள் தேவை.

'அரசு' என்றிருந்தால் 'தூது' என்று ஒன்று இருத்தல் வேண்டும். இதுவும் இம்மை மறுமை அரசுக்கும் பொதுவாம்.

இத்தூதுவர்கள் தம்மை அனுப்பி வைக்கும் மன்னரை, அதிகாரிகளைச் சார்ந்தொழுகுதல் வேண்டும். பிறர் உள்ளங்களில் உள்ள கருத்துகளை விவேகத்துடன் (குறிப்பறிதல்) ஊகித்தறிதல் வேண்டும். அவையில் செயலாற்றும் முறைகளை நன்கறிந்திருத்தல் வேண்டும். அவையினர்க்கு அஞ்சாமல் செயல் புரிய வேண்டும்.

இப்பண்புகள் தூதுவரைக் குறிப்பிடுவது போல் காணப் படினும் அரசு, அமைச்சர் அனைவருக்குமே பொருந்துபவை யாகும்.

அரசு, அமைச்சர், தூதுவர் இம்முப்பாலரும் நாட்டின் நன்மைக்காகச் செயலாற்ற வேண்டும். எதிரிகளிடமிருந்து

அரண் பாதுகாப்பு அமைக்க அரசும் அமைச்சும் முன்னிற்க வேண்டும்.

இதே அரசும் அமைச்சும் இம்மைக்கும் மறுமைக்கும் உரிய பொருளைச் செய்தல் வேண்டும். இம்மைக்கும் மறுமைக்கும் உரிய வாழ்வில் நலம் பெற படையினரைத் திரட்ட வேண்டும். படைக்கலங்களில் இம்மைக்குரியவை வேறு, மறுமைக்குரியவை வேறு என அறிந்து செயலாற்ற வேண்டும். (படை மாட்சி - 77, படைச்செருக்கு-78).

பொருட்பால் என்னும் இப்பகுதி இம்மைக்கும் மறுமைக்கும் உரிய சமுதாய வாழ்க்கையை உரைப்பதாதலின், நட்புப் பற்றியும் பல அரிய கருத்துகளைக் கூறுகின்றதைக் காண்கின்றோம். சமுதாய வாழ்க்கை ஒருவருக்கொருவர் அன்பும் நட்பும் காட்டுதலில்தான் நிறைவடையவியலும். ஆகவே நட்பு' நட்பாராய்தல், பழமை, தீ நட்பு, கூடா நட்பு ஆகிய அதிகாரங்கள் வைக்கப்பட்டுள்ளன.

நட்புக்கு எதிராக உள்ளது பகை. பகைக்கும் படிகள் போல் உள்ள பேதைமை, புல்லறிவாண்மை, இகழ் முதலியன இப்பகையின் கூறுகள். பகை மாட்சி, பகைத்திறம் தெரிதல், உட்பகை முதலியன சமுதாய வாழ்க்கையைக் கெடுப்பன.

அரசினர், அமைச்சர், தூதுவர், பொது மக்கள் அனைவரிடத்துமே காணக்கூடிய சில துர்க்குணங்கள் பெரியாரை மதியாமை, பெண்வழிச் சேரல், விலை மாதருடன் பழகுதல், கள்ளுண்ணுதல், சூதாடுதல் ஆகியவை. இவற்றைத் தவிர்த் தொழுகினாலன்றி, சமுதாய வாழ்க்கை சீர்கெடும் என்பதில் ஐயமில்லை.

இம்மை வாழ்க்கைக்கு இம்மை மருந்தும், மறுமை வாழ்க்கையைச் சார்ந்த தெய்வீக மருந்தும் தேவைப்படும்.

இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்ற குடிமக்களாக வாழ்வதெங்ஙனம்? தன்மானத்திற்கு அவசியம் பெருமை. அஃதாவது, பெரிய மனம். ஐந்தவித்தானுக்குச் சான்று கூறுவதில் ஆண்மை, நற்பண்புடைமை, உள்ள செல்வத்தை நல்ல முறையில் பயன் படுமாறு செய்தல், குற்றம் நேர்ந்தால் நாணுதல், இம்மை

மறுமைக்கு ஏற்ற குடிமக்களை உருவாக்கும் வகை, இம்மை உணவுக்குத் தேவையான உழவுத் தொழில், மறுமை வாழ்வுக்குத் தேவைப்படும் உழைப்பு இவைபற்றியும் அதிகாரங்கள் வைக்கப் பட்டுள்ளன.

உழைப்பின்றேல் வறுமை வந்து தீரும். அதனால் இரவு, அஃதாவது பிறர் உதவி நாடல் நிகழும். இங்ஙனம் செய்ய அஞ்சுதல் இவைபற்றிக் கூறப்படுகிறது. இந்நூலில் கூறப் பட்டதைச் சிறிதும் கவனியாது வாழ்தல் **கயமை.** இதுவே பொருட்பாலின் இறுதி அதிகாரம்.

சான்றாண்மையின் இரு தூண்கள் — அவையாவன: கண்ணோட்டம், நாண். இப்பகுதியில் கூறப்பட்ட இவை சிறப் பாகச் சமுதாய வாழ்க்கைக்கு மிக மிகத் தேவை என்று குறிப்பிடவேயாம்.

தனி வாழ்க்கையில், தான் செய்த குற்றத்தை எண்ணி நாணுதல் நிகழலாம். சமுதாய வாழ்க்கையில் இது மேலும் அதிகமாக நிகழும். ஏனெனில், பலதிறப்பட்ட மக்களோடு பழகும் போது பல குற்றங்கள் நேர்வது இயல்பு. அதனால், நாணுவதோ அவ்வளவு எளிதன்று. அதற்குத்தான் கண்ணோட்டம் தேவைப் படும். இவை இரண்டும் பொருட்பாலில் கூறப்படினும் இல்லறம் துறவறம் அனைத்து வாழ்க்கையிலும் இன்றிமையாதன என்பது தெளிவு.

இந்த அமைப்பைக் கண் முன் வைத்துப் பகுதிப் பகுதியாக உரை கூறும் போது ஆசிரியரின் அமைப்பு முறையும் ஒழுங்கும் எழிலும் விளங்கும்.

**இன்பத்துப்பால் விளக்கம்**

இனி, 'இன்பத்துப்பால்' என்றும் சிலரால் காமத்துப்பால் என்றும் கூறப்படும் மூன்றாம் பகுதியின் அமைப்பின் நோக்கம் பேரின்பத்தைக் கூறுவதே என்பது விளக்கத்தினின்று புலப்படும்.*

---

* திருக்குறளின் மூன்றாம் பகுதியாகிய இன்பத்துப்பாலில் ஆசிரியர் கூற விரும்பியது சிற்றின்பமன்று; பேரின்பமே என்பதற்குப் போதிய காரணங்களும் விளக்கமும் அப் பகுதிக்கு 'முன்னுரை'யாகக் கூறப்படுகிறது.

பொருட்பாலில் அரசியல், அங்கவியல் (அமைச்சு), ஒழிபியல் என்னும் பிரிவுகள் இன்றைய திருக்குறள் பதிப்பில் காணப் படினும், ஓரியலில் கூறப்படும் பண்புகள் பெரும்பாலும் (எடுத்துக் காட்டாக - கல்லாமை, சிற்றினம் சேராமை, ஊக்க முடைமை, வினைத்திட்பம், பெண்வழிச் சேறல் முதலியவை) எல்லா மக்களுக்குமே பொருந்துவது தெளிவு. அரசினர்க்குப் பொருந்துவது அமைச்சருக்கும் சிறப்பாகப் பொருந்தும் என்கிற கருத்தில் குறட்பாக்களை விளங்கிக் கொள்ளுதல் வேண்டும். இத்தகைய பாகுபாடுகளும் பிரிவுகளும் வள்ளுவரால் உண்டான வையா? உரையாளரால் ஏற்பட்டவையா? என்பது ஆய்தற் குரியது.

'கடவுள்' என்னும் சொல்லையே பயன்படுத்தாத வள்ளுவர், முதல் அதிகாரத்துக்குக் 'கடவுள் வாழ்த்து' என எங்ஙனம் பெயரிட்டிருக்கக் கூடும்? ஆகவே, அதிகாரப் பெயரெல்லாம் வள்ளுவரே கொடுத்தவை என்பது சரியன்று.

**இன்பத்துப்பால்**

ஈண்டு அதிகார அமைப்புப்பற்றி மட்டும் சுருக்கமாகக் கூறுவோம்.

இப்பாலின் முற்பகுதியாகிய களவியலில், பேரின்ப நாயக னாகிய இறைவன் தலைமகளாகவும், அவ்வின்பத்தை எய்து மாறு முனைந்து நிற்க வேண்டிய ஆன்மா (மனிதன்) தலைமக னாகவும் கூறப்படுகின்றதைக் கவனிக்க.
அதிகாரம். 109

மனிதனைத் தன்பால் ஈர்ப்பதற்காக இறைவன் தனக்குரிய பேரழகினால் (தகை) ஆன்மாவை வருத்துகின்றான். (அணங்கு) - இது வலியுறுத்தப்படுகிறது. (உறுத்தல்).

110. இறைவனது (இப்பேரின்பக்) காதல் குறிப்பை ஆன்மா உய்த்துணர முனைகின்றது. (குறிப்பறிவுறுத்தல்).

111. இவ்வுய்த்துணர்தலின் பயனாக இறைவனோடு அன்பால் ஓரளவு இணைந்து (புணர்ந்து) மகிழ்ச்சியுறத் தொடங்குகின்றது. (புணர்ச்சி மகிழ்தல்).

112. இத்தொடக்க மகிழ்ச்சியை (புணர்ச்சியை) ஆன்மா எண்ணி எண்ணி இறைவனது எழில் நலத்தைப் பாராட்டு கின்றது. (நலம் புனைந்துரைத்தல்).

113. இறைவன், ஆன்மா ஆகிய (பேரின்பக்) காதல ரிடையே நிகழும் இக்காதல் சிறப்பு, சிற்றின்பக் காதலினும் எத்துணை மேலானது எனக் கூறுவது. (காதற்சிறப்புரைத்தல்).

114. இப்பேரின்பக் காதலைச் சிற்றின்பக் காதலில் உழல்பவர் மதியாமல் இழித்துப் பேசுவர். இந்த இழிவுப் பேச்சுகளைப் பொருட்படுத்தாமல், இதனால் ஏற்படக் கூடிய நாணினை விடுத்து, ஆன்மா தன் குறிக்கோளை நோக்கி விரைதல். (நாணுத்துறவு உரைத்தல்).

115. மேற்கூறிய இகழ்ச்சிப் பேச்சுகள் மட்டுமன்று; வேறு இன்னல்களையும் (அலர்களையும்) ஆன்மா ஏற்க வேண்டி யிருக்கும். (அலர் அறிவுறுத்தல்)

### கற்பியலில்—இறைவன்—தலைமகன்
### ஆன்மா—தலைமகள்.

116. உலக வாழ்க்கையில் ஆன்மா இறைவனுடன் முழுமையான அன்புறவு இன்றித் தவித்தல். (பிரிவாற்றாமை).

117. மேற்கூறிய பிரிவாற்றாமையின் விளைவாக ஏக்கமும் தவிப்பும் (படர்) மேலிட உளம் மெலிந்து வருந்துதல். (படர் மெலிந்திரங்கல்).

118. ஏக்கமும் தவிப்பும் மேலிட மேலிட ஆன்மா அகக் கண்ணால் (கண்) இறைவனை விரைவில் (விதுப்பு) காண விழைந்து வருந்துதல் (அழிதல்). (கண்விதுப்பழிதல்).

119. விரைவில் காண இயலாமையால் உடலிலும் கூட செழுமை, வலிமைகுன்றி, முகம் வெளிறுதல் முதலியன நிகழ் வதையும் அதனால் ஏற்படும் வருத்தத்தையும் கூறுதல். (பசப் புறு பருவரல்).

120. இந்நிலையில் இறைவனுக்குத் தன் மீது எக்கவலையும் இல்லாதது போலும், தான் மட்டும் இறைவன் மீது மிகுந்த கவலை கொண்டிருப்பது போலும் எண்ணி வருந்துதல். (தனிப் படர் மிகுதி).

121. தொடக்கத்தில் துய்த்த இன்பம் இனி கிடைக்காதோ என எண்ணி ஆன்மா புலம்புதல். (நினைந்தவர் புலம்பல்).

122. கனவிலும் கூட (பேரின்பக்) காதலனை (இறைவனை) எண்ணி வருந்தும் நிலை உரைத்தல். (கனவு நிலை உரைத்தல்).

123. நோயுள்ளவர் மாலையிலும் இரவிலும் அதிகமாக வருந்துவது போல், ஆன்மா வருந்துதல். (பொழுது கண்டிரங்கல்).

124. பிரிவாற்றாமை மீதூர, உடல் உறுப்புகளும் மெலிந்து சோர்வுற்று உருவழிதல். (உறுப்பு நலன் அழிதல்).

125. இந்த நிலையில் ஆன்மா தனக்குத்தானே பேசிக் கொள்ளுதல்; ஓரளவு வருத்தம் தீரக்கூடும் என்று. (நெஞ்சொடு கிளத்தல்).

126. (பேரின்பக்) காதல் மிகுதியினால் உள்ளத்தில் அடக்கி வைத்திருக்க வேண்டியதையும் வாய் விட்டுச் சொல்லி விடுதல். (நிறையழிதல்).

127. காதல் (அன்பு, ஏக்கம்) மிக மிக (பேரின்பக்) காதலர் நேரில் கண்டு இன்புற ஆர்வம் மிகுதல். (அவர் வயின் விதும்பல்).

128. இறைவன் தன்னை நெருங்கி வருவதாக ஆன்மா இந்த ஏக்க நிலையில் நினைக்கக்கூடும். அதற்குச் சில குறிப்புகளும் காணப்படலாம். இவற்றைப் பிறர்க்கு அறிவுறுத்தல். (குறிப்பறிவுறுத்தல்).

129. இனி இறைவனோடு இணைந்து இன்புற விரைதலே ஆன்மாவின் முழு நோக்கமாக இருத்தல். (புணர்ச்சி விதும்பல்).

130-132. அதிகாரங்கள்:

ஆன்மாவுக்கு இறைவன் தனது இன்பம் தர விரும்பினாலும் ஏதோ ஓரளவு விரும்பியதும் தந்து விடுவதில்லை. பேரின்பம் என்பது சிற்றின்பங்கள் போல் ஒரு சிறிது விரும்பினாலும் அடைந்துவிடக் கூடியது அன்று. இறைவனை அடைய ஆன்மா மிக மிக விழைதல் தேவை. வருந்தி வருந்தி அடையப்பட வேண்டிய பொருளே பேரின்பம் என்பது. இந்த வருந்துதலையே இதுவரை உள்ள அதிகாரங்கள் **பிரிவாற்றாமை** முதல் **புணர்ச்சி விதும்பல்** வரை கூறின. இவ்வருந்துதலின் மிக உயர்ந்த படிகளே இனிவரும் **புலவி** அதிகாரங்கள். நெஞ்சொடு புலத்தல், புலவி, புலவி நுணுக்கம் ஆகிய 130, 131, 132 அதிகாரங்கள் இவ்வருத்த மிகுதியின் விளக்கமும் நுணுக்கங்களுமேயாகும்.

133. இவ்வருத்தத்திற்கெல்லாம் ஒருவிதப் பரிசென ஆன்மா இறுதியில் இறைவனை அடைந்து பேரின்பம் எய்துகிறது. **(ஊடல் உவகை).**

தமிழ் இலக்கிய மரபுப்படி திருவள்ளுவர் அறம், பொருள், இன்பம், வீடு என்றுள்ள நான்கினையும் கூறவில்லையே; மூன்றனை மட்டுந்தானே கூறினார்; வாழ்க்கையின் இறுதி நிலையாகிய வீடுபற்றி ஒன்றும் கூறவில்லையே என வினாக்கள் எழுவதுண்டு. ஆனால், உன்னிப்பாக நோக்கினால், புலவர்கள் ஏற்கனவே கூறியது போல **'முப்பாலில் நாற்பால்** மொழிந்தவர்' திருவள்ளுவர் என்பது தெளிவாகும்.

எங்ஙனம் முப்பாலில் நாற்பால் அடங்கியுள்ளது எனின், விளக்குவோம்.

முதல் அதிகாரத்திலேயே ஆசிரியர் தம் நூலின் நோக்கம் இறைவனடி தொழுதலும், அவன் புகழ் புரிதலும், அவன் தாளை வணங்குதலும், இறுதியில் அவனடி சேர்தலும், நீடுவாழ்தலுமே எனப் பத்துக் குறள்களுள் ஒன்பது குறள்களில் அழுத்தமாகக் கூறுவதைக் காண்கிறோம்.

இனி இறைவனடி சேர்தலே வீடு பேற்றின்பம் அடைதல் அன்றோ?

அங்ஙனமாயின், **இன்பம்** என்பதுபற்றி ஒன்றும் கூற வில்லையே எனின், அன்று. ஆசிரியர் இன்பம்பற்றி உள்ளத்தில் கொண்டிருந்த கருத்தும் பிற்காலத்தவர் புகுத்திய கருத்தும் வெவ்வேறு எனப் புலப்படுகிறது.

இல்லறவியலில் இல்லறத்தைப்பற்றிக் கூறிய ஆசிரியர், இல்லறத்தில் காணும் இன்பத்தில் மிகச் சிறியதான உட லின்பத்தைக் குறித்து 250 பாக்கள் தனியாக ஆக்கினார் என்பது பொருந்தாக் கூற்றாகவே தோன்றுகிறது. அவர் கொண்டிருந்த கருத்து, உலகில் மக்கள் ஆர்வத்துடன் துய்க்க விரும்பும் சிற்றின்பத்தை விளக்குமுகத்தான் படிப்படியாக அவனை இறைவன்பால் ஈர்க்க வேண்டுமென்பதே பொருந்தும். இங்ஙனம் ஈர்க்கப்படுவதால், அவன் இவ்வுலகிலேயே உண்மை யான, நிலையான இன்பத்தை - நிலைத்து நிற்கும் 'நில மிசை நீடு வாழ்' வான இன்பத்தை ஓரளவு துய்க்க இயலும். இறுதியில் அதன் முழுமையையும் அடையவியலும் என்பதைக் காட்டவே 'இன்பத்துப்பால்' பகுதியை இயற்றினார். இதுவே பொருத்தமான முடிவு.

ஆகவே, இவ்வின்பத்துப்பால் முழுவதும் வீடு பேற்றை அடையும் படிகளாகும். கடைசிக் குறள் வீடு பேற்றை அடைந்த நிலையைக் குறிப்பிடும். இப்பொருளில் கொண்டால் முப்பாலில் நாற்பாலும் அடங்கியுள்ளதைக் காண இயலும். இல்லையெனில், இந் நூலின் இறுதிப் பகுதியாகிய மூன்றாம் பகுதி சிற்றின்ப விளக்கத்தோடு முடியும்; சிற்றின்பம் எய்துதலே வாழ்வின் நோக்கம் என்றாகி விடும். இது முற்றிலும் பொருந்தாக் கூற்றாகும். இதுபற்றி, 'இன்பத்துப்பால்' என்பதே இப்பகுதிக்குப் பொருத்தமான பெயர், 'காமத்துப்பால்' அன்று என்பதும் விளங்கும்.

**ஒரு குறிப்பு:**

திருக்குறளில் கிறிஸ்தவக் கருத்துகள் பல உள்ளன என்னும் போது, கிறிஸ்தவக் கருத்துகள் எல்லாமே இதனுள் அடங்கியுள்ளன என்றோ, நூல் கிறிஸ்தவத்தின் முழுவிளக்கம் என்றோ பொருள் அன்று. திருக்குறளைப் பொதுவாக அறநூல் என்று வழங்குவதுண்டு. ஆகவே, அதில் வெறும் அறிவுரைகள் மட்டுந்தான் உண்டு என்பது பொருள் அன்று. அறிவுரைகளும் அருள் வாழ்வு சார்ந்த உரைகளும் ஒன்றோடொன்று பின்னிக்

கிடப்பதைக் காண்கிறோம். இறைவனடி சேர்தலாகிய மறுமை சார்ந்த அருள் வாழ்வைப்பற்றிய அடிப்படைக் கருத்துகளைக் கூறும் அதே நேரத்தில், இம்மை சார்ந்த பொருளைப்பற்றிக் கூறுதலையும் உள்ளடக்கியுள்ளதைக் காண்கிறோம். ஆகவே, இம்மை மறுமையாகிய 'இருமை வகை தெரிந்து அறம் பூண்டார்' பற்றியும், 'மறுமையும் இம்மையும் இன்பம் தரும்' என்றும், 'சிற்றின்பம்......மற்றின்பம்' பற்றியும் கூறுகின்றார். அருட்பொருள், பொருட்பொருள்பற்றியும் கூறுவதும் அதனால் தான்.

மறுமை பற்றிய இறைவனடி சேர்தலாகிய வீடு பேரின்பத்தை அடைய இம்மையில் வாழும் முறையை அறிவுறுத்துவதே நூலின் நோக்கம் எனக் கூற வேண்டியுள்ளது. இதற்கு நூலில் காணும் கிறிஸ்தவக் கருத்துகள் மிகவும் பயன் படும். இக் 'கருப்பொருள்' நூல், இதையெல்லாம் காட்டும் என்பது எம் துணிபு.

**சுருக்கமாக :**

'திருக்குறள்' சான்றோர் ஒழுக்கத்தைக் கூறும் நூல் என்னும் கருத்து அனைவருக்கும் ஏற்புடையதே. இச்சான்றோர் ஒழுக்கம் 'சான்றாண்மை' என்றும் 'சால்பு' என்றும் கூறப்படு கிறது. இச்சால்பு ஊன்றிய தூண்கள் ஐந்து என்றும் கூறப்படு கிறது. **இப்போதுள்ள அதிகாரமுறைப்படி** இவ்வைந்தும் முறையாக ஓரிடத்தில் விளக்கப்படாமல் நூலின் பல பகுதிகளில் கூறப்படுகின்றன.

அன்பு, ஒப்புரவு என்பன அறத்துப்பால் இல்வாழ்க்கைப் பகுதியிலும்,
நாண், கண்ணோட்டம் என்பன பொருட்பால் பகுதியிலும்,
வாய்மை என்பது அறத்துப்பால் துறவறப்பகுதியிலும் காணப்படுகின்றன.

இதற்குத் தக்க காரணம் இல்லாமலில்லை. அன்பும் ஒப்புரவும் மனிதனின் தனி வாழ்க்கையில் சிறப்பாக விளங்க வேண்டியவை. தனி மனிதன் ஒவ்வொருவனும் கடைப்பிடிக்க வேண்டிய அருட் பண்புகள். ஆகவே, அறத்துப்பாலில் விளக்கப் படுகின்றன.

நாணும் கண்ணோட்டமும் மனிதன் பிறரோடு தொடர்பு கொள்ளும் சமுதாய வாழ்க்கையில் சிறப்பாகக் கடைப்பிடிக்க வேண்டியவை. கருமத்தால் நாணுதல் சமுதாய வாழ்க்கைக்கு மட்டுமே பொருந்தும் என்பதன்று கருத்து. சிறப்பாகப் பிறரோடு உறவு கொள்ளும் போது பல குற்றங்கள் நேருமாகை யால், இப்பகுதிக்கு மிகப் பொருத்தம் ஆகும்.

கண்ணோட்டம் என்பது மிகச் சிறப்பாக அருள் ஆட்சியிலும் பொருளாட்சியிலும் விளங்க வேண்டியவை. கண்ணோட்டம் இல்லாவிடில் உலகே நிலைக்காது என்னும் கருத்தை ஓர்க.

சமுதாய வாழ்க்கையில் அருளாட்சியும் பொருளாட்சியும் பின்னிப் பிணைந்துள்ளதால், இப்பகுதியில் இவ்விரண்டு சால்புத் தூண்கள் விளக்கப்படுவது பொருத்தமே.

வாய்மை என்பது சான்றோர் அனைவர் மீதும் சுமத்தப்பட்ட கடமை என்பது உண்மையே. எனினும், துறவிகட்கு மிகச் சிறப்பாகப் பொருந்தும் என்பதால், துறவறப்பகுதியில் கூறப் படுகிறது எனலாம்.

இப்போதுள்ள அதிகார முறைபற்றி இவ்விளக்கம் கூறப் படுகிறது. ஆதியில் இந்நூல் எந்த ஒழுங்கில், எந்த அதிகார முறையில் அமைந்திருந்தது என்றறிய இப்போது வழியில்லாமை யால் இத்தோடு இவ்விளக்கத்தை நிறுத்த வேண்டியுள்ளது.

## ஆதிபகவன்—ஐந்தவித்தான்—இறைவன்

1. ‘அகர முதல...........’

திருக்குறள் ஆசிரியர் திருவள்ளுவர் ‘கடவுள்’ என்னும் சொல்லைத் தம் நூலில் எங்கும் பயன்படுத்தவில்லையெனினும், இம் முதல் அதிகாரத்துக்குக் ‘கடவுள் வாழ்த்து’ என்றே தொன்றுதொட்டுப் பெயர் சூட்டியுள்ளனர். இது வியப்பாகவே உள்ளது.

இவ்வதிகாரத்தில் பத்துப் பாக்களிலும் அவர் ஆளும் பெயர்கள் ‘ஆதிபகவன்’, ‘ஐந்தவித்தான்’, ‘இறைவன்’ என்பவை. வாலறிவன், மலர்மிசை ஏகினான், வேண்டுதல் வேண்டாமை இலான், தனக்குவமை இல்லாதான், அறவாழி அந்தணன், எண்குணத்தான்-இவை ஆதிபகவன்

ஐந்தவித்தான் - இறைவனது உயர் பண்புகளை விளக்கும் அடைமொழிகளாகவே உள்ளன.

ஆகவே, இம்மூன்று பெயர்களால் வள்ளுவர் கூற விரும்புவது என்னவென்பதை முதற்கண் ஆய்தல் அவசியம்.

**ஆதிபகவன்**

'பகம்' என்கிற சொல்லுக்குப் பொருள் அவாவின்மை, ஈச்சுரத் தன்மை, செல்வம், ஞானம், கீர்த்தி, வீரியம் என்னும் அறுகுணம் - என அகராதிகள் கூறும்.

இதிலிருந்து தோன்றும் 'பகவன்' என்கிற சொல்லுக்கு மேற் கூறிய அருங்குணங்கள் கொண்டவன் என்றே பொருள் இருத்தல் வேண்டும்.

ஈசன் என்னும் சொல்லுக்கு அரசன், ஆள்பவன், எப்பொருட்கும் இறைவன், கடவுள் என்னும் பொருள் இருப்பதால், ஈச்சுரத்தன்மை என்பது இறைவன் தன்மை என்றே பொருள்படும்.

**இதுபற்றி கா. அப்பாத்துரையாரின் மணிவிளக்கு உரை கூறுவது:**

''பகம் என்பதற்குக் கண் என்றும், செல்வம் என்றும், சமயவாணர் பொருள்கூறி, 'பகவன் எல்லாவற்றையும் காண்பவன்', 'எண்வகைச் செல்வங்கள் அல்லது குண நிறைவுகளையுடையவன்' என்கிற பொருள்களில் அது கடவுளைச் சுட்டும் என்றும் உரைப்பர். ஆனால், 'பகவன்' என்கிற சொல்லுக்கு இப்பொருள் முற்றிலும் பொருந்தாது. ஏனெனில், இறைவனைக் குறிக்கும் இடங்கள் எதிலும் வள்ளுவர் இச்சொல்லை வழங்கவில்லை. அதே சமயம் இறைவாழ்த்து அதிகாரத்தில் குறட்பா தோறும் வழங்கும் இறைவன் என்கிற சொல்லுக்கு அல்லது அதற்குரிய அடைமொழிக்கு முன்னால் இச்சொல் வழங்கப் பட்டுள்ளதனால் அஃது இறைவனுடன் தொடர்பற்ற சொல்லாகவும் இருக்கவியலாது.''

**இதனையொட்டி ஞா. தேவநேயன் கூறுவது:**

''பகவன் என்னும் சொல் முற்காலத்தில் கடவுளையே குறித்தது. ஆயின், பிற்காலத்தார் அதைப் பிரமன், விட்டுணு,

உருத்திரன் என்னும் ஆரிய மத முத்திருமேனியர்க்கும் அருகன், புத்தன் என்னும்பிறமதத் தலைவருக்கும் வழங்கிவிட்டமையால், கடவுளைக் குறிக்க **முதல்** என்னும் அடை கொடுக்க வேண்டியதாயிற்று. கடவுள் என்னும் சொல்லும் இங்ஙனமே இழிவடைந்து விட்டமையால் **முதற்கடவுள்** என்றும் **முழுமுதற் கடவுள்** என்றும் அடைகொடுத்துச் சொல்லும் வழக்கை நோக்குக. பகம் (ஆறு) என்னும் சொல்லை மூலமாகக்கொண்டு பகவன் என்பதற்குச் செல்வம், மறம், புகழ், திரு, ஓதி, (ஞானம்), அவாவின்மை என்னும் அருங்குணங்களையுடையவன் என்று பொருள் கூறுவது பொருந்தாது.

''பகவன் என்பது பகுத்துக் காப்பவன் அல்லது **எல்லா உயிர்கட்கும் படியளப்பவன்** (dispencer) என்று பொருள் படும் தென்சொல். பகு-பகவு-பகவன்.''

**புலவர் குழந்தை கூறுவது :**

''ஆதிபகவன் - மக்களுக்கெல்லாம் முதல்வன் ஆவான்...... பகவு - பகுதி. 'எள்பகவு அன்ன' (889) எனல் காண்க. ஆதி பகவு - முதன்மைப்பகுதி : முதன்மையானது - குணங்களின் முதன்மைப் பகுதி. அஃதாவது, எல்லாக் குணங்களிலும் முதன்மையான குணம் என்பது பொருள். ஆதிபகவு + அன் = ஆதிபகவன். முதன்மையான குணத்தையே ஆதிபகவன் என ஆண்பாலால் கூறினார். மக்கள் **முதன்மையான குணமுடையவராய் வாழ வேண்டும்** என்பது கருத்து.''

கடவுள் வாழ்த்து என்னும் தலைப்புக்கொண்ட இந்த அதிகாரத்தின் முதற்குறளில், கடவுள், இறைவன் என்னும் பெயர்களுள் ஒன்றை ஆளாமல் 'பகவன்' என்னும் பெயரை ஆண்டதேன்?

''அகரம் என்னும் சொல்லுக்கு எதுகையாயிருத்தல் நோக்கியே'' என்கிறார் ஞா. தேவநேயன். இவ்விளக்கங்களினின்று பின்வருமாறு முடிவு செய்யலாம்.

1) 'பகம்' என்னும் பகுதியிற் பிறந்து, **அறு குணங்களை** யுடையவன் என்னும் பொருளில் ஈண்டு **பகவன்** என்னும் சொல்லை ஆசிரியர் பயன்படுத்தினார் என்று சொல்வதற்

கில்லை. அப்பொருளில் கையாண்டிருந்தால் பின்னர் 'எண் குணத்தான்' என்று இறைவனைக் குறித்திருப்பாரா?

2) 'எல்லா உயிர்கட்கும் படியளப்பவன்' (ஞா. தேவநேயன்)—'முதன்மையான குணமுடையவராய் மக்களை வாழ வைப்பவன்' (புலவர் குழந்தை) - என்னும் பொருளே சிறப்பாகத் தோன்றுகிறது. இவ்விரு பொருளும் ஒன்றே. அஃதாவது, மக்கள் எல்லாரும் இழிமை நிலைமையில் வீழாது (அல்லது இழிநிலையில் வீழ்ந்தால் அதனின்று நீங்கி, உயர்ந்து) முதன்மையான (அல்லது) மேன்மையான குண முடையராய் வாழுமாறு உயிர்களுக்கு ஏற்ற முறையில் படியளப் பவன் - என்னும் கருத்து வெளிப்படுகிறது.

இனி, இங்ஙனம் படியளப்பதற்கும் மக்கள் வாழ்வை முதன்மையாக்குவதற்கும் இன்றியமையாத சாதனம் உண்மை அறிவு - மெய்ப்பொருள் பற்றிய அறிவு.

இந்த அறிவை உயிர்கள் — மக்கள் எங்ஙனம் அடைய இயலும்? எந்தக் குரவரிடமிருந்து பெற்றுக்கொள்ள இயலும்? எந்த ஆசிரியர் பாதத்தமர்ந்து கற்றுக்கொள்ளவியலும்?

இந்த வினாக்களுக்கு விடையே இம்முதற்குறள்.

கடவுளே, ஆதியாம் இறைவனே உலகுக்குக் குருவாக வந்துள்ளார். வேறு எந்தக் குரவரும் செய்ய இயலாத முறை யில் அவர் உண்மையை எடுத்துரைத்தார். பொய்தீர் ஒழுக்க நெறியை அறிவித்தார் என்கிறார் வள்ளுவர். இப்பொருளி லேயே பேசுகிறார் மணிவிளக்க உரையாசிரியர்.

'ஆதி' என்று சிறப்பிக்கப்படுகின்ற முதல் உலகக் குருவையே மூலமுதல் அடிப்படையாகக் கொண்டு இயங்கு கின்றது இவ்வுலகம்.

அவர் "இறைவடிவான உலகக்குரவர்; அவ்வுலகக் குரவரிலும் இறைவனுக்கு மிகவும் அணுக்கமான நிலை யுடையவர்; உலகுக்கும் உலகக் குரவர்க்குமே இறைவனைச் சுட்டிக் காட்டியவர் என்ற முறையில் ஆதி உலகக்குரவரையே இறைவனாகக் குறித்தது என்பதே பொருத்தமானதாகும்."

இறைவனுடன் தொடர்புள்ள, மிக அணுக்கமான நிலை யுடைய இவர் யார்? இவர் ஒருவரா பலரா?

ஆதிபகவன் என்னும் தொகை நிலையில் ஆதி அருவக் கடவுளையோ அருவக்கடவுளின் உருவ நிலையான அருளுருவையோ அச்சொல்லையே இயற்பெயராகக் கொண்ட ஒரு முதல்வரையோ குறிக்கும். இம்முப்பொருளும் ஒருங்கே அமைவதும் இயல்பே. பகவன் ஊழிமுதல்வன் அல்லது உலகக்குரு (மணிவிளக்க உரை). ஆதி என்னும் அடைமொழி — முதன்மை மட்டுமே குறிப்பதாகும். பொருளில் மாற்றம் இல்லை.

இனி, இவ்வதிகாரத்தில் காணும் 'பொறிவாயில் ஐந்து' என்னும் சொற்றொடரால் ஆசிரியர் கூற விரும்பியது என்ன என்று ஆய்வோம்:

ஐந்து - என்பதற்கு ஐந்து பொறிகளை வழியாகவுடைய ஐந்து அவாக்கள் (பரிமேலழகர்).

ஐம்பொறிகளின் வழியாக வரும் ஐந்தின் கண்ணும் செல்லும் மனநிகழ்ச்சி (மணக்குடவர்).

ஐந்து பொறியை வழியாகவுடையவற்றிற்கு மனசைப் போக்காமல் (பரிதியார்).

ஐம்புலன்களை நுகர்வதற்கு வழிக்கருவியாகிய ஐம்பொறிகள் (காலிங்கர்).

ஐந்து பொறிகளை வழியாகவுடைய ஐந்து ஆசைகள் (தாமத்தர்).

ஐம்பொறிகளின் வழியாக நுகரப்படும் ஐம்புலன்கள் (நச்சர்).

ஐம்புலன் கொள்ளுதற்கு வழிக்கருவியாகிய ஐம்பொறிகள் (தருமர்).

ஐம்புல வழியாகச் செல்லும் தன்னல அவாக்கள் (கா. அப்பாத்துரை).

ஐம்பொறிகளிடம் உள்ள ஐந்து ஆசைகள் (சாமி சிதம்பரனார்).

ஐம்பொறி வழியே செல்லும் ஐம்புலன்கள் (புலவர் குழந்தை).

ஐம்பொறிகளின் வழியாக எழும் ஐந்துவகை ஆசைகள் (சுப்பிரமணியப் பிள்ளை).

ஐம்பொறிகளையும் வழியாகக் கொண்ட ஐவகை ஆசைகள் (தேவநேயன்).

இவ்வுரைகளில், பொறி என்னும் சொல்லுக்குப் பொருள்களை நுகர்வதற்கும் கருவியாக உள்ள மெய், வாய் முதலிய ஐந்தையே காண்கிறோம்.

**வாயில்** என்னும் சொல்லுக்குப் பெரும்பாலும் வழியே, வழியாகவுடைய, (ஐந்தின்)கண் (பொறியின் கண்) என்னும் பொருளே கூறப்படுகிறது.

ஐந்து என்னும் சொல்லுக்கு ஐந்தவாக்கள் (பரிமேலழகர்); மனநிகழ்ச்சி (மணக்குடவர்); மனசு (பரிதியார்); ஐம்புலன்கள் (நச்சர்); ஐம்புலன் (தருமர்); ஆசைகள் (சாமி சிதம்பரனார்); ஐவகை ஆசைகள் (தேவநேயன்); தன்நல அவாக்கள் (கா. அப்பாத்துரை) என்று வெவ்வேறு விதமாகப் பொருள் கூறப்படுகிறது.

**ஐந்தவித்தான்**

இச்சொற்றொடரில் ஐந்து என்னும் சொல் ஐம்பொறிகளைக் குறிக்கின்றது என்பதில் எவ்விதக் கருத்து வேறுபாடும் இல்லை.

அவித்தான் — என்னும் சொல்லுக்கு உரையாளர் பின்வருமாறு பொருள் கூறுவர் :

(அவாவினை) அறுத்தான் — பரிமேலழகர், தாமத்தர்

| | | |
|---|---|---|
| அடக்கினான் | : | மணக்குடவர், புலவர் குழந்தை |
| காக்க வல்லார் | : | பரிதியார் |
| அகத்தடக்கி | : | காலிங்கர், தருமர் |
| வென்றான் | : | நச்சர் |
| ஆசைகளை விட்டவன் | : | பாவாணர் |
| அடங்கிய கடவுளின் | : | சாமி சிதம்பரனார் |
| **அடங்கப்பெற்ற கடவுளது** | : | சுப்பிரமணியப் பிள்ளை |

அவாக்களைத் தடுத்தடக்கி ஆட்கொண்டவர்: கா.அப்பாத்துரை (விரிவு — பின்னர்க் காண்க).

அவி-என்னும் பகுதிக்கு அடக்கு, காத்தல், அடங்கச்செய், வெல்லு, அறு என்கிற பொருள்களே இவ்வுரைகளினின்று

வெளிப்படுகின்றன. இக்கருத்துக் கடவுளைப் பொறுத்த அளவில் பொருளற்றது மட்டுமன்று, இறைவனைப் பழிப்பது மாகும். மகாவீரர், புத்தர், இயேசு கிறிஸ்துவுக்கு ஒரு வேளை பொருந்தலாம் என்று திருவாசகமணி பாலசுப்பிரமணியம் அவர்கள் கூறுவது கவனத்திற்குரியது. உண்மையில் உடற் பொறிகள், புலன்கள் அனைத்தையும் கடந்தவனாகிய இறைவன் அவற்றை அடக்குதல், காத்தல், அறுத்தல் குறித்துப் பேச்சே எழுவதற்கில்லையே.

**அடியார்களின்** அவாக்களைத் தடுத்தடக்கி ஆட்கொள்ளு தல் எனப்பொருள் கூறுவது எவ்வகையிலும் வேறு பொருள் கூற இயலாமையான் என்றே புலப்படுகிறது. அல்லது தடுத்து அடக்குதலுக்குத் தேவையான அருளாற்றலை அடைவிப்பதற் காக என்னும் பொருளில் கொள்ளலாம். (விளக்கம் பின்னர்க் காண்க).

அடக்குதல், காத்தல் என்னும் சொற்களுக்குப் பதிலாக அவித்தல் என்னும் சொல்லை ஆள வேண்டிய தேவை என்ன?

ஐம்புலன்கள் (பொறிகள்) குறித்துத் தம் நூலில் அவர் எட்டு முறை கூறுகிறார்.

**முதலாவது —**

> ''பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
> நெறிநின்றார் நீடுவாழ் வார்.'' (6)

அடுத்து,

> ''உரன்என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
> வரன்என்னும் வைப்பிற்கோர் வித்து.'' (24)

அடுத்து,

> ''ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
> இந்திரனே சாலும் கரி.'' (25)

அடுத்து,

> ''சுவைஒளி ஊறுஓசை நாற்றமென் றைந்தின்
> வகைதெரிவான் கட்டே உலகு.'' (27)

அடுத்து,

> ''ஒருமையுள் ஆமைபோல் ஐத்தடக்க லாற்றின்
> எழுமையும் ஏமாப் புடைத்து.'' (126)

அடுத்து,

> ''அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
> வேண்டிய எல்லாம் ஒருங்கு.'' (343)

அடுத்து,

> ''ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
> மெய்யுணர்வு இல்லா தவர்க்கு.'' (354)

இறுதியாக

> ''கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
> ஒண்டொடி கண்ணே உள.'' (1101)

இப்பாக்களில் ஆசிரியர் கூறும் முறையை உன்னிப்பாகக் கவனித்தல் வேண்டும். இதில் மிக மேலான ஒரு கருத்து மறைந்துள்ளது.

(1) முதல் முதல் — கடவுள் வாழ்த்தில் — **அவித்தல்.**

(2) இரண்டாவது — நீத்தார் பெருமை அதிகாரத்தில், மும்முறை — காத்தல், அவித்தல், வகை தெரிதல்.

(3) மூன்றாவது — அடக்கமுடைமை அதிகாரத்தில், அடக்கல்.

(4) நான்காவது — துறவு அதிகாரத்தில் — அடல், விடல்.

(5) ஐந்தாவது — மெய்யுணர்தல் அதிகாரத்தில், உணர்தல்.

(6) ஆறாவது — இன்பத்துப்பால் — 'புணர்ச்சி மகிழ்தல்' அதிகாரத்தில் — புணர்தல்.

இவற்றுள் 'புணர்தல்' சிற்றின்பத்தைச் சார்ந்தது. ஆதலின் தாழ்ந்த படியிலுள்ளது தெளிவு. படிப்படியாக மேல் ஏறிச்

செல்லும் பாதையைக் காட்டுவதற்குப் பதிலாகக் கீழ் நோக்கிச் செல்லும் பாதையை அறிவுறுத்துவது போல் தோன்றுகிறது. ஏன்? என்பதை ஆய்ந்தறிந்தால் மறைந்திருக்கும் கருத்தை உணர்ந்து கொள்ளலாம்.

'தோன்றுகிறது' என்றேன். ஆம், வெறும் தோற்றமே அது ஆய்ந்து பார்ப்போம்.

'கடவுள் வாழ்த்து' என்னும் அதிகாரத்தில் 'அவித்தான்' என்னும் சொல்லை 'ஐந்துடன்' இணைத்து ஆதிபகவனாகிய இறைவனுக்குப் பொருந்துமாறு கூறி நீடுவாழ்வு பெற, பொய் தீர் ஒழுக்க நெறி நிற்கும் வழியை அவன் காட்டினான் என்றார்.

அதே பெயரை 'நீத்தார் பெருமை' அதிகாரத்திலும் பயன் படுத்தி, அப்பொய்தீர் ஒழுக்க நெறி நிற்கும் 'ஆற்றல்' எங்ஙனம் கிடைக்கும் என உணர்த்துவது போல், அந்த ஐந்தவித்தான் ஆற்றல் குறித்துக் கூறுகிறார். அந்த ஆற்றலைப் பெற்றால் தான், ஐந்தினைக் (ஐம்புலன்களின் போக்கை) காத்துக் கொள்ளவியலும். அதற்குத் தேவைப்படும் 'உரன் என்னும் தோட்டி'யை அடையவியலும். 'வரன் என்னும் வைப்'பாகிய பேரின்ப வீட்டிற்கு அருள் ஆற்றல் என்னும் வித்திட்ட பின்னர் தான் அவ்வைந்தின் 'வகை தெரிந்து' அவ்வைந்தின் வழியே பெரும்பாலும் செல்லும் உலகப்போக்கினர் வழியே தானும் சென்றுவிடாமல் தன்னைக் காத்துக்கொள்ள இயலும். அப்போதுதான் 'செயற்கரிய செய்வார்' ஆகவியலும். அவர்கள் தாம் உண்மையில்'பெரியர்'; மற்றெல்லாரும் 'சிறியரே' என்னும் கருத்துகளை அழுத்தமாகக் கூறுகிறார்.★

இனி, ஐந்தின் வகை தெரிந்து காப்பதற்கு முன்னர் அவற்றின் இயல்பான போக்கை அடக்க முயலுதல் வேண்டும். எங்ஙனம் என்பது 'அடக்கமுடைமை' அதிகாரத்தில் விளக்கப் படும். இங்ஙனம் ஐந்தின் வகை தெரிந்து காத்தலும் அடக்கு தலும் இல்லறத்தார் துறவறத்தார் அனைவருக்குமே பொது வாகத் தேவைப்படும் முயற்சிகளாகும்.

* ஐந்தவித்தானின் 'ஆற்றல்' என்பது, பின்னர் 'நீத்தார்' பிரிவில் விளக்கப்படும்.

துறவறத்தார்க்கோ இம்மூன்று முயற்சிகளுக்கு மேலும் முயற்சிகள் தேவைப்படுகின்றன. 'ஐந்தன் புலத்தை அடல் வேண்டும்'. —'விடல் வேண்டும்.' அதாவது அவற்றின் போக்கினை அடியோடு ஒழித்துவிட வேண்டும். ஐம்புலன்களின் செயல்களை ஒழித்தல், அவை செயல்புரியாமல் செய்துவிட வேண்டும் என்றன்று; அச்செயல்கள் தனக்கு எத்தீங்கும் விளைக்காதவாறு பார்த்துக்கொள்ள வேண்டும். புலனிருந்தும் இல்லாதவன் போல் வாழ்தல் வேண்டும்......'விடல் வேண்டும்' என்பதன் கருத்து இதுவென்றே தெரிகிறது.

துறவு மேற்கொள்வோர் இத்துணை மேன்மையான நிலையை எய்துவதற்கு முன்பாக, ஐயுணர்வுகளை விடுவதற்கு முன்பாக, 'மெய்யுணர்வு' பெறுதல் வேண்டும். அது இறைவன் (ஐந்தவித்தான் — ஆதிபகவன்) உணர்த்தினால்தான் இயலும். சிவஞானபோதம் கூறுவது போல், ஐம்புல வேடர்களால் துன்புறுத்தப்பட்ட ஆன்மாவுக்கு மேற்சொன்ன ஐந்தவித்தான் 'தம் முதல் குருவுமாய், தவத்தினில் உணர்த்த, துறவறம் மேற் கொள்வோர் இம்மெய்யுணர்வு பெற வியலும். வெறும் பகுத்தறிவு மட்டுமன்று, மெய்ப்பொருள் அறிவும் பெற வியலும்.

இறுதியாக, மேற்கூறியவற்றிற்கெல்லாம் கீழான நிலை போல 'புணர்தல்' பற்றிக் கூறுகிறார். ஆனால், இது வெறும் சிற்றின்பப் புணர்தல் போலத் தோன்றினாலும், இது மற்றனைத்திற்கும் மேலான பேரின்பப் புணர்ச்சியேயாம்.

இதுபற்றிப் பேரின்ப விளக்கத்தில் 1101-ஆம் குறளுக்குள்ள விளக்கம் காண்க. இப்பேரின்பத்தை நோக்கியே மனிதன் படிப்படியாக ஏறிச்செல்ல வேண்டும் என்பதைக் குறிப்பிட்டே இந்தச் சிறப்பான விளக்கு முறையை கையாள்கின்றார் ஆசிரியர். இதனால்தான் 'நீத்தார் பெருமை' அதிகாரத்தி லேயே 'வரன் என்னும் வைப்பு' பற்றிக் கூறுகிறார். இறைவனை — ஐந்தவித்தானை, வரனாக அடைவதே நூலின் முழுக்கருத்து என்று நூலின் தொடக்கத்தில் கூறியதை 'இன்பத்துப்பாலில்' விரிவாக விளக்குகிறார்.

இங்ஙனம் ஐந்தினைக் காத்தல், அவற்றின் வகை தெரிதல், அடக்குதல், அடல், விடல் எனத்தெளிவாக அவ்வச்செயலுக்கு ஏற்பச் சொற்களைத் தக்க முறையில் தக்க பொருளில்

கையாண்ட ஆசிரியர் அடக்குதல், (அவா) அறுத்தல், என்னும் பொருளில்தான் 'அவித்தான்' என்னும் சொல்லையும் பயன் படுத்தினார் என்பது வள்ளுவர் போன்ற பேரறிஞருக்கும் அவரது சொல் திறனுக்கும் பெருத்த இழுக்கே என்பதில் ஐயமில்லை. ஆகவே, அவித்தல் என்னும் சொல்லுக்கு வேறுபொருள் இருந்தே தீர வேண்டும். அதனை ஆய்ந்தறிவது நம் பொறுப்பு.

''அவித்தல் என்பது அழித்தல் அன்று. முனைப்புக் கொடுத்துத் தன்வயப்படுத்தி ஆட்கொள்வதையே அது குறிக்கும். காய்கறிகளை நாம் அவிப்பது அவற்றை அழிப்பதற்கோ, சுட்டுக் கருக்குவதற்கோ, சுவை கெடுப்பதற்கோ அன்று. அவற்றின் கடுமை, கடுப்புப் போக்கிப் பதப்படுத்திச் சுவைக்குகந்தனவாக்குவதற்கேயாகும். புலனறிவுகளையும், புல நுகர்வுகளாகிய புல அவாக்களையும் இவ்வாறு ஆறாம் அறிவின் ஆற்றலால் பதனுறுவித்து, இனத்துக்கு மாறான அவற்றின் கடுமை, கடுப்பு முனைப்புகளகற்றி அவற்றை இனத்துக்கும் அக உயிருக்கும் ஏற்ற உணவு அல்லது உணர்வாக்குவதே புலனவா அவித்தல் ஆகும். 'அவி உணர்வின் ஆன்றோர்', 'அவி உணவின் ஆன்றோர்' என்னும் இரு வகை வழக்குகளும் ஏற்பட்டமை இதனாலேயாகும். அவியுணவு என்பது அவி உணவுக்குரிய ஒரு புறச் சின்னமேயாகும். நம் உணர்வை அவித் தமைக்கு அடையாளமாகவே நாம் தெய்வ உருவினுக்கு அவி யுணவு படைக்கிறோம். திருவள்ளுவர் காலத்துக்கு நீண்ட நாட் பிற்பட்ட காலங்களில் வேத மொழியில் இது ஓசை மாறி (ஹவிசு என்று) வழங்கப்பட்டாலும் பொருள் மாறாமல் நெய்யிட்டுப் பதப்படுத்திய கூலங்களையே உணர்த்திற்று.''★

அவித்தல் பற்றி ஈண்டுக் கூறப்படும் கருத்துகள் முதல் அதிகாரத்தில் கூறப்படும் ஆதிபகவனாகிய உலக முதல் குருவுக்குப் பொருந்துமா?

தன் 'பொறிவாயில் ஐந்தை', 'முனைப்புக் கெடுத்துத் தன் வயப்படுத்தி ஆட்கொண்டான்' என்பதும்,

காய்கறிகளின் 'கடுமை - கடுப்புப் போக்கிப் பதப்படுத்திச் சுவைக்கு உகந்ததாக்கு'வது போல், ஆதிபகவனும் 'புலனறிவு களையும் புல நுகர்வுகளாகிய புல அவாக்களையும் இவ்வாறு

★ மணி விளக்கவுரை, I Vol. 311 - 311.

ஆளும் அறிவின் ஆற்றலால் பதனுறுவித்து இனத்துக்கு மாறான அவற்றின் கடுமை கடுப்பு முனைப்புகள் அகற்றி அவற்றை இனத்துக்கும் அக உயிருக்கும் ஏற்ற உணவு அல்லது உணர் வாக்கி'னான் என்பதும் இறைவடிவான, இறைவனுக்கு மிகமிக அணுக்கமான நிலையுடைய உலகக் குரவர்க்கெல்லாம் ஆதி யாகிய உலக முதல் குருவாகிய, உலகுக்கெல்லாம் அகரமாகிய ஆதிபகவனுக்கு எங்ஙனம் பொருந்தும்? முதல் அதிகாரத்தில் கூறப்படும் ஆதிபகவன், 'வாலறிவன்' எனக் கூறப்படுகின்றான். வாலறிவு என்பது நிறைவான அறிவைத் தனக்கு இயல்பாகக் கொண்டிருப்பவன் என்றுதான் பொருள்பட வேண்டும். அங்ஙன மாயின், 'ஆறாம் அறிவின் ஆற்றலால் பதனுறுவிப்பது' எங்ஙனம் அவனுக்குப் பொருந்தும்? ஆறாம் அறிவு என்பது சாதாரண பகுத்தறிவுள்ள மனிதர்க்கு மட்டுமே பொருந்தக்கூடும்!

இந்த ஆதிபகவன் மனிதர்கள் இதய 'மலர் மிசை ஏகினான்' என்றால், தனக்குள்ள அருவ நிலையில்தான் அங்ஙனம் 'ஏகினான்' ஆதல் கூடும். உருவ நிலையில் வேறு மனிதர் இதய மலர்மிசை ஏகுதல் எங்ஙனம் இயலும்?

இங்ஙனம் அருவ நிலையில் இதய 'மலர்மிசை ஏகினான்' இறைவனேயன்றி வேறெதுவாயிருத்தல் கூடும்? இத்தகைய இறைமைப் பண்பு நிறைந்தவன் தன் 'ஐந்தை'ப் பதனுறுவிக்கத் தேவைப்பட்டது என்பது பொருந்தாக் கூற்றாகவே உள்ளது.

அங்ஙனமே, 'வேண்டுதல் வேண்டாமை இலான்' ஆகிய அவன் புலனவாக்கள்பாற்பட்டு அவற்றுள் சிலவற்றை வேண்டு பவனாகவும், சிலவற்றை வேண்டாதவனாகவும் ஆகுமாறு எங்ஙனம்?

'தனக்குவமை இல்லாதான்' எனில் பகுத்தறிவு படைத்த பிற மனிதர்களைப் போலவே ஆறாம் அறிவினால் புல னவாக்களை அடக்கி, அவித்துப் பதனுறுவிக்கத் தேவைப்பட்டது எனின், பிற மனிதரும் அவனுக்கு உவமையானவர் என்றாகி விடும் அன்றோ?

'அறவாழி அந்தணனாகிய' அவனும் பிறரைப் போல் புல னவாக்களை அவித்துப் பதப்படுத்தினான் என்றால் 'அறவாழி' என்னும் பெயருக்கே தகுதியற்றவனாய் விடுகிறான் அன்றோ?

**ஆகவே, ஈண்டுக் குறிக்கப்படுவது ஆதிபகவன், தன் பொறி வாயில் ஐந்தை அவிப்பதுபற்றி யன்று; பிறருடைய - பகுத் தறிவு படைத்த சாதாரண மனிதருடைய புலன்களை அவிப்பது பற்றியே என்க.**

இஃது எங்ஙனம் இயலும்? ஆதிபகவன் மனிதருடைய 'ஐந்தினை' அவித்தானா? எங்ஙனம்? என்று வினாக்கள் எழும்.

'ஆம், அவித்தான்' என்பதே விடை. அவித்தான் என்னும் சொல்லை ஈண்டு 'அழித்தான்' என்னும் பொருளில் கொள் ளாமல், 'அவித்துப் பதனுறுவித்தான்' என்று மேற்சொன்ன பொருளில் மட்டுமே கொள்க. இதற்காக அவன் மேற் கொண்டதே 'தற்பலித் தியாகம்' என்க.

**வரலாறு :**

ஆதிமுதல் மக்கள் தாமறிந்த தெய்வங்கட்குப் 'பலி'களை இட்டு வந்துள்ளனர். பலியிடுவதால் தாங்கள் செய்த தீவினை களுக்கு மன்னிப்புக் கிடைக்கும்; அவற்றிற்கு ஏற்ற கழுவாய் உண்டாகும்; தெய்வங்களின் கோபம் தணியும்; தயவு கிடைக்கும்; தங்கள் தேவைகள் நிறைவுறும் என்ற கருத்தில்-தான் இப்பலிகள் நிகழ்ந்து வந்துள்ளன. இப்பலிகளை இரு வகையாகப் பிரிக்கலாம்.

**ஒன்று** — தானியங்கள், பழங்கள் முதலியன காணிக்கை யாகத் தரப்பட்டன. இவற்றைத் தெய்வங்களுக்குப் படைத்தல் என்றனர்

**மற்றொன்று** — உயிர்களைக்கொன்று, இரத்தம் சிந்தி, தெய்வங்களுக்குப்படைத்தலாகும். இவையே 'பலிகள்' என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டன. இப்பலிகளே தலை சிறந்து விளங்கின என்பதில் ஐயமில்லை.

இங்ஙனம் படைக்கப்பட்டவையாயினும் சரி, இரத்தப் பலி களாயினும் சரி, படைத்த பின்னர் அல்லது பலியிட்ட பின்னர் படைத்ததை, பலியிட்டதை உண்டு வந்தனர். பலியிட்டதை உண்பது பலிச்சடங்கின் ஓர் அமிசமாகவே இருந்து வந்தது. படைக்கப்பட்ட பொருளில், பலியாக்கப்பட்ட உயிர்களின்

உடலில் தெய்வச்சக்தி ஏதோ வந்து குடிகொள்வதாகவும், அதை உண்டால் அந்தச்சக்தி தங்களுடையதாகித் தங்களுக்கு நன்மை பல விளையும் என்றும் நம்பிவந்தனர். இந்தக் கருத்தில் நம் நாட்டிலும் ஆதிகாலத்தில் எத்தனையோ பலிகள் நிகழ்ந்தன என்று அறிவோம். இவற்றைப் புத்தரும் சமணரும் கண்டித்து நீக்க முயன்றனர். உயிர்கள் மீது இரக்கம் காட்ட வேண்டும் என்ற நோக்கத்தோடுதான் முக்கியமாக அப்படிக்கண்டித்தனர்.* திருவள்ளுவரும் இதைக்கண்டிக்கிறார். ஆனால், அதற்கு அவர் தரும் காரணம் முற்றிலும் வேறாய் உள்ளது.

ஈண்டு நாம் மேலும் விளக்க வேண்டுவது: இறைவன் ஐந் தவித்தானாக உலகிற்கு வந்தபோது, தன் **உடலை அவித்து, அதாவது பதனுறுவித்து அளித்தது தன்பொருட்டன்று; பிறர் பொருட்டு; மனிதர் பொருட்டு என்னும்** கருத்தாகும்.

மனிதர்களுடைய புலனறிவுகளையும், புலநுகர்வுகளாகிய புல அவாக்களையும் பதனுறுவிக்கும்பொருட்டு, இன **நன்மையின்**பொருட்டு அவற்றின் கடுமை, கடுப்பு, முனைப்பு கள் அகற்றி, அவற்றை இனத்துக்கும் அக உயிருக்கும் ஏற்ற உணவு அல்லது உணர்வாக்கும்பொருட்டும் இங்ஙனம் ஐந் தவித்தானாக வந்த இறைவன் — ஆதிபகவன் தன் 'ஐந்தை' அவித்தான் என்க.

மனிதர்களுடைய புலனறிவுகள் முதலிய பதனுறுமாறும், கடுப்புகள், முனைப்புகள் நீங்குமாறும் அவன் செய்த ஏற்பாடே **தன்னைப் பலியாக்கியபோது தன்னையே அவியுணவு மாக்கியது.** மனித உடலை உணவாக்கித் தந்தான் என்னும் போது அருவருப்பு ஏற்படத்தான் செய்யும். ஆனால், இது வெறும் மனித உடலை உண்பதன்று! பலியாக்கப்பட்ட உடலில் தங்கும் இறை சக்தியையே தனதாக்கிக் கொள்வதாகும். உணவுப் பொருள் எதை உண்டாலும் அதனுள் அடங்கியிருக்கும் உட்சத்தே பயன்படுவது. அவியுணவாயின் அது இறைவனோடு

---

★ இவையெல்லாம் டாக்டர் மு. தெய்வநாயகம் அவர்கள் எழுதி யுள்ள 'அருட்செல்வம் யாது?' என்னும் நூலில் கூறப்பட்டுள்ளன.

சிறப்புத் தொடர்பு கொண்டதொரு தெய்வீக் சக்தியே * என்க. ஏன் இந்த ஏற்பாடு?

**கடுப்பும் முனைப்பும் மிக்க மனிதர்களின் புலன்களின் அறிவுகள், நுகர்வுகள், அவாக்களைப் பதனுறுவிக்கவே** என்க.

ஐந்தவித்தானின் ஆற்றலைப்பற்றிப் பேசும் 'நீத்தார் பெருமை' அதிகாரத்தில், அவன் தயாரித்துத்தந்த 'உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பது' குறித்தும், 'ஐந்தின் வகை தெரிவான்கட்டே உலகு' என்றும் ஆசிரியர் கூறுவது கவனித்தற்பாலது. அவியுணவாகத் தன்னையளித்த ஐந்த வித்தானின் இந்த ஏற்பாட்டை ஏற்று அதைப் பயன்படுத்தினால் தன் 'ஐந்தும்' பதனுறும் — கடுப்பு முனைப்பு இன்றிச் செயல் புரியும். ஆகவே, அவற்றை அடக்கியாள வியலும். அவற்றின் வகை தெரிந்து, காக்க வியலும் என்கிறார் வள்ளுவர். **அதனால், சுயநலம் மேலோங்காமல் தடுத்து, அன்பு மேலோங்கச் செய்யவியலும்.**

''அவியுணவு என்பது அவியுணர்வுக்குரிய ஒரு புறச்சின்னமே யாகும். நம் உணர்வை அவித்தமைக்கு அடையாளமாகவே நாம் தெய்வ உருவினுக்கு அவியுணவு படைக்கிறோம்'', என்கிறார் மணிவிளக்க உரையாசிரியர். ஆனால், ஐந்தவித்தான் தன்னையே தற்பலியாக்கி, அவியுணவாகச் சமைத்து மனிதர் தாம் உண்டு ஐந்தினைப் பதனுறுவிக்க வேண்டுமென்பதே உண்மை. ஐந்தவித்தான் உலகில் தோன்றுமுன் மக்கள் தெய்வங்களுக்குப் படைத்தபோது ஆசிரியர் கூறும் கருத்து உண்மையா யிருந்திருக்கலாம். ஆனால், இனி நாம் இறைவனுக்குப் படைக்க

---

* இதனை ஐந்தவித்தானாகிய கிறித்து சாதாரண உணவுப் பொருள் வடிவமாகத் தந்துள்ளார் என்பது கவனித்தற் பாலது. அன்றைய மக்களின் சாதாரண உணவுப் பொருளாயிருந்த கோதுமை அப்பத்தின் வடிவி லும், சாதாரண பானமாயிருந்த திராட்சை இரச வடிவி லும் தந்தார் என்பது கிறிஸ்துவப் படிப்பினை. ஆகவே, அருவருப்பு எதற்கும் ஈண்டு இடமில்லை என்பது தெளிவு.

வேண்டிய அவியுணவு இல்லை; மாறாக அவனே படைத்துத் தந்த தற்பலியுணவு மட்டுமே உண்டு என்க. அதை நாம் உண்டு, இறைவனின் அருட்சக்தியையும், தன்னுள் அடக்கி வைக்க வியலாத அன்பின் ஆற்றலையும், 'என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் அடிப்படையில் வாழ்வதற்கேற்ற முனைப்பும், இறைவனே காட்டிய முன்மாதிரியைப் பின்பற்றி நடக்க மன உறுதியும், தேவைப்பட்டால் தன்னைப் பிறர்க்கெனப் பலியாக்கும் அளவுக்கு அன்பின் தீவிரமும் - நிறைவாகப் பெற்றுக் கொள்ள இயலும்.

'என்பும் உரியர் பிறர்க்கு' என்று வாழ முனைவது தியாக வாழ்வின் சிகரம். அத்தகைய வாழ்வுக்குத் துணை செய்வது, ஐந்தவித்தான் தியாகத்தினால் ஏற்பட்ட அவியுணவு! தியாக உணவு - தியாக வாழ்வை உண்டாக்க வல்லது. சாதாரண உணவு சாதாரண உயிரை வளர்க்கின்றதன்றோ?

இதற்கெல்லாம் காரணம் அவித்தான் என்னும் சொல்லுக்குச் சரியான பொருளைத் தராமையே என்பது எம் துணிவு. அதாவது அடக்குதல், ஆளுதல், அறுத்தல், வெல்லுதல் என்றே பொருள் கூறப்படுவதால் எழும் குழப்பமே என்க.

பொறி என்பதற்கும் வாயில் என்பதற்கும் சரியான பொருள் கூற இயலாமைக்கும் அதுவே காரணம்.

மேற்கூறிய உரைகள், 'பொறி' என்னும் சொல்லைச் சிலர், 'பொறிகள்' என்றும் சிலர் 'புலன்கள்' என்றும் உரைக்கின்றனர். ஐம்பொறிகள் என்னும் போது, நுகர்வதற்குக் கருவியாக உள்ள கண், வாய் முதலிய ஐந்தினைக் குறிப்பிடுகிறோம்.

ஐம்புலன்கள் என்னும்போது அப்பொறிகளால் நுகரப்படும் உணர்ச்சிகளைக் குறிப்பிடுகிறோம். ஆகவே, ஒரே சமயத்தில் 'பொறி' என்னும் சொல்லுக்குப் 'புலன்' என்று பொருள் கூறுவது எங்ஙனம்? ஆகவே, பொறி என்னும் சொல் இக்குறளில் ஐம்பொறிகளைச் சுட்டாமல், கருவி என்னும் பொருளை மட்டுமே சுட்டுவதாகத் தெரிகிறது. (உதாரணம்; எலிப்பொறி, பொறி இயல் முதலியன நோக்குக).

ஐந்து என்னும் சொல் உணர்ச்சிகளைச் சுட்டாமல், ஐந்து கருவிகளைச் சுட்டும்; ஈண்டு ஆகுபெயராகி உடலைச் சுட்டுகிறது.

வாயில் என்னும் சொல்லுக்கு வழி, கண், என்று பொருள் கூறலாம். கண் என்னும் ஏழனுருபு இடம், மீது முதலிய பொருள்களைத் தரும் என்பது தெளிவு.

ஆகவே, பொறிவாயில் என்பதற்குப் பொருள் **கருவி வழி, கருவி மீது**, என்னும் பொருள் மட்டுமே கிடைக்கிறது.

இனி எக்கருவி வழி? அல்லது எக்கருவி மீது? என்னும் வினா எழும். அவித்தான் என்னும் சொல்லுக்குத் தரப்படும் பொருளை ஏற்றுக்கொண்டால், கருவி மீது ஐந்தை (உடலை) அவித்தவன் (பலியாக்கியவன்) என்னும் பொருள் உண்டாகிறது. இங்ஙனம் தன்னைப் பலியாக்கியவன் உலக வரலாற்றிலே ஒரே ஒருவனே என்பது மறுக்கப்படவியலாத உண்மை. ஆகவே, இப்பொருளின் படி நோக்கும் போது, **கருவி** என்பது அக்காலததில் கொலைக் கருவியாகக் கருதப்பட்ட (சிலுவை என்னும்) கழு மரத்தையே சுட்டும் என்க.

இக்கொலைக் கருவியாகிய சிலுவைமீது அக்காலத்தில் எத்தனையோ பேர் கொல்லப்பட்டனர். ஆனால், தன்னைப் பலியாகத்தந்தவன் ஒருவனே. அவன் காட்டிய நெறியே 'பொய்தீர் ஒழுக்கம்' எனப்படுகிறது.

தன்னையே பலியாக்கினான் என்பதற்கு வரலாறு சான்று கூறுகிறது. 'சான்றாண்மை' பிரிவில் 'துலையல்லார் கண்ணும் தோல்வி கொளல்' என்றுள்ள குறளின் விளக்கம் காண்க.

'பொறிவாயில்' என்பதற்கு அடியில் கூறப்படும் வேறு பொருளும் காண இடமுண்டு.

**பொறிவாயில் ஐந்து**

மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளை மட்டும் ஈண்டுக் குறிப்பிட விரும்பியிருந்தால் 'பொறி ஐந்து' என்று கூறியிருக்கலாம். 'வாயில்' என்னும் சொல்லை ஆண்டிருக்க வேண்டியதில்லை. ஆகவே, பொறிகளை வாயிலாகக் கொண்டு, அதாவது இப்பொறிகள் வாயிலாக எழும் ஐந்து புலன் உணர்வுகளே சுட்டப்படுகின்றன எனக் கூற வேண்டியுள்ளது. அல்லது உம்மை விகுதி தொக்கி நிற்பதாக வைத்துக் கொண்டால் பொறிகளும் (அவற்றின்) வாயில்களும்

என்றாகும். ஆகவே, பொறிகளையும் அவித்தான், வாயில் களையும் அவித்தான் எனப்பொருள் உண்டாகும். இதுவே மிகப் பொருத்தமாகத் தோன்றுகிறது. விளக்குவோம்.

பொறிகள் ஐந்து அவித்தல் என்னும்போது பொறிகள் ஆகு பெயராகிப் பொறிகளுக்கு நிலைக்களனாக உள்ள உடலைக் குறிக்கும்.

வாயில் ஐந்து அவித்தல் என்னும்போது பொறிகள் வாயி லாக எழும் புல உணர்வுகளைக் குறிப்பிடுவதால் 'வாயில்' என்னும் சொல்லையும் ஆகுபெயராகக் கொள்வதில் தவறில்லை.

இனி பொறிகளை அவித்தான் என்னும்போது அவற்றிற்கு நிலைக்களனாகியப் உடலை அவித்தான் — அதாவது தன்னை முழுதும் — 'என்பும் பிறர்க்குரிய'தாக பலியாக்கினான் என்று பொருள் கொள்வது சிறக்கிறது.

வாயில் ஐந்து அவித்தான் என்பதின் பொருள் என்னவாகும்?

'அவி' என்னும் சொல்லுக்கு 'அழித்தல்' என்னும் பொருளுடன் 'பக்குவப்படுத்து' என்னும் பொருளும் உள்ளதை உரையாளர் கூறுவர் — பிந்தியபொருளில் சாதாரண மக்களும் பயன்படுத்துவதை அறிவோம்.

இனி ஐம்பொறிகள் வாயிலாக எழும் புல உணர்வுகளைப் பக்குவப்படுத்துவது எனின் பொருள் என்ன?

இப்பொருளைக் குறள் ஆசிரியரே விளக்குகின்றார். இவ்வைம்புல உணர்வுகளை மனிதன் எளிதில் அடக்கியாள இயலாதவனாய் உள்ளது அனுபவம். இவ்வுணர்வுகளாகிய ஐந்து — அவையாவன :

மெய்யைத் தீண்டுவதால் எழும் இன்ப உணர்வு
வாயினால் சுவைக்கும்போது எழும் சுவை உணர்வு
கண்ணால் காணும்போது எழும் இன்ப உணர்வு
மூக்கினால் மோந்து அனுபவிக்கும் இன்ப உணர்வு
செவியால் கேட்கும்போது எழும் இன்ப உணர்வு

இவ்வைந்து உணர்வுகளும் பெரும்பாலும் ஒரே நேரத்தில் எழுபவையல்ல. ஒன்று ஒரு நேரத்திலும், மற்றொன்று வேறு சமயத்திலும் துய்க்கப்படுவது. ஆனால், இன்பப்பித்தனாகிய மனிதன் ஐந்தையும் கூடுமானால் ஒரே நேரத்தில் துய்க்க விரும்புகிறான்.

இது 'பெண்' இன்பத்தில் கிட்டுவதை அறிந்து அதை மிக விரும்புகிறான். இதையே குறள் ஆசிரியர்,

''கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றுஅறியும்
ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள'' (1101)

என்கிற குறளில் குறிப்பிடுகிறார்.

ஆனால், இதையே ஒருவன் விரும்பி அலையலாகாது என்னும் கருத்தை வலியுறுத்த, இத்தகைய ஐயுணர்வு இன்பம் பயனற்றது என்றும், மெய்யுணர்வை (அதாவது உண்மையான, மேலான, புலன் உணர்வைக் கடந்த இறை உணர்வு) அடைய முயல வேண்டும் என்கிறார்.

''ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு'' (354)

புலன் உணர்வு மயக்கநிலை உண்டாக்குவது என உணர்ந்து கொள்வது முதற்படி போல் உள்ளது. ஆனால், உணர்ந்து கொண்டால் மட்டும் போதாது. அவ்வுணர்வுகள் செல்லும் வழியில் எல்லாம் விட்டு விடாமல் அடக்கல் வேண்டும். இல்லையேல் எளிதாக மனிதனைச் சிற்றின்பப் பித்தனாக்கிவிடும் என்றறிவோம்.

''ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்க லாற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து'' (126)

என்னும் குறளின் கருத்து இதுவே.

இங்ஙனம் அடக்குவது எளிதன்று. நீடிய போராட்டம் தேவைப் படுகிறது.

''அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு.'' (343)

ஐம்புலன்களும் தம்மிலேயே தீயவையல்ல. பல நன்மை களுக்கும் இப்புலன்களே வழியாய் உள்ளதையும் அறிவோம். ஆகவே, அடியோடு தொலைத்துவிடவோ, அழித்துவிடவோ வேண்டும் என்பதன்று கருத்து. அவை செல்லும் போக்கினைத் தெரிந்து கொண்டு அவற்றை ஆளப்பயில வேண்டும். இதுதான் 'வகைதெரிதல்'

''சுவைஒளி ஊறுஓசை நாற்றம்என் றைந்தன்
வகைதெரிவான் கட்டே உலகு''. (27)

இங்ஙனம் வகை தெரிந்து ஆண்டால்தான் உலகின் (தீய) போக்கு மனிதனுக்குக் கட்டுப்படும். இல்லையேல் மனிதன் அப்போக்கினுக்கு அடிமையாவான். இதுவும் அனுபவத்தில் யாம் அறிந்ததே.

இங்ஙனம் அடக்குவதும் போராடுவதும் வகை தெரிந்து ஆளமுயல்வதும் உயிர் உள்ளளவும் நிகழ வேண்டிய தொன்று. அடக்கும் முயற்சியிலும் போராட்டத்திலும் ஆள்வதிலும் நிலையாய் நின்று இறைவனில் தன்னைக் காத்துக்கொள்ள வேண்டும். இவனே வான் வீட்டுப் பேரின்ப வைப்புக்குரியவனா கின்றான். இங்ஙனம் காப்பது அவ்வைப்புக்கு வித்துப் போல் என்க.

''உரன்என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரன்என்னும் வைப்பிற்கோர் வித்து.'' (24)

இறைவன் பொறி ஐந்தும் அவித்தகாலை, மனிதனை எந்நேரமும் அலைக்கழிக்கும் ஐயுணர்வுகளை அடக்கவும் ஆளவும் காத்துக்கொள்ளவும் வழிவகுத்தான் - தன்னை 'அவித்த' போது அந்தப்பலியின் பயனாக மனிதனும் தன் தீய உணர்வுகளைக் கட்டுப்படுத்தி 'அவிக்க' அருள் திறனை சமைத்துக் கொடுத்தான். இதுவே 'ஐந்தை'யும் பக்குவப்படுத்தலாகும்.

பொறிவாயில் ஐந்து அவித்தலுக்கு இப்பொருளே மிகவும் சிறப்பதாகத் தோன்றுகிறது. உணர்வுகளை அழித்தல் இயலாதது மட்டுமன்று, தவறானது. அவற்றைப் பக்குவமாகப் பயன்படுத்துவதே முறையானது.

'அவித்தான்' என்னும் சொல்லுக்கு 'அன்பர்களின் ஐம்புல அவாக்களை அடக்குவித்தவனாகிய 'கடவுள்' என்பது

உரையாளர் சிலர் கூறும் கருத்து. தம் வல்லமையால் அல்லது அருட் செயலால் அடக்குவித்தவன் என்பது பொருந்தலாம். ஆனால், அங்ஙனம் அடக்குவித்தது, தன்னை முதலில் அவித்தே அதாவது பலியாக்கியே என்னும் கருத்து ஈண்டு இல்லை. ஐம்புல அவாக்களை அடக்குவிப்பதும் அங்ஙனம் செய்யத் தன்னைப் பலியாக்குவதும் ஒன்றன்று.

### இறைவன்

இவ்வதிகாரத்தில் 'இறைவன்' என்னும் சொல்லுக்கு இருக்கக்கூடிய பொருள் கவனித்தற்பாலது.

திருவள்ளுவர் காலத்துக்கு முன் கடவுளுக்கு இறைவன் என்னும் பெயர் பயன்படுத்தப்பட்டதாகத் தெரியவில்லை. 'அரசன்' என்னும் பொருளில்தான் அது ஆளப்பட்டதாகத் தெரிகிறது.

இனி, திருக்குறள் கிறித்தவ நூல் என்றதும், அந்நூலில் கிறித்து என்னும் பெயரோ இயேசு என்னும் பெயரோ இல்லையே என்பர்.

கிறித்து என்னும் பெயர் கிரேக்கச் சொல் என்பது பலருக்குத் தெரியாமலிருக்கலாம். மனித வடிவில் உலகுக்கு வருவதாக விவிலியத்தின் தொடக்கத்திலேயே கூறப்பட்டவருக்கு எபிரேய மொழியில் 'மஸியா', மெசியா' என்ற பெயர் இருந்தது. அதற்கு 'அபிஷேகம் செய்யப்பட்டவர் - அரசர்' என்று பொருள். 'கிறிஸ்தோஸ்' என்னும் கிரேக்கப் பெயருக்கும் அதே பொருள் தான். அதை நற்றமிழில் சொல்ல வேண்டுமானால் இறைவன் என்பதுதான் பொருத்தம். இந்தச் சொல்லுக்கு வள்ளுவர் புதுப் பொருளைத் தந்து, கடவுளாகிய அரசன் என்னும் கருத்தை உணர்த்த, இறைவன் என்னும் பெயரை ஆள்கின்றார் என்பதே பொருத்தமாகத் தோன்றுகிறது. அரசியல் பகுதியில் அரசு, வேந்தன் என்னும் பெயர்கள் மட்டும் ஆளப்படுவது கவனிக்க. இறை என்னும் பெயரும் உண்டு. அரசனை இறைவன் என்று ஆங்கு அழைப்பது காணோம்.

இனி முதற்குறளில் காணும் 'அகரமுதல' என்னும் சொற்றொடர்க்கும். 'முதற்றேஉலகு' என்னும் சொற்றொடர்க்கும் பொருள் என்னவென்று ஆய்வோம்.

**'அகர முதல'** ............

'எழுத்தெல்லாம் அகரத்தை முதலாகக் கொண்டிருப்பது போல,' என்கிறார். எந்தப் பொருளில் எழுத்து எல்லாம் அகரத்தை முதலாகக் கொண்டிருக்கின்றன?

அகரமானது வாய்திறந்தவுடன் உண்டாகிவிடும். அஃதாவது வாயிலுள்ள கருவிகள் ஒன்றையும் அசைக்காமலே எழுவதாகும்.

அங்ஙனமே, கடவுள் 'வாய் திறந்தவுடன்' எந்தக் கருவிகளின் துணையும் இல்லாமலே, உலகம் உண்டாகும்படி செய்தார் என்னும் கருத்து ஈண்டு மறைந்துள்ளது.

'வாய் திறந்தவுடன்' என்றால் 'விரும்பியவுடன்' என்று பொருள். கடவுளின் 'வாய்' என்பது அவரது'சொல்'லேயாகும். அதுவும் வாய்ச் சொல் அன்று. மனச் சொல்லேயாகும். அஃதாவது 'விருப்பம்' என்க. கடவுளது விருப்பத்தால்தான் உலகம் உண்டாகியுள்ளது என்பது கருத்து. தானாகவே அன்று; இறைவனின் திருவுள்ளச் செயலால்தான் இவ்வுலகம் ஆகி உள்ளது; இயங்குகின்றது என்பது பொருள்.

இக்கருத்து கிறித்துவ மறை நூலில் பன்முறை குறிப்பிடப் பட்டுள்ளது கவனித்தற்பாலது.

''**அகரமும் னகரமும்** நானே'' என்கிறார் எல்லாம் வல்ல ஆண்டவராகிய கடவுள் (திரு வெளி: 1-8). ''**அகரமும் னகரமும்**, முதலும் இறுதியும் தொடக்கமும் முடிவும் நானே'' (திரு 22:13) என்று கடவுள் :தம்மை **அகரம்** என அழைத்துக் கொள்வது கவனித்தற்பாலது. இந்த **அகரத்தின்** அடிப் படையில் எழும் 'வாக்கெல்லாம்' **அவரேதான்** என்றும் அனைத்துமே உண்டாயின என்றும் விவிலியம் கூறுகிறது.

> ''ஆதியில் வாக்கு இருந்தார்;
> அவ்வாக்கு கடவுளோடிருந்தார்;
> அவ்வாக்கு கடவுளாயுமிருந்தார்;
> அவர் வழியாகவே அனைத்தும் உண்டாயின;
> அவரால் அன்றி எதுவும் உண்டாகவில்லை.
> (அரு. 1, 1-3)''.

ஈண்டு 'வாக்கு' எனும்போது உள்ளத்தினின்று எழும் **உள் வாக்கு** என்றறிக. வாயினின்று சொல் எழுமுன் உள்ளத்தில்-மனத்தில் அது உருவாகின்றதை நாம் அனுபவத்தால் அறிகின்றோம். மனிதராகிய நமக்கு உட் சொல்லும் உண்டு; அதன் பயனாய் எழும் வாய்ச்சொல்லும் உணடு. இறைவனோ எல்லாம் வல்லதாய் உள்ள உட் சொல்லினைத் தம் அடியார்கள் வாயிலாக மக்களுக்கு எடுத்துரைப்பதுண்டு. இதனால்தான் இந்த அடியார்களை **இறைவாக்குரைப்போர்** அல்லது **இறை வாக்கினர்** என்கிறோம்.

திருக்குறள் நூல் 'அ' என்னும் எழுத்தோடு தொடங்கி 'ன்' என்னும் எழுத்துடன் முடிவு பெறுவதும் கவனித்தற் பாலது.)

**முதற்றே உலகு**

'முதல்' என்னும் சொல் திருவள்ளுவர் வழக்காற்றிலும், தமிழ் மொழியிலும்—'வரிசையில் முந்தியது அல்லது தொடக்கம்' (941); முதலீட்டுப் பொருள் அல்லது மூலதனம் (449, 663); காரணம் (948); வேர் மூலம் (1304); இடத்தில் அல்லது காலத்தில் முந்தியது; உயிர்நிலை; செயலுக்குரிய மூலதளம்; மூல ஆதாரம்; அடிப்படை; முழுமை; தலைமை ஆகிய பொருள்களையுடையது. இவற்றுள் இக்குறட்பாவில் 'தலைமை' என்னும் பொருளை உரையாசிரியர் பரிமேலழகரும், மூலம் என்னும் பொருளைக் காலிங்கரும் கொண்டனர். ஆனால், திருவள்ளுவர் இங்கே இச்சொல்லின் எல்லாப் பொருள்களுமே பொருந்தும்படி, எல்லாப் பொருள்களின் தொகுதியாக மூல முதல் அடிப்படை என்னும் தலைமையின் முழுத்திறமே தோன்ற இதனை வழங்கியுள்ளார் என்னல் தகும்.

''வரு குறட்பாக்களில் திருவள்ளுவரின் இறைவன் என்னும் சொல்வழக்கும் இக்குறட்பாவில் ஆதி பகவன் என்னும் தொகை நிலையில் ஆதி என்னும் பெயர் வழக்கீடும் இதனை வலியுறுத்திக் காட்டுவன ஆகும்.''

கா. அப்பாத்துரை, (மணிவிளக்க உரை 1, 169-170). உரைப்படி இறைவன் உலகுக்கு,

1. தொடக்கம்
2. காரணம்

3. வேர் மூலம்

4. உயிர் நிலை

5. மூலதளம்

6. முல ஆதாரம்

7. அடிப்படை

8. தலைமை

என்றெல்லாம் பொருள் விளங்குவது காண்கிறோம். இறைவனையும் உலகையும் ஒப்பிட்டால் இறைவன் உலகுக்கு வரிசையில் முந்தியவர், உலகுக்கு முழுமை தருபவர் என்னும் பொருள்களும் வெளிப்படுதல் காண்கிறோம்.

இனி, மேற்கூறிய சொற்கள் எப்போதும் ஒரே பொருளில் ஆளப்படுபவையல்ல.

(அ) ஆற்றுக்கு ஊற்றுத் தொடக்கம் என்னும் போதும், அறிவுக்கு ஆசான் தொடக்கம் என்னும் போதும் குறிக்கப்படும் பொருள் ஒன்றன்று. முன்னைய கூற்றில் ஆற்றிலும் ஊற்றிலும் ஒரே பொருள் அஃதாவது நீர் காணப்படுகிறது. பின்னையதிலோ மாணவனின் அறிவுக்கு ஆசானின் செயல் தொடக்கம் என்னும் பொருள் மட்டுமே அமைகின்றது. மாணவன் அறிவும் ஆசான் அறிவும் ஒன்றே என்னும் கருத்து ஆங்கில்லை.

'உலகின் தொடக்கம் இறைவன்' எனின், உலகும் இறைவனும் ஒன்று எனவோ, உலகின் நிலையும் இறைவனின் நிலையும் ஒன்று எனவோ, உலகத்துள்ளதும் இறைவனிடத்துள்ளதும் (ஊற்றிலும் ஆற்றிலும் உள்ள நீர் போல) ஒன்று என்றோ பொருள்பட வியலாது. பின்னைய உவமையில் கூறப்பட்டதுபோல் இறைவனின் (தொடக்கச்) செயலால் உலகம் உள்ளது என்றே பொருள் படவேண்டும்.

**(ஆ) காரணம்**

'குடத்துக்கு மண் காரணம்' என்னும் போது முதற்காரணம் சுட்டப்படுகிறது. மண் இன்றிக் குடம் என்பது இல்லை.

'குடத்துக்குத் திரிகை' முதலியன காரணம் என்னும் போது, துணைக்காரணம் சுட்டப்படுகிறது. மண் இருந்தும் திரிகையின் றேல் குடம் வனைவது இயலாத காரியம்.

'குடத்துக்குக் குயவன் காரணம்' என்னும்போது நிமித்த காரணம் அல்லது கருத்தா சுட்டப்படுகிறது. மண் இருந்தும், திரிகையிருந்தும் குயவன் இன்றேல் குடம் இல்லை!

இனி, 'உலகுக்கு இறைவன் காரணம்,' என்னும்போது புரிந்துகொள்ளவேண்டிய கருத்தென்ன? மேற்சொன்ன 'முதற் காரணமும்' அன்று, துணைக்காரணமும் அன்று. ஈண்டு கூறப் படும் பொருளில் 'நிமித்த காரணமும்' அன்று. ஏனெனில், 'இந்நிமித்த காரணம்' அநாதியாகவே உள்ள வேறு பொருட் களை (பசு, பாசத்தை) அசைப்பவன் ஆவான். யாம் கூறும் காரணனோ, 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்னும் பொருளில் மட்டுமன்று, 'அவனன்றி ஓரணுவுமே இராது' என்னும் பொருளில் அனைத்திற்கும் காரணன் ஆவான்.

குடத்துக்கு மண் போலவோ, திரிகை போலவோ இறைவன் உலகுக்குக் காரணன் அல்லன். மண் இன்றியும், திரிகையின்றியும், அஃதாவது முதற்காரணம், துணைக்காரணம் எதுவுமின்றித் தன் சொந்த வல்லமையால் நினைத்த மாத் திரத்தில் எல்லாம் உளதாக்க இயலும். 'தனக்குவமையில்லாத' இறைவனுக்குரிய அளவில்லாப் பண்பின் தன்மையே அது. அளவுள்ள பண்பினனாகிய மனிதனுக்கே (இறைவனுக்குக் கீழ்ப் பட்ட எவ்வுயிருக்குமே!) முதற்காரணமும், துணைக்காரணமும் தேவைப்படும். இறைவனோ உலகின் முதற்காரணங்களையும், தனக்குக் கீழ்ப்பட்ட கருத்தாக்களுக்குத் தேவைப்படக்கூடிய கருவிகளையும் (துணைக்காரணங்களை) உளவாக்க வல்லமை படைத்தவன்.

ஆகவே, உலகுக்குச் காரணம் இறைவன் என்னும்போது முதற்காரணமோ, துணைக்காரணமோ இன்றி மேற் கூறிய பொருளில் அதற்கு முழுக்காரணமாய் உள்ளான் இறைவன் என்பது பொருள். ஏற்கெனவே உள்ள முதற்காரணங்களையும், வேறு கருவிகளையும் பயன்படுத்தி உலகை உருவாக்கினவன் என்பதன்று பொருள்.

'இல்லாதது தோன்றாது' என்று தடை கிளம்பலாம். அதாவது, முன்பே முதற்காரணம் இல்லையெனின் உலகு தோன்றுமாறில்லை என்பர். இது இறைவனுக்குக் கீழ்ப்பட்ட கருத்தாக்களின் செயலுக்குப் பொருந்தும். தனக்குவமையில்லாத

இறைவனுக்குப் பொருந்தாது. இறைவனும் பிற கருத்தாக் களைப் போலவே ஏற்கெனவே உள்ள (அநாதியாக உள்ள) முதற்காரணங்களைப் பயன்படுத்தியே செயல் புரிய வேண்டு மாயின், அவன் 'தனக்குவமை' யில்லாதான் ஆவது எங்ஙனம்?

### (இ) வேர்மூலம்-உயிர்நிலை

செடிக்கு வேர் இருப்பது போல, உலகுக்கு இறைவன் இருக் கின்றான். வேரும் செடியும் ஒரு தன்மைத்தானவை. இங்ஙனமே இறைவனும் உலகும் ஒரு தன்மைத் தானவன் என்பது பொருளா? அற்றன்று. வேரினின்று செடிக்குச் சாரம் பரவவில்லையேல் செடி வளராது காய்ந்து விடுவதுபோல், இறைவனாகிய வேரினின்று செடியாகிய உலகுக்கு—உயிர் களுக்கும் சரி, பிற உயிரற்ற பொருள்களுக்கும் சரி—வல்லமை பரவவில்லையேல் உயிர்கள் மாய்ந்து விடும். பிற பொருட்களும் நிலை குலைந்து அழிந்துவிடும் என்பதே கருத்து.

இறைவனது வல்லமை மிக்க செயலால்தான் உயிர்கள் வாழ்கின்றன; உயிரற்ற பொருட்கள் நிலைபெறுகின்றன என்னும் கருத்தில் உலகுக்கு இறைவன் வேர் மூலம் என்னலாம் அன்றோ? இதே கருத்தில் உயிர்களைக் குறிப்பிட்டு, இறைவன் உயிர்களுக்கெல்லாம் 'உயிர்நிலை' என்றும் கூறலாம். உயிர்கள் நிலைபெற இறைவனின் ஆற்றல் இன்றியமையாதது என்பதே பொருள்.

### (ஈ) மூலதளம்—மூலாதாரம்—அடிப்படை

வீட்டுக் கூரையைத் தூண்கள் தாங்கி நிற்கின்றன. அடித் தளம்—அடிப்படை வீட்டைத் தாங்கி நிற்கின்றது. கூரைவேறு —தூண்கள் வேறு — அடித்தளம் வேறு. ஒன்றையொன்று தாங்குகின்றன; ஒன்றுக்கொன்று ஆதாரம்.

இறைவனோ — அனைத்திற்கும் — உலகுக்கெல்லாம் — ஆதாரம்—அடிப்படை — அவனன்றி எதுவும் நிலைபெறாது — நில்லாது — வீழ்ந்துபடும் — ஒழிந்துவிடும்.

### (உ) தலைவன்

தலைவன் பணியாட்களை ஏவுகிறான்; இயக்குகிறான். தந்தை மக்களை வளர்க்கிறான்; நன்மை நோக்கி நடத்து

கிறான். இறைவன் உலகை இயக்குகிறான்; நடத்துகிறான்; ஆள்கிறான்; ஆட்கொள்ளுகிறான். ஆகவே, இறைவன் உலகுக்குத் தலைவன்; சுருங்கக் கூறின்:

அறிவுக்கு ஆசான் தொடக்கமாய் உள்ளதுபோலவும், குடத்துக்குக் குயவன் நிமித்த காரணமாய் உள்ளதுபோலவும், இறைவன் உலகுக்கு முதலாய் உள்ளான் என்க. அஃதாவது, ஆற்றுக்கு ஊற்றுத் தொடக்கமாய் உள்ளது போல் அன்று என்பது கருத்து.

இனி, வள்ளுவர் உலகுக்கு முதல், இறைவன் என்பதை விளக்கப் பயன்படுத்தும் உவமை 'எழுத்தெல்லாம் அகரமுதல்' என்பதாம். எழுத்துகளெல்லாம் அகரத்தை முதலாகக் கொண்டிருப்பது போல், உலகம் இறைவனை முதலாகக் கொண்டிருக்கின்றது என்பது கருத்து. எழுத்துகள் அகரத்தை முதலாகக் கொண்டிருப்பது எப்பொருளில்? மேற்கூறிய எட்டுப் பொருள்களுள் பொருத்தமானது எது? வரிசையில் முதலானது என்னும் பொருள் மட்டுமே பொருந்துவதாகத் தோன்றுகிறது. இப்பொருள் எங்ஙனம் இறைவனுக்குப் பொருந்தக்கூடும்? உலகப் பொருள்களின் வரிசையில் இறைவன் முதல் என்றாகுமா? வரிசை என்பது சமமான பொருள்களைக் கொண்டதாயிருக்கலாம்; வரிசையில் பின்வரும் பொருள்களைவிட வலிமையும் பெருமையும் படைத்ததாகவும் இருக்கலாம். உதாரணமாகப் புகைவண்டித் தொடர் வரிசை முதலில் இருப்பது இயக்கும் பொறி (Engine). இதுவும் அடுத்து வரும் பெட்டிகளுடன் சமமானது அன்று என்பது தெளிவு. பொறியின்றிப் பெட்டிகள் அசையா! வரிசையில் முதலில் உள்ள இது பின்வரும் பெட்டிகளைவிட வலிமை மிக்கது; பெருமை மிக்கது. வண்டித் தொடர்க்கு உயிர்நிலை, ஆதாரம் போன்றது. இப்பொருளில்-தான் இறைவன் உலகுக்கு அகரமாக உள்ளான், என்னலாம். ஆனால், இப்பொருளில் மட்டும்தானா?

அகரமானது வாய் திறந்தவுடன் உண்டாகிவிடும்; அஃதாவது வாயிலுள்ள கருவிகள் ஒன்றையும் அசைக்காமலே எழுவதாகும்.

2. ''கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்''

பொய்தீர் ஒழுக்க நெறியைக் கற்பிக்குமாறு நூலை இயற்றத் தொடங்கிய ஆசிரியர், தொடக்கத்திலேயே நூலைக் கற்பதால் அடைய வேண்டிய பயன் எதுவாயிருத்தல் வேண்டும் எனக் கூறு கிறார்.

'வாலறிவன் நற்றாள் தொழ' வைப்பதே அப்பயன் என்கிறார். 'தொழாஅர் எனின் பயன் என் கொல்' என வினவு கின்றார்.

முதற்குறளில் உலகுக்கெல்லாம் அகரம் போன்றுள்ளவனை 'ஆதிபகவன்' எனக் குறித்தவர், அவனை 'வாலறிவன்' என்று கூறுகிறார்.

வாலறிவு — பேரறிவு, ஞானம்.

மனிதனின் அறிவெல்லாம் அறியாமையோடு கலந்த சிற்றறிவு. ஆதிபகவன்-உலகுக்கு ஆதி குருவாக வந்தவனின் அறிவு அறியாமையோடு சிறிதும் கலப்பில்லாத நிறையறிவு-தூய அறிவு, மாசற்ற அறிவு. ஆகவே, வாலறிவன் என்பதை **அறிவே உருவானவன்** எனினும் பொருந்தும்.

ஆதிபகவன் — ஐந்தவித்தான் — இறைவன் என இவ்வதி காரத்தில் குறிக்கப்படுபவன் (கிறிஸ்து) அறிவே—ஞானமே வடிவானவன்; எல்லா வல்லமையுமுள்ளவன் என்பது விவிலியக் கூற்று. இந்த ஞானத்தின் தன்மையை விவிலியம் பின் வருமாறு வருணிக்கின்றது:

''ஆகையால் நான் மன்றாடிக் கேட்டேன்; எனக்கு அறிவு வழங்கப்பட்டது. கடவுளிடம் வேண்டிக் கொண்டேன்; ஞான உணர்வு எனக்குக் கிடைத்தது. ஞானத்தில் குடிகொண்டுள்ள ஆவி அறிவுடையது; பரிசுத்தமானது; ஒரு தனித் தன்மைத்து; பல்வகை செயல்வன்மை வாய்ந்தது; நுண்மையானது; இயக்கு மாற்றல் வாய்ந்தது; தெளிவுமிக்கது; மாசுபடாதது; திண்ண மானது; இனிமையானது; நன்மையை விரும்புவது; கூர்மை யானது; எதிர்க்க முடியாதது; நன்மை செய்வது; மனிதர் மேல் பரிவுள்ளது; நிலைபெயராதது; அசையாதது; கவலையில் லாதது; எல்லாம் வல்லது; எல்லாவற்றையும் பார்வையிடுவது; அறிவும் தூய்மையும் நுண்மையும் கொண்ட எல்லா உள்ளங் களையும் ஊடுருவிச் செல்வது. ஞானம் அசைவுகளிலெல்லாம்

மிக விசையானது. அதன் தூய்மையின் காரணத்தால் எல்லா வற்றிலும் நிரம்பி நிற்கிறது; எல்லாவற்றையும் ஊடுருவிச் செல் கிறது. அது கடவுளுடைய வல்லமையின் ஆவி; எல்லாம் வல்ல வரது மகிமையொளியின் தூயசுடர்; ஆதலால், மாசுள்ளது எதுவும் அதற்குள் நுழைய முடியாது. அது முடிவில்லா ஒளியின் எதிரொளி. கடவுளுடைய வேலைத்திறனின் கறைபடியாக் கண்ணாடி; அவருடைய நன்மைத்தனத்தின் சாயல். அது தனித்து நிற்பினும், அனைத்தையும் செய்ய வல்லது. தான் மாறாமல் நிலைத்திருந்து, அனைத்தையும் புதுப்பிக்கிறது. ஒவ்வொரு தலைமுறையிலும் பரிசுத்த ஆன்மாக்களில் நுழைந்து அவர்களைக் கடவுளின் நண்பர்களாகவும் இறைவாக்கினர் களாகவும் ஆக்குகிறது. ஞானத்தோடு வாழ்கிறவனுக்கு அன்பு செய்வதைவிட வேறெவனுக்கும் கடவுள் மிகுதியாய் அன்பு செய்வதில்லை. ஏனெனில், ஞானம் கதிரவனைவிட அழகு வாய்ந்தது; விண்மீன் கூட்டங்களைவிடச் சிறப்பு மிக்கது. ஒளி யோடு ஒப்பிட்டால் ஞானமே மேலானது. ஏனெனில், ஒளிக்குப் பின் இருள் சூழ்கிறது. ஆனால் தீமை ஒருபோதும் ஞானத்தை மேற்கொள்ளாது.'' (ஞானாகமம்-7,7-22-30).

இத்தகைய ஞான வடிவினன் தாளைத் தொழச் செய்வதே நூலைக் கற்றதன் முழு நோக்கம் என்றவாறு.

3. ''மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்''

இதயத்தைக் கமலத்துக்கு ஒப்பிடுவது வழக்கு. இவ் வழக்கைப் பின்பற்றி மனித இதயமாகிய கமலம் (மலர்) மீது 'ஏகினான்'; அதாவது, சென்று உறைபவன் (அவனது இதயத் தையே உறைவிடமாகக் கொள்பவன்) மாண்பு மிக்க திருவடி களைச் சேர்ந்தவரே நிலத்தின் மீது நீடுவாழ்வார். இதுவே பொதுவாகத் தரப்படும் பொருள்.

உலகக்குரவர்கள் மாணவர்க்குப் புறம்பே இருந்து கொண்டு தான் போதிக்க வல்லவர். மாணவருடைய இதயத்தில் நுழைந்து அதன் மீது ஏகுபவராய்—உறைபவராய் போதிக்க இயலாதவர். வள்ளுவர் கூறும் ஆதிபகவனாகிய வாலறிவன் மனிதனின் இதயத்தே உறைபவனாகி, உள்ளிருந்தே அறிவு (ஞானம்) புகட்டக் கூடியவர். இத்தகைய அறிவைப் பெற

அவனது திருவடிகளைப் பற்றிக் கொள்ளுதல் வேண்டும். இத்தகைய உள்ளம், ஒளி மிகு அருள் **அறிவுமேவும்** அவனது திருவடிகளைப் பற்றிக் கொள்ளுவதே மனிதனுக்கு நீடுவாழ்வை அளிக்க வல்லது என்கிறார்.

இக்குறளில் 'நிலமிசை' என்றது இவ்வுலகமாகிய நில உலகைக் குறிப்பதாகத் தோன்றவில்லை. ஏனெனில், இந் நிலவுலகு நிற்பதன்று. நீடுவாழ்வு என்பது முடிவற்ற நிலையான வாழ்வாகும். நிலையற்ற நிலவுலகில் நிலையான நீடு வாழ்வு பெறுவதென்பதில் பொருள் இல்லை. ஆகவே, 'நிலமிசை' என்றதில் **நிலம்** என்னும் சொல்லுக்கு நிலைத்து நிற்கும் நிலம் என்னும் பொருளே சிறக்கிறது.

'மலர்' என்னும் சொல்லுக்குப் பொதுவாகக் கூறப்படும் பொருள் பொருத்தமே எனினும் இதற்கு வேறு பொருள் இருக்கக் கூடுமோ என்னும் ஐயப்பாடும் எழுகின்றது.

திரு.வி.க. அவர்கள் இயேசுவைக் 'கன்னிவழி மலர்ந்த கற்பகமே' என அழைக்கின்றார். மற்றெல்லா மனிதப்பிறவிகள் போல ஆண் உதவியுடன் பெண் வயிற்றில் கருவாகிப் பிறக்க வில்லை ஐந்தவித்தான். வீரமாமுனிவர் கூறுவது போல 'உருவில்லான் உருவாகிக் கருவில்லாக் கருத்தாங்கி உலகில் ஒரு மகவுதிப்பக் கன்னித் தாயானாள்.' இக்கன்னி, கன்னிமை குன்றாமலே தாயானாள் என்பது விவிலியப் படிப்பினை. 'கன்னிவயிற்றின் கனி' என்றே விவிலியம் கூறுகின்றது.

மற்றெல்லாத் தாய்மார்கள் போல் வேதனையோடு பெற் றெடுக்காமல், மிக அற்புதமாய்ப் பிறந்ததையும், 'இறைவனின் ஆவி உன் மேல் நிழலிடுவார்' என்று கூறப்பட்டதையும் குறிப் பிட்டு 'மலர் மிசை' எனச் சொல்லப்பட்டதோ என ஓர் ஐயம் ஏற்படுகிறது. ஈண்டு 'மலர்' என்றது வாடாத கன்னிமையைக் குறிப்பிடலாம் என்பது எம் துணிபு. இயற்கை நியதிப்படி, பிள்ளைப்பேறு கன்னிமை வாடிப்போன நிலையில்தானே நிகழ் கிறது!

4. ''வேண்டுதல் வேண்டாமை இலானடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல.''

'வேண்டுதல் வேண்டாமை இலான்'—என்பதற்கு 'விருப்பு, வெறுப்பு' இல்லாதவன் என்று பொதுவாகப் பொருள் கூறப் படுகிறது.

பகுத்தறிவுள்ள மனிதனுக்கு விருப்பு, வெறுப்பு—ஒன்றை விரும்புதல், ஒன்றை—வெறுத்தல்—இருந்தேயாக வேண்டும். 'விருப்பு வெறுப்பு இருத்தலாகாது' என்பதே ஒரு விருப்பு அன்றோ? ஒன்றை அறிதல், அறிந்தபின் அதை விரும்புதல் அல்லது வெறுத்தல் இதுவே பகுத்தறிவு என்பது. பகுத்து — கண்ணை மூடிக்கொண்டு எதையாவது விரும்புவது அல்லது பிரித்து அறிவது. வெறுப்பது என்றிருந்தால் அங்கே பகுத்தறிவு இருக்கவியலாது. அங்ஙனமிருக்கப் பகுத்தறிவு மட்டுமன்று, இரண்டாம் குறளில் கூறியவாறு அறிவே உருவான ஆதி பகவன் — உலக முதல் குருவுக்கு எங்ஙனம் விருப்பு வெறுப்பு எதுவும் இல்லாமலிருக்கவியலும்? ஆகவே, குறளின் பொருள் இது அன்று என்பது தெளிவு.

இச்சொற்றொடரின் பொருளை ஐந்தவித்தானாக வந்தவனின் வரலாற்றுப் பின்னணியிலிருந்து உணர்தல் வேண்டும்.

**பின்னணியாவது**

உலகில் மக்களினத்தார் பலர் இருக்க, கடவுள் ஆதியில் யூத இனம் ஒன்றை மட்டும் தேர்ந்து கொண்டு, அந்த இனத்தின் வாயிலாகவே உலகுக்கு மீட்பு வரவேண்டுமெனத் திட்டமிட்டார் என்பது விவிலியக் கருத்து. யூதர் என்ற ஓரினம் மட்டுமே வேண்டும்—மற்ற எவ்வினமும் வேண்டியதில்லை என்பதன்று இதன் கருத்து.

அடுத்த குறளில் கூறப்படும் இருள் சேர் இருவினைகளுள் ஒன்றாகிய ஆதிவினையின் விளைவாக மனித இனம் ஓரிடத்தை விட்டுச் சிதறிப் போயிற்று. தம் விருப்பம் போல் தெய்வங்களைப் படைத்துக் கொண்டு தீவினை மலியுமாறு வாழத் தொடங்கினர். இந்நிலையில் சுமார் 4000 ஆண்டுகளுக்கு முன்பு குறிப்பிட்ட ஒருவரைத் (அப்ரஹாம் என்பவரை) தேர்ந்து கொண்டு அவர் வம்சத்தினரை, வரவேண்டிய உலக மீட்பருக்காகத் தயாரித்தார். தற்காலிகக் கருவியாக அவ்வினத்தாரைப் பயன்படுத்தினார் எனலாம். திட்டத்தின்படி மீட்பர் (ஐந்தவித்தான்) உலகுக்கு வந்தபின் யூதர் என்ற ஓர் இனம்

மட்டுமன்றி, உலகின் எல்லா இனத்தாருக்குமே மீட்பு உண்டு என அறிவித்தார். இது விவிலியத்தில் பன்முறை கூறப்படுகிறது. உதாரணத்துக்கு: ஆதியாகமம் 12;1-3; அப். பணி-10 அதிகாரம் முழுவதுமே.

சிறப்பாகப் பின்வரும் பகுதிகளைக் காண்க;

சுருக்கமாகப் பின்வரும் வசனங்களைக் காண்க:

''கடவுள் மனிதர்களிடையே வேற்றுமை பாராட்டுவதில்லை என்பதை இப்போது மெய்யாகவே உணர்கிறேன்.'' (அப். பணி 10-34).

''இத்திருவருட் செயல்முறை இயேசு கிறிஸ்துவின் மேல் வைக்கும் விசுவாசத்தின் வழியாய்ச் செயலாற்றுவதாகும். விசுவாசிக்கும் அனைவருக்காகவுமே இது செயலாற்றுகிறது. இதில் இன வேறுபாடே இல்லை. ஏனெனில், எல்லாருமே பாவம் செய்தனர்; எல்லாருமே கடவுளது மாட்சிமையின் சாயலின்றி உள்ளனர்'' (உரோமர் 3: 22-23).

ஆகவே, உலக மக்களினத்தார் அனைவருக்குமே இனிமீட்பு உண்டு. அருள் உதவி உண்டு என்னும் கருத்தில் இங்கு 'வேண்டுதல் வேண்டாமை இலான்' எனக் கூறப்பட்டுள்ளது என்பது எம் துணிபு.

'யாண்டும் இடும்பை இல,' என்னும் சொற்களிலிருந்தும் இக் கருத்து புலப்படும். தமக்கு வேண்டியவர் வேண்டாதவர் என்னும் பாகுபாடு இருப்பின் இறைவன் தமக்கு வேண்டியவர்க்கு மட்டுமே அருள் செய்வான்; வேண்டாதவரை விலக்கி விடுவான். ஆனால், இத்தகைய பாகுபாடில்லாதவனாதலால் அவனை நம்பி அவனடி சேர்ந்தார் யாராயிருப்பினும், எவ்வினத்தவராயினும் அனைவர்க்கும் இடும்பை நீக்கி அருள் புரிவான் என்றவாறு.

இங்ஙனம் அவன் தரும் அருளைப் பெற்றுக் கொள்ள விரும்பாதவன், அவன் தரும் மீட்பை ஏற்றுக் கொள்ளாதவன் யாராயிருந்தாலும் அவனுக்குத் தண்டனை உண்டு என்னும் பொருளும் இக்குறளில் மறைந்துள்ளது. இறைவன் அளவிலா இரக்கமுடன் எப்பாவத்தையும் நீக்க வல்லவன். அதே சமயத்தில் அளவிலா நீதி நேர்மையுடன் செயலாற்றுபவன். 'அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை' என்றது இவ்வருளைப் பெற விரும்பாமல்

இருள் சேர் ஆதிவினையையும் தானே செய்யும் தீவினையையும் அருட் சக்தியால் நீக்கி விடாமல் அந்நிலையிலேயே ஒருவன் உலக வாழ்க்கை நீப்பானாயின், அவன் யாராயிருந்தாலும் நீதி யுடன் தீர்ப்புப் பெறுவான் என்றவாறு.

5. ''இருள் சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு'.

இக்குறளில் இருவினை என்பன-நல்வினை, தீவினை என்பவை என்று கூறுவர் உரையாளர். தீவினை இருள் சேர்க்கும் என்றால் பொருந்தும். நல்வினையும் இருள் சேர்ப்பதாயிருந்தால் எவ் வினையும் செய்யாதிருத்தல் வேண்டுமென்றாகும். எவ்வினையும் செய்யாதிருப்பது நன்மை தீமை அறியவும் நன்மையைச் செய் யவும், தீமையைத் தவிர்க்கவும் தக்க வகையில் படைக்கப்பட்ட பகுத்தறிவுள்ள மனிதனுக்கு எங்ஙனம் பொருந்தக் கூடும்? (முந்திய குறளிலும் இது கூறப்பட்டது).

ஆக, இருவினை என்பவை வேறு வினைகளாயிருத்தல் வேண்டும். இவ்விரு வினைகளும் 'இறைவனது பொருள் சேர் புகழ் புரிபவர் மாட்டுச் சேரா' என்று குறிப்பிடப்பட்டுள்ளதை உன்னிப்பாகக் கவனித்தல் வேண்டும். அப்புகழ் புரியாதவர் மாட்டுச் சேரும் என்றவாறு. ஈண்டு மறைந்திருக்கும் கருத்து விவிலியத்திலிருந்து அறியலாம். மனித இனத்தை இறை வன் படைத்தது அவனது உண்மையான, பொருள் சேர்ந்த புகழைப் புரியவே என்பதும், அப்புகழை அவர்கள் புரியவில்லை என்பதும் விவிலியம் கூறும் கருத்துகளுள் முதன்மையானது. இது பன்முறை கூறப்படுகிறது; எளிதாக அறிந்து கொள்ளலாம்.

உதாரணமாக,

''கட்புலனாகாத அவருடைய பண்புகளும், அவருடைய முடிவில்லா வல்லமையும், கடவுள் தன்மையும் உலகம் உண்டானது முதல் அவருடைய படைப்புகளிலேயே அறிவுக்குப் புலனாகின்றன. ஆகவே, அவாகள் சாக்குச் சொல்வதற்கு வழி யில்லை. ஏனெனில், அவர்கள் கடவுளை அறிந்திருந்தும், கடவுளுக்கு உரிய **மகிமையை அவருக்கு அளிக்கவுமில்லை;** நன்றி செலுத்தவுமில்லை; மாறாக, தங்கள் வீணான சிந்தனைகளில் அறிவிழந்தனர்.'' (உரோ. 1:20-21).

“அவர் தம் திருவுள விருப்பத்திற்கேற்ப, தம் அன்பு மகனுக்குள் நமக்கருளிய அருளின் மாட்சிமை புகழ் பெற்று விளங்க, இயேசுகிறிஸ்துவின் வழியாகவே, நம்மைத் தம் பிள்ளைகளாக்கிக் கொள்ள அன்பினால் நம்மை முன் குறித்து வைத்தார்.” (எபேசி. 1:5-6).

“தம் திருவுளக் கருத்திற்கேற்ப அனைத்தையும் செய்து முடிக்கும் இறைவனின் திட்டப்படி, முன் குறிக்கப்பட்ட நாங்கள் கிறிஸ்துவுக்குள்ளே பங்கு பெற்றுக் கொண்டோம்.

இவ்வாறு கிறிஸ்துவின் மேல் முதன் முதல் நம்பிக்கை வைத்த நாங்கள் தம்முடைய மாட்சிமைக்குப் புகழ்ச்சியாய் விளங்க வேண்டுமென இறைவன் விரும்பினார்.” (எபேசி. 1:11-12).

## வேறு பல சான்றுகளும் உண்டு

எல்லாப் புகழுக்கும் முற்றும் உரிய பொருள் சேர்ந்த அப்புகழினைப் புரியாமல் ஆதிப்பெற்றோர் பொருளற்ற தம் புகழையே புரிய விரும்பினர்.

பேய்க்கும் ஆதிப்பெற்றோர்க்கும் இடையே நிகழ்ந்த உரையாடல் ‘அன்பு’ என்னும் பிரிவில் காண்க:—

அருள் பெற்றிருந்த அவர்கள் உள்ளங்களில் இருள் கவிழ்ந்தது. ‘இருள் சேர்ந்த இன்னா உலகம் புகல்’ என்னும் நிலை ஏற்பட்டது. அருளிழந்த அந்நிலையே **ஆதி வினை எனப்படுகிறது.** இது முதல் வினை. இவ்வினையின் விளைவாக மனித சந்ததியனைத்திற்கும் அறியாமை, அருளுக்கு மாறான இருள் படர்ந்த உள்ளம், அன்புக்கு மாறாக வன்பு மனம் ஏற்படலாயின. இந்நிலையின் காரணமாக மனித சந்ததியின் உறுப்பினன் ஒவ்வொருவனும் எளிதாகத் தீவினை இழைக்கலானான். விவிலிய சரிதையும், மற்றும் உலக வரலாறு முழுவதுமே மனித இனத்தார் ஓயாமல் செய்து வந்த—இன்னும் செய்து வருகின்ற பலவிதத் தீவினைகளின் வரலாறாக மாறிற்று. இங்ஙனம் அவனவன் செய்யும் தீவினையே இருள் சேர் இருவினைகளுள் இரண்டாவதென்க.

ஆதியில் நிகழ்ந்த இந்தப் பெரும் குற்றத்தை, 'இறைவன் சொற்கேளாமல் நாமும் கடவுளைப் போலாகலாம்.' என்று எண்ணிய அந்த ஆணவச் செயலினின்று நீங்க வேண்டும். தம் குற்றம் உணர்ந்து பொருளற்ற—சாரமற்ற தற்புகழை (மனிதன் இதைப் பெரிதும் விரும்புகிறவன் அன்றோ!) விடுத்து மாந்தர் சிறப்பாகிய நாணுடைமை (குறள் 1011) யால், மீண்டும் இறைவன் அருள் பெற்று வாழவியலும். இருள்சேர் அவ் ஆதி வினையின் விளைவாக விஷக்கொடுக்குப் போன்றதொரு தீய சக்தி, மனித சந்ததி அனைத்தையும் ஆன்மீகத்தில் 'கொட்டிக்' கொண்டே இருக்கின்றது. அதனால் ஒவ்வொரு மனிதனும் தீவினைக்காளாக நேரிடுகிறது. அதை வெல்ல அவனிடத்தில் அருள் வலிமையில்லை. இறைவன் புகழை முழுமூச்சுடன் புரிய முயன்றால் இரண்டாவது வினையாகிய தன் பாவச் செயல்களும் சிறிது சிறிதாகக் குறைத்துக் கொள்ள இயலும். இக்கருத்தைப் பின்வருமாறு விவிலியம் கூறுவது காண்க:-

> ''சாவே உன் வெற்றி எங்கே? சாவே உன் கொடுக்கு
> எங்கே? பாவமே சாவின் கொடுக்கு; ஆனால் நம்
> ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் வழியாய்
> நமக்கு இந்த வெற்றி தரும் கடவுளுக்கு நன்றி.''
>
> (1 கொரி. 15:55-57).

இறுதியில் இருவினையின் மீதும் வெற்றி உண்டு. இறைவனது பொருள் சேர் புகழ் புரிந்தால் எனக் கூறப்படுவது கவனிக்க. 'இருவினையும் சேரா' என்பதால் குறிக்கப்படுவது, சேர்ந்தாலும் அவற்றின்மீது வெற்றி பெற இயலும் என்பதே.

6. ''பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்''

இக்குறளுக்கு முழுவுரை {'ஐந்தவித்தான்' என்னும் பிரிவில் காண்க.

7. ''தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது.''

ஆதி பகவனாகிய இறைவன் சிலுவை எனும் கழுமரத்தில் (பொறி வாயில்) ஐந்தவித்தானாகி (பலியாகி) அவல மரணம்

அடைந்ததை நோக்குங்கால், இவர் எங்ஙனம் எல்ல வல்லமையும் படைத்தவராயிருக்க வியலும்? கடவுளாயிருக்கா வியலுமா? கடவுள் தனக்குவமை யில்லாதவனாயிற்றே என்னுக ஐயப்பாடுகள் உண்டாகும்.

'நீத்தார் பெருமை' அதிகாரத்தின் விளக்கம்: இங்ஙனம் கழுமரத்தில் பலியானது, உலகில் ஒழுக்கத்தை நிலை நிறுத்தவும், இருமை வகை தெரிந்தவராய் அறம் பூண்டு உலகினர்க்குப் பொய்தீர் ஒழுக்கநெறி காட்டவுமே தமக்கு இயல் பாய் உள்ள தெய்வீக வல்லமையையும், மாண்பினையும் தம் கருத்து நிறைவேறும் வரை நீத்தவராகி - துறந்தவராகித், தம் மாண்பை மறைத்து வல்லமை இழந்தவர் போல் காட்சி யளித்தார். இசை. 53 அதிகாரம் முழுவதும் வாசிக்க. மனித இனம் படும் துன்பங்கள் கவலைகள் அனைத்தையும் தம் மீது சுமந்து கொண்டார் என்பதை அது விளக்கும்.

''ஆகவே, மனிதன் படும் கவலைகளை நீக்க அவரால் இயலும். இதற்காகவே துன்பம் அனைத்தையும் தாமே முதலில் சுவைத்தார்.'' (எபிரே......5:7-9).

ஆகவே, வலிமையற்றவன் போல் வெளிப்படையாகக் காட்சியளித்தாலும் அவன் தனக்குவமையில்லாதவனே. அவன் திருவடி சேராவிட்டால் நம் கவலைகளைத் தீர்ப்பது இயலாத தாகும்.

8. ''அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறஆழி நீந்தல் அரிது''

''இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டவரை இக்குறள் அறவாழி எனக் குறிக்கின்றது. 'அறக்கடல்' என இறைவனைக் குறிக்கின்றார் வீரமாமுனிவர். கடல் போன்று அளவிட முடியா அறத்தையே வாழ்வாகக் கொண்டவன் என்பது கருத்து.

'அந்தணர்' என்போர் வள்ளுவர் காலத்தில், (இக் காலத்திலும் கூட) ஆரியப் பிராமணர்க்கு வழங்கப்படும் பெயர். திருவள்ளுவர் இச்சொல்லுக்குப் புதுப்பொருள் தருகின்றார். அம்-தண் — அன் = அதாவது, அழகிய தண்ணருளையே உருவாகக் கொண்டவன் என்றவாறு,

'பிறவாழி' என்னும் சொற்றொடர்க்கு உரையாளர், பிறவி யாகிய ஆழி, கரை காணாத கடல்-முடிவு காணவியலாத பிறவி என்று பொருள் கூறுவர்.

பிறவி-ஆழி-பிறவாழி என்று புணர்வதற்கில்லை. (மேலும் வள்ளுவர்க்குப் பிறவிச் சுழற்சிக் கொள்கை ஏற்புடையதன்று-என்பது வேறிடத்தில் விளக்கப் பெறும்)

பிறவாழி-அதாவது மற்ற ஆழிகள். இருள் சேர் இருவினை யின் விளைவாக உலகில் கடல் போல் பெருகிய - பெருகிக் கொண்டேயிருக்கின்ற தீவினைகள்-பாவக் கொடுமைகள்- அவற் றால் ஏற்படும் துன்பங்கள் இவையெல்லாம் முடிவு காணாத கடல்போல் இன்றும் உலகில் காணப்படுவது தெளிவு. இத் தீவினையும் அவற்றால் ஏற்படும் குழப்பங்கள், கொடுமைகள், விளையும் துன்பங்கள் இவற்றையெல்லாம் தாங்கி, இப்பெருங் கடலை நீந்தி ஈடேறுவதற்கு ஒரே வழி அறவழியும், தனக்கு வமையில்லாதவனும், ஐந்தவித்தவனுமாகிய இறைவனின் திரு வடிகளைப் பற்றிக் கொண்டு வாழ்வதேயாகும்.

9. கோளில் பொறியின் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

இக்குறளில் 'எண்குணத்தான்' என்றது எட்டுக்குணங்களை யுடைய இறைவனை என்று பொருள் கூறுவர். உரையாளர் எண் என்கிற சொல்லை 'எட்டு' எனப் பொருள் கொள்வதால் இவ்வுரை கூறப்படும். ஆனால், எண் என்னும் சொல்லுக்கு திருக்குறளிலேயே வேறு பல பொருள் உண்டு.

குறள்- 392- கணக்கு
குறள்- 424- 'எண்பொருளாக'

எளிதாய் விளங்கும் பொருளுடையதாகக் ''கேட்போர்க்கு எளிய பொருள் வருமாறு மனங்கொளச் சொல்லி'' (பரிமேலழகர்), ''அறிதற்கரிய பொருளாகிய சொற்களைத் தெளியப் பொருளாம் படி'' (மணக்குடவர், பரிப்பெருமாள்).

''நல்லோர் செவியும் மனமும் பொருந்த எளிதாகச் சொல்லி......'' (பரிதியார்)

**குறள் 548-941: எண்பதத்தான் ஒரா......**

1. எளிய செவ்வியை................ (பரிமேலழகர்)
2. எளிதாகச் செங்கோல் முறையால் ............(பரிதியார்)

**குறள்- 760**................''எண் பொருள் ஏனை''......

1. எளிய பொருள்களாம் ................ (பரிமேலழகர்)
2. எளிய பொறாமை எய்தலாம்........... (மணக்குடவர்)

'எளிய, எளிமை பொருந்திய', எளிதாய் விளங்கக் கூடிய என்கிற பொருளே பெரும்பாலும் இச்சொல்லுக்கு உரையாளர் கூறுவது காண்கிறோம்.

இக்குறளில் (9) மட்டும் 'எட்டு' என்று இறைவனின் அளவிலாப் பண்புகளைக் கட்டுப்படுத்துவது எங்ஙனம் பொருந்தும் என்பது விளங்கவில்லை.

ஆகவே, 'எண்குணத்தான்' என்னும் தொடருக்கு எளிமை மிக்க; பிறர்க்கு எளிதாய் விளங்குமாறு சொல்லக்கூடிய பண்புடையவன் என்னும் பொருளே பொருத்தம் எனத் தோன்றுகிறது.

**ஆதிபகவன், வாலறிவன், மலர்மிசை ஏகினான், வேண்டுதல் வேண்டாமை இலான், ஐந்தவித்தான், இறைவன், தனக்குவமை இல்லாதான், அறவாழி அந்தணன்** என எட்டுப் பெயர் ஆசிரியர் இக்குறளில் கடவுளுக்குத் தருவது குறிப்பிடத்தக்கதே. எனினும், இவற்றையே கூறுகின்றார் என்று அழுத்தமாகக் கூறப் போதிய சான்றுகள் இல்லையென்றே தோன்றுகிறது. காரணம், எண் என்னும் சொல்லுக்கு எட்டு என்னும் பொருள் பொருந்துவதாகத் தெரியவில்லை. மேலும், அவன் அளவில்லாதவன் - அறிவுக்கு எட்டாதவன். ஆகவே, 'எளிய'-என்னும் பொருளே சிறக்கிறது. எளிமை மிக்கவனாய் உலகில் தனக்குவமையில்லாதான் தோன்றினான் - மனித வடிவில் - யாவர்க்கும் எளிதாக விளங்கக் கூடிய முறையில் போதனை தந்தான். தமக்குரிய இறை மாண்பினை மறைத்து உலகில் தோன்றியதால் மனிதன் அவனை அவமதிக்கக் கூடும்; இது பெருந்தவறாகும். அவனது

தாளில் பணிந்து வணங்குதலே முறை. இல்லையேல் தத்தமக்குரிய பொருள்கள் கொள்ளுதல் (கோள்) செய்யாத அதாவது (பார்க்காத) கண், (கேட்காத) செவி முதலிய ஐம்பொறிகள் போல பயனற்றவையே.

10. ''பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்''

இதில் பிறவி என்றது பிறவிச் சுழற்சிக் கொள்கையைக் குறிப்பிட்டு அன்று; வள்ளுவர்க்கு இக்கொள்கை ஏற்புடையதன்று.

மீண்டும் மீண்டும் பிறக்க வேண்டும்-ஆன்மா பக்குவமடைய வேண்டும் என்னும் கொள்கையைத் திருவள்ளுவர் ஏற்றிருந்தால், இறைவனடி சேர்ந்தால் போதும் ஒருவன் நீடு வாழ்வு பெற, எவ்வித இடும்பையையும் தவிர்க்க, (இடும்பைகளுள் பிறவிச் சுழற்சி போன்று வேறுண்டோ?) எவ்வினையும் மனிதனை வாட்டாது, மனக்கவலை மாற்றிவிட, என்றெல்லாம் அழுத்தமாகக் கூறும் வள்ளுவர் எங்ஙனம் இப்பிறவிக் கொள்கை[illegible] ஏற்றிருக்கவியலும்?

ஆகவே, இங்குக் கூறப்படும் பிறவிப் பெருங்கடல் வேறு. ஆதி மனிதனிடமிருந்து பிறந்து வரும் ஒவ்வொருவனையும் பாதிக்கும் இருள் சேர் இருவினையாகிய கடல் என்றலே பொருந்தும்.

உலகில் தீவினைகளும் அவற்றால் வரும் விளைவுகளும் பெருங்கடல் போல இருப்பது தெளிவு. இக்கடலை நீந்திப் பேரின்பம் - நீடுவாழ்வு என்னும் கரைசேர இறைவனடி சேர்ந்து அவனது அருட் சக்தியைப் பெறுதலேயாம். இச்சக்தியையே 'வான் சிறப்பு' அதிகாரத்தில் அழுத்தமாகக் கூறுகிறார்.

### சுருக்கம்

1. ''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.''

'அ' என்னும் ஒலியையே எழுத்துகள் எல்லாம் முதலாவதாகக் கொண்டுள்ளன. (அதுபோல) 'அகரமும் னகரமும் நானே' என்றவனே உலகுக்கு முதல்வனாக உள்ளான்'

2. "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்."

வாலாமை (அசுத்தம்) சிறிதும் கலப்பில்லாத தூய அறிவு வடிவினனது நற்பாதங்களைத் தொழாவிடின் எத்துணை கல்வி கற்றும் பயன் என்ன?

3. "மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்."

இதயமெனும் மலரில் உறைபவனது மாண்புமிக்கத் திருவடியை அடைந்தவர், நிலைத்து நிற்கும் (வான்) வீட்டில் முடிவற்ற வாழ்வு பெறுவர்.

4. "வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல."

இவர் வேண்டும் இவர் வேண்டா என்னாமல் எல்லா மானிடர்க்கும் (பேரின்ப) வாழ்வளிக்க விரும்புகின்றவனது பாதங்களை அணைந்தவர்க்குத் துன்பம் என்பது என்றும் இராது.

5. "இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு."

உலகில் ஆதியில் நிகழ்ந்த தீவினை, ஒருவன் தானே செய்யும் தீவினை ஆகிய இவ்விரண்டும் மனிதனை இருள் உலகில் கொண்டுபோய்ச் சேர்ப்பவை. இறைவனுக்குரிய உண்மையான புகழை விரும்பிப் போற்றுபவனை அவை அணுகா.

6. "பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்."

கழுமரம் (கொலைப்பொறி) மீது தன் ஐந்தையும் (உடலை) பலியாக்கியவன் (அவித்தான்) காட்டிய பொய்யே கலப்பற்ற ஒழுக்க நெறியில் நின்றவர்க்கு முடிவில்லா வாழ்வு உண்டு. அல்லது ஐம்பொறிகளுக்கு நிலைக்களனாக உள்ள உடலைப் பலியாக்கியவன், கட்டுக்கடங்காத அப்பொறிகள்

வாயிலாக எழும் உணர்வுகளைப் பக்குவப்படுத்த வழிசெய்தவன் காட்டிய பொய்க் கலப்பற்ற ஒழுக்க நெறியில் நின்றவர்க்கு முடிவில்லா வாழ்வு உண்டு.

7. "தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது."

தன்னிகரில்லாதவனின் பாதங்களைச் சேர்ந்தவர்க்கே மனக் கவலை நீக்க இயலும். பிறர்க்கு இயலாது.

8. "அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது."

அறத்திற்கு ஆழ்ந்த கடல்போல் உள்ளவன்—அழகிய தண் அருளை ஆழிபோல் கொண்டுள்ளவன் திருவடி சேர்ந்தார்க்கே (பாவம், பழி முதலிய) பிற ஆழிகளைக் கடக்க இயலும். பிறர்க்கு இயலாது.

9. "கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை."

தமக்குரிய ஒளி, ஓசை முதலிய உணர்வுகளைக் கொள்ளுதல் இல்லாப் பொறிகளைப்போல, எளிமைக் குணங்களையுடைய ஐந்தவித்தானாகிய இறைவனது பாதங்களை வணங்காத தலை பயனற்றதே.

10. "பிறவிப் பெருங்கடல் நீந்துவர்; நீந்தார்
இறைவன் அடிசேரா தார்."

தலைமுறை தலைமுறையாக வரும் பிறப்புகளில் நேரும் துன்பக்கடலை இறைவனது அடிசேர்ந்தவரே நீந்த இயலும். பிறரால் இயலாது.

## 2. வான் சிறப்பு

'வான் சிறப்பு' என்னும் அதிகாரத்தில் ஆசிரியர் மழையினது சிறப்பைக் கூறுகின்றார் என்பதே உரையாளர் பெரும் பான்மையோர் கருத்து.

''மழையைக் கடவுளாக உருவகித்து, அம்மழை உருவில் கடவுள் வாழ்த்தைத் தொடர்வது 'வான் சிறப்பு' என்னும் இவ் வதிகாரம். கடவுளது இன்ப வடிவின், அன்புருவின் சின்னம் மழை'' என்று கா. அப்பாத்துரையார் கூறுகிறார்.

''மழை, கடவுள் என்னும் ஒரு சக்தியை நினைவூட்டுகிறது. மழையைத் தருகிற வல்லமையை வியர்ந்து பாராட்டுகிறோம்,'' என்று கவிஞர் இராமலிங்கனார் கூறுகிறார்.

இவ்வதிகாரத்திற்கு முன்னுரையாக கா. சுப்பிரமணியப் பிள்ளையவர்கள் கூறும் கருத்து மிகச் சிறப்பானதாகத் தோன்றுகிறது.

''வான் என்றது மழையை........... மழை உண்மையால் நன்மையும், அஃதின்மையால் தீமையும் உண்டாதல் தெளிவு. கடவுளுடைய தண்ணருளைக் குறிப்பதற்கு மழையே சிறந்த அறிகுறியாக இருக்கின்றது. மழைச் சிறப்புக் கூறுதல் **திருவருட்சக்தி வணக்கம்** கூறுதலாக முடிகின்றது.''

''முன்னியவன் நமக்கும் முன் சுரக்கும் இன்னருளே என்னப் பொழியாய் மழையேலோர் எம் பாவாய்'' என்னும் திருவாசகமும் காண்க. கடவுள் வழிபாட்டிற்குப் பின் **அவரது திருவருட் சிறப்பினை வியத்தல் பொருத்த முடையதே.''**

இக்கருத்தே- அதாவது மழையால் குறிக்கப்படும் இறைவனின் தண்ணருளே-அத்திருவருளின் சக்தியே-அச்சக்தியைச் சிறப்பிப்பதே இவ் வான் சிறப்பின் முழுமையான நோக்கம் மனிதனின் இம்மை வாழ்வுக்குத் தேவையான 'மழை' இங்குக் குறிக்கப்படவில்லை என்றன்று, **மழை-மாரி** என்னும் இயற்கை

நிகழ்ச்சியைக் கண்முன் வைத்து, மழைமாரி எங்ஙனம் மனிதனின் இம்மை வாழ்வுக்குத் தேவையோ **அதைவிடத் தேவை மனிதனின் மறுமை வாழ்வுக்கு இறைவனின் அருள்மாரி** என்னும் கருத்தைக் கூறுவதே இப்பகுதியின் நோக்கம் என்க.

இறையருளை மழைக்கு ஒப்பிட்டுத் '**தண்ணருள்**' என்று குறிப்பது குறிப்பிடத்தக்கது. எங்ஙனம் சூட்டினால் **(வெயிலால்)** காய்ந்து கிடக்கிற நிலத்தில் பெய்யும் மழையால் **தண்மை** உண்டாகிறதோ அங்ஙனமே இறைவன் அருளின்றி **வாடிக்** கிடக்கிற உள்ளத்தில் அவன் அருள் சுரந்தால் மன**நிறைவும்** இன்பமும் உண்டாகும் என்பது கருத்து.

'மழை உண்மையால் நன்மையும், அஃதின்மையால் தீமையும் உண்டாதல் தெளிவு' என்கிறது கா. சுப்பிரமணியப் பிள்ளை அவர்கள் விளக்கம்.

இக்கூற்று ஓரளவு உண்மையே எனினும் முழுக்க முழுக்க உண்மை என்பதற்கில்லை. மழை உண்மையால் வேளாண்மை நன்கு நடைபெறும். அதனால் மக்கள் வறுமை நீங்கும். ஓரளவு இன்ப வாழ்வு உண்டாகும். சூடு தணியும். இவை நன்மையே. ஆனால், இவை தாம் நன்மை; வேறு நன்மை எதுவும் இல்லையா? வறுமை முதலிய தீமைகள் நீங்கினாலும், வன் செயல்கள், பாவச்செயல்கள் ஆகிய தீமைகள் மழையிருந்தாலும் நடைபெறுவதில்லையா? ஏன், மழைவளம் அதிகமிருந்து, அதனால் செல்வம், வசதி முதலியன பெருகும் போது பலவிதத் தீய செயல்களும் பெருகுவது காண்கின்றோமே! இதனாற்றான் இறைவன் மக்களுக்கு நல்லுணர்வு தருவதற்காக மழை பொழிய விடுவதில்லை என்று பொதுவாக மக்கள் கூறுவது உண்மை தானே! மழையின்மை இறைவனின் ஒரு தண்டனையென்று பாமர மக்களும் கூறுவது கவனிக்கத்தக்கது. மாறாக மழை இறைவனின் ஆசிக்கு அடையாளம் என்றும் மக்கள் பெரும் பாலும் கூறுவர்.

மேலும், மழையின்றேல் தீமைதான் நிகழ்கின்றதா? சில நற்செயல்களாவது நிகழ்வதில்லையா? சிறப்பாக மனிதன் தன் வாழ்வைத் தானே தன் சொந்த வல்லமையால் நடத்தக்கூடும் என்னும் நினைவு நீங்கி, அனைத்து நன்மைக்கும் ஆதி

காரணனான இறைவனைச் சார்ந்து வாழக் கற்பிப்பது மிகப் பெரிய நன்மையன்றோ?

மாறாக, இறைவன் அருள் இன்றேல் எல்லாமே தீமையாக முடிவதும், அவன் அருள் இருந்தால் எல்லாமே நன்மையாக முடிவதும் கண்கூடாகக் காண்கிறோம். ஆகவே மழை, வான், விண், வாரி, எழிலி ஆகிய சொற்களால் இவ்வதிகாரத்தில் குறிக்கப்படுவது இறைவனின் அருள் மாரி - அருட்சக்தி என்பதே பொருத்தம். இக்கருத்து இவ்வதிகாரத்தின் இறுதிக் குறளால் வலியுறுத்தப்படுகிறதைக் காண்கிறோம்.

> "நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
> வான்இன்று அமையாது ஒழுக்கு."

நீர் இன்றி உலகில் மனிதனின் இம்மை வாழ்வுக்குத் தேவையான பல நன்மைகள் நிகழா. இது உண்மையே. ஆனால், **'யார் யார்க்கும் வான் இன்று அமையாது ஒழுக்கு'** என்பதன் கருத்தென்ன?

இதன் உட்பொருளை ஆய்ந்த பின்னரே மற்றக் குறட் பாக்களுக்குச் சரியான பொருள் காணவியலும் என்பது என் துணிபு.

இப்பகுதிக்கு உரையாளர் கூறும் பொருள் பின்வருமாறு :-

**பரிமேலழகர்** — எவ்வகை மேம்பட்டார்க்கும் (நீரையின்றி உலகியல் அமையாதாயின்) அந்நீரை இடையறா தொழுகும் ஒழுக்கும் வானையின்றி அமையாது.

**மணக்குடவர்** — யாவர்க்கும் மழையையின்றி **ஒழுக்கம்** உண்டாகாது. ஒழுக்கம் - விரதம் - ஆசாரம் கெடும் என்றது. இவை மூன்றினாலும் நான்கு அறமும் கெடும்.

**பரிதியார்** — மழையின்றி ஒரு **காரணமு**மில்லை.

**காலிங்கர்** — உயர்ந்தோர் இழிந்தோர் யாவர்க்கும் மழையை யின்றி அமையாது அவரவரொழுகும் ஒழுக்கு.

**கா. அப்பாத்துரை** — எப்பேர்ப்பட்டவர்களுக்கும் மழை இல்லாமல் **இனத்தொடர்பு** என்பது ஏற்பட முடியாது.

**அவர்களது கருத்துரை** — கடவுளின் கருணைக் கூறான வேதப் பண்பே உயிர்களின் உயர்வு தாழ்வுகளைச் சரி நிகர்ப் படுத்தி, முப்பால் ஒழுக்கத்தை இடையறா - அழியா வளமும் வளர்ச்சியும் உடைய, புறப்பால் அகப்பால் எனச் சுற்றிச் சுற்றிச் சென்று கொண்டேயிருக்கும் நிலை பேறான இன்ப ஒழுக்காக்கும் பண்பு ஆகும்.

**பாவாணர்** — எத்துணை உயர்ந்தவர்க்கும் நீரின்றி, அந்நீர் இடையறாது ஒழுகும் ஒழுக்கும் மழையின்றி நிகழாது.

**சாமிசிதம்பரனார்** — எப்படிப்பட்டவர்க்கும் மழை யில்லாமல் **ஒழுக்கம்** நிலைத்திராது.

**புலவர் குழந்தை** — எத்தகையோர்க்கும் தண்ணீர் இல்லாமல் உலகியல் நடைபெறாதாயின், அத்தண்ணீரின் **வருகையும்** மழையில்லாமல் உண்டாகாது.

**வரதராசனார்** — மழையில்லையானால் ஒழுக்கம் நிலை பெறாமல் போகும்.

இவ்வுரைகளினின்று கருத்துத் தெளிவு வெளிப்பட வில்லை எனின் மிகையாகாது.

**ஒழுக்கு** என்னும் சொல்லுக்கு (தண்ணீர்) ஒழுகுதல், (தண்ணீரின்) **வருகை, காரணம்** எனப் பொருள் கூறு கின்றனர். ஒழுக்கம் என்றும் பொருள் கூறுகின்றனர். **இனத் தொடர்பு** என்று பொருள் கூறும் கா. அப்பாத்துரையார் ''வானின் இடையறா ஒழுக்கே நீரின் இடையறா உலகின் இடையறா ஒழுக்கிற்கும், உயிரின உயிர்களின் இடையறா ஒழுக்கிற்கும் உடன் துணையாக நிற்கின்றது,'' என்றும் கூறுகின்றார். ஈண்டு **வான்** என்னும் சொல்லை எங்கிருந்து மழை பெய்கிறதோ அது, அதாவது வானம்-ஆகாசம் என்னும் பொருளில் ஆள்வதாகத் தெரிகிறது. அதே சமயத்தில் **நீரின் ஒழுக்கு** என்னும்போது நீர் வானத்தினின்று ஒழுகுவதை (பெய்வதை)க் குறிப்பிடுவதாகத் தோன்றுகிறது. அதே சமயத்தில் 'உலகின் ஒழுக்கு' என்னும் போது வாழ்வில் காணப் படவேண்டிய ஒழுக்கம் என்கிற பொருளில் ஆள்வதாகத் தோன்றுகிறது. இவர் **ஒழுக்கு** என்னும் சொல்லை **(நீர்) ஒழுகுதல்** என்கிற பொருளிலும், (வாழ்க்கை) ஒழுக்கம் என்னும்

பொருளிலும், ஆள்வதாகத் தெரிகிறது. இவ் ஒழுக்கத்தை இவர் 'இனத்தொடர்பு' என்றும் கூறுகிறார்.

'ஒழுக்கு' என்னும் சொல்லுக்குப் பொருள் இக்குறளில் தெளிவாயில்லை என்பதால் ஏற்பட்ட உரை வேறுபாடுகள் இவை எல்லாம். 'மழையின்றி' என்னும் கருத்தை 'வான் இன்று ஒழுக்கு' எனக் கூற வேண்டிய அவசியம் இவ்வுரைகளில் தெளிவாகக் காணவில்லை.

மேலும், யார் யார்க்கும், எவ்வகை மேம்பட்டவர்க்கும், எப்படிப்பட்டவர்க்கும், எத்தகையோர்க்கும், உயர்ந்தோர் தாழ்ந்தோர் யாவர்க்கும் மழையில்லாமல் ஒழுக்கம் நிலை பெறாது - ஒழுக்கமே இராது என்பது எத்துணைப் பொருத்தம் என்பது ஆயத்தக்கது. மழையில்லாவிட்டால் எல்லோருமே தீயவர்களாக மாறிவிடுவரோ? மழையின்றி வறுமை முதலிய துன்பங்களிடையிலும் நல்லொழுக்கம் காப்பவர் எவருமே யில்லையா? மழையிருந்தால் எல்லாருமே நல்லவர்களாகி விடுகின்றனரா? இது பொருத்தமான கருத்தாகத் தோன்ற வில்லை.

குறளை நன்கு ஆய்வோம்.

'நீர் இன்று அமையாது உலகு' — சாதாரண மழைநீர் இன்றி உலகில் இம்மை வாழ்வு நன்கு மலர்வதில்லை. இப் பகுதியில் இம்மைக் கருத்துப் புலப்படுகிறது. ஒழுக்கம் முழுதுமே அழிந்து விடுகின்றது என்றன்று; ஓரளவேனும் இருக்கும் என்ற வாறு. இதில் இம்மை வாழ்வுக்கு மழைநீர் எவ்வளவு தேவைப் படுகிறது என்பதைக் கூறுகிறார். இதை வள்ளுவர் போன்ற மேதை சொல்லித்தான் நமக்குத் தெரியுமா? நாள்தோறும் உலகில் நடைபெறுவதொன்று அன்றோ? பின், ஏன் ஆசிரியர் இதைக் கூற வேண்டும்? அடுத்து வரும் கருத்தை வலியுறுத்தவே. அஃதாவது: ''மழையின்றி உலகில் மனித வாழ்க்கை ஓரளவு கடின மாகவே இருக்கும். எளிதாக அமையாது இம்மை உலக வாழ்வு. ஆனால், அந்த மழை எதைக்குறிப்பிடுகிறது? அஃதாவது **வான்.** வானாகிய **அருள்மாரி இன்றேல் உலகில் ஒழுக்கம் என்பது எவர்க்கும் அமையாது.** இக்குறளில் நீர் இன்று...... **வான்** இன்று ..... என்பதில் முதலடியில் சாதாரண மழை நீரையும் இரண்டாம் அடியில் அருளாகிய மாரியையும் குறிக்கும் என்க.

இரு சொற்களுக்கும் ஒரே பொருள் தருவது பொருந்தவில்லை. மேலும் ஒழுக்கு என்னும் சொல்லுக்கு நீர் **ஒழுகல்** எனப் பொருள் கூறுவது சற்றுப் பொருந்தாது.

ஆகவே, இறைவன் அருளாகிய வான் - அருள்மாரி - இன்றேல் ஒழுக்கம் என்பது அமையவே அமையாது என்னும் கருத்தே சிறப்பதைக் காண்கிறோம்.

இக் கருத்தை அப்பாத்துரையாருடைய விரிவுரை நன்கு கூறுகின்றது.

"கடவுட் **கருணையின் ஒழுக்கும்** இடையறாததா கின்றது. அது அருள் ஒளி வீசி இனவாழ்வு என்னும் கடலில் அந்தண்மை முகில் எழுப்பி, அதனைத் தன் கருணை வடிவான வானவில்லாக, ஆதிபகவனாக ஆக்கி, அக்கருணை மூலம் மீண்டும் இனவாழ்வில் கடவுளின் புதுக்கருணையாக மின் ஒளி வீசி, அருள் மழை பொழிந்து இவ்வாறாக அருள் மலர்ச்சிச் சுழற்சியை ஓயாது இயக்கிக் கொண்டே வருகிறது."

இறைவன் கருணையின் ஒழுக்கு என்னும் சொற்றொடர் அருள் மழையின் ஒழுக்கு அதாவது அருள் மழைபோல் உலகின் ஒழுகுவதை உணர்த்தும்.

இவ்வதிகார முதல் 9 குறட்பாக்களுக்கு விளக்கம் கூறும் போது இவ் 'ஒழுகல்' மழையின் ஒழுகலையன்று, அருளின் **ஒழுகலை** - அருட் **பொழிவை** உணர்த்துவது காண்போம்.

இறைவன் 'அருள்' 'அன்பு' மாரிபோல் பொழியப் படுகின்றது என்பது விவிலியத்தோடும் பொருந்தும் (உரோ. 5.5 காண்க).

11. "வான் நின்று உலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்றுணரற் பாற்று."

மழை இடையறாது நிற்ப உலகம் நிலைபெற்று வருதலால் அதுவே மக்களுக்கு அமிழ்தம் அல்லது சாகா மருந்தெனக் கொள்க. இது வெளிப்படையாத் தோன்றும் பொருள்.

மழை மாரியை அமிழ்தம் என்றது மிகைப்படக் கூறியதே. மழை ஏராளமாக இருந்தாலும் உலகில் சாவு இருந்தே வருகிறதன்றோ? 'வான்' என்னும் அருள் மாரியை அமிழ்தம் எனல் முழுப் பொருத்தம். ஏனெனில், அழிவே இல்லாத பேரின்ப வாழ்வை அளிக்கக் கூடிய சக்தி அதற்கு உண்டு.

மழைமாரி இடையறாது உண்டாவதில்லை. பன்முறை பெய்வதேயில்லை. அதன் விளைவாக உலகம் வழங்கி வருவதற்கு மாறாக, வறுமை முதலிய பெருந்துன்பங்களுக்கு ஆளாகி அவதியுறுவதை இன்றும் நாம் காண்கிறோம்.

இறைவன் பொழியும் அருள் மாரிக்கோ எந்நாளும் குறைவில்லை. பெற்றுக் கொண்டு, பயன்படுத்தி நன்மையடைய விரும்புவோர் அனைவருக்கும் அது எந்நேரமும் கிடைப்பதொன்று. அதனால் ஆன்மாக்கள் உலகம் வழங்கி வரும் அவ்வருள்மாரியை மக்கள் பெரும்பாலும் புறக்கணிப்பதால்தான் உலகில் துன்பம் விளைந்து மக்கள் அவதியுறுகின்றனர்.

12. "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை"

| | | |
|---|---|---|
| துப்பார்க்கு | = | உண்பவர்க்கு |
| துப்பாய | = | நல்லதாகிய |
| துப்பு ஆக்கி | = | உணவை உளதாக்கி |
| துப்பார்க்கு | = | அவ்வுணவை உண்ணும் மக்களுக்கு |
| துப்பாயதூஉம் | = | தானே உணவாவதும்-மழை |

மழைநீர் மனிதர்க்குத் தேவைப்படும் உணவுப் பொருள்களை விளைவிக்கத் தேவைப்படுவது. அதே சமயத்தில் நீரும் உணவுப் பொருளாய் உள்ளது.

குடிப்பதற்கு நீர் இல்லையேல் உண்ணும் உணவு முழுமையானதாகாது என்பது தெளிவு.

இனி, அருள்மாரி, ஆன்மீக வாழ்வுக்குத் தேவையான ஆன்மீக உணவை உளதாக்கப் பயன்படுகிறதென்றால் பொருள் என்ன?

மனிதனின் ஆன்மாவுக்கு உணவு போலிருந்து மனவலிமை யளிப்பது அருட்சக்தியால் நிகழ்வதாகும். அதே சமயத்தில் அருளே உருவான இறைவன்-ஐந்தவித்தான், தன்னையே தெய்வீக உணவாகத் தந்துள்ளான் என்பது இந்நூலில் வேறிடத்தில் விளக்கப் பெற்றுள்ளது காண்க. 'அவியுணவு' பற்றிக் கூறியுள்ளது இதுவேயென்றறிக.

13. "விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து
உள்நின்று உடற்றும் பசி."

மழை பெய்ய வேண்டிய காலத்தில் பெய்யாமல் பொய்த்து விட்டால், பயிர்பச்சைகள் விளையா. இவ்வுலகத்தில் மக்கள் உண்ண உணவின்றிப் பசியால் அவதியுறுவர்.

இச்சாதாரணக் கருத்தைக் கூறத் திருவள்ளுவர் போன்ற மாபெரும் ஆசிரியர் தேவையா? ஆகவே, இதனுள் வேறு கருத்து மறைந்துள்ளது காண்க. அக்கருத்தை உணர்ந்து கொள்ள 'உள் நின்று உடற்றும் பசி' என்னும் சொற்கள் பயன்படுகின்றன. சாதாரணப் பசி வயிற்றை மட்டுமே வாட்டும். மனிதனுக்கு அவ்வயிற்றுப்பசி மட்டும்தான் உள்ளதா? அன்றாட அனுப வத்தில் நாம் காண்பதென்ன? வயிற்றுப்பசிக்கு நிறைய உணவு உள்ளவனுடைய உள்ளம் ஏதோ ஒன்று இன்றி வருந்துகிறது. அதற்காக ஏங்குகின்றது. இதை ஆன்மீகப்பசி — உள் நின்று வருத்தும் பசி எனலாம்.

இந்தப் பசிக்கு உணவு மேற்கூறிய அருளே என்க. அவ்வருள் மாரி பெய்யாவிட்டால் உலக மக்கள் உள்ளம் வருந்திப் பேரின்பம் இழந்து தவிப்பர்.

14. "ஏரின் உழாஅர் உழவர் புயல்என்னும்
வாரி வளங்குன்றிக் கால்."

இக்குறளில் ஏர், உழவர் என்னும் சொற்களைக் கண்டதும் நிலத்தை உழுவதற்குத் தேவைப்படும் ஏரும், உழவனுமே நினைவுக்கு வரும். மழையின்றேல் ஏர் உழ இயலாது. உணவுப் பொருள் விளைய வழி இல்லை. இக்குறளில் இக்கருத்து மட்டுந்தான் உள்ளதா? இதைக் கூறத் திருவள்ளுவர் தேவைப் பட்டாரா? ஆகவே, இதன் உட்கருத்தை அறிதல் அவசியம்.

ஏரின்—என்னும் சொல்லுக்கு உழும் ஏர் என்று மட்டுமே பொருள் உண்டா? ஏர்—எழுச்சி, ஏரின்—எழுச்சியுடன் என்று பொருள்படக்கூடும். உழவர்—என்னும் சொல் சாதாரண உழவர்களை மட்டும் குறிக்காமல், தாளாற்றித்தந்த பொருளைத் தக்கார்க்கு **வேளாண்மை** (குறள்—12) செய்ய வேண்டியவர் களையும் குறிக்கும். (ஒப்புரவு அதிகாரம்— பொருள் விளக்கம் காண்க) இறைவன் மிகத் துன்புற்றுத் (தாளாற்றி) தந்த அருட் பொருளை ஏற்றுக் கொள்ள விழைவோர்க்கு அப்பொருள் கிடைக்குமாறு உழைப்பவர்களும் **உழவரே.** உழுதல்—என்னுப் சொல் உழைத்தலை, பெருமுயற்சியைக் குறிப்பிடுவது. உழுதல் செய்வோர் **உழவர்** என்று கூறப்படலாம் அன்றோ?

**புயல் என்னும் வாரி** என்பதற்கு மழையென்னும் வருவாய் (பரிமேலழகர்), மழை என்னும் புனல் வளம் (காலிங்கர்) எனம் பொருள் கூறுகின்றனர். புயல் என்பது பெருங்காற்று. வாரி என்னும் சொல் கடல், வெள்ளம், நீர்நிலை என்னும் பொருள் களைக் கொண்டது.

சேர்த்துச் சொன்னால் **பெருங்காற்று என்னும் வெள்ளம்** என்றாகும். இதன் கருத்து என்ன?

விவிலியத்தில் இறைவனின் இறைவனாகிய ஐந்தவித் தானின் சீடர்மீது அருள்மாரி பொழியப்படும் நிகழ்ச்சி பின்வரு மாறு வருணிக்கப்பட்டுள்ளது. (அப். பணி 2: 1—4 காண்க).

இங்குக் கூறப்படும் பெருங்காற்று, இரைச்சல் இக்குறளில் காணும் **புயலை** நினைவுபடுத்துகிறது. '**பரிசுத்த ஆவியால் நிரப்பப் பெற்று**' என்பது மிகுதியை வெள்ளமாகப் பொழியப் பெற்ற அருள் மாரியைக் குறிப்பதாய் உள்ளது. இவ்வுவமையை விவிலியத்தில் பன்முறை காண்கிறோம்.

ஆகவே, புயல் என்னும் வாரி இறைவன் தம் சீடர்மீது வாரி வழங்கிய அருட்பெருக்கையே குறிக்கும்.

15. ''கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை.''

மழை இன்றேல் மனிதவாழ்வு கெடும். மழை இருந்தால் கேடுற்றவர்களை அவர்கள் சார்பாக நின்று வாழவைப்பதுவும் மழையே. அருள் மழைக்கும் இது பொருந்தும்.

16. "விசும்பின் துளிவீழின் அல்லால் மற்றாங்கே
பசும்புல் தலைகாண் பரிது."

மழைத்துளி விழா விட்டால் சிறு புல்லும் முளைக்காது என்னும் இக்கருத்து மிக மிகச் சாதாரணமானது. இதைத்தான் வள்ளுவர் இங்குக் கூறுகின்றாரா? இல்லை. இறைவனின் அருள் மாரி இன்றேல் (புல் போன்ற) சிறு நன்மையும் விளையாது என்பது கருத்து.

17. "நெடுங்கடலும் தன்னீர்மை குன்றும் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின்."

மழை மாரி இன்றேல் பெருங்கடலும் சிறிது சிறிதாக வற்றிப் போகக் கூடும்.

மின்னுதலையுடைய மேகம் (தடிந்தெழிலி) - அருள் மாரி தாங்கி வரும் இறைவனின் அருள் மேகம் பொழியாவிட்டால், கடல் போன்ற பெருமை படைத்தவர்களுடைய உள்ளங்களும் வாடி வதங்கி விடும். இயல்பாக எத்துணை பெருமை கொண்டவர்களாயினும் அருள் இன்றி உண்மையான நன்மையடைய வியலாது.

18. "சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு."

மழை வளம் இன்றேல் (நீத்தார்) வானோராகிய இறைவனுக்குப் பூசனை நடைபெறாது. வறுமையால் வாடுவோர் பூசனைபற்றிச் சிந்தனை கொள்ளார்.

ஆனால், வறுமையிலும் இறைவனை வழிபடுவோர் இல்லவே இல்லையா?

இறையருட் சக்தியின்றேல் இறைவனுக்கு உகந்தவாறு வழிபடவியலாது என்பது கருத்து.

19. "தானம் தவம் இரண்டும் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்."

மழையின்றேல் தானம் தருவது ஒரு வேளை இல்லாமல் போகலாம். தவம் சிறிதுமே இல்லாமல் போகுமா?

அருள் இன்றேல் தானம் தவம் போன்ற நற்செயல் எதுவுமே நிகழாது என்பது கருத்து.

20. இக்குறள் முன்பே விளக்கப் பெற்றது.

இனி வான், புயல் என்னும் வாரி, தடிந்தெழிலி என்னும் பெயர்களால் குறிக்கப்படுவது இறைவனின் அருட்சக்தி—ஆவி எனப்படுவர்.

இது பற்றி மேலும் விளக்கம் 'இயல்புடைய மூவர்' பகுதியில் காண்க.

## வான் சிறப்பு

11. "வானின்று உலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று."

இறைவன் பொழியும் இடையறா அருள் (வான்) மழையால்தான் உலகம் இயங்கி வருகின்றது. ஆகவே, அது உயிர்களுக்கெல்லாம் சாகா மருந்தென விளங்குகின்றது.

12. "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை."

(அருள்) உயிர்வாழ உணவு தேவைப்படுவோர்க்கு அருளாகிய (ஆன்மீக) உணவை ஆக்கித்தருவதோடு அவ்வருளே அவர்கட்கு (அவி) உணவாகவும் ஆயிற்று.

13. "விண் இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து
உள்நின்று உடற்றும் பசி."

விண் அருள் இன்றேல் பரந்த உலகமக்கள் உள்ளத்தில் (ஆன்மீகப்) பசி வாட்டி வதைக்கும்.

14. "ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்."

பலமான புயற்காற்றென உலகில் வீசிய இறைவனின் அருள்மாரி குன்றினால், மன எழுச்சியுடன் யாரும் (நன்மைக்காக) உழைக்க மாட்டார்கள்.

15. ''கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை.''

வான் அருள் இன்றேல் அவ் இன்மை மக்களைச் சீர் அழிக்கும். அங்ஙனம் சீரழிந்தவர்க்கு ஆதரவாய் நின்று அவர்களைத் தூக்கி விடுவதும் அவ்வருளே. இன்றேல் அழிவு; இருந்தால் ஆக்கம்.

16. ''விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது.''

வானின்று அருள்மாரி பெய்தால் அன்றிப் பசுமையான (நல்ல) செயல்கள் உலகில் சிறிதளவும் தலை தூக்குவதில்லை.

17. ''நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி
தான்நல்கா தாகி விடின்.''

பெருங்கடல்போன்ற மேன்மை படைத்தவரும் அருள்மேகம் பொழியாவிடின் மேன்மை இழந்து குன்றிப் போவர்.

18. ''சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு''

அருள்மாரி குன்றினால் மனம் வறண்டு போகும்; இறைவனுக்கு உகந்த பூசனை நிகழாது.

19. ''தானம் தவமிரண்டும் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்''

வான் அருள் பொழியாவிடின், தானம், தவம் ஆகியன உலகில் நிலைபெறா.

20. ''நீரின்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு''

மழைநீர் உலக வாழ்வுக்குத் தேவையேயெனினும், எத்தகையவர்க்கும் அருள்மழை இன்றி ஒழுக்கம் அமையவே அமையாது.

# 3. நீத்தார் பெருமை

திருக்குறளுக்குப் 'பாயிரம்' எனக் கருதப்படும் பகுதியில் மூன்றாம் அதிகாரமாக உள்ளது 'நீத்தார் பெருமை' என்பது. இதில் கூறப்படும் 'நீத்தார்' யார் என்றால் உலகப்பற்றினை நீத்தவர்கள், துறவிகள் என்றே பெரும்பாலும் உரை கூறுவர் உரையாளர் பலரும்.

ஆனால், 'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்று அழுத்தமாகக் கூறும் வள்ளுவர் பாயிரத்திலேயே துறவியருடைய பெருமை பற்றி எங்ஙனம் கூறுவார்? என்னும் வினாவுக்குத் தக்க விடை காணோம்.

மேலும், கடவுள் வாழ்த்து ஆகிய முதல் அதிகாரத்தில் வரும் ஆதிபகவன், இறைவனைக் குறிக்கும். 'ஐந்தவித்தான்' இவ்வதிகாரத்திலும் வருவதன் காரணம் என்ன என்னும் வினாவுக்கும் சரியான விடை காணோம்.

'அவித்தான்' என்னும் சொல்லுக்கு 'முழுதும் அடக்கியாண்டவன்' என்னும் பொருள் கொடுத்து, ஐம்புலன்களை முழுதும் அடக்கியாள்பவர்கள் துறவியர் ஆதலின் 'நீத்தார், துறந்தார்' என்னும் பதங்கள் முற்றத் துறந்த முனிவர்களையே குறிக்க வியலும் என உரையாளர் முடிவு செய்கின்றனர் போலும்?

ஆனால், 'ஐந்தவித்தான்' என்னும் சொற்றொடர்க்குள்ள முழுப் பொருள் என்ன என்பதை முன்னைய பிரிவில் ஆய்ந்தோமாதலின், அப் பொருளைக் கண்முன் கொண்டு, இவ்வதிகாரத்தில் வரும் நீத்தார் யார்? அவரது 'பெருமை' எத்துணை பெரிது என ஆய்வோம்.

இவ்வதிகாரத்தில் நீத்தார் என்னும் சொல்லுக்குத் 'துறந்தவர்,' என்று பெரும்பான்மையான உரையாளர் கூறுகின்றனர். ஆனால், ஐம்புல ஆசைகளை, ஆசாபாசங்களை, உலகப்

பொருளை அல்லது பற்று விட்டுத் துறவறம் புகுந்தவர் என்னும் பொருளில் மட்டுமே ஆள்கின்றனர்.

ஆனால்,

'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்பதும்,

''இயல்பினால் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
**முயல்வாருள் எல்லாம் தலை''**

என்பதும் வள்ளுவருடைய கருத்தாயிருப்பதால் பாயிரத்திலேயே **துறவிகளின்** அல்லது **துறவறத்தின் பெருமையைக்** கூறுகிறார் என்பது பொருந்தாது எனல் தெளிவு. அங்ஙனமாயின், 'நீத்தார்' என்பது யாரைத்தான் காட்டுகிறது என்னும் வினாவுக்கு விடை காண வேண்டியிருக்கிறது.

முதலில் 'நீத்தார்' என்னும் சொல் ஒருமையா பன்மையா? என்னும் வினா எழும். **பன்மை** விகுதி **ஆர்**—பலரைத்தான் குறிப்பிட வேண்டும் என்பதில்லை. உயர்வைக் காட்டும் ஆண்பால் ஒருமையாகவும் கொள்ள இடமுண்டு.

கடவுள் என்னும் அனைத்தையும் கடந்தவன் என்று பொருள்படும். ஆகவே, ஆண்பால், பெண்பாலையும் கடந்தவன் என்று பொருள்படும். ஆகவே இறைவனை—**அவன்** என்று வழங்குவது வழக்கில் உள்ளது. 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்பதில் போல கடவுள் வாழ்த்து அதிகாரத்தில் ஆதிபகவ**ன்**, வாலறிவ**ன்**, மலர்மிசை ஏகினா**ன்**, வேண்டுதல் வேண்டாமையிலா**ன்**, இறைவ**ன்**, ஐந்தவித்தா**ன்**, தனக்குவமை இல்லாதான், அறவாழி அந்தணன், எண்குணத்தான், என '**ன்**' விகுதி ஆண்பால் ஒருமையாக இருப்பினும் அனைத்தும் கடந்த கடவுள் தன்மையைக் காட்டும்.

நீத்தார் அதிகாரத்தில் **ஆண்**பால் ஒருமை விகுதியுடன், ஓரைந்தும்காப்பா**ன்**, ஐந்தவித்தா**ன்**, ஐந்தன் வகை தெரிவா**ன்** என்னும் மூன்று பெயர்களும்,

ஆண்பால் உயவுர்ப் பன்மை விகுதியுடன்—ஒழுக்கத்து நீத்தார், துறந்தா**ர்**, அறம் பூண்டா**ர்**, செயற்கரிய செய்**வார்**, நிறைமொழி மாந்தர், குன்றேறி நின்றா**ர்**, அந்த**ணர்**—ஆகிய

ஏழு பெயர்களும் காணப்படுகின்றன. இதற்கொரு காரணம் இல்லாமல் இராதென்பது தெளிவு.

முதல் அதிகாரத்தில் அனைத்தும் கடந்த கடவுள் தன்மையைச் சுட்ட விரும்பிய ஆசிரியர், இந்நீத்தார் அதிகாரத்தில் கடவுள் தன்மையும் மனிதத்தன்மையும் ஒருங்கே கொண்டுள்ள இறைவனைச் சுட்ட விரும்புகிறார் என்பது எம் துணிபு.

இறைவனை '**ன்**' விகுதி கொடுத்துப் பேசுவது இழுக்காகாது. மனிதனை—அதுவும் மிக மிக உயர்வு பெற்ற ஒருவனை—அவன் என்பது அத்துணை பொருத்தமன்றன்றோ?

ஆகவே, நீத்தார் என்பது ஆண்பால் பன்மை என்று கொண்டு, யார் நீத்தார்? எதை நீத்தார்? என்று ஆய்வோம்.

இவர் : 1) ஒழுக்கத்தின் பொருட்டு, அதாவது ஒழுக்கத்தை உலகில் நிலைநாட்ட இங்ஙனம் நீத்தார். ஆகவே, இவர் 'ஒழுக்கத்து நீத்தார்'.

இவரது பெருமை 'விழுப்பத்து வேண்டும்'— அதாவது, மேலானவற்றிலும் மேலானவை என்னும் வரிசையில் கட்டாயமாக வைக்க வேண்டிய (கா. அப்பார்த்துரை) 'பனுவல் துணிவு'- நூலின் துணிபாகும்.

மேலானவற்றிலும் மேலானவையாக வைக்க வேண்டிய பனுவல் உலகில் உள்ளது 'நூல் தொகுப்பு' என்று பொருள் படும். Biblia (அல்லது Bible) விவிலியம் எனலாம். Biblia என்னும் சொல் கிரேக்க மொழியிலும் இலத்தீன் மொழியிலும் 'நூல்கள்,' 'நூல் தொகுப்பு' என்று பொருள்படும். உலகில் ஒரே ஒரு நூலுக்கு (நூல் தொகுப்புக்கு) **பனுவல்** என்று பெயர் உள்ளது குறிப்பிடத்தக்கது.

ஒழுக்கத்தின் பொருட்டு, அதாவது ஒழுக்கம் சீர்குலைந்த உலகில் அதை நிலைநாட்ட, இம்மை, மறுமை இரண்டினுடையவும் வழிவகைகள், கூறுபாடுகள், இயல்புகள் அனைத்தும் தெரிந்தவனாய், (இருமை வகை தெரிந்து) அறமே வடிவாக (அறம் பூண்டு), 'அறவாழி அந்தணன்' ஆக, அறவோராக (அந்தணர் என்போர் அறவோர்) ஈண்டு, இவ்வுலகுக்கு வந்தார்.

அவரது பெருமையால் உலகெல்லாம் பெருமையை—உயர்வை அடைந்தது. எங்ஙனம் எனில், அம் + தண் + அன் = அழகிய தண்ணருளைக் கொண்டவன். 'அறம் பூண்டு' உலகில் உள்ள ஆன்மாக்களிடம் செவ்விய—மேலான—நிறைவான தண் அருளைப் பொழியலானான். (எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான்).

'எவ்வுயிர்க்கும்'—பொதுவாக உயிர் படைத்த அனைத்துயிர் களையும் குறிப்பிடலாம். உலகில் காணும் எல்லா இனத்து மக்களையும் குறிப்பிடலாம். பின்னையதே இங்குச் சிறப்பாகப் பொருந்தும். (எங்ஙனம் எனப் பின்னர்க் காண்போம்).

மேற்கூறிய 'பனுவல்' நிறைவான மொழி—மறைவான மொழி கொண்ட நூல். இதற்கு மேல் நிறைவான மொழி உலகில் எங்கணும் இல்லை. அம்மொழி கொண்டவர் 'நிறைமொழி மாந்தர்' ஆவர். (மாந்தர் என்பது இங்கு : உயர்வு பன்மை யாகும்—மாந்தன் என்னும் சொல்லே இல்லையன்றோ?). எந்த அளவுக்கு அவர் நிறைமொழி மாந்தர் என்றால் அவர் பெயரே **வாக்கு**—நிறைவாக்கு—குறைவில்லாத வாக்கு—முழுமையான வாக்கு—ஈடில்லாத இறைவாக்கு. இது நம் சிற்றறிவுக்கு எட்டாததால் 'மறை மொழி' எனப்படும். நம் அறிவுக்கு மறைவாய் உள்ளது— 'வாக்கு' என்பவரால் வெளிப்படுத்தப் பட்டது.

இம்மறைமொழி, நிறைமொழியானவரது பெருமை உலகுக்கு நன்கு காட்டியுள்ளது. இங்கு 'மறைமொழி' என்றது மேற்கூறிய 'பனுவல்' என்னும் பொருளிலும் கொள்ளலாம். மொழி, வாக்கு என்று பெயர் கொண்ட அவரையும் குறிப்பிடக் கூடும்.

இவரது பெருமை இன்னும் விரித்துரைக்க வேண்டுமாயின் (துறந்தார் பெருமை துணைக் கூறின்) உலகில் இறந்தாரை யெல்லாம் எண்ணிக் கொண்டது போல. (வையத்து இறந் தாரை எண்ணிக் கொண்டற்று). அதாவது உலகில் இதுவரை இறந்தவர் தொகை அளவிட இயலாதது. இங்குக் கூறப்படும் நீத்தார், துறந்தார், இறந்தார், அனைவரையும்விடப் பெருமை—மேன்மை அடைந்தவர். ஏனெனில், இவர் ஒருவர் இறந்தும், மீண்டும் உயிர்பெற்றெழலானார். இதுவே ஐந்

தவித்தானாக, அதாவது மறை உடல் கொண்டவனாக, அதைப் பலியாக்கினவனாக உலகில் தோன்றிய நீத்தாரது **ஆற்றல்.** எவனும் தன் சொந்த ஆற்றலால் இறந்தபின் உயிர்த்ததில்லை. இவர் ஒருவரே உயிர்த்தார். இதற்குச் சான்று வானுலகில் உள்ளவர்க்கெல்லாம் தலைவனேயாவான். (அகல் விசும்புளார் கோமான் இந்திரனே சாலும் கரி).

இந்த ஆற்றலைக் கொண்டு இவர் (நீத்தார்) தம் ஐந்தை (உடலை) அவித்துப் பலியாக்கினார். இறவா வல்லமை கொண்டிருந்தும் இறக்கத் திருவுளம் கொண்டார்—தம்மைப் பலியாக்கி இறப்புக்கு உட்பட்டார். இதில் மிளிரும் வல்லமை, இறப்பின்போது வெளிப்படையாகக் காணப்படவில்லை. மீண்டும் உயிர்த்த போதுதான் யாம் காணக்கூடிய முறையில் காணப்பட்டது. சாகா வல்லமை கொண்டிருந்தும் மனித இனத்தின் நலனுக்காக 'எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு' தன்னைப் பலியாக்கியதிலும் ஒரு தெய்வீக வலிமை-அளவிட வியலா மனோவலிமை காணப்படுவதை உணர்ந்தேயாக வேண்டும்.

இங்ஙனம் தன் உடலை அவித்தவன் அவ்வுடலில் உள்ள ஓரைந்தும் தம் வழியே செல்லாமல் காக்க வலிமை கொண்டவனாயிருத்தல் வேண்டுமன்றோ? அந்த 'உரன்' அவனிடம் நிறைவாகக் காணப்பட்டது. நம்மிடத்துள்ள இந்த 'ஐந்தை'யும் காக்க அவன் வழிகாட்டுகிறான். வலிமையும் தருகிறான். அவனது அருளே 'உரன் என்னும் தோட்டி.' இங்ஙனம் தன்னைப் பலியாக்கி, தன் ஐந்தின் வகை தெரிந்து, அவற்றை அடக்கியாண்டதாலும், "உலகின் போக்கை — தவறான போக்கைக் கட்டுப்படுத்த இயலும் (கட்டே உலகு). அவனைச் சார்ந்து நிற்பவனும் அங்ஙனமே செய்ய வலிமை படைத்தவனாவான். இங்ஙனம் ஐந்தினைப் பலியாக்கி, அவற்றின் வகை தெரிந்து கட்டுப்படுத்திக் காத்தவன் ஐந்தவித்தான். ஆகவே, அவனே 'வரன்' என்னும் **வைப்பிற்கு** வித்தா"னான்.

மறுமைப் பேரின்பம் ஈண்டு ஐந்தவித்தானே என்னும் கருத்து மறைந்துள்ளது. இப்பேரின்ப **வைப்பு** (அளவில்லா நிதிபோன்ற இன்பம்) **வரன்** எனப்படுவது கவனித்தல் வேண்டும். வரன் என்பவன் மணவாளன். ஆன்மாக்கள்—(மானிடர்) இவனுக்கு மணவாட்டிகளென உள்ளன. இதுவே

வீடு பேறாகும். இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டே 'இன்பத்துப்பால்' பகுதியை ஆசிரியர் இயற்றினார் என்க. அப்பகுதியின் விரிவான விளக்கம் இதை வலியுறுத்துவது காண்க.

இந்த ஐந்தவித்தானது ஆற்றலைக் கொண்டே 'செயற்கரிய' செயல்களைச் செய்ய இயலும். தன்னையும் மீறிச் செல்லப்பார்க்கும் 'ஐந்தினை' வகை தெரிந்து காக்க இயலும். இங்ஙனம் செய்வோரே 'பெரியர்'—பிறர் சிறியரேயாவர்.

இங்ஙனம் வாழ்ந்து காட்டுவதே நற்'குணமென்னும் குன்று.' இதை இறுதிவரை 'ஏறி நின்றார்' நீத்தார். அவரது ஆற்றலைப் பயன்படுத்தி ஆன்மாக்களும் அங்ஙனமே தெய்வீகக் குணம் என்னும் குன்றை ஏறவேண்டும். அங்ஙனம் ஏற முயலாமல், 'ஐந்திற்கு' அடிமையாகிவிட்டால், 'வேண்டுதல் வேண்டாமை யிலான்' ஆகிய அவனது இறுதிநாள் வெகுளியைக் காத்தல் — தாங்குதல் இயலாது.

இக்கருத்துகள் எல்லாம் விவிலியத்திலும் கூறப்படுவது காண்க.

1. **ஒழுக்கத்து நீத்தார்-** உரோ. 3:9-12; 23-26.
2. **எவ்வுயிர்க்கும் செந்தண்மை-**
   படைப்பனைத்திற்குமே விடுதலை: உரோ. 8:18-23.
   இன வேறுபாடு இன்றி- உரோ. 3: 21-22.
3. **நிறைமொழி -** 'வாக்கு' என்பது அவர் பெயர்.
   அரு. 1, 1; 14&16.
4. **ஐந்தவித்தான் ஆற்றல்-** உரோ. 6: 8-14.
   பிலிப். 3: 10-11.
   தாமே—தம் வல்லமையால்—மத். 26,32.
   உரோ. 14,9.
5. **இந்திரனே கரி-** (நால்வருடைய சான்று)
   மத். 28: 1-7; அரு. 20: 11-12; மார்க். 16:1-7;
   லூக். 24: 1-7.

இங்ஙனம் காட்சியளித்த வானவர், வான்தூபி எனப்படுவோருள் மிக உயர்ந்தவர், மேலானவர் என்பது பாரம்பரியக் கருத்து.

6. வரன் என்னும் வைப்பு-
   வைப்பு- 1 இரா 1: 3-5.
   வரன்- திருவெளிப்பாடு-21: 1-3; 19: 6-9.

7. வெகுளி-காத்தல் அரிது- திருவெளி. 1,7.

இவை போன்ற சான்றுகள் விவிலியத்தில் ஏராளமாக உள்ளன.

8. துறந்தார் பெருமை- (எதைத் துறந்தார்? என்ன பெருமை!)

   பிலிப் 2: 6-11.

கடவுள் வாழ்த்தாகிய முதல் அதிகாரத்தில் ஆதிபகவன்- ஐந்தவித்தான்- இறைவன் காட்டிய பொய்தீர் ஒழுக்கநெறி பற்றியும் அது அழைத்துச் செல்லும் நீடுவாழ்வு பற்றியும் கூறப் பட்டது.

'நீத்தார்' ஆகிய இவ்வதிகாரத்தில் அவ்வொழுக்கத்தைக் கடைப்பிடிக்கத் தேவைப்படும் அருள் ஆற்றல் அதை எங் கிருந்து பெறலாம்? இதற்காகத் தம் 'மாட்சிமை' துறந்தது ஆகிய கருத்துகள் வலியுறுத்தப்படுகின்றன.

21. ''ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
    வேண்டும் பனுவல் துணிவு''

உலகில் ஒழுக்கம் நிலைநிறுத்த (தமக்கு இயல்பாயுள்ள இறை மாண்பினை) மறைத்து (நீத்து) உலகுக்கு வந்தவரது பெருமையை (நூல்களுக்கெல்லாம் நூலாகிய) உயர் நூல் (விவிலியம் = Bible, Book) மிகமிக மேலாகக்கூறும்.

22. ''துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
    இறந்தாரை எண்ணிக்கொண் டற்று.''

அங்ஙனம் தம் மாண்பை மறைத்து (துறந்து) வந்தவரது பெருமையை எடுத்துக்கூறினால் உலகில் இறந்தவர்கள் கணக்கெடுத்தது போலும். (இறந்துபட்ட பலகோடி மக்களுள் இவர் ஒருவரே மீண்டும் உயிர் பெற்றெழுந்ததால் என்க).

23. ''இருமை வகைதெரிந்து ஈண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.''

இம்மை மறுமை இவற்றின் இலக்கணம் நன்கறிந்து உலகில் அறமே வடிவாகப் பூண்டு வந்த அவரது மாட்சி மிகமிக உயர்ந்து நின்றது.

24. ''உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.''

மனத்திண்மை என்னும் அங்குசத்தால் ஐம்பொறிகளைத் தம் வழியே செல்லாமல் (அவித்துக்) காத்தவனே வான்வீட்டில் நல்லவர்க்கென வைக்கப்பட்டுள்ள பேரின்பத்துக்கு வித்தாகின்றான். அவனே ஆன்மாக்களுக்கு 'வரன்'.

25. ''ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி.''

தன் உடலைப் பலியாக்கியவனது (இறந்தும் உயிர்த்த) ஆற்றலுக்கு வானகத்துள்ள வானவர்க்குத் தலைவனே போதுமான சான்று.

26. ''செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.''

மனிதர் செய்ய இயலாதவற்றைச் செய்த அவரே உண்மையாகப் பெரியவர்; பிறர் (மனிதர்) சிறியவரே.

27. ''சுவைஒளி ஊறுஓசை நாற்றமென்று ஐந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு.''

ஐம்புலன்களின் செயல்களை நன்கறிந்து (அவித்த) அவனுக்கு உலகமே அடிமை.

28. ‘‘நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.’’

‘வாக்கு’ என்னும் பெயர் பெற்றுள்ள அவரிடமே எக்குறைவு மில்லாத மொழி உண்டு. இதை மனித அறிவுக்கு மறைவான (விவிலிய) மொழி காட்டும்.

29. ‘‘குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது.’’

(தெய்வீக) குணம் என்னும் மிக உயர்ந்த நிலை அடைந்த அவரது வெகுளியை யாரும் ஒரு கணமும் தாங்க இயலாது.

30 ‘‘அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்.’’

அறமே வடிவாகி வந்த அவரே உண்மையான அந்தணர் (அழகிய தண்ணருள் கொண்டவர்); எவ்வுயிர்க்கும் செவ்விய தண்ணருள் பொழிவதால் !

# 4. அறன் வலியுறுத்தல்

"சிறப்புஈனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு."

அழுக்காறு இன்மை - அஃதாவது," மனத்துள் தீவினையாகிய மாசு புகாதவாறு ஒழுக்கமான நெறியில் நடத்தல்.

அவா இன்மை - தகாத பொருள் மீது அளவு மீறி ஆசை கொள்ளாமை.

வெகுளி இன்மை- அளவு மீறி வெகுண்டு செயல் புரிவதால் ஏற்படக் கூடிய தீமை.

இன்னாச் சொல் பேசாமை- ஒருவருடைய மனத்தைப் புண் படுத்தும்படியான சொல் அல்லது செயல் தவிர்த்து ஒழுகுதல். இவை நான்கும் 'அறம்' (35) என்னும் மேன்மையைத் தருவ தால் 'சிறப்பு ஈனும்.'

இந்நான்கினும் அழுக்காறு இன்மையே, அஃதாவது 'மனத் துக் கண் மாசிலனாதலே அனைத்தறன்' (34) ஆதலின் அஃது அருட் செல்வத்தை ஈனும். இவ்வருட் செல்வமோ செல்வத்துட் செல்வம் (241 குறள்) இத்தகைய அறவாழ்க்கையாலும் அருட் செல்வத்தாலும் வருவதே இன்பம் - மற்றவையெல்லாம் இன்பத்துக்கு மாறாகத் துன்பத்தையே தருவன. புகழையும் தராதவை.(குறள் 39). ஆகவே, அறத்தைவிட மேலான ஆக்கம் மனிதர்க்கு இல்லை (31). ஆகவே, அதை மறந்து வாழ் வதினும் மேலான கேடும் இல்லை (32). ஆகவே, எந்தெந்த விதத்தில் அறச் செயல்கள் செய்ய வியலுமோ அந்தந்த விதத்தில் எல்லாம் அறத்தை வளர்த்தல் வேண்டும் (33). பின்னர் பார்த்துக் கொள்ளலாம் என்று அறச் செயல்களை ஒதுக்கி வாழ்தல் ஆபத்துக் குரியது. 'பொன்றுங்கால் பொன்றாத் துணையாக, அஃதாவது வாழ்நாள் இறுதிக் காலத்தில் இறவாத் துணை'யாக ஒருவனுக்கு இருப்பது அற வினையே (36). வாழ் நாளை ஒருவன் வீணாக்காமல் நல்லது (அறம்) செய்யின், (வாழ் நாள் இறுதியில் கெடுதி நிகழாமல்) ஒருவன் தவறான பாதையில் சென்றாலும் அவன்

செய்யும் அறமே தவறான வழியடைக்கும் கல்லாக இருக்கும் (38).

ஆகவே, செயற்பாலது அறனே; உயற்பாலது (தவிர்க்கப் படவேண்டியது) அறத்துக்கு மாறான மறச்செயலே; அதுவே பழியாகும் செயல்கள் (40).

இனி,

> "அறத்தாறு இதுஎன வேண்டா சிவிகை
> பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை."

இக்குறளுக்கு உரையாளர் கூறும் பொருள் பின்வருமாறு:

1. **பரிமேலழகர்**- அறத்தின் **பயன்** இது என்று யாம் ஆகம அளவையான் உணர்த்தல் வேண்டா. சிவிகையைக் காவுவானோடு செலுத்துவானிடைக் காட்சியளவை தன்னானே உணரப்படும்.

2. **மணக்குடவர்** - அறநெறி **இத்தன்மைத்து** என்று அறிய வேண்டா. சிவிகையைக் காவுவானோடு செலுத்துவானிடைக் காணலாம்.

3. **பரிதியார்** - தருமம் செய்வாரையும் பாவம் செய்வாரையும் விசாரிக்க வேண்டிய அத்தண்டிகைப் பத்தனையும் சுமப்பார்களையும் கண்டு கொள்க.

4. **காலிங்கர்** - அறத்தின் **நெறி** இத்தன்மைத்து என்று யாம் உமக்கு எடுத்துரைக்க வேண்டுவதில்லை. சிவிகையைச் சுமந்தவனோடு மற்று அதன் மேல் ஏறியிருக்கிறவனுமே சான்று.

**கா. அப்பாத்துரை** - உண்மையான அறநெறி சார்ந்த வாழ்க்கை முறை இத்தகையது என்று உணர விளக்கம் வேறு வேண்டியதில்லை. அது பல்லக்குத் தூக்குபவன் வாழ்வோடு பல்லக்கு ஏறிச் செல்பவனிடையே உள்ள, வேற்றுமைப் பண்பால் காணத்தக்கதாகும். அதாவது, பல்லக்குச் சுமப்பவனிடம் அறத்தின் மெய்ப்பண்பு காணலாம். பல்லக்கேறிச் செல்பவனிடம் அறக்கேட்டின் பண்பைக் காணலாம்.

6. **வரதராசனார்** - பல்லக்கைச் சுமப்பவனும் அதன் மேலிருந்து ஊர்ந்து செல்வோனுமாகிய இவர்களிடையே அறத்தின் **பயன்** இது என்று கூறவேண்டா.

7. **பாவாணர்** - அறத்தின் **பயன்** இதுவென்று உரையளவையால் ஒருவர் அறிவிக்க வேண்டியதில்லை. பல்லக்கைச் சுமப்பானோடு அதில் ஏறிச் செல்வானிடைப்பட்ட காட்சியளவையாலேயே அது அறியப்படும்.

8. **புலவர் குழந்தை** - பல்லக்கைச் சுமப்பவனிடத்தும் அதில் ஏறிச் செல்வானிடத்தும் இது அறநெறி என வேண்டா. மக்களில் ஒருவரையொருவர் சுமக்கும் முறை அறமாகாது. இது மக்கட் பண்பாட்டுக்குத் தகாத முறையாகும். செல்வத்திலும் தன்மையிலும் இவ்வளவு ஏற்றத்தாழ்வு அறமாகாது.

9. **சிதம்பரனார்** - தருமத்தின் **பயன்** இது என்று நூல்களால் கூற வேண்டியதில்லை. பல்லக்கைச் சுமந்தவனோடு செலுத்துவோனிடம் உள்ள வேற்றுமையால் காணலாம்.

10. **சுப்பிரமணியப் பிள்ளை** - நற்செய்கையின் **பயன்** இது என்று நூலினால் உணர்த்த வேண்டியதில்லை. சிவிகையைத் தாங்குவோனுக்கும் அதில் ஏறிச் செல்வோனுக்கும் உள்ள வேற்றுமையே அதைக் கண்கூடாகக் காட்டும்.

இவ்வுரைகள் ஒன்றுக்கொன்று முரண்படுவதாகத் தோன்றுகின்றன. **அறத்தாறு** என்னும் தொடரில் **ஆறு** என்னும் சொல்லுக்குப் **பயன்** எனப் பொருள் கூறுகின்றனர் சிலர். வேறு சிலர் நெறி, முறை, தன்மை என்று பொருள் கூறுகின்றனர். இது குறளின் கருத்துத் தெளிவாயில்லாததால் ஏற்படும் விளைவு என்னலாம்.

**இது** என்னும் சொல்லுக்கு "இதுவோ, அதுவோ என மருட்சியுற வேண்டியதில்லை", (அப்பாத்துரை); "காட்சியளவை தன்னான்" ......(பரிமேலழகர், பாவாணர்); நூலால் உணர்த்த வேண்டியதில்லை. தெளிவாகப் புலப்படுவது கண்கூடாகக் காணலாம் என்றே பெரும்பாலும் பொருள் கூறுகின்றனர்.

**ஆறு** என்னும் சொல்லுக்குப் **பயன்** என்று பொருள் கூறினால் அறத்தினால் வரும் பயனைக் குறித்தே இக்குறள் கூறுகிறது என்றாகும். ஆனால், அறத்தின் பயன் 'அறத்தான் வருவதே இன்பம்' என்னும் குறளில் கூறப்படுவதால் இக்குறள் வேறு கருத்தைக் கூறுகிறது என்றே கொள்ள வேண்டியிருக்கிறது.

இவ்வதிகாரத்தில் முதல் இரண்டு பாக்கள் அறத்தின் சிறப்பைக் கூறுகின்றன. 3, 6, 10 குறட்பாக்கள் அறச்செயல்கள் எப்போதும் எவ்வகையானும் செய்ய வேண்டியவை. அறத்திற்கு மாறான பழிச்செயல்கள் (மறச்செயல்கள்) தவிர்க்கப்பட வேண்டியவை என்னும் கருத்தைக் கூறும். குறள் 4, 5 அறம் என்பது யாது என்னும் கருத்தைக் கூறும்.

'அறத்தாறு' என்று தொடங்கும் இவ் ஏழாம் குறள் அறநெறி எளிதன்று; 'இது' என்று எளிதாகச் சொல்லிவிட இயலாது — அது கடினமானது — பெருமுயற்சியால் மட்டுமே வாழ்ந்து காட்டக்கூடியது என்னும் கருத்தை உணர்த்துகிறது என்பது எம்துணிபு. இக்கருத்தை ஆசிரியர் நல்லதொரு உவமையால் விளக்குகின்றார்.

குறளின் பிற்பகுதியில் 'பொறுத்தான்—ஊர்ந்தான்' என்னும் இருவர்க்கும் 'இடை' எனக் கூறியுள்ளது. முற்பகுதியில் ஒப்பிடக்கூடிய இரண்டு காணோம். 'அறத்தாறு இது என வேண்டா......' என்றுள்ளது.

அறத்திற்கு எதிரிடை மறம்—அறத்தாற்றுக்கு எதிரிடை **மறத்தாறு** ஆகும். ஆகவே, குறளைச் சற்று விரித்துரைப் போமாயின், அறத்தாறு 'இது என' எளிதாகக் கூறிவிட வேண்டா. அது கடினமானது—கடைப்பிடிக்க எளிதானதன்று, உவமை வேண்டுமாயின், சிவிகை தூக்கிச் செல்பவனையும், அதில் ஊர்ந்து செல்பவனையும் கவனியுங்கள். இவர்களிடை உள்ள வேறுபாடு எத்துணை பெரிது என எண்ணிப்பாருங்கள். சிவிகையில் ஊர்ந்து செல்பவன் இன்பமாக வீற்றிருக்கிறான். தூக்கிச் செல்பவரோ மேல் மூச்சுக் கீழ்மூச்சு வாங்கும் வகையில் மிகமிகச் சிரமத்தோடு செல்கின்றனர்.

அறவாழ்க்கைக்கும் மறவாழ்க்கைக்கும் உள்ள வேறுபாடும் இத்தகையதே. மறச் செயல்கள் செய்தற்கு எளியன. அதுவும் மனச்சான்றைக் கைவிட்டோர்க்குக் கொலை முதலிய பாதகங்கள் தண்ணீர் குடிப்பது போல் உள்ளன. இன்றையச் சூழ்நிலையில் கண்கூடாகக் காண்கிறோம். மாறாக, நேர்மையோடு, நீதியோடு, யாருக்கும் தீங்கிழைக்காமல், தவறு செய்வதற்கு எளிதாக ஏற்படக் கூடிய சோதனைகளை எதிர்த்துச் செயல் புரிவது என்றுமே கடினமானதாகத்தான் இருந்திருக்கிறது. இன்று நேர்மை நீதியோடு ஒழுக விரும்புகிறவர்களைப் 'பிழைக்கத் தெரியாதவர்' என ஏளனம் செய்யக்கூடிய அளவுக்கு மறத்தாறு வளர்ந்து விட்டது. இதையெல்லாம் வென்று அறத்தாற்றில் நிலையாய் நிற்பது சிவிகை தூக்குபவர்கள் படும் வருத்தத்தைவிடக் கசப்பானதாகிவிட்டது.

இதை மனத்தில் கொண்டே வள்ளுவர், நடுவு நிலைமை, அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, பொறையுடைமை, அழுக்காறாமை, புறங்கூறாமை, தீவினையச்சம், இனியவைகூறல், இன்னா செய்யாமை, நன்றியறிதல், அன்புடைமை, வெகுளாமை எனப் பல பகுதிகளில் அறத்தாற்றை வலியுறுத்தி, மறத்தாற்றைக் கண்டிக்கக் காண்கிறோம்.

பல்லக்குச் சுமப்பவனிடம் அறத்தின் மெய்ப்பண்பையும், அதில் ஏறிச் செல்பவனிடம் அறக்கேட்டின் பண்பையும் காணலாம் என்று கா. அப்பாத்துரையார் பொருள் கூறுவது முழுமையாக ஏற்றுக் கொள்ளக் கூடியதாகத் தோன்றவில்லை.

பல்லக்குச் சுமப்பவன் அறநெறியில் வாழ்பவனாயிருக்கலாம். அறநெறி பிறழ்ந்து (பிழைக்கப் பொருள் உதவி கிடைக்குமே என) இக் கடின வேலையை மேற்கொண்டவனாயிருக்கலாம்.

அங்ஙனமே பல்லக்கில் ஊர்ந்து செல்பவன் அங்ஙனம் செய்வதாலேயே அறநெறி பிறழ்ந்தவன் என்று சொல்லி விட இயலாது. தூக்கிச் செல்பவர்களைக் கொடுமைப்படுத்தினால், அல்லது தக்க கூலி கொடாவிட்டால், ஈவு இரக்கமின்றி அவர்களை நடத்தினால் மட்டுமே அவன் (ஊர்ந்து செல்பவன்) அறநெறி மீறுகிறான் என்று சொல்லக் கூடும்.

பிறவிச் சுழற்சி, தலைவிதி ஆகிய கொள்கையை ஏற்பவர் 'பல்லக்குச் சுமப்பது சுமக்க வேண்டிய பிறப்பு விதி, ஏறிச் செல்வது அவனது பிறப்புப்பேறு என்று கூறலாம். திருவள்ளு வர்க்கு இக் கொள்கை ஏற்புடைய தன்று என்பதால் இப் பொருள் இக்குறளுடன் பொருந்தாது.

"ஊர்ந்தான், பொறுத்தான் இவர்களிடையுள்ள வேறுபாடு அவரவர் முற்பிறப்பில் செய்த புண்ணிய பாவம் என வேண்டா" என்று பொருள் கூறினும் பொருந்தும்.

இம்மை-மறுமை விளக்கம்

திருவள்ளுவர் இம்மை வாழ்வுக்குரிய கருத்துகளை மட்டுமன்று, மறுமை வாழ்வுக்குரிய கருத்துகளையும் நூல் முழுவதும் ஆங்காங்குக் கூறுகிறார்.

இதை **இப்புத்தாய்வுப் பொருள் விளக்கத்தில்** காணலாம். 'இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டவர், இம்மைக்கு உரியனவற்றை மட்டும் கூறி எங்ஙனம் மனநிறைவு அடைய வியலும்?

ஆகவே, இம்மை வாழ்வுக்குரியனவாகக் காணப்படும் பகுதி களிலும் இம்மை மறுமை இரண்டினையும் குறிப்பிட்டுக் கருத் துரைக்கிறார்.

உதாரணமாக- இனியவை கூறல் பகுதியில் "சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும் இம்மையும் இன்பம் தரும்" என்று மறுமைக்கு முதலிடம் கொடுத்துக் கூறுவது கவனிக்கத் தக்கது. தம் நூலின் முழு நோக்கம் மனிதனை மறுமை வாழ் வுக்குத் தயாரிப்பதே என்பதை மனத்திலிருத்தியே குறட்பாக் களுக்குப் பொருள் காண்பது அவசியம்.

அங்ஙனமே 'செய்ந்நன்றியறிதல், 'தீவினை அச்சம்' முதலிய பகுதிகளில் மறுமை, இம்மை என்று வெளிப்படையாகக் கூறா விடினும் மறுமை, சார்ந்த கருத்தினையும் கூறுவது பின்வரும் விளக்கத்தினின்று அறியலாம்.

## சுருக்கம்

31. "சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு."

உள்ளமையான சிறப்பைத் தருவது அறம்; (அருளாகிய) செல்வத்தையும் அது தரும். ஆகவே, அதைவிடச் சிறந்த ஆக்கம் தருவது எங்கேயுள்ளது?

32. "அறத்தினூஉங் காக்கமும் இல்லை அதனை
மறத்தலி னூஉங்கில்லை கேடு.

அறத்தைவிட மேலான செல்வம் இல்லை; அதை மறந்து வாழ்வதைவிடக் கேடு எதுவும் இல்லை.

33. "ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல்."

இயன்ற எல்லா வகையிலும் அறச்செயல்களை ஓயாமல் செய்க; செல்லும் இடங்களில் எல்லாம் செய்க.

34. "மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற."

மனத்துள் மாசு அணுகாமல் வாழ்வதே அனைத்து அறன்; பிறவெல்லாம் வீணே; துன்பமே!

35. "அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்ற தறம்."

மனத்தில் அழுக்குத் தரும் வழியாகும் அளவு மீறிய அவா, (காரணமின்றி) வெகுளி, கடும் பேச்சு இவற்றைத் தவிர்த்து வாழ்வதே அறம்.

36. "அன்றறிவாம் என்னா தறஞ்செய்க; மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை."

பின்னர் (சாகும் முன்பு) செய்வோம் என்னாமல் அறச் செயல்களைச் செய்க; ஏனெனில் உயிர் போகும் நாளில் அழியாத துணையாய் இருப்பவை அவையே.

37. ''அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை.''

அறவழிக்கும் அதற்கு மாறான மற வழிக்குமிடையே வேறு பாடு என்னவெனில், பல்லக்குத் தூக்குபவனுக்கும் அதில் ஊர்ந்து செல்பவனுக்குமிடையே உள்ளதே; முன்னையது (அறவழி) கடினமானது. பின்னையது (மறவழி) இலேசானது.

38. ''வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.''

அறம் செய்யாத நாள் வீழ்நாள்; பயனற்ற நாள். நன்மை செய்தால் அதுவே வாழ்நாள் இறுதியில் துன்பம் எய்தாம லிருப்பதற்கு வழியாகும்.

39. ''அறத்தான் வருவதே இன்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில.''

அறச்செயல்களால் வருவதே உண்மை இன்பம்; மற்றச் செயல்கள் துன்பத்தோடு பொருந்தியவை; எப்புகழையும் தரா.

40. ''செயற்பால தோரும் அறனே ஒருவற்
குயற்பால தோரும் பழி.''

வாழ்நாளில் என்றும் செய்துகொண்டேயிருக்க வேண்டியது அறச்செயலே. அதற்கு மாறான பழிச்செயல்கள் தவிர்க்க வேண்டியவை.

# 5. இயல்புடைய மூவர் - இல்வாழ்க்கை

திருக்குறளுக்குப் 'பாயிரம்' எனக் கருதப்படும் முதல் (நாற்பது குறட்பாக்கள்) நான்கு அதிகாரங்கள் முடிந்து, இந்நூலின் முதற்பாலாகிய அறத்துப்பாலைத் தொடங்கும் போது வள்ளுவர்,

> "இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
> நல்லாற்றின் நின்ற துணை"

எனக் கூறுகிறார். இக் குறளில் காணும் 'இயல்புடைய மூவர்' யார் என்பது பற்றிப் பல கருத்து வேறுபாடுகள் உள்ளன. இதைக் குறித்துப் பேரறிஞர் திரு.வி.க. அவர்கள்,

"எவரை உளங்கொண்டு ஆசிரியர் 'மூவர்க்கும்' என்று அருளினாரோ தெரியவில்லை. இது பற்றி யான் பல முறை நினைத்ததுண்டு. என் உள்ளத்தில் எத்தனையோ பொருள்கள் தோன்றித் தோன்றி மறைந்தன. திருவள்ளுவர் கூறிய 'மூவர்' என்னை எங்கெங்கோ ஈர்த்து ஈர்த்து அலைத்தனர்."*

'மூவர்க்கும்' என்னும் சொற்குப் பொருள் காண்பதில் பழைய உரையாசிரியர்களுக்குச் சிறிது மயக்கம் தோன்றியிருக்கும் என்பது அவரவர் உரைகளால் தெரிகிறது என்கிறார்.

'சிறிது மயக்கம்' என்கிறார் திரு.வி.க. உரைகளை ஆய்ந்து நோக்கும் போது 'மயக்கம்' பெரிதென்றே தெரிகிறது.

மேலும் 'மூவர்' என்னும் சொல் மட்டுமன்று, 'இயல்புடைய மூவர்' என்னும் தொடர் முழுவதுமே இம் மயக்கத்தைப் பெருக்குகின்றது. மனித இயல்புடைய, விலங்கியல்புடைய, இறை இயல்புடைய என்றால் பொருள் விளங்குகிறது. வெறும் 'இயல்புடைய' என்னும் போது, யாருடைய இயல்பு? எதனுடைய இயல்பு? என்னும் வினாக்கள் எழுந்தே தீரும். இதற்கும் சரியான பொருள் காண வேண்டியிருக்கிறது.

* (திரு.வி.க. திருக்குறள் விளக்க உரை-பக். 443, 441 காண்க).

**மூவர்.**

1. 'இல்வாழ்வான் என்பான் துணை' என்னும் சொற்கள் இவ்வதிகாரத்தின் முதல் இரு பாக்களிலும் காணப்படுவதாலும் இரண்டாவதில் (அதாவது 42-ஆம் குறளில்) துறந்தார், துவ்வாதவர், இறந்தார் என முத்திறத்தார் கூறப்பட்டிருப்பதால், உரையாளர் அம் 'மூவர்' இம் முத்திறத்தினரே என முடிவு கட்டியுள்ளனர்.

இது சிறப்புரையன்று என்பது கா. அப்பாத்துரையாருடைய கருத்து. (மேலும் விளக்கம் வேண்டுவோர் துறந்தார், துவ்வாதார், இறந்தார் என்னும் சொற்களுக்கு வேறிடத்தில் (திருக்குறள் கூறும் அறம் என்னும் பகுதியில்) வாசித்தறிக.

வேறு உரைகள் :

2. உறவினர், நண்பர்கள், ஏழைகள்.

3. தாய், தந்தை, மனைவி.

4. பெற்றோர், மனைவி, மக்கள்.

இம்மூன்று உரைகளும், 'இயல்புடைய மூவர்' என்னும் தொடர்க்கு 'இயல்பாகவே ஒருவனோடு தொடர்புடையவர்' என்னும் பொருள் கொடுத்ததால் எழுந்தவை.

"இது பொருத்தமானதாகத் தெரியவில்லை; என்னை? பின்னே 'தென்புலத்தார்......எனவரூஉங் குறட்பாவில் 'ஒக்கல்' இருத்தலான் என்க. ஒக்கலுக்குப் பெற்றோர் முதலியோர் அடங்குதலை ஓர்க. ஒக்கலுக்கு வேறு பொருள் காண முயல்வது வீண்." (திரு.வி.க......பக். 442)—கா. அப்பாத்துரையாருடைய கருத்தும் இதுவே.

5. அந்தணர்—அரசர்—வணிகர்.

இவ்விளக்கத்தில் 'இல்வாழ்வான்' என்பதற்கு வேளாளர் அல்லது உழவன் என்று பொருள் வலிந்து தரப்படுகிறது. இது பொருந்தவில்லை என கா. அப்பாத்துரையார் கூறுகிறார்.

### 6. சேர சோழ பாண்டியர்.

இது சிலருடைய கருத்து—தமிழகத்தில் ஆண்ட மூவேந்தரை இம்மூவர் குறிக்கக்கூடும் என்னும் கருத்தில் பொருள் உரைக்கின்றனர்.

ஆனால், திரு. வி. க. அவர்களும் — மு.வ. அவர்களும் கூறுவது போல் "உலகுக்கென்று ஒரு நூலையளித்த ஒருவரை ஈன்ற பெருமை தமிழ் நாட்டுக்கு உண்டு. இது குறித்துத் தமிழ் மக்கள் இறும்பூதெய்தலாம்; இறுமாப்படையலாம். ஆனால், திருவள்ளுவரைத் தமிழ் நாட்டளவில் கட்டுப்படுத்தலாகாது. அது தளையாகும்; சிறையாகும்'"*

ஆகவே, இவ்விளக்கமும் பொருந்தாது.

### 7. துறவோர், ஒழுக்கத்து நீத்தார், அந்தணர்.

துறவோரும் நீத்தாரும் ஒருவரையே சுட்டும் என்று பெரும்பாலும் கூறப்படுகிறது. அந்தணர் என்பது சாதியைக் குறிப்பிடாவிட்டால், ''அறவாழி அந்தணனை' (இறைவனை)க் குறிப்பிடும்.

ஆகவே, இதுவும் பொருந்தவில்லை. பாயிரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மூவர் இதுவரை கூறிய விளக்கத்திலிருந்து புலப்படவேண்டும். இம் மூவரையும் பின்வருமாறு விவரிக்கின்றன திருக்குறளின் முதல் மூன்று அதிகாரங்கள்:

1. ஆதிபகவன் — வாலறிவன் — மலர்மிசை ஏகினான் — வேண்டுதல் வேண்டாமை இலான் — இறைவன் — ஐந்தவித்தான்—தனக்குவமை இல்லாதான் அறவாழி அந்தணன்—எண் குணத்தான்.

2. வான்—புயல் என்னும் வாரி—தடிந்தெழிலி—விசும்பு—வானம்.

3. நீத்தார் — துறந்தார் — அறம்பூண்டார் — வரன் — ஐந்தவித்தான் — பெரியர் — ஐந்தின் வகை தெரிவான் — ஓரைந்தும் காப்பான்—நிறைமொழி மாந்தர்—குணம் என்னும் குன்றேறி நின்றார்—அந்தணர்.

* திருவள்ளுவர்—வாழ்க்கை விளக்கம்—அணிந்துரை.

**இப்பெயர்களுள்,** ஆதிபகவன் — வேண்டுதல் வேண்டாமை இலான் — தனக்குவமை இல்லாதான் — அறவாழி அந்தணன்—ஆகிய பெயர்கள் **அனைத்தும் கடந்தவனாகிய கடவுளைக் குறிப்பிடும்.** உயிர்களுக்கெல்லாம் படியளப்பவன் என்னும் பொருள் கொண்ட **ஆதிபகவன்** என்னும் பெயர் விவிலியத்தில் கூறப்படும் தந்தையாகிய கடவுளைக் குறிப்பிடுவதாயுள்ளது. தனக்குவமை இல்லாதான் முதலிய மற்றப் பெயர்கள் கடவுளது அளவில்லாப் பண்புகளை விரித்துரைப்பவை. **வாலறிவன்** என்னும் பெயர் எம் விளக்கத்தின்படி அறிவே வடிவானவன் என்னும் பொருள் கொண்டதாயிருத்தலால் யாம் முன்பு கூறிய **வாக்கு** என்னும் பெயரைக் கொண்ட நிறைமொழி மாந்தரைக் குறிப்பிடும்.

இவர் தமக்கு இயல்பாயுள்ள மாட்சிமையை நீத்து, துறந்து, அதாவது வெளித்தோன்றாமல் மறைத்து உலகில் பிறந்தமையால் நீத்தார், துறந்தார் எனப்படுகின்றார்.

உடல் உரு எடுத்துத் தன் ஐந்தையும் (அதாவது உடலே) அவித்ததால் (பலியாக்கியதால்) ஐந்தவித்தான் எனப்படுகிறார். மனிதவடிவில் மற்றெல்லா மானிடர் செய்வது போல் ஐம்புலன்கள் ஈர்த்துச் செல்லும் வழியில் நடவாமல் அவற்றின் வகை தெரிந்து காத்தலால் ஐந்தின் வகை தெரிவான், ஓரைந்தும் காப்பான் எனப்படுகின்றார்.

இங்ஙனம் வகை தெரிந்து காத்ததாலும் பொய்தீர் ஒழுக்க நெறி காட்டியதாலும், அறிவு வடிவினனாக உள்ளது போல் அறமே வடிவினனாகவும் உள்ளதால் அறம் பூண்டார், அறவாழி அந்தணர், ஆகிய பெயர்கள் இவருக்கு உள்ளன.

**மலர்மிசை ஏகினான்** — என்னும் பெயர் மனித இதயத்தில் **குடியிருப்பவன்** என்னும் பொருளை உணர்த்துவதால் விவிலியத்தின்படி நெஞ்சங்களைக் கோவிலாகக் கொண்டுள்ள புனித ஆவியைக் குறிப்பிடும்.

கடவுளே பாவமில்லாத மனித இதயத்தில் வாசம் செய்தாலும், மூன்றாவதாகக் கூறப்படும் இறைவனின் ஆவி அங்ஙனம் வாசம் செய்வதாகக் கூறுவது வழக்கு.

"உங்களுடைய உடல் பரிசுத்த ஆவியின் ஆலயம் என்பது உங்களுக்குத் தெரியாதா? உங்களுக்குள் குடி கொண்டிருக்கும் அந்த ஆவியைக் கடவுளிடமிருந்து பெற்றுக் கொண்டீர்கள். ஆகவே, நீங்கள் உங்களுக்குச் சொந்தமல்ல." (1 கொரி. 6:19).

ஆகவே, இதயமாகிய மலர்மிசை ஏகினான் என்பது இவருக்குச் சிறப்பாகப் பொருந்தும். (இது நம் சிற்றறிவுக்கு முற்றிலும் விளங்காது என்க).

வான்—தடிந்தெழிலி—புயல் என்னும் வாரி ஆகிய பெயர்கள் அருட்சக்தி பொழியும் கருத்தை வெளிப்படுத்துவதால் இப்பெயர்களும் அவருக்குப் பொருந்தும்.

இம் மூவரையும் விவிலியம் தந்தை, மகன், ஆவி என்று கிறித்தவம் கூறும். இதன் முழுப் பொருளையும் நாம் அறிந்து கொள்ள நமக்கு ஆற்றல் விவிலியம் கூறுவது போல, பேரின்ப நிலையில் இறைவனை நேர்முகமாகக் காணும் பொழுது மட்டுமே கடவுளது இம் **மும்மை** நன்கு விளங்கும்.

எனினும் ஒரு சிறிது விளக்கம் இங்குத் தருகிறோம்.

கடவுள் ஒருவரே; தாமாகவே உள்ள இக்கடவுள், **அறிவும் அன்புமாக** உருவெடுத்துள்ளார். அறிவு அல்லது ஞானம் கடவுளிடமிருந்து பிறக்கின்றது என்பதால் **பிறக்கும் அறிவு வடிவானவரை மகன்** என்றும், பிறப்பதற்கு ஆதிமூலமாயுள்ளவரைத் **தந்தை** என்றும் அன்புருவானவரை **ஆவி** என்றும் வழங்குவது கிறித்தவ மரபு. **ஆவி** என்னும் சொல்லுக்கு மூச்சு, உயிர்ச்சத்து என்று பொருள். அருட்சக்தி, வான்சக்தி எனினும் பொருந்தும். மனம் மொழி அனைத்தையும் கடந்த கடவுளைப் பற்றி நாம் மனிதமொழியில் கிடைக்கும் சொற்களைப் பயன்படுத்தியே பேச வேண்டியிருப்பதால், மேற்கூறிய தந்தை, மகன், ஆவி என்னும் பெயர்களுக்கு நாம் சாதாரணமாக மனித மொழியில் தரும் பொருளைத் தந்து தவறாக விளங்கிக் கொள்ளக் கூடும். தந்தை, மகன் என்றவுடன் தாயைப்பற்றி நினைவு வரலாம். ஆவி என்றவுடன் நீராவியைப் பற்றி நினைவு வரலாம். மொழிக்குள்ள குறைபாடுகளையெல்லாம் நீக்கித் தந்தை, மகன், ஆவி என்னும் பெயர்களை, தாய் அற்ற (அதாவது பெண்பால் தொடர்பற்ற) தந்தையையும், மகனையும் மனத்தில் நினைக்க வேண்டும். சரியாகச் சொல்ல வேண்டுமானால் ஆண்பால்,

பெண்பால்களுக்கப்பாற்பட்ட கடவுள், ஆண்பால் பெண்பால்களுக்கப்பாற்பட்ட தந்தையாகவும் மகனாகவும் சிந்தித்தல் வேண்டும். இவ்வுலகத் தந்தைக்குத் தாயின் உதவி தேவைப்படுகிறது. கடவுளாகிய தந்தைக்கோ எதனுடைய, யாருடைய உதவியும் தேவைப்படாததால்தான் கடவுளை "எல்லாம் வல்ல தந்தையே" என்றழைக்கும் மரபு கிறித்தவர்களிடையே உண்டு. மேலும் கடவுளுடைய **அறிவு முழுதும் மகன்** எனும் வடிவில் பிறப்பதால் பிறக்கும் மகனை **ஒரே பேறான** மகன் என்று வழங்குவதும் கிறித்தவ மரபு.

உலகில் நாமறிந்த பிறப்பு இத்தகையதன்று; தந்தையின் அல்லது தாயின் சத்தும் அறிவும் முழுவதும் உருவெடுத்துப் பிறக்கும் பிறப்பு அன்று! உடலை ஒட்டிய பிறப்பே அது! ஆகவே தான் மக்கள் **பலருக்குத்** தந்தையாகவியலும்! கடவுளுக்கோ **முழு அறிவும்** உருவெடுத்துப் பிறப்பதால் ஒரே மகன் மட்டுமே இருத்தல் கூடும்.

இங்ஙனமே, **ஆவி** என்னும் சொல்லுக்கு 'அன்பின் பெருமூச்சு' (அதாவது பேரன்பினால் பிறர்க்கு நன்மை செய்து, அவர்களுக்கு இன்பம் தர வேண்டுமென்னும் **அவா**), அல்லது அனைத்துக்கும் சக்தி தந்து இயக்கும் **ஆற்றல்,** அன்பால் உள்ளம் பற்றி எரியும் **அனல்** முதலிய கருத்துகளை நினைக்க வேண்டும். இந்தப்பொருளில் அன்புருவானவர், **இன்புருவாயும்** உள்ளார். இன்பமே வடிவாகவுள்ளார். தந்தையும் மகனும் அன்புரு, இன்புரு அல்லரோ எனின், ஆம் அவர்களும் அவ்வாறு உள்ளனர். ஆனால், நம் அறிவுக் கெட்டாத இவ்வுண்மையை நாம் வேறு வழியில் அறிந்து கொள்ள இயலாதவர்களாயிருக்கிறோம்.

கடவுள் தாமாய், அனைத்திற்கும் ஆதிமூலமாய் உள்ள **சத்தாக** உள்ளார். வேறெதனுடைய துணையும் தேவைப்படாத ஆதி அநாதிப் பொருளாக உள்ளார். தாமாக இருப்பதே அவருடைய முதற்பண்பு (மற்றெல்லாம் அவருடைய செயலால்-தான் படைக்கப்படும் என்பதால்).

இந்த அநாதிச் **சத்தாக** உள்ள கடவுளிடமிருந்து, அவர் தம்மையே, அதாவது தமது அளவில்லாத் தன்மையை நினைப்பதால், அறிவதால் அந்த அறிவும் அளவிலா ஒளியென

வடிவெடுக்கிறது. அநாதி ஒளியாகிய இறைவனிடமிருந்து ஒளி தோன்றுகிறது-பிறக்கிறது. 'ஒளியினின்று ஒளியாக, கடவுளினின்று கடவுளாக'ப் பிறப்பதால், உருவாவதால்தான் மகன் எனப்படுகிறார். அநாதிக் கடவுளின் **சத்துரு** என்னலாம். சிந்தனையே-சித்தே உருவாக உள்ளதால்! அறிவை ஒளிக்கு ஒப்பிட்டு **அறிவொளி** என்கிறோமன்றோ?

கடவுளாகிய சத்தும், அதே கடவுளாகிய சித்தும் இரண்டு பொருட்களல்ல; ஒருவரை யொருவர் அறிந்து கொள்பவர். தம்முடைய அளவில்லாப் பண்பை, மேன்மையை, அருமையை இருவரும் முழுதுற அறிவதால் தோன்றுவது அளவில்லா அன்பு; இந்த அன்பும் அறிந்து விழையும் ஆளென உருவெடுக்கிறது. இங்ஙனம் ஒருவரை யொருவர் முழுதுற அறிந்து, முழுதுற ஒருவர்க்கொருவர் அன்பு செய்கின்றனர்.

கடவுள் ஒரே சத்து; ஒரே அறிவு; ஒரே அன்பு வடிவானவர். இந்தச் சத்தும், அறிவும், அன்பும் கடவுளுக்கு மூன்று பண்புகள் மட்டுமல்ல, **மூவ்வுருவினர்**. ஆகவேதான் கிறித்தவ மறைக் கோட்பாட்டின்படி கடவுள் ஒருவரே எனினும், மூவராய் உள்ளனர் எனப்படுகிறது. கடவுள் தன்மை ஒன்றே யெனினும் மூவராய் உள்ளது!)

இதையெல்லாம் நம் அற்ப அறிவைக் கொண்டு எவ்வளவு-தான் விளக்க முயன்றாலும் அது மனித அறிவுக்கு அப்பாற்பட்டதாகவே இருக்கும்.

பின்வரும் முறையிலும் இவ்வுண்மையை விளக்கலாம். அளவற்ற எல்லா நன்மைகளும் கொண்டவர் கடவுள். இந் நன்மைகளையெல்லாம் மூன்றுக்குள் அடக்கி விடலாம்.

1. **தாமாக இருப்பது.**
2. **அளவிலா அறிவாக இருப்பது.**
3. **அளவிலா நன்மையாக இருப்பது.**

தாமாக இருப்பதால் — யாருடைய, எதனுடைய உதவியும் தேவைப்படாமல் இருப்பது; அதாவது அளவில்லா வல்லமையுடனிருப்பது; அழிவின்றி இருப்பது; மாற்றமின்றி இருப்பது; மாறக்கூடிய, அழியக்கூடிய உடலின்றி இருப்பது; உருவமற்று

இருப்பது; தொடக்கமும் முடிவுமில்லாமலிருப்பது; எங்கும் இருப்பது முதலான சிறந்த பண்புகளைக் கொண்டிருக்கிறார் கடவுள்.

**அளவற்ற அறிவாக இருப்பதால்** - எல்லாம் அறிவது; தாமாகவே அறிவது; தம்மிலேயே அறிவது; ஆதியந்தமின்றி எப்போதும் அறிந்திருப்பது; ஒரே நிலையாய் மறதியின்றி—குறைவின்றி—மாற்றமின்றி அறிந்திருப்பது; முயற்சியால் அன்றி இயல்பாகவே அறிந்திருப்பது முதலான பண்புகள் எல்லாம் உள்ளவராயிருக்கிறார்.

**அளவற்ற நன்மையாயிருப்பதால்**- அளவற்ற இரக்கம், அன்பு முதலான பண்புகளை ஒரு நிலையாக—மாற்றமின்றி—குறைவின்றி எப்போதும் தாமாகவே, தம்மிலேயே, இயல்பாகவே கொண்டிருக்கிறார்.

பகுத்தறிவுள்ளவர்களுக்கு இம்மூன்று பண்புகளும் **அளவுடன்** இருக்கின்றன. அதாவது தாமாக அன்றி, கடவுள் படைப்பதால் இருப்பது; அளவுள்ள அறிவு, முயற்சியுடன் சம்பாதிக்கப்படும் அறிவு, இழக்கக் கூடியது— மறக்கக் கூடியது —பல குறைபாடுகளுடன் உள்ளது.

அங்ஙனமே அளவுள்ள நன்மையும் உண்டு. ஓரளவு மாறக் கூடியதாகப் பல குறைபாடுகளுக்குட்பட்டுள்ள நன்மை.

படைப்புகளில் அளவுடன் இருப்பது. கடவுளில் அளவின்றி, குறையின்றி இருப்பதில் வியப்பில்லையன்றோ!

## உயிருள்ள அறிவு, உயிருள்ள நன்மை!

நம்மில் ஏற்படும் அறிவும் நன்மையும் நம் உயிரோடு ஒன்றானவையல்ல; ஒன்றானவையாயிருந்தால் நாம் உற்பவிக்கும் போதே நம்மோடு இருத்தல் வேண்டும். அங்ஙன மில்லையன்றோ? ஆனால், கடவுளிடமுள்ள அறிவும் நன்மையும் அவரோடு ஒன்றாயுள்ளன. அவருக்கு இயல்பாயுள்ள உயிருடன் உயிராய் அவரினின்று முற்றும் வேறுபட்டிராமல் உள்ளன.

இங்ஙனம் உயிருள்ள அறிவாகவும், உயிருள்ள நன்மையாகவும் உள்ளபடியால் **தனிப்பெயர்களோடு** விளங்குகின்றன.

உயிருள்ள அறிவாகிய கடவுளைக் கிறித்தவ மறை, **வார்த்தை** அல்லது **ஞானம்** என்று வழங்கும்.

உயிருள்ள நன்மையாகிய கடவுளை **ஆவி** என்று வழங்கும், இந்த அறிவுக்கும் நன்மைக்கும் ஆதி மூலமாகிய கடவுளைத் **தந்தை** என்று கூறும்.

வார்த்தை என்பது அறிவு என்பதற்குத் தத்துவார்த்தமான பெயர்—ஆவி என்பது நன்மை, அன்பு இவற்றின் மனோ வேகத்தைக் குறிக்கும் பெயராகும்.

அறிவு அல்லது ஞானம் ஆதிமூலமாகிய கடவுளினின்று தோன்றுவதால் (அதாவது பிறப்பதால்) பிறப்பவர் சுதன், புதல்வன், குமாரன் எனப்படுகிறார். ஞானம் பிறக்கிறது* என்று நாம் கூட சொல்கிறோமன்றோ? ஆகவே, பிறப்பதற்கு மூலமாயுள்ளவரைத் தந்தை என்பதில் வியப்பில்லையன்றோ?

மேலும், ஞானமும் அன்பும் கடவுளிடத்தில் உருவெடுத்து நிற்கின்றன என்று கூறலாம். அறிவு மிக்க ஒருவனைப் பார்த்து, ''இவன் அறிவே உருவெடுத்தது போல் இருக்கின்றான்!'' என்கிறோம். மிகவும் நல்லவனை—அதிக அன்புள்ளவனைக் கண்டு, ''இவன் அன்பே உருவெடுத்தது போல் இருக்கின்றான்!'' என்கிறோம். அறிவும் அன்பும் உலகில் எங்கும் உருவெடுத்து நிற்பதைக் கண்டிலோம். ஆனால், கடவுளில் அங்ஙனம் உண்மையாகவே உருவெடுத்து விளங்குவதை இயேசு அறிவித்ததால் ஓரளவு அறியவந்தோம்.

கடவுளே இதை மனித இனத்துக்கு **வெளிப்படுத்தினார்.** உண்மையே உருவான அவருடைய வெளிப்படுத்தல் உண்மையாய்த்தான் இருக்கக்கூடும் என்னும் அடிப்படையில் கிறித்த

* அறிவீனனைப் பார்த்து, ''இவனுக்கு ஞானம் பிறக்கப் போகிறதோ'' (அல்லது உதிக்கப் போகிறதோ) என்றுதான் சொல்லுகிறோம்.

வர்கள் இவ்வுண்மையை ஏற்றுக் கொள்கின்றனர். மனித அறிவுக்கு எட்டாத இந்த உண்மையையும் இது போன்ற வேறு உண்மைகளையும் மேற்சொன்ன அடிப்படையில் ஏற்றுக் கொள்ளும் மனநிலையைக் கிறித்தவர்கள் **விசுவாசம்** என்னும் பெயரால் வழங்குவர். (இச்சொல்லுக்கு இருக்கும் சாதாரணப் பொருளை மாற்றி, ஏற்றுக் கொள்ளுதல் என்னும் பொருளைத் தந்திருப்பது கவனிக்க).

வள்ளுவர் இல்வாழ்க்கைபற்றிக் கூறத் தொடங்குகையில் இம் மூவரைத்தான் குறிப்பிடுகிறார் என்பது எம் துணிபு.

இனி, ஏன் இங்ஙனம் குறிப்பிடுகிறார் என்பதுபற்றி ஆய்வோம்.

'இயல்புடைய மூவர்' என்னும் போது, ''யான் பாயிரத்தில் கூறியவாறு ஆதிபகவன், வாலறிவன், மலர்மிசை ஏகினான் என்னும் **இயல்புடை மூவர்**'' என்று குறிப்பிட்டிருக்கக் கூடும்.

இல் வாழ்வான் என்பான் 'இயல்புடைய மூவர்' என்னும் அடியைச் சிறிது விரித்துரைத்தால் 'இல்வாழ்வான் என்பான் (அந்த இல்வாழ்வானின்) இயல்புடைய மூவர்' என்று பொருள் தரக்கூடும். அதாவது மேற்கூறிய **மூவர் உலகில் வாழும் இல்லறத்தானின் இயல்பு கொண்டவர்** என்னும் கருத்துண்டாகும். இது எங்ஙனம் ஆகும்? கடவுள் ஆண்—பெண் என்னும் இயல்பனைத்தையும் கடந்தவனாயிற்றே. எங்ஙனம் இல்வாழ்வானின் இயல்பைக் கொண்டிருக்க இயலும்? இதனைச் சிறிது ஆய்வோம்.

உலகில் நாம் காணும் எல்லா நன்மைக்கும் ஆதிபகவனே மேல்வரிச்சட்டம். அவனது எண்ணப்படியே அனைத்தும் உருவாகின்றன. அவனிடத்துள்ள அளவில்லா நன்மையின் ஒரு சிறு பிரதிபலிப்பே இவ்வுலகிலுள்ள நன்மைகள் எல்லாம்.

இந் நன்மைகளுள் மிக முக்கியமானதொரு இடம் வகிப்பது இல்வாழ்க்கை என்பதில் ஐயமில்லை. இறைவன் ஆதியில் படைத்த மனிதர் (ஆண்—பெண்) வேறு மனிதப் பிறவிகளை உருவாக்கத் தம்முடன் ஒத்துழைக்கும் கருவியென இவ்வாழ்க்கையை இறைவன் ஏற்படுத்தினான். மனிதப் பிறவிகளை

உருவாக்குதலுக்கு அவனே முதற்காரணம். ஆணும் பெண்ணும் துணைக் காரணம் என்னலாம். 'நல்லாற்றின் நின்ற துணை' என்றது இதைக் குறிப்பிடும்.

மேலும், இறைவன் தனிமையில் உள்ளவன் அல்லன், மூவர் என்று மேலே விளக்கப்பெற்றதன்படி அன்புறவில் உள்ளவர் தந்தை, மகன், பரிசுத்த ஆவியாகிய மூவரும் அளவிறந்த அந்நியோந்நியத்தில், அன்புறவில் அநாதியாய் உள்ளவர். இந்த அன்புறவைப் பிரதிபலிப்பதே இல்வாழ்க்கை. இதில் ஆண், பெண், மக்கள் மிகுந்த அன்புறவில் வாழ வேண்டியவர்கள்.

> ''அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
> என்போடு இயைந்த தொடர்பு'' 73

என்னும் குறளுக்கு யாம் கூறிய விளக்கத்தின்படி, இல்வாழ்க்கை என்பது உடலும் உடலும் இணையும் உறவன்று. உள்ளத்தால் இணைவதே என்னும் கருத்தை உடலிச்சை, தலை தூக்கி திற்கும் இன்றைய சூழ்நிலையில் மக்கள் புரிந்துகொள்ளாமற் போகலாம். எனினும், இல்வாழ்க்கையின் உண்மையான அம்சம் இந்த அன்புறவே என்பது திண்ணம்.

இந்த அன்புறவு மூவராகிய இறைவனிடம் விளங்கும் அன்புறவைப் பிரதிபலிக்க வேண்டும் என்பதால்தான் ''இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான், முயல்வாருள் எல்லாம் தலை'' என்று வள்ளுவர் கூறுகிறார்.

இவ்வுலகில் பிறக்கும் மனிதன் எவனும் இயல்பினால் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பதற்கில்லை. பிறந்த பின் வளர்ந்து, தக்க வயதில் விருப்பமிருந்தால் இல்வாழ்க்கை ஏற்பவனே. ஆகவே, இக்குறள் மனிதனைக் குறித்ததன்று; இயல்பாகவே அன்புறவில் அநாதியாய் உள்ள மூவராகிய இறைவனையே குறிப்பிடும். அந்தத் தெய்வீக அன்புறவைப் பிரதிபலிக்கும் வகையில் வாழ முயல்வானானால் தலை சிறந்த வாழ்க்கை வாழ்பனாகின்றான் என்பது கருத்து. 'பிரதிபலிப்பு' என்று இங்குக் கூறப்பட்ட கருத்து விவிலியத்திலும் ஓரளவு காண்கிறோம்.

''விண்ணிலும் மண்ணிலும் உள்ள ஒவ்வொரு குலத்தவரும் எத்தந்தையிடமிருந்து இறைவனின் பிள்ளைகள் என்னும்

பெயரைப் பெறுகிறார்களோ அவர் முன்,'' என்னும் வசனம் எபேசியர் 3: 14-15ல் காண்கிறோம். இதன் உட்பொருள் இறைவனிடமிருந்தே ஆன்மீக அல்லது இயற்கை சார்ந்த மனித குடும்பம், **'குடும்பம்'** என்னும் பெயரைப் பெறுகிறது.

மூவராகிய இறைக்குடும்பமே, பலராக உள்ள மானிடக் குடும்பத்துக்கு ஆதி மூலம்— ஊற்று என்க. குடும்பம் என்றவுடன் ஆண்—பெண்—கணவன்—மனைவி நினைவுக்கு வரும். இறைக் குடும்பத்தில் ஆண்—பெண் என்னும் நிலையிருக்க வியலாது. ஆனால், ஆண்—பெண் இருவர்க்குமிடையே இருக்க வேண்டிய இன்றிமையாத அம்சம்—அதாவது அன்புறவு உண்டு. இப் பொருளில்தான் தெய்வீகக் குடும்பம்பற்றிப் பேச வியலும். சாதாரணக்குடும்பமும் ஆண்—பெண்—மக்கள் இருப்பதாலேயே உண்டாவதில்லை. குடும்பத்தைக் குடும்பமாக்குவது அன்புறவே.

'அறம், பொருள், இன்பம், வீடு' என்கிறோம். இந்த வீடு நான்கு சுவர்கள் கூரை முதலியவற்றால் ஆனதன்று. இன்பத்தைத் தரும் அன்புறவினால் உண்டாவது. ஒரே வீட்டில் இருந்து கொண்டு அன்புறவின்றி வாழ்ந்தால் அது 'வீடாகாது, நரகமே' என்று மக்கள் சாதாரணமாகப் பேசுவது அறிவோம். வீட்டைக் குடும்பமாக்குவது அன்பே என்பது தெளிவு. இக் கருத்தில் பேரின்ப வீடாகிய விண்ணுலகை 'வீடு' என்பது மிகப் பொருத்தமேயன்றோ? 'வீடு' என்பதற்கு 'இல், இல்லம்' என்னும் பெயரும் உண்டு. இனி, 'இல்வாழ்வான்,' என்பது 'இறுதியில் பேரின்ப இல்லத்தை எய்தக் கூடிய முறையில் வாழ்பவன், வாழ முயல்பவன்' எனவும், 'இல் வாழ்க்கை' என்பது அந்த வகையில் வாழும் வாழ்க்கை எனவும் பொருள்படக்கூடும். இதை மனத்தில் கொண்டால் 'குடிமை' அதிகாரத்தில் 'இல் பிறந்தார்' என்னும் தொடருக்கும் பேரின்ப இல்லத்தை எய்தக் கூடிய ஆன்மீகப் பிறப்பைப் பெற்றவர்கள்' என்று பொருளாகும்.

இதுவே விவிலியம் கூறும் இரண்டாம் பிறப்பு; புதுப் பிறப்பாகும்.

''எவனும் மேலிருந்து பிறந்தாலன்றிக் கடவுளுடைய அரசைக் காண வியலாது என்று உண்மையிலும் உண்மையாக உமக்குச் சொல்லுகிறேன்,'' என்றார். அதற்கு நிக்கொதேமு, ''ஒருவன் வயதான பின் எப்படி பிறக்கவியலும்? மீண்டும் தாயின் வயிற்றில்

நுழைந்து பிறக்கக் கூடுமோ?'' என இயேசு கூறியதாவது: ''உண்மையிலும் உண்மையாக உமக்குச் சொல்லுகிறேன்; ஒருவன் நீரினாலும் ஆவியினாலும் பிறந்தாலன்றி, கடவுளுடைய அரசில் நுழைய வியலாது. ஊனுடலால் பிறப்பது ஊனுடலே. ஆவியால் பிறப்பதோ ஆவி. நீங்கள் மேலிருந்து பிறக்க வேண்டு மென்று நான் உமக்குக் கூறியதால் வியப்படையாதீர். காற்று, தான் விரும்பிய பக்கம் வீசுகின்றது. அதன் ஓசை கேட்கிறது. ஆனால், எங்கிருந்து வருகின்றது என்பதோ எங்குச் செல் கின்றது என்பதோ தெரிவதில்லை. ஆவியால் பிறக்கும் எவனும் அப்படியே.'' (அரு.3: 3-8).

இத்தகைய புதுப் பிறப்பு, உண்மையான குடும்ப வாழ்வை (இல்வாழ்க்கை) அமைக்க இன்றிமையாதது. இப்பிறப்பில்லை யேல், பேரின்ப வீட்டிற்கு (விண்ணக இல்லத்துக்கு) வழியிராது.

இதையெல்லாம் எண்ணியே ஆசிரியர் **இல்வாழ்க்கைப்** பகுதியின் தொடக்கத்திலேயே அந்த இல்வாழ்க்கைக்கு ஆதி மூலமும் ஊற்றுமாகவும், (இல்வாழ்வின்—அன்புறவு வாழ்வின்) **இயல்புடைய மூவர்** குறித்துக் கூறுகிறார் என்க.

இனிக் குறட்பாக்களை விளக்குவோம்.

'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்றிருப்பதால் இதனை ஆழ்ந்து ஆய்வது அவசியம்.

இவ் ஆய்வின் முற்பகுதி மேலே விளக்கப்பட்டது.

திருக்குறள் முதல் மூன்று அதிகாரங்களில் கூறப்படும் ஆதிபகவன், வான், நீத்தார் என்பவரே இம்மூவர் என்பது பொருத்தமான உரையாகத் தோன்றுகிறது.

இக்குறளின் முழு வாசகம் :

இல் வாழ்வான் என்பான் (அந்த இல் வாழ்வானின்) இயல்புடைய மூவர்க்கும் துணையாவான் என்பதாம்.

மேற்கூறிய **மூவர்க்கு** இல்வாழ்வான் இயல்பு உள்ள தென்றால் பொருள் என்ன?

உலகில் 'மனிதப் பிறவிகள் உண்டாக வழியாய் உள்ளான்; இல்வாழ்வான் இப்பிறவிகளைப் படைக்கிறான் என்றன்று;

குழந்தைகளாகப் பிறப்பதற்கு மனிதன் 'மூவர்க்கு'த் துணை செய்கிறான்; மனிதனுக்குள்ள உயிர் (ஆன்மா) அம்மூவராலேயே படைக்கப்படுகிறது. இல் வாழ்வான் (மனைவியும் கணவனும் கூடி) அவ்வுயிருடன் சேர வேண்டிய உடல் உருவாகத் துணை புரிகிறான். உடல் இன்றி மனிதப்பிறவி இல்லையன்றோ? இவ்வுடலை இறைவனே நேரடியாகப் படைக்கவியலாதென் றன்று. தானே படைத்த மனிதரைக் கொண்டு தன் திட்டம் நிறைவேற இறைவன் செயல் புரிவது தனது திறனைப் பிறரோடு பகிர்ந்து கொள்ளவே. வல்லமையுள்ளவன் தன் வல்லமையைத் தனக்கேவைத்துக் கொள்ளாமல் பிறரோடு பகிர்ந்து கொள்ளும்போது தனது நன்மைத் தனத்தை வெளிப் படுத்துகிறான். இதுதான் இறைவனது படைப்புத் தொழிலில் பங்கு கொள்வது. இதனால்தான் விவிலியத்தில் விண்ணிலும் மண்ணிலும் உள்ள ஒவ்வொரு குலத்தவரும் பரம தந்தையாகிய இறைவனிடமிருந்தே 'பிள்ளைகள்' என்னும் பெயரைப் பெறு கின்றனர் என எழுதியுள்ளது. (எபே.3,14). அதாவது இறைவன் 'தந்தையாயிருப்பது போல உலகிலும் ஒருவன் தந்தையாவது அவனிடமிருந்து தந்தைக்குரிய தன்மையைப் பெற்றுக்கொள்வதால் என்க.'

ஆனால், உலகில் ஆணுக்குத் துணை ஒருத்தி தேவை, தந்தையாவதற்கு. ஆணும் பெண்ணும் இணைந்தே பிள்ளைகளை உருவாக்குகின்றனர். இறைவனுக்கு ஆண்பால் பெண்பால் என்றில்லை. அனைத்தும் கடந்த அவனுக்கு மனிதத் தாய் தந்தையரிடம் உள்ளதெல்லாம் சடத்துடன் உறவில்லாமல் அளவிடவியலாத நிலையில் உள்ளது. தன் நிறைவிலிருந்தே அவன் மனிதப்பிறவிகட்குத் தந்தையாகும் பேற்றை அளிக் கிறான்.

இந்த இயல்பு மிக உன்னத நிலையில் அம்மூவரிடம் உள்ளது. அதனால்தான் இல் வாழ்வான் இயல்புடைய மூவர்க்கும் துணை என்பதில் தவறு இல்லை என்க.

42. ''துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை.''

இக்குறளில் 'துறந்தார்' என்னும் சொல் துறவிகளைக் குறிப்பதாகவே உரையாளர் பெரும்பாலும் கூறுவர். துறவி

களுக்கு இல்வாழ்வார் துணை செய்தல் வேண்டும் என்னும் கருத்துத்தான் இங்கு வள்ளுவர் கூறுவது என்று திட்டமாகச் சொல்வதற்கில்லை.

ஆதிபகவன் ஐந்தவித்தான், வான், ''இயல்புடைய ஆகிய மூவருக்கு'' இல்வாழ்வான் துணை எனக்கூறிய பின்னர், அடுத்த படியில் துறவிகளுக்குத் துணையாயுள்ளான் எனக் கூறுவதில் அதிகப் பொருத்தம் உள்ளதாகத் தோன்றவில்லை.

ஆகவே 'துறந்தார்' என இக்குறளில் குறிப்பிடப்பட்டுள்ளது 'நீத்தார்' அதிகாரத்தில் வரும் 'துறந்தாரை'யே குறிப்பிடுவதாகத் தோன்றுகிறது.

''துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
இறந்தாரை எண்ணிக்கொண் டற்று'' என்கிறார்.

இதில் 'துறந்தார்' என்றது 'நீத்தா'ராகிய ஐந்தவித்தானையே யாகும் என்று வேறிடத்தில் விளக்கப் பெற்றது.

இனி, இல்வாழ்வான் நீத்தாராகிய ஐந்தவித்தானுக்கு, அஃதாவது, மனு உருவமெடுத்த இறைவனுக்குத் துணையாவது எங்ஙனம்?

''இல் வாழ்வதெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டே'' என்கிறார் வள்ளுவர். ஐந்தவித்தான் 'தாளாற்றித் தந்த பொருள் எல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற் பொருட்டே' என்றும் கூறுகிறார். இத்தகைய 'வேளாண்மை' நிகழ வேண்டுமாயின், அதை ஏற்பதற்கு ஆட்கள் வேண்டுமல்லவா? இவர்கள் இல்லறத்தில்தானே தோன்ற வேண்டும்! இக்கருத்தில் இல்வாழ்வான் இயல்புடைய மூவர்க்கும் துணை என்று ஏற்கெனவே கூறப்பட்டது முந்திய குறள் விளக்கத்தில்! அம்மூவருள் 'நீத்தாராகிய துறந்தார்க்குச் சிறப்பாகத் துணையாகின்றான் என்றும் கூறலாம். இயல்புடைய மூவர்க்கும் இல்வாழ்வான் துணையாவது, மனிதன் உலகில் பிறப்பதற்கு என்றாகும். நீத்தார்க்குத் துணையாவது, அவன் துன்புற்று (தாளாற்றி)ப் பெற்றுக் கொடுத்த அருட் பொருளை அடைய என்றாகும். இவ்விளக்கத்தில்தான் இக் குறளில் காணும் 'துறந்தார்' என்னும் சொல்லுக்குப் பொருள் சிறப்பாகத் தோன்றுகிறது.

துவ்வாதவர் (வறுமையால் வாடுவோர்) க்கும் இல் வாழ்வான் துணையாவன்.

இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்புதலுக்காக என்றால் உறவு எதுவும் அதாவது அகத்தொடர்போ புறத்தொடர்போ அற்றவராய்—புதிதாய் வருபவரான 'விருந்தினர்க்குத் துணையாகவே இல்வாழ்வான் உள்ளான்' என்று பொருள். இத்தகைய 'விருந்தினருள்' பெரும்பாலும் வறியவரே உள்ளனர் என்பது கண்கூடு. தொடர்பற்ற எவரையும் வரவேற்று ஓம்புதல் வேண்டுமெனின், ஆதரவற்ற வறியவரைச் சிறப்பாக ஓம்புதல் வேண்டுமன்றோ? இதை இல்வாழ்வானே சிறப்பாகச் செய்தல் வேண்டும். ஏனெனில், அவனிடம் மட்டுமே வசதி பலஉளவாகும். ஆயினும், துறவியரும் இக்கடனைச் செய்தல் வேண்டும். அவர்களிடம் 'விருந்தினர்' தொடர்பற்றார் துணை நாடிச் செல்லுதல் கூடும். ஆயினும் இத்தகைய **விருந்தினர்**, உலகில் வாழும் இல்லறத்தாரையே பெரிதும் நாடி வருவர். துறவியரை நாடிச் செல்வதில்லை. அது பெரும்பாலும் இயலாத தொன்று. ஆகவேதான் துவ்வாதவர்க்கு (விருந்தினருள் மிகப் பெரும் பகுதியாயுள்ளவர்க்கு) பெரும்பாலும் இல்வாழ்வான்தான் துணை நிற்றல் வேண்டும்.

**இறந்தார்க்கும்** துணை அவனே.

> இறந்தார்—உயிர் நீத்தார் என்னும் பொருள் ஈண்டு சிறக்கவில்லை எனத் தோன்றுகிறது. இறந்தார் என்னும் சொல்லுக்கு நன்னெறியைக் கடந்தவர் (புல. குழந்தை) என்னும் பொருளும் உண்டு.

இறந்தார்—நெறியைக் கடந்தவர்—(பரிமேலழகர் குறள் 159 காண்க.)

> இறத்தல் = கடத்தல்.
> இறந்தார் = கடந்தார்.

ஐந்தவித்தானாகிய நீத்தார் தாளாற்றித்தந்த பொருளைத் **தக்கார்க்கு** வேளாண்மை செய்பவன் இல்வாழ்வான் எனின்,

நெறி கடந்து செல்வோர்க்கு மிகச் சிறப்பாக அவன் துணை நிற்க வேண்டும் என்னும் பொருள் சிறக்கிறதன்றோ!

துறவியரும் இப்பணியை மேற்கொள்ள வேண்டும். எனினும் இதில் துறவிகட்கும் துணை நிற்க வேண்டியவர், உலகில் பெருவாரியாக உள்ள இல் வாழ்க்கையினரே. துறவியர் மிகச் சிறு பகுதியினரேயாதலால் செய்ய வேண்டிய இவ் வேளாண்மைப் பணியை அவர்கள் மட்டுமே செய்வதாயிருந்தால் வேண்டிய அளவில் செய்து முடிக்க இயலாது. சான்றோர் அனைவருமே சான்று பகரும் பணியில் இறங்கினால்தான் பணி பயன் தரும். சான்றோருள் மிகப் பெரிய பகுதியினர் இல்வாழ்வோரே என்பது தெளிவு.

சான்று பகரும் கடன் ஆதியிலிருந்தே ஐந்தவித்தானின் சீடர் அனைவர் மீதும் சுமந்ததாயிற்று.

சீடர் என்னும் தனிப்பட்ட முறையில் இதற்கென்றே—முழு நேரப் பணியாகச் செய்வதற்குக் குறிக்கப்பட்ட அப்போஸ்தலர் (அனுப்பப் பட்டவர்கள்) களை மட்டும் குறிப்பதில்லை. இங்ஙனம் சிறப்பாகத் தேர்ந்து கொள்ளப் பெற்றவர்களுக்கு ஐந்தவித்தான் தந்த கட்டளை: ''நீங்கள் போய் எல்லா இனத்தாரையும் சீடராக்குங்கள்'' என்பதாம். அவரை ஏற்றவர் அனைவருமே சீடர். அனைவருமே அவருக்குச் சாட்சிகளாயினர். திருச்சபையின் ஆதி வரலாறு சிறப்பாக இதை உணர்த்தும். 'அப்போஸ்தலர் பணி' என்னும் புதிய ஏற்பாட்டுப் பகுதி இவ் வரலாற்றை ஆரம்பத்திலிருந்து எடுத்துக் காட்டுகிறது.

43. ''தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை.''

முந்திய குறளில் குறிப்பிட்ட

துறந்தார்

துவ்வாதவர்

இறந்தார்

இவர்கட்கு இல்வாழ்வான் துணையாயிருத்தலால்,

தென்புலத்தார்

தெய்வம்

விருந்து

ஒக்கல்

தான்

ஆகிய ஐவகையினரையும் ஓம்புதல் வேண்டும். இதைத் தலையாய கடன் எனக் கருத வேண்டும் இல்வாழ்வான்.

**தென்புலத்தார்—**

தென்—என்பது திசையைத்தான் குறிப்பிடுகிறதா? உலகனைத்திற்குமே பயன்பட நூல் இயற்றிய வள்ளுவர் ஒரு திசையைக் குறிப்பிட்டு இத்திசையைச் சார்ந்தவர்களை (அவர்கள் யாராயினும் சரி) ஓம்புதல் தலையாயகடன் என்று எங்ஙனம் கூறுவார்? ஆகவே 'தென்' என்னும் சொல் ஈண்டுத் திசையைக் குறிப்பதன்று. 'அழகிய, அரிய' என்னும் பொருளில் தான் ஆளப்பட்டிருத்தல் வேண்டும்.

புலத்தார்—'புலம்' என்பதனடியாகப் பிறந்த சொல் புலம். புல அர்—புலவர். ஐம்புல நுகர்ச்சியுடையோர் 'மனம் போனபடி நடப்பவர் என்னும் பொருளது' (புலவர் குழந்தை) பொதுவாக மாந்தரைக் குறிக்கும்.

தென்—அழகிய, அரிய.

புலத்தார்—புல நுகர்ச்சியுடையவர். அஃதாவது, புலன்களை நுகர வேண்டிய முறையில் நுகர்பவர்—அறிவுத் திறன் கொண்டு—தக்க முறையில் நுகர்பவர்—அளவுக்கு மேல் நுகராதவர் என்று ஏன் பொருள்படாது இச்சொல் தொடர்?

புலன்களை நுகரவேண்டிய அளவில் நுகர்வோர், புலன்களைக் கடந்த இறைவனையும் அப்புலன்களை அவித்தானையும் நுகர வேண்டிய முறையில் நுகர்பவராவர் அன்றோ?

ஆகவே, தென் புலத்தார் என்னும் சொல்தொடரை 'இறைவனை உணர்ந்த அழகிய—அரிய அறிவினையுடையவர்' என்னும் பொருளில் ஏன் கொள்ளலாகாது?

இத்தகையோரை இல்வாழ்வான் ஓம்புதல் தலையாய கடன் எனக்கொள்வது முறைதானே!

தெய்வம்—இச்சொல் 'கடவுள்' என்னும் பொருளில் ஆளப் படுவது வழக்காகிவிட்டது. ஆனால் இச்சொல் மேலானவர் என்னும் பொருளைக் கொண்டு கூறிய பெயரேயாகும். (புலவர் குழந்தை) தெய்வம்—மேன்மை, சிறப்பு; ஓரளவு தெய்வீகத் தன்மை எனினும் பொருந்தும். ஆனால் 'கடவுள்' என்னும் பொருள் இச்சொல்லுக்குப் பொருந்தாது. (காரணம்—புலவர் தெய்வநாயகம் இயற்றிய 'மூவர் யார்?' எனும் நூலில் பக். 40—44காண்க).

இதன்படி நோக்கின் தெய்வம் என்னும் சொல் கடவுளுக்கும் மனிதருக்கும் இடையேயுள்ள மிக மேலான வர்களை — தெய்வீகத் தன்மை படைத்தவர்களையே குறிப்ப தொன்றாகும். இவர்களைத் 'தேவர்' என்பதில் தவறு இல்லை.

இனி இல்வாழ்வான் தேவர்களை ஓம்புதல் வேண்டும் என்றால் என்ன பொருள்?

முதலில் இத்தகைய 'தேவர்கள்' உண்மையாகவே உள்ளனரா? யார் அவர்கள்? எனத் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

இச் சொல்லுக்கு மேலானவர், சிறப்புடையோர், ஓரளவு தெய்வீகத் தன்மை கொண்டவர் என்று பொருள் கொண்டால், இவ்வுலகிலேயே இத்தகையோர் உள்ளனர் என்று கூறத் தடை யில்லை. விவிலியத்தின் கருத்துப்படி இறைவன் மனிதனாக உலகுக்கு வந்ததின் உன்னத நோக்கம் பாவத்தால் சீரழிந்து, இறை அருளை இழந்திருந்த மனிதனுக்கு ஆதியில் இறைவன் தந்திருந்த அருட்கொடைகளை மீண்டும் அருளி தமது கடவுள் இயல்பில் பங்கு தருவதற்கேயாகும்.

''தமக்கேயுரிய மாட்சிமையாலும், ஆற்றலாலும் நம்மை அழைத்த இறைவனை அறியச் செய்யும் அறிவின் வாயிலாக,

இறைப்பற்றுடன் கூடிய வாழ்வை வளர்க்கும் அனைத்தையும் அவரது தெய்வீக வல்லமை நமக்கு வழங்கியுள்ளது. இறைவன் வாக்களித்த கொடைகள் அந்த மாட்சிமையாலும் ஆற்றலாலும் நமக்கு வழங்கப்பட்டன. மதிப்பும் மாண்பும் மிக்க இக்கொடைகளால் நீங்கள், இச்சையின் விளைவாக இவ்வுலகிலுள்ள அழிவுக்குத் தப்பி, **இறை இயல்பில் பங்கு பெறக்கூடும்.''** (2 இரா. 1:3-4).

''மாந்தர் அனைவருக்கும் மீட்பளிக்கும் கடவுளின் அருள் பிரசன்னமாகி, நாம் இறைப் பற்றின்மையையும் உலக இச்சைகளையும் விட்டொழித்து, விவேகத்தோடும் நீதியோடும் பக்தியோடும் இம்மையில் வாழ நம்மைப் பயிற்றுகிறது. இவ்வாறு வாழும் நாமோ, மகத்துவமிக்க கடவுளும், நம் மீட்பருமாகிய இயேசு கிறிஸ்துவின் மாட்சிமை பிரசன்னமாவதால், மகிழ்வளிக்கும் நம்முடைய நம்பிக்கை நிறைவேறுமென எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறோம். இவர் நம்மை எல்லா அக்கிரமத்திலிருந்தும் மீட்கவும், நம்மைத் தூயவர்களாக்கி, நற்செயல்களில் ஆர்வமுள்ள ஓரினமாகத் தமக்குச் சொந்தமாக்கிக் கொள்ளவும் தம்மை நமக்காகக் கையளித்தார்.'' (தீத்து 2:11-14).

இங்ஙனம் புனிதராக்கப்பட்டு இறை இயல்பில் பங்கு பெற்றுப் புனித வாழ்வு நடத்துபவர்கள் ஐயமின்றி ஓரளவு தெய்வீகத்தை அடைந்தவர்களாய் மேலானவர்கள், சிறப்புடையவர்களாகிறார்கள். ஆனால் இவர்களைப் 'புனிதர்' என்று அழைக்கிறோமேயன்றி 'தேவர்கள்' என்று அழைப்பதில்லை. புனிதராயினும், இறையியல்பில் பங்கு பெற்றவராயினும் இவர்கள் மனிதப் பிறவிகளே.

ஆனால், இம் மனிதப் பிறவிகளுக்கு மேலானவராகவும், கடவுளுக்குக் கீழ்ப்பட்டவராகவும் உள்ள உயிர்களைப் பற்றி விவிலியம் திட்டமாகக் கூறுவது காண்கிறோம். அவர்களுக்கு 'அசரீரிகள்' என்னும் பெயர் உண்டு. ஏனெனில், சரீரகக் கண்களால் காணமுடியாதவர்கள், ஐம்புலன்களுக்கும் அப்பாற்பட்டவர்கள். மனிதருக்குள்ள உடல் அவர்களுக்கு இல்லை. அறிவும் அன்பும் மேன்மையும் மனிதனைவிட எவ்வளவோ அதிகமாகக் கொண்டவர்கள். மனிதரைவிட எவ்வளவோ அதிகமாக வலிமையும் திறனும் படைத்தவர்கள்.

இத்தகையவர்களை ஓம்புதல் என்றால் என்ன?

ஓம்புதல் என்றால்—பாதுகாத்தல்—வரவேற்று உபசரித்தல்—போற்றுதல் என்னும் பொருள் உண்டு. மேற்கூறிய மேலானோர் (புனிதர்) தேவர்கள் இவர்களைப் பொறுத்தமட்டில் பாதுகாத்தல் என்னும் பொருள் பொருந்தாது. உபசரித்தல் என்பது உலகில் உள்ள புனிதர்களுக்குப் பொருந்தும். தேவர்களைப் பொறுத்த மட்டில் 'போற்றுதல்' சிறப்பாகப் பொருந்தும். போற்றுதல் என்னும் போது மேன்மை பாராட்டுதல், புகழ்தல் என்று மட்டு மல்ல, அவர்களது பாதுகாப்பை, உதவியை நாடுதல் என்றும் பொருள்படும். உண்மையில் 'தேவர்கள்' எனப்படும் இவர்கள் கடவுளுக்கும் மனிதருக்கு மிடையே இருந்து மனிதர்க்கு நன்மை செய்பவராகவும், இறைவனிடமிருந்து மனிதரிடம் வரும் தூதர் களாகவும் பணி செய்வதை விவிலியம் முழுதும் காண்கிறோம். இதனால் இவர்களுக்கு 'வான்தூதர்' என்று பெயரும் உண்டு. மேலும் ஒவ்வொரு மனிதனுக்கும் துணையாகவும் காவலாகவும் இருக்குமாறு இறைவன் இந்த அசரீரிகளுக்குக் கட்டளை தந்துள்ளார் என்று விவிலியம் கூறும்.

''தீமை உன்னை அணுகாது; துன்பம் உன் உறைவிடத்தை நெருங்காது. ஏனெனில், நீ செல்லும் இடங்களில் எல்லாம், உன்னைக் காக்கும்படி தம் தூதருக்கு உன்னைக் குறித்துக் கட்டளையிட்டார். உன் கால் கல்லில் மோதாதபடி அவர்கள் உன்னைக்கைகளில் தாங்கிக்கொள்வார்கள்''. (சங்.90:10-12).

இவர்களுக்குக் 'காவல் தூதர்' என்னும் பெயர் உண்டு. இறைவன் கட்டளைப்படி இவர்கள், மனிதப் பிறவிகளைவிட இயல்பாலும் அறிவாலும் திறமையாலும் எவ்வளவோ மேம் பட்டவர்களாயினும், எளிய பலவீனமுள்ள மானிடர்க்குத் துணை யாகவும் காவலாகவும் நியமிக்கப்பட்டிருப்பதால், அவர்களைப் போற்றுவதும் அவர்களது துணையையும் உதவியையும் பாது காப்பையும் நாடுவதும் பொருத்தமேயன்றோ? இதுவே 'தெய்வம்,' என்னும் சொல்லால் குறிக்கப்படும். மேலானோர், புனிதர், தேவர் என்னும் வானவர் இவர்களை ஓம்புதலாகும் என்க.

**விருந்து** — விருந்து ஓம்புதல் பற்றி 'சான்றாண்மை' என்னும் எம் நூலில் காண்க.

**ஒக்கல்:** உறவினர் இவர்களைப் பாதுகாத்தல், வேண்டிய உதவி புரிதல் பற்றி அதிகம் சொல்லத் தேவையில்லை.

**தான்—**

இறுதியாக ஓம்பப்பட வேண்டியது 'தான்' அதாவது இல்வாழ்வான், அவனது குடும்பம்.

'ஓம்பல் தலை' என ஈண்டுக் குறிப்பிடப்பட்டுள்ள 'ஐம்புலத் தாறனுள்' காணும் ஒழுங்குமுறை கவனித்தற்குரியது.

முதலில்—தென்புலத்தார், மேற்கூறிய பொருளில் முதலிடம் பெற்றுள்ளனர். இவர்கள் உலகில் வாழ்வோர்; கண்ணுக்குப் புலப்படுவோர்; இறை உணர்வு பெற்றோர். பிறர்க்கு முன்மாதிரி யாக விளங்குதலால் முதலிடம் பெறுகின்றனர் எனத் தடை யில்லை.

இரண்டாவதாக—'தேவர்'கள் கண்ணுக்குப் புலப்படாமல் நம்மைக் காப்பவர்—அவர்கள் துணைநாடி ஓம்புதல் பயன் தருவ தால் இரண்டாவது இடம்.

மூன்றாவதாக—விருந்து

நான்காவதாக—உறவினர்

இறுதியாக—தான். தன்னலம் நிறைந்த மனிதன் தனக்கு முதலிடம் கொடுக்கும் மனப்பான்மையுள்ளவன். அதற்கு அவன் இடம் தரலாகாது. தன்னையே ஓம்புதல் இறுதிக் கடனாக வைத்துக் கொள்ளுதல் வேண்டும் என்னும் கருத்து வற்புறுத்தப் படுகிறது. ஒருவன் முதலிடம் பெற விரும்பினால் அவன் தன்னை இறுதி இடத்தில் வைக்கவேண்டும். தன்னைத் தாழ்த்துகிறவன் உயர்த்தப்பெறுவான்—முதலானோர் கடைசியாவர்; கடைசி யானோர் முதலாவர் என்று இயேசு மீட்பர் அருளிய வாக்குக்கு ஏற்ற கருத்து இது என உணர்க.

44. ''பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்.''

இக் குறளில் வரும் 'ஊண்' என்னும் சொல்லுக்கும், விருந்தோம்பல் அதிகாரத்தில் பத்துக் குறட்பாக்களிலும் காணும் 'விருந்து' என்னும் சொல்லுக்கும் உரையாளர் பெரும்பாலும்

வயிற்றுக்குரிய உணவு என்னும் பொருளையே தருவது காண்
கின்றோம்.

ஆனால், 'ஊண்' என்னும் சொல்லுக்கு வெறும் வயிற்றுணவு
என்னும் பொருள் மட்டுமே உண்டா? அங்ஙனமே 'விருந்து'
என்னும் சொல் 'உணவுடன்' மட்டும் தொடர்பு கொண்ட சொல்
தானா? ஊண் என்னும் சொல்லுக்கு **'நுகர்வு'** என்னும்
பொருளும் உண்டு என்பது கவனித்தற்பாலது. உணவு என்பது
ஐம்புலன்களுள் வாயினால் நுகரப்படுவது மட்டுமே. மெய்யினால்
(உடலால்) நுகரப்படுவது நல்லதாயின் 'உடற்கின்பம்.' [மக்கள்
மெய் தீண்டல் உடற்கின்பம்.....குறள்-65]. நோய் முதலிய
வாயின் உடற்குத்துன்பம். கண்ணால் நுகரப்படுவது—
வேறொரு வகையான இன்பம்—இனிய காட்சியாயின் இன்பம்;
துயரக் காட்சியாயின் துன்பம். அங்ஙனமே மூக்கினால் நுகரப்
படுவதும் இன்பம் தரலாம்—அல்லது துன்பம் தரலாம்.
செவிக்கும் இது பொருந்தும். 'மக்கள்.....சொற் கேட்டல்
இன்பம் செவிக்கு' (குறள்-65) மழலைச் சொல் கேட்பது
இன்பம். ஆனால், தீச்சொல் கேட்டல் துன்பமேயன்றோ?
இங்ஙனம் இன்பமோ துன்பமோ நுகர்வதும் 'ஊண்' எனப்படும்.
இங்ஙனம் நுகர்வதற்குக் கருவியாயிருப்பது உயிருள்ள ஆன்மாவே
என்பது தெளிவு. உயிரற்ற உடலில் எப்புலனுக்கும் நுகர்வு
இல்லையென்பதும் தெளிவு. இங்ஙனம் நுகரப்படுவதை,
உண்ணப்படுவது என்பதில் குற்றமில்லை. புலன்களுக்கு உணவு
பொருளாக இருப்பது போல் காண்பனவும் கேட்பனவும் தொடு
வனவும் முகர்வனவும் உள்ளனவன்றோ? உண்ணும்போது உணவு
வாய்வழிச் சென்று உடலுடன் இணைகிறது. அங்ஙனமே
பார்வை முதலிய புலன்களுக்குரியனவும் அவ்வப்புலன்வழி உள்
சென்று உள்ளத்துடன் இணைகின்றன. அங்ஙனம் இணைவது-
தான் புலனறிவு எனப்படும். உள்ளத்துடன் இணைவது நல்ல
தாயின், இன்பம் தருவதாயின் இன்பமும், தீயதாயின் துன்பமும்
நுகர்கிறோம். இங்ஙனம் மெய்யின் மீது படுவது, தொடுவது
வருத்தத்துக்குரியதாயின் துன்பமும் முத்தம், காமம் போன்றவை
யாயின் இன்பமும் நுகர்கின்றோம். அங்ஙனமே வாயில் செல்வது
இனியதாயின் இன்பமும், கசப்பானதாயின் துன்பமும் நுகர்
கிறோம். கண்ணில் படுவது அரிய காட்சியாயின் இன்பமும்,
கொடியதாயின் துன்பமும் அடைகிறோம். இங்ஙனம் மற்றப்
புலன்களுக்கும் நிகழ்வது அறிவோம்.

உணவு உட்கொள்ளப்படுகிறது. அங்ஙனமே மற்றப் புலன் களுக்குரிய பொருள்களும் ஏதோ ஒரு வகையில் உட்கொள்ளப் படுகின்றன. இல்லையேல் புலனறிவு நிகழ்வது எங்ஙனம்? பொருள்கள் வெளியே இருக்கும் வரையில் அறிவு ஏற்படுவதற்கு வழியில்லை. ஏதோ ஒரு வழியில் அவை உயிருடன் கலத்தல் வேண்டும்—இணைதல் வேண்டும். அப்போதுதான் புலனறிவு என்பது நிகழக்கூடும். பொருள்கள் வெளியேயிருப்பினும் உயிரற்ற பிணத்தினுள் கலத்தல் நிகழாததால் அறிவு ஏற்படு வதில்லை. இங்ஙனம் உயிர்—ஆன்மாவுடன் இணைதலை உட் செல்லுதல்—உண்ணுதல்—ஊண் என்பதில் பொருத்தம் காண் கிறோம். ஒரே ஒரு வேறுபாடு. உண்ணும் உணவு வயிறு என்னும் உடல் கூற்றினுள் சென்ற பின்னரே உயிருடன் கலக்கிறது. மற்றப் பொருட்கள் உடல் கூற்றினுள் வேறு பகுதியில் நுழைவதில்லை. புலன் வழியே உயிரின் செயலுடன் இணைந்துவிடும். ஆகவேதான் ஊண் என்னும் சொல்லுக்கு, ஆன்மாவின் இன்ப துன்ப நுகர்வு, ஆன்மாவின் சுக துக்க அனுபவம் என்று அகராதிகள் பொருள் கூறும்.

ஊண் என்னும் சொல்லை இப் பொருளில் கொண்டு இக் குறளை (44) ஆய்வோம்.

**பழியஞ்சி—** மேற்கூறிய துறந்தார், துவ்வாதவர், இறந்தார் இவர்க்குத் துணை நின்று, தென்புலத்தார், தெய்வம் விருந்து, ஒக்கல் இவர்களை ஓம்புதல் தலையாய கடன் என்பதனை மறந்து, தன்னை மட்டும் இல்வாழ்வான் ஓம்பு வானாயின் அவன் குற்றத்தின்பால் படுவான்—பழிக்குள்ளா வான். இப்பழியை அவன் அஞ்சுதல் வேண்டுமன்றோ?

இங்ஙனம் அஞ்சுபவனாய், அனைத்து இன்பமும் தனக் கென்றே வைத்துக் கொள்ளாமல், மேற்கூறிய நால்வகை யினர்க்கும் பகுத்து உண்பவனாதல் வேண்டும். அதாவது உணவு முதலான வாழ்க்கையின் எல்லா நுகர்வுகளையும், அந்நால் வகையினரோடு பகிர்ந்து கொள்ளுதல் வேண்டும். இங்ஙனம் பகிர்ந்து கொள்வது இன்ப நுகர்வுகளில் மட்டுமன்று; துன்ப நுகர்வுகளிலும் பகிர்ந்து கொள்ளுதல் வேண்டும். இதனாற்றான் ''மகிழ்வாரோடு மகிழுங்கள், அழுவாரோடு அழுங்கள்'' என்று விவிலியம் கூறுகிறது (உரோ. 12, 15).

இல்வாழ்க்கை இங்ஙனம் அமையுமாயின், அவ்வாழ்க்கை 'வழி எஞ்சல் எஞ்ஞான்றும் இல்', அதாவது, 'ஒழுங்கு இடை யறுதல், (மணக்குடவர்), 'ஒழுகலாறு குறைபட்டு ஒழிதல்' (காலிங்கர்), எந்நாளும் நிகழாது; அதாவது குறை நீங்கிய நிறைவான வாழ்க்கையாக இருக்கும்.

மனிதன் எந்நேரமும் மிகத் தீவிரமாக விரும்புவது—நாடுவது ஊண், உடை முதலிய வசதிகளே. இவற்றைப் போதிய அளவு அடைவதும் வசதிகளை நுகர்வதும் அவனது வாழ்க்கையில் மிகப் பெரிய பிரச்சினையாக உள்ளது யாவருமறிந்ததே. இவற்றுள் ஊண் முதலிடம் பெறுவதும் யாமறிந்ததே. உயிர்வாழ உடை முதலிய வசதிகளைவிட ஊணே மிகத் தேவையானது என்பதை யார் மறுக்க இயலும்? இதை மனத்தில் கொண்டே ஒரு வேளை வள்ளுவர் ஊணை மட்டும் வெளிப்படையாகக் குறளில் குறிப்பிடுகிறார் என்னலாம். ஆனால், அதுதான் அவர் மனத்தில் கொண்டிருந்தது என்பதற்கில்லை. ஏனெனில் ஊணை மட்டும் பகுத்து வாழின் இல்வாழ்வானின் ஓம்புதல் பணி நிறைவுறுகிறது என்று சொல்வதற்கில்லை. ஆகவேதான் மேற் கூறிய விளக்கப்படி 'ஊண்' என்னும் சொல்லால்—ஊணுடன் இணைந்த உடை, உறையுள், மற்றும் வாழ்க்கை வசதிகள் எல்லாமே அடங்கியுள்ளன என்று எண்ண வேண்டியிருக்கிறது. ஊணை மட்டும் பகுத்தளித்து, மற்றெதையும் தனக்கென்று வைத்துக் கொள்பவனின் வாழ்க்கை வழி எஞ்சல் அதாவது குறைபாடு உள்ளதாகவே இருக்கும். நுகரக் கூடிய அனைத் தையும் பகுத்து அளித்து வாழ்பவனே 'எஞ்ஞான்றும்' எஞ்சல் இன்றி வாழ்பவனாவான். மனிதனின் வாழ்நாள் இறுதியில் இறைவனுக்குக் 'கணக்கு' கொடுக்க வேண்டிய நாளில் (உலக முடிவில் மனித இனத்திற்குத் தீர்ப்பிடும் நாளில் ஐந்தவித் தானாகிய இறை மகன் இயேசு கேட்கும் வினாக்களை இப் பொருளில் கொள்வதில் தவறு ஏதுமிராதென்றே நினைக் கிறேன். அன்று வினவப்படும் வினாக்கள்:

ஏழை எளியவர் உருவில் நானே பசியாயிருந்தேன். எனக்கு உணவு கொடுத்தீர்களா? தாகமாயிருந்தேன், குடிக்கக் கொடுத் தீர்களா? அந்நியனாய் இருந்தேன்; வரவேற்றீர்களா? ஆடை யின்றி இருந்தேன்; என்னை உடுத்தினீர்களா? நோயுற்றிருந் தேன்; என்னைக் கண்காணித்தீர்களா? சிறையில் கிடந்தேன்; காண வந்தீர்களா?......

இவ்வினாக்களில் வாழ்க்கை வசதிகள் எல்லாமே அடங்கி யிருத்தல் காண்க.

இவ்வினாக்களுக்கு 'ஆம்' எனப் பதிலிறுக்கக் கூடிய நல்ல வர்களுக்கு இயேசு கூறுவது: "உலகம் தோன்றியது முதல் உங்களுக்காக ஏற்பாடு செய்துள்ள அரசு உரிமையாகுக என்பார் (மத். 25: 31—46). இதுவே என்ஞான்றும் எஞ்சல் இல்லா வாழ்வு என்க.

45. "அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது."

இல்வாழ்க்கை உயர் பண்பு நிறைந்ததும் (பண்பட்டதும்) தென்புலத்தார் முதலானோரை ஓம்புவதாக்கித் துறந்தார், துவ்வாதார், இறந்தாராகிய இவர்களுக்குத் துணையாய் அமையவேண்டுமாயின்—இங்ஙனம் உண்மையில் பயனுள்ளதாய் இருக்கவேண்டுமாயின்—அன்பும்அறனும் உடையதாய் அமைதல் வேண்டும்.

அன்பிலார் தமக்குரியர் என வாழ முற்படாதவர் தென் புலத்தார் முதலானோருள் அன்பிலார் இருப்பின் (உலகில் அத்தகையோர் சிற்சில சமயங்களில் இல்லாமல் இருக்க வியலுமா?) அவர்களைப் புறக்கணிப்பர். அப்போது பண்புள்ள இல்வாழ்க்கை எங்ஙனம் உளதாகும்? அங்ஙனமே அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் நான்கும் இருக்குமிடத்து (குறள். 35) அறம் எங்ஙனம் உளதாகும்?

46. "அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவது எவன்".

மேற்கூறியவாறு அன்பும் அறனும் நிரம்பிய ஆற்றின்—வழியில் ஒருவன் இல்வாழ்க்கை நடத்துவானாயின் (இல்லற மல்லாத) துறவறத்தின் வழியைப் பின்பற்றிப் பெறக்கூடிய பயன்யாது?

ஆறு = வழி, ஆற்றின் = வழியில். துறவறத்தால் பயன்யாது மில்லை என்பதன்று இதன் கருத்து. அன்பும் அறனும் நன்கமை யாத துறவறத்தைவிட அவை மிகுந்த இல்லறமே நலம்

என்பது மறைந்துள்ள கருத்து. இது வெளிப்படையாக 48-ஆம் குறளில் கூறப்படும்.

47. "இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்;
முயல்வாருள் எல்லாம் தலை."

41-ஆம் குறளுக்குக் கூறப்பட்ட விளக்கமே இதற்கும் பொருந்தும். இல் வாழ்க்கை வாழ முயல்வாருள் அனைவருக்கும் இறைவனே மேல் வரிச்சட்டமாயுள்ளான் என்க.

48. "ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை யுடைத்து."

அறவழியில் தான் நிலைத்து நிற்பதோடு, அவ் அறத்து ஆற்றின் (வழியில்) தென்புலத்தார் முதலானோரும் ஒழுகச் செய்து (ஒழுக்கி) இல்வாழ்க்கை நடத்துவது, தவம் செய்யும்— தோற்பவர்களைவிட வலிமை (நோன்மை) உடையது.

இக்கருத்து விவிலியத்தில் மத். 6: 1-6; 16-18 முதலிய வசனங்களில் ஓரளவு காணப்படுகிறது.

அன்பும் அறனும் இல்லா நோன்பு வாழ்க்கை வெறும் வெளி வேடமேயன்றோ? இத்தகைய வெளி வேடத்தைவிட அன்பும் அறனும் உள்ள சாதாரண இல்லற வாழ்க்கை மேலான தன்றோ?

49. "அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்பது இல்லாயின் நன்று."

இல்வாழ்க்கைக்கு அறன் என்னும் பெயர் பொருந்தும்: துறவறம் அறமேயன்று என்னும் பொருள் அன்று இக்குறளுக்கு.

அடிப்படை அறம் இல்லறமேயாகும். இல்லறத்தின் பயனாய் எழுவதே துறவறமும். இல்லறமே யின்றெனில் துறவறம் மேற்கொள்ள மக்கள் எங்ஙனம் உதிப்பர்? ஆகவே, இல்லறம் அடிப்படையானது. அதுவும் எப்பழிக்கும் ஆளாகா திருப்பின் தலை சிறந்தது. பிறர் பழிக்கும் முறையில் இல்லறம் இருந்தால் அது இல்வாழ்க்கை என்னும் பெயருக்கே தகுதியற்ற தாகுமன்றோ? வாழ்வின் நாற்பொருள், வீடு என்னும்

இல்லுக்குத் தகுதியற்றதாகி விடுமன்றோ! முறையற்ற இல்வாழ்க்கை அறமேயாகாது. அது மறத்தைச் சார்ந்ததாகி விடுமன்றோ?

50. ''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.''

இல்லறமோ, துறவறமோ எதை மேற்கொண்டாலும் அவ்வவ்வறத்திற்கு ஏற்ப வாழ்பவர் முன் கூறப்பட்ட தேவர்களைப் போலாவர்.

'அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை' என்றதன் முழு விளக்கமும் இவ்வதிகாரத்தில் காண்கிறோம்.

## சுருக்கம்

41. ''இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை.''

இல்லற வாழ்க்கை நடத்துபவன் இல்வாழ்க்கையில் இன்றியமையாததாகிய அன்புறவை இயல்பாகவே கொண்டுள்ள மூவர்க்கும் (அதாவது ஆதிபகவன், வான், நீத்தார் இவர்க்கு) நல்ல முறையில் துணையாகின்றான்.

42. ''துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை.''

(ஐந்தவித்தானாகிய) துறந்தார்க்கும், வறியோர்க்கும், நெறிதவறிச் செல்பவர்களுக்கும் இல்வாழ்வான் துணையாயிருத்தல் வேண்டும்.

43. ''தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
கைம்புலத்தாறு ஓம்பல் தலை.''

அரிய (தென்) அறிவினை (புலம்) உடையவர், வானவர் (தேவர் = தெய்வம்) அறிமுகமில்லாதவர், (விருந்து) உறவினர்,

இறுதியாகத் தன் குடும்பம் இந்த ஐவகையினரைப் போற்றுதல் இல்வாழ்வானுக்குத் தலையாய கடமை.

44. ''பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்சல் எஞ்ஞான்றும் இல்.''

(மேற்கூறிய ஐவகையினருள் முதற்கூறிய நால்வகையினரை விடுத்து) தன் குடும்பத்தை மட்டும் ஓம்புதலாகிய பழிச் செயலுக்கு அஞ்சி, தனக்குள்ள வசதிகளைப் பிறரோடு பகிர்ந்து கொள்பவனின் வாழ்க்கை, குறைபட்டு ஒழிதல் எந்நாளும் நிகழாது.

45. ''அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.''

'என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் அன்பும், மனத்துள் மாசிலன் ஆதலாகிய அறனும் இல்வாழ்க்கையில் மிளிர்ந்தால் அதுவே மேலான பண்பும் பயனுமாகும்.

46. ''அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவ தெவன்?''

உண்மையான அறவழியில் இல்வாழ்க்கை வாழ்பவன், மற வழியில் செல்லும் துறவியைவிட மேலானவன்.

47. ''இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை.''

இல்வாழ்வுக்கு மையமான அன்புறவு இயல்பாகவே கொண்டு வாழ்பவன் (மூவராகிய) இறைவன் அவ்வன்புறவை இல்வாழ்க்கையில் காட்ட மனிதர் (ஆண்—பெண்) முயல் கின்றனர். இவர்களுக்கெல்லாம் தலைமையாயுள்ளவர் அவ் இறைவனே.

48. ''ஆற்றின் ஒழுக்கி அறன் இழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து.''

பிறரை அறவழியில் ஒழுகச்செய்து, தாமும் அவ்வழியில் நின்றால் இல்வாழ்க்கை தவவாழ்க்கை மேற்கொண்டவர்களை விட மேலானது.

49. ''அறன்எனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று.''

'அறன்'என்ற பெயர் இல்வாழ்க்கைக்கே நன்கு பொருந்தும்; அதுவும் பிறர்பழிக்கு ஆளாகாமல் இருப்பின் மிக நன்று.

50. ''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.''

உலகில் வாழவேண்டிய முறைப்படி வாழ்பவன் (இல்லறத் தானாயினும்) வான் உலகில் உள்ளவர்களுக்கு இணையாக மதிக்கப் பெறுவான்.

# 6. வாழ்க்கைத் துணைநலம்

51. ''மனைத்தக்க மாண்புடையள் ஆகித் தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை''.

இல்வாழ்வுக்கு ஏற்ற நற்பண்புகள் உள்ளவளாகித் தன்னை மணந்து கொண்டவனது செல்வ வளத்திற்குத் தகுந்த வாறு அன்றாட வாழ்க்கை நடத்துபவளே கணவனுக்குத் தக்க துணையாயிருப்பாள்.

52. ''மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்.''

குடும்ப வாழ்க்கைக்கு ஏற்ற சிறப்புப் பண்புகள் மனைவி யிடம் இல்லையெனின், ஒருவனுடைய வாழ்க்கை வேறுவிதத்தில் எவ்வளவு பெருமையுடையதாயினும் பயன் எதுவுமில்லை.

53. ''இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை?''

மனைவி மேன்மையுற்றவளாயிருந்தால் வாழ்க்கையில் இல்லாதது என்ன? அவள் சிறக்காவிடில் (மாணுதல்-சிறத்தல்) வாழ்க்கையில் உள்ளதென்ன? (மற்றெதுவிருந்தாலும் பயனில்லை).

54. ''பெண்ணில் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மைஉண் டாகப் பெறின்?''

கற்பு என்னும் மனத்திண்மை உண்டாயின், பெண்ணை விடப் பெருமையும் தகுதியும் (பெருந்தக்க) உள்ளது எது?

55. ''தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.''

தன் கணவனையே தெய்வமாக (-தெய்வீக சக்தியுள்ள வனாக, தேவர், வானோருள் ஒருவனாக) மதித்து வாழ்பவள்,

வேறு எச்சக்தியையும் மதியாதவளாயினும், பெய் என்றால் மழை பெய்யும். (கடவுளைத்தொழுதல் பற்றியன்று இங்குக் கருத்து; கணவனின் மேன்மையை மிகைபடக் கூறியது).

56. ''தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்''

(கற்புநெறியில்) தன்னைக்காத்தவள், தான் (கணவனாகக்) கொண்டவனைப் போற்றுபவள், (திருமணத்தில்) சொன்ன சொல்லைக் காப்பவள், அதில் மனஉறுதி தளராதவள்-இவளே பெண்.

57. ''சிறைகாக்குங் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை''

காப்பன காத்து, கடிவன கடியும் திண்மையாகிய நிறையினைப்பேணுமாறு மகளிரை விழிப்புடன் காப்பதே சிறப்பு; அவர்களைச் சிறையில் வைத்துக் காப்பதுபோல் பாதுகாத்தல் பயனற்றது.

58. ''பெற்றான் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு.''

தம்மை மனைவியராகப் பெற்றவரை (கணவரைப்) போற்றி அவர்பால் செய்ய வேண்டிய கடமையைச் செய்யும் பெண்டிர் பெருஞ்சிறப்பையுடைய வானவர் உலகில் பேறுபெற்றவராவர்.

59. ''புகழ்புரிந் தில் இலோர்க் கில்லை இகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை.''

தனக்கும் தன் கணவனுக்கும் புகழ் கிடைக்க வேண்டுமென விரும்பும் மனைவி இல்லாதவர்க்கு, தம்மை இகழ்பவர் முன்னிலையில் அரிமாபோல் பெருமித நடை போடக்கூடிய நிலை இராது.

60. ''மங்கலம் என்ப மனைமாட்சி; மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு.''

குடும்ப வாழ்வுக்கு மனைவியின் நற்பண்பே பொலிவு தரும். நன்மக்களைப் பெறுவது அதற்கு அணிகலமாகும்.

# 7. மக்கட் பேறு

61. ''பெறுமவற்றுள் யாம்அறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.''

மானிடர் பெறத்தகுந்த பேறுகளுள், அறியவேண்டியவை அறியும் இயல்புடைய மக்களைப் பெறுவதினும் வேறு எதையும் யாம் அறியோம்; மற்றப்பேறுகள் பேறுகளே ஆகா.

62. ''எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.''

பழிசேராத நற்பண்புடைய மக்களைப்பெற்றால் வாழ்க்கையின் எந்நிலையிலும் தீயவை அணுகா; தலைமுறை தலைமுறையாக நன்மையே விளையும்.

63. ''தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையான் வரும்.''

தம் மக்களே தம் பொருட்செல்வம் எனப்படுவர்; அம்மக்களுடைய செல்வமோ அவரவர் செயலால் விளைவது.

64. ''அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்.''

தம் குழந்தைகளின் சிறு கையால் பிசையப்பட்ட உணவு அமிழ்தைவிட மிக்க இனிமையானது.

65. ''மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொல்கேட்டல் இன்பம் செவிக்கு.''

தாம் பெற்ற குழந்தைகள் உடலை அணைத்தல் அணைக்கும் கைகளுக்கு இன்பம்; அவர்கள் பேசக்கேட்பது செவிக்கு இன்பம். (குழந்தை இன்பம் இது).

66. ''குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்.''

தம் குழந்தைகள் பேசும் மழலைச்சொல் கேட்பது குழல், யாழ் இவற்றின் ஒலியைவிட இனிமை; அதைக் கேளாதவரே குழல் ஒலி இனிது, யாழ் ஒலி இனிது என்பர். (இதுவும் குழந்தை இன்பம்).

67. ''தந்தை மகற்காற்று நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்.''

தந்தை மகனுக்குச் செய்யக்கூடிய நன்மை, சான்றோர் அவையில் நல்லிடம் பெறச்செய்வதே.

68. ''தம்மில்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது.''

தம் மக்களின் அறிவால் இன்பம் பெறுவது (தாம் மட்டு மல்லர்) உலகத்துயிர்கள் அனைத்துமே.

69. ''ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்''

பெற்றெடுத்தபொழுது துய்த்த மகிழ்ச்சியைவிட அதிக மகிழ்ச்சி அடைகிறாள் தாய், தன் மகன் (இந்நூலில் கூறப்படும்) சான்றாண்மையைக் கடைப்பிடிப்பவன் என அறியும்போது.

70. ''மகன்தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல்எனும் சொல்.''

மகன் தந்தைக்குச் செய்யக்கூடிய உதவி, தன் நடத்தையைக் கண்டு 'இவன் தந்தை என்ன தவம் செய்தானோ?' என்று பிறர் கூறுவதே.

# 8. அன்புடைமை

'அன்பு' என்னும் சொல்லுக்கு உரையாளர் கூறும் பொருள் பின்வருமாறு :

1. **தொல்காப்பியம் :**

   'அன்பென்பது, அருட்கு முதலாகி மனத்தினிகழு நேயம். அஃதுடையார்க்குப் பிறர்கட்டுன்பங்கண்ட வழிக் கண்ணீர் விழுமாகலின் அவ்வருளானே அன்புடைமை விளங்கும்' எனத் **தொல்காப்பியம், மெய்ப்பாட்டியல்** கூறுகின்றது. இக்கருத்து 'அருள் என்னும் அன்பீன் குழவி' என்னும் கருத்துடனும் 'அன்புக்குமுண்டோ அடைக்கும் தாழ்' என்னும் குறளுடனும் இணைவது காண்க.

2. **பரிமேலழகர் :** வாழ்க்கைத் துணையும் புதல்வரும் முதலிய தொடர்புடையார்கண் காதலுடையனாதல்.

3. **மணக்குடவர் :** தன்னைச் சார்ந்தார் மாட்டுக் காதலுடையனாதல்,

4. **பரிதியார் :** புதல்வரிடத்திலே அன்புடைமை, ஆத்மாக்களிடம்தோறும் உண்டாக வேணும் ஆதலால் அன்புடைமையாயிற்று.

5. **ஞா. தேவநேயன் :** இல்லறத்தானும் அவன் வாழ்க்கைத் துணையுமாகிய கணவனும் மனைவியும் தாம் பெற்ற மக்களிடத்துக் காட்டிய அன்பைத் துறவோர்ப்போற்றல், விருந்தோம்பல், ஒப்புரவொழுகல், இல்லாதார்க்கீதல், இரப்போர்க்கிடுதல் முதலிய இல்லற வினைகள் நடைபெறற் கேற்பப் பிறரிடத்தும் உண்டாயிருத்தல்.

6. **குழந்தை :** நமக்குத் தொடர்புடையாரிடத்துக் கொள்ளும் பற்று அல்லது காதல்.

7. **கா. சுப்பிரமணியப்பிள்ளை:** மனைவி மக்கள் உற்றார் உறவினர் நண்பர் முதலியோரிடத்து விருப்பமுடைமை.

8. **சாமி சிதம்பரனார் :** உள்ளத்தில் அன்பு என்னும் பண்புடன் வாழ்வது.

9. **கவிஞர் இராமலிங்கனார் :** காதலின் குடும்பம் கடந்த விரிவே அன்பு.

10. **பேராசிரியர் இலக்குவனார் :** பிறவுயிர்களிடத்தும் அன்புடையராயிருத்தல்.

11. **கா. அப்பாத்துரையார் :** திருவள்ளுவர் அறத்துக்கும் அன்புக்கும் உள்ள நெருங்கிய தொடர்பை விளக்கியுள்ளார். அதன்படி, ''அறம் உடலானால் அதை உள் நின்று இயக்கி வளர்த்து மலர்ச்சியடையச் செய்யும் உயிர்ப்பண்பு—நிலைப் பண்பான அதனை இயக்கப் பண்பாக்கும் உயிர்த்துடிப்புப் பண்பு—அன்புடைமையாகும். இவ்வன்புடைமை இன்ப வாழ்வாகிய நிலத்தில் காதல் என்னும் வேரோட விட்டு, பாசப் பயிராக வானோங்கி வளர்ந்து, பண்புக்கிளை பரப்பி, சால்புத் தளிர் விட்டு, அருள் மலர் பூத்து, **எல்லையற்ற பேரின்பமாகும்** காழில் கனிதரும் கற்பகத் தருவாக **இயல்வது.** அன்புடைமை இடையறா இயக்கப் பண்பு; அது ஆக்கப்பண்பு. அழிவையும் ஆக்கமாக மாற்றிக் கொண்டே சென்று, அழிவாற்றல்களையே ஆக்க ஆற்றலாகச் செய்துவிடும் தன்மை வாய்ந்த பொன் மாற்றுச் சித்தாற்றல், ஆக்கமலர்ச்சியாற்றல் ஆகும் ........ மனித இன நாகரிகம் இதுவரை மலர்ச்சியடைந்து வந்திருப்பதும் இனியும் மலர்ச்சியடைய இருப்பதும் அன்புடைமை அறத்தினாலேயே. அதுவே இல்லறம் துறவறம் ஆகிய இருவகை அறங்கட்கு மட்டுமன்றி அழிவாற்றல் தடுக்கும் எதிர்மறை அறமாகிய மறத்திற்கும் அடிப்படை, என்று அவர் பலபட விளக்குகிறார்.

அன்பு, அருள், இன்பம் என்னும் தெய்வப் பண்புகளுள் அன்பும் ஒன்று. ''தெய்வத்தளம் நிலப்பண்பு மலர்ச்சியின் மலர்ச்சி விதையாதலினால் இது **தெய்வ அறத்தின் உள்ளுயிர் இயக்கப் பண்பாக** அமைகிறது. (மணி விளக்க உரை, 2-ஆம் பகுதி-அதி. 8 காண்க).

**தொடர்புடையாரிடத்துக் கொள்ளும் பற்றே** அன்பு என்பது, உரையாளருள் பெரும்பான்மையோருடைய கருத்தா யிருப்பது தெளிவு.

ஆனால், இக்கருத்து வள்ளுவருடையது அன்று என்பதை அவரே விருந்தோம்பல்பற்றிக் கூறும் கருத்தினின்று தெளிவா கின்றது.

(இந்நூலின் 3-ஆம் அதிகாரத்தைக் காண்க).

மேலும், கடவுளின் ஒருமைப்பாட்டை வாழ்க்கை நோக்க ஒருமைப்பாடு அல்லது உலக ஒருமைப்பாட்டின் மீதும், வாழ்க்கை நோக்க ஒருமைப்பாட்டை வாழ்க்கை ஒருமைப் பாட்டின் மீதும் கட்டமைத்த (1) திருவள்ளுவர், அவ் வாழ்க்கைக்கு இன்றியமையாத பண்பாக உள்ள அன்பை எங்ஙனம் தொடர்புடையார் மாட்டுள்ள ஒன்றாகக் கருதியிருக்க வியலும்? உலக ஒருமைப்பாட்டுக்கு இன்றும் இன்றியமையாத கருவியாக உள்ளது அன்பே யன்றோ? 'தெய்வப் பண்புகளுள்' ஒன்றாகிய இந்த அன்பு தெய்வ அறத்தின் உள்ளுயிர் இயக்கப் பண்பாய் அமை''வதால் (மணி விள. 2ம் பகுதி-அதி. 8). அதனை மிகக்குறுகிய ஒன்றாக எண்ணி, தொடர்புடையாருடன் மட்டுமே செலுத்தப்பட வேண்டிய ஒன்றாக எங்ஙனம் வள்ளுவர் கருதியிருக்கக் கூடும்?

இனி, இந்த **அன்பு** இறைவனுடன் தொடர்பு கொண்டதா அன்றா? என்னும் வினா எழும்.

உரையாளர் பெரும்பாலும் இவ்வினாவை எழுப்புவதாகத் தெரியவில்லை. மணி விளக்கவுரை மட்டும், இந்த அன்பு ''எல்லையற்ற பேரின்பமாகிய காழில் கனிதரும் கற்பகத் தருவாக இயல்வது'' என்று கூறுகையில், இறைவனுடன் தொடர்பு கொண்ட ஒன்றாகவே கருதுவதாகத் தெரிகிறது. இக் காரணம்பற்றியும் அன்பு தொடர்புடையார் மாட்டுள்ளது என்னும் கருத்துப் பொருந்தாது. இறைவனுடன் பேரின்பத் தொடர்பு கொண்டுள்ள அன்பு, அவனுடன் தொடர்பு கொண் டுள்ள மனித இனம் அனைத்தோடும் தொடர்பு கொண்டாக வேண்டும். மானிடர் எல்லாரும் இறைவன் மக்கள், என்னும் கருத்து எல்லோருக்குமே ஏற்புடையதாயின் ஒரு தந்தையின்

மக்களிடையே தொடர்புடையார், தொடர்பற்றார் பற்றிப் பேச்சு எழ இடமில்லையன்றோ? மக்கள் எல்லோரும் தொடர்பு கொண்டவர்களேயன்றோ? இக் கருத்துகளை இனி ஆய்வோம்.

ஈண்டு வள்ளுவர் கூறும் அன்பு யாருக்குப்பொருந்துவது? இறைவனுக்குப் பொருந்தும் அன்பா? மனிதனுக்குப் பொருந்தும் அன்பா? என்பது ஆழ்ந்து ஆயவேண்டிய பொருள். இவ் வினாவுக்குப் பதில் கூறுமுன் வேறொரு வினாவுக்குப் பதில் காண வேண்டியிருக்கிறது. அஃதாவது, வள்ளுவர் தம் நூலில் கூறும் கருத்துகள் எல்லாம் மனிதர்க்கு மட்டும் பொருத்தியே பொருள் காண வேண்டுமா? என்பது.

திருக்குறள் ஓர் அறநூலாதலால் அது மனிதர்கள் நடத்த வேண்டிய வாழ்க்கையைப் பற்றியதே; ஆகவே, அவர் கூறும் கருத்துகள் மனித வாழ்க்கையோடு மட்டுமே தொடர்பு கொண் டவை, என்னும் முடிவுக்கு வரக்கூடும். ஆனால், இது முற்றும் உண்மையா?

அறம் என்பது மனித வாழ்க்கையுடன் தொடர்பு கொண் டதேயெனினும், இறைவனுடன் எத்தொடர்பும் இல்லாததா? அறவாழ்க்கை என்பது இறைவனுடன் தொடர்பற்ற வாழ்க்கையா? இவ் வினாக்களுக்கு வள்ளுவர் ‘கடவுள் வாழ்த்து’ அதிகாரத்திலேயே பதில் தந்துவிடுகிறார்.

இறைவனை முதலாகக் கொண்டது உலகு; அவ்வுலகில் வாழும் மனிதனும் அவ்விறைவனையே முதலாகக் கொண்டவன்; இறைவனின் தாளைத்தொழுவதே வாழ்க்கைப் பயனை அடையும் வழி; ஆகவே அவனது ‘தாள் சேர்ந்தார்க்கல்லால்’ ‘மனக்கவலை மாற்றலரிது’; வாழ்வென்னும் ஆழியை நீந்தல் அரிது’; அவனது பொருள்சேர்புகழ் புரிந்தால்தான் இருள்சேர் வினை நம்மை அணுகாது; அப்போது மட்டுமே நீடுவாழ்வு உண்டு என்று, இறைவனுடன் தொடர்பு கொண்ட அறவாழ்க் கைக்கு அடிகோலுகிறார் ஆசிரியர். இறைவனை அறவாழி அந்தணன் என்றும் கூறுகிறார்.

ஆகவே, அவரது நூலில் வரும் அடிப்படை மையக்கருத்துகள் யாவும் இறைவனோடு தொடர்புபடுத்தியே விளங்கிக்கொள்ள வேண்டும். ‘இறைவன்’ என்னும் சொல்லை முதல்

அதிகாரத்தில் தவிர வேறெங்கும் ஆளவில்லை ஆசிரியர். எனினும், இறைவனைப் பற்றிய கருத்தும் அவனோடு தொடர்பும்-தம் நூலில் வேறெங்கும் இல்லை என்பது தவறான முடிவாகும்.

'ஆதிபகவன் முதற்றே உலகு' என்று தம் நூலைத் தொடங்குபவர், அவ்வுலகிலுள்ள எல்லாமே சிறப்பாக நல்லவை யெனப்படும், எல்லாமே அவனை முதலாகக் கொண்டுள்ளன, என்னும் கருத்துடன்தான் தம் நூலை இயற்றியிருப்பார். கடுகுபோன்ற இக்குறட்பாக்களைத் துளைத்து நோக்கினால் கருத்துப்புலப்படும்.

திருக்குறளின் அடிப்படைக் கருத்துகளும்-மையக் கருத்துகளும் பின்வருமாறு:

இறை உண்மை, அறன் வலியுறுத்தல், இல்வாழ்க்கை, துறவு, அருளுடைமை, தீவினை அச்சம், செய்ந்நன்றியறிதல், மெய்யுணர்தல், (சான்றோர் நூலாதலால்) சான்றாண்மை, இச் சான்றாண்மையின் ஐந்து தூண்களென ஆசிரியரே குறிப்பிடும் அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை, ஆகிய இவையே.

இவற்றையெல்லாம் ஆசிரியர் இறைவனுடன் தொடர்புபடுத்தியே தம் நூலை இயற்றியிருப்பார் என அழுத்தமாகச் சொல்லலாமன்றோ?

இக்கண்ணோட்டத்தில் 'அன்பு' என ஈண்டுக் கூறப்படுவது இறைவனிடத்துக் காணும் அன்பா? மனிதனிடத்துக் காணும் அன்பா என்னும் வினாவுக்கு விடை காண முயல்வோம்.

உலகில் நாம் காணும் நலன்களுள், உயர்பண்புகளுள், வாழ்க்கைக்குரிய தேவைகளுள் சிகரமாக விளங்குவதே அன்பு என்பதை எவரும் ஒப்புக் கொள்வர்.

இத்தகைய நலனுக்கு அகரமாக-ஆதிமூலமாக-இறைவன் அன்றி வேறுயார், வேறு எது இருத்தல் கூடும்? நல்லதெல்லாம் அவனையன்றி வேறுயாரை ஆதாரமாகக் கொண்டிருக்க இயலும்?

அங்ஙனமே இத்தகைய உயர்பண்பு, சுயநலம் மிகுந்த அற்ப மனிதனை ஊற்றாகக் கொண்டுள்ளதா?

மனித வாழ்வின் தேவைகளுள் மிகமிக இன்றியமையாத தாகக் கருதப்படும் இவ்வன்பை நமக்கு அளித்து, மனநிறைவு தரக்கூடியவர் யார்? அல்லது எது? வாழ்க்கையில் பலப்பல ஏமாற்றங்களுக்கெல்லாம் முதற்காரணம் இந்த அன்பே-அதாவது விரும்பிய அன்பைப் பெறாமல் போவதே-என்பது அனைவரும் அனுபவ வாயிலாக அறிந்தது. அன்பை அடைய ஆசிப்பது போல் நாம் வேறெதையும் ஆசிப்பதில்லை என்பது கண்கூடு. எனினும் எதிர்பார்க்கிற அளவுக்குப் பெறுகிறோ மில்லை. ஏன்?............குறைவு மிக உள்ள இடத்தில், அஃதாவது மனிதனிடத்து அதைத் தேடுகிறோம். மனிதனின் நெஞ்சம் மிகச்சிறியது. அதாவது அதிக அன்பைத் தாங்கவும் இயலாதது-வெளிப்படுத்தவும் இயலாதது. ஓரளவு அன்பு காட்டுவோரும் இறுதியில் ஏதாவதொரு நன்மையை எதிர்பார்த்தே அங்ஙனம் செய்கின்றனர். இதையும் நாம் கண் கூடாகக் காண்கிறோம். இத்துணை குறைவுள்ள இடத்தில் இத்துணை உயர்ந்ததொரு பண்பை எதிர்பார்ப்பதற்கு மாறாக, **நிறைவே** தன் இயல் பாகக் கொண்டுள்ள இறைவனிடம் அதைத் தேடுவோமானால் ஐயமின்றி அதைக் காண்போம்.

ஆகவே, இந்த அன்பு யாருக்குப் பொருந்துவது? அன்பே உருவாய் உள்ளது யார்? இறைவனா? மனிதனா? இயல்பாகவே, அன்புருவானவன் இறைவன் என்னும் கருத்து யாருக்கும் ஏற்புடைய தொன்றாகும். மனிதனிடத்து **இயல்பாகவே அன்பு** என்னும் சிறப்பு காண்கின்றோம் இல்லை என்பதும் கண் கூடு. யாரோ ஒரு சிலரிடத்து ஓரளவு அன்பு காணப்படினும் மனிதனாய் உள்ளவன் எவனும் அன்புருவானவன் அல்லன் என்பது தெளிவு. ஆகவே, இறைவன் ஒருவனே இயல்பாக அன்புருவானவன். **அன்பே அவனது இயல்பு.** அன்பே அவனது இயல்பாதலானும், அவ்வியல்பு அளவற்ற மாண்பு பொருந்தியதாதலானும், அதற்கு அடைக்கும் தாழ் இல்லை என்பது மிகப் பொருத்தமேயன்றோ?

இறைவனின் அன்பையும் அதன் அளவிலா ஆற்றலையும் அடைத்து வைக்க எங்ஙனம் இயலும்? அளவுள்ளது தான் தன்னுள் அடங்கிக் கிடக்கும் தன்மையது!

ஆகவே, வள்ளுவர் கூறும் அன்பு முதற்கண் இறைவனது இயல்பாகிய அன்பே என்பது தெளிவு.

அன்புக்கு அவர் கூறும் இலக்கணத்தினின்று இது மேலும் தெளிவுறுகிறது. அன்புக்கு அவர் கூறும் இலக்கணமாவது:

1. அதற்கு 'அடைக்கும் தாழ்' இல்லை: உண்மையான அன்பு எளிதாக வெளிப்பட்டு விடும்.

2. அன்புக்குப் பிரதி அன்பு காட்டாதவர்களையும் அணைக்கும் தன்மையது.

3. பிறர்க்கென உயிரையும் தியாகம் செய்யத் தயங்காது: 'என்பும் உரியோம் பிறர்க்கு' என்னும் அளவுக்கு அத்தியாகம் பரிணமிக்கும்.

4. ஆர்வமுடைமை ஈனும்: இந்த ஆர்வமுடைமை நண் பென்னும் நாடாச் சிறப்பை ஈனும்.

5. 'மறத்திற்கும் துணை' யாயிருக்கும்.

6. உயிர் நிலை அதன் வழியது.

இவை யாவும் இறைவனின் இயல்பாகிய நிறை அன்புக்குப் பொருந்துபவையா? மனிதனிடத்துக் காணக்கூடிய குறை அன்புக்குப் பொருந்துபவையா?

சிறப்பாகப் பிரதி அன்பு காட்டாதவர்களையும் அணைத்து அன்பு காட்டுவது; பிறர்க்கென உயிரையும் தியாகம் செய்யத் தயங்காமல் 'என் என்பும் உரியது பிறர்க்கு' என்னும் கொள்கை யின் அடிப்படையில் வாழ்க்கை நடத்துவது; ஆகிய இவை சுயநலமே உருவான மனிதப்பிறவிக்கு எளிதாக எட்டக் கூடியனவா? ''நான் ஏன் ஒருவனுக்காக என் உயிரையும் தியாகம் செய்ய வேண்டும்?'' என்று அவன் ஐயுறத்தான் செய்வான். அந்த அளவுக்கு அவனைத் தூண்டி விடக்கூடிய தென்ன? இத்துணைச் சால்பு நோக்கி அவனை வழிநடத்த வலிமை மிக்க ஓர் ஏவுதலாவது உண்டா? எங்கிருந்து வந்தது அந்த ஏவுதல்? அந்த முறையில் முன் மாதிரி காட்டியவர் யார்?

இனி, மனிதனை ஏன் படைத்தான் இறைவன்? என்னும் வினாவுக்கு, ''அன்பிற்குமுண்டோ அடைக்கும் தாழ்!'' என்று பதிலிறுக்கின்றார் வள்ளுவர்.

கடவுள் மனிதனைப் படைப்பதற்கும் அன்பிற்கும் தொடர்பென்ன என்பது எளிதில் புலப்படாமலிருக்கலாம். ஆனால், மிக மிக ஆழ்ந்த தொடர்பு உண்டு.

நல்லவன் தனக்குள்ள நன்மையை இல்லாதவரோடு பகிர்ந்துகொள்ள ஆர்வம் காட்டுவதை, தன்னலமே பெரும்பாலும் காணப்படும் இவ்வுலகிலும் கூட அவ்வப்போது கண்கூடாகப் பார்க்கின்றோம்.

தனக்குள்ளதை இல்லாதவரோடு பகிர்ந்து கொள்ளுமாறு ஏதோ ஒன்று அந்த நல்லவனைத் தூண்டுகின்றது. அந்த நல்லவன், மிகமிக நல்லவனாயிருந்தால், இத்தூண்டுதலும் ஆர்வமும் மிகச் சிறந்து விளங்கும்.

ஏன் இந்த நிலை? நல்லவனுக்கு ஏன் இந்த ஆர்வம் ஏற்பட வேண்டும்?

நல்லவனிடத்திலுள்ள **'நன்மை'** என்பதன் பண்பே அது. நன்மை என்பது பரவும் தன்மையது. தன் 'நன்மை'யைத் தனக்குள்ளேயே வைத்திருக்க இயலாத பண்பினைக் கொண்டது. தன் நன்மையால் பிறரும் பயனடைய வேண்டுமென்று ஆர்வமுடன் விரும்பும் தன்மையது. இங்ஙனம் ஆர்வமுடன் விரும்புவதே 'அன்பெ'னப்படும். ஆகவே, 'நன்மைக்கு' அடைக்கும் தாழ் இல்லை. அங்ஙனமே அன்புக்கும் அடைக்கும் தாழ் இல்லை. இதனாற்றான் 'அன்பு ஈனும் ஆர்வமுடைமை' என்றும் இவ்வதிகாரத்திலேயே சொல்லப்பட்டுள்ளது.

இனி, தனக்குள்ள நன்மையால் பிறரும் பயனடைந்து இன்புறவேண்டுமென்று அந்தப் **'பிறர்' தோன்றும்படி செயலாற்றுவதே படைப்புத் தொழிலாகும்.** அந்தப் 'பிறர்' என்பவர் யரர்? மனிதரே.

இறைவன் ஒருவனேதானாய் உள்ளவன்; தானாய் இயங்குபவன். அவனே அனைத்திற்கும் 'அகரம்' ஆதலான்,

அவனன்றிப் 'பிறர்' என்பவர் யாரும் இலர். அஃதாவது, படைப்புப்பொருள் எதுவுமில்லை; உலகமும் இல்லை; உலகில் உள்ள பொருட்களும் இல்லை; மனிதனும் இல்லை. ஆகவே, உலகில் மனிதன் தோன்றுவதற்கு, இறைவனின் உள்ளத்தே அளவிடவியலா ஆழியென இருக்கின்ற அன்பும் அந்த அன்பு ஈனும் ஆர்வமுமே காரணமாகும்.

தனக்குள்ள அளவிடவியலாப் பேரின்பச் செல்வத்தைப் பகிர்ந்து கொள்ள வேண்டுமென்பதே அங்ஙனம் மனிதனைத் தோற்றுவித்ததன் நோக்கமாகும். அனைத்துக்கும் முதல்வனாகிய இறைவனது பேரானந்தப் பெருஞ்செல்வத்தில் பங்கு பெற்று, தானும் (மனிதனும்) பேரின்பத்தில் பங்கு பெற்றுத் துய்க்க வேண்டுமென்பதே இறைவனின் நோக்கம் என்க. இங்ஙனம் தனக்குள்ள இன்பம் பிறர்க்கும் உளதாக வேண்டும் என்று விரும்பிச் செயல் புரிவதே **நட்பு** எனப்படும். நண்பர்களுக்கிடையில் ஏற்றத்தாழ்வுகள் இரா. உண்மையான நண்பன் தாழ்வுற்ற நிலையில் உள்ள தன் நண்பனைத் தூக்கிவிட முழு மூச்சுடன் முயல்வான். தூக்கிவிட இயலாவிடின் நட்பின் பொருட்டுத் தானும் தாழ்வுற்றுத் துன்புற இசைவான். நட்பின் தன்மையே அப்படி. இயன்ற வகையில், இயன்ற அளவுக்கு நண்பரிடையே ஒருவித சமத்துவத்தை உண்டாக்கும் தன்மையது நட்பெனப்படுவது.

இந்த இலக்கணத்தின் படியே, இறைவனும் செயல்புரிவது காண்கிறோம். அவன் மனிதனைவிட எவ்வளவோ உயர்ந்தவன். மனிதனோடு ஒப்பிட்டு நோக்குங்கால் இறைவனுக்கும் மனிதனுக்குமிடையே உள்ள அளவிட வியலாத தூரத்தை ஓரளவு குறைத்து, தான் படைத்த மனிதனை உயர்த்த இறைவன் விரும்பினான். இதனாற்றான் அன்பீன்ற ஆர்வமுடைய இறைவனுக்கும் மனிதனுக்குமிடையே பிறந்தது நண்பென்னும் நாடாச் சிறப்பு. இதனையே வள்ளுவர்,

"அன்புஈனும் ஆர்வ முடைமை அதுஈனும்
நண்புஎன்னும் நாடாச் சிறப்பு"

எனக் கூறுகிறார். (74)

மனிதரிடையே நட்பு என்னும் சிறப்பு ஏற்படுவதற்கு நட்பு செய்யத் தேவைப்படும் ஆட்கள் இருத்தல் இன்றியமையாதது.

ஆட்கள் இன்றேல் நட்பு ஏற்பட வழி ஏது? ஆனால், இறைவன் நட்புச் செய்ய விரும்பும்போது நண்பராவதற்குத் தேவைப்படும் ஆட்களையும் உருவாக்குகின்றான். அவனன்றி வேறெதுவும் இல்லையன்றோ? அவனால்தானே மனிதன் உருவானதும்! ஆகவே, இறைவனின் நட்பு, தன் நண்பராகக்கூடிய **ஆட்களையும் உருவாக்கி**, அவர்களைத் தன் நட்புக்குரியவர்களாக்கும் அளவுக்குச் சிறப்பினை எய்துகின்றது. 'நாடாச் சிறப்பு' என்று கூறப்பட்டது இறைவன் தரும் நட்பினுக்கு மட்டுமே முற்றிலும் பொருந்துவது கவனிக்க. தன் வல்லமையாலும், தனது அன்பின் ஆர்வத்தாலும் உருவாகாத உயிர்கள் வேறு இருப்பின், அது ஈண்டுக் கூறப்படும் சிறப்புக்கு ஓரளவு இழுக்கே என்க.

**ஆட்களை உருவாக்குதல்.**

இங்கு 'ஆட்கள்' என்னும்போது, பொதுப்பட மனிதரைக் குறிக்கலாம். மனிதனை உலகில் தோற்றுவிப்பதற்குக் காரணமாய் அமைந்தது இறைவனிடத்துள்ள அன்பே என்று மேலே கூறப்பட்டது. இந்த அன்பினால்-அன்பின் தூண்டுதலால் உள்ளேயே அடைத்து வைக்க வியலாத அன்பின் தீவிர ஆற்றலினால் நிகழ்ந்ததென்ன?

'ஆருயிர்க்கு என்போடு தொடர்பு இயைந்தது.' அஃதாவது, மனிதனின் என்புக்கும் (உடலுக்கும்) உயிருக்கும் தொடர்பு ஏற்பட்டது. இதை எண்ணும் போது விவிலியத்தில், மனிதன் படைக்கப்பட்ட வரலாற்றையொட்டிக் கூறப்படும் செய்தி நினைவுக்கு வருகின்றது. ஆதியில் கடவுள் மண்ணால் மனிதனை உருவாக்கி, அவ்வுயிர் அற்ற உருவத்திற்கு உயிர் மூச்சைத் தந்ததால் மனிதன் உயிருள்ளவன் ஆனான் என்று எழுதியுள்ளது விவிலியத்தில். மண்ணால் மனிதனை உருவாக்கினார் என்னும்போது மண்ணை எடுத்துக் கையால் பிசைந்து உருவம் ஒன்றைக் கடவுள் செய்தார் என்பதன்று பொருள். குயவன் கையில் மண்போல இறைவன் கையில் (அஃதாவது அவரது வல்லமைக்குட்பட்டவனாய்) மனிதன் இருக்கின்றான் என்பது மட்டுமே பொருள். அந்த வல்லமைக்குட்பட்டே மனிதன் உயிர் பெற்றவனானான். அந்த வல்லமைக்கு உட்பட்டே அவன் அவ்வுயிரை இன்று (சாவு என்னும் கொடுமைக்காளாகி) இழந்து, மீண்டும் உயிரற்ற என்பாக-

உடலாக ஆய்விடுகிறான். ஆகவே, இறைவனின் அன்புச் செயலைச் சார்ந்ததே மனிதன் உயிரோடிருக்கும் நிலைமை இறைவனின் அன்பின் செயலைப் பொறுத்தது உடலோடு உயிருக்குள்ள தொடர்பு. இக்கருத்தையே வள்ளுவர்,

> "அன்போடு இயைந்த வழக்குஎன்ப ஆருயிர்க்கு
> என்போடு இயைந்த தொடர்பு."

மனிதனின் உயிர் அவனது உடலுடன் இயைந்து வழங்க வேண்டுமாயின், இறைவனின் அன்பு அவனுடன்-அவன் வாழ்வுடன் இயைந்து செயல்பட வேண்டும்.

**ஆண்-பெண்ணாகிய ஆட்கள்.**

பொதுப்பட்ட முறையில் மனிதனைப்பற்றி மட்டுமே ஈண்டு ஆசிரியர் குறிப்பிடுவதாகத் தோன்றவில்லை. இல்வாழ்க்கையைக் குறித்தே இல்லறவியலாகிய இவ்வியலில் கூறுவதால், ஆண்—பெண் ஆகிய மனிதரைக் குறித்தும் இக்குறளில் குறிப்பிடப்படுகிறது எனக்கூற இடமுண்டு.

'என்போடு இயைந்த' என்னும்போது, ஆண்—பெண் வாழ்க்கையையும் ஆசிரியர் குறிப்பிடுகின்றாரா? ஆம்-என்றே சொல்ல வேண்டியிருக்கிறது. மீண்டும் விவிலியத்தை நோக்குவோமாகில் பின்வரும் செய்தி கிடைக்கிறது.

ஆதி (ஆண்) மனிதனுடைய விலாவினின்று எலும்பொன்றை எடுத்து, அதை ஒரு பெண்ணாகச் செய்து, அவளை ஆதி மனிதன் முன் நிறுத்தவே, அவன் - "இவள் என் எலும்பினின்று எலும்பாகவும், என் தசையினின்று தசையாகவும் இருக்கின்றாள். ஆணிடமிருந்து தோற்றுவிக்கப்பட்டதால் பெண்* எனப்படுவாள்'

"இதன்பொருட்டே ஒருவன் தன் தந்தையையும் தாயையும் விடுத்து தன் மனைவியோடு சேர்ந்துகொள்வான். இருவரும் ஒரே உடலாயிருப்பர்" (ஆதி 2:22-24) என்றான்.

---

* எபிரேய மொழியில் இந்தத் தொடர்பு நன்கு விளங்குகிறது. வடமொழியிலும் ஓரளவு விளங்கும். "மனுஷனிடமிருந்து தோற்றளிக்கப்பட்டதால் மனுஷி எனப்படுவாள்" என்று வாசித்தால் தெளிவாகும்.

கடவுள் ஆதிமனிதனின் விலா எலும்பினின்று பெண்ணை உருவாக்கினார் என்பது நகைப்புக்கிடமான செய்தியாகக் காணப்படலாம். ஆனால், உருவகமாகச் சொல்லப்படும் இதில் மறைந்துள்ள ஆழ்ந்த கருத்தை உணர்தல் வேண்டும். ஆணும் பெண்ணும் மணவாழ்வில் எந்த அளவுக்கு ஒன்றாகின்றனர்? ஆகவே, அவர்களுடைய வாழ்க்கை எந்த அளவுக்கு இதயத் தொடர்பு கொண்டதாய் அஃதாவது, அன்போடு இயைந்ததாய் இருத்தல் வேண்டும் என்னும் உயர்ந்த கருத்தை வலியுறுத்தவே இந்த உருவகம் கையாளப்படுகின்றது. இந்த ஒன்றிப்பும் இதயத் தொடர்பும் மணவாழ்க்கையின் மிக முக்கிய பண்பாக ஆதியிலிருந்தே இருந்தது* இதை இயேசு கிறிஸ்து நன்கு விளக்குகின்றார்.

எலும்பினின்று எலும்பு, தசையினின்று தசை என்று விவிலியம் கூறுவதன் பொருள் இதுவே.

அவரது எதிரிகளான பரிசேயர் அவரிடம் வந்து ''எக்காரணத்திற்காவது ஒருவன் தன் மனைவியை விலக்கி விடுவது முறையா ?'' என்று அவரைச் சோதிக்கக் கேட்டனர். அதற்கு அவர், '' படைத்தவர் தொடக்கத்திலிருந்தே 'ஆணும் பெண்ணுமாக அவர்களைப் படைத்தார்' என்றும், 'ஆதலால் கணவன் தன் தாய்தந்தையை விட்டுத் தன் மனைவியோடு கூடியிருப்பான்; இருவரும் ஒரே உடலாய் இருப்பார்கள் எனக் கூறினார்' என்றும் நீங்கள் படித்ததில்லையா? இனி அவர்கள் இருவர் அல்லர்; ஒரே உடல். ஆகவே, கடவுள் இணைத்ததை மனிதன் பிரிக்காதிருக்கட்டும்'' என்றார். அவர்கள் '' அப்படியானால் முறிவுச் சீட்டுக்கொடுத்து, மனைவியை விலக்கி விடும்படி மோயீசன் கட்டளையிட்டது ஏன்?'' என்று கேட்டனர். அவரோ, ''உங்கள் முரட்டுத்தனத்தின் பொருட்டே உங்கள் மனைவியரை விலக்கிவிட மோயீசன் அனுமதி அளித்தார். ஆனால், தொடக்கத்திலோ அப்படி இல்லை'' என்றார். (மத். 19, 3-8).

---

* விலா-விலாஎலும்பு-என்றதன் பொருள் இதுவே. விலாவுடைய பாதுகாப்பில் இதயம் உள்ளது என்று சொல்ல இடமுண்டல்லவா?

ஆகவே, மணவாழ்க்கையில் கணவன் - மனைவியருடைய உயிருக்கும் அவர்களுடைய உடலுக்கும் உள்ள தொடர்பு அன்போடு இயைந்ததாய் இருத்தல் வேண்டும் என்னும் கருத்தும் இக்குறளில் மறைந்து கிடப்பதாகத் தோன்றுகிறது. மண வாழ்க்கையின் உயர்வை ஈண்டு வலியுறுத்துகின்றார் என்க.

**வெறும் சிற்றின்பம் அன்று.**

'மணவாழ்க்கை' அன்போடு இயைந்ததாய் இருத்தல் வேண்டும் என்பதால், வெறும் இச்சைக்காக மட்டுமே உறவு கொள்வது தகாது என்னும் கருத்தும் உள்ளது. அன்பு வேறு, இச்சை வேறு. அன்புடையார் பிறர் நலனையே எண்ணுவர்; இச்சையுடையவரோ தன் நலனையே நினைப்பர்.

அன்பின் உண்மைத் தன்மையை உணர்ந்தவர்கள் தம் சொந்த மன நிறைவுக்காக (இச்சையடங்குவதற்காக மட்டும்) இம்மண உறவைத் துய்க்கமாட்டார்கள்.

மண உறவு என்பது என்புடன் (உடலுடன்) உள்ள உறவு மட்டுமே எனப் பெரும்பாலும் மக்கள் கருதினாலும், அது அன்போடு இயைந்த வழக்காகவே கருதப்பட வேண்டும். அஃதாவது, சிற்றின்பத்தை விளைக்கும் உறவாக மட்டுமே அது கருதப் படலாகாது. சிற்றின்பத்தை விளைக்கும் இவ்வுறவு கூட மெய்யின்பத்துக்கு வழி காட்ட வேண்டும். மெய்யான அன்பின் அடிப்படையில்தான் அதுவும் அமைய வேண்டும். உலகின் மக்கள் பெரும்பாலும் விரும்பும் இச்சிற்றின்பம் கூட ஒரு சிறப்பினை எய்துதல் வேண்டும். வெறும் சிற்றின்பமாக மட்டுமே இருந்து விட்டால் மக்கள் விலங்குகளைவிட எவ்விதத்திலும் சிறந்தவராகக் கருதப்பட முடியாதன்றோ? ஆகவே, இல்லறத்தில் மண உறவு உண்மைச் சிறப்பினை எய்த வேண்டுமாயின் 'அன்புற்றமர்ந்த வழக்காக' அமைய வேண்டும். அஃதாவது உண்மை அன்பால் எழும் செயலாயிருத்தல் வேண்டும். கணவன், மனைவிக்கே உரியவன்; மனைவி, கணவனுக்கே உரியவள் என்னும் அடிப்படையில் அமைதல் வேண்டும். ஏனெனில் உண்மை அன்பு 'என்பும் உரியர் பிறர்க்கு' என்ற அடிப்படையில் அமைய வேண்டுமில்லையா? கணவன், மனைவியுடன் தன் இன்பத்துக்காக மட்டுமே உறவுகொண்டாலும், அது தன்னலம் ஆகுமேயன்றி '**என்பும் உரியர் பிறர்க்கு**' என்னும் இலக்கணத்துக்கு ஏற்ற அன்பு ஆகாது.

இந்த அளவுக்குக் கணவன் மனைவியருடைய உள்ளம் மேம்பட்டு விளங்குவது இவ்வுலகில் நிகழக்கூடிய காரியமா என்று, வினா எழக்கூடும். நிகழக் கூடியதே என்று வள்ளுவர் கருதியிராதிருந்தால் இந்தப் பொருளில் வலியுறுத்தியிருக்க மாட்டார். தன்னலமே நிறைந்துள்ள மனிதன் அதை முற்றிலும் ஒழித்துவிட்டு மெய்யன்பை அடையவியலும். ஆனால், அதற்கு அவன் வீரச்செயல் (சான்றாண்மைச் செயல்) பல மேற்கொள்ள வேண்டும். தன் ஆசையை அடக்கி ஒடுக்குவதே மனிதன் செய்யக்கூடிய செயல்களுள் மிக உயர்ந்த வீரச்செயல்-மறச் செயல்; இந்த மறச் செயலே இல்லறத்துக்கும் துறவறத்துக்கும் உறுதுணை என்று கூறுகின்றார். இல்லறத்தைத் தக்க முறையில், அஃதாவது, மேற் சொன்னவாறு உண்மை அன்பின் அடிப்படையில் நடத்த வேண்டுமாயின் வீரச் செயல் தேவை என்கிறார் வள்ளுவர். தக்க அளவுக்கு அன்பிருந்தால் ஆகாதது ஒன்றுமில்லை. ஆகவே, மறத்திற்கும் அஃதாவது, வீரச்செயல் களுக்கும் அன்பே துணை என்கின்றார். அத்தகைய அன் பிருந்தால் உண்மையான இன்பமும் கைகூடும். அன்பில்லா வாழ்வு, உண்மை இன்பமில்லா வாழ்வே. உண்மை இன்பம் என்பது நொடிப்பொழுதில் முடிந்துவிடும் சிற்றின்பமாகாது. நீடித்துள்ள இன்பமே மெய்யின்பம்.

இத்தகைய இன்பம் சிற்றின்ப உலகமாகிய இவ்வையகத்தில் கிடைப்பதில்லை. ஏனெனில், சிற்றின்பத்தால் ஒருவன் இன் புற்று 'அமர்வதில்லை'; அஃதாவது, இன்புற்று நிறைவு எய்து வதில்லை. ஏனெனில், சிற்றின்பத்தில் ஒருவன் அன்புற்று அமர் வதில்லை. நொடிப்பொழுது அன்பும் இன்பமும் நுகர்ந்து மீண்டும் ஏங்குகின்றான்! ஆகவே இந்நிலை 'அன்புற்றமர்ந்த வழக்காம்' அன்பும் ஆகாது; இன்புற்றமர்ந்த சிறப்பும் ஆகாது.

ஆகவே, அன்பில் நிலைத்து, அதனால் விளையும் இன்பம் பெற்று, வேறு எக்கவலையுமின்றி இன்புற்று, சிறப்புற்று வாழ் வதற்குச் சிற்றின்பம் உள்ள இவ்வையகம் ஏற்றதன்று; பேரின்ப நிலையே ஏற்றதென அந்நிலையை எய்த முனைந்து நிற்றல் வேண்டும்.

இக்குறளுக்குப் பொருள் கூறும் அறிஞர்கள் சிலர், இம்மைச் சிற்றின்பத்தை மட்டுமன்றி மறுமையில் அடையக்கூடிய பேரின்பத்தையும் குறிப்பிடுவது கவனிக்கத் தக்கது.

**பரிமேலழகர்:** "இவ்வுலகத்து இல்வாழ்க்கைக்கண் நின்று இன்பம் நுகர்ந்து அதன்மேல் துறக்கத்துக்குச் சென்று எய்தும் பேரின்பத்தினை, அன்புடையராம் இல்லறத்தோடு பொருந்திய நெறியின் பயன் என்று சொல்லுவர் அறிந்தோர்."

இதன் பொருள் என்ன? இல்லற வாழ்வில் காணும் சிற்றின்பத்தின் பயனே மறுமையின் பேரின்பம் என்பதா? சிற்றின்பமே பேரின்பத்துக்கு வழி என்பது கருத்தா? அஃது எங்ஙனமாகும்? மாறாக மெய்யன்பின் அடிப்படையில், அஃதாவது, 'என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் இலக்கண அடிப்படையில் கணவனும் மனைவியும் மேற்குறிப்பிட்டவாறு சிற்றின்பம் நுகர்வராயின், ஆங்குச் சிற்றின்பம் மேலோங்காமல், அன்பே மேலோங்கு கின்றமையால், அது மெய்யின்பத்துக்கு-நீடித்த பேரின்பத்துக்கு வழியாகும் எனப்பொருள் கூறுவோமானால், விளங்குகிறது.

இப்பொருளிலேயே **ஞா. தேவநேயன்** அவர்களும் கூறுகின்றார்.

"இல்லறத்தினாலேயே இம்மையில் இவ்வுலக இன்பமும், மறுமையில் விண்ணுலக இன்பமும் பெறுவதற்குக் காரணமாயிருப்பது அன்பு ஒன்றே என்பது இங்குக் கூறப்பட்டது."

**வாழ்வே அன்பின் வழியது:**

இம்மைக்கும் மறுமைக்கும் மெய்யின்பம் பயப்பது **அன்பு** ஒன்றேயாதலால்தான் வள்ளுவர் பலபட அன்பின் பெருமையையும் அதன் இன்றியமையாமையையும் அறிவுறுத்துகின்றார்.

மனிதனின் வாழ்வெல்லாம் 'அன்பின் வழியது' என்றும், அந்த அன்பின் வழியதாயில்லாத மனிதன் வெறும் தோல் போர்த்த எலும்புக்கூடே என்றும் கூறுகின்றார். மனிதனை மனிதனாக்குவது அன்பு ஒன்றே.

"அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு." (80)

அன்பு செய்வதற்கென்றே உயிர் (மனிதன்) உள்ளது.

ஆதலின், இல்லற வாழ்விலும், மனஉறவிலும் கூட, அன்பே மேலோங்கி நிற்க வேண்டும். 'அன்பு,' 'காதல்' என்னும் பெயரால் சிற்றின்ப இச்சை மேலோங்கவிடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

இல்லையேல், இல்லற வாழ்க்கை வெறும் புறத்துறுப்பு களின் உறவாகவே இருந்து விடும். இதனால் பயன் என்ன? புறத்துறுப்புகள் செய்ய வேண்டிய செயலுக்கு முழுமையான பொருள் தருவது அகத்துறுப்பாகிய அன்பேயாகும்.

"புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப்பு அன்பி லவர்க்கு?" (79)

ஆகவே, அகத்துள்ள உறுப்புபோல் அன்பானது இருந்து, மனிதனை இயக்கி, சிற்றின்பம் மேலோங்கி விடாமல் காத்துக் கொள்ள வேண்டும் என்க.

இத்தகைய அகத்துறுப்புச் சிறந்து விளங்கவில்லையேல், வாழ்க்கை மலரவே மலராது. காய்ந்துலர்ந்து போன, வளமற்ற வாழ்க்கையாக இருந்துவிடும். அன்பு இல்லாதவர் சிறப்புறுவர் என்பது பாறை நிலத்தில் அல்லது பாலை நிலத்தில் உலர்ந்த மரம் தளிர்ப்பது போன்றதே. உலர்ந்த மரம் தளிர்ப்பதே இயலாதது. அதிலும் பாலை நிலத்தில் அல்லது பாறை நிலத்தில் தளிர்ப்ப தென்றால் இருமடங்கு இயலாதென்க.

"அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று." (78)

மாறாக, அகத்துறுப்பாகிய அன்பைக் கொண்டுள்ள மனிதனின் வாழ்க்கை, பாலை நிலம் அல்லது பாறை நிலம் போன்ற (அஃதாவது துன்பம் நிறைந்த, வளமில்லாத) உலக வாழ்வில் மலரும் வலிமை படைத்ததாகும் என்னும் கருத்தும் இதனுள் மறைந்துள்ளது.

இத்துணை அருமையும் பெருமையும் உள்ள அகத்துறுப்பாம் அன்பில்லாத மனிதனின் இறுதி என்னாம்? தனக்கு நல்வாழ்வு கிடைக்க வேண்டுமென்ற நோக்கத்துடன், தான் மேற்கொண்ட

இல்லறமே அவனை வாட்டி வதைக்கும்! எலும்பில்லாத புழு கடும் வெயிலில் அகப்பட்டால் எப்படித் துடிதுடித்து அவதியுறுமோ அப்படியே அவன் துன்புறுவான்.

"என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்." (77)

ஈண்டு 'அறம்' என்றுள்ளது அறக்கடவுளைக் குறிக்கும் என்று உரைகள் கூறுகின்றன. ஆகுபெயராக 'அறவாழி அந்தணன்' ஆகிய கடவுளைப் பொதுப்படக் குறிப்பிடலாம்.

இத்துணைச் சிறப்புகளும், வலிமையும் கொண்டுள்ளதால், 'அன்பிற்கு முண்டோ அடைக்கும் தாழ்!' என்று கூறியதில் வியப்பொன்றுமில்லை.

**எது மெய்யன்பு?**

இனி, இந்த மெய்யன்பு எங்குள்ளது என அறிவதெங்ஙனம்? அஃதாவது, ஒருவர் காட்டும் அன்பு உண்மையான அன்புதானா? தன்னலத்தினைக் கருதிக் காட்டப்படும் அன்பா என்று வேறுபடுத்திக் காண்பது எங்ஙனம்?

விளக்குவோம்: அன்பெல்லாம் அன்பாய்விடா. ஒருவருக்கு அன்பு செய்தால், (அல்லது அன்பு செய்வதுபோல் காட்டிக்கொண்டால்) அதனால் தனக்கு நன்மை விளையும் என எதிர்பார்த்து அன்பு செய்வோர் உலகில் இல்லாமலா போனார்கள்? இது தன்னலமேயன்றி, அன்பன்று. அன்பின் வெளிவேடமே இது. ஏனெனில், உண்மை அன்பு எந்நலனையும் எதிர்பார்ப்பதில்லை. அதுமட்டுமன்று, தனக்குள்ள நலனையும் பிறர்க்கு உரிமையாக்கிவிடும். தனக்கென எதையும் வைத்துக் கொள்ளாது. இதையே வள்ளுவர், 'என்பும் உரியர் பிறர்க்கு' என்கிறார். தன் எலும்பையும் தந்து விடுதல் என்றால், எதையும் தனக்கென வைத்துக் கொள்ளாமல் தியாகம் செய்தல். எலும்பைத் தந்த பின் எஞ்சி நிற்பது ஒன்றுமில்லையன்றோ!

உடல் நிலைபெற எலும்பு தேவையில்லையா? எலும்பைத் தந்த பின் ஊனும் நிலைபெறாதாகையால், எல்லாமே தந்தாயிற்று என்பது பொருள்.

இத்தகைய அன்பு ஒருவரிடம் உண்டா என்று அறிவது எங்ஙனம்? அதற்குத் தக்க சான்று உண்டென்கிறார் வள்ளுவர்.

தம் அன்புக்குரிய பிறர்க்குற்ற துன்பத்தைக் கண்டதும், தாம் சிந்தும் சிறிய கண்ணீரும் உள்ளமை அன்பைப் பலரும் அறியச் செய்துவிடும் என்கிறார்.

**பிறர் துன்பம் கண்டு தாமும் துன்புறுவதில்தான் மெய்யன்பு உள்ளது** என்பது கருத்து.

அன்புக்குச் சான்றாகத் துன்பத்தைக் குறிப்பிடுவது மிகமிக உன்னிப்பாக நோக்கத்தக்கது.

இக்கருத்தை எளிதில் எண்பிக்க முடியும். கடும் நோயுற்றுக் கிடக்கும் தம் குழந்தைகளைக் கண்காணிக்கின்ற இரு தாய்மார் களை எடுத்துக் கொள்வோம்.

ஒரு தாய் தன் குழந்தையின் அருகிலேயே சோகமே வடிவென அமர்ந்திருக்கிறாள். உண்பதுமில்லை; உறங்கு வதுமில்லை. எந்நேரமும் குழந்தையின் நினைவாகவே ஏங்கு கிறாள். தன் சுகத்தைச் சிறிதும் பொருட்படுத்தாமல், தான் எவ்வளவு துன்புற்றாலும் சரி, தன் குழந்தை குணமடைந்தால் போதும் என்னும் ஒரே கவலையுடனிருக்கின்றாள்.

மற்றொரு தாய் ஏதோ ஓரளவு குழந்தையைக் கண்காணிக் கின்றாள் என்றாலும், உண்பதும் உறங்குவதும் குழந்தையை விட்டுவிட்டுத் தன் நண்பருடன் இன்புறுவதுமாக இருக்கின்றாள். தன் குழந்தையைப்பற்றி ஏதோ ஒரு சிறிது கவலையைத்தான் காட்டுகிறாள்.

இவ்விரு தாய்மார்களுள் யாருக்குக் குழந்தை மீது உண்மை யான அன்பு உண்டு என்று கேட்டால், முதலில் சொன்ன வளுக்கே என்று எவரும் தயக்கமின்றிப் பதிலிறுப்பர். ஏன்? எந்த நலனும் கோராமல், பிறர்க்காகத் துன்புறும்போதுதான் உண்மையான அன்பு வெளிப்படுகிறது. அவர் மேல் வைத்த அன்பு ஒன்றையே எண்ணித் துன்புறுவதினும் மேலான அன்பு இருக்கவியலாது. அன்பின் இந்த இலக்கணத்தைக் குறிப்பிட்டே

இயேசு கிறித்து, "தன் நண்பருக்காக உயிரைத் தியாகம் செய்வதினும் மேலான அன்பு யாரிடமும் இல்லை" என்றார்.

இக்கருத்தில்தான் ஐந்தவித்தானாகிய இறைவன் மனிதருடைய துன்பத்தைக்கண்டு, தாமும் துன்புற இசைந்தார். அதற்காகத் தம் உயிரையும் உடலையும் பலியாக்கி ஐந்தவித்தான் ஆனார். தீவினை செய்து தம் அன்பை இழந்த அன்பிலா மாந்தர் அனைவரும் தமக்குரியர் என்று, அவர் பொருட்டுத் தம் என்பையும் பிறர்க்கு உரியதாக்கினார். தமக்கென எதுவும் வைத்துக்கொள்ளாமல் அனைத்தையும் பலியாக்கினார்.

இத்துணை அன்பை உணர்ந்து அதன் வழி நின்றால் மட்டுமே உயிர் நிலைபெறும் என்க. இத்தகைய அன்பு இல்லறத்தினரையும் சாரும்; துறவறத்தினரையும் சாரும். இரு திறத்தார்க்கும் அன்பு இன்றியமையாததாகும். இல்லறத்தினரிடையே இத்தகைய அன்பு மேலோங்காவிடில், சிற்றின்பமே மேலோங்கி விடும். துறவறத்தாரிடையே இத்துணை அன்பு மேலோங்காவிடில், பேரின்ப நாட்டம் குறைவுறும். ஆகவே, அன்பின் வழியது உயிர்நிலை' என்பது உறுதியடைகிறது.

**சுருக்கம் :**

இதுவரை கூறிய விளக்கங்களிலிருந்து இவ்வதிகாரத்தில் வள்ளுவர் கூறும் அன்பு முதன்மையாக மனிதன், மனிதனின் பால் காட்டும்-காட்டவேண்டிய அன்பு அன்று; கடவுள் மனிதன் பால் காட்டிய அன்பென்று புலனாகிறது.

அந்த அன்பின் காரணமாகத்தான் கடவுள் மனிதனை 'அன்போடு இயைந்த தொடர்பென'ப் படைக்கின்றார். தன்னுள் அடைத்து வைக்க முடியாத அந்த அன்பினால்தான் இறைவன் ஆணையும் பெண்ணையும் இல்லறத்தில் இணைத்து, அந்த இல்லற வாழ்க்கையும் அன்போடு, இயைந்த தொடர்பாக விளங்கவேண்டும் என ஏற்படுத்தியுள்ளார். தாம் மனிதன் பால் காட்டும் அத்தகைய அன்பை. ஆணும் பெண்ணும் இல்லறத்தில் ஒருவர்பால் ஒருவர் காட்டவேண்டும் எனத்திட்டம் வகுத்துள்ளார். அத்தகைய அன்பே துறவறத்திலும் விளங்க வேண்டும் எனவும், மனிதன் மனிதன்பால் கொண்டிருக்க வேண்டிய உறவிலும் விளங்கவேண்டும் என்றும் விரும்புகின்றார்.

ஆகவே, எந்த அறத்தைக் கடைப்பிடித்தாலும், 'அன்பின் வழியது' வாழ்க்கை என்னும் அடிப்படையில்தான் அமைதல் வேண்டும். ஆகவேதான் சால்பூன்றிய தூண்களில் முதலாவதாக 'அன்புடைமை'யை வைத்தார் வள்ளுவர்.

இதை ஐந்தவித்தானாகிய இறைவன் மிகச்சிறப்பாக அறிவுறுத்தியிருப்பதும் கவனித்தற்பாலது. அன்புக்கு இலக்கணம் போல் உள்ள (மேற்சொன்ன) வார்த்தைகளைக் கூறுமுன் அவர் தந்த கட்டளை:

> ''நான் உங்களிடம் அன்பு கூர்ந்ததுபோல நீங்களும் ஒருவர் ஒருவரிடம் அன்புகூற வேண்டுமென்பதே என் கட்டளை......''

அஃதாவது, துன்பம் வந்துற்றபோது உங்கள் கண்ணீரைக் கண்டு நானும் கண்ணீர் வடித்ததுபோல் இவ்வுலகுக்கு வந்து துன்புற்றதுபோல நீங்களும் ஒருவரொருவருடைய துன்பங் கண்டு அவர்கள்பால் அன்பு செலுத்தி அவர்கள் கண்ணீரைப் போக்குங்கள்'' என்றவாறு.

மனிதன் இந்த அளவுக்குப் பிறர்பால் அன்பு செலுத்த மனவலிமையற்றவனாயிருக்கின்றான். அதனாற்றான், இறைவனே வந்து அவனுக்கு வழி காட்டியாகவும், வலிமை தருபவனாகவும் மேல்வரிச் சட்டமாகவும் நமக்குத் தன்னை அளித்துள்ளான். அன்பு என்பது என்னவென்று விளக்கிய தோடு, அந்த அன்பைப் பிறர்பால் செலுத்தத் தேவையான மனவலிமையையும் அருளினான். இதையெல்லாம் நினைவிற் கொண்டு, மனிதன் உண்மையான அன்பு வழியில் வாழ முழு மூச்சுடன் முயலுதல் வேண்டும் என்க.

இயேசு கிறித்து உலகுக்கு வெளிப்படுத்திய அன்பின் தன்மை பற்றி திரு.வி.க. அவர்கள், 'கிறித்துவின் அருள் வேட்டல்' நூலில் பாடியுள்ளது சிறப்பாக நினைவுறுத்தத் தக்கது.

அன்பே நீ ஆதலினால் ஆருயிர்கள் பொருட்டுன்
அழகுடலை வதைக்க விட்டாய்; அருள்உயிரை நீத்தாய்
இந்நிலத்தில் அச்செயலை எக்குரவர் ஏற்றார்?

..............................................................................

அன்பினிலே குறையிருந்தால் அருஞ் செயலை ஆற்றல்
ஆகாதே ஆகாதே! 'அன்புடைய அறவோர்
என்பும் பிறர்க்கு உரியர்' என எழுந்த மொழிக்குகந்த
இலக்கிய மாயிலங்கி நிற்கும் இயேசு குருநாதா!

இயேசுவின் வாழ்க்கையாகிய இலக்கியத்துக்கு வள்ளுவர் அன்புக்குக் கூறும் பொருள் இலக்கணமென அமைந்துள்ளது காண்க.

வேறுயாரும் — எக்குரவரும் — இச்செயலை (அதாவது தம் ஐந்தையும் அவிக்கும் அளவுக்கும், என்பும் பிறர்க்குத் தரும் அளவுக்குச்) செய்யவில்லை என்று அவர் கூறுவதும் கவனிக்க.

## அன்புடைமை

71. "அன்பிற்கும் உண்டோ அடைக்கும்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்."

அன்பின் வலிமையை அடைத்து வைக்கும் தாழ்ப்பாள் இல்லை. அன்பின் காரணமாய்ச் சிந்தப்படும் எளிய கண்ணீரே அதை வெளிப்படுத்தி விடும்.

72. "அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு."

உள்ளத்தில் அன்பில்லாதவர் அனைத்தையும் தமக்கே உரிமை எனத் தன்னலம் பாராட்டுவர்; (அல்லது, அன்பு காட்டாதவரும் தமக்குரியவராகப் பாராட்டுவர்) அன்புள்ளவர் தம் எலும்பும் (உயிரும்) பிறர்க்குரியதென (எவ்விதத் தன்னலமும் இன்றி) வாழ்வர்.

73. "அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போ டியைந்த தொடர்பு."

உயிர்களுள் தலைமையிடம் வகிக்கும் மனிதரிடை இருக்க வேண்டிய அன்புறவு, எலும்புக்கும் சதைக்குமுள்ள தொடர்பு போல், மிக நெருங்கியதாயிருத்தல் வேண்டும்.

74. "அன்பீனும் ஆர்வம் உடைமை அதுவீனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு."

அன்பிருந்தால் பிறரோடு நல்லுறவு கொள்ள ஆர்வமுண்டாகும்; அதனால் வேறுவகையில் எதிர் பார்க்க முடியாத நட்பு உருவாகும்.

75. "அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு."

உலகில் இன்பம் பெற்று வாழ்பவர் அடையும் சிறப்பு அன்பில் நிலைபெற்று வாழும் வாழ்க்கையே.

76. "அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்;
மறத்திற்கும் அஃதே துணை."

அறச்செயல்கள் மட்டுமே அன்பைச் சார்ந்துள்ளன என்பர்; ஆய்ந்து நோக்கின் அறத்துக்கு மாறான மறச்செயல்களும் அன்பையே சார்ந்துள்ளன. (ஒன்றன்மீது அல்லது ஒருவர்மீது அளவு மீறிய அன்பு வைப்பதால் வேறொருவருக்குத் தீங்கு விளைவிப்பது காண்கிறோம்).

77. "என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை யறம்."

எலும்பில்லாதது (புழு) வெயிலில் காய்ந்து அழிவுறுவது போல அன்புடன் இணையாத மனிதனை அறம் வருத்தும்.

78. "அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரம்தளிர்த் தற்று."

உள்ளத்தில் அன்பில்லாத வாழ்க்கை கொடிய பாலை நிலத்தில் பட்டுப்போன மரம் தளிர்த்தாற் போலத்தான்! (அஃதாவது மலராது).

79. "புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு?"

மனிதனுக்குள்ள உடல் உறுப்புகளால் என்ன பயன்? உள்ளத்தின் உறுப்புப்போல் உள்ள அன்பு இல்லாவிடில்.

80. "அன்பின் வழிய துயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு."

மனிதவாழ்வு அன்பையே அடிப்படையாகக் கொண்டது. அவ் அன்பு இல்லையேல், அவன் வெறும் தோலால் போர்த்தப் பட்ட எலும்புக்கூடே!

# 9. விருந்தோம்பல்

இவ்வதிகாரத்தில் உள்ள பத்துக் குறட்பாக்களிலும் 'விருந்து' என்னும் சொல் காணப்படுகிறது. இச்சொல்லால் குறிக்கப்படும் கருத்தை வள்ளுவர் அவ்வளவு வலியுறுத்துகிறார் என்பதே இதன் பொருள்.

'விருந்து' என்னும் சொல்லுக்கு இன்று சாதாரணமாகத் தரப்படும் பொருளில்தான் வள்ளுவர் இச்சொல்லை ஆள்கின்றாரா என்பது ஆய்வுக்குரிய தொன்று.

விருந்து என்பது, இன்று விருந்தாகப் பரிமாறப்படும் உணவையே குறிக்கின்றது. 'விருந்தினர்' என்னும் சொல் விருந்துக்கு வருபவரையே குறிப்பிடுகின்றது.

இவ்வதிகாரத்தில் வள்ளுவர் இச்சொல்லை விருந்துக்குரிய உணவு என்னும் பொருளிலோ விருந்துக்கு வருபவர் என்னும் பொருளிலோ ஆள்வதாகத் தெரியவில்லை. உணவு என்னும் பொருளில் ஓம்புதல் என்றால் உணவை ஓம்புதல் என்று பொருள் வரும்! இதன் கருத்தென்ன?

இவ்விருந்தோம்பல், இல்வாழ்க்கையோடு சிறப்பாக இணைந்திருப்பதை இவ்வதிகாரத்தில் முதல் குறளிலேயே காணலாம்.

'விருந்தோம்பல்' என்பதன் உண்மைப் பொருளை ஆய்ந்தால் இதன் முழுப் பொருளும் புலப்படும்.

விருந்து உபசரித்தல், வீட்டுக்கு வருபவரை அன்புடன் வரவேற்று உணவிடுதல் என்னும் பொருளில் மட்டுமே இந்த அதிகாரத்துக் குறட்பாக்களுக்குப் பொருள் கூறப்பட்டு வருகிறது. ஆனால், 'விருந்து' என்னும் சொல்லின் உண்மைப்பொருளை அல்லது **முதற்பொருளை** ஆய்ந்து நோக்கின், மேற்சொன்ன பொருள்மட்டுமேயன்றி வேறு ஆழ்ந்த பொருளும் இருப்பதாகத் தெரியவரும்.

**விருந்து** என்னும் சொல்லுக்கு முதலில் **புதுமை** என்னும் பொருள்தான் அகராதியில் தரப்படுகிறது. அதாவது, புதிதாயுள்ள நிலை, விரும்புவது என்னும் வேர்ப்பொருளைக் கொண்ட **விருந்து** என்னும் சொல் பின்பு விரும்பப்பெற்ற **புதியவரையும்,** அவர் நிலையான புதுமையையும், அவர்க்களிக்கும் சிறந்த உணவையும் முறையே குறித்து, இன்று உறவினர்க்கும் நண்பர்க்கும் படைக்கும் சிறந்த உணவையே குறிக்கும் அளவு இழிவடைந்துள்ளது. பண்டை விருந்தினர் புதியவராயிருந்ததினால் **புதுவர்** எனவும் பட்டார்

**(ஞா. தேவநேயன்)**

**கா. அப்பாத்துரை அவர்கள் தரும் விளக்கம்:**

''பொருளிலும் வடிவத்திலும் முறைமையிலும் பழமையின் எல்லை கடந்து, புதுமையில் முனையும் இலக்கிய வகையின் பெயராக விருந்து என்னும் சொல்லைத் தொல்காப்பியர் வழங்கி யுள்ளார்.

**புத்தம் புதிதான பண்பு, எதுவும் தொடர்பு அற்றவ ரிடம் காட்டப்படும் அன்பாதரவுப் பண்பு''** என்று உரையாசிரியர்கள் விளக்குகின்றனர்.

''உறவு எதுவும் அதாவது, அகத்தொடர்பும் புறத் தொடர்பும் அற்ற இனவரவினரே, **விருந்தினர்.''**

பண்டை உரோமரிடையில் விருந்தினரைத் தெய்வமாக, மருமகன்போல அன்பார்வத்துடன் வரவேற்கும் பண்பு சிறப் புற்றிருந்தது. இலத்தீன் மொழியில் விருந்தினர் என்பதற்குரிய சொல் - Hospes-புதியர், புதுவரவினராகிய அயலார் என்னும் பொருளும், விருந்தினர் என்னும் பொருளும் ஒருங்கே உடையதாக உள்ளது. வடபுல வேதவழக்கிலும் சமசுகிருதத் திலும் விருந்தினர்க்குரிய சொல் **இனவரவினர்** என்னும் பொருளை மட்டுமன்றி, விருந்தினரைத் தெய்வமாகப் பாராட்ட வேண்டும் என்னும் கருத்தும் உள்ளது.

இத்தகைய உயர்பண்பு இன்று படிப்படியாக **இழிபுற்றுச் சுருங்கி,** 'சிறப்பு உணவு...... குடும்ப சுற்ற சமுதாய எல்லை யினர்க்கும் நண்பர்களுக்கும் ஆரவாரமாகச் செய்யப்படும்

தன்னலம் குறிக்கொண்ட உபசரிப்பு' என்னும் பொருளில் வழங்குகிறது.

ஆகவே, தற்பற்றின் எல்லை கடந்த பண்பு - சுற்றம் சூழல், சாதி, சமயம், மொழி, நாட்டுச் சூழல், தன்னலம், தன்மதிப்புச் சூழல் ஆகிய யாவும் கடந்த, பேதமெல்லாம் கடந்த உயர் பேரின்பத்தின் (மனித இனத்தின்) பேறானவராகவே வள்ளுவ விருந்தினர் உள்ளனர்.

**விருந்து** என்னும் சொல் விருந்தில் படைக்கப்படும் உணவையும் குறிக்கலாம்; ஆகுபெயராக அவ்விருந்தை உண்பவரையும் குறிக்கலாம்.

ஈண்டு **விருந்து** என்னும் சொல், விருந்துக்கு வருபவரையே குறிக்கிறது காண்க.

ஆகவே, 'விருந்து ஓம்பல்' என்னும் சொற்றொடர் விருந்தினரை ஓம்புதல் என்று வேற்றுமைத் தொகையாகவோ' விருந்தினரை ஓம்பும் **ஓம்புதற்பண்பு** என்றோ கொள்ளலாம்.

பின்னைய பொருளே சிறப்பது காண்க. இவ்வதி காரத்துக்குப் பொருத்தமானது அஃதேயாம்.

இக்கருத்தில், **விருந்தோம்புதலாவது :** சுற்றம் சூழல், சாதி, சமயம், மொழி, நாட்டுச் சூழல், தன்னலம், தன்மதிப்புச் சூழல் ஆகிய யாவும் கடந்த, பேதமெல்லாம் கடந்த முறையில், முன்பின் அறிமுகமாகாமலே புத்தம்புதிதாகத் தம்மை அணுகி வருபவராயினும், எத்தொடர்பும் அற்றவராயினும், அனைவரிடமும் காட்டப்படும் அன்பாதரவுப் பண்பேயாகும்.

ஏதோ ஓரளவு அன்பு காட்டுவது போதாது. ஓம்புதல் என்னும் சொல் காத்தல், பாதுகாத்தல், பேணுதல், ஓம்புதல் என்னும் நிலைகளுள் உச்சநிலை என்பது கவனிக்க.

பன்மொழிப்புலவர் கருத்துகளை ஈண்டுத் தருகிறோம்.

**காத்தல்**-என்பது பொதுப்படக் காப்பாற்றலைக் குறிக்கும்.

**பாதுகாத்தல்:** பாதுகாத்தல், பங்கிட்டளித்துக் காத்தல் ஆகும். ஈண்டுக் **காக்கும்** பொருள் அறிவின் மிக்கது; காக்கப் படும் பொருள்கள் பல. இவை அறிவிற் குன்றியன. தாய் குழந்தையைப் பாதுகாப்பது போல.

**பேணுதல்:** அறிவின் மிக்க பொருள் அருமையின் மிக்க பொருளை, அது தன்னை அறியா நிலையில் காப்பது.

**ஓம்புதல்:** காக்கப்படும் பொருள் உச்ச நிலை பெறுகிறது. காப்பாரின் நிலையும் உச்ச நிலை ஆகிறது.

தம் முழு வாழ்வும், முழுக் கவனமும், முழு அறிவும் ஈடு படுத்திக் காக்கப்படும் பொருள் அல்லது பண்புக்கெதிரான சூழல் கூறுகளனைத்தையும் உயிர் கொடுத்தும் எதிர்த்து நின்று, தம் வாழ்வின் தலைநோக்கமான, அருமைப்பாடு மிக்க ஒன்றனுக்கே தம் ஒய்வொழிவற்ற முயற்சியை ஈடுபடுத்துவதே ஓம்புதல் ஆகும்.

'ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்' என்னும் குறட்பாவை நோக்குக.

இதனின்று வெளிப்படும் கருத்துகள் பின்வருமாறு:

1. ஈண்டுக் குறிக்கப்படும் பண்பைக் காப்பதில் வாழ்வும் முழுக்கவனமும் முழு அறிவும் ஈடுபடுத்தப்பட வேண்டும்.
2. இப் பண்புக்கு எதிரான சூழல் கூறுகள் உண்டானால், உயிர் கொடுத்தும் எதிர்த்து நிற்க வேண்டும்.
3. வாழ்வின் தலைநோக்கமானது இப்பண்பு.
4. அருமைப்பாடு மிக்க இவ்வொன்றனுக்கே தம் முயற்சியை ஈடுபடுத்த வேண்டும்.
5. அம் முயற்சி ஒய்வொழிவற்றதாயிருத்தல் வேண்டும்.

'விருந்து' என்னும் சொல்லுக்கு 'வீட்டுக்கு வருபவரை அன்புடன் வரவேற்று உணவிடுதல்' என்னும் பொருள் மட்டுமே இருந்தால், இந்த அளவுக்கு 'ஓம்பப்பட வேண்டும்' என்று

கூறுவது பொருந்துமா? மாறாக, முன்பு கூறியவாறு, சுற்றம் சூழ்தல் முதலிய பேதமெல்லாம் கடந்த முறையில் புத்தம் புதிதாகத் தம்மை அணுகி வருபவரையும், எத்தொடர்பும் அற்றவராயினும் அனைவரையும் அன்பால் அணைத்துக் கொள்ளும் பண்பே 'விருந்து' என்னும் சொல்லின் உண்மைப் பொருள் என்றால், 'ஓம்புதல்' என்னும் சொல்லுக்கு மேற்கூறிய பொருள் முற்றிலும் பொருந்தும்.

ஒழுக்கத்தையே ஒருவன் உயிரையும்விட அதிகமாக ஓம்ப வேண்டுமெனின், ஒழுக்கத்தைவிட எத்துணையோ உயர்ந்த தாகிய 'அன்பை' மேற்கூறிய முறையில் உயிர் கொடுத்தும் காக்க வேண்டுமென்பதில் வியப்பில்லையன்றோ?

'அன்பின் வழியது உயிர்நிலை' ஆதலின் அன்பின்றேல் மனித வாழ்வுக்குப் பொருள் இல்லை.

''அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்தும் சிறப்பு'' (75)

ஆதலின், அன்பில்லாத வாழ்க்கையில் இன்பம் இருக்க இடமில்லை.

''அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரம்தளிர்த் தற்று'' (78)

ஆதலின் அன்பில்லா வாழ்க்கை மலராது.

'அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' ஆதலின் என்பை (அதாவது உயிரை)க் கொடுத்தும் ஓம்பப்பட வேண்டியது அன்பு.

1. ஆகவே, 'விருந்தோம்பல்' என்பது **எல்லோரிடத்தும் செலுத்த வேண்டிய அன்பே** யென்க. இந்த அன்பில் முழுக் கவனமும் அறிவும் முழு வாழ்வுமே ஈடுபடுத்தப்பட வேண்டும். ஏனெனில், எளிதில் அடைந்துவிடக்கூடிய இலட்சியம் அன்று அன்பு. முயன்று முயன்று அடைய வேண்டியதொன்று; மிக மிக உயர்ந்ததொன்றாதலின், இத்துணை கவனத்துக்கும் மதிப்புக்கும் உரியதே.

2. தம் மணி விளக்க உரையில் கா. அப்பாத்துரை அவர்கள் கூறுவது போல, திருக்குறளில் திருவள்ளுவர் கண்ட ஒருமைப் பாட்டின் அருமைப்பாடு வேறு யாராலும் எட்ட முடியாதது. இதன் இரகசியம் அவர் கூறும் இறைக் கோட்பாட்டிலேயே உள்ளது.

"ஒரே இயற்கை, ஒரே உலகம் என்னும் பாறை உச்சியில், ஒரே மனித வாழ்க்கை, ஒரே உயிர்ச் சமுதாயம், ஒரே உயிரின வாழ்வு என்னும் நிலத்தளத்தின் மீது, ஒரே வாழ்க்கை நோக்கம் என்னும் கடவுட் கருத்துருவான கூர்ங் கோபுரமுகடு நோக்கி இழைவுறும்படி எழுப்பப்பட்ட பாரிய வாழ்க்கைத் தத்துவக் கோவிலாகவே திருவள்ளுவரின் கடவுட் கருத்து ஒருமைப்பாடு அமைந்துள்ளது."

(மணி I. 109)

"தனி மனிதர், ஆணும் பெண்ணும், இயற்கை வழி நின்று குடும்பத் தளத்தின் வாயிலாகச் சமுதாயத்துக்கும்†, இனத் துக்கும்‡ ஆற்ற வேண்டிய கடமைகளே **அறமாகவும்**, அது போலவே சமுதாயம்* குடும்பத்துக்கும் இனத்துக்கும் ஆற்ற வேண்டிய கடமைகளே **பொருள்** ஆகவும், **இனம்** குடும்பத் துக்கும் சமுதாயத்துக்கும் ஆற்ற வேண்டிய கடமைகளே **இன்ப** மாகவும், இம் மூன்றன் முழு மொத்த நோக்கே இனக் குறிக் கோளாகிய இறையாகவும், முழு மொத்த வளமே இறைப் பேறாகிய பேரின்பமாகவும் திருவள்ளுவரால் கொள்ளப் பட்டுள்ளன."

---

† சமுதாயம் என்பது அந்தந்த நாட்டில் ஏற்படும் மனிதர் குழுக்கள், அரசு முறைகளாம்.

‡ இனம் என்பது குறிப்பிட்ட சாதி, குலம் இவையல்ல; மனித இனத்தையே சூறிப்பிடும்.

* சமுதாயம் என்பது மனிதர்கள், உயிர்களின் முழுப்பரப்பு; ஒரே காலத்தில் உடன் வாழ்வு வாழும் குழு. இனம் என்பதோ இப்பரப்பின் முக்காலத் தொடர்புறவு ஒழுக்கு.

"இதை மனத்திற்கொண்டுதான் திருக்குறளைப் 'பொது மறை', 'உலக மறை' என்று அறிஞர் யாவருமே போற்று கின்றனர். மனித இனம் அனைத்தையுமே ஒரு குடும்பமாக இணைக்கும் கருத்தோடு இயற்றப்பட்டதே திருக்குறள். இணைக்கும் சக்தி அன்பெனப்படுவதே. இஃதே 'விருந்தோம்பல்' எனப்படுவது."

இந்தப் பண்புக்கு எதிரான சூழல் கூறுகள் பல இருந்தே வருகின்றன. சுற்றம், சூழல், சாதி, சமயம், மொழி, நாட்டுச் சூழல், தன்னலம், தன்மதிப்புச் சூழல் இவையாவும் இச்சூழல் கூறுகளே. இவற்றுள் மிக வலிமை படைத்தவை சாதி, சமயம், மொழி இவற்றால் ஏற்படக்கூடியவை. இவற்றை எதிர்த்து வெல்ல வேண்டும். தேவைப்பட்டால், உயிர் கொடுத்தும் எதிர்க்க வேண்டும். சாதி, சமயம் முதலானவை எளிதில் எதிர்த்து வெல்லக் கூடியவை அல்ல என்பதை அனுபவத்தால் அறிகிறோம்.

எனினும், இந்த விருந்தோம்புதல் பண்பே (அதாவது அனைவரையும் பேதம் எதுவுமின்றி அன்பால் அணைப்பதே) மனித வாழ்வின் நோக்கம் என்பதால், அருமைப்பாடு மிக்க இந்த ஒன்றனுக்கே ஒருவன் (சான்றோன்) தன் முயற்சி யெல்லாம் ஈடுபடுத்த வேண்டும். எளிதில் அடைய முடியாத மிக உயர்ந்த நோக்காதலால், ஓய்வொழிவற்ற முயற்சியாகவும் இருத்தல் வேண்டும்.

ஆகவே, ஈண்டுக் கூறப்படும் விருந்து ஓம்புதலை, "உலக மக்கள் எல்லாரையும், எத்தொடர்பும் இல்லாதவராயினும் கடவுள் குறிக்கோட் பண்புடன், அன்பால் அணைக்குமாறு செய்யப்படும் தீவிர முயற்சி" எனக் கூறலாம்.

இக் கருத்துகளையெல்லாம் முதற் குறட்பா சுருக்கமாகக் கூறுகிறது.

"இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு." (81)

'இருப்பது, ஓம்புவது, இல்வாழ்வது எல்லாம்' என்னும் விரிவே 'இருந்தோம்பி இல்வாழ்வதெல்லாம்' என்னும் தொகையாயிற்று.

இருப்பது — உலகில் மனிதன் இருப்பது.

ஓம்புவது — அறத்தை ஓம்புவது.

இல்வாழ்வது - அறத்தின் ஒரு பகுதியாகிய இல்லறத்தில் ஈடுபட்டு வாழ்வது.

எல்லாம் - துறவறத்தை மேற்கொள்வதும் கூட.

மனிதன் உலகில் தோன்றுவதும், அறத்தை வளர்க்க முற்படுவதும் (இவ்வதிகாரத்தில் விளக்கத் தொடங்கும்) இல்லறத்தை மேற்கொள்வதும், ஏன் (பின்னர் விளக்கப்பெறும்) துறவறத்தை மேற்கொள்ளுவதும் — எல்லாமே (மேற்சொன்ன கருத்தில்) 'விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டே' யாகும்.

இனி ஆசிரியர் 'இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பவும் வேளாண்மை செய்யவுமே' என அழுத்தமாகக் கூறுகிறார். ஏன்? என்பது ஆயத்தக்கது.

வேளாண்மை செய்வதென்றால், என்னவென்று 'ஒப்புரவு' அதிகாரத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

திருக்குறள் 22-ஆம் அதிகாரமாகிய 'ஒப்புரவு'ப் பகுதியிலும், விருந்தோம்பல் அதிகாரத்தில் முதல் குறளிலேயே கூறப்படும் 'வேளாண்மை செய்தற்பொருட்டு' என்னும் சொற்கள் காணப்படுகின்றன.

இல்வாழ்வதெல்லாம் விருந்தோம்பவும் (ஐந்தவித்தான்) 'தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற்பொருட்டுமே' என்கிறார் வள்ளுவர். ஈண்டு எழுப்பக் கூடிய வினா: விருந்தோம்புவதும்...... வேளாண்மை செய்வதும் தொடர்பற்ற இரு செயல்களா? ஒன்றோடொன்று இணைந்தவையா? என்பதாகும்.

விருந்தோம்பினால்தான் வேளாண்மை செய்ய இயலும் எனக் கூறுவது போலவே காணப்படுகிறது. இரண்டும் தொடர் பற்ற செயல்களாயின்,

இருந்தோம்பி இல்வாழ்வது, விருந்தோம்பவும்
வேளாண்மை செய்யவுமே—

என்னும் பொருளில் குறளை யாத்திருக்கலாம். யாத் திருக்கும் முறையை நோக்கினாலும் இரண்டும் தொடர்புடைய செயல்கள் எனவே கூறத் தோன்றுகிறது.

இனிப் பொருளை ஆய்வோம்.

1. 'விருந்து' என்னும் சொல்லை 'விருந்துணவு' என்னும் பொருளில் ஆண்டிருந்தால், இல்வாழ்க்கையின் நோக்கமெல்லாம் விருந்துணவு அளிக்கவே என்னும் பொருள் கிடைக்கும். இது சிறிதும் பொருத்த மற்றது என்று எளிதில் புலப்படும். மேலும், உணவை ஓம்புதல் என்பதில் பொருளே யில்லை. அல்லது உணவைக் காத்தல், பாதுகாத்தல், உணவைப் பேணுதல், அதன் மீது முழுக்கவனமும் செலுத்துதல், அதற்காக ஓய்வொழி வற்ற முயற்சி செய்தல் என்றெல்லாம் பொருள் உண்டாகும். இது முற்றும் பொருத்த மற்றது எனச் சொல்லத் தேவையில்லை. விருந்துணவுக்காகவே மனிதன் வாழ்கிறான் என்னும் கருத்து எங்ஙனம் பொருத்தமான தாகும்?...... நகுதற்குரியதே!

விருந்துக்கு வரும் விருந்தினரை ஓம்புதல் என்று பொருள் கொடுத்தாலும் விருந்தினருக்காக முழு மூச்சுடன் உழைப்பதும் அவர்களுக்காக ஓய்வொழிவின்றி முயல்வதுமே மனித வாழ்வின் முதன்மையான நோக்கம் என்றாகும். இதுவும் பொருத்தமற்ற தென்றே புலப்படுகிறது.

ஆகவே, வள்ளுவர் 'விருந்து' என்னும் சொல்லுக்கு முற்றிலும் வேறு பொருளைத் தந்திருப்பதாகவே காண்கிறோம். இஃது ஓரளவு விரிவாகத் 'திருக்குறள் கூறும் சான்றாண்மை' நூலில் 3-ஆம் அதிகாரத்தில் விளக்கப்பட்டுள்ளது.

ஈண்டுச் சுருக்கமாகக் கூறின் பின் வரும் கருத்துப் புலப்படும். அஃதாவது, பரிமேலழகர் அன்புபற்றிக் கூறும் போது 'தொடர்

புடையார் மாட்டுச் செய்த அன்பு' என்கிறார். "ஒருவனுக்குத் தொடர்புடையார் மாட்டுச்செய்த அன்பு **அத்தன்மையால்** பிறர்மாட்டும் விருப்பமுடைமையைத் தரும்'' என்கிறார். (குறள் 74 உரை).

அன்பெனப்படுவது தொடர்புடையார் மாட்டுச் செய்யப் படுவதொன்று. இவ்வுரையில் 'அத்தன்மையால்' என்று அவர் கூறுவதன் பொருள் விளங்கவில்லை. "தொடர்புடையார் மாட்டு அன்பு செய்யும் தன்மையால், பிறர் மாட்டு விருப்பம் உண்டாகலாம்'' என்னும் கருத்து மட்டுமே காணப்படுகிறது. ஈண்டுக் கூறப்படும் விருப்பத்துக்கும் 'அன்பிலார் எல்லாம் தமக்குரியர்' என்னும் குறள் கூறும் அன்புக்கும் என்ன தொடர்பு? 'என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் அன்பு வெறும் விருப்பமாக இருத்தலாமோ? ஆகவே பரிமேலழகர் உரையில் 'அன்பு' என்பது தொடர்புடையார் மாட்டுச் செய்யப்படுவது என்னும் கருத்தே வலுக்கிறது. ஆனால் வள்ளுவர் கூறும் அன்பு, சிறிதும் தொடர்பில்லாதவர் மாட்டும் செய்யப்படுவதொன்றாகும். சிறிதும் தொடர்பில்லாதவரையே — புதியவர் என்று பொருள் படும் 'விருந்து' என்னும் சொல்லால் வள்ளுவர் குறிப்பிடுகிறார் என்க. 'விருந்து' என்னும் சொல்லுக்குப் 'புதுமை' என்றும் விருந்தினர் என்னும் சொல்லுக்குப் 'புதியவர்' என்றும் அகராதி களும் பொருள் கூறுவது கவனித்தற்பாலது. இதுவே தொடக் கத்தில் இச் சொல்லுக்கு இருந்த பொருள். 'எத்தொடர்பும் அற்றவரிடம் காட்டப்படும் அன்பாதரவுப்பண்பு', "உறவு எதுவும் - அஃதாவது, அகத்தொடர்பும் புறத்தொடர்பும் அற்ற இனவரவினரே'' என்பது பன்மொழிப் புலவர் கூறும் பொருள். 'இனவரவினர்' என்பது வெறும் மனித இனத்தைச் சார்ந்த வராய்ப் புதிதாய் வருபவர் என்று பொருள்படும்.

இக்கருத்தை மனத்தில் கொண்டு, இவ்'விருந்தோம்பல்' அதிகாரத்தில் உள்ள குறட்பாக்களை ஆராய்வோம்.

முதல் குறட்பாவுக்கு விளக்கம் தந்தாயிற்று. (மேற் சொன்ன எனது நூலில் 3,7 அதிகாரங்களைக் காண்க.

82. "விருந்து புறத்ததாத் தான்உண்டல் சாவா
மருந்துஎனினும் வேண்டல்பாற்று அன்று.''

இக்குறளில் 'உண்டல்' என்னும் சொல்லுக்கு மேலே 44-ஆம் குறளில் தரப்பட்ட விளக்கமே பொருந்துவதாகத் தோன்று-

கிறது. அஃதாவது வாழ்வின் இன்ப துன்பங்களை நுகர்வது என்க.

இப்பொருள் கொண்டு இக்குறளை ஆயும் போது, 'புறத்ததா' என்னும் சொல்லுக்கு, வீட்டுக்கு வெளியே என்னும் பொருளைவிட, 'புறக்கணிக்கப் பட்டவராய்' என்னும் பொருளே சிறக்கிறது.

சாவா மருந்து — சாவா மருந்து என்பதொன்றில்லை யென அறிவோம். கருத்து — அத்துணை உயர்ந்த ஒன்று.

ஆகவே, குறளின் கருத்து: எத்துணை உயர்ந்த இன்ப மாயினும் அதைப் பிறருடன் — சிறப்பாகத் தம்மை நாடி வருவோருடன்—(அவர்கள் சிறிதும் தொடர்பற்றவர்களாயினும் கூட) பகிர்ந்து கொள்வதே முறை — உண்மையான அன்பிற்கு அத்தாட்சி; அதைத் தானே துய்த்தல் முறையாகாது; உண்மை யான அன்பாகாது. (அன்பின் அடிப்படையில் எழுவதே விருந்து ஓம்புதல் என்பது தெளிக). அங்ஙனமே, துன்பம் வரினும் — எத் துணை துன்பமாயினும் அதிலும் பங்குகொள்வதே அன்பின் உயரிய பண்பு. 'என்பும் உரியர் பிறர்க்கு' அன்றோ!

**விவிலியம் வாசிக்க :** யாகப்பர் 2: 1—6; 14—17
1 அருளப்பர், 3: 16—18
எபிரே — 13: 1—3
1 இராயப்பர் — 4:8—10 முதலியன.

83. "வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று."

வருவிருந்து — வீட்டிற்கு வருபவர்கள் — தொடர்பற்ற வர்களும் தொடர்புள்ளவர்களும்—எவராயினும்
பருவருதல்—துன்புறுதல்.

ஏதாவது தேவையினால் வருந்துவோரைச் சலிப்பின்றி ஓம்புவார்க்குத் துன்பம் நிகழ்தலும் அழிவு வருதலும் இல்லை.
விவிலியம் சங்கத் திருவுரை. 11:1-2 காண்க.

''ஓடும் தண்ணீரின் மேல் உன் அப்பத்தை விடு. நெடுங் காலத்துக்குப்பின் அதைக் கண்டெடுப்பாய். அதை ஏழு பேருக்கும் எட்டுப்பேருக்கும் பங்கிட்டுக் கொடு. ஏனெனில், வருங்காலத்தில் உனக்கு என்ன தீங்கு நேருமோ உனக்குத் தெரியாது.'' இதில் 'அப்பம்' எனப்படுவது உணவு என்று மட்டுமன்று, பொதுவாக உணவு போன்ற எவ்வுதவியுமே எனக் கொள்க. ஓடும் தண்ணீரில் விடுவது — என்றால் 'என்ன ஆகுமோ?' என்று அறியாமலே உதவி புரிவதாகும். நம்மிட மிருந்து உதவி பெறுபவர் எத்தகையவர்களோ என்று கூடச் சிந்தியாமல் உதவி புரிவது. இங்ஙனம் உதவி பெறுபவர்கள் பன்முறை நன்றி கெட்டவர்களாய்த் தீமை புரிவதும் உலகில் நிகழ்வதொன்று. எனினும், 'விருந்தோம்புதல்' என்னும் சிறப்புக் குணம் இதையெல்லாம் பொருட்படுத்தாது. அங்ஙனம் செய்யுங்கால் இறுதியில் நன்மையே நிகழும். 'பாழ்படுதல்' இன்றாகும். ஆகவே, இஃது எத்துணை உயரிய பண்பு என்பது காண்க. ஏழுபேர், எட்டுப்பேர் என்பவை 'பலருக்கும்' என்னும் பொருளில் உள்ளன.

84. ''அகன்அமர்ந்து செய்யாள் உறையும் முகன்அமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல்''

இக்குறளில் 'செய்யாள்' என்னும் பெயர் குறிப்பிடத்தக்கது. இலட்சுமி, திருமகள் என்று இச்சொல்லுக்குப் பொருள் கூறுவர் உரையாளர். இது சிறிதும் பொருந்தாத உரை. குறிப்பிட்ட ஒரு தெய்வத்தை வள்ளுவர் வழி பட்டவராயின், நூலில் தொடக்கத்திலேயே அன்றைய நூல் இயற்றும் வழக்கப்படிக் குறிப்பிட்டிருப்பர். மாறாக இறைவன் என்னும் பொதுப் பெயரையே தாம் வழிபடும் கடவுளாகக் குறிப்பிடுகின்றார். ஆகவே, நூலின் வேறு பகுதிகளில் இவ் 'இறைவன், ஆதிபகவன், மலர்மிசை ஏகினான்' முதலிய பெயர்கள் எந்தச் சமயத்தைச் சார்ந்தவை என வேறு நூல்களில் கூறப்படாததால், வேறு எந்தச் சமயத்தோடும் தொடர்பு கொண்டதொரு தெய்வத்தின் பெயரை ஆசிரியர் குறிப்பிட்டிருக்க இயலாது. ஆகவே, ஈண்டுக் கூறப்படும் 'செய்யாள்' வேறிடங்களில் கூறப் படும் 'செய்யவள்' (167) முகடி (167,936) தாமரையினாள் (617) கரியாள் (617) தாமரைக்கண்ணான் (1103) முதலிய பெயர்களை வள்ளுவர் பயன்படுத்துவதற்கு வேறு காரணம்

இருத்தல் வேண்டும். இக்காரணத்தைப் புலவர் குழந்தை கூறுகின்றார்:

"செல்வத்தையும் வறுமையையும் பெண்பாலாகக் கூறிய வாறு" என்கிறார்.

வடமொழியில் 'இலட்சுமி' என்னும் சொல்லுக்குச் செல்வம், செழுமை, அதிருஷ்டம், அழகு, கவர்ச்சி, ஒண்மை, என்னும் பொருள்களே முதன்மையாக விளங்குவது காண்க. இதை உருவகப்படுத்தியதே இலக்குமி எனும் தெய்வம் என்றறிக. இங்ஙனமே செய்யாள் முதலிய பெயர்கள்பற்றியும் கூறலாம்.

மேலும், 'செய்யாள்' என்னும் சொல்லால் பொருளாகிய செல்வம் மட்டுமேயன்றி, அருளாகிய செல்வமும் குறிப்பிட வியலும். பொதுவாக **நலன்கள்** என்னும் பொருள் கொள்ளலாம். இதை விவிலியம் பின்வருமாறு கூறும்,

"அவர்கள் வேதனையால் மிகவும் சோதிக்கப்பட்டபோது, கொடிய வறுமையில் ஆழ்ந்திருந்தும், அவர்களுற்ற பெரு மகிழ்ச்சி வள்ளன்மையாய்ப் பொங்கி வழிந்தது. தங்களால் இயன்ற அளவுக்குக் கொடுத்தார்கள்; இயன்ற அளவுக்கு மேலும் கொடுத்தார்கள். அதற்கு நானே சாட்சி. இறை மக்களுக்குச் செய்யப்படும் அறப்பணியில் பங்குகொள்ளும் பேறு தங்களுக்கு அளிக்க வேண்டுமென்று தாங்களே முன்வந்து எங்களை வற்புறுத்திக் கேட்டுக் கொண்டனர். நாங்கள் எதிர் பார்த்ததற்கும் மேலாக அவர்கள் கடவுளின் திருவுளத்தால், தங்களையே ஒப்புக்கொடுத்தார்கள். இப்படி அவர்கள் எங்கள் பணிக்குத் தங்களைக் கையளித்தது, முதன்மையாக ஆண்டவருக்கே கையளித்ததாயிற்று." (2 கொரி. 8:2—5).

பொருள் தேவையால் துன்புற்றிருந்த மக்களைக் குறிப்பிட்டுப் புனித சின்னப்பர் கூறும் வார்த்தைகள் இவை. தம்முடன் தொடர்பற்ற இவர்களை விருந்தினராகக் கருதிக் கொரிந்து நகர் மக்கள் எங்ஙனம் 'பகுத்துண்டார்கள்' என்று விளக்கும் வசனங்கள் இவை. இங்ஙனம் செய்ததால், அவர் களுக்கு எங்ஙனம் அருள் வளம் வாய்த்தது என்றும் கூறுகிறார்.

மேலும், விசுவாசம், சொல்வன்மை, அறிவு, தளராத ஊக்கம், எங்களிடமிருந்து நீங்கள் பெற்றுக்கொண்ட அன்பு இவற்றிலெல்லாம் நிறைவளம் உங்களுக்கு வாய்த்துள்ளது. அதே வளம் இந்த அன்புத்தொண்டிலும் உங்களிடம் விளங்கட்டும். இதை நான் கட்டளையாகச் சொல்லவில்லை; பிறருடைய ஊக்கத்தை எடுத்துக் காட்டி, உங்கள் அன்பு உண்மையானதா எனச் சோதிக்கவே விரும்புகிறேன். ஏனெனில், நம் ஆண்டவராகிய இயேசுகிறிஸ்துவின் அருள் வன்மையை நீங்கள் அறிந்தேயிருக்கிறீர்கள். அவர் செல்வ மிக்கவராய் இருந்தும், அவருடைய ஏழைமையால், நீங்கள் செல்வராகும்படி, உங்களுக்காக ஏழையானார். அத் திட்டத்தைப்பற்றிய என் கருத்து இதுவே. இதனால் உங்களுக்கே நன்மை உண்டாகும். கடந்த ஆண்டிலிருந்து நன்கொடை திரட்டத் தொடங்கியவர்கள் நீங்களே; அது மட்டுமன்று; அப்படிச் செய்ய முதலில் திட்டமிட்டவர்களும் நீங்களே. (II கொரிந்தியர் 8:7-10)

'அகனமர்ந்து' என்பது இல்லமாகிய (குடும்பமாகிய) இல்லத்தை மட்டுமன்று, உள்ளமாகிய அகத்தையும் குறிக்கும். இல்லத்திலும் சரி, உள்ளத்திலும் சரி, அருள் வளம் பெருகும் இல்லத்தில் மட்டுமே பொருள் பெருகக்கூடும்.

இல் - என்னும் சொல்லுக்கும் அங்ஙனமே பொருள் கொள்க.

85. ''வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்''

மிசைதல்—அனுபவித்தல், உண்டல், நுகர்தல்.

மிச்சில்—எச்சில், ஒழிபொருள், எஞ்சிய பொருள்.

புலம்—இடம், நிலம்.

குறள் 43-இல் கூறிய வண்ணம், நன்மையைத் துய்ப்பதில் தனக்கு இறுதி இடம் தருபவன், அஃதாவது முதலில் தன்னையும் தன்தேவைகளையும் நிறைவு படுத்திவிட்டு அதன் பின்னரே பிறர் தேவைகளைக் கவனிப்பதற்கு மாறாக, முதலில் பிறர்க்கு நன்மை செய்த பின்னர் மிகுதியாயிருக்கும் ஒரு சிறு பகுதியைத்தான் அனுபவிப்பவன் எக்குறைவையும் அடையான்.

இக்கருத்தையே, 'அவன் வயலில் விதைத்து உழைக்க வேண்டியதுகூட தேவையில்லை; நிலம் தானாகவே பலன் கொடுக்கும்' என்று உவமையாகக் கூறுகிறார். இத்தகையவனது 'புலமா'கிய உள்ளத்தில் நன்மை பெருக் கெடுக்கும் என்பது கருத்து. நிலமாகிய புலத்தில் பொருளுக்குரிய பெருக்கும், உள்ளமாகிய புலத்தில் அருளுக்குரிய பெருக்கும் உண்டாகும் என்க.

விவிலியக் கருத்து:

இதை எண்ணிப் பாருங்கள். சிறுக விதைப்பவன் சிறுக அறுப்பான். பெருக விதைப்பவன் பெருக அறுப்பான். ஒவ்வொருவனும் தனக்குள் முடிவு செய்தவாறு கொடுக்கட்டும். முகவாட்டத்தோடோ கட்டாயத்தினாலோ கொடாதீர்கள். ஏனெனில், முக மலர்ச்சியுடன் கொடுப்பவன் மேல்தான் கடவுள் அன்பு கூர்கிறார். கடவுள் உங்களை எல்லா நன்மைகளாலும் நிரப்ப வல்லவர். எந்தச் சூழ்நிலையிலும் எப்போதும் தேவையானதெல்லாம் போதுமான அளவில் உங்களிடம் இருக்கச் செய்வார். அதோடு எந்நற்செயலையும் செய்வதற்குத் தேவையான பொருள் உங்களிடம் மிகுதியாகவே இருக்கச் செய்வார். அதைக் குறித்தே,

''வாரி வழங்கினான், ஏழைகளுக்கு ஈந்தான்
அவனது ஈகை என்றென்றும் மறக்கப்படாது!''

என்று எழுதியுள்ளது.

விதைக்கிறவனுக்கு விதையும், உண்பதற்கு உணவும் கொடுத்து உதவுகின்றவர், விதைப்பதற்கு வேண்டியதை உங்களுக்கும் கொடுத்து, அதைப் பெருகச் செய்து, உங்களுடைய ஈகையால் ஏராளமான பலன் விளையச் செய்வார். நீங்களும் எல்லா வகையிலும் செல்வர்களாகி, உங்கள் வள்ளன்மையில் எக்குறைவுமின்றி விளங்குவீர்கள்; எங்கள் பணியின் வாயிலாக அவ்வள்ளன்மை மக்களின் நன்றியறிதலைக் கடவுள்பால் எழும்பச் செய்யும். அஃதாவது, நீங்கள் செய்யும் இந்தத் தொண்டு இறைமக்களின் குறைகளை நீக்குவதோடு, பலர் கடவுளுக்குச் செலுத்தும் நன்றியாகவும் மலரும். இந்தத் திருப் பணியின் வாயிலாய் உங்கள் நற்பண்பு எண்பிக்கப்படும். நீங்கள் ஏற்றுக் கொண்ட கிறிஸ்துவின் நற்செய்திக்குக் காட்டும் கீழ்ப்

படிதல் புலப்படும். அவர்களுக்கும் மற்றெல்லாருக்குமே உங்கள் நன்கொடையால், நீங்கள் காட்டிய வள்ளன்மையும் வெளிப்படும். அந்தக் கீழ்ப்படிதலையும் வள்ளன்மையையும் பார்த்து, அவர்கள் கடவுளை மகிமைப்படுத்துவார்கள். மேலும், கடவுள் உங்கள் மேல் பொழிந்த அருளை அவர்கள் உணர்ந்து, உங்களிடம் பரிவு கொண்டு, உங்களுக்காக வேண்டுவார்கள். கடவுள் வழங்கிய சொல்லொண்ணாக் கொடைக்காக அவருக்கு நன்றி.

86. "செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு."

வந்த விருந்தினரை-தொடர்பற்ற பிறரை — வரவேற்று அவர்க்கு அன்பு செய்த பின்னர், இனி இவ் ஓம்புதல் பணி இல்லை என்னாது, மேலும் அத்தகையோரை எதிர் பார்த்து அவர்கட்கும் அன்பு செய்தல் வேண்டும். அஃதாவது, விருந்தோம்புதல் என்றும் தொடர்ந்து நிகழ வேண்டிய தொன்றாம். இங்ஙனம் செய்வார் வானவர்களுக்கே விருந்தினராவார்; அஃதாவது, வானவர்களுடைய அன்புக்கும் பாராட்டுதலுக்கும் உரியவராவார்.

87. "இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்."

(1) வேள்வி—உதவி (புலவர் குழந்தை)

(2) வேட்டுச் செய்யும் வினையாகலின் விருந்தோம்பலை வேள்வி என்றார். வேட்டல் = விரும்பல்.
தேவநேயப் பாவாணர்.

(3) வேள்வி—ஆராதனை, ஈகை, யாகம். (அகராதி)
இனைத்துணை — இன்ன அளவினது

துணைத் துணை என்னும் தொடர் குறிப்பது என்ன?

இல்வாழ்வான் துறந்தார்க்கும், துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும் துணையாக இருக்க வேண்டியவன் என 42-ஆம் குறளில் கூறப்பட்டது.

'துணைத்துணை' — என்னும் சொற்றொடரில் இரண்டாவதாக உள்ள 'துணை' இனைத்துணைத்து — என்னும் தொடரில் உள்ளது போல, 'அளவு' என்று பொருள் படும். முதலாவதாகக் கூறப்பட்ட 'துணை'— இந்த 42-ஆம் குறளில் கூறப்படும் 'துணை'யைத்தான் குறிப்பிடவியலும் எனத்தோன்றுகிறது. ஏன்? 'துணைத்துணை' என்னும் தொடருக்கு உரையாளர் கூறும் பொருள்:

'அவ்விருந்தின் தகுதியளவே அளவு' —(பரிமேலழகர்)

'அவ்விருந்தினரின் தன்மை யாதோரவிற்று' — மணக்குடவர்.

'விருந்தினரின் தகுதியளவே அதன் அளவாம்'—
தேவநேயப்பாவாணர்.

இரண்டாவதாக வரும் 'துணை' என்னும் சொல்லுக்கு 'அளவு' என்னும் பொருள் என்பது இவ்வுரையாசிரியர்களின் விளக்கத்தினின்றே புலப்படுகிறது. முதலாவதாக வரும் துணை என்னும் சொல்லுக்கு 'விருந்து, விருந்தினர்' என்னும் பொருளையே உரையாளர் தருவதைக் காண்கிறோம்.

ஆனால், ஆழ்ந்து நோக்கின் வெறும் விருந்தினரை மட்டும் குறிப்பதாகத் தோன்றவில்லை. இல்வாழ்வான் யாருக்கெல்லாம் துணை நிற்க வேண்டுமோ அவர்களையே குறள் சிறப்பாகக் குறிப்பிடுகின்றது.

43-ஆம் குறளில், தென்புலத்தார், தேவர், விருந்தினர், உறவினர் என்னும் நால்வகையினரிடத்தும் 'ஓம்புதல்' நிகழ வேண்டுமென்றும், இறுதியாக ஓம்பப்படுவது 'தான்' என்றும் கூறப்பட்டுள்ளது. இவர்களுள் தென்புலத்தாராகிய இறையறிவு உணர்வுடையவர்க்கும், விருந்தினர்க்கும் உறவினர்க்கும் ஓம்புதல் பணி நிகழலாம். தெய்வம் என்னும் தேவர்க்கு ஆற்றக்கூடிய ஓம்புதல் வேறுவகைப்பட்டது என மேலே கூறப்பட்டது கவனிக்க.

மேலும், துறந்தார்களுள் இறையறிவு உணர்வுள்ளவர்களும் அடங்குவர் அன்றோ? துவ்வாதவர்களும் விருந்தினர்களும் உறவினர்களும் அடங்குவர். அங்ஙனமே இறந்தார்களுள்

துவ்வாதவர்களும் அடங்குவர். 'தான்' என்பவர் எதிலும் அடங்கக் கூடும்! ஆகவே, இக்குறளில் நாம் கவனிக்க வேண்டியது துறந்தார், துவ்வாதவர், இறந்தார் இம் முப் பகுதியினரையே என்க. மேலும், இவர்களுக்கே இல்வாழ் வான் துணை நிற்க வேண்டியவன். இக் கருத்தை மனத்தில் கொண்டு பொருள் கூற முற்பட்டால், இல்வாழ்வான் துணை புரிய வேண்டிய இம்முப்பகுதியினரின் தகுதியின் அளவே 'விருந்தின் வேள்விப் பயன்'; அஃதாவது, இந்த முத்திறத் தார்க்கும் செய்யும் 'வேள்விப் பயனே' பயன் என்க.

ஈண்டு 'வேள்விப் பயன்' என்றால் என்ன? 'வேள்வி' என்னும் சொல்லுக்கு உதவி, விரும்பிச் செய்யப்படுதல், ஆராதனை, ஈகை, யாகம் என்று பொருள் கூறப்படுகிறது.

தொடக்கத்தில் 'யாகம்' பலி என்னும் பொருளே இச் சொல்லுக்குச் சிறப்பாக அமைந்திருந்தது.* வேள்வி செய் பவன் தெய்வத்துக்குப் பலியிடும் பொருளைக் காணிக்கை யாகத் தருவதாலும், பலியிடும் தெய்வத்துக்குரிய ஆராதனைச் செயலாகக் கருதப்படுவதாலும், ஆராதனை என்னும் பொருள் ஏற்பட்டது போலும்! தெய்வத்துக்குத் தரப்படுவது 'காணிக்கை' எனப்படும். மனிதனுக்கு ஏதாவது தருவதாயிருந்தால், அது பிச்சையாயிருக்கலாம். நல்மனத்தோடு—தாராள மனப்பான்மை யோடு தந்தால், ஈகை எனப்படும். மேலோர்க்குத் தருவதும் 'காணிக்கை' என்று கூறப்படும்.

இனி, இறைவன் விரும்புவது, நம்மிடமிருந்து எதிர் பார்ப்பது கொலை வேள்வி யாகமா அல்லது தியாகச் செயலா? ஐந்தவித்தான் தன்னைப் பலியாக்கிய பின்னர் எந்தக் கொலை வேள்வியும் தேவையுமில்லை, பயனுமில்லை என்பதை வள்ளுவரே வேறிடத்தில் கூறுகின்றார். 'அவி சொரிந்து.....' என்னும் குறளை நோக்குக. ஆகவே, இறைவன் இனி எதிர் பார்ப்பது யாகமாகிய வேள்வியன்று, தியாகமாகிய வேள்வியே என்க. தியாகம் என்னும் பதத்தில் யாகம் அடங்கியிருப்பது கவனிக்க. தியாகம் ஒன்றே சிறப்பான ஆன்மீக நன்மை பயக்குவது என உணர்தல் அவசியம். யாகங்கள் தேவை யில்லை; தியாக உள்ளமும், இறை புகழ்ச்சி ஆராதனையும்,

* தேவ நேயபாவாணர் உரை காண்க.

நன்றி உள்ளமுந்தான் இறைவன் விரும்புவது என்னும் கருத்தை வெகுகாலத்துக்கு முன்பே விவிலியம் வலியுறுத்தியுள்ளது:

''என் மக்களே! எனக்குச் செவி கொடுங்கள் .....நீ இடும் பலிகளைக் குறித்து உன்னைக் கண்டிக்கவில்லை. ஏனெனில், உன் தகனப் பலிகள் எந்நேரமும் என் கண் முன்னே இருக்கின்றன. உன் வீட்டில் உள்ள காளை மாட்டையா நான் கேட்கிறேன்? உன் மந்தையிலுள்ள ஆடுகளையா நான் கேட்கிறேன்? காட்டிலுள்ள விலங்குகளெல்லாம் எனக்கே சொந்தம். என் மலைகளில் மேயும் பல்லாயிர மிருகங்களும் என்னுடையவை...... எருதுகளின் சதையையா நான் உண்பேன்? செம்மறிகளின் இரத்தத்தையா நான் குடிப்பேன்? **இறை புகழ்ச்சி** என்னும் பலியை ஆண்டவருக்குச் செலுத்து ....**இறைப் புகழ்ச்சி** என்னும் பலி இடுபவனே எனக்கு மதிப்புக் கொடுப்பவன்......'' (சங்.49: 7-14-23).

இத்தகைய தியாக வேள்விப் பயன் எத்துணை சிறப்பானது என்னும் வினாவையே ஈண்டு இக்குறள் எழுப்புவதாகத் தெரிகிறது. 'துறந்தார்க்கு' துணையாவதும், துவ்வாதவர்க்குத் துணையாவதும், இறந்தார்க்குத் துணையாவதும் ஒரே வகையான பயனுடையது ஆகாது.

'துறந்தார்' என்னும் சொல்லுக்கு (மேற் சொன்னவாறு) ஐந்தவித்தனாகிய துறந்தார் எனப் பொருள் கொண்டால், அவர்க்குத் துணை நிற்பது அனைத்திற்கும் மேலான பயனாகும் என்பது தெளிவு. அவன் தாளாற்றித் தந்த பொருள் எல்லாம் மக்கட்கு வேளாண்மை செய்ய முற்படுவோர்க்குத் துணை நிற்பது அனைத்திலும் சிறந்த பணியன்றோ!

அடுத்து ஒழுங்கு வரம்பு கடந்து வாழ்வோராகிய இறந்தார்க்குத் துணையாகி, அவர்களும் ஒப்புரவாகிய அருட் செல்வத்தை—மேற்சொன்ன இறைவன் தாளாற்றித் தந்த பொருளை அடைந்து துய்க்கத் துணை செய்வதென்னலாம்.

மூன்றாவது: பொதுவாகத் துவ்வாதவர்க்குத் துணை நிற்பது என்க. இக்கருத்தையே வள்ளுவர் இக்குறளில் கூறுவதாகத் தோன்றுகிறது.

௪௪. "பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்."

முந்தின குறளில் கூறியதுபோல் விருந்தோம்புதலாகிய தியாக வாழ்வினை மேற்கொள்ளாதவர், பிறர்க்குச் செய்ய வேண்டிய ஓம்புதலாகிய வேள்வியைச் செய்யத் தலைப்படாதவர் இறுதியில் "செல்வம், செல்வாக்கு முதலிய தன்மைகளை வேறு எவர்க்கும் பயன்படாதவாறு நமக்கென்றே வைத்துக் கொண்டு இன்புடன் வாழ முற்பட்டோமே, விருந்தாகிய பிறரை ஓம்பு வதற்கு மாறாகச் செல்வத்தை ஓம்பினோமே, உலகில் நிலைத்து நிற்பது பொருளாகிய பொருள் அன்று, அப்பொருளால் வரக் கூடிய உலக நன்மை எதுவுமன்று; அருளாகிய பொருள் ஒன்றே நிலைத்து நிற்பது; மேலுலகுக்குப் பயன்படுவது என உணராமல் போனோமே; பிறரைப் பரிவுடன் ஏற்று அன்பு காட்டுவதற்கு மாறாகப் பரிவையெல்லாம் நிலையற்ற இச்செல்வத்தின் மீது காட்டினோமே; இறுதியில் இச்செல்வம் நம்மை விட்டு நீங்கி விட்டதே; நம்முடன் மேலுலகுக்கு வருவதாயில்லையே; என்ன தவறு செய்து விட்டோம்; இறுதியில் இவ்வுலக வாழ்விலும் பற்றுக்கோடு எதுவுமில்லாமல் போய்விட்டதே; மறுவுலகத்திற்கும் பற்றுக் கோட்டை இழந்து விட்டோமே," என்றெல்லாம் வருந்த நேரிடும்.

இக்குறளின் கருத்து இதுவென்றே புலப்படுகிறது. இதற் கிசைய விவிலியம் அறிவுறுத்துவது:

"மண்ணுலகில் செல்வம் சேர்த்து வைக்க வேண்டா. இங்கே துருவும் பூச்சியும் அழித்து விடும்; திருடரும் கன்னமிட்டுத் திருடுவர். ஆனால், விண்ணுலகில் செல்வம் சேர்த்து வையுங்கள். அங்கே பூச்சியும் துருவும் அழிப்பதில்லை; திருடரும் கன்ன மிட்டுத் திருடுவதில்லை. உங்கள் செல்வம் எங்குள்ளதோ, அங்கே உங்கள் உள்ளமும் இருக்கும். (மத். 6: 19-21).

"உங்கள் உடைமைகளை விற்றுப் பிச்சையிடுங்கள். இற்றுப் போகாத பணப்பைகளையும், வானகத்தில் குறையாத செல்வத்தையும் தேடிக் கொள்ளுங்கள். அங்கே திருடன் அண்டுவதில்லை." (லூக். 12,33). "இவ்வுலகில் செல்வம் படைத்தவர் இறுமாப்புக் கொள்ளலாகாது. நிலையில்லாச் செல்வத்தில் நம்பிக்கை வைக்காமல், நமது இன்பத்துக்காக

எல்லாவற்றையும் ஏராளமாக அளிக்கும் கடவுளில் மட்டுமே நம்பிக்கை வைக்க வேண்டும். அவர்கள் நன்மை செய்து, நற்செயல்கள் என்னும் செல்வம் சேர்ப்பார்களாக. தங்களுக்குள்ளதைப் பிறரோடு தாராள மனத்துடன் பகிர்ந்து கொள்ள வேண்டும். இவையெல்லாம் நீர் அவர்களுக்கு எடுத்துச் சொல்லும். அவ்வாறு அவர்கள் தங்கள் வருங்கால வாழ்விற்கான சிறந்ததொரு சேமிப்பைச் சேர்த்து வைப்பார்கள். அதைக் கொண்டு அவர்கள் உண்மை வாழ்வை அடைய இயலும்.'' (1 திமோ. 9:17-19).

''சகோதர அன்பில் நிலைத்திருங்கள். விருந்தோம்பலை மறவாதீர்கள். விருந்தோம்பியதால் சிலர் தாங்கள் அறியாமலே வானதூதர்களையும் உபசரித்ததுண்டு. சிறைப்பட்டவர்களோடு நீங்களும் சிறைப்பட்டிருப்பது போல, அவர்களை நினைத்துக் கொள்ளுங்கள். துன்புறக்கூடிய உடல் உங்களுக்கும் உள்ளதால், துன்புறுத்தப்படுபவர்களை மறவாதீர்கள்.'' (எபிரே. 13:2-3).

89. ''உடைமையுள் இன்மை விருந்துஓம்பல் ஓம்பா
மடமை மடவார்கண் உண்டு.''

உடைமை = பொருள் உடைமை; நன்மை செய்யக் கூடிய நிலை என்க. இத்தகைய நிலையிருந்தும் ஒருவன் விருந்தோம்பல் என்னும் நன்மை செய்யானாயின், அது பெரும் மடமையே; பேதைமையே; இது அறிவுள்ளவரிடத்துக் காணப் படாது. அறிவில்லாதவரிடத்து மட்டுமே காணப்படும்.

இத்தகைய மடமையை விரித்துரைக்கு முறையில் விவிலியம் கூறுவது காண்க :

அப்போது, கூட்டத்தில் ஒருவன், ''போதகரே, என் சகோதரன் என்னுடன் சொத்தைப் பங்கிட்டுக் கொள்ளுமாறு சொல்லும்'' என்றான். அதற்கு அவர், ''அன்பனே, நியாயம் தீர்க்கவோ பாகம் பிரிக்கவோ என்னை ஏற்படுத்தியதார்?'' ..... என்றார். பின் மக்களைப் பார்த்து, ''எவ்வகைப் பொருளாசையும் கொள்ளாதபடி கவனமாயிருங்கள். ஏனெனில், ஒருவனுக்கு எவ்வளவுதானிருந்தாலும் செல்வப் பெருக்கினால் வாழ்வு வந்து விடாது'' என்றார். (லூக் 12: 13 — 21).

பின்னர், அவர்களுக்கு இவ்வுவமையைச் சொன்னார்: பணக்காரன் ஒருவனுடைய நிலம் நன்றாய் விளைந்தது. அவன் 'விளை பொருளைச் சேர்த்து வைக்க இடமில்லையே, என்ன செய்வது' என்று தனக்குள் எண்ணி, 'சரி, என் களஞ்சியங்களை இடித்து இன்னும் பெரிதாகக் கட்டுவேன். அங்கு என் உடைமை, கோதுமை எல்லாம் சேர்த்து வைத்து, நெஞ்சே! பல்லாண்டுகளுக்கு வேண்டிய பொருள் உனக்கு ஏராளமாய் உள்ளது; இளைப்பாறு; உண்டு குடித்து விருந்தாடு; என்று சொல்லிக் கொள்வேன்' என்றான். ஆனால் கடவுள், அறிவிலியே! இன்றிரவே உன் உயிரை வாங்கப் போகிறார்கள். நீ தேடி வைத்தது யாருக்குக் கிடைக்குமோ? என்றார். கடவுள் முன் செல்வம் இல்லாதவனாய், தனக்காகவே செல்வந் திரட்டுகிறவன் இவ்வாறே இருக்கிறான்.

''பணக்காரன் ஒருவன் இருந்தான். அவன் விலையுயர்ந்த ஆடையும், மெல்லிய உடையும் அணிந்து நாள்தோறும் ஆடம்பரமாய் விருந்தாடுவான். அவனுடைய வாசலருகே இலாசர் என்னும் ஏழை ஒருவன் கிடந்தான். அவனுடலெல்லாம் ஒரே புண்ணாயிருந்தது. அவன் அப்பணக்காரனின் பந்தியில் சிந்தினவற்றைக் கொண்டு பசியாற விரும்பினான். நாய்கள் கூட வந்து அவனுடைய புண்களை நக்கும். இந்த ஏழை இறந்தான். வானதூதர் அவனைத் தூக்கிச் சென்று ஆபிரகாமின் அருகிலேயே அமர்த்தினர். பணக்காரனும் இறந்தான்; புதைக்கப்பட்டான்.

அவன் பாதாளத்திலே வேதனைப் படுகையில் ஏறெடுத்துப் பார்த்தான். தொலைவில் ஆபிரகாமையும் அவர் அருகிலேயே அமர்ந்திருந்த இலாசரையும் கண்டான். ''தந்தை ஆபிரகாமே! என் மீது இரங்கி இலாசர் தன் விரல் நுனியைத் தண்ணீரில் நனைத்து, என் நாவைக் குளிரச் செய்யும்படி அவனை அனுப்பும். நான் இந்நெருப்பில் வேதனைப்படுகிறேன்'' என்று கத்தினான்.

ஆபிரகாம் அவனை நோக்கி, ''மகனே! வாழ்நாளில் உனக்கு இன்ப சுகமே கிடைத்தது. இலாசருக்குத் துன்ப துயரமே கிடைத்தது. இதை நினைத்துப் பார். ஆனால், இப்பொழுது அவன் இங்கே ஆறுதலடைகிறான். நீயோ வேதனைப்படுகிறாய்.'' (லூக் 19—22).

90. ''மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.''

துன்புறுவோர், பொருளோ அருளோ தேவைப் படுவோர் இவர்களை இன்முகத்தோடு வரவேற்காவிடில், வந்த விருந்தின ராகிய இவர்கள் முகம் அனிச்சம் போல் விரைவில் வாடி விடும்.

''முகவாட்டத்தோடோ கட்டாயத்தினாலோ கொடாதீர்கள். ஏனெனில், முகமலர்ச்சியுடன் கொடுப்பவன் மேல் தான், கடவுள் அன்பு கூர்கிறார்.'' (2 கொரி. 7).

## விருந்தோம்பல்

81. ''இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.''

இல்வாழ்க்கையில் நிலையாய் நின்று அதனைக் காத்து வாழ்வதெல்லாம் (தொடர்புடையாரை மட்டுமன்று) தொடர் பில்லாதவர் அனைவரையுமே (கண்போலக்) காத்துப் போற்றி அவர்க்குத் தாராள மனத்தோடு உதவி செய்வதற்கேயாம்.

82. ''விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.''

அறிமுகமில்லாதவர் (உறவு இல்லாதவர்) வீட்டிற்கு வெளியே (கவனிப்பாரின்றி) இருக்க, தான் மட்டும் வாழ்க்கை வசதிகளைத் துய்ப்பது (உண்டல்) சாவா மருந்துபோல இறப்பில்லாத வாழ்வை அளிப்பதாயினும் நன்றன்று.

83. ''வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுதல் இன்று.''

தன்னிடம் வருபவர் (உறவில்லாத) யாராயினும் சரி, அவர்களை வாழவைப்பவனது (ஓம்புதல்) வாழ்க்கை, துன்பம் எய்திப் பாழ்படாது.

84. ''அகன்அமர்ந்து செய்யாள் உறையும் முகன்அமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல்.''

தன்னிடம் புதிதாக வருபவர்கள் நல்லவர்களாயின், அவர்களைச் சிறப்பாக அன்போடு (முகனமர்ந்து) ஏற்று வாழ வைப்பவன் இல்லத்தில், அருட்செல்வத்தோடு பொருட் செல்வமும் (செய்யாள்) குடிகொண்டு நிலைக்கும்.

85. "வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்?."

அறிமுகமில்லாதவர்களை ஏற்று அவர்களை முதலில் வாழ வைத்து, மிஞ்சிய வாழ்க்கை வசதிகளைத் தான் பயன் படுத்தினால், அவன் நிலத்தில் வித்தும் இடவேண்டியதில்லை; தானாகவே நல் விளைச்சல் உண்டாகும். (வாழ்வு செழிக்கும்).

86. "செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு."

இங்ஙனம் தொடர்பற்றவராகத் தன்னிடம் வருபவரை உபசரிப்பதோடு, 'இத்தகையவர் இனியும் வரமாட்டார்களா?' என்று ஆர்வத்தோடு எதிர்பார்ப்பவர்கள், வானவர்களுக்கே அரிய விருந்தினர் ஆவர்.

87. "இனைத்துணைத்து என்பதொன்று இல்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்."

இங்ஙனம் பிறருக்கு அன்புகாட்டி வாழவைப்பது, மாபெரும் வேள்வி (தியாகம்) செய்வதற்கொப்பாகும். இதன் பயன் என்ன என்று கேட்டால், அதை அளவுபடுத்திக் கூறுதல் இயலாது. இல்வாழ்வார்க்குத் 'துணை' எனக் (42-ஆம் குறளில்) கூறப் பட்ட துறந்தார், துவ்வாதார், இறந்தார் இவர்களுள் எப் பகுதியினர் ஓம்பப்படுகின்றனரோ அவர்களுடைய நிலையைப் பொறுத்தது. (நீத்தாரை ஓம்புதல், வறியோரை ஓம்புதல், நெறி தவறிச் செல்வோரை ஓம்புதல் - மூன்றும் ஒன்றே என்பதற்கில்லை).

88. "பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்."

விருந்தினராகிய தொடர்பற்றோரை ஓம்புதலாகிய தியாக வாழ்வை மேற்கொள்ளாதவர் வாழ்க்கை வசதிகளை மிதமிஞ்சிப் போற்றி, 'இறுதியில் பற்றுக் கோடு எதுவுமின்றிப் போனோமே' என வருந்துவர்.

89. ''உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்கண் உண்டு.''

வசதியுள்ள நிலையிலும் ஒருவன் இந்த விருந்தோம்புதலைச் செய்யாவிடின், அந்நிலை அவனுக்கு 'வறுமை' யென்றே கொள்ளப்படும். இது அறியாமையே. அறிவற்றவரிடத்து மட்டுமே இது காணலாகும்.

90. ''மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.''

(துன்புறுவோர், பொருளோ அருளோ தேவைப்படும்) அறிமுகமில்லாதவர் இவர்களை இன்முகத்தோடு வரவேற்கா விடில், வந்தவர்களுடைய முகம் அனிச்சம்போல் விரைவில் வாடி விடும். (இது நிகழாமல் காத்துக்கொள்க).

# 10. இனியவை கூறல்

அற வாழ்வுக்குத் தேவையானவற்றுள் ஒன்று இன்சொல் ஆகும். இன்சொல் என்பது யாது?

91. "இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்."

ஈரம் — அன்பு, அருள், இரக்கம்.
அளைஇ — அளைதல் = தழுவுதல், நுகர்தல், கூடியிருத்தல்.
படிறு — வஞ்சனை.

அன்பு, அருள், இரக்கம் ஒருசேரப் பொருந்தியனவாய், வஞ்சனை என்பது சிறிது மில்லாததாய், செம்பொருள் கண்டவர் வாயினின்று வெளிப்படும் சொல்லே இன்சொல்லாகும்.

செம்பொருள் கண்டார் — என்பதற்கு அறத்தினை உணர்ந்தவர் என்றும் மெய்ப்பொருளை அறிந்த சான்றோர் எனவும் பொருள் கூறுவர் உரையாளர். **செம்பொருள்** என்பதற்கு **அறம்** எனப்பொருள் கூறுவது அத்துணைப் பொருத்தமாகத் தோன்றவில்லை.

மெய்ப்பொருள் — என்பதே பொருத்தமாகத் தோன்றுகிறது. அஃதாவது பரம் பொருளாகிய இறைவன் என்றே பொருள் கொள்ள இடமுண்டு.

ஆகவே — இறைவனைக் கண்டவர் வாயினின்று, அன்பும் அருளும் இரக்கமும் நிரம்பியதாய் வெளிப்படும் சொல்லே இன்சொல்லாகும். இக்கருத்தே ஈண்டுச் சிறப்பாகத் தோன்றுகிறது.

இனி இறைவனைக் கண்டார் யார்? விவிலியம் கூறுவதைக் கேட்போம்.

"யாரும் கடவுளை என்றுமே கண்டதில்லை; தந்தையின் அரவணைப்பில் உள்ள ஒரே பேறானவர்தான்

அவரை வெளிப்படுத்தினார்.'' (அரு-1). இதன்படிப் பார்த்தால், கடவுளை — செம்பொருளைக் கண்ட இயேசுவின் திருவாய் வழி வெளிப்படும் சொல்லே 'இன்சொல்'. அஃதாவது அருளும் அன்பும் இரக்கமும் • பொருந்திய சொல்லாகும். இங்ஙனம் இறைவனைக் கண்டவர் வாயினின்று வெளிப்பட்ட சொல்லை மக்கள் ஏற்று உணர்ந்து, தாமும் அத்தகைய சொல்லைக் கூறுதல் வேண்டும் என்கிறது குறள். கடவுளை நேரில் கண்டவர் மட்டுமன்று, அவரைக் காண விழைவோரும்—நல்ல மனிதரும்— அறத்தை முழுதுறக் காக்க விரும்புவோரும் இத்தகைய சொல்லைக் கூற வேண்டியவர்களாவர்.

93. ''முகத்தான் அமர்ந்துஇனிது நோக்கி அகத்தானாம்
இன்சொ லினதே அறம்.''

முகமலர்ந்து இனிதே ஒருவரை நோக்கி, உள்ளத்திலிருந்து வரும் அருள் மிக்க அன்பார்ந்த சொல்லே இன்சொல்லாகும். இதுவே அறத்தைச் சார்ந்ததாகும். வெளிப்படையாக முகம் மட்டும் மலர்ந்திருக்க, உள்ளத்தினின்று எழாமல் உதட்டிலிருந்து மட்டுமே வெளிப்படும் சொல் அருட்சொல் ஆகாது. அன்புச் சொல்லாகிய இன்சொல்லாகாது. ஆகவே, அது அறத்தைச் சார்ந்ததும் ஆகாது.

94. ''துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.''

யாரிடத்தும் இன்சொல் வழங்குவோருக்குத் துன்பத்துக் குள்ளாக்கும் வறுமை இல்லாதொழியும்.

மனத்தைப் புண்படுத்தாத இனிய சொற்களைப் பேசுவோர், வறுமையால் துன்புறார் என்பது உண்மை தானா? இத்தகைய நல்லோர் எத்தனையோ பேர் வறுமையால் வாடிக்கிடப்பதை நாடோறும் கர்ண்கின்றோமே!

செம்பொருளாகிய இறைவனைக் கண்டாரது அருளும் அன்பும் இரக்கமுமுள்ள சொல்லை ஏற்றுத் தாமும் பிறர்பால் அதே அருளன்பு இரக்கம் காட்டுவதோடு, பிறரும் காட்டுதல் வேண்டுமென உழைப்பாராயின், உலக மக்களை வாட்டும் வறுமை பெரும்பாலும் நீங்கும் என்னலாம்.

இதைக் குறிப்பிட்டே கிறித்து, "நான் பசியாயிருந்தேன், எனக்கு உணவு அளித்தீர்கள்; தாகமாயிருந்தேன், குடிக்கக் கொடுத்தீர்கள்; உடையின்றி இருந்தேன், உடுக்கக் கொடுத்தீர்கள் என்ற இன்சொல்லைக் கூறினரோ! இறைவனைக் கண்டாராகிய அவரது இந்த இன்சொல்லைக் கேட்டு, அவருக்குச் சாட்சிகளாய் விளங்கவேண்டிய சான்றோர் அத்தனை பேரும் வாழ முற்படுவராயின், உலகில் வறுமை இல்லாதொழியும் என்பதற்கையமில்லை. இதுவே அறம்.

இக்கருத்திலேயே, கீழ்வரும் குறளும் அமைந்துள்ளது.

96. "அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்."

நல்லவை நாடி இனிய சொல்வதற்கு, மேற்சொன்ன 'செம் பொருள் கண்டார் வாய்ச்சொல்' இன்றியமையாதது. அதைச் சான்றோர் உரைப்பதோடு பிறர்க்கு 'நயனீன்று நன்றி பயக்கு' முறையில் (குறள். 97) உழைக்க முற்படுவாராயின், நல்லவை அல்லாதவை தேயும் — தீயவை குறையும் — அறம் பெருகும். இதுவே சிறுமையுள் நீங்கிய இன்சொல் என்க.

## இனியவை கூறல்

91. "இன்சொலால் ஈரம் அளைஇப் படிறிலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்."

'இன்சொல்' என்பது அன்பு, அருள், இரக்கம் (ஈரம்) ஒருசேரப் பொருந்தியனவாய், வஞ்சனை என்பது சிறிதும் இல்லாததாய், செம்பொருளாகிய இறைவனைக் கண்டவரது சொல்லே. (இறைவனைக் கண்டவர் - அவனோடு ஒன்றாய் உள்ள ஐந்தவித்தான். சொல்- அவன் சொன்ன நற்செய்திச் சொல்).

92. "அகனமர்ந்து ஈதலின் நன்றே முகனமர்ந்து
இன்சொலன் ஆகப் பெறின்."

உள்ளம் மகிழ்ந்து ஒருவர்க்குப் பொருள் உதவி செய்வதிலும் மேலானது முகமலர்ச்சியுடன் (மேற்கூறிய) இன்சொல் கூறுவது.

93. ''முகத்தான் அமர்ந்தினிது நோக்கி அகத்தானாம்
இன்சொ லினதே யறம்.''

முகமலர்ச்சியோடு ஒருவரை இனிமையுடன் பார்த்து, உள்ளத்திலிருந்து எழும் அருள்மிக்க அன்பார்ந்த சொல்லே இன்சொல். இதுவே அறத்தைச் சார்ந்தது.

94. ''துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொல் அவர்க்கு.''

எவரிடத்தும் இன்பம் செய்யும் இன்சொல்லையே ஆள்வோர்க்குத் துன்பம் செய்யும் வறுமை நேராது.

95. ''பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற.''

பணிவு, இன்சொல் இவையே ஒருவற்கு அணி; வேறு அணி கலன்கள் அணி செய்யா.

96. ''அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின்.''

நன்மையானதையே நாடி இன்சொல்லை ஆண்டால், தீயவை குறையும்; அறம் பெருகும்.

97. ''நயன்ஈன்று நன்றி பயக்கும் பயன்ஈன்று
பண்பில் தலைப்பிரியாச் சொல்.''

நற்பண்பு நீங்காத சொல், நன்மையும் அருளும் சுரக்கச் செய்யும்; மேலான நன்மை பயக்கும்.

98. ''சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும்.''

உள்ளத்தில் இழிவு நீங்கிய இன்சொல் இம்மையில் மட்டுமன்று, மறுமையிலும் இன்பம் தருவதாகும்.

99. ''இன்சொல் இனிதீன்றல் காண்பான் எவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.''

இன்சொல் இன்பம் பயப்பதைக் கண்கூடாகக் கண்டும், வன்மைச் சொல் வழங்குவது எதனாலோ!

100. ''இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.''

இனிய சொற்கள் எத்தனையோ இருக்க, இனிமையற்ற சொல் கூறுவது, கனிகள் இருக்கும் போது காய்களை விரும்புவது போலாகும்.

# 11. செய்ந்நன்றி யறிதல்

101. ''செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது.''

தான் எவ்வுதவியும் செய்யாதிருந்தும், தனக்கு ஒருவன் ஏதோ உதவி செய்வானானால், அதற்குக் கைம்மாறாக மண்ணுலகும் விண்ணுலகும் கொடுத்தாலும் அவை ஈடாக மாட்டா என்று பொதுவாக இக்குறளுக்குப் பொருள் கூறப் படுகிறது.

**பாரிமேலழகர்** முதலியோர் உரை காண்க.

மண்ணுலகம், விண்ணுலகம் என்னும் பெயர்களுக்குப் பதிலாக 'இம்மை, மறுமை இரண்டுலகும்' எனப் பொருள் கூறுவார் காலிங்கர்.

**இம்மை வாழ்வுக்கும் மறுமை வாழ்வுக்கும் தேவைப் படும்** கருத்துகளை வள்ளுவர், இந்நூலில் ஆங்காங்குப் பொருத்தமான இடங்களில் கூறுகிறார் என்பது ஏற்புடைய கருத்தாகும்.

'இருமை வகை தெரிந்து ஈண்டறம் பூண்டார்' உலகுக்குக் காட்டிய 'பொய்தீர் ஒழுக்க நெறி' வேறு எங்ஙனம் இருக்க வியலும்?

**குறிப்பு :-** இக்கருத்துப் 'பொருட்பால்' பகுதியில் சற்று விரிவாக உள்ளதைக் காண்க.

ஆகவே, இக்குறளுக்கு உரையாசிரியர்கள் கூறும் பொருள் அத்துணை பொருத்தமாகத் தோன்றவில்லை. ஏனெனில், மனிதன் மனிதனுக்கு எவ்வளவுதான் நன்மை செய்தாலும், உதவி செய்தாலும் வையகத்தையும் வானகத்தையுங்கூட ஈடாகத் தரவியலாது என்போமாயின், வானகம் அத்துணை சிறியதா? வானகம் என்னும் சொல்லுக்கு 'தேவர் உலகம்' என்று பெரும்பாலும் பொருள் கூறுவர். இப்படிப் பொருள்

கொண்டாலும் அத்துணை பொருத்தமாகத் தோன்றவில்லை. ஆனால், வான் அகம் என்னும் தொடருக்கு, வான் சக்தி என்று (மேற் கூறியவாறு) பொருள் கொள்வோமாயின், இறையருள் இருப்பிடம், வான் சக்தியகம், வானருள் கொடையுலகம், இறைவனின் பேரின்ப உலகமென்றே பொருள்படும்.

மனிதன் செய்யும் சின்னஞ்சிறிய உதவிக்கு, இறைவனின் பேரின்ப உலகத்தை முதலாய் ஈடாகத்தர இயலாது என்பது பொருத்தமற்ற பொருளாகும். வெறும் மிகைப்படக் கூறிய தென்றால், மிகைப்படக் கூறுவதற்கும் ஓர் அளவு பொருத்தம் இருக்க வேண்டாவா? ஆகவே, ஈண்டு மனிதன் மனிதனுக்குச் செய்யக் கூடிய உதவிபற்றியன்று கூறப்படுவது. அங்ஙன மாயின், இறைவன் - ஐந்தவித்தான் மனிதனுக்குச் செய்த - செய்கிற - செய்யும் அருள் உதவிபற்றியே ஆகும் என்னும் முடிவுக்கே வரவேண்டியுள்ளது.

விவிலியத்தில் (1 அரு. 4:9-10) பின்வருமாறு கூறியுள்ளது·

'தம் ஒரே பேறான மகனின் வழியாக நாம் வாழ்வு பெறும் பொருட்டுக் கடவுள் அவரை உலகிற்கு அனுப்பினார். இதனால் கடவுள் நம்மீது வைத்த அன்பு வெளிப்படுத்தப்பட்டது. நாம் கடவுளுக்கு அன்பு செய்ததில் அன்று, அவரே நமக்கு அன்பு செய்து நம் பாவங்களுக்குப் பரிகாரமாகத் தம் மகனை அனுப்பியதில்தான் அன்பின் தன்மை விளங்குகிறது.'

உரோ. 5:8-10 பின்வருமாறு கூறியுள்ளது:

'நாம் பாவிகளாய் இருந்தபோதே கிறித்து நமக்காகத் தம் உயிரைக் கொடுத்தார். இதனால் கடவுள் நம்மீது கொண்டுள்ள அன்பை எண்பிக்கிறார். ஆகையால், நாம் இப்பொழுது கிறித்துவின் இரத்தத்தினால் இறைவனுக்கு ஏற்புடையவர் களாகி அவர் வழியாய் இறுதித் தண்டனைக்குத் தப்பி மீட்புப் பெறுவோம் என மிக உறுதியாய் நம்பலாமன்றோ? கடவுளுக்குப் பகைவர்களாயிருந்தும் அவருடைய மகனது மரணத்தின் வழியாய், நாம் கடவுளோடு ஒப்புரவாக்கப்பட்டோமானால், ஒப்புரவாக்கப்பட்ட நாம் அவருடைய உயிரால் மீட்கப்படுவோம் என மிக உறுதியாய் நம்பலாமன்றோ?'

தன் உயிரைப் பலியாக்கும் அளவுக்கு மனித இனத்தின் மீது அன்பு காட்டியது ஐந்தவித்தான் ஒருவனே. இறைவனுக்கு அன்பு செலுத்தாமல் இருந்தது மட்டுமன்று, தீவினை என்று செருக்குப் புரிந்து அவனுக்கு எதிரிகளாயிருக்கும் போதே இறைவன் முதன் முதல் மனிதன் மீது அன்பு கூர்ந்தார். மனிதன் தனக்கு அன்பு செய்வான் என்று எதிர்பார்க்கவில்லை. தாமே முதலில் அன்பு செய்ய முன் வந்தார். இது தான் 'கைம்மாறு வேண்டா கடப்பாடு' எனப்படுகிறது. தகுதியற்ற மனிதர், தாம் காட்டிய அன்புக்குக் கைம்மாறாக இறைவன் அவர்க்கு அன்பு செய்யவில்லை. தாம் காட்டிய அளவில்லா அன்பையும் எத்தனையோ மக்கள் புறக்கணிப்பர் என்று முன்னறிந்திருந்தும் அன்பு செய்ய முன் வந்தார். கைம்மாறு எதிர்பார்க்காமல் அன்பு செய்வது தமது கடப்பாடு என்று கருதினார். இதுதான் உண்மையாகவே 'செய்யாமற் செய்த உதவி' என்பது. உதவி என்னும் அன்பு காட்டுவதற்கு மேலான உதவியும் இருக்கக் கூடுமா? அன்பின் விளைவாக அருள்மாரி பொழிவதைவிட மேலான உதவி இருந்திடுமோ? இத்தகைய அளவிடவியலா உதவிக்குக் கைம்மாறு கருதாமல் துன்பம் பல ஏற்றுத் 'தாளாற்றித் தந்த பொருளே' உதவிகளுக்கெல்லாம் மேலான உதவி என்க. இந்த மாபெரும் உதவிக்கு 'வையகமும் வானகமும் ஆற்றலரிது' என அழுத்தமுடன் கூறலாம். இப்பொருளே இக்குறளுக்கு முற்றும் பொருந்தும் என்பது எம் துணிபு.

இவ்வதிகாரத்தின் கடைசிக் குறள் இக்கருத்தை உறுதிப் படுத்துகிறது போல் தோன்றுகிறது.

110. ''எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.''

இக்குறளுக்குப் பின்வருமாறு உரை கூறுவர்:

1. **பரிமேலழகர்** — பெரிய அறங்களைச் சிதைத்தார்க்கும் பாவத்தின் நீங்கும் வாயில் உண்டாம். ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்த மகனுக்கு அஃது இல்லை.

2. **மணக்குடவர்** — எல்லா நன்மைகளையும் சிதைத்தார்க்கும் பின்பு ஒரு காலத்தேயாயினும் உய்வுண்டாம். ஒருவன் செய்த நன்றியைச் சாவாக்கின மகனுக்கு ஒரு காலத்தினும் உய்வில்லை.

3. **காலிங்கர்**— அருள், அறம், வாய்மை முதலாகிய எல்லா நன்மைகளையும் கொன்ற பாவிக்கும் கொடு நரகத் தினின்று யாதானும் ஒரு காரணத்தால் உய்வுண்டாம்; மற்றும் தனக்கு ஒருவர் செய்த செய்ந்நன்றியைக் கொன்ற மகனாகிய கொடும்பாவிக்குக் கொடிய நரகத்தினின்றும் ஒரு காலத்தும் உய்வில்லை.

4. **கா. அப்பாத்துரை**— இன நன்றிக் கேடு செய்தவர்க்கு இனவாழ்வில் இடமில்லை. பேரின்ப வாயிலை......இன நன்றி யுணர்வே யாதலால், அவர்க்கு அது அடைபட்டு விடும். பிற வாயிலோ பிறவழியோ அவர்க்குக் கிடையாது.

5. **புலவர் குழந்தை**— எவ்வகைப்பட்ட அறங்களைக் கெடுத்தவர்க்கும் பின்பேனும் பிழைப்பு உண்டாகும். ஒருவர் செய்த உதவியை மறந்தவனுக்கு எப்போதும் பிழைப்பு (நல் வாழ்வு) இல்லை.

மனிதன் மனிதனுக்குச் செய்யும் நன்மையைக் குறித்தே இக் குறளும் கூறுவதாக உரையாளர் விளக்கம் தருவர். இக்குறளின் உட்கருத்து நன்கு விளங்க வேண்டுமானால், 'எந்நன்றி', 'செய்ந்நன்றி' என்னும் தொடர்களுக்குச் சரியான பொருள் கூற வேண்டும். வெறும் எதுகைக் காரணமாக அத்தொடர்கள் உள்ளன என்பதற்கில்லை. எதுகைக்காகப் பொருள் தராத சொற்களைப் பயன்படுத்துபவர் அல்லர் திருவள்ளுவர்.

'எந்நன்றி' என்றால், ஒருவன் செய்யும் எத்தகைய நன்மை என்றும்,

'செய்ந்நன்றி' என்றால், ஒருவன் செய்யும் நன்மை என்றும் பொருள் கூறுவதன் கருத்தென்னவாகும்? சொன்னதையே சொல்வதாகும் அன்றோ? அறம், அருள், வாய்மை முதலிய பெரிய அறங்களைச் சிதைத்தவர்க்கு உய்வு உண்டு—ஆனால், ஒருவர் செய்த நன்மையை மறந்தவர்க்கு உய்வே இல்லை என்பது பொருந்தாக் கருத்தாகும். ஒருவர் செய்த நன்மை மிகப் பெரிதென்றே வைத்துக் கொண்டாலும், அறம், அருள், வாய்மை முதலியவற்றைவிடப் பெரிதாகக் கருத வியலாது. நன்றிக் கடமையும், அறவாழ்க்கை-அருள்வாழ்வு-வாய்மை இவற்றைச் சார்ந்த கடமை தானே? ஆகவே, நன்றி கொன்றவன்

அறத்தையும் அருளையும் வாய்மையையும் சிதைப்பவனா கின்றான். ஆகவே, பெரிய அறங்களைச் சிதைத்தவர்க்கு உய்வு உண்டு. ஒருவன் செய்த நன்மையைச் சிதைத்தவர்க்கு உய் வில்லை என்பது எவ்வகையிலும் பொருந்தாதது.

ஆகவே, இக்குறளுக்குப் பொருள் வேறுண்டு—அப்பொருள் இவ்வதிகாரத்தின் முதற் குறளுக்கு மேலே கூறப்பட்ட விளக்கத்தை ஒத்ததாகும்.

'செய்யாமற் செய்த உதவி'—எது என்றும், யார் செய்த தென்றும் அங்குக் கூறப்பட்டது. மறுமை வாழ்வுக்குரிய கருத்தே யது என்பது தெளிவு. இங்ஙனம் இந்த 'செய்யாமற் செய்த உதவி'யையே இக்குறளும் கூறுகிறது என்பதில் ஐயமில்லை. அஃதாவது, வானகமும் வையகமும் மாற்றலரிதான உதவி, இறைவன் செய்த நன்மையே. ஆகவே, பின்வரும் பொருளே பொருத்தம்.

'எந்நன்றி' என்பதில் மனிதன் பிறர்க்குச் செய்யும் நன்மையும், செய்ந்நன்றி என்பதில் இறைவன் மனிதர்க்குச் செய்யும் நன்மையும் கூறப்படுகிறது என்பது எம் கருத்து. எங்ஙனம் 'செய்ந்நன்றி' என்பது இறைவன் மனிதர்க்குச் செய்யும் நன்மையைக் குறிக்கும் எனின், 'செய்ந்நன்றி' என்னும் தொடரை வினைத்தொகையாகக் கொண்டு, செய்த நன்றி-செய் கின்ற நன்றி-செய்யும் நன்றி எனப் பொருள் கொடுத்தால் முக் காலத்தும் நன்மை செய்யக் கூடிய இறைவனுக்கு மட்டுமே அது பொருந்தும். இறைவன் ஒருவனே மனிதனுக்கு நேற்றும் இன்றும் நாளையும் நன்மை செய்யக் கூடியவன். அஃதாவது, மனிதன் பிறப்புக்கு முன்பும் பிறந்த பிறகு நிகழ்காலத்திலும் வருங்காலத்திலும் நன்மை செய்ய வல்லமை படைத்தவன்.

மனிதன் பிறக்கும் முன்பே இறைவன் அவனுக்கு நன்மை செய்கிறான். பிறப்பதற்கு அவன் ஆதிகாரணன்; பிறந்த பிறகு வாழ் நாள் எல்லாம் எத்தனையோ நன்மைகளைப் புரிந்து கொண்டிருக்கிறான்; எதிர்காலத்தில் அவனுக்கு நீடு வாழ்வு தருபவனும் அவனே. எம்மனிதனுக்கும் இத்தகைய வல்லமை இல்லை என்பது தெளிவு. மிஞ்சினால் மனிதன் பிறந்த பின் வாழ் நாளின் போது, ஏதோ சிறு நன்மை செய்ய இயலும்; அவ்வளவு தான்.

இனி, மனிதன் பிறக்கு முன், இறைவன் தானாக விரும்பி அவனுக்கு நன்மை செய்கிறான். மனிதன் அதைப்பற்றிச் சிந்திக்கவும் இயலாத நிலையில் உள்ளான். பிறந்த பின்னரும் இறைவன் தாமாகவே மனிதர்க்கு நன்மை பல செய்வதுண்டு. அவன் அருளை இறைஞ்சுவோர்க்கும் நன்மை செய்வதுண்டு. உலக வாழ்வுக்குப் பின், பேரின்பமாகிய நன்மையை-அருட் பேருதவியை மனிதன் எப்போதும் பெறுகின்றானா என வினா எழக் கூடும். 'சிற்றின்பம் வெஃகி அறன் அல்ல' செய்வார்க்குப் பேரின்பமாகிய பெரு நன்மையை இறைவன் மனிதர்க்கு எங்ஙனம் அருளக் கூடும்?

இதற்குப் பதில் கூறும் வகையில்,

''உதவி வரைத்தன்று உதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து'' (105)

என்கிறார்.

உதவியைப் பெறுபவருடைய **சால்பைப்** பொறுத்துள்ளது இறைவன் அருளும் உதவி என்கிறார். அவ்வருள் உதவி உண்மையாகவே பேருதவியாயிருக்கலாம். ஆனால், அதை நன்றியுடன் பெற்று, நன்றி உணர்வுடன் செயல் புரியா விடின் 'உதவி வரைத்தன்று உதவி' என்பது உண்மையாகி விடும். அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்து தூண்களின் படி வாழ்க்கை நடத்தினால், அவனே சால்புடையவனாகின்றான். அவனுக்கே இறைவன் செய்யும் உதவியின் பயன் முழுதும் கிட்டும். ஆகவே, இறைவனது அருள் உதவி, செயப்பட்டார் சால்பைப் பொறுத்துள்ளது.

இத்தகைய சால்புடையவனே, தனக்குத் தேவையான காலத்தில் (காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும்) அஃதாவது, பிறவிப் பெருங் கடலாகிய பாவத்தில் அமிழ்ந்து கிடந்த காலத்தில் இறைவனிடமிருந்து நன்மை பெறுகிறான். இத்தகைய உதவி மிகப் பேருதவியே. அருள் வாழ்வு பெறுவது சிறிதன்று. இப்பொருளிலேயே **'சிறிதெனினும்'** என்னும் தொடரைக் கொள்ள வேண்டும்.

மேலுலகம் **இல் எனினும்**—என்பது போலவும், 'நல்லா றெனினும் கொளல் தீது' (குறள் 222) என்பதிற் போலவும்

கொள்க. (பாவாணர் உரை). அஃதாவது, **சிறிதன்று** என்பது கருத்து.

ஆகவே, அது 'ஞாலத்தின் மாணப்பெரிது,' 'வையகமும் வானகமும் மாற்றலரிது' என்பதன் கருத்தும் இத்துடன் பொருந்துவது காண்க.

மேற்கூறியவாறு கைம்மாறு கருதாமல் செய்த உதவியின் மேன்மையை—ஒப்புவமை இல்லாத் தன்மையை எண்ணிப் பார்க்கும் போது (இறைவன் செய்த இவ் உதவி) 'கடலினும் பெரிது' என்று கூறுவதன் கருத்தும் இதுவே. இதெல்லாம் மனிதன் செய்யக்கூடிய எந்த நன்மைக்கும் பொருந்தாது. ஆகவே, இவ்வதிகாரத்தில் இறைவன் மனிதர்க்குச் செய்த—செய்கின்ற — செய்யப்போகின்ற அளவில்லா அருள் உதவி பற்றியே பெரும்பாலும் பேசப்படுகிறது.

எனினும், 'தினைத்துணை நன்றி,' 'மறவற்க மாசற்றார்,' எழுமை எழு பிறப்பும்,' 'நன்றி மறப்பது,' 'கொன்றன்ன' எனத் தொடங்கும் பாக்கள் மனிதன் மனிதனுக்குச் செய்யும் நன்மைக்கும் பொருந்தக்கூடும்.

இறைவன்பால் மட்டுமேயன்றி, நன்மை செய்யும் பிறர் பாலும் நன்றிக்கடன் உண்டன்றோ?

இவ்வதிகாரத்தில் மற்ற 2 முதல் 9 வரை உள்ள குறள்கள் மனிதன் மனிதனுக்குச் செய்யும் நன்றியையே பெரும்பாலும் கூறுகின்றன. இவற்றிற்குப் பொருள் எளிதாகப் (உரையாளர் உரைகள் துணை கொண்டு) புரிந்து கொள்ளலாம்.

### சுருக்கம்

101. "செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது."

மனிதன் எந்நன்மையும் செய்யாதிருந்தும், (இறைவன் தானே முன் வந்து) செய்த (அருளாகிய) பெரும் நன்மைக்கு வையகம் மட்டுமன்று, வானகமும் ஏற்ற கைம்மாறாகாது.

102. "காலத்தி னால்செய்த நன்றி சிறுதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது."

தக்க காலத்தில் (அருள் இழந்த நிலையில், இறைவன் செய்த நன்மை) சிறிதெனினும், உலகத்தையும்விடப் பெரிது. ('எனினும்' என்பதை 'மேலுலகம் இல் எனினும்' என்பது போல் கொள்க. சிறிதன்று - மிகப்பெரிது).

103. ''பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது.''

தன் நலனைக் கருதாமல் (மானிடர்க்கு இறைவன்) செய்த (அருள்) உதவியால் கிடைக்கும் இன்பத்தைச் (பேரின்பத்தை) சீர்தூக்கிப் பார்க்கும்போது (இறைவன்) செய்த நன்மை கடலிலும் பெரிது; அளவிட வியலாதது.

104. ''தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்.''

தினையளவாக ஒருவன் நன்மை செய்தாலும் செய்த நன்மையின் பயனை நன்கு உணரக்கூடியவர் அதைப் பனையளவாக மதிப்பர். (இறைவன் செய்த நன்மை தினையளவு அன்று; அளவிட வியலாதது. ஆகவே, அதன் பயனை நன்கு அறிந்து உய்க).

105. ''உதவி வரைத்தன்று உதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.''

ஒருவர் நமக்கு உதவி செய்யும்போது அது எவ்வளவு என்று வரை கூறவியலாது. அவ்வுதவியைப் பெற்றவர் எவ்வளவு சால்பு (சான்றாண்மை) கொண்டுள்ளனரோ அவ்வளவினதா யிருக்கும். (இறைவன் தரும் அருள்உதவி பெற்றுச் சால்புள்ள மக்களாக வாழ்தல் வேண்டும் என்றவாறு.

106. ''மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு.''

மாசற்றவனாய்த் (தன்னைப்பலியாக்கிய) நீத்தாரது நட்புறவை மறவாதீர்; (பாவமாகிய) துன்பத்திடை துணையாகியவர் (ஐந்தவித்தான்) நட்பைக் கைவிடாதீர்.

107. "எழுமை யெழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு."

தலைமுறை தலைமுறையாக எண்ணி எண்ணிப் பார்ப்பர் (பாவமாகிய) விழுமத்தைத் துடைத்துக் காத்தவரது அன்புறவை.

108. "நன்றி மறப்பது நன்றன்று; நன்றல்ல
தன்றே மறப்பது நன்று."

ஒருவர் செய்த நன்றியை மறப்பது நன்றன்று. (எனில் இறைவன் செய்த நன்றியை மறந்தால் என்னென்போம்!) யாராவது நமக்குத் தீங்கு செய்யின் அதை உடனே மறந்து விடுவது நன்று. (இறைவன் தீமை விரும்பார், செய்யார்).

109. "கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன்று உள்ளக் கெடும்."

கொலை போன்ற தீமையை ஒருவர் செய்தாலும், அவர் முன்பு செய்திருக்கக்கூடிய நன்மையை எண்ணும்போது அத்தீமை பெரிதாகத் தோன்றாது.

110. "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு."

மனிதன் செய்த எந்நன்மைக்காகவும் நன்றி செலுத்தா விடினும் ஓரளவு வாழ்ந்துவிடலாம். இறைவன் செய்த-செய்கின்ற - செய்யப்போகும் நன்மைக்குத் தக்க முறையில் நன்றி செலுத்தாவிடின் வாழ்வே பாழாகும்.

# 12. நடுவு நிலைமை

111. "தகுதி எனவொன்று நன்றே பகுதியால்
பாற்பட்டு ஒழுகப் பெறின்."

'நடுவு நிலைமை' என்னும் பொருள் இவ்வதிகாரத்தில் தகுதி, செப்பம், நெஞ்சத்துக் கோடாமை, ஒருபால் கோடாமை என்னும் சொற்றொடர்களாலும் குறிக்கப்படுவது கவனித்தற்பாலது.

இக்குறளில் வருவது **'தகுதி'** என்னும் சொல். இதற்கு இன்று 'யோக்கியதை' என்னும் பொருளே விளங்குகின்றது. (ஆங்கிலத்தில் Fitness, worthiness எனலாம்). ஆனால், இதன் உண்மைப் பொருள் **நடுவு நிலைமை** என்பதே. 'நன்றே' என்பதில் 'ஏகாரம்' பிரித்துக் கூறப்பட்டது. (பாவாணர் உரை காண்க). ஆகவே, 'தகுதி என்ற (என்பது) ஒன்றே நன்று' என்று பொருள் கொள்ள வேண்டும். அதாவது **நடுவு நிலைமை ஒன்றே நன்மை பயப்பது** என்றாகும்.

**பகுதி** என்னும் சொல் **தகுதி** என்பதற்கு எதிர்மறை என்றே தோன்றுகிறது.

பகுதல் — பிளவு படுதல், பிரிதல். பகுதி — பிரிவு. நடுநிலைமை இன்றேல் பிளவுபடுதலும், பிரிவு நிகழ்வதும் தவிர்க்க வியலாதது. மக்களிடையே இப்பிளவுபடுதல் சிறப்பாக பகை, நட்பு என்பது கண்கூடு. பகையுமின்றி, நட்புமின்றி நொதுமலும் உளதாகலாம்.

நொதுமல் என்னும் சொல்லுக்கு அயல், விருப்பு வெறுப்பு இன்மை, அயலார் என்று பொருள் கூறப்படுகிறது.

'விருந்து' எனப் புதிதாக வருவோரிடம் (Strangers என்பது ஆங்கில மொழி பெயர்ப்பு — G.U. Pope). உறவு ஏற்படுங்கால் ஒன்று நட்பு ஏற்படலாம்; இன்றேல் பகை ஏற்படலாம். இவ்விரண்டில் எதுவும் நிகழாமல் இருப்பின் அவ்வுறவு வெறும் நொதுமல் ஆகும். அஃதாவது, அத்தகையோர் விருந்தினர் —

புதிதாக உறவு கொள்ள வருவோர் எனப்படுவர். நட்பு, பகை, நொதுமல் என இவ்வாறு பாகுபாடு ஏற்படுங்கால், இவ்வுறவினைச் சான்றோர்க்கு ஏற்றதாகச் செய்யக் கூடியது எது? அதுதான் தகுதி எனப்படும். அஃதாவது எவரிடத்தும் நடுவு நிலைமையோடு ஒழுகுவதே முறையாகும். சிலர்பால் நட்பும், சிலர்பால் பகையும், வேறு சிலர்பால் நொதுமலும் காட்டுவோமாயின், தகுதி என்னும் நடுவு நிலைமை தவறியவர்களாவோம்.

ஆனால், மக்களிடையே நட்போ பகையோ நொதுமலோ இயல்பாக ஏற்படுவதுதானே! இதை எங்ஙனம் தவிர்க்க இயலும் என வினா எழலாம். இத்தகைய பாகுபாடு (பகுதி) எழலாகாது என்பதே குறள் தரும் படிப்பினை. இது சிறப்பாகச் சான்றோர் ஒழுக்கமாகும் என்பதால், இவ்வதிகாரத்தில், 'சான்றோர்க்கு அணி' என இருமுறை கூறப்படுவது காண்க. பகையோ நட்போ நொதுமலோ இயல்பாக ஏற்படக் கூடியதுதான். அது காரணமின்றியும் நிகழக் கூடும். ஆனால், இந்த இயல்புக் குறைபாட்டை விருந்தோம்பல் என்னும் உயர்பண்பால் நீக்க இயலும். "உங்கள் பகைவருக்கும் அன்பு செய்யுங்கள்" என்று ஐந்தவித்தான் தந்த கட்டளை, இந்தப் பாகுபாட்டை மக்களிடையினின்று நீக்கிவிடவே என்பது ஆழ்ந்து நோக்கத் தக்கது. பகைவருக்கும் அன்பு செய்தல் வேண்டுமெனின், நொதுமலுக்கு இடம் எங்கிருக்கவியலும்? அஃதாவது, புதிதாக (Strangers) வரும் விருந்தினருக்கும் அன்பு செலுத்துதல் கடனாகும் என்று தெளிவாகிறது. விருந்தோம்பல் அதிகாரம் முழுவதும் இக்கருத்தை விளக்கும். ஆகவே நண்பர், பகைவர், நொதுமலர் என்று பிரித்து உறவு கொள்வோமாயின், தகுதி என்னும் நடுவு நிலைமை இராதொழியும். நட்பு மட்டுமே சிலர்பால் நிலைத்திருக்கலாம். வேறுசிலர்பால் பகைமட்டுமே நிலைத்திருக்கலாம். 'விருந்து' என்னும் அயலார்பால் எதுவுமேயின்றி அவர்கள் விலக்கப்பட நேரிடலாம். இது 'தகுதி'யின் பால் பட்டதாகாது. பகுதியின்பால் படும் ஒழுக்கமாகும். இது சான்றோர்க்கு அணியாகாது. இதனால்தான், கிறித்து "உன்பால் நீ அன்பு காட்டுவது போல், உன் அயலான் பாலும் அன்பு காட்டுவாயாக" எனக் கட்டளையிட்டார். (மார்க்கு. 12.31).

'அயலான்' என்றால் யார் என்பதற்கும் விளக்கம் தந்தார். (லூக். 10:29.36) விவிலியத்தில் பலமுறை இது வலியுறுத்தப்படுகிறது.

'நான் கடவுளுக்கு அன்பு செய்கிறேன்' என்று சொல்லிக் கொண்டு, ஒருவன் தன் சகோதரனை வெறுத்தால், அவன் பொய்யன். ஏனெனில், கண்ணால் கண்ட சகோதரனுக்கு அன்பு செய்யாதவன், தான் கண்டிராத கடவுளுக்கு அன்பு செய்ய இயலாது. கடவுளுக்கு அன்பு செய்பவன், தன் சகோதரனுக்கும் அன்பு செய்ய வேண்டும். இதுவே அவரிடமிருந்து நாம் பெற்ற கட்டளை (1 அரு. 4:20-21). தன் சகோதரனுக்கு அன்பு செய்பவனே ஒளியில் நிலைத்திருக்கிறான். அவனை இடறி விழச் செய்வது எதுவுமில்லை (1 அரு. 2,10). பிறருக்கு ஞான வளர்ச்சி தரும் நன்மை உண்டாகும்படி, நம்முள் ஒவ்வொரு வனும் அயலார்க்கு உகந்தவனாய் இருத்தல் வேண்டும். (ரோ. 15:2).

''உங்கள் பகைவர்களுக்கு அன்புசெய்யுங்கள். உங்களைத் துன்புறுத்துவோருக்காகச் செபியுங்கள். அப்பொழுது வான கத்திலுள்ள உங்கள் தந்தையின் மக்களாயிருப்பீர்கள்.....'' (மத். 5:44).

இதை ஒரு **'புதிய'** கட்டளை என்கிறார் கிறித்து (அரு. 13:34 காண்க) மேலும் வாசிக்க:

''பணக்காரரே, சற்றுக் கேளுங்கள். உங்களுக்கு வரப் போகும் அவல நிலையை நினைத்து அலறி அழுங்கள். உங்கள் செல்வம் மட்கிப் போயிற்று. உங்கள் ஆடைகள் பூச்சிகளினால் அரிக்கப்பட்டு விட்டன. உங்கள் பொன்னும் வெள்ளியும் துருப் பிடித்து விட்டன. அந்தத் துருவே உங்களுக்கு எதிர்ச்சாட்சியாய் இருக்கும்; உங்கள் சதையைத் தின்றுவிடும். இறுதி நாளுக்காக நீங்கள் உங்களுக்கென நெருப்பைத்தான் குவித்து வைத்திருக் கிறீர்கள். உங்கள் வயலில் அறுவடை செய்தவர்களுக்குரிய கூலியைப் பிடித்துக் கொண்டீர்கள். கொடுக்காத கூலி கூக்குர லிடுகிறது. அறுவடையாளர் எழுப்பும் அப்பேரொலி வான் படைகளின் ஆண்டவருடைய செவிக்கு எட்டியுள்ளது. இவ் வுலகிலே இன்பப் பெருவாழ்வில் மூழ்கியிருந்தீர்கள். உங்களு டைய அழிவுநாளுக்காக உங்கள் உள்ளங்களைக் கொழுக்க வைத்திருக்கிறீர்கள். நீதிமானுக்குத் தண்டனைத் தீர்ப்பளித்துக் கொலை செய்தீர்கள். அவனோ உங்களை எதிர்க்கவில்லை'' (யாகப்பர். 5:1-5).

"இறுதியாக, நீங்கள் அனைவரும் ஒருமனப்பட்டிருங்கள். பிறரிடம் பரிவு, சகோதர அன்பு, இரக்கம் காட்டுங்கள். மனத் தாழ்ச்சியுடையவராய் இருங்கள். தீமைக்குத் தீமை செய்யா திருங்கள். பழிக்குப் பழி கூறாதீர்கள். மாறாக ஆசி கூறுங்கள், ஏனெனில், இறைவனின் ஆசிக்கு உரிமையாளர் ஆவதற்கே நீங்கள் அழைக்கப்பட்டிருக்கிறீர்கள். வாழ்வை விரும்பி இன்ப நாளைச் சுவைக்க விழைபவன் தீமையினின்று தன் நாவைக் காத்துக் கொள்க. வஞ்சகப் பேச்சினின்று தன் வாயைக் காத்துக் கொள்க. தீமையினின்று விலகி நன்மை செய்க. அமைதியை நாடி அதனைத் தொடர்க. ஆண்டவர் நீதிமான்கள் மேல் தம் பார்வையைச் செலுத்துகிறார்; அவர்களது வேண்டுதலுக்குச் செவி சாய்க்கிறார். தீமை செய்வோருக்கோ ஆண்டவர் கடுமுகம் காட்டுகிறார்" (1 இரா 3:8-12).

புனித அருளப்பர் கிறித்துவர்க்கு எழுதிய முதல் கடிதம் இக்கருத்தை மிக மிக வலியுறுத்துவது காண்க. ஆகவே பகைக்கும், நொதுமலுக்கும் கிறித்துவத்தில் இடமேயில்லை. அன்புக்கும் நட்புக்குமே இடமுண்டு.

"அன்பும் நட்பும் எங்குள்ளதோ
அங்கே இறைவன் இருக்கின்றான்"

என்பது இறைவழிபாட்டில் காணப்படும் அரிய கருத்தாகும்.

112. "செப்பம் உடையவன் ஆக்கஞ் சிதைவின்றி
எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து."

செப்பம்—மேற்கூறிய தகுதியையே குறிப்பிடும். மேற் சொன்ன கருத்தில் ஒருவன் வாழ்வானானால், அவனது செல்வம் சிதைவுறாமல் அவன் வழி வருவோர்க்கும் பாதுகாப் பாக அமையும்.

இல்லறத்தை வலியுறுத்தும் இப்பகுதியில் 'மக்கட்பேறு' குறித்துக் கூறிய ஆசிரியர் அம்மக்களுக்கு நிலையான நன்மையை விளைவிக்கும் முறையை ஈண்டு உரைக்கிறார் என்க. அஃதாவது 'தகுதி' என்னும் செம்மையான மனப்பான்மை இல்லாவிடில், அவன் ஈட்டக் கூடிய ஆக்கம் நிலைக்காது என்பது கருத்து.

இதோ விவிலியக் கருத்துகள்:

'இவ்வுலகில் செல்வம் படைத்தவர் இறுமாப்புக் கொள்ள லாகாது. நிலையில்லாச் செல்வத்தில் நம்பிக்கை வைக்காமல், நமது இன்பத்துக்காக எல்லாவற்றையும் ஏராளமாக அளிக்கும் கடவுளில் மட்டுமே நம்பிக்கை வைக்கவேண்டும். அவர்கள் நன்மை செய்து, நற்செயல்கள் என்னும் செல்வம் சேர்ப்பார் களாக. தங்களுக்குள்ளதைப் பிறரோடு தாராள மனத்துடன் பகிர்ந்து கொள்ள வேண்டும். இவையெல்லாம் நீர் அவர் களுக்கு எடுத்துச் சொல்லும். அவ்வாறு அவர்கள் தங்கள் வருங் கால வாழ்விற்கான சிறந்தொரு சேமிப்பைச் சேர்த்து வைப் பார்கள். அதைக் கொண்டு அவர்கள் உண்மை வாழ்வை அடைய இயலும் (1 திமோ-9:17-19).

தங்களுக்குள்ளதைப் பிறரோடு தாராள மனத்துடன் பகிர்ந்து கொள்வதும், செல்வத்தில் இறுமாப்புக் கொள்ளாமல், எல்லாம் இறைவனின் நன்கொடை என மதித்து பிறர்க்கு நன்மை செய்வதும் 'தகுதி' என்னும் உயர் பண்பைச் சார்ந்தது என்பது தெளிவு.

வருங்கால வாழ்வுக்குச் சிறந்த சேமிப்பு என்பது தமக்கும் தம் மக்கட்கும் ஏற்ற பாதுகாப்பு என்பதும்ஈண்டுக் கூறப்படுவது காண்க.

113. "நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல்."

நடுவு நிலை இகந்து (வரம்புமீறி) திரட்டக் கூடிய செல்வம் நன்மை பயப்பது போல் தோன்றினாலும், இந்த முறையை, அஃதாவது, **தகுதி** முறையை மீறிச் செல்வம் திரட்டலாகாது. தகாத முறையில் வரக்கூடிய செல்வமும் நன்மை பயப்பது போல் காணப்படலாம். அந்த நேரத்தில் ஏதாவது நன்மைக் காகப் பயன்படக்கூடும். ஆனால், இறுதியில் அது தீமையையே விளைவிக்கும். இதை அனுபவத்திலும் காண்கின்றோம்.

நன்மை தராமையின் 'நன்றே தரினும்' என்பது எதிர்மறை உம்மை. தன்னை மட்டுமின்றித் தன் எச்சத்தையும் தாக்கு மாதலின் தயக்கமின்றி இம்முறையை விட்டு விடுதல் வேண்டும். வாசிக்க:

''உங்களுள் ஞானமும் அறிவும் படைத்தவன் யாராவது இருந்தால், அவன் அதைத் தனது நன்னடத்தையினால் எண்பிக்கட்டும். அவன் செயல்கள் ஞானத்தால் விளையும் சாந்தத்தோடு விளங்கட்டும். ஆனால், உங்கள் உள்ளத்தில் மனக்கசப்பும் பொறாமையும் கட்சி மனப்பான்மையும் இருந்தால், அதைப்பற்றிப் பெருமை பாராட்ட வேண்டா. உண்மையை எதிர்த்துப் பொய் பேச வேண்டா. இத்தகைய ஞானம் விண்ணினின்று வருவதன்று; மண்ணுலகையே சார்ந்தது. கீழ் நாட்டத்தைப் பின்பற்றுவது, பேய்த்தன்மை வாய்ந்தது. பொறாமையும் கட்சி மனப்பான்மையும் எங்குள்ளதோ, அங்கே குழப்பமும் எல்லாத் தீச்செயல்களும் இருக்கும். விண்ணினின்று வரும் ஞானமோ தீய எண்ணத்துடன் கலவாதது; இதுவே அதன் தலையாய பண்பு. மேலும், அது சமாதானத்தை நாடும்; பொறுமையைக் கடைப்பிடிக்கும்; இணக்கத்தை விரும்பும்; இரக்கமும் நற்செயல்களும் பெருகச் செய்யும். நடுநிலை தவறாது; கள்ளமறியாது. சமாதானம் செய்வோர், சமாதானத்தில் விதைக்கும் விதையிலிருந்து இறைவனுக்கு ஏற்புடைய வாழ்வென்னும் கனி விளைகிறது'' (யாகப்பர் 3:13—18).

''உங்களிடையே சண்டை சச்சரவுகள் ஏற்படக் காரணம் என்ன? உங்கள் உடலில் போராட்டம் விளைவிக்கும் கீழ்த்தர ஆசைகள் அல்லவா? பிறர் பொருள்மீது ஆசை வைக்கிறீர்கள்; அதைப் பெறாததால், கொலை செய்கிறீர்கள்; பேராசை கொள்கிறீர்கள்; ஆசைப்படுவதை அடைய முடியாததால், சண்டை சச்சரவு உண்டாக்குகிறீர்கள். ஆசைப்படுவதை ஏன் அடைய முடியவில்லை? இறைவனிடம் கேட்காததால்தான். கேட்டாலும் ஏன் அடைவதில்லை? தீய எண்ணத்தோடு கேட்பதால்தான். கிடைப்பதைக் கீழ்த்தர ஆசைகளை நிறைவேற்றுவதில் செலவழிக்கவே கேட்கிறீர்கள்'' (யாகப்பர் 4:1 - 3).

114. ''தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தால் காணப் படும்.''

மேற்கூறிய 'தகுதி' என்னும் உயர்பண்புக்குரியவர் தக்கார். அத்தகுதியில்லாதவர் 'தகவிலர்' ஆவர். இப்பண்பு அவரவர் 'எச்சத்தால்' காணப்படும்.

எச்சம் என்னும் சொல்லை மக்கள் என்னும் பொருளில் கொண்டால், மக்களுடைய தகுதியை அல்லது தகுதியின்மையை நோக்கித் தக்கார், தகவிலர் யார் என அறிந்து கொள்ளலாம் என்று சாதாரணமாகப் பொருள் கூறப்படுகிறது.

ஆனால், 'எச்சம்' என்னும் சொல்லுக்கு **'எஞ்சி நிற்பது'** என்றும் பொருள் கொள்ளலாம். அஃதாவது, ஒருவரது வாழ்க்கை முடிந்த பின்னர்அவருக்கு மக்களிடையே உள்ள பேரும் புகழும் குறிக்கப்படலாம். அவரவர் வாழ்நாளில் செய்து முடித்த நற் செயல்கள் காரணமாக ஏற்படும் மதிப்பைச் சுட்டலாம். ஒரு வனிடத்திலுள்ள 'தகுதி'யின் விளைவாக நிகழக்கூடிய உயர் பண்புச் செயல்களையும் குறிப்பிடலாம். இக்கருத்தில் விவிலியம் கூறுவது:

''அவர்கள் கனிகளைக் கொண்டே அவர்களை அறிந்து கொள்வீர்கள். முட்செடிகளில் திராட்சைப் பழங்களையோ முட் புதர்களில் அத்திப்பழங்களையோ பறிப்பாருண்டோ? அவ் வண்ணமே, நல்ல மரமெல்லாம் நல்ல பழம் கொடுக்கும். தீய மரமோ தீய பழம் கொடுக்கும். நல்ல மரம் தீயபழம் கொடாது. தீய மரமும் நல்ல பழம் கொடாது. நல்ல பழம் கொடாத மர மெல்லாம் வெட்டுண்டு தீயில் போடப்படும். ஆதலால், அவர்கள் கனிகளைக் கொண்டே அவர்களை அறிந்து கொள்வீர்கள் (மத் 7: 16-20).

ஈண்டுக் 'கனிகள்' என்னும் சொல்லால் குறிக்கப்படுவது நற் செயல்கள் என்பது தெளிவு.

115. ''கேடும் பெருக்கமும் இல்அல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க்கு அணி.''

செல்வம், இன்பம், வசதி இவை குறைவுபடுவதும், பெருகுவதும் மனித வாழ்க்கையில் தவிர்க்க முடியாதவை. ஆதலின், எதுவரினும்'தகுதி' என்னும் 'நெஞ்சத்துக் கோடாமை' யோடு வாழ்தல் வேண்டும். குறைவு நிகழும் போது, தவறான முறையில் செல்வம் தேடுவதற்கோ நிறைவு உண்டாயின் வரம்பு மீறிப் பெருமிதமும் ஆணவமும் கொள்வதற்கோ இடம் கொடாது, மனத்தைச் சமநிலையில் காத்துக் கொள்ளுதல் வேண்டும். அங்ஙனம் செய்யவில்லையேல் நெஞ்சத்துக் கோடுதல் நிகழும் (கோடுதல் = நெறிதவறுதல்).

"நான் இவ்வாறு சொல்லுவது எனக்கு ஏற்பட்ட ஏதோ ஒரு குறையினாலன்று. ஏனெனில், எந்நிலையிலும் போதுமென்ற மனத்தோடு வாழக் கற்றுக் கொண்டேன். வறுமையிலும் வாழத் தெரியும். வளமையிலும் வாழத் தெரியும். வயிறார உண்ணவோ, பட்டினிக் கிடக்கவோ, நிறைவுற்று வாழவோ, குறைவுற்றுத் தாழவோ, எதற்கும் பயிற்சி பெற்றிருக்கிறேன். எனக்கு, உறுதி யூட்டும் இறைவனால் எதையும் செய்ய ஆற்றல் உண்டு" (பிலிப் 4:11-13).

116. "கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின்."

கெடுவல் யான்—யான் கெடக்கடவேன்
நடுவொரீஇ—நடுநிலை யொழிந்து
ஒரீஇ—நீங்கி (கழக அகராதி)

'தன் நெஞ்சம் நடுநிலை (தகுதி) நீங்கிய செயல்கள் செய்ய முற்பட்டால், நான் இனிக்கெடுவேனாக' என்று அறிந்து கொள்க.

"உங்களைத் துன்புறுத்துவோருக்கு ஆசி கூறுங்கள். ஆம்; ஆசி கூறுங்கள். சபிக்க வேண்டாம். மகிழ்வாரோடு மகிழுங்கள். அழுவாரோடு அழுங்கள். உங்களுக்குள் ஒன்றுபட்டு வாழுங்கள். உயர்வு மனப்பான்மை கொள்ளாமல் தாழ்ந்தவர்களோடு அன்பாய்ப் பழகுங்கள். நீங்கள் அறிவாளிகளென்று பெருமிதம் கொள்ள வேண்டாம். பழிக்குப் பழி வாங்காதீர்கள். மனிதர் அனைவர் முன்னிலையிலும் நன்மதிப்பை இழக்காதபடி பார்த்துக் கொள்ளுங்கள். கூடுமானால், உங்களால் இயன்ற அளவு எல்லாரோடும் நட்பமைதியுடன் வாழுங்கள். அன்புக்குரிய வர்களே! நீங்களே பழி வாங்காதீர்கள். அதை இறைவனின் சினத்திற்கு விட்டு விடுங்கள். ஏனெனில், 'பழி வாங்குவது என் உரிமை. நானே பதிலுக்குப் பதில் செய்வேன்' என்கிறார் ஆண்டவர், என்று எழுதியுள்ளது. நீயோ, 'உன் பகைவன் பசியாய் இருந்தால், அவன் பசியை ஆற்று. தாகமாய் இருந்தால் அவன் தாகத்தைத் தணி. ஏனெனில், இவ்வாறு செய்வதால், அவன் தலைமேல் எரிதழலைக் குவிப்பாய், தீமை உன்னை வெல்ல விடாதே. நன்மையால் தீமையை வெல்க" (உரோ12:14-21).

துன்புறுத்துவோருக்கு ஆசி கூறுதல், தாழ்ந்தவரோடு அன்பாய்ப் பழகுதல், பெருமிதம் கொள்ளாமலிருத்தல், பழிக்குப் பழி வாங்காமலிருத்தல், நட்பமைதியுடன் வாழ்தல், இவை முதலியவை 'தகுதி'யைச் சார்ந்தவையாகும். இவற்றிற்கு எதிரான செயல்கள் நெஞ்சம் ஒரீஇ அல்லனவாகும். இவற்றைச் செய்ய முற்பட்டால், ஒருவன் தன் தலைமேல் எரிதழலைக் குவித்துக் கொள்வதாகும். அஃதாவது, தானே தன்னை நோக்கிக் 'கெடுவல் யான்' என்பதாகும்!

117. ''கெடுவாக வையாது உலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.''

நடுவாக—நடுநிலையோடு, 'தகுதி'யோடு, நன்றிக்கண்—நன்மையானதில், நன்மை செய்வதில், தகுதியுடன் வாழ்வதில். தங்கியான் தாழ்வு—நிலையாய் நிற்பவன் தாழ்வுற்றால், துன் புற்றால். கெடுவாக — கேடாக. வையாது உலகம் — உலகம் கருதாது.

நன்மை செய்து ஒருவன் துன்புற்றால், அதை எவரும் 'கேடாக'க் கருதல் கூடாது. தீமை செய்து துன்புற்றால் அதுவே கேடாகும்.

''நன்மை செய்வதில் நீங்கள் ஆர்வமுள்ளவராக இருந்தால் உங்களுக்கு யார் தீமை செய்யப்போகிறார்கள்? நீதியின் பொருட்டுத் துன்புற்றாலும், நீங்கள் பேறு பெற்றவர்களே. மனிதர்களுக்கு அஞ்சாதீர்கள். மனங்கலங்காதீர்கள். ஆண்ட வராகிய கிறித்துவே பரிசுத்தர் என உங்கள் உள்ளத்தில் போற்றுங்கள். நீங்கள் கொண்டிருக்கும் நம்பிக்கைக்கு விளக்கங் கூறும்படி யாராவது கேட்டால், தக்க விடை பகர எப்போதும் தயாராய் இருங்கள். ஆனால், விளக்கங் கூறும்போது சாந்தத் தோடும் மரியாதையோடும் பேசுங்கள். உங்கள் மனச்சாட்சியும் குற்றமற்றதாய் இருக்கட்டும். அப்போதுதான், நீங்கள் அவ தூறுக்கு ஆளாகும்போது, உங்கள் கிறித்தவ நன்னடத்தையைப் பழிப்பவர்கள் நாணமடைந்து போவார்கள்'' (1 இரா 3:13-6).

118. ''சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்து ஒருபால்
கோடாமை சான்றோர்க்கு அணி''

துலாக்கோல் போல் சான்றோர் நீதி, நேர்மை சிறிதும் பிறழாமல் வாழ்தல் வேண்டும். நன்மையானதினின்று சிறிது பிறழ்ந்தாலும் சான்றோர்க்கு அணியாகாது.

"சிலர் தங்களைத் தாங்களே பாராட்டிக் கொள்ளுகின்றனர். அவர்களோடு எங்களையும் சேர்த்துக் கொள்ளவோ ஒப்பிடவோ நாங்கள் துணியோம். அவர்கள் தங்களையே அளவுகோலாகக் கொண்டு தங்களை அளவிட்டுத் தங்களைத் தங்களோடே ஒப்பிட்டுக் கொள்கிறார்கள். இது அறிவீனமன்றோ? நாங்கள் பெருமை பாராட்டுவதற்கு ஓர் அளவை இல்லாமல் இல்லை. கடவுள் எங்களுக்கு வரையறுத்த அளவு கோல்தான் நாங்கள் பயன்படுத்தும் அளவை. அப்படிக் கடவுள் எங்களுக்கு வரையறுத்துக் கொடுத்த அலுவலின்படி நாங்கள் உள்ளூர் வரை வரவேண்டியிருந்தது. உங்கள் ஊர்வரை நாங்கள் முன்னரே வராமற் போயிருந்தால், எல்லை மீறினவர்களாய் இருப்போம். ஆனால், கிறித்துவின் நற்செய்தியை அறிவிக்க உங்கள் ஊர் வரைக்கும் வந்தோம். மற்றவர்களின் உழைப்பைக் காட்டி, நாங்கள் பெருமை பாராட்டவில்லை. அப்படிச் செய்தால், அது அளவையை மீறிப் பெருமை பாராட்டுவதாகும். அதற்கு மாறாக, உங்கள் விசுவாசம் வளர வளர நாங்கள் உங்கள் நடுவில் செய்யும் பணியும் விரிவடைந்து, எங்களுக்கு வரையறுத்துக் கொடுக்கப்பட்ட எல்லையை மீறாமலே, உங்களுருக்கு அப்பால் உள்ளவர்கள் நடுவிலும், நாங்கள் நற்செய்தி அறிவிக்க இயலும் என நம்புகிறோம். பிறருக்குக் குறித்துள்ள எல்லையை நாங்கள் மீறி, அவர்கள் செய்து முடித்த வேலையைக் குறித்துப் பெருமை பாராட்டவே மாட்டோம். 'பெருமை பாராட்டுவோன் ஆண்டவரைப்பற்றிப் பெருமை பாராட்டுக.' ஏனெனில், தன்னைப்பற்றித் தானே நற்சான்று கூறுபவன் சான்றோன் அல்லன். ஆனால், ஆண்டவர் யாரைப் பற்றி நற்சான்று அளிக்கிறாரோ அவனே சான்றோன்."

(2 கொரி. 10:12-18).

எவனும் அளவுமீறித் தன்னைப் பாராட்டிக் கொள்ளுதல் தகாது எனும்போது அளவுமீறி ஒருவன் எச்செயலும் செய்யலாகாது. அது சான்றாண்மைக்கு எதிரான குற்றமாகும். எனவே, சான்றோர்க்கு அணியாகாது.

119. ''சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்டம் இன்மை பெறின்.''

உட்கோட்டம் = மனத்தில் கோடுதல்,
நேர்மையின்மை.

மனத்தில் — உள்ளத்தில் — ஒருவன் ஒரு தலையாயிராமல் (அஃதாவது, ஒருபுறம் சாயாமல்) நேர்மையாய் ஒழுகுவானாயின், மனநேர்மையின் காரணமாகச் சொல்லிலும் நேர்மை உண்டாகும். அப்பொழுதுதான் 'செப்பம்' (தகுதி — நடுநிலைமை) உளதாகும்.

''மரமும் நல்லது, கனியும் நல்லது என்று சொல்லுங்கள். அல்லது மரமும் தீயது, கனியும் தீயது என்று சொல்லுங்கள். விரியன் பாம்புக் குட்டிகளே! நீங்கள் பொல்லாதவராயிருக்க எவ்வாறு நல்லவை பேச முடியும்? ஏனெனில், உள்ளத்தின் நிறைவினின்றே வாய் பேசும். நல்லவன் நல்ல கருவூலத்தினின்று நல்லவற்றை எடுக்கிறான். தீயவனோ தீய கருவூலத்தினின்று தீயவற்றை எடுக்கிறான். மனிதர் பேசும் பயனற்ற சொல் ஒவ்வொன்றுக்கும் தீர்வை நாளில் கணக்குக்கொடுக்க வேண்டும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஏனெனில், உன் வார்த்தைகளைக் கொண்டே குற்றமற்றவன் எனப்படுவாய். உன் வார்த்தைகளைக் கொண்டே குற்றவாளி எனப்படுவாய்.'' (மத். 12:33-37).

மரம் நல்லது = உள்ளம் நல்லது. கனியும் நல்லது = உள்ளத்திலிருந்து வெளிப்படுவதும் (சொல், செயல்) நல்லவை.

120. ''வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோற் செயின்.''

இல்வாழ்க்கையில் ஈடுபட்டுள்ளவர்கள் பொருள் ஈட்டுதலில் ஈடுபடுதல் அவசியம். இல்வாழ்க்கைக்குத் தேவைப்படுமாதலின். இதற்குப் பல சமயங்களில் வாணிகம் தேவைப்படலாம். இனி, 'வாணிகம் செய்வார்க்கு' எது நடுநிலையான 'வாணிகம்' என்றால், பிறர் பொருளைத் தம் பொருள்போல் கருதி வாணிகம் செய்வதேயாம்.

வாணிகம் செய்யும்போது தன் பொருளாயிருந்தால் கலப்படம் முதலிய குற்றங்கள் புரிந்து வாணிகம் (விற்பனை) செய்ய

முற்படக்கூடும். பிறர் பொருளை வாங்குவதாயிருந்தால் அத்தகைய குற்றங்கள் இல்லாமல் காத்துக் கொள்ள முயற்சி நிகழும். இது நிகழும்போது பிறர் பொருளைத் தம் பொருள் போல் கருதும் மனப்பான்மை இல்லாதொழியும். இது நடுவு நிலைமைக்கு (நேர்மைக்கு) எதிரான குற்றமாகும்.

## நடுவு நிலைமை
## சுருக்கம்

111. "தகுதி யெனஒன்று நன்றே பகுதியால்
பாற்பட் டொழுகப் பெறின்."

நட்பு, பகை, (இவ்விரண்டுமில்லாத) நொதுமல் எனப் பாகுபாடு (பகுதி) உண்டாக்கி அதன்படி ஒழுகுவது நன்றன்று. இத்தகைய பாகுபாடின்றி ஒழுகுவதே தகுதி. (இதுவே சான்றோர் ஒழுக்கம். விருந்தெனப்படும் தொடர்பில்லாதாரையும் ஓம்புதலே அவர்கள் கடமை). ஆகவே, இது ஒன்றே நன்று.

112. "செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி
எச்சத்திற் கேமாப் புடைத்து."

செம்மை — நேர்மை உள்ளவனது அருள், பொருள் ஆக்கங்கள் சிதைவு உறாமல், அவன் வழி வருவோர்க்கும் பாதுகாப்பாயிருக்கும்.

113. "நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல்."

நேர்மை — நடுவுநிலைமை மீறுவது சில சமயங்களில் ஏதோ நன்மை (ஆக்கம்) பயக்கக்கூடும். எனினும், அதை உடனே கைவிட வேண்டும். (ஏனெனில், இறுதியில் தீமையே விளைவிக்கும்).

114. "தக்கார் தகவிலர் என்ப தவரவர்
எச்சத்தால் காணப் படும்."

மேற்சொன்ன தகுதி உள்ளவர், அது இல்லாதவர் என எங்ஙனம் அறியலாம்? அவரவர் வாழ்வுக்குப் பின் எஞ்சி நிற்கும் புகழால், அல்லது பழியால் அறியலாம்.

115. "கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி."

வாழ்க்கையில் தீமை, நன்மை (பெருக்கம்) விளைவது இயல்பு. எந்நிலையிலும் உள்ளத்தில் நேர்மையைக் (கோடாமை) காப்பதே சான்றோர்க்கு அணியாகும்.

116. "கெடுவல்யான் என்ப தறிகதன் நெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின்."

நடுநிலை நீங்கிய செயல்களைச் செய்ய ஒருவன் முற்பட்டால், 'யான் கெடுவேன்' என்று தானே தன் நெஞ்சில் உணர்வானாக.

117. "கெடுவாக வையா துலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு."

நடுநிலை நின்று, நன்மை செய்வதில் உறுதியாய் உள்ளவன் வறுமை போன்ற தாழ்வுற்றாலும், அதைச் சான்றோர் உலகம் கெடுதியாகக் கொள்ளாது.

118. "சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி."

சமன் செய்து பொருளை நிறுத்துகின்ற துலாக்கோல் போல நேர்மையில் நின்று, ஒரு பக்கமாகச் சாயாதிருப்பதே சான்றோர்க்கழகு.

119. "சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உள்கோட்டம் இன்மை பெறின்."

உள்ளத்தில் (நேர்மையன்றி) ஒருபக்கமாகச் சாய்தல் இல்லையேல், சொல்லிலும் ஒரு பக்கமாகக் கோணுதல் இராது.

120. "வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோல் செயின்."

வாணிகம் செய்வதாயிருந்தால், பிறர் பொருளையும் தம் பொருள் போல் மதித்து வாணிகம் செய்க. அதுவே முறை.

# 13. அடக்கமுடைமை

121. "அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்."

சொல், செயல், அடக்கம் வானவருள் சேர்க்கும்; அது இன்மை இருள் சேர்ந்த இன்னா உலகில் சேர்த்து விடும்.

122. "காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனின்ஊங் கில்லை உயிர்க்கு."

அடக்கத்தை உறுதிப் பொருளாகக் காத்தல் வேண்டும். அதைவிட மேலான பொருள் (ஆக்கம்) வேறு இல்லை.

123. "செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து
ஆற்றின் அடங்கப் பெறின்."

அறிய வேண்டியதை அறிந்து, நல்வழியில் (ஆற்றின்) அடக்கத்தோடு ஒழுகினால் அவ்வடக்க நிலை (செறிவு) பிறரால் அறியப்பெற்று மிகுந்த சிறப்பைப் பயக்கும்.

124. "நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது."

(முன்பு கூறப்பட்ட தகுதி என்னும்) நிலையினின்று பிறழாமல் அடக்கத்தோடு வாழ்பவனது உயர்வான தோற்றம், உயர்ந்த மலையினும் மிகப்பெரிது.

125. "எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து."

பணிவுடன் ஒழுகுதல் எல்லார்க்குமே நல்லது. செல்வம் உள்ளவர்க்குப் பொருட்செல்வத்தைவிட மேலான செல்வமாக இருக்கும்.

126. ‘‘ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து.’’

ஒரே மனநிலையில் (ஆமை தன் உறுப்புகளை அடக்கிக் கொள்வதுபோல) ஐம்புலன்களையும் அடக்கியாண்டால் எக்காலமும் பாதுகாப்பாகும்.

127. ‘‘யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.’’

ஐம்பொறிகளுள் மற்றவற்றை காக்காவிடினும் நாவைக் காத்தல் வேண்டும். இல்லையேல் பேசும் சொல்லில் குற்றம் விளைந்து துன்புற நேரிடும்.

128. ‘‘ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்
நன்றாகா தாகி விடும்.’’

பேசும் சொற்களுள் ஒன்றே ஒன்று தீமையான பொருள் தந்து, அதன்பயனாய், தீமை விளையுமாயின், பேசிய மற்ற நல்ல சொற்களால் நன்மை விளையாது.

129. ‘‘தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு.’’

தீயினால் உண்டான புண் ஆறிவிடும்; நாவினால் (தீய சொல்லால்) உண்டான காயம் ஆறவே ஆறாது.

130. ‘‘கதங்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து.’’

இன்பத்தை அடக்கி, கற்க வேண்டியதைக் கற்று, அடக்கத்தை மேற்கொள்பவன் செம்மையான மனநிலையை, அவன் செல்லும் நல்வழியில் அறமும் நுழைந்து பார்த்து இன்புறும். (அடக்கம் உள்ளவனிடம் அறம் தானே வந்தமையும்).

# 14. ஒழுக்கமுடைமை

131. ''ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.''

ஒழுக்கத்தால் உயர்வு உண்டாகும்; ஆதலின் அது உயிரினும் மேலாக மதிக்கப்பட வேண்டும்.

132. ''பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்
தேரினும் அஃதே துணை.''

எத்துணை கடினமாயிருந்தாலும் ஒழுக்கத்தைப் போற்றிக் காத்தல் வேண்டும். (வேறு பலவற்றை) ஆராய்ந்து தெளிந்தாலும் ஒழுக்கம்போல் துணையாவது வேறில்லை.

133. ''ஒழுக்க முடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.''

ஒழுக்கம் உடைமையே சான்றாண்மையோடு இணைந்த வாய்மைக்குடிமக்கள் நிலை. (குறள் 953). ஒழுக்கமின்மை சால்பற்ற பிறப்பாய்ச் (குடிமகனாய்) செய்து விடும்.

134. ''மறப்பினும் ஒத்துக் கொளலாகும்; பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்.''

மறை ஓதுபவன் ஓதியதை மறந்தாலும் மீண்டும் ஓதி அறிய முடியும். வாய்மைக் குடிக்கு ஏற்ற ஒழுக்கம் குன்றினால் எல்லாமே கெடும்.

135. ''அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை
ஒழுக்கம் இலான்கண் உயர்வு.''

தீமை எனும் மாசுள்ள வழியை (அழுக்கு ஆறு) தன்னுடையதாக ஆக்கியவனிடம் அருள் ஆக்கம், பொருள் ஆக்கம்எதுவும் இராது. ஒழுக்கமில்லாதவனிடம் உயர்வு காண இயலாது.

136. ''ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து.''

ஒழுக்கம் இன்மையால் இழிவு (ஏதம்) ஏற்படுதலை (படு பாக்கு) அறிந்தவராய், மனவலிமை கொண்டவர் (உரவோர்) ஒழுக்கமுறையில் குன்றார். (ஒல்கார்).

137. ''ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி.''

நல்லொழுக்கத்தால் எவரும் மேன்மை அடைய வியலும்; ஒழுக்கமின்மையாலோ வேண்டாத பழியெல்லாம் வந்தடையும்.

138. ''நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும்.''

நல்லொழுக்கம் இன்பநிலைக்கு வித்தாகும்; தீய ஒழுக்கமோ என்றும் துன்பத்தையே விளைவிக்கும்.

139. ''ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.''

வாய்தவறித் தீமையானதைப் பேசுதல் முதலாய் ஒழுக்க முடையவர்க்கு ஏற்காது.

140. ''உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்''

(ஆதிபகவனை முதலாக உடைய) உலகம் (அவன் வகுத்த திட்டத்தோடு) பொருந்திய வகையில் ஒழுகுதலைக் கற்றறி யாதவர் எத்தனை கற்றிருந்தும் அறிவில்லாதவராகவே கணிக்கப்படுவர். (உலகம் என்னும் சொல்லால் 'உலகம் போகிற தவறான போக்கு' என்று இங்கே பொருள் படுமாறில்லை).

# 15. பிறனில் விழையாமை

141. ''பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்

தறம்பொருள் கண்டார்கண் இல்.''

இன்னொருவனுடைய உரிமைப்பொருளாகக் கருதப்படும் அவன் மனைவியை விரும்பி (பெட்டல்-மிக விரும்பல்) நடந்து கொள்வதாகிய அறிவற்ற செயல் உலகில் அறத்தையும் (அருட்) பொருளையும் உய்த்துணர்ந்தவரிடம் காணப்படாது.

142. ''அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை
நின்றாரில் பேதையார் இல்.''

அறம் இழுக்காகி (குன்றி) தீய வழியில் நிற்பவர்களுள் பிறனுடைய (மனைவியை நாடி அவள்) வீட்டுவாயில் சென்று நிற்பவரைவிடக் கேடுகெட்டவர்கள் யாரும் இல்லை.

143. ''விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்
தீமை புரிந்தொழுகு வார்.''

தம்மை நல்லவர் என்று மிக நம்பியவரது இல்லாளிடம் (நம்பிக்கைத் துரோகமாகிய) தீமை செய்து நடப்பவர் செத்தவர்க்குச் சமம். (அத்தகையவர் இறந்தொழிவதே நலம்).

144. ''எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்

தேரான் பிறனில் புகல்?''

ஒரு சிறிதும் எண்ணிப்பாராமல் பிறன் இல்லாளிடம் செல்பவர் எத்துணை பெருமை பொருந்தியவராயினும் அவரது பெருமைக்கு என்ன மதிப்புண்டு?

145. ''எள்ளிதென இல்லிறப்பான் எய்துமெஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.''

எளிதென நினைத்துப் பிறன் இல்லாளிடம் நெறி தவறிச் செல்பவன் என்றும் நீங்காத பழிக்காளாவான்.

146. ''பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல் இறப்பான் கண்.''

(கணவனது) பகை, (பிறர் மனைவியை விரும்புதலாகிய) பாவம், (அங்ஙனம் செய்கையில் ஏற்படக் கூடிய) அச்சம், (உலகத்தாரால் நிகழக்கூடிய) பழி இவை நான்கும் முறைமீறிப் பிறன் இல்லாளை விரும்புபவனை விட்டு நீங்கா.

147. ''அறன் இயலான் இல்வாழ்வான் என்பான்
பிறன் இயலாள்
பெண்மை நயவா தவன்.''

அறநெறிப்படி இல்லறம் நடத்துபவன் பிறனுக்குப் பொருந்தியவளது பெண்மையை விரும்பான்.

148. ''பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறன்ஒன்றோ ஆன்ற ஒழுக்கு.''

பிறன் மனைவியை எண்ணத்தாலும் நோக்காத ஆண்மையே பெருமை மிக்கது. சான்றாண்மை மேற்கொண்டவர்க்கு அறவொழுக்கம் மட்டுமன்று, அறத்தினும் மேம்பட்ட அருள் ஒழுக்கமாகும்.

149. ''நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பின்
பிறற்குரியாள் தோள்தோயா தார்.''

அச்சம் தரும் கடல் நீரால் சூழப்பட்ட உலகில் (வைப்பில்) நல்லவர் என்னும் பெயருக்குத் தகுதியுடையவர் யாரெனின் 'வரன் என்னும் வைப்பை' எண்ணி, பிறர்க்குரிய இல்லாளின் தோளைத் தீண்டாதவரே. அஃதாவது, பிறர் மனையாளோடு தொடர்பு கொள்ளாதவரே.

150. ''அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையான்
பெண்மை நயவாமை நன்று.''

அறம் என்னும் வரையறைக்குட்படாதவன் அறமல்லாத வேறு செயல்களைச் செய்தாலும், பிறன் வாழ்வு எல்லைக்குட்பட்டிருக்க வேண்டிய இல்லாளைத் தான் விரும்பாமல் இருக்கும் நற்செயலையாவது செய்தல் வேண்டும். (அறனல்லாத வேறு செயல்களைச் செய்வது சரியென்றல்ல; பிறன் மனைவியை நாடுவது மாபெரும் குற்றம் என்பதை வலியுறுத்துமாறு இங்ஙனம் கூறுகிறார்).

# 16. பொறையுடைமை

151. ''அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.''

தன்மீது (நிலத்தின்மீது) நின்றுகொண்டே தன்னைத் தோண்டுவதைப் பொறுத்துக்கொள்ளுகிற நிலம்போல, தம்மை இகழ்பவரைப் பொறுப்பது தலைமையான அறச்செயலாகும்.

152. ''பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று.''

நெறி தவறிச் செய்யப்படும் செயலை (இறப்பினை) எப்போதும் பொறுத்துக்கொள்க. பொறுத்துக்கொள்வதைவிட மேலான செயல் அதை அடியோடு மறந்துவிடுவது.

153. ''இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.''

தொடர்பற்ற (அறிமுகமில்லாத) அந்நியரை ஓம்பாமல் விடுதல் (ஒரால்-ஒருவுதல்-நீக்குதல்) பண்பற்ற நிலையாகும். (இன்மை) இன்மையாகிய மனவறுமையுள் மிக இழிந்த நிலை. அறிவும் பண்பும் இல்லாதவர் (மடவார்) செய்த தவற்றைப் பொறுத்தல் (ஆன்மீக) வலிமையின் உச்ச நிலையாகும்.

154. ''நிறையுடைமை நீங்காமை வேண்டின்
பொறையுடைமை
போற்றி ஒழுகப் படும்.''

குறையற்ற நற்பண்பு (நிறை) தன்னை விட்டு நீங்கலாகாதென விரும்பினால் பொறுமைப் பண்பைப் போற்றி ஒழுகுதல் வேண்டும்.

155. ''ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போல் பொதிந்து.''

தமக்குத் தீமை செய்பவர்களைத் தண்டிப்பவரை மக்கள் ஒரு பொருட்டாக மதியார்; தண்டியாமல் பொறுத்துக் கொள் பவரைப் பொன்போல மதித்துப் போற்றுவர்.

156. ''ஒறுத்தார்க் கொருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.''

தமக்குத் தீமை செய்தவரை ஒறுத்து ஒதுக்குவது சிறிது நேரம் ஒருவித இன்பத்தைத் தரலாம். ஒறுக்காமல் பொறுத்துக் கொள்வது வாழ்நாள் முழுவதும் (மனத்துள்) இன்பம் தரும் செயலாகும்.

157. ''திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று.''

திறம் என்னும் தகுதியற்ற செயலை ஒருவர் தனக்குச் செய் தாலும் அத்துன்பத்திற்காக (நோ) மனம் நொந்து அறனற்ற செயலைச் (பழிக்குப்பழி) செய்யாமலிருப்பது நன்று.

158. ''மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல்.''

தம்மிடத்திலுள்ள வலிமை, செல்வம், செல்வாக்கு இவற் றைப் பயன்படுத்தி வரம்பு மீறிய செயல்களைச் செய்தவரை ஒருவர் தமது தகுதி என்னும் நடுநிலைமையால் வெல்லுதல் வேண்டும்.

159. ''துறந்தாரின் தூய்மை உடையார் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர்.''

நெறிதவறியவர் (இறந்தார்) பேசும் தீச்சொற்களைப் பொறுத்துக்கொள்ளும் மன ஆற்றலையுடைய இல்லறத்தார் துறவு நிலையில் ஒழுகுபவரைவிட மேலானவர்.

160. ''உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின்.''

உணவை மறந்து நோன்பிருப்பவர் மதிப்பு பெரிதே. எனினும், மனத்தைப் புண்படுத்தும் கடுஞ்சொல்லைப் பொறுத் துக்கொள்பவரே முன்னையவரைவிடச் சிறந்தவராவர்.

# 17. அழுக்காறாமை

அழுக்காறு என்னும் சொல் பெரும்பாலும் 'பொறாமை' என்னும் பொருளில் ஆளப்படுகிறது. உரையாளர்களும் அங்ஙனமே கூறுகின்றனர். ஆனால், அப்பொருளில் இச்சொல்லை ஆளுகையில் பொருள் மிகவும் சிறப்பாகத் தோன்றவில்லை. ஏனெனில், 'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்' என்று கூறும் 34-ஆம் குறளுக்கு அடுத்தபடியாக, 'அழுக்காறு அவா......' என்று தொடங்கும் குறளில், அறத்துடன் பொருந்தாதவை எனப்படும் நான்கு பண்புகளில் அழுக்காறு முதன்மையாகக் கூறப்படுகிறது. பொறாமை என்னும் பொருளில் மட்டுமே இச்சொல்லைக் கொள்வோமாயின், அறத்துடன் பொருந்தாத வேறு தீய பண்புகள் இல்லையா என வினா எழும்பும். ஆணவம், சுயநலம், பொறாமை, உலோபம், மோகம், பேருண்டி, குடி முதலிய தீய பண்புகள் பல உளவாக, அறத்துடன் பொருந்தாத் தீக்குணங்களுள் முதலாவதாகப் பொறாமை மட்டும் எங்ஙனம் கூற வியலும்? ஆகவே, ஈண்டு அழுக்காறு என்னும் சொல்லுக்கு வேறு பொருள் இருத்தல் வேண்டும். அதுவும் அறத்துடன் பொருந்தாத தீய பண்புகளுள் பொதுவானதாகவும், மற்றத் தீய பண்புகளுக்கு வழி கோலுவதாகவும் இருத்தல் வேண்டும். அழுக்கு + ஆறு என்று சொல்லைப் பிரித்துப் பொருள் கூறினால் உண்மைக் கருத்து விளங்கும் என்பது எம் துணிபு.

மாசற்ற மனமே அனைத்தறனுக்கும் வழியென்னும் பொருள் முந்திய குறளில் உள்ளதால், **மாசுள்ள**, அஃதாவது, **அழுக்குள்ள மனமே** அறனுக்கு எதிரானதற்கெல்லாம் வழியென இக்குறளில் கூறப்படுகிறது.

இக்கருத்துப் பழைய உரைகளிலும் ஓரளவு வெளிப்படுகிறது. உதாரணமாகப் பரிதியார், ''அழுக்காறாமையாவது, பிறர் செல்வம் கண்டு, 'இவனுக்கு இப்பாக்கியம் வந்ததே' என்று சொல்லும் **மன அழுக்கை** விடுக என்றவாறு'' எனப் பொருள் கூறுகிறார்.

இனி பிறர் செல்வம் கண்டு மேற்கூறியவாறு வருந்துவது மட்டுந்தான் — அஃதாவது, பொறாமை மட்டுந்தான் **மன அழுக்கை** உண்டாக்குகிறது என்று கூறுவதற்கில்லை. அவ்வழுக்கை விளைவிக்கும் பல செயல்களுள் பொறாமையும் ஒன்றாகும் என்பதே பொருந்தும். ஆதலின், 'அழுக்காறு' என்னும் சொல்லை ஒரே பதமாகக் கொள்ளாமல் அழுக்கு + ஆறு எனப்பிரித்து, மனத்துள் மாசு பொருந்திய ஆறு (வழி) எனப் பொருள் கொள்வதே சிறப்பாகத் தோன்றுகிறது.

இவ்வதிகாரத்தில் வரும் குறட்பாக்களிலும் இக்கருத்துப் புலப்படுகிறது.

161. "ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
அழுக்காறு இலாத இயல்பு."

நெஞ்சத்தில் அழுக்காறில்லாத இயல்பே ஒழுக்காறாகக் கொள்ளப்பட வேண்டும் என்கிறது குறள். பிறர் நலன் கண்டு பொறாமைப்படுவதே ஒழுக்க நெறி என்பது பொருந்துமா? பொறாமை மட்டும் இன்றி, மேற்சொன்ன ஆணவம் முதலிய தீய பண்புகள் இருப்பின் அது அழுக்கு ஆகாதோ? ஆகவே, அழுக்காறு என்னும் சொல்லுக்கு ஈண்டுப் பொறாமை என்னும் தீய பண்பு மட்டுமன்று, பொறாமைக்கும் மற்றும் பல தீய பண்பு கட்கும் முதல் காரணமாகிய தீய, அழுக்குள்ள, மாசுள்ளமனமும், அம்மனத்தின் படி ஒருவன் செல்லும் வழியுமே குறிக்கப்படுகிறது என்பதில் ஐயமில்லை.

அடுத்து வரும் குறட்பாக்களினால் இக்கருத்து மேலும் வலியுறுத்தப்படுகின்றது.

162. "விழுப்பேற்றின் அஃதொப்பது இல்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின்."

யாரிடத்தும் அழுக்காறு இன்றேல் அதைப் போன்ற விழுமிய (சிறந்த) பேறு வேறில்லை என்கிறது இக்குறள்.

பிறர்பால் பொறாமையில்லை; ஆனால் ஆணவ மனப் பான்மை, அல்லது பழிவாங்கும் மனப்பான்மை முதலானவை உண்டாயின், அது விழுமிய பேறு என்பது எங்ஙனம்? ஆகவே,

பிறர் மாட்டு எத்தகைய தீய மனப்பான்மையும் இல்லாதது மட்டுமே விழுமிய பேறு எனின் கருத்துச் சிறக்கின்றது.

163. ''அறன்ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறனாக்கம்
பேணாது அழுக்கறுப் பான்.''

அறன் ஆக்கம்—அறமாகிய ஆக்கம். அல்லது அற வாழ்வினால் விளையும் ஆக்கம்; செல்வம் எனப் பொருள் கொள்ளலாம்.

அறமே உண்மையான செல்வம் — 'அறத்தால் வருவதே இன்பம்' என்பதற்கேற்ப அறத்தால் வருவதே உண்மையான செல்வம். உண்மையான செல்வம் உள்ளத்தின் இன்பமே யன்றோ? அறத்தான் வருவது ஐம்புல இன்பமன்று; புலன் களைக் கடந்த பேரின்பமேயாகும். ஆகவே, உண்மையான செல் வமாகிய அறனையும் அதனால் வரும் மெய் இன்பத்தையும் தனக்கு வேண்டுமென விரும்பாதவன், பிறருக்கென விரும்ப மாட்டான். இதனாற்றான் அழுக்காறு விளைகின்றது. பிறரு டைய 'செல்வம்-ஆக்கம்' எனும் போது வெறும் பொருளாகிய **ஆக்கம் மட்டுமன்று,** அருளாகிய ஆக்கமும் குறிக்கப்படுகிறது என்பதில் ஐயமில்லை. அறவாழ்க்கை வெறும் பொருளுடன் இணைந்த வாழ்க்கையாகாது; அருளும் அதற்கு வேண்டப்படும். இத்தகைய 'ஆக்கம்' தனக்கும் பிறர்க்கும் உண்டாதல் வேண்டும் என விரும்பாதவன் பிறர் நலத்தை விரும்பாதவன். இக்கருத்தில்- தான் 'பொறாமை' என்னும் சொல்லை ஈண்டு நாம் விளங்கிக் கொள்ள வேண்டும்.

இக்கருத்தைக் கிறித்துவும் 'தனக்கு ஒருவன் அன்பு செய்வது போல பிறர்க்கும் அன்பு செய்தல் வேண்டும்' என்றார். 'அன்பு செய்தல்' என்னும் சொல் தொடர்க்கு 'நலன் விரும்புதல்' என்பதே பொருள். ஒருவன் பிறர்க்கு நன்மை செய்யவியலாவிட்டாலும், அவனுக்கு நன்மை உண்டாகட்டும் என்று விரும்பவாவது வேண்டும். தனக்கு எங்கும் என்றும் நன்மையே விளைதல் வேண்டும் என விரும்புகின்றான் அன்றோ? விரும்பியது கிட்டாவிடினும் விரும்பும் மனப்பான் மையை விடுவதில்லை. இங்ஙனமே ஒருவன் என்றும் எங்கும் பிறர்க்கு நன்மையே விரும்பி தீயது விளையலாகாது என்றும் விரும்புதல் வேண்டும். இங்ஙனம் விரும்பாமல், தனக்கு நன்மை விளையாவிடினும், பிறனுக்குத் தீமை விளைதல் வேண்டும் என விரும்புவதே பொறாமை எனப்படுகிறது. இதுவே உள்ளத்தின் அழுக்கு ஆகும்.

164. ''அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து.''

தீயவை (இழுக்கு) செய்தால் (ஆற்றின்) துன்பம் (ஏதம்) உண்டாதலை (படுபாக்கு) அறிந்து, பொறாமையால் (அழுக்காற்றின்) அறமல்லாதவை செய்யார்-என்று உரையாளர் இதற்குப் பொருள் கூறுவர்.

இதில், அழுக்காறு என்பதை ஒரே சொல்லாகக்கொண்டு பொறாமை என்னும் பொருள் கொடுக்கப்பட்டுள்ளது தெளிவு.

ஆனால், அழுக்கு ஆறு எனப் பிரித்துப் பொருள் கூறுவோமாயின், இழுக்காகிய (அறமற்ற) வழியில் செல்வது துன்பத்தை அடையும் வழி என்று அறிந்து, அழுக்கு மனம் உள்ளவர் தீமை செய்யலாகாது.

தீயவை நினைத்தலும் செய்தலுமே அழுக்காறு என்னும் கருத்தே ஈண்டும் சிறக்கிறது.

165. ''அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடீன் பது.''

ஒன்னார்=பகைவர். கேடு ஈன்பது வழுக்கியும்=(பகையால் தாம் சாதாரணமாகச் செய்யும்) கொடுமையைச் செய்யத் தவறினாலும், அஃதாவது, செய்யாமல் விட்டாலும்; அழுக்காறுடையார்க்கு - அழுக்கு மனம் உள்ளவர்க்கு (தீய நெறியில் செல்லும் மனம் உடையோர்க்கு) அது சாலும் — அந்த அழுக்கு மனமே கெடுதியை விளைவிக்கும். அழுக்கு மனம் (தீய மனம்) உள்ளவர்க்கு வேறு பகைவர் தேவையில்லை; அந்த மனமே போதும் கெடுதியைத் தனக்கு விளைவித்துக் கொள்ள என்பது கருத்து.

பொறாமை என்னும் குறிப்பிட்ட தீயபண்பே எல்லாக் கெடுதிக்கும் வழிகோலும் என்பதைவிடத் தீயமனமே அங்ஙனம் செய்யும் என்னும் கருத்தே சிறக்கிறது.

166. ''கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்.''

கொடுப்பது - ஒருவன் பிறர்க்குக் கொடுக்கும் பொருளைக் கண்டு. அழுக்கறு - (அழுக்குறு மனத்தில் அழுக்கு, அஃதாவது, தீய எண்ணம் உண்டாகச் செய் என்னும் பொருளில்) அழுக்கறு என இலக்கிய வழக்கில் திரிந்தது. வள்ளுவரே இப்பொருளில் கூறுகின்றார். (170-ஆம் குறள் காண்க).

அயலான் நலமடைவது கண்டு அழுக்கு மனம் (பொறாமை) கொள்வது தீய பண்பு எனில், (பொருள்) இல்லாத ஒருவனுக்கு யாராவது நன்மை செய்ய - பொருள் கொடுக்க விரும்பினால், அதைக் கண்டு ஒருவன் பொறானாயின், அவன் மனம் எத்துணை அழுக்குப் படிந்த தீயபண்பாக இருத்தல் வேண்டும்! இத்தகையவன் தானும் உண்பது உடுப்பது முதலான நலன் இன்றிக் கெடுவதோடு தன் சுற்றத்தார்க்கும் அக்கேட்டினை விளைவிப்பவன் ஆவான்.

ஆகவே, அழுக்கு மனம் எத்துணை தீயதென்று அறிக.

167. ''அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்.''

அவ்வித்தல்—பொறாமை கொள்ளுதல், உள்ளத்தைக் கோணச் செய்தல்; செய்யவள்—செல்வத்தை உருவகப்படுத்திப் பெண்பாலாகக் கூறியது. தவ்வை—வறுமையை உருவகப் படுத்திப் பெண்பாலாகக் கூறியது. செய்யவள் இளையவளாகவும், தவ்வையை மூத்தவளாகவும் கூறுவது மரபு. தவ்வை = முகடி = மூதேவி ஒரே பொருட் பெயர்கள்.

ஈண்டுச் செல்வம் ஒழிந்து வறுமை வந்தெய்தும் என்பது கருத்து. அவ்வித்து—என்னும் சொல்லுக்குப் பொறாமை என்னும் பொருளுடன் 'உள்ளத்தைக் கோணச் செய்தல்' என்று அகராதி பொருள் கூறுவது கவனித்தற்பாலது. உள்ளத்தைக் கோணலாக்குவது பொறாமை மட்டும் தானா? எந்தத் தீய நினைவும் உள்ளத்தைக் கோணலாக்குகிறதன்றோ? உள்ளத்தைக் கோணலாக்குவதன் ஒரு விளைவே பொறாமை என்க. இத்தகைய கோணலான = அழுக்குப் படிந்த—மனம் (உள்ளம்) இருந்தால் ஒருவன் வறுமையின் பால் பட்டுத் துன்புறுவான். அழுக்கற்ற—மாசற்ற மனம் இருந்தால் வறுமை முதலான துன்பம் நேரினும் இறுதியில் இன்பம் அடைவான். (அறத்தான் =

மாசற்ற மனமுள்ள நெறியால் வருவதே இன்பம் அன்றோ?). அழுக்கு மனத்தோடு தீய நெறியில் செல்பவன் தொடக்கத்தில் இன்புற்றாலும் இறுதியில் துன்பமே அடைவான் என்பது கருத்து.

168. "அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்."

ஈண்டு அழுக்காறு என்பது ஒப்பற்ற ஒருபாவி என உருவகப்படுத்தப்பட்டுள்ளது.

திரு—செல்வம், மேன்மை, சிறப்பு, தெய்வீகம். ஈண்டுப் பொருளாகிய செல்வத்தை மட்டும் குறிப்பிடாமல், அருளாகிய செல்வத்தையும் குறிப்பிடும். ஏனெனில், எரிநரகமாகிய தீயுழி உய்க்கக் கூடிய அளவுக்கு எந்தத் 'திரு' செயலாற்றக் கூடும்? வெறும் பொருள் அழிபடுவதால் ஒருவன் தீயுழி உய்க்கப்பட்டு விடுவான் என்பதெங்ஙனம்?

எரி நரகம் என்னும் 'இருள் சேர்ந்த இன்னா உலகம் புகல்' அருளற்ற நெஞ்சினாலே யன்றோ? (குறள் 243). 'அருள் இல்லார்க்கு (மறுமையாகிய) அவ்வுலகம்' இல்லை யன்றோ? (குறள் 247). மேலும் அழுக்காறு ஒப்பற்றபாவி எனப்படுகின்றது. சாதாரணப் பொறாமைக்கு இப்பெயர் முற்றும் பொருந்துமா? எல்லாத் தீய செயல்களுக்கும் வழி செய்யும் தீய—அழுக்கு மனத்திற்கே இப்பெயர் முற்றிலும் பொருந்தும் என்க.

169. "அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமுஞ் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்."

அவ்வுதல்—அவாவி விழுதல், அழுந்துதல்; செவ்வியான்—செவ்வு அல்லது செவ்வை பொருந்தியவன், செம்மை, நேர்மை, செப்ப முடையவன்.

அவ்விய நெஞ்சம்—கோட்டத்தினைப் பொருந்திய மனம், (பரிமேலழகர்). அஃதாவது கோணலான—நேர்மையற்ற மனம். அழுக்கு மனம், (பரிதியார்). உட்கோட்டம் கிடந்த நெஞ்சம், (காலிங்கர்). ஆகவே, அழுக்காறு என்னும் சொல்லுக்குப் 'பொறாமை' என்று மட்டுமே பொருள் கொள்ளத்

தேவையில்லை. பொதுவாக நேர்மையற்ற, செம்மையற்ற, கோணலான, அழுக்கான, மாசுள்ள மனம் என்றும் கொள்ளத் தடையில்லை.

இத்தகைய — நேர்மையற்ற, உள்ளத்தில் கோணுதல் உள்ள — தீய மனம் கொண்டவன் ஆக்கம் (செல்வம்)-மேன்மை உறுவதில்லை; அங்ஙனமே செவ்விய (நேரிய) உள்ளத்தினன் கேடுறுவனுமில்லை; மாறாக நேர்மையற்றவன் செல்வம் அடைந்தாலும், நேர்மையுள்ளவன் கேடுற்றாலும் அதற்குக காரணம் என்ன வென்று ஆராய்ந்தறிதல் வேண்டும். இதற்கேதுவான காரணம் முற்பிறப்பில் செய்த வினையே என்பது உரையாளர் கூற்று. ஆனால், இக்கொள்கை வள்ளுவருக்கு ஏற்புடையதன்று ஆதலின், 'நினைக்கப்படும்' என்றதற்கு வேறு பொருள் இருத்தல் வேண்டும். அஃதாவது, நேர்மை உள்ளத்தினன் கெட்டழிவதும், கோணல் மனமுள்ளவன் என்றுமே நலன் உறுவதும் இல்லை என எண்ணிக்கொள், என்னும் கருத்தே சிறப்பதாகத் தோன்று கிறது.

இக் கருத்தே அடுத்த குறளிலும் வலியுறுத்தப்படுவதாகத் தோன்றுகிறது.

170. ''அழுக்கற்று அகன்றாரும் இல்லை அஃதுஇல்லார்
பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல்.''

அகன்றார் — அகலுதல்=பெருகுதல், மேன்மை அடைதல்.
பெருக்கத்தில்=செல்வ ஆக்க நிலையிலிருந்து.
தீர்ந்தார்=நீங்கினவர்.

அழுக்கு மனம் கொண்டவர்கள் உயர்வு அடைந்ததுமில்லை; நேர்மை மனம் கொண்டவர்கள் தமக்குள்ள ஆக்க நிலையினின்று நீங்கியது மில்லை.

## அழுக்காறாமை

### சுருக்கம்

161. ''ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்
தழுக்கா றிலாத இயல்பு.''

தன் நெஞ்சில் : மாசுள்ள (அழுக்கு) நெறி (ஆறு) புகாத இயல்பை ஒருவன் நெறியாகக் கொள்க.

16 . ''விழுப்பேற்றின் அஃதொப்ப தில்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின்.''

யார் மாட்டிலும் மன அழுக்கில்லாத தன்மையே ஒருவன் பெறக்கூடிய பேறுகளுள் தலைசிறந்தது.

163. ''அறன்ஆக்கம் வேண்டாதான் என்பான்
பிறன்ஆக்கம்
பேணா தழுக்கறுப் பான்.''

அறன் ஆகிய செல்வம் விரும்பியடைய இயலாதவன் பிறர் கடைப்பிடிக்க வேண்டிய அற வழியைக் காக்கவிடாமல் மாசு படிந்த நெறியில் செல்வான்.

164. ''அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து.''

இழுக்கான (தவறான) வழியில் (ஆற்றின்) சென்றால் குற்றம் (ஏதம்) உண்டாதலை (படுபாக்கு) அறிந்தவர் நெறி தவறிய செயல்களைச் செய்யார்.

165. ''அழுக்கா றுடையார்க் கதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடீன் பது.''

(மனத்துக்கண்) மாசுள்ள நெறியானது பகைவர் (ஒன்னார்) செய்யக்கூடியதைவிடப் பெருங்கேட்டினை விளைவிப்பது. ஆகவே, ஒருவன் கேடுறுவதற்கு நெஞ்சில் மாசுள்ள நெறியே போதும். (வேறு பகைவர் தேவையில்லை)

166. ''கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்.''

பிறர்க்குச் செய்யப்படும் நன்மையைக் கண்டு (பொறாமைப் பட்டு) மனத்தில் தவறாக நினைப்பவனது சுற்றத்தார் உண்ண உணவும், உடுக்க உடையுமின்றி வருந்துவர். (கொடுப்பது - பொருள் கொடுப்பது மட்டுமன்று, பொதுவாக நன்மை செய்வது என்றே கொள்க).

167. ''அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்.''

உள்ளத்தை நேர்வழியில் நிறுத்தாமல் கோணச்செய்து (அவ்வித்து) தவறான முறையில் ஒழுகுபவனைச் செல்வநிலை விட்டு நீங்கி வறுமை நிலைக்குக் கொண்டுபோய் விடும். (செய்யவள் - செல்வம்; தவ்வை - வறுமை) நேர்வழி செல்லாதவனுக்கு அருட்செல்வம் வரவே வராது. பொருட்செல்வம் வந்தாலும் நிலைக்காது.

168. ''அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்.''

அழுக்கு ஆறு ஆகிய மாசு படிந்த நெறி பெருந்தீமையாம், (ஒரு பாவி), இது அருட்திரு, பொருட்திரு அனைத்தையும் கெடுத்து இறுதியில் இன்னாவுலகம் என்னும் தீமையுள் கொண்டு போய்ச் சேர்த்துவிடும்.

169. ''அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்.''

நேர்மையற்ற நெஞ்சினன் சில சமயங்களில் பொருள் ஆக்கம் பெறுவதுண்டு; செம்மையான உள்ளத்தினன் ஆக்கமின்றித் துன்புறுதலுமுண்டு; (உலகில் இது நாம் காண்கிறோம்); இதன் காரணம் ஆயத்தக்கது. (ஆதிவினை, தன்வினை ஆகிய 'இருள் சேர் இருவினை'கள் விளைவால் உலகில் ஏற்பட்டிருக்கும் ஒருவிதத் 'தலை கீழான' நிலைமையே மேற்கூறியதன் காரணம்).

170. ''அழுக்கற் றகன்றாரும் இல்லையஃ தில்லார்
பெருக்கத்தில் தீர்ந்தாரும் இல்.''

மாசுள்ள மனத்தால் இறுதியில் நன்மை (அருள்பொருள் பெருக்கம்) அடைந்தவருமில்லை; மனத்துள் மாசிலன் ஆதலையுடையவன் தீமையினால் இறுதிவரை அப்பெருக்கத்தை அடையாமல் போனதுமில்லை.

# 18. வெஃகாமை

அழுக்காறாமையும் அதன் பின்னர் உரைக்கப்படும் வெஃகாமையும் தொடர்பு கொண்ட கருத்தினை விளக்குவது காண்கிறோம்.

"அழுக்காறாமையாவது, பிறர் செல்வம் கண்டு 'இவனுக்கு இப்பாக்கியம் வந்ததே' என்று சொல்லும் மன அழுக்கை விடுக" என்று கூறும் பரிதியாரின் உரை, "வெஃகாமையாவது, பிறர் வாழ்வு கண்டு 'இந்தப் பாக்கியம் நமக்கு ஆகப் பெற்றதில்லை' என்று **மனத்தில் எண்ணாமல் இருப்பதே** நன்று" என்கிறது.

**மணக்குடவர்** கூறும் உரைப்படி "அழுக்காறாமையாவது, பிறராக்கம் முதலாயின கண்டு பொறாமையால் வருகின்ற மனக் கோட்டத்தைச் செய்யாமையாகும். வெஃகாமையாவது பிறர் பொருளை விரும்பாமையாகும்."

வெஃகாமை என்பதற்குப் பரிமேலழகர் கூறும் உரை; "பிறர்க்குரிய பொருளை வெளவக் கருதாமை; பிறருடைமை கண்ட வழிப் பொறாமையே அன்றி அதனைத்தான் வெளவக் கருதுதலும் குற்றம் என்றற்கு இஃது அழுக்காறாமையின் பின் வைக்கப்பட்டது."

ஆகவே, அழுக்காறாமையாவது பிறர் உடைமை கண்டு பொறாமை கொள்ளாமை மட்டுமே. வெஃகாமையாவது பொறாமை மட்டுமன்றி அதனை அடைய வேண்டுமென விரும் பாமையுமாகும்.

ஆகவே, இரண்டும் தொடர்புடைய செயல்கள்; இரண்டும் மனத்தை மாசுறச் செய்பவையே. இக்கருத்துகள் இவ்வதி காரத்தில் காணப்படும்.

171. "நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்."

நடுவின்றி—நடுவு நிலைமையின்றி. நடுவு நிலைமைபற்றி முன்னரே விளக்கப்பட்டது.

நடுவு நிலை மீறிப் பிறர்பொருளை வெஃகுங்கால் குடி கெடு வதோடு பல குற்றங்களும் நிகழும். ஆகவே, **அறம்** இல்லா தொழியும்.

இக் கருத்தே அடுத்த குறளிலும் காண்கிறோம்.

172. "படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்."

நடுவுநிலைமை தவறுதலை அஞ்சி நாணுபவர், அத்தவறு தலால் உண்டாவது பயனேயாயினும், அது பழி விளைவிப்பதால் அதனைச் செய்யார்.

"என் சகோதரர்களே, மாட்சிமைமிக்க நம் ஆண்டவராகிய இயேசு கிறித்துவில் விசுவாசமுள்ள நீங்கள் மக்களின் தோற்றத்தைப் பார்த்து அவர்களை நடத்தாதீர்கள். நீங்கள் கூடியுள்ள இடத்தில், பொன் மோதிரமணிந்து பகட்டான உடை உடுத்திய ஒருவன் வருகிறான் என வைத்துக் கொள்வோம். அழுக்குக் கந்தையோடு ஏழை ஒருவனும் அங்கே வருகிறான். பகட்டாக உடுத்தியவனைப் பார்த்து, "ஐயா, தயவுசெய்து இங்கே அமருங்கள்" என்று கவனித்துக் கொள்கிறீர்கள். ஏழையிடமோ, "அடே, அங்கே நில்" என்கிறீர்கள்; அல்லது "தரையில் உட்கார்" என்கிறீர்கள். இப்படி உங்களுக்குள்ளே வேறுபாடு காட்டி, தவறான முறையில் தீர்ப்பிடுகிறீர்கள் இல்லையா?" (யாகப்பர். 2: 1—4).

"என் அன்புச் சகோதரர்களே! நான் சொல்வதைக் கேளுங்கள்: உலகினர் கண்ணுக்கு ஏழையாய் உள்ளவர்களைக் கடவுள் விசுவாசத்தில் செல்வமுடையவர்களாக்கவும், தம் மீது அன்பு செலுத்துபவர்களுக்கு வாக்களித்த அரசில் உரிமை தரவும் தேர்ந்துகொள்ளவில்லையா? நீங்களோ ஏழைகளை அவமதிக்கிறீர்கள். உங்களைக் கொடுமைப்படுத்துகிறவர்கள் யார்?" (யாகப்பர் 2: 5-6).

"என் சகோதரர்களே! தன்னிடம் விசுவாசம் உண்டு எனச் சொல்லுகிறவன், செயலில் அதைக் காட்டாவிட்டால் அதனால் பயன் என்ன? அந்த விசுவாசம் அவனை மீட்க இயலுமா? போதிய உடையோ அன்றாட உணவோ இல்லாத சகோதர

சகோதரி யாரேனும் இருந்தால், தேவையானது ஒன்றையும் கொடாமல் ஒருவன் அவர்களைப் பார்த்து "சுகமாய்ப் போய் வாருங்கள்; குளிர் காய்ந்து கொள்ளுங்கள்; பசியாற்றிக் கொள்ளுங்கள்" என்பானாகில் பயன் என்ன? விசுவாசமும் இதைப்போலவே செயலோடு கூடியதாய் இராவிட்டால் அது தன்னிலே உயிரற்றதாகும்." (யாகப்பர் 2: 14-17).

"கிறித்து நமக்காகத் தம் உயிரைக் கொடுத்தார். இதனால் அன்பு இன்னதென்று அறிந்தோம். ஆகவே, நாமும் நம்முடைய சகோதரர்களுக்காக நம் உயிரைக் கொடுக்க வேண்டும். இவ் வுலகச் செல்வங்களை உடையவன் ஒருவன் தன் சகோதரன் வறுமையுற்றிருப்பதைக் கண்டு மனமிரங்காவிடில், அவனுள் கடவுளன்பு நிலைத்திருக்கிறதென்று எவ்வாறு சொல்லவியலும்? அன்புக் குழந்தைகளே! நம் அன்பு சொல்லிலும் பேச்சிலும் இராமல் செயலில் விளங்கும் உண்மையான அன்பாய் இருக்கட்டும்." (1 அரு. 3: 16—18).

"சகோதர அன்பில் நிலைத்திருங்கள். சிறைப்பட்டுள்ள வர்களோடு நீங்களும் சிறைப்பட்டிருப்பது போல, அவர்களை நினைத்துக் கொள்ளுங்கள். துன்புறக் கூடிய உடல் உங்களுக்கும் உள்ளதால், துன்புறுத்தப்படுபவர்களை மறவாதீர்கள்." (எபிரே 13: 1—3).

"அனைத்திற்கும் மேலாக, ஒருவர்க்கொருவர் எப்போதும் அன்பு காட்டுங்கள்; ஏனெனில், அன்பு திரளான பாவங்களை அகற்றி விடும். முணுமுணுக்காமல் ஒருவரையொருவர் உபசரியுங்கள். உங்களுள் ஒவ்வொருவரும் தாம் பெற்ற வரத்திற்கு ஏற்றவாறு, கடவுளுடைய பலவகைப்பட்ட அருளின் சீரிய கண்காணிப்பாளர் என, கிடைத்த வரத்தைப் பிறர்க்குப் பணிபுரியப் பயன்படுத்துங்கள்." (இரா. 4:8—10).

173. "சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்."

சிறிதளவு, சிறிது நேரமே இன்பம் தருவது சிற்றின்பம், நிறைவான, முடிவற்ற இன்பம் பேரின்பம்.
அறத்துக்கு எதிராகச் செய்யப்படும் செயல்கள் சிற்றின்பத்தை வெஃகுவதாலேயே என்க.

176. "அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்
வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்."

வெஃகுதலால் பெருந்தீங்கு நிகழக்கூடும். பிறர் பொருளை வெஃகாமல், அருளாகிய பொருளையே வெஃகி, நல்லாற்றின் கண் நிற்பவனும், வெஃகுதல் உண்டாயின் தீயவற்றால் அழிவுறுவான்.

179. "அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறனறிந் தாங்கே திரு."

அறத்தை அறிந்துணர்ந்து வெஃகுதல் செய்யாதவரிடம், "இத்தகையவர்தாம் பொருளை அடையத் தகுதியுள்ளவர்" எனத் தானே செல்வம் வந்தடையும். ஏனெனில், வெஃகுதல் வளர வளர மனம் மாசடையும். அங்ஙனம் மாசடையாதவாறு தன்னைக் காத்துக்கொள்பவன்தான் பொருளை அடையத் தகுதியுள்ளவன். அவனே, பொருளால் மாசுறாமல் தன்னைக் காத்துக்கொள்பவன். ஆகவே, அவனிடம் பொருள் வந்து சேர்வதில் வியப்பில்லை. எங்ஙனம் இது நிகழுமெனில், இறைவன் அருளாலும் நிகழலாம்; பிறருடைய நட்பாலும் நிகழலாம். எதன் மீதும் அளவு மீறிய பற்றுக்கொள்ளாமல் இறைவன் மீதே — அவனது அருளாகிய பொருள் மீதே தன் எண்ணமெல்லாம் செலுத்துபவன் அவனது அருளை அடைந்து இன்புறத் தகுதியுள்ளவனாகிறான். இதைக் குறிப்பிட்டே கிறித்துவும் "முதன் முதல் இறைவனின் அருள் அரசையும் அவனுக்கு ஏற்புடையதையும் தேடுங்கள். எல்லாம் உங்களுக்குச் சேர்த்து அளிக்கப்படும்" என்றார். (மத். 6:33 காண்க).

"உள்ளவனுக்கு அளிக்கப்படும். அவன் நிறைவு பெறுவான். இல்லாதவனிடமிருந்து உள்ளதும் எடுக்கப்படும்," என்றும் கூறினார். அதாவது இறைவனையும் அவனது அருளையுமே நாடுபவனிடம் பொருட் பொருள் இல்லாவிடில் அவனுக்கு அளிக்கப்படும். பொருளை வெஃகுதலால் ஒருவன், தான் எல்லாம் அடைந்துள்ளதாக எண்ணுவானாயின் உள்ளதையும் இழக்க நேரிடலாம்." (லூக்கா 19:26)

# வெஃகாமை
## சுருக்கம்

171. "நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்."

நடுவுநிலைமை (தகுதி, நேர்மை) இல்லாமல் (முறை தவறி) விரும்பப்படும் பொருளால் (பொருள் தன்னிலே நல்லதே யாயினும், அதனால்) குடிகெடுவதோடு குற்றங்கள் பலவும் விளையும்.

172. "படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்."

நடுவுநிலைமை தவறுதலை அஞ்சி நாணுபவர், அத்தவறுதலால் உண்டாவது பயனேயாயினும், அது பழி விளைவிப்பதால் அதனைச் செய்யார்.

173. "சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்."

இம்மை இன்பமாகிய சிற்றின்பத்தை விரும்பி அறனுக்கு முரணான செயல்களை, மறுமைப் பேரின்பம் நாடுவோர், செய்ய மாட்டார்கள்.

174. "இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்."

ஐம்புலன்களின் போக்கை வென்றவராய் இழிவும் அற்பமும் நீங்கிய அறிவுக்காட்சியுடையவர் 'பொருள் இல்லையே' என்று பிறர் பொருளை விரும்பமாட்டார்கள்.

175. "அஃகி அகன்ற அறிவென்னாம் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்."

எவரைக் கண்டாலும் அவரது பொருளையடைய விரும்பி, பித்தம் பிடித்தவன்போல் செயல்புரியத் தொடங்கினால் அவனிடத்திலுள்ள பகுத்தறிவுக் கூர்மையால் பயன் யாது?

(பகுத்தறிவுள்ளவன் பித்தம் பிடித்தவன் போல் செயல் புரியான்).

176. ''அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.''

அருளாகிய பொருளை விரும்பி நல்வழியில் நிற்பவன், அற்பப் பொருளாகிய பொருளை விரும்பிப் பொல்லாத செயலில் ஈடுபடுவதால் கெட்டழிவான்.

177. ''வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன்.''

அளவு மீறிப் பொருளை விரும்புவதால் வரும் ஆக்கம் (செல்வம்) வேண்டா என்று நீக்குக. அத்தகைய பொருளைத் துய்க்கத் தொடங்கும்போது அதனால் விளையும் பயன், பெருமை தருவதாகாது.

178. ''அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள்.''

தன்னிடம் உள்ள செல்வம் குறைவுபடாமலிருக்க வழி யாதெனின், பிறர் கையில் உள்ள பொருளை விரும்பாதிருத்தலே யாம்.

179. ''அறன்அறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறன்அறிந்து ஆங்கே திரு.''

அறமுறை உணர்ந்து பிறர்பொருளை விரும்பாத நல்லறிவு உடையவர்களிடம், அவரது தகுதியறிந்து செல்வம் தானாகவே அவர்களைப்போய் அடையும்.

180. ''இறல்ஈனும் எண்ணாது வெஃகின் விறல்ஈனும்
வேண்டாமை என்னும் செருக்கு.''

நன்கு எண்ணிப் பாராமல் அளவுமீறிப் பொருளை விரும்பினால் அது இறுதியில் அழிவையே (இறல்) தரும். பிறர் பொருள் வேண்டா எனத் தன்மானத்தோடு (செருக்கு) வாழ்பவன் என்றேனும செல்வம் (விறல்) அடையாமல போகான்.

# 19. புறங்கூறாமை

181. ''அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது.''

வேறு அறச்செயல்களைச் செய்வதுமில்லை, வாயால் பேசுவதுமில்லை என்றாலும், நேரில் புகழ்வதும் பின்னால் இகழ்வதுமாகிய புறங்கூறுதல் இல்லை என்றால் நன்று.

182. ''அறன்அழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறன்அழீஇப் பொய்த்து நகை.''

அறமுறையைப் புறக்கணித்து (அழீஇ) அறத்துக்கு மாறான செயல்களைச் செய்வதைவிடத் தீமை பயப்பது யாதெனில் எதிரில் இல்லாத ஒருவனைப் (புறன்) பழித்துப்பேசி (அழீஇ) நேரில் காணும்போது பொய்யாகப் பேசி (பொய்த்து) மகிழ்ச்சி காட்டுதலாம். (நகை) - இதுவும் மிகைப்படக் கூறியது.

183. ''புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்
அறங்கூறும் ஆக்கம் தரும்.''

எதிரில் இல்லாதபோது இகழ்ந்துபேசி (புறங்கூறி) நேரில் காணும்போது பொய்யாக மகிழ்ச்சியை வெளிப்படுத்தி இங்ஙனம் வாழ்க்கை நடத்துவதைவிடச் சாவதே அறநூல் கூறும் ஆக்கத்தைத் தருவதாகும்.

184. ''கண்நின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க
முன்இன்று பின்நோக்காச் சொல்.''

கண்ணெதிரிலேயே நின்று (கண்நின்று) இரக்கமற்ற பார்வையோடு (கண்ணற) புண்படுத்தக்கூடிய சொற்களைச் சொன்னாலும் சொல்லலாம்; கண்ணெதிரே இல்லாதபோது (முன் இன்று) தான் சொல்லும் சொற்களால் பின்னர் விளையக் கூடிய தீமையை நோக்காமல் பேசுவதை ஒழிக.

185. ''அறம்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறம்-
சொல்லும்
புன்மையால் காணப் படும்.''

அறத்தை மதித்துக்கூறும் நெஞ்சினன் அல்லன் என்பது புறம்கூறும் அவனது அற்பகுணத்தால் வெளிப்படும்.

186. ''பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும்
திறன்தெரிந்து கூறப் படும்.''

கண் மறைவாக ஒருவனைப் பழிகூறுபவன், அங்ஙனம் செய்வதால் தனக்கு ஏற்படக்கூடிய தீமையை (பழியை) நன்குணரும் (உன்னும்) திறன் அற்றவன் எனக்கருதப் படுவான். அவ்வாறே பலராலும் கூறப்படுவான்.

187. ''பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர்.''

நகைமுகத்துடன் பேசி நட்பு உண்டாக்க வழியறியாதவர் மனப்பிளவுபடுத்தக்கூடிய சொற்கள் பேசி உறவினரையும் தம்மிடமிருந்து பிரித்து விடுவர்.

188. ''துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு.''

உறவினர் (துன்னியார்) குற்றத்தையும் பலரறியத் தூற்றும் இயல்புள்ளவர், உறவற்ற பகைவர்பால் என்ன தான் செய்யார்?

189. ''அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை.''

பிறர்மீது குறை கூறுவதையே எண்ணி இகழ்ச்சிக்குரிய சொற்களைப் பேசுபவனை, இவ்வுலகம் சுமையாகக் (பொறை) கருதி, அறத்தைக் காக்கும் பொருட்டுத் தாங்கிக்கொண்டிருக் கிறது என்போமா?

190. "ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு."

அயலார் செய்யும் குற்றத்தை (பன்முறை பெரிதுபடுத்திக்) காண்பதுபோல, தாம் செய்யும் குற்றத்தின் கனாகனத்தை உணர்ந்துகொண்டால், உலகினர்க்கு நிகழக்கூடிய எத்தீதும் நிகழாது. (அஃதாவது, பல தீமைகளைத் தவிர்க்கவியலும்).

# 20. பயனில சொல்லாமை

191. "பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரும் எள்ளப் படும்."

பலரும் கேட்டு வெறுப்படையச் செய்யும் பயனற்ற சொல் பேசுபவனை அனைவரும் இகழ்வர்.

192. "பயனில பல்லார்முன் சொல்லல் நயனில
நட்டார்கண் செய்தலின் தீது."

பயனில்லாதன பலர்முன் சொல்லுதல், நன்மை பயக்காத செயல்களை நண்பர்க்குச் செய்வதைவிடத் தீமையாகும்.

193. "நயனிலன் என்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கும் உரை."

பயனற்றதைப் பலபடப் பேசுவது, இவன் நன்மை எதுவும் இல்லாதவன் எனப் பறைசாற்றிவிடும்.

194. "நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொல் பல்லார் அகத்து."

பயன்படாத சொல், பண்பற்ற சொல் பலருடைய உள்ளங்களில் நன்மையோடு சாராததாய்க் கேட்பவர்களை நன்மையினின்று நீக்கிவிடும். அஃதாவது, தீயவர்களாக்கும்.

195. "சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை உடையார் சொலின்."

நற்பண்புள்ளவர்கள் பயனில்லாத சொற்களைப் பேசினால் சீர்மையும் சிறப்பும் நீங்கி விடும்.

196. "பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்
மக்கள் பதடி எனல்."

பயனில்லாத சொற்களைப் பெரிதும் விரும்புகின்றவனை மனிதப்பிறவி எனல் பொருந்தாது. மனிதருள் பதர் என்க.

197. "நயனில சொல்லினும் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று."

நன்மை பயப்பதைச் சொல்லாமல் வாளாவிருந்தாலும் தாழ்வில்லை. சான்றோர் பயனில்லாத சொல் பேசாமலிப்பதே மேல்.

198. "அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல்."

எது நற்பயன் தரும், எது தராது என்று ஆழ்ந்து ஆயும் அறிவு படைத்தவர்கள் அதிகப்பயன் தராத சொல்லைப் பேசார்.

199. "பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்தீர்ந்த
மாசறு காட்சி யவர்."

நன்மை தீமைபற்றிய மயக்கமில்லாமல் எதையும் மாசற்ற பார்வையுடன் பார்ப்பவர் பொருளற்ற பேச்சை மறந்தும் பேசார்.

200. "சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்."

வாய்திறந்து பேசுவதானால் பயனுள்ளதைப் பேசுக! பயனற்றதைப் பேசவேண்டா.

# 21. தீவினையச்சம்

## தீவினை என்னும் செருக்கு

இறைவன் தான் படைத்த மனிதனுக்குக் காட்ட விரும்பிய நட்பினை மனிதன் ஆர்வமுடன் ஏற்கவில்லை. அன்பினும் ஆர்வத்தால் இறைவன் மனிதனுடன் நட்புறவு கொள்ள விரும்பினான். அதை மனிதன் அதே ஆர்வத்துடன் ஏற்றுக் கொள்ளவில்லை.

இங்ஙனம் ஏற்காமற் போனது **செருக்கினாலேயே** என்கிறது விவிலியம். விளக்குவோம்:

தனக்குரிய பேரானந்தப் பெருஞ்செல்வத்தில் மனித இனத்தார்க்குப் பங்குதர இறைவன் விரும்பினான். ஆனால், அதை உடனே தந்துவிடவில்லை. இறைவனது பேரானந்தத்தில் பங்கு பெறுவது எத்துணை சிறப்பு! எத்துணை விரும்பத்தக்கது! என்பதை மனிதன் உணர்ந்த பின்னரே அதை அவனுக்குத் தர விரும்பினான் இறைவன்.

பெறுபவர் எம்முயற்சியும் செய்யாமல், பெரியதொரு நன்மையை யாரும் அவர் மீது திணிப்பதில்லை. அறிந்து விழைந்து செயல் புரிவது பகுத்தறிவுள்ள மக்கள் பண்பாதலால் மனிதனும் இறைவன் தனக்கு அளிக்க விரும்பிய பேரின்பத்தை மதித்து விரும்பிப் பெற்றுக்கொள்ள ஆர்வம் காட்ட வேண்டுமென எதிர்பார்த்ததில் வியப்பில்லை. இதனால்தான் இறைவன் மனித இனத்தின் ஆதித் தந்தைக்குப் பரிசோதனைக் கட்டளை ஒன்று தந்தார் என்கிறது விவிலியம். அவன் தர விரும்பிய பேரின்பத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது, அது மிகச் சிறியதொரு பரிசோதனையே. பல இன்பங்களை நுகரக்கூடிய வாய்ப்பினையளித்து, ஒரே ஒரு சிறு இன்பத்தை மட்டும் நுகரலாகாது*

* பலமரங்களின் இனிய கனிகளிடையே, ஒரே ஒரு மரத்தின் கனியை மட்டும் தொடலாகாது என்று கூறப்பட்டதன் உட்கருத்து இதுவே. எபிரேய மரபுப்படி கூறப்பட்டதொரு உருவகம் இது என்க.

என்றான். இறைவன் தான் தர விரும்பிய பேரின்பத்தை மனிதன் அடைய இச்சிறு 'முயற்சி'யேனும் தேவைப்பட்டது. எம் முயற்சியும் இன்றி அடையும் பெரியதொரு நன்மையை யாரும் அதிகம் மதிக்க மாட்டார்கள். ஏதோ ஒரு சிறு முயற்சியேனும் செய்து அடைந்தால் அதற்கு மதிப்புண்டு அன்றோ? ஆகவே தான், இறைவன் இத்தகையதொரு சிறு பரிசோதனைக்கு மனித இனத்தின் ஆதிப்பெற்றோரை உட்படுத்தினான்.

ஆனால், பரிசோதனையில் தோல்வியடைந்தனர். அஃதாவது, இறைவன் தர விரும்பிய பேரின்பத்தையும், அதைத் தர விரும்பியதில் அவன் மனிதன்பால் வெளிப்படுத்திய 'நண்பென்னும் நாடாச் சிறப்பையும்' தக்க முறையில் மதித்து வரவேற்கவில்லை. ஏன் புறக்கணித்தார்கள்? இறைவனுடன் நட்புறவு கொள்வதும் அவன் தர விரும்பிய பேரின்பத்தை ஏற்பதும் ஈடில்லாப் பெரும்பேறு எனக் கருதாமல் தாம் விரும்பிய சிறு இன்பத்தையே மதித்து, அதையே நுகர முனைந்தது எத்துணை இழுக்கு, நன்மையே வடிவினனான இறைவனுக்கு! இத்தகைய இழுக்கினைத் தன்னைப் படைத்த இறைவனுக்கே கொணர்ந்தது எத்துணை செருக்கு! எத்துணை தீவினை இது! ஆகவே, "தீவினை என்னும் செருக்கு" என்பது முற்றிலும் பொருந்தும்.

கிறித்துவ மறைநூல் வரலாற்றினை ஆய்ந்தால் இந்தச் 'செருக்கு' தெளிவாகப் புலப்படுகிறது. உருவகமாகச் சொல்லப் படுவதன் உட்கருத்தைப் பின்வருமாறு கூறலாம்:

**இறைவன் :** "உனக்கு நான் தந்துள்ள எல்லா இன்பங் களையும் நீ நுகரலாம். ஒன்றே ஒன்றை மட்டும் நுகராதே."

[ இவ்வின்ப வனத்திலுள்ள எல்லா மரக்கனிகளையும் நீ உண்ணலாம். ஒன்றன் கனி மட்டும் உண்ணாதே!]

**பேய் :** (ஆதித்தாயிடம் வந்து) "எல்லா இன்பங்களையும் நுகரலாம்; ஒன்றை மட்டும் நுகரலாகாது என்று ஏன் கடவுள் தடுத்தார்?"

**பெண் :** அதை நுகர்ந்தால் சாவு என்னும் தண்டனைக்கு ஆளாவோம் எனக் கடவுள் எச்சரித்திருக்கிறார்.

**பேய்:** சாகவே மாட்டீர்கள்; அதை நுகர்ந்ததும் உங்கள் கண்கள் திறக்கப்படும்; தெய்வங்கள் போல் ஆவீர்கள். இது கடவுளுக்குத் தெரியும்!

இதை நம்பி விட்டாள் பெண்; கணவனையும் நம்பச் செய்து விட்டாள்.

'இது கடவுளுக்குத் தெரியும்' என்று பேய் சொன்னபோது, "கடவுள் வஞ்சகமாக இப்படிச் செய்திருக்கிறார். நீங்கள் தெய்வங்களைப் போல் ஆகாதபடி இப்படி உங்களை ஏமாற்றி யிருக்கிறார்" என்ற பொருளில் பேசியது பேய். இது இறைவனுக்கு எத்துணை இழுக்கு! தம் பேரின்பத்தில் பங்கு தர விரும்பித் தன் நட்புறவை அளிக்க முன்வந்த பரம்பொருளான இறைவனுக்கு இஃது எத்துணை அவமானம்!

மேலும், இறைவனது நட்புறவைப் புறக்கணித்தே, இறைவனைப் போல் ஆகவேண்டும் என்று விரும்பியது எத்துணை அகந்தை!

இதுவே தீவினை - 'தீவினையென்னும் செருக்கு' என்கிறது விவிலியம்.

ஆதிப்பெற்றோர் 'தெய்வங்களைப் போல் ஆக வேண்டும்' என்று விரும்பித் தேடியது 'பொருள்' அற்ற புகழேயன்றோ? கடவுளுக்குப் புறம்பே உண்மையான 'புகழ்' கிடைக்குமென அவர்கள் கருதியது 'பொருளல்லவற்றைப் பொருள் என்று உணரும் மருளால்தான்." மருள் நீங்கிய மாசறு காட்சி அவர்களுக்கு இல்லாது போயிற்று. ஆகவேதான் 'இறைவன் பொருள்சேர் புகழை' அவர்கள் புரியாமல் போய்விட்டனர். அஃதாவது, தங்களுக்கு இறைவன் தர விருப்பிய பேரின்பத்தின் மாண்பை உணர்ந்து போற்றாது போய் விட்டனர். அவனது நட்புறவினால் வரும் மெய்ப்புகழை இழந்தனர். இதுவே அத்தீவினை எனப்படுவது. இதுவே 'இருள்சேர் இருவினை' களுள் ஒன்று என்க.

இந்த ஆதித்தீவினை தலைமுறை தலைமுறையாக எல்லா மனிதர்களையும் தாக்கி வருகிறது என்கிறது விவிலியம். ஆதிப் பெற்றோர் செய்த தீவினையால் ஏற்பட்ட ஓர் அவல நிலையே

இது. அஃதாவது, இறைவன் தர விரும்பிய 'நண்பென்னும் நாடாச் சிறப்பை' இழந்து விட்ட நிலை. இந்த 'நண்பென்னும் நாடாச்சிறப்பினால்', மனித இனம் எல்லாம் மிக உயர்ந்ததொரு நிலையிலிருக்கும் பேற்றைப் பெற இருந்தது. அஃதாவது, முறை கெட்ட இச்சையின்மை, தெளிவான கூர்அறிவு, 'உடற்றும் பசி' யின்மை, சலிப்புறச் செய்யும் உழைப்பற்ற பிழைப்பு, நோய்களில்லா அரிய நிலை முதலிய பேறுகள் பெற இருந்தது; சாவு என்னும் கொடிய நிகழ்ச்சியும் இல்லாத மேலான நிலை இருந்தது. இவையெல்லாம் இறைவன் தந்த அரிய பேறுகளா யிருந்தன.

ஒவ்வொரு தலைமுறைக்கும் அந்தப் பேறுகள் எல்லாம் உரியனவாக வேண்டும் என்று ஏற்பாடு செய்தான் இறைவன். தலைமுறைகளைத் தொடங்கும் ஆதிபெற்றோர், அந்தச் சிறப்பை ஏற்று இறைவனின் நட்பில் திளைத்தால்தான் அந்த நட்பு நிலை, அருள் நிலை, அவர்களுக்குப் பிறக்கும் எல்லாத் தலைமுறையினர்க்கும் உரியதாகும் என்றருளினான் இறைவன். ஆதிப்பெற்றோரோ அதை இழந்து விட்டனர். இந்த இழந்த நிலையே ஆதிவினை எனப்படுகிறது. இதன் விளைவாக மனிதனுடைய உள்ளத்தில் தோன்றியது மருள் நிலை; அல்லது அருளற்ற நிலை. இதுவே 'இருள்சேர் இருவினைகளுள்' ஒன்று என்க. அன்பென்னும் நாடாச் சிறப்பை அழிப்பதே இத் தீவினை என்னும் செருக்கு என்றறிக.

## தீவினை அச்சம்

தீவினையாகிய பாவம் செய்ய அஞ்சுதல்

### சுருக்கம்

201. "தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீவினை என்னும் செருக்கு."

தீவினை என்பது இறைவனது ஆணைக்கு, மனச்சாட்சி என்னும் அவனது குரலுக்கு அடங்காமல் ஆணவத்தோடு செய்யப்படுவது. இத்தகைய செருக்கை தீயநாட்டமுடையவர் அஞ்ச மாட்டார்கள்; விழுமிய மனப்பான்மையுள்ளவர் அஞ்சுவர். (தீவினை என்பது செருக்கேயாகும்).

202. "தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும்."

தீயசெயல்கள் இறுதியில் தீமையையே பயக்கும். ஆகவே அவை சுட்டெரிக்கும் தீயைவிட அஞ்சவேண்டியவை.

203. ''அறிவினுள் எல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல்.''

தம்மைத் துன்புறுத்துவோர்க்கும் தீமை செய்யாமல் விடுவது ஒருவன் அடையக்கூடிய அறிவினுள் தலைசிறந்தது. (உண்மையான இறையருள் அறிவு இல்லாதவனே பிறர்க்குத் தீமை செய்வான்).

204. ''மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு.''

மறந்தும் பிறர்க்குக் கேடு விளைவிக்க எண்ணவேண்டா. எண்ணினால் அறவடிவினனான இறைவனே தண்டனை தருவான்.

205. ''இலன்என்று தீயவை செய்யற்க செய்யின்
இலனாகும் மற்றும் பெயர்த்து.''

வாழ்க்கை நலன் இல்லையே என, தீய முசயல்களால் நலன் விளையும் என்றெண்ணித் தீய செயல் புரியாதே; புரிந்தால், நலன் விளைந்தது போல் காணப்படினும் மீண்டும் தீமைக்குள்ளாவாய்.

206. ''தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால
தன்னை அடல்வேண்டா தான்.''

தனக்குத் துன்பம் தருவதை எப்படி ஒருவன் விரும்புவதில்லையோ, அப்படியே பிறர்க்குத் துன்பம் தருவதைத் தானும் பிறர்க்குச் செய்யக்கூடாது.

207. ''எனைப்பகை யுற்றாரும் உய்வர் வினைப்பகை
வீயாது பின்சென்று அடும்.''

பிறரது பகைமைக்கு ஆளானவர் எவ்வாறேனும் உய்வு பெறுவர். ஆனால், தான் செய்த தீவினையின் காரணமாக விளைந்த பகை ஒருவனை விடாது தொடர்ந்து துன்புறுத்தும்.

208. "தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடிஉறைந் தற்று."

ஒருவனது நிழல் அவன் எங்குச் சென்றாலும் அவனைத் தொடர்ந்து சென்றுகொண்டேயிருக்கும். அங்ஙனமே தீமை செய்தால் அது, நிழல்போல் அவனைவிடாமல் தொடரும்.

209. "தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்."

தனக்கு எப்போதும் நன்மை நேர வேண்டுமென்று ஒருவன் விரும்பினால்-தன்மீது தனக்கு அன்பு இருந்தால், எத்தகைய சிறு தீமையையும் செய்தலாகாது.

210. "அருங்கேடன் என்பது அறிக மருங்கோடித்
தீவினை செய்யான் எனின்."

(அன்பு செய்வது போல்) ஒருவனைச் சார்ந்து இறுதியில் அவனுக்குத் தீமை செய்தால், பெருங்கேட்டுக்குள்ளாவான் என்றறிக.

# 22. ஒப்புரவு அறிதல்

'ஒப்புரவு' என்னும் சொல்லுக்கு அறிஞர்கள் கூறும் பொருளும் கருத்தும் என்னவென முதற்கண் ஆராய்வோம்.

**பரிமேலழகர் : உலக நடையினை** அறிந்து செய்தலே ஒப்புரவு. உலகநடை வேதநடை போல அறநூல்களுள் கூறப் படுவதன்றித் **தாமே அறிந்து** செய்யும் தன்மையாதலின் 'ஒப்புரவு அறிதல்' என்றார்.

**மணக்குடவர் :** ஒப்புரவறிதலாவது, இல்லென **இரந்து வந்தார் யாவர்க்கும் வரையாது கொடுக்கும் ஆற்றல்** இலரெனினும், தம் **அளவிற்கும் தம்வருவாய்** அளவிற்கும் ஏற்கத் தக்கார்க்குத் தக்கன அறிந்து கொடுத்தல்.

**பரிதியார் :** ஒப்புரவறிதலாவது, ஒருவர்க்குச் செய்யும் ஒப்புரவு அறிய வேண்டும் என்றவாறு.

**கா. சுப்பிரமணியப்பிள்ளை :** ஒப்புரவு என்பது தம்மைச் சார்ந்த பிறரைத் தம்மோடு ஒத்த நன்னிலை அடையும் படி செய்தல். அவருடைய குறைகளை உணர்ந்து அவற்றை நீக்குவதற்கு வழியறிதல் ஒப்புரவு எனப்படும். தம்முடைய குலத்தினருக்கும் நாட்டினருக்கும் இடர் வந்தபோது உதவுதல் ஒப்புரவு என்க.

**புலவர் குழந்தை :** ஒப்புரவு — உலகநடை, ஒப்புரவு அறிதல் — உலகம் ஒழுங்காக நடைபெறும் வழியை அறிதல். ஒழுங்காக நடைபெறுதலாவது, மக்கள் எல்லோரும் உண்டு, உடுத்து ஒழுங்காக வாழ்தல். அவ்வாறு வாழும்படி செய்தலே ஒப்புரவு செய்தல் ஆகும். அஃதாவது உலக வாழ்வைச் சமன் செய்தல்; ஒப்புரவு — சமன். ஒப்புரவு செய்தல்—சமன் செய்தல். விதைத்த நிலத்தில் பாத்தி கட்டுவோர், தண்ணீர் சமனாகப் பாயும் பொருட்டு மேட்டை வெட்டிப் பள்ளத்தில் போட்டுச் சமன் செய்வது ஒப்புரவு செய்தல் எனப்படும். அவ்வாறே உள்ளவர் இல்லார்க்கு உதவி, உலக வாழ்வைச் சமன் செய்வது ஒப்புரவு

செய்தலாகும். அவ்வாறு உலக நடையைச் சமன் செய்வது ஒப்புரவு செய்தல் ஆகும். 'உடையோர்' கடன் இது என்பதை அறிதல் - ஒப்புரவறிதல் ஆகும். இல்லார்க்குக் கொடுத்தல் உள்ளார் கடன் என்பதை உணர்ந்து கொடுத்தல் ஒப்புரவு அறிதல் - ஒப்புரவு செய்தலாகும்.

**தேவநேயன் :** அஃதாவது, இல்லறத்தாருட் பெருஞ் செல்வர், செல்வருள் உயர்ந்தோரான வள்ளல்களைப் பின்பற்றி யொழுகுதலின்கண், 'வளவனாயினும் அளவறிந்தளித்துண்' என்னும் நெறிமுறைப்படி தத்தம் அளவறிந்து அதற்கேற்ப நடந்து கொள்ளுதல். உயர்ந்தோரான வள்ளல்களையொத் தொழுகுதலும் அவரவர் செல்வத்தின் அளவறிதலும் பற்றி ஒப்புரவறிதல் எனப்பட்டது. இது பெருஞ் செல்வர்க்குரிய உலக நடையாம்.

**சாமி சிதம்பரனார் :** உலகப் போக்கறிந்து வாழ்வது.

**புலவர் மு. கோவிந்தசாமி (நயவுரை) :** அருள், அன்பு போன்றன ஒப்புரவும் ஈகையும். ஒப்புரவு பிற நாட்டார்க்கும், பிற உயிர்க்கும் எவ்வகையாலும் வரையின்றிச் செய்வது (பரந்தது). ஈகை பெரிதும் தன்னுயிர்க்கே உணவால் உதவுவது.

சுருங்கக் கூறின்,

1) உலக நடையினைத் தாமே அறிந்து செயலாற்றுதல்.

2) தம் அளவிற்கும் வருவாய்க்கும் ஏற்பப் பிறர்க்குப் பொருள் உதவி புரிதல்.

3) தம்மைச் சார்ந்த பிறரைத் தம்மோடு ஒத்த நன்னிலை அடையும்படி செய்தல்.

4) தம் குலத்தினர்க்கும் நாட்டினர்க்கும் இடர் வரும்போது உதவுதல்.

5) உள்ளவர் இல்லார்க்கு உதவி உலக வாழ்வைச் சமன் செய்வது.

6) தத்தம் அளவறிந்து அதற்கேற்ப நடந்து கொள்ளுதல்.

7) உலகப் போக்கு அறிந்து வாழ்வது.

8) பிறநாட்டார்க்கும் பிறவுயிர்க்கும் எவ்வகையாலும் வரையின்றிச் செய்வது.

என்னும் கருத்துகளே 'ஒப்புரவு' என்னும் சொல்லுக்கு அறிஞர் கூறும் பொருள் எனத் தோன்றுகின்றது.

ஆனால், உள்ளவர் இல்லார்க்கு உதவி புரிதல் என்னும் கருத்து 'ஈகை' என்னும் அடுத்த அதிகாரத்தில் கூறப்படுவதால், 'ஒப்புரவு' என்னும் இந்த அதிகாரத்திலும் வள்ளுவர் கூறினார் என்பது பொருந்தாது.

உலகநடையை அறிந்து ஒழுகுதல், உலகப்போக்கு அறிந்து வாழ்வது என்னும் கருத்துகளும் அத்துணை சிறப்பாகத் தோன்றவில்லை. உலக நடையும் போக்கும் பல விதங்களில் இழுக்குடையனவாகவே காணப்படுவதால், அது சான்றோர்க்கு ஏற்ற பண்பு என்பதற்கில்லை. ஆகவே, 'ஒப்புரவு' என்னும் சொல்லுக்கு வேறு பொருள் இருக்க வேண்டும்.

தீவினை அச்சத்திற்குப் பின்னர் 'ஒப்புரவு' உள்ளது கவனித்தற்பாலது. இவ் இல்லற இயலில் அற வாழ்க்கையைச் சார்ந்த அடிப்படை உண்மைகள் விளக்கப்படுவது தெளிவு. இவ்வுண்மைகள் இல்லறத்துக்கும் துறவறத்துக்கும் பொது வானவை என்பதும் தெளிவு.

ஆகவே, 'அன்பின் வழியது உயிர்நிலை' என்று அன்பின் இலக்கணத்தைக் கூறிய பின்னர், அவ்வன்பை நிலைநாட்டு பவை, எவை என விளக்குகின்றார் ஆசிரியர்.

விருந்தோம்பல், இனியவை கூறல், செய்ந்நன்றியறிதல், நடுவுநிலைமை, அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, அழுக்காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பயனில சொல்லாமை என்னும் அதிகாரங்களின் அடிப்படைக் கருத்துகள் பல விளக்கப்படுகின்றன. இல்லறவியலாதலின் 'பிற னில் விழையாமை' என்னும் அதிகாரமும் உள்ளது.

இவற்றைக் கூறியபின், அன்பின் வழியதான உயிர் நிலையைச் சீர்குலைப்பது 'தீவினை'யே என்பதால், அதற்கு

அஞ்ச வேண்டும் என அறிவுறுத்த 'தீவினை அச்சம்' என்னும் அதிகாரம் உள்ளது.

நன்றியின்மை, நடுவுநிலையின்மை, அடக்கமின்மை, ஒழுக்கமின்மை, பிறனில் விழைதல், அழுக்காறு, வெஃகுதல், புறங்கூறுதல் இவையெல்லாம் தீவினைகள் ஆதலின், இவற்றிற்கு அஞ்சுதல் வேண்டும் என்கிறார் வள்ளுவர்.

ஏன் அஞ்ச வேண்டும் என்பதற்குக் காரணங்கள் கூறுகிறார்.

1) தீவினை என்பது 'செருக்கு'. ஆகவே, விழுமியார் அதற்கு அஞ்சவேண்டும் என்கிறார்.

''தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்
தீவினை என்னும் செருக்கு.'' (201)

விழுப்பம் தரலான் ஒழுக்கத்தை ஒருவன் உயிரைவிட அதிகமாக மதித்து ஓம்புதல் வேண்டும். ('ஓம்புதல்' என்னும் சொல்லின் ஆழ்ந்த பொருளை 'விருந்தோம்பல்' பகுதியில் காண்க). இவ்வொழுக்கத்திற்கு மாறான தீவினை இருளில் சேர்த்து விடும்.

2) தீவினை என்பது 'செருக்கு'. ஆகவே, அது 'அடங்காமை' ஆகும். அடங்காமையோ ஆரிருள் உய்த்து விடும்.

'இருள்சேர் இருவினை' களுள் தீவினை ஒன்று என்பது பற்றிக் கருத்து வேறுபாடு இல்லையாதலின், தீவினை, இருள் சேர்த்துவிடும் என்பதில் ஐயமிருக்க இடமில்லை. இந்த 'இருள்' என்பது மருள், மயக்கம் என்பது மட்டுமன்று, 'இருள் சேர்ந்த இன்னா உலகமே' என்க. தீவினையாகிய இருள் சேர்ந்த நெஞ்சில், அருள் புகாதாகையால், அத்தகையோர் அருள் இல்லா, அஃதாவது இருள் சேர்ந்த இன்னா உலகம் புக வேண்டியது முறையேயன்றோ? ஆகவே,

''நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்.''* (335)

என்கிறார்.

---

* ஆகவே, 'இருள்சேர் இருவினை' களுள் 'நல்வினை' ஒன்று அன்று என்பது தெளிவு.

ஆகவே, மேலுலகம் என்னும் **இன்னுலகம்** புகுமாறு ஒருவன் இருள் சேர்க்கும் தீவினையைத் தவிர்த்தாக வேண்டும் என்பது தெளிவு. மாறாக, 'அருள்சேர்' அல்லது 'ஒளிசேர்' நல்வினையைச் செய்தல் வேண்டும். அவ்வொளிசேர் நல்வினை யாவது 'இறைவன் **பொருள்சேர்** புகழ் புரித'லேயாம்.

'பொருள் அல்லவற்றைப் பொருள்' என்று மருளடைந்து மனிதன் எங்கெங்கோ தேடுகிறான் தன் மன நிறைவை' ஒன்றுக்கும் பயன்படாத காரியங்களைப் பெரிதாக மதித்து, அவற்றையே உண்மைப் பொருளாக எண்ணி, மதிமயங்கி ஏமாந்து போகிறான். பணம், செல்வாக்கு, சிற்றின்பம் இவற் றையே பொருளாக எண்ணித் தேடுகிறான்.

"சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்." (173)

என்பதை மறந்து இறைவனின் பொருள்சேர் புகழ் தரும் பேரின்பத்தை முழுமூச்சுடன் நாடுவதற்கு மாறாகப் பணம், மதிப்பு, பேர், புகழ், பால் இன்பம் ஆகிய சிற்றின்பங்களை நாடித் தன் வாழ்க்கையைப் பாழ்படுத்திக் கொள்கிறான். அருள்ஒளி சேர் இன்னுலகம் சேர்க்கும் நல்வினை செய்யாது, இருள்சேர் இன்னா உலகம் புகுவோமே என்னும் அச்சமின்றி வாழ்க்கை நடத்துகிறான். அதன் பின்னர் நிகழ்வதென்ன? புகழ் புரிவதற்கு மாறாக, தீவினை புரிந்த பின்னர், ஒருவன் என்ன செய்வது? தீவினையிலேயே மாள்வதா? அத்தீவினையின் விளைவைப் போக்கிவிட வழியேதும் இல்லையா? உண்டு என்கிறார். அதுவே 'நாணுடைமை' என்பதாகும். (தனி அதிகாரத்தில் காண்க).

இந்நாணுடைமையால் இறைவனோடு ஒப்புரவாக இயலும் என்னும் கருத்தும் வள்ளுவரது படிப்பினையாகும். ஆகவே, **ஒப்புரவு** என்னும் அதிகாரத்தை இக்கண்ணோட்டத்தில் ஆய்வோம்.

**ஒப்புரவு- சமன் செய்தல்.**

'ஒப்புரவு' என்னும் நன்மை இவ்வுலகைச் சார்ந்ததொன்று அன்று என்னும் கருத்தை வள்ளுவர் மிக அழுத்தமாக,

"புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற." (213)

என்னும் குறளில் குறிப்பிடுகிறார்.

இந்த ஒப்புரவிலும் மேலான நன்மையை இவ்வுலகிலும் பெற வியலாது; மேலுலகிலும் பெறவியலாது என்கிறார். அத்துணை மேலான நன்மையாயின், பொருள் இல்லார்க்கு வழங்குதல், உலக நடையறிந்து ஒழுகுதல் முதலிய கருத்துகள் எல்லாம் சற்றும் பொருந்தாமை காண்க.

மேலுலகிலும் கிடைக்காத நன்மை எனின், இறைவனோடு தொடர்புகொண்ட நன்மையாகத்தான் இருக்கவியலும். அந் நன்மை மேலுலகத்துப் பேரின்பமே என்க. ஆனால், ஈண்டுக் கூறப்படுவது 'ஒப்புரவு' ஆகும். எப்பொருளில் இந்த ஒப்புரவு மேலுலகிலும் இவ்வுலகிலும் பெறலரிது என்று சொல்லவியலும்? இறைவனின் பேரின்பமே அனைத்து நன்மையினும் உயர்ந்தது எனின், அவன் தரவிரும்பும் அப்பேரின்பத்தைப் பெற்றுக்கொள்ள விரும்புவதும் மிக உயர்ந்த நன்மையேயன்றோ? அங்ஙனம் விரும்பி ஏற்காமையே இருள் சேர் வினை எனப்பட்டது. மனிதன் தன் பொருள் சேர் புகழ் புரிய வேண்டுமென்னும் அதுவே அவனுக்கு உண்மையான இன்பத்தைக் கொணரவியலும் என்றும் இறைவன் விரும்பியது, அக்குறட்பாவில் கூறப்படும் கருத்தேயன்றோ? அதைத் தர விரும்பிய இறைவனின் நட்பையும் அன்பையும் ஏற்காமைக்கு **நாணி** அதை ஏற்க முன் வருவதும் மிக உயர்ந்த நன்மையேயன்றோ? இறைவனின் அன்புறவினும் மேலான நன்மை மேலுலகிலும் இல்லை; இவ்வுலகிலும் இல்லையன்றோ?

இந்தக் கருத்தை **ஒப்புரவு** என்னும் சொல் எங்ஙனம் உணர்த்துகிறது? 'ஒப்புரவு' என்னும் சொல்லுக்குச் 'சமன்' என்னும் பொருள் உண்டு. "விதைத்த நிலத்தில் பாத்தி கட்டுவோர், தண்ணீர் சமனாகப் பாயும் பொருட்டு, மேட்டை வெட்டிப் பள்ளத்தில் போட்டுச் சமன் செய்வது ஒப்புரவு செய்தல் எனப்படும்." (புலவர் குழந்தை உரை).

இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையே இறைவனே ஏற்படுத்த விரும்பிய அன்புறவைப் பற்றிய இலக்கணத்தை

ஆய்ந்து பார்த்தால், 'சமன் செய்தல்' என்னும் இந்த 'ஒப்புரவு' நன்கு புலனாகிறது.

இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையே அளவிலாத் தொலைவு இருந்தேயாக வேண்டும். மனிதனைவிட இறைவன் அளவிட முடியா மேன்மை கொண்டவன்; இறைவன் மிக மிக உயர்ந்தவன். மனிதன் மிகமிகத் தாழ்ந்தவன். இந்நிலையில், இறைவன் மனிதனிடம் அன்புகொண்டு நட்புறவு நிறுவ முன் வருகின்றான்.

இனி, நண்பர்களுக்கிடையில் ஏற்றத்தாழ்வுகள் இருத்தலாகாது. உண்மையான நண்பன் தாழ்வுற்ற நிலையில் உள்ள தன் நண்பனை உயர்த்திவிட முழு மூச்சுடன் முயல்வான். நட்பின் தன்மையே அப்படி. இறைவனும் இந்த முறையில்-தான் செயலாற்றுகின்றான். தனக்கும் தான் படைத்த மனிதனுக்குமிடையே உள்ள அளவிடவியலாத தூரத்தைக் குறைத்து ஓரளவு சமத்துவத்தை உண்டாக்க விரும்புகின்றான். தன்பேரின்பத்தில் பங்கு பெறுமாறு அவனை அழைத்ததன் கருத்து இதுவே. அழைத்த பின்னர் அவன் 'தீவினையென்னும் செருக்'கினால் இறைவன் உண்டாக்க விரும்பிய நட்புறவைக் கெடுத்துக் கொள்கிறான். கெடுத்துக் கொண்ட பின்னரும் இறைவன் மீண்டும் அந்நட்புறவை ஏற்படுத்த விரும்புகின்றான்.

உயர்ந்த இடத்தில் உள்ள தண்ணீர் தாழ்ந்த இடத்துக்கு இயல்பாகவே பாய்வதுபோல், இறைவனின் அன்பும் அதன் குழவியாகிய அருளும் பெருவெள்ளமெனத் தாழ்வுற்ற மனிதனின் உள்ளத்தில் பாய்கின்றன. அந்த அன்பையும் அருளையும் இழந்து மிகமிக இழிந்த நிலைக்கு வீழ்ச்சியுற்ற மனிதனை மீண்டும் உயர்நிலைக்கு உயர்த்துகின்றான் இறைவன். ஏன் இங்ஙனம் செய்கிறான்? அதுவே அன்பின் பண்பு; நட்புறவின் தன்மை. இதுதான் இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையே நிகழ்ந்த ஒப்புரவு என்க. அஃதாவது, சமன் செய்யப்பட்ட நிலையாகும்.

ஆனால், இது முற்றிலும் சமன் ஆன நிலை என்பதற்கில்லை.

மேட்டையும் பள்ளத்தையும் சமனாக்க முடியும். இரண்டும் அளவுள்ள முறையில் சமனின்றி இருக்கின்றன. இறைவனும் மனிதனுமோவெனில், அளவற்ற முறையில் சமனின்றி இருக்கின்றனர். அஃதாவது, இறைவன் மனிதனைவிட அளவிடவியலாத முறையில் உயர்ந்தவர். மனிதனை எந்த அளவுக்கு உயர்த்தினாலும் அவன் இறைவனுக்கு இணையான நிலைக்கு வந்துவிட இயலாது. அங்ஙனம் வந்தால், அளவில்லாத இறைவன் மனிதனைப் போல் அறிவுள்ளவனானான் என்றும், அளவுக்குட்பட்ட மனிதன் அளவுக்குட்படவியலாத இறைவனானான் என்றும் ஆகிவிடும். இது முற்றிலும் விகற்பம். ஆகவே, மனிதனை இறைவன் எந்த அளவுக்கு உயர்த்த முடியுமோ அந்த அளவுக்கு உயர்த்துகின்றான் என்பதே பொருள். படைப்புண்ட பொருள் எந்த அளவுக்கு உயர்த்தப் பட முடியுமோ அந்த அளவுக்கு உயர்த்தப்பட்டதால், ஓரளவு சமநிலை உண்டாயிற்று என்பதில் தவறில்லை. இதுவே ஒப்புரவு நிலை என்க.

**இத்தகைய நிலையை இறைவன் எற்படுத்தியதாகக் கூறும் கொள்கை யாருடையது?**

(பிற்சேர்க்கையில் காண்க).

இந்த அளவுக்கு இறைவன் தனக்குச் செய்த நன்றிக்கு எந்தக் கைம்மாறும் செய்யவியலாத நிலையில் மனிதன் உள்ளான் என்பதையே,

> ''கைம்மாறு வேண்டாக் கடப்பாடு மாரிமாட்டு
> என்ஆற்றும் கொல்லோ உலகு.'' (211)

என்னும் முதற்குறள் குறிப்பிடுகிறது.

இறைவனுக்கு மனிதனால் எந்நன்மையும் இல்லை. தன்னிலேயே எல்லா நிறைவும் கொண்டுள்ள இறைவனுக்கு மனிதன் எந்த நன்மையும் ஆற்ற இயலாதவனாய் உள்ளான். எனினும், இறைவன் மனிதனுக்கு இந்த உயர்ந்த நன்மையைத் தர விரும்புகிறான். இது 'கைம்மாறு வேண்டா கடப்பாடு' என்பதில் ஐயமென்ன?

இறைவன் கைம்மாறு கருதாமல் செயலாற்றுவது மட்டு மன்று; மனிதன் இறைவனுக்கு ஏதேனும் கைம்மாறு செய்ய

விரும்பினால்கூட, செய்வதற்குத் தன்னிடம் ஒன்றுமில்லை எனினும், தான் படைத்த படைப்புகளுக்கு இறைவன் தன்னுள் இருக்கும் அளவில்லாத நன்மையாகிய பேரின்பத்தில், பங்கு தருவதைத் தன் கடமை போலவே எண்ணிச் செயல் புரிவது காண்கிறோம். 'கைம்மாறு வேண்டா கடப்பாடு' என்றது இதனால்தான்.

இங்ஙனம் செயல் புரிவதைத் தன் கடப்பாடாகக் கருதிச் செயல் புரியும் 'மாரிமாட்டு' அஃதாவது மாரிபோல் அருள் பொழியும் இறைவன்பால் உலகம் 'என் ஆற்றும்?' அவன் பொழியும் அருள்மாரியை விரும்பி ஏற்பது மட்டுமே அவன் செய்யக்கூடியது என்றவாறு.

இந்த ஒப்புரவு நன்மையைத் 'தாளாற்றித் தந்த பொருள்' என்கிறது அடுத்த குறள்.

> "தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
> வேளாண்மை செய்தற் பொருட்டு." (212)

இக்குறளில், 'தாளாற்றித் தந்த பொருள்' எது? யார் தாளாற்றித் தந்தது என்னும் கருத்துகளை உய்த்துணரல் தேவைப்படுகிறது. 'முயன்று முயன்று ஈட்டிய செல்வம்' என்னும் கருத்தில்தான் அறிஞர் பெரும்பாலும் பொருள் கூறுகின்றனர்.

ஈண்டுத் 'தந்த' என்னும் சொல்லுக்கு 'ஈட்டிய' என்று பொருள் கூறுவது பொருத்தமாகத் தோன்றவில்லை. 'யாரோ பெரு முயற்சி செய்து ஈட்டித் தந்த' - என்னும் பொருளே சிறப்புறுகிறது. 'ஒப்புரவு' என்னும் சொல்லுக்கு இவ் விளக்கத்தில் தரப்படும் பொருளுடன் 'தந்த' என்னும் இக்கருத்துச் சிறப்புறுகிறது. **யார் தந்தது?......**

இறைவன் மனிதனுக்குத் தர விரும்பிய பேரின்பத்தையும் நட்புறவையும் மனிதன் ஏற்காமல் இறைவனின் பொருள்சேர் புகழைப் புரியாமல், தீவினைக்கு ஆளாகி, இழந்தான் என்று மேலே கூறினோம். அந்நட்புறவை மீண்டும் தர இசைந்தான் இறைவன். எங்ஙனம் தர விரும்பினான்? 'தாளாற்றித்தரவே' விரும்பினான். தாளாற்றி என்றால் பெருமுயற்சி செய்து, துன்புற்று என்று பொருள். இறைவன் துன்புற்று, இழக்கப்

பெற்ற நட்புறவைப் பெற்றுத் தந்தான் என்று கூறும் கொள்கையின் யார் தாளாற்றி, தன் தாளாண்மை என்பதன் பொருள்.

**ஒப்புரவு : இறைவன் தாளாற்றித் தந்த பொருள்.**

'புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறல'ரிய இறைவனின் நட்புறவை, பேரின்பத்தில் பங்கு பெறும் பெரும்பேற்றை மனிதன் இழந்த பின்னர் அதை அவனுக்கு மீண்டும் தர இயலுமா? தரவல்லவன் யார்?

தர இயலும்; அதைத்தரவல்லவன் அதைத்தர முன்வந்த இறைவனாகத்தான் இருக்க வியலும் என்பது தெளிவு. ஆகவே, இந்த 'ஒப்புரவு' என்னும் நன்மையைத் 'தாளாற்றித்தந்தவன்' இறைவனேயாகும். அன்பும் அது ஈன் குழவியும் இறுதியில் இறைவனையே முதலாகக் கொண்டுள்ளன அன்றோ? ஆகவே, முதலில் தருபவனும், இழந்தபின் மீண்டும் தருபவனும் ஒன்றாகவே இருத்தல் வேண்டுமன்றோ?

ஆனால், வேறுபாடு ஒன்றுண்டு. முதலில் தர விரும்பிய போது இலவசமாகத் தர விரும்பினான். இழந்த பின்னர் மீண்டும் தர விரும்பியபோது 'தாளாற்றித்தரத்' திருவுளங் கொண்டான். பின்வரும் விவிலியக் கருத்துகள் இங்ஙனம் தாளாற்றித் தந்தவன் இறைவன், தந்த பொருள் ஒப்புரவாகும் அருட்செல்வம் என்பதை விளக்கும். 'தாளாற்றி' என்றது 'பெருமுயற்சி செய்து' என்று மட்டுமன்று; துன்பம் எல்லாம் ஏற்று, இறுதியில் உயிர்ப்பலியாகி என்று பொருள்படும். தாளாற்று முறையில் அவன் செய்ததென்ன?

அளவில்லா மாண்புடைய அவன் மனிதனின் எளிய நிலைக்குத் தாழ்ந்து **மனுவுருவெடுக்கிறான்.** இங்ஙனம் தாழ் வதால், தீவினையால் தாழந்துவிட்ட மனித இனம் உயர முடிந்தது.

**1. இறைவன் தாழ்ந்த நிலை**

> ''கடவுள் தன்மையில் விளங்கிய அவர்
> கடவுளுக்கு இணையாயிருக்கும் நிலையை
> விடாமல் பிடித்துக்கொண்டிருக்க வேண்டிய
> தொன்றாகக் கருதவில்லை.

ஆனால், தம்மையே வெறுமையாக்கி,

அடிமையின் தன்மை பூண்டு,

மனிதருக்கு ஒப்பானார்.

மனித உருவில் தோன்றி,

தம்மைத் தாழ்த்திச்

சாவை ஏற்கும் அளவுக்கு,

அதுவும் சிலுவைச் சாவையே ஏற்கும் அளவுக்குக்

கீழ்ப்படிபவரானார்.'' (பிலிப். 2:6-8).

**2. மனிதன் மீண்டும் உயர்ந்த நிலை**

''தமக்கேயுரிய மாட்சிமையாலும், ஆற்றலாலும் நம்மை அழைத்த இறைவனை அறியச் செய்யும் அறிவின் வாயிலாக, இறைப்பற்றுடன் கூடிய வாழ்வை வளர்க்கும் அனைத்தையும் அவரது தெய்வீக வல்லமை நமக்கு வழங்கியுள்ளது. இறைவன் வாக்களித்த கொடைகள் அந்த மாட்சிமையாலும் ஆற்றலாலும் நமக்கு வழங்கப்பட்டன. மதிப்பும் மாண்பும் மிக்க இக்கொடைகளால் நீங்கள் இச்சையின் விளைவாக இவ்வுலகிலுள்ள அழிவுக்குத் தப்பி, **இறை இயல்பில் பங்குபெறக்கூடும்.** (2 இரா: 1: 3-4).

அவர் தமது பெயரிலே விசுவாசம் வைத்துத் தம்மை ஏற்றுக் கொண்ட அனைவருக்கும் **கடவுளின் மக்களாகும் உரிமை அளித்தார்.** இவர்கள் இரத்தத்தினாலோ உடல் ஆசையினாலோ ஆண் மகன் கொள்ளும் விருப்பத்தினாலோ பிறவாமல், **கடவுளாலேயே பிறந்தவர்கள்.**

''வார்த்தை மனுவுருவானார்; நம்மிடையே குடிகொண்டார். அவரது மாட்சிமையை நாங்கள் கண்டோம். தந்தையிடமிருந்து அவர் பெற்ற இம்மாட்சிமை ஒரே பேறான அவருக்கு ஏற்ற மாட்சிமையே. ஆகவே, அவர் அருளும் உண்மையும் நிறைந்து விளங்கினார்.''

''அவருடைய நிறைவிலிருந்து நாம் அனைவரும் அருளுக்கு மேல் அருளைப் பெற்றுள்ளோம்......அருளும் உண்மையும் இயேசு கிறித்து வழியாக வந்தன. யாரும் கடவுளை என்றுமே கண்ட

தில்லை; தந்தையின் அணைப்பிலுள்ள ஒரே பேறானவர்தான் அவரை வெளிப்படுத்தினார்.'' (அரு: 1:12-14; 16-18).

## 'தந்த பொருள்'

3. எல்லா மனிதரும் இறைவனின் பொருள்சேர் புகழ் புரியாமல், தீவினை புரிந்தனர். ஆகவே, எல்லாருமே கடவுளது மாட்சிமையின் சாயலின்றி உள்ளனர். ஆனால், இறைவனின் அருளால் இலவசமாய் அவருக்கு **ஏற்புடையவர்களாக்கப் படுகிறார்கள்.** கிறித்து இயேசு நிறைவேற்றிய விடுதலைச் செயலின் வாயிலாய் அங்ஙனம் ஆக்கப்படுகிறார்கள். அவரைக் கடவுள், மனிதர் செய்த தீவினைகளுக்கெல்லாம் **கழுவாயாகுமாறு இரத்தப் பலியாக்கினார்.** (உரோ: 3:23-25 கருத்து).

4. தம்முடைய திருவருட் செயல்முறையைக் காட்ட விரும்பிய கடவுள், கடந்த காலத்தில் பொறுமையாயிருந்து, மனிதர் செய்த தீவினைகளைத் தண்டிக்காமல் விட்டார். இக்காலத்திலோ (அஃதாவது கடவுள் மனு உருவாகி உலகுக்கு வந்த பின்னர்) அத்திருவருட்செயல் முறையைக் காட்ட விரும்பி, அவர் **அருள் மிக்கவராகவும்,** இயேசுவை ஏற்றுக்கொள்பவர் எல்லாரும் தமக்கு ஏற்புடையவராகுமாறு **அருள் அளிப்பவராகவும் விளங்கினார்.** (உரோ: 3:5-26 கருத்து).

5. இறைவனுக்கு ஏற்புடையவர்களான நாம், இயேசு கிறித்து வாயிலாகக் கடவுளுடன் சமாதானம் கொண்டிருக்கிறோம். நாம் இப்போது அடைந்திருக்கும் **அருள்நிலைப் பேறு** இயேசு கிறித்துவை ஏற்றதால் நமக்குக் கிடைத்துள்ளது. (உரோ: 5:1-2 கருத்து).

6. இறைவனின் அருட்சக்தியாம் பரிசுத்த ஆவியால் நம் உள்ளங்களில் கடவுளின் **அன்பு பெரு வெள்ளமெனப் பொழியப்பட்டுள்ளது.** அஃதாவது கடவுள் மீது ஆழ்ந்த அன்பு கொள்ளுமாறு நமக்கு அருள் தரப்பட்டுள்ளது. இதனால் நாம் எதற்கும் அஞ்சோம். துன்பங்கள் ஏற்பதில்கூடப் பெருமைப் படுகிறோம். (உரோ: 5:3-5).

7. நல்லவன் ஒருவனுக்காக யாரேனும் தம் உயிரைக் கொடுக்கலாம். ஆனால், நாம் பாவிகளாயிருந்தபோதே

கிறித்து நமக்காகத் தம் உயிரைக் கொடுத்தார். இதனால் கடவுள் நம்மீது கொண்டுள்ள **அன்பை எண்பிக்கிறார்.** ஆகையால், நாம் இப்போது அவரது இரத்தப்பலியால் இறைவனுக்கு ஏற்புடையவர்களாகி, இறுதித் **தண்டனைக்குத்** (இன்னா உலகுக்கு) **தப்பி மீட்புப்பெறுவோம்** என உறுதியாய் நம்பலாம். (உரோ.5:7-9 கருத்து). இன்னா உலகம் புகாதவாறு, அருள் சேர்ந்த நெஞ்சினைப் பெறத் தந்த அருட் செல்வமே அவன் தாளாற்றித் தந்த பொருள் என்னும் கருத்துச் சிறக்கிறது.

8. கடவுளுடைய நட்புறவை இழந்தவர்களாயிருந்தும் இறைவடிவினரான இயேசு ஏற்ற தற்பலியால் நாம் **கடவுளோடு ஒப்புரவாக்கப்பட்டோர்.** இனி நாம் அவர் தரும் (**அருள்**) உயிரால் வாழ்வு பெறுவோம் என உறுதியாய் நம்பலாமன்றோ? **நம்மை ஒப்புரவாக்கிய இயேசு** வாயிலாய் நாம் கடவுளில் பெருமை கொள்ளலாமன்றோ?
(உரோ: 5:10-11 கருத்து).

கடவுளை நினைத்து, அவரது மாட்சியை நினைத்து, அல்லது அன்பையும் அருளையும் எண்ணிப் பெருமை கொள்வது எத்துணை செல்வம்! அதுவே இறைவன் தாளாற்றித் தந்த பொருள்!

9. ஆதியில் நிகழ்ந்த ஒரு மனிதனின் குற்றம் எல்லா மனிதர்க்கும் அருளற்ற நிலையைக் கொணர்ந்தது. அந்த ஒரு மனிதனின் கீழ்ப்படியாமையால் (தீவினை என்னும் செருக்கால்) மானிடர் எல்லாருமே அருள் அற்றவராயினர். அதனால், உலகில் அருள் அற்ற இருள் ஆட்சி ஓங்கியது. இனிப் பூப்பரோ மானிடர்? என்ற நிலை ஏற்பட்டது. ஆனால், கடவுளின் **அருளும்** இயேசு கிறித்து என்னும் ஒருவரின் செயலால் கிடைக்கும் **அருட் கொடையும்** எல்லா மனிதர்க்கும் எவ்வளவோ மிகுதியாய்ப் **பெருகியுள்ளன!** அந்த அருட் பெருக்கையும் இறைவனுக்கு ஏற்புடையவராகும் வரத்தையும் அடைந்து கொண்டவர்கள் அதே இயேசு வழியாக **வாழ்வு பெறுவார்கள்** என உறுதியாய் நம்பலாமன்றோ? இங்ஙனம் இயேசு என்னும் ஒரே ஒருவரின் ஏற்புடைய செயல் (தற்பலியாக்கிய செயல்) எல்லா மனிதர்க்கும் **வாழ்வளிக்கும் விடுதலையாய் மலர்ந்தது!** இனி மானிடர் அருள் பெற்றுப் பூப்பர் என்ற நிலை தோன்றியது.

ஆதி மனிதனின் செயலால் தீவினை பெருகிற்று. பாவம் பெருகிய இடத்தில் **அருள் அணைகடந்து பெருக்கெடுத்தது.** முடிவில்லா வாழ்வுக்காக இறையருள் மனிதரை இறைவனுக்கு ஏற்புடையவராக்கி **ஆட்சி செய்கிறது.** (உரோ. 5:15-21 கருத்து).

10. நாம் கடவுளின் செல்வத்திற்கு உரிமையாளர்கள். (உரோ-8:17). ''கடவுளின் மாட்சிமையின் சுடரொளியாகவும், அவருடைய உள்ளியல்பின் சாயலாகவும்'' (எபிரே. 1:3). ஞானத்தின் வடிவாகவும், ஒளியினின்று ஒளியாகவும் பிறந்த ''சாயலுக்கேற்ற உருவைத் தாங்கும்படி கடவுள் நம்மை அழைத்தார். அழைப்பை ஏற்றவர்களைத் தமக்கு ஏற்புடையவர்களாக்கினார். அவர்களுக்குத் தம் மாட்சிமையில் **பங்கு தந்தார்''** [உரோ. 8-30 கருத்து]. கடவுளின் அருட் செல்வம் எத்துணை மிகுதியானது! அவரது ஞானமும் அறிவும் எத்துணை ஆழமானவை! அவருடைய திட்டங்கள் அறிவுக்கு எட்டாதவை! அவருடைய செயல்முறைகள் ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டவை! (உரோ. 11:33).

11. கடவுள் இரக்கப் பெருக்கமுள்ளவர்; அன்பு மிக்கவர். நம் குற்றங்களால் நாம் 'செத்தாருள் வைக்கப்பட்டி'ருந்த போதிலும், அவர் நம்மீது கொண்ட பேரன்பினால், 'ஒத்தது அறிந்து உயிர் வாழ்ப'வர்களாகுமாறு செய்தார். நாம் மீட்புப் பெற்றது அருளாலேயே - கிறித்துவோடு நாம் உயிர் பெற்றெழவும், விண்ணுலகில் அவரோடு அமரவும் அவர் வழி செய்தார்.

இறைவன் நம்மீது காட்டிய பரிவினாலே, தம் அளவற்ற **அருள் வளத்தை** வரப்போகும் காலங்களில் காண்பிப்ப தற்காகவே இவையெல்லாம் செய்தார்...... இது நம்மால் ஆவதன்று; கடவுளின் நன்கொடையே. இது மனிதச் செயல் களால் ஆனதன்று; நாம் இறைவனின் **கைவேலையே.** (எபே. 2:4:10 கருத்து).

12. கடவுளோடு மனித இனம் அனைத்தையும் ஒப்புர வாக்கும்படி புதியதொரு மனுக்குலத்தைப் படைத்தார். ஆகவே இனி நாம் கடவுளுக்கு அந்நியருமல்லர்; வெளிநாட்டவருமல்லர்.

இறைமக்கள் சமுதாயத்தின் உறுப்பினர். கடவுளுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். (எபே. 2:19 கருத்து).

[யாரையும் அந்நியராகக் கருதாமல், 'விருந்தினரையும்' அன்பால் அணைக்க வேண்டும் என்னும் கருத்து அவ்வசனத்தில் மறைந்துள்ளதைக் கவனிக்க].

## வேளாண்மை செய்தற்பொருட்டே

இயேசுவின் கண்களுக்கு இவ்வுலகமெல்லாம் அறுவடைக்குத் தயாராகியுள்ள பெரும் வேளாண்மைப் புலம் போலக் காட்சியளித்தது. அஃதாவது, அவரவர் செய்த தீவினைகளாலும் அவற்றின் விளைவாகிய துன்பங்களாலும் சலிப்பும் களைப்பும் அடைந்தவராய், ஆறுதலும் இன்பமும் எங்கேனும் உண்டோ என்று ஆவலுடன் ஏங்கி நிற்கும் உள்ளங்களைக் கொண்ட மானிடர் தொகை பெருகிய வண்ணமாக இருந்தது. இறைவனிடமிருந்து வரக்கூடிய ஆறுதல் செய்தியை ஏற்றுக்கொள்ளக்கூடிய பக்குவ நிலையில் மானிடர் இருந்தனர். அறுப்பதற்குத் தயாராக உள்ள விளை நிலம்போல அவர்கள் காட்சியளித்தனர். இறைவனின் களஞ்சியத்தில் எளிதில் சேர்க்கக்கூடிய தானியம் போல அவர்கள் இருந்தனர். அறுப்பதற்கு ஆட்கள் செல்ல வேண்டியது ஒன்றுதான் இனி நடைபெற வேண்டிய வேலை. ஆகவேதான் இயேசு தம் சீடருக்குக் கூறுகிறார்: தம்மைப் பின்பற்றும் அனைவருக்குமே 'அறுவடையோ மிகுதி, வேலையாட்களோ குறைவு; ஆதலால், தம் அறுவடைக்கு வேலையாட்களை அனுப்பும்படி அறுவடையின் ஆண்டவரை மன்றாடுங்கள்' என்கிறார். (மத். 9:38). இந்தத் தெய்வீக 'வேளாண்மை செய்தற் பொருட்டு'த் தாம் நேரடியாக அனுப்பும் அப்போஸ்தலர் என்னும் ஆட்கள் மட்டுமன்றித் தம்மை ஏற்ற அனைவருமே முனைந்து செயலாற்ற வேண்டும் என்கிறார்.

"நீங்கள் உலகிற் சென்று பலன் தரும்படியாக (அஃதாவது, மேற்சொன்ன பொருளில் நல்ல அறுவடை செய்யும்படியாக) உங்களை ஏற்படுத்தினேன்," (அரு. 15:16) என்றார்.

"என் தந்தை என்னை அனுப்பினது போல் நானும் உங்களை அனுப்புகிறேன். பரிசுத்த ஆவியைப் (வான்சக்தியை)

பெற்றுக்கொள்ளுங்கள். யாருடைய பாவங்களை மன்னிப்பீர்களோ அவை மன்னிக்கப்படும். யாருடைய பாவங்களை மன்னியாது விடுவீர்களோ அவை மன்னிப்பின்றி விடப்படும்'' (அரு. 20:22-23) என்று சீடரை அனுப்பும் நேரத்தில், அவர்கள் செய்யவேண்டிய 'வேளாண்மைப்' பணி என்பதில் அடங்கியுள்ளது என்பதையும் தெளிவாகக் குறிப்பிடுகிறார்.

இங்ஙனம் கிறித்துவின் அப்போஸ்தலர்கள் (அஃதாவது, அவரால் அனுப்பப்பட்ட பணியாளர்கள்), தாம் தாளாற்றித்தந்த பொருளாகிய அருட்செல்வத்தைத் தக்கார்க்கு (அஃதாவது, விரும்பி ஏற்றுக் கொள்பவர்க்கு) வேளாண்மை செய்யும் பொருட்டு (தாராளமாக வழங்கும் பொருட்டு) ஏற்படுத்தப் பட்டவர்கள். அவர்களுக்குத் தாம் வழங்கிய உன்னத வரங்களைக் குறிப்பிட்டு, ''இலவசமாய்ப் பெற்றுக் கொண்டீர்கள்; இலவசமாய்க் கொடுங்கள்'' என்றார் இயேசு. அவர்களும் அதை உணர்ந்து பணியாற்றினார்கள். அவர்கள் சொல்வது: ''உங்களுக்கு இறைவனின் அருட்செல்வத்தைக் கொணர்ந்த பணியாளர்கள் நாங்கள். இறைவன் அருளியவாறு எங்களுள் ஒவ்வொருவரும் பணியாற்றுகின்றனர். ஒருவன் நடுகிறான்; ஒருவன் நீர் பாய்ச்சுகிறான். விளையச் செய்பவரோ கடவுள் தாமே. ஆதலின், நடுகிறவனுக்கும் பெருமையில்லை; நீர் பாய்ச்சுகிறவனுக்கும் பெருமையில்லை; விளையச் செய்யும் கடவுளுக்கே பெருமை. எல்லாம் ...... நாங்கள் கடவுளோடு உழைப்பவர்கள். நீங்கள் கடவுள் பண்படுத்தும் பண்ணை. கடவுள் எழுப்பும் கட்டடம்'' (உரோ. 3:5-9 கருத்து).

''ஆகவே, எங்களைக் **கிறித்துவின் பணியாளர்**, கடவுளுடைய **மறைபொருள்களின் கண்காணிப்பாளர்** என்றே எவரும் கருத வேண்டும்'' (உரோ. 4:1).

அப்போஸ்தலப் பணியாளருள் தலைசிறந்தவரெனக் கருதப் படும் சின்னப்பர் தன்னைக்குறித்துக் கூறுவது: ''நான் நற்செய்தியின் பணியாளன் ஆக்கப்பட்டேன். கிறித்துவின் **அளவிடமுடியாத செல்வங்களை எல்லோருக்கும் அறிவிக்க எனக்கு அருள் அளிக்கப்பட்டது**'' (எபே. 3:8,9).

''தம் கொடைகளை அருளிச் சிலரை அப்போஸ்தலர் களாகவும், சிலரை இறைவாக்கினர்களாகவும் வேறு சிலரை

நற்செய்தியின் தூதர்களாகவும் ஆயர்களாகவும், போதகர் களாகவும்,......திருப்பணிக்குரிய வேலையை முன்னிட்டு இறை மக்களைப் பக்குவப்படுத்த அக்கொடைகளை அளித்தார்'' (எபே. 4:11-12).

''பழையன கழிந்து போயின; இதோ புதியன தோன்றி யுள்ளன. (அஃதாவது, பழைய தீய வாழ்க்கை ஒழியட்டும்; புதிய அருள் வாழ்க்கை தொடங்கட்டும்). இவை எல்லாம் கடவுள் செயல்தான். அவரே கிறித்து வழியாக நம்மைத் தம்மோடு ஒப்புரவாக்கி, **ஒப்புரவு செய்தல் திருப்பணியை எங்களுக்குக் கொடுத்தார்.** உள்ளபடியே கடவுள் உலகினரின் குற்றங்களுக்குரிய கடனைக் கணிக்காமல் அவர்களைக் கிறித்து வுக்குள் தம்மோடு ஒப்புரவாக்கினார். அவரே அந்த ஒப்புரவுச் செய்தியை எங்களிடம் ஒப்படைத்தார். ஆகவே, நாங்கள் கிறித்துவின் தூதர்களாகச் செயலாற்றுகிறோம். **நாங்கள் பேசுவது கடவுளே அறிவுறுத்துவது போலாகும்.** ஆகவே, கிறித்துவின் பெயரால் மன்றாடுகிறோம்; கடவுளோடு ஒப்புரவாகுங்கள்'' (2 கொரி. 5:18-29 கருத்து).

'வேளாண்மை' செய்தலாகிய பணி எந்த அளவுக்கு இருக்க வேண்டும், இருக்கவியலும் என்பதை அறிய உவமைகளால் அறிவுறுத்துகிறார் வள்ளுவர்.

உலகெலாம் விரும்பித் தேடுகின்ற பேரறிவாளனாகிய* இறைவன் ஈட்டித்தந்த ஒப்புரவு என்னும் செல்வம் பெருமழை யால் நிரம்பப் பெற்ற ஊருணியென உள்ளது. இறைவனின் அளவிடவியலா அருள் கடலென உள்ளது. அத்திருவின் பயனைத்துய்க்க விரும்புகின்றவர்கள் அவ்வருட் கடலினிடம் வந்து பருக முயலுதல் வேண்டும். பெறலரிய செல்வமான ஒப்புரவின் பெருமையையும் அதனால் விளையும் நன்மையையும் உணராமல் சிற்றறிவாளராகிய மனிதர்கள் துய்க்க விரும்பும் உலகச் செல்வத்தையே மதித்து மயங்கி நிற்கும் மக்கள் இத் தகைய முயற்சியில் தாமாகவே ஈடுபடுவார்களா? பெரும்பாலும் இல்லை என்பது கண்கூடு. ஒப்புரவினை அடையும் வழி தெரி யாமல் தவிப்பவர்களும் இருத்தல் கூடும். இந்தச் சூழ்நிலையில்-

* இறைவனை 'வாலறிவன்' என்று கடவுள் வாழ்த்தில் ஆசிரியர் குறிப்பது கவனிக்க.

தான் **வேளாண்மை செய்யும் ஒப்புரவாளர்** - ஒப்புரவுப் பணியாளர் **தேவைப்படுகின்றனர்.**

இவர்கள் உண்மையாகவே பிறர்க்கு நன்மை செய்யும் சிறப்புடையவர்களாய் - நயன் உடையவராய்த் திகழ்தல் வேண்டும். ஒப்புரவு என்னும் செல்வம் இத்தகைய 'நயன் உடையான்கண்' படில் அது 'பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்று' என்கிறார். அஃதாவது, ஊர் நடுவே பழுத்த பழங்கள் நிரம்பப் பெற்ற மரம் போல், வேண்டுவோர் வந்து எளிதாகப் பறித்துண்டு இன்புறலாம் என்றவாறு. ஒப்புரவாளர் - ஒப்புரவு என்னும் செல்வத்தைத் தக்கார்க்கு வேளாண்மை செய்யவேண்டுமானால், இக்கனிமரம்போல் நன்மை நிரம்பியவராய் - நீர் நிரம்பி வழியும் குடம்போன்று பிறர்க்கு விளங்க வேண்டும். அப்போது ஒப்புரவுச் செல்வம் தானாகவே பிறர்மீது 'வழிந்து' நன்மை புரியும்

ஆனால், இதனினும் மேலானபடி 'வேளாண்மை' செய்யும் இப்பணியில் தன்னிடமிருந்து வழிந்தோடும் ஒப்புரவுச் செல்வத்தைப் பிறர் பெற்றுக்கொள்ள வேண்டுமானால், அவர்கள் அதன் அருமையை உணர்ந்து பெற்றுக்கொள்ள முன்வர வேண்டும். ஆனால், இங்ஙனம் முன்வராமல் தடுக்கும் ஆன்மநோய் ஒன்று பலர்க்கு உண்டு. பொருள் அல்லாததைப் பொருள் என்று உணர்ந்து மருளடைந்து, அப்பொருள்மீது மிகமிக ஆர்வம் கொண்டு ஒழுகுவோர் இவர். ஆன்மீக மருளாகும் இந்த நோய் நீங்கும் வழி எது? ஒப்புரவாளர்களே அந்த நோய் தீர்க்கும் மருந்தாக மாறவேண்டும். அந்த அளவுக்குத் தம்மைத் தியாகம் செய்ய வேண்டும். கனி கொடுக்கும் மரம்போல் மட்டுமன்று; தானே மருந்தாய்விடும் மருந்துமரம் போல் என்கிறார் வள்ளுவர். இதற்கு நயன் உடைமையும் போதாது; பெருந்தகைமை வேண்டும் என்கிறார்.

இத்தகைய 'பெருந்தகையான்கண் படின்' ஒப்புரவாகிய செல்வம் தன் முழுப்பயனையும் தருவதாகும். அந்நிலையில் எந்தச் சூழ்நிலைக்கும் பின் வாங்காமல் தம் கடனைச் செய்வார்கள் ஒப்புரவாளர். அங்ஙனம் தம்மைத் தியாகம் செய்வதைத் தம் கடன் என்று அருட்காட்சியால் அறிந்தவர்களே ஒப்புரவுப்பணி நன்கு செய்ய ஏற்றவர்கள் என்க.

இங்ஙனம் தம் கடன் செய்யவியலாத நிலை ஏற்பட்டால், அதுவே ஒப்புரவாளர்க்கு ஏற்படக்கூடிய மிக இழிந்த நிலை, வறுமை நிலை! பெருந்தகைமை உடையவர்கள் மட்டுமன்று; நயன் உடையார்கூட இந்த 'வறுமை' நிலையால் பெரிதும் வருந்துவர் என்க. பெருந்தகைமையுடையவரோவெனில், தாம் செய்யும் ஒப்புரவுப் பணியால், யாதேனும் துன்பம் தமக்கு ஏற்படுவதாயிருந்தாலும், தம்மை விற்றேனும், அஃதாவது, தம்மை முழுதும் பலியாக்கியேனும், தம் பணியைச் செய்வர். அஃதொருவன் தன்னை விற்றுக்கோள் தக்கது உடைத்து! எனக்கருதிச் செயலாற்றுவர்.

இக்கருத்துகளைச் சிந்திக்கும்போது, ஐந்தவித்தான் 'தக்கார்க்குத் தாளாண்மை செய்யும் பொருட்டு' அனுப்பிய சீடர், ஒப்புரவு செய்யும் பணியில் படவேண்டியிருந்த துன்பங்களை விவரிக்கும் விவிலியப் பகுதி நினைவுக்கு வருகிறது.

"உள்ளபடியே அப்போஸ்தலர்களாகிய 'அனுப்பப்பட்ட' எங்களைக் கடவுள், அனைவரிலும் கடையராக்கினார் என நினைக்கிறேன். எல்லாரும் காணக் கொலைக் களத்திற்கு இழுத்துச் செல்லப்பட்டவர்கள்போல் ஆனோம்; ...... கிறித்துவுக்காக நாங்கள் மடையர்கள்; ...... வலிவற்றவர்கள்; ...... மதிப்பற்றவர்கள். இந்நாள்வரை நாங்கள் பசியாயிருக்கிறோம்;......அடிபடுகிறோம். தங்க இடமின்றி இருக்கிறோம். கையால் பாடுபட்டு உழைக்கிறோம். பிறர் எங்களைப் பழித்துரைக்கும்போது நாங்கள் ஆசி கூறுகிறோம். துன்புறுத்தும்போது பொறுத்துக் கொள்ளுகிறோம். தூற்றும்போது உறவாடுகிறோம். இவ்வுலகத்தின் குப்பை போலானோம். அனைவரிலும் கழிவடையானோம்" (1 கொரி. 4).

## ஒப்புரவறிதல்

### சுருக்கம்

தீவினை என்னும் செருக்கினால் இறைவனுக்கும் மானிடர்க்கும் நட்புறவாகிய ஒப்புரவை ஏற்படுத்தியதை அறிந்து ஒழுகுதல்.

211. "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்ஆற்றுங் கொல்லோ உலகு."

கைம்மாறு எதையும் கருதாமல், தன் கடமை என்றெண்ணி ஒருவன் செயல்புரிய வேண்டும். இத்தகைய செயலையே இறைவன் (ஐந்தவித்தான்) உலகின்பால் செய்துள்ளான். அஃதாவது, அருளாகிய பொருளை மாரிபோல் பொழிந்துள் ளான். மழைமாரி பொழியும்போது அம்மழைக்குக் கைம்மாறு செய்ய இயல்வதில்லை எனில், அருள்மாரி பொழியும்போது என்ன கைம்மாறு செய்ய இயலும்? "செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும் வானகமும் ஆற்ற லரிது" அன்றோ?

212. "தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு."

இறைவன் (ஐந்தவித்தான்) பெருந்துன்புற்று மானிடர்க்குத் தந்த அருட்பொருள் எல்லாம் அப்பொருளை ஏற்றுத் துய்க்க விரும்புவோர்க்குத் தாராளமாக வழங்கப்படுவதற்கே. (வேளாண்மை செய்ய வேண்டியவர் வாயிலாக- 'இல்வாழ்வது விருந்தோம்பி வேளாண்மை செய்வதற்கே'-துறவு வாழ்வு வாழ்வதும் அதற்காகவே).

213. "புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற."

ஒப்புரவாகிய இவ்வருட்பொருளைவிட மேலானதை இவ் வுலகிலும் பெறவியலாது-மேலுலகிலும் பெறவியலாது. அருளை விட மேலான பொருள் இல்லை. அதுவே இறைவனுக்கும் மனிதனுக்கும் அன்புறவை உண்டாக்குவது. இறையன்புக்கு மேலான நன்மை இல்லை.

214. "ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்."

இறைவனோடு பொருந்தி அன்புறவில் வாழ்வதே உண்மையான வாழ்வு; மற்றையது சாவுக்குச் சமம். அருள் என்பது இறைவனது தெய்வீக உயிருள் பங்குபெறுவது. அருள் இல்லாதவன் உடல் உயிரிருந்தும் நடைப் பிணமே.

215. "ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு."

'வாலறிவன்,' 'தனக்குவமையில்லாதான்,' 'ஐந்தவித்தான் எனப்பெயர் பெற்றுள்ள பேரறிவாளன், தாளாற்றித்தந்த அருட் பொருளாகிய திரு (செல்வம் ஊருணி நிறைந்தது போல) ஏராளமாக உள்ளது. வேண்டியவர் வேண்டிய அளவுக்கு எடுத்துக் கொள்ளலாம்.

216. ''பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின்.''

மேற்கூறிய அருட்செல்வம் ஒப்புரவு என்னும் வேளாண்மை செய்பவரிடத்து நிரம்ப உண்டாயின், ஊர் நடுவே பழங்கள் நிரம்ப கொண்டுள்ள மரம்போல் யாவர்க்கும் பயன் உண்டாகும்.

217. ''மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்.''

அவ்வருட்செல்வம் (வேளாண்மை செய்பவருள்) பெருந் தகைமை படைத்த ஒருவனிடம் உண்டாயின், மருள் என்னும் ஆன்மப் பிணிக்குச் சரியான மருந்தாக அமையும் மரத்தை ஒக்கும். முந்திய குறளில் பழத்தின் இனிமையையும், இக் குறளில் மருந்தின் குணமாக்கும் தன்மையையும் குறிப்பது காண்க. இரண்டும் ஒரே மரத்திலிருந்தே வருவதென்றுக் கொள்ளலாம்.

218. ''இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்
கடனறி காட்சி யவர்.''

சான்றோர் என்பவர் தங்கட்குரிய கடமைகளை எந்நேரமும் கண்முன் கொண்டிருப்பின், ஒப்புரவிற்கு ஏற்ற இடமும் காலமும் இல்லாத நிலையிலும் இவ் ஒப்புரவுப் பணி செய்யத் தயங்கார்.

219. ''நயனுடையான் நல்கூர்ந்தா னாதல் செயும்நீர
செய்யாது அமைகலா வாறு.''

அருட்பொருள் என்னும் ஒப்புரவு நலன் உடையவன் பொருட் பொருள் இன்றி வறுமையுற்றாலும், செய்ய வேண்டிய ஒப்புரவுப் பணியைச் செய்தே தீர்வன்.

220. "ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து."

ஒப்புரவு என்னும் வேளாண்மை செய்கையில் துன்பம் சில நேரலாம். ஒப்புரவாளன் அத்துன்பத்தை எங்ஙனம் கணிக்க வேண்டுமெனில், ஒரு பொருளை விற்று வேறொரு பொருளை வாங்குவதுபோல் என்க. ஒப்புரவு என்னும் அருட் பொருள் இறைவன் தாளாற்றித்தந்த பொருள் ஆதலின், அப்பொருளை வேளாண்மை செய்வோரும் தாளாற்றித்தான் (அஃதாவது சிறிதேனும் துன்புற்றுத்தான்) பிறர்க்கு வழங்கவியலும். ஒப்புரவுப் பொருள் விலை மதிக்கப்படாதது. துன்பம் என்னும் விலை கொடுத்தே அதையடைய வியலும்.

# 23. ஈகை

221. ''வறியார்க்கொன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.''

ஈகை என்பது எதுவும் எதிர்பாராமல் வறிஞர்க்குத் தருவது. ஏதாவது எதிர்பார்த்துத் தருவது குறியெதிர்ப்பேயாகும். அஃதாவது, அளவு குறித்துக் கொடுத்து அவ்வாறே வாங்குவதாகும்.

222. ''நல்லாறு எனினும் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று.''

பிறரிடமிருந்து ஒரு பொருளைப் பெற்றுக் கொள்ளுதலில் தவறு இல்லை. எனினும் தீது. அஃதாவது, அத்துணை நல்ல தன்று. மாறாக மேலுலகமே இல்லை என்னும் நிலையிருந் தாலும் பிறர்க்கு ஒன்றைத் தருவது நன்று. மேலுலகில் கைம்மாறு கருதித் தருவது மிக நன்றேயெனினும், அக்கைம்மாறு கருதி மட்டுமே நன்மை செய்தல் அத்துணை சிறப்பானதன்று. (பெறுவதிலும் தருவதே சிறந்தது—இயேசுவின் அருள்வாக்கு).

பிறர்க்கு நன்மை செய்வது அத்துணை பெருமையாகக் கருதப்படும்.

223. ''இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள.''

என்னிடத்தில் ஒன்றுமில்லை என்னும் வருத்தச் சொல் கூறாமை வாய்மைக் குடிப்பிறந்தாரிடம் இருத்தல் வேண்டும். அஃதாவது, 'மாசற்ற குலம்' (956 குறள்) சேர்ந்தவர்க்கு 'இல்லை' என்னாமல் தருவதே சிறப்பு.

224. ''இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகங் காணும் அளவு.''

பொருளைப் பெற்றுக் கொள்பவர் பன்முறை பெற்றுக் கொண்டபின்னும் இன்முகம் காட்டுவதில்லை. நன்றி கூறுவதில்லை. அஃதாவது, இன்முகத்தையோ நன்றியையோ எதிர்பார்த்துத் தருவது உண்மையான **இரக்கம்** ஆகாது. எந்நன்றியும் எதிர்பாராமல் தருவதே நன்மை பயக்கும் இரக்கம் ஆகும். மற்றது ஒரு விதத்தில் இன்னாததே.

225. ''ஆற்றுவார் ஆற்றல் பசிஆற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின்.''

சான்றோர்க்குரிய ஆற்றல் (ஆண்மை) - (955 குறள் காண்க) பிறர்க்கு நேரும் உடற்பசி, உள்ளப்பசியைப் போக்குதலாம். இந்த ஆற்றலுக்குப் பின்பே தன் பசியைத் தாங்கிக் கொள்வது. பசியைத் தாங்கிக் கொள்வதற்கு மன வலிமை வேண்டும். ஆனால், அந்நிலையிலும் பிறர் பசியைப் போக்க அதைவிட அதிக மனவலிமை வேண்டும்.

226. ''அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.''

பொருள் இல்லாதவர்க்கு நேரக்கூடிய கொடும்பசியைத் தீர்ப்பது தன் பொருளைப் பாதுகாப்பாக வைப்பதற்கு ஒப்பாகும். பிறர்க்கு ஈவதால் ஒருவனது பொருள் தேய்வதில்லை-வளரும்.

227. ''பாத்தூண் மரீஇ யவனைப் பசிஎன்னும்
தீப்பிணி தீண்டல் அரிது.''

தனக்குள்ளதைப் பிறரோடு பங்கிட்டுப் பழகியவனைப் பசியென்னும் தீயநோய் தீண்டாது. அஃதாவது, அவனுக்கு நன்மையே உண்டாகும்.

228. ''ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.''

தமக்குள்ளதை எவர்க்கும் வழங்காமல் இறுதியில் அதனை இழக்க நேரிடும் வன்னெஞ்சர், பிறர்க்கு ஈவதால் விளையும் இன்பத்தை அறியாதவரே!

229. "இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல்."

சேர்த்து வைத்த பொருளை ஒருவர் தாமே, தனியாக (யாவருக்கும் கொடாமல்) துய்ப்பது பிச்சையெடுப்பதைவிடக் கேவலமானது.

230. "சாதலின் இன்னாத தில்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை."

இறப்பதைவிடத் துன்பம் தருவது ஒன்றில்லை. ஆனால், எதையும் யாருக்கும் கொடுக்க இயலாத நிலையிருந்தால், அந்நிலையில் இறப்பதும் இனியதே; அஃதாவது, கஞ்சத்தனம் அவ்வளவு மோசமானது.

# 24. புகழ்

231. ''ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு.''

ஒருவன் உலகில் புகழுடன் வாழ்வது ஈகைப்பண்பால் ஆவதே; மானிட உயிர்க்கு அதைவிட மேலான ஊதியம் தருவது வேறில்லை.

232. ''உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கொன்று
ஈவார்மேல் நிற்கும் புகழ்.''

புகழ்பட ஒன்றை உரைக்க விரும்பினால், தம் தேவையில் ஒன்றை வேண்டுபவர்க்குத் தருவதையே உரைத்திடுக.

233. ''ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன்று இல்.''

தம் நற்செயல்களால் ஒருவன் பெறக்கூடிய புகழ் ஒன்றே உலகில் நிலைத்து நிற்கக்கூடியதாம்.

234. ''நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு.''

இந்நிலவுலகில் ஒருவன் நிலைத்திருக்கக்கூடிய செயல்புரிந்து புகழ் பெறுவானாயின் மேலுலகில் வாழும் தேவர்களை யாரும் போற்றார். மேற்சொன்ன நிலவுலகப் புகழ்பெற்றவரையே போற்றுவர். நற்செயலால் வரும் புகழ் அத்துணை சிறந்தது என்றவாறு.

235. ''நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது.''

ஆக்கச் செயல்களால் வறுமை முதலிய துன்பங்கட்காளா தலும், அவற்றால் சீரிய புகழ் எய்தினாலும் அதனால்

சிறப்புக்கு ஆளாதலும் உண்மையறிவு உள்ளவர்க்கே இயலும். பிறர்க்கு அரிது.

236. ''தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று.''

உலகில் மானிடராய்ப் பிறந்தால், நற்புகழ் எய்துமாறு வாழ்க; அங்ஙனமின்றிப் பிறத்தலினும் பிறவாமையே நன்று.

237. ''புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவது எவன்.''

நற்பண்புகளால் புகழ்பட வாழ முயலாதவர்கள் அதுபற்றிப் பிறர் தம்மை நொந்து கொள்ளும்போது, தம்மையே குறை கூறாமல் பிறரை நொந்துகொள்வதால் பயன் என்ன?

238. ''வசையென்ப வையத்தார்க் கெல்லாம்
இசையென்னும்
எச்சம் பெறாஅ விடின்.''

உலக வாழ்க்கைக்குப் பின்னர் ஒருவனுக்கு எஞ்சி நிற்பது அவன் தன் நற்செயல்களால் ஈட்டிய புகழ். அன்றேல், இகழ்ச்சியே மிஞ்சும் என்க.

239. ''வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.''

நற்செயல்களாலும் நற்பண்புகளாலுமாகிய உண்மையான புகழைத் தேடியடையாதவனுடைய உடம்பைத் தாங்கி நிற்கும் நிலம் மக்களுக்கு வாழ்வளிக்கக்கூடிய வளத்தையும் இழக்கக் கூடும். (தீயசெயல்களின் விளைவாக).

240. ''வசைஒழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர்.''

பிறர் பழிப்புக்காளாகாமல் வாழ்பவரே வாழ்வர்; பிறரால் புகழ்பெறாமல் வாழ்பவர் வாழ்பவர்போல் காணப்படினும் உண்மை வாழ்வு இல்லாதவரே.

# 25. அருளுடைமை

'அருள்' என்பது என்னவென உரையாசிரியர்கள் கூறும் கருத்தை முதற்கண் ஆய்வோம்.

**பரிமேலழகர்:** தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா உயிர்கள் மேலும் செல்வதாகிய கருணை.

**மணக்குடவர்:** யாதானும் ஒருயிர் இடர்ப்படின் அதற்குத் தன் உயிர்க்கு உற்ற துன்பத்தினால் வருந்துமாறு போல வருந்தும் ஈரமுடைமை.

**பரிதியார்:** அருளுடைமையாவது வான ப்ரஸ்தம்.

**பு. குழந்தை:** உயிர்கள் மாட்டு அருளுடையராதல். அருள்-இரக்கம். அன்பு தொடர்பு பற்றி நிகழ்வது. அருள் தொடர்பு பற்றி நிகழ்வது. அன்பின் முதிர்ச்சியே அருள்.

**ஞா. தேவநேயன்:** தொடர்பு கருதாது அறுவகைப்பட்ட எல்லா உயிர்களிடத்தும் ஒப்புக் கொள்ளும் இரக்கம்.

அன்பு போன்றே அடைக்கும்தாழ் இன்றிச் செயலாக வெளிப்படும் அருளறம் வீடுபேற்றுக்கு இன்றியமையாத தென்பதும் அறிவு மட்டும் போதாதென்பதும் பெறப்படும்.

இவ்வுரைகளினின்று வெளிப்படும் கருத்துகள் சிறப்பாக இரண்டு:

1) அருள் என்பது உயிர்கள் மாட்டு இரக்கம்.
2) அருள்-தொடர்பு பற்றாது நிகழ்வது.
அன்பின் முதிர்ச்சி. (பு. குழந்தை).

இவை எந்த அளவுக்குப் பொருந்தும் என ஆய்வோம். இந்த ஆய்வில் சிறப்பாகக் கவனிக்கப்பட வேண்டியது அருளுக்கும் அன்புக்கும் உள்ள தொடர்பாகும்.

அன்பு—தொடர்புடையார்கண் காதல்;
அருள்—தொடர்பில்லார்கண் இரக்கம் ;

என்பது உரையாளர் கருத்து. இதனால் அன்பின் முதிர்ச்சியே அருள் எனப்படுகிறது. வள்ளுவரோ அருள் என்பது 'அன்பின் குழவி' என்கிறார். இவ்விரு கருத்துகளும் எங்ஙனம் பொருந்தும் என்பது விளங்கவில்லை.

அன்பின் முதிர்ச்சியே அருள் என்றால் எங்ஙனம் அதன் குழவியாயிருக்கும்?

தொடர்புடையார் மாட்டுத்தான் அன்பு என்றால், 'என்பும் உரியர் **பிறர்க்கு**' எனப் பொதுப்படையாகக் கூறப்படுவது ஏன்? அருள் என்பது அன்பின் குழவி என்றால், 'என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் இலக்கணம் அன்புக்குப் பொருந்துவது போல் அருளுக்கும் பொருந்த வேண்டுமன்றோ? (ஈனும் தாய்க்குப் பொருந்தும் பண்பு ஈன்ற குழவிக்கும் (ஓரளவேனும்) பொருந்த வேண்டுமன்றோ? ஆகவே, 'தொடர்பு பற்றி நிகழ்வது அன்பு என்றும், தொடர்பு பற்றாது நிகழ்வது அருள் என்றும் வேறுபடுத்திக் கூறுவது அத்துணை சிறப்பாகத் தோன்றவில்லை. இக் கருத்துகளை இனி ஆய்வோம்.

அடைக்கும் தாழ் இல்லாத அன்பு, ஆர்வமுடைமையை ஈனுகிறது. அந்த ஆர்வமுடைமையால் நண்பென்னும் நாடாச் சிறப்பு உண்டாகிறது என்று கண்டோம். மனிதன் எதிர்பார்க்க வியலாத, நாட இயலாத சிறப்பு இது. ஆனால், இறைவன் தனது அன்பின் ஆர்வ மிகுதியால், தான் படைத்த மனிதர்க்கு அச்சிறப்பை அருள விரும்புகிறான். இந்தச் சிறப்பை— அன்புறவை—நட்பை—மனிதனின் இதயத்தில் உண்டாக்குவது, அதை உண்டாக்கும் சக்தி, அச்சக்தியின் செயல். அச்செயலால் மனித உள்ளத்தில் ஏற்படும் ஒரு தெய்வீக மாற்றம்—இவை யெல்லாம் சேர்ந்தே **அருள்** அல்லது **அருட் சக்தி** எனப்படும். இது முழுதும் அன்பின் ஆர்வத்தால் விளைவது. இத்தகைய சக்தியால் இறைவன் செயலாற்றும்போது மனிதனின் உள்ளத்தில் பெரியதொரு மாற்றம் நிகழாமல் இருக்க வியலாது. அந்த மாற்றத்தால்தான் மனிதன் இறைவனது நட்பைப் பெறும் அளவுக்கு **உயர்கிறான்.** இந்த 'உயர்வை'க் குறிப்

பிட்டே அருள் செல்வத்தைக் கூறும் குறள், 'பொருட் செல்வம் பூரியார் கண்ணும் உள' என்கிறது. 'செல்வத்துட் செல்வம்' என்றும் கூறுகிறது.

இந்த அன்பும் அருளும் உள்ள நிலை முதற்கண் இறைவனுக்கே உரியது. அவனே அன்புருவாகி அருளை 'உடைமை'யாகக் கொண்டிருப்பவன். இந்த அருள் உள்ளம் முதற்கண் இறைவனுக்கே உரியதென்றாலும், அது அவனிட மிருந்து மனிதர்களாகிய உயிர்களுக்கும் வருகிறது. இறைவனுக்கு மனிதர் மீதுள்ள அன்பின் பெருக்காலும், அதன் விளைவாக ஏற்படும் இரக்கத்தாலுமே இந்த அருள் மனிதனை வந்தடை கிறது. ஆகவே, அருளை 'அன்பின் குழவி' என்பது பொருத்தமேயன்றோ!

ஆகவே, **உயிர்கள்பால் உள்ள இரக்கம்**—கருணை என்று உரையாளர் சாதாரணமாக 'அருள்' என்பதற்குக் கூறும் பொருள் இங்குக் கூறப்படும் விளக்கத்துடன் நோக்குங்கால் பொருத்தமெனக் கொள்ளலாம். **இவ்விளக்கமின்றேல் மிக மிகக் குறைபாடுடையதே.**

இனி, வள்ளுவர் கூறும் 'அருள்' இப்பொருளுடையது தானா? 'அருள்' என்பதற்கு உரையாளர்கள் கூறும் கருத்து களையெல்லாம் தொகுத்துப் பார்த்தால், பின்வரும் ஏழு சிறப்புகள் தோன்றும்.

1. அருள் என்பது செல்வத்துட் செல்வம்; அளவிறந்த இன்பம் பயப்பது.

2. அன்பின் முதிர்ச்சியே அருள்; இம்மைக்கும் மறுமைக்கும் வாழ்வுத் துணை அதுவே.

3. அருள் செறிந்த நெஞ்சினார்க்கு இன்னா உலகம் புகுதல் இல்லை; அதற்கு மறுதலையான இருள் சேர்ந்த நெஞ்சினர்க்கே அவ்வுலகம்!

4. அருள் ஆள்பவர்க்குத் தீவினைகள் உண்டாகா; தீவினையிருந்தால் அருள் இராது.

5. அருள் இல்லார்க்கு இறந்தபின் உள்ள மேல் உலக இன்பம் இல்லை; அதன்கண் உறும் (இறைவன்) காட்சி இல்லை.

6. அருளற்றார்க்கு உய்வே இல்லை.

7. அருள் இல்லாதார் மெய்ப்பொருளைக் காண இயலாது.

இத்தனையும் 'உயிர்கள் மாட்டு இரக்கம் காட்டுதல்' என்னும் பண்புக்குப் பொருந்துமா? ஒருவன் உயிர்களிடத்து இரக்கம் காட்டுகிறான் என்று வைத்துக்கொள்வோம். ஆனால், வேறு பல குற்றங்களைச் செய்கிறான். மனத்துள் பல தீயவை நினைத்து மகிழ்கின்றான். இஃது அனுபவத்தால் அறிந்தது. பலர் வெளிப்படையாக எத்தீயச் செயலும் செய்யாதிருந்தும், உள்ளத்தில் தீயவை எண்ணி, தீயவை விரும்பி அதனால் வரும் ஒருவிதத் தீய இன்பத்தை நுகர்வதுண்டு. மனத்துக்கண்ணும் மாசிலனாய் இராவிடில் அறமே இல்லை என்கிறது திருக்குறள்; மனத்துக்கண் மாசற்ற தன்மையே அறமெல்லாம் என்றும் கூறுகிறது.

"மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற."

மனத்துள்ளும் மாசின்றி வாழாவிடில் வெறும் வெளிவேடமே அது! அறி வாழ்க்கையாகாது. 'உள்ளத்தால் உள்ளலும் தீதே' என்றும் கூறுகிறார் வள்ளுவர். இத்தகைய வெளிவேட வாழ்க்கை நடத்துவோர்க்கு அருளுடைமைபற்றி மேற்சொன்ன ஏழு கருத்துகளும் பொருந்தா.

ஆகவே, ஈண்டு 'அருளுடைமை' என்பதற்கு 'உயிர்களிடத்துக் காட்டும் இரக்கம்' என்னும் பொருள் அன்று; வேறு உயர்ந்த பொருள் இருத்தல் வேண்டும்.

மேலும் ஆய்வோம்!

அருளைப்பற்றிக் கூறும் வள்ளுவர், அதை முதற்கண் செல்வத்துட் செல்வமாகக் கருதுகிறார். பின்னர் அருள் சேர்ந்த - அருளில்லா அருள் அற்ற - அருள் நீங்கிய என்னும் நிலைமையை உரைக்கிறார்.

'அருள் ஆள்க', 'அருள் ஆள்வார்' என்று அருள் ஆளும் நிலையையும் கூறுகிறார். 'அருளாதான்' எனும்போது அருள் செய்பவனைப்பற்றிக் குறிப்பிடுகிறார்.

ஆகவே, இவ்வதிகாரத்தில் உள்ள கருத்துகள் சிறப்பாக நான்கு :

1. அருள் உள்ள, சேர்ந்த நிலை ;
2. அருள் அற்ற, நீங்கிய, அருள் இல்லா நிலை.
3. அருள் செய்யும் நிலை (அருளாதான்)
4. அருளை ஆளும் நிலை.

அருள் செய்யும் நிலையும் அருளை ஆளும் நிலையும் ஒன்றெனப் புலப்படுகிறது. 'அருளை ஆள்வது' துறவியர்க்குரிய சிறப்பான நிலை என்னும் கருத்து ஈண்டு அறிவுறுத்தப் படுதலால், 'அருளாதான்' செய்யும் அறம் என்றதன் கருத்து, அருள் ஆள இயலாத நிலையில் உள்ள துறவி செய்யும் அறம் பயனற்றது என்னும் கருத்தையே குறிப்பதாகத் தோன்றுகிறது. அன்றி 'அருள் செய்பவன்' இறைவனே என்போமாயின் ஆண்டுள்ள 'செய்யும் அறம்' என்னும் சொற்களுக்குப் பொருள் இராது.

ஆகவே, அருள் உள்ள நிலை, அருள் அற்ற நிலை, அருள் ஆளும் நிலை எனும் மூன்று நிலைகளைப்பற்றியே இவ்வதிகாரத்தில் கூறப்படுகிறது என்க.

இனி, அருள் அற்ற நிலை முதற்கண் யாருக்குச் சிறப்பாகப் பொருந்தும்?

இறைவன் தர விரும்பும் அருள் உறவை, அன்புறவைப் பெற்று, அதில் திளைப்பதற்கு மாறாக, தனக்குக் கிடைத்த அருள் நிலையாகிய செல்வத்துட் செல்வத்தை மதியாமல் செருக்குற்று, தனக்குக் கிடைத்த இறைவனின் நட்புறவை இழந்தவர்க்கே அருளற்ற நிலை பொருந்தும். அதுவே தீவினை என்னும் செருக்கு; அதுவே இறைவனது பொருள் சேர் புகழ் புரியாத நிலை; இருள் சேர் வினை. அருள் நிலை இழந்தார்க்கு-இருள் வினை புரிந்தார்க்கு, இருள் சேர்ந்த இன்னா உலகம்

புகுதலே முறை! ஏனெனில், அவர்கள் அல்லவை செய்தொழுகு பவர்கள். ஆகவே, அவர்களுக்கு 'அவ்வுலகம்' இல்லை. அவர்கள் **மீண்டும் பூப்பர்** என்பதற்கில்லை.

இனி, அருள் ஆள்வார் நிலை யாருக்குப் பொருந்தும்?

இறைவனின் அருளைப் பெற்ற யாவருமே ஓரளவு அருளை ஆள இயலும். அஃதாவது, பிறர் அவ்வருளைப் பெற்றுக் கொள்ள ஓரளவு துணை செய்ய இயலும். 'வாய்மை'யால் சிறப்பாக இது நிறைவுறும் எனினும், அருள் ஆள்பவர்கள் சிறப்பாகத் துறவியர் என்பது வள்ளுவர் கருத்தாகத் தோன்று கிறது. வேறெதனையும் நினையாது, விரும்பாது, இறைவன் அன்புறவையே சிந்தித்துச் செயலாற்ற அவர்களே முழுநும் ஏற்ற நிலையில் உள்ளனர் என்பதில் கருத்து வேறுபாடு இருக்க வியலாது.

அவர்களுடைய வாழ்க்கையும் அருளை ஆள்வார்க்கேற்ற தாய் அமைய வேண்டும். அது அருளுக்கு ஏற்றதாயும், மருளை நீக்கியதாயும், வான் சக்திக்கு உட்பட்டதாயும், 'ஊனுடன்' அஃதாவது, உலக நாட்டங்களுடன் தொடர்பற்றதாயும் இருத்தல் வேண்டும் என்றும் வலியுறுத்துகிறார். இதனாற்றான் 'புலால் மறுத்தல்' அதிகாரத்தில், ஊன் தின்பவர்க்கு அருளாட்சி பொருந்துவதில்லை என்னும் கருத்தில் கூறுகிறார். ஊன் தின்பவர்க்கு அருளே கிடைக்காது என்னும் பொருளில் அன்று. அருள் ஆட்சி அத்துணை சிறப்பாக அமைவதற்கில்லை என்பது கருத்து. ஊனைத்தின்று ஊனைப்பெருக்கும்போது ஊனியல்பும் கீழ்த்தர நாட்டங்களும் அதிகமாகக் கூடுமன்றோ? மாறாக ஊன் உண்ணுதலைத் தவிர்த்து, ஐம்புலன்களுள் ஒன்றாகிய சுவையை ஒடுக்கும் அளவுக்கு அதன் செயலும், பொதுவாகப் புலன்களின் செயலும் ஒடுங்கக் கூடும் அன்றோ?

## அருளுடைமை

### சுருக்கம்

241. "அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள."

அருளாகிய செல்வம் (இருள் சேர்ந்த இன்னாவுலகம் புகலைத் தடுப்பதாலும், 'அவ்வுலகம்' ஆகிய மேலுலகத்துக்கு

வழியாதலாலும், அருளாலன்றிப் பூப்பது இயலவே இயலா தாகையாலும்) உலகச் செல்வங்கட்கெல்லாம் மேலான செல்வ மாகக் கணிக்கப்பட வேண்டும். பொருளாகிய செல்வம் மறுமை நினைவில்லாத கீழ்மக்களிடமும் இருத்தல் கூடும்.

242. ''நல்லாற்றால் நாடி அருளாள்க பல்லாற்றால்
தேரினும் அஃதே துணை.''

நல்வழிகளிலெல்லாம் அருளை நாடி அது பிறர்க்கும் பயன் படுமாறு ஆள்க. எவ்வழியில் நோக்கினாலும் அதுவே உண்மையான (மேலுலக) வாழ்வுக்குத் துணையாகும்.

243. ''அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்.''

ஆதிவினை, தன்வினையாகிய இருள் சேர்க்கும் இருவினை களும் இறுதியில் இருள் உலகமாகிய துன்ப உலகில் கொண்டு போய்ச் சேர்த்துவிடும். அருளையடைந்த நெஞ்சினர்க்கு அத் துன்பம் நிகழாது.

244. ''மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற்கு இல்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை.''

நிலைபெற்ற (அழிவற்ற) உயிர்களாகிய ஆன்மாக் களுக்காகப் பெரிதும் உழைத்து, அவை இன்னா உலகம் புகாத படி காக்குமாறு அருளைப் பயன்படுத்துவோர், தங்களுடைய ஆன்மாக்களுக்குத் துன்பம் நிகழுமோ என அஞ்சவேண்டிய தேவையில்லை.

245. ''அல்லல் அருளாள்வார்க்கு இல்லை வளிவழங்கும்
மல்லல்மா ஞாலம் கரி.''

இறை அருளை நன்முறையில் தமக்காகவும் பிறர்க்காகவும் பயன்படுத்துவோர்க்குத் துன்பம் என்பது இல்லை. உலக மாந்தர் வரலாறு அனைத்துமே இதற்குச் சான்று. (கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்னும் மொழியை நோக்குக).

246. ''பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி
அல்லவை செய்தொழுகு வார்.''

மேற்சொன்ன மறுமைக்குரிய அருட்பொருள் இன்றித் தகாதன செய்து வாழ்பவர்கள், பொருட்பொருளையும் இழந்தவராய் மனஉறுதியின்றி இருப்பார்கள்.

247. "அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை
பொருளில்லாக்கு
இவ்வுலகம் இல்லாகி யாங்கு."

பொருட்பொருள் இல்லார்க்கு இவ்வுலக வாழ்வு வசதியோடு அமையாதெனின், அருட்பொருள் இல்லார்க்கு மேலுலகம் இராது.

248. "பொருளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார்
அற்றார்மற் றாதல் அரிது."

இம்மைப்பொருள் இல்லாதவர் அதை அடைந்து மறு மலர்ச்சியடையக்கூடும். அருளில்லாவிடில் மறுமலர்ச்சிக்கு இடமின்றியொழிவர்.

249. "தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம்."

ஆய்ந்து நோக்குங்கால், அருளில்லாதவன் கடைப்பிடிக்கும் அறவாழ்வு, அறிவுத்தெளிவு இல்லாதவன் மெய்ப்பொருளாகிய இறைவனை அறிய இயலாதது போன்றது; அஃதாவது இயலாது.

250. "வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து."

யாரிடத்தும் அருள் இரக்கம் காட்டல் வேண்டும். அங்ஙனமின்றி ஒருவன் தன்னைவிட வலிமையற்றவனை வருத்தும்போது, தன்னைவிட வலியவன் தன்னை வருத்தினால் தனக்கு எப்படியிருக்குமோ என்று எண்ணிப்பார்த்து, அருளிரக்கம் காட்டினால், அருள் இரக்கம் பெறுவன்.

# 26. புலால் மறுத்தல்

அருளை ஆளவேண்டிய துறவறத்தார் சிறப்பாகப் புலால் உண்ணுதலைத் தவிர்த்தல்:

251. "தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிது ஊனுண்பான் எங்ஙனம் ஆளும் அருள்."

தீய இச்சைகளுக்குப் பெரும்பாலும் தூண்டுதலாயிருக்கும் தன் ஊன் உடலை வளர்ப்பவனிடம் ஊன் ஆட்சி முனைந்து நிற்கும். அத்தகைய தூண்டுதல் பெருகுமாறு வேறு உயிர்களின் ஊனை உண்டால் அருள் ஆட்சி ஒருவனிடம் எங்ஙனம் வளரும்?

252. "பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை அருளாட்சி ஆங்கில்லை ஊன்தின் பவர்க்கு."

பொருட்பொருளை ஆள்வதற்கு அது குறையாது வைத்திருத்தல் அவசியம். அருள் ஆட்சி குறையாமலிருக்க ஊன் தின்பதை விடல் வேண்டும்.

253. "படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்காது ஒன்றன் உடல்சுவை உண்டார் மனம்."

கையில் ஆயுதம் ஏந்தியவன் அதனால் யாருக்காவது தீங்கிழைப்பதையே மனத்தில் கொண்டிருப்பது போல, ஊனின் சுவையை வளர்த்துக் கொண்டவர் மனம் அவ்வூனை வளர்ப்பதிலேயே கண்ணாயிருக்கும். அருளை வளர்க்கும் எண்ணம் குறையும்.

254. "அருளல்லது யாதெனில் கொல்லாமை கோறல் பொருளல்லது அவ்வூன் தினல்."

அருளைப் பெருக்கும் வழி (ஊனை உண்ணக்) கொல்லாமை. அருளைக் குறைக்கும் வழியே (ஊனை உண்பதற்காகக்)

கொல்லுதல். கொன்றபின் ஊனைத்தின்னுதல் அருட்பொருள் வளர்க்கும் வழியாகாது.

255. "உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு."

அருள் உயிர்நிலை, ஊன் உண்ணாமையால் பெருகும். அதை உண்பவனோ இருள் என்னும் சகதியில் அழுந்துவது போலாவான். அதிலிருந்து எழும்ப சக்தி வாய் திறவாது; அஃதாவது அதனுள் அமிழ்ந்து விடுவான்; அருள் பெருகாதவாறு செய்து விடுவான்.

256. "தினற்பொருட்டால் கொல்லாது உலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல்."

உயிரைக் கொல்வது நன்றன்று; கொன்றபின் ஊனை வாங்கித்தின்பது ஏன் குற்றம் ஆகும் என வினவலாம். ஆனால், தின்பவர் இருப்பதால்தானே கொல்லுதல் நிகழ்கின்றது. (ஆகவே, ஆதியில் இறைவன் செய்த ஏற்பாட்டின்படி மரக் கறிகளை உண்பதே சிறந்தது என்க).

257. "உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ணது உணர்வார்ப் பெறின்."

புலால் என்பது வேறொரு உடம்பின் 'புண்' போன்றது. அதை உண்பது எத்துணை அருவருப்பு! (புலால் மறுத்தலை வற்புறுத்தும் வகையில் கூறப்பட்டது).

258. "செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரின் தலைப்பிரிந்த ஊன்."

அருள் வாழ்வுபற்றிய ஆழ்ந்த அறிவுடையார் (ஊன் உணர்வுகளைத் தூண்டவல்ல) ஊனை உண்ண மாட்டார்.

259. "அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று."

வேள்விக்காகப் பல உயிர்களைக் கொல்வதும் தவறு. (ஐந்தவித்தான் தன்னைப் பலியாக்கி மக்களை மீட்டமையால், வேறு எப்பலியும் இனித் தேவையில்லை. அதனால் பயனு மில்லை இத்தகைய உயிர்களைப் பலியிடுவது இனிக் குற்றமே; ஐந்தவித்தான் பலிக்கு எதிரிடையான செயலாகும்). ஆயிரம் வேள்விகளைவிட ஒன்றன் உயிரைப் போக்காமல் இருப்பதே நன்று.

260. ''கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்.''

உயிரைக் கொல்லாதவனையும், புலால் உண்ணுதலைத் தவிர்ப்பவனையும் எல்லா உயிர்களும் கைகூப்பித் தொழும். (ஆதியில் எல்லா உயிர்களும் ஒன்றாய் நட்புடன் வாழ்ந்த நிலை மீண்டும் உண்டாகும்).

# 27. தவம்

261. "உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு."

தமக்குற்ற துன்பத்தைத் தாங்குவதும், பிறர்க்கு எத்துன்பமும் நேராது ஒழுகுதலுமே தவம் என்பது.

262. "தவமும் தவமுடையார்க்கு ஆகும் அவம்அதனை
அஃதிலார் மேற்கொள் வது."

அறவொழுக்கத்தை அடிப்படையாகக் கொண்டவர்க்கே துறவறம் என்னும் மேலான ஒழுக்கம் இயலும். ஒழுக்கமற்றவர் துறவறம் மேற்கொள்வது பொருளற்றது.

263. "துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம்."

துறந்தார்க்குத் துணையாகிய இல்வாழ்வார் (குறள் 42) அவர்க்குச் செய்ய வேண்டிய உபசாரங்களை எண்ணி, தாமும் (இல்வாழ்வாரும்) தவம் செய்ய வேண்டியவர்களே என்பதை மறத்தலாகாது. மேற்சொன்ன பொருளில் தவம் எல்லார் மீதும் சுமத்தப்பட்ட கடமையாகும்.

264. "ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின் தவத்தான் வரும்."

துறவியர் எண்ணினால் தம் தவத்தின் வல்லமையால் பகைவரை ஒழிக்கவும், நண்பரை உயர்த்தவும் இயலும். (அவர் எண்ணார்; துறவியர் ஆதலின். இங்ஙனம் தவத்தின் பெருமை கூறப்படுகிறது).

265. "வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும்."

விரும்பியதையெல்லாம் அப்படியே (தவத்தின் வலிமையால்) அடையவியலும். ஆகவே, மேன்மேலும் தவ முயற்சிகள் மேற்கொள்க. சிறப்பாக வேண்டிய அளவுக்கு இறைவன் அருளை நிரம்பப் பெறலாம்).

266. "தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு."

தவம் செய்பவரே தாம் மேற்கொண்ட துறவறத்துக்கு ஏற்ப ஒழுகுபவர். தவம் செய்யாத துறவியர், துறவுக்கு ஏற்காத ஆசைக்குட்பட்டு வீணான வாழ்க்கை நடத்துவர்.

267. "சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு."

தீயிலிட்ட பொன் மேலும் ஒளிர்வதுபோலத் துன்பம் என்னும் தீயினால் சுடப்படுபவர் அருள் ஒளி மிகுந்தவராவர். (தீயில் புடமிடப்படும் பொன்போல ஆன்மாக்கள் துன்பத்தில் புனிதப் படல் வேண்டும் என்பது விவிலிய வாக்கு).

268. "தன்னுயிர் தான்அறப் பெற்றானை ஏனைய
மன்னுயி ரெல்லாம் தொழும்."

தனக்குள்ளிருக்கும் 'தான்' என்னும் ஆணவப்பற்றை நீக்கியவனை எல்லாருமே போற்றுவர்.

269. "கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு."

தவத்தால் வரும் அருள் வலிமை பெற்றவர்க்குச் சாவை வெல்லுதலும் கைகூடும். (இந்த அருள் வல்லமையால்தான் ஒருவன் இறுதிநாளில் சாவையும் வென்று உயிர்த்தெழுவான் என்பது விவிலியக்கருத்து).

270. "இலர்பல ராகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்."

பொருள் இன்றி உலகில் பலர் இருப்பதற்குக் காரணம் பொருள் பற்றை ஒழித்துத் தவத்தால் வரும் அருளைச் சிலர் விரும்பாமையே.

# 28. கூடா ஒழுக்கம்

271. "வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்."

நேர்மை மனமின்றி வெளிவேடத்தில் மட்டும் அறவொழுக்கம் கடைப்பிடிப்பவனைக் கண்டு, அவ்வேடத்தை வெளிக்காட்டும் உடற்கூறுகளும் ஏளனம் செய்யும் (தனக்குத் தானே ஏளனத்துக்குரியவனாகிறான்).

272. "வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்
தான்அறி குற்றப் படின்."

வெளிப்படையாக மிக மிக உயர்ந்த துறவுக்கோலம் பூண்டு முழு அறிவோடு நெஞ்சத்தில் குற்றப் போக்கைக் கொண்டிருந் தால் பயன் என்ன?

273. "வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று."

மனவலிமையின்றி, வெளிப்படையாக மட்டும் துறவுக் கோலம் கொண்டிருப்பது, மாடு புலித்தோலைப் போர்த்துப் பயிரை மேய்வது போலாகும்.

274. "தவமறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று."

தவ வேடத்தில் (தன் சுயநிலையை) மறைத்துக்கொண்டு தீயன செய்து ஒழுகுவது, வேடன் புதரில் மறைந்துகொண்டு பறவைகளைப் பிடிப்பது போலாகும்.

275. "பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றெற்றென்று
ஏதம் பலவுந் தரும்."

உலகப்பற்று எதுவுமில்லை எனச் சொல்லிக்கொண்டு நேர்மையற்ற ஒழுக்கத்தைக் கடைப்பிடிப்பவர், தம் தவறான போக்குப் பிறர்க்கு வெளிப்படும்போது, "என்ன தவறான காரியம் செய்துவிட்டோம்!" என மிக மிக வருந்துவர்.

276. "நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல்."

உள்ளத்தில் உலகப்பற்றினை விடாது, துறந்தவர்போல் நடித்துப் பிறரை வஞ்சித்து வாழ்பவரைவிடக் கொடியவர் வேறிலர்.

277. "புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியார் உடைத்து."

குன்றிமணியின் பின்புறம் நோக்கின் செம்மைநிறம் உடையது; மறுபுறம் அஃதாவது, அதன் மூக்குக் கறுப்பாயிருக்கும். வஞ்சக ஒழுக்கமுடையவருடைய வாழ்வும் ஒருபுறம் (வெளிப் படையாக) செம்மையானதுபோல் தோன்றும். மறுபுறமோ (அகத்திலோ) இருள் படர்ந்ததாயிருக்கும். ஆகவே, வெளி வேடம் கண்டு ஏமாறலாகாது.

278. "மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்."

மனத்துள் மாசினை மறைத்து வைத்துக்கொண்டு, மாண் புள்ளவர் போல் தூய்மைப்படுத்தும் சடங்குகளைப் பின்பற்று வோர் பலர் உளர். (மானிடர்க்கு அருள் மாண்பு தர வந்து உயிர்ப்பலியான ஐந்தவித்தான் ஏற்படுத்திய புனித நீராடலையும் இக்குறள் குறிக்கலாம்).

279. "கணைகொடிது யாழ்கோடு செவ்விதுஆங் கன்ன
வினைபடு பாலால் கொளல்."

அம்பு (நேராக இருப்பினும்) காயப்படுத்தித் துன்பம் தரக் கூடியது. யாழ் வளைந்திருப்பினும் இனிய நாதம் எழுப்பக் கூடியது. அவ்வாறே தவம் செய்வோர், செம்மையானவர்

அல்லது தீயவர் என்பதை அவரவரது வெளிப்படையான தோற்றத்தால் அன்று, செய்யும் செயலாலேயே தீர்மானிக்க வேண்டும்.

280. ''மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின்.''

தவக்கோலத்துக்கு அடையாளமாகத் தலை முடியை மழித்தலோ நீண்டதாக வளர விடுதலோ தேவையில்லை. உலகம் பழிப்பதை ஒழித்துவிட்டால் அதுவே உண்மைத் தவமாகும்.

# 29. கள்ளாமை

281. ''எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்-
தொன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு.''

பிறரால் இகழப்படலாகாது என விரும்புகின்றவன் பொது வாகத் தீயது எதனையும் செய்ய ஒருப்படலாகாது. சிறப்பாகப் பிறர்க்குரியதைக் களவாட எண்ணாமலும் வஞ்சகம் செய்யா மலும் தன் மனத்தைக் காத்துக்கொள்க.

282. ''உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல்.''

பிறர்க்குரியதைக் களவுசெய்ய நினைத்தலும் தீதே. ஆகவே, வஞ்சக நெஞ்சத்தோடு (யாரும் அறியாவண்ணம்) களவாட வேண்டா.

283. ''களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும்.''

களவு செய்வதால் வரக்கூடிய செல்வம், மேலும் மேலும் பெருகுவது போலத் தோன்றி இறுதியில் அழிவுறும்.

284. ''களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும்.''

களவு, வஞ்சகம் இவை செய்வதில் ஏற்படும் மிகுந்த விருப் பத்தின் விளைவாக ஓயாத தொல்லையே நிகழும்.

285. ''அருள்கருதி அன்புடைய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல்.''

பிறர் பொருளை அபகரிக்க நினைத்து, பொருளுக்குரியவர் மறதியாயிருக்கும் நிலையை எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர் அருட் பொருளைக்கருதி அதன்மேல் பற்றுதல் கொள்ளார்.

286. ''அளவின்கண் நின்றொழுகல் ஆற்றார் களவின்கண்
கன்றிய காத லவர்.''

களவு, வஞ்சகம் செய்தலில் மிகுந்த கருத்துள்ளவர் நன்மை தீமை என்னும் வரையறைக்குட்பட்டு ஒழுக இயலாது.

287. ''களவென்னும் காரறி வாண்மை அளவென்னும்
ஆற்றல் புரிந்தார்கண் இல்.''

நன்மை, தீமை என்னும் வரையறைக்குட்பட்டுச் செயல் புரியும் உள்ளுறுதி படைத்தவர்களிடத்துக் களவு என்னும் இருள் படர்ந்த தவறிய அறிவாண்மை இராது.

288. ''அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சில் கரவு.''

மேற்கூறிய வரையறைக்குட்பட்டு ஒழுகுபவர் நெஞ்சில் அறம் நிலைத்திருப்பது போலக் களவு, வஞ்சனை செய முனை பவர் நெஞ்சில் வஞ்சனை நிலைத்து நிற்கும். (எந்நேரமும் வெளிவேடம் காட்ட வேண்டியிருக்கும்).

289. ''அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர்.''

களவு-வஞ்சனையல்லாத வேறெதையும் அறியாதவர், அளவு மீறித் தகாதவற்றைச் செய்து அதிக தாமதமின்றிக் கெடுவர்.

290. ''கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு.''

வஞ்சக மனத்தோர்க்கு இறுதியில் வாழ்வு பாழ்படும்; வஞ்சக மற்ற நெஞ்சினர் மேலுலகம் எய்துவர். (கள்ளம் கபடற்ற சிறு குழந்தைகளைப்போல் மனம் மாறாவிடில் விண்ணுலகம் சேர வியலாது என்பது இயேசுவின் அருள்வாக்கு).

# 30. வாய்மை

உரையாளர் கூறும் பொருள்.

**பரிமேலகர்:** அஃதாவது மெய்யினது தன்மை. பிறிதோருயிர்க்குத் தீங்கு சிறிதும் பயவாத சொற்களைச் சொல்லுதல்.

**மணக்குடவர்:** வாய்மையாவது பொய் சொல்லாமை; பிறர்க்கு யாதொன்றானும் தீமை பயவாத சொற்களைச் சொல்லுதல்.

**பரிதியார்:** யாவர்க்கும் தோஷ வார்த்தை சொல்லாமல் இருப்பது.

**காலிங்கர்:** தமக்கும் பிறர்க்கும் ஒரு தீங்கும் இல்லாதனவாகிய தூய வார்த்தைகளைச் சொல்லுதல்.

வாய்மை என்பது மெய்ம்மை.

**புலவர் குழந்தை:** உண்மையின் தன்மை பிறருக்குத் தீங்கு சிறிதும் உண்டாகாத சொற்களைச் சொல்லுதல்.

**ஞா. தேவநேயன்:** பொய்மைக்கு மறுதலையான மெய்ம்மை; எவ்வகை உயிரும் எவ்வகைத் தீங்கும் எட்டுணையும் விளைக்காத சொற்களைச் சொல்லுதல்.

வாய்மையின் இலக்கணம், பிறர்க்கும் பிற உயிர்க்கும் தீங்கு பயவாமையேயன்றி நிகழ்ந்தது கூறல் அன்று.

உண்மை, வாய்மை, மெய்ம்மை என்னும் ஒரு பொருட் சொற்கள் முறையே உள்ளமும் வாயும் உடம்புமாகிய முக்காரணத்தோடு தொடர்புடையனவாகச் சொல்லப் பெறும்.

**சாமி சிதம்பரனார்:**

உண்மையின் பெருமை. மற்றவர்க்குச் சிறிதும் தீமை தராத சொற்களைக் கூறுதல்.

**மு.வ:** மற்றவர்க்கு ஒரு சிறிதும் தீமையில்லாத சொற்களைச் சொல்லுதல்.

**கா. சுப்பிரமணியப் பிள்ளை;** மெய்சொல்லுதல்; எவ்வகையான தீங்குமில்லாத சொற்களைச் சொல்லுதலேயாம்.

**பிறர்க்கு எத்தீங்கும் விளையாத முறையில் பேசுதல்; பிறர்க்குத் தீமை பயவாத சொற்களையே சொல்லுதல்** என்னும் கருத்தே இவ்வுரைகளில் சிறப்பாக விளங்குகின்றது.

இக்கருத்து எந்த அளவுக்கு உண்மை? இது மட்டுந்தானா இந்த அதிகாரத்தில் வள்ளுவர் கூறுவது என்பதை ஆய்தல் வேண்டும். **வாய்மை** என்பது என்ன என்பதை வள்ளுவர் முதற் குறளிலேயே கூறுகிறார்.

**'யாதொன்றும் தீமை இலாத சொலல்'** என்கிறார்.

**'பிறர்க்கு'** என்னும் சொல்லை இக்குறளில் புகுத்தி, 'இலாத' என்னும் சொல்லுக்குப் 'பயவாத' என்னும் பொருள் கொடுத்து உரை கூறுவதால்தான் மேற்சொன்ன கருத்து வெளிப்படுகின்றது. 'கடுகைத்துளைத்து'க் கருத்துப் புலப் படுத்தும் வள்ளுவர், ஒரு சொல்லுக்கு வேறொரு சொல்லையோ தேவையற்ற சொல்லையோ பயன்படுத்துபவர் அல்லர். தேவையுள்ள சொல்லைக் கையாளாமல் விடுபவருமல்லர். ஆகவே, **'யாதொன்றும் தீமை இலாத'** என்னும் சொற்றொடரை ஆய்வோம்.

ஈண்டுக் கூறப்படும் 'வாய்மை' எனப்படுவது பொதுவாக நன்மக்களுக்கு இருக்க வேண்டிய நற்பண்புகளுள் ஒன்றுமட்டுமே அன்று; சால்பு என்னும் 'பண்பின்' நிறைபொங்கல் மலர்ச்சியால் மிகமிகச் சிறந்து, ''பண்புருவினராகி, பிற பண்பாளர்களுக்குச் சான்றாகப் பின்பற்றும் முன்மாதிரியாக, இலக்கண மேல்வரிச் சட்டமாக நின்று பண்பாளர்களிடமெல்லாம் சால்பலைகளையும், மற்ற எல்லாரிடமும் பண்பலைகளையும் பரப்பும் பண்புடைய,''* சான்றோர்க்குரிய சால்புத் தூண்களுள் ஒன்றைக் குறித்தே ஈண்டுக் கூறப்படுகிறது.

---

* மணிவிளக்கவுரை — II — பக்கம் 534 காண்க.

'சால்பூன்றிய தூண்'களுள் ஒன்றான 'வாய்மை' என்பது இருக்க வேண்டுமெனின், சால்புடையோர்க்கு இன்றி யமையாததொரு அடிப்படை நன்மையாக அது அறியப்பட வேண்டும். பிறர்க்குத் தீங்கு பயவாத சொற்களைச் சொல்லுதல் என்னும் பொருள் மட்டுமே 'வாய்மை' என்னும் சொல் லுக்கிருந்தால், அஃது எங்ஙனம் சால்பூன்றிய தூணாகக் கருதப் படவியலும்? அத்தகைய செயல் மிகச் சாதாரண நல்லொழுக்கத் தைச் சாருமேயன்றிச் சால்புக்குத் தூணாகக் கருதப்பட வியலுமா? ஆகவே, 'வாய்மை' என்னும் சொல்லால் வள்ளுவர் கூற விரும்புவது யாது? அஃதாவது, 'யாதொன்றும் தீமையிலாத சொல்' என்றால் என்ன?

யாதொன்றும் தீமையிலாதது எது? தீமை என்பது சற்றும் கலப்பில்லாதது எது? அடுத்த குறட்பாவில் 'புரை தீர்ந்த நன்மை' என்று கூறப்படும் நன்மை எதுவோ அதுவேதான் யாதொன்றும் தீமையிலாதது' என்று சொல்ல இடமுண்டு. தீமையுடன் கலப்பற்ற நன்மை, குறைவற்ற நன்மை இறைவன் ஒருவனேயன்றோ? ஆகவே, 'யாதொன்றும் தீமை இலாத' என்று பலவின் பாலாகக் கூறப்படுவது, இறைவனுடன் தொடர்பு கொண்ட நன்மைகள், அல்லது இறைவன் தரும் நன்மை என்றே பொருள்பட வேண்டும்.

இனி இறைவனுடன் தொடர்புகொண்ட நன்மைகள் எவை? அல்லது அவன் தர விரும்பும் நன்மை யாது? 'அன்புடைமை' அதிகாரத்தில் கூறப்பட்டதுபோல், தன்னுள் அடைத்து வைக்க இயலாத அன்பின் காரணமாக வேறு உயிர்களைப் (மனிதரை) படைத்து, தனக்குள்ள பேரானந்தப் பெருஞ் செல்வத்தில் அவர்களுக்குப் பங்கு தர விரும்புகின்றான் இறைவன். இந்தச் செல்வமோ தீமை யாதொன்றும் இல்லாத இறைவனின் பேரின் பமாகும். மனிதன் தேடும் மன நிறைவைத் தரக்கூடிய நன்மை. தீமை கலப்புள்ள எதுவும் இந்த நிறைவைத் தராது. இதை வாழ்க்கை அனுபவத்தால் அறிகிறோம். சிற்றின்பம் எதுவும் உள்ளத்தை முழுவதும் நிறைவுபடுத்துவதில்லை. மனிதன் பேரின்பத்துக்காக ஏங்குகின்றான். ஆகவே, 'யாதொன்றும் தீமை இலாத', 'புரை தீர்ந்த நன்மை' என்னும் சொற்றொடர் களால் சுட்டப்படுவது இறைவனது பேரின்பச் செல்வமேயாகும்.

இனி 'யாதொன்றும் தீமை இலாத சொல்' லுதலே வாய்மை என்பது வள்ளுவர் கருத்து. இறைவன் தரவிரும்பும் பேரின் பத்தைச் சொல்லுதலே என்னும் கருத்துத் தோன்றுகிறது. இங்ஙனம் சொல்வோரே சான்றோர். இக்கருத்தையே திருக் குறள் முதல் அதிகாரத்தில் ஆசிரியர் கூறுவதாகத் தெரிகிறது.

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு." (5)

அஃதாவது, 'பொருள் அல்லாதவற்றைப் பொருள் என்றுணரும் மருளை' ஒழித்து, உலகில் கிடைக்கும் சிற்றின்பமே இன்பம் என்னும் மருள் தீர்ந்து, உண்மையான இன்பமாம் இறைவனின் பேரின்பத்தை விரும்பி அவனது **'புகழ் புரிந்தால்'** தீவினை யெல்லாம் ஒழியும் என்றவாறு. அளவிட இயலா அன்பால், 'அன்பீனும் ஆர்வமுடைமையால்' இறைவன் நமக்குத் தர விரும்பும் பேரின்பத்தை மதித்து, அவன் புகழைப் புரிதல் வேண்டும் என்கிறார் வள்ளுவர். இத்தகைய புகழ் 'பொருள் சேர்' புகழ் ஆகும். மருளால் ஏமாற்றம் அடையச் செய்வது அன்று.

'யாதொன்றும் தீமை இலாதது'—இத்தகைய இறைவன் புகழ் புரிதலே வாய்மையாகும். ஐந்தவித்தான் காட்டிய 'பொய் தீர் ஒழுக்கநெறி' இதுவே என்கிறது முதலதிகாரக் குறட்பா-புகழ்புரிதலைக் கூறும் குறட்பாவுக்கு அடுத்தது.

மேலும், வாய்மைபற்றிய இம்முதற் குறட்பாவில் ஆசிரியர் கூறுவது **இறைவனின் பேரின்பப் புகழ் புரிதலே** என்னும் கருத்து.

"மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானம் செய்வாரின் தலை" (295)

என்னும் குறளால் உறுதிப்படுகிறது. அஃதாவது, வெறும் வாய் மொழியால் இறைவனின் புகழைப் புரியாமல் அதை மனத்தில் உண்மையாகவே இருத்தி, அப்பேரின்பத்தைத் தரும் இறை வனையே எண்ணி வாழ்ந்தவனாய், இங்ஙனம் மனத்தால் அப் புகழைப் புரிந்தால் தவமும் தானமும் செய்வாரினும் சிறப்படைவான்.

வாய்மை எனப்படுவது மெய் பேசுதல், உள்ளதை உள்ள வாறு உரைத்தல், யாருக்கும் தீமை பயவாத சொற்களைப் பேசுதல் என்று மட்டுமே பொருள்படுவதாயின், இங்ஙனம் மெய் பேசுவோர் தீமை பயவாத சொற்களைச் சொல்வோர், தவமும் தானமும் செய்வாரைவிடச் சிறந்தவர்கள் என்னும் கருத்துப் பொருத்தமா? நடந்ததை நடந்தவாறே சொல்வது தானத்தையும் தவத்தையும்விடச் சிறந்த செயலாகுமா? அது மனிதனின் அடிப்படைக் கடமைகளுள் ஒன்றுதானே?

மேலும், தீமையிலாத சொலல் (வாய்மை) 'தவத்தொடு தானம் **செய்வாரின்** தலை' என்று கூறப்படுகிறது. சொல்வது செய்வதைவிடச் சிறந்ததா? வாயால் மெய் பேசி விடலாம்; செயலால் மெய்ம்மைக்கு ஏற்பச் செயல் புரிந்து காட்ட வேண்டுமன்றோ!

மேலும், சொல்வதும் ஒரு செயல்தானே எனின், சொன்ன அளவிலேயே நன்மை பயப்பது எது? மற்றெல்லாச் செயல்களையும்விட, இறைவன் புகழ் புரிவது ஒன்றே சொன்ன வுடன் நன்மை பயப்பதாகும். 'இறைவன் பொருள்சேர் புகழ் புரிதல்' புரிந்த (சான்று சொன்ன) அளவிலேயே, 'இருள்சேர் இருவினை சேரா' வண்ணம் பயன் விளைக்கிறது. இது எந்த அளவுக்கு நன்மையென்பது,

> ''பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
> நன்மை பயக்கு மெனின்'' (292)

என்னும் குறட்பாவுக்கு விளக்கம் கூறுங்கால் காண்போம்.

ஆகவே, இறைவனது பேரின்பப் புகழ் புரிவதே 'வாய்மை' எனப்படும் என்னும் கருத்து மிகமிகச் சிறக்கிறது.

இதே கருத்து,

> ''உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்
> உள்ளத்துள் எல்லாம் உளன்'' (294)

என்னும் குறளிலும் இருப்பதாகத் தோன்றுகிறது. 'உள்ளத்தால் பொய்யாது' என்னும் சொற்றொடருக்கு,

1) ‘உள்ளத்திற்கேற்பப் பொய்சொல்லாது,’

2) ‘தன் நெஞ்சினால் பொய்யை நினையாது,’

3) ‘நெஞ்சாரப் பொய் சொல்லாது’

4) ‘மனமறியப் பொய் பேசாது’ என்னும் உரையே கூறப் படுகிறது. இது பொருந்தும் உரையா? இல்லையென்றே தோன்றுகிறது; ஏன்?

மனிதனுக்குரிய சாதாரணக் கடமைகளுள் ஒன்றாகிய ‘பொய் பேசாமை’யைக் கடைப்பிடிப்பதால், அவன் ‘உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் உளன்’ என்று சொல்லிவிட இயலுமா? ஒரு மனிதன் உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் இருக்க வேண்டும் என்றால், மக்களின் உள்ளங்களைக் கோவிலாகக் கொண்டிலங்கும் இறைவனைப் போலவே ஓரளவேனும் உயர்ந்துவிட வேண்டும் அன்றோ? இறைவன் ஒருவனே உலகத்தார் உள்ளங்களில் உறையக்கூடியவன். இதைக் குறிப் பிட்டே, இக்குறட்பாவுக்கு உரை கூறும் **பரிதியார்** “மனம் பொருந்த மெய் சொல்வானாகில், சர்வேசுவரனுக்கு நிகராகை யால், உலகத்தார் ஆத்துமாவில் இருப்பன்” என்கிறார்.

மெய் பேசுபவன் இறைவனுக்கு நிகர் என்னும் கருத்து, அத்துணை ஏற்புடையதாகத் தோன்றவில்லை. மெய் பேசுவதை விட மிக உயர்ந்ததொரு பண்பு இங்குச் சுட்டப்படுகிறது என்றே கூறவேண்டியிருக்கிறது.

ஒருவன் பிறர் உள்ளத்தில் இருக்க வேண்டும் என்றால், முதன்முதல் இறைவன் அவனது உள்ளத்தில் குடிபுகுந்து அங்கேயே உறைதல் வேண்டும். இறைவனை எந்நேரமும் தன் உள்ளத்துள் கொண்டிருப்பவன் இறைவனுக்குரிய பண்பினை ஓரளவேனும் அடைந்தவனாகின்றான். இறைவனுக் குரிய பண்பு எது? அன்புக்கும் இன்பத்துக்கும் உறைவிடமா யிருப்பதேயாம். அந்த அன்பு ஈனும் ஆர்வமுடைமையாவது பிறர்க்குத் தன்னுடைய பேரின்பம் தருவதே; பேரின்பத்தில் பங்கு தருவதேயாம். அன்புக்கும் பேரின்பத்துக்கும் உறைவிடமான இறைவனைத் தன் உள்ளத்தில் கொண்டு இன்பம் சுவைப்பவன், தான் பெற்ற அந்த இன்பத்தைப் பெறுக

இவ்வையகம் எனச் செயலாற்றுவான். அஃதாவது, இறைவனது பேரின்பப் புகழைப் புரிவான். இங்ஙனம் புரிவதால், தானும் அன்பால் பிறர் உள்ளங்களில் குடிபுகத் தொடங்குவான். இப்புகழ் புரிதல் மேலோங்க ஓங்க, 'உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் உளன்' ஆவான்.

ஆகவே, 'உள்ளத்தால் பொய்யாது' என்னும் சொற்றொடருக்கு, 'தன் உள்ளத்தில் இறைவனை உண்மையாகவே தாங்கி' என்னும் பொருளே சிறக்கிறது. அஃதாவது, 'வாய்ச் சொல்லால் மட்டும் இறைவனை உள்ளத்தில் கொண்டிருப்பது போல் நடிக்காமல்' என்க. அங்ஙனம் நடித்தால் வெளிப்படையாக அது 'வாய்மை' எனப்படுமேயன்றி, வாய்மை என்னும் உயர் பண்பிற்கு ஏற்றதாகாது; சால்புக்குத் தூணென விளங்காது.

இக்கருத்தே,

"தன்னெஞ்சு அறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்." (293)

என்னும் குறட்பாவில் கூறப்படுகிறது.

"நெஞ்சாரப் பொய் தன்னைச் சொல்ல வேண்டா" என்னும் கருத்து மட்டுந்தான் இங்குக் கூறப்படுகிறதா? மேற்சொன்ன விளக்கத்துக்கேற்ப, 'தன்னெஞ்சு அறிவது' என்னும் சொற்றொடர்க்கு வேறு ஆழ்ந்த பொருள் இருப்பதாகத் தோன்றுகிறது.

தன் நெஞ்சில் இறைவனைக் கோவிலாகக் கொண்டு, அவன் புகழ் புரிவதால், இருள்சேர் வினைகட்கு ஆளாகாமல், உண்மையாகவே அவனது பேரின்பத்தில் பங்கு பெற விரும்பி, அவனது அன்பில் திளைத்து ஒருவன் ஒழுகினால், அவன் நேர்மையோடும் முழு உண்மையோடும் பிறர்க்குச் சான்று கூற இயலும். வாய்மையைக் கடைப்பிடித்துச் சால்புக்குத் தூண் என விளங்கக் கூடும். உள்ளத்தில் இருப்பதை வலிமையுடன் வாயால் எடுத்துச் சொல்ல இயலும். அங்ஙனம் உள்ளதை அவன் **வாயால் பேசாமலிருந்தாலோ,** உள்ளத்தில் இறைவனைத் தாங்காதவனாய், அவனது புகழை உண்மையாகவே புரியாத

வனாய், வெளிப்படையாக மட்டும் பிறர்க்குச் சான்று கூறுபவனாய் இருந்தாலோ, அவன் நெஞ்சே அவனைச்சுடும். அஃதாவது, அவன் நெஞ்சே அவனிடம் குற்றம் கண்டு அவனை வருத்தும்.

ஈண்டு இரு குற்றங்கள் குறிப்பிடப்படுவது கவனிக்க. ஒன்று: நெஞ்சில் இல்லாததை — அஃதாவது அவன், இறைவனின் புகழைப் புரியாதவனாய் — பிறர்க்குச் சான்று கூறுதல். இது வாய்மையன்று; பொய்ம்மை.

மற்றொரு குற்றம் : நெஞ்சில் உள்ளதை, விரும்பத்தக்கது, போற்றப்படத்தக்கது இறைவனது பொருள்சேர் புகழே எனத் தன் நெஞ்சு அறிந்தாலும், அதை வெளிப்படையாகப் புகழ்புரியாமல் விடுவது. இதுவும் பொய்ம்மையே! சான்றோர்க்கு இரு குற்றங்களும் பொருந்தாதவை. சாதாரண மக்களுக்கு முதற் குற்றமே பொருந்தாதது எனலாம். மக்கள் எல்லோருமே சால்புக்குத் தூண்களாக இருக்குமாறு எதிர்பார்க்க இயலா தன்றோ?

ஒருவன் தன் நெஞ்சில் இறைவனைத் தாங்கி வாழ்பவனாய் இராமல், அவனது புகழை உண்மையாக உள்ளத்தால் புரியா தவனாய், வெளிப்படையாக இறைவனது புகழ் புரிகிறான் என்று வைத்துக் கொள்வோம். அவன் கூறுவதைக் கேட்டுப் பலர் தாமும் இறைவனது புகழ்புரிய முன்வருகின்றனர் என்று வைத்துக்கொள்வோம். தன் நெஞ்சைப் பொறுத்தமட்டில், அவனது வாய்மை, வாய்மை என்னும் பெயருக்கு முற்றிலும் தகுதியுடையதொன்றெனினும், அவன் புகழ் புரிவதைச் செவியுறு வோர்க்கு நன்மை பயக்க இயலுமன்றோ? தீயவர் கூறும் யாதாமொரு நற்கருத்தைப் பிறர் ஏற்று நன்மையடைவதைக் காண்கிறோம் அன்றோ? ஆகவே, 'உள்ளத்தால் பொய்யாது ஒழுகு'பவனாய் இராதிருந்தபோதிலும் அவனது வாய்மை உண்மையில் பொய்மையே எனினும், அவன் 'யாதொன்றும் தீமையில்லாத', 'புரைதீர்ந்த நன்மை பயக்கக்' கூடிய இறைவனது புகழைப் புரிவதால், இப்பொய்ம்மையும் 'வாய்மை இடத்ததாக'க் கருதலாம். வாய்மை என்றே சொல்வதற்

கில்லை. வாய்மையைச் சார்ந்ததென்று சொல்ல இயலும். இதைக் குறிப்பிட்டே வள்ளுவர்,

''பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்.'' (292)

என்று கூறுவதாகத் தெரிகிறது.

இத்தகைய புரைதீர்ந்த நன்மை பயப்பதால் 'பொய்யாமை அன்ன புகழ் இல்லை' என்று வள்ளுவர் கூறுவதில் வியப்பில்லை. 'புகழ் இல்லை' என்று அவர் குறிப்பிடுவது, இறைவன் புகழ் புரிதல் போன்ற புகழ் வேறில்லை என்னும் கருத்திலேயே எனத் தோன்றுகிறது. ஆகவே, 'வாய்மைக்'கு ஈண்டுக் கூறப்படும் பொருளே சிறக்கிறது. இத்தகைய புகழைத் தேடினால் எல்லா அறமும் தாமே உன்னைத் தேடிவரும் என்னும் கருத்தில் 'பொய்யாமை எல்லா அறமும் தரும்' என்கிறார்.

இத்தகைய சிறப்புப்பெற்ற பொய்யாமையும் பொய்யாமல் (அஃதாவது தவறாமல்) வாழ்க்கையின் ஒரே குறிக்கோளாகக் கொண்டு ஆற்றினால் இல்லறம், துறவறமாகிய வேறு அறங்களில் கவனம் செலுத்தாதிருத்தலே நன்று. எல்லா அறங்களுக்கும் மேலாக 'வாய்மை' எனப்படுவது விளங்குதலான், இதை முழு மூச்சுடன் ஆற்றுபவன் வேறு எந்த அறத்திலும் ஈடுபடவேண்டிய தேவையில்லை.

இல்லறத்திலோ, துறவறத்திலோ ஈடுபடுவதால் ஓரளவு கவனம் அதில் செலுத்த வேண்டியிருக்கும். வாழ்க்கையின் இறுதிக் குறிக்கோள் இல்லறமும் அன்று, துறவறமும் அன்று. இறைவனின் பொருள்சேர் புகழ் புரிந்து அவனது பேரின்பத்தில் பங்குபெற்று நீடு வாழ்வதேயாம். இதனையுடைய 'வாய்மை'யே சாலும்; வேறு அறம் வேண்டாவாறு.

வாய்மையின் பெருமையை மிக மிக அழுத்தமாகக் கூறுமுகத்தான் ஆசிரியர் இங்ஙனம் கூறுகிறார் என்க. வாய்மையை முழுமூச்சுடன் ஆற்றாவிடின், வேறு அறங்கள் பயின்று பயன் என்ன? அவை இறைவனின் பேரின்பத்துக்கு, நீடுவாழ்வுக்கு வழிகாட்டுமோ? காட்டா என்றவாறு.

வேறு அறங்கள் எதற்கு என்னும் கருத்தைக் குறிப்பிட்டே இல்லறம், துறவறம் என்னும் விளக்குகள் எல்லாச் சான்றோர்க்கும் பொருந்தும் விளக்குகள் அல்ல. வாய்மை என்னும் இறைவன் புகழ் புரியும் விளக்கே உண்மையான விளக்கு என்க.

'வரன் என்னும் வைப்புக்கும்'

அதை மனிதர்க்குத் தரக் கூடிய

'வான்' ஆகிய இறைவனுக்கும்,

சான்று கூறுவதே வாய்மை. இதையே வாழ்க்கையின் உன்னத இலட்சியம் என்று கூறும் கொள்கையினர் யார்? 'சான்று கூறுவோர்' என்பதே தங்கள் பெயராகக் கொண்டிருப்பவர்கள் யார் என்பதைப் பின்வரும் விவிலியப் பகுதிகள் கூறும். தனக்குச் சான்று கூறவேண்டும்; அதுவே தன் டர்க்குரிய தலையாய கடமை என்னும் கருத்தை இயேசு கிறித்து மிக அழுத்தமாகக் கூறியுள்ளார். இவ்வுலகை விட்டு விண்ணகம் எழுந்தருளு முன் அவர் தம் சீடர்க்குக் கூறிய கட்டளைகள் இதோ:

"விண்ணிலும் மண்ணிலும் எல்லா அதிகாரமும் எனக்கு அளிக்கப்பட்டுள்ளது. நீங்கள் போய் எல்லா இனத்தாரையும் சீடராக்குங்கள்." (மத். 28,19).

"நான் பாடுபட்டு, இறந்தோரிடமிருந்து மூன்றாம் நாள் உயிர்த்தெழுவேன். பாவ மன்னிப்படைய மனந் திரும்ப வேண்டுமென எருசலேம் நகர் தொடங்கி எல்லா இனத்தவர்க்கும் என் பெயரால் அறிவிக்கப்படும். **இவற்றுக்கெல்லாம் நீங்கள் சாட்சி."** (லூக். 24: 47-48 கருத்து).

"பரிசுத்த ஆவி உங்கள் மேல் வரும்போது அவரது வல்லமையைப் பெற்று இயெருசலேமிலும் யூதேயா, சமாரியா முழுவதிலும் மண்ணுலகின் இறுதி எல்லை வரைக்குமே நீங்கள் **என் சாட்சிகளாயிருப்பீர்கள்,"** என்று அழுத்தமாகக் கூறியுள்ளார் கிறித்து. (அப். பணி: 1,8).

இதைச் சீடரும் நன்குணர்ந்து கொண்டனர் என்பதில் ஐயமில்லை. அவர்கள் தம் எழுத்துகளில் குறிப்பிட்டுள்ள சில சான்றுகளைப் பார்ப்போம். சீடருள் ஒருவரான அருளப்பர் எழுதிவைத்தது:

1. "ஆதிமுதல் இருந்ததை, நாங்கள் கேட்டதை, கண்ணால் பார்த்ததை உங்களுக்கு அறிவிக்கிறோம். அதை நாங்கள் நோக்கினோம்; கையால் தொட்டுணர்ந்தோம். நாங்கள் அறிவிப்பது உயிரின் வார்த்தையைப் பற்றியது. அந்த உயிர் வெளிப்படுத்தப்பட்டது. அதனை நாங்கள் கண்டோம். அதற்குச் **சான்று பகர்கின்றோம்.** தந்தையோடு இருந்து நமக்கு வெளிப்படுத்தப்பட்ட முடிவில்லாத வாழ்வு பற்றிய செய்தியை உங்களுக்குத் தெரிவிக்கின்றோம்." (1 அரு. 1:1-3).

2. சீடருள் வேறொருவர், இராயப்பர், "இந்த இயேசுவைக் கடவுள் உயிர்த்தெழச் செய்தார். இதற்கு **நாங்கள் எல்லோரும் சாட்சிகள்;"** (அப். பணி 1:32) என்று பல்லாயிர மக்கள் முன்னிலையில் கூறினார்.

3. "கடவுள் இயேசுவோடு இருந்ததால், அலகைத் துன்புறுத்திய அனைவரையும் குணமாக்கி எங்கும் அவர் நன்மை செய்துகொண்டே சென்றார்; இதெல்லாம் உங்களுக்குத் தெரிந்ததே. அவர் யூதேயா நாட்டிலும், இயெருசலேமிலும் செய்த அனைத்திற்கும் **நாங்கள் சாட்சிகள்.** அவரைக் கழுமரத்தில் ஏற்றிக் கொன்று போட்டனர். ஆனால், கடவுள் அவரை மூன்றாம் நாள் உயிர்ப்பித்தார். உயிர்த்தவரைக் கடவுள் அனைவருக்கும் வெளிப்படுத்தாமல், தம்மால் **தேர்ந்து கொள்ளப்பட்ட சாட்சிகளுக்கே** வெளிப்படுத்தினார். இறந்தோரிடமிருந்து அவர் உயிர்த்தபின் அவரோடு உணவருந்திய **நாங்களே சாட்சிகள்.** வாழ்வோரையும் இறந்தோரையும் நடுத்தீர்க்கக் கடவுளால் ஏற்படுத்தப்பட்டவர் அவரே என்பதை மக்களுக்கு அறிவிக்கவும் **சாட்சியம் கூறவும் கடவுள் எங்களுக்குப்பணித்தார்.** (அப். பணி. 10:38,42 கருத்து).

4. சாவுக்குரிய குற்றம் எதுவும் காணாதிருந்தும் அவரைத் (இயேசுவை) தொலைக்குமாறு பிலாத்துவைக் கேட்டனர். அவரைக் குறித்து எழுதப்பட்டவை அனைத்தும் நிறைவேறிய பின்னர் அவரைக் கழுமரத்திலிருந்து இறக்கி, கல்லறையில் வைத்தனர். கடவுளோ அவரை இறந்தோரிடமிருந்து எழுப்பினார். அவரும் கலிலேயாவிலிருந்து தம்முடன் இயெருசலேம் வந்திருந்தவர்களுக்குப் பல நாட்கள் தோன்றினார். அவர்கள் இப்போது மக்கள் முன் **அவருக்குச் சாட்சியாக**

**நிற்கின்றனர்,''** எனச் சின்னப்பர் என்னும் சீடர் கூறினார். (அப்.பணி. 13:28-31).

இக்கருத்துடைய மொழிகள் 'புதிய ஏற்பாடு' என்னும் நூலில் பல இடங்களில் காணப்படுகின்றன. ஆகவே, தமக்குச் சான்று கூறுவதே தம் சீடர்களுடைய தலையாய கடன். அதுவே அவர்கள் வாழ்க்கைப் பணி என்பது தெளிவாகிறது.

கிறித்துவுக்குச் சான்று கூறும் பணியே **நற்செய்திக்குச் சான்று கூறும்** பணியாகவும் விவிலியம் எடுத்துரைக்கிறது. ஏனெனில், கடவுளாகிய ஐந்தவித்தான், உலகில் தோன்றித் தன்னை, அஃதாவது, தன் உடலை (ஐந்தை) அவித்துப் பலியாக்கி மனித இனத்தை ஆட்கொண்ட செய்தியே நற்செய்தியாகும். மானிடர் முடிவில்லா நீடு வாழ்வு பெறும்பொருட்டுத் தன்னைப் பலியாக்கும் அளவுக்குக் கடவுள் உலகின்மீது அன்பு கூர்ந்ததும், அழிவின் பாதையில் நடந்து கொண்டிருந்த மக்களை மீட்டுக்கொண்டு வாழ்வுப் பாதையில் திருப்பியதும் செய்திகளுள் எல்லாம் அரிய **நற்செய்தியன்றோ!** இதனாற்றான் ஐந்தவித்தான் பிறந்த அன்றிரவே வானவர், உலகில் தோன்றி ''அஞ்சாதீர், இதோ! மக்களுக்கெல்லாம் மாபெரும் மகிழ்ச்சியூட்டும் **நற்செய்தியை** உங்களுக்கு அறிவிக்கிறேன். இன்று தாவீதின் ஊரிலே உங்களுக்காக மீட்பர் பிறந்துள்ளார். அவரே ஆண்டவராகிய மேசியா'' என்று முழங்கினர். (லூக். 2:10-11)

குழந்தை வளர்ந்து தம் பணியைத் தொடங்குகையில், ''காலம் நிறைவேறிற்று; கடவுளரசு நெருங்கிவிட்டது; மனம் திரும்பி, **இந்நற்செய்தியை** நம்புங்கள்'' என்று இயேசுவே பறை சாற்றினார். (மாற்கு. 1, 15).

இச்செய்தியைக் குறித்து இயேசுவின் சீடர் பலமுறை கூறுகின்றனர்.

''கடவுளின் நற்செய்தியை அறிவிக்கக் குறிக்கப்பட்டிருக்கிறேன். இந்நற்செய்தியை இறைவன் தம் வாக்குரைப்போர் வழியாய்ப் பரிசுத்த நூல்களில் (விவிலியத்தில்) ஏற்கெனவே வாக்களித்திருந்தார். இந்நற்செய்தி அவருடைய மகனைப் பற்றியதாகும்.'' (உரோ. 1:1, 7 கருத்து).

"இந்நற்செய்தி மீட்பளிப்பதற்குக் கடவுளின் வல்லமையாய் உள்ளது. இறைவனுக்கு ஏற்புடையவர்களாக்கும் இறையருட் செயல்முறை இந்த நற்செய்தியிலேயே வெளிப்படுகிறது." (உரோ. 16, 17 கருத்து).

கடவுளின் வல்லமையாக உள்ள இந்நற்செய்திக்குத் தக்க முறையில் சான்று கூற எளிய மனிதர்க்கு மன வலிமையோ, போதிய அறிவோ இராதென்று நன்கறிந்தே ஐந்தவித்தானாகிய இறைவன் "உன்னதத்திலிருந்து வல்லமையை அணிந்து கொள்ளுங்கள்" என்றார். (லூக். 23, 49). எதிரியால் தகர்க்க இயலாத ஆயுதமென அதை அணிந்து கொண்டால் 'சான்று கூறும்' இப்பணி நன்கு நிறைவேறும் என்றார்.

அது நன்கு நிறைவேற வேண்டுமானால், என்ன நிகழ்தல் வேண்டும் என்றும் குறிப்பிட்டார். **வானின்று வல்லமை** சீடர்க்குத் துணையாக நின்று, (பரிசுத்த ஆவியெனப்படும் அவர்) "பாவம் யாரைச் சாரும்? நியாயம் யார் பக்கம் உள்ளது? இறைவனின் தீர்ப்பு எத்தகையது? என்பதை எடுத்துக் காட்டி, உலகினர் செய்த தவற்றை மெய்ப்பிப்பார். என்னை ஏற்றுக் கொள்ளாததால், பாவம் உலகினரையே சாரும் என்று காட்டுவார். உண்மையின் ஆவியான அவர் என்னைப்பற்றிச் சாட்சியம் கூறுவார். நீங்களும் **சாட்சியம் கூறுவீர்கள்,**" என்றார். (அரு. 16:8-9&26-27 கருத்து).

'சாட்சிகளாய் விளங்கவேண்டும்,' 'சான்றோராய் இருத்தல் வேண்டும்' என்று தங்கள் கடமையை நன்குணர்ந்து, தம் வாழ்க்கை முன் மாதிரியால் மட்டுமன்று, தம் உயிரையும் பலி யாக்கிச் சான்றுபகரத் தயங்கவில்லை. ஆயிரமாயிரம் கிறித்து வர்கள், கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்து இன்றுவரை பல நாடுகளில், பேராண்மையுடன் சான்று பகர்ந்து, சான்றாண்மைக்குச் சிறந்த சான்றுகளாய்த் தம் உயிரையும் தியாகம் செய்தவர்களின் எண்ணிக்கை பல கோடியாகும். இங்ஙனம் சான்று பகர்ந்தவர்களுக்குச் சிறப்புப் பெயர், கிரேக்க மொழிச் சொல்லாகும் martyr என்பது. இச்சொல்லின் பொருள் **சான்றானவன், சான்றோன்** என்பதே. இங்ஙனம் கிறித்து மீட்பருக்கும் சான்றாண்மையாகும் வாழ்வுக்கும் சான்று கூறிய வர்கள், சான்று கூற வேண்டும் என்பதையே மையக் கோட்-

பாடாகக் கொண்டவர்கள் வேறு யார்? கிறித்துவத்தைக் கடைப் பிடிப்பவர்கள் தவிர.

## இவர்களே சான்றோர்!

'சான்றோர்' என்னும் சொல் இன்று 'நல்லவர், மேலானவர், உயர்ந்தோர்' என்னும் பொருளில் ஆளப்படு கிறது. ஆனால், தொடக்கத்தில் அது **கொள்கையால் இணைந்த** ஒரு குறிப்பிட்ட தொகுதியினரையே குறித்தது.

இதற்குச் சான்றுகள்:

'ஆன்றவிந்தடங்கிய **கொள்கைச்** சான்றோர் பலர்' (புறம் 191); 'பிறர் நோயும் தம் நோய் போற்போற்றி அறனறிதல் சான்றவர்க்கெல்லாம் **கடன்**' (கலித். 139:நெய்தல். 22).

'சான்றோர் சென்ற நெறி'...... (புறம் 134) என்னும் மேற் கோள்கள் ஈண்டுப் போதும்.

எத்தகைய கொள்கை அவர்களுக்கு இருந்தது என்பதை டாக்டர் மா. இராசமாணிக்கனார் விளக்குகிறார்:

கல்வி கேள்வி ஒழுக்கங்களால் சிறந்த சான்றோர், போர் களையே விரும்பிய மன்னர்களுக்கும் வீரர்களுக்கும் வாழ்க்கை நிலையாமையை வற்புறுத்தத் தொடங்கினர்; உடல் நிலை யற்றது, என்பதைப் பல சான்றுகள் கொண்டு விளக்கி அவர் களை அறவழியில் செலுத்தினர்; துறவு உள்ளம் கொள்ளச் செய்தனர். ''நாடும் செல்வமும் மன்னர் உயிர்க்குத் துணை செய்வதில்லை. அவர் செய்யும் அறவினையே மறுமைத் துணையாய் நின்று இன்பம் தரும்'' (357). இவ்வுலகம் ஒரே நாளில் எழுவரைத் தலைவராகக் கொள்ளும் தன்மை உடையது: அஃதாவது, எந்த ஆட்சியும் நிலையில்லாதது; பற்று விடுதலே இன்பத்தைக் காணும் வழி'' (358) என்று அறிவுறுத்தி வந்தனர்.

சான்றுகள் கொண்டு தம் பணியைச் செய்து வந்ததால் 'சான்றோர்' என்ற பெயர் அவர்களுக்கு ஏற்பட்டிருக்கலாம்.

ஆனால், இதுமட்டுந்தான் 'சான்றோர்' என்னும் சொல்லுக்குப் பொருளா? இதைவிட ஆழ்ந்த பொருள் உண்டா? உண்டு எனத் தோன்றுகிறது. பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையாரின் மணிவிளக்க உரையிலிருந்து:

''ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்'' (69)

என்னும் குறள் அவ்வாழ்ந்த பொருளுக்கு வழி செய்கிறது. அவ் விளக்கவுரைப்படி:

''ஈன்ற என்னும் சொல் ஈனோர் (இவ்வுலகத்தோர், உடல் வாழ்வு மட்டுமேயுடைய கீழுலக மக்கள்) என்னும் சொல்லுடன் தொடர்புடையது. ஈன்ற என்பதன் எதிர்ச்சொற்களே ஆன்ற, சான்ற என்பவை. இவை **ஆன்மீகப் பிறப்புற்ற ஆன்றோர், சான்றோர்** என்பதைக் குறிக்கும்.

'ஈன்றாள் பசிகாண்பானாயினும்' என்று தொடங்கும் (656) குறட்பாவில் கூட, 'ஈன்றாள்' என்னும் சொல் 'உடலைப் பெற்றவள்' என்னும் பொருள் தொனிக்கும்படி வழங்கப்பட்டுள்ளமை காணலாம்.

ஈன்ற பொழுதில் என்பதில் 'பொழுது' என்னும் சொல் தாயின் பிள்ளைப் பேற்றின் முதற் பிறப்பைச் சுட்டி, அதன்பின் பிள்ளை சான்றோன் எனக்கேட்ட 'பொழுது' ஆகிய **இரண்டாம் பிறப்பை**க் குறித்துக் காட்டுகிறது. முன்னது சிறு பிறப்புக்குரிய சிறு பொழுது; பின்னது பெரும் பிறப்புக்குரிய பெரும் பொழுது; முன்னது துன்பத்தை மறக்க வைக்கும் ஆற்றலுள்ள இன்பமாயினும் சிறு திற இன்பம். பின்னதோ இன்பத்தையே பேரின்பமாக்கித் துன்பத்தைக்கூடப் பெரும்பேரின்பமாக்கும் ஆற்றலுடைய இன்பத்துள் இன்பம், தாய் இன்பம், கடவுட் பேரின்பம் ஆகும்''. (மணிவிளக்கவுரை II பக். 538).

இந்த 'ஆன்மீகப் பிறப்பு' பற்றி இயேசு கிறித்து அறிவித்தார்.

யூதருள் பரிசேயர் என்ற ஒரு பிரிவு உண்டு. மக்களிடையே செல்வாக்கு மிக்கவர்களாய் விளங்கிய அவர்கள் மறை

வல்லுநர்கள் எனக்க நதப்பட்டனர். இவர்களுள் 'நிக்கோதேமு' என்ற பெயர் கொண்ட ஒருவன் இயேசுவைப்பற்றிக் கேள்விப் பட்டிருந்தான். அவர் ஆற்றிவரும் புதுமைச் செயல்களும் அவன் செவிக்கு எட்டின. புதுமைகளையும் அவைகளைச் செய்கின்ற வரையும் குறித்து என்ன நினைப்பதென்றே தோன்றவில்லை நிக்கோதேமுவுக்கு. நேரில் கேட்டு அறிய நினைத்தான்.

கடவுளின் சிறப்பான அருளையும் ஆதரவையும் பெற்றிருந் தாலன்றி எம்மனிதனும் இயேசு செய்து வரும் அரிய புதுமைச் செயல்களைச் செய்ய இயலாது என்று அவன் மனத்தில் பட்டது. இதை முதன் முதலில் இயேசுவிடம் வெளிப்படுத்துகிறான் நிக் கோதேமு. "குருவே நீர் கடவுளிடமிருந்தே அருளாசிரியராக வந்துள்ளீர் எனத் தெரிகிறது. ஏனெனில், கடவுள் தன்னோடிருந் தாலொழிய எவனும் நீர் செய்யும் இப்புதுமைச் செயல்களைச் செய்ய இயலாது!" என்று வாயார வாழ்த்தி நின்றான்.

பரிசேயர் வெளியாசாரங்களுக்குப் பேர்போனவர்கள். உள் ளொன்று வைத்துப் புறமொன்று பேசிச் செயலாற்றும் வெறும் வெளிவேடத்தில் மன நிறைவுறும் பரிசேயருள் இவனும் ஒருவன். ஆகவே, இங்ஙனம் வெளிப்படையாகப் புகழ்மொழி களைத் தாராளமாக] வழங்கினால், இயேசு மனநிறைவுற்றுத் தன்னை மெச்சிக்கொள்வார் என்று நினைத்தான்போலும். பிறர் புகழ் தேடும் சாதாரண மனிதருள் இயேசுவும் ஒருவராயிருந்திருந் தால் இந்நிறைவான புகழ்மொழியைக் கேட்டதும் மயங்கியிருப் பார். ஆனால், கடவுள் நம் உள்ளங்களை நாடுபவர். நம் உள்ளம் முற்றிலும் அவர்க்கு உரிமையானாலன்றி மனநிறைவு அடை பவரல்லர். ஆதியில் கடவுளின் மக்களாய் அருள் வாழ்வுக்கு அழைக்கப்பட்ட மக்களினம், மீண்டும் அவ்வருளைப் பெற்று, கடவுளின் அன்பு மக்களாய் மாறவேண்டும் என உயர்ந்த குறிக் கோள்களை உலகுக்கு அறிவிப்பதுடன், அவ்வுயரிய குறிக் கோளுக்காகத் தம் உயிரையே பலியாக்க வந்திருந்த ஐந்தவித் தானாகிய மீட்பர் வெறும் மொழிகளால் மயங்கிப் போவாரா?

ஆகவே, நிக்கோதேமுவைப் பார்த்து, "நண்பரே! என்னைப் புகழ்ந்து கூறுவதால், உமக்குப் பயன் என்ன? நான் கடவுளிடமிருந்து அருளாசிரியனாக வந்துள்ளேன் என்று நீர் உண்மையாகவே நம்பினால் என் அருட்போதனையின் வழி நடக்க ஏன் முன்வரவில்லை? கடவுள் என்னோடிருப்பதாக நீர்

எண்ணினால் என் சொல்லை ஏன் ஏற்கவில்லை? வெறும் புகழ்ச்சி மொழியால் மனநிறைவுறாதீர். உம் உள்ளத்தை ஊடுருவி உம்மை முழுவதுமே மாற்றி, உமக்குப் புது வாழ்வு தரக்கூடிய இறைவனின் அருள் பிறப்பை நாடும். அஃதொன்றே பயன்தர வல்லது. அதையுமக்கு அருளவே நான் இங்கு வந்துள்ளேன்! (என்ற கருத்தில் சுருக்கமாக) ஒருவன் மீளவும் பிறந்தாலொழிய இறைவனின் விண்ணரசைக் காணான்; உண்மையிலும் உண்மை இது'' என்றார்.

''மீளவும் பிறப்பதா?'' என்ன வேடிக்கையான கூற்று! என்று நினைத்தவனாய், ''ஒருவன் வயதான பிறகு எப்படிப் பிறக்கக்கூடும்? தன் தாயின் வயிற்றில் மீளவும் நுழைந்து மறுபடியும் பிறப்பானா?'' என்று திகைப்பும் ஏளனமும் கலந்த வண்ணமாகக் கேட்டான் நிக்கோதேமு!

''ஒருவன் நீராலும் பரிசுத்த ஆவியாலும் மீளவும் பிறவாவிடில் கடவுளுடைய பேராட்சியுள் நுழைய மாட்டான். இஃது உண்மையிலும் உண்மை! நீங்கள் அறிந்துள்ளது உடலோடு தொடர்புள்ள பிறப்பு மட்டுந்தான். ஆனால், ஆன்மாவோடு தொடர்புள்ள ஒரு தெய்வீகப் பிறப்பு இருக்கிறது. அஃது எப்படி நிகழ்கிறது என்று அறிய இயலாவிட்டாலும் அஃது உண்டு என்பது மட்டும் உண்மை'' என்று கடவுளுடைய அருளால் மனிதனுடைய உள்ளத்தில் நிகழும் மாற்றம், அதன் விளைவாக அவனுக்கு உண்டாகும் புதுப்பிறப்பு, அதனால் அவன் நடத்த வேண்டிய புதிய அருள் வாழ்வு-ஆகியகருத்துகளையெல்லாம் அறிவுறுத்தினார்.

ஆகவே, இரண்டாம் பிறப்பாகிய ஆன்மீகப் பிறப்பை அடைந்து, பழைய தீய குணங்களையும் தீவினைகளையும் விடுத்து, புதுவாழ்வினை ஏற்று, அதற்கேற்பப் புதுக்கொள்கைகளைக் கடைப்பிடித்துத் தாம் பெற்றுக்கொண்ட இப்புதுமை அருள்வாழ்வுக்கும் அதனால் விளையும் இன்பத்துக்கும் சான்று பகர்பவர்களே சான்றோர் என்க.

இந்நூல் முழுவதும் கூறப்பட்ட கருத்துகளினின்று, 'சான்றோர்' என்னும் பெயர் யாருக்குச் சிறப்பாகப் பொருந்தக் கூடும் என்பதை இதை வாசிப்பவர்களே முடிவு செய்து கொள்வாராக.

பிறவிச் சுழற்சியோடு தொடர்பில்லாத* இரண்டாம் ஆன்மீகப் பிறப்பை மட்டுமே அடைந்து, 'சான்று கூறுவதை'யே தங்கள் சிறப்புக் கொள்கையாகக் கொண்டு வாழ வேண்டியவர்கள் யார் என்பதைச் 'சான்றோர்' என்னும் பெயரால் மட்டுமே முடிவு செய்ய வேண்டுவதில்லை.

சான்றோருடைய வாழ்வுத்தூண்களாக உள்ள உயர்பண்புகளைப்பற்றி இந்நூலில் கூறியுள்ளவையெல்லாம் யாருக்குச் சிறப்பாகப் பொருந்தக் கூடும்? நீங்களே கூறுங்கள்.

இறுதியாக, இயேசு கிறித்துவின் அடியார்களுள் ஒருவரான புனித தோமையார் வாழ்ந்து உயிர் நீத்த தொண்டை நாடு சான்றோருடன் விசேடத் தொடர்புகொண்டதாக உள்ள வரலாற்றுக் குறிப்புகளும் கவனித்தற்பாலன.†

**வருணசிந்தாமணி** (ஆரியவேதம் பக். 12-13) "தொண்டைநாடு சான்றோரால் நிறையப்பெற்றது" எனக் கூறுகிறது. அதே வருணசிந்தாமணியில் பின்வரும் குறிப்பும் உள்ளது.

"இந்துதேச வேளாளருக்கும் அதற்குப் புறம்பாயுள்ள ஈழநாட்டு வேளாளருக்கும் அநேகவகையில் ஆசாரங்கள் வேறுபட்டிருக்கும்."

"ஈழ நாட்டார் சரித்திரங்களை விசாரிக்குமளவில் இவர்கள் பெரும்பாலும் ஈழகுலச் சான்றாராக இருந்திருக்கலாமெனத் தோன்றுகிறது. சிதம்பர க்ஷேத்திரத்தில் இவர்கள் வசிப்பதற்கு வெகுநாள் வரையிலும் இடங்கொடுக்கப்படாதென ஏற்பாடாகியிருந்தது. பின்னர் இத்தீவாந்தரத்தார் அந்த க்ஷேத்திரத்தில் வந்து தங்குவதற்கு இடமின்மையான், அவ்வீழ நாட்டிலுள்ள

---

* புலவர் மு. தெய்வ நாயகம் அவர்கள் எழுதியுள்ள 'எழுபிறப்பு' என்னும் நூலைக்காண்க.

† இவை புலவர் மு. தெய்வநாயகம் அவர்கள் எழுதிய 'சான்றோர் யார்?' என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டன.

ஞானபிரகாசரென்பாரொருவர், அநேக திரவியங்களைச் செல விட்டுத் தங்கள் நாட்டார் வந்து தங்குவதற்குச் சிறிது நிலம் ஒதுக்கித் தரவேண்டுமென யாசித்தனர். அதன் மேல் அச் சிதம்பர க்ஷேத்திரத்திலுள்ளவர் தென்பாரிசத்தில் கொஞ்சம் நிலம் ஒதுக்கி விட்டனர். உடனே அவர், 'ஞானப்பிரகாசம்' எனத் தமது பெயரால் ஒரு குளமும் அதற்கருகில் ஒரு மடமும் ஏற் படுத்திக் கொண்டனர். ஈழ நாட்டிலிருந்து வருபவர்களெல்லாம் இக் காலத்திலும் அம்மடத்தில் வந்து தங்குகின்றார்கள். இவ் வீழத்தார் **சான்றோரேயெனச்** சிதம்பரத்திலுள்ள ஏனைய சாதியார் அவர்களைத் தீண்டலாகாதென இகழ்ந்து வந்தார்கள்.''*

''தக்க தொண்டை நன்னாடு சான்றோ ருடைத்தென்னும் சொல்

திக்கறிய வந்தால் தினகரா ஒக்குமே''
எனக்கூறுகிறது, **தினகர வெண்பா-103**

தொண்டை நாடு சான்றோரிருந்தமையால், நன்னாடு ஆயிற்றாம். தொண்டை நாடு சான்றோராற் சிறப்புப் பெற் றமை திக்கறிந்த செய்தியாம்.

**அடுத்த குறிப்பை** நமக்குக் கொடுப்பது திருக்கழுக்குன்றம் புராணமாகும். திருக்கழுக்குன்றம் தொண்டை நாட்டிலுள்ள ஒரு திருப்பதி. அத்திருப்பதியின் நாட்டுச் சிறப்பைக் கூறும் ஆசிரியர், அந் நாட்டிலுள்ள சோலைகளை வருணித்துப் பாடு கிறார். அச்சோலைகள் தங்களிடம் வருவார்க்கு, எல்லாச் சிறப் பும் சிறிதும் குறைவின்றிச் செய்கின்றனவாம். அவை செய்யும் அச்சிறப்பு எவ்வாறிருக்கிறதென்றால் தொண்டை நாட்டி லுள்ள பழமையான சான்றோர் குடியில் பிறந்தவர்கள் விருந் தினரை ஊட்டுவதைப்போல் இருக்கிறதாம்.

கொய்தள வுகுத்த மெல்லென்
கொழுமலர்க் குப்பை நாப்பண்
பெய்தன கவரிப்பாலும்
பிரசமும் பழத்தின் சேறு

* (வருண சிந்தாமணி-பக்-627-628).

மொய்தரத் தொண்டை நாட்டு
முதுகுடிப் பிறந்த சான்றோர்
எய்திய விருந்தை யூட்டும்
இல்லெனப் பொலிந்த சோலை.
(திருக்கழுக்குன்ற புராணம்-நாட்டுப்படலம்-18).

வள்ளுவர் கூறும் விருந்தெனும் வேள்வி, தொண்டை நாட்டு முதுகுடிப் பிறந்த சான்றோர் இல்லங்களிலே சிறப்புற நடை பெற்றதாக இச்செய்யுள் சான்று கூறுகிறது. இந்நூல் தொண்டை நாட்டு முதுகுடி, 'சான்றோர் குடியே' என்பதை ஆணித்தரமாக அடித்துக் கூறுகிறது.

மூன்றாவதாக, ஒளவையார் தொண்டை நாட்டுச் சான் றோரின் சிறப்பை, மற்றச் சிறப்புகளுடன் ஒப்பிட்டுக் காட்டு கிறார். இச்சான்றோரால் தொண்டை நாடே சிறப்படைந்த தாக ஒளவையார் கூறுகிறார்.

"வேழமுடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து-பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்
றொண்டை
நன்னாடு சான்றோ ருடைத்து."

இச்செய்யுளில் தமிழகத்தின் முப்பெரும் பிரிவுகளைக் கூறி அவற்றுடன் அமையாது, நான்காவதாகிய தொண்டை நாட்டை விதந்து கூறிச் சிறப்பித்ததுடன், அதற்கு 'நன்னாடு' என்னும் அடைமொழியையும், கொடுத்துள்ளார் ஒளவையார். அது நன்னாடு என்னும் சிறப்பையடைவதற்குக் காரணம் சான் றோரை அது பெற்றிருத்தலே எனவும் கூறுகிறார்.

## வாய்மை

### சுருக்கம்

குறிப்பு: முன்னுரை (ஒருவன் செய்தி) — வாசிக்க.

291. "வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல்."

வாய்மை என்பது யாதெனில் தீமை என்பதே இல்லாத இறைவனின் செயல்களை (அறவாழி அந்தணனை-ஐந்தவித் தானை) மக்களுக்கு எடுத்துச் சொல்லுதல்.

292. ''பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்.''

(கூடா ஒழுக்கம், கள்ளம் எனும்) பொய்யான நிலையும் வாய்மையைச் சார்ந்ததாகி விடும் - குறையற்ற இறைவனை உரைப்பதால் கேட்பார்க்கு நன்மை பயக்குமெனின்!

293. ''தன்நெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.''

தீமையிலாத சொல்லலில் உண்மை என்று தன் நெஞ்சு அறிந்துள்ளதை மறைக்க வேண்டா. மறைத்தால் தன் நெஞ்சே தன்னை வாட்டும்.

294. ''உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன்.''

புற ஒழுக்கத்தால் மட்டுமன்று, அக ஒழுக்கத்தாலும் ஒருவன் பொய்ம்மைக்கு இடம் கொடாமல், ஒழுகினால், இவனே மக்கள் உள்ளத்திலும் வாழ்பவனாவான்.

295. ''மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ்செய் வாரின் தலை.''

ஒருவன் முழு மனத்தோடு வாய்மை என்னும் சான்றாண்மையைக் கூறுவானாயின், தவமும் தானமும் செய்ப வரைவிட மேலானவனாவான். (இறைவன் புகழைப் பிறர் புரியு மாறு பணி செய்தலைவிட மேலான தொன்றுமில்லை).

296. ''பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமும் தரும்.''

அகத்தூய்மையுடன் (வெறும் வெளி வேடத்தில் அன்றி) வாய்மை சொலல் போன்ற புகழ் வேறில்லை. இதில் தவறாமை எல்லா அறமும் தரும். (உள்ளத்தூய்மையுடன் தீமையிலாத இறைவனைக் கூறுதலினும் மேலான புகழ் எங்கிருக்க வியலும்)?

297. ''பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.''

இத்தகைய வாய்மைப் பண்பையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்தால், வேறு அறச் செயல்களைப் பற்றிக் கவலையுற வேண்டியதில்லை. வாய்மையே எல்லா அறத்தை யும் தன்னுள் கொண்டுள்ளது.

298. "புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும்."

உடலின் தூய்மை சாதாரண நீரால் அமையக்கூடும். உள்ளத் தூய்மை வாய்மைப்பணியால் அறிந்து கொள்ளலாம். (சான் றாண்மைப் பணியது).

299. "எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு."

சான்றாண்மை என்னும் ஐந்து சால்புத்தூண்கள் மீது தம் வாழ்க்கை அமைப்பவர்க்கு வாய்மையே மெய்யான ஆன்ம விளக்கு. ஏனெனில், அது ஒன்றே மெய்ப்பொருளான இறைவனை அடையச் செய்யும். அருட்பொருள் என்னும் 'பொய்யா விளக்கம் இருளறுக்கும்'' (கு. 753).

300. "யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத் தொன்றும்
வாய்மையின் நல்ல பிற."

மெய் என்னும் பெயருக்குத் தகுதியுள்ளதென்று யாம் கண்ட வற்றுள் வாய்மை என்னும் சான்றாண்மைப் பண்பைவிட நல்லது வேறொன்றுமில்லை. (மெய் என்பதும் வாய்மை என்பதும் ஒன்றன்று எனக் கூறப்படுவது காண்க).

# 31. வெகுளாமை

அறத்துக்கு இழுக்காயமைந்த பண்புகளுள் மூன்றாவது வெகுளி; ஆகவே, வெகுளாமை அறம் வளர்க்கத் தேவையான பண்பாகும். (குறள்-35).

**வெகுளாமை—**

1. 'சினம் செய்தற்குக் காரணம் ஒருவன் மாட்டு உளதாய இடத்தும் அதனைச் செய்யாமை.'—பரிமேலழகர்.

2. 'வெகுளுதற்குக் காரணம் உள்ள இடத்தும் வெகுளா ராதல்'—மணக்குடவர்.

3. 'ஒருவன்மேல் சினம் கொள்வதற்குக் காரணம் இருப் பினும் அதைக் கொள்ளாமை'—பாவாணர்.

4. 'வெகுளும்படி பிறர் நடந்துகொள்ளினும் வெகு ளாமை'—புலவர்குழந்தை.

சினங்கொள்வதற்குச் சில சமயங்களில் தக்க காரணம் இருத்தல் கூடும் என்னும் கருத்து இவ்வுரைகளினின்றே தெளி வாகிறது. ஆகவே, சில சமயங்களில் வெகுளியை வெளிப் படுத்தலாம். சில சமயங்களில் கூடாது. எந் நிலையிலும் கூடாதென்பது மனித இயல்புக்கு ஒவ்வாது. ஏனெனில், வெகுளி என்பது மனிதனின் உள்ளத்தினின்று எழும் ஒருவிதத் தீவிர எழுச்சியேயாகும். எதையும் செய்ய வேண்டும் அல்லது குறிப் பிட்ட தொன்றை தடுத்தேயாக வேண்டும் என்னும் உணர்வு (இதை ஆசை, ஆவல், அவா எனினும் பொருந்தும்) எழுங்கால், அதைத் தக்க முறையில் அளவு மீறாமல் பயன்படுத்த வேண்டும். இது மனித இயல்புக்குப் பொருந்துவது. நன்மை செய்யவோ தீமையை எதிர்க்கவோ எவ்வித மன எழுச்சியுமில்லாதவன் உயிரற்ற பொருளுக்கே ஒப்பாவான். இத்தகையவனையே நாம் 'சுரணை' யற்றவன் என்கிறோம். எந்நிலையிலும் சுரணையற்றிருப்பது மனிதனுக்கு ஏற்புடைய பண்பாகாது.

ஆனால், எங்ஙனம் அளவு மீறிய அவாவினைக் காத்துக் கொள்ள வேண்டுமோ, அங்ஙனமே வெகுளியும் அளவு மீறிச் செல்லாமல் காத்துக் கொள்ளவேண்டும். காரணம் உள்ள இடத்து மட்டுமே அது காட்டப்பட வேண்டும். போதிய காரண மின்றி அளவுக்கு மீறி வெகுளி நிகழ்ந்தால் அது அறத்துக்கு மாறான செயலாகும்.

உதாரணமாக—ஒருவன் தெரிந்தோ தெரியாமலோ குற்றம் செய்து விட்டால், அதனை மன்னிக்காமல் பழி வாங்கியே தீர வேண்டும் என்றால் அளவு மீறிய வெகுளியாகும்.

சிறிய குற்றத்துக்கும் கடுமையான தண்டனை விதித்தால் அதுவும் அளவு மீறுவதாகும்.

மேலும், சில சமயங்களில் ஒருவன் தன்னைவிட மெலியார், எளியார், அதிகாரமற்றவர்மீது எளிதாகச் சினங்கொள்ளக் கூடும். தன்னைவிட வலியார், அதிகாரமுடையாரிடத்தில் சினங்கொள்ள அஞ்சக்கூடும். தன்னைவிட எளியவர் மீது சினங் கொள்வது ஒருவிதத்தில் மேற்சொன்ன அளவு மீறிய சினமே யாகும். அளவுக்குட்பட்டதாயின், எங்குச் செலுத்தப்பட வேண்டுமோ அங்கெல்லாம் அது செல்ல வேண்டும். தன்னை விட மெலியாரிடத்து மட்டும் சினம் கொள்ளின் அது நேர்மை யற்ற செயலேயாகும். நேர்மையற்றது எதுவும் அறத்துக்கு முரணானதேயாகும். இக்கருத்தில்தான், 'அழுக்காறு, அவா, 'வெகுளி, இன்னாச் சொல்' என்னும் நான்கனுள் வெகுளியும் கூறப்பட்டுள்ளது. இக்கருத்தை மேலும் விரித்துக் கூறுபவையே வெகுளாமை' அதிகாரத்துக் குறட்பாக்கள்.

301. "செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
காக்கின்என் காவாக்கால் என்."

**செல்லிடம்**—தன் சினம் பலிக்கும் இடம்—அஃதாவது, தன்னைவிட மெலியாரிடம். இத்தகையோரிடம் சினங்கொள் ளாமல் தன்னை அடக்குவதே மேன்மை—அவனே சினம் 'காப்பவன்' ஆவான்.

அல்லிடத்து—தன் சினம் பலிக்காத இடத்து—அஃதாவது, தன்னைவிட வலியாரிடத்து. இத்தகையோரிடம் சினம் கொள்வது தனக்கே கெடுதியாக முடியக்கூடுமாதலின், சினங் கொள்ளாமல் காத்துக் கொள்வது அரிய செயல் என்பதற்கில்லை.

ஆகவே,

302. "செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்அதனின் தீய பிற."

அஃதாவது, தன்னைவிட வலியார் மீது சினம் கொள்வது தீதே. தன்னைவிட மெலியார் மீது சினம் கொள்வது அதனினும் தீது என்க. ஏனெனில், காக்க வேண்டிய அளவு காக்கப்படுவதில்லை.

ஆகவே,

303. "மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய
பிறத்தல் அதனான் வரும்."

வலியாரோ மெலியாரோ யாரிடத்தும் சினங்கொள்ளா திருப்பதே நல்லது. ஏனெனில், அளவுடன் நேர்மையுடன் யாரிடத்தும் சினம் காட்டத் தேவையோ அவரிடத்து மட்டும் சினங்கொள்வது எளிதன்று.

ஆகவே,

305. "தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்."

## வெகுளாமை

### சுருக்கம்

'வெகுளி' என்பது குணம் குன்றேறி நின்றார்க்கு ஏற்றது. அதை நற்குணமில்லார் தாங்கலரிது ஆகவே, 'வெகுளி' என்பது தன்னிலேயே தீது என்றன்று. அது எங்குக் காட்டப்பட வேண்டுமோ அங்கு மட்டுமே செல்ல வேண்டும். வேண்டாத இடத்தில்; நிலைமையில் வெகுளி தீது என்க.

301. ''செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்
காக்கின்என் காவாக்கால் என்.''

எங்குச் செல்ல வேண்டுமோ அங்கு மட்டுமே செல்லுமாறு சினத்தைக் காத்துக்கொள்வதே சினங்காத்தலாகும். சினம் எழும்பாத காலத்தில் அதைக்காப்பது என்பதன் கருத்தென்ன? பொருள் அற்றது.

302. ''செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்அதனின் தீய பிற.''

செல்ல வேண்டாத இடத்தில் (நிலையில்) சினம் சென்றால் அது தீது. செல்லவேண்டிய இடத்திலும் முறை தவறினால், அதுவும் தீது.

303. ''மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய
பிறத்தல் அதனான் வரும்.''

யாரிடத்திலும் வெகுளியை வெளிப்படுத்தாமல் காத்துக் கொள்க. தீமை நிகழ்வது அதனால் தான்.

304. ''நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்
பகையும் உளவோ பிற.''

முகமலர்ச்சியுடன் கூடிய மகிழ்ச்சியைக் கொல்லும் தன்மையதாகிய சினத்தைவிட வேறு கொடிய எதிரி உண்டோ?

305. ''தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்.''

ஒருவன் தன்னையும் தனது நன்னிலையையும் காத்துக் கொள்ள விரும்பினால் (முறை தவறிய) சினம் எழாதபடி காத்துக் கொள்க. அங்ஙனம் காத்துக்கொள்ளாவிடில் தன் வாழ்வையே பாழ்படுத்திவிடும்.

306. ''சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இன-மென்னும்
ஏமப் புணையைச் சுடும்.''

சினம் என்பது சுட்டெரிக்கும் தீ போன்றது. அது யாரிடம் எழுமோ அவர்களைப் பாழ்ப்படுத்திவிடும். அவர்களை மட்டுமன்று, அவர்களுக்குப் பாதுகாப்புப் போல் உள்ள இனத்தவர்களையும் பிரித்துத் துன்பத்துக்குள்ளாக்கும்.

307. "சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று."

நிலத்தை நோக்கிக் கையால் அறைந்தால் கைதான் துன்புறும். அதுபோலச் சினத்தை ஒரு பொருட்டாக மதித்து ஒழுகுபவனும் துன்புறுவான்.

308. "இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று."

தீப்பந்தங்களால் சுடப்படும்போது ஒருவன்படும் வேதனை போன்று ஒருவன் நம்மைக் கொடுமைப்படுத்தினாலுங்கூட, அதன்பின் (தன் குற்றத்திற்காக வருந்தி மீண்டும்) அன்புறவு கொள்ள வருவானாயின், வெகுளாமல் ஏற்றுக் கொள்வதே நன்று.

309. "உள்ளிய தெல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி எனின்."

ஒருவன் தன் உள்ளத்தில் சினத்திற்குச் சிறிதேனும் இடம் கொடான் எனில், தான் எண்ணியதெல்லாம் நிறைவுறுவதைக் காண்பான். (பொறுத்தவர் பூமியாள்வார்).

310. "இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை."

அளவு மீறிச் சினங்கொள்பவர் மிகப்பெரும் கேடுறுவர்; அத்தகைய சினத்தை நீக்கி ஒழுகுபவர் துறவு பூண்டு ஒழுகுபவர்க்கொப்பாவர்.

# 32. இன்னா செய்யாமை

இன் சொல் ஆள்வது மட்டுமன்று. இன்செயல் செய்வதும் இன்னா செய்யாதிருப்பதும் அறத்தைச் சார்ந்ததாகும்.

மனத்தில் அழுக்கற்றவர் கொள்கை இது என்று கூறப்படுகின்றது, இக் குறட்பாக்களில்.

311. "சிறப்பீனும் செல்வம் பெறினும், பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்."

சிறப்பைத் தரும் செல்வத்தை ஒருவன் அடைந்தாலும், செல்வத்தினால் நிகழும் செருக்கினால் பிறர்க்கு எந்தத்தீமையும் செய்யலாகாது. இஃது அற வாழ்வின் குறிக்கோளாய் இருத்தல் வேண்டும்.

312. "கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்."

கறுத்து—வெகுண்டு

மறுத்து—திருப்பி.

வெகுளியால் ஒருவன் பிறர்க்குத் தீங்கு செய்யினும், அத் தீமைக்குத்தீமை செய்யாதிருப்பதே 'மாசற்றார் கோள்'—அற வாழ்வின் குறிக்கோள்.

'தீமைக்குத் தீமை செய்யாதே' என்பது விவிலியப் படிப்பினையுமாகும். (மத். 5:38—39).

314. "இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்."

தீங்கிழைத்தவர்க்கு ஏற்ற தண்டனையாவது அவர் நாணும்படி நன்மை செய்தலேயாம். இதுவும் விவிலியப் படிப்பினையாகும்.

''நானே உங்களுக்குச் சொல்லுகிறேன்: உங்கள் பகைவர்களுக்கு அன்பு செய்யுங்கள்; உங்களைத் துன்புறுத்துவோருக்காகச் செபியுங்கள். அப்பொழுது வானகத்திலுள்ள உங்கள் தந்தையின் மக்களாயிருப்பீர்கள். அவர் நல்லோர் மேலும் தீயோர் மேலும் தம் கதிரோனை உதிக்கச் செய்கிறார். நீதியுள்ளோர் மேலும் நீதியற்றோர் மேலும் மழைபொழியச் செய்கிறார். உங்களுக்கு அன்பு செய்பவர்களுக்கே நீங்கள் அன்பு செய்தால், உங்களுக்கு என்ன கைம்மாறு கிடைக்கும்? ஆயக்காரரும் இவ்வாறே செய்வதில்லையா?'' (மத். 5:44—46).

தானொரு குற்றமும் செய்யாதிருக்கத் தனக்குத் துன்பம் செய்தவருக்கும் திருப்பித் துன்பம் செய்யலாகாது. செய்தால் மீளாத்துன்பத்துக்கு ஆளாவார்கள்.

''செய்யாமற் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
உய்யா விழுமம் தரும்.'' (313)

ஆகவே,

317. ''எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கும் மனத்-தானாம்
மாணாசெய் யாமை தலை.''

எவ்வகையிலும், எப்போதும், யார்க்கும் மனத்தால்கூடத் தீங்கிழைக்கலாகாது. மனமறிய, வேண்டுமென்றே தீமை செய்யலாகாது. இதுவே மனத்தை மாசறக் காக்கும் வழி. இதுவே அறம்.

## இன்னா செய்யாமை

### சுருக்கம்

311. ''சிறப்புஈனும் செல்வம் பெறினும் பிறர்க்குஇன்னா
செய்யாமை மாசற்றார் கோள்.''

மனித வாழ்வுக்குச் சிறப்புத் தரும் செல்வத்தை ஒருவன் அடைந்தாலும், (அச்செல்வச் செருக்கினால்) பிறர்க்கு எத்தீங்கும் இழைக்காதிருப்பதே மனத்துக்கண் மாசில்லாதவர் கொள்கையாயிருத்தல் வேண்டும்.

312\. ''கறுத்துஇன்னா செய்தவக் கண்ணும் மறுத்துஇன்னா
செய்யாமை மாசற்றார் கோள்.''

வெகுண்டெழுந்து, தனக்குத்துன்பம் இழைத்தவரிடத்தும் (அன்பு காட்டி) துன்பம் இழைக்காதிருப்பதே மேற்கூறிய மாசற்றார் கொள்கையாதல் வேண்டும்.

313\. ''செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
உய்யா விழுமம் தரும்.''

தானொரு குற்றமும் செய்யாதிருக்கத் தனக்கு ஒருவன் துள்பம் செய்தால், (அதையும் பொறுத்தல் வேண்டும்; அன்றி,) தானும் துன்பம் இழைத்தால், இறுதியில் துன்பத்துக்குத் தப்பவே இயலாது.

314\. ''இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்''

தமக்குத்துன்பம் இழைப்பவர்க்குத் தக்க தண்டனை எதுவெனில், அவர் நாணும்படி அரிய நன்மை செய்தலாம்.

315\. ''அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை.''

பிறர்க்கு உண்டாகும் துன்பத்தை தமக்கேயுற்ற துன்பமெனக் கருதி அதைத் தீர்க்க முன் வராவிடில், உண்மையான அறிவு இல்லாமையாகும். (மெய்யறிவிருந்தால் இங்ஙனம் ஒழுகுவான்; அஃதாவது, மேற் சொன்ன துன்பத்தை நீக்க முன் வருவான்.)

316\. ''இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கண் செயல்.''

இன்னின்னவை துன்பம் தருபவை என்று உணர்ந்தபின் அவற்றைப் பிறர்க்குச் செய்தவைத் தவிர்க்க வேண்டும்.

317\. ''எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
மாணாசெய் யாமை தலை.''

எவ்வகையிலும் எப்போதும் எவருக்கும் மனம் பொருந்தித் தீய செய்யாதிருத்தலே தலையாய கடன்.

318. "தன்னுயிர்க்கு இன்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க்கு இன்னா செயல்."

தனக்குப் பிறர் செய்யும் துன்பத்தின் கொடுமையை உணர்ந்தவன் பிறர்க்குத் துன்பம் இழைப்பது எதனாலோ?

319. "பிறர்க்கு இன்னா முற்பகல் செய்யின் தமக்கு இன்னா
பிற்பகல் தாமே வரும்."

பிறர்க்குத் துன்பம் இன்று செய்தால், தமக்குத் துன்பம் நாளை நிகழ்ந்தே தீரும்.

320. "நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்-செய்யார்
நோயின்மை வேண்டு பவர்."

இன்று ஒருவர்க்குத் துன்பம் நிகழ்ந்ததென்றால், நேற்று அவர் செய்த தீமையின் விளைவாகலாம். (எத்தீமையும் செய்யாமல் தாம் துன்புறுவது சில சமயங்களில் நேர்ந்தாலும், பெரும்பாலும் அவனவன் செய்யும் தீமையின் விளைவாகவே துன்பம் நிகழலாம்.)

# 33. கொல்லாமை

321. "அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாம் தரும்."

அறச்செயல் யாதெனில், ஓருயிரையும் கொல்லாமையே. கொல்லுதல் பிற பாவச் செய்கைகள் எல்லாவற்றிற்கும் காரண மாகும்.

இதுவே இக் குறளுக்குப் பொருள் என உரைப்பர் உரை யாளர். அதுவே அதன் பொருளாயிருத்தல் வேண்டுமெனத் தோன்றுகிறது. ஆனால், 'கொல்லாமை' ஒன்றே அறச்செயல் என எங்ஙனம் கூற வியலும்? வேறு நற்செயல்கள் பல இருத் தலான்.

அறத்தை விளக்கும் வள்ளுவர் பின்வருமாறு கூறுகிறார்:

1. 'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்'— மாசற்ற மனமே அனைத்தறன் என்கிறார்.

2. "அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம்." (35)

இந்நான்கு பண்புகளும் இணைந்து அறமாகும் என்கிறார்.

3. "அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்
புறத்த புகழும் இல." (39)

உண்மையான இன்பத்திற்கு வழி அறம் என்கிறார்.

4. "சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்." (173)

பேரின்பம் அடைவதற்கு அறன் தேவைப்படும் என்கிறார்.

'கொல்லாமை' என்னும் சொல்லைச் சாதாரண பொருளில், (அஃதாவது, ஓருயிரைக் கொல்லுதல் என்னும் பொருளில்) கொள்வோமாயின், ஒரு மனிதனைக் கொல்வதற்கு ஏதுவாய்

அமையக் கூடிய அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் இந்நான்கும் இல்லாததே அறம் என்னும் கருத்து ஓரளவு பொருந்தலாம்.

பொதுவாக இன்பத்துக்கும், சிறப்பாகப் பேரின்பத்துக்கும் வழியாயிருப்பது அறம் என்று குறள் கூறுவதால், 'கொல்லாமை' ஒன்றே இன்பத்துக்கு வழி என எங்ஙனம் கூற இயலும்? அதுவும் பேரின்பத்துக்கு வழி என எங்ஙனம் கூறலாம்? இம்மையிலும் மறுமையிலும் இன்பத்தை இழக்கச் செய்யக்கூடிய தீவினை வேறு எதுவுமே இல்லையா? கொல்லாமை தவிர!

மேலும், 'கொல்லாமை' வெறும் எதிர்மறை 'அறவினை.' 'அறவினை **யாதெனில்**' என்று விளங்கக்கூற விரும்பிய ஆசிரியர் ஓர் எதிர்மறை வினையையா மனத்தில் கொண்டிருப்பார்?

ஆகவே, 'கொல்லாமை' என்னும் சொல்லால் ஈண்டு வள்ளுவர் வேறு பொருளையே மனத்தில் கொண்டிருக்க வேண்டும். அப் பொருள் யாது?

மேலும், 'கோறல்' அஃதாவது, உயிர்களைக் கொல்லுதல் பிற தீவினைகளுக்கெல்லாம் வழியாகும் என்பது எங்ஙனம்? ஆறறிவுள்ள மனிதனைக்கொல்வதுமாபெரும் குற்றமே. எனினும் அஃது எங்ஙனம் மற்றெல்லாத் தீவினைகளுக்கும் காரணமாகும்? மனிதனைக் கொன்றவன் மட்டுந்தானா வேறு தீவினைகளைச் செய்கிறான்? கொலையே செய்யாதவன் எத்தனையோ தீவினைகளை இழைப்பதை நாடோறும் காண்கிறோமே!

மனிதனைக் கொலை செய்வதே பிற தீவினைகளுக்கு வழியாகா தெனின், ஐந்தறிவுள்ள உயிர்களைக் கொல்வது எங்ஙனம் பிற தீவினைகட்குக் காரணமாகும்?

ஆகவே, 'கொல்லாமை', 'கோறல்' என்னும் பதங்களால் ஈண்டு ஆசிரியர் கூற விரும்புவது வேறொரு கருத்தே என்பது தெளிவு. இக் கருத்து யாது? வள்ளுவரையே வினவுவோம்.

'அறவினையாதெனில் கொல்லாமை' என்று ஈண்டுக் கூறும் வள்ளுவர்,

''அருள் அல்லது யாதெனில் கொல்லாமை'' என்கிறார். (குறள்-254).

'கோறல் பிறவினை எல்லாம் தரும்' என்று கூறும் வள்ளுவர், 'கோறல் பொருளல்ல தவ்வூன் தினல்' (254) என்கிறார்.

இதனினின்று வெளிப்படுவது யாதெனில், பரிதியார் கூறுவது போல,

**'கொல்லாமையே அருள்; அருள் அல்லாமையே கொலை (கோறல்)'** என்பதாகும்.

அறவினை யாதெனில் கொல்லாமை; கொல்லாமை என்பது அருள்; ஆகவே **அறவினை என்பதும் அருள் என்பதும் ஒன்றே என்னும் கருத்து வெளிப்படுகிறது.**

'அருள்' என்னும் சொல்லால் வள்ளுவர் கூற விரும்புவது என்னவென்று 'சான்றாண்மை' என்னும் எம் நூலில் விளக்கப் பட்டிருக்கிறது.

அது 'செல்வத்துட் செல்வம்'; 'இன்னா உலகம் புகுதலைத் தடுக்கும் சக்தி; மறுமையாகிய அவ்வுலகத்தை அடையச் செய்வது; அஃதில்லாவிடில் மனிதப் பிறவி எந்நாளும் பூப்பதில்லை' என்றெல்லாம் வள்ளுவர் கூறுகின்றார். (அருளுடைமை அதிகாரம் காண்க). அதே வள்ளுவர் அடுத்து வரும் 'புலால் மறுத்தல்' என்னும் அதிகாரத்தில் இவ்வருளை 'புலால் மறுத்தலோடு' பிணைக்கின்றார்.

ஊன் உண்பவனை 'அருள் ஆள்வதில்லை'; 'ஊன் தின்பவர்க்கு அருளாட்சி இல்லை', என்று வலியுறுத்துகின்றார். அஃதாவது:

ஊன் தின்பவன், அருளுக்கு மாறான இருளுக்கு அடிமையாகிறான் என்பது கருத்து. இஃது உண்மையா? அஃதாவது ஊன் தின்பவன் எவனும் 'அருள்சேர்ந்த நெஞ்சி'னன் ஆவதில்லையா? 'இருள் சேர்ந்த இன்னா உலகம்' புகுந்தே தீரவேண்டுமா?

ஊன் தின்பவன் எவனும் அருளில்லாதவன்தானா? மறுமை யாகிய 'அவ்வுலகம்' சேர்வதேயில்லையா? அவன் 'பூப்பதே' இல்லையா? அஃதாவது அழிந்தே போக வேண்டுமா? இக் கருத்தை வள்ளுவர் கூறியிருப்பாரா? வேறு உணவின்றி ஊனையே தின்ன வேண்டிய நிலைமையிலிருக்கும் மனிதப் பிறவிகள், (உதாரணமாக எஸ்கிமோ போன்றவர்கள்) ஊனையே தின்று பழக்கப்பட்டவர்கள்; வள்ளுவர் ஈண்டுக் கூறும் கருத்தையறியாது ஊன் தின்று வந்தவர்கள்; இப்போதும் ஊன் தின்பவர்கள். இவர்களுக்கெல்லாம் 'அவ்வுலகம் இல்லை' என்பது பொருந்துமா? ஊன் தின்பதால் மட்டும் இவர்கள் அருளை அடையவே இயலாத நிலையில் உள்ளனரா? உடலின் இச்சையை அடக்கவோ, அதை ஒறுக்க வேண்டும் கருத்துடனோ, வெறும் வாய்ச்சுவைக்காக ஊன் உண்ணாதிருப்பது ஆன்மீக வாழ்வில் வளர்ச்சி பெற உதவக்கூடும் என்றே வைத்துக்கொள்ள லாம். ஆனால் உடலையோ, உள்ளத்தையோ அடக்கி ஆள வேறு எவ்வழியும் இல்லையா? ஊன் உண்ணாதவன் பொரு ளாசை, பெண்ணாசை முதலிய வேறு ஆசைகளுக்கும், மற்றும் பல குற்றங்களுக்கும் அடிமையானால், அவன் ஊன் தின்ன வில்லையென்ற ஒரே காரணத்துக்காக 'அவ்வுலகம்' புகுந்து விடுவானா? இஃது எங்ஙனம் பொருந்தும்?

ஆகவே, 'புலால் மறுத்தல்' அதிகாரத்தில் கூறப்படும் 'ஊன்தின்னலும்,' 'கொல்லாமை' அதிகாரத்தில் கூறப்படும் 'கோறலு'ம் வேறு ஏதோ ஒரு பொருளையே உணர்த்த வேண் டும் என்க.

இப்பொருளை அறிந்துகொள்ள வள்ளுவரே வழி காட்டு கிறார் எனலாம். 'புலால் மறுத்தல்' அதிகாரத்திலேயே,

> ''அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
> உயிர்செகுத் துண்ணாமை நன்று''

எனக் கூறுகிறார்-

வெறும் ஊன் தின்பதை, அதற்காக உயிர்களைக் கொல் வதை மட்டுமே வள்ளுவர் நினைவில் கொண்டிருந்தால், இவ் வதிகாரத்தில் 'அவிசொரிந்து ஆயிரம் வேட்டல்' குறித்தும், அதற்காக 'உயிர் செகுத்து உண்பது' குறித்தும் கூற வேண்டிய தன் கருத்து என்ன?

இதையெல்லாம் கூர்ந்து நோக்கும் போது வள்ளுவர் கூறும் புலால் மறுத்தலும், கொல்லாமையும் பலியிடுவதற்காக உயிர்களைக் கொல்வதையும், பலியிட்ட பின் அவற்றின் ஊனைத் தின்பதையுமே குறிப்பிடும் என்பதில் ஐயமில்லை.

ஆனால், உடனே வினா எழும். **பலியிடுவதற்காக உயிர்களைக் கொல்லாமையும், அவற்றின் ஊனைத்தின்னாமையும் அருளாகவும் அறவினையாகவும்** ஆகிவிடுமா? 'அறவினை யாதெனில்......' என்னும் குறளின் உட்கருத்து அது தானே?

இவ்வினாவுக்கு, **'ஆவதில்லை'** என்றே பதில் கூற வேண்டும். (காரணம் மேற் கூறப்பட்டது).

**அருளைக் கொணரக்கூடிய வேறொன்றை முன்னிட்டுக் கொல்லாமையும், கொன்ற பின் ஊன் தின்னாமையுமே அறவினையாதல் கூடும்** என்க.

இவ் 'வேறொன்று' எதுவாயிருத்தல் கூடும்? இதற்கு வள்ளுவர் பதிலிறுக்கும் முறையில் ஏதேனும் கூறுகின்றாரா? மேற்குறிப்பிட்ட 'அவிசொரிந்து......' என்று தொடங்கும் குறள் ஓரளவு பதில் காண வழி காட்டுகிறது எனலாம்.

'அவி சொரிந்து ஆயிரம் வேட்டல்' இனித் தேவை இல்லை. அஃதாவது, ஆயிரமாயிரமாகப் பலியிட்டு இறைவனோடு அன்புறவு கொள்வதாக மக்கள் நினைத்த காலம் முடிவுற்றது. இனி ஆயிரம் பலிகள் தேவையில்லை. **ஒரே பலி — ஒரே ஆவி போதும்** என்று இங்கு வள்ளுவர் கூறுவது போல் தோன்றுகிறது. பல்லாயிரக் கணக்கான உயிர்களைப் பலியிட்டு வந்த காலத்தைக் குறிப்பிட்டு இங்ஙனம் கூறுகிறார் என்றே எண்ண வேண்டியிருக்கிறது. ஏன் எனில், மக்கள் பொய் தீர் ஒழுக்க நெறி நின்று, நீடு வாழ்வு பெறும் பொருட்டு, இறைவன் ஐந்தவித்தானாகித் தன்னையே பலியிட்டுவிட்டான். அவன் தந்த 'அவியுணவு' உண்டால் போதும்; என்னும் கருத்து ஈண்டு வெளிப்படுகிறது. இதுவே 'நல்லாறு' அஃதாவது, 'பொய் தீர் ஒழுக்க நெறி' என்கிறார். இதே 'கொல்லாமை' அதிகாரத்தில்.

"நல்லாறு எனப்படுவது யாதெனில் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி." (324)

"இறைவனே ஐந்தவித்தானாகித் தன்னைப் பலியாக்கி, பலியான தன் உடலையே உணவாகக் கொடுத்து விட்டான். ஆகவே, இனி எதைக் கொன்று பலியிட்டும் பயனில்லை," என்று கூறும் நெறியே நல்லாறு என்கிறார். இங்ஙனம் கூறுவது சான்றோர் எனப்படுவோர் நெறியே என்க.

இந்தக் கருத்தில்,

"கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல்
செல்லாது உயிருண்ணும் கூற்று." (326)

அஃதாவது, வெறும் ஊன் தின்பதை விடுத்து, பலியான இறைவன் உடலை உண்பவனுக்கு நீடு வாழ்வு உண்டு; இறந்தாலும் மீண்டும் உயிர் பெறுவான் என்க.

இக் கருத்துகள் மிக அழுத்தமாகவும் விரிவாகவும் விவிலியத்தில் கூறப்படுகின்றன. (அரு. 6:35, 38—63. காண்க).

இவ் வசனங்களில், 'உயிர் தரும் உணவு,' கடைசி 'நாளில் உயிர்ப்பிப்பேன்,' 'நான் குறிப்பிடும் உணவை உண்பவன் சாகான்,' 'என்றுமே வாழ்வான்,' 'உலகம் உய்வதற்காகப் பலியாகும் என் தசையே,' 'என் தசையைத் தின்று......,' 'என் தசை மெய்யான உணவு,' என்னும் சொற்களைச் சிறப்பாக நோக்குக.

ஐந்தவித்தான், பலியான தன் தசையையே, ஊன் உடலையே, உண்ணுமாறு பணிக்கும் போது, வேறு உயிர்களின் ஊன் எதற்கு? இத் 'தசை,' 'ஊன்' பச்சை மாமிசமா என்னும் வினாவுக்கு இறுதியில் இயேசுவே பதில் தருவதைக் காண்க. பச்சை ஊன் உடல், ஒன்றுக்கும் உதவாது. அதனுள்ளிருக்கும், அஃதாவது, பலியானவரின் உடலினுள்ளிருக்கும் 'ஆவியும் உயிருமாம்'—(அரு. 6:63).

"நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை". (328)

என்னும் குறளையும் இக்கருத்திலேயே விளங்கிக் கொள்ளுதல் வேண்டும்.

'வேள்விக்காக உயிர்களைக் கொல்வதால் விளையும் ஆக்கம் நன்றாகும்—பெரிதாகும்' எனினும் சான்றோர்க்கு அவற்றால் எப்பயனுமில்லை.

'எனினும்' என்னும் சொல்லை, 'நல்லாறெனினும் கொளல் தீது' (குறள் 222) என்பதிற்போல் கொள்க (பாவாணர் உரை). அஃதாவது, அது நல்லாறு அன்று என்பது கருத்து. அதுபோல இக்குறளிலும் வேள்விக் கொலையால் விளையும் ஆக்கம் நன்றுமன்று; பெரிதுமன்று என்றவாறு.

## கொல்லாமை
### சுருக்கம்

புலால் மறுத்தல் அதிகாரத்தில் துறவிகட்குச் சிறந்த ஒழுக்கம் கூறப்பட்டது. பலியிடப்பட்ட உயிரின் புலாலை உண்பதும் பயனற்றது என அங்குக் கூறப்படுகிறது. இப்பகுதியில் 'கொல்லாமை' என்னும் சொல்லால் ஆசிரியர் கூற விரும்புவது பொதுவாக உயிர்களைக் கொல்லாமை மட்டுமன்று. எவ்வுயிரையும் வருத்தாமைபற்றியும்கூட எனப் புலப்படுகிறது. இதனால் தான் 'இன்னாசெய்யாமை' பகுதிக்குப் பின் கூறப்படுகிறதோ!

321. ''அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்
 பிறவினை எல்லாந் தரும்.''

அறச்செயல் யாதெனில் (அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச்சொல் இவற்றின் விளைவாகப் பிறரை வாட்டி) வருத்தக்கூடிய செயலைத் தவிர்த்தல். சிறப்பாகத் தன்னைப் போன்ற (மனித) உயிரைக் கொல்லாமை. மனித உயிரை எடுக்கக்கூடிய அளவுக்கு ஒருவன் கொடுமை புரிந்தால், வேறு எந்தத் தீய செயலைத்தான் செய்யாமலிருப்பான்? (புலால் மறுத்தல் பகுதியில் பிற உயிர்களைக் கொல்லுதல்பற்றிக் கூறப்படுகிறது. இப்பகுதியில் மனித உயிரைக் கொல்லுதல் பற்றிக் கூறப்படுகிறது என்பதே பொருத்தமாகத் தோன்றுகிறது. விளக்கம் எம் விரிவான நூலில் காண்க. இதனால்தான் அடுத்த குறளில் பிறர் உயிரைக் கொல்லாமை மட்டும் போதாது; மாறாக ஓம்புதல் வேண்டும் என்றும் கூறுகிறது).

322. "பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாந் தலை."

தனக்குள்ளதைப் பிறரோடு பகிர்ந்துகொண்டு பலருடைய உயிரையும் பேணுதலையே அறிஞர்கள் தொகுத்துக் கூறிய வற்றுள் தலையாய கொள்கை என்க. (ஆடுமாடுகளோடு பகிர்ந்து கொள்வதினும் பிறராகிய 'துவ்வாதார், இறந்தார்' இவர்களுடன் பகிர்ந்து கொள்வதே சிறப்பு என்க. (42, 44 குறட்பாக்கள் காண்க). 'ஓம்புதல்' என்னும் சொல்லுக்குத் 'தன் உயிரையும் கொடுத்துப் பேணுதல்' என்று பொருள் இருப்பதால், இக்குறள் மனித உயிர்கட்கே பொருந் தும். தன் உயிரையும் கொடுத்து ஆடுமாடு நாய் முதலிய உயிர் களைக் காத்தல் வேண்டும் என்னும் கருத்துப் பொருந்தாது.

323. "ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றுஅதன்
பின்சாரப் பொய்யாமை நன்று."

(மேற்கூறிய கருத்தில்) கொல்லாமை தனிச் சிறப்புடைய நற்செயல். அதற்கு அடுத்தபடியாக, அஃதாவது, உடல் உயிரைக் கொல்வதற்கு அடுத்தபடி பொய்சொல்லி ஒருவனது நற்பெயரைக் கெடுத்து அவனது வாழ்வுக்குப் பெரிதும் தீங்கு இழைப்பதாகும்.

324. "நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி."

நல்வழி எனப்படுவது யாதெனின், யாரையும் கொல்லாமை மட்டுமன்று, எவ்வகையிலும் பிறரை வருத்தாமலும் ஒருவனது வாழ்வைப் பாழ்படுத்தாமலும் இருப்பதுமாகும்.

325. "நிலைஅஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலைஅஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை."

உலகில் காணும் பல தீமைகளுள் மிகுந்த அச்சத்துடன் நீக்க வேண்டிய தீமை, பிறரது நல்வாழ்வைச் சீர்குலைப்பதாகிய தீமையே. இத்தீமையை நீக்குதல் தலைசிறந்த அறமாகும். ஒருவனது நற்பெயர் கெட்டபின் அதனால் வாழ்க்கை பாழ்பட்ட பின் வாழ்வதிலும் சாவதே மேல் என்றவாறு.

326. "கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாள்மேல்
செல்லாது உயிருண்ணுங் கூற்று."

ஒருவனது உயிரையும் நற்பெயரையும் காப்பதாகிய அறத்தை மேற்கொண்டு ஒழுகுபவனது வாழ்நாளை உயிர் வாங்கும் கூற்றும் குறைக்க இயலாது. அஃதாவது, உலகிலே நெடுநாள் வாழ்வான்.

"வாழ்வை விரும்பி இன்பநாளைச் சுவைக்க விழைபவன் தீமையினின்று தன் நாவைக் காத்துக் கொள்க. தீமையினின்று விலகி நன்மை செய்க" என்கிறது விவிலியம்.
(1 இரா. 3:10-11).

327. "தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை."

தன் உயிரே போவதாயிருந்தாலும் அல்லது (மேற்கூறிய கருத்தில் தன் வாழ்க்கையே பாழ்பட்டுப் போவதாயிருந்தாலும்) பிறருடைய உயிருக்கோ பெயருக்கோ எத்தீங்கும் நிகழாத வாறு காத்துக்கொள்க.

328. "நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை."

பிறர்க்குத் தீங்கிழைப்பதால் தனக்கு ஆக்கம் (பொருள்) நிரம்ப வருவதாயினும், சான்றோர்க்கு (வேள்வியின் பொருட்டு உயிரைக் கொன்றாலும், அல்லது வேறு காரணத்துக்காக ஒருவர் உயிரைப் போக்கினாலும், அல்லது அவரது நற்பெயரைக் கெடுத்தாலும்) இது நன்மையாகக் கருதப்படாது; தீமையேயாம்.

329. "கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து."

உயிர்க்கொலை, அல்லது பெயர்க் 'கொலை' எக் கொலையைச் செய்தாலும் அங்ஙனம் செய்பவர், இத்தகைய

செயலின் இழிவை அறிந்தவர் உள்ளத்தில் இழிவு பெற்ற வராகவே விளங்குவர்.

330. "உயிர்உடம்பின் நீக்கியார் என்ப செயிர்உடம்பின்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்."

குறை நிறைந்த உடம்புடன் தீய வாழ்க்கை நடத்துபவர், தங்கள் உயிரைத் தாமே நீக்கிக் கொண்டவர்க்குச் சமமாவர். அவர்கள் வாழ்ந்து பயனில்லை.

# 34. நிலையாமை

331. "நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை."

நிலைபெறாத உலக வாழ்க்கையும் அதில் கிடைக்கும் சிற்றின்பமும் என்றுமே நிலைத்திருக்குமென மதி மயங்கு பவர்களது அறிவு மிக இழிவானது.

332. "கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று."

ஒருவனுக்குப் பெருஞ்செல்வம் இருப்பினும், அது கூத்து நிகழும் அவையில் உள்ள கூட்டம் போன்றது. கூத்து முடிந்த வுடன் கூட்டம் கலைவதுபோல் வாழ்க்கை முடிந்ததும் செல் வமும் கலையும். (ஆகவே அதை நம்பி வாழ்தலாகாது).

333. "அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல்."

பொருட்செல்வம் நிலையில்லா இயல்பினது. அஃது உண்டா னால் அறச்செயல்களால் விளையக்கூடிய நிலையான அருட் செல்வத்தையடைய முயல்க.

334. "நாளென ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாளது உணர்வார்ப் பெறின்."

'நாள்' என்பது காலத்தின் வரையறையேயாயினும், ஒவ்வொரு நாளும் மனிதனின் உயிரைச் சிறிது சிறிதாக அறுத்துக்கொண்டே போகும் வாள் போன்றது. உண்மையை உணர்ந்தவர்களுக்கு இது தெளிவு.

335. "நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்."

பேச வியலாதவாறு நாக்குக் குழற விக்குள் கிளம்புமுன் நற்
செயல்களைத் தீவிரமாகச் செய்க. சாகும் வரையில் காத்திராதீர்.

336. "நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்துஇவ் வுலகு."

நேற்றிருந்தான், இன்றில்லை (இறந்து விட்டான்) என்னும் பெருமைதான் இவ்வுலகுக்கு உண்டு. அத்துணை நிலையில்லாதது உலக வாழ்க்கை.

337. "ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப
கோடியும் அல்ல பல."

ஒரு நொடிப்பொழுதில் பிரியக்கூடும் என்றுணராமல், பல்லாயிர வீண் எண்ணங்களில் நேரத்தை விரையமாக்குபவர் பலர்.

338. "குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு."

உடம்போடு உயிருக்குள்ள உறவு எத்தகையதெனில், முட்டை ஓடு தனியாகக் கிடக்க உள்ளிருந்த பறவைக்குஞ்சு வெளிவந்தது போலாம்.

339. "உறங்கு வதுபோலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு."

உலகில் நாம் பிறப்பது தூங்கியபின் விழித்துக் கொண்டது போல; இறப்பதே விழிப்பு நேரத்துக்குப் பின் தூக்கம் கொண்டது போல. (தூங்குவதும் விழிப்பதும் நம்மையறியாமலே நிகழ்பவை! அத்துணை நிலையற்றது வாழ்வு. நினைப்பதற்கு முன் போய்விடுகிறது உயிர். உலகில் பிறந்ததும் நாம் நினைக்காமலேதான். எல்லாம் இறைவன் கையில் உள்ளது என்றவாறு).

340. "புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு."

உடம்புக்குள் ஒருசிறிது ஒதுங்கிக் கிடந்த உயிர்க்குத் தங்கி வாழ்வதற்கு இல்லம் ஒன்று ஈண்டில்லை. (மறுமையில் மட்டுமே உண்டு என்றவாறு).

# 35. துறவு

341. ''யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.''

எந்தெந்தப் பொருளின் மீது ஒருவன் பற்றுக் கொள்ளாமல் நீங்குகின்றானோ அந்தந்தப் பொருளால் துன்புறான். (அருட் பொருளை விடுத்து பொருட்பொருள்மீது பற்றுக்கொள்வதே துன் பத்துக்குக் காரணம் என்றுணர்க).

342. ''வேண்டின்உண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டுஇயற் பால பல.''

பொருட்பொருள்மீது பற்றினை விடுக; விட்டபின் இவ்வுல கிலேயே நுகரக்கூடிய அறத்தால் வரும் இன்பம் பல உண்டு. (ஆனால், இவற்றை நுகர வேண்டுமாயின் மேற்சொன்ன பற்றினை விடுதல் அவசியம்).

343. ''அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு.''

(மேற்கூறிய அருட்பொருள் இன்பம் வேண்டுமாயின்) ஐம்புலன்களை வெல்லுதல் வேண்டும். அப்புலன்கள் வாயிலாக ஒருவன் தேடும் பொருட்பொருளை விட்டுவிடல் வேண்டும்;.

344. ''இயல்பாகும் நோன்பிற்கொன்று இன்மை உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து.''

பொருட்பொருள் மீது பற்றில்லாமை துறவுக்கு இலக்கணம். பற்றுடைமையோ மேலும் மேலும் பற்றினை வளர்ப்பதாகும்.

345. ''மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை.''

பிறப்பிலேயே உண்டாகும் பொருட்பற்றை அறுத்தொழிப்ப வர்க்கும், வேறெதன் மீதும் பற்றில்லாவிடினும், தன் உடம்பின்

மீது பற்றுண்டாகக்கூடும். அதையும் நீக்குபவனே உண்மைத் துறவி.

346. "யான்எனது என்னும் செருக்குஅறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்."

யான் என்னும் செருக்காகும் அகப்பற்றையும், எனது என்னும் பொருட்பற்றையும் நீக்குபவரே வானவரினும் மேலான மதிப்புப் பெறுவர். (ஈண்டு வானவர் என்னும் சொல்லால் குறிக்கப்படுபவர் வானவரம்பர் எனத் தெரிகிறது).

347. "பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு."

பொருட்பொருள் மீது பற்றினை விடாதவரை துன்பங்கள் பல பற்றிக்கொண்டு துன்புறுத்தும்.

348. "தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்."

முழுமையான மனத்தோடு துறவுநிலை கடைப்பிடிப்பவரே, தலை சிறந்தவர்கள்; மற்றவர்கள் மயக்கமுற்றுத் துன்பமாகிய வலையில் சிக்குண்டவரே.

349. "பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும்."

பற்று நீங்கியபோது பிறப்பினால் இயல்பாக உண்டாகும் துன்பநிலை அறுபடும். மேலும் உலகின் நிலையாமையும் காணப்படும்.

350. "பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு."

பொருட்பற்று இல்லாதவன் உள்ளத்தில் காணப்படும் அருட்பற்றை நீயும் பற்றிக் கொள்க. (பொருட்பற்றை விடுவதற்கு அவ்வருட்பற்றே உறுதுணையாம்).

# 36. மெய்யுணர்தல்

351. "பொருளல்ல வற்றைப் பொருளென்று உணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு."

அருட்பொருளாகிய மெய்ப்பொருளல்லாதவற்றை மதிக்க வேண்டிய பொருளென்று உணரும் மயக்கமுற்ற அறிவினன் மாண்பில்லாத பிறப்பினன் ஆவான்.

352. "இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு."

அறிவு மயக்கம் நீங்கியவராய் (இறைவனது) மாசற்ற காட்சியை (அவன் அருளால்) பெற்றவர்க்கு ஆன்ம இருள் நீங்கி உண்மையான இன்பம் உண்டாகும். (பேரின்பத்தின் தொடக்க நிலை உண்டாகும்).

353. "ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணிய துடைத்து."

மெய்ப்பொருளாகிய இறைவனது அருளை ஐயமின்றி உணர்ந்தவர்க்கு இவ்வுலகைவிட வான் உலகே அருகில் உள்ளதுபோல் தோன்றும்.

354. "ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு."

ஐம்புலனறிவு எய்திய போதிலும் உண்மையான (ஆறாம்) அறிவாகிய பகுத்தறிவினால் எய்தக்கூடிய மெய்யுணர்வு இல்லாதவர் எப்பயனும் எய்தார்.

355. "எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."

ஒருவர் கூறும் அறிவுப்பொருள் எத்தன்மையதாயினும் கூறுவதன் ஆழ்ந்த உண்மைப்பொருளைக் காண்பதே உண்மையான அறிவாகும்.

356. ''கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.''

உலக வாழ்வில் அருளாகிய மெய்ப்பொருளை கண்டுணர்ந்தவர், உலக வாழ்வுக்குரிய பொருட்பொருளை விரும்பாமல் துறவுநிலையை அடைவர்.

357. ''ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.''

ஒருவனது உள்ளம் நிலைத்துள்ளதாகிய மெய்ப்பொருளை ஆய்ந்து உறுதியாக உணர்ந்தால், இவ்வுலகப் பிறப்பைக் குறித்துக் கவலைப்படவேண்டியதில்லை. அங்ஙனம் உணர்வதே பிறப்பின் பயன் என்றவாறு.

358. ''பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு.''

பிறப்பால் உண்டாகும் பேதைமை நீங்க அனைத்திலும் சிறந்த செம்பொருளை (இறைவனை) அருளால் காண்பதே அறிவு.

359. ''சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய்.''

ஒருவன் தன்னைச் சார்ந்து நிற்கக்கூடிய பொருள் அல்லது ஆட்கள் இவற்றின் நிலையில்லாத் தன்மை உணர்ந்து அவற்றைச் சார்ந்து நில்லாமல் ஒழுகுவானாயின், அவனைச் சார்ந்து வரக்கூடிய துன்பங்கள் அவ்வொழுக்கத்தைக் கெடுத்து விடா.

360. ''காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்.''

காமம், வெகுளி, மயக்கஅறிவு இம்மூன்றையும் அடியோடு மறந்தால் உள்ளத்தின் நோய் (துன்பம்) நீங்கிவிடும்.

# 37. அவா அறுத்தல்

அடுத்து அறத்துடன் பொருந்தாதது அவா என்கிறது குறள்.

அவா என்பதுபற்றி வள்ளுவர் 'அவா அறுத்தல்' அதிகாரத்தில் கூறுவது காண்கிறோம். இவ்வதிகாரம் (இன்றுள்ள அதிகார முறைப்படி) துறவறத்தின் கீழ் உரைக்கப்படுகிறது. ஆனால், **அவா** அறுத்தல் என்பது துறவிகளுக்கு மட்டுமே உரிய தொன்றன்று; எல்லாருக்மே தேவையானதொரு பண்பு என்பது தெளிவு.

அவா என்னும் சொல்லுக்கு அளவு மீறிய ஆசை என்றே பொருள் கொள்ளுதல் வேண்டும். எவ்வித ஆசையும் இருத்தலாகாது என்றால், இங்ஙனம் ஆசையே இருத்தலாகாது என விரும்புவதும் ஆசைதானே என்னும் வினா எழும். எவ்வித ஆசையுமின்றி ஒருவன் எச் செயலும் ஆற்றுதல் இயலாதன்றோ? ஆகவே, வாழ்க்கைக்கு இன்றியமையாததை மட்டுமே விரும்பி, தகாத எந்த ஆசையையும் அகற்றி, அத்தகைய ஆசையால் உள்ளம் களங்கமுறும் என்று வாழ்வதே இங்குக் குறிப்பிடப் படுகிறது என்க.

இத்தகைய 'அவா இன்மையே 'தூஉய்மை'—அழுக்கற்ற மனம்—என்பது இவ்வதிகாரத்தில் வரும் குறளிலிருந்தே புலப் படுகிறது.

'தூஉய்மை என்பது அவா இன்மை' என்கிறது 364-ஆம் குறள்.

இக்கருத்தைக் காலிங்கர் உரை கூறுகின்றது. "ஒருவன் மனத்தூய்மை என்று சொல்லப்படுவது யாதோ எனில், யாதொன்றன் மாட்டும் அவா இன்மையே." யாதொன்றன் மாட்டும் அளவு மீறிய அவா இன்மை என உணர்க.

இஃது அழுக்கறுத்தலேயாகும். "ஒருவர்க்கு அழுக்கறுத்த லாவது ஆசை இன்மை" என்கிறது மணக்குடவர் உரை. அளவு

மீறிய ஆசையால்தான் மனம் அழுக்கடைகிறதாதலால், நேர்மையான தகுதியுள்ள பிறர் நன்மைக்கான அவா எனில் எங்ஙனம் தூய்மை கெடவியலும்?

மேலும், இத்தூய்மை 'வாஅய்மை வேண்டவரும்' என்றிருக்கிறது. இங்கு 'வாய்மை' என்னும் சொல்லுக்கு 'மெய்ம்மையுடைய பரத்தையுடையவன் எனப் பொருள் (ஆகு பெயராகக்) கூறுகிறார் பரிமேலழகர்' இதையே மேலும் விளக்குகிறார், தேவ நேயப்பாவாணர். ''என்றுமுள்ள ஒரே மெய்ப் பொருள் பரம் பொருளாதலின் அதை வாய்மை என்றும்......'' என்கிறார், இதையொட்டியே ''வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும் தீமை இலாத சொலல்'' என்கிறது குறள்' 'யாதொன்றும் தீமை இலாத' என்பது மெய்ப்பொருளாகிய பரம் பொருளைச் சார்ந்ததேயன்றோ? ஆகவே, இத்தகைய பரம் பொருளை 'வேண்ட' (விரும்ப)த்தானே வரும். ஆகவே, அவாவின்மையாகிய தூய்மை, பரம் பொருளை வேண்டுவதால் உண்டாகும் என்பது கருத்து. இது துறவறத்தார்க்கு மட்டுமேயன்றி இல்லறத்தார்க்கும் பொருந்துவதன்றோ? ஆகவே இக்கருத்து அறத்துக்கு — அறவாழ்வுக்குப் பொதுவாகப் பொருந்துவதொன்றாகும்.

மேலும்,

363. ''வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்பது இல்.''

எதையும் அளவு மீறி விரும்பாமையே ஒருவனுக்கு விழுமிய செல்வமாகும். 'போது மென்ற மனமே பொன் செய்யு மருந்து' என்னும் பழமொழி நோக்குக. இப்பழமொழியில், ஆசிப்பதே தவறு என்னாமல், குறிப்பிட்ட அளவே ஆசித்தல் வேண்டும்; அளவு மீறி ஆசித்தலாகாது. இன்றியமையாத தேவை நிறைவுற்ற பின் 'போதும்' என்றிருந்துவிட வேண்டும் என்னும் கருத்துகள் வலியுறுத்தப்படுவது காண்க. இதுவும் இல்லறத்தார், துறவறத்தார் அனைவர்க்கும் பொது விதியேயாம். இத்தகைய 'வேண்டாமை' மேலுலகிலும் இல்லை என்று கூறுகிறது குறள். இதன் கருத்தென்ன?

'ஆண்டு' என்னும் சொல்லுக்கு 'மறுமை' மேலுலகம், தெய்வ உலகம் என்று பொருள் கூறப்படுகிறது. இனி மறுமையில்

'வேண்டாமை அன்ன விழுச் செல்வத்துக்கு ஒப்பானது இல்லை' என்றால் பொருள் யாது? மேலுலகில் 'வேண்டாமையே செல்வமாகும்' என்பதே கருத்தெனப் புலப்படுகிறது. ஏன்? ஒருவன் விரும்பியதெல்லாம் எய்தும் நிறைவான நிலையே மேலுலகம்—மறுமை. விரும்பியதெல்லாம் எய்திய பின் வேண்டுவது வேண்டாதது என்னும் பேச்சு எங்ஙனம் இருத்தற் கூடும்? இத்தகைய நிறைவினையுடைய இறைவனே வேண்டுதல் வேண்டாமை இலான் அன்றோ? ஆகவே, மறுமையில் இறைவனடி சேர்பவன், அவனைப்போலவே நிறைவு எய்துகிறான். ஏனெனில், அவனுக்கு 'யாண்டும் இடும்பை இல'; முடிவற்ற 'நீடு வாழ்வு' எய்துகிறான்; மனக்கவலையெல்லாம் நீங்கிய நிலை அடைகிறான்; பிறவியாகிய பெருங்கடலையும் நீந்திவிடுகிறான்; பரம்பொருளையே அடைகிறான். ஆகவே, அவன் ஆசிப்பதற்கு ஒன்றுமில்லை. இதுவும் இல்லறத்தார், துறவறத்தார் அனைவர்க்குமே பொதுவாகும்.

366. "அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா."

(ஒரும்—அசை நிலை).

ஒருவனை வஞ்சிப்பதற்கு மூலகாரணம் அவா—அளவு மீறிய ஆசையே. அளவு மீறிய ஆசைக்குக் காரணமோ தீயமனம்—கோணலான உள்ளம்—மாசுற்ற நெஞ்சம்—அழுக்கு மனமேயாம். ஆகவே, இத்தகைய அழுக்கு மனத்திற்கும் அது விளைவிக்கும்—வஞ்சிக்கும் மனப்பான்மைக்கும் அஞ்சி ஒழுகுவதே **அறனாகும்.** இதுவும் துறவறத்தார் இல்லறத்தார் அனைவர்க்கும் பொதுவே.

'அவாவில்லார்க்கில்லாகும் துன்பம்' என்கிறது குறள் 368. 'அவா' ஓங்குமிடத்து 'அறம்' ஓங்குவது அரிது. ஏனெனில், அளவு மீறிய அவா அழுக்கு மனத்தை விளைக்கும். அழுக்கு மனம் உள்ளவிடத்து அறம் வளர்வதில்லை. ஆகவே, துன்பம் விளைந்தே தீர வேண்டும். 'அறத்தான் வருவதே இன்பம்' அன்றோ?

இக்கருத்தே அடுத்துவரும் குறளிலும் அழுத்தமாகக் கூறப்படுகிறது. 'அவா என்பதே துன்பத்துள் துன்பம்' எனப்படுகிறது. அது ஒழிந்தால்தான் இடையறாத இன்பம் மறுமையில் மட்டுமன்று, இம்மையிலும் உண்டாகக் கூடும்.

இவ்வதிகாரத்தின் எஞ்சிய குறட்பாக்கள் சிறப்பாகத் துறவறத்தார்க்கே பொருந்தும் என்க.

## அவா அறுத்தல்
### சுருக்கம்

361. ''அவாஎன்ப எல்லா உயிர்க்கும்எஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து.''

பிறப்பிலேயே உண்டாகும் துன்பத்தை (ஆதிவினையால் உண்டாவதை) மனித உயிர்களுக்கெல்லாம் எப்போதும் ஓயாமல் தரும் விதையே அவா (அல்லது அளவுமீறிய ஆசை) என்பது.

362. ''வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.''

(ஆதிவினையின் விளைவாக) பிறப்போடு வரும் துன்பம் இல்லாமையையே ஒருவன் விரும்புகிறான். அளவுமீறிய ஆசையை ஒருவன் நீக்கிவிடின் அத்துன்பமில்லாமை வந்தெய்தும்.

363. ''வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்பது இல்.''

அளவுமீறிய ஆசையின்மை போல மேலான செல்வம் வேறில்லை. அதற்கு ஈடானதும் இல்லை.

364. ''தூஉய்மை என்பது அவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.''

மனத்துக்கண் மாசின்மை அளவு மீறிய ஆசையின்மையே. (சான்றாண்மைத் தூண்களுள் ஒன்றான) வாய்மையை ஒருவன் விரும்பினால் அம்மாசின்மை உண்டாகும். (யாதொன்றும் தீமையிலாத சொலல், யாதொன்றும் தீமையிலாத நினைத்தல், செயலுக்கு வழியாம்).

365. ''அற்றவர் என்பார் அவாஅற்றார் மற்றையார்
அற்றாக அற்றது இலர்.''

துன்பம் அற்றவர் யார் எனில், அளவு மீறிய ஆசையற்ற வரே. மற்றவர் முழுமையாகத் துன்பமின்றி இரார்.

366. ''அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா.''

இத்தகைய அளவுமீறிய ஆசையை அஞ்சி ஒதுக்குவதே அறத்துக்கு வழி. பிறரை வஞ்சிப்பதற்கு வழியாவது அந்த அளவு மீறிய ஆசையே. (வஞ்சிப்பதால் அறம் நிலைக்காது என்ற வாறு).

367. ''அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை
தான்வேண்டு மாற்றான் வரும்.''

அளவு மீறிய ஆசையை முழுதும் நீக்கினால் ஒருவன் விரும்பும் அறச்செயல்கள் செய்ய ஆற்றல் விளையும்.

368. ''அவா இல்லார்க் கில்லாகுந் துன்பம்அஃ துண்டேல்
தவாஅது மேன்மேல் வரும்.''

அளவு மீறிய ஆசையில்லாதவர்க்குத் துன்பம் நிகழாது; அத் தகைய ஆசை உண்டாயின் துன்பம் மேன்மேலும் உண்டாகும்.

369. ''இன்பம் இடையறா தீண்டும் அவாவென்னும்
துன்பத்துள் துன்பங் கெடின்.''

துன்பம் தருபவற்றுள் மிகக் கொடியதான (அளவு மீறிய) ஆசை நீங்கினால், நீங்காத இன்பம் உண்டாகும்.

370. ''ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்.''

மன நிறைவு தராத இயல்புடைய இந்த அவாவை ஒருவன் நீக்கி விட்டால், அந்நிலையே அவனுக்கு நிலையான மன நிறைவைத் தரும்.

# 38. ஊழ்

'ஊழி பெயரினும் தாம் பெயரார்' சான்றோர் என்று சொல்லப்பட்டுள்ளது. அத்துணை ஆண்மையுடன் செயல்புரிய வேண்டியவர்கள் அவர்கள். இந்த ஆண்மைக்குப் பெருந்தடை போல் காணப்படுகிறது அதே திருக்குறளில் கூறப்படும் 'ஊழ்' என்பது. 'ஊழிற் பெருவலி யாவுள?' என்கிறது குறட்பா. அங்ஙனமாயின், சான்றோர் எங்ஙனம் ஊழை எதிர்த்து நின்று தம் ஆண்மையை வெளிப்படுத்த இயலும்? ஆகவே, ஊழ் என்பது சான்றாண்மைக்கு எதிரிடையானதொரு சக்தியா? இதனை ஆராய்வோம்.

ஊழ் என்பது என்ன?

அறம், பொருள், இன்பம் என்பவற்றுள் பொருள், இன்பம் என்பவற்றின் முதற்காரணமே 'ஊழின்வலி' என்று கூறியபின், ஊழ் என்பது ''இருவினைப் பயன் செய்தவனையே சென்று அடைவதற்கு ஏதுவாகிய நியதி'' என்கிறார் **பரிமேலழகர்.**

**மணக்குடவர்:**

''முன்பு செய்த வினை பின்பு விளையும் முறை. மேற்கூறிய அறப்பகுதியும் இனிக் கூறுகின்ற பொருட்பகுதியும் இன்பப் பகுதியும் முன்செய்த நல்வினையால் வருதலையும், இவற்றிற்கு மாறான பாவமும் வறுமையும் துன்பமும் தீவினையால் வருதலையும் அறியாதே, அவை உலகத்தில் மக்கள் பலர் தமது முயற்சியால் வந்தன என்பாரன்றே! அதற்காக இது கூறப்பட்டது.''

**பரிதியார்:**

மேலான சென்மத்தின் வினைப்பயனைச் சொல்லுவது.

**ஞா. தேவநேயன்:**

பழம்பிறப்புகளிற் செய்யப்பட்ட இருவினைப் பயன் செய்தவனையே செய்த முறைப்படி சென்றடையும் இயற்கை ஒழுங்கு.

1. இது முறைப்படி வருவதால் **முறை** அல்லது ஊழ் எனப்படும்.

2. அவரவர்க்குரிய இன்ப துன்பப் பகுதிகளை வகுப்பதால் **பால், வகுத்தான்** எனப்படும்.

3. தெய்வ ஏற்பாடுபோலிருப்பதால் **தெய்வம்,** பால் வரை தெய்வம் எனப்படும்.

4. மாறாவியல்பாயிருத்தலால் **இயற்கை** எனப்படும்.

**புலவர் குழந்தை:** ஊழ்—முறைமை, உலகியல் நிகழும் முறைமை. அஃதாவது பொருளும் காலமும் செயற்படும் தகுதியும், சுற்றுச்சார்பின் தகுதியும் நமது எண்ணத்தின்-முயற்சியின்-செயலின் தகுதிக்கு ஒத்து வருதலும் ஒவ்வாது வருதலுமாம்.

ஒத்து வருதல்—ஆகூழ்

ஒவ்வாது வருதல்—போகூழ்

செயற்படுதல்—நிகழ்தல்

மக்களின் எண்ணம் முதலியவற்றுள் அடங்காமல் அப்பாற்பட்டு இயற்கையாக நிகழும் நிகழ்ச்சி ஊழ் எனப்படும்.

**கா. சுப்பிரமணியப்பிள்ளை:** இருவினைப் பயன்களும் செய்தவனை நாடி நிற்கும் முறைமை.

**கா.அப்பாத்துரையார்** (சுருக்கம்)

ஊழ், தெய்வம், பால் இம்மூன்றும் ஒரே பொருள் சுட்டும்

தெய்வம் என்னும் சொல்லின் மூலமெய்ப்பொருள் 'கடவுள்' அன்று. **கடவுளின் ஆற்றல்** என்பதே. வள்ளுவர் வழக்கில் தெய்வம் என்னும் சொல்லுக்குரிய பொருள்கள் இரண்டே. ஒன்று சிறு தெய்வம் என்பது. மற்றது ஊழ் ஆகிய **கடவுள் ஆற்றல்** என்பது. கடவுளது ஆற்றலின் கூறே சிறு தெய்வமாக வழிபடப்படுதலால், இவ்விரு பொருளும் உண்மையில் ஒன்றேயாகும்.

தெய்வம் என்னும் ஊழ் குறித்த சொல், ஊழுக்குரிய கடவுள் தொடர்பைச் சுட்டிக்காட்டுவதாயுள்ளது.

ஊழ் என்னும் சொல் கடவுளைக் குறிக்கும் பொழுது அது கடவுளை **ஊழ் முதல்வனாகவே** சுட்டுகிறது. அதுபோலக் கடவுளைக் குறித்த சொல் ஊழைக்குறிக்கும்போது அது **ஊழைக் கடவுள் ஆற்றலாகவே** சுட்டுகிறது. இங்ஙனம் **ஊழுக்கும் கடவுளுக்கும் உரிய இன்றிமையாத தொடர்பு உண்டு. பால்** என்னும் சொல்லின் சொற்பொருள் **பகுப்பு, பிரிவு,** பிரிவுக்கூறு என்பதே.

**தெய்வம்** என்னும் சொல் ஊழுக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பை விளக்குவதுபோல, **பால்** என்னும் சொல் ஊழுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பை விளக்கும். உண்மையில் அது உயிர்கள் வகையில் இறைவன் வகுத்த-வகுத்துக் கொண்டிருக்கும் வகுப்பு முறையே ஆகும். "படியளக்கிறான்......").

தெய்வம்—ஊழின் இறைக்கூறு

ஊழ்—இறைவனின் ஆற்றற்கூறு

பால்—இவ்விரண்டின் உயிர்க்கூறு

தெய்வம்—கடவுளின் உருவ இயல்பு

ஊழ்—கடவுள் ஆற்றலின் அருவ இயல்பு

பால்—கடவுள் ஆற்றலின் உருவ இயல்பு

ஆத்திக சமயங்கள் யாவுமே ஊழைக் கடவுளுடன் ஒன்றுபடுத்தி, அதைக் கடவுளின் கூறாகவும், கடவுளின் ஆற்றலாகவும் உயிர்களுடன் கடவுளைத் தொடர்புபடுத்தும் பண்பாகவும் குறிப்பிட்டு வந்துள்ளன.

புத்தர் கடவுளை மறுத்தார்; ஊழை மறுக்கவில்லை. கடவுட் கருத்தின் தொடர்பிழந்த நிலையில் அது உயிர்ப்பண்பற்ற அறிவுப்பண்பற்ற இயந்திர இயக்கப் பண்பாயிற்று.

இந்த இயந்திரம் அல்லது இயற்கை—யாழியை உயிர்களின், அவாவும், அவாவினால் உந்தப்பட்டு இயங்கும் இருவினை

களுமே இயங்குவதாக வாதிட்டார். இவ்வாறு இருவினைக் கோட்பாடுடன் ஊழ்க்கோட்பாடு இணைக்கப்பட்டுப் புதிய தோர் ஊழ்வினைக் கோட்பாடு ஆயிற்று. புத்த சமயத்துடன் மிக நெருங்கிய அறிவுத் தொடர்புடையது சமண சமயமாகும்.

புத்த சமய அறிவுப்படைக்கல முழுவதையும் தமதாக்கிக் கொண்ட சங்கராச்சாரியார் அத்துவைதக்கோட்பாடும் ஊழ் **ஆற்றலே, இருவினையாற்றல்** என்னும் கருத்தை மேலும் வளர்த்தது.

ஆத்திகரான சைவ வைணவரும் இப்புதிய கோட்பாட்டின் மீதே தம் ஆத்திகக் கட்டுமானத்தைச் சீரமைத்தனர்.

**ஊழை இயக்கும் ஊழ்முதல்வனை** இவர்கள் **ஊழை இயக்கும் இருவினை இயந்திரத்தை ஆட்டுவித்து இயக்குபவன்,** ஊழை ஆட்டி இயக்கும் வினைச்சக்கரத்தையே ஆட்டுவித்து இயக்கும் முதல்வன் என மாற்றினர்.

வள்ளுவரோ, உலகெங்கும் பரவியுள்ள தூய பழைய ஆத்திக சமயங்களின் மூல அடிப்படையான-**படி அளப்புக்** கருத்தையே தம் கருத்தாகக்கொண்டு தம் நூலை இயற்றினர் ஆகவே, ஊழ் இருவினைத் தொடர்பு, மறுபிறப்புக் கோட்பாடு இவற்றைத் திருக்குறளில் முனைப்பாகக் காண இயலாது.

**தொகுத்துப் பார்ப்போம்**

1. ஊழ்—இறைவன்; ஆற்றல் — அழியாதது, என்றும் மாறாதது; வளராதது; தளராதது. ஆயினும் அந்த முதல் ஊழிலிருந்தே ஆகூழ், போகூழ் அல்லது இழவூழ் என்னும் இருபக்கங்களையுடைய **துணையூழ்** தோன்றுகிறது.

2. இத்துணையூழின் பகுதிகளாகிய ஆகூழும் போகூழும் இணைந்த இணைவே பால் என்னும் ஊழ்க் கூறு. அதன் அடிப்படையே **மனித முயற்சி**.

3. இந்த ஊழ்க்கூற்றினைத் தனிமனிதர் தம் முயற்சியாகிய நல்வினை, தீவினைகளால் ஓரளவு மட்டுப்படுத்தலாம். (619-தெய்வத்தான் ஆகாதெனினும் முயற்சி தன் மெய்

வருத்தக்கூலிதரும்). அதை மாற்றியும் அமைக்கலாம். ("ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித் தாழாது ஞற்றுபவர்" 620).

4. ஆகூழ், போகூழ் என்பன ஏற்கெனவே இருந்து கொண்டு தாமாகவே செயலாற்றுபவையல்ல. ஒருவர் செய்யும் நல்வினைமுயற்சி, அல்லது தீவினை முயற்சிகளே அவற்றை ஆக்குகின்றன. ஊழுக்கு எதிராக எந்த முயற்சியும் பலிக்காது என்று பலர் கருதுவது தவறு. முயற்சியின் ஆற்றலுக்கும் அளவுக்கும் தன்மைக்கும் பெருமைக்கும் ஏற்றபடிச் செயல் விளைவுகள் ஊழைவென்று, இயக்கும் திறமுடையவை ஆகின்றன. ஆயினும், இந்த நிலையில்கூட வெல்லப் படுவது இறை ஆற்றல் அன்று, ஊழின் ஒரு சிறு பகுதியே யாகும்.

இதைப் பின்வருமாறு விளக்கலாம். பகுத்தறிவும் செயல் ஆற்றலும் படைத்த மனிதன் முயற்சி எதுவும் செய்யாமல் எல்லாம் ஊழின்படியாகட்டும் என்றிருந்தால், அஃது அவனது மனிதத் தன்மைக்கு இழப்பாகும். ஆனால், அவன் செய்யும் முயற்சிக்கு இறைவனின் ஆற்றல் முன்னின்றால்தான் எண்ணிய கருமம் கைகூடும். ஆகவே, இறை ஆற்றலும் மனித முயற்சியும் ஒன்றோடொன்று இணைந்து செயல்படுகின்றன என்பதே பொருத்தம். இறைவன், தான் படைத்த அறிவு விழைவு உள்ள மனிதனை ஒரு சிறு கல்லைப்போல், அல்லது மண்ணைப்போல் பாவிக்காமல், மனிதன் என்னும் முறையில் செயலாற்றுமாறு தன் ஆற்றலால் முன் நிற்றல் வேண்டும். அதே சமயத்தில் மனிதன் தன்னாலாவது மிகமிகச் சிறிதே என்பதை உணர்ந்து இறைவன் ஆற்றலை நம்பிப் பயன்படுத்திச் செயல் புரிய வேண்டும். ஆகவே, "நான் முயன்றாலும் முயலா விட்டாலும் நடப்பது தான் நடக்கும்; ஊழை நான் எங்ஙனம் வெல்ல இயலும்?" என்றிருப்பது தவறு. இறைவன் தன் ஆற்றலை மனிதரின் நன்மைக்காகப் பயன்படுத்தும்போது, மனிதர் செய்யும் முயற்சியையும் கவனத்துக்கு எடுத்துக் கொண்டே செயலாற்றுவான். அதிக முயற்சியானால், முயற்சியின் தேவைக்கும் மதிப்புக்கும் ஏற்றவாறு தன் ஆற்றலைப் பயன்படுத்துவான். முயற்சி சிறி தானால், முயற்சி செய்வதில் ஒருவன் காட்டிய அசதிக்கும், செய்பவன் நிலைக்கும் ஏற்றவாறு தன் ஆற்றலைப் பயன் படுத்துவான். ஒரு புறம் மனித முயற்சியை இறைவன் புறக்

க்ணிக்க இயலாது. மறுபுறம் தன் ஆற்றலைத் தான் விரும்பும் அளவுக்கு அல்லது தேவையின் அளவுக்குப் பயன்படுத்த அவனுக்கு முழு உரிமையுண்டன்றோ? இதை நன்குணர்ந்தால், இறைவன் ஆற்றலும் மனித முயற்சியும் எங்ஙனம் இணைந்து செயல்படக் கூடும் என்பதைப் புரிந்துகொள்ள இயலும்.

இக்கருத்துகளைக் கண்முன் கொண்டு குறட்பாக்களை விளக்குவோம்.

371. "ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி."

மேற்கூறிய விளக்கத்துடன் **ஆகூழ், போகூழ்** என்பனவற்றின் பொருள் காண்போம். அஃதாவது, இறைவனின் ஆற்றல் என்னும் ஊழ் மனித எண்ணத்தின், முயற்சியின், செயலின் தகுதிக்கு ஒத்துவருமாயின்—ஆகூழ்; வரவில்லை எனின்—போகூழ்.

எண்ணமும் முயற்சியும் செயலும் ஏற்றவையாயின் இறைவனின் ஆற்றல் முன்னின்று செயலாற்றும். அப்போது வெற்றி கிடைக்கும். இஃது ஆகூழ். அசைவின்மை ஈண்டிராது.

எண்ணம் நேர்மையற்றதாய், அல்லது தவறுடையதாய், முயற்சியும் செயலும் போதுமானவையாயில்லாவிடில், வெற்றி கிடைக்காது. இது போகூழ். ஈண்டு மடி தோன்றும்.

அசைவின்மை தோன்றாதவாறு இறைவன் ஆற்றல் முன்னிற்கும் என்றோ, மடமை வெல்லும் அளவுக்கு இறைவன் ஆற்றல் முன்னிற்கவில்லை என்றோ, ஒருவன் முயற்சி செய்தாலும், செய்யாவிட்டாலும் எண்ணம் எங்ஙனமிருந்தாலும் அந்த ஆற்றல் முன்னிற்க வேண்டும் என்பதோ பொருந்தாது.

கைப்பொருள் என்பது பணம் மட்டுமன்று; எல்லாவித வெற்றியுமே.

372. "பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை."

ஊழ் என்னும் இறை ஆற்றல் முன்னின்றால் (ஆகலூழ்) ஒருவனது அறிவு பெருகும்—அறிவு அகன்று தெளிவடையும். இல்லையேல் (இழவூழ், அறியாமையில் அழுந்திவிட நேரிடும்.

373. ''நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும்.''

இறைவனின் ஆற்றல் முன்னின்று செயலாற்றினால் அன்றி, ஒருவன் கற்கும் நூலறிவும் தக்க பயன் அளிக்காது. இயற்கையாக உள்ள அறியாமையே மிகும். 'தன் உண்மை அறிவு'. இயல்பாகவே தன்னிடத்துள்ள அறிவு என்று பொருள்படக் கூடும். அங்ஙனமாயின் இயல்பாக ஒருவனிடத்துள்ள அறிவு மிகக்குறைவுள்ளதாயிருந்தால், இந்தக் குறைவான அறிவு இன்னும் குறைவாகி அறியாமையே மிகும் என்று பொருள்படலாம்.

374. ''இருவேறு உலகத்து இயற்கை திருவேறு
தெள்ளியர் ஆதலும் வேறு.''

உலகில் சிலருக்குச் செல்வம் பெருகும்; சிலருக்கு அறிவு பெருகும். இவ்விரண்டிற்குமே இறைவனின் ஆற்றல் முன்னிற்க வேண்டும். முயற்சியும் துணை செய்ய வேண்டும்.

375. ''நல்லவை எல்லாஅம் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு.''

இறைவன் ஆற்றலும் ஏற்ற முயற்சியும் இல்லையேல் நல்லவை முதலாய்ப் பயனளிக்காமற் போகலாம். அந்த ஆற்றலும் முயற்சியும் இருந்தால் தீயவையும் பயன் தரக் கூடியவையாகலாம்.

376. ''பரியினும் ஆகாவாம் பால்அல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம.''

இறைவன் ஆற்றல் முன்னிற்காவிடில் பொருளை எவ்வளவு வருந்திக் காப்பாற்றினாலும், அவை நிலைப்பதில்லை. இறைவன் ஆற்றலிருந்து முயற்சி இல்லாவிடினும் அங்ஙனமே. அந்த ஆற்றலும் முயற்சியும் இருந்தால், நிலைக்காதனவும் நிலைத்து விடும்!

377. ''வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.''

இறைவன் ஆற்றல் ஒருவர் எண்ணத்துக்கும் முயற்சிக்கும் செயலுக்கும் ஏற்ற அளவில்தான் செயல்படும் என்று அவனே வகுத்திட்ட படியன்றி, நாம் என்ன செய்தாலும் பயன் இல்லை; அத்திட்டத்துக்கு அமைந்து இயன்ற அளவு முயற்சி செய்தல் வேண்டும்.

378. ''துறப்பார்மன் துப்புரவு இல்லார் உறற்பால
ஊட்டா கழியும் எனின்.''

உலகில் கிடைக்கும் பொருளால் ஒருவன் இன்புற முயல்வான். இன்னொருவன் இன்பம் நுகர வாய்ப்பிருந்தும் அதனை நுகராமல் விடுகிறான். வேறொருவன் நுகர்வதற்குப் பொருள் இல்லாமையால், உலக இன்பம் நீத்துத் துறவறம் மேற்கொள்ளுகிறான். எல்லாம் இறைவனுடைய அருள் ஆற்றலையும் அவனவனுக்குள்ள நல்ல மனப்பான்மையையும் செய்யும் முயற்சியையும் பொறுத்தது.

379. ''நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன்.''

நல்லன நிகழும்போது அவற்றை நல்லவை என்று துய்த்து இன்புறுகின்றவர்கள், தீயன நிகழும்போது துன்புறுகின்றனர். இதற்குக் காரணம் என்ன? நல்லவையெல்லாம் ஏற்று இன்புறுகின்றவர்கள் துன்பம் தரும் சிலவற்றை ஏற்றுக் கொள்ள மறுப்பது ஏன்? நல்லன ஏற்று இன்புறுவது இயல்பாகவே எளிது. துன்பம் தருவனவற்றை ஏற்பது அத்துணை எளிதன்று. இயல்பாகவே நாம் பின் வாங்குகிறோம். துன்பம் நேரிடுங்கால் துன்பம் தருவதையும் ஏற்றுக்கொள்ள வேண்டுமானால் அதற்கு இறைவன் ஆற்றல் முன்னிற்க வேண்டும். அந்த ஆற்றலின்றி ஒருவன் இயற்கைக்குக் கடினமான எந்தக் காரியத்தையும் செய்ய இயலாதவனாகின்றான்.

380. ''ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்.''

இறைவனின் ஆற்றலைவிட வலிமை படைத்தது ஒன்று மில்லை. அதை மேற்செல்ல எந்தச் சூழ்ச்சியும் இல்லை. ஆகவே, அதனை நம்பி, அதே சமயத்தில் முயற்சியும் செய்து வெற்றிகாண முனைந்து நிற்றல் வேண்டும்.

'ஊழிற் பெருவலி யாவுள' (380) என்று சொன்ன அதே வள்ளுவர்,

> ''ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
> தாழாது உஞற்று பவர்.'' (620)

என்றும் கூறினார்.

எதைச்செய்ய முற்பட்டாலும், 'இறைவன் ஆற்றல் முன் நிற்காவிடில் என்னால் என்ன இயலும்? என்னும் நம்பிக்கையும் வேண்டும்; தன் வலிமையை அளவுக்கு மீறி நம்பிவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். அதே சமயம் எல்லாம் தன் முயற்சியைப் பொறுத்தது என்னும் உணர்வுடன் சோர்வடையா மல், வருந்தி மேன்மேலும் முயலுதல் வேண்டும். இவ்விரு பண்பு களும் ஒன்றாகச் செயல்பட்டால்தான் வெற்றி உண்டு. இறைவன் ஆற்றல் மனிதனின் முயற்சியைப் பெருக்கும். தன் முயற்சியால் பெரிதும் வருந்துவதைக் காணும் இறைவன் தன் ஆற்றலை அம்முயற்சியுடன் இணைக்கிறான். ஆகவே, கோரியதெல்லாம் நிறைவுறத் தடை ஏதும் இராது.

## விவிலியம்

இறைவனின் அருளும் மனிதனின் முயற்சியும் எங்ஙனம் ஒன்றோடொன்று இணைந்து செயல்பட வேண்டும் என்பதைப் பின்வரும் விவிலியக் கருத்துகள் உரைக்கும்.

இயேசு சொன்னது : ''நான் உங்களுக்குள் நிலைத் திருக்கிறேன். (அஃதாவது, உங்களுக்குள் என்றும் இருந்து செயலாற்றுகிறேன்). அங்ஙனமே நீங்களும் என்னுள் நிலைத் திருங்கள். (அஃதாவது, என்னோடு இணைந்து என் அருட் சத்தை என்றும் பெற்றுக்கொள்ளுங்கள்). கிளை செடியோடு ஒட்டியிருந்தாலன்றித் தானாகக் கனி தர இயலாது. அது போல் என்னைப் பிரிந்து உங்களால் ஒன்றும் செய்ய இயலாது. ஆகவே, என்னோடு இணைந்திருக்க விழிப்பாயிருங்கள். என்னிட

மிருந்து உங்களையும் பிரித்துவிடக்கூடிய எதையும் செய்யாமல் கவனமாயிருங்கள். (அரு. 15:4-5 கருத்து).

2. கடவுளிடம் அன்பு கூர்பவர்களோடு இறைவன் அவர்கள் நன்மைக்காக அனைத்திலும் **ஒத்துழைக்கிறார்.** (உரோ. 8,28 கருத்து). **நாமும் "கடவுளோடு உழைப்ப வர்கள்"** (1 கொரி. 3,9).

3. "நம்முள் செயலாற்றும் வல்லமைக்கேற்றபடி நாம் வேண்டுவதற்கும் நினைப்பதற்கும் மேலாக" நம்முள் செயலாற்றக் கூடியவர் இறைவன். (எபே. 3,20).

4. இறைவன் தரும் '**வலிமை மிக்க ஆற்றலால்**' உறுதி பெறுங்கள். அலகையின் வஞ்சகத் தந்திரங்களை எதிர்த்து நிற்கும் வலிமை பெறும்படி, கடவுள் தரும் படைக்கலங்களை **அணிந்து கொள்ளுங்கள்.** உண்மையை உங்கள் இடைக் கச்சையாகக் கட்டிக்கொண்டு, நீதியை உங்கள் மார்புக் கவசமாக அணிந்து நில்லுங்கள்...... விசுவாசமாகிய அருளைக் கேடயமாகப் பிடித்துக் கொள்ளுங்கள். மீட்புச்சக்தியையே தலைச்சீரா வாகத் தாங்கிக் கடவுளின் வாக்கை வாளாக ஏந்திக் கொள்ளுங்கள்; ஜெபத்தில் நிலையாயிருங்கள். சோர்வுறாமல் **விழிப்பாயிருங்கள்."** (எபே. 6:10-18).

இறைவனின் வலிமைமிக்க ஆற்றலும், நம்முடைய முயற்சியும் விழிப்பும் செயல்படுவது காண்க.

5. "உங்களுக்குள் சிறந்ததொரு வேலையைத் தொடங்கியவர் (அஃதாவது, மீட்புப்பெறும் வேலையைத் தொடங்கியவர்) அதைத் தொடர்ந்து செய்து நிறைவு பெறச் செய்வார்." (பிலிப். 1,6 கருத்து).

6. "நீங்கள் எதையும் விரும்பவும் செயலாற்றவும் தம் திருவுளம் நிறைவேற உங்களுக்குள் செயலாற்றுபவர் கடவுளே. செய்வதெல்லாம் முழு முயற்சியுடன் செய்யுங்கள். அப்போது-தான் நெறி கெட்ட இத்தலைமுறையினரிடையே கடவுளின் குழந்தைகளெனத் திகழ்வீர்கள்." (பிலிப். 2:13-15 கருத்து).

இவைபோன்ற அறிவுரைகள் பல விவிலியத்தில் காணலாம்.

## ஊழ்

### சுருக்கம்

'ஆதிபகவன் முதற்றே உலகு' - இவ்வுலகுயிர்கட்கு-சிறப்பாக மனிதர்க்கு-அவ்வவற்றின் இயல்புக்கு ஏற்பப் படியளப்பவன்-பராமரிப்பவனே ஆதிபகவனாகிய இறைவன். அவன் 'வகுத்த வகை'யே ஊழ் என்பது. (தலைவிதி, தவிர்க்க இயலாத ஒரு குருட்டுச் சக்தியன்று) மனித சக்தியோடு -அஃதாவது, இறைவனிடமிருந்து மனிதன் பெற்றுக்கொண்ட ஆற்றலோடு இறைவனுடைய ஆற்றலும் சேர்ந்து செயல்புரிவதே. மனிதனைப் பொறுத்தமட்டில் இது முயற்சி எனப்படும். இம்முயற்சி இறைவன் ஆற்றலோடு ஒத்து வந்தால் ஆகூழ் என்றும், ஒத்து வராவிடில் போகூழ் என்றும் கூறப்படும். (ஆகும் - ஊழ்; போகும்-ஊழ்).

371. "ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி."

ஒருவன் கைக்கு வரக்கூடிய பொருட்பொருள் (அல்லது அருட்பொருள்) அங்ஙனம் வருவதாயிருந்தால் அசைவின்மையாகிய முயற்சி தோன்றும். வருவதாயில்லையெனில், முயற்சியின்மை (சோம்பல்) தோன்றும். (முயற்சியிருந்தால் எதுவும் கிட்டும். இல்லையெனில் எதுவும் கிட்டாது என்றவாறு).

372. "பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை."

முயற்சியற்ற போகூழ் (இழவூழ்) பேதைமைக்குள் ஆழ்த்தி விடும். முயற்சியாகிய ஆகூழ் இருப்பின் பேதைமைக்கு மாறாக அறிவு பெருகும்.

373. "நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும்."

(இறையாற்றல் முன்னின்று செயலாற்றினால் அன்றி) நூல் பல கற்றாலும் தனக்கு இயற்கையாயுள்ள அறிவே, அஃதாவது, அறிவுக்குறையே மிகும். (இயற்கையாயுள்ளது பேரறிவன்று).

374. ''இருவேறு உலகத்து இயற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு.''

உலகத்தில் மக்களிடை இயற்கையாக உள்ள முக்கிய வேறுபாடுகள் இரண்டு. செல்வமுடையர் ஆதல் ஒன்று. தெள்ளிய அறிவுடையர் ஆதல் மற்றொன்று. செல்வம் தேடுவோர் தெள்ளிய அறிவை அடைய முயல்வதில்லை. மெய்யறிவு நாடுவோர் செல்வத்தை அடைய முயல்வதில்லை. (முயற்சி என்பது இரண்டின்பாலும் செலுத்தப்படலாம் - விளைவுகள் வெவ்வேறாயிருக்கும்).

375. ''நல்லவை எல்லாஅந் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு.''

முயற்சி இன்றேல் நல்ல வாய்ப்புகளும் பயனற்றுப்போகும். முயற்சி இருப்பின் வாய்ப்பின்மையையும் பயன் தருவதாக ஆக்கிக் கொள்ளலாம்.

(தீய - நற்பயன் தராதன என்னும் பொருளில் ஆளப்பட்டது).

376. ''பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம''

(இறைவன் திட்டத்தில்) தமக்குச் சாதகமாக இல்லாதவற்றை வருந்தித் தேடினாலும் அடைய இயலாது. அதே திட்டத்தில் சாதகமாக உள்ளவை எப்படியும் பயன்தரும். (எப்படியும் என்றது ஒரு முயற்சியும் இல்லாமல் என்றன்று' சிறிது முயன்றாலும் என்பது பொருள். சில சமயங்களில் எம் முயற்சியும் இல்லாமல் இறைவனின் அருள் திட்டம் செயல் படுவதும் உண்டு. அருள் என்னும் சொல்லுக்கு 'தகுதியில்லாத இடத்தும் பெறப்படுவது' என்னும் பொருள் உண்டு. தகுதியை மட்டும் கருதி இறைவன் அருள்புரிவதில்லை. அங்ஙனம் புரிவதாயிருந்தால் 'அருள்' அருள் ஆகாது. இறைவன் தாமே விரும்பி, இரக்கப்பட்டு அளிப்பதே அருள் என்னும் கருத்தும் இக்குறளில் மறைந்துள்ளது.

377. ''வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது.''

ஆகவேதான், அருள் திட்டத்தை வகுத்த இறைவனது திருவுளப்படியே எல்லாம் நடைபெறுகின்றது. அத்திட்டத்தைப் பொருட்படுத்தாமல் ஒருவன் எவ்வளவு தேடிக் குவித்தாலும் அதைத் துய்க்க இயலாது. ஒரு முயற்சியும் வேண்டா என்பதன்று. ஆகவே, தன் முயற்சியை இறையருள் திட்டத்துடன் பொருந்துமாறு பார்த்துக் கொள்ள வேண்டும்.

378. "துறப்பார்மன் துப்புர வில்லார் உறற்பால
ஊட்டா கழியும் எனின்."

உலக வாழ்வில் பெரும்பாலும் வரவேண்டிய காமம், வெகுளி, மயக்கம் போன்ற துன்ப நிலைகள் நிகழாமல் போனால், வறுமையுற்றவர் எளிதில் துறவு மேற்கொள்ள முயல்வர். அத்துன்ப நிலைகள் நிகழும் போது வறுமையுற்றவரும் துறவு மேற்கொள்ள முயல்வார். ஏனெனில், ஒருவன் துறவு மேற்கொள்ள முயன்றாலும் காமம் முதலிய நோய்கள் தடுக்கும். அப்போதும் இறை ஆற்றலோடு கூடிய ஆகூழ் நற்பயன் தரும் என்றவாறு.

379. "நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன்."

நல்லவை நிகழும்போது அவற்றை ஆர்வத்தோடு ஏற்று மகிழ்பவர், தீயவை நிகழும் போது துன்புறுவது ஏன்?

இறைவனது கையிலிருந்து நல்லதைப் பெற்றுக் கொண்டால், துன்பத்தையும் ஏற்றுக்கொள்ள வேண்டும். என்பது விவிலிய வாக்கு.

380. "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்."

இறையருள் திட்டம் பராமரிப்பிலும் வலிமை மிக்கது வேறில்லை. வேறொன்று வந்து அவ்வலிமையை எதிர்க்க முயன்றாலும் அருளே வெற்றி பெறும்.

# 39. இறைமாட்சி

**பொருட்பால் — பொருட்பொருள்—அருட்பொருள்— விளக்கம்.**

இப்பகுதியில் ஆசிரியர் வெறும் 'பொருளை' மட்டுமே கூறினரா? அஃதாவது, 'பொருட்பொருள்' என்று அவரே குறிப்பிடும் இம்மைப் பொருளாகிய பணம், படை முதலிய இம்மை உலக சாதனங்களைப்பற்றியே கூறினரா? அல்லது அவரே குறிப்பிடும் அருட் பொருள், அருட் செல்வம், மறுமைப் பொருள்பற்றியும் இப்பகுதியில் கூறியுள்ளனரா?

'இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டவர்,' காட்டிய 'பொய்தீர் ஒழுக்கத்தை' வலியுறுத்த விரும்பியவர், 'இருள் சேர் இருவினையும்' சேராமல் தடுப்பதற்கு வழி காட்ட எண்ணியவர் வெறும் இம்மைச் சாதனங்களைப்பற்றி மட்டுமே கூற எண்ணியிருக்க இயலாது. பழைய உரையாளருள் சிறப்பாகக் காலிங்கர் கூறும் உரையிலிருந்தும் ஓரளவு இது புலப்படுகிறது. அடியில் தரப்படும் விளக்கத்தைக் காண்க. உதாரணமாக, 392, 393, 398, 411, 427, 458 முதலிய குறட் பாக்களைக் காண்க.

வேறு பல குறட்களில் கூறப்படும் கருத்துகளும் இம்மையை மட்டுமன்று, மறுமையையும் சுட்டுவதைக் காண்கிறோம். இப்பொருட்பால் பகுதியில் இக்கருத்து ஆங்காங்குப் புலப்படுவது காண்க.

ஆகவே, திருவள்ளுவர் இருமைப் பொருளையும் (பொருட் பொருள், அருட் பொருள் இரண்டையுமே) மனத்தில் கொண்டு இப்பகுதியை இயற்றினார் என்பதே பொருத்தம்.

அருள் ஆட்சி, பொருளாட்சியைவிட உயர்ந்ததாயினும், பொருளாட்சியில் இருக்க வேண்டிய (பொதுவாக மனிதர்

அனைவருக்குமே இருக்க வேண்டிய) நற்பண்புகள் ஓரளவு விரிவாக உணர்த்தப்படுவது காண்கிறோம். அருளாட்சிக்கு இவை அடிப்படையென்பது கருத்து. அருளாட்சிக்குத் தனிப்பட்ட வகையில் உரித்தான பண்புகளையும் செய்திகளையும் தேவைப்படும் இடத்தில் கூறுவதும் காண்கிறோம்.

இக்கண்ணோட்டத்தில் இனி இப்பொருட்பாலுக்கு விளக்கம் கூறுவோம். **பொருட்பொருளாகிய உரையை உரையாளர் விரிவாகக் கூறியிருப்பதால் எம் விளக்கத்தில் அருட்பொருளாட்சியைச் சார்ந்த கருத்துகளையே சற்று விரிவாக விளக்குவோம்.**

381. ''படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு.''

அருட் பொருளாட்சியில் சாதாரணப் போர் வீரர்களுள் படை இல்லை; தேவையுமில்லை. அருளாட்சிக்குத் தலைவனான இறைவனே படைகளையெல்லாம் ஆளக்கூடியவன். ஆன்மீக எதிரிகளையெல்லாம் அவன் ஒருவனே வெல்லக் கூடிய வல்லமை படைத்தவன். (விவிலியத்தில் 'சேனைகளுக்கு ஆண்டவர்' - என்ற பெயர் பழைய காலத்தில் இருந்தது).

இறைவன் அரசு — விண்ணரசு — வானரசு என்றும் 'திருச்சபை' என்றும் கிறித்தவர்களால் வழங்கப்படும் அருள் ஆட்சியில் சதையாலான வீரர் படை இல்லை. அசரீரிகள் பல்லாயிரம் கொண்ட வானவர் கணங்கள் ஏராளமாக உண்டு. திருச்சபை என்னும் இறைமக்கள் சபைக்கு ஆதரவாகவும் காவலாகவும் வானவர் படை இருந்தே வருகிறது. தனி மனிதர் ஒவ்வொருவருக்கும் இத்தகைய காவலர் (காவல் தூதர்) உண்டு. நாடுகள், நகரங்கள், ஆலயங்கள் இவற்றிற்கும் இத்தூதர் காவலாக இறைவனால் ஏற்படுத்தப்பட்டுள்ளனர். கடவுளுக்கும் மனிதனுக்கும் பெரிய எதிரியாகிய சாத்தான், பேய் எனப்படும் கூட்டங்களுக்கு எதிராக நம்மைக் காக்கும் பணி அவர்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது.

இவ்வான் படை மானிடருக்குத் துணையாக எப்போதும் உள்ளது. அவர்கள் உதவியை நாடினால் அருள் ஆட்சியில் வெற்றி பெற ஏராளமான உதவி கிடைக்கும்.

மேலும், இவ்வாட்சியைச் சார்ந்த மக்கள் தாமே படைக் கலன்கள் தாங்கி, அருளாட்சி தம்முள் நிலைத்து நிற்கப் போர் புரியும் போது அவர்களே 'படை' ஆகின்றார்கள். ஆனால், அவர்களுடைய படைக்கலன்கள் இரும்பாலும் மற்ற உலோகத்தாலும் ஆனவையல்ல. இம்மை ஆட்சியைச் சார்ந்தவையல்ல; தெய்வீகமானவை.*

குடி : இவ் இறை அரசின் உறுப்பினர் யாவருமே, அஃதாவது, திருச்சபையின் உறுப்பினர் யாவருமே.

கூழ் : இறைவனே அருளும் அருட்பொருள்- அவ்வருளை விரும் புகின்றவர் தக்க முறையில் பெற்றுக் கொள்ள அருட் சாதனங்கள் ஏழு. இறைவன் 'தாளாற்றித் தந்த பொருள்' ஒப்புரவுச் சாதனங்கள் (ஒப்புரவு குறட் பாக்கள் விளக்கம் காண்க).

அமைச்சு : அருளாட்சி - இறையரசு - விண்ணரசு ஆகிய திருச்சபையின் ஒப்பற்ற தலைவர் ஆதிபகவன்- இறைவன்-ஐந்தவித்தான் (கிறித்து)-ஊனக்கண் களுக்குப் புலப்படாமல், உள்ளிருந்துகொண்டு அருளால் ஆள்பவர். ஆனால், அருளாட்சியில் பிரச்சினைகள் எழும் போது-ஐயப்பாடுகள் ஏற் படும் போது இவற்றை அதிகார பூர்வமாகத் தீர்த்து வைக்குமாறு இறைவனாகிய கிறித்துவே நியமித்த பதிலாளி-முதன் முதல் தம் சீடருள் ஒருவரான பேதுரு என்னும் இராயப்பர். திருச் சபை என்னும் தெய்வீகப் பேரவை முழு வதையும் ஆண்டு நடத்த அவருக்கு அதிகாரம் அளித்தார்.

மத். 16: 18-20 காண்க.

அதே இராயப்பருக்குத் தம் ஆடுகளையும், ஆட்டுக் குட்டி களையும் மேய்க்கும்படியான அதிகாரமும் தந்தார்.

அரு. 21: 15-17 காண்க.

---

குறிப்பு : * இறைவனிடமிருந்து மக்களுக்குத் தூதாக இவ் வானவர் — அசரீரிகள் பன்முறை வந்ததுபற்றி விவிலியம் பல இடங்களில் கூறுகிறது. இதனால் அவர்களுக்கு 'வான்தூதர்' என்னும் பெயரும் உண்டு.

**ஆடுகள் :** இச்சபையின் உறுப்பினரை உலகின் பல பாகங்களிலும் கண்காணிக்கும் பொறுப்பை ஏற்கும் ஆயர்கள் (பேராயர் என்பவர்கள்), அவர்களுக்கு உதவியாகக் குருக்கள் (priests), அவர்களுக்கு உதவியாகத் திருத்தொண்டர் எனப்படுபவர், இவர்களை 'உறுதிப் படுத்தும்' பணியையும் அந்தத் தலைமைச் சீடர் (இராயப்பருக்கு) அளித்தார். அதற்காகத் தாம் சிலுவை மரணம் அடைவதற்கு முன்நாளில் இறைவனின் அருளைச் சிறப்பாக வேண்டினார். (லூக். 22: 31-32 காண்க).

**ஆட்டுக்குட்டிகள்:** இச்சபையின் உறுப்பினர் அனைவருமே ஆடுகள், ஆட்டுக்குட்டிகள் என்று பிரித்துச் சொல்லி அவர்களை மேய்க்கும்படி (ஆன்மீகத்தில் போஷித்துக் காக்கும்படி) இறைவன் (கிறித்து) கட்டளை தருவது காண்கிறோம். இந்த முதல் தலைமைச் சீடர் தம் ஆட்சிப் பீடத்தை, அன்று உலகில் பேர் பெற்று விளங்கிய உரோமையர் தலைநகராகிய உரோமையிலேயே அமைத்தார். இறுதியாக இறைவனுக்காக உயிர் கொடுத்துச் சான்று பகர்ந்தார்.

இவருக்குப் பின் அதே தலைமை அதிகாரத்தை வகித்து வந்தவர்கள் காலப்போக்கில் போப்ஸ் (popes) என்று வழங்கப்பட்டார்கள். இன்றும் வழங்கப்படுகின்றனர். போப் என்னும் சொல் பாப்பா என்னும் இலத்தீன்மொழியிலிருந்து வருகிறது. 'தந்தை' என்பதே அதன் பொருள். தெய்வீகப் பேரவைக்கெல்லாம்-திருச்சபைக்கெல்லாம் தந்தை.

தலைமை அதிகாரத்திலுள்ளவர்க்கு உதவியாக உள்ள ஆயர்கள் குருக்கள். இவர்களுக்கு மினிஸ்ட்டெர்ஸ் (ministers) என்னும் பெயர் உண்டு. அமைச்சர் என்னும் பெயரும் இதையே குறிப்பிடும்.

இப்பொருட்பாலைப் பெரும்பாலும் உரையாளர் அரசியல் அங்கவியல், ஒழிபியல் என முப்பகுதிகளாகப் பிரிப்பதுண்டு (புலவர் குழந்தை). இப்பிரிவுகள் அவ்வளவு பொருத்தமாகத் தோன்றவில்லை. அரசியல் பகுதியிலுள்ள கருத்துகள் தலைமை அதிகாரம் வகிப்பவர்க்கு இன்றியமையாதனவே. இப்பொருட்பாலில் **அரசன்** என்னும் போது இன்றையச் சூழ்நிலைக்கு ஏற்ப **அரசு, அரசினர்** என்னும் பெயர்களால் குறிக்கப்படுவதையே மனத்தில் இருத்துக. ஆயினும், அங்கவியல் (அமைச்சர் இயலில்)

கூறப்படும் சொல்வன்மை, வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினை செயல்வகை முதலியன அமைச்சருக்கு மட்டுந்தான் தேவை; அரசினர்க்கு ஆட்சி செய்வோர்க்குத் தேவையில்லை என்போமா? அங்ஙனமே அங்க இயலில் கூறப்படும் தீ நட்பு, கூடா நட்பு, பேதைமை ஆகியவை அரசினர்க்குத் தேவை இல்லை என்போமா? மேலும் ஒழிபியலின் கீழ் கூறப்படும் குடிமை, மானம், பெருமை, சான்றாண்மை, பண்புடைமை, நன்றியில் செல்வம், நாணுடைமை, குடிசெயல்வகை இவை அரசுக்கும் அமைச்சருக்கும் தேவையில்லை என்போமா?

இப்பொருட்பால் பகுதியில் கூறப்படும் பல கருத்துகள் இல்லறத்தார், துறவறத்தார், அரசினர், அமைச்சர் எல்லாருக்குமே பொருந்துபவையன்றோ? உதாரணமாகக் கல்வி, கேள்வி, குற்றம் கடிதல், சிற்றினம் சேராமை, கண்ணோட்டம், ஊக்கமுடைமை, மடியின்மை, இடுக்கண் அழியாமை, வினைத் தூய்மை, நட்பு, கூடா நட்பு, பேதைமை, புல்லறிவாண்மை, மானம், சான்றாண்மை, பண்புடைமை, நாணுடைமை இவை எல்லா மக்களுக்குமே தேவையான பண்புகள் அல்லவோ?

ஒழிபியல் பகுதியில் மானம், பெருமை, சான்றாண்மை, பண்புடைமை, நாணுடைமை, உழவு இவை ஒழிக்க வேண்டியவையா? நன்றியில் செல்வம், நல்குரவு, இரவு, கயமை இவை ஒழிக்க வேண்டியவையே. ஆயினும், இவ்வியலில் சான்றாண்மை, நாணுடைமை எங்ஙனம் ஒழிக்கப்பட வேண்டியவையாகும்? திருக்குறளின் முக்கிய நோக்கம் சான்றாண்மையையும் அதனுடன் இணைந்த பண்புகளையும் வலியுறுத்துவதுதானே?

ஆகவே அரசியல், அங்க இயல், ஒழிபியல் என்னும் பிரிவுகள் பொருத்தமானவையாகத் தோன்றவில்லை. ‘ஒழிவு’ என்னும் சொல்லுக்கு ‘ஒழிக்க வேண்டியவை’ என்று பொருள் கொள்ளாமல் அரசியல், அங்கவியல் இவ்விரு பகுதிகளைச் சேராதவை என்றுபொருள் கொண்டால், அதுவும் பொருத்தமற்றதே. ஏனெனில், இவ் ஒழிபியலில் கூறப்படும் சான்றாண்மை முதலிய பகுதிகள் எங்ஙனம் அரசியல், அமைச்சியல் பகுதிகளைச் சார்ந்தவையாகா என்பது புலப்படவில்லை.

மேலும், புலவர் குழந்தை போன்றவர்கள் வேறு இயல்களைப் புகுத்தியுள்ளனர்.

அறத்துப்பால் பகுதியிலும் இல்லற இயலில் கூறப்படும் அன்புடைமை, விருந்தோம்பல், இனியவை கூறல், நடுவு நிலைமை முதலிய பகுதிகள் துறவற இயலுக்குப் பொருந்தாதவை என்போமா? அங்ஙனமே துறவற இயலில் கூறப்படும் அருளுடைமை, கள்ளாமை, வெகுளாமை, இன்னா செய்யாமை முதலியவை இல்லறத்தார்க்குத் தேவையேயில்லை என்போமா? ஆகவே, திருவள்ளுவர் இப்பிரிவுகளையோ, இயல்களையோ மனத்தில் கொண்டு தம் நூலை இயற்றியதாகத் தெரியவில்லை. உரையாளர் பிற்காலத்தில் புகுத்தியவை என்றே தோன்றுகின்றது.

வள்ளுவர் பொதுவாக இல்லறம், துறவறம், சமுதாயம் என்னும் மூன்று பிரிவுகளை மனத்தில் கொண்டு, இல்லறத்தைச் சேர்ந்தவர்க்கு இன்றியமையாதன எவை? துறவறத்தார்க்குச் சிறப்பாகப் பொருத்தமானவை எவை? சமுதாய வாழ்வு எங்ஙனம் அமைதல் வேண்டும்? என எண்ணித் தம் கருத்துகளை ஓரளவு கோவையாகவே இயற்றியிருத்தல் வேண்டும். கூறும் கருத்துகள்சில (இன்றைய பாகுபாட்டின்படி) இல்லற இயலில் இருந்தாலும் அவை (உதாரணமாக ஒப்புரவு, அன்புடைமை) மானிடர் அனைவர்க்கும்-சமுதாயம் அனைத்திற்குமே பொருந்தும் என உணர்த்துவது போல் இயற்றியுள்ளார்.

அங்ஙனமே அருளுடைமை முதலிய பகுதிகள் சில இன்று துறவறவியலில் காணப்படினும் அருள் எல்லார்க்குமே தேவை. அருளாட்சி, தவம், கள்ளாமை, துறவு, வாய்மை துறவறத்தார்க்குச் சிறப்பாகப் பொருந்தும் என்னும் கருத்தில் எழுதுகின்றார்.

சமுதாய வாழ்வில் (பொருட்பாலில்) கூறப்படும் பல கருத்துகள் சமுதாயத்தை உருவாக்கும் இல்லறத்தார், துறவறத்தார் ஆகியோரையும் பாதிக்கும் என்பது காண்கிறோம். உதாரணமாக: சான்றாண்மை, நாணுடைமை.

ஆகவே, இப்பிரிவுகளை மிகைப்படக் கவனியாமல், கருத்துக் கோவையைக் கவனித்தவாறு இத்திருக்குறளை ஆய்வதே பொருத்தமானது.

இதையே இந்நூலில் செய்ய வேண்டுமென்பது எம் கருத்து. இதில் வெற்றி பெற்றோமா இல்லையா என்பதை வாசகர்களே தீர்ப்பிடுமாறு வேண்டிக் கொள்ளுகிறோம்.

படை, கூழ், அமைச்சுக்குப் பின்னர்—

**நட்பு:** இல்லறத்தார், துறவறத்தாரிடை நட்புத் தேவை யில்லை என்றன்று. சமுதாய வாழ்வில் அது மிக மிகச் சிறந்து விளங்க வேண்டும். அருள் ஆட்சி சமுதாயத்தில் இந்த நட்புறவு இல்லாமல் இல்லை. இதற்குப் பெயர் 'புனிதர்களின் சமூக உறவு' என்பதாம். புனிதர்கள் என்றால் இறைவனது அருள் பெற்று வாழ்வோர்—அருட் பொருளில் சிறந்து விளங்குவோர் என்று பொருள். இத்தகைய நட்பு இல்லாவிடில் அருள் ஆட்சி இறை அரசு வளம் பெற இயலாது. நட்புறவு இன்றித் தனக்குத் தானே எதிர்ப்பினை வளர்க்கும் அரசு, நிலை பெறாது.

மாற்கு. 3;34 காண்க

அன்பே அனைவரையும் பிணைக்கும் கருவி.

அருள் ஆட்சியின் தலைமை வகிப்பவரும் (அருள் ஆட்சித் தலைவரும்) அமைச்சர்களும் இந் நட்பை வளர்த்துக் கொண்டே இருக்க வேண்டும். இதுவே அவர்களது முதன்மையான பணி—கடமை.

**அரண்:-** அஃதாவது, எதிரிகளிடமிருந்து பாதுகாப்புக் கருவிகள்-இறை அரசுக்கு-அருளாட்சிக்கு முதன்மையான-இன்றி யமையாத - எந்தச் சக்தியாலும் வெல்ல இயலாத அரண், இறைவனேயாவர். ஐந்தவித்தானே எனினும் அவருக்குப் பதிலாளியாக உள்ள தலைமைப் பொறுப்பு வகிப்பவரும் அவருக்குத் துணையாக உள்ள அமைச்சர்களும் இப்பாதுகாப்புப் பணியில் முழு மூச்சுடன் ஈடுபட வேண்டும்.

**படை:** இத் தலைப்பின் கீழ் மேலே கூறியதெல்லாம் இப்பாதுகாப்புக்காகவே.

பாதுகாப்பு முறைகள் - ஆன்மீகத்துக்கடுத்தவை - விழிப் புணர்வு, விவேகம், இறை அருளின் மீது நம்பிக்கை - அதை மேலும் மேலும் பெற்றுக் கொள்ள - முயற்சி, சாத்தான்,

(பேய்கள்) பிறரைக் கெடுக்கும் தீயவர், கெடுமதி படைத்தவர்களுடைய சூழ்ச்சிகளினின்று தம்மைக் காத்துக் கொள்ள அருட், இவர் சாதனங்களை நல்லமுறையில் அடிக்கடிக் கையாளுதல்- இறைவனைத் தியானித்து அவனோடு அன்பு கொள்ள முயலுதல் - செபம், தவம் ஆகிய ஆன்மீக முயற்சிகள் - தீயமதி படைத்தவரை விட்டு விலகுதல்-மனத்தைத் தவறான முறையில் திருப்பக் கூடிய கெட்ட படங்கள், காட்சிகள், நூல்கள் முதலியவற்றைப் பார்க்கும் சந்தர்ப்பங்களில் அகப்பட்டுக் கொள்ளாமல் விழிப்பாயிருத்தல் - தீவினைக்குரிய சோதனை நிகழ்ந்தால் உடனே இறைவன் அருளை நாடுதல். அவரது உள்ளத்திலே இருந்துகொண்டு தீவினை செய்யத் தூண்டும் பாவ நாட்டத்தை வெல்ல முயற்சி இதற்கேற்ற வழிவகைகள் எல்லாம் அரணாகும்.

இவை ஆறும் நன்கமைந்தால்தான் இறைஅரசு-அருள் அரசாட்சி வளமுறும் என்க.

382. ''அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற்கு இயல்பு.''

ஈண்டு வேந்தன் என்பது வேந்தற்கு வேந்தனாய் உள்ள இறைவனுக்குப் பதிலாக உள்ள திருச்சபைப் பேரவையின் தலைவரைச் சிறப்பாகக் குறிக்கும். அவருக்குத் தேவையான பண்புகள்:

1. **அஞ்சாமை:** அருளாட்சியின் தன்மை, கோட்பாடுகள், செயல்முறைகள், இவற்றை மக்களுக்கு ஆணித்தரமாக எடுத்துரைப்பதிலும், தவறான போதனைகளைத் திருத்துவதிலும், கண்டனம் செய்வதிலும், இதனால் ஏற்படக்கூடிய எதிர்ப்புகளைத் தாங்குவதிலும் எந்நிலையிலும் உண்மைக்கும் இறைவனுக்கும் சான்று பகர்வதிலும் யாருக்கும் எதற்கும் அஞ்சாமை, அருளாட்சியினர்க்குச் சிறப்பாகத் தேவைப்படும் இன்றியமையாத குணமாகும்.

2. **ஈகை :** அருளாட்சித் தலைவரும் அமைச்சரும் எந்நேரமும் மக்களுக்கு, சிறப்பாக ஏழை எளியவர்க்கு, பிறரால் ஒதுக்கப்பட்டுத் துன்புறுவோர்க்குச் சேவை செய்வதில், உதவி புரிவதில் தாராள மனப்பான்மை, முதன்மையாக அருள்

உதவியும் இயன்ற அளவு பொருள் உதவியும் செய்வதில் இவ் வகை இன்றியமையாதது. தாம் தந்த அருட் கொடைகளைப் பிறருடன் பகிர்ந்து கொள்ளத் தாராளமான மனத்தோடு உழைக்க வேண்டுமென ஐந்தவித்தானாகிய இறைவன் கூறியது: 'இலவசமாகப் (என் நற்கொடைகளை) பெற்றுக் கொண்டீர்கள். இலவசமாகக் (பொருட் பொருளின் மீது கவலை கொள்ளாமல்) கொடுங்கள்.

3. **அறிவு:** இறையரசின் அல்லது அருளாட்சியின் போக்கு (பொருளாட்சியுடன் முற்றும் பொருந்தாத நிலை). அவ் வாட்சியின் தேவைகள், செயல் முறைகள், அவ்வரசை எதிரியின் சூழ்ச்சிகளிலிருந்து காப்பாற்றவும், மேலும் ஓங்கச் செய்யும் வழி வகைகளையும் அறிந்து கொள்ளவும், இது வெறும் மனித அறிவைக் கடந்ததாகையால் தேவையான தெய்வீக உதவியை நாடவும் முயற்சி செய்தலாகும்.

4. **ஊக்கம்:** இவ்வறிவை இறை அரசின் நலனுக்காகவும் அதைச் சார்ந்த மக்களின் நலனுக்காகவும் உழைப்பதில் கண்ணும் கருத்துமாய் இருத்தல். அருளாட்சி செய்வோர்க்கு உரித்தான பண்புகள் இவை என்னும் கருத்தில் 'வேந்தற்கு இயல்பு' எனக் கூறப்பட்டது. இயல்பாகவே உண்டாகுபவை யல்ல என்பது கருத்து.

383. ''தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலன்ஆள் பவர்க்கு.''

5. **தூங்காமை:** விழிப்புடன் பணி புரிதல்- எதிரிகள் செய்யும் சூழ்ச்சிகளினின்று தப்ப எந்நேரமும் விழிப்புடன் இறை யருளை வேண்டி நிற்றல். யாரை விழுங்கலாமெனச் சாத்தான் (மனுக்குல விரோதி) எந்நேரமும் கர்ஜிக்கும் சிங்கத்தைப் போலத் திரிகிறான் என்பதை நன்குணர்ந்து பணி செய்தல்.

6. **கல்வி:** சாதாரணக் கல்வியை மட்டுமன்று, இறை இயலையும் அதனோடு தொடர்பு கொண்ட இன்றையச் சமுதாய பிரச்சினைகளையும் நன்கு ஆய்ந்து அறிதல்.

7. **துணிவுடைமை:** 'அஞ்சாமை' என்பது குறித்து மேற் சொன்னது இதற்கும் பொருந்தும். இத்தகைய துணிவு இல்லாத

தால்தான் தவறான கருத்துகள் இன்று எங்கும் பரவி மக்களிடை குழப்பம் உண்டாக்கி வருவதைக் காண்கிறோம்.

இம்மையாகிய நிலன் ஆள்பவர்க்கும் மறுமையாகிய நில மிசை நீடுவாழ்வார்க்காக உழைக்கும் அருளாட்சியார்க்கும் இம் மூன்று பண்புகளும் நீங்காதிருத்தல் அவசியம். இம்மைச் சமுதாய வாழ்க்கைக்கே இது தேவை என்றால், நிலைத்து நிற்கும் நீடுவாழ்வு (நில மிசை நீடு வாழ்வார் - இம்மையில் நில மிசை நீடு வாழ்வு ஏது?) பெற உதவும் இறை அரசினர்க்கு எத்துணை அவசியம்!

384. ''அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு.''

இம்மை அரசுக்கே அறநெறி வழுவாத நிலையும், அந் நெறியைக் காக்க மறம்-வீரம், தீவிர நடவடிக்கை தேவைப் படும் எனின், இறைவன் அரசுக்கு 'அறன்' இழுக்காதல்லவை நீக்குவதும், மறத்தை அஃதாவது, அறநெறிக்கு எதிரானதெல் லாவற்றையும் ஒழிப்பதும் எத்துணை அவசியம் என்பதை வலி யுறுத்தத் தேவையில்லை. இறை அரசு, மறுமை சார்ந்த அருள் அரசு அன்பின் அடிப்படையில் அமைந்திருப்பது. 'என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் அளவுக்கு அன்பு வளம் பெறாவிடில் அஃது இறைவன் அரசு ஆகாது; அன்பின் அரசு ஆகாது. இதனாற்றான் 'அறத்திற்கு அன்பு சார்பு' என்று கூறப் பட்டுள்ளது. அன்புக்கு எதிரான அனைத்தையும் அஃதாவது, மறத்தை (மறச்செயல்களை) நீக்குவதற்கும் அந்த அன்பே துணையாய் உள்ளது. எந்த நல்லசெயலைச் செய்வதற்கும், தீய (மற) செயலை நீக்குவதற்கும் அன்பே துணையாய் உள்ளது. நல்லதன் மீது அன்பு எத்துணை ஓங்கியிருக்க வேண்டு மென்றால், அந்த அன்பின் வலிமையால் எந்தத் தீய எண்ணமோ, செயலோ ஒருவன் தன்னிடம் அணுகவிடக்கூடாது. இதனாற்றான் 'மறத்திற்கும் அன்பே துணை' எனப்பட்டது.

மேலும், தனக்குத் தீமை பயக்கும் என எண்ணி ஒருவன் எச் செயலையும் செய்யான். தீய செயலும் தனக்கு நன்மை பயக்கும் என்று ஒருவிதமயக்கத்தால் எண்ணுவதால்தான் அதைச் செய்யத் துணிகிறான். 'மறம்' என்னும் சொல்லை 'வீரம்' என்னும் பொருளில் கொள்வோமானால் நன்மை செய்ய வீரம் தேவைப்

பட்டால், அந்நன்மை மீது அன்பு கொண்டு அதைச் செய்யத் துணிவான். மறத்திற்கும் அன்பு சார்பு ஆவது காண்க.

385. "இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்ல தரசு."

இறையரசு - மறுமை அரசு - அன்பின் அரசு - அருள் ஆளும் அரசு எனப் பல பெயர்களால் கூறப்படும் தெய்வீகப் பேரவையில் அவ் அவையின் தலைவரும் அமைச்சரும் 'அருட் பொருளை'க் குடிகள் நன்மைக்காகப் பெருக்குவதற்கு வழி வகைகளை வகுத்த வண்ணமாகவே இருத்தல் வேண்டும். அவ்வக்காலத்துத் தேவைகள், (நவீன) சாதனங்கள், கல்வி முறைகள் முதலிய அனைத்தையும் பயன்படுத்த முயல வேண்டும்.

இம்மை அரசில் இவையெல்லாம் (பலமுறை தவறான வழிகளில்) கையாளப்படுகின்றன. உதாரணமாக, திரைப் படங்கள், தொலைக் காட்சிகள், வானொலி போன்ற சாதனங்கள் பன்முறை அறமுறைகளையன்றி மறமுறைகளை வளர்க்கவே பயன்படுவது காண்கிறோம். இங்ஙனமே விஞ்ஞான வளர்ச்சித் திட்டங்களும், கலாச்சார முறைகளும் தவறான முறையில் பயன்படுத்தப்படுவது காண்கிறோம். இதே சாதனங் களை அறம், அருள், அன்பு முதலான தெய்வீகப் பண்புகளை வளர்க்கவும் பயன்படுத்தலாம் - பயன்படுத்த வேண்டும். இத் தகைய வழிவகைகளை, புது முறைகளை அறிந்து கொள்ளவும், நல்ல வழியில் பயன்படுத்தவும், இயன்ற அளவில் தேவைகளுக்கு ஏற்பப் பெருக்கவும் (ஈட்டல்), நல்ல முறையில் பயன்படுமாறு காத்தலும், 'காத்தவற்றை அறம், பொருள், இன்பங்களின் பொருட்டு விடுத்தலும்' (பரிமேலழகர்) வல்லமை கொண்டது அரசு - அதற்கேற்ற பொருள் உதவியும் கொண்டு, திறன் படைத்த ஆட்களை உருவாக்க வசதியும் படைத்தது. ஆகவே, அரசு இக்கடமைகளை ஆற்றத் தவறலாகாது. மறுமை சார்ந்த அரசும் இயன்ற அளவுக்கு இவற்றைப் பயன்படுத்தவேண்டும்.

386. "காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்."

இம்மை ஆட்சிக்குரிய மன்னன் (தலைவன், அமைச்சர்) மட்டுமன்று, மறுமை சார்ந்த இறைவன், அரசின் (தெய்வீகப் பேரவை-திருச்சபை) தலைவரும் அவருக்குத் துணையாக உள்ள அமைச்சர்களும் (ஆயர்களும்), இவ் ஆட்சியைச் சார்ந்த மக்கள் தங்களிடம் வந்து தங்கள் குறைகளைச் சொல்லவும் (தெய்வீக அருள்) வாழ்க்கையின் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண வழி வகைகளை அறிந்து அவற்றைக் கையாளவும் தேவையான உதவியைப் பெற்றுக் கொள்ளக் கூடியவர்களாயிருக்க வேண்டும். ஆகவே, அவர்களைக் காண எளிதாயிருத்தல் வேண்டும். அருள் உதவியை (சில சமயங்களில் பொருள் உதவியை) நாடி வரும் போது கடும் சொற்களுக்கு இடம் தராமல் அன்புடன் ஏற்று ஆதரவளிக்க வேண்டும். இம்மை ஆட்சிக்குரிய 'மன்னன்' (அஃதாவது தலைவர்), அமைச்சர் ஆகிய இவர்களுக்குள்ளதை விட 'காட்சிக்கெளியன், கடுஞ்சொல்லன் அல்லன்' என்னும் இக்கடமை மறுமை ஆட்சிக்குரிய தலைவர், அமைச்சர்களுக்கு உள்ளது. ஏனெனில், இம்மை வாழ்வைவிட, மறுமை வாழ்வை வளம் பெற நடத்துவது கடினம். ஆகவே, உதவியும் மிக மிகத் தேவைப்படும்.

'மீக்கூறும் ...... நிலம்' நிலைத்துள்ளதாகிய மறுமை வாழ்வுக்கு இங்ஙனம் வழி நடத்தும் தலைவர், அமைச்சர்களை இம்மையும் மறுமையும் வாழ்த்தும்; போற்றும் என்க.

387. "இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
தான்கண் டனைத்திவ் வுலகு."

முந்திய குறளில் கடுஞ்சொல் தவிர்க்கும் அரசப் பதவியினரை இம்மை, மறுமை அனைத்துமே வாழ்த்தும் என்று கூறப்பட்டது.

இக்குறளில் கடுஞ்சொல் தவிர்ப்பதால் மட்டும் எல்லாப் புகழும் நன்மையும் கிடைத்துவிடாது என்கிறார்.

இன்சொல்லைப் பயன்படுத்தி, தேவையுள்ளவர்களுக்கு அருட் பொருளையோ, பொருட் பொருளையோ இரு பொருளையுமோ அன்போடு ஈந்து, அதே சமயத்தில் மக்களை நல்வழியில் நடத்த (அளிக்க) ஆன்ம வலிமை படைத்தவராயின், தம் சொல்லால் தாமே 'உலகைப் படைத்துத் தாமே உலகத்

தைக் காத்தலுக்கு ஒக்கும்' (பரிதியார்). அந்த அளவுக்கு உலகினர் தமக்குப் பணிந்து கிடப்பர் என்றவாறு.

388. "முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்."

மறுமை வாழ்வுக்குரிய நெறி முறைகளை மக்களுக்கு எடுத்துக் கூறுவதோடு நில்லாமல். அவற்றைத் தம் வாழ்க்கையிலும் கடைப்பிடித்து (செய்து) மக்களும் அவ்வாறே ஒழுகுமாறு செய்யும் அரசு, இறைவன் (கிறித்து-அரசன்) என்றே எண்ணப் படும்.

இறை அரசின் தலைவரும் அமைச்சரும் (குருக்களும்) கிறித்துவின் பதிலாட்கள் எனப்படுவர். இவ் அரசின் தலைவரும் அமைச்சரும் கிறித்து உலகில் வாழ்ந்தது போலவே எல்லாத் தெய்வீக நற்பண்புகளுடன் விளங்க வேண்டும் என்றவாறு.

குரு—மறு கிறித்து. உலகில் **இன்றையக்** கிறித்து எனப் படுவது திருச்சபை வழக்கு. அத்துணைப் புனிதமும் நன்மையும் உள்ளவராய் விளங்க வேண்டுமென்பது கருத்து.

389. "செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு."

மறுமை வாழ்வுக்குரிய அருள் வாக்குப் பெரும்பாலும் மக்களுடைய தவறான உலகப் போக்குக்குப் பிடிக்காது. நன் முறைகளைப் பெரும்பாலும் வெறுப்பர். எனினும் அரசு அம் முறைகளை வற்புறுத்தித் தீர வேண்டும். தவறிப் போனால் கண்டிக்க வேண்டும். சில சமயங்களில் தண்டிக்கவும் வேண்டும். இதெல்லாம் யாருக்கு இனிக்கும்? ஆகவே, கசப்பான சொற் களைத் தாராளமாகப் பேசுவர். அவற்றைப் பொறுத்துக் 'கொண்டு தம் கடமைகளை விடாமல் செய்து கொண்டேயிருந் தால், மனம் மாறி அரசுக்குப் பணிவர். (கவிகை = அதிகாரம், ஆட்சி).

390. "கொடைஅளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க் கொளி."

**கொடை:** மறுமை வாழ்வுக்கு இன்றியமையாத அருட் கொடைகளைத் தாமே கொடுக்க வல்லமையில்லெனினும், தமக்குத் தரப்பட்ட ஆன்மீக அதிகாரத்தால் அருட் சாதனங்கள் வாயிலாகவும், தமது அருள் வாழ்வின் வலிமையாலும் பிறர்க்குக் கிடைக்கச் செய்ய இறை அரசில் அமைப்பு உண்டு.

**அளி:-** தலையளி (பரிமேலழகர்) செய்யவும் அருள் பெற்றது இவ்வரசு.

**தலையளியாவது:** அருள் வாழ்வுக்கு-மறுமை தெய்வீக வாழ்வுக்கு இன்றியமையாத **தலைமையான** அருள். 'இருள் சேர் இருவினையும் நீங்கி', 'இறைவனது பொருள்' - அவன் தாளாற்றித் தந்த அருட் பொருளை முதன் முதல் மக்களுக்குக் கிடைக்கும் வாய்க்காலாக அமைந்துள்ளது இறை அரசு.

இவ்வருட் பொருளை இழக்காமல் காத்திட அவ்வந்நேரத் தில் அருள் உதவி 'அருட் கொடை' என இறைவன் தருவது என்க. சிறப்பாக வேண்டுதலால் கிடைக்கும் கொடை.

**செங்கோல்:-** நேர்மையான முறையில் 'முறை செய்து' (காப்பாற்றும் வகையில்) மக்களை - இறையரசின் குடி மக்களை நல்வழியில்-அருள் வழியில் நடத்திச் செல்லுதல், இறையரசில் - திருச்சபையில் ஆளும் அதிகாரம் உண்டு. ஆனால், இம்மை ஆட்சி போன்ற ஆளுகையன்று. அன்பின் ஆட்சி-அருள் ஆட்சி. (குறட் பாக்கள் 242, 244, 252 இவற் றுள் காணும் ஆள்க, ஆட்சி என்னும் பதங்களை இப் பொருளிலும் கொள்ளலாம்).

**குடியோம்பல்:- இறையரசின்** குடிமக்களுக்காக உயி ரையும் கொடுத்துக் காத்தல் - அஃதாவது, தீய நெறியில் செல்லாமலும், சென்று விட்டால் எத்துணை தியாகம் செய் தேனும் அவர்களை அந்நிலையிலிருந்து மீட்டல். (ஓம்புதல் என்னும் சொல்லுக்கு, கா. அப்பாத்துரையார் தரும் விளக்கம் காண்க).

இந்நான்கும் ஒருசேர விளங்கினால்தான் இறை அரசு அப்பெயருக்குத் தகுதியுள்ளதாகும்.

# இறைமாட்சி
## சுருக்கம்

381. "படைகுடி கூழ்அமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு."

**இம்மைப்பொருள் :**

நாட்டைப் பாதுகாக்கப் படை, நற்குடிகள், தேவையான உணவுப்பொருள், துணை செய்யும் அமைச்சர், பிற நாட்டவரோடு நட்புறவு, பாதுகாப்பு அரண் இவை ஆறும் ஒருங்கே கொண்டிருப்பவனே அரசருள் மிக வலிமையுள்ளவன்.

**மறுமைப்பொருள் :**

(ஆன்மாக்களைத் தீய சக்திகளிடமிருந்து காக்க வானவர்) படை, இறைவன் சட்டங்களுக்கு அமைந்து வாழும் மக்கள், ஆன்மீக உணவுப்பொருளாகிய அருட்சாதனங்கள், மக்களை நல்வழியில் நடத்தத் தொண்டர், (Ministers) எல்லாரோடும் நட்புறவு, உள்ளத்தின் அரண் போன்ற இறையருள் இவை யெல்லாம் ஒருங்கே அமைந்திருந்தால்தான் உலகில் இறைவனின் ஆட்சி (அரசு) ஓங்கும்.

382. "அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு."

**இம்மைப்பொருள் :**

நாட்டை ஆளும் ஆட்சிப் பீடத்தினர்க்கும் கடமை செய்வதில் அஞ்சாமை, தேவைப்படும் போது ஈகை, நல்லறிவு, நன்மை செய்வதில் ஊக்கம் இவை நான்கும் குறைவுபடாதிருத்தல் இன்றியமையாதது.

**மறுமைப்பொருள் :**

இறையரசில் ஆளும் பொறுப்பேற்றுள்ளவர்க்கும் இப் பண்புகள் இன்றியமையாதன.

383. "தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவற்கு."

**இம்மைப் பொருள் :**

பணிபுரிவதில் விழிப்பு, ஆட்சி செய்வதற்கு ஏற்ற கல்வி, இடையூறு வெல்வதில் துணிவுடைமை இம்மூன்றும் அரசினர்க்குக் குறைவுபடலாகாது.

**மறுமைப் பொருள் :**

அருளாட்சி புரிவோர்க்கும் இப்பண்புகள் தேவை.

384. "அறன் இழுக்கா தல்லவை நீக்கி மறன் இழுக்கா
மான முடைய தரசு."

அறமுறையில் தவறாமல், மாறான செயல்களை நீக்கி ஆட்சி செய்யத் தேவைப்படும் வீரத்தில் குன்றாத மானம் உடையது அரசு.

அருளாட்சிக்கு இப்பண்பு சிறிதும் குறைவுபடலாகாது.

385. "இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்லது அரசு."

தேவையான பொருள் வருமாறு செய்தலும், வந்ததைச் சேகரிப்பதும், அதைக்காப்பதும், காத்ததைத் தக்கமுறையில் மக்களுக்கு வகுத்துக்கொடுத்தலும் அரச அதிகாரத்தைச் சார்ந்தவை.

இறைவன் தாளாற்றித்தந்த அபரிமிதமான அருட் பொருளைத் தக்கார்க்கு வேளாண்மை செய்வது இறையாட்சி செய்வோர் கையில் உள்ளது. (பொருள் செயல்வகை-அதிகாரம் 76 காண்க).

386. "காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம்."

மக்கள் காண்பதற்கு எளியவனாயும், கடுமையாகப் பேசாதவனாயும் ஆட்சி புரிபவனது நாட்டை, மக்கள் உயர்வாகக் கூறுவர்.

இறை அரசில் பணி செய்வோரும் இப்பண்புடன் விளங்கினால்தான் அவ்வரசுக்குப் பெருமை.

387. "இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
தான்கண் டனைத்திவ் வுலகு."

இன்சொல் பேசி, தேவைப்படுவோர்க்குத் தக்கமுறையில் பொருளுதவியும் அளித்துக் காக்கக் கூடிய அரசினற்குத் தன் சொற்படி, தான் எண்ணியவாறு நடக்கும் மக்கள் உளராவர்.

'ஈரம் அளைஇப் படிறு இலவாம் செம்பொருள் கண்டார் (குறள் 91) வாய்ச்சொல்'லாகிய இறைவனின் இனிய ('ஒருவன் செய்தி') சொல்லை ஆண்டு, எளியோர்க்கு வழங்கி இறையாட்சி செய்பவர்க்கு உலகமே அடிமையாகும்-அஃதாவது, அச்சொற்படி நடப்பவர் மக்கள்; அவர் எண்ணியவாறு எல்லாம் நடைபெறும்.

388. "முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்."

முறையோடு குடிமக்களைக் காக்கும் அரசினர் மக்களுக்குத் தெய்வம்போல் இருப்பர்.

இறையருளுக்கேற்ப மக்களை நடத்தும் அருளாட்சியினர் இறைமக்களுக்கு வலிமை மிக்க துணையாவார்.

389. "செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ் தங்கும் உலகு."

ஆட்சியில் ஏற்படக்கூடிய குறைகளை மிகைப்படுத்திச் செவியும் மனமும் கசக்குமாறு பேசப்படும் சொற்களைப் பொறுத்துக் கொள்ளும் பண்புள்ள ஆட்சியினர் குடை நிழலில் உலகம் தங்கும்.

அருளாட்சியில் இத்தகைய பொறுக்கும் பண்பு இன்றியமையாதது; அருளாட்சி உருவாவதே பொறுமை என்னும் அடித்தளத்தின் மீதே.

390. "கொடைஅளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க் கொளி."

பொருள் கொடை தருதல், மக்கள் அருள்பெற வழி செய்தல், செம்மையான ஆட்சி முறை, குடிமக்களைக் காத்தல் இவை நான்கும் கொண்டிருப்பவரே ஆட்சி முறைக்கு ஒளி போன்றவர்.

அருள் ஆட்சியர்க்கு இவை மிகச்சிறப்பாகப் பொருந்தும்.

# 40. கல்வி

391. ''கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.''

மறுமை சார்ந்த அருள் வாழ்வுக்கு இன்றியமையாத உண்மைகளைக் குறைவின்றி, தவற்றுடன் கலப்பின்றி, முழுமையாகக் கற்க வேண்டும். கற்றால் மட்டும் போதாது. கற்றதற்கு ஏற்றவாறு ஒழுகவும் வேண்டும்.

392. ''எண்என்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு.''

'எண்ணும் எழுத்தும் கண் எனத்தகும்' என்னும் பழமொழியே இக்குறளில் காண்கின்றோம். இஃது இம்மை வாழ்வுக்குச் சிறப்பாக மிகமிகத் தேவை என்பதில் ஐயமில்லை. எனினும், இம்மை வாழ்வுக்குத் தேவைப்படுவது (உதாரணமாக 'எழுத்து' என்னும் சொல்லால் குறிப்பிடப் படும்) கல்வி, படிப்பு இலக்கணம், இலக்கியம். மறுமை வாழ்வுக்குரிய நூல்களை-சிறப்பாக 'நிறைமொழி மாந்தர்' (குறள் 28) கூறிய அந்நிறைமொழியை அறிந்து ஆய்ந்து அதனுள் கூறப்பட்டுள்ள மொழியின் பெருமையையும் அம்மாந்தர் பெருமையையும் உய்த்துணர்ந்து அதற்கேற்ப 'நிறைவாழ்வு' நடத்தவும் பெரிதும் பயன்படும் என்பதால் இவ்வெண்ணும் எழுத்தும் மக்களுக்கு-சிறப்பாக அருள் வாழ்வு வாழ விரும்பும் உயிர்களுக்குத் தேவை என வலியுறுத்தப்படுகிறது.

393. ''கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.''

இம்மை மறுமை வகை தெரியுமாறு கசடறக் கற்றவர் ஊனக் கண்ணை மட்டும் அன்று, ஞானக் கண்ணையும் உடையவர் என்னும் கருத்து உரையாளர் கூறுவதினின்றும் புலப்படுகிறது.

இத்தகைய உண்மைக் கல்வி கற்றவர் கண்ணுடையவர்; மற்றவர் புண்ணுடையவர்; அஃதாவது, கண்ணில்லாதவர்போல என்றவாறு.

''தேயம் இடையிட்டவற்றையும், காலம் இடையிட்ட வற்றையும் காணும் ஞானக்கண் உடைமையின் கற்றாரைக் கண்ணுடையர் என்றும், அஃதின்றி நோய் முதலியவற்றான் துன்பம் செய்யும் ஊனக் கண்ணே உடைமையின் கல்லாத வரைப் புண்ணுடையர் என்றும் கூறினார்.'' இது பரிமேலழகர் உரை.

'தேயம் இடையிட்ட'...... 'காலம் இடையிட்ட' என்னும் சொற்றொடர்களால் ஆசிரியர் குறிப்பிட விரும்புவது என்ன? குறிப்பிட்ட தேயத்தை மட்டுமன்று, உலகின் எல்லாத் தேயங் களையுமே. அஃதாவது, மனித இனம் அனைத்தையுமே. நிறத் தாலும், இனத்தாலும், கலாசாரத்தாலும், மொழியாலும், பழக்க வழக்கங்களாலும் வேறுபட்ட தேயத்தினர் எல்லாரும் தொடக்கத்தில் கூறப்பட்ட, இறைவன் தரும் 'நீடு வாழ்வு' பெற அழைக்கப் பெற்றவர் என்பதை உணர்ந்தவராய், நினைவி லிருத்திச் செயல்புரிய வேண்டியவர்கள் ஆகின்றோம். அங்ஙனமே குறிப்பிட்ட காலத்தில் செய்யத் தக்க குறிப்பிட்ட செயலை மட்டுமே கவனியாது எக்காலத்துக்கும் (நீடு வாழ்வு பெறப்) பயன்படக்கூடிய முறையில் செயலாற்ற வேண்டியவர்களா கின்றோம். இங்ஙனம் உய்த்துணர வெறும் ஊனக்கண்கள் போதா; ஞானக் கண்ணும் வேண்டும். இங்ஙனம் ஞானக் கண் செயலாற்றா விடில் மனித வாழ்க்கை வெறும் ஐம்புல வாழ்க்கை யாகவே இருக்கும். அங்ஙனமின்றி ஐம்புலன்களையும் கடந்து, ஐந்தவித்தான் இம்மையில் வாழ்ந்து காட்டிய மாதிரியைக் கண் முன்வைத்துக் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறிவதாகிய சிற்றின்பத்தைக் கடந்து, ஊனக்கண்ணால் காண்பவற்றின் உண்மைத் தன்மையையும் அளவிறந்த பேரின்பமாகிய 'வீடு ஆகிய நுண்பொருள்களையும்' (காலிங்கர்) பழுதறக் காண முனைந்து நிற்றல் வேண்டும். இதற்கேற்பக் கற்றல் வேண்டும். இன்றேல் கண்ணிருந்தும் காணாதவர் ஆவர்.

394. ''உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.''

முந்திய குறளில் கூறிய 'வீடு' ஆகிய நுண்பொருளின் இலக்கணத்தைத் தக்க முறையில் கற்று, அதில் புலமை

பெற்றவர்களுடைய உயர்வு இங்குக் கூறப்படுகிறது. இத் தகைய புலவரைக் (பேரின்பப் புலவரை) காணுதலும் அவரோடு உரையாடலும் (தலைக் கூடி) பெரிதும் உவப்பளிப்பதாகும். பிரிவதோ வருத்தம் தருவதாம். இஃது எத்தன்மைத்து எனின், உயிர் நண்பர் கூடிப் பிரியும் போது 'இனி எப்போது காண் போமோ, கூடுவோமோ' என்று ஏங்கும் ஏக்கத்தைப் போன்ற தாகும். இங்ஙனம் கற்பதும் கற்பிப்பதும், தொழில்களுள் சிறந்த தொழில். ஏனெனில், பிற எல்லாம் இம்மைச் சிற்றின்பத் தையே காட்டும். இத் தொழிலோ பேரின்பத்துக்கு வழி காட்டும்.

சிற்றின்பம் வெஃகுவோர் அறன் அல்ல செய்யத் தூண்டப் படுவர். பேரின்பம் வெஃகுவோர் அறன் அல்லவற்றைத் தவிர்ப்பதே தம் தொழிலாகக் கொள்வர்.

395. "உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர்."

வாழ்க்கை வசதிகள் பல உடையவர் முன்னிலையில் அவ் வசதிகள் ஒன்றுமில்லாதவர் தலை நிமிர்ந்து நிற்க இயலாமல் பணிந்து போவர். அது போல மேற்கூறிய மறுமை வாழ்வுக் கல்வியைச் சிறப்புறக் கற்றவர் முன்னிலையில் தாழ்ந்து வணங்கி நிற்பர். அக்கல்வியைச் சிறப்புறக் கல்லாமல் தம் நிலை உணர்ந்து அந்நிலைக்கு நாணிக் கற்க வேண்டிய முறையில் கல்லாமல் இருந்து விடுவோர் எஞ்ஞான்றும் இழிந்தவரேயாவர். (பரிமேலழகர் உரை காண்க).

மறுமை வாழ்வுக்கடுத்தவை, அஃதாவது, காலிங்கர் உரை கூறுவது போல், அளவிறந்த வீடு ஆகிய நுண்பொருள்களையும் பழுதறக் கற்பது எத்துணை உயர்வு தருவது! கல்லாமல் இருப்பது எத்துணை இழிந்தது என வலியுறுத்துவது காண்க.

396. "தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு."

கற்றது கைம்மண்ணளவு; கல்லாதது (கற்க வேண்டியது) உலகளவு என்றது இம்மைக்குரிய அறிவினைக் குறிப்பிட்டே

என்றால், மறுமைக்குரிய இறை அரசு, அளவில்லா இறையியல்பு முதலியன குறித்து அறிய வேண்டியது பற்றி என்னென்போம்! ஐந்தவித்தானாகிய இறைவனைப்பற்றிய அறிவு, கற்கக் கற்க ஊற்றெனப் பெருக்கெடுத்துக் கொண்டே யிருக்கும். ஆகவே, மறுமை வாழ்வுக்குச் செல்லும் வரை இவ்வறிவை நாம் வளர்த்துக் கொண்டேயிருத்தல் வேண்டும். 'போதும்' என்னும் நிலை எந்நாளும் இராதென்க.

397. ''யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு.''

கல்வி என்னும் சொல்லால் ஒரு நாட்டு இனம், மொழி, இலக்கணம், இலக்கியம், வரலாறு, பழக்க வழக்கங்களைப் பற்றிய அறிவு இவை முதலியவற்றைக் குறிப்பிடலாம். கணிதம், அறிவியல், உலகவரலாறு இவற்றையும் குறிப் பிடலாம். முன்னையவை குறிப்பிட்ட நாட்டை மட்டுமே, அல்லது ஊரை மட்டுமே தன்னுள் அடக்கும் அளவுள்ளதொரு கல்வி யாகும். பின்னையவை குறிப்பிட்ட நாட்டையோ, ஊரையோ குறிப்பிடாமல் உலகனைத்தையுமே தன்னுள் அடக்குவதால் மக்களின் பொதுக் கல்வி, அல்லது உலகப் பொதுக் கல்வி எனலாம். இம்மை வாழ்வைப் பொறுத்த அளவில் இப்பாகுபாடு இருந்தே தீரும். மறுமை வாழ்வு, இறையரசு தரும் பேரின்ப வாழ்வைப் பொறுத்தமட்டில் இப்பாகுபாட்டிற்கு இடமேயில்லை. மனித இனம் அனைத்தையுமே பாதிப்பதாகும். அதன் இயல்பே அவ்வாறு. நாட்டுக்கொரு பேரின்பம், ஊருக்கொரு மறுமை என்றில்லை. ஆகவே, உண்மைக் கல்வி கற்பவன் நாடு, ஊர், இனம், மொழி இவற்றையெல்லாம் கடந்து, 'அளவிறந்த வீடு ஆகிய நுண்பொருளைப் பழுதறக்' (காலிங்கர்) கற்க வேண்டிய தால், வாழ்நாள் எல்லாம் இக்கல்வியைத்தான் முழு நேரப் பணி யாகக் கொள்ள வேண்டியவனாகின்றான். ஆகவே, 'சாந்துணை யும்' (உயிருள்ளளவும்) அவன் இத்தகைய கல்வியில் ஈடுபடாம லிருப்பது எத்துணை அறியாமை? குறைபாடு?

398. ''ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து.''

ஒரு நிலையில், அஃதாவது, வாழ்க்கைத் தொடக்கத்தில், தான் கற்ற கல்வி, ஒருவனுக்கு வாழ்க்கையின் எல்லா நிலை களிலும் பாதுகாப்பாகும்.

இம்மைக் கல்விக்கும் மறுமைக் கல்விக்கும் இது பொருந்தும். இம்மைப் பொருட் பொருள் பற்றிய உண்மையான கல்வி வாழ் நாள் முழுதும் பயன்படும். மறுமை வாழ்வுபற்றிய உண்மைக் கல்வி நீடுவாழ்வு பெறப் பயன்படும் என்க.

399. ''தாம்இன் புறுவது உலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.''

முற்கூறிய மறுமைப் பேரின்ப வாழ்வுக் கல்வியைச் சிறப்புறக் கற்றதால், உள்ளத்தில் இன்பம் - மறுமைப் பேரின்பத்தின் தொடக்கமெனத் தோன்றும். இதைக் காணும் பிறரும் (உலகம்) இன்புறுவர். தமது இன்பத்தைக் கண்டு பிறர் (உலகம்) இன்புறுவதைக் காணக்காண ஏற்கெனவே அக்கல்வியைக் கற்றறிந்திருந்தாலும், மேலும் மேலும் அதைக் கற்கப் பெரு விருப்பம் கொள்வர். இத்தகைய நிலை வெறும் இம்மைக் கல்விக்கு இல்லையென்றே கூறலாம். சாதாரண இலக்கணம், இலக்கியம், அறிவியலால் மட்டும் உள்ளத்தில் மிகுதியான இன்பம் அல்லது நிறைவு தரும் இன்பம் உண்டாவது அரிது. இறைவனைப்பற்றிய மறுமைக் கல்வியையோ கற்க வேண்டிய முறையில் கற்கும் போது பேரின்பத்தைச் சார்ந்ததொரு இன்பம் உண்டாகாமற் போகாது. அதைப் பிறர் கண்டு தாமும் இன்பம் கொள்வர். இதனைக் காணும் போது இம்மறுமைக் கல்வியைக் கற்போர், மேலும் இவ்வறிவில் வளர்ச்சியும் உயர்வும் அதனால் வரும் இன்பமும் பெற்று விளங்குவர்.

மறுமை வாழ்வுக் கல்வியின் மேன்மையும், வலிமையும் பயனும் கூறும் குறள்.

400. ''கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை.''

அழிவு படாத மேலான செல்வம் ஒருவன் கற்ற கல்வியறிவே. மற்றவையெல்லாம் அழிந்துபோம். இது எந்தக் கல்விக்குச் சிறப்பாகப் பொருந்தும்? இம்மைக் கல்விக்கா? மறுமை நீடுவாழ்வுதரும் கல்விக்கா? இம்மைக் கல்வியெல்லாம் இறந்துபடும்போது மறைந்து விடும். மறுமைக் கல்வியோ பேரின்ப வாழ்வில் - நீடிய வாழ்வாகும் இறை வாழ்வில் மேலும் நிறைவுறுமேயன்றி அழிந்தொழியாது. அப்போது யாம் கற்ற

இம்மைக் கல்வியெல்லாம் எத்துணை அற்பம் என்பதும் தெளி வாகும். இந்த அற்பக் கல்விக்காக இவ்வளவு உழைத்தோமே! மறுமைக் கல்விக்காக இன்னும் எவ்வளவோ அதிகமாக உழைத் திருக்க வேண்டுமே! என்று தோன்றும். இது விஷயத்தில் ஐந்தவித்தான் பொருட்பொருள்பற்றிக் கூறியது இம்மை மறு மைக் கல்விச் செல்வத்துக்கும் பொருந்தும்.

காண்க : அரு. 6 : 27.
மத். 6 : 19-21.

## கல்வி

### சுருக்கம்

391. "கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக."

உலக முறையில் கற்பதைக் குற்றமின்றி நன்றாகக் கற்க. அறம், பொருள் முதலியன கற்றபின் கற்றதற்குத் தக்கவாறு ஒழுகுக.

மறுமை வாழ்வு, இறைவன், அவன் அருள், அன்பு முதலியன நன்கு அறியுமாறு முயன்றபின், கற்றுக்கொண்ட மறுமைக் கருத்துகளுக்கேற்ப வாழ்வு நடத்துக.

392. "எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு."

இம்மைக் கல்வியில் எழுத்து (நூல்கள்) கணிதம் இவை இரண்டும் மனிதனுக்குக் கண்போல அவசியம்.

மறுமை ஆன்மீக வாழ்வுக்கு எண்ணிப் பார்த்தலாகிய இறைத் தியானம்-வாசித்துச் சிந்திக்க வேண்டிய நிறைமொழி மாந்தராகிய இறைவனின் வாக்கு இன்றியமையாதன.

393. "கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்."

இம்மைக் கல்வி கற்றவர் ஒன்றை மனக்கண்ணால் பார்த்து அறியக்கூடியவர்; கல்லாதவர் இருகண்ணும் புண்பட்டு உள்ளவர் போன்றவர்.

மறுமை வாழ்வுபற்றிக் கற்றவரும், உலகத்தையும் அதன் நிகழ்ச்சிகளையும் ஆன்மீக தெய்வீகப் பார்வைகொண்டு பார்த்து ஒழுகுபவருமே கண்போல மதிக்கப்படத்தக்கவர்; மற்றவர்கள் உள்ளக்கண் (ஞானக்கண்) பிணிபட்டிருப்பவரே.

394. "உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்."

கல்வி கற்பிக்கும் புலமையுடையவர் தொழில் எத்தகையதெனில், உள்ளத்தால் மகிழ்ச்சியோடு கூடி (புணர்ந்து) உள்ளத்தில் பிரிய வேண்டிய நிலையை அடையும் இரு காதலர் பிரிவு போன்றது. (அஃதாவது, கல்வி கற்பிப்பவர் மாணவர்க்கு அறிவு புகட்டுவது எத்துணை அருமை எனில் மீண்டும் ஆசானை எப்போது காண்போம் என்று மாணவர் நினைக்கத் தோன்றுவது போலாம்).

சாதாரணக் கல்வி கற்பிப்பவர் புலமைக்கு இத்துணை மதிப்பும் பற்றும் காட்டப்பெறுமாயின், மறுவாழ்வு பற்றிய அறிவு புகட்டும் ஆசானைக்குறித்து என்னென்போம்!

395. "உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர்."

பொருள் உடையவர் முன்னிலையில் ஒன்றுமில்லாதவர் (ஏதாவது பொருள் கிடைக்காதா என்று) ஏங்கி நிற்பது போல், ஆசிரியர் முன் மாணவர் நின்று கற்றல் வேண்டும். (அஃதாவது, அத்துணை ஆவல் தேவை). அங்ஙனம் கற்றவரே கற்றவர் என்னும் பெயருக்குத் தகுதியாவர்; மற்றவர் கடையரேயாவர்.

இம்மைக்கல்வி பெற, கற்க வேண்டும் என்னும் ஆர்வம் இவ்வளவு தேவையெனில், மறுமைக் கல்விபற்றி என்னென்போம்!

396. "தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு."

மணலில் தோண்டிய கிணறு தோண்டத்தோண்ட நீர் சுரக்கும். மாந்தர்க்குக் கற்கக் கற்க அறிவு பெருகும்.

இது இம்மைக் கல்விக்கும் பொருந்தும்; மறுமைக் கல்விக்கும் மிகச்சிறப்பாகப் பொருந்தும். ஏனெனில், மறுமைக்கல்வி பகுத்தறிவை முற்றிலும் கடந்தது. இறைத் தியானத்தில் உள்ளம் ஈடுபடும் அளவுக்கு அத் தெய்வீகக் கல்வி பெருகும்.

397. ''யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.''

இம்மைக் கல்வியறிவு உள்ளவனுக்கு எந்நாடும் தன்நாடு போல; எவ்வூரும் தன் ஊர் போல. (எங்கும் அவனுக்குச் சிறப்பு இருக்கும்). ஆனால், அவன் சாகும்வரை அறிவை வளர்த்துக் கொண்டே இருக்க வேண்டும். கற்றது போதும் என்றிருந்து விட்டால், கற்றதும் சீரழியும். அதனால் எங்கும் சிறப்புப் பெறான்.

இறைவனைச் சார்ந்த மறுமைக்கல்வி, உலகையே தன்பால் ஈர்க்கக்கூடிய தெய்வீக அருள் வலிமை கொண்டதென்றவாறு.

398. ''ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்
கெழுமையும் ஏமாப் புடைத்து.''

மனத்தை ஒருநிலையில் நிறுத்திக் கற்கப்படும் கல்வி ஒருவற்கு வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் நன்மை பயப்பதாகும்.

மறுமைக்கல்வியில் உயர்வுபெற, மனத்தை ஒருநிலைப்படுத்தி இறைவன்பால் செலுத்துவது இன்றியமையாதது.

399. ''தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.''

ஒருவன் கற்றறிந்த அறிவினால் தான் இன்புறுவதைக் கண்டு உலகமே இன்புறும். இதையுணர்ந்த கற்றோர், மேலும் கற்றறிய மிக விரும்புவர். இம்மைக்கல்வியால் அடையக்கூடிய இன்பம் சிற்றளவினதே.

இறைவனைப்பற்றிய அறிவோ பேரின்பம் தருவது; இதையுணர்ந்தவர் அளவிடவியலா இறைவனின் அருள் அன்புச் செல்வத்தை அடைந்து இன்புற மேலும்மேலும் முயல்வர்.

400. ''கேடில் விழுச்செல்வங் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை.''

அழிவுற இயலாத செல்வம் கல்வி. மற்றதெல்லாம் செல்வம் என்னும் பெயருக்கே தகுதியற்றவை.

இம்மைக்கல்வி இம்மைக்கு மட்டுமே பயன் தருவது. வாழ்வின் இறுதியில் அழியக்கூடியது. மறுமைக் கல்வியோ இறைவனைச் சார்ந்துள்ளதால், இறைவனைப் போலவும் மறுமை வாழ்வு போலவும் அழியாதது; பேரின்பத்தில் நிலைப்பது. அந்த மறுமைப் பேரின்ப வாழ்வில் இம்மைக்கல்வி மிகச் சிறியதொரு பகுதியாயிருக்கும்.

# 41. கல்லாமை

401. ''அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.''

இறை அரசு சார்ந்தோர், மக்கள் கூட்டத்தில் அவ் அரசினைச் சார்ந்த உண்மைகளை எடுத்துக் கூற வேண்டிய வர்கள். இங்ஙனம் கூறுமுன் நிரம்பிய நூல் அறிவு பெற்றிருக்க வேண்டும். 'நிரம்பிய நூல்' என்பதற்கு உரையாளர் சரியான பொருளைக் கூறுவதாகத் தெரியவில்லை. 'நிறைவுற்ற நூல்கள்' என்கிறார் காலிங்கர். நிறைவுற்ற நூல்கள் எவை என்பதற்கு விடை என்ன? இம்மைக் கல்வியைச் சார்ந்த நூல்களுள் 'நிறைவுற்றது' என எதைக் கூற இயலும்? அது எம் மொழியில் உள்ளது? ஏன் அதை நிறைவுற்றதெனக் கூறலாம் என்று பல வினாக்கள் எழும்பும். 21-ஆம் குறளில் கூறப்படும்'பனுவல்', 28-ஆம் குறளில் கூறப்படும்' நிறைமொழி' யையே இந்நிரம்பிய நூல் எனக் கூற இடமுண்டு. இம்மைக் கல்வியைச் சார்ந்த எந்த நூலும் நிறைவான வாழ்வாகிய பேரின்ப வாழ்வுக்கு வழிகாட்டுவதாகாது. மறுமை வாழ்வுக்கு அழைத்துச் செல்லக் கூடிய 'ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க நெறி,' 'இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டு வந்தவர் காட்டிய நெறி,' நிறைமொழி மாந்தர் 'காட்டிய' நூலே நிரம்பிய நூல் ஆகும். நூல் என்னும் போது, இன்றைய பொருளில் அச்சிடப்பட்ட புத்தகம் என்று பொருள் கொள்ள வேண்டிய அவசியமில்லை. 'கருத்துகளின் தொகுப்பு' என்னும் பொருளிலும் கொள்ளலாம்.

இத்தகைய நிரம்பிய கருத்துத் தொகுப்பு இன்றிக் 'கோட்டி கொளல்'- பிறருக்கு எடுத்தோதுதல், அரங்கின்றி வட்டாடியது போலாம். அஃதாவது, பொருளற்ற செயலாகும்.

402. ''கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று.''

அத்தகைய மறுமை வாழ்வுக் கருத்துத் தொகுப்பினை நன்கு கற்றறியாதவன் மக்களுக்குச் சொல்ல வேண்டிய நற் கருத்துகளைக் கூற விரும்புதலும் பொருளற்றதே.

403. ''கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின்.''

இவ்வுலகில் கற்றார் முன் கல்வியறிவு இல்லாதவர்கள் வாய் மூடிகளாய், 'பாவம்', 'ஒன்றுமறியாதவர்கள்; கல்வி கேள்வி களில் தேர்ச்சியில்லாதவர்கள்' என்ற பரிதாபத்துக்குரியவர்க ளாவர். அவர்களை நல்லவர், மிக நல்லவர் என்று யாரும் கூறுவதில்லை. இரக்கத்திற்குரியவர் ஆவாரேயன்றி 'நனி நல்லர்' எனப் போற்றுதற்குரியவர் ஆகார்.

ஆனால், மறுமை வாழ்வுபற்றிய விஷயத்தில், மேற் சொன்ன நிரம்பிய நூல் அறிவு இல்லாதவன், அச்சமின்றிப் பிறர்க்குத் தவறான கருத்துகள் எடுத்துக் கூறாதவரை— அங்ஙனம் கூறுவதால் பிறரைத் தவறான பாதையில் செலுத் தாதவரை, அந்த அளவுக்காவது நல்லவர் என்று கூறலாம். தவறான கருத்தால் பிறர் மனத்தைக் கெடுப்பவரை நல்லவர், நனி நல்லர் என்று எங்ஙனம் கூற இயலும்? தங்கள் அறியாமை உணர்ந்து, அதுவும் மறுமை வாழ்வுக்குரிய காரியங்களில் எங்கே தவறான கருத்தை உரைத்துவிடுவோமோ என்று அஞ்சி, 'கற்றார்முன்' பேசாமல், அவர்கள் சொல்வதைக் கேட்டு அறிவு பெறுவது மிக நன்மையான செயல்தானே!

மறுமைக்குரிய கருத்துகள் பொருட் செறிந்தவை; எளிதில் நம் சிற்றறிவுக்குப் புலப்படுபவையல்ல. ஆகவே, 'அரை குறையான கல்வியுடன் பிறர்க்குப் போதிக்கத் தொடங்காதே' என்று எச்சரிக்கிறது இக்குறள்.

405. ''கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.''

மெய்ஞ்ஞானம் ஆகிய மறுமைக் கல்வி அதிகமாக இல்லாத வன் தன்னைப் பெருமையாக நினைத்துக்கொள்ளலாம். இத் தகைய வீண் மதிப்புக் கொள்பவர்கள் இல்லாமல் இல்லை.

இத்தகையவன் தன்னைவிட அதிகமாக ஞானம் உள்ளவனிடம் சென்று பேசினால், அவன் மதிப்புமங்கி விடுவதைக் காண்கிறோம்.

இம்மைக் கல்வியில் ஓரளவு சிறந்து விளங்குவோர்க்கே இத்தகைய வீண் தன்மதிப்புத் தகாதெனின், 'அளவிலா வீடு' பற்றிய கல்வியில் எத்துணை சிறந்து விளங்கிடினும் அஃது இறைவன் அருளால் மட்டுமே உண்டாவதால் பெருமை பாராட்ட இடமேயில்லை. இம்மைக் கல்விக்குத் தன் முயற்சியே பெரும்பாலும் போதும். இறைவனைச் சார்ந்த தெய்வீக அருட்பொருளைப்பற்றிய அறிவோ வெறும் மனித முயற்சியால் மட்டுமே அடையக் கூடியதொன்றன்று. 'அவன் அருளாலே அவன் தாள் வணங்கி' என்பதற்கு ஏற்ப, அவன் அருளால்தான் அவனைப்பற்றிய உண்மையான தெய்வீக அறிவை ஒருவன் பெறக் கூடும். இதில் வீண் பெருமைக்குச் சிறிதும் இடமே இல்லை என்றவாறு.

**தலைப்பெய்து-** "கற்றுவல்ல சான்றோரிடைச் சென்று தலைப்பட்டு உரையாடவே அவை அனைத்தும் சோர்வுபடும்" (காலிங்கர்). 'சான்றோர்' என்றது யாம் கூறும் பொருளில் கொள்க.

406. "உளர்என்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்
களர்அனையர் கல்லா தவர்."

கற்க வேண்டியதைக் கல்லாதவரைக் குறித்து, 'ஏதோ இருக்கிறார்கள்,' 'ஏதோ உயிர் வாழ்கிறார்கள்; அவர்கள் வாழ்வதால் நமக்கும் பயனில்லை; களர் நிலத்தைப் போல் எதற்கும், யாருக்கும் பயனில்லை' என்று தான் கூறவியலும்.

மறுமைக்கான தெய்வீகக் கல்வியைக் கற்க எம்முயற்சியும் எடுக்காதவரைக் குறிப்பிட்டால், மேற் சொன்னதைவிட நூறு மடங்கு அதிகமாகக் கூறவியலும்.

இம்மைக் கல்வி ஓரளவேனும் தமக்கும் பிறர்க்கும் பயன்படும். மறுமைக் கல்வியோ பன்மடங்கு அதிகமாகப் பயன்படும் என்றவாறு.

407. ''நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை அற்று.''

நுண்ணியவையும், உயர்வு (மாண்) பெற்றவையுமான கருத்துகளுள் நுழைந்து ஆராயக் கூடிய அறிவு (புலம்) இல்லாதவனிடம் காணக்கூடிய எழில் நலம், மண்ணால் எழில் மிக்கதாய்ப் புனையப் பெற்ற பொம்மைக்குச் சமம். இக்கருத்து இம்மை அறிவுத் திறனுக்குப் பொருந்தும். சிறப்பாக, 'அளவிறந்த வீடு ஆகிய நுண்பொருள்'களைப் பழுதறக் காண்பதற்குத் தேவைப்படும் தெய்வீக அருள் திறனுக்குப் பொருந்தும். பின்னைய நுண்பொருள் (நுண்ணிய கருத்துகள்) வெறும் மனித அறிவுக்கு அளவிறந்த வகையில் மேம்பட்டவை. அவற்றுள் நுழைந்து மறுமை வாழ்வுக்குரிய கருத்துகளை உய்த்துணர இறை அருள் இன்றியமையாதது. அவ்வருளை யடைய முயலாதவன் (அருள்) உயிரற்ற பிண்டமே. அவன் உலகில் வாழ்ந்தும் பயனில்லை. ஆகவே, இவ் உயர் நுண்பொருளை மேலும் மேலும் அறியமுயன்று, அவ்வறிவுக் கேற்க வாழ்க்கை நடத்துபவனே மனிதப் பிறவியெடுத்ததன் பயனையடைவான். அங்ஙனம் முயலாதவர் உலகில் பிறந்தும் பயனில்லை.

408. ''நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு.''

வறுமை என்பது நன்மையன்று - பல துன்பங்களுக்கு வழியாதலான் அது வரவேற்கத் தக்கதன்று; இன்னாதது. ஆனால், இதைவிடத் துன்பம் தரக்கூடியது யாதெனில், கற்க வேண்டியதைக் கல்லாரிடம், வந்தடையக்கூடிய செல்வம் (பொருட் பொருள்) ஆகும். செல்வத்தை எங்ஙனம் நல்ல முறையில், ஒழுக்கத்துக்கு ஊறு விளையாமல் பயன்படுத்த வேண்டும்; பயன்படுத்தக் கூடும் என்பது அறியாதிருக்கும் நிலை. பொருட் பொருளின் தன்மை, நோக்கம், செலவிடுவதில் அளவு முதலிய கருத்துகளை அறியாதவன் மனம் போல, தகாத முறையிலுங்கூடப் பயன்படுத்தத் தயங்கான். இது நல்லாரிடம் காணக்கூடிய வறுமையைவிட எவ்வளவோ இன்னாததே.

(பொருட்) பொருளை நல்ல முறையில் பயன்படுத்த விதிகள் இல்லாமல் இல்லை. இவற்றை இம்மைக் கல்வியிலும் கற்றுக்

கொள்ளலாம். ஆனால், கற்றதை நடைமுறையில் கொண்டுவர எல்லாரிடத்தும் போதிய அளவு மனப் பக்குவமோ, மனவலிமையோ கொள்கைப் பிடிப்போ பெரும்பாலும் காண்ப தில்லை. இந்த மனப்பக்குவம், மன வலிமை, கொள்கைப் பிடிப்பு இவையெல்லாம் இம்மைக் கல்வியால் மட்டும் ஏற்படுவ தில்லை. இதற்கு மறுமைக் (அருட்பொருள்) கல்வி அவசியம். கல்வியோடு அருள் உதவியும், தியாக மனமும், உயர்வான மனப்போக்கும், (பொருட்) பொருளும் இறையருளால் நமக்குக் கிடைக்கும் ஒரு நன்மை- நம்மிடம் ஒப்படைக்கப்பட்டதொன்று. பொறுப்புணர்வுடன் பயன்படுத்தப்பட வேண்டும்-என்னும் எண்ணங்கள் உள்ளத்தெழுந்தால்தான் செல்வத்தைத் தக்க முறையில் பயன்படுத்தவியலும் என்க.

409. ''மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்திலர் பாடு.''

மேற் குலத்தில் பிறந்திருந்தாலும் கல்வியின்றேல், கீழ்க் குலத்தில் பிறந்தும் கல்வியுள்ளவராயிருப்பவர்க்குள்ள பெருமை கல்வியற்ற அம்மேற் குலத்தாருக்கில்லை.

கொள்கையளவில் இஃது உண்மையே எனினும், நடை முறையில் பெரும்பாலும் தலை கீழாகத்தான் இருக்கின்றது. அஃதாவது, மேற்குலத்தாராயிருந்தால், அக்குலம்பற்றியே அவர்களுக்கு மதிப்பளிக்கப்படுகிறது. கீழ்க்குலத்தவராயிருந் தால், அக்குலம்பற்றியே மதிப்பளிக்கப்படுவதில்லை. இதைச் சிறப்பாக நம் நாட்டில், தமிழ் நாட்டிலுங்கூடக் கண்கூடாகக் காண்கிறோம். ஆனால், மறுமை வாழ்வுக் கல்வியில் சிறந்து விளங்குவோர்க்கு, அக்கல்வி ஏற்ற ஒழுக்கத்தோடு ஒன்றியிருந் தால், மக்கள் முன்னிலையில் பெரும்பாலும் மதிப்புண்டு. எனினும், அவர்கள் தாழ்ந்த குலத்தவராயிருந்தால் இறையரசில் தான்-இறைவன் முன்னிலையில்தான்-அவர்களுக்கு மதிப்புண்டு. குலத்தையோ பிறப்பையோ வேறு உலகியல் பண்பினையோ பாராட்டுபவன் அல்லன் இறைவன். அவன் 'வேண்டுதல் வேண்டாமையிலாதான்'. ஒருவரிடத்துள்ள அருட்பொருள் ஒன்றையே அவன் கண்கள் நோக்குகின்றன. குலம் முதலிய பொருட் பொருளைச் சார்ந்த பண்புகளுக்கு இறைவன் மதிப் பளிப்பதில்லை. ஆகவே, இறைவனின் மக்களென விளங்கும் நாமும் அங்ஙனமே மதிப்பிடுதல் வேண்டும்.

410. ''விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர்.''

விலங்குகளுக்கும் மக்களுக்கும் இடையே எத்துணை வேறு பாடு உள்ளதோ அத்துணை (ஏன் அதனையும்விட அதிகமான) வேறுபாடு உள்ளது, இலங்கு நூல் கற்றார்க்கும் அதைக் கல்லா தார்க்கும் இடையே. இலங்கு நூல் என்னும் பெயரால் ஈண்டுக் குறிப்பிடப்படுவது எது? அஃது ஒரு நூலா? நூல்களின் தொகு தியா? என வினாக்கள் எழுகின்றன.

'நிரம்பிய நூல்' என்று இவ்வதிகாரத்தின் முதற் குறளில் கூறப்பட்ட நூலே இங்கு 'இலங்கு நூல்' எனப்படுகிறது என்பது எம் துணிபு.

மேலும் இம்மை இலக்கண இலக்கிய நூல்களுள் 'இலங்கு நூல்' என்று எதைக் குறிப்பிடவியலும்? சிறப்புற்ற நூல்கள் எத்தனையோ உள. 'விவிலிய' என்னும் கிரேக்கச் சொல், ஆங்கிலத்திலும் வேறு பல உலக மொழிகளிலும் 'பைபிள்' என்று கூறப்படுகிறது. 'விவிலிய' என்னும் பன்மைச் சொல் 'நூல் தொகுப்பு' என்று பொருள்படும். உண்மையில் இந்நூல் பல நூல்களைக் கொண்டதொரு தொகுப்பே என்பது தெளிவு. இலங்கு நூல், நிரம்பிய நூல் என்னும் சொற்றொடர்கள் நூல்கள் தொகுப்பை உணர்த்தக் கூடும். ஆகவே, இவ்வதி காரத்தில் 'நிறை மொழி,' 'பனுவல்' என்னும் நூலைக் கல்லா மையான் விளையும் குறைபாடுகள் கூறப்படுகின்றன என்பது புலனாகிறது.

## கல்லாமை

### சுருக்கம்

401. ''அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.''

ஆழ்ந்த நூலறிவு இன்றி அவை (கோட்டி)யில் நின்று பேசுதல் (கொளல்) சூதாடுமிடம் (அரங்கு) இல்லாமலே சூதாடு கருவியை உருட்டுவதுபோலப் பொருளற்றது.

இங்கு மறுமைப் பொருளே சிறக்கும். 'நிரம்பிய நூல்' - நிறைமொழி மாந்தராகிய இறைவன் பனுவல் என்க. அதை நன்கு கல்லாமல் இறைமக்கள் அவையில் பேசுவது பொருத்த மற்ற செயல்.

402. "கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று."

மேற்சொன்ன நூலறிவு இல்லாதவன், அவையில் பேசத் துணிவது பெண்மைக்குரிய முலைகள் இல்லாதவள் பெண்மையை விரும்புவது போன்றது; இயலாதது.

இது சிறப்பாக 'நிறைமொழி'யாகிய நூலைக்கற்று அறியா தவர்க்குப் பொருந்தும்.

403. "கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின்."

நன்கு கற்றறியாதவர், கற்றறிந்தவர்முன் பேசாதிருப்பதே நல்லது. இதுவும் சிறப்பாக மறுமைப்பொருள் நூலைக் கல்லாதவர்க்குப் பொருந்தும். 'நிறைமொழி' யைக் குறை மொழியாக எடுத்துரைப்பதைவிடப் பேசாமலிருப்பதே மேல்.

404. "கல்லாதான் ஒட்பங் கழியநன் றாயினும்
கொள்ளார் அறிவுடை யார்."

நூலறிவில்லாதவன் சில சமயங்களில் நன்றாகப் பேசக் கூடும். (உதாரணமாக-சொல்லடுக்காக-சரளமாக......) ஆனால், பேசுவதில் உண்மையான அறிவு புலப்படாது. வெறும் பேச்சாகவே இருந்து விடும். அறிவுள்ளவர்கள் அதைக் கண்டு கொள்வர்.

இம்மை மறுமைக்கல்வி இரண்டிற்கும் இது பொருந்தும்.

405. "கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்."

கற்றறியாத ஒருவனின் தகுதி, அறிவில் சிறந்தவரோடு கூடி உரையாடும்போது சீரழியும். (இத்தகுதி பிறர் தன்னைப்

பற்றி எண்ணிக் கொள்வதாயிருக்கலாம். அல்லது தானே தன்னை உயர்வாக மதித்துக்கொள்வதாயிருக்கலாம்).

இதுவும் இம்மை, மறுமைக்கல்வி இரண்டிற்கும் பொருந்தும்.

406. "உளரென்னு மாத்திரையர் அல்லால் பயவாக்
களரனையர் கல்லா தவர்."

கல்வியறிவு இல்லாதவரைக் குறிப்பிட்டு 'இவர்கள் ஏதோ மனித உருவில் இருக்கின்றனர்; ஒன்றுக்கும் உதவாத களர்நிலம் போல!' எனலாம்.

இம்மைக்கல்வி அதிகம் இல்லையெனினும் ஓரளவு அனுபவ அறிவுள்ளவர் இருக்கின்றனர். மறுமைக்கல்வியாகிய இறையருள் அறிவு இல்லாதவர் 'பூப்பதே இல்லை' ...... வாழ்ந்தும் பயனில்லை.

407. "நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை யற்று."

நுண்ணிய அரிய பல பொருள்களைக் கூறும் நூல்களில் நுழைந்து உட்புலன் (கருத்து) காணும் திறமையில்லாதவனின் வெளியழகாகிய நலன், மண்ணால் செய்த பொம்மையின் அழகு போன்றது; எப்பயனுமில்லாதது.

மறுமைப்பொருள் நுண்மையறிய வெறும் இயற்கை அறிவு போதாது. அருள் ஒளி மிகத்தேவை என்னும் கருத்து இங்கு மறைந்துள்ளது.

408. "நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு."

கல்வி, பண்பு உள்ள நல்லவர்கள் வறுமையால் வாடுவது இரங்கற்குரியதே. எனினும், அதைவிட இரங்கற்குரியது கல்லாதவரிடம் சேரும் செல்வம். (அதைத் தக்க முறையில் பயன்படுத்தார்).

மறுமைப்பொருள்: இறையருள் அறிவு இருப்பின் வறுமை முதலிய துன்ப நிலைகளைத் தாங்க இயலும்.

அஃது இல்லையேல் எத்துணை இரங்கற்குரியது!

409. ''மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்திலர் பாடு.''

மேற்குலம்பற்றிப் பெருமைகொள்வர் பலர். ஆனால், மேற்குலத்தில் பிறந்தும் உண்மையறிவில்லாதவராயின், அதனால் பெருமையெதுவுமில்லை. மாறாக, கீழ்க்குலம் எனக் கருதப்படுபவர் கற்றவராயின் அதுவே அவர்க்குப் பெருமை.

இது சிறப்பாக 'வாய்மைக்குடி' (குடிமை அதிகாரம் காண்க) எனப்படுவோர்க்கும் பொருந்தும். வாய்மை என்னும் சான்றாண்மை அறிவால் அவர்கள் 'மாசற்றகுலம்' ஆவர். அதனாலேயே மாண்பு அடைவர்.

410. ''விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.''

நல்ல நூல் அறிவு கற்றவரோடு ஏனையவரை ஒப்பிட்டு நோக்கின், கல்லாதவர் விலங்குகளுக்கு ஒப்பாவார்.

இம்மை மறுமைபற்றிய அறிவு இன்றி அருள், அன்பு முதலிய தெய்வீகக் கருத்துகளை அறிந்து கொள்ள இயலாதவர் விலங்குகளிலும் இழிந்தவரே என்க.

# 42. கேள்வி

411. ''செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை.''

இக்குறளில் 'செவிச்செல்வம்' என்னும் சொற்றொடரால் குறிக்கப்படுவது என்னவென முதற்கண் ஆய்ந்தறிந்தால்தான் குறளின் முழுக் கருத்துப் புலப்படும்.

'கல்வி கேள்விகள்' என்னும் சொல் தொடர் வழக்கில் இருப்பது தெரிந்ததே. இத் தொடரில் 'கேள்வி' என்னும் சொல் லால் குறிக்கப்படுவது என்ன?

இவ்வதிகாரத்திற்குத் தலைப்பு 'கேள்வி' என்றிருக்கிறது. ஈண்டு இச்சொல்லுக்கு 'வினா' என்னும் பொருள் பொருந்தாது. 'செவியால் கேள்' என்னும் பொருளுடன் பொருந்தும் ஒன்றைக் குறிப்பிடுதல் வேண்டும். அங்ஙனம் கேட்பது பெரும் செல்வம் என்று வலியுறுத்தவே 'செவிச் செல்வம்' என்கிறார். இனி பெரும் செல்வமெனக் கருதப்படும் அளவுக்குச் செவியால் எதைக் கேட்க வேண்டும் என்பதை ஆய்தல் வேண்டும். செவியால் எதைக் கேட்டால் அது பெரும் செல்வமாகும்? அதுவும் 'செல் வத்துட் செல்வமாகும்?' இதற்கு விடை காணத் திருவள்ளுவரே வழி காட்டுகிறார் என்பது எம் துணிபு. 'செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம்' என்று கூறும் வள்ளுவர், 'செல்வத்துள் செல்வம் அருட்செல்வம்' என்றும் கூறுகிறார். செவிச் செல்வமும் அருட்செல்வமும் ஒன்றையே குறிப்பிடுகின்றன எனப் புலப்படுகிறது. ஆனால், ஒரே கருத்தைக் கூற இரு சொற் றொடர்களை ஏன் பயன்படுத்த வேண்டும் என்னும் வினா உடனே எழுகிறது. இதற்கு விடை, செவிச் செல்வம்பற்றிக் கூறும் குறளின் பிற்பகுதியில் காணவியலும் எனத்தோன்றுகிறது. அப்பகுதியாவது: **'அச்செல்வம் செல்வத்துள் எல்லாம் தலை'** இப்பகுதியில் 'தலை' என்னும் சொல்லுக்கு **முதன்மை யானது, பெரியது** என்னும் பொருளையே உரையாளர் கூறுவர். இப்பொருள் உண்மையானால், அருட் செல்வத்தை

விடச் செவிச் செல்வமே மேலானது - முதன்மையானது என்னும் பொருள் வெளிப்படும். இஃது உண்மையாயிருக்க இயலுமா?

அருட் செல்வத்தைப்பற்றி, 'அருள் சேராத நெஞ்சினர் இன்னா உலகம் புகுவர். அருளில்லார்க்கு அவ்வுலகம் (மறுமை, மேலுலகம்) இல்லை. அருள் அற்றார் பூப்பதேயில்லை', என்றெல்லாம் அழுத்தமாகக் கூறும் வள்ளுவர், இத்துணை மேன்மையும் வலிமையும் படைத்த அருளைவிடச் செவிச் செல்வமே மேலானது என்று எங்ஙனம் கூற இயலும்? ஆகவே, 'தலை' என்னும் சொல்லுக்கு ஈண்டு வேறு பொருள் இருத்தல் வேண்டும்.

இப்பொருளைப் பழைய உரைகளுள் காலிங்கரது உரை நன்கு விளக்குவதாகப் புலப்படுகிறது. அவர் உரை: ''உலகத்துச் செல்வங்கள் பலவற்றுள்ளும் சிறந்த செல்வம் யாதெனின் செவிச் செல்வம். **ஆதலான்,** ஒருவன் கேட்பன வற்றுள் தனது **செவியினால் மறுமைக்கு ஆக்கம் இனிதுறக் கேட்கும் கேள்வியே தலைச் செல்வம்''** என்பதாம். அஃதாவது, செவியால் கேட்டு அடையக் கூடிய செல்வங்கள், நற்பயன்கள் பல உள. ஆனால், இவை இம்மை வாழ்வு சார்ந்த செல்வங்கள். இம்மை வாழ்வுவாழும் காலத்திலேயே மறுமைக்கு வழிகாட்டுவதாய், ஒருவன் ஆக்கங்களுள் மிகச்சிறந்த ஆக்கமாய் உள்ள இறையருள் ஆக்கத்தை (அருட் செல்வத்தை-இறைவன் பொருளை-அவன் தாளாற்றித் தந்த பொருளை) அடைவதற்கு ஏற்ற தலைச்செல்வம் இச்செவிச் செல்வமேயாகும். இங்குத் தலைச் செல்வம் என்றது தலைப் பேறு என்பது போல முதலாவது என்னும் பொருளில் மட்டுமே உளது. ஏனெனில், ஒருவன் மறுமைக்குரிய அருள் ஆக்கத்தை அடைய முதலில் கவனிக்க வேண்டியவை அதன் (அஃதாவது அருள் ஆக்கத்தின்) தன்மை, அதை அடையும் வழி, அதற்கான முயற்சி முதலியன பற்றிக்கேட்டல் இன்றியமையாதது. தானாகவே இவற்றை யெல்லாம் ஒருவன் அறிந்து கொள்ள இயலாது. ஒருவேளை நூல் களைப்படிப்பதால் அறியலாமே என்றால், படிப்பதன் உண்மை உட்பொருளைத் தானாகவே புரிந்துகொள்ள வழியில்லை. இதற்குக் குருவின் துணைவேண்டும். இதற்காகவே இறைவன்-ஆதிபகவன் தானே உலகுக்கு வந்து மக்களுக்குப் போதித்தான். தனக்குப் பின் சீடரை உலகுக்கெல்லாம் அனுப்பித் தான் போதித்த எல்லாவற்றையும் தவறின்றிப் போதிக்குமாறு

கட்டளையும் தந்தான். (மத். 28 இறுதி வசனங்கள் காண்க). இதைக் குறிப்பிட்டே, (விசுவாசம் என்று கிறித்துவர்கள் கூறும்) அருள் வாழ்வு பற்றிய மெய்யறிவும் உணர்வும் செவி வாயிலாகவே தொடங்குகின்றது எனக் கூறப்படுகிறது. (உரோ. 10:10—17 காண்க).

தலைச் செல்வம் என்னும் தொடருக்கு முதலில் இறைவன் வாக்குக் கேட்கும் நல் வாய்ப்பு-அருள் வாய்ப்பு என்பதே பொருள் என்க.

412. ''செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்.''

செவிக்குணவு — மேற்சொன்ன அருள்வாக்கு- இறையரசு-மறுமை வாழ்வுபற்றிய போதனை. இவ்வுணவு எந்நாளும் எந்நேரமும் தேவைப்படுவதொன்று. அதனை வழங்கும் 'குரு'க்கள் எந்நேரமும் இப்பணியைச் செய்யக் காத்திருத்தல் வேண்டும். 'எந்நேரமும்' என்றால் 'ஓயாமல்' என்பதன்று பொருள். அடிக்கடி, சிறப்பாக மறுமைபற்றிய வினாக்கள் எழும் போது-மறுமை வாழ்வில் வளர ஆர்வம் மிகும் போது என்பது பொருள். சுருங்கக் கூறின் இத்தெய்வீக அருள் வாழ்வு சார்ந்த உணவுக்கே ஒருவன் முதலிடம் கொடுக்க வேண்டும். 'வயிறே கடவுள்' என வாழ்பவர்கள் போல் இருத்தலாகாது. ஏதோ ஓரளவுதான் வயிற்றுணவுபற்றிய கவலை இருத்தல் வேண்டும். இக்கருத்தைக் குறிப்பிட்டே ஐந்தவித்தானாகிய இறைவன் (ஆதி குரு) ''எங்கள் அனுதின உணவை எங்களுக்கு இன்று அளித்தருளும்'' என்று வேண்டுதல் செய்யக் கற்பித்தார். இதில் 'அநுதின' என்னும் சொல்லுக்கு மூலமொழியில் 'இம்மைத் தேவைக்கு மேலான' எனப் பொருளும் உண்டு என்று விவிலிய அறிஞர் கூறுவர். ''முதன் முதல் இறைவனின் அரசைத் தேடுங்கள்- மற்றதெல்லாம் உங்களுக்குச் சேர்த்துக் கொடுக்கப் படும்'' என்று அவர் கூறியதின் கருத்தும் இதுவே.

413. ''செவியுணவின் கேள்வி உடையார் அவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து.''

செவியுணவாகிய அல்லது செவிக்குணவு போன்ற கேள்வியினை உடையவர் இந்நிலவுலகில் வாழ்ந்திடினும், அவியுணவை

யுடைய தேவரோடு ஒப்பர் என்பது உரையாளர் கூறும் பொருள். ஆனால், யாம் ஈண்டுக் கூறும் கருத்துப்படி செவிவழியாய் யாம் பெறும் இறைவாக்கு என்னும் ஆன்மீக உணவு, உலகில் வாழ்க்கையில் இறைவாக்கு என்னும் உணவையும் ஐந்தவித் தானது அவியுணவையும் துய்த்து இன்பம் பெற்ற—மேலுலக வாசிகளுக்கு ஒப்பாவர். இவ் அவியுணவு வானோர் (தேவர்) உணவு எனப்படுவதும் வழக்கு. மேலுலகப் பேரின்பம் அடைய, இவ்விருவகை உணவு இப்போதே ஆன்மாக்களைத் தயாரிக்க வலிமை படைத்துள்ளது என்றவாறு.

414. ''கற்றிலன் ஆயினும் கேட்க அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாம் துணை.''

தானாகவே கற்க வேண்டியதை (சிறப்பாக மறுமை சார்ந்த கருத்துகளை) ஒருவன் கற்பதற்குப் போதிய திறமையோ வசதியோ இல்லாத நிலையில் இருந்தாலும், அவன் செவி யால் கேட்டுக் கற்றுக்கொள்ள இடமுண்டு. எழுத்தறிவு இல்லாத பல கோடி மக்களுக்கு இக் 'கேள்வி'யறிவு தவிர வேறென்ன வழியுண்டு? இதனால் ஆதி பகவன்-ஆதி குருவாகிய இறைவன்-ஐந்தவித்தான், ''உலகெங்கும் சென்று போதியுங்கள் ..........கேட்டு எவர் ஏற்றுக் கொள்வாரோ (விசுவாசிப்பார்களோ) அவர்களுக்கு மீட்பு உண்டு'' என்று கூறினார் (மாற். 16:15-1). இம்மை வாழ்வில் ஏற்படக் கூடிய பிரச்சினைகளுக்கும் மனத் தளர்ச்சி, துன்பம் முதலிய எல்லாச் சூழ்நிலைகளிலும் இத்தகைய 'கேள்வி' யால் வரும் மறுமைபற்றிய அறிவே நரக வாழ்வு (ஒற்கம்) போன்ற இவ்வுலக வாழ்வில் அனைத்தையும் வெல்லவும், பாவத்தில் விழுந்து இறுதியில் 'நரகினுட் சென்று விழாது மறுமை நெறி செல்லவும் பெரியதோர் உறுதித் துணை'யாகும். (காலிங்கர் உரை காண்க). ஊற்று-ஊன்று என்னும் ஆகுபெயரின் னகரம் திரிந்து நின்றது. பற்றுக்கோடு என்பது கருத்து.

415. ''இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்.''

வாய்ச்சொல்-கேள்வி

இம்மை வாழ்வு பெரிதும் சறுக்குதலையுடைய பாதை போன்றது. தவறான கருத்துகள், தவறான பாதையில் எளிதில்

ஒருவனைச் செலுத்தக் கூடும். இந்நிலையில் மறுமை ஒழுக் கத்தில் சிறந்தவர் சொல் கேட்பது உறுதியான ஊன்றுகோல் போலாகும்.

416. "எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்."

செவி வழி கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டிய கருத்து களுள் மிக மிக உயர்ந்த கருத்துகளும் உள. சாதாரண நற் கருத்துகளும் உள. இம்மையைச் சார்ந்த கருத்துகளுள் சில அற்பமானவையாயிருக்கலாம்; தவறானவையாயுமிருக்கலாம். மறுமை வாழ்வைச் சார்ந்த கருத்துகளுள் மிகச் சிறிய கருத்தும் பயன் தரக்கூடியதாயிருக்கலாம். உதாரணமாக — இறைவ னுடைய இயல்புபற்றிய கருத்துகள் அவன் ஐந்தவித்தானாகித் 'தாளாற்றித் தந்த பொருள்', 'என்பும் உரியர் பிறர்க்கு' என் பவை மிக உயர்வான கருத்துகள். இறைவன் மீது ஒருவர்க் குள்ள அன்பைக் காட்ட அனைவரும் வியக்கக் கூடிய முறையில் மாபெரும் தியாகத்தைச் செய்ய வேண்டுமென்றில்லை; மிகச் சிறிய செயலையும் அன்பு நிறைந்த உள்ளத்தோடு செய்தால் அதற்குப் பெருமதிப்பு உண்டு. இது போன்ற கருத்துகள் 'சிறியவை'யே. ஆயினும், நல்ல கருத்துகள். இத்துணை சிறிய வற்றையும் கேட்டுத் தெரிந்துகொள்வது 'ஆன்ற பெருமை தரும்'; அஃதாவது, நற்பயனைத் தரும்.

417. "பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத் துணர்ந்து
ஈண்டிய கேள்வி யவர்."

பிழைத்து = தவறான முறையில்

இழைத்து = எண்ணி

ஈண்டிய கேள்வி = பல வழிகளில் முயன்று அடைந்துகொண்ட கேள்வி அறிவு. பொருள்களின் மெய்ம்மையை அறிதல்.

பிழைத்து என்றது இழைத்து என்பதற்கு எதிர்ச் சொல் லெனக் கொண்டால் பிழைத்து என்னும் சொல்லுக்கு 'நன்கு எண்ணிப் பார்க்காமல் ஒரு காரியத்தைச் செய்தல்,' என்னும் பொருள் கொள்ள இடமுண்டு. இழைத்து என்பது 'எண்ணி' என உரையாளர் பொருள் கூறுவதால், நன்றாக எண்ணிப்

பார்த்து, ஒன்றைப் பல கோணங்களிலிருந்தும் ஆய்ந்து பார்த்துப் பொருள்களின் மெய்ம்மையை, அல்லது மெய்ப்பொருளை உணர்ந்து கொண்டவர், சில சமயங்களில் இயல்பாக ஏற்படக் கூடிய அறிவுக் குறைபாட்டால் தவறானதொரு கருத்து மனத்தில் உண்டானாலும், பேதைமைக்குரிய எதையும் சொல்ல மாட்டார்கள்.

இது சிறப்பாக மறுமை அருள் வாழ்வு சார்ந்த அறிவுக்குப் பொருந்தும். உலகில் குறைபாடில்லாத பிறவியே இல்லை. ஆகவே, குறைபாடான கருத்துச் சில சமயங்களில் நல்ல கேள்வி அறிவு, அருளறிவு பெற்றவர்க்கும் உண்டாகக் கூடும். ஆனால், அப்போதும் நன்கு எண்ணிப் பார்த்த பின் உயரிய கருத்தையே கூறுவர். பேதைமை குறிப்பிடும் கருத்தினைச் சொல்லார்.

418. | ''கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி.''

குருவிடமிருந்து செவியால் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டிய மெய்ப்பொருளை-சிறப்பாக மறுமை சார்ந்தவற்றை ஓசையளவில் கேட்பதால் பயன் ஒன்றுமில்லை. இது ஒரு காதால் கேட்டு மற்றக் காதால் வெளியேற்றுவது போலாகும். கேட்கப்படும் பொருள் செவியைத் துளைத்துக் கொண்டு போய் உள்ளத்தில் பதிய வேண்டும். அப்போதுதான் நன்மை பயக்கும்.

கேள்வியால் அடையக் கூடிய அறிவு—சிறப்பாக மறுமை வாழ்வுபற்றிய அறிவு—எங்ஙனம் அடைதல் என்பது பற்றிக் கூறும் குறள்.

இதுபற்றி ஆதிகுருவாகிய இறைவன் கூறியது கவனித்தற்குரியது. கேள்வியால் ஒருவன் பெற்றுக்கொள்ள வேண்டிய இறையரசின் அறிவை விதைக்கு ஒப்பாகக் குறிப்பிட்டு, அதைப் பலர் நன்கு கேட்பதில்லை. 'கேட்பினும் கேளாத்தகையவே' அச்செவி என்னும் கருத்தில் கூறுவது. (மத். 13:18-23) காண்க.

419. | ''நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயினர் ஆதல் அரிது.''

மெய்யான செவிச் செல்வம், இம்மைப் பொருள்களின் ''உண்மைத் தன்மையையும் அளவிறந்த வீடு ஆகிய நுண்

பொருள்களையும் பழுதறக் காண்பதேயாகும்'' (காலிங்கர் உரை). இத்தகைய மேலான நுண்பொருள்களைப் பழுதறக் காண்பவர் 'வணங்கிய வாயினர்' ஆவர். அஃதாவது, பெருமை பாராட்டிக் கொள்ளார். பழுதறக் காணாதவரே அங்ஙனம் செய்வர். ஆகவே, செவி வழி உண்டாம் கேள்விச் செல்வம்— அதுவும் மறுமையைச் சார்ந்ததானால் ஒருவனைச் செருக்குற்ற வனாக்காது. மாறாக அக்கேள்விச் செல்வம் வளர வளரப் பணிவு மனம் வளரும் என்க.

420. ''செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்.''

செவியால் பெறக்கூடிய ஆன்மீக உணவை—மெய்ப் பொருளை, அருட்பொருள் என்னும் தெய்வீக உணவைச் சுவைக்கும் உள்ளப் பக்குவம் இல்லாதவர், வாய்க்குச் சுவை யான உணவையே வாழ்வின் முக்கிய நோக்கமாகக் கொண்டிருப் பவர் மக்கள் என்னும் பெயருக்கே தகுதியற்றவர்கள். அவர்கள் மாக்களே. அத்தகைய மனிதர் வாழ்ந்தால் என்ன? வீழ்ந்தால் (இறந்தால்) என்ன?

மனிதன் மனிதனாகவும், மறுமைக்குரிய வாழ்வுக்குத் தகுதி யுள்ளவனாகவும் இருக்க வேண்டுமானால், செவியால் பெறக் கூடிய இச்செல்வத்தை — மெய்ப்பொருளை, அருட்பொருள் என்னும் செல்வத்தை ஆர்வமுடன் உள்ளத்தால் சுவைக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். ஐம்புலன் உணர்வுகளுக்கு அப்பால் தெய்வீகச் சுவை படைத்த உணவு ஒன்று உண்டு என்று உணர்ந்து, அதைச் சுவைத்துச் சுவைத்துத் தன் உலக வாழ்க்கையை அமைத்துக்கொள்ள வேண்டும். இம்மை மறுமை வகை தெரிந்து 'அறம் பூண்டாரின்' சீடனாயிருக்க எல்லா முயற்சியும் செய்துகொண்டேயிருக்க வேண்டும்.

கல்வி, கேள்வி என்னும் முற்பகுதிகளில் இம்மை அறிவு, மறுமை அறிவுபற்றிக் கூறப்பட்டது. இவ்விரு அறிவினுள் உண்மையான அறிவு எது? எத்தன்மையது? அதன் பயன் என்ன என்னும் வினாக்களுக்கு இப்பகுதி விடை கூறும்.

# கேள்வி

## சுருக்கம்

இப்பிரிவில் உள்ள குறட்பாக்கள் பெரும்பாலும் மறுமை அருட்பொருளை உணர்த்துவதாயமைந்துள்ளன.

411. ''செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வம்
செல்வத்து ளெல்லாந் தலை.''

(அருட்செல்வம் செல்வத்துட்செல்வம்' என்று வலியுறுத்தும் குறள் இங்குச் செவிச்செல்வமும் செல்வத்துட்செல்வம் என்கிறது. ஆகவே, செவிச்செல்வமும் அருட் செல்வமும் நெருங்கிய தொடர்புள்ளவை என்பது தெளிவு). செவி வழியாகக் கேட்டுப் பெறப்படும் சாதாரண அறிவுச்செல்வம் செல்வத்துட் செல்வம், செல்வத்துள் எல்லாம் தலையாயது என்பது பொருந்தாது. ஆகவே, இக்குறள் கூறும் 'செவிச்செல்வம்', 'நிறைமொழி மாந்தர்' கூறிய அருண்மொழியைக் கேட்பதால் வரும் இறையருளாகிய செல்வமேயாகும். இந்த இறையருட் செல்வம் ஒன்றிற்கே 'செல்வத்துள் எல்லாம் தலை' என்பது பொருந்தும். இம்மைக்கல்வி கேள்விகளுள் எதற்கும் இது சிறிதும் பொருந்தாது என்பது தெளிவு.

412. ''செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்.''

(செவிச்செல்வம் அருள் செல்வத்துள் எல்லாம் தலையாய தால், அதையடைவதே வாழ்க்கையின் ஒரே குறிக்கோளாக இருத்தல் வேண்டும். நாள் முழுவதும் அதைக்குறித்தே கவலை கொள்ளுதல் வேண்டும்). அச்செல்வத்தை அடைய இறையருள் வாக்கு ஆகும் செவிக்குணவை உள்ளத்தால் உண்பது ஒன்றே அவசியம். அவ்வுணவு உண்ணச் சில சமயங்களில் வாய்ப்பில்லா விடில் வயிற்றுக்குச் சிறிது உணவு கொடுக்கலாம். (வயிறே கடவுள் என வாழ்வோர்க்கு இது எச்சரிக்கை என்க).

இக்கருத்து மறுமைக்குரிய அருள் வாழ்வுக்கே சிறப்பாகப் பொருந்தும் எனினும், இம்மைக்குரிய கல்வியாம் செவியுண வுக்கும் ஓரளவு பொருந்தும்.

413. "செவியுணவிற் கேள்வி யுடையார் அவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து."

(மேற்கூறிய) செவி வழி வரும் இறையருள் வாக்கு ஆகும் செவியுணவைப் பெறத் தேவைப்படும் கேள்விப் பயிற்சியில் தேர்ந்தவர், (ஐந்தவித்தான் தந்த) அவியுணவை உண்டு ஆன்ம நிறைவைப் பெற்ற சான்றாண்மை கொண்ட ஆன்றோர் (சான்றோர்) ஆவர். (ஐந்தவித்தான் உரைத்த செய்தியும் தந்த அவியுணவும் ஆன்மாவுக்குத் தேவைப்படும் இருவகைத் தெய்வீக உணவாம் என்றறிக). இங்கும் மறுமைப் பொருளே சிறக்கின்றது.

414. "கற்றிலன் ஆயினுங் கேட்க அஃதொருவற்
கொற்கத்தின் ஊற்றாம் துணை."

கற்க வேண்டியதைத் தானே கற்க இயலாவிடினும் கற்றவர் சொல்லக் கேட்டாயினும் பயன் அடைக. மனத்தளர்வு (ஒற்கம்) ஏற்படும்போது அஃது ஊன்றுகோலாய் அமையும். சாதாரண இம்மை அறிவால் இந்த மனத்தளர்ச்சி நீங்கும் என்று சொல்வதற்கில்லை. மறுமைக்குரிய அருள் அறிவு அன்புச் சக்தியால் எவ்விதத்தளர்வும் குறைதலும் இறுதியில் நீங்குதலும் காண்கிறோம்.

415. "இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல்."

வாழ்க்கைப் பாதையில் வழுக்க நேர்ந்தால், ஒழுக்கம் உள்ளவர் பேசும் சொல் ஊன்றுகோல் என உதவும். ஒழுக்கத்தில் சிறந்தவர் ஓரளவு இங்ஙனம் ஊன்றுகோலாகலாம். ஆனால், உண்மையான-நிலையான-வழுவாத ஊன்றுகோலாயிருப்பவர் ஒழுக்கத்தையே உருவாகக்கொண்ட 'ஒழுக்கத்து நீத்தார்', 'இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டவர்' என்பதே பொருத்தம்.

416. "எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்."

எவ்வளவுக்கு நன்மையானதைக் கேட்டுச் சிந்திக்கிறோமோ, அந்த அளவுக்கே உண்மையான பெருமை உண்டாகும். இது சிறப்பாக மறுமைக்குரிய நன்மைக்குப் பொருந்தும்.

417. ''பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார்
இழைத்துணர்ந்து
ஈண்டிய கேள்வி யவர்.''

நுண்மையான ஆராய்ச்சியும் மிகுந்த கேள்வி அறிவும் பெற்றவர் சில காரியங்களில் தவறான உணர்வு கொண்டாலும் பேதைமையானதைப் பேசார்.

இம்மை அறிவுக்குப் பொருந்தும் இது, பன்மடங்கு மறுமைப் பொருள் அறிவினர்க்குப் பொருந்தும்.

418. ''கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி.''

அறிஞர் கூறும் அறிவுரைகளைக் கேட்டாலும், கேட்ட உரையால் 'துளைக்கப்படாத செவி', அஃதாவது, கேட்டும் கேட்காதது போல் இருப்பவன் ஒருபயனும் அடையாதவனே. சாதாரண உலக வாழ்வுக்குரிய இக்கருத்துப் பன்மடங்கு, இறைவன் அருளும் தெய்வீக வாக்கைக் கேட்பவனுக்குப் பொருந்தும்.

419. ''நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயினர் ஆதல் அரிது.''

அறிய வேண்டியதைக் கேட்டபின் அதன் உட்கருத்தை நுணுகி உணராதவர் பேசும்போது பணிவுடன் பேசுதல் அரிது.

உண்மையான அறிவுள்ளவரே பேச்சிலும் செயலிலும் அடக்கத்தைக் கையாள்வர். ஆழ்ந்த அறிவில்லாதவர் பெருமையடித்துக்கொள்வர். இஃது இம்மை மறுமை இருமைக்கும் பொருந்தும். மிகச் சிறப்பாக இறை அருள் வாக்கை நுணுகியறிந்தவர்க்குப் பொருந்தும்.

420. ''செவியில் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்.''

செவியால் கேட்பதன் அருமையை (உள்ளத்தால் சுவைக்கக் கூடியதை) உணராமல், வாய்ச்சுவை மட்டும் உணர்பவர் மாக்களுக்குச் சமம். (அவற்றிற்கு வாய்ச்சுவை ஒன்றே தெரியும்). இவர்கள் வாழ்ந்தாலென்ன? மடிந்தாலென்ன? இவர்களால் பயன் எதுவுமில்லை. இஃது இறைவாக்குக் கேளாதவர்க்கு மிகச் சிறப்பாகப் பொருந்தும்.

# 43. அறிவுடைமை

421. ''அறிவற்றம் காக்கும் கருவி செருவார்க்கும்
உள்ளழிக்க லாகா அரண்.''

அற்றம்-தீமை, துன்பம்.

செறுவார்-பகைவர்.

உள்ளழிக்கலாகா அரண்- அழிக்கலாகாத உள் அரண்.

உண்மையறிவு-அறிவு என்னும் பெயருக்குப் பொருந்தும் அறிவு-அரசினர்க்குத் தீமை நிகழாதவாறு காக்கும் கருவியாம். பகைவர் முன்னிலையில் அழிக்கப்பட இயலாத உள் அரண்-உள்ளத்தமைந்துள்ள அரண்-கோட்டை போன்ற பாதுகாப்பு. வெளிப்படையான பாதுகாப்புக் கருவிகளுக்கெல்லாம் மேலான பாதுகாப்பு உண்மையான அறிவு. எங்ஙனம் என்று பின்வரும் பாக்களில் கூறப்படும்.

422. ''சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு.''

அருள் வாழ்வுக்குரிய தெய்வீக (மறுமை) அறிவு இல்லாமையால், மக்கள் பெரும்பாலும் 'இருள் சேர் இருவினை'யின் காரணமாக ஒருவன் தன் ஐம்புலன்கள் செல்லும் வழியிலேயே தன் மனத்தையும் போகவிடுத்தல் காண்கிறோம். அங்ஙனம் செல்ல விடாமல் தீமையானதைத் தவிர்த்து நன்மையானதின்பால் செலுத்துவது (உய்ப்பது) அறிவு. இது சிறப்பாக அருள் வாழ்வுக்கு இன்றியமையாதது. இதில் நன்கு பயிற்சி பெற வழி காட்டுவதுதான் மெய்யறிவு.

423. ''எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.''

இம்மைப் பொருள், சிறப்பாக மறுமைப் பொருள் (அருட் பொருள்) பற்றி உலகில் கருத்து வேறுபாடுகள் இருந்தே தீரும்.

இம்மை, மறுமை 'இருவகை தெரிந்து' அறமே உருவெடுத்து உலகுக்கு வந்த ஒருவர் மட்டுமே அறம், பொருள், இன்பம், வீடுபற்றிய முழு உண்மையறிந்தவர். ஆதி வினையின் விளைவாகவும், மனிதனுக்கு இயல்பாகவே உள்ள அறியாமை, ஐயப்பாடுகள், ஒருபால் கோடாமை பெரும்பாலும் கடினமான தாயிருத்தல், இவற்றின் காரணமாகவும், பொருட் பொருள் மேல் உள்ள ஆர்வம், பெரும்பாலும் அருட்பொருள் மீது இல்லா மையாலும் இத்தகைய வேறுபாட்டுக் கருத்துகள் உருவா கின்றன. ஆனால், உண்மையான அறிவாளி, யார் எதைச் சொன்னாலும் கேட்டு மயங்கிவிடாமல், சொல்வதில் எந்த அளவுக்கு உண்மை, எந்த அளவுக்குப் பொய் என்று உய்த் துணர்தல் வேண்டும். இதுவே மெய்யறிவு. இக்குறளில் 'மெய்ப் பொருள்' என்பதற்கு மெய்யான கருத்து, மெய்ப்பொரு ளாகிய இறைவனே கூறிய அருட்பொருள் என்றும் பொருள் கொள்ள இடமுண்டு. பொருட்பொருள் இறுதியில் பொய்ப் பொருளே என்பது மறுக்கவியலாத உண்மை. ஏனெனில், அது நிலைப்பதில்லை. அதனால்தான் அது 'பூரியார் கண்ணும் உள' எனப்பட்டது. அருட் செல்வத்தின் மீது நம்பிக்கை வைத்து வாழ்வோரே மேலோர். பொருட் செல்வத்தை நம்பி வாழ் வோரே 'பூரியார்'—வாழ்வது போல் காணப்படினும் அவர்கள் இறுதியில் நீடு வாழ்வை இழப்பவரேயாவர். இதை உய்த் துணர்வதே அறிவு.

424. "எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு."

மிக உயர்ந்த கருத்துகளையும் மிக எளிய முறையில், கேட் பவர் உள்ளத்தில் தைக்குமாறு சொல்லும் திறமை சிலர்க்கு உண்டு. அவ்வெளிய முறையில் சொல்லப்படும் கருத்துகளிலும் மிக உயர்ந்த, நுண்ணிய பொருள் காணும் திறமையே அறிவு என்னும் பெயர் பெறத் தகுதியானது.

இத்திறமை உலகக் குரு, ஆதிகுரு, ஆதிபகவன் ஐந்தவித் தான் என்பவரிடத்து மிகச் சிறப்பாக விளங்குவது. அவரது படிப்பினைகளை ஆய்வார்க்கு எளிதில் புலனாவதொன்று. சின் னஞ் சிறு உவமைகளைச் சொல்லி எத்துணை பெரிய தெய்வீகக் கருத்துகளைப் பாமர மக்களும் புரிந்து கொள்ளுமாறு போதித்த

அவருக்கு இணையாக வேறொருவரைக் காண்பதரிது. "பிறர் வாய்க் கேட்கும் சொற்களின் நுண்ணிய பொருள் காண அரிதாயினும் அதனைக் காணவல்லது அறிவு":என்கிறார் பரிமேலழகர். ஐந்தவித்தானாகிய உலகக் குரு கூறிய சொற்களில் மிக மிக நுண்ணிய பொருள் மறைந்திருந்தது. அதை அவர் சீடர் உடனே காணவில்லை — காணவியலாதவராயினர். எனினும், 'வான் சக்தி'யைப் பெற்றதும் கண்டனர் என்பது வரலாறு. இத்தகைய அறிவு வெறும் மனித அறிவன்று; இறையருள் அறிவு என்க.

425. "உலகம் தழீஇய தொட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்ல தறிவு."

உலகம் - உலகமாகிய பெரியோர் (பரிதியார்); உலகத்தாருள் முனிவராகிய பெரியோர் (காலிங்கர்).

உயர்ந்தார் - (மணக்குடவர்).

தழீஇயது - பெரியோர் தழுவியது (காலிங்கர்).

ஒட்பம் - முனிவராகிய பெரியோர், உயர்ந்தோர் மறை முதலிய நூல்கள் பலவற்றாலும் தெரிந்து கொண்டதாகிய ஒள்ளிமை (காலிங்கர்). (ஒளி பொருந்திய நிலை, அஃதாவது, உள்ளொளி நிரம்பிய உயர் நிலை).

இத்தகையோரது ஒழுக்கம் மலர்தல், கூம்பல் இல்லாமல் ஒரே தகைமையாக நிற்க வேண்டும். இதுவே மெய்யறிவு. ஒட்பம் என்னும் சொல்லுக்குக் காலிங்கர் கூறும் பொருள் கவனிக்கத்தக்கது. அது மறை முதலிய நூல்கள் பலவற்றாலும் தெரிந்து கொள்வதாகும். மறை-மறுமைக்குரிய வாழ்வுபற்றிய அறிவு. அது அறிவுக்குப் பெரும்பாலும் எட்டாத ஒன்றாகவே மறைந்திருக்கும். 'இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டார்' அறிவிக்க அறிதலாகும். இவ்வறிவு மாறி மாறி வருவதன்று. ஒரு நிலையாய் உள்ளது. இறைவன் மாற்றம் அறியாதவன். அவனது அறிவும் மாறுதலுக்கு உட்படாதது. அவனது அரசும் அத்தகையதே. மறுமை வாழ்வும் பேரின்ப நிலையும் நீடு வாழ்வாகும். மலர்தலும் கூம்பலும் இன்றி

என்றும் ஒரே நிலையாய் மலர்ந்து நிற்கும் வாழ்வு. இம்மை உலகத்துக்கு இந்நிலையில்லை. ஆகவேதான் 'உலகம்' என்னும் சொல்லால் நன்மையில் நிலையில்லாத மக்களைக் குறிக்காமல் பெரியோர், முனிவர், உயர்ந்தோர் இவர்களைக் குறிக்கின்றனர். இத்தகையோரே ஒப்ப நிலையில், மலர்தலும் கூம்பலுமின்றி வாழ முற்படுவர்.

426. ''எவ்வ துறைவது உலகம் உலகத்தோடு
அவ்வ துறைவது அறிவு.''

இக்குறளிலும் 'உலகம்' என்னும் சொல்லுக்கு முந்திய குறளில் தரப்பட்ட பொருளே பொருந்தும். இஃது ''உயர்ந்தாரொடு பொருந்த ஒழுகுதல் அறிவு'' என்னும் மணக்குடவர் உரையினின்றும், ''பெரியோர் எப்படி நடந்தார் அந்த ஒழுக்கத்திலே நடப்பது அறிவு'' என்னும் பரிதியார் உரையினின்றும் புலப்படும். ''உலகத்தையெல்லாம் யான் நியமித்தலான் என்னை நியமிப்பார் இல்லையெனக் கருதித் தான் நினைத்தவாறே ஒழுகின், பாவமும் பழியும் ஆகலான், அவ்வாறு ஒழுகுதல் அறிவு அன்று'' எனப் பரிமேலழகர் அரசனையும் அவனது ஆட்சி வலிமையையும் குறிப்பிட்டுக் கூறுவதினின்றும் புலப்படும். ''மக்கள் உலகம் என் ஆட்சியில் இருப்பதால் அது என் விருப்பப் படியே ஒழுகுதல் வேண்டும் எனச் செருக்குற்று ஆட்சி புரிவானாயின், அரசன் பாவத்துக்கும் பழிக்கும் ஆளாகிறான்'' என்றவாறு. அரசனைப்பற்றி ஈண்டுக் கூறப்பட்டது அரச அதிகாரத்துக்கும் (ஆட்சி பீடத்துக்கும்) பொருந்தும்.

இம்மை ஆட்சியைச் சார்ந்தோர் இங்ஙனம் செருக்குற்று ஆளுதல் பாவமும் பழியுமாயின், அச்செருக்கினை நீக்கி, மறுமை ஆட்சிக்கு-இறை அரசுக்குத் தம்மைக் கீழ்ப்படுத்தி நடத்தல் வேண்டும் என்பது பொருள். இத்தகைய ஒழுக்கம் எந்த அளவுக்கு உலகில் நிறைவேறுகிறதோ (எவ்வதுறைவதுலகம்) அந்த அளவுக்கே உலகில் மெய் அறிவு குடிகொள்ளும் என்பது கருத்து.

427. ''அறிவுடையார் ஆவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர்.''

உண்மை அறிவுடையவர் யார் எனின், காலிங்கர் கூறுவது போல, ''தமக்கு இருமை ஆக்கமும் ஆவதனை அறிந்து ஒழுகு

பவரே.'' இம்மை வகை தெரிந்து அதனால் வரக்கூடிய ஆக்கத்தையும் மறுமை வகை தெரிந்து அதனால் வரக்கூடிய ஆக்கத்தையும், அஃதாவது, முறையே பொருள் ஆக்கம், அருள் ஆக்கம் என்னும் இருமையையும் நன்குணர்ந்து, எதனை அடைய முழு மூச்சுடன் முனைந்து நிற்றல் வேண்டும் என ஆவதறிவார் என்பவர், பரிமேலழகர் கூறுவது போல, 'வரக் கடவதனை முன்னறிய வல்லார்' ஆவர். இம்மையில் கிடைக்கக் கூடிய பொருள் ஆக்கத்தால் மயங்கிவிடாமல், இனி வரக் கடவ தாகிய மறுமைப் பொருள் ஆக்கத்தையே எண்ணி வாழ்பவரே உண்மை அறிவுடையார். இதை அறிய இயலாதவர் வேறு அறி விருந்தும், அறிவிலாரேயாவர்.

428. ''அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்.''

இம்மைப் பொருளை அளவு மீறி விரும்புவதாலும் அதனை எவ் வழியேனும் அடைய வேண்டும் என ஒருவன் முனைந்து நிற்கும் போதும் பாவம், பழி, அநீதி இவற்றால் விளையக்கூடிய கேடு இவையெல்லாம் நிகழும். இவற்றுக்கு அஞ்சாமலும் மறுமையை நினையாமலும் வாழ்வது பேதைமை. இவற்றிற்கு அஞ்ச வேண் டிய முறையில் அஞ்சி, இவற்றைத் தவிர்த்து வாழ முயல்வதே அறிவுடையவர்கள் செயல்.

429. ''எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்.''

மேற்கூறிய (427, 428) இரு குறள்களில் (மறுமை வாழ்வில்) வரக் கடவதனை முன்னறிவதே அறிவு எனவும், அவ் வறிவு பயன்பட வேண்டுமாயின், அஞ்ச வேண்டியதற்கு அஞ்சு தல் வேண்டும் எனப்பட்டது. இக்குறளில் அஞ்சினால் மட்டும் போதாது; மிக விழிப்புடன், தன் மனம் தகாதவற்றில் சென்று விடாமல் தன்னைக் காத்துக்கொள்ள வேண்டும் என்று கூறப் படுகிறது. இல்லையேல் நடுங்கச் செய்யும் துன்பம் (மறுமைப் பேரின்பத்தை இழப்பதால் வருவது) வந்து தீரும். மேற்கூறிய உண்மை அறிவு பெற்றவர்க்கு- இருமை வகை தெரிந்து வாழத் தெரிந்தவர்க்கு இப்பேரிழப்பாகிய நோய் இல்லை.

430. ''அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்.''

இத்தகைய மறுமைப் பேரின்ப அறிவுடையார்க்குக் குறை வொன்றும் நிகழாது. அவ்வறிவு இன்றி இம்மைப் பொருளையே தம் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டு வாழ்வோர்க்கு வேறு பல இம்மை நலன்கள் இருந்தும் ஒன்றுமில்லாதவரே. பேரின் பத்தை நாடாதவர்க்குச் சிற்றின்பம் எவ்வளவு இருந்தும் பயன் என்ன?

## அறிவுடைமை

### சுருக்கம்

421. ''அறிவற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்கல் ஆகா அரண்.''

அழிவு வராமல் காக்கும் கருவி அறிவு. பகைவர் உட் புகுந்து அழிக்க இயலாத அரண்போல, இம்மை அறிவுக்கு இத்துணை வலிமையுண்டா என்பது வினவுதற்குரியது. மறுமை சார்ந்த இறையருள் அறிவுக்கு இவ்வலிமை உண்டு என்பது உறுதி.

422. ''சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு.''

மனம் போகும் போக்கில் அதைச் செலுத்தாமல் தீயதை நீக்கி (ஒரீஇ), நன்மையாவதன் மீது செலுத்துவதே உண்மை யான அறிவு. நூலறிவு மிக இருப்பினும், தீமையை நீக்காவிடின் அஃது அறியாமையே. மறுமை வாழ்வுக்கு மிகச் சிறப்பாகத் தேவைப்படுவது.

423. ''எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.''

ஒரு பொருளைப்பற்றி யார் உரைத்தாலும் அதைக் கேட்டு, கூறுவதில் அடங்கியுள்ள மெய்ப்பொருளைக் காண்பதே அறிவு (கூறுவதன் மெய்யான பொருளை மட்டுமன்று, கூறப்படுவது மெய்ப்பொருளாகிய இறைவனை அடைய உதவுமா என்றறி வது பற்றியே குறள் கூறும்).

424. "எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு."

தான் சொல்லுவது பிறர்க்கு எளிதாக (எண் பொருளாக) விளங்கும்படியாகக் கூறுவதும், பிறர் கூறுவதில் அடங்கியிருக்கும் நுண்பொருளைக் காண முயல்வதுமே அறிவாகும்.

425. "உலகந் தழீஇய தொட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்லது அறிவு."

உலக மக்களை (தொடர்புடையாரை மட்டுமன்று) அன்பால் அணைத்தலே அறிவுடைமை; இவ்வணைத்தலில் ஒரு வேளை மலர்தலும், மற்றொரு வேளை கூம்புதலும் இன்றி எந்நிலையிலும் ஒரே தன்மையாய் ஒழுகுவதே அறிவு. இது சிறப்பாகச் சான்றாண்மைக்குரிய பண்பு. எந்நிலையிலும் அன்பைக் கடைப்பிடிப்பதே ஆண்மை.

426. "எவ்வ துறைவ துலகம் உலகத்தோ
டவ்வ துறைவது அறிவு."

உலகில் மக்கள் எவ்வாறு (அன்பு, நாண், ஒப்புரவு முதலிய பண்புகளை மேற்கொண்டு) ஒழுக வேண்டுமோ அவ்வாறு ஒழுகுவதே மெய்யான அறிவு. (உலகத்தார் பலர் போகும் தீமையான போக்கில் போவது அறிவுடைமையாகாது).

427. "அறிவுடையார் ஆவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர்."

இச்செயல் முறையால் இங்ஙனம் நிகழும் என்று நன்கு ஆய்ந்தறிவது அறிவுடைமை; அங்ஙனம் ஆயத்தக்க அறிவில்லாதவர் அறிவற்றவரே. இஃது இம்மைச் செயல்களைப் பொறுத்த மட்டில் உண்மையே எனினும், பின்வருவதை எல்லாம் முன்னறிவது இயலாததொன்று. ஆனால், மறுமை வாழ்வைப் பொறுத்த மட்டில் வாழ்க்கையிறுதியில் என்ன நிகழும் என்று (அஃதாவது, பேரின்ப வாழ்வா, அவ்வின்பமில்லா இன்னா உலக வாழ்வா என்று) முன்னதாகவே அறிவிக்கப்பட்ட இறையருள் வாக்குக்கு ஏற்ப வாழ்வை அமைத்துக் கொள்ள வேண்டும். இதுவே பிற அறிவுக்கெல்லாம் மேலான அறிவாகும்.

428. "அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்."

அஞ்ச வேண்டிய தீமைக்கு அஞ்சாமல் வாழ்வது அறிவுக் கேடு; அதற்கு அஞ்சி வாழ்வதே அறிவுடைமை. இவ்வுலக வாழ்வுக்குப் பொருந்தும் இது, மறுமை வாழ்வுக்குச் சிறப்பாகப் பொருந்தும். (மேற்குறளில் கூறியது போல) வாழ்வின் இறுதியில், அறமும் அருளும் இன்றி வாழ்ந்தால் வந்தெய்தக் கூடிய இருள்சேர் இன்னாவுலகம் ஆகிய தீமையிலும் தீமை உண்டு என்று அஞ்சி அறவாழ்வு, அருள்வாழ்வு வளர வாழ்வதே முறை; இதுவே மெய்யறிவு.

429. "எதிரதாக் காக்கும் அறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்."

பின்னர் நேரக்கூடியதை முன்னரே ஆய்ந்தறிந்து செயல் புரிவோர்க்கு மன அதிர்ச்சி தரக்கூடிய துன்பம் எதுவும் நிகழாது. மறுமை வாழ்வுபற்றி மேற்கூறியதை இக்குறளிலும் பொருத்துக. இறுதியில் நேரக்கூடிய இன்னாவுலகத்தை முன்னரே சிந்தித்து நீடுவாழ்வு ஆகும் உலகுக்கு ஏற்ப வாழ்பவர்க்கு எத்துன்பமும் இராது. (முடிவில்லாப் பேரின்பம் கிட்டுவதால்).

430. "அறிவுடையார் எல்லா முடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர்."

குற்றம் நிகழ்ந்தாலும், இறைவனின் அளவில்லா மாண்பை நினைத்து அவனது அளவில்லா அன்புக்கு அது பேரிழுக்கு என வருந்துதல் வேண்டும்.

# 44. குற்றம் கடிதல்

431. ''செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.''

கடிதல் என்னும் சொல் மற்றவர் குற்றத்தைக் கண்டு கண்டித்தல் என்னும் பொருளில்தான் பெரும்பாலும் ஆளப்படுகிறது. 'மகன் செய்த தவற்றுக்காகத் தந்தை அவனைக் கடிந்து கொண்டான்' என்பது போல. ஆனால், ஈண்டுக் 'குற்றம் கடிதல்' என்றது தன்னிடம் இருக்கக் கூடிய குற்றங் குறைகளை நீக்குதல் என்னும் பொருளில் ஆளப்படுகிறது. அரசினர் (ஆட்சி பீடத்தில் உள்ளவர்) யாவருமே நீக்குவதற்கு மிக மிக முயற்சி செய்ய வேண்டிய குற்றங்கள் மூன்று இக்குறளில் கூறப்படுகின்றன.

முதலாவது : செருக்கு. இச்சொல்லால் பெரும்பாலும் குறிப்பிடப்படுவது, 'தான்' என்னும் ஆணவம். ஈண்டுப் பொதுவாகச் செருக்கினால், தான் என்னும் ஆணவத்தால் நேரக் கூடியது எவ்வகைத் தீவினையுமே எனத் தோன்றுகிறது. இதனால் தீவினை அச்சத்தை விளக்கும்போது, 'செருக்கு என்னும் தீவினை' என்னாமல் 'தீவினை என்னும் செருக்கு' எனக்(201) கூறுகிறார். தான் என்னும் ஆணவம், தன்னை அளவுக்கு மிஞ்சி மதிப்பதுதான் எல்லாத் தீவினைகளுக்கும் தொடக்கம் என்பது ஈண்டுக் குறிப்பிடப்படுகிறது கவனிக்க. (இது மேலும் இந்நூலில் வேறிடத்தில் விவரிக்கப்படுகிறது காண்க).

இரண்டாவது : சினம். அஃதாவது, 'கோபம்' என்று சாதாரணமாக மக்கள் குறிப்பிடுவது மட்டுமன்று; அளவு மீறிய சினம்பற்றி 'வெகுளாமை' என்னும் அதிகாரத்தில் கூறப்படும் கருத்துகள் அனைத்துமே. அளவு மீறிய சினத்தால் வேறு தீயவை பிறக்கும். (குறள் 302). ஆதலின், இதுவும் செருக்கு போன்றது. வேறு தீய செயல்களுக்கு வழியாகலாம் என்பதால் நீக்கப்பட வேண்டியது.

மூன்றாவது : **சிறுமை.** இச்சொல்லுக்கு உரையாளர் பலவிதமாகப் பொருள் கூறுகின்றனர். காமம் - சிறியோர்

செயலாகலின் அளவிறந்த காமம் 'சிறுமை' எனப்பட்டது (பரிமேலழகர்) ; சிறியார் செய்வன (மணக்குடவர்); சிறியார் செய்வன செய்தலாவது காம நுகர்ச்சியும் சூதும் கள்ளும் வேட்டையும் முதலானவற்றில் மிக்கொழுகுதல். (பரிப்பெருமாள்); அற்பக் குணம் - (பரிதியார்); இழிவான ஒழுக்கம்- (கா. சுப்பிரமணியப் பிள்ளை).

சிறுமைக்கு எதிரான, 'பெருமை' என்னும் அதிகாரத்தில் 978-ஆம் குறளில் சிறுமை என்னும் சொல்லுக்குப் பெருமைப்பட எதுவும் இல்லாதிருந்தும் தன்னையே வியந்தவராய், தன்னைத் தானே மதித்துச் சாலத் தன் திறம் அலங்கரித்து ஒழுகும் மனப்பான்மையைக் குறிப்பிடுகின்றது.

பொதுவாக அற்பத் தன்மை, தன்னைப் பெருமையாக நினைத்துப் பேசுதல், சிறுமை இன்பத்தில் (சிற்றின்பத்தில்) ஈடுபட்டு அதனுடன் இணைந்த சூது, கள் இவற்றுக்கு இடம் தருதல், அரசு ஆட்சியில் ஈடு பட்டோர்க்கு இம்மூன்று குணங்கள் இல்லாதிருந்தால்தான் அவர்களது ஆட்சி, பெருமை மிக்கதாய் இருக்கும். பெருமிதத்துடன் ஆட்சி செலுத்தவியலும் என்றவாறு.

432. ''இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு.''

**குறிப்பு:** (நன்றியில் செல்வம்). இவறன்மை என்னும் 101-ஆம் அதிகாரத்தில் கூறப்பட்டுள்ள கருத்துகளினின்று 'இவறல்' என்னும் சொல்லுக்குப் பொருள் முழுமையாக விளங்கும்.

**இவறல்:-** 'வேண்டும் வழிப் பொருள் கொடாமை' (பரிமேலழகர்).

உலோபம் : (மணக்குடவர்).

செலவு செய்ய வேண்டிய இடத்துச் செலவு செய்யாமையால் ஆட்சி நன்கு நடைபெற இயலாது. இம்மை ஆட்சிக்கு இத்தகைய மனப்பான்மை பொருந்தாது. மறுமை வாழ்வு சார்ந்த ஆட்சிக்கும் இது பொருந்தாது என்பது தெளிவு. அருள் வாழ்வுக்கான சாதனங்களைத் தயாரிப்பதற்குப் பொருட்-

பொருளும் தேவை. பலவிதச் செலவுகளுக்குப் பொருள் தேவைப் படுவது தெளிவு. ஆகவே, அருள் ஆட்சி நடத்துபவர்களும் இயன்ற அளவுக்கு, இவறல் இன்றிப் பொருளைச் செலவிடுதல் வேண்டும்.

**மாண் பிறந்த மானம்:** நன்மை நீங்கிய மானம் (பரிமேலழகர்). தொடங்கிய வினை நன்மை பயவாதாயினும் அதனை விடாதொழிதல் (பரிப்பெருமாள்).

''நன்மையின் நீங்கிய மானக்கேடு'' (காலிங்கர்).

பொதுவாக நன்னெறியினின்று தவறுவதால் ஏற்படக்கூடியது அவமானம். இதை ஆட்சியாளர் யாவருமே நேரத்தோடு உணர்ந்தவராய்ச் செயல்புரிய வேண்டும். தகாத செயல் ஒன்றைத் தொடங்கிய பின் போலிக் கௌரவத்துக்காக அதைச் செய்தே முடிக்க வேண்டும் என்னும் மனப்பான்மை யாருக்குமே தகாது. ஆட்சியாளர்க்கு - (இம்மை ஆட்சியிலுள்ளவராயினும் அருள் ஆட்சியில் ஈடுபட்டுள்ளவராயினும்) இது சிறிதும் கூடாது. தனி மனிதன் இத்தகைய மனப்பான்மையோடு செயல்புரிந்தால், அது பலரைப் பாதிக்காமல் இருக்கலாம். ஆட்சியில் உள்ளவர்கள் அங்ஙனம் செயல் புரிந்தால், அது பலதரப்பட்ட மக்களைப் பாதிக்கக் கூடும். சிறப்பாக மக்களுக்கு முன் மாதிரியாக இருக்க வேண்டிய அருளாளர்கள் இங்ஙனம் செயல் புரிந்தால், அது மிக மிகப் பாதிக்கும் என்பது தெளிவு.

**மாணா உவகை:** அளவிறந்த உவகை (பரிமேலழகர்).
நன்மையைத் தராத மகிழ்ச்சி (மணக்குடவர்).

எளியாரை அடர்கையால் பிறந்ததொரு மகிழ்ச்சியால் வலியார் மாட்டும் செல்லுதல் (பரிப்பெருமாள்).

அஃதாவது, எளியவனை எளிதாக அடக்கிவிட்ட மகிழ்ச்சியால் வலியாரையும் அடக்கியாள முற்படுதல். இது கெடுதி விளைவிக்கும் என்பது ஆட்சியாளர் அனைவரும் அறிந்திருத்தல் வேண்டும். இம்மூன்று பண்புகளும், பொதுவாக யாருக்குமே ஏற்காதவை. எனினும், சிறப்பாக 'இறைக்கு' அஃதாவது, ஆட்சியாளர்க்குப் பொருந்தா என்கிறது இக்குறள்.

433. ''தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்
துணையாக்
கொள்வர் பழிநாணு வார்.''

வாழ்க்கையில் குற்றம் எதுவும் இன்றி வாழ்பவர் மிகமிகச் சிலரே. அவர்களும் சிறு குற்றங்களுக்காளாகாமலிருப்பது மிக மிக அரிதே. எனினும் ஆட்சி முறையில் ஈடுபட்டிருப்பவர்கள் சிறு குற்றம் செய்தாலும் அது ஆட்சிக்குட்பட்டுள்ள அனைவரையும் பாதிக்கக்கூடும். அவர்களுடைய நல்வாழ்வுக்கு இடைஞ்சலாகிவிடக்கூடும். பலருடைய பழிக்கு ஆளாகக்கூடும். ஆகவே, அவர்கள் பழிக்கு அஞ்சியவராய், மிகச் சிறிய குற்றத்தையும் பெருங்குற்றம் போல எண்ணித் தம் ஆட்சி முறையை நடத்துதல் வேண்டும். இஃது எல்லா ஆட்சியாளர்க்கும் பொருந்தும். எனினும், அருளாட்சி நடத்துபவர்க்குச் சிறப்பாகப் பொருந்தும். ஏனெனில், அருள் என்பது சிறு குற்றத்தையும் நீக்கி இறைவனுடைய நிறை அன்பில் வாழ்வதாகும். மற்றெல்லார்க்கும் மேல்வரிச் சட்டமாக இருக்க வேண்டியவர் அருள் ஆட்சி நடத்துபவர்.

434. ''குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றம் தரூஉம் பகை''

பொருட் பொருளாகிய இம்மைச் செல்வத்தை ஒருவன் எத்துணை விழிப்புடன் காக்கின்றானோ அத்துணை விழிப்புடன் காத்திட வேண்டும், எக்குற்றமும் நிகழாதவாறு. ஏன், அதைவிட விழிப்புடன் குற்றம் நிகழாதபடி காக்க வேண்டும். அருட்பொருளாகிய செல்வத்தை இழக்காமலிருக்க வேண்டுமாயின்!

பொருட்பொருளை இழந்தால் உடனே வாழ்வே முடிந்துவிட்டது என்று சொல்லவியலாது. அது 'பகை' என்னும் நிலைக்கு யாரையும் ஆளாக்கிவிடுவதில்லை. 'பொருள் அற்றார் பூப்பர்' என்பதற்கிணங்க பொருளை இழந்தவனும் மீண்டும் பூப்பதற்கு முயற்சி செய்யலாம். அருளை இழந்தவனோ பூப்பதேயில்லை (248). அஃதாவது, இறைவனது அருளையும் அன்பையும் இழந்து வாழ்பவன் அந்நிலையில் உலக வாழ்வை நீப்பானாயின் 'அற்றம் தரும் பகை'யாகிய நிலையை அடைந்தே தீர்வான். அஃதாவது, இறைவனுடைய அன்புக்கு உரிய நிலையிழந்து 'பகை'யான 'இருள் சேர்'

உலகுக்கு ஆளாவான். ஆகவே, அருள் ஆட்சி நடத்துபவர் இதைச் சிறப்பாக உணர்ந்து செயலாற்ற வேண்டும். அவ் வாட்சியால் பயனடைய வேண்டியவர்களும் இதை நினைவில் கொண்டு வாழ்தல் வேண்டும்.

இக்குறள் சிறப்பாக மறுமை அருள் ஆட்சியினர்க்கே நன்கு பொருந்தும். அருள் ஆட்சியில் நிகழக் கூடிய குற்றமே அற்றம் தரும் பகையாக முடியக்கூடும். பொருள் ஆட்சியில் பொருளை ஆளும் முறையில் (இலஞ்சம் முதலிய) குற்றம் நிகழ்ந்தால்தான் பகை ஏற்படலாம்.

435. "வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்."

தம் செயல்களில் சிறு குற்றமும் நிகழாதபடி காத்துக் கொள்ள வேண்டும் (433). இன்றேல் பெருங்குற்றம் நிகழ்ந்து இறுதியில் பெருந்தீமைக்கு ஆளாக வேண்டியிருக்கும் (434). ஆகவே, எக்குற்றமும் நிகழாதவாறு முன்பே விழிப்புட னிருந்து காத்துக்கொள்ள வேண்டும். இன்றேல் வைக்கோல் போர் நெருப்புக்கிரையானால் எப்படி விரைவில் எரிந்து பாழாகி விடுமோ அங்ஙனமே வாழ்க்கையும் பாழாகி விடும்.

436. "தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்ற மாகும் இறைக்கு."

பிறரிடம் குற்றம் காண்பதில் பொதுவாக மனிதர்க்கு ஒரு தனி இன்பம் இருப்பதுண்டு. இது சிறப்பாக ஆட்சியாளரிடத்து விளங்குவதுண்டு. அதிகாரம் உண்டு என்னும் மமதையில் இத்தகைய நிலை ஏற்படுவதுண்டு. ஆனால், இது 'குற்றம் ஆகும் இறைக்கு' - இஃது ஆட்சியாளர்க்குப் பெருங் குற்றமாகும். சிறப்பாக அருள் ஆட்சியாளர்க்கு. பிறர்க்கு மேல்வரிச் சட்ட மாக விளங்க வேண்டியவர்களே குற்றம் செய்தால், பிறரிடம் எங்ஙனம் குற்றம் காணவியலும்? எங்ஙனம் அவர்களைத் தண்டிக்கவியலும்? அல்லது அவர்களை எங்ஙனம் நல் வழியில் நடத்தவியலும்? ஆகவே, முதலில் ஆட்சியாளர் குற்றம் இன்றித் தம் பொறுப்பை நிறைவேற்ற வேண்டும். இல்லையேல், அவர்களே முதல் குற்றவாளிகள் ஆவர். தன்குற்றம் நீக்கிய

பின், பிறர்குற்றம் கண்டால் அஃது இறைக்கு எவ்வகைக் குற்றமும் ஆகாது.

437. "செயற்பால செய்யா திவறியான் செல்வம்
உயற்பால தன்றிக் கெடும்."

பொருட்பொருளால், மக்கள் நன்மைக்காகச் செய்ய வேண்டிய தைச் செய்யாமல், அப்பொருளை வீணே சேர்த்து வைக்கும் அரசி னர், உய்வதற்குப் பயன்படக்கூடியதொன்றையும் செய்யாமல் கெடுதியையே செய்பவராவர். அருட் பொருளை நன்கு பயன் படுத்தி, ஆன்மாக்களுக்குப் பெரும் அருள் நன்மையைச் செய்யாமல் விடுபவர் உண்மையான உய்தலை அடையாமல் அழிந்துவிடுவர். முந்தியதைவிடப் பிந்தியது அதிகக் கேட்டினை விளைவிக்கும். அருள் வாழ்வு பொருளால் வரும் வாழ்வைவிட எத்துணையோ மேலானது. ஆதலால், அதை யடையாமல் போவதும் அங்ஙனமே மிகப் பெரும் கேடு விளை விப்பதாகும்.

438. "பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று."

பொருட்பொருளைச் செலவிட வேண்டிய முறையில் செலவிடாமல், அளவுக்கு மீறி அதன் மீது பற்றுக்கொண் டிருக்கும் மனப்பான்மை (பற்றுள்ளம்), மற்றக் குற்றங்களுள் ஒன்றாக எண்ணப்படுவதன்று; அது தனிப்பட்டதொரு குற்றமாகும். மற்றக் குற்றங்கள் பெரும்பாலும் ஒருவனை அல்லது ஒரு குடும்பத்தைப் பாதிக்கலாம்; அரசினர் செய்யும் இக்குற்றமோ சமுதாயம் அனைத்தையுமே பாதிக்கும். அஃதாவது, பெறக்கூடிய நன்மையைப் பெறாமல் தடுத்து விடுவது இது.

அருட்பொருளைப் பொறுத்த மட்டிலும் இத்தகைய குற்றமே நிகழும். கூறப்புகின், பொருட் பொருளில் ஓரளவு பற்றுள்ளம் தவறாகாது எனலாம். அருள் சிறப்பாக மக்களுடைய நன்மைக்காகவே அருளப்படுகிறது. இதனால்தான் ஆதி குரு (ஐந்தவித்தான்) தம் அருளைக் குறிப்பிட்டு "இலவசமாகப் பெற்றுக் கொண்டீர்கள்; இலவசமாகக் கொடுங்கள்"-

தாராளமாகப் பிறர் நன்மைக்காகப் பயன்படுத்துங்கள் என்றார்.

பொருட்பொருளில் உலோபத்தனம் குற்றமாயின், அருட் பொருளில் அது பன்மடங்கு குற்றமாகும் அன்றோ?

439. "வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை."

ஆட்சி செய்வோர்க்கு இயல்பாகவே தம்மைப் பெருமையாக மதித்துக் கொள்ளும் (வியந்து பாராட்டும்) மனப்பான்மை உண்டாகும். பொருள் ஆட்சியில் உள்ளவர்க்கும் சரி, அருளாட்சி செய்வோர்க்கும் சரி, இத்தகைய பெருமித மனப்பான்மை ஏற்படக் கூடும். இஃது எந்நாளும் சரியாகாது என்கிறது குறள். மேலும், தன்னை அளவு மீறி வியந்துகொள்பவன் நன்மை பயக்காத செயல்களைச் செய்ய முனைதல் உண்டு. இதுவும் தகாது என்கிறது குறள்.

440. "காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல்."

பொருள் ஆட்சி செய்வோர்க்கும் சரி, அருளாட்சி செய் வோர்க்கும் சரி பகைவர் இருந்தே தீர்வர். இவ் ஆட்சியாளர் என்ன எண்ணுகின்றனர், எதை விரும்புகின்றனர், எதன் மேல் நோக்கம் கொண்டுள்ளனர் என்பதைப் பகைவர் அறிந்து கொள்ளப் பெரிதும் முயல்வர். அறிந்து கொண்டால் அவர்களது திட்டத்தைச் சூழ்ச்சியாகக் கெடுக்க முனைவர். ஆகவே, ஆட்சி யாளர் தங்கள் திட்டம் பகைவர்க்குத் தெரிந்துவிடாத வண்ணம் செயலாற்ற வேண்டும். மேற்கூறிய குறளின் கருத்துப்படி தன்னையோ தன்னுடைய திட்டங்களையோ குறித்துப் பெருமையாக வியந்து பராட்டலாகாது. மிகுந்த விவேகத் தோடும் விழிப்போடும் செயலாற்ற வேண்டும்.

ஆகவே, ஆர்வத்தோடு விரும்பும் பொருளின்கண் (காதல்), தனக்குள்ள அவ் ஆர்வத்தைப் (காதல்) பிறர் அறியா வண்ணம் (அறியாமை) செயல்படுத்தக் கூடுமாயின் (உய்க்கிற்பின்), அப் பொருளின் (திட்டத்தின்) வாயிலாகத் தன்னை வெல்வதற்குத் திட்டமிடும் பகைவர் (ஏதிலார்) சூழ்ச்சிகள் பயன்படவின்றி ஒழியும் (ஏதில் நூல்).

நூல் என்றது அவர் கற்றறிந்த ஆட்சிமுறைபற்றிக் கூறும் நூல்களை ஆய்ந்தறிந்த கல்வி என்னும் பொருளில் ஈண்டு ஆளப் படுகிறது.

## குற்றங் கடிதல்

### சுருக்கம்

இப்பகுதியில் (இம்மை மறுமை) அரசு புரிவோர் தவிர்க்க வேண்டிய குற்றங்கள் கூறப்படும். பிறர் குற்றங்களைக் கடிதல் அன்று; தம் குற்றங்களைத் தாமே கடிவதுபற்றியனவே இக்குறட்பாக்கள்.

431. "செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து."

அதிகார ஆணவமனப்பான்மை, அளவுமீறிய சினம், பெருந் தன்மையற்ற மனம் இவை இல்லாத நிலையே அருளன்புப் பெருக்க நிலை. இதுவே ஆட்சியில் மேம்பாட்டைத்தரும் தன்மையுடையது.

432. "இவறலும் மாண்பிறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு."

எதையும் பிறர்க்கு ஈயாத மனம், மேன்மை நீங்கிய மானக்கேடு, அளவு மீறி மகிழ்ச்சி கொள்ளல் அரசு புரிவோர்க்குக் குற்றமாகும்.

433. "தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்."

தீமைக்கு நாணுபவர், தினைபோன்ற குற்றமாயினும் அதைப் பனை போன்றதாகக் கருதுவர். பிறரோடு உறவு கொள்ளும்போது ஏற்படக்கூடிய சிறு குற்றத்தையும் நீக்க வேண்டுமெனில், மறுமை வாழ்வுக்குரிய இறைவனோடு கொள்ளவேண்டிய அன்புறவில் சிறு குற்றம் நிகழ்ந்தாலும், இறைவனின் அளவில்லா மாண்பை நினைத்து அவனது அளவில்லா அன்புக்குப் பேரிழுக்கு என வருந்துதல் வேண்டும்.

434. "குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றந் தரூஉம் பகை."

மனிதரிடை நிகழக்கூடிய சில குற்றங்கள் உயிர்க்கு முடிவைக் கொணரக்கூடும். ஆகவே, எக்குற்றத்தையும் ஒருபொருட்டாக எண்ணாதிருக்கும் நிலை ஒழிக்க. (இறையருளுக்கு எதிராக நிகழக்கூடிய இருள்சேர் வினையைக் குறித்துக் கவலையின்றி இராதே என்றவாறு).

435. "வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்."

குற்றம் நிகழு முன்னரே விழிப்போடு காத்துக் கொள்ளாதவன் வாழ்க்கை, நெருப்பினருகே வைக்கப்பட்ட வைக்கோல் போல அழிவுறும். தீவினை எதுவும் நிகழாதவாறு மிகமிக எச்சரிக்கையாயிருத்தல் வேண்டும்.

436. "தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்ற மாகும் இறைக்கு."

முதலில் பிறர் குற்றத்தைக் காண்பது நம் தீய இயல்பு. மாறாக முதலில் தன் குற்றம் உணர்ந்து திருந்தியபின் பிறர் குற்றம் காண்பதே முறை. அரசு புரிவோர்க்கு இது சிறப்பாகும்.

437. "செயற்பால செய்யா திவறியான் செல்வம்
உயற்பால தன்றிக் கெடும்."

செய்ய வேண்டியதைச் செய்யாமல் (தவறான) ஆசை கொள்பவனது (இவறியான்) செல்வம் உய்யும் வழி காட்டாது; அழிவுக்கே வழி காட்டும்.

இம்மை மறுமை இரண்டிற்குமே இது பொருந்தும்.

438. "பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று."

ஒன்றன்மீது அளவுமீறிய பற்றுக் கொண்டு, பிறர்க்கு உதவி செய்ய வேண்டிய இடத்தும் எதுவும் ஈயாத மனப்பான்மை எவ்வகையாலும் மதிக்கப்படுவதொன்றன்று.

439. "வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை."

எந்நிலையிலும் ஒருவன் தன்னைத்தானே பாராட்டலாகாது. நன்மை பயக்காத எச்செயலையும் விரும்ப வேண்டா.

440. "காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல்."

நற்காரியம் ஒன்றனைச் செய்ய விரும்பும்போது அது பிறர்க்குத் தெரிந்துவிட்டால், அதைத் தடுக்கப் பகைவர் முயலக் கூடும். ஆகவே, விரும்பிச் செய்ய வேண்டிய (காதல) நற்செயல்கள் மீதுள்ள பெரு விருப்பத்தைப் (காதல்) பிறர் அறியாவாறு செய்தால் (உய்க்கிற்பின்), கெடுக்க விரும்பும் பகைவரது அறிவு (நூல்) பயனற்றதாகும் (ஏதில). நன்மை செய்வதிலும் விவேகம் வேண்டும். பிறர் அறியாமலே நன்மை செய்வது சில சமயங்களில் தேவைப்படும்.

# 45. பெரியாரைத் துணைக் கோடல்

441. "அறன்அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்."

ஆட்சியாளர்-பொருளாட்சியர், அருளாட்சியர் அனைவருமே ஆட்சி செய்வதற்குத் தேவைப்படும் எல்லா அறிவும் திறனும் கொண்டிருப்பர் என்பதற்கில்லை. ஆகவே, அவர்கள் தம்மினும் மேலான அறிவையும் (ஆட்சியறிவை) ஆளும் திறனையும் கொண்டிருக்கக்கூடிய பெரியவர்களைத் துணையாகக் கொள்ளவேண்டும். இங்ஙனம் துணையாகக் கொள்ளும்போது தக்க முறையில் அவர்களைத் தேர்ந்து கொள்ள வேண்டும். தக்க முறையாவது, அறத்தையும் அதன் நுண்மைப் பொருளையும் அம்சங்களையும் தம்மைவிட நன்கு அறிந்தவர்கள் யார் என ஆராய்ந்து பார்க்க வேண்டும். வெறும் அறிவு உள்ளவர் மட்டுமன்று; ஆட்சி செய்வதில் தம்மைவிடத் திறன் படைத்தவரா என்பதையும் நன்கு ஆய்ந்த பின்னரே அவர்களது நட்பை நாடுதல் வேண்டும்.

442. "உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்."

தம் குற்றத்தாலோ தெய்வத்தின் செயலாலோ பிறர் (எதிரிகள்) செய்த தீய செயலாலோ வந்துள்ள துன்பத்தை (நோய்) நீக்குவது ஆட்சியாளர் மீது சுமந்த முதற் கடமை. அதே சமயத்தில் அத்தகைய துன்பங்கள் மீண்டும் நிகழாதவாறு முன் விழிப்புடன் காத்துக்கொள்ளக்கூடிய தன்மை (பெற்றி) கொண்டவர்களாகவும் இருத்தல் வேண்டும். பொருளாட்சியினர்க்கு இது மிகத் தேவையென்றால், அருள் ஆட்சியர்க்குப் பன்மடங்கு தேவை என்பது எளிதில் புலப்படும். ஏனெனில், இம்மைத் துன்பத்திலிருந்து ஓரளவு விடுதலையடையலாம். ஆளாவார் அருளற்றவராகி மறுமைத் துன்பத்துக்கு 'பூப்பதேயில்லை'; அருளில்லார்க்கு அவ்வுலகம் (மறுமை) இல்லை. ஆகவே, 'நோய் (துன்பம்) உறாஅமை முற்காக்கும்

பெற்றியார்' யார் எனக் கண்டுணர்ந்து அவர்களைத் துணையாகக் கொள்ளல் (பேணிக்கொளல்) அவசியம்.

443. "அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்."

மேற் கூறப்பட்ட கல்வி, கேள்வி, அறிவுடைமை, குற்றங் கடிதல் முதலிய செயற்கரிய எல்லாவற்றுள்ளும் பெரியதும் அரியதும் ஆக ஆட்சியாளரால் கருதப்பட வேண்டியது யாதெனின், பொருளாட்சியிலும் சரி, அருளாட்சியிலும் சரி, தக்க சமயத்தில் தக்க அறிவுரை கூறி, சரியான வழியில் ஆட்சி நடை பெறத்துணை செய்யக்கூடிய பெரியாரைத் தம்முடையவராகவே கருதி ஒழுகுதல் ஆகும். தம்மோடு நெருங்கிய உறவு கொண்டவரெனக் கருதுதல் — அந்நியரெனக் கருதாமல் அவர்களது அறிவுரையில் நம்பிக்கை வைத்தலாம்.

444. "தம்மின் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை."

பொருளாட்சி செய்வார்க்கு மனோவலிமையும் திறனும் வேண்டும். அருளாட்சி செய்வார்க்கு மனோவலிமையோடு இறை அருளால் மட்டுமே கிடைக்கக்கூடியதொரு தெய்வீக வலிமை வேண்டும்; அதுவும் நிரம்ப வேண்டும். இத் தலைசிறந்த வலிமையை (வன்மை) எங்ஙனம் அடையலாம்? தம்மைவிட அறிவிலும் விவேகத்திலும் ஆற்றலிலும் மிக்கவரிடத்தே அடையலாம். அருளாட்சியர்க்கு இவ்வறிவு இறை இயல் அறிவாதல் வேண்டும். விவேகம், வான் சக்தியால் வரும் விவேகமாதல் வேண்டும். ஆற்றலோ, எதனாலும் யாராலும் வெல்லப்பட இயலாததொன்றாயிருத்தல் வேண்டும்.

தம்மைவிட எவ்விதத்திலும் மேலோர் ஆனவரைத் தம்முடையவராகக் கொண்டு ஒழுகுவதே வேறு வகையில் பெறக்கூடிய அறிவு. விவேகம், ஆற்றலைவிடத் தலை சிறந்த தாகும். வன்மை மிக்க வேறு சாதனங்களுள் இங்ஙனம் தம்மின் பெரியாரைத் தமராகக் கொண்டு ஒழுகுதலே அனைத்தையும் விட வன்மை மிக்கதாம்.

445. "சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்."

தம்மைவிட அறிவிலும் ஆற்றலிலும் விவேகத்திலும் மிக்கவர் வேறிடத்திலும் இருக்கலாம். தம்மைச் சூழ்ந்துள்ள ஆலோசனை யாளரிடையிலும்(அமைச்சரிடையிலும்) இருக்கலாம். ஆட்சித் தலைமை வகித்துள்ளவர் வேண்டிய சமயத்தில் 'தம்மின் பெரியார்' எங்கே உள்ளனர் என்று தேடிக்கொண்டு போக இயலாது. அவர்கள் எப்போதும் தம் அருகிலேயே-(சூழ்வார்) இருத்தல் அவசியம். இத்தகைய ஆலோசனையாளரைத் தலைமை அதிகாரம் பெற்றவரே பெரும்பாலும் தேர்ந்து கொள்ள வேண்டும். (சூழ்வாரைச் சூழ்ந்துகொளல்). இங்ஙனம் தேர்ந்து கொள்ளும் போது மிகமிக விழிப்பாயிருத்தல் வேண்டும். இத்தகைய 'சூழ்வார்' கண் போன்று விளங்க வேண்டியவர்கள். அகப் பார்வை, புறப்பார்வையினும் மேலானது; கடினமானது; இன்றியமையாதது. கண் இழந்தால் எல்லாமே இழந்தது போல் அன்றோ? ஆகவே, தலைமை ஆட்சியினர்க்கு அகப் பார்வையாகிய அறிவுக் கண்ணைத் திறக்கக்கூடிய இவ் ஆலோசனையாளரை அவர்கள் கண் போல் போற்றி ஒழுக வேண்டும்.

446. "தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்."

**தக்கார்:** மேற் கூறிய அறிவு, ஆற்றல், விவேகம் முதலிய பண்புகளால் தகுதியும், சிறப்பும் உடையவர். ஆட்சியாளர்க் கெல்லாம் மிகமிகத் தேவையானவை இவை. இத்தகைய பணபுகளைக் கொண்ட இனத்தவரைச் சார்ந்து ஒழுக வல்ல ஆட்சியாளர்க்குப் பகைவரால் இழைக்கப்படக் கூடிய தீமை எதுவும் இராது.

அருள் ஆட்சியினர்க்கு இது சிறப்பாகப் பொருந்தும். ஏனெனில், அருளாட்சி பொருளாட்சியைவிடக் கடினமானது. பொருள் ஆட்சியாளர்க்கு எதிராக இருக்கக்கூடிய பகைவரைவிட அருளாட்சியாளர்க்கு மிகவும் வல்லமை மிக்க எதிரிகள் உள்ளனர். ஆன்மீக எதிரிகள் அவர்கள். மக்களுடைய உள்ளங்களினின்று இறை அருளையும் அன்பையும் நீக்குவதற்கு அரும்பாடுபடுகிறவர்கள். அவர்களுள் சிலர் வெறும் மனித இனத்தைச் சார்ந்தவர்கள் அல்லர்; (அசரீரிகள் - பேய்கள்).

அவர்களை வெல்வதற்கு வெறும் மனித சக்தி போதாது. வான் சக்தி தேவைப்படும். அவ்வான் சக்தியை நிரம்பப் பெற்றவர்களை இக்குறளில் 'தக்கார்' எனக் கொள்ளலாம். அவர்கள் இறையருளினத்தைச் சார்ந்தவர்கள். அந்தத் தெய்வீக அருள் இனத்தைச் சார்ந்து ஒழுக வல்லவர்க்கே 'செற்றார் செயக் கிடந்த தில்' என்றவாறு.

447. ''இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்கும் தகைமை யவர்.''

பொருளாட்சியோ அருளாட்சியோ, எத்தகைய ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்க்கும் மேற்கூறிய பண்புகளுள்ள துணையாளர் இருந்தால் மட்டும் போதாது. தக்க காலத்தில் அத்துணையாளர் தக்க முறையில் செயலாற்ற முனைதல் வேண்டும். அஃதாவது தேவையான அளவுக்கு அறிவுரை கூற முன் வர வேண்டும். சில சமயங்களில் உரைப்பது **இடித்துரைப்பதாகவும்** அமைய வேண்டியிருக்கும். இத்தகைய 'இடிக்கும் துணையாளர்' தாம் தமக்கு வேண்டும் என்னும் கருத்துடன் ஆட்சி புரிய முனைவோரே யாராலும் எத்தீமைக்கும் உள்ளாகார். அத்தகையோரை 'யாரே கெடுக்கும் தகைமை' படைத்தவர்? இது இருமை (இம்மை மறுமை) ஆட்சியாளர்க்கும் நன்கு பொருந்தும்.

448. ''இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்.''

முந்திய குறளில் கூறப்பட்டவாறு தக்க காலத்தில் இடித்துரைக்கக்கூடிய துணையாளரைத் தமக்கு உதவியாகக் கொள்ளாததால்-ஆட்சிப் பொறுப்பை நிறைவேற்றுவதில் காவலர் போல யாரும் இல்லாததால், தமக்கு ஊறு விளைவிக்கக்கூடிய எதிரிகள் வேறு யாரும் இலராயினும், ஏற்ற துணையாளர் இல்லாத ஒரு காரணத்தாலேயே ஆட்சிப் பொறுப்பினர் கெடுவார்.

449. ''முதலிலார்க்கு ஊதியம் இல்லை மதலையாம்
சார்பிலார்க்கு இல்லை நிலை.''

வாணிபம் செய்ய முனைவோர்க்கு முதலீடு தேவை; அஃதின்றி ஊதியத்தை எதிர்பார்ப்பது பொருள் அற்ற செயல்.

ஆட்சியாளர்க்கு அங்ஙனமே மேற்கூறிய இடிக்கும் துணையாளர் இன்றியமையாதவர். இன்றேல் தக்க காலத்தில் தம்மைத் தாங்குவோர் யாரும் இன்றித் துன்புறுவர்.

450. "பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்."

முற் கூறிய துணையாளர் யாருமின்றித் தம்மை எதிர்க்கக் கூடிய பகையாளரால் துன்புறுவது கொடுந்தீமை. ஆனால், அத்தகைய துணையாளரைச் சார்ந்து நிற்காமல் தனித்து ஆட்சி செய்யும் நிலைமை, முற்கூறிய பகைவர் பலரால் துன்பத்துக்கு ஆளாவதைவிடப் பத்து மடங்கு தீமையாகும்.

இம்மை, மறுமை ஆட்சியில் யாருடைய துணையுமின்றித் தனித்து ஆட்சி புரிவது மிகமிகத் தவறு என்றவாறு.

## பெரியாரைத் துணைக்கோடல்

### சுருக்கம்

அரசு செய்வோர்க்கும், பொதுவாக எல்லோருக்குமே பயன்படும் பண்பிது.

441. "அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்."

அறவாழ்க்கையின் கூறுபாடுகளை நன்கறிந்து அறிவில் முதிர்ந்தவர்களது நட்புறவை நன்காய்ந்து தேர்ந்து கொள்க.

442. "உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்."

தனக்கு நேர்ந்த துன்பத்தை அகற்றி, மீண்டும் அது நேராதவாறு விழிப்புடன் காக்கக்கூடிய செயல்முறை அறிந்தவரைத் துணையாகக் கொள்ளுதலாம்.

443. "அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்."

அறிவாலும் பண்பாலும் பெரியோராகக் கருதப்படவேண்டிய வரைத் தமக்குரியவரென எண்ணிக்கொள்ளுதல் செயற்கரிய செயல்களுள் முதன்மையானதாகும்.

444. "தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை."

அறிவிலும் பண்பிலும் தம்மைவிட மேலானவரைத் தமக்குத் துணையாகக் கொண்டொழுகுவது வலிமைதரும் செயல்களுள் முதன்மையானது.

445. "சூழ்வார்கண் ஆக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்."

அரசு புரிவோர்க்கு அமைச்சர், கண்போலிருந்து ஆட்சி புரியத்துணைசெய்ய வேண்டுமாகலின், அவர்களை நன்கு ஆய்ந்து தேர்ந்துகொளல் வேண்டும்.

446. "தக்கார் இனத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்."

தகுதி படைத்தவரைத் துணையாகக் கொண்டவனாய் இருப்பதோடு, தானும் ஒழுக்கமுடன் நடக்க வல்லவனுக்குப் (அரசினர்க்கு) பகைவர் செய்யக்கூடிய (துன்பம்) ஒன்றுமில்லை.

447. "இடிக்குந் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்."

தவறு நேர்ந்தால் இடித்துரைக்கக்கூடிய மனவலிமை படைத்தவரைத் தமக்குத் துணையாகக் கொண்டால் அன்னாரைக் கெடுக்கக்கூடிய வலிமை படைத்தவர் யாரும் இலர்.

448. "இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும்."

தக்க காலத்தில் இடித்துரைத்துத் தவறான நெறியில் செல்லாதவாறு காக்கப்பெறாத (ஏமரா) அரசு தானே சீர்கெடும். கெடுக்கப் பகைவர் யாரும் தேவைப்படார்.

449. ''முதலிலார்க்கு ஊதிய மில்லை மதலையாம்
சார்பிலார்க்கு இல்லை நிலை.''

முதல் இல்லாமல் வாணிகம் செய்பவர் எவ் ஊதியமும் பெறார். அங்ஙனமே கட்டடத்தைத் தாங்கும் தூண்போல (மதலை) உற்ற சமயத்தில் தம்மைத் தாங்கக்கூடியவர் இன்றேல் நிலையான ஆட்சி இராது.

450. ''பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.''

நல்லவரோடுள்ள தொடர்பைக் கைவிடல், பலருடன் பகை கொள்வதால் வரக்கூடிய தீமையைவிடப் பதின்மடங்கு பெரிதாகும்.

இக்குறள்களில் கூறப்படும் கருத்து மறுமைப்பொருளுக்கும் பொருந்தும்.

# 46. சிற்றினம் சேராமை.

முந்திய அதிகாரத்தில் பெரியாரைத் துணையாகக் கொண் டால் ஒழிய, எந்த ஆட்சியும் நன்கு நடைபெறாது என வலியுறுத்தப்பட்டது. இவ்வதிகாரத்தில் சிறியாரோடு எத்தகைய உறவும் கொள்ளாமைபற்றி வலியுறுத்தப்படுகிறது. பெரியா ரோடு உறவு கொண்டிருக்கும் அதே சமயத்தில் சிறியாரோடும் உறவு கொண்டிருந்தால், பெரியாரைத் துணை கொள்வது பெரிதும் பாதிக்கப்படும். பெரியாரைத் துணை கொள்ளா மலேயே சிறியாரோடு மட்டுமே உறவு கொண்டிருந்தால், ஆட்சி முறையே அடியோடு கெடும். இவ்விரு கருத்துகளும் ஈண்டு வலி யுறுத்தப் படுகின்றன.

451. ''சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.''

இக்குறளிலும் அடுத்து வரும் குறள்களிலும் ஆட்சியாளர் பற்றி வெளிப்படையாகக் கூறப்படாவிடினும், பொதுவாக எல்லா மக்களுக்கும் பொருந்தும் இப்பண்புகள் மிகச் சிறப்பாக ஆட்சிபுரிவோர்க்குப் பொருந்தும் எனக் கொள்க.

அறிவு, ஆற்றல், விவேகம் முதலிய பண்புகள் பெரியார்க் குரியவையாயின், சிறியார் (சிற்றினம்) அறியாமை, ஆற்ற லின்மை, விவேகமின்மை முதலிய குறைபாடுகளுடன் இருப்பர் என்பது தெளிவு. இத்தகையோரைக் கண்டு பெரியோர் (பெருமை) அஞ்சுவர்; அவர்களோடு உறவு கொள்ளாதவர், தம்மைப் போல் அறிவுத் திறன், செயல் திறன், விவேகம் முதலிய பண்புகள் இல்லாத வேறு சிறியாரைச் சுற்றமாகக் கொண்டு விடுவர். அஃதாவது அவர்களோடு நெருங்கிப் பழகத் தொடங்கிவிடுவர். அங்ஙனம் செய்வதால் பின்னர் நேரக் கூடிய விளைவுகளை எண்ணிப் பாரார்.

452. ''நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகும் அறிவு.''

ஆட்சி செய்யும் எவருக்கும் இன்றியமையாதது அறிவு. அறிவுத் திறன் - ஒன்றனை ஆய்ந்து செயல்படக் கூடிய அறிவு. இந்த அறிவு, அறிவு முதலிய நற்பண்புகள் சிறந்தவரோடு உறவு கொண்டால் நல்லறிவாகும். மாறாகச் சிற்றறிவுள்ள வரோடு நெருங்கிப் பழகினால் அவர்களுடைய சிற்றறிவுதான் உண்டாகும். எந்த நிலத்தில் பாய்கிறதோ அந்த நிலத்தின் தன்மை நீருக்கு உண்டாவது போல.

453. ''மனத்தானாம் மாந்தர்க்குணர்ச்சி இனத்தானாம்
இன்னான் எனப்படும் சொல்.''

உணர்வுகள், உணர்ச்சி வயப்பட்டுச் செய்யும் செயல்கள் அல்லது சொல்லும் சொற்கள் இவையெல்லாம் மனிதர்க்குள்ள மனத்தால் உண்டாகின்றன. இவ்வுணர்வுகள் - உணர்ச்சிகள் அவற்றால் விளையும் சொல் செயல்கள், பெரியர் சிறியர் என முன்னர் கூறப்பட்ட இனத்தைச் சார்ந்து நல்லவை, தீயவை என்றாகும். இவன் நல்லவன், கெட்டவன் (இன்னான்) எனப் படுவது அவனவன் சார்ந்து நிற்கும் இனத்தைச் சார்ந்திருக்கும்.

454. ''மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்கு
இனத்துள தாகும் அறிவு.''

ஒருவன் சொல்வதும் செய்வதும் அதற்குத் தேவைப்படும் அறிவும் அவனவன் மனத்திலிருந்தே எழுவது போலப் பன்முறை காணப்படும். ஆனால், நன்கு ஆய்ந்து பார்த்தால், அவனவன் ஏற்கெனவே எந்த இனத்தவரைச் (பெரியார், சிறியார்) சார்ந்து நின்றானோ அங்கிருந்தே உண்டானது எனப் புலப்படும்.

'மெய்ம்மை நோக்கா முன் மனத்துளது போன்று' காட்டியும், பின் நோக்கிய வழிப் பயின்ற இனத்து உளதாயும் இருத்தலின் 'காட்டி' என இறந்த காலத்தால் கூறினார். (பரிமேலழகர்). ஒருவன் காட்டும் அறிவு அவனது மனத் திலிருந்தே எழுந்தது என்று நாம் நினைத்துக் கொள்ளலாம். அது எந்த அளவுக்கு மெய் என்பது பின்னரே தெரியவரும். அஃதாவது, எவ்வினத்தவரிடம் பயின்றானோ அங்கிருந்தே வந்தது என்பது தெரிய வருகிறது என்றவாறு.

455. ''மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்.''

ஒருவனது மனத் தூய்மையும், செய்யும் செயலின் தூய்மையும் அவன் சார்ந்துள்ள பெரியார், சிறியார் என்னும் இனத்தின் தூய்மையைப் பொறுத்திருக்கும். பெரியாரைச் சார்ந்திருந்தால் தூய்மை உளதாகும். சிறியாரைச் சார்ந்து நின்றால் சிறுமைதான் உளதாகும்.

456. ''மனந்தூயார்க் கெச்சம்நன் றாகும் இனந்தூயார்க்கு
இல்லைநன் றாகா வினை.''

இக்குறளில் 'எச்சம்' என்னும் சொல்லுக்கு 'மக்கட் பேறு' என்னும் பொருள் மட்டுமன்று, 'பின்பற்றி வருபவர்' என்னும் பொருளும் கொள்ளலாம். ஏனெனில், தூய மனமுள்ள பெற்றோர்க்குத் தூய்மையான மனம் கொண்ட மக்கள் உண்டாகலாம். அங்ஙனமே தூய மனமுள்ள நல்லோர்க்குத் தூய மனம் கொண்ட சீடரும் உண்டாகலாம். அங்ஙனமே தூய்மை கொண்ட இனத்தவர்க்கும் எல்லாமே நன்மையாகும். அருளாட்சியாளர்க்கு இது சிறப்பாகப் பொருந்தும்.

457. ''மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம்
எல்லாப் புகழும் தரும்.''

மன நலத்தால் மக்களுக்குப் பொருள் ஆக்கமும் உண்டாகும், அருளாக்கமும் உண்டாகும். ஆனால், இது மேற்கூறிய பெரியார் ஆகும் நல் இனத்தார்க்கு மட்டுமே நிகழும். பொருள் ஆக்கம் புகழ்ச்சிக்கு மாறாக இகழ்ச்சிக்கே வழியாதல் பெரும்பாலும் உலகில் நிகழ்வதொன்று.

458. ''மனநலம் நன்குடையர் ஆயினும் சான்றோர்க்கு
இனநலம் ஏமாப் புடைத்து.''

இக்குறள் 'சான்றோர்' எனப்படுவோர்க்கு எந்நலம் உண்மையாகவே ஏமாப்புடைத்து என்பதைக் கூறுகிறது. 'சான்றோர்' என்னும் சொல்லுக்கு ஆதியில் இருந்த பொருளை ஈண்டு நினைவு கூர்தல் வேண்டும். இறைவனாகிய ஐந்தவித்தானுக்கு - உலக ஆதி குருவுக்கு, அவன் கொணர்ந்த இறை

அருளாட்சிக்குச் சான்று பகர்பவர் என்னும் பொருளே இங்குச் சிறப்பதாகத் தோன்றுகிறது. பொருள் ஆட்சிக்குச் சான்று பகர்வதில் கருத்துச் சிறக்கவில்லை.

இச்சான்றோர் பொதுவாக மனநலம் நன்கு உடையவ ராயினும், இவர்களை என்றும் அருள் ஆட்சியின் மீது அமைந்த சான்றாண்மையைக் கடைப்பிடித்து வாழ்வதால் வரும் நலமே சிறப்புடைத்து என்றவாறு. சான்றோர் மேற்கூறிய பெரியார் என்னும் நல்லவரோடு உறவு கொண்டு வாழ்வது மட்டுமன்று, சான்றோர் என்பவர் எல்லாருமே தமக்குரிய நலத்தை மனத்தில் கொண்டு வாழ்தல் வேண்டும் என்னும் கருத்து ஈண்டுச் சிறப்பதாகத் தோன்றுகிறது.

459. ''மனநலத்தின் ஆகும் மறுமைமற் றஃதும்
இனநலத்தின் ஏமாப் புடைத்து.''

மறுமை வாழ்வுபற்றிய கருத்தும் இப்பொருட்பாலில் உள்ளது என்பதற்கு இக்குறளும் சான்று. இவ்வளவாகப் போற்றப்படும் மனநலம் இறுதியில் பயக்க வேண்டிய நன்மை இன்னது என்பதை இக்குறள் தெளிவாகக் கூறுவது கவனிக்கத் தக்கது. 'மன நலத்தின் ஆகும் மறுமை' என்கிறது குறள். இம்மை வாழ்வுக்காக மட்டுமே ஒருவன் வாழ்தல் தகாது. மறுமையை மனத்தில் கொண்டு, அதுவே தனது வாழ்வின் இறுதி நோக்கமெனக் கொண்டு வாழ்தல் வேண்டும் என வலி யுறுத்துகிறது குறள். மறுமைக்கு வழிகாட்டும் இந்த மனநலமும் அவனவன் உறவு கொள்ளும் நல்லாரைப் பொறுத்திருக்கும். 'சான்றோர்' என முந்திய குறளில் கூறப்பட்டதின் நலனையும் பொறுத்திருக்கும்.

460. ''நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லல் படுப்பதூஉம் இல்.''

இவ்வதிகாரத்திற்கு முந்திய அதிகாரத்தில் கூறப்பட்ட பெரியாரைத் துணைக் கோடலால் ஏற்படக் கூடிய நன்மைக்கு மேலானது ஒன்றுமில்லை. அங்ஙனமே இவ்வதிகாரத்தில் கூறப்பட்ட சிற்றினத்தைச் சேர்வதால் ஏற்படக் கூடிய அல்லல் (தீமை)களினும் துன்பந்தரக் கூடியது வேறு இல்லை.

## சிற்றினம் சேராமை

### சுருக்கம்

ஈண்டுக் கூறப்படுபவற்றை இம்மைப் பொருளிலும் கொள்ள லாம்; மறுமைப் பொருளிலும் கொள்ளலாம்.

451. "சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்."

சிறுமதி படைத்தவர்க்கஞ்சுவது பெருமதி படைத்தவர் பண்பு. அப்பெருமதி இல்லாதவர் மட்டுமே சிறுமதியாளரைச் சுற்றத்தார் போலக் கொண்டாடுவர்.

452. "நிலத்தியல்பான் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகும் அறிவு."

பாயும் நிலத்தின் தன்மைக்கு ஏற்ப நீரின் இயல்பு அமையும். அதுபோலத் தாம் சேரும் இனத்தவரது தன்மைக்கு ஏற்ப மக்களுக்கு அறிவு சிறந்ததாகவோ குறைந்ததாகவோ உள தாகும்.

453. "மனத்தானாம் மாந்தர்க் குணர்ச்சி இனத்தானாம்
இன்னான் எனப்படும் சொல்."

மக்கட்கு உணர்வு ஏற்படுவது மனத்தாலே. அஃதாவது மனநிலைக்கு ஏற்ப; ஒருவன் 'இன்ன பண்புடையவன்' எனப் படுவது அவன் யாருடன் சேர்கின்றானோ அதனைப் பொறுத்தது.

454. "மனத்து ளதுபோலக் காட்டி ஒருவற்
கினத்துள தாகும் அறிவு."

'இன்ன பண்புடையவன்' எனப்படுவதற்குத் தேவைப்படும் அறிவு ஒருவனது மனநிலையாலேயே ஏற்படுவதுபோலக் காணப்படினும் கூர்ந்து நோக்கின் (மனநிலையால் மட்டுமன்று) அவன் சேரும் இனத்தவரையும் பொறுத்ததாயிருக்கும்.

455. "மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்."

மனத்துள் மாசிலன் ஆதலும், செய்வினையில் தூய்மை யுடையவனாதலும் ஒருவன் சார்ந்துள்ள (நல்லோர்) இனத் தொடர்பால் (துணையால்-தூவா) உண்டாவதாகும்.

456. "மனந்தூயார்க் கெச்சம்நன் றாகும் இனந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை."

மனத்துள் தூய்மையுடையவர்க்கு(வாணாள் முடிந்த பிறகும்) நற்புகழ் எஞ்சி நிற்கும். தூய்மையுள்ளம் கொண்ட நல் இனத் தவர்க்கு நன்றாகாத செயலே இல்லை.

457. "மனநலம் மன்னுயிர்க் காக்கம் இனநலம்
எல்லாப் புகழுந் தரும்."

மனத்துள்ள நலம் நிலைபெற்ற உயிர்களாகிய மானிடர்க்கு ஆக்கம் ஆகும். அந்நலம் (சான்றோர் ஆகிய) இனத்தவரிடை விளங்குமாயின் எல்லாப்புகழும் பெறுவதாகும்.

458. "மனநலம் நன்குடைய ராயினும் சான்றோர்க்
கினநலம் ஏமாப் புடைத்து."

பொதுவாக மக்கள் மனநலம் மிக உடையவராயினும் சான்றோர்க்கு, (குறள் கூறும் சான்றாண்மை கடைப்பிடிப் பவர்க்கு) சான்றோராகிய இனம் அனைத்திற்கும் உளதாகும் நலமே மேன்மையுடையதாகும்.

459. "மனநலத்தின் ஆகும் மறுமைமற் றஃதும்
இனநலத்தின் ஏமாப் புடைத்து."

தனிமனிதனுக்கு மனநலத்தால் மறுமை இன்பமும் உண் டாகும். அதுவும் சான்றோர் இனத்தினால் வலிமை பெறும். அஃதாவது, சான்றாண்மை கடைப்பிடிப்பவர் சமுதாயம் (சபை) முழுவதும் நலன் அடையும்போது அதன் உறுப்பினர் ஒவ்வொரு வர்க்கும் நலன் உண்டாகும். (ஐந்தவித்தானுக்குச் சான்று பகரும் சான்றாண்மையினர் சபை முழுவதும் அருள்நலன் பெற்று விளங்கும்போது தனி உறுப்பும் நலன் பெறும்).

460. ''நல்லினத்தின் ஊங்கும் துணையில்லை தீயினத்தின்
அல்லல் படுப்பதூஉம் இல்.''

சான்றாண்மை பின்பற்றும் நல் இனத்தைக் காட்டிலும் மேலான துணையில்லை. மாறாக அவ் ஆண்மையைக் கடைப் பிடிக்காத தீயோர் இனத்தைவிடத் துன்பம் தருவது வேறில்லை.

---

குறிப்பு : இப்பகுதியில் கூறப்படும் 'இனம்' சான்றோர் இனத்தையே குறிப்பிடும். இப்பாக்களில் கூறப்படும் 'நலன்' மறுமை இன்பமாகிய நலனையும் குறிப்பிடும் என்பதற்குப் பாக்களே சான்று.

# 47. தெரிந்து செயல் வகை

பொருள் ஆட்சியினராயினும் ஆட்சி முறையைச் சார்ந்த செயல்களை நன்கு ஆராய்ந்து, செய்தல் வேண்டும். தக்க யோசனையின்றிச் செய்வதால், விளைவுகள் துன்பம் தரக் கூடியவையாகும்.

461. ''அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து செயல்.''

எச்செயலைச் செய்ய முனைந்தாலும் அதனால் ஏற்படக் கூடிய செலவையும் (அழிவதூஉம்), வரவையும் (ஆவதூஉம்) நன்கு சீர்தூக்கிப் பார்த்தல் வேண்டும்.

''வழி பயக்கும் ஊதியமாவது முன்பு நன்றாகத் தோற்றிப் பின்பு தீதாகாத வினை'' (பரிப்பெருமாள்). குறிப்பிட்ட செயல் ஒன்று தொடக்கத்தில் நன்மையெனத் தோன்றக் கூடும். ஆனால், பின்னர் வீண் செயலெனவும், ஆக்கத்திற்கு வழியாகாததாகவும் இருக்கலாம். ஆகவே, எதையும் நன்கு ஆய்ந்து செயலாற்றுதல் வேண்டும். வரவு செலவு என்பது பொருளாட்சியாளர்க்குச் சிறப்பாகப் பொருந்தும். எனினும், அருளாட்சியாளரும் தம் செயல்களினால் நிகழக் கூடிய ஆன்மீக நன்மையை அல்லது தீமையை ஆய்ந்து செயலாற்றல் வேண்டும்.

462. ''தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச்
செய்வார்க்கு
அரும்பொருள் யாதொன்றும் இல்.''

சேரத் தகாத சிற்றினத்தைத் தவிர்த்துப் பெரியார் என மேற் கூறப்பட்ட மேலினத்தாரோடு சேர்ந்து - இத்தகை யாரைத் துணை கொண்டு செயல் புரிந்தால், நன்மை உண்டாம் எனத் தெரிந்து, அத்தகையவரையே ஆய்ந்து தேர்ந்து கொண்டு, அவர்களோடு கலந்து ஆலோசித்த பின்னர் தாமேயும் எண்ணிச் செயல் புரிவோர்க்கு ஆகாததொன்றும்

(அரும் பொருள் யாதொன்றும்) இராது. எல்லா நற்செயல் களையும் செய்ய இயலும் என்றவாறு.

463. ''ஆக்கம் கருதி முதலிழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார்.''

இலாபம் நிரம்பக் கிடைக்கும் என்றெண்ணி முதலீட்டை இழக்கும் அறிவற்ற செயலுக்கு அறிவுடையவர் யாரும் ஊக்கம் தர மாட்டார்கள். இது சிறப்பாகப் பொருளாட்சியர்க்குப் பொருந்தும் கருத்து.

அருளாட்சியர்க்கும் இக்கருத்துப் பொருந்தும். தக்க யோசனை யின்றி மேலானதொரு அருட் காரியத்தைச் செய்ய விரும்பும் ஒருவன், விரும்பும் அவ் அருட் காரியத்தையடைய கையாள வேண்டிய சாதனங்களைத் தக்க முறையில் பயன்படுத்தாவிடில் இறுதியில் தோல்வியையே காண நேரும். அருள் என்னும் செல்வத்தை ஆள வேண்டிய வகையில் ஆளாவிடில் உள்ள செல்வத்தையும் இழக்க நேரிடலாம். தனிப்பட்ட ஒருவரது வாழ்க்கையில் இது நிகழக் கூடும் என்றால், அருளாட்சிப் பொறுப்பேற்றுள்ளவர் தக்க முறையில் திட்டமிட்டுச் செயலாற்றாவிடில் இறுதியில் உள்ளதையும் இழக்க நேரிடலாம்.

464. ''தெளிவி லதனைத் தொடங்கார் இளிவென்னும்
ஏதப்பாடு அஞ்சு பவர்.''

ஆட்சி முறையில் செய்ய வேண்டுவது எது, தவிர்க்க வேண்டியது எது எனத் தெளிவாக அறியாமல் எச்செயலையும் தொடங்க மாட்டார்கள்; அங்ஙனம் செய்வதால் இழிவு நேரக் கூடும் என்று அஞ்சுபவர்.

465. ''வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோர் ஆறு.''

பொருளாட்சியோ அருளாட்சியோ சீரிய முறையில் நடை பெற வேண்டுமெனின் நன்முறைக்கு எதிராக எப்போதுமே செயலாற்றக் கூடிய எதிரிகளின் சூழ்ச்சிகளைத் தக்க காலத்தில் அறிந்துகொண்டு அவற்றை வெல்லுமுறையில் செயலாற்ற

முனைதல் வேண்டும். வெல்லும் வழி வகைகளை நன்கு ஆராயாமல், (வகை அறச் சூழாது) எதிரிகளைத் தாக்கச் செல்லுதலை (எழுதல்) எதற்கு உவமையாகக் கூறலாமெனின், தன் நிலத்தை நன்றாக உழுது பாத்தி கட்டி அதனுள் எதிரிகளாகிய வித்தினை விதைப்பது போல் ஆகும். நாமே எதிரிகளை வரவழைத்துக் கொண்டு அவர்களுக்கு எல்லாச் சலுகைகளையும் தருவது போல் ஆகும்.

466. ''செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும்.''

செய்யத் தகாத காரியத்தைச் செய்ய முனைந்தாலும், அல்லது செய்யத் தகுந்த காரியத்தைத் தக்க காலத்தில் தக்க முறையில் செய்யாவிடினும் ஆட்சி முறைக்குக் கெடுதி விளையும்.

467. ''எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு.''

எக்காரியத்தையும் நன்கு ஆய்ந்து பார்த்த பின்னரே செய்யத் துணிதல் வேண்டும். நன்கு ஆய்ந்து பாராமல் தொடங்கிவிட்டு, பின்னர் ஏற்படும் இடர்களைப் பார்த்துத் துன்புறுவது பொருளற்ற செயல்; அல்லது தொடங்கிய பின் பார்த்துக் கொள்ளலாம் என்பதும் தவறு.

468. ''ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.''

ஆட்சி முறையில் குறிப்பிட்டதொரு திட்டத்தை நிறைவேற்ற நினைக்கும்போது சிலர் முன் பின் யோசியாமல் ஒப்புதல் தெரிவிக்கக் கூடும். ஆனால், அத்திட்டத்தின் கூறுகள் நன்கு ஆராயப்படாமல் தொடங்கப் பெற்றால், பலர் அதைப் போற்றினாலும் இறுதியில் பெருங்குறையாகவே முடியும்.

469. ''நன்றுஆற்றல் உள்ளும் தவறுண்டு அவர்அவர்
பண்பறிந்து ஆற்றாக் கடை.''

ஆட்சி முறையில் பலருடன் தொடர்பு கொண்டே ஆக வேண்டும். பொருளாட்சியாயினும் அருளாட்சியாயினும் சமுதா

யத்தின் பொது நன்மைக்காகவே உள்ளது. ஆகவே, பல திறப் பட்ட மக்களோடு தொடர்பு கொண்டே ஆட்சி நடத்த வேண்டி யிருக்கும். இதில் தொடர்பு கொள்ள வேண்டியவர்களுடைய பல திறப் பண்புகளைக் கவனியாது, அவரவர்க்கு ஏற்றவாறு செயல் முறைகளை அமைத்துக் கொள்ளாவிடின் நன்மையே செய்தாலுங்கூட தவறு நிகழக் கூடும். அவரவர்க்கு ஏற்றவாறு எனும்போது, 'கொள்கையில் விட்டுக் கொடுத்து என்பதன்று கருத்து. 'அவரவர்களுடைய அறிவு, குணம், செயல் திறன் இவற்றை நன்கு புரிந்துகொண்டு' என்று மட்டுமே பொருள். யாரிடத்தில் எப்படிப் பேசினால் காரியம் சாதிக்கவியலும்; எப்படி உறவு கொண்டால் நினைத்த காரியம் வெற்றி பெறும் என்று யோசித்துச் செயல் ஆற்றுவதென்பதே கருத்து. எந் நிலையிலும் கொள்கைப் பிடிப்பைத் தளர்த்துவது என்பது நிகழ்தல் ஆகாது.

470. ''எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு
கொள்ளாத கொள்ளாது உலகு.''

ஆட்சி முறையில் தக்க காலத்தில் தக்க செயல்களைச் செய்வது எளிதன்று. எனினும், பிறர் எள்ளி நகையாடக்கூடிய செயல்களையாவது செய்யாமலிருக்கக் கருத்தாயிருக்க வேண்டும். தனிப்பட்ட ஆட்களிடமிருந்தே இத்தகைய செயல் முறையைப் பிறர் எதிர் பார்ப்பர் என்றால், ஆட்சிப் பொறுப்புள்ளவரிடம் பன் மடங்கு அதிகமாக எதிர் பார்ப்பர். பொருந்தாச் செயல்களை ஆட்சியாளர் செய்வாராயின் உலகு அவற்றை ஏற்றுக் கொள்ளாது.

இது பொருள் ஆட்சியர்க்கும் பொருந்தும். அருள் ஆட்சி யர்க்கு இன்னும் மிகப் பொருந்தும்.

## தெரிந்து செயல்வகை
### சுருக்கம்

461. ''அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து செயல்.''

ஒரு செயலைத் தொடங்குமுன் அதனால் ஏற்படக்கூடிய கெடுதியும், (அழிவதூஉம்) அல்லது நன்மையும் (ஆவதூஉம்)

வேறு எந்நன்மைக்கு வழி பயக்கும் எனவும் ஆய்ந்தறிந்து செய்க. (ஊதியம்- நன்மை, பயன்).

462. ''தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்றும் இல்.''

நன்காய்ந்து தேர்ந்துகொண்ட (சான்றாண்மை பின் பற்றும்) இனத்தவரோடு தாமும் ஆய்ந்தறிந்தபின் செயல் புரிவோர்க்கு அடையவியலாத பொருள் (அருட்பொருள், பொருட் பொருள்) எதுவுமில்லை.

463. ''ஆக்கம் கருதி முதலிழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார்.''

பொருட்பொருள் நிரம்ப அடையவேண்டும் (ஆக்கம்) என்றெண்ணி முதலையே இழந்துவிடக்கூடிய செயலை அறிவுடையவர் யாரும் ஊக்கத்துடன் செய்ய முன்வரார்.

அருட்பொருள் மட்டில் ஆக்கம் - முதல் என்னும் கருத்து முழுமையாக இல்லை. எனினும், தொடக்கத்தில் பெற்றுக் கொண்ட இறையருளைத் தக்க முறையில் பயன்படுத்தாவிடில் எல்லாமே இழக்க நேரிடும்.

''(உள்ளவர்க்கு மேலும் அளிக்கப்படும்; இல்லாதவர்க்கு உள்ளதும் எடுத்துவிடப்படும்'' என்னும் விவிலிய வாக்கை இப்பொருளில் கொள்ளலாம்).

464. ''தெளிவில் அதனைத் தொடங்கார் இளிவென்னும்
ஏதப்பா டஞ்சு பவர்.''

இன்ன செயலால் இழிவு ஏற்படக்கூடும்; அது குற்றமாகக் கூடும் என அஞ்சுபவர் அறிவுத்தெளிவு பெறாமல் எதனையும் செய்யத் தொடங்கார்.

465. ''வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோர் ஆறு.''

எச்செயலையும் செய்யுமுன் அதற்கான வழிவகைகளை ஆழ்ந்து நோக்காமல் அச்செயலைச் செய்யத் துணிந்தெழுதல், நிலத்தில் வளரும் பயிரை நீர்பாய்ச்சி நிலைபெறச் (பாத்திப் படுப்பது) செய்வதைப் போல, தம் எதிரிகளை மேலும் ஊக்குவிப்பது போலாம்.

466. ''செய்தக்க வல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும்.''

செய்யத்தகாத செயலைச் செய்வதாலும் கெடுதி விளையும். செய்யத்தகுந்ததைச் செய்யாவிடினும் கெடுதி விளையக்கூடும்.

467. ''எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்ப திழுக்கு.''

எச்செயலையும் செய்யுமுன் பயன், விளைவு முதலியன நன்கு எண்ணியபின் செய்யத்துணிக. தொடங்கிய பின் பார்த்துக்கொள்ளலாம் என்பது அறியாமை.

468. ''ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.''

ஒன்றைச் செய்யவேண்டிய முறையில் (ஆற்றின்) செய்து முடிக்க இயலாமல் (வருந்தா) வேறுவகையில் செய்யப்படும் முயற்சி, பலரால் (தவறாகப்) போற்றப்படினும் தவறாக முடியும்.

469. ''நன்றாற்றல் உள்ளும் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.''

அவரவருடைய பண்பையறிந்து அதற்கேற்பச் செயல்புரியா விடின் நன்மை (போல் தோன்றுவதைச்) செய்தாலும் அதில் தவறு நிகழக்கூடும்.

470. "எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு."

தம் நிலைக்கு ஏற்காதன (கொள்ளாத) ஒருவர் செய்வாராயின், அவற்றை உலகம் ஏற்காது இகழும். (கொள்ளாது); ஆகவே, பிறரால் இகழப்படாதவற்றை (எள்ளாத) நன்கு எண்ணிப்பார்த்துச் செய்தல் வேண்டும்.

இப்பத்துப் பாக்களில் கூறப்படும் கருத்து எல்லோர்க்குமே பொருந்தும். எனினும் இம்மை, மறுமை ஆட்சி செய்வோர்க்குச் சிறப்பாகப் பொருந்தும்.

# 48. வலியறிதல்

ஆட்சியிலுள்ளவரும், பொதுவாக எல்லா மக்களுமே, சமயா சமயங்களில் இடர்ப்பாடுகளை எதிர் கொண்டேயாக வேண்டும். இவ்வுலக வாழ்க்கையில் தவிர்க்க இயலாதவை இவ்விடர்ப் பாடுகள். இவற்றைத் தவிர்ப்பதற்குத் தேவைப்படும் வலிமை தமக்கு (ஆட்சியாளர்க்கு அல்லது தனிப்பட்ட ஒருவர்க்கு) உண்டா என்று நன்கு சீர் தூக்கிப் பார்த்த பின்னரே செயலில் இறங்க வேண்டும் என வலியுறுத்துகின்றது இவ்வதிகாரம்.

471. "வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்."

வினை வலி - தான் செய்ய விரும்பும் செயலின் வலிமை. அஃதாவது, எளிதாகச் செய்து முடிக்கக் கூடியதா, பிறருடைய துணையும் தேவைப்படுமா என்று சீர் தூக்கிப் பார்ப்பது. இது பொதுவாக எல்லாருக்குமே பொருந்தும். பொருளாட்சியர்க்குச் சிறப்பாகப் பொருந்தும். ஏனெனில், சமுதாயத்துக்கு-நாட்டுக்குத் தேவைப்படும் - ஒரு செயலுக்குத் தேவைப்படும் வலிமை தனி மனிதனின் செயலுக்குத் தேவைப்படுவதைவிட அதிகமாகவே இருக்கும். உதாரணமாக ஒருவன், தன் எதிரி ஒருவனை வெல்வதைவிட ஆட்சியாளர் தம் நாட்டின் எதிரிகளை வெல்வது மிக மிகக் கடினமானது.

இன்னும் சிறப்பாக இவ்வலிமை அருளாட்சியினர்க்குப் பொருந்தும். ஏனெனில், அருளாட்சியில் - (தனி ஒருவருடைய அருள் வாழ்விலுங்கூட) எதிர் கொண்டு வெல்ல வேண்டிய இடர்ப்பாடுகள் மிகமிக அதிகமாகவும் கடுமையானவையாயும் இருக்கும்.

இக்குறளில் வரும் 'வினை' என்னும் சொல்லால் 'இருள் சேர் இரு வினையும்' குறிக்கப்படலாம். ஆதி வினையாகிய அருள் இழந்த நிலையும், தானே தவறு (தீவினை) செய்து பெற்றுக்கொண்ட அருளை இழந்து போகும் நிலையும் சேர்ந்து

பெரிய இடர்ப்பாட்டினை விளைவிக்கும். தனக்குள்ளேயே எந்
நேரமும் குடியிருக்கும் இடர்ப்பாடு - இத்தீவினை என்னும்
செருக்கு. அதோடு தீவினை என்னும் செருக்கினால் இறைவனின்
அருள் அன்பை இழந்த மனித இனத்தின் முதல் எதிரி (பலத்த
எதிரி), மனிதன்தான் இழந்த அருட் செல்வத்தையும் வீடுபேற்றி
னையும் அடைந்துவிடலாகாதெனத் தீவிர முயற்சியில் ஈடுபட்
டிருக்கும் 'பேய்', என்றும் எதிரியின் சூழ்ச்சிகளையும், பலத்தத்
திட்டங்களையும், எப்படியாவது இறைவன் பொருள் சேர் புகழ்
புரியாமல் இருளில் சேர்க்க வேண்டுமென அவன் தூண்டிக்
கொண்டேயிருக்கும் சோதனைகளையும் எதிர்த்து வெல்லத்
தேவைப்படும் இன்றியமையாத அருள் வலிமையும் இங்கு
மறைந்துள்ளது. பொருளாட்சியில் அல்லது தனி ஒருவன் செய்ய
விரும்பும் செயல்களுக்கு ஓரளவேனும் வலிமை உண்டு. எனினும்,
மேற்சொன்ன இரு வினைகளின் இருள் சேர் வலிமையையும்,
ஆதி எதிரியின் வலிமையையும் வெல்ல வேண்டுமானால், ஆதி
பகவனின் அருள் வலிமை இன்றி அமையாது.

**தன் வலி :** தன்வலி என்று ஈண்டுக் கூறப்படுவது அருள்
வாழ்வைப் பொறுத்த மட்டில், தனக்கு எவ்வலியும் இல்லை என்று
உணர்ந்து இறையருளின் வலிமையை எதிர் பார்ப்பதாகும்.

**மாற்றான் வலி :** இஃது அருள் வாழ்வைப் பொறுத்த
மட்டில் மனிதனின் ஆதி எதிரியாகிய பேயைத்தான் குறிக்கும்.
பொருளாட்சியைப் பொறுத்த மட்டில் ஒரு நாட்டுக்கு ஏற்படக்
கூடிய விரோதிகளைக் குறிக்கும்.

**துணை வலி :** அருள் வாழ்வில் இறைவன் அருள் துணை-
எந்தச் சக்தியாலும் வெல்லப்படவியலாது.

இம்மைப் பொருள் : வாழ்வில் தனக்கு அல்லது தம்
நாட்டுக்குத் துணையாக வரக்கூடியவர்களின் ஆள் பலம், பண
பலம் முதலியன.

இவற்றையெல்லாம் நன்கு சீர் தூக்கிச் செயல் ஆற்ற
வேண்டும். தனி மனிதனும் சரி, பொருள் ஆட்சியினரும் சரி,
சிறப்பாக அருளாட்சியினரும் சரி.

472. ''ஒல்வ தறிவது அறிந்ததன் கண்தங்கிச்
செல்வார்க்குச் செல்லாதது இல்.''

இம்மை வாழ்விலோ மறுமை வாழ்விலோ பொருளாட்சியிலோ அருளாட்சியிலோ சமுதாய வாழ்விலோ தனி மனிதனின் வாழ்விலோ முன்பு கூறிய நால்வகை வலி, உள்ள நிலைமையைக் கண் முன் கொண்டு, நன்கு சீர் தூக்கிச் செயல்படுபவர்க்கு-இடர்ப்பாடுகளை எதிர்த்து வெல்லச் செல்வார்க்குச் செல்லாதது இல்; அஃதாவது, செய்து முடிக்க இயலாதது இல்லை.

473. "உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர்."

மேற் கூறிய வினை வலிமை, தன் வலிமை (அல்லது தன் வலிமையற்ற நிலை) இவற்றைச் சீர் தூக்கிப் பார்க்காமல், வெறும் மனவெழுச்சியால் உந்தப்பட்டவராய் (ஊக்கத்தின் ஊக்கி) இடர்களை எதிர் கொண்டு சென்றவர் பலர், பொருளாட்சி-அருளாட்சிப் போரின் நடுவில் ஒன்றும் செய்ய இயலாமல் தோல்வியுற்றதுண்டு (முரிந்தார்).

474. "அமைந்தாங்கு ஒழுகான் அளவறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும்."

தன் எளிய நிலையை உணர்ந்து ஒழுகாதவன், தனக்குள்ள சிறிதளவு வலிமையை உணராமல், தன் வலிமை பேரளவினது தன்னை வெல்ல யாராலும் இயலாது என்று தன்னைப் பெருமையாக எண்ணிச் செயலாற்ற முனைபவன் விரைவில் வெகு எளிதாகத் தோல்வியுற்றுக் கேடுறுவான். இது மிகச் சிறப்பாக அருள் வாழ்வுக்குப் பொருந்தும். "என்னைப் பிரிந்து உம்மால் ஒன்றும் செய்ய இயலாது" என்பது ஆதி பகவன்-ஐந்தவித்தான்- இறைவனாகிய கிறித்து கூறிய மொழி.

475. "பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின்."

உடல் வலிமையோ உள்ளத்து வலிமையோ மிகச் சிறிதேயாக (மயிலிறகு போல அவ்வளவு இலேசாக) இருந்தாலும் பலர் ஒன்றுகூடி ஒரே மனத்துடன் ஒன்றைச் செய்ய முனைவாராயின், அச்செயல் வெற்றி பெறும். இடர்ப்பாடு எவ்வளவு பெரிதாயினும், அஃது அச்சிறுவது போலப் போய்

ஒழியும். எவ்வளவுதான் வலிமை கொண்டவனாயினும் தன் வலிமையை மட்டுமே நம்பிச் செயலில் இறங்கலாகாது. பிறருடைய துணையையும் நாடுதல் வேண்டும் என்றவாறு.

இது பொருளாட்சியர்க்கும் பொருந்தும்; அருளாட்சியர்க்கும் பொருந்தும். சிறப்பாக அருள் ஆட்சியர்க்குப் பொருந்தும். இறையருள், வலிமை மிக்க பெரிய சேனையின் வலிமையையும்விட மேலானது. இது தனி மனிதன் வாழ்க்கைக்கும் பொருந்தும். பொருளாட்சியர் ஓரளவு வலிமையற்றவராயினும், மிகப் பெரிய தொகையினரைத் திரட்டி எதிரியைத் தாக்கும் போது, வெற்றியும் பெறலாம்; எதிர் பாராமல் தோல்வியும் பெறலாம். அருள் ஆட்சியிலோ இறைவன் அருள் சக்தியை வெல்ல எச்சக்தியும் இல்லை.

இவ்விளக்கம் ''பலமில்லாதார் பலர் கூடினாலும் சத்துவமாம்'' என்று **பரிதியார்** கூறும் கருத்துக்கு இசைவது காண்க.

476. ''நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந்து ஊக்கின்
உயிர்க்கிறுதி ஆகி விடும்.''

பொருள் ஆட்சி முறையில் அவ்வாட்சியினர் திரட்டக்கூடிய பொருள் பலம், படை பலம் இவற்றிற்கு அளவு ஒன்றுண்டு. இம்மை சார்ந்த அனைத்திற்கும் அளவிருந்தே தீரும். அதற்கு மேல் முயன்றால் (இக்குறளில் கூறப்பட்டது போல), மரத்தின் நுனிக் கொம்பில் ஏறிய பிறகும், அதற்கு மேலும் ஒருவன் ஏற முயன்றால் கீழே விழுந்து தன் உயிருக்கு இறுதியைத் தானே தேடிக் கொள்வதாகும்.

அருளாட்சி முறையிலோ இறைவனுடைய வலிமைக்கு அளவு இல்லாததால், அவன் அருளுக்கும் அதனை நன்கு கையாளும் மனிதர்க்கும் உள்ள வலிமை அளவிறந்ததே எனலாம்.

இறையருளை நிறையப் பெற்ற ஒருவன், சாதாரண மனிதனால் செய்ய இயலாததையும் செய்வான். உதாரணமாக இறந்தவனுக்கு மீண்டும் (அருள் சக்தியால்) உயிர் கொடுக்க வியலும். ஆனால், எவ்வளவு அருளைப் பெற்றாலும் இறைவனுக்குச் சமமாகிவிட இயலாது.

477. ''ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்
போற்றி வழங்கும் நெறி.''

பொருளாட்சியர் தேவைப்படுவோர்க்கு ஏதேனும் பொருளுதவி வழங்கும் போது (ஆற்றின்) அளவறிந்து, அஃதாவது தேவையென வருவோர் நிலையும் தம் கையில் உள்ள பொருளின் அளவையும் அறிந்து வழங்குக. இதுவே உள்ள பொருளைத் தக்க முறையில் காக்கவும் அதே சமயத்தில் வழங்கவும் தக்க நெறியாகும்.

அருளாட்சியில் இத்தகைய நியதிக்கு இடமில்லை. ஏனெனில், அருளை வழங்குவோர் அருளுக்கு ஊற்றாகிய இறைவனிடமிருந்து பெற்றுக்கொண்டே வழங்குவர். இறைவன் தரும் அருளுக்கு அளவில்லை. பெற்றுக்கொள்வோரிடம் விளங்கும் மனப்பான்மை, பெற்றுக்கொள்ள ஆர்வம், தகுதியுடைமை இவையே அளவெனலாம். அருள் என்பது நன்கொடை. நன்கொடை என்பது யார் மீதும் திணிக்கப்படுவதன்று. விரும்பி ஏற்றுக்கொள்பவருடைய மனநிலையைப் பொறுத்தது. ஆகவே, அதுவே அளவாகும் என்க. இந்த அளவை மதிப்பிட்டே இறைவனும் தம் அருட் கொடைகளை வழங்குவான்.

478. ''ஆகாறு அளவிட்டிது ஆயினும் கேடில்லை
போகாறு அகலாக் கடை.''

பொருளாட்சியாளர்க்குப் பொருள் வருகின்ற வழி (ஆகு ஆறு) சிறிதேயாயினும் (அளவிட்டிதேயாயினும்) அதனால் கேடில்லை. அப்பொருள் போகும் ஆறு (அஃதாவது செலவு செய்யப்படும் வழி) உள்ள பொருள் அளவுக்கு மிஞ்சியில்லாவிட்டால் பெருத்த தீமை ஒன்றும் வராது என்றவாறு.

அருள் ஆட்சி முறையில் இறைவன் 'தாளாற்றித் தந்த (அருட்)பொருள்' அளவற்றதாகையால், அதைத்தக்க முறையில் மக்களுடைய ஆன்மீக நலனுக்காக எவ்வளவு செய்தாலும் 'கேடில்லை.' மாறாகப் பெருத்த நன்மையே விளையும்.

479. ''அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும்.''

பொருட்பொருள் உள்ளவன் 'அளவறிந்து' வாழாவிடில்,
அவன் வாழ்க்கை வசதியுள்ளது போலக் காணப்படினும் ஒன்று
மில்லாமல் மறைந்து விடும்; கேடுறும். அருட்பொருள்
உள்ளவன் அதைத் தக்க முறையில் பயன்படுத்தாவிடில் அவனது
அருள் வாழ்வும் பாழடையும்.

480. "உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்."

பொருளை அளவுடன் ஆள வேண்டும் என்று முந்திய குறட்
பாக்களில் கூறப்பட்டது. உள்ள பொருளைத் தக்க முறையில்
பயன்படுத்தாவிடினும் விரைவில் கேடுறும் என இக்குறள் கூறு
கின்றது.

இக்குறள் அருளாட்சி முறையின் நியதிகளுள் ஒன்றைச்
சிறப்பாக வலியுறுத்துவது போல் தெரிகிறது. 'ஒப்புரவாண்மை'
என்னும் சொற்றொடர் இக்குறளில் ஆளப்படுவதன் முழுக் கருத்
தென்னவென்பதை ஆய்தல் வேண்டும்.

ஒப்புரவு என்னும் சொல்லுக்குத் திருக்குறள் உரையாளர்
பொதுவாகத் தரும் பொருள் பொருத்தமன்று என்பது 'ஒப்புரவு'
அதிகாரத்திலேயே எண்பிக்கப்பட்டது. உலகத்தோடு — மக்க
ளோடு ஒப்புரவாக வாழ்தல் என்னும் கருத்துச் சிறிதும் பொருந்
தாது என ஆங்கு விளக்கப்பட்டது. இக்குறளில் 'ஒப்புரவு'
என்னும் சொல்லுடன் 'ஆண்மை' என்னும் சொல்லும்
இணைக்கப்பட்டுள்ளது கவனித்தற்குரியது. உலகத்தோடு,
உலகப் போக்கில் போவதற்கு 'ஆண்மை' எங்ஙனம் தேவைப்
படும் என்பது விளங்கவில்லை. உலகம் - மக்கள் பெரும்பாலும்
தவறான - நீதி நேர்மையற்ற முறையில் செல்வதைக் காண்
கிறோம். அவர்களோடு அதே முறையில் செல்ல ஆண்மை
தேவையில்லை. ஆகவே, இறைவன் 'தாளாற்றித் தந்த பொரு
ளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற்'கே ஆண்மை
தேவைப்படும். ஏனெனில், 'புத்தேள் உலகத்தும் ஈண்டும்
பெறலரிதான' இந்த ஒப்புரவுப் பணியில் எதிர்ப்புகள் நிகழும்.
கேடும் வரக்கூடும். ஆனால், "ஒப்புரவினால் வரும் கேடெனின்
அஃதொருவன் விற்றுக் கோள் தக்கது உடைத்து," என்பதற்கு
எத்தகைய கேட்டினையும் எதிர்த்து வெற்றி பெறவும் ஒப்புரவுப்
பணியைவிடாமல் செய்யவும் ஆண்மை வேண்டும் என்பதே
பொருள். ஈண்டு 'ஆண்மை' - 'சான்றாண்மை' என்னும்

தொடரின் சுருக்கமாகவும் பயன்படுத்தியிருக்கலாம் ஆசிரியர். இறைவன் தாளாற்றித் தந்த பொருளைத் தக்கார்க்கு வேளாண்மை செய்தற்கு, பிறர்க்குச் சான்று பகரும் பணி மிக மிகத் தீவிரமாகவும் ஆண்மையுடனும் நடைபெற வேண்டிய தொன்றாகும். மேலும், இவ்வதிகாரத்தின் முதற் குறளில் கூறப் பட்ட வினை வலி, மாற்றான் வலி இவற்றை எதிர்த்து வென் றிடப் பேராண்மை வேண்டப்படும் என்பதும் தெளிவு.

## வலியறிதல்
## சுருக்கம்

471. "வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல்."

**இம்மைப் பொருள் :**

தான் செய்யக் கருதும் செயலின் வலிமை, தன்னகத் தேயுள்ள வலிமை, தன்னை எதிர்க்கக் கூடிய எதிரி யின் வலிமை, தனக்குத் துணையாக வரக்கூடியவரது வலிமை இவற்றை நன்கு சீர் தூக்கிப் பார்த்துச் செயலில் இறங்குக.

**மறுமைப் பொருள் :**

தான் செய்ய விரும்பும் அருட் செயலை முடிப்பதற்குத் தேவைப்படும் இறையருள் வல்லமை, தன்னிடத்துள்ள இயல்பான (அருள்) வலிமையின்மை, நற்செயல்களுக் கெல்லாம் எதிரியான சாத்தான் (பேய்), தீயவர்கள் வலிமை, தனக்குத் துணையாக உள்ள இறைவனின் துணையருள், நல்லோர் துணை இவையெல்லாம் நன்குணர்ந்த பின்னரே மறுமை வாழ்வுக்குரிய அருட் செயல்களைச் செய்யத் துணிதல் வேண்டும்.

472. "ஒல்வ தறிவது அறிந்ததன் கண்தங்கிச்
செல்வார்க்குச் செல்லா தது இல்."

**இம்மைப் பொருள் :**

செய்ய இயல்வதற்குத் தேவைப்படும் அறிவினை ஆய்ந்த பின் அதனை அடிப்படையாகக் கொண்டு செயல்புரியச் செல்வார்க்கு எல்லாம் இயலும்.

**மறுமைப் பொருள் :**

அருட் செயல்புரியத் தேவையானது என்னவென்று நன்குணர்ந்து இறையருளின் அடிப்படையில் செயல் புரிவார்க்கு எல்லா நற்செயல்களும் இயலும்.

473. ''உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர்.''

தனக்குள்ள வலிமையினளவை நன்குணராது ஒருவித மன எழுச்சியால் செயலைத் தொடங்கியவர் பின் தம் வலுவின்மையால் தோல்வியடைவர். மறுமைச் (அருட்) செயலைப் பொறுத்த மட்டில் இது பன்மடங்கு உண்மை.

474. ''அமைந்தாங் கொழுகான் அளவறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும்.''

(தன் வலிமை குறைந்துள்ள போது பிறருடன் நட்பாக இருத்தலும், தன் வலிமை மிகுந்தால் அவர்களோடு பகைமை கொள்ளுதலும் இன்றி எந்நிலையிலும்) ஒரு படித்தாக (அமைந்து) இல்லாமல், தன் நிலையை (வலிமை) நன்குணராதவனாய்த் தன்னைப் பெரிதாக எண்ணிப் பிறரைப் பகைப்பவன் விரைவில் கேடுறுவான்.

475. ''பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.''

மயிலிறகு மிக மெல்லியது. ஆனால், அதையும் அளவோடு தான் வண்டியில் ஏற்றவியலும். அளவு பார்க்காமல் ஏற்றினால் வண்டியின் அச்சு முரிந்துவிடும். எதற்கும் அளவுண்டு. இம்மை மறுமை இரண்டிற்கும் இது பொருந்தும்.

**மறுமைப் பொருள் :**

சிறு காரியம் என்று அளவு மீறித் தவறான (சிறு) செயல்களைச் செய்துகொண்டே போனால் இறையருள் என்னும் வாழ்க்கையில் அச்சு பழுதுறும்.

476. ''நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந் தூக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும்.''

மரக்கிளையின் நுனியில் ஏறுவது ஆபத்தானது. அந்நுனியையும் கடந்து மேலும் ஏற முயன்றால் உயிருக்கு இறுதி நேரம் வந்துவிடும்.

நுனியில் ஏறுவதே விவேகமற்ற செயல். அதற்கு மேலும் ஏறுவது மடமையிலும் மடமை. எதிலும் விவேகத்தைக் கையாள்க.

477. "ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்
போற்றி வழங்கும் நெறி."

பிறர்க்குக் கொடுக்க வேண்டும்போது தமக்குள்ள (பொருட்) பொருளின் அளவையறிந்து கொடுக்க. பொருளை நன்முறையில் வழங்கும் முறை அதுவே.

அருட் பொருளைப் பிறர்க்கு ஈவதிலும் (அஃதாவது, தம்மிடத்துள்ள அருள் வலிமையால் பிறர் நன்மையடையுமாறு செய்வதிலும்) அளவறிந்து செயல்புரிக. தன்னிடத்துள்ள அருள் வலிமைக்கு மேலானதொரு அருட் செயலைப்புரிதல் விவேகமற்றதாகும். (உதாரணம் - அருட்பண்பு அதிகமில்லாதவன் பிறர்க்கு அப்பண்புகளை வழங்க முயல்வது).

478. "ஆகாறு அளவிட்டி தாயினுங் கேடில்லை
போகாறு அகலாக் கடை."

பொருட் பொருளும் சரி, அருட் பொருளும் சரி, அது வரும் வழி (அடையும் வழி) சிறிதாயிருப்பினும் கேடில்லை. ஆனால், அதற்கு ஏற்பப் போகுமுறையை (செலவு செய்யுமுறையை) அமைத்துக் கொள்ள வேண்டும். இன்றேல் கேடு விளையும்.

வரவுக்கு மிஞ்சிச் செலவு செய்தால் கேடுவிளையும். அருளை அடைவதற்குச் செய்யப்படும் முயற்சி அதைப் (மேற்கூறிய பொருளில்) பிறர்க்கு வழங்குமுறையைவிடப் பெரிதாயிருத்தல் வேண்டும். இன்றேல் விவேகமற்ற முறையாகும்.

479. "அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும்."

பொருள் ஆட்சி - அருள் ஆட்சி இரண்டிலும் அளவு என்பது இன்றியமையாதது. அளவு மீறிய வாழ்க்கை, வாழ்க்கை போலத் தோன்றுமேயன்றி இறுதியில் பாழடைந்து விடும்.

480. "உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்."

இக்குறளுக்கு மறுமைப் பொருளே சிறக்கிறது. இறைவன் 'தாளாற்றித் தந்த பொருளும்', 'புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறலரிதும்' சான்றாண்மைத் தூண்களுள் ஒன்றும் ஆகிய 'ஒப்புரவை'த் தக்கார்க்கு வேளாண்மை செய்ய வேண்டிய முறையில் செய்யாவிடில், பயனற்றுப் போகும். 'ஒப்புரவுப் பொருள்' *தக்கார்க்கு வேளாண்மை செய்யும்போது வளமுறும். அங்ஙனம் செய்யாவிடில் அதிகப் பயன் இராது. 'உள்ளவனுக்கு (அஃதாவது, அருட்பொருளை வளமுறக் கொண்டிருப்பவனுக்கு) மேலும் தரப்படும். இல்லாதவனுக்கு (அங்ஙனம் வளமுறக் கையாளாதவனுக்கு) உள்ளதும் எடுத்துக் கொள்ளப்படும்!' என்னும் விவிலிய வசனம் நோக்குக.

# 49. காலமறிதல்

மேற்கூறிய வலிமை மிகுதியாய் இருந்திடினும், செய்யத் தக்க காரியத்தைத் தக்க காலத்தில் செய்தலும் அவசியம்.

481. ''பகல்வெல்லும் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்குவேண்டும் பொழுது.''

பகல் நேரத்தில் காக்கை ஆந்தையைத் தாக்கி வெல்ல இயலும்; இரவு நேரத்தில் இயலாது. காரணம் தெளிவு. அது போல, பொருளாட்சியாளரும் அருளாட்சியாளரும் காலத்தைக் கணித்துச் செயல்பட வேண்டுவது அவசியம். மனிதனின் மனப் போக்கு எப்போதும் ஒரே நிலையில் இருப்பதில்லை.

சிறப்பாக அருள் ஆள்வோர் பிறருடைய மனப் போக்கை உணர்ந்த பின்னரே அருட் பொருளை அவர்க்கு எடுத்துரைக் கவும் வழங்கவும் முயலுதல் அவசியம். ஒருவன் மனப்போக்குச் சரியில்லாத நிலையில் அவனுக்கு ஆன்மீக நலனைப் பயக்கக் கூடிய அருட் பொருளைப்பற்றி உரைப்பதே பயனற்ற செய லாகும் அன்றோ? இயலுமாயின் அவனது மனப் போக்கு நன்னிலை எய்துமாறு விவேகமுடன் முயன்று, பின்னர் செய லாற்றுவது பயன் தரும்.

482. ''பருவத்தோ டொட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை ஆர்க்கும் கயிறு.''

மேற்கூறியவாறு, செயல்புரியத் தக்க காலம் எதுவெனக் கவனியாது பொருட்பொருளையோ அருட்பொருளையோ கூறவும் வழங்கவும் தொடங்குவது (பருவத்தோடொட்ட ஒழுகல்), பொருள் திருவினை, அல்லது அருட்டிருவினை நீங்கா மல் (தீராமை) காக்கும்படி பிணித்து வைக்கும் (ஆர்க்கும்) கயிற்றுக்கு ஒப்பாகும். அஃதாவது, அது நீங்காமல் தம்மோடே யிருந்து பயன்தரும்படி செய்வதற்கு ஒப்பாகும் என்றவாறு. அஃதாவது, வீண்.

483. ''அருவினை என்ப உளவோ கருவியால்
காலம் அறிந்து செயின்.''

ஏற்ற சாதனங்களை ஏற்ற காலத்தில் பயன்படுத்த அறிந்த பின் செயலாற்ற முனைபவர்க்கு எல்லாக் காரியமும் கைகூடும். இயலாத அருவினை என்பது இராது.

தக்க கருவியுடன் தக்க நேரத்தில் பயன்படுத்துவது மேலும் வலியுறுத்தப்படுகிறது.

பொருளாட்சியர்க்குப் பொருள் நிறைய இருக்கலாம். அதைச் சரியான காலம் அறிந்து பயன்படுத்தினால் பயன் கிடைக்கும். சில காலங்களில் ஒரு பொருளை வாங்க ஒரு சிறு தொகை போதுமானதாயிருக்கும். வேறொரு காலத்தில் அதைவிட அதிகமான தொகை தேவையாயிருக்கும். ஆகவே, அப்பொருளை வாங்க எது தக்க காலம் என முன் யோசனையுடன், அதுபற்றிய அறிவுள்ளவர்களுடன் கலந்து ஆலோசித்தல் மிகுந்த பயன் தரும்.

அருள் வாழ்வு விடயத்திலும் அப்வாறே, தக்க காலத்தில் போதுமான அருட் செல்வத்தைப் பயன்படுத்தினால் எக் காரியத்தையும் சாதித்துவிட இயலும்.

484. ''ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
கருதி இடத்தான் செயின்.''

முந்திய குறளில் கூறப்பட்ட கருத்தே மீண்டும் மிக அழுத்தமாக வலியுறுத்தப்படுகிறது. சாதிக்கவியலாத காரியம் இல்லை என்பது மட்டுமன்று, உலக முழுவதையுமே தன் கைக்குள் கொணர இயலும். முந்திய குறளில் தக்க காலம், தக்க கருவி கூறப்பட்டன. இக்குறளில் தக்க காலமும் தக்க இடமும் கூறப் படுகின்றன. சில காரியங்கள் தக்க இடத்தில்தான் கைகூடும் என்பது அனுபவத்தால் அறியப்பட்டதொன்று.

485. ''காலம் கருதி இருப்பர் கலங்காது
ஞாலம் கருது பவர்.''

உலகத்தையே வெல்வது போன்ற காரியமாயினும் அதற்கு ஏற்ற காலம் எது என மனங்கலங்காதிருப்பர் இக்கருத்தை நன்குணர்ந்தார்.

ஐந்தவித்தானாகிய இறைவனும் இக்கருத்தைக் கூறியிருக்கின்றார். "என் நேரம் இன்னும் வரவில்லை" என்னும் வசனத்தை பல முறை அவர் கூறக் காண்கிறோம். அந்நேரம் வந்ததும் தம் சீடர்க்கு, "மனங்கலங்காதீர், 'நான் உலகையே வென்றேன்" என்றும் கூறினார். இஃது அருளாட்சிச் செயலுக்குச் சிறப்பாகப் பொருந்தும். பொருள் ஆட்சியர் எவ்வளவு தான் காலம், கருவி, இடம் அனைத்தும் கருதிச் செயல் புரிந்தாலும் உலகையே வெல்வது சாதிக்க இயலாதது. உலக வரலாறு இதற்குச் சான்று.

486. "ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேரும் தகைத்து."

ஆட்சியாளர் ஊக்கமும் வலிமையும் உடையவராயினும், நினைத்தவுடன், முன் பின் யோசியாமல் ஒரு காரியத்தைச் செய்ய முன் வரலாகாது. தக்க நேரம் வருமளவும் ஓரளவு ஒடுங்கி (தன்னை யடக்கிக்கொண்டு) இருத்தல் நல்லது. ஆட்டுக் கிடாய் மற்றொரு கிடாயுடன் (பொருதகர்) சண்டையிடும் முறையைக் கவனிக்கும் போது என்ன காண்கிறோம்? தலையோடு தலை முட்டுதற்கு முன், பின்னுக்குக் கால் வாங்கிப் பின்னர் பாயும். அது போல ஆட்சியாளர் சிறிது பின் வாங்கினாற் போல் இருந்து, எதிரி, எதிர் பாரா நேரத்தில் தாக்க வேண்டும்.

அருளாட்சியிலோ எதிரி (முன்பு கூறியது போல்) எந்நேரமும் தாக்கக் காத்திருப்பான். உள்ளத்திலேயே உறைகின்ற அவனவன் தீய நாட்டமும் திடீரெனத் தாக்கிப் பாவத்தில் விழத் தள்ளக் கூடும். ஆதலின், இவ்வாட்சியில் எந்நேரமும் விழிப்பாயிருத்தல் வேண்டும். தக்க முறையை முன்னதாகவே யோசித்து வைத்திருக்க வேண்டும்.

487. "பொள்ளென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த்து
உள்வேர்ப்பர் ஒள்ளி யவர்."

ஆட்சியாளருள் அறிவொளி மிகுந்தவர் (ஒள்ளியவர்) ஏதாவது சந்தர்ப்பம் வாய்க்கும் போது, ஏற்ற செயலில்

இறங்கத் தக்க சமயமா அன்றா என எண்ணிப் பார்க்காமல் உடனே (பொள்ளென ஆங்கே) வெகுண்டெழுந்து போகார் (புறம் வேரார்). தக்க சமயம் வரும் வரை நெஞ்சு புழுங்கி நிற்பார். (காலம் பார்த்துள் வேர்ப்பர்). இம்மை மறுமை ஆட்சியாளர் அனைவருக்குமே இது பொருந்தும்.

488. ''செறுநரைக் காணின் சுமக்க இறுவரை
காணின் கிழக்காம் தலை.''

எதிரிகளை எதிர்த்து வெல்லும் விடயத்தில் சூழ்ச்சி யொன்று இக்குறளில் கூறப்படுகிறது. இது பெரும்பாலும் பொருளாட்சியர்க்கே பொருந்தும். அஃதாவது, எதிரிகளைக் கண்டவுடன் தாக்கியொழிக்க வேண்டுமென எண்ண வேண்டிய தில்லை. அவர்களைத் ''தலையிலே கொண்டாற் போலத் தாழ்ச்சி செய்து, பின்பு அவர் இகழ்ச்சியாலே தலையினின்று விழ விட்டாற் போல வினை செய்யலாம்'' (பரிப் பெருமாள் உரை). எதிர்க்கத் துணிவில்லாதது போல் வெளிப்படையாகத் தாழ்ச்சியைக் காட்டி, அவ்வெதிரிகளுக்கு இறுதிக் காலம் வரும் வரை தலையைத் தொங்க விடுவது போல் (கிழக்காம் தலை) நடிக்க என்றவாறு. இதுவே 'சூழ்ச்சி'.

அருளாட்சியில் இத்தகைய சூழ்ச்சிக்கு இடம் இருப்பதாகத் தோன்றவில்லை. ஆன்ம எதிரி யாராயிருந்தாலும் - உள்ளரங்கக் கெடுமதியாகிய எதிரியாயிருந்தாலும், வெளிப்படையான மாற்றான் (பேய்) ஆயினும் உடனே தாக்குதல் செய்ய வேண்டும். மனித உருவில் வரும் எதிரிகளை ஓரளவு ஏமாற்ற லாம். உள்ளரங்க எதிரியையோ பேயையோ அவ்வளவு எளிதாக ஏமாற்ற இயலாது. திடீரென நம் கெடுமதியே (பாவ நாட்டமே) நம்மை ஆட்டிப் படைத்து விடும். அங்ஙனமே பேயும் செய்து விடும். ஆகவே, அருள் உதவியைக் கொண்டே உடனே தாக்குதல் செய்வதே அருளாட்சியின் முறையாகும்.

489. ''எய்தற் கரியது இயைந்தக்கால் அந்நிலையே
செய்தற் கரிய செயல்.''

கிடைத்தற்கரிய (எய்தற்கரிய) வாய்ப்புக் கிடைக்கும் போது (இயைந்தக்கால்) - அஃதாவது, குறிப்பிட்டதொரு காரியத்தைச் செய்து முடிக்க எல்லாம் பொருந்தி வரும் போது, அவ்வாய்ப்

பிணை நழுவ விடாமல் (அந்நிலையே) செய்ய வேண்டியது கடினமாயினும் (செயதற்கரிய) செய்து முடிக்க முனைந்து நிற்பது பொருளாட்சி, அருளாட்சி எவர்க்கும் ஏற்றதாகும்.

490 ''கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து.''

'உறு மீன் வருமளவும் வாடியிருக்குமாம் கொக்கு' என்றதற்கு ஒப்ப, தனக்குத் தாயமாகிற வேளை வருமளவும் மடைவாயில் தூங்குவது போலக் காணப்படும் கொக்குப் போல (பரிதியார் உரை காண்க), செய்தக்க கருமத்திற்கு ஏற்ற நேரம் வருமளவும் ஒன்றும் செய்யாமல் காத்திருப்பது ஆட்சியாளர்க்கு நலன் பயக்குவதாகும்.

## காலமறிதல்
## சுருக்கம்

செயல் புரியத் தக்க காலத்தை அறிந்து செயலாற்றுதல்

481. ''பகல்வெல்லும் கூகையைக் காக்கை
இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது.''

காக்கை தன்னிலும் வலிமையுள்ள கோட்டானைப் பகல் நேரத்தில் வென்று விடும். அது போல பொருள் ஆட்சி - அருள் ஆட்சி செய்வோர் தக்க காலத்தில் செயல் புரிந்தால், எத்தகைய எதிர்ச் சக்திகளையும் வெல்லலாம்.

482. ''பருவத்தொடு ஒட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை ஆர்க்கும் கயிறு.''

ஒவ்வொன்றுக்கும் ஒரு காலம் உண்டு. அக்காலத்தைக் கணித்துச் செயல் புரிந்தால், அதுவே அருள் - பொருள் ஆகிய இருவிதச் செல்வத்தையும் பிணிக்கும் கயிறு போலாகும்.

483. ''அருவினை என்ப உளவோ கருவியான்
காலம் அறிந்து செயின்.''

அருள் ஆட்சி - பொருளாட்சி இவற்றிற்குத் தேவைப்படும் கருவிகளைப் பயன்படுத்தித் தக்க காலத்தில் செயல் புரிந்தால், செய்ய இயலாத காரியமே இராது.

அருளாட்சிக்கு அருளே முக்கியமான கருவி. இறைவன் அருள்வாக்கும் நல்ல கருவி. பொருளாட்சிக்கு, பொருளை ஈட்டவல்ல இம்மைச் சாதனங்கள், அரசியலில் அனைவரும் அறிந்தவை.

484. ''ஞாலம் கருதினுங் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின்.''

தக்க காலத்தையும், தக்க இடத்தையும் நன்கு கவனித்துச் செயல் புரிந்தால் உலகையே அடைய இயலும்.

இம்மைப் பொருளால் இல்லாவிடினும், அருட்பொருளால் சாதிக்க இயலாதது ஒன்றுமேயில்லை. உலகளவு பெரிதாயினும் சாதிக்க இயலும்.

485. ''காலம் கருதி இருப்பர் கலங்காது
ஞாலம் கருது பவர்.''

இத்தகைய அரிய கருமத்தைச் செய்து முடிக்கக் கருதுபவர் எதற்கும் கலங்காது, தக்க காலத்தை எதிர் நோக்கியிருப்பர். (அருளாட்சியில், போதிய அளவு இறையருளை வேண்டிய பின்னரே எச்செயலும் செய்ய முனையலாம்).

486. ''ஊக்க முடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.''

வலிவும் துணிவும் உடையவன் சில சமயங்களில் முனைந்து முன் செல்லாமல் இருப்பது, போரிடும் ஆட்டுக் கடா எதிரியைத் தாக்கு முன்னர் சற்றுப் பின்னே கால்வாங்கு வதற்கொப்பாகும்.

தக்க காலத்துக்காகக் காத்திருத்தல் சில சமயங்களில் முனைந்து செயலாற்ற உதவியாகக் கூடும். இம்மை மறுமைக்

குரிய செயல்கள் இரண்டிற்கும் இது பொது. அருள் வாழ்வுக்குச் சிறப்பாகப் பொருந்தும். செய்தற்கரியதொரு அருட் செயலைச் செய்ய வேண்டும்போது முன் பின் யோசித்துச் செய்தால் பயன் நிரம்பப் பெற வியலும்.

487. ''பொள்ளென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த்து
உள்வேர்ப்பர் ஒள்ளி யவர்.''

தீமை நிகழுங்கால் அறிவுடையவர் உடனே திடீரெனச் சினத்தை வெளிப்படுத்த மாட்டார். மனத்துள் எழும் சினத்தை உள்ளடக்கித் தக்க காலம் எதிர்பார்ப்பர்.

தீவினை என்னும் பாவத்தை (தீமையுள் தீமையானதை) எதிர்த்து வெல்வது அருட் செயல்களுள் முதன்மையானது. ஆனால், திடீரென்று அத்தீமையைத் தாக்கி வெல்ல இயலாது. அருள் ஒளி, அதன் வலிமையை எதிர்பார்த்துத் தம் மனோ வேகத்தை அடக்கி நிற்பர்.

488. ''செறுநரைக் காணின் சுமக்க இறுவரை
காணின் கிழக்காம் தலை.''

அழித்தற்குரிய தீயவரைக் (செறுநர்) காணில் பொறுத்துக் கொள்க. அத்தகையவர்க்கு இறுதிக்காலம் வந்தால், தாமே அழிவுறுவர். தமக்குத் தீமை செய்வோரை உடனே ஒறுக்க முனைந்திடல் வேண்டா. காலம் வரும் போது தாமே ஒறுக்கப் படுவர் - அழிவுறுவர். (பழிவாங்க விரும்ப வேண்டா - அதை இறைவனிடம் விட்டுவிடுங்கள் - என்பது விவிலியம்).

489. ''எய்தற் கரியது இயைந்தக்கால் அந்நிலையே
செய்தற் கரிய செயல்.''

நற்காரியங்களைச் சிறப்பாக இறை அருள் மிகத் தேவைப் படும் காரியங்களைச் செய்வதற்கு ஏற்ற காலம் நாள்தோறும் கிடைப்பதில்லை. எய்தற்கரியது அது. இறையருள் சிறப்பாக எந்நேரமும் கிடைப்பதன்று. அத்தகைய காலம் பொருந்தி வரும் போது தாமதமின்றிச் செய்தற்கரியன செய்து முடித்தல்

வேண்டும். (இத்தகைய காலத்தை விவிலியம் 'மீட்பின்' காலம் என்கிறது).

490. ''கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து.''

செயல் புரிய ஏற்ற காலம் வரும் வரை பொறுமையோடு (கொக்கு மீனைப் பிடிக்கக் காத்திருப்பது போல்) அடங்கி யிருத்தல் வேண்டும். சீரிய காலம் வந்ததும் கொக்கு மீனைக் குத்துவது போல் ஆர்த்தெழுந்து செயலைச் செய்து முடிக்க வேண்டும். இதுவுமதே.

# 50. இடனறிதல்

491. ''தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடம்கண்ட பின்அல் லது.''

எதிரிகளை எதிர்கொண்டு வெல்வதற்கு ஏற்ற இடம் கண்ட பின் அன்றி (இடங்கண்ட பின்னல்லது) எதிர்ப்புப்பணி எதையும் தொடங்க வேண்டா. (தொடங்கற்க எவ்வினையும்). இது எதிர்க்க வேண்டிய எதிரிகளை அவமதித்தல் ஆகாது(எள்ளற்க).

பொருளாட்சியர்க்கு இது சிறப்பாகப் பொருந்தும். அருளாட்சியர்க்கும் ஓரளவு பொருந்தும். உதாரணமாக, அமைதியான சூழ்நிலையுள்ள வீட்டில் அல்லது வேறோரிடத்தில் அருள் வாழ்வு உரைப்பதால் பயன் உண்டாகலாம். அதே அருளுரை சந்தடியும் சச்சரவும் கூச்சலும் உள்ள இடத்தில், அல்லது ஒருவன் தன் வேலைக்கென்று போன இடத்தில் பயன் தராமற் போகக் கூடும்.

492. ''முரண்சேர்ந்த மொய்ம்பின் அவர்க்கும் அரண்
சேர்ந்தாம்
ஆக்கம் பலவும் தரும்.''

எதிர்ப்பு மிகுந்த (முரண் சேர்ந்த) வலிமை படைத்தவர்க்கும் (மொய்ம்பினவர்க்கும்) பாதுகாப்பு மிக்க கோட்டைக் கொத்தளங்கள் (அரண் சேர்ந்தாம்) பல நற்பயன்களையும் வெற்றியையும் கூடத் (ஆக்கம் பலவும்) தரும்.

இக்குறளும் சிறப்பாகப் பொருளாட்சிக்குப் பொருந்தும். அருள் ஆட்சியிலும் பாதுகாப்பு மிக்க கோட்டைக் கொத்தளங்கள் உண்டு. ஆனால், அவை கல்லாலும் இரும்பாலும் ஆனவையல்ல. இறைவனும் அவனது அருள் வலிமையுமே அப்பாதுகாப்பு - அரண். (விவிலியத்தில் பன்முறை ''இறைவனே எனக்கு எதிர்க்க இயலாத கற்கோட்டை - அரண் - அசைக்க இயலாத கற்பாறை என வழங்கப்படுதல் காண்க).

493. "ஆற்றாரும் ஆற்றி அடுப இடன்அறிந்து
போற்றார்கண் போற்றிச் செயின்."

எவ்வரும் செயலையும் செய்ய ஆற்றல் இல்லாதவரும் (ஆற்றாரும்), தம்மைப் போற்றாராகிய எதிரிகள் மீது (போற்றார் கண்) தக்க இடம் இதுவே என்று நன்கறிந்து (இடனறிந்து போற்றி) செயல் புரிந்தால் (செயின்); அவ்வெதிரிகளை வென்று விடுவர் (அடுப).

494. "எண்ணியார் எண்ணம் இழப்பர் இடன்அறிந்து
துன்னியார் துன்னிச் செயின்."

தக்க இடம் அறிந்து (இடனறிந்து) செய்ய வேண்டியதைச் செய்யும் ஆட்சியாளர், தம்மை வெல்வதாக எண்ணி இறுமாந்திருந்த எதிரிகளும் அவ்வெண்ணத்தைக் கைவிடச் செய்வர்.

495. "நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற."

முதலைகள் ஆழ்ந்த நீர்நிலைகளில் வாழ்பவை. அந்த இடத்துக்குத் தமக்கு ஊறு செய்ய யார் வரினும், எது வரினும் அவ்வெதிரியை வென்று விடும். அத்தகைய நீர்நிலையை விட்டு வெளியே வந்துவிட்டால் எளிதில் தோல்வியுறும்-கொல்லப்படும். அருளாட்சியில் - அளவிட இயலாக் கடல் போன்ற இறைவனது அருளன்பில் நிலைத்து நிற்கும் வரை எந்த எதிரியும், எந்தத் தீய சக்தியும் ஆன்மாவை எதிர்த்து வெல்ல இயலாது. அவ்வருள் நீங்கினால் உடனே எளிதில் எல்லாத் தீவினைகளுக்கும் ஆளாக நேரிடும்.

496. "கடல்ஓடா கால்வல் நெடுந்தேர் கடல்ஓடும்
நாவாயும் ஓடா நிலத்து."

வலிய தேர்க்கால் (கால்வல்) உள்ள நெடுந்தேர் கடலில் ஓடவியலாது. அங்ஙனமே கடலில் செல்லும் நாவாய் தரை மீது ஓட இயலாது. ஆகவே, அவரவர் தம் நிலையும் அளவும் முற்றும் உணர்ந்து எச்செயலையும் செய்ய முனைதல் வேண்டும். இல்லையேல் எல்லாம் தோல்வியாக முடியும்.

497. "அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தான் செயின்."

பொருளாட்சியில் எதிரிகள், அருளாட்சியில் ஆன்மீக சக்திகள் யார்? எவை? எனத் தீர ஆய்ந்து, ஏற்படக்கூடிய குறைபாடுகளையும் நன்கு எண்ணித் (எஞ்சாமை எண்ணி) தக்க இடத்தையும் தேர்ந்தெடுத்த பின், செய்ய வேண்டியதைச் செய்ய முனையும் போது அஞ்சாமை என்பது ஒன்றே போதும். வேறு துணை தேவையில்லை.

பொருளாட்சியில் இந்த அஞ்சாமை வெற்றியும் தரலாம், தோல்வியும் தரலாம்.

அருள் ஆட்சியில் இறையருளோடு கூடியிருக்கும் வரை அச்சமே இருக்க வேண்டியதில்லை. வெற்றி நிச்சயம். "இறைவன் நம் சார்பாக இருந்தால் நமக்கெதிராய் யார் இருக்க இயலும்?" (உரோ: 8).

அங்ஙனமே இறைவனது அருட் சக்தியை நிரம்பப் பெற்றிருப்பவன் எதற்கும் யாருக்கும் அஞ்சாமல் செயலாற்றலாம். இறையருளே அஞ்சாமை என்னும் மனோநிலையை உளதாக்கும். அவன் அரணே துணை என்றால் அஞ்சாமையே துணை என்றவாறு. வேறு துணை வேண்டா.

498. "சிறுபடையான் செல்லிடம் சேரின் உறுபடையான்
ஊக்கம் அழிந்து விடும்."

ஆட்சியாளரிடம் சிறு படையே இருந்தாலும் செல்ல வேண்டிய இடம் சென்று, எதிரிகளை எதிர்த்தால் பெரும் படையுள்ள எதிரியின் திறம் அழிந்துவிடும். எனினும், பொருளாட்சியில் எப்போதுமே இங்ஙனம் நேரும் என்று சொல்வதற்கில்லை. தோல்வியும் நேரக் கூடும்.

அருளாட்சியில் அசைக்க இயலாத அரணாயுள்ள இறைவனிடம் அடைக்கலம் புகுந்த சிற்றறிவும் சிறிய மனோபலமும் வெற்றிக்கு வழி காட்டும்.

499. "சிறைநலனும் சீரும் இலர்எனினும் மாந்தர்
உறைநிலத்தொடு ஒட்டல் அரிது."

அரண் முதலான பாதுகாப்பு வசதிகளும், அரிய பெரிய ஆற்றலும் தம் எதிரிகளிடம் இல்லை எனினும், அவர்களை அவர்கள் உறையும் இடத்திற்கே சென்று தாக்குதல் (ஓட்டல்) அரிது. அஃதாவது, தாக்கி வெற்றி பெறுதல் அரிது.

அருளாட்சியில் ஆன்மீக எதிரிகளை, அஃதாவது, உள்ளத்தில் மறைந்து கொண்டிருக்கும் தீய நாட்டம், பேய் என்னும் எதிரிகளை அவைகள் உறையும் இடத்திற்கே சென்று தாக்கி வெற்றி பெறுதல் அரிது. அஃதாவது, தீய நாட்டத்தைத் தாக்கும் முறை நாமாக அன்று, இறையருளைத் துணையாகக் கொண்டே தாக்க இயலும் என்றவாறு. அங்ஙனமே பேய் உறையும் நிலம் நரகம் எனப்படும். எனினும் பேயுடன் போராட்டமும். அவனது தீய சக்தி பலவாறு மக்கள் உறையும் இடத்திலேயே நடைபெறுகிறது.

500. ''கால்ஆழ் களரின் நரிஅடும் கண்அஞ்சா
வேல்ஆள் முகத்த களிறு.''

வேல்களால் அடிபட்ட யானை ஆழ்ந்த சேற்று நிலத்தில் சிக்கிக் கொண்டால் சிறிய நரி முதலாய் அதற்குப் பெருந்துன்பம் இழைக்க இயலும்.

ஆண்மை, திறமை தமக்குண்டு எனச் செருக்குற்றுப் போகக் கூடாத இடத்திற்கு ஒருவர் போனால் ஆபத்துக்குள்ளாவர்.

இது யாருக்குமே பொருந்தும்; அருள் வாழ்வினர்க்குச் சிறப்பாகப் பொருந்தும். தன் பலத்தை நம்பி, இறையருளைக் கவனியாது, பாவத்துக்குரிய சூழ்நிலைக்குச் செல்பவர் தீவினைக்குத் தப்புவது அரிது. தவறு செய்யும் விடயத்தில் தன் சொந்தத் திறமையை எவரும் நம்பலாகாது. ஒரு சிறு தீய எண்ணம் பெரும் தீவினைக்கு ஆளாக்கிவிடக்கூடும். வாழ்க்கை அனுபவத்தில் பன்முறை காண்பது இது.

## இடனறிதல்

### சுருக்கம்

செயல்புரிவதற்குக் காலம் நேரத்தை மட்டுமன்று, இடத்தையும் கவனித்தல் வேண்டும். நற்செயல் புரிவதற்கு ஒரு தனிப்பட்ட இடம் வேண்டுமா? நற்செயல் எங்குமே செய்தற்குரியது

தானே, என வினா எழும். மெய்தான்; ஆனால், சில அருட் செயல்களைச் செய்து முடிப்பதற்குத் தக்க இடம் தேவைப்படும். (உதாரணம்: இறைவனை எங்கும் தியானிக்கலாம்; ஆனால், தனிமையான-சந்தடி சச்சரவு இல்லாத இடம் சிறப்பானது). இப்பகுதியில் இடன் என்பதற்கு 'வாய்ப்பு' என்னும் பொருள் கூறலாம்.

491. ''தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்அல் லது.''

**இம்மைப் பொருள் :**

பொருளாட்சியில் ஏற்படக் கூடிய எதிரிகளை முற்றும் தாக்கி வெல்லக்கூடிய வாய்ப்பைக் கண்ட பின்னரே எச்செயலையும் தொடங்குதல் வேண்டும்.

**மறுமைப் பொருள் :**

அருள் வாழ்வுக்கு எதிரிகளாய் உள்ள தீய சக்திகளை - சிறப்பாக அலகையைத் தாக்குவதற்குத் தக்க வாய்ப்புகளைப் பயன்படுத்துக. (விவிலியம் - எபேசி. 6:10-17). எதிர்க்கும் செயலைத் திடீரென்று தொடங்குதல் தவறு. மேலும் அருள் வாழ்வுக்கு எதிரியாய் உள்ளதன் வலிமையைச் சிறிதென்று இகழ்தல் துன்பத்துக்கு வழியாகலாம். ஆகவே, இவ்வருள் வாழ்வுப் போராட்டத்துக்கென அளித்துள்ள வாய்ப்புகளைப் பயன்படுத்தல் அவசியம். இவை மேற் கூறிய விவிலிய வாசகத்தில் காண்க.

492. ''முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும் அரண்சேர்ந்தாம்
ஆக்கம் பலவுந் தரும்.''

எதிரியைத் தாக்கக்கூடிய வலிமை படைத்தவர்க்கும், பாதுகாப்பளிக்கக் கூடிய சாதனங்கள் இருந்தால்தான் பயன் மிக விளையும்.

**மறுமைப் பொருள் :**

அருள் வாழ்வுக்கு எதிரிடையான தீய சக்திகளை எதிர்ப்பதற்கு ஓரளவு வலிமையிருந்தாலும், அருட் சாதனங்களின் ஆற்றல் மிக்க பாதுகாப்பு இருந்தால்-தான் வெற்றி முழுதும் உண்டாகும்.

493. ''ஆற்றாரும் ஆற்றி அடுப இடனறிந்து
போற்றார்கண் போற்றிச் செயின்.''

தம்மைப் போற்றாத பகைவர்களுக்கிருக்கக்கூடிய வாய்ப்புகளை நன்கறிந்தபின் செயல்புரிய முனைந்தால், வலிமை மிக இல்லாதவரும் வலிமையடைந்து எதிரிகளை வெல்வர்.

அருளுக்கு மாறான இருள் சக்திகளைத் தோற்கடிக்க, அருள் சக்தி வாய்ப்புகளைப் பயன்படுத்தினால் எளிதாக வெல்ல இயலும்.

494. ''எண்ணியார் எண்ணம் இழப்பர் இடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.''

செயல்புரிவதற்கு ஏற்ற வாய்ப்பை உணர்ந்து அதைப் பயன்படுத்தும் முறையை நன்கு ஆலோசித்துச் செயலில் இறங்கினால், தம் வலிமையைப் பெரிதாக எண்ணிய எதிரிகளும் தம் முயற்சியைக் கைவிடுவர். இம்மை மறுமை வாழ்வு இரண்டிற்கும் இது பொருந்தும்.

495. ''நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற.''

ஆழமுள்ள நீரில் வாழும் முதலை எதிரிகளை வெல்லும். நீரினின்று வெளியேறினால் எளிதில் வெல்லப்படும். இருக்க வேண்டிய இடத்தில் இருப்பின் செயலில் சித்தி பெற இயலும்.

இறையருளின் பெருக்கத்தில் வாழ்பவன் எந்த எதிரியாலும் தாக்குற இயலாது. அவ்வருள் இன்றேல் எளிதில் எவ்வெதிரியாலும் துன்பம் நிகழும்.

496. "கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்
நாவாயும் ஓடா நிலத்து."

வலிய உருளைகளுடைய பெரிய தேர்கள் கடலில் ஓட இயலாது. கடலில் ஓடக்கூடிய கப்பலும் தரையில் ஓடவியலாது. (முந்திய குறளின் கருத்தே இதுவும்).

497. "அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தாற் செயின்."

குறிப்பிட்ட காரியம் செய்யும் வழிவகைகளையெல்லாம் குறைவு படாத முறையில் எண்ணி, நல்வாய்ப்புகளைப் பயன் படுத்திக் கொண்டால், அச்செயல்களை வெற்றிகரமாகச் செய்து முடிக்க மனவுறுதி, துணிவு மட்டுமே வேண்டும். வேறு துணை தேவையில்லை.

அருள் வாழ்வில் அம்மனவுறுதியும் துணிவும் இறைவனிட மிருந்தே வருவதாகும்.

498. "சிறுபடையான் செல்லிடம் சேரின் உறுபடையான்
ஊக்கம் அழிந்து விடும்."

பெருவலிமை கொண்டவன் சிறு வலிமை கொண்டவனை வெல்ல நினைத்து, அதற்கு ஏற்ற வழிவகை வாய்ப்புகளைப் பயன்படுத்தினால், பெருவலிமை படைத்தவன் தன் பெருமை இழக்க நேரிடும்.

இறையருள் பெற்றவன் பார்வைக்குச் சிறுவலிமை படைத் தவனாகக் காணப்படலாம். ஆனால், அவ்வருளுக்கு எதிராக எவ் வலிமையும் வெல்லாது.

499. "சிறைநலனும் சீரும் இலரெனினும் மாந்தர்
உறைநிலத்தொடு ஒட்டல் அரிது."

எதிரிகள் தம்மைச் சிறைப்படுத்தக்கூடிய வலிமையும் பெருமையும் இல்லாதவராயினும், அவர்களை அவர்கள் உறை யும் இடத்திலேயே சென்று நேரடியாகத் தாக்கி வெல்வது எளிதன்று.

வலிமையற்றவர் என்றெண்ணி எதிரிகளைத் தாக்குவது இடர்ப்பாடுடையது. வாய்ப்பினைப் பயன்படுத்துவது அவசியம்.

அருள் வாழ்வின் எதிரிகளை நேரடியாகத் தாக்கி வெல்வதற்கு யாரிடமும் வலிமையில்லை. விழிப்புடனிருந்து, இறையருள் வலிமை வேண்டித் தக்க வாய்ப்பைப் பயன்படுத்தல் அவசியம்.

500. ''காலாழ் களரில் நரியடும் கண்ணஞ்சா
வேலாள் முகத்த களிறு.''

பாகனுக்கு அடங்காத வலிமை கொண்டதும், முகத்தில் வேல் தைக்கப் பெற்றதுமான மதயானை, ஆழ்ந்த சேற்றில் அகப்பட்டுக்கொண்டால், அதைச் சாதாரண நரிகள் கூட கொல்ல இயலும்.

தன் வலிமையை நம்பி வாழ்ந்தால் துன்பமே நேரும். அருள் வாழ்வில் இது மிகச் சிறப்பாக நிகழ்வது.

# 51. தெரிந்து தெளிதல்

முன்பு கூறப்பட்ட கருவி, காலம், இடம் மட்டுமன்று, அமைச்சர் முதலானோரையும் ஆட்சித் தலைமை வகிப் பவரையும் கலந்து நன்கு ஆலோசித்துச் செய்ய வேண்டியதைத் தெளிவாக அறிந்துகொண்ட பின்னரே செயலாற்றுதலாம்.

501. "அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கன்
திறந்தெறிந்து தேறப் படும்."

மனித வாழ்வின் இறுதிப் பயன் யாது என்பதனைத் தெளிவாகக் குறிப்பிடுகிறது இக்குறள். வீடு என்பதற்குப் பதிலாக 'உயிரச்சம்' கூறப்படுகிறது. இது மற்றைய மூன்றனுடன் பொருந்துவதாகத் தெரியவில்லை. இம்மை உயிர் மாட்டு அச்சம் கொள்வதென்றால், கருத்து வெளிப்படவில்லை. இம்மைக்குப் பின் உயிர் உண்டா? அதன் நிலை எதுவாயிருக்கும்? துன்பமானதாய் இருக்குமா? இன்பமானதாயிருக்குமா? என்னும் அச்சம் என்று பொருள் கொண்டால், ஓரளவு பொருந்தும். 'உயிரெச்சம்' என்னும் காலிங்கர் பாடம், இக்கருத்தைப் புலப் படுத்துவதாகத் தோன்றுகிறது. 'எச்சம்' என்னும் சொல்லை எஞ்சி நிற்பது, 'பின்னர் தொடர்வது' என்னும் பொருளில் கொண்டால், இம்மை உயிர் வாழ்வுக்குப் பின் தொடர்வது, எஞ்சி நிற்பது யாது? என்னும் பொருள் வெளிப்படுகிறது. இதைத்தான் 'வீடு' என்னும் சொல்லால் மேலோர் குறிப்பிடுவர். அறம், பொருள், இன்பம், வீடு இந்நான்கனையும் திருக்குறள் கூறுகின்றது என்பதுபற்றி வேறிடத்தில் விளக்கம் கூறியுள்ளது காண்க. "வடநூற் பொருண்மையை உட்கொண்டு இவர் ஓதியது அறியாது பிறரெல்லாம் இதனை 'உயிரெச்சம்' எனப் பாடம் திரித்துத் தத்தமக்குத் தோன்றியவாறே உரைத்தார்" என்னும் பரிமேலழகர் கூற்று, ஏற்றுக்கொள்ளத்தக்கதாகத் தோன்றவில்லை. வடநூற் பொருண்மையை உட்கொண்ட பரிமேலழகர் வேறு எவ்வாறு பொருள் கூறுவார்?

ஆகவே, இக்குறளுக்குக் காலிங்கர் கூறும் உரையே சிறப்பானதாகத் தெரிகிறது. அவர் உரை: ''மறை நூல் யாவற்றினும் சொன்ன அறம், பொருள், இன்பம், வீடு என வகுத்தன நால்வகையாகலின், அவற்றுள் அறமானது பாவம் அனைத்தையும் பற்று அறுப்பது என்றும், இருமை இன்பம் எய்துவிப்பது என்றும், அவற்றுள் பொருளானது, பலவகைத் தொழிலினும் பொருள் வருமேனும் தமக்கு அடுத்த தொழிலினாலாகிய பொருளே குற்றமற்ற நற்பொருள் என்றும் மற்றும் இனி இன்பமாவது கற்பின் திருந்திய பொற்புடையாட்டி இல்லறத் துணையும் இயல்புடை மக்களும் இருதலையானும் இயைந்த இன்பம் என்றும், மற்றும் இவற்றுள் உயர்ந்த வீடாவது, பேதைமையுற்ற பிறப்பு, இறப்பு என்னும் வஞ்சப் பெருவலைப் பட்டு மயங்காது நிலைபெற நிற்கும் வீடு இது என்றும், இங்ஙனம் இவை நான்கன் திறம் தெரிந்து'' ஆட்சி முறை அமைத்தல் வேண்டும்.

காலிங்கர் தரும் இவ்வுரையினின்று 'பொருட்பால்' பகுதியைச் சார்ந்த மிக முக்கிய கருத்துகள் தெளிவாகின்றன.

(1) 'பொருட் பால்' என்னும் இப்பகுதி வெறும் 'பொருளை' (அஃதாவது பொருட்பொருளை) மட்டும் தன்னுள் அடக்கவில்லை. அருட்பொருளையும் தன்னுள் அடக்கும். கூறப்புகுந்தால் அருட்பொருளை-அருளாட்சியையே சிறப்பாகக் கூறுகின்றது எனக் கொள்ளத் தடையில்லை.

பொருளாட்சியர்க்குப் பொருள் மட்டும் போதும் என்னாமல், அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கன் 'திறம் தெரிந்திருத்தல் வேண்டும்' என்கிறார்.

(2) இவற்றுள் அறமானது 'பாவம் அனைத்தையும் பற்று அறுப்பது' என்கிறார்-பாவப்பற்றை அறுப்பது சிறப்பாக அருள் வாழ்வைச் சார்ந்தது என்பது தெளிவு. பொருளாட்சியில் தண்டிக்கப்படக்கூடிய குற்றங்கள் பற்றியே பேச்சு உண்டு. 'உள்ளத்தால் உள்ளலும் தீதே' என்பதற்கு ஏற்ப தீவினை செய்ய நினைப்பதும் தவறே-பாவமே. இறைவன் பொருளாகிய

அருட்பொருளைப் புகழ் புரியாமல் வெறும் பொருட்பொருளையே பெரிதாக மதித்து வாழ்வது பொருளாட்சியில் நாம் காண்பது. ஆகவே, பாவப் பற்றினை அறுப்பதுபற்றி அழுத்தமாகக் கூறுவது அருள் ஆட்சி முறையேயாகும். ஆகவே, இக்கருத்தில் ஆசிரியர் மறுமை அருளாட்சியையே சிறப்பாக இக்குறளில் குறிப்பிடுகிறார் என்றே சொல்ல வேண்டியிருக்கிறது. பாவம், தீவினை, அச்சம் இவை பற்றிப் பொருளாட்சி பெரிதும் கவலைப்படுவதில்லை என்பது நாம் அறிந்ததே. அவற்றை ஒழிக்க வேண்டும். நினைவினாலுங்கூடப் பிறர்க்குத் தீங்கிழைக்கலாகாது. பாவமானது இறைவனையே அவமதிப்பதாகும் என்னும் போதனையை வலியுறுத்துவது அருள் ஆட்சியேயாம்

பொருளைப்பற்றிக் கூறும்போது காலிங்கர், 'தானே உழைத்து ஈட்டக்கூடிய பொருளே குற்றமற்ற நற்பொருள்' என்கிறார். இக்கருத்தை அழுத்தமாகக் கூறுவது அருள் ஆட்சியேயன்றிப் பொருளாட்சியன்று. பலவகைகளிலும், சில சமயங்களில் தீய வழிகளிலும் பொருள் ஈட்டுவதைப் பொருளாட்சியில் பெரும்பாலும் காண்கிறோம். ஆகவே, ஈண்டும் மறுமை ஆட்சிபற்றியே குறள் அழுத்தமாகக் கூறுகிறது என்பதில் தவறில்லை. இன்பம்பற்றிக் கூறும்போது காலிங்கர், 'இருமை இன்பம் எய்துவிப்பது' பற்றிக் கூறுகிறார். இவ்விருமை இன்பம் இம்மை இன்பமாகிய சிற்றின்பமும் மறுமை இன்பமாகிய பேரின்பமுமே என்பதில் சிறிதும் ஐயமில்லை. இவ்விரு இன்பம் எய்துவது என்னாமல், எய்துவிப்பது என்று கூறுவதும் கூர்ந்து நோக்கத்தக்கது. பொருளாட்சியாளர், மக்கள் இம்மை இன்பத்தை எய்துமாறு செயலாற்ற வேண்டும். அங்ஙனமே அருளாட்சியாளரும் செய்தல் வேண்டும். சமுதாய மக்கள் தாமாகவே தமக்கு வேண்டிய எல்லாம் சம்பாதித்துக் கொள்ள இயலாது. இதனாற்றான் ஆட்சி முறையே ஏற்பட்டது. தனி மனிதர் செய்யும் முயற்சியைவிடச் சமுதாயம் அனைத்தும் திரண்டு பொது நலனுக்காகச் செய்யும் முயற்சி எவ்வளவோ பயனுள்ளது; வலிவுள்ளது; ஏற்படும் பிரச்சினைகளைத் தீர்க்கக்கூடியது. அருளாட்சியிலும் அப்படியே. மக்கள் பேரின்பத்தை எய்துவிக்கவே அருளாட்சி நிறுவப்பட்டது என்றறிக. இவ்விருமை இன்பத்தைக் காலிங்கர் தெளிவாகக் கூறுவதைக் கவனித்தல் வேண்டும்.

'இல்லறத் துணையும் இயல்புடை மக்களும் இருதலை யானும் இயைந்து இன்பம்' என்று சிற்றின்பத்தைக் குறிப்பிட்ட தோடு நில்லாமல், மற்றும் இவற்றுள் உயர்ந்த வீடு பற்றிக் கூறுகிறார். அவ் வீடு என்பது என்ன என்னும் வினாவுக்கு, 'பேதைமையுற்ற பிறப்பு, இறப்பு என்னும் வஞ்சப் பெரு வலைப்பட்டு மயங்காது நிலைபெற நிற்பதே வீடு' என்கிறார்.

பிறப்பு இறப்புக் கொள்கை பேதைமையுற்றது-வஞ்சப் பெருவலை; அதில் மயங்கிவிடாமல் மாறி மாறி வந்துகொண் டிருக்கும் இப் பிறவிச் சுழற்சிக் கொள்கையை விடுத்து, நிலை பேறான (பேரின்ப) வீட்டினை எய்த வேண்டும். இதுவே இந்நாற்பொருளின் 'திறம் தெரிந்து தேறுதல்' ஆகும்.

ஆகவே, இக்குறள் மறுமையையே அதிகமாகச் சுட்டுகிறது என்க. பிறப்புக் கொள்கையும் இங்கில்லை காண்க.

502. "குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும்
நாண்உடையான் கட்டே தெளிவு."

'தெரிந்து தெளிதல்' என்பது எங்ஙனம் அல்லது யாரிடம் உளதாகும் என்பதைக் கூறுகின்றது இக்குறள்.

குடிப்பிறத்தல், குற்றத்தின் நீங்கி வாழ்தல், வடுப்பரியும் நாணுடையனாதல் ஆகிய இப்பண்புகள் உடையவனே மேற் கூறிய அறம், பொருள், இன்பம், வீட்டின் திறம் தெரிந்து தெளிவு பெறுவான்.

**குடிப்பிறத்தல்:** 'குடி' என்னும் சொல்லால் குறிக்கப்படும் கருத்து 'குடிமை' அதிகாரத்தில் விளக்கப்படும். குடிப் பிறந்தார் பண்புகள் பலவும் ஆங்கு விளக்கப்படுவது காண்க.

**குற்றத்தின் நீங்குதல்:-** ஆட்சியாளர், சிறப்பாக நீக்க வேண்டிய குற்றங்கள்- 'செருக்குஞ் சினமுஞ் சிறுமையும்'-(431); 'இவறலும், மாண்பிறந்த மானமும், மாணா உவகையும்' (432) முதலிய குற்றங்களினின்று நீங்கி வாழ்தல், ஆட்சி முறையில் தெளிவு பெறுவதற்கு இன்றியமையாதன. (இக்குற்றங்களின் விளக்கம் ஆங்குக் காண்க).

'வடுப்பரியும் நாண்'- ''நமக்கு வடு வரும் கொல் என்று அஞ்சா நிற்கும் நாண்'' (பரிமேலழகர்). ''குற்றம் வரின் அதனை விரைந்து அறுத்தற்கு அமைந்த மானம்'' (காலிங்கர்).

வடுப்பரியும்- வடு + பரியும். பரியும் - அறுக்கும்.

இக்குறளில் காணும் 'நாண்' என்பது வெறும் நாணம் அல்லது மானம் என்பதன்று. 'சான்றாண்மை' என்னும் சால்பின் ஐந்து தூண்களில் ஒன்றாகும். இதுபற்றிய விளக்கம் அவ்வதிகாரத்தில் காண்க.

503. ''அரியகற்று ஆசுஅற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு.''

அரிய கற்று - இவ்வுலகத்துப் பலராலும் கற்றற்கு அரியனவாகிய திருந்திய நூல்களை நிறையக் கற்று (காலிங்கர்).

ஆசற்றார் கண்ணும் - (நிறையக் கற்று மற்று) 'அதனானே இருமைக் குற்றமும் நீங்கினார்மாட்டும் (காலிங்கர்).

**தெரியுங்கால்** - 'நுண்ணிதாக ஆராயுமிடத்து' - கற்றதெல்லாம் மனத்து நிலையாமையால் ஒரோவழி (பரிமேலழகர் உரை காண்க),

வெளிறு இன்மை அரிதே - வெண்மை இல்லாமை அரிதே (வெண்மை- அறியாமை).

அரிய திருந்திய நூல்களையெல்லாம் நிறையக் கற்று இம்மை மறுமைக் குற்றங்களால் மாசுறாமல் தங்களைக் காத்துக்கொள்பவரிடமும் ஓரளவு அறியாமை இருந்தே தீரும். அறியாமை சிறிதும் கலப்பற்ற அறிவு கொண்டவன்-அறிவே வடிவினனான - வாலறிவன் - இறைவன் மட்டுமேயாம். மேலெழுந்தவாரியாக நோக்குவோர்க்கு இத்தகையவர் அறிவு நிரம்பியவர்களாகக் காட்சியளிப்பர். ஆனால், நுணுகி ஆராயும் போது அறியாமை சிறிதேனும் புலப்படும். ஆகவே, தாம் கற்ற கல்வியால் எல்லாத் தெளிவும் பெற்றுவிட்டோம் என்று எண்ணாமல், 'நமக்கு வடு வருங்கொல்' என்று அஞ்சுதலே

முறை. அவர்க்கே உண்மை மனத் தெளிவு உண்டாகும் வாலறிவனாகிய இறைவன் நற்றாள் தொழுவதாலேயே அத்தெளிவு நிறைவு பெறும் என்றவாறு.

இக்குறளுக்கு உரை கூறுமிடத்துக் காலிங்கர் வெறும் 'குற்றம்' என்று மட்டும் கூறாது 'இம்மை மறுமையை மனத்தில் கொண்டு இருமைக் குற்றமும்' என்று கூறியது நன்கு கவனித்தற்குரியது. இப்பொருட்பால் பகுதியில் இம்மைப் பொருளாட்சி மட்டுமே அன்று, மறுமை அருளாட்சியும் கூறப் படுகிறது என்பதற்கு இது மேலும் ஒரு சான்று. பன்முறை அவர் உரை 'இருமை'யைக் குறிப்பிடுவது காண்க. (501-ஆம் குறளிலும் காண்க).

504. ''குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்.''

மேற் குறளில் கூறியவாறு, எவ்வளவுதான் நூல்களைக் கற்று அறிவுடையவராயினும், சில குறைகள், குற்றங்கள் இல்லாமல் இரா. ஆகவே, ஒருவனுடைய குணங்களையும் குறைகளையும் நன்கு ஆய்ந்தறிந்த பின் யாரிடத்தில் நற்குணங்கள் அதிகமாக உள்ளனவோ, யாரிடத்தில் குறை பாடுகள் மிகக் குறைவாக உள்ளனவோ அவர்களையே ஆட்சியாளர் தமக்குத் துணையாகத் தேர்ந்தெடுக்கக் கடவர்.

எக்குறையுமில்லாதவரையோ எல்லா நற்குணங்களும் உள்ள வரையோ எதிர்பார்த்துக்கொண்டிருந்தால் ஆட்சி முறை நடை பெறுவதே இயலாததாகிவிடும்.

505. ''பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்.''

எத்தனை குறைபாடுகள் இருப்பினும், நற்குணங்கள் இருப்பினும் அவரவர் காலம், இடம் முதலியன கணித்துச் செய்ய வேண்டிய பணியை எத்துணை தகுதியுடன் செய்கிறார்களோ அதுவே அவர்களுடைய பெருமைக்கும் சிறுமைக்கும் சான்றாகும். குணமுள்ளவர் சிலர் குறிப்பிட்ட பணியைச் செவ்வனே செய்து முடிக்கத் தகுதியற்றவராயிருப்பதுண்டு. அறிவில், செயல் முறையில் குறைபாடுகள் சில உள்ளவர்கள்

சில சமயங்களில் காரியத்தை நல்ல முறையில் செய்யத் தகுதி படைத்தவர்களாயிருப்பதுண்டு. ஆகவே, எந்நிலையிலும் இத்தகுதியையே கணித்துப் பார்த்தல் அவசியம். அவர்கள் பெருமைக்கோ சிறுமைக்கோ தகுதிக்கோ தகுதியின்மைக்கோ அதுவே உரை கல் என்க.

506. "அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்றுஅவர்
பற்றுஇலர் நாணார் பழி."

இக்குறளில் 'ஓம்புக' என்னும் சொல்லுக்கு 'ஒழிக, தவிர்க, நம்பாதே' என உரையாளர் கூறுவர். இப்பொருள் 'விருந் தோம்பல்', 'உயிரினும் ஓம்பப்படும்' முதலிய குறட்பாக்களில் உள்ள பொருளுக்கு நேர் எதிராக உள்ளது. ஓம்புக என்னும் சொல்லுக்கு எதிரிடையான பொருள் இங்குக் கூறப்படுவதால், இக்குறளில் எப்பொருள் பொருத்தம் எனக் கண்டறிதல் வேண்டும். இது 'அற்றாரை' என்னும் சொல்லுக்குத் தரப் படும் பொருளைப் பொறுத்துள்ளது. 'அற்றார்' என்னும் சொல் லுக்கு முன் தொக்கிநிற்பது என்ன? 'சுற்றம்' என்பர் பரிமேலழகர். 'ஒழுக்கம்' என்பர் மணக்குடவர். 'பொருளும் கிளையும் கல்வியும்' என்பர் பரிதியார். 'நண்பும் நயமும்' என்பர் காலிங்கர். ஆனால், குறளின் அமைப்பை நன்கு கூர்ந்து நோக்குங்கால் 'பற்று' என்னும் சொல்லே பொருத்தமாகத் தோன்றுகிறது.

'பற்றற்றாரைத்தேறுதல் ஓம்புக' எனக் கொண்டு, 'ஓம்புக' என்னும் சொல்லுக்கு உயிரினும் மேலாக மதிக்க என்று பொருள் கொள்வோமாயின், பொருட் பொருளர், வேண்டுபவர், வேண் டாதவர், வலியோர், எளியோர் என்றெல்லாம் பாகுபடுத்தித் 'தேறுதல்' செய்யும் ஆட்சியாளரது ஆட்சி முறை செவ்வனே நடைபெறாது. (இதற்கு இன்று அரசியலில் காணும் குழப்பமும் ஊழலுமே போதிய சான்றாகும்). மேற்சொன்ன தகுதி யொன்றையே கணித்துத் தேறுதலை ஓம்புதல் வேண்டும். ஏனெனில், இத்தகையோர் 'மற்றுப் பற்றிலர்' தகுதியொன்றைத் தவிர வேறெதனையும், வேறு யாரையும் பற்றுடன் நோக்கார். ஆகவே, 'நாணார் பழி' — பழி நேரக்கூடும் என்று அஞ்ச வேண்டியதேயில்லை.

பொருளாட்சியிலும் அருளாட்சியிலும் இப்பண்பு எத்துணை இன்றியமையாதது என்பது எளிதில் புலப்படும். இது இன்மை

யால் இரு வகை ஆட்சியிலும் எத்துணை குறைபாடுகள் நேர்ந்தன - நேர்ந்து வருகின்றன என்பதற்கு வரலாறே சான்று கூறும்.

507. "காதன்மை கந்தா அறிவுஅறியார்த் தேறுதல்
பேதைமை எல்லாம் தரும்."

காதன்மை - காதல் + மை. ஆண், பெண் காதல் என்னும் பொருளில் அன்று. பொதுவாக அன்புடைமை, பற்றுடைமை என்னும் பொருளில் ஆளப்பட்டது. தகுதியைக் கவனியாது, பற்றுடைமையை மட்டுமே எண்ணித் தேவையான அறிவில்லாதவரைத் தேறுதல் எல்லாவிதக் குறைபாடுகளுக்கும் (பேதைமை - மடமை) வழியாகும்.

508. "தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும்."

ஆட்சியாளர், நன்கு ஆய்ந்து அறிந்து தேர்ந்து கொள்ளாமல் ஒருவன் மீது நம்பிக்கை வைத்தல் ஆட்சி முறையில் பல துன்பங்களுக்கு வழியாகும்.

509. "தேறற்க யாரையும் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள்."

நன்கு ஆய்ந்து அறியாது யாரையும் தேர்ந்து கொள்ளலாகாது. தேர்ந்த பின் ஆட்சி முறையில் எப்பணிக்கு, எப்பொருளாட்சிப் பகுதிக்குத் தக்கவரெனத் தெளிந்து செயற்படுக.

510. "தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்."

ஆட்சியாளர், நன்கு ஆய்ந்து அறிந்து தேர்ந்து கொள்ளாது ஒருவர் மீது முழு நம்பிக்கை வைத்தலும், ஆய்ந்து அறிந்து தேர்ந்து கொண்டவர் மீது ஐயமுறுதலும் ஆட்சி முறையில் பல தொல்லைகளுக்கு வழியாகும்.

# தெரிந்து தெளிதல்

## சுருக்கம்

பொருள் ஆட்சி, அருள் ஆட்சி முறைகளில் எளிதாக அறிய வேண்டியதை அறிந்து செயல்படுதல்.

501. ''அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கன்
திறந்தெரிந்து தேறப் படும்.''

'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்' என்பதையும் அருட் பொருள், பொருட் பொருள் என்னும் பொருளின் கூறு பாட்டினையும், சிற்றின்பம், பேரின்பம் என்னும் இன்பத்தின் கூறுபாட்டினையும் தெளியக் கண்டுணர்ந்தவர் - கடமை செய்வதில் உயிருக்கு முதலாய் அஞ்சாதவர் - இத்தகையோரே ஆட்சி செய்வதற்கு ஏற்றவர்கள். அத்தகையவரே ஆட்சிப் பொறுப்பு ஏற்பதற்குத் தகுதியுள்ளவர்கள்.

அருள் ஆட்சிக்கு இத்தகைய தேர்ந்து தெளிதல் இன்றி யமையாதது. ஏனெனில் அறம், அருட்பொருள், பேரின்ப மாகிய வீடு இவை அருள் ஆட்சி சார்ந்தவை. அருள் ஒளியால் மட்டுமே தேர்ந்து தெளியக் கூடியவை.

502. ''குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும்
நாணுடையான் கட்டே தெளிவு.''

மேற்கூறிய தெளிவு யாரிடம் இருத்தற் கூடும் எனின், வாய்மைக்குடியில் (குறள் 953 காண்க) பிறந்து, மனத்துக்கண் மாசகற்றி, நிகழக்கூடிய குற்றத்தைக் (வடு) களைந்தெறியக் கூடிய (பரியும்) வகையில் சான்றாண்மைத் தூண்களுள் ஒன்றாகிய நாண் என்னும் ஆண்மைப்பண்பு கொண்டவனிடமே என்க.

503. ''அரியகற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு.''

அரிய நூல்களைக் கற்றுக் குற்றமறத் தம்மைத் காத்துக் கொள்பவரிடத்தும், நன்கு கவனித்துப் பார்த்தால், அறியாமை சிறிதும் இல்லாத நிலைமை இராது.

எத்தகைய நல்லோர், அறிஞர் இடத்தும் சிறிது அறியாமைக் குற்றமுடைமை இருந்தே தீரும். இறைவன் ஒருவனே எக் குறையுமில்லாதவன் - அறிவின் வடிவினன். ஆகவே, எல்லாம் தெரியும் என்று ஆணவம் கொண்டு, எச்செயலையும் செய்ய முனைந்து நிற்றலாகாது.

504. "குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்."

அருள் வாழ்வில் இது மிகமிகத் தேவை. செய்யப்புகும் காரியத்தின்கண் உள்ள குணமும் குற்றமும் ஆய்ந்து பார்த்து, எதில் குணங்கள் அதிகமாக உள்ளனவோ அதையே தேர்ந்து கொள்ளுதல் வேண்டும். பொருள் ஆட்சியில் ஆட்சி செய்வோரிடமும், செயல்களிலும் இங்ஙனம் குணங்களும் குற்றங்களும் கலந்தேயிருக்கும். அருள் ஆட்சியில் ஆட்சி செய்வோரிடத்தும் குணங்களும் குற்றங்களும் கலந்திருக்கும் - அருட் செயல்களில் இறையருள் மிகுந்தால் இத்தகைய கலப்பிராது.

505. "பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்."

இருவகை ஆட்சியிலும் ஒருவன் அடையக்கூடிய பெருமைக்கும் சிறுமைக்கும் அவரவர் செய்யும் செயல்களே உரைகல். ('கனியிலிருந்து மரத்தை அறிவோம்' என்பது விவிலியம். கனி - செயல்; மரம் - செய்வோன்).

506. "அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி.

பொருளாட்சியிலும், சிறப்பாக அருளாட்சியிலும் அறம், அன்பு, நாண், ஒழுக்கம் முதலிய பண்புகள் இல்லாதவரைத் தெரிந்து தெளிதல் வேண்டா. இத்தகையோர் எப்பழிக்கும் அஞ்சார்.

507. "காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாம் தரும்."

சான்றாண்மைத் தூண்களுள் முதன்மையான அன்பைப் பற்றுக் கோடாகக் கொண்டு, அறியவேண்டியதை அறியாதவரைத் தெரிந்து தெளிதல் பேதைமை; பேதைமை யானவற்றுக்கு எல்லாம் இது வழியாகும்.

அறிவு மட்டும் போதாது; அருளாட்சிக்குச் சிறப்பாக அன்பும் இருத்தல் வேண்டும்.

508. ''தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும்.''

நன்கு ஆராயாமல் பிறனைத் தான் பின்பற்றும் (சான்றாண்மை) வழிமுறையைச் சேர்ந்தவன் என முடிவு செய்தவனுக்குத் தீராத துன்பம் விளையும். (சான்றாண்மை தவறி வேறுவழியில் செல்லத் தூண்டுதல் ஏற்படலாமாகலான்).

509. ''தேறற்க யாரையும் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள்.''

யாரைப்பற்றியும் நன்கு ஆராயாமல் ஒரு முடிவு செய்தலாகாது. ஆராய்ந்த பின்னர் அன்னார் நன்கு தெளிந்து முடிவு செய்த (அருள் பொருள் ஆகிய) பொருளை ஐயுறாது ஏற்க.

510. ''தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்.''

நன்கு ஆராயாது ஒருவரைத் தெளிதலும், ஆராய்ந்த பின் தெளியப்பட்டவர் மீது ஐயுறுதலும் தீராத துன்பம் தரும்.

# 52. தெரிந்து வினையாடல்

மேற் கூறியவாறு தேர்ந்து தெளியப்பட்டாரை அவரவர் செய்ய வல்ல செயல்களை அறிந்து அவற்றின் கண்ணே ஆகும் திறமை. (பரிமேலழர்).

511. ''நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
தன்மையான் ஆளப் படும்.''

பொருளாட்சியிலும் சரி, அருளாட்சியிலும் சரி, தலைமை வகிப்பவர், தமக்குத் துணையாயிருக்கத் தக்கவரைத் தேர்ந் தெடுக்கும் முறையை இக்குறள் கூறுகிறது. அன்னாரை அழைத்து, ''செய்ய வேண்டிய சிறப்பானதொரு காரியம் உண்டு. அதை நீர் செய்து முடிக்க வேண்டும்'' என்கிறார் தலைவர். தேர்ந்து கொள்ளப்பட்டவர், அக்காரியம் நல்லதோ தீயதோ, எத்துணை நன்மை பயக்கும்? ஒருவேளை தீமையும் பயக்கலாம்; எங்ஙனம் செயல் புரிந்தால் தீய விளைவைத் தடுக்க லாம் என்றெல்லாம் ஆய்ந்து பார்த்து, நன்மையானதையே (தீய விளைவு எதுவும் நேராதவாறு) செய்து முடிப்பானாயின், அவனே ஆட்சி முறைக்கு ஏற்றவன் எனத் தெர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

512. ''வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை
ஆராய்வான் செய்க வினை.''

பொருளாட்சியினர், பொருள் வரும் வாயில்களைப் பெருகச் செய்தல் வேண்டும். அப்பொருளை மேலும் வளம்படச் செய்தல் வேண்டும். இந்த முயற்சிகளில் இடையூறுகள் வந்துற்றால், அவற்றை நீக்குவதற்குத் தேவையான வழி வகைகளை ஆராய்ந்து செயல் ஆற்றுதல் வேண்டும்.

அருளாட்சியிலோ 'புயல் என்னும் வாரி' அஃதாவது இறை வனது வானருட் சக்தி வளங்குன்றாமல் பார்த்துக்கொள்வது, அருள் ஆட்சியினர் பொறுப்பு. இவ் 'வாரி குன்றிக்கால்' அருளாட்சியில் உழைக்க வேண்டியவர் தக்க முறையில் உழைக்க

இயலாதவராகிவிடுவர். அருளாட்சிக்கு இவ்வருட் சக்தியே இன்றியமையாத அடிப்படை. இது குன்றினால் அருளாட்சியே இல்லாதொழியும்.

513. ''அன்புஅறிவு தேற்றம் அவாஇன்மை இந்நான்கும்
நன்குஉடையான் கட்டே தெளிவு.''

'அன்பின் வழியது உயிர் நிலை' யாதலான், பொருளாட்சி யிலும் அருளாட்சியிலும் அன்பு இன்றியமையாதது. 'ஆர்வலர் புன் கணீர்' துடைக்கவும், 'அறத்திற்கு அன்பு சார்பு' என்றிருப்பதாலும், சமுதாய வாழ்க்கையில் மக்களுக்கு இம்மை மறுமை நன்மை புரிய அன்பு இன்றியமையாதது.

அருள் ஆட்சியிலோ இவ்வன்பு இன்னும் மிகத் தேவைப் படும். பொருளாட்சியில் ஏதோ இயன்ற அளவு நன்மை செய்வது போதும். அருளாட்சியிலோ 'என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் அடிப்படையில் பணியாற்றுதல் வேண்டும். இந்த அடிப்படையில்தான் இறைவன் தம் அருளன்பை எண்பித்து அன்பின் ஆட்சியை நிறுவினான். ஆகவே, அத்தகைய அன்பு இன்றி அருளாட்சி நடைபெறாது.

அன்புடன் அறிவும் தேவை. ஆட்சியாளர்க்குப் பொதுவாக அறிவு மிகத்தேவை. பொருளாட்சியர்க்கு இம்மை ஞானம் போதுமாயிருக்கலாம். அருளாட்சியிலோ மறுமை அறிவாகிய இறை ஞானம் இன்றியமையாதது.

**தேற்றமும்** வேண்டப்படும். அன்பும் அறிவும் இருந்தாலும் செய்ய வேண்டிய காரியத்தைத் தயங்காமல் செய்ய மனவலிமை வேண்டும். இது அருளாட்சியில் சிறப்பாக வேண்டப்படும். ஏனெனில், அவ்வாட்சியில் எதிரிகள் மிக வலிமை படைத்த வர்கள். அவர்களை எதிர் கொண்டு செயல் முடிக்க இறை யருள் சக்தி ஒன்றால் மட்டுமே இயலும்.

**அவாவின்மை** - பொருளாட்சியில் கைப்பொருள் மீது அளவு கடந்த அவா ஏற்படும். தகாத முறையில் அதை ஈட்ட விருப்பம் ஏற்படும். இதை வெல்லுதல் அவசியம். இல்லையேல் பொருளாட்சியில் ஊழல் மட்டுமே தலை தூக்கும்.

'என்பும் உரியர் பிறாக்கு' என்பது அருளாட்சியின் அடிப் படையாதலால், அவா என்பது அக்கொள்கைக்கு நேர் மாறான தாகும். இத்தகைய அவா இருப்பின் அருளாட்சிக்குப் பெரும் கெடுதி உண்டாகும்.

இந்நான்கு பண்புகளையும் கொண்டவனே ஆட்சி முறையில் தெளிவு பெற்றவனாவான்.

514. ''எனைவகையான் தேறியக் கண்ணும் வினைவகை யான்

வேறாகும் மாந்தர் பலர்.''

எல்லா வகையானும் மேற்கூறியவாறு தெளிவு பெற்ற பின்னரும், பலர் செய்ய வேண்டியதைச் செய்ய முற்படும்போது வேறு வகையில் செயல்படுவதுண்டு. அறிவுத் தெளிவும், செயல் முறையும் ஒன்றன்று என்பது கருத்து. ஆகவே, ஆட்சி யாளர் ஆட்சி முறைக்குத் தேவைப்படுவோரைத் தேர்ந் தெடுக்கும்போது இரண்டனையும் ஒருங்கே அமையப் பெற்ற வரையே தேர்ந்தெடுத்தல் வேண்டும் என்றவாறு-அஃதாவது இயன்ற மட்டும் இவ்வழியைக் கடைப்பிடித்தல் வேண்டும். எப்போதும் இவ்விரு பண்புகளும் ஒருங்கே அமைந்திருப்ப தில்லை.

515. ''அறிந்துஆற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான்

சிறந்தான்என்று ஏவற்பாற்று அன்று.''

செய்ய வேண்டிய கருமத்தைச் செய்து முடிக்கத் தேவை யான அறிவும் ஆற்றலும் படைத்தவர்க்கேயன்றி, தம் மதிப்பைப் பெற்றவர், தம் நினைவுப்படிச் சிறந்தவர் என்பதற்காக ஆட்சிப் பொறுப்புள்ள எதனையும் ஒப்படைத்தலாகாது.

516. ''செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு
எய்த உணர்ந்து செயல்.''

குறிப்பிட்ட கருமத்தைச் செய்யத் தேர்ந்து கொள்ளப்பட்ட வனது தகுதியையும் அறிவாற்றலையும் ஆய்ந்த பின்னர், செய்ய வேண்டிய கருமத்திற்கு ஏற்ற தகுதியும் அறிவாற்றலும் போதிய

அளவு உண்டா என்பதையும் ஆய்ந்து, அதனை செய்து முடிக்க ஏற்ற காலந்தானா என்பதையும் எண்ணிப் பார்த்து, பிறகுதான் கருமத்தைச் செய்ய முற்பட வேண்டும்.

517. "இதனை இதனால் இவன்முடிக்கும் என்றுஆய்ந்து
அதனை அவன்கண் விடல்."

இன்ன காரியத்தை, இன்ன கருவியைப் பயன்படுத்தித் தேர்ந்து கொள்ளப்பெற்ற இவன் செய்து முடிப்பான் என்று ஆய்ந்தறிந்த பின்னர் அதனை, அவனிடம் ஒப்படைத்தல் ஆட்சி முறைக்கு ஏற்றதாம்.

518. "வினைக்குரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரியன் ஆகச் செயல்."

ஆட்சி முறையில் குறிப்பிட்ட காரியத்தைச் செய்து முடிக்க எவ்வகையிலும் தகுதி படைத்த ஆட்கள் எப்போதும் கிடைக்காமலிருக்கலாம். அந்நிலையில் ஆட்சியாளர் செய்ய வேண்டியது என்னவெனில், எவ்வளவு தகுதி படைத்தவன் உள்ளானோ அவனைத் தேர்ந்தெடுத்து, அவனுக்கு அந்நிலையில் தேவையான பயிற்சியளித்து அவனைக் குறிப்பிட்ட பணிக்குத் தகுதியுள்ளவனாக்குவதே முறை என்க.

519. "வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்கும் திரு."

தக்க முறையில் தேர்ந்து கொள்ளப்பட்ட ஒருவன், ஆட்சி முறையில் கூறுபாடுகளை நன்கறிந்து, தான் மேற்கொண்ட காரியத்தில் அல்லது திட்டத்தில் கண்ணும் கருத்துமாய் இருந்தாலும், அவனது செயல்களைத் தவறாகப் புரிந்துகொள்ளக் கூடிய ஆட்சியாளர் உண்டு. ஆட்சித் தலைவர்களே அவனது கேண்மையைப் பாராட்டுதற்கு மாறாகக் குறை கூறக்கூடும். அங்ஙனம் நிகழும்போது ஆட்சி முறை கேடுறும். பொருள் திருவும் நீங்கும்; அருள் திருவும் நீங்கும்.

எடுத்த காரியத்தை ஒருவர் சீர்படச் செய்யும்போது, ஆட்சியாளர்க்கோ ஆட்சித் தலைவர்க்கோ ஒரு விதப் பொறாமை மனப்பான்மை அல்லது வெறுப்பு மனப்பான்மை எழுவது காண்

கிறோம். சுய நலத்தின் காரணமாக இது எழலாம். வேறு காரணத்தாலும் எழக் கூடும். எக்காரணத்தால் அது நிகழ்ந் தாலும் அதனால் ஆட்சி முறைக்குக் கேடு நிகழ்ந்தே தீரும்.

520. ''நாடோறும் நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடாது உலகு.''

ஆட்சியாளர், செய்ய வேண்டிய பணியை, நீதி நேர்மை யுடனும், 'ஒரு பால் கோடாமலும்' நிறைவேற்றுவாராயின், மக்கள் உலகும் (நாடும்) நீதிநேர்மையுடன் விளங்கும். ஆகவே, ஆட்சித் தலைமை பொறுப்பேற்றுள்ளவர் நியமிக்கப்பட்ட ஆட்கள் எங்ஙனம் செயல்புரிகின்றனர் என நாள்தோறும் விழிப் பாயிருத்தல் வேண்டும்.

இம்மை, மறுமையாகிய இருவகை ஆட்சிக்கும் இது மிகப் பொருந்தும்.

## தெரிந்து வினையாடல்

### சுருக்கம்

தெரிந்து தெளிந்தவரை அவரவர் தகுதிக்கு ஏற்றவாறு அருளாட்சி, பொருளாட்சிக்குத் தேவைப்படும் செயல்புரிய ஏற்படுத்தல்.

511. ''நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
தன்மையான் ஆளப் படும்.''

நன்மை தீமை எது என்று நன்கு ஆய்ந்து, நன்மை செய்யும் இயல்புடையவனே எவ்வாட்சி முறைக்கும் தகுதி யுள்ளவன் என்பதை அறிந்து அத்தகையவனையே அமர்த்தல் வேண்டும்.

512. ''வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை
ஆராய்வான் செய்க வினை.''

பொருட் பொருளும், 'புயல் என்னும் வாரியாகிய' அருள் பொருளும் பெருகும் வழிவகைகளை ஆய்ந்து, இவ்விருபொருள் வளத்தை உண்டாக்கி, இவற்றிற்கு ஏற்படக்கூடிய இடையூறு

களையும் ஆராய்ந்து நீக்க வல்லவரே பொருளாட்சி, அருளாட்சி இரண்டிற்கும் ஏற்றவர்.

513. "அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு."

அன்பு, அறிவு, எதையும் ஆய்ந்து துணிதல், அளவுமீறிய அவா இன்மை இந்நான்கிலும் சிறந்தோங்குபவரே ஆட்சி முறைபற்றிய தெளிவினைப் பெறுவர்.

514. "எனைவகையான் தேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகும் மாந்தர் பலர்."

மேற் சொன்ன தெளிவினைப் பல் வகையாலும் ஆய்ந்து பெற்றாலும், செயல் புரிய முனையும்போது தெளிவு பெறாதவர் போல் உள்ள மக்கள் பலரைக் காண்கிறோம். இருவகை ஆட்சியிலும் இந்நிலை உள்ளது.

515. "அறிந்தாற்றிச் செயகிற்பாற்கு அல்லால் வினைதான்
சிறந்தானென்று ஏவற்பாற் றன்று."

செய்ய வேண்டியதைச் செய்யும் முறையறிந்து செய்ய முற்படும்போது வரக்கூடிய இடையூறுகளைத் தாங்கிச் செய்பவனையன்றி வேறு எவரையும் குறிப்பிட்ட பணிக்குச் சிறந்தவன் எனக் கருதி அமர்த்தலாகாது.

516. "செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு
எய்த உணர்ந்து செயல்."

செய்ய வேண்டியதை நன்கு செய்து முடிக்கக் கூடியவனை ஆய்ந்து பார்த்து, செய்ய வேண்டிய தொழிலின் தன்மையையும் அதற்கேற்ற காலத்தையும் ஆய்ந்து பார்த்தபின்னரே செயலாளரை அமர்த்த வேண்டும்.

517. "இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்."

குறிப்பிட்ட செயலை, எற்ற கருவி (பொருள், துணை)யைக் கொண்டு செய்யக்கூடியவன் இவன் என்று ஆய்ந்து அச் செயலை அவன் செய்யும்படி விடுதல் வேண்டும்.

518. ''வினைக்குரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரிய னாகச் செயல்.''

குறிப்பிட்ட தொழிலைச் செய்வதற்கு உரியவன் இவனே என ஆய்ந்து, அவனை அத்தொழில் செய்தற்குரியவனாக்க வேண்டும்.

519. ''வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்கும் திரு.''

தான் செய்ய வேண்டிய தொழிலின் மீது முழுக்கவனத்தை யும் செலுத்துபவனது உறவைத் தவறாக எண்ணினால், அவனிடம் பொருட் செல்வமோ அருட்செல்வமோ நிலைக்காது.

520. ''நாடோறும் நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.''

ஆட்சி புரியும் தொழில் செய்வோர் தம் தொழிலை நாள்தோறும் ஆராயக் கடவர். அப்போது நெறிதவறார். அரசினர் நெறிதவறாவிடில் உலகத்தவரும் நெறிதவறார்.

# 53. சுற்றந் தழால்

இதுவரை பொருட்பாலின் முதல் 140 குறட்பாக்கள் ஒவ்வொன்றுக்கும் தனி உரை கூறியதிலிருந்து இரண்டு முக்கிய கருத்துகள் தெளிவாகியிருக்கும்.

**ஒன்று :** இப்பாக்கள் பேரளவில் இம்மை மறுமை - பொருட்பொருள் அருட்பொருள் ஆகிய இருமை வாழ்வுக்கும் ஏற்ற கருத்துகளை ஒரே சமயத்தில் கூறுவது காண்கிறோம்.

**இரண்டு :** சில பாக்கள் மறுமை வாழ்வையும் வெளிப்படையாகவோ ஓரளவு மறைமுகமாகவோ கூறுவது காண்கிறோம். கூறப்படும் கருத்துப் போக்கிலிருந்து இவ்வுண்மை தெளிவாகின்றதையும் காண்கிறோம்.

இனி ஒவ்வொரு குறளுக்கும் தனியாக உரை கூறுவது தேவையில்லையெனத் தோன்றுகிறது. குறளுக்கு உள்ள இம்மைப் பொருள், உரையாளர் கூறும் விளக்கத்திலிருந்து எளிதில் தெளிவாகிறது. அதை மீண்டும் இங்குக் கூறத் தேவை இல்லை என்பது எம் துணிபு. தேவைப்படும் இடத்தில் ஓரளவு விளக்கம் தரப்படும். ஆனால், யாம் இனிக் கூற விரும்புவது மறுமைப் பொருள் கருத்து ஒவ்வொரு அதிகாரப் பகுதியிலும் எந்த அளவுக்குக் காணப்படுகிறது என்பதையே. இக்கண்ணோட்டத்தில் இனி வரும் (பொருட்பால்) அதிகாரங்களுக்கு விளக்கம் கூற முயல்வோம்.

ஆட்சி பீடம் ஏறுபவர் பெரும்பாலும் தம் சுற்றத்தார்க்கு விசேட சலுகைகள் காட்டுவது எங்கும் காணப்படுவதொன்று. ஒரு சிலர் பதவி கிடைத்ததும் தம் சுற்றத்தாரைச் சிறிதும் கவனியாதிருப்பதுண்டு.

அங்ஙனமே உறவினர் ஆட்சி பீடம் ஏறியதும் அவரைச் சிறிதும் மதியாமல் இருப்பவரும் உளர். தாம் எளிய நிலையிலிருந்தாலும் சுற்றத்தார் பழமை பாராட்டிச் சிலரிடத்தில் அன்பு காட்டுவதும் உண்டு. (521).

இத்தகைய 'விருப்பறாச் சுற்றம் இயையின்...ஆக்கம் பலவும்' உண்டாகும் (522). எனினும், சுற்றத்தார்க்குச் சலுகைகள் பல காட்டுவதும், சிறிதும் காட்டாமலே இருத்தலும் ஆட்சியாளர்க்கு அத்துணை நல்லதன்று. ஏனெனில், 'கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின்' (525) அஃதாவது தாராளமாகக் கொடுத்து அன்புடன் பேசினால் சுற்றத்தார் மேலும் மேலும் அவரைச் சூழ்ந்து துன் புறுத்துவர். கொடுத்துக்கொண்டேயிருந்தாலும் நன்மை பயக் காது - நற்பெயருக்கு இழிவு ஏற்படும். தம் பெயருக்கு இழிவு ஏற் பட்ட பின் ஆட்சி நன்கு நடைபெற இயலாது. இதனால்தான்.

> "பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
> அதுநோக்கி வாழ்வார் பலர்."

எனக் கூறப்பட்டுள்ளது (528 குறள்).

"ஆட்சி பீடத்தில் இருப்பவர் எல்லாரையும் ஒரே விதமாக நோக்காமல் தத்தம் தகுதிக்கு ஏற்ப நோக்குதல் வேண்டும்." (பரிமேலழகர் உரை).

இவ்வுரையில் 'தத்தம்', 'பலர்' என்னும் சொற்களால் பரி மேலழகரும் வேறு உரையாளரும் சுற்றத்தாரையே சுட்டு கின்றனர். தம் ஆட்சியில் உள்ள உறுப்பினர் எல்லாரையும் ஒரே விதமாக நோக்காமல், அவரவர் தகுதிக்கு ஏற்ப நோக்க வேண்டும் என்னும்போது, 'அவரவர்' என்றது சுற்றத்தாரை மட்டும் எங்ஙனம் குறிப்பிட வியலும்? சுற்றத்தார்க்கு மட்டுந்தான் 'தகுதி' என்பது இருக்கக் கூடுமா? மற்ற யாருக்கும் இருக்காது என்னும் கருத்தா? அற்றன்று. இப்பகுதியில் 'சுற்றத்தார்' என்னும் சொல்லால் உறவினர் மட்டுமன்று, சுற்றியுள்ள அனை வருமே குறிக்கப்படுகின்றனர் என்று புலப்படுகிறது.

சுற்றத்தார்க்குத் தனிச் சலுகை காட்டுவது பொருள் ஆட்சி யிலேயே பொருந்தாதெனின், அருளாட்சியில் மிகமிக இழிவான தாகவும், இறை அரசுக்கு மிகப் பெரும் கேடாகவும் கருதப்படும் என்று தெளிக.

# சுற்றந் தழால்

## சுருக்கம்

'சுற்றம்'என்பது உறவினர் என்னும் பொருளில் மட்டுமன்று; அரசு புரிவோர்க்குத் துணையாக உள்ளவர் அனைவரையும் குறிக்கும். உறவினை மட்டும் தழுவிக் கொள்வது அத்துணை சிறப்பான பண்பு என்பதற்கில்லை. ஆட்சியில் உறவினரை ஓரளவு ஒதுக்கி வைத்திருப்பதே நன்று என்பது, அனுபவத்தில் யாம் அறிவது. ஆகவே, பொதுவாகச் 'சுற்றியிருப்பது சுற்றம்' (பாவாணர்) என்னும் கருத்தில் ஆய்வோம்.

521. ''பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.''

வாழ்வில் தமக்கிருந்த பற்றுக்கோட்டை இழந்தபோதும் பழைய நட்பைப் பாராட்டி வாழ்பவரே சுற்றத்தார் எனப் பெயர் பெறுவதற்குரியவர். (அப்பண்பு எப்போதும் உறவினரிடமே காண்பதில்லையாதலால்!).

522. ''விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா
ஆக்கம் பலவுந் தரும்.''

எந்நிலையிலும் அன்புறவை நீக்க மனம் ஒருப்படாத சுற்றம் ஒருவர்க்குக் கிடைக்குமாயின், அது அரும்பிக் கொண்டேயிருக்கும் பல நன்மைகளுக்கு வழியாகும். (பல நன்மைகள் விளைவதற்கு இத்தகைய உறவு தேவை).

523. ''அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.''

சுற்றத்தார் - சூழ்ந்துள்ளோர் இவர்களோடு மனங்கலந்து வாழ முயலாதவன் வாழ்க்கை, கரையில்லாத குளத்துநீர் பாது காப்பின்றி வெளியே போய்விடுவது போல, எப்பாதுகாப்புமின்றிச் சீரழியும்.

524. ''சுற்றத்தால் சுற்றப் படஒழுகல் செல்வந்தான்
பெற்றத்தால் பெற்ற பயன்.''

பொருட் செல்வம் அருட்செல்வம் இவற்றால் ஒருவன் பெறக்கூடிய பயன், தனக்கு மட்டுமன்று, தன்னைச் சூழ்ந் திருக்கும் அனைவருக்கும் நன்மை விளையுமாறு செயல்புரிதலும், தீமை நிகழ்ந்தால் அதை நீக்க முயற்சி செய்வதுமாம்.

525. ''கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய
சுற்றத்தால் சுற்றப் படும்.''

தன்னைச் சூழ்ந்திருப்பவர்க்கு ஒருவன் தேவையான வற்றைக் கொடுத்து, இன் சொல் கூறிப் பழகுவானாயின், சுற்றத்திற்குச் சுற்றம் ஏற்படும். அஃதாவது சூழ்ந்திருப்பவர் தொகை பெருகும். ஆகவே, நன்மையடைபவர் தொகையும் பெருகும்.

526. ''பெருங்கொடையான் பேணான் வெகுளி அவனின்
மருங்குடையார் மாநிலத்து இல்.''

பொருட் கொடையோ அருட் கொடையோ, தாராளமாக வழங்குபவனும் அளவு மீறிய வெகுளிக்கு ஆளாகாமல் காத்துக் கொள்பவனும் ஆயின், அவனைச் சார்ந்துள்ள சுற்றத்தார் போல உலகில் வேறு இலர் ஆவர். அஃதாவது அவனைச் சூழ்ந் துள்ளவர் சிறப்படைவர்.

527. ''காக்கை கரவாக் கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள.''

காக்கை, இரையைக் கண்டதும் மறைக்காமல் இனத்தை அழைத்து உண்ணும். அருள் பொருள் ஆகிய செல்வம் அத்தகைய இயல்பினர்க்கே உளதாகும்.

528. ''பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்.''

ஆட்சி செய்பவன் தகுதியுள்ளவர், தகுதியில்லாதவர் எல் லாரையும் ஒரே விதமாகக் கணிக்காமல் தகுதிக்கு ஏற்ப நோக் குவானாயின், அந்த மேன்மையைப் பாராட்டிப் பலர் நல்வாழ்வு பெறுவர்.

529. ''தமராகித் தற்றுறந்தார் சுற்றம் அமராமைக்
காரணம் இன்றி வரும்.''

முன்பு சுற்றத்தாராய் இருந்து, ஏதோ ஒரு காரணத்தால் பிணங்கி விட்டு, மீண்டும் இணங்கி வர வேண்டுமாயின், பிணக்கத்துக்குக் காரணமாயிருந்தது நீங்க வேண்டும்.

530. ''உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்திருந்து எண்ணிக் கொளல்.''

தன்னிடமிருந்து பிரிந்து போய்ப் பின்னர் வேறு ஏதோ நோக்கத்தோடு மீண்டும் தன்னிடம் வந்தால், ஆட்சி புரிபவன் அந்நோக்கத்தை ஆய்ந்தறிந்து ஏற்றுக்கொள்ளுதலே முறை.

# 54. பொச்சாவாமை

'ஆட்சி' என்பது எளிதானதன்று; பொருளாட்சியில் நிகழும் பிரச்சினைகளைவிட அருளாட்சியில் பிரச்சினைகள் அதிகம் உளவாகும். இம்மைப் பிரச்சினைகளைவிட ஆன்மீக பிரச்சினைகள் தீர்ப்பதற்குக் கடினமானவை. பொருள் மீது ஒருவனுக்கு உண்டாகும் பற்றுதல் போல, அருள் மீது உண்டாவதில்லை. பொருள் இன்பம் அப்போதைக்கப்போதே சுவைக்கக் கூடியது. அருள் தரும் இன்பமோ உடனுக்குடனே சுவைக்கக் கூடியதும் அன்று; ஐம்புல இன்பத்தையெல்லாம் கடந்ததும் ஆகும். ஆகவே, சிறப்பாக அருளாட்சியில் சோர்வின்றி ஒழுகுவது கடினம். சோர்வு என்பது பொருளாட்சியில், செல்வம் இன்மையால் அல்லது குறைவால் ஏற்படக்கூடியது. ஆட்சியைச் சார்ந்த மக்களுடைய ஒத்துழைப்பில்லாமை, சூழ்ச்சியாகச் செயல்படும் முறைகள், கட்சி மனப்பான்மையால் உண்டாகக் கூடிய வெறுப்பு, வேறுபாடான மனப்பான்மை, நேரடியான எதிர்ப்புகள் ஆகியவற்றால் ஏற்படக் கூடியது.

பெருஞ்செல்வம், அளவு மீறிய இம்மை இன்பம், பெருமிதம் ஆகிய இவற்றால் உண்டாகக் கூடிய 'சிறந்த உவகை மகிழ்ச்சியினால்' (531) சோர்வு உண்டாகக் கூடும். தத்தம் கடமைகளைச் செய்வதற்கு மாறாகச் "செல்வம் உண்டு; தேவையான இன்பம் உண்டு; நமக்குத் தீங்கிழைப்பவர் யார்?" என்னும் பெருமிதத்தாலும் சோர்வு உண்டாகக்கூடும். இது கடமையாற்றுவதில் சோர்வாகும். இதனால் கெடுதியே விளையும்.

அருளாட்சியில் ஏற்படக்கூடிய சோர்வு பெரும்பாலும் கடமையாற்றுவதில் உண்டாகக்கூடிய சோர்வேயாகும். அருட்செல்வம் குறைவுபடுவதோ இல்லாமல் போவதோ அருள் ஆட்சியில் நிகழ்வதன்று. 'வேண்டா' என்று புறக்கணித்தால் தான் அருள் ஒருவரை விட்டு நீங்கும். நீங்கியதும் மனோபலம் நீங்கிச் சோர்வு உண்டாகும். அதுதான் தீவினை என்னும் செருக்கு - பாவம் என்பது. இதுவும் நிகழ்வதுண்டு. இத்தகைய சோர்வு எதுவும் நிகழாமல் காத்துக் கொள்வது ஆட்சிப்

பொறுப்பில் உள்ளவர் மீது சுமந்த இன்றியமையாததான கடமை.

சோர்வு ஏற்படுங்கால், அதனை வெல்வதற்கு முயற்சி இல்லையேல் ஆட்சியாளர் புகழ் மங்கிவிடும் (532). செல்வம் முதலிய எல்லாமிருந்தும் சோர்வுக்கு அடிமையாயின் ஆட்சியினர்க்கு நன்மை இராது (534). சோர்வுக்கு இடம் தருவோர்க்குத் துன்பம் வந்தே தீரும் (535).

இத்தகைய சோர்வின்றிச் செயல்படுவோர்க்கு 'உள்ளிய தெய்தல் எளிது.'

## பொச்சாவாமை

### சுருக்கம்

கடமைகளை ஆற்றுவதில் மறதியின்றி விழிப்பாயிருத்தல்.

531. ''இறந்த வெகுளியின் தீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியிற் சோர்வு.''

ஆட்சியில் உள்ளவர்க்கு (இருக்கக் கூடிய அதிகாரம், செல்வம், செல்வாக்கு, இன்ப வசதி இவற்றின் காரணமாக ஏற்படும்) மகிழ்ச்சிப் பெருக்கின் விளைவாக உண்டாகும் விழிப்பின்மையும் அசதியும் மட்டுமீறிய சினத்தைவிடக் கேடு பயப்பதாம்.

532. ''பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.''

நித்தமும் பிச்சை எடுத்து வயிற்றை நிரப்பச் செய்யும் கொடிய வறுமை, அறிவினை அழித்து விடுவது போல. கடமையில் விழிப்பின்மை, கடமை நிறைவேற்றுவதால் வரக் கூடிய புகழைத் தடுத்து விடும்.

533. ''பொச்சாப்பார்க்கு இல்லை புகழ்மை அதுவுலகத்து
எப்பால்நூ லோர்க்கும் துணிவு.''

கடமை மறந்து ஒழுகுவோர்க்குப் புகழ் என்பது இராது. இஃது உலகத்தில் எவ்வகையான நூலோர்க்கும் ஏற்புடைய துணிபாகும்.

534. ''அச்ச முடையார்க்கு அரணில்லை ஆங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.''

எதற்கும் அஞ்சும் இயல்புடையவர்க்குப் பாதுகாப்பு இருக்க வியலாது. அதுபோல கடமை மறப்போர்க்கு நன்மை என்பது நிகழாது.

535. ''முன்னுறக் காவாது இழுக்கியான் தன்பிழை
பின்னூறு இரங்கி விடும்.''

துன்பம் வருமுன்னரே விழிப்பாயிராதவன், பின்னர் வரும் துன்பத்தைக் கண்டு வருந்துவான்.

இது, சிறப்பாக அருள்வாழ்வில் நேரக்கூடிய பாவச் சோதனைகளை விழிப்புடன் தடுக்க வேண்டிய கடமைக்குப் பொருந்தும். 'சோதனைக்குள்ளாகாதவாறு விழித்திருந்து செபியுங்கள்' என்பது விவிலிய வாக்கு.

536. ''இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை
வாயின் அஃதுஒப்பது இல்.''

கடமையாற்றுவதில் விழிப்புணர்வு (மறதியின்மை) யாவரிடத்தும் எப்போதும் தவறாமல் விளங்குமாயின், அது போன்ற நன்மை வேறில்லை.

537. ''அரியஎன்று ஆகாத இல்லைபொச் சாவாக்
கருவியால் போற்றிச் செயின்.''

விழிப்புணர்வு என்னும் உறுதியுள்ளத்தால் ஒரு காரியத்தை ஆய்ந்து செய்தால், இயலாத செயல் என ஒன்று இருக்காது.

538. ''புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும் செய்யாது
இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்.''

(கடமை வீரர் பலரால்) புகழ்ந்து கூறப்பட்ட காரியங்களைப் பெரிதாக மதித்து ஆற்றுதல் வேண்டும். அங்ஙனம் ஆற்றாத வர்க்கு எக்காலமும் நன்மை விளைவதில்லை.

539. ''இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.''

(மேற்கூறிய செல்வம், செல்வாக்கு முதலியவற்றால்) மகிழ்ச்சிப் பெருக்கும், அதனால் செருக்கும் ஏற்படும்போது, கடமைகளை இகழ்ந்ததால் சீர் கெட்டவர்களை எண்ணிப் பார்க்க.

540. ''உள்ளியது எய்தல் எளிதுமன் மற்றுந்தான்
உள்ளியது உள்ளப் பெறின்.''

செய்ய வேண்டுமென்று நினைத்ததை மனத்திலிருந்து நீங்காமல் ஒருவன் காத்துக் கொள்வானாயின், நினைத்ததை நினைத்தவாறு அடைதல் கூடும்.

# 55. செங்கோன்மை

ஆட்சியாளரிடம் காணப்படவேண்டிய நீதி நேர்மை-செம்மையான ஆட்சி முறை.

541. ''ஓர்ந்துகண் ணோடாது இறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை.''

நிகழ்ந்ததை (அஃதாவது நன்மையோ தீமையோ) ஆய்ந்து பார்த்து, (உறவினர், சுற்றத்தார், வேண்டாதவர் என்று) 'ஒரு பால் கோடாமல்', ஆட்சித் தலைமைக்குரிய முறையில் நீதியோடு தீர்ப்பிடுவதே ஆட்சிமுறையாகும்.

542. ''வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி.''

**மறுமைப் பொருள் :**

உலக மக்கள் யாவரும் இறைவனது அருட் சக்தியை நோக்கி வாழ வேண்டியவர்கள்.

**இம்மைப் பொருள் :**

அதே மக்கள் இறைவனது பிரதிநிதிகள் போல் உள்ள அரசினரை அஃதாவது, அவர்களது செம்மையான ஆட்சி முறையை எதிர் நோக்கி வாழ்பவர்கள். ஆதலின், ஆட்சி நேர்மையானதாய் இருக்க விழிப்புடன் செயல் புரிதல் வேண்டும்.

543. ''அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்.''

அறவோராகிய அந்தணர் (அம்+தண்+அர்) இயற்றிய அற நூல்களுக்கெல்லாம் அடிப்படையாய் இருந்தது மன்னவனது செம்மையான ஆட்சிமுறை. (ஆதிகாலத்திலிருந்தே நேர்மையான ஆட்சி முறையைப் பின் பற்றிய சீரிய மன்னர்களின் செயல்களை வைத்தே அற நூல்கள் எழுந்தனவோ!).

544. "குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு."

தன் குடிகளை அணைத்து நேர்மையோடு ஆட்சிபுரியும் மாநில மன்னவன் அடிகளை உலகமே போற்றும்.

545. "இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு."

தக்ககாலத்தில் மழை பெய்வதும், நல்ல விளைச்சல் விளைவதும் முறைப்படி ஆட்சி செய்யும் நாட்டில் நடைபெறுவனவாம். (முறையற்ற ஆட்சி நிகழ்ந்தால், மழை பெய்வதும் விளைச்சல் விளைவதும் இரா என்றவாறு).

546. "வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉம் கோடா தெனின்."

ஆட்சியாளர்க்கு வெற்றி தருவது அதிகாரமோ படைபலமோ அன்று. அவர்களது ஆட்சிமுறையே; அதுவும் நேர்மையானதாயிருந்தால்தான் வெற்றி.

547. "இறைகாக்கும் வையக மெல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்."

தடைகள் நேர்ந்தவிடத்தும் ஆட்சிமுறையைத் தக்க முறையில் நடத்தும் ஆட்சியாளரை, அந் நீதி முறையே காப்பாற்றும்.

548. "எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தான் தானே கெடும்."

தம் குறைகளைச் சொல்ல வருபவனிடம் (அதிகாரம் காட்டாமல்) எளிய முறையில் நடந்துகொண்டு, குறைகளைக் கேட்டு முறையோடு ஆட்சி செய்யாதவர், தம்முடைய நடத்தையால் (நீதி செய்யக் காலம் தாழ்த்துவதால் அல்லது செய்யாததால்) தாமே கெடுவர்.

549. "குடிபுறங் காத்தோம்பிக் குற்றம் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்."

பிறரால் நிகழக்கூடிய துன்பங்களினின்று குடிகளைப் பாதுகாத்து, குற்றம் கடிய வேண்டியபோது கடிந்து கொள்ளுதல்; இது ஆட்சியாளர்க்குரிய தொழில் - தவறன்று.

550. "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்

களைகட் டதனொடு நேர்."

கொடியவரைக் கொன்று தண்டித்தல், பச்சைப்பயிர் நிலத்தில் முளைக்கும் களைகளை ஒழித்துப் பயிரை வளர்ப்ப தாகும். மக்களுக்குத் தீமை செய்வோரைத் தக்க முறையில் தண்டிப்பது அவசியம் என்றது.

# 56. கொடுங்கோன்மை.

ஆட்சி முறை மீறி செயலாற்றுவது - ஏழை எளியோர் துன்பம் கண்டு இரக்கம் காட்டாமலிருப்பது - ஆராய்ந்து பாராமல் பிறர் மீது குற்றம் சுமத்துவது - அவர்களைத் தண்டனைக்குள்ளாக்குவது - அநீதி இயற்றுவது - தண்டிக்க வேண்டியவர்களைத் தண்டிக்காமல் விடுவது - இவை பொருளாட்சியில் நிகழக்கூடிய கொடும் செயல்கள்.

இறை அருள் தேவைப்படுவோர்க்கு ஆவன செய்யாது கவலையின்றி இருத்தல் - அஃதாவது அருட் சாதனங்களைக் கையாள்வதற்கு மக்களைத் தயாரிக்காமலிருப்பது - தவறான வழியில் செல்வோர்க்குத் தக்க நேரத்தில் விழிப்புடனிருந்து அருளுரையாற்றி அருள் வழியில் செயல் புரியாமல் சோம்பியிருப்பது - பொருள் உதவி தேவைப்படுவோர்க்கு இயன்ற அளவு செய்து ஊக்குவிக்காமல் இருப்பது - இரக்கம் காட்டாமல் ஏழை எளியோரைத் துன்பத்துக்குள்ளாக்குவது முதலியவை அருளாட்சியில் நிகழக் கூடிய 'கொடுங்கோன்மை' எனலாம்.

## கொடுங்கோன்மை
### சுருக்கம்

செம்மையான ஆட்சிக்கு எதிரான ஆட்சி முறை

551. ''கொலைமேற்கொண் டாரிற் கொடிதே அலைமேற்கொண்டு
அல்லவை செய்தொழுகும் வேந்து.''

குடிகளை வருத்தி ஆளும் வகையை மேற்கொண்டு, நல் ஆட்சிக்கு ஆகாதவற்றைச் செய்தொழுகும் ஆட்சியாளர், பிறரைக் கொன்றழிக்கும் தொழிலை மேற் கொண்டவரைவிடக் கொடியவர்.

552. "வேலொடு நின்றான் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு."

மக்களைக் கொடுமைப்படுத்தி (வரி வாங்குவதோடு நில்லாமல்) வேறு வகையிலும் 'கொடு' என்று அரசினர் கேட்பது (இரவு), வழியில் ஆயுதத்தோடு நிற்கும் கள்ளன் அவ்வழி செல்வாரிடம் 'உள்ளதைக் கொடு' என்பது போலாகும்.

553. "நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறும் நாடு கெடும்."

நாள்தோறும் நல் முறை நாடி, முறையோடு ஆட்சிசெய்யா ஆட்சிப் பொறுப்பினர், நாளுக்கு நாள் நாட்டைக் கேடுறச் செய்வர்.

554. "கூழும் குடியும் ஒருங்கிழக்கும் கோல்கோடிச்
சூழாது செய்யும் அரசு."

பின் விளைவதை நினையாது முறைதவறி ஆட்சி செய்பவர், ஆட்சியின் அம்சங்களாகிய பொருளை மட்டுமன்று, குடிமக்களையும் இழக்க நேரிடும்.

555. "அல்லற்பட்டு ஆற்றாது அழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை."

ஆட்சிமுறையின் கொடுமையால் அல்லற்பட்டுக் குடிகள் வடிக்கும் கண்ணீரே, நாட்டுக்குத் தேவையான பொருட் செல்வத்தைக் குறைக்கும் கருவியாகிவிடும்.

556. "மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃதின்றேல்
மன்னாவாம் மன்னர்க் கொளி."

ஆட்சியை நன்கு நிலைபெறச் செய்வது செம்மையான ஆட்சிமுறை. அஃது இல்லாவிடில் அரசாட்சிக்கு நிலையான புகழ் இல்லையாகும்.

557. “துளியின்மை ஞாலத்திற்கு எற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழும் உயிர்க்கு.”

நாட்டில் வாழும் மக்களுக்கு அரசினர் நல்லாட்சியின்றேல், அது மழையில்லாமல் நாடு சீரழிவதற்கு ஒப்பாகும்.

558. “இன்மையின் இன்னாது உடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்.”

முறையற்ற கொடுங்கோல் ஆட்சியின் கீழ்வாழ்வது, செல்வமிருந்தும் வறுமையால் வருந்துவதைக் காட்டிலும் துன்பம் தருவதாகும்.

559. “முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல்.”

ஆட்சியினர் முறைதவறி ஆள்வாராயின், மேகம் பொழியாது மழை இல்லாமல் போய்விடும்.

560. “ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின்.”

ஆட்சிமுறை சீரியதல்லதாயின், ஆகவேண்டிய நற்பயன் எதுவும் நிகழாது. உழவு முதலிய அறுவகைத் தொழில்கள் செய்ய வேண்டியவர்கள், செய்யும் அறிவையும் இழப்பர்.

# 57. வெருவந்த செய்யாமை

குடிமக்களை அச்சத்துக்குள்ளாக்கக் கூடிய செயல்களைச் செய்யாமை.

561. ''தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து.''

நிகழ்ந்த குற்றத்தைத் தக்கவாறு ஆய்ந்து, மேலும் அது நிகழாதவாறு (அஃதாவது குற்றவாளியைத் திருத்தும் நோக்கத்தோடு) குற்றத்துக்கு ஏற்றவாறு தண்டிப்பது ஆட்சிமுறை. (மிதமிஞ்சி தண்டித்தால் மக்கள் மிக அஞ்சுவர்).

562. ''கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர்.''

ஆட்சி, ஆக்க முறையில் நெடுங்காலம் நிலைபெற வேண்டும் என விரும்பும் ஆட்சியாளர், தண்டிக்கும் செயலைத் தீவிரமாகச் செய்தல் வேண்டும். ஆனால், அதே சமயத்தில் அளவு மீறாமலும் பார்த்துக்கொள்ள வேண்டும்.

563. ''வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்தம் ஒல்லைக் கெடும்.''

குடிமக்களைக் கடும் அச்சத்துக்குள்ளாக்கும் முறையில் ஆட்சி புரிபவர் நிலைமை நிச்சயமாக விரைவில் கேடுறும்.

564. ''இறைகடியன் என்றுரைக்கும் இன்னாச்சொல் வேந்தன்
உறைகடுகி ஒல்லைக் கெடும்.''

கொடியவர் என்று மக்களால் கூறப்படும் வகையில் ஆட்சி புரிவோர், வாழ் நாள் குறுகி விரைவில் கேடுறுவர்.

565. ''அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்னது உடைத்து.''

'அதிகாரிகளைக் காண்பதற்குத்தக்க காலமும் இல்லை; கண்டால் முக வரவேற்புமில்லை' என்னும் நிலையில் ஆட்சி நடந்தால், ஆட்சியினர்க்கு வேறு வகையில் செல்வம் திரண்டிருந்தாலும் பேய் கண்டது போன்ற அச்சமே தலைதூக்கும்; நன்மை நிகழாது.

566. ''கடுஞ்சொல்லன் கண்ணில னாயின் நெடுஞ்செல்வம்
நீடின்றி ஆங்கே கெடும்.''

ஆட்சி செய்பவன், கடுமையாகப் பேசுபவன் - இரக்கக்கண் இல்லாதவன் என்றால் நிலைக்க வேண்டிய செல்வமும் நிலை குலைந்து போகும்.

567. ''கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம்.''

கடுஞ் சொல்லும் அளவு மீறிய தண்டனையும் ஆட்சியாளரது இரும்பு போன்ற அதிகாரத்தையும் அரித்துவிடும் அரம் போலாம்.

568. ''இனத்தாற்றி எண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறின் சிறுகும் திரு.''

ஆட்சியோடு இணைந்த அமைச்சரோடு கலந்து ஆராயாத ஆட்சித் தலைவன், திட்டமிட்ட காரியம் நிறைவேறாவிடில், அமைச்சர் மீது சினம் கொள்வானாயின், ஆட்சிச் செல்வம் சிறுகிவிடும்.

569. ''செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்.''

நாட்டிற்குப் போதிய அளவு பாதுகாப்புச் செய்துகொள்ளாத ஆட்சித் தலைவன் அஞ்சுதற்குரிய போர் முதலியது நேர்ந்தால், தானே அச்சத்தால் விரைவில் மடிவான்.

570. ''கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்லது
இல்லை நிலக்குப் பொறை.''

கொடுங்கோல் ஆட்சி புரிபவன் ஆட்சிக்கு ஏற்ற அறிவில்லாதவர்களைத் தன்னோடு சேர்த்துக் கொள்வான். இத்தகையவர் பூமிக்குப் பாரமேயன்றி வேறொன்றுக்கும் பயன்படார்.

# 58. கண்ணோட்டம்

இச்சொல்லுக்கு உரையாசிரியர்கள் கூறும் பொருளை ஆய்வோம்.

**பரிமேலழகர் :**

தன்னோடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்க மாட்டாமை.

**மணக்குடவர், பரிப்பெருமாள் :**

கண்ணால் காணப்பட்டாரை அருள் செய்தல்; குற்றம் செய்தாரை ஒறுக்குங்கால் உலகத்தார் இசைய ஒறுக்க வேண்டும் எனினும், அவ்வாறு செய்தவரைத் தம் கண்முன்னாகக் கண்டால், அதனைப் பொறுத்தலும் வேண்டும் என்னும் பண்புடைமை.

**பரிதியார்:**

அரசர்க்குக் கிருபையாகிய பார்வை வேண்டும் என்றது.

**புலவர் குழந்தை :**

பழக்கமுடையார் சொல்லை மறுக்க இயலாமல் இரக்கம் காட்டுதல்.

**ஞா. தேவநேயன் :**

தன் உறவினரும் நண்பரும் தன்னோடு பழகியவரும் தன்னோடு தொடர்புடையவரும் தனக்கு உதவினவரும் எளிய வரும் ஆனவர்க்கு நன்மை செய்வதை மறுக்க இயலாத அன்பு. இது அவரைக் கண்டவுடன் அவர்மீது மனம் விரைந்தோடும் பண்பாகும்.

**சாமி சிதம்பரனார் :**

பழகியவர்களின் சொற்களை மறுக்காமை.

**கா. சுப்பிரமணியப் பிள்ளை :**

வேண்டியவர்களைக் கண்டால் அவர் சொன்னதை மறுக்க இயலாமை.

சுருங்கக் கூறின் உறவால், நட்பால், பழக்கத்தால், தமக்கு வேண்டியவர்கள் சொன்னதை மறுக்கமாட்டாமை என்னும் பொருளே பெரும்பான்மையாகக் கூறப்படுகிறது. 'மறுக்கமாட்டாமை' என்பது, நன்மை செய்வதை மறுக்க இயலாத 'அன்பு' என்று கொள்ளலாம். (ஞா. தேவநேயன் உரை காண்க).

அருள் செய்தல், அருட்பார்வை செலுத்துதல், இரக்கம் காட்டுதல் என்னும் பொருளும் ஓரளவு கூறப்படுவது கவனிக்க.

இந்த இருவகைக் கருத்துகளுள் எது பொருத்தமானது?

கண்ணோட்டம் என்பது சால்பூன்றிய தூண்களுள் ஒன்றெனக் கூறுகின்றார் வள்ளுவர். சால்பு, சான்றாண்மைப் பண்புகளுள் ஒன்றாகக் கருதப்படும். இக்கண்ணோட்டத்துடன் மேற்சொன்ன இரு கருத்துகளுள் எது பொருந்துகிறது என்று ஆய்தல் தேவை.

இந்த அதிகாரத்தில் கூறப்படும் கருத்துகளை ஆய்வதால் பொருள் விளங்கும். 'கண்ணோட்டம் என்னும் கழிபெரும் காரிகை உண்மையான் உண்டிவ் வுலகு'.

இக்குறளில் கண்ணோட்டம் என்பது 'கழிபெரும் காரிகை' எனப்படுகிறது. 'கழிபெருங் காரிகை' என்றால் என்ன? 'சிறப்புடைய அழகு', 'பெரிய அழகு,' 'மிகவும் பெரிய நன்மை' என்பது அறிஞர் சிலர் உரை. 'கண்ணோட்டம் என்கிற திருமாது' என்கிறார் பரிதியார்.

''கண்ணோட்டம் என்னும் பெண் உலகைப் படைப்பவள் (ஈனுபவள்). அழகு உண்மையான் உலகுள்ளது. உறுப்புகளுள் கண் சிறந்ததாகலின் அதனழகு கழிபெருங்காரிகையாயிற்று. அருளே சக்தி; அவள் உண்மையான் உலகு உள்ளது'' என்பது சாமி சிதம்பரனார் உரை.

இக்கருத்தையே ஆங்கில மொழிபெயர்ப்பாளர் சிலரும் கூறுகின்றனர்.

.................. "the beautiful high Dance Grace" என்கிறார் வித்துவான் K.M. வெங்கடராமையா, M.A.; B.O.L.

'காரிகை' என்னும் சொல்லுக்கு 'அழகு' என்னும் பொருள் கொண்டு இக்குறளை ஆய்வோமாயின், கருத்துச் சிறப்பதாகத் தோன்றவில்லை. சிறப்பான அழகு இருப்பதால்தான் இவ்வுலகு நிலைபெற்றுள்ளது எனின், பொருள் என்ன? மாறாகக் 'காரிகை' என்னும் சொல்லுக்கு அருள் என்னும் திருமாது,* சக்தி என்று பொருள் கொண்டால் பொருள் சிறக்கிறது. இறைவனின் அருட்சக்தியால்தான்† - அவனது அருட்பார்வையால் தான் உலகம் நிலைபெறுகின்றது. கண்ணோட்டம் என்னும் சொல்லுக்கு 'அருட்பார்வை' இரக்கம் காட்டுதல் என்று மேலே கூறப்பட்ட இரண்டாம் பொருள் ஈண்டுப் பொருத்தமாகிறது. இறைவனுடன் ஒன்றாய் உள்ள அவனது சக்தியே உலகத்தை நிலைபெறச் செய்கின்றது எனின், அரிய கருத்துத் தோன்றுகின்றது. 'ஆதி பகவன் முதற்றே உலகு' என்னும் முதற் குறளில் உள்ள கருத்தையே இக்குறள் மீண்டும் வலியுறுத்துவதாகத் தோன்றுகிறது.

பொருட்பால், அரசு இயலில் வரும் இக்குறள் அரசர்க்கிருக்க வேண்டிய பண்புகளுள் ஒன்றான கண்ணோட்டத்தைக் (அருட்பார்வை ...... இரக்கம் காட்டுதல்) கூறுகின்றது. ஆகவே, ஈண்டு இறைவனது அருட்சக்தி, அருட்பார்வைபற்றி எங்ஙனம் இருக்க இயலும் என்று தடை கிளம்பலாம்.

அரசர்க்குரிய பண்புகளுள் ஒன்றைக் குறித்தே ஈண்டுக் கூறப்படுகிறது என்று வைத்துக்கொண்டாலும், கண்ணோட்டம் என்னும் அருட்பாவை - அதுவும் உலகை நிலைபெறச் செய்வதாகிய அருட் சக்தி - முழுமுதற் பொருளாம் இறைவனுக்கே முற்றிலும் பொருந்தும் என அறிக. உலகெலாம் ஆளும் இறை

---

* திருக்குறள் உரைக்கொத்து — காண்க.

† இறைவனின் அருட்சக்தியை உருவகப்படுத்திக் கூறப்படுகிறது எனலாம்.

வனுக்குள்ள அதிகாரத்தில் ஓரளவு பங்கு பெற்றே உலக மன்னர்கள் ஆள்கின்றனர் என்று எண்ணும்போது, உலக மக்களைத் தகுந்த முறையில் ஆண்டு நடத்த இறைவனுக்குள்ள அழகுயர் பண்புகளுள் ஒன்றான கண்ணோட்டம், உலக மன்னர்க்கும் இருத்தல் வேண்டும் என்று இம்முதற் குறட்பாவில் வலியுறுத்தப் படுவது பொருத்தமேயன்றோ?

உலக மன்னர்களைப்பற்றி மட்டுமே இக்குறளுள் கூறப்படுவதானால், அவர்கள் அனைவர்க்கும் அருட் பார்வை உண்டு; அதனால்தான் உலகம் நிலைபெற்றுள்ளது எனக்கூறுதல் பொருந்துமா? கொடுங்கோல் மன்னர்கள், இரக்கமற்ற ஆட்சியாளர்கள் எத்துணையோபேர் உலகை ஆட்டிப் படைத்துள்ளனரே! இன்னும் உலகம் நிலைபெற்றிருப்பது எங்ஙனம் என்னும் வினா எழாதா? ஆகவே, இக்கண்ணோட்டம் என்பது முதன் முதல் இறைவனுக்கே முற்றிலும் பொருந்தும் - அவன் ஒருவனே அருட்பார்வையுடன் உலகினை நோக்குபவன் - தீவினை நிறைந்தால்கூட அருளுடன் மக்களை மன்னித்து ஆட்கொள்பவன். அதனாற்றான், உலகமே நிலைபெற்றுள்ளது. அவனது அருட் பார்வை இன்றேல், தீவினை மல்குங்கால், மக்கள் எவ்வித ஒழுக்கமுமின்றி வாழ்ந்தால், உலகம் என்னவாகும்? ஆகவே, இக்குறட்பா, மன்னருக்கு இருக்க வேண்டிய கண்ணோட்டத்திற்கு ஆதியும் மேல்வரிச் சட்டமுமான **இறைவனது கண்ணோட்டத்தைக்** குறித்தே உணர்த்துகிறது என்க.

அடுத்த குறட்பாவால் இக்கருத்து வலிமை பெறுகின்றது.

572. ''கண்ணோட்டத் துள்ள துலகியல் அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை.''

இறைவனின் அருட்பார்வையால்தான், உலகம் நிலைபெற்றுள்ளது என்று முந்திய குறட்பா கூறிற்று. அந்த அருட் பார்வையை உலகமக்கள் அனைவரும் ஓரளவு ஒருவர்க்கொருவர் காட்ட வேண்டும். ஏனெனில், **பரிப்பெருமாள்** உரை கூறுவது போல, ''உலகத்தார் பலர் ஆதலால், குற்றம் செய்வார் மிகுந்திருப்பர். அதற்கெல்லாம் தண்டம் செய்யின், உலகம் என்பது ஒன்று இல்லையாம். அதற்காகப் பொறுக்க வேண்டுவன பொறுக்க வேண்டும்.'' இங்குக் கூறப்படுவது சிறப்பாக உலகின் முதலாகிய இறைவனுக்கே பொருந்தும். மனிதர் செய்யும் ஒவ

வொரு குற்றத்துக்காகவும் அவர்களை இறைவன் தண்டிப்பதா
யிருந்தால், வெகு விரைவில் உலகமே இல்லாதொழியும். மேலும்
இது எல்லா மனிதர்க்கும் பொருந்தும். செய்யப்படும்குற்றத்தின்
பொருட்டு ஒருவரையொருவர் தண்டித்துக்கொண்டேயிருந்தால்,
என்ன நேரும் என்பதை எளிதில் புரிந்து கொள்ளலாம்.

ஆனால், இஃது ஆட்சி செய்வோர்க்குச் சிறப்பாகப்
பொருந்தும். ஆட்சி செய்வோர் (அரசர், அதிகாரிகள்) அனை
வரும் இறைவனது பெயராலும், அவனது அதிகாரத்தாலுமே
மக்களை ஆள்கின்றனர். அவனை இறையென்றே மக்கள்
கருதுகின்றனர்.

“முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.” (குறள் 388)

என வள்ளுவர் கூறுவது கவனிக்க. அங்ஙனமாயின், மக்களை
ஆளும் மன்னன், இறைவனது அருட்பார்வை ஓரளவேனும்
கொண்டவனாய் விளங்க வேண்டுமில்லையா?

இதனாற்றான் ‘கண்ணோட்டம்’ என்னும் அதிகாரத்தை
அரசியலில் வைத்துள்ளார் வள்ளுவர்.

உலக ஆட்சி செய்வோர்க்கு மட்டுமன்று (அரசர்க்கு மட்டு
மன்று), அருள் ஆட்சி செய்வோர்க்கும் இது இன்றியமையாதது.
ஆகவே, சான்றாண்மைக்கெல்லாம் தூண் எனக் கண்ணோட்டம்
விளங்குகிறது என்கிறார் வள்ளுவர்.

முதற்குறட்பாவில், உலகம் நிலைத்திருப்பது கண்ணோட்டத்
தால் என்ற வள்ளுவர், இரண்டாம் குறட்பாவில் உலகியலும் -
உலகம் இயங்குவதும் கண்ணோட்டத்தாலே என்கிறார். இறை
வனது அருட்பார்வையின்றேல், உலகம் நிலைபெறுவதுமில்லை,
செயல்படுவதுமில்லை என்றவாறு. ஆகவே, ஆட்சி செய்வோர்
அனைவருமே கண்ணோட்டத்தைக் கையாளுதல் வேண்டும்.
அஃதாவது அருட் பார்வையால் இரக்கம் காட்டுவதால் தவறிச்
செல்வோரை - உலகைத் தாங்கிக்கொள்ளுதல் வேண்டும்.
அங்ஙனம் தாங்கவில்லையேல், உலகம் அவர்களைத் தாங்கு
வதில் பொருள் இல்லை. ‘நிலக்குப் பொறை’ என்றார்
(பரிமேலழகர் உரை). அவர்கள் வாழ்ந்து பயனில்லை

என்பதால், நிலத்துக்குப் பாரமேயன்றோ! உலகம் அவர் களைச் சுமந்து பயனில்லை!

மனிதர்க்கு - ஆட்சியாளர்க்குக் கண்ணோட்டம் எத்துணை இன்றியமையாதது, எந்த அளவுக்கு அருட்பார்வை விளங்க வேண்டும் என்னும் கருத்தையே அடுத்து வரும் குறட்பாக்கள் எல்லாம் பலபடக் கூறுகின்றன.

ஆகவே, 'கண்ணோட்டம்' என்பதற்குப் பொருள்:

1. இறைவனது அருட்பார்வை.
2. ஆட்சியாளர் கொண்டிருக்கவேண்டிய அருட்பார்வை.
3. எல்லா மனிதருமே கொண்டிருக்க வேண்டிய அருட் பார்வை என்றாகும்.

இனி, இம்மூவித அருட்பார்வை, மூவகையில் செயல் படுகிறதைக் கவனித்தல் வேண்டும். எங்ஙனம் என்று ஆய்வோம்.

'கண்ணோட்டத் துள்ள துலகியல்' என்னும் குறட் பாவுக்குப் பொருள் கூறும் பரிப்பெருமாள் அவர்கள், "உலகத் தார் பலர் ஆதலால், குற்றம் செய்வார் மிகுந்திருப்பர். அதற் கெல்லாம் தண்டம் செய்யின் உலகம் என்பது ஒன்று இல்லை யாம். அதற்காகப் பொறுக்க வேண்டுவன பொறுக்க வேண்டும்', எனக்குறிப்பிடுகிறார்.

இக்கருத்திற்கேற்ப இறைவனது அருட்பார்வை அனைத் திற்கும் மேலாகச் செயலாற்றுவதால், தண்டனைக்குரிய எத்தனையோ பேர் தண்டனை பெறாமல், மன்னிப்படைகின் றனர். உலகம் நிலை பெறுவதற்கு இறைவனது அருட் பார்வையே முதற் காரணம். ஏனெனில், மனிதர்களுள் எவர் தண்டனைக்குரியவர் என்பதை முழுதுற அறிந்தவன் அவன் ஒருவனே. குற்றத்துக்கு ஏற்ற தண்டனை விதிக்கக்கூடிய சக்தி கொண்டவனும் அவன் ஒருவனே. அவனது நீதிக்குத் தப்பக் கூடியவன் எவனுமில்லை. ஆதலின், தவறு செய்வோரை உடனுக்குடனே தண்டித்தலே முறை என்னும் நியதியுடன் இறைவன் செயலாற்றுவதாயிருந்தால், குற்றம் செய்வார்

பலராயுள்ள உலகில் யார் பிழைப்பார்? உலகமே இல்லா தொழியும் என்க.

மக்களிடையே, யார்யார் உண்மையில் தண்டனைக்குரியவர்கள் என்று அறிவதே அளவுள்ள அறிவு படைத்த மனிதனுக்குக் கடினமாயுள்ளது. பல முறை தக்கபடி தண்டிப்பதற்கு முதலாய்ச் சக்தியில்லாமற் போய்விடுகிறது. பல சூழ்ச்சிகள் செய்து தண்டனைக்குரியவர் தப்பிக்கொள்வதை அறிவோம். ஆனால், இறைவனைப் பொறுத்தமட்டில் இவையெல்லாம் நிகழ இடமில்லை.

எனினும், இறைவனது அருட்பார்வை, அளவில்லாத இரக்கப் பார்வையாதலால், தீவினை செய்வோரை உடனுக்குடனே தண்டிப்பதில்லை; மன்னிப்பு வழங்கத் தயங்குவதில்லை; தன் குற்றங்களுக்காக நாணி, மன்னிப்புத் தேடும்வரை பொறுமையுடன் காத்திருக்கிறான் இறைவன். பலர் இங்ஙனம் மன்னிப்பு அடைகின்றனர். ஆதலால்தான். உலகம் நிலை பெறுகின்றது என்க.

ஆனால், இறைவனின் அருட்பார்வைக்கு அடுத்தபடி, அவனது அதிகாரத்தில் ஓரளவு பங்கு பெற்று, மக்களை ஆள்வோர்க்கும் உள்ள அருட்பார்வை குறித்ததொரு அளவில் செயலாற்றுகின்றது.

அதனால், பொறுக்கப்பட வேண்டிய அல்லது பொறுக்கப் படக்கூடிய குற்றங்கள் நிகழ்ந்தால், ஆட்சியாளர் அருட்பார்வை கொண்டு பல குற்றங்களை மன்னிக்க இயலும். ஆட்சியாளர் இங்கே பொதுவாக அரச அதிகாரம் படைத்தவர்களாயிருக் கலாம். அல்லது அருள் ஆட்சியாளர்களாயிருக்கலாம். அரசர் களாயிருந்தால், தம் அதிகாரத்தைப் பயன்படுத்தி அருட் பார்வை காட்டலாம்.

அருளாட்சிச் செய்வோராயிருந்தால், மக்களிடையே சால் பலைகளைப் பரப்பி, குற்றம் செய்தோரும் இறைவனது அருட்பார்வையால் பாவப் பொறுத்தலை அடைந்து, இறை

வனது அருளைப் பெற்றுச் சான்றோர்க்குரிய வாழ்க்கை நடத்தத் துணை செய்யலாம்.*

இந்த அதிகாரத்தில் கூறப்படுவது அரசர், அருளாட்சியர்க் குரிய கண்ணோட்டமே என்பது தெளிவு. சால்பூன்றிய தூண் களுள் ஒன்றெனெ விளங்குவது இறைவனுடைய அருட்பார்வை யன்று; சான்றோராக விளங்கவேண்டிய அரசரும் அருளாளருமே யாவர். இதனால்தான் இது பொருள் அதிகாரம், அரசியலில் வைக்கப்பட்டிருக்கிறது. அரசர், அருளாளர் எல்லாருமே 'ஆட்சி' யாளர் என்பதால் பொருட்பாலில் வைக்கப்பட்டது பொருத்தமே. கண்ணோட்டமும் இப்பாலில் அரசியலில் காண்க.

## கண்ணோட்டம்

ஈண்டு முதற்கண் குறிக்கப்படுவது மானிடர் மீது இறைவன் காட்டும் அருட்பார்வை. இரண்டாவதாக அந்த அருட்பார்வை யால் இரக்கம் பெற்று வாழ்வடைந்த மக்கள் ஒருவர்க்கொருவர் காட்ட வேண்டிய அருட்பார்வை.

தீவினை என்னும் செருக்கினின்று மனிதன் விடுதலை யடைவது இறைவனது அருட்பார்வையால் மட்டுமே என்னும் கருத்து எக்கூட்டத்தினரது? அவனவன் செய்த தீவினைக்கு அவனவனே பட்டுத் தீர்க்கவேண்டும். ஒரு பிறப்பில் முடியா விடில் பல பிறப்புகளில் தீர்க்க வேண்டும் என்னும் கோட் பாட்டுக்கு மாறாக, ஒருவன் எத்துணை அக்கிரமங்கள் செய்தவனாயினும், இப்பிறப்பிலேயே அவன் அவற்றிலிருந்து விடுதலை பெறக் கூடும் - இறைவனோடு ஒப்புரவாகி அவன் தந்த நண்பென்னும் நாடாச் சிறப்பை மீண்டும் பெற்றுக் கொள்ள இயலும். பல பிறப்புகள் தேவையில்லை. இறைவனது அருட் பார்வைக்கு அளவில்லா ஆற்றலுண்டு. ஒரு நொடிப் பொழுதில் தீவினையாளரைப் புதுப்பிறப்பாக ஆக்கிவிட இயலும் என்னும் இக்கருத்துகள் எல்லாம் யாருடையவை?

அவனவன் செய்த தீவினைகளுக்கு அவனவனேதான் கழுவாய் புரிய இயலும் என்னும் கொள்கைக்கு மாறாக, மானிடர்

---

* மு. தெய்வநாயகம் எழுதிய 'அருட்செல்வம் யாது?' என்னும் நூலைப் படித்தறிக. சிறப்பாக 'அருள் உடைமை'—அதிகாரம் காண்க. மேலும், 'சான்றவர் சான்றாண்மை' என்னும் குறள் விளக்கம் காண்க.

அனைவரும் செய்த தீவினைகளுக்கெல்லாம் தாமே கழுவாயாக, இறைவனே மனித உருவில் வந்து, தன்னைப் பலியாக்கினான் என்று கூறுவோர் எக்கூட்டத்தார்?

''அன்பும் அருளும் உள்ளவர் ஆண்டவர். சினம் கொள்ள தாமதிப்பவர். அருள் உள்ளம் படைத்தவர். தம் படைப்புகள் அனைத்தின் மீதும் இரக்கம் காட்டுபவர்'' (சங். 144).

''உங்கள் பாவங்கள் செந்தூரம்போல் இருந்தாலும் உறை பனிபோல் வெண்மையாகும்.'' (இசை.1). (அஃதாவது எவ்வளவுதான் கொடியவையாயிருந்தாலும் அவற்றை நீக்கி உங்களைப் புனிதப்படுத்துவேன் என்றவாறு).

இவை போன்ற இறைவாக்குகள் விவிலியத்தில் ஏராளமாக உள்ளன. இறைவன் முன்னிலையில் ஒருவன் தன்னைத் தாழ்த்தி, நொறுங்கிய உள்ளத்துடன், இறைவனது நண் பென்னும் நாடாச்சிறப்பைப் புறக்கணித்ததற்காக மனம் வருந்தி, அவன்பால் திரும்பி வந்தால், இறைவனது அருட் பார்வை ஐயமின்றிக் கிடைக்கும். கிடைக்குமாறு ஐந்தவித்தான் மனிதர்க்கு உதவியுள்ளான்.

இறைவனது அருட்பார்வையால், தன் குற்றங்களுக்கு மன்னிப்புப் பெற்ற பின்னர், மனிதரும் ஒருவருக்கொருவர் இரக்கங் காட்டுதல் அவசியம். இக்கருத்து எந்த சமயத்தில் அழுத்தமாகக் கூறப்படுகிறது?

ஐந்தவித்தானால் உண்டான கண்ணோட்டத்தைப் பெற்ற சான்றோர், மற்றவர்களிடத்தும் கண்ணோட்டத்துடன் விளங்க வேண்டுவது இன்றியமையாததாகும். மற்றவர்களை மன்னிக்கும் மனம் அற்றவனுக்கு மன்னிப்பு இல்லை. இதைத் திட்டமாக உணர்த்துவதற்காகத்தான் இயேசு பெருமான் தம் முடைய சீடர்களுக்குக் கற்றுக்கொடுத்த வேண்டுதலில்......

''எங்களுக்கு எதிராகக் குற்றம் செய்தவர்களை நாங்கள் மன்னித்துள்ளதுபோல, எங்கள் குற்றங்களை மன்னித்தருளும்,'' (மத்.6:12) எனக் கற்றுக் கொடுத்ததுடன் அதற்கு விளக்கமும் கொடுத்தார்.

''மனிதருடைய குற்றங்களை நீங்கள் மன்னிப்பீர்களாகில், உங்கள் வானகத் தந்தை உங்களையும் மன்னிப்பார். மனிதரை நீங்கள் மன்னியாவிடில், உங்கள் தந்தையும் உங்கள் குற்றங் களை மன்னிக்கமாட்டார்'' (மத். 6:14—15).

இரக்கமுடையோர் பேறுபெற்றோர்,
ஏனெனில் அவர்கள் இரக்கம் பெறுவர். (மத். 5:7).

பத்தாயிரம் பொற்காசு கடன்பட்ட ஒருவன், தன் அரசனால் மன்னிக்கப்பட்டுத் திரும்புங்கால், தன்னிடம் நூறு வெள்ளிக்காசு கடன்பட்ட, உடன் ஊழியனுக்கு மன்னிக்க மறுத்த காரணத் தால், தான் பெற்ற மன்னிப்பை இழந்து துன்பத்திற் காளானான். (மத். 19:23-35).

574. ''உளபோல் முகத்தெவன் செய்யும் அளவினால்
கண்ணோட்டம் இல்லாத கண்.''

'அளவினால் கண்ணோட்டம்' என்பதனுள் கண்ணோட்டம் காட்டவேண்டிய அளவு குறிக்கப்பட்டது. எத்தனை முறை மன்னிப்பது என்னும் அளவு விளக்கப்படுகிறது.

''பின்னர் சீடர் இயேசுவை அணுகி, 'ஆண்டவரே! என் சகோதரன் எனக்கு எதிராகக் குற்றம் செய்துவந்தால், நான் அவனை எத்தனை முறை மன்னிப்பது? ஏழு முறை வரைக்குமா?' என்று கேட்டார். அதற்கு இயேசு கூறியதாவது: 'ஏழு முறை என்றன்று, ஏழு எழுபது முறை என உனக்குச் சொல்லுகிறேன்' என்றார்.'' (மத்.18;21-22). அஃதாவது எப்போதுமே!

மரத்திற்கும் மனிதனுக்கும் ஒரு தொடர்புண்டு. மரத்தை வளர்ப்பது மண். அம்மரத்தை அழிப்பதும் அம்மண்ணே. மண்ணில் நிலைபெறும் மரம் தன் கடமையைச் செவ்வனே ஆற்றும்வரை அம்மண் அம்மரத்தை வளர்க்கிறது. என்று அம் மரம் தன் கடமையைச் செய்யவில்லையோ அன்றே அம் மரத்தை அம்மண் அழிக்கிறது. மரத்தின் கடமை என்ன? மரத்தின் ஒவ்வொரு பகுதியும் மண்ணிலிருந்து, தான் பெற்ற சாரமாம் சக்தியை அடுத்த பகுதிக்குக் கடத்த வேண்டும்.

தான் பெற்றதைக் கொடுக்காதவிடத்து அம்மரம் அழியத் தலைப்படுகிறது. வளர்த்த மண்ணே அதை அழித்துவிடுகிறது.

இவ்வாறே மனிதர்களும் தாங்கள் பெற்ற மன்னிப்பாம் கண்ணோட்டத்தை மற்றவர்களிடமும் காட்டக் கடமைப்பட்டவர்கள். மற்றவர்களுக்கு இவர்கள் மன்னியாவிடத்து, இவர்களும் மன்னிப்பைப் பெறாது அழிவர். (மத். 18:23-35).

ஆகவே, மண்ணோடு இயைந்த மரத்தைப் போன்று, கண்ணோடு இயைந்து கண்ணோடாதவர் அழிவர்.

576. ''மண்ணொடு இயைந்த மரத்தனையர் கண்ணொடு
இயைந்துக ண்ணோடா தவர்.''

கண்ணை அழகுபடுத்துவதும், கண்ணையுடைய மனிதனைச் சிறப்பிப்பதும் கண்ணோட்டம். கண்ணோட்டத்துடன் ஒத்தியங்க வேண்டிய அக்கண், கண்ணையுடைய மனிதன் தன்னிலை மாறியவிடத்து, அம்மனிதன் அழிவதற்குக் காரணமாயும் அமைந்து விடுகிறது.

கண்ணோட்டமும் மண்ணைப்போன்று ஒரு பொது விதியையுடையது என்பதே வள்ளுவர் கொள்கை. ஆகையால்தான், 'கண்ணோட்டத்துள்ளதுலகியல்' என்றார். நமது மேன்மைக்கு அடிப்படைக் காரணமாய் இருப்பதும் இம்மன்னிப்பே. இறைவன் நமக்கு ஈட்டித் தந்துள்ள அருட்செல்வமாம் மன்னிப்பில் நாம் பங்குபெற, மற்றவர் தவற்றை நாம் மன்னிக்க ஆயத்தமாயிருக்க வேண்டும்.

ஆகவே, இவ்விருவித கண்ணோட்டம் இன்றேல், சான்-றாண்மை பழுதுறும்.

## கண்ணோட்டம்

### சுருக்கம்

இரக்கம் காட்டுதல், குற்றம் செய்தவரை மன்னிக்கும் மனப்பான்மை. (சால்பூன்றியதூண் என்பதால் இப்பொருளே சிறக்கும்).

571. “கண்ணோட்டம் என்னும் கழிபெருங் காரிகை
உண்மையான் உண்டிவ் வுலகு.”

(ஆட்சி புரிவோரிடத்துக் காணப்படவேண்டிய) - மிகப்பெரும் மிகச் சிறந்த அழகுமிக்க பண்பாகிய இரக்கமனப்பான்மை உள்ளதால்தான், உலகமே நிலைத்துள்ளது. (குற்றம் செய்யாதவரோ, குற்றத்துக்காக மன்னிப்புத் தேட வேண்டாத நிலையோ, இரக்கம் தேவைப்படாத நிலையோ உலகில் இல்லை ஆதலான்).

‘கண்ணோட்டம் என்னும் காரிகை’ என்றதை, ‘உண்டி சுருங்குதல் பெண்டிர்க்கழகு’, ‘காவல் தானே பாவையர்க் கழகு’, ‘ஊக்கமுடைமை ஆக்கத்திற்கு அழகு’ என்பன போல, ‘இரக்க முடைமை ஆட்சியர்க்கழகு’ எனக் கொள்ளலாம். தண்டிப்பதுபற்றி முன்பு கூறியது இரக்கத்தோடு பொருந்த வேண்டும் என்றவாறு.

இம்மைப் பொருளில் இங்ஙனம் கொள்ளலாம். மறுமைப் பொருளிலோ ‘இறைவனின் அருள் இரக்கம்’ என்று பொருள் கொள்ளுதல் சிறக்கிறது. அருளை - அருட்பார்வையைக் காரிகை (பெண்பாலாக) எனக் கூறுவது தவறொன்றுமில்லை. ஆட்சியாளர் காட்டும் இரக்கத்தைவிட இறைவன் காட்டும் இரக்கமே உலகம் நிலைத்திருப்பதற்குத் தலையாய காரணம். ‘இறைவா! எம் குற்றங்களுக்கு ஏற்ப எங்களைத் தண்டிப்பீரேல், உம் திருமுன் நிலைக்கக் கூடியவன் யார்’ என்பது விவிலியவாக்கு. இவ்விருபொருளும் இணைந்தால்தான், கண்ணோட்டம் என்பது சான்றாண்மைப் பண்புகளுள் ஒன்றாகக் கருதப்படவியலும்.

572. “கண்ணோட்டத் துள்ளது உலகியல் அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை.”

உலகம் நிலைபெற்று இயங்குவது மேற்சொன்ன கண்ணோட்டத்தால்தான். இஃது ஆட்சியாளர்க்குச் சிறப்பாகத் தேவை. இல்லையேல், மக்களைக் காக்க வேண்டிய ஆட்சியினரே மக்களுக்குப் பெரும் சுமையாய்விடுவர்.

573. “பண்என்னாம் பாடற்கு இயைபின்றேல் கண்என்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண்.”

பாடலுடன் இசை பொருந்தாவிடில், பண் எதற்கு? அங்ஙனம் அருள் இரக்கப் பார்வை இன்றேல் கண்ணோட்டம் என்பது பயனற்ற சொல். அது, சால்புக்குத் தூணாக இயலாது.

574. ''உளபோல் முகத்தெவன் செய்யும் அளவினால்
கண்ணோட்டம் இல்லாத கண்.''

குற்றத்தை ஊக்கக் கூடிய அளவு மீறிய இரக்கமோ திருந்துவதற்கு வழி செய்யாத அளவு மீறிய கொடுமையோ இன்றி, அன்போடு இரக்கமும் ஒறுப்பும் இணைந்திருந்தால் பயன் உண்டு. அவ்வாறில்லையேல், முகத்தில் இரு கண்களிருந்தும் ஒன்றையும் நன்கு பார்க்க இயலாவிடில் என்னபயன்? (ஆட்சியாளர்க்கு இரக்கப் பார்வையும், ஒறுக்கும் பார்வையும் இணைந்திருத்தல் வேண்டும் என்றவாறு).

575. ''கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம்
அஃதின்றேல்
புண்ணென்று உணரப் படும்.''

ஒருவனுக்கு (ஆன்மீகக்) கண்ணிருந்தால், அதற்கு அணிகலன் மேற்கூறிய இருபார்வையே. அவையின்றேல், ஆட்சிமுறைக்குப் புண் உள்ளது போலாகும்.

576. ''மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்.''

மரத்திற்குக் கண் (கணு) உண்டு. ஆனால், அது எதையும் பார்க்க இயலாது. அதைப் போல்தான் (அகக்) கண் இருந்தும் இரக்கம் காட்டாத அருள் பார்வை இல்லாத ஆட்சியாளர்.

577. ''கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர்
கண்ணுடையார்
கண்ணோட்டம் இன்மையும் இல்.''

இரக்கம் என்னும் கண்ணோட்டம் இல்லாதவர் கண் இல்லாதவர் போல் எதையும் பார்க்க இயலாதவர். இரக்கம் உள்ளவரோ இரக்கம் இல்லாதவர் போல் ஒழுகுவதில்லை.

578. "கருமஞ் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு
உரிமை உடைத்திவ் வுலகு."

செய்ய வேண்டிய கடமைச் செயல் எவ்வகையிலும் சிதையா மல் இரக்கம் காட்ட வல்லவர் இவ்வுலகையே உரிமையாக்கிக் கொள்ள இயலும். (584-ஆம் குறளைக் காண்க). இரக்கமிகுதி யால் கடமை செய்யாதொழிவது தவறு.

579. "ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணும்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை."

தம்மை வருத்தித் துன்புறுத்தும் பண்பினரிடத்தும் இரக்கம் காட்டிப் பொறுத்துக்கொள்ளும் பண்பே சிறந்தது.

580. "பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்."

அனைவருக்கும் ஏற்புடைய ஒழுக்கமும் பண்பும் (நாகரிகம்) வேண்டுபவர், நஞ்சை உணவில் கலப்பதைக் கண்டும், அதை உண்டு அவரோடு உறவு கொள்வர். இரக்கமனப்பான்மையின் சிகரம் இது.

# 59. ஒற்றாடல்

நல்லாட்சி நடைபெறுவதற்கு இடையூறாக எதிரிகளால் நிகழக்கூடிய சதித் திட்டங்கள், செயல் இவற்றை ஒற்றர் எனப்படும் தக்க ஆட்கள் வாயிலாக இரகசியமாயறிந்துகொண்டு ஆவன செய்தல். ஆட்சிமுறைக்குத் தேவைப்படும் பொச்சாவாமை - விழிப்புணர்வோடு பொருந்திய செயல் இது. (எதிரிகளை அநியாயமாக ஒழிப்பதற்கோ பிறர்க்குத் தீமை செய்யும் பொருட்டோ முற்காலத்தில் பன்முறை நடைபெற்ற உளவாளிகளின் தீய சூழ்ச்சிகளோடு தொடர்பு கொண்டதன்று இது).

581. ''ஒற்றும் உரைசான்ற நூலும் இவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்.''

ஒற்றர்களும் அறிவு புகட்டும் அறநூல்களும் ஆட்சியாளர்க்கு இருகண்களெனத் தெளிதல் வேண்டும்.

582. ''எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் தொழில்.''

நாட்டில் நல்லவர், தீயவர் எல்லாரிடத்தும் நிகழ்பவை எல்லாம், அவ்வப்போது நன்கறிந்துகொள்ளுதல், ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்க்குரிய கடமையாகும்.

583. ''ஒற்றினான் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்தது இல்.''

ஒற்றர்களைக்கொண்டு சிறப்பாகத் தீயவர் - எதிரிகள் செய்திகளை அறிந்துவரச் செய்து, இவ்வறிவினால் எய்தக்கூடிய பயனை ஆய்ந்தறிய இயலாத ஆட்சி வெற்றி பெறாது.

584. ''வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார்
என்றாங்கு
அனைவரையும் ஆராய்வது ஒற்று.''

நாட்டில் நல்லவர், தம் கடமை செய்பவர், ஆட்சியினரது சுற்றத்தார், எதிரிகள் அனைவருடைய செயல்களையும் அறிய முயல்பவனே ஒற்றன் எனப்படுவான்.

585. "கடாஅ உருவொடு கண்ணஞ்சாது யாண்டும்
உகாஅமை வல்லதே ஒற்று."

தோற்றத்தால் யாரும் ஐயுறாத வகையில் உடையணிந்து யாராவது ஐயுற்று நோக்கினால், அதனால் நிலைகுலையாம லிருந்து, துன்புறுத்தினாலுங்கூட உள்ளதை வெளிப்படுத்தாத வலிமை கொண்டவனே ஒற்றனாக உரியவன்.

586. "துறந்தார் படிவத்த ராகி இறந்தாராய்ந்து
என்செயினும் சோர்விலது ஒற்று."

தேவையானால், துறவுக் கோலமும் பூண்டு, சிலசமயங்களில் செல்வதற்கரிய இடங்களுக்கும் சென்று செய்திகளை ஆராய் கையில், ஐயுற்றவர்கள் கையில் அகப்பட்டு எவ்வளவு துன்புறுத்தப்பட்டாலும் சோர்வடையாமல் பணிபுரிவதே ஒற்றர்க்குரிய செயல்.

587. "மறைந்தவை கேட்கவற் றாகி அறிந்தவை
ஐயப்பாடு இல்லதே ஒற்று."

மறைவாக நிகழும் செய்திகளை நல்ல சூழ்ச்சியான முறையில் பிறரிடமிருந்து அறிந்துகொண்டு, அங்ஙனம் கேட்டறிந்தவை எவ்வளவு உண்மை எனத் தீர அறிய முயல் பவனே ஒற்றன்.

588. "ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல்."

ஓரொற்றன் அறிந்து வந்த செய்தியை, வேறோர் ஒற்றன் வாயிலாகவும் அறிந்துகொண்டு ஒப்பிட்டுப்பார்த்து விவேகமுடன் செயல் புரிதல் வேண்டும்.

589. "ஒற்றொற் றுணராமை ஆள்க உடன்மூவர்
சொல்தொக்க தேறப் படும்."

ஓர் ஒற்றன் செய்வதை வேறோர் ஒற்றன் அறியாதவாறு ஒற்றரைக் கையாள வேண்டும். இப்படி மூவர் வெவ்வேறாகச் சென்று செய்தியறிந்த பின் மூவருடைய செய்தியும் ஒத்திருந்தால், அஃது உண்மையெனத் தெளியலாம்.

590. "சிறப்பறிய ஒற்றின்கண் செய்யற்க செய்யின்
புறப்படுத்தா னாகும் மறை."

ஒற்றன் செய்த பணிக்குப் பரிசு, பதவி முதலிய சிறப்புகள் செய்ய வேண்டா. செய்தால் அவன் யார்? என்ன செய்தான்? என்ற செய்திகள் வெளிப்பட்டுக் காரியம் கெட்டுவிடும்.

இவையனைத்தும் பொருளாட்சியர்க்கே பொருந்துவது காண்க. அருளாட்சியில் ஒற்றருக்குச் சிறப்பான இடமில்லை. ஆனால், விவேகத்துடனும் விழிப்புடனும் செய்திகளை ஆய்வது தவறன்று - தேவையே. அருளாட்சியைக் கவிழ்க்க எதிரிகள் இல்லாமல் இல்லை. அவர்கள் என்ன செய்கிறார்கள்? எப்படிச் செயல்புரிகிறார்கள்? என்று நம்பத்தக்க - தகுதியுள்ளவர் வாயிலாகத் தெரிந்துகொள்வது நன்மையே பயக்கும். இப்பொருளில் மிகக் குறுகிய அளவில் அருளாட்சியிலும் ஒற்றாடல் உண்டு என்பது பிழையன்று.

# 60. ஊக்கம் உடைமை

ஆட்சிபுரிவதில் ஏற்படக்கூடிய இடையூறுகளில் மனத்துள் ஊக்கம் குறையாமை.

591. "உடைய ரெனப்படுவது ஊக்கம்அஃ தில்லார்
உடையது உடையரோ மற்று."

மதிப்புக்குரிய ஒன்றை உடையவர் என்று சொல்லத்தக்கது ஊக்கம் என்பதே. இஃது இல்லாதவர் வேறு எதைக் கொண்டிருந்தாலும் ஒன்றுமில்லாதவரே.

592. "உள்ளம் உடைமை உடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்."

(ஊக்கமிகுந்த) உள்ளம் உடைமையே 'உடைமை' என்னும் பெயருக்கு ஏற்றது. வெறும் பொருட் பொருள் நிலையில்லாததால் நீங்கிவிடும். (ஆகவே, மறுமைக்கும் நிலையான அருட் பொருளையே நாடுக என்றவாறு).

593. "ஆக்கம் இழந்தேமென்று அல்லாவார் ஊக்கம்
ஒருவந்தம் கைத்துடை யார்."

ஒருநிலையான மனத்தோடு ஊக்கத்தையே கைப்பொருளாகக் கொண்டவர் வேறுபொருளை (செல்வத்தை) இழந்தால் 'இழந்துவிட்டோமே' என்று மனம் கலங்கார்.

594. "ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்க முடையா னுழை."

தளராத ஊக்கம் உடையானிடம், செல்வம் தானே வழிகேட்டுக்கொண்டு வந்தடையும்.

595. "வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனையது உயர்வு."

நீர்ப்பூக்களின் தாள் நீர் இருக்கும் அளவின. அதுபோல் மக்களின் உயர்வு அவர்களது உள்ளத்து ஊக்கத்தைப் பொறுத்தது.

596. ''உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து.''

ஒருவன் நினைப்பது உயர்வான சிந்தனையாக இருத்தல் வேண்டும். நினைத்தது நினைத்தவாறு நிறைவேறாவிடினும் உயர்வான சிந்தனை நீக்கப்படலாகாது.

597. ''சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றும் களிறு.''

யானை தன் உடலில் புதையுண்ட அம்பினால்கூட தளர்வுறாது தன்பெருமையை நிலைநிறுத்தும். அதுபோல் ஊக்கம் எனும் வலிமை கொண்டவர் தமக்கு மனச்சிதைவு - துன்பம் உண்டாகும்போதும் பின்வாங்கார்.

598. ''உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து
வள்ளியம் என்னும் செருக்கு.''

இத்தகைய உள்ள எழுச்சி இல்லாதவர் இவ்வுலகில், 'அரியதொன்று சாதித்து மக்களுக்கு நன்மை செய்ய வியலும்' எனப் பிறர் தன்மைப் பாராட்டும் அளவுக்கு மதிப்பைப் பெறமாட்டார்கள்.

599. ''பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.''

யானை பெரியது; கூர்மையான கொம்புகளையுடையது ஆயினும், புலி அதைத் தாக்கினால் அஞ்சும் தன்மையது. உடல் உருவத்தால் செய்ய இயலாதது உள்ளத்தின் ஊக்கத்தால் சாதிக்க வியலும்.

600. ''உரமொருவற்கு உள்ள வெறுக்கைஅஃ தில்லார்
மரம்மக்க ளாதலே வேறு.''

ஒருவனுக்கு உறுதி தருவது உள்ளத்து எழுச்சியாம். அவ்வெழுச்சி இல்லாதவர் பார்ப்பதற்கு மக்களேயாயினும் எழுச்சியற்ற மரத்துக்கு ஒப்பாவர்.

# 61. மடியின்மை

601. "குடியென்னும் குன்றா விளக்கம் மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும்."

வாய்மைக் குடி என்னும் சான்றோர் குடும்பமாகிய மங்காத விளக்கு, சோம்பல் என்னும் இருள் படரப்படர மங்கிக் கெடும்.

602. "மடியை மடியா ஒழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்."

குடும்பத்தை உண்மையான சான்றோர் குடும்பமாகக் காக்க விரும்புபவர், சோம்பல் ஒருவனை மடியச் செய்துவிடும் என நினைத்து ஒழுக வேண்டும்.

603. "மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியும் தன்னினும் முந்து."

வாழ்வை மடியச் செய்யக்கூடிய சோம்பலை மேற்கொண்டு ஒழுகும் பேதை பிறந்த குடும்பம், தான் அழிவதற்கு முன்பே அழிந்துவிடும்.

604. "குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட உஞற்றி லவர்க்கு."

சோம்பலில் சிக்கியவராய் அரிய செயல் எதுவும் செய்யா தவர் குடும்பம் அழிந்து குற்றங்கள் பெருகும்.

605. "நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன்."

எதிலும் தாமதம், விழிப்பின்மை, சோம்பல், அளவுமீறிய தூக்கம் இந்நான்கும் ஒருவனைச் சீரழியச் செய்யும் தன்மையன. அங்ஙனம் சீரழிபவன் இவற்றைப் பெரிதும் விரும்புவான்.

606. ''படியுடையார் பற்றமைந்தக் கண்ணும் மடியுடையார்
மாண்பயன் எய்தல் அரிது.''

இறைவன், ஒருவனுக்கு நிரம்பப் படியளந்தாலும், அதனால் வாழ்க்கையில் பற்றுக்கோடு உறுதியானாலும், சோம்பலுடையவர் அதிகப் பயன் அடைவதில்லை.

607. ''இடிபுரிந்து எள்ளுஞ்சொல் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட உஞற்றி லவர்.''

சோம்பிய வாழ்வை நடத்தி எந்த அரிய செயலையும் செய்ய முயலாதவரை எவரும் இடித்துக் கூறி இகழ்ச்சியாகப் பேசுவர்.

608. ''மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்கு
அடிமை புகுத்தி விடும்.''

சோம்பல் என்பது ஒரு குடும்பத்தில் தங்கிவிட்டால், அது அக்குடும்பத்தை எதிரிகளுக்கு அடிமையாக்கிவிடும்.

609. ''குடியாண்மை யுள்வந்த குற்றம் ஒருவன்
மடியாண்மை மாற்றக் கெடும்.''

சான்றாண்மை பொருந்திய வாழ்வில் நுழையக் கூடிய குற்றங்கள், ஒருவன் சோம்பலை ஆளும் நிலையை அதாவது சோம்பி வாழும் முறையை மாற்றுவதால் ஒழியும்.

610. ''மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு.''

சோம்பல் இல்லாத ஆட்சியினர், முன்பு சோம்பலோடு இருந்ததால் இழந்த (பொருளை) எல்லாம் மீண்டும் ஒருங்கே அடையப் பெறுவர்.

# 62. ஆள்வினை உடைமை

மெய்ம் முயற்சியுடைமை: (ஊக்கம் = மனமுயற்சி)

611. "அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்."

குறிப்பிட்ட செயல் செய்தற்கரியது; உடலுழைப்பு மிக வேண்டும் என எண்ணி மனந்தளரலாகாது; செய்ய இயலும் என்னும் தன்னம்பிக்கையை முயற்சியே தரும்.

612. "வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு."

எடுத்த காரியத்தை முழுதும் செய்து முடிக்காது அரைகுறையாக விடுபவர்க்கு உலகில் தீர்வான வாழ்வு இராது. ஆகவே, செய்ய வேண்டிய செயலுக்குத் தேவையான மெய்ம்முயற்சிக்கு அஞ்சி பின்வாங்கலாகாது.

613. "தாளாண்மை என்னுந் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை என்னும் செருக்கு."

வேண்டியவர்க்கு வேண்டிய அளவு நன்மை செய்ய வேண்டும் என்னும் மனநிலை (வேளாண்மை) பெருமுயற்சியுடன் உழைக்க வேண்டும் என்னும் மனநிலையைப் பொறுத்தது. (தாளாற்றித்தந்த பொருள்...... வேளாண்மை செய்தற் பொருட்டு, என்னும் குறளை நினைவில் கொள்க).

614. "தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும்."

உடலுழைப்புடன் கூடிய பெருமுயற்சியில்லாதவன், மேற்கூறிய வேளாண்மை புரிய நினைப்பது, பேடியின் கையில் வாள் போல. அஃதாவது வீணானது.

615. "இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண்."

உழைப்பின்றி இன்பமாயிருத்தலை விரும்பாது, எப்பாடு பட்டாகிலும் நினைத்ததை செய்து முடிக்க வேண்டும் என நினைப்பவர், தமது துன்பத்தை மட்டுமன்று, உறவினர், தோழர் ஆகிய பிறரது துன்பத்தையும் தாங்கக் கூடிய தூண் போலிருப்பர்.

616. "முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்."

முயற்சி (அருள் பொருள் ஆகிய) செல்வத்துக்கு வழியாகும். முயற்சியின்மையோ இரண்டனையும் இழக்கச் செய்யும்.

617. "மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள்."

முயற்சிக்கு அஞ்சும் சோம்பேறியிடம் வறுமையே உருவெடுத்துக் குடிகொள்ளும். சோம்பலின்றி உழைப்பவனிடம் செல்வமே உருவெடுத்து வந்து குடிகொள்ளும்.

618. "பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்து
ஆள்வினை இன்மை பழி."

செல்வமின்மை யார்க்கும் இழிவன்று. அறிய வேண்டியதை அறிந்து, உழைப்பும் முயற்சியும் மேற்கொள்ளாதிருத்தலே பழிப்புக்கு ஆளாக்கும்.

619. "தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்."

தெய்வ வல்லமையாலும் காரியம் நிறைவேறாது எனத் தோன்றினாலும் உடலுழைப்புடன் கூடிய முயற்சி ஏற்றபலனை அளிக்காமல் போகாது. (உழைப்பை வலியுறுத்தும் நோக்கமுடன் மிகைபடக் கூறியது. தெய்வ வல்லமையால் ஆகாதது ஒன்றுமில்லை).

620. "ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்."

தளர்வின்றி, குறைவின்றி முயற்சிசெய்பவர் தெய்வ வல்லமை என்னும் ஊழையும் வெல்ல இயலும் (இதுவுமதே).

# 63. இடுக்கண் அழியாமை

துன்பம் நிகழுங்கால் மனங்கலங்காமை.

621. "இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வது அஃதொப்பது இல்."

துன்பம் வரும்போது துயருறுவதற்கு மாறாக மகிழ்க. துன்பத்தை எதிர்த்து வெல்லக் கூடியது இத்தகைய மகிழ்ச்சியே. (மகிழ்ச்சி மனத்திடனைக் குறிக்கும் - மனத்திடன் துன்ப நிலையை வெல்ல உதவக் கூடியது).

622. "வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும்."

வெள்ளம் போல் துன்பங்கள் பெருக்கெடுத்துவரினும், மெய்யறிவு உடையவன், 'அவற்றை வெல்ல இயலும்' என்னும் மனத்திடனுடனிருந்தால், அவை நீங்கிவிடும்.

623. "இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு
இடும்பை படாஅ தவர்."

துன்பம் வரும்போது அளவு கடந்த வருத்தத்துக்கு ஆளாகாதவாறு பார்த்துக் கொள்பவர் துன்பத்திற்கே துன்பம் உண்டாக்குபவர் ஆவர்.

624. "மடுத்தவா யெல்லாம் பகடன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து.

தடை உள்ள இடங்களிலும் (தளர்வின்றி வண்டி இழுத்துச் செல்லும்) எருது போல சோர்வுறாமல் துன்பத்தைத் தாங்குவோமாயின், இறுதியில் துன்பத்தை வெல்வோம்.

625. "அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
இடுக்கண் இடுக்கட் படும்."

துன்பங்கள் அடுக்கடுக்காய் வரினும், மனஉறுதியைத் தளர் விடாதவன் அனைத்தையும் வென்றுவிடுவான்.

626. "அற்றேமென்று அல்லற் படுபவோ பெற்றேமென்று
ஓம்புதல் தேற்றா தவர்."

இன்பம் தரும் செல்வம் வரும்போது 'செல்வம் பெற்றோமே, பலர்க்கும் நன்மை செய்வோம்' என்று வாழ்க்கையை அமைத்துக்கொள்ளாதவர், செல்வம் இழந்தகாலத்து 'செல்வம் இழந்தோமே' என வருந்துவதில் பயனில்லை. அப்போதும் மனவுறுதியுடன் செயல்புரிய முனைதல் வேண்டும்.

627. "இலக்கம் உடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதாம் மேல்."

மனித உடம்பு துன்பத்துக்கு இலக்கானது என்று அறிந்தவர், துன்பம் வரும்போது அதைத் துன்பமாகவே கருதார்.

628. "இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்பம் உறுதல் இலன்."

'இருள்சேர் இருவினை' யின் காரணமாக இன்று மனிதனுக்குத் துன்பம் இயல்பே என்றுணர்ந்தவன் துன்பம் வரும்போது முழுதும் நிலைகுலைய மாட்டான்.

629. "இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன்."

இன்பம் வரும்போது அதன்மீது மிதமிஞ்சிப் பற்றுக் கொள்ளாதவன், துன்பம் வரும்போது அதனால் அடியோடு நிலை குலைந்துவிடான்.

630. "இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு."

ஒருவன் துன்பத்தையே இன்பமாகக் கொள்வானாயின், அஃது அவனுடைய எதிரிகளும் போற்றக்கூடிய சிறப்புடைய தாகும். (இவ்விலக்கணத்துக்கு இலக்கியமாய் உள்ளவன் ஐந்தவித்தான் ஒருவனே என்பதறிக).

# 64. அமைச்சு

அரசாட்சியில் அமைச்சரது பணி.

631. "கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு."

செய்யவேண்டிய செயல், அதைச் செய்து முடிக்கத் தேவைப் படும் துணிவு, அதற்கேற்ற கருவி, காலம், செயலைத் தொடங்க வேண்டிய முறை இவற்றையெல்லாம் மாண்புற நோக்கி நன்கு அறிந்து செயல்படுபவனே அமைச்சன்.

632. "வன்கண் குடிகாத்தல் கற்றறிதல்
ஆள்வினையோடு
ஐந்துடன் மாண்டது அமைச்சு."

அஞ்சாமை, குடிகளைத் காப்பதில் விழிப்பு, ஆட்சிக்கு ஏற்ற நூல்களைக் கற்றறிதல், தேவைப்படும் முயற்சி ஆகிய நான்கிலும் சிறந்து, ஐம்புலன்களை உயர்பண்புடன் தூய்மை யோடு காப்பவனே அமைச்சன்.

633. "பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்லது அமைச்சு."

(ஆட்சி முறைக்கு எதிரிகளானவர்க்குத் துணைபுரிபவரைப் பிரித்து விடுதலும், (ஆட்சியாளர்க்குத் துணையானவரைப் பிரிந்து போகாமல்) காத்துக் கொள்ளுதலும், தம்மிடமிருந்து பிரிந்தவர்களை மீண்டும் சேர்த்துக் கொள்ளுதலும் செய்ய வல்லவனே அமைச்சனாவான்.

634. "தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு."

ஆட்சிமுறைக்குரிய காரியங்களை ஆய்ந்து அறிதலிலும் செய்யத் தகுந்தவற்றைச் செய்தலிலும் சொல்ல வேண்டியதை ஐயமின்றிச் சொல்லத் துணிதலிலும் வல்லவனே அமைச்சன்.

635. "அறனறிந்து ஆன்றமைந்த சொல்லான்எஞ் ஞான்றுந்
திறனறிந்தான் தேர்ச்சித் துணை."

அறக் கூறுகளை அறிந்துகொண்டு, அறிவு நிறைந்தமைந்த சொல் பேசுபவனாய், எப்போதும் ஆற்றவேண்டிய கடமைகளை ஆற்றத் தெரிந்தவனே ஆட்சியர்க்குக் கைதேர்ந்த துணையாவான்.

636. "மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்
யாஉள முன்நிற் பவை."

நுண்ணிய அறிவு, நூல் அறிவு இவை உடைய அமைச்சருக்கு இவற்றினும் மிக நுட்பமுள்ளதாய் முன்னிற்பது யாது?

637. "செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல்."

செயல்முறைகளை அறிந்தவிடத்தும், உலகமுறைகளையும் அறிந்து (பகுத்தறிவுக்கேற்ப) செயல்புரிதல் வேண்டும்.

638. "அறிகொன்று அறியான் எனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன்."

ஆட்சித்தலைவன் தானும் அறியாதவனாய், பிறர் சொல்லையும் கேளாதவனாய் இருப்பின், அவனுக்குத் தக்க உறுதி கூறுவது அமைச்சரது கடமை.

639. "பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்
எழுபது கோடி உறும்."

கூட இருந்துகொண்டே தீங்கு இழைக்க நினைக்கும் மந்திரியைவிடப் பல கோடி பகைவர்களே மேல்!

640. "முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவே செய்வர்
திறப்பாடு இலாஅ தவர்."

செயலாற்றும் திறமையில்லாதவர், ஆற்றுமுறைகளை முன்னரே ஆய்ந்தறிந்தாலும் இறுதியில் அரைகுறையாகவே செய்து முடிப்பர்.

'அமைச்சர்' பற்றி இங்குக் கூறப்படுவது அருளாட்சியில் பணிபுரியும் (உழவர் - 14 குறள்) அருளாட்சித் துணைவர் (தொண்டர்) Ministers அவர்க்கும் பொருந்தும்.

# 65. சொல் வன்மை

ஆட்சி நடத்துவோர்க்குத் தேவைப்படும் பேச்சுத் திறன்.

641. ''நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம்
யாநலத்து உள்ளதூஉம் அன்று.''

நாவன்மை என்னும் நலன் (ஆட்சியாளர்க்குச் சிறப்பான) உடைமையாகும். அது வேறு பல நலன்களுள் அடங்குவதன்று.

642. ''ஆக்கமுங் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு.''

நன்மை - தீமை, வாழ்வு - தாழ்வு இவை சொல்வன்மையால் நேரக் கூடுமாதலால், பேசுகையில் சோர்வுறாமல் காத்துக் கொள்ளல் வேண்டும்.

643. ''கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்.''

கேட்பவரது மனத்தைத் தம்பால் ஈர்த்துக்கொள்வதாய், நேரில் கேளாதவரும் கேட்க விரும்பும் அளவுக்குப் பிறரைக் கவர்வதாய் அமைய வேண்டும் சொல்வன்மை.

644. ''திறனறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனினூஉங்கு இல்.''

சொல்வதைச் சொல்ல வேண்டிய முறையிலும் திறமுடனும் சொல்லுக. அப்போதுதான் அஃது அறமும் பொருளும் நிறைந்ததாயும் பேச்சில் மிகச்சிறந்ததாயும் இருக்கும்.

645. ''சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து.''

'யான் பேசும் இச்சொல்லைவிட வலிமையுள்ளது வேறில்லை' என்னும் வகையில் ஆய்ந்து அறிந்து பேசுக.

646. ''வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொல் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள்.''

பேசும்போது பிறர் விரும்பிக்கேட்டு நற்பயனடையுமாறு பேசுவதும், பிறர் பேசும்போது அவர்களது பேச்சின் உட் கருத்தை அறிந்து பயன் அடையும் முறையில் கேட்பதுமே உயர்பண்பு; மாசற்ற மனம் உள்ளவரது கொள்கை.

647. ''சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது.''

சொல்வன்மையுள்ளவனாய், உண்மையைச் சொல்வதில் சோர்வோ அச்சமோ இல்லாதவனை வெல்வது எதிரி களாலும் இயலாது.

648. ''விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.''

சொல்ல வேண்டியதை நன்கு வரிசைப்படுத்தி இனிமை யாகப் பேச வல்லவராயின், உலகு அதனை விரைந்து ஏற்கும்.

649. ''பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்லல் தேற்றா தவர்.''

குற்றம் குறை இன்றிச் சுருங்கச் சொல்லித் தெளியவைக்க இயலாதவர், பல (வெறும்) சொற்களை அடுக்க விரும்புவர்.

650. ''இணருழ்த்தும் நாறா மலரனையர் கற்றது
உணர விரித்துரையா தார்.''

தாம் கற்றதை விளக்கிச் சொல்ல இயலாதவர், கொத்தில் மலர்ந்தும் மணம் தராத பூக்களை ஒப்பர்.

இவை அருள், பொருள் ஆட்சியினர் அனைவருக்குமே பொருந்தும்.

# 66. வினைத்தூய்மை

செயல்களில் குற்றம் இன்மை

651. "துணைநலம் ஆக்கம் தரூஉம் வினைநலம்
வேண்டிய எல்லாம் தரும்."

பிறரைத் துணையாகக் கொள்வதால், விளையும் நலன் ஒரு வேளை பொருள் ஆக்கம் தரக்கூடும். (சான்றாண்மையினரைத் துணைகொள்வது அருள் ஆக்கத்துக்கு வழியாகலாம்). ஆனால், தன் (நற்) செயலால் விளையும் நன்மையோ, வேண்டிய எல்லாம் அஃதாவது, இம்மையில் அருளும் பொருளும் பேரின்பத் தொடக்கமும், மறுமையில் பேரின்ப நிறைவாகிய வீடுபேறு மாகும்.

652. "என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை".

இம்மைக்கும் மறுமைக்கும் பொதுவாக உரிய நன்மையையும், அதனால் வரும் புகழையும் பயவாத செயல்களை, என்றுமே நீக்கி வாழ்தல் வேண்டும்.

653. "ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை
ஆஅதும் என்னு மவர்."

மேன்மேலும் முன்னேற வேண்டும் என விரும்புவோர் புகழோடு பொருந்திய நல்வாழ்வைக் கெடுக்கக்கூடிய செயல்களைத் தவிர்க்க வேண்டும்.

654. "இடுக்கட் படினும் இளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்."

துன்பத்தில் அகப்படினும், தெளிவான அறிவுடையவர் இழிவான செயல்களைச் செய்யார்.

655. "எற்றென்று இரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று."

'என்ன தவறு செய்துவிட்டோம்' எனப் பின்னர் வருந்தச் செய்யும் செயல்களைச் செய்ய வேண்டா. தவறிச் செய்து விட்டால் மீண்டும் அத்தகைய செயல்களைச் செய்யாதிருக்க விழிப்பாயிருத்தல் வேண்டும்.

656. "ஈன்றாள் பசிகாண்பான் ஆயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை."

தன்னைப் பெற்றவள் பசியால் வருந்துவதைக் கண்டாலுங் கூட, சான்றாண்மைக்கு எதிரான செயல்களைச் செய்யாதே.

657. "பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை."

பிறர் பழிப்புக்கு ஆளாக்கக் கூடிய தீய செயல்களால் ஒருவன் அடையக்கூடிய செல்வத்தைவிடச் சான்றோர்க்கேற்படும் மிகுந்த வறுமை நிலையே மேல்.

658. "கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு அவைதாம்
முடிந்தாலும் பீழை தரும்."

செய்யத்தகாதவை என விலக்கப்பட்ட செயல்களை ஒருவன் விலக்கிவிடாமல் செய்வானானால், அவற்றால் இறுதியில் தீமையே நிகழும்.

659. "அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை."

பிறரை வருத்தத்துக்குள்ளாக்கி அடைந்த பொருள் எல்லாம் இறுதியில் தன்னையே துன்புறுத்தி, நீங்கியே போய்விடும். நற்செயல்களோ தொடக்கத்தில் துன்பம் தந்தாலும் இறுதியில் நன்மையே பயக்கும்.

660. "சலத்தால் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துள்நீர் பெய்திரீஇ யற்று."

வஞ்சகமாகப் பொருள் தேடி அதைப் பாதுகாத்தல், பச்சை மண்ணால் குடம் செய்து, அதில் தண்ணீர் ஊற்றிவைப்பது போலாகும்.

இவை அனைத்தும் அருள், பொருள் இருமைக்கும் பொருந்தும்.

# 67. வினைத்திட்பம்

தக்க செயல் புரிவதில் மனஉறுதி

661. "வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்
மற்றைய எல்லாம் பிற."

செயலில் உறுதி நிலை என்பது மன உறுதியைப் பொறுத்தது. மன உறுதியின்றேல் பொருள், படை முதலியன இருந்தும் பயனில்லை.

662. "ஊறொரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்
ஆறென்பர் ஆய்ந்தவர் கோள்."

ஆய்ந்தறிந்தவர் கொள்கையாவது: பிறர்க்குத் தீங்கு செய்யாமை, ஒரு செயலை மேற்கொண்டபின் அது நன்கு செய்ய இயலவில்லையெனில், மனந்தளராமை ஆகிய இரண்டின் வழியாகும்.

663. "கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை இடைக்
கொட்கின்
எற்றா விழுமந் தரும்."

இறுதியில் வெளிப்படுமாறு தொழிலைச் செய்வதே ஆண்மை. இடையில் வெளிப்பட்டால் பெருந்துன்பம் தரக்கூடும். (ஒரு காரியத்தைத் தொடங்கியதும் எல்லோருக்கும் தெரியும்படியாகப் பறைசாற்றுவது ஒருவித பலவீனம். சில சமயங்களில் அது துன்பத்துக்கும் வழியாகலாம்).

664. "சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்."

வாய்ப் பேச்சு யாருக்கும் எளிது. சொன்னதைச் சொன்னவாறு செய்து முடித்தலே அரிய செயல்.

665. "வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்
ஊறெய்தி உள்ளப் படும்."

ஆட்சியில் ஒன்றைச் செய்தற்குரிய முறையில் செய்து, சிறப்பும் மாண்பும் அடைந்தவர்கள் ஆட்சித் தலைவரிடமும் மக்களிடமும் நன்மதிப்புப் பெறுவர்.

666. ''எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.''

ஒரு காரியத்தைச் செய்ய எண்ணுபவர் உறுதி மனம் உடையவரானால், நினைத்ததை நினைத்தவாறு செய்து முடிப்பர்.

667. ''உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்
தேர்க்கு
அச்சாணி அன்னார் உடைத்து.''

சில சமயங்களில் உருவிற் சிறியவர்களாகத் தோன்றுபவர் பெரிய செயல்களைச் செய்து முடிக்க வல்லவர் ஆதலின், செய்ப வருடைய (மன உறுதியைக் கணிக்காமல்) உருவைக்கண்டு அவ மதித்தலாகாது. மிகப் பெரிய தேர்க்கு இன்றியமையாதது சிறிய தொரு அச்சாணியே.

668. ''கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது
தூக்கங் கடிந்து செயல்.''

ஒரு காரியத்தைச் செய்ய இயலும் என்று தெளிவாகக் கண்ட பின் எதற்கும் மனம் தளராமல் செயலில் இறங்க வேண்டும்.

669. ''துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை.''

எத்துணை துன்பம் வரினும், இறுதியில் இன்பம் பயக்கக் கூடிய செயலைத் துணிவுடன் மேற்கொள்க.

670. ''எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டாது உலகு.''

(படை, அரண், பொருள் முதலிய பல) திண்ணிய சாதனங்கள் இருப்பினும், செயல்புரிய வேண்டிய மனத்திண்மை இல்லாதாரை உலகம் மதிக்காது.

# 68. வினைசெயல்வகை

பல்வேறு செயல்களை மேற்கொள்ளும் வகை

671. "சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது."

ஆராய்ச்சி செய்வதன் நோக்கம் மனத்தெளிவு பெறுவது; செயலைச் செய்யத் துணிவு பெறுவது. ஆகவே, அவ்வாறு துணிவு பெற்றபின்னர் செய்வதற்குக் காலம் தாழ்த்துவது தீங்கு நேர வழியாகலாம்.

672. "தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

காலம் தாழ்த்திச் செய்யக் கூடியதைக் காலம் தாழ்த்திச் செய்யலாம். காலம் தாழ்த்தக் கூடாததைத் தாழ்த்தாமல் செய்தல் வேண்டும்.

673. "ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால்
செல்லும்வாய் நோக்கிச் செயல்."

இயலும் வழிகளிலெல்லாம் செய்யத் தக்கதைச் செய்வது நன்று. இயலாத நிலையில் கைகூடும் காலம், வகை வழிகளைப் பார்த்துச் செய்க.

674. "வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும்."

செய்ய வேண்டிய செயல், நீக்க வேண்டிய பகை இவற்றைச் செய்யவோ நீக்கவோ இயலாவிடில் மிஞ்சுவது, அவித்தபின்னும் (அவிந்தது போலத் தோன்றினாலும்) அவியாமலே இருக்கும் தீப் போலத் தீயதான நிலையே.

675. "பொருள்கருவி காலம் வினையிடனொடு ஐந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்."

பொருள், கருவி, காலம், வினை, இடம் இவை ஐந்தையும் ஐயம் தீர ஆய்ந்து பார்த்த பின்னரே செயலில் இறங்க வேண்டும்.

676. ''முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.''

ஒரு காரியம் செய்து முடிக்கத் தேவைப்படும் முயற்சியும், அதற்கு ஏற்படக்கூடிய இடையூறும், செயல் முடிவுற்ற பின்னர் உண்டாகும் பயனும் ஆய்ந்து செயல்புரிக.

677. ''செய்வினை செய்வான் செயல்முறை அவ்வினை
உள்ளறிவான் உள்ளம் கொளல்.''

செய்ய வேண்டிய காரியத்தைச் செய்பவன் பின்பற்ற வேண்டிய முறை யாதெனில், அத்தகைய செயலை முன்பு செய்து பழக்கமுள்ளவன் அனுபவத்தை அறிந்து செய்வதாகும்.

678. ''வினையால் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று.''

செய்கின்ற ஒரு செயலால் மற்றொரு செயலையும் அதே நேரத்தில் முடித்துக்கொள்ள நினைப்பது, ஒரு மதயானையோடு மற்றொரு மதயானையைப் பிணித்தது போலாம்.

679. ''நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை ஒட்டிக் கொளல்.''

ஆட்சி முறையில் நண்பரோடு மிக்க நட்புக் கொண்டாடுவதைவிடப் பகைவர்க்குப் பகையானவரை நண்பராக்கிக் கொள்ளுதல் பயன் தரக்கூடியது.

680. ''உறைசிறியார் உள்நடுங்கல் அஞ்சிக் குறைபெறின்
கொள்வர் பெரியார்ப் பணிந்து.''

ஆட்சிபுரியும் நிலம் சிறிதாயின், வலியார் எதிர்க்க நேர்ந்தால், அங்கு வாழ்வோர் அஞ்சும்படி விடாமல், உடன்பாடு செய்துகொள்வதே நல்லது. அப்போது வலியார் அதை ஏற்பர்.

இக்கருத்துகள் பொருளாட்சிக்குச் சிறப்பாகப் பொருந்தும்; அருளாட்சியர்க்கும் பொருந்துவது காண்க.

# 69. தூது

அயல்நாட்டவரிடம் தூது செல்பவர் தன்மை. பொது மக்க ளுக்கும் பொருந்தும். அருளாட்சியில் இறைவனுடைய தூதுவ ராய்ச் செல்வோர்க்குச் சிறப்பாகப் பொருந்தும் பண்புகள்.

681. ''அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.''

'அன்பின் வழியது உயிர் நிலை' யாதலினாலும் அன்புடைமை வாய்மைக் குடிப்பிறந்தவர்க்கே வாய்க்க இயலுமாதலாலும், அன்புடைமை, ஆன்ற குடிப்பிறத்தல், ஆட்சித்தலைவர்கள் எதிர்பார்க்கும் பண்புடைமை ஆகிய இம் மூன்றும் தூதுரைக்கச் செல்பவர்க்கு இன்றியமையாதன.

இவை இறைவனது அருள் வாக்குத் தூதுரைப்பவர்க்கு மிகச் சிறப்பாகத் தேவைப்படுபவை. இக்குறளில் கூறப்படும் 'வேந்து' இறைவனாகிய ஐந்தவித்தானேயாவர். அவர் தம் தூதுரைக்குமாறு சீடரை உலகெங்கும் அனுப்பியது ஓர்க.

682. ''அன்பறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்
பார்க்கு
இன்றி யமையாத மூன்று.''

சான்றாண்மைத் தூண்களுள் முதலாவதாகிய அன்பும், இறைவனின் அருள் வாக்கு அறிவும், அதைத் தூதுரைக்க ஏற்ற சொல்வன்மையும் தூது செல்பவர்க்குத் தேவையான பண்புகள். இவை அருள், பொருள் ஆகிய இரு ஆட்சியிலும் தேவைப்படும். சிறப்பாக அருள் ஆட்சிக்குத் தேவைப்படும்.

683. ''நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.''

**இம்மைப் பொருள் :** வலிமை மிக்க வேற்றரசினரிடைச் சென்று உரைக்க வேண்டிய தூதினை வெற்றிகரமாக உரைப் பவனுக்கு இன்றியமையாத பண்பு அறநூல் கற்றவருள் சிறந்து விளங்குதலாம்.

**மறுமைப்பொருள் :** உலகமக்களிடை இறைவன் தூதுரைக்கச் செல்பவனுக்குரிய தனிப்பண்பு, 'நிறைமொழி' மாந்தராகிய ஐந்தவித்தானது 'மறை மொழி'யை மிகச் சிறப்பாக அறிந்திருத்தலாம்.

684. "அறிவுரு ஆராய்ந்த கல்விஇம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு."

உலக அறிவும், மனத்தை ஈர்க்கக்கூடிய தோற்றமும், பல வகையிலும் ஆய்ந்தறிந்த கல்வியும் ஆகிய இம்மூன்றும் நன்கு அமையப் பெற்றவனே தூதுரைக்கும் பணிக்குச் செல்க. (இஃது அருளாட்சித் தூதுவர்க்கும் பொருந்தும்).

685. "தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாம் தூது."

கருத்துகளைத் தொகுத்துச் சொல்லி, நீக்க வேண்டிய சொற்களை நீக்கிப் பிறர்மனம் மகிழுமாறு இனிமையாகப் பேசி, எவ்வகையிலும் நன்மையே விளையுமாறு செய்வது தூதுப் பணியாம்.

686. "கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்
தக்கது அறிவதாம் தூது."

நன்கு கற்று, யாருக்கும் (பகைவர்க்கு முதலாய்) அஞ்சாமல் அறிவிற்படும்படி பேசி, தக்க காலத்தில் செய்ய வேண்டியதைச் செய்து முடிப்பவனே தூதுவன்.

687. "கடனறிந்து காலம் கருதி இடனறிந்து
எண்ணி உரைப்பான் தலை."

தன் கடமை உணர்ந்து, சொல்வதற்கு ஏற்றகாலமும் இடமும் அறிந்து, நன்கு ஆய்ந்து உரைப்பவனே தூதுரைப்பவருள் சிறந்தவன்.

688. "தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு."

மனத்துக்கண் மாசிலனாதல், இறைவன் அருள்துணை, எதற்கும் அஞ்சாத துணிவு இம்மூன்றும், சால்பூன்றிய தூண் களுள் ஒன்றான வாய்மையும் தூதுரைப்பவனுக்குரிய பண்புகள்.

இது சிறப்பாக இறைவாக்குத் தூதுரைப்பவர்க்குத் தேவைப்படுவது.

689. ''விடுமாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.''

தன்னைத் தூதுவனாக அனுப்பியவருக்கு இழிவுதரக் கூடிய சொல்லை (எந்நிலையிலும்) வாய்தவறியும் பேசாத மனத் திண்மையுடையவன், தன்னை அனுப்பியவர் சொன்னதை அப்படியே கூறுபவனே தக்கமுறையில் தூதுரைப்பவன்.

இஃது அருளாட்சிக்குச் சிறப்பாகப் பொருந்தும். தன்னை அனுப்பியவருடைய செய்தியைக் கூட்டாமல் குறைக்காமல் துன்பத்திடையிலும் கூறவேண்டியவன் அவன். ('என்தந்தை என்னை அனுப்பியது போல் நானும் உங்களை அனுப்புகிறேன்' என்று கூறிய ஐந்தவித்தானின் வாக்குகளை ஓர்க).

690. ''இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு
உறுதி பயப்பதாம் தூது.''

தன் வாழ்வுக்கு ஆபத்து என்றாலும் தயங்காமல் உரைக்க வேண்டிய தூதுரையைத் தன்னை அனுப்பியவரது பெருமை விளங்குமாறு உரைப்பதே தூதுவர்க்குரிய பண்பாகும்.

இதுவும் அருளாட்சித் தூதுவர்க்கு மிகச் சிறப்பாகப் பொருந்தும்.

# 70. மன்னரைச் சேர்ந்தொழுகல்

அரசியல் தலைவர்களிடம் ஒழுகும் முறை. இவை இம்மை ஆட்சிக்குச் சிறப்பாகப் பொருந்துபவை.

691. ''அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.''

குளிர் காய்பவர்கள், நெருப்பை அதிகம் நெருங்காமலும் அதிகம் விலகாமலும் இருப்பதுபோல, விரைவில் வெகுளும் அரசியல் தலைவர்களை அதிகம் நெருங்காமலும் அவர்களிட மிருந்து மிகத் தொலைவில் போய்விடாமலும் இருத்தல் நன்று.

692. ''மன்னர் விழைப விழையாமை மன்னரால்
மன்னிய ஆக்கந் தரும்.''

தலைவர் விரும்புவதைத் தாம் விரும்பாதிருத்தல், அவரிட மிருந்து நிலையான ஆக்கம் பெற வழியாகும். (பொருள் ஆட்சி யில் இது சிறப்பிடம் பெறும்).

693. ''போற்றின் அரியவை போற்றல் கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கும் அரிது.''

தலைவரோடு சேர்பவர் தம்மைக் காத்துக்கொள்ள விரும்பி னால், பெரும் பிழைகள் நேராமல் காத்துக்கொள்ள வேண்டும். அவை நேர்ந்து விட்டால், அவற்றிற்கு விளக்கம் தருவது இயலாத காரியம்.

694. ''செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித்தொழுகல்
ஆன்ற பெரியா ரகத்து.''

பெருந்தலைவர்களோடிருந்தால், காதோடு காதாக யாரிட மாவது பேசுதலையும் சிலரைக் கண்டு ஒருவித புன்சிரிப்புச் சிரித்தலையும் அடியோடு விட்டுவிடுதல் வேண்டும்.

695. ''எப்பொருளும் ஓரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்கால் கேட்க மறை.''

தலைவன் யாருடனாவது மறைவாகப் பேசும்போது, காது கொடுத்து எதையும் கேட்கலாகாது. பேசிமுடிந்த பின் உடனே அவனை வினவலாகாது. அவனே சொன்னால் மட்டும் செவி மடுக்கலாம்.

696. ''குறிப்பறிந்து காலம் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்.''

ஆள்பவரிடம் பேசும்போது (அவர்கள் விரும்பாதவை குறித்துப் பேச வேண்டியிருந்தாலும்) அவற்றை விரும்பிக் கேட்கக்கூடிய முறையில், அவர்களது மனநிலையைக் குறிப்பாய் அறிந்து, தக்க நேரத்தையும் நோக்கிப் பேசவேண்டும்.

697. ''வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றும்
கேட்பினும் சொல்லா விடல்.''

(அறத்தைப் பாதிக்காத வகையில்) ஆளும் தலைவர் விரும்புகின்றவையே பேசி, தேவையற்றவை, பயனற்றவை குறித்துத் தலைவரே பேச விரும்பினாலும் பேசாதிருக்கும் வழி தேட வேண்டும்.

698. ''இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
ஒளியோடு ஒழுகப் படும்.''

ஆளும் தலைவர் தம்மைவிட இளையவர், அல்லது உறவினர் தானே என்று அவரை இகழாமல், தலைவர் என மதித்து ஒழுக வேண்டும்.

699. ''கொளப்பட்டேம் என்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்.''

தலைவர் மதிப்புக்கு உரியவர் ஆனோம் எனத் தம்மை நினைத்து, அவர் விரும்பாதவற்றை, உண்மை அறிவுள்ளவர் செய்யார்.

700. ''பழையம் எனக்கருதிப் பண்பல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும்.''

தலைவர்க்கு யாம் பழைய நண்பர் எனக்கருதிப் பண்பற்ற செயல்களை உரிமையோடு செய்யும் நிலை கெடுதியை விளைவிக்கும்.

# 71. குறிப்பறிதல்

ஒருவருடைய உள்ளக் கருத்தை, அவர் வெளியிடாமலே அறிந்து கொள்ளுதல்.

701. ''கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எஞ்ஞான்றும்
மாறாநீர் வையக்கு அணி.''

ஒருவனது உள்ளக்கிடக்கையை முகக்குறிப்பால் உணர்ந்து கொள்பவன் உலகுக்கு அணிகலமாவான்.

702. ''ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.''

மனத்தில் உள்ளதைத் தெளிவாக அறியவல்லவனை ஒரு விதத் தெய்வீகம் கொண்டவனாக மதிக்க வேண்டும்.

703. ''குறிப்பிற் குறிப்புணர் வாரை உறுப்பினுள்
யாது கொடுத்தும் கொளல்.''

ஒருவரது முகக் குறிப்பினால் அவரது அகக்குறிப்பை உணரக் கூடிய ஒருவரை (அமைச்சரை) ஆட்சித்தலைவர் நாடு, ஊர், ஆறு முதலிய பத்து உறுப்புகளுள் எதைக் கொடுத்தாகிலும் தம்முடன் வைத்துக்கொள்ளல் நன்று.

704. ''குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
உறுப்போ ரனையரால் வேறு.''

தம் உள்ளத்தில் உள்ளதை அவர் கூறாமலே அறிய வல்லவர்க்கும் மற்றவர்க்கும் புறத்துறுப்பால் வேறுபாடு இல்லையே எனினும், கூர்மதியினால் முற்றிலும் வேறுபட்டவராவர்.

705. ''குறிப்பிற் குறிப்புணரா வாயின் உறுப்பினுள்
என்ன பயத்தவோ கண்.''

பிறர் முகக்குறிப்பால் அவரது அகக்குறிப்பைக் கண்டு உணர இயலவில்லையெனில், ஒருவர்க்குள்ள ஐந்துறுப்புகளுள்

(காண்பதையே தன் நோக்கமாகக் கொண்டுள்ள) கண் இருந்தும் பயன் என்ன?

706. ''அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம்.''

அடுத்துள்ள பொருளின் வடிவம் நிறமுதலியவற்றைக் க்ண்ணாடி காட்டுவது போல், ஒருவர் உள்ளத்தில் இருப்பதை அவரது முகமே காட்டிவிடும்.

707. ''முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ உவப்பினும்
காயினும் தான்முந் துறும்.''

மகிழ்ந்தாலும் சினந்தாலும் மற்ற உறுப்புகளுக்குமுன் முகம் காட்டிவிடுதலால் அதைவிட அறிவுமிக்கது உண்டோ?

708. ''முகம்நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி
உற்ற துணர்வார்ப் பெறின்.''

ஆட்சித்தலைவரது உள்ளக்கிடக்கையை அவரது முகத்தை நோக்கி உணரவல்ல அமைச்சர்கள் இருந்தால், தலைவரும் அமைச்சரது முகத்தை நோக்கி எதிரே நின்றால் போதும், கருத்தை அறியவியலும். (ஒருவருடைய முகக் குறிப்பால் மற்றவர் அறிய இயலும் என்றது).

709. ''பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும் கண்ணின்
வகைமை உணர்வார்ப் பெறின்.''

பார்வையில் நிகழும் வேறுபாடுகள் அறியவல்ல அமைச்சர் இருந்தால், ஆட்சித் தலைவர்க்குப் பிறரோடு ஏற்படக்கூடிய பகைமை, நட்பு இவற்றை அவரது கண்ணே வெளிப்படுத்தும்.

710. ''நுண்ணியம் என்பார் அளக்குங்கோல் காணுங்கால்
கண்ணல்லது இல்லை பிற.''

தமக்கு நுண்ணிய அறிவு உண்டு என்று கருதும் அமைச்சர், ஆள்பவர் முதலியோர் உள்ளத்தில் வதியும் கருத்தை அளப்பதற்கு அளவுகோல் எது என ஆராய்ந்து பார்க்கும்போது, அது கண்ணேயாகும்.

# 72. அவை அறிதல்

இம்மைப் பொருள் ஆட்சியிலும் மறுமைப் பொருளாட்சி யிலும் அவையினர் உள்ளாராதலால், அவர்களோடு பழகுமுறை அறிதல்.

711. "அவையறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்."

அவையினரோடு பேசும்போது, வகை தொகை அறிந்தவ ராய்க் குற்றமற்ற முறையில் (மனத்தூய்மையோடு) கூடியிருப் பவரது நிலையை ஆய்ந்து பேசுக.

712. "இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர்."

சொல்லின் வழக்கு, ஆளுமுறை முதலியன நன்கறிந்தவ ராய், அவையினரின் மனநிலைக்கு ஏற்ப (நன்கு புரிந்து கொள்ளுமாறு) பேசுக.

713. "அவையறியார் சொல்லல்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉம் இல்."

அவையினர் நிலையை அறியாமல் அவர்களுடன் பேசுதலை மேற்கொள்பவர், பேச்சு முறையைச் சிறிதும் அறியாதவரே. அத்தகையவர் கற்றவராயினும் கல்லாதவர் போல் கணிக்கப் படுவர்.

714. "ஒளியார்முன் ஒள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணம் கொளல்."

அறிவொளி மிக்கவர் முன், தாமும் அறிவுமிக்கவராக விளங்க வேண்டும். அறிவில்லாதவர் முன்னிலையில் வெண்மையான சுண்ணாம்பு போல 'வெளிறு' படைத்தவனாக (அறிவற்றவ னாக)க் காணப்படுதலே நன்று. (அறிவற்றவர்க்கு அறிவு மிக்கவை கூறுதல் பயனில்லை என்றது).

715. ''நன்றென்ற வற்றுள்ளும் நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு.''

அறிவில் தம்மைவிட முதிர்ந்தவர்கள் அவையில், தானே முன்வந்து பேசாதிருக்கும் பண்பு, அவையில் பேசுவோர்க்கு இருக்க வேண்டிய குணங்களுள் மிகச் சிறந்தது.

716. ''ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்னர் இழுக்கு.''

சிறந்த புலமைபெற்றவர் முன், நின்று பேசி இழிவடைவது நல்லாற்றின் கண் நடந்து பின்னர் தம் உயர்நிலையினின்று பிறழ்ந்தது போலாம். இருவரும் ஒரே விதமாக இழிவடைவர்.

717. ''கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொல்தெரிதல் வல்லா ரகத்து.''

குறையின்றிப் பேச வல்லவரிடம், நன்கு கற்றறிந்தவரது ஆழ்ந்த கல்வி விளங்கும்.

718. ''உணர்வ துடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று.''

தாமாகவே பொருளை உணரவல்லவரிடம் ஒன்றைச் சொல்லுதல், தானாக வளர்ந்துவரும் பயிர் உள்ள பாத்தியுள் நீர் பாய்ச்சியது போலாம்.

719. ''புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள்
நன்கு செலச்சொல்லு வார்.''

நல்லோர் அவையில் அவர்கள் கவனத்தை ஈர்க்கக்கூடிய முறையில் பேசவல்லவர், புலமையற்றவரிடையே மறந்தும் பேச வேண்டா.

720. ''அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தங்கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல்''

அறிவால் தம்மைப்போன்றவர் அல்லாதவரிடம் அறிஞர் பேச்சு நிகழ்த்துதல், சாக்கடைக்குள் பாலை ஊற்றியது போலாம்.

# 73. அவை அஞ்சாமை

அவையில் பேசும்போது, அஞ்சாமல் பேசுதல்.

721. "வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்."

பேசும் சொல் தொகுப்பினை அறிந்தவராயும் தூய மனத்தினராயும் உள்ளவர் நல்லவை, அல்லவை ஆகிய வகையறிந்து, நல்லவை பேசும்போது எதற்கும் அஞ்சாமல் பேசுவார்.

722. "கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார்."

தாம் கற்றதைக் கற்றார் உளத்தை ஈர்க்குமாறு பேசக் கூடியவர், கற்றவருள் தலைசிறந்து விளங்குவார்.

723. "பகையகத்துச் சாவார் எளியர் அரியர்
அவையகத்து அஞ்சா தவர்."

பலர், பகைவர் களத்திற்குள்ளே சென்று அஞ்சாமல் போரிட்டுச் சாகக்கூடத் தயங்கார். அவையில் நின்று அஞ்சாமல் பேசக்கூடியவரோ சிலரே.

724. "கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாம்கற்ற
மிக்காருள் மிக்க கொளல்."

கற்றவர் அவையில் தாம் கற்றவற்றை அஞ்சாமல் எடுத்துச் சொன்னாலும், தாம் கற்றதினும் மிகுதியாக உள்ள எத்தனையோ பொருள்களைத் தம்மைவிடக் கற்றறிந்தவரிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளுதலே முறை.

725. "ஆற்றின் அளவறிந்து கற்க அவையஞ்சா
மாற்றம் கொடுத்தற் பொருட்டு."

அவையில் எழக்கூடிய வினாக்கட்குத் தக்க மறுமொழி தருவதற்கு, ஏற்ற நூல்களைக் கற்கவேண்டிய முறையில் கற்றறிக.

726. ''வாளொடென் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை அஞ்சு பவர்க்கு.''

வலிமை, வீரம் இல்லாதவர்க்கு வாளுடன் என்னதொடர்பு இருக்கவியலும்? அங்ஙனமே நுண்ணறிவு கொண்ட அவையில் பேச அஞ்சுவோர்க்கு நூல்களுடன் என்ன தொடர்பு இருக்கக் கூடும்? (அஃதாவது நூலறிவு இல்லாதவர் அவையில் பேசத் தகுதியற்றவர்).

727. ''பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து
அஞ்சு மவன்கற்ற நூல்.''

அவை நடுவில் நின்று பேச அஞ்சுபவன் கற்றநூல், பகைவர் நடுவில் நின்று நடுங்குபவன் கையில் பிடித்த வாளுக்கு ஒப்பாம். (பயன் தராது).

728. ''பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார்.''

நல்லோர் அவையில் நற் கருத்துகளை அவர்கள் எற்கும் முறையில் சொல்ல இயலாதவர், பலநூல் கற்றும் பயன் எதுவும் அடையாதவரே.

729. ''கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்தும்
நல்லார் அவையஞ்சு வார்.''

நன்கு கற்றறிந்தும் நல்லோர் அவையில் பேச அஞ்சுபவர், ஒன்றும் கற்றறியாதவரினும் கீழானவரே.

730. ''உளரெனினும் இல்லாரொடு ஒப்பர் களன்அஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்.''

அவையினர்க்கஞ்சித் தாம் கற்றதை அவையினர் நிலைக் கேற்ப எடுத்துச் சொல்ல இயலாதவர், இருந்தும் பயனில்லை; அவர்கள் இறந்தாரோடு சேர்க்கப்படலாம்.

# 74. நாடு

சமுதாய வாழ்வுக்கு ஏற்ற நாடு எத்தன்மையது எனக் கூறுவது.

731. "தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு."

பருவம் தவறாமல் நல்ல விளைச்சலைத்தரும் நிலங்களும், தகுதி என்னும் நடுநிலைமையோடு வாழ்பவரும், தாழ்வுமனப் பான்மையற்ற (அஃதாவது சுயநலமற்ற) செல்வர்களும் ஒன்று சேர்ந்துள்ளதே நாடு என்பது.

732. "பெரும்பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு."

கம்பு, சோளம் ஆகிய சிறுதவசம் மட்டுமன்றி, நெல் எனும் பெரும் பொருளால் விரும்பத்தக்கதாகவும், மழையின்மை, பயிர் நோய் முதலிய பெருங்கேடுகள் இன்றி மிகுதியான விளைச்சலும் இருந்தால்தான் நாடு.

733. "பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு
இறையொருங்கு நேர்வது நாடு."

அரசியல் செலவுகள் பெரும் சுமையாக ஆட்சியின் மீது விழும்போது, அதற்கு ஏற்றவாறு வரிகள் அதிகமாக்கப்பட்டால், அவற்றைத் தரக் கூடிய பொருளாதாரம் உடையதே நாடு.

734. "உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா தியல்வது நாடு."

பசியும் பட்டினியுமான வாழ்வும் ஓயாத பிணிகளும் பிற நாட்டவருடைய பகையும் இன்றி இயங்குவதே நாடு.

735. ''பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு.''

கருத்து வேறுபாடுகள்கொண்ட குழுவினரும் (கட்சிகளும்) உள்ளிருந்தே சீர் குலைக்கக்கூடிய உள் (நாட்டு) பகையும், ஆட்சியினரை வாட்டுகின்ற கொள்ளைத் தலைவர்கள் போன்றவரும் இல்லாததே நாடு.

736. ''கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டின் தலை.''

வாழ்வைச் சீர் குலைக்கும் நிலையும் இன்னல்கள் நேரினும் அவற்றை வென்று வளம்பட வாழ்வதற்கு வசதியுள்ளதுமே நாடுகளில் சிறந்தது என்பர் பெரியோர்.

737. ''இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு.''

மழை நீரும் ஆறு முதலியவற்றில் உள்ள நீரும் பயன் தரக் கூடிய மலைப்பாங்கும் அம்மலையினின்று வரும் நீரும் வலிமை யுள்ள அரணும் நாட்டிற்கு உறுப்புகள்.

738. ''பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.''

நோய் நொடி இன்மை, செழுமை, நல்ல விளைச்சல், இன்பவாழ்வு, காவல் இவ்வைந்தும் நாட்டிற்கு அணிகலன்கள் என்பர்.

739. ''நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு.''

தேவைக்கு மேலாகவே உழைத்தாலும் சிறிது பலனே அடைய இயலும் என்னும் நிலையுள்ள நாடுகள் நாடுகள் ஆகா. தேவையான அளவு உழைத்தாலே மிகுந்த பலன் பெறக்கூடிய நிலை உள்ள நாடுகளே நல்ல நாடுகள் என்பர்.

740. ''ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.''

மேற் சொன்னவையெல்லாம் இருந்தும், ஏற்ற ஆட்சி யில்லையேல் நாடு பயனற்றதே.

# 75. அரண்

நாட்டுப் பாதுகாப்புக்குத் தேவைப்படும் அரண்.

741. ''ஆற்று பவர்க்கும் அரண்பொருள் அஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள்.''

அரண் என்பது, ஆற்றல் படைத்த அரசுக்கும் செல்வம், தம் மீது போர் தொடுக்க வருபவரிடமிருந்து காத்துக்கொள்வதற்கும் ஏற்ற பொருள்.

742. ''மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்
காடும் உடையது அரண்.''

வற்றாத தெள்ளிய நீரும் நிலமும் மலையும் குளிர் நிழல் உள்ள காடும் அரணாக அமையும்.

743. ''உயர்வகலம் திண்மை அருமைஇந் நான்கின்
அமைவரண் என்றுரைக்கும் நூல்.''

மிகுந்த உயரமும் அகலமும் பருமனும் போர்க் கருவிகளால் சேதப்படுத்தற்கு அரிதுமானதே அரண் (மதில்).

744. ''சிறுகாப்பிற் பேரிடத்த தாகி உறுபகை
ஊக்கம் அழிப்பது அரண்.''

காவல் செய்யவேண்டிய இடம் சிறியதாயும் வாழ்தற்கேற்ற பரப்புப் பெரிதாயும் எத்தகைய பகைவருடைய உற்சாகத்தையும் அழித்துவிடக்கூடியதாயும் உள்ளதே அரண்.

745. ''கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி அகத்தார்
நிலைக்கெளிதாம் நீரது அரண்.''

எதிரிகள் கைப்பற்றுவதற்கு அரிதாகவும் அகத்துள்ளவர்க்கு நெடுநாள் உணவு சேமிப்பில் கொண்டதாகவும் உள் இருப்பவர்க்குப் போர் செய்ய வசதியளிப்பதாகவும் உள்ளது அரண்.

746. "எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்துதவும்
நல்லாள் உடையது அரண்."

உள்ளே இருப்பவர்க்குத் தேவையான பொருளையெல்லாம் உள்ளடக்கியதாயும் தேவையான நேரத்தில் உதவக்கூடிய நல்ல வீரரைக் கொண்டதாயும் இருப்பதே அரண்.

747. "முற்றியும் முற்றா தெறிந்தும் அறைப்படுத்தும்
பற்றற் கரியது அரண்."

முற்றுகையிட்டாலும் முற்றுகையிடாமல் உடனடியாகப் போர் செய்தாலும் அல்லது வஞ்சமாகச் செயல் புரிந்தாலும் பகைவரால் எளிதில் கைப்பற்ற இயலாதிருந்தால்தான் அரண் ஆகும்.

748. "முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வது அரண்."

முற்றுகையிட்டுச் சூழ்ந்துகொண்டவரை, உள்ளிருப்பவர்கள் தமது பிடிப்பைவிடாமல் நின்று போர் செய்து எப்படியும் வெற்றி கொள்ள உதவுவதே அரண்.

749. "முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்டது அரண்."

போர் முனையில் பகைவர்கள் விழும்படி, உள்ளிருந்தோர் அஞ்சாமல் வீறுகொண்டெழுந்து வெற்றிகொள்ளச் செய்ய உதவும் பெருமை படைத்ததே அரண்.

750. "எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்கண் இல்லது அரண்."

எவ்வளவு பெருமை படைத்ததாயினும், செயல் ஆற்றல் சிறப்பு இல்லாதவர்க்கு அரண் பயன்படாது.

# 76. பொருள் செயல்வகை

'பொருள்செயல்வகை' அதிகாரத்தில் வள்ளுவர் 'அருள் என்னும் அன்பீன் குழவி' பற்றிப் பேசுகிறார். இதன் நோக்கம் என்ன? அருளுக்கும் பொருளுக்கும் தொடர்புண்டா? ஈண்டுக் கூறப்படும் 'பொருள்' பொருளாகிய பொருளா? அருளாகிய பொருளா? (பொருட்செல்வமாகிய செல்வமா? † அருட்செல்வ மாகிய செல்வமா?) என்று ஆய்வது பயன் தருவதாகும்.

இந்த அதிகாரத்தில் 'பொருள்' என்னும் சொல்லுக்குப் 'பணம்', 'செல்வம்' என்னும் பொருளையே உரையாளர் அனைவரும் கூறுகின்றனர். 'பொருள்செயல்வகை' என்றால் பொருளை ஈட்டும் வகை எனப்பொருள் கூறுவர்.

இவ்வதிகாரத்தில் உள்ள குறட்பாக்கள் சில 'பணம்,' 'செல்வம்' என்னும் கருத்தையே கூறுவது போல் காணப்படுகின்றன. எனினும் பணமாகிய பொருளைப்பற்றி மட்டுமே இவ்வதிகாரம் கூறுகின்றதா? பொருள் என்னும் சொல்லுக்குப் 'பணம்' என்னும் பொருள் மட்டுந்தான் உண்டா என்பவை வினவவேண்டிய வினாக்கள். ஏன்?

(1) ஒரு பொருளாக மதிக்கப்படாதவரையும் மதிப்புடையவராகச் செய்யவல்ல செல்வத்தைப் போன்ற வேறு பொருள் இல்லை என்பது இவ்வதிகாரத்து முதற்குறளின் கருத்து.

இஃது உண்மைதானா? இக்குறளில், 'பொருள்' என்னும் சொல்லுக்குப் 'பணம்' என்னும் பொருளை மட்டும் கொடுத்தால்,

> ''பணமல் லவரைப்பண மாகச் செய்யும்
> பணமல்லது இல்லை பணம்.''.

---

† விரிவான விளக்கத்திற்கு வள்ளுவர் கூறும் 'அருட் செல்வன் யாது?' என்னும் புலவர் மு. தெய்வநாயகம் அவர்களது நூலைப் படித்தறிக.

என்னும் குறள் உருவாகும். இதற்குப் பொருளே இல்லை என்பது தெளிவு. இனி, 'பொருள்' என்னும் சொல்லுக்கு இக் குறளில் **இரு பொருள்** தரப்பட்டுள்ளதெனத் தோன்றுகிறது. ஒன்று **மதிப்பு;** மற்றொன்று **பணம்,** செல்வம். இப்படிப் பொருள் கொடுத்து நோக்குங்கால் வெளிப்படும் கருத்து முற்றிலும் உண்மைதானா? அஃதாவது, மதிப்பற்றவரை மதிப் புள்ளவராக்க வலிமை படைத்தது பணம். அதைப்போன்றது வேறில்லை என்பது உண்மைதானா? பணம் இருந்தால்தான் மதிப்புண்டு; வேறெதுவும் ஒருவனுக்கு மதிப்புத்தராது; வேறெதனாலும் ஒருவன் மதிப்புப் பெற இயலாது - என்னும் கருத்தைத்தான் வள்ளுவர் கூறியுள்ளாரா?

'அருட்செல்வம் செல்வத்துட் செல்வம்'. அதையே ஒருவன் நாட வேண்டும். "பொருட் செல்வம் பூரியார் கண்ணும் உள." ஆகவே, அருட்செல்வம் ஒன்றே உண்மையான உயர்வைத் தரும், என்று கூறும் வள்ளுவர், பணத்தைவிட மதிப்புத்தருவது இல்லை என எங்ஙனம் கூறுவார்?

> "வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
> யாண்டும் அஃதொப்ப தில்." (363)

வேண்டாமையே பெருஞ் செல்வம். அதைப் போன்றது உலகிலே இல்லை என்று கூறும் வள்ளுவர், பணத்தைப்போல் வேறில்லை என்று எங்ஙனம் கூறுவார்?

'பொருள் அல்லவற்றைப் பொருள் என்று உணர்வது' மருளாகும் என்று கூறும் வள்ளுவர், பணமாகிய பொருள்தான் பொருள்' என்று எங்ஙனம் கூறுவர்?

ஆகவே, 'பொருள்' என்னும் சொல்லுக்குப் 'பணம்', 'மதிப்பு' என்னும் பொருளைவிட உயர்ந்ததொரு பொருள் இருத்தல் வேண்டும்.

> (2) "பொருள்என்னும் பொய்யா விளக்கம் இருள்அறுக்கும்
> எண்ணிய தேயத்துச் சென்று." (753)

இக்குறளில் 'பொருள்' என்னும் சொல்லால் தாம் குறிக்க விரும்புவது என்னவென ஆசிரியரே கூறுவதுபோல் தெரிகிறது.

'பொருள் என்பது பொய்யாவிளக்கம்' என்கிறார். ஈண்டுப் 'பொருள்' என்னும் சொல்லுக்குப் 'பணம்' என்னும் பொருள் கொடுத்தால், 'பணம் என்னும் பொய்யாவிளக்கம்' என்றாகும். இஃது உண்மையா? பணம் என்பது அணையாத (பொய்யாத) விளக்கமா? இதை யாரும் ஏற்கார்.

'மதிப்பு' என்னும் பொருள் கொடுத்தாலும் பொருள் சிறக்க வில்லை என்பது தெளிவு. 'மதிப்பு' என்பது நிலைக்காதது. அது பொய்யாவிளக்காக எங்ஙனம் இருத்தல் கூடும்?

ஆகவே, 'பொருள்' என்னும் சொல்லுக்கு வேறு உயர்ந்த தொரு பொருள் இருத்தல் வேண்டும்.

(3) ''அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.'' (754)

பணமோ மதிப்போ மனிதனுக்கு அறமும் இன்பமும் பயக்குமா? பயப்பதில்லை என்பதே பலரும் வாழ்க்கை அனுபவத்தால் அறிந்த உண்மை. 'தீதின்றி வந்த பொருள்' கூட இத்தகைய அறனும் இன்பமும் பயப்பதில்லை. பணமுள்ளவர்கள் அறத்தை வளர்ப்பது அரிதெனக் காண்கிறோம். பணம் இன் பத்தைத் தருவதும் அரிதென்றே காண்கிறோம். ஆகவே, அறனும் இன்பமும் ஒருங்கே பயக்கக்கூடிய உயர்ந்த பொருள் வேறாக இருத்தல் வேண்டும்.

(4) 'அருளொடும் அன்பொடும் வாராப் பொருள் ஆக்கம்' பற்றி அடுத்துக் கூறப்படுகிறது.

ஈண்டுப் 'பொருள்' மட்டும் குறிப்பிடப்படாமல், பொருளால் வரும் ஆக்கம் குறிப்பிடப்படுவது கவனிக்க.

பணம், மதிப்பு என்னும் பொருள் மட்டுமே ஈண்டு இருந் தால், 'பணத்தால், மதிப்பினால் வரும் உயர்வு, மேன்மை' என் னும் கருத்து வெளிப்படும்.

இந்த உயர்வும் மேன்மையும், 'அன்பொடும் அருளொடும்' வரக்கூடும்; அவை இல்லாமலும் வரக்கூடும். முன்னது கொள் ளத்தக்கது; பின்னது தள்ளத்தக்கது என்பது கருத்து.

இனி, அன்பொடும் அருளொடும் வரும் பணத்தால் அல்லது மதிப்பால் விளையும் உயர்வு என்றால் எங்ஙனம் பொருள் பொருந்துகின்றது?

'அன்பு' என்பதும், 'அருள்' என்பதும் எத்துணை உயர்வு பெற்றவை என்பது, அன்பின் குழவி' என இந்த அதிகாரத்திலேயே கூறப்படுகிறது. அருள் என்பது செல்வத்துட் செல்வம்; அஃதொன்றே உண்மையான உயர்வைத் தருவது; 'பல்லாற்றால் தேரினும்' அதுவே வாழ்வுக்குத் துணை; அருள் சேர்ந்த நெஞ்சினால் மட்டுமே ஒளி சேர்ந்த இன்ப உலகம் புக இயலும்; அருளில்லார்க்கு மேலுலகம் இல்லை; பொருள் அற்றார் ஒரு கால் பூப்பர் எனினும், அருள் அற்றார் பூப்பதேயில்லை. 'அருள் ஆள்வார்க்கு இல் என்ப தன்னுயிர் அஞ்சும்வினை' என்று பல பட அருளின் உயர்வைப் புகழ்ந்துரைக்கும் வள்ளுவர், உயர்வற்ற 'பணம்' என்பதும் 'மதிப்பு' என்பதும் 'அருளொடு' வருதல் வேண்டும் என்னும் கருத்தை எங்ஙனம் கூறவியலும்? அதற்குப் பொருள் வேறேதோ உயர்ந்ததொன்றாயிருந்தால் அன்றி, இங்ஙனம் கூற இடமில்லை என்க.

அன்பீன் குழவியாகிய அருளுக்கே இத்துணை உயர்வு உண்டென்றால், அதனை ஈனும் அன்புக்கு எத்துணை உயர்வு இருத்தல் வேண்டும்! அன்புபற்றிக் கூறிய கருத்துகளை எல்லாம் ஈண்டு நினைவுறுத்துக.

ஆகவே 'பொருள்' என்னும் சொல்லுக்கு ஈண்டு வேறு மிக உயர்ந்த பொருள் இருத்தல் வேண்டும்! அது **அன்பொடும் அருளொடும் பொருந்திய ஒன்றாக** இருத்தல் வேண்டும்.

## (5) மேற் கூறப்பட்ட கருத்து

'அருளென்னும் அன்பீன் குழவி......' எனத் தொடங்கும் குறட்பாவுக்குப் பொருந்தும். அருள் என்னும் அன்பீன் குழவியும் 'பொருள் என்னும் செல்வச் செவிலியால்'தான் உளதாகும். பொருள் என்னும் செல்வம் செவிலியெனச் செயல்புரியாவிடில் அருள் என்னும் அன்பீன் குழவியே இராது என்க. மேற்கூறிய அத்துணை உயர்வு கொண்ட அருளும் 'பொருள்' இல்லாமல் உளதாகாதென்றால், இப்பொருள் என்பது பணம், மதிப்பு அன்று. பணமோ மதிப்போ இல்லாமல் அருள் இராதென்பது

பொருந்தக்கூடிய கருத்தாகுமா? உண்டு என்னும் சொல்லுக்கு 'வளரும்' என்னும் பொருள் கொடுத்து, பொருளால் அஃதாவது பணத்தால் அருள் செயல்களை வளர்க்க-பெருக்க இயலும் என்று கூறுவர். 'உண்டு' என்னும் சொல்லுக்கு 'வளரும்' என்னும் பொருள் எங்ஙனம் பொருந்தும்? மேலும், 'செல்வச் செவிலி' என்னும் அரிய பெயர் —பணத்துக்குப் பொருந்துமா?

(6) 'செறுநர் செருக்கறுக்க'ப் பொருளைவிட வலிய படை இல்லை என்றார் மேலும் வள்ளுவர்.

ஈண்டு அரசர்க்கு வேண்டிய படைப்பலத்தை உண்டாக்கப் பொருள் மிகமிகத் தேவை என்று கொண்டாலும், பகைவர் செருக்கை ஒடுக்க வேறு எதுவும் தேவையில்லை என்று சொல்ல இயலுமா? பணம் ஏராளமாக இருந்தும், தோல்வி அடையும் அரசர் இல்லையா?

ஆகவே, இங்குக் கூறப்படும் 'செறுநர்' வெளிப்படையாக ஒரு நாட்டுக்கு, அல்லது பொதுவாக மக்களுக்கு ஏற்படக்கூடிய எதிரிகளா? அல்லது ஒருவனின் உள்ளத்தில் பதுங்கிச் செயலாற்றும் ஆன்ம எதிரிகளா? இந்த ஆன்மீக எதிரிகளுள் முதலிடம் பெறுவது 'செருக்கே' என்க. அதுவே தீவினை என்பது வள்ளுவர் கருத்து. 'தீவினை என்னும் செருக்கு' என்று அவர் கூறுவது கவனிக்க.

மேலும், இக்குறட்பாவில் வரும் 'அறுக்க' என்னும் சொல் கவனித்தற்பாலது. இதே அதிகாரத்தில் 'பொருள் என்னும் பொய்யா விளக்கம் இருள் அறுக்கும் எண்ணிய தேயத்துச் சென்று' என்று கூறப்படுகிறது. செருக்கு என்பதும் இருள் என்பதும் ஒன்றே என்னும் கருத்து ஈண்டு மறைந்துள்ளது.

இத்தகைய பொருள், எண்ணிய தேயத்துச் சென்று இருள் என்னும் செருக்கையும், செருக்கு என்னும் இருளையும் அறுத்து எங்கும் எதிரிகளை ஒடுக்கிவிடும் வலிமை படைத்தது. அரசன், 'எண்ணிய தேயத்துச் சென்று' ஆங்குள்ள எதிரிகளைத் தாக்கி ஒடுக்க, பொருள் என்னும் படையைவிடக் கூரியது, வலியது வேறு இல்லை என்னும் கருத்து ஈண்டுச் சிறக்கிறதா? அல்லது பணம், மதிப்பு என்பனவற்றைவிட மிக உயர்ந்ததாகக் கருதப்படவேண்டிய 'பொருள்' இருந்தால், வெளிப்படையான

எதிரிகளை மட்டுமன்று, உள்ளரங்க ஆன்மீக எதிரிகளையும் வெல்லலாம் என்னும் கருத்து ஈண்டுச் சிறக்கின்றதா?

'எண்ணிய தேயத்து' என்னும் சொற்றொடர், அரசர்கள் தம் எதிரிகள் உள்ள எந்தத் தேயத்தும் சென்று, என்று பொருள் படுமா? அல்லது, அவ் உயர்ந்த பொருளைக் கொண்டு, சான்றோர் எங்கும் எத்தேயத்தும் சென்று, பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்ய இயலும் என்று பொருள்படுமா? இது சிந்திக்கத்தக்கது. ஆகவே, 'பொருள்' என்னும் சொல்லுக்குப் பணம் என்னும் பொருள் மட்டுமே சிறப்பாகத் தெரியவில்லை.

(7) மூலப்பொருள்களுள் ஒன்றாகிய பொருளை மிகுதியாக ஈட்டியவர்க்கு அறம், இன்பமாகிய மற்றிரண்டும் ஒருங்கே கை கூடும் என்பது இவ்வதிகாரத்தின் இறுதிக் குறட்பா. 'அறன் ஈனும், இன்பமும் ஈனும்,' என்னும் குறட்பா குறித்து மேலே சொல்லப்பட்டது இக்குறட்பாவுக்கும் பொருந்தும். ஈண்டும் மிக உயர்ந்ததொரு 'பொருள்' குறிக்கப்படுகிறது. இதற்கு இக்குறட் பாவிலேயே சான்றுகள் உளவென்றும் கூறலாம்.

ஈண்டுப் 'பொருள்' என்று மட்டும் கூறாமல் 'ஒண்பொருள்' என்று கூறுவது கவனிக்க. 'ஒண்மை' என்னும் சொல்லுக்கு 'ஒளி' அல்லது 'விளக்கம்' என்று பொருள் கொடுத்தால் 'பொருள் என்னும் பொய்யா விளக்கம்' என்று தொடங்கும் குறளுடன் பொருந்துகிறது. 'ஒண்மை' என்னும் சொல்லுக்கு அழகு, ஒழுங்கு, அறிவு, நன்மை என்று பொதுப்படையான பொருள் கொடுத்தால், ஈண்டுச் சுட்டப்படுவது வெறும் பண மாகிய பொருள் அன்று; உள் அழகும் ஒழுங்கும் அறிவும் நன்மையும் பொருந்திய பொருள் என்னும் கருத்து எழும்.

ஒளி பொருந்திய (அல்லது உயர்ந்த நன்மை பயக்கும்) பொருளை ஈட்டினால் 'எண்பொருள் ஏனை இரண்டும் ஒருங்கு' அஃதாவது, ஏனை இரண்டும் எண்பொருளாக ஒருங்கே கிட்டும். ஈண்டு எண்பொருள் என்றது எளிமையாக அடையக்கூடிய பொருள் என்பது கருத்து. 'எண்மை' என்னும் சொல்லுக்கு 'மதிப்பு' என்னும் பொருளும் இருப்பதால், 'மதிப்புள்ள பொரு ளாகிய மற்றிரண்டும்' என்று பொருள்படவும் கூடும்.

ஆகவே, இக்குறளிலும் 'பொருள்' என்னும் சொல்லுக்கு வெறும் 'பணம்' என்னும் பொருள் மட்டுமின்றி, வேறு மிக உயர்ந்த பொருள் இருத்தல் வேண்டும். இப்பொருள் யாதென ஆய்வோம்.

ஆசிரியரே தரும் குறிப்புகளை முதற்கண் நோக்குவோம்.

இப்பொருள் :

1. ஒளி பொருந்தியது ('ஒண்பொருள்').
2. இருள் அறுக்கும் பொய்யாவிளக்கமாகத் திகழ்வது.
3. செருக்கறுக்கும் எஃகு.
4. பொருள் அல்லவரைப் (மதிப்பில்லாத வரை) பொருளாகச் செய்யும் தன்மை படைத்தது.
5. 'எண்ணிய தேயத்துச் சென்று' செயல் புரியக்கூடியது.
6. அருள் என்னும் அன்பீன் குழவிக்குச் செல்வச் செவிலியாவது.
7. அருளொடும் அன்பொடும் வந்து ஆக்கம் தருவது.
8. அறமும் இன்பமும் ஒருங்கே பயக்கக் கூடியது.

**இவையெல்லாம் எதற்குப் பொருந்தும்?**

இத்துணை உயர்ந்த பண்புகள் மெய்ப்பொருளாகிய இறைவனோடு தொடர்புகொண்டுள்ள ஒன்றனுக்கு மட்டுமேயன்றி வேறெதற்குப் பொருந்தக் கூடும்?

அஃது எதுவாயிருக்கக்கூடும்? இறைவனோடு தொடர்பு கொண்டுள்ள அருட்சக்தியாம் செல்வமா? **'வான்'** ஆகும் இறைவனின் செல்வக் குவியலா? இச்செல்வத்தை அனைவரும் பெருமாறு அருளாள்வோர் இயற்றும் ஒப்புரவுப் பணியா? புத்தேள் உலகத்தும், ஈண்டும் பெறற்கரிய நன்மையாம் ஒப்புரவுச் செல்வமா? பொருள் அல்லவற்றைப் பொருள் என்றுணரும் மருளை ஒழித்து, உள்ளத்தில் ஏற்படும் இருளையும் செருக்கையும் அறுத்து, மெய்ப்பொருள் அல்லவரை மெய்ப்பொருளாளராக்கும் இவ் ஒப்புரவுப் பணியை எண்ணிய தேயத்து அஃதாவது, எங்கும் சென்று செய்யத் தூண்டும் 'வாய்மை' என்னும் பொய்யா விளக்கா?

'ஒப்புரவின் நல்லபிற பெறலரிது'

'வாய்மையின் நல்லபிற இல்லை'

என்று வள்ளுவர் கூறும் இவ்விரு நன்மையும் சேர்ந்து ஈண்டுப் பொருள் என்னும் சொல்லால் சுட்டப்படுகின்றனவா? ஒப்புரவுக்கு வாய்மை இன்றியமையாததால், இரண்டும் ஒன்றெனக் கருதப்படுவதில் பிழை என்ன? இவ்விரண்டும் இணைந்தால் மக்கள் உள்ளங்களில் அருள் என்னும் அன்பீன் குழவி உதிக்க ஏற்ற செவிலித்தாய் தோன்றுகிறாள் எனலாம் அன்றோ? அவ்வருள், மனத்தில் தோன்ற **வான்** சக்தியே அன்னையாகச் செயலாற்றுகிறாள் எனில் பிழையென்ன? அச்சக்தியே அருளுக்கெல்லாம் ஆதிமூலமாயிருப்பதால், **செல்வச்செவிலி** எனப்படுவது பொருந்துமன்றோ? ''தாளாற்றித் தரப்பட்ட பொருள்' **(பிற்சேர்க்கை 5 காண்க)** இஃதே எனச் சொல்லத் தடையென்ன? இதைத் தக்கார்க்கு வேளாண்மை செய்தற்பொருட்டு, அவனே ஏற்படுத்திய ஒப்புரவாளர் எங்கும் சென்று மக்களுக்கு யாதொன்றும் தீமையிலாத இறைவனைச் சொல்லி, அவனது பொருள்சேர் புகழ்புரிந்து, அதனால் இருள் சேர் வினை, தம்மைச் சேராமல் காத்துக்கொள்ள இந்த ஒப்புரவுப் பணியும் வாய்மையும்* இன்றியமையாததன்றோ?

'யாதொன்றும் தீமை இலாத' இறைவனின் பொருள்சேர் புகழைப் புரிவதால் தீதின்றி வரும் பொருளை அடையலாம் அன்றோ? இங்ஙனம் 'அருளொடும் அன்பொடும்,' 'தீதின்றி வந்த பொருள்' ஆக்கம், பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்யவல்லதன்றோ? இத்தகைய பொருள் இல்லாரை யார் மதிப்பர்? மதிக்க என்ன உண்டு? மாறாக, இப்பொருள் உள்ளவரைப் பலரும் ஏற்றுப் பயனடைவர் அன்றோ? இத்தகைய வாய்மையொடு வரும் ஒப்புரவு நன்மை - 'புரைதீர்ந்த நன்மை' பயப்பதால், அஃதொன்றே, உலக மன்னர்கள் பெறக்கூடிய 'உறுபொருள்' உலகு பொருள், 'தன் ஒன்னார்த் தெறுபொருள்' இவை அனைத்தையும் விட விரும்பத்தக்கது அன்றோ?

---

* ''எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு'' என வாய்மைபற்றிக் கூறியுள்ளது கவனிக்க.

இத்தகைய பொருளைச் செய்தல் வேண்டும். 'செய்த பொருள்!' என்கிறது குறள். அஃதாவது இத்தகைய பொருளை நாடி அடைய முயல்க. இந்த ஒப்புரவாலும் வாய்மையாலும் அகத்தூய்மை காணப்படும்; உண்மையான அற வாழ்க்கை உள தாகும். 'மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்' அன்றோ? மேலும், 'அறத்தான் வருவதே இன்பம்'. ஆகவே, ஒப்புரவு-வாய்மை என்னும் பொருளால் அறமும் இன்பமும் ஒருங்கே உண்டாகும். ஆனால், இப்பொருளைத் திரட்டத் தொடங்கும் போதே உண்டாகி விடுவதில்லை. இவ் 'ஒண் பொருளைக் காழ்ப்ப இயற்றினால்' தான் உண்டாகும். அஃதாவது, நிரம்ப முயன்றால்தான் உண்டாகும்.

அப்போது,

''குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை.'' (758)

ஒருவன், ஈண்டுக் கூறப்படும் **பொருளைப்** பயன்படுத்தி, அரியதொரு செயல் செய்ய முனையும் முயற்சி, குன்றின் மீதுள்ளவன், குன்றினடியில் யானையும் யானையும் புரிகின்ற போரை அச்சமும் வருத்தமும் இன்றிக் காண்பது போலாகும்.

அஃதாவது, காலிங்கர் கூறுவதுபோல ''பாவமும் பகையும் தன்னை அணுகாமல் பரிகரித்து இனிது வாழும் பொருளுடை யோன் என்பது பொருளாயிற்று.''

இனி, பாவமும் பகையும் ஒருவனை அணுகாமல் காப்பது பணமாகிய செல்வமா? பணமே பாவத்தையும் பகையையும் தூண்டி விடுகின்றதன்றோ? ஆகவே, இவற்றிலிருந்து பாது காப்பது மேற்கூறிய ஒப்புரவு-வாய்மையாம் செல்வம் என்பதே பொருந்தும் கருத்தாகும்.

ஏற்கெனவே ஒப்புரவுபற்றியும் வாய்மைபற்றியும் கூறிய வள்ளுவர் 'பொருள் செயல்வகை' என்னும் அதிகாரத்திலும் அவற்றையே உரைக்கிறார் என்பது பொருந்தாக் கூற்று எனத் தடை கிளம்பலாம்.

அவ்வையிரண்டினாலும் 'வாய்மை' என்னும் பொய்யா விளக்கு ஒளிவீசி இருளை அறுத்துக் கொண்டேயிருக்க, யாதொன்றும் தீமையிலாதானின் பொருள்சேர் புகழைப் புரிவதால், மக்கள் உள்ளம் மெய்ப்பொருளின்பால் ஈர்க்கப்பட, புரை தீர்ந்த நன்மை பயக்குமாறு அருள் ஆள்வோர் எத்தேயத்தும் சென்று பணி புரிய, அருள் என்னும் குழவி இறைவன் அன்பிலிருந்து உள்ளங்களுள் உதிக்க, அறமும் இன்பமும் உண்டாகும். ஒப்புரவும் வாய்மையும் சான்றாண்மையின் தூண்களாக, அவற்றை உறுதியான ஆதாரமாகக் கொண்டு செயலாற்றுதலே 'பொருள் செய்தல்' என்க. 'பொருள் செய்க' என்னும் கருத்தை வலியுறுத்தும் நோக்குடன் இவ்வதிகாரத்தை இயற்றினார் என்க.

'பொருள்' என்னும் சொல்லை இப்பொருளில் பயன்படுத்தியது பொருத்தமற்றதென்பதற்கில்லை. ஏனெனில், வள்ளுவ 'பொருள்' என்னும் சொல்லை அருளுடனும் பொருளுடனும் இணைத்துக் கூறுவது கவனிக்கத் தக்கது.

"பொருட்பொருளார் புன்னலம் தோயார் அருள்பொருள்
ஆயும் அறிவி னவர்" (914)

அங்ஙனமே 'செல்வம்' என்னும் சொல்லையும் அருளுடனும் பொருளுடனும் இணைத்துக் கூறியது கண்டோம்.

'பொருட்பால்' பகுதியில் இக்கருத்துக் கூறப்பட்டதற்குப் பொருத்தம் இல்லாமல் இல்லை. பொருளாகிய பொருளை ஆள்வோர் அரசர். ஆதலின், அவர்கட்கும் பொருந்தும் கருத்துகளைக் கூறும் அதே நேரத்தில், அருளாகிய பொருளை ஆள்வோர் 'அருள் ஆள்வோர்' ஆதலின், அவர்கட்குப் பொருந்தும் கருத்தையும் கூறினார் என்க.

ஆகவே, ஈண்டுக் கூறப்படும் 'பொருள்' முதற் கண் அருள் ஆள்வோர்க்கும், பின்னர் அரசர்க்கும் பொருந்துவதாகும்.

புலால் மறுத்தாரிடத்தன்றி அருளாட்சி சிறக்காது என்று குறள் கூறுவது கவனித்தற்பாலது.

வான் சக்திக்கு உட்பட்டதாயும் 'ஊனுடன்' அஃதாவது உலக நாட்டங்களுடன் தொடர்பற்றதாயும் இருத்தல் வேண்டும்

என்று வலியுறுத்துகிறார் வள்ளுவர். இதனாற்றான் 'புலால் மறுத்தல்' அதிகாரத்தில் அருளாட்சிச் சிறப்புறப் பொருந்தாது என்னும் கருத்தில் கூறுகிறார். ஊன் தின்பவர்க்கு அருளே இராது என்பதன்று; அவர்களிடம் அருள் சிறப்பாக ஆட்சி செய்யாது. புலால் மறுத்தல் உடலுக்கு மட்டும் நன்மையன்று, உள்ளத்திற்கும் நன்மையே. வாய்ச்சுவைக்காகப் புலாலை உண்ணுதற்கு மாறாக அச்சுவையை அடக்கித் தியாகச் செயல் போல் ஏற்பது நன்மை பயக்கும்.

''சுவைஒளி ஊறுஓசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு'' (27)

என்பதற்கு மனிதன் மிகமிக ஆசையுடன் தேடும் வாய்ச் சுவையின் வகைதெரிந்து, அடக்கி ஆள்பவனுக்கு, உலக நாட்டம் குறைந்து, அருள்செல்வம் பெருகும் என்றவாறு.

## பொருள் செயல்வகை
### -சுருக்கம்

பொருட்பொருள், அருட்பொருள் ஆகிய இம்மை, மறுமைச் செல்வத்தை அடையும் முறை.

ஆகவே, இம்மைக் கருத்தும், மறுமைக் கருத்தும் இக்குறட் பாக்களுக்கு உண்டு. இம்மைக் கருத்து — மறுமைக் கருத்து எனக் குறிப்பிடுகிறோம். எனினும், இவற்றுள் சில குறட் பாக்களுக்கு மறுமைக் கருத்தே சிறப்பாகத் தோன்றுகிறது.

751. ''பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்லது இல்லை பொருள்.''

**மறுமைக் கருத்து :**

ஒரு பொருட்டாய் மதிக்கப்படாதவரை மதிக்கப்படச் செய்யும் அருட் பொருள் அன்றி வேறில்லை பொருள். பொருளாகிய செல்வம், பிறரால் மதிக்கப்பட ஓரளவு உதவினாலும், அருட் பொருள் இன்றேல் இம்மதிப்பு நீடிக்காது. மேலும், இம்மைச் செல்வம் உள்ளவரை எல்லோரும் எப்போதும் மதிப்பர் என்பதற்கில்லை. அருட் செல்வம் உள்ளவன் சில

சமயங்களில் பிறரால் மதிக்கப்படாவிடினும் இறுதியில் பெருமதிப் படைவான். பிறர் மதிப்புப் பெற உதவுவது பணமாகிய பொருள் மட்டுமே, அதனின் சிறந்தது வேறில்லை என்பது பொருந்தாக் கூற்று. அருட்செல்வம் செல்வத்துட் செல்வம்......குறள் நோக்குக.

752. "இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு."

**இம்மைக் கருத்து:**

பொருளாகிய செல்வம் இல்லாதவரைப் பெரும்பாலும் மக்கள் அவமதிப்பர். செல்வம் உள்ளவர் தீயோராயினும், அவர் களைப் பெரும்பாலும் மக்கள் போற்றுவர். இஃது உலக வழக்கு.

**மறுமைக் கருத்து :**

அருட் பொருள் இல்லாரை (அருளின் பெருமையறிந்த) எல்லாரும் அவமதிப்பர். அருளின் அருமை அறியாதவர் அருளில்லாரையும் மதிப்பர்.

753. "பொருளென்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று."

**மறுமைப் பொருள்:**

சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு ஆதலாலும் சான்றோர் ஒழுக்கமாகிய அன்பு முதலிய ஐந்து தூண்கள், அருள் என்னும் பொருளையே சார்ந்துள்ளதாலும், இக்குறளில் கூறப் படுவது இறைவன் தாளாற்றித் தந்தபொருளே. அஃது ஒன்றே அன்பு முதலிய பேரொளிப் பண்புகள் இல்லாத (ஆன்ம) இருள் நிலையை அறுத்தொழிக்க வல்லது. சாதாரண பொருட் பொருளால் அஃது இயலாது. இத்தாளாற்றித்தந்த பொருள் எண்ணிய தேயத்துச் சென்று வேளாண்மை செய்தற் பொருட்டே என்பதால் அருள் செல்லும் இடமெல்லாம் இருள்நீங்கும் என்ற வாறு.

சாதாரணப் பணமாகிய பொருளைப் பொய்யாவிளக்கம் என்பது சிறிதும் பொருந்தாது.

754. "அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்."

**இம்மைக் கருத்து :**

பொருட் பொருள் அளவான மதிப்புக்கு மட்டுமே உரியது என அறிந்து, தீய வழியிலன்றி நல்ல வழியில் சேர்த்ததானால், அஃது அறவாழ்வுக்கும் அதனால் விளையும் இன்பத்துக்கும் வழியாகும்.

**மறுமைக் கருத்து :**

இறைவன் தாளாற்றித்தந்த அருட்பொருள் (அருள்) திறன் படைத்தது. 'யாதொன்றும் தீமையிலாத' வகையில் வந்தது என அறிந்து வாழ்ந்தால், அதனால் அறவாழ்வும் அதனால் வரும் இன்பமும் உண்டாகும்.

755. "அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்."

**இம்மைக் கருத்து :**

'அன்புடைமை' பற்றிக் கூறப்பட்ட கருத்துக்கிசையவும் 'அருளுடைமை' பற்றிக் கூறப்பட்ட கருத்துக்கிசையவும் அடைய இயலாத பொருட் செல்வத்தைக் கைவிடல் வேண்டும். அஃதாவது, பொருளைத் தேடும் தொழிலில் அருளும் அன்பும் விளங்க வேண்டும்.

**மறுமைக் கருத்து :**

அருட் செல்வம் இவ்விரண்டினை ஒட்டியே வரும் என்றறிக.

756. "உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்."

**இம்மைக் கருத்து :**

புதையல் முதலியன போன்று தானே வந்து சேரும் பொருளும் வரிகளால் வரும் பொருளும் பகைவரை வென்றதால் கிடைக்கும் பொருளும் அரசினர்க்குரிமை.

757. ''அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு.''

**மறுமைக் கருத்து :**

இறைவன், ஆன்மாக்கள் மீது கொண்ட அன்பின் பெருக்கால், (அதன் குழந்தை போல) பிறக்கும் அருள் என்னும் செல்வம், இறைவனே தாளாற்றித் தந்த (அருட்) பொருளையே ஊற்றாகவும் மூலக் கருவூலமாகவும் கொண்டுள்ளது.

758. ''குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்று
உண்டாகச் செய்வான் வினை.''

**இம்மைக் கருத்து :**

தன் கையில் நிரம்பப்பொருள் இருக்கும் போது, ஒரு தொழிலைச் செய்பவனது முயற்சி, ஒருவன் குன்றின் மேல் ஏறிக் கொண்டு யானைப் போரைப் (தனக்கு ஆபத்தில்லாமல்) பார்ப்ப தற்கு ஒப்பாகும். அதிக வருத்தமின்றி அரிய செயலும் செய்ய இயலும்.

**மறுமைக் கருத்து ;**

(காலிங்கர் கூறுவது போல) பாவமும் பகையும் தன்னை அணுகாமல் பரிகரித்து இனிது வாழும் பொருளையுடையவன், அஃதாவது அருட்பொருள் நிரம்ப உடையவன், யானைகள் போன்ற பாவம் - பாவமாகிய தீய சக்திகளை எளிதாக வெல்ல இயலும்.

759. ''செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரியது இல்.''

**இம்மைக் கருத்து :**

இயன்ற அளவுக்கு, நன்முறையில் பொருளை ஈட்டுக. எதிரி களின் வலிமையை ஒடுக்கக்கூடிய படைக்கலமாக அஃது அமையும். பொருள் இன்றிப் போர் செய்தல் எங்ஙனம்? எனினும் பொருள் இருந்தும் தோல்வியடைவதும் உண்டு.

மறுமைக் கருத்து :

இறைவனது அருட் பொருளை எவ்வகையாலும் ஈட்டினால், ஆன்மா, தீவினை செய்யத்தூண்டும் தீய சக்திகள் அனைத்தையும் அவ்வருட் பொருளால் வெல்ல இயலும். அருளை விட வலிமை மிக்க ஆன்மீகப் படைக்கலன் வேறில்லை.

760. "ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு
எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு."

மறுமைக் கருத்து :

ஒளிமிகு பொருளாகிய அருட்பொருளை நிரம்ப ஈட்டியவர்க்கு, அறமும் இன்பமும் எளிதில் அமையும். (பொருட் செல்வத்தை ஒண்பொருள் என்பது பொருந்தாது).

# 77. படைமாட்சி

நாட்டைப் பாதுகாக்கும் படையினது சிறப்பு.

761. ''உறுப்பமைந்து ஊறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாம் தலை.''

தேர், யானை முதலிய படையின் உறுப்புகள் உள்ளதாய், எதிரிகளைத் தாக்க அஞ்சாததாய், வெற்றியைக் குறிக்கோளாய்க் கொண்டுள்ள சேனை, ஆட்சித் தலைவர்களுடைய செல்வங்களுள் முதன்மை பெற்றது.

762. ''உலைவிடத்து ஊறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக் கல்லால் அரிது.''

அழிவுறுவதாயினும் தோல்வி நிகழ்வதாயினும் எதிரிக்கு ஊறுவிளைவிக்க அஞ்சாமல் தாக்கும் வலிமை, பயிற்சி நிரம்பப் பெற்ற பழம் படைக்கு அன்றி வேறுபடைக்கு இராது.

763. ''ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும்.''

பயிற்சியற்ற வீரர், எலிகள்போல பெருங்கூட்டமாகத் திரண்டு எழுந்து ஆரவாரம் செய்தால் என்ன நிகழப் போகிறது? பயிற்சியுள்ள சேனை நாகம் போல் சீறி எழுந்தால், அது நிலைகுலைந்து போகும்.

764. ''அழிவின்று அறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.''

போரில் பின் வாங்காததும் பகைவர்க்குத் தம் போர் இரகசியம் வெளிப்படாமல் விழிப்பாயிருப்பதுமாகப் பரம்பரையாக வரும் படையே படை.

765. ''கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை.''

எமனே சினந்தெழுந்து தன்மேல் படை எடுத்தாலும், ஒரே மனத்துடன் எதிர்க்க வல்ல ஆற்றலுள்ளதே படை.

766. "மறம்மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே ஏமம் படைக்கு."

வீரம், மானம், மாண்பு மிக்க நல் வழியில் செல்லுதல், எடுத்த கருமம் செய்து முடிக்கும் துணிவு இந்நான்கு பண்புகளுமே படையை நிலைபெறச் செய்பவை.

767. "தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்கும் தன்மை யறிந்து."

தம் மீது வரும் போரை எப்படித் தடுக்கலாம் என அறிந்து, தயங்காமல் போர்க் கொடி ஏந்திச் செல்லும் துணிவுள்ளதே படை.

768. "அடற்றகையும் ஆற்றலும் இல்லெனினும் தானை
படைத்தகையால் பாடு பெறும்."

எதிரியைத் தாக்கும் தகுதியும் ஆற்றலும் இல்லையெனினும் போர் முழக்கத் தோற்றத்தாலேயே சிறப்புறும்.

769. "சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும்
இல்லாயின் வெல்லும் படை."

சிறிய அளவினதாயும் ஒருவித வெறுப்புணர்வும் வறுமை நிலையும் இன்றேல் படை வெல்லும்.

770. "நிலைமக்கள் சால உடைத்தெனினும் தானை
தலைமக்கள் இல்வழி இல்."

போரிடும் வீரர் நிலையாக மிகுந்து இருப்பினும் படைத் தலைவர்கள் இன்றேல், அப்படையால் பயன் இல்லை.

# 78. படைச் செருக்கு

படையினரிடத்து இருக்கவேண்டிய வீரத்துணிவு.

771. ''என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்னை
முன்நின்று கல்நின் றவர்.''

பகைவர்களே! என் தலைவன் முன் நின்று (எதிர்த்து) உயிரற்ற கல் போலாகிவிட்டவர் பலர் (சாகாதீர்கள்). ஆகவே, எம் தலைவரை எதிர்க்க வேண்டா. (இது வீரர்கள் கூறும் துணிவு).

772. ''கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது.''

காட்டில் சிறிய முயலைச் சாகடிக்க அதன் மீது எய்யப்படும் அம்பைவிட, பெரிய யானை மீது எய்யப்பட்டுத் (அதற்கு எத் தீங்கும் நிகழாமல்) தவறிப்போன அம்பே சிறந்தது. (பெரிய காரியங்களில் வீரம் காட்டப்பட வேண்டும். தோல்வியுற்றாலும் தாழ்வில்லை).

773. ''பேராண்மை என்ப தறுகண்ஒன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு.''

எதிரியின் மீது காட்டும் வீரம் பேராண்மையே ஆனாலும், இவ்வெதிரிக்குத் தாழ்வு ஏற்பட்டால், அவனுக்கு உதவிசெய்யும் மனவலிமை முன்பு சொன்ன பேராண்மையின் (அம்பின்) கூர்மைக்கு ஒப்பாகும். (இதுவே மிகச் சிறந்தது).

774. ''கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.''

கையிலிருந்த வேலைத் தன்னை எதிர்த்த யானை மீதெறிந்துவிட்டு, வேறு ஆயுதத்தைத் தேடி வருபவன் மார்பில், எதிர்பாராத நேரத்தில் எதிரியிடமிருந்து வந்து விழுந்த வேலைக் கண்டு, அதைப்பிடுங்கியவாறு மகிழ்ச்சியடைவான்.

775. "விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு."

பகைவரைச் சினந்து பார்த்த கண், பகைவர் வீசும் வேலைக் கண்டு உடனே ஓரிமைப் பொழுதும் தயங்காமல், தானும் வேல் எறியாவிடில் அதுவே வீரர்க்குத் தோல்வி போலாம். (எதிரியைத் தாக்குவதில் எந்நேரமும் விழிப்பாயிருத்தல் கூறப்பட்டது).

776. "விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்கும்தன் நாளை எடுத்து."

உண்மை வீரன், போர் செய்து பெரும் காயங்கள் படாத நாள்களை வீணான நாள்களாக எண்ணுவான். (நாட்டுக்காகப் போர் புரிந்து துன்புறுவதே தன் வாழ்வின் இலட்சியமாகக் கொள்வான்).

777. "சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து."

உலகளவு விளங்கக் கூடிய புகழை வேண்டி, அதற்காக உயிரையும் வேண்டாத மெய் வீரர் மட்டுமே வீரக்கழல் அணிதல் பொருந்தும்; அவர்க்குமட்டும் அது அழகு.

778. "உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்
செறினும்சீர் குன்றல் இலர்."

போர் நிகழ்ந்தால் உயிருக்கு அஞ்சாமல் போர் புரியும் வீரர், தம் ஆட்சித் தலைவர் சினந்தாலும், வீரம் குன்றாமல் செயல் புரிவர்.

779. "இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே
பிழைத்தது ஒறுக்கிற் பவர்."

(நாட்டுக்காக இறுதிவரை போர்புரிய) தாம் எடுத்துக் கொண்ட சபதம் தவறாதபடி போர்க்களத்தில் உயிர்விடுபவர்கள் தவறு செய்து விட்டதாக யார் கூறுவர்? (மாறாகப் போற்றுவர்).

780. "புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து."

தம்மைக் காப்பவரான அரசினர் கண்களில் கண்ணீர் மல்கச் செய்து போரில் இறந்த பெருமையை, ஒருவர் (இழிவான செயலாகிய) இரத்தல் செய்தேனும் அடையத்தக்கதாம். (வேறுமுறையில் இரப்பது இழிவு, இப்பெருமை இரந்தேனும் பெறத்தக்கது.)

# 79. நட்பு

சமுதாய வாழ்க்கையில் நட்பின் சிறப்பு.

781. ''செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு.''

ஒருவர் தம் செயலால் சாதிக்கக்கூடிய அரிய சாதனைகளுள் பிறர் நட்பைவிட மேலானது வேறில்லை. அதுபோல ஒருவர் செய்யும் காரியங்களுக்குப் பாதுகாப்பாக நட்புப் போல் வேறில்லை.

782. ''நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு.''

நற்குண நன்னீர்மை உள்ளவர்களின் நட்பு வளரும் பிறை போல் நிறைவுறும் தன்மையது; அறிவற்றவர் நட்போ குறையும் பிறைபோன்றது.

783. ''நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.''

(அரிய நூலைக்) கற்கக்கற்க அதன்பொருள் இன்பம் தருவது போல, நற்பண்புடையவர்கள் நட்புப் பழகப் பழக இன்பம் தரும்.

784. ''நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தற் பொருட்டு.''

(என்ன நிகழ்ந்தாலும்) சிரித்து மகிழ்வதற்காக அன்று நட்புச் செய்தல். நண்பர் அளவு மீறி வேண்டாத செயல் புரிந்தால், துணிவுடன் கண்டித்துத் திருத்துவதற்காகவே. (இது சான்றாண்மைக்குரிய சிறப்புப் பண்பாகும்).

785. ''புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்.''

நட்பு உண்டாவதற்கு வெகு காலம் பழக வேண்டும் என்றில்லை. ஒத்த எண்ணம், ஒருமைப்பாட்டு உணர்ச்சி இவையே நண்பராவதற்கு உரிமை தரும்.

786. "முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து
அகநக நட்பது நட்பு."

வெளிப்படையாகப் புன்சிரிப்புக் காட்டுவது நட்பாய்விடாது. நெஞ்சம் மகிழ அன்பு செய்வதே உண்மையான நட்பு.

787. "அழிவி னவைநீக்கி ஆறுய்த்து அழிவின்கண்
அல்லல் உழப்பதாம் நட்பு."

நன்மையை அழிக்கக் கூடிய தீயோர் உறவினை நீக்கி, நல்ல வழியில் மனத்தைச் செலுத்தி, பெருந்துன்பம் வரினும் உடனிருந்து அனுபவிப்பதே நட்பு.

788. "உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு."

உடுத்திருக்கும் உடை நழுவி விழுவதாயின், உடனே அதைச் சரிப்படுத்த கை விரைவது போலத் துன்பம் வந்தால், உடனே அதை நீக்க விரைதல் உண்மையான நட்பின் பண்பாகும்.

789. "நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனில் கொட்பின்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை."

நட்பு எங்கே அரியணையில் வீற்றிருப்பது போல் இருக்கும் என்றால், மனவேறுபாடு எதுவுமின்றி இயன்ற போதெல்லாம், இயன்ற அளவுக்கு ஒருவரையொருவர் தாங்கும் நிலையில்தான்.

790. "இனையர் இவரெமக்கு இன்னம்யாம் என்று
புனையினும் புல்லென்னும் நட்பு."

'இன்னார் எமக்கு இத்துணை அன்பு செய்பவர், யாங்கள் இவர்க்கு இத்துணை அன்பு செய்கிறோம்' என்று ஒருவரையொருவர் பாராட்டினாலும் நட்புக் குறைபடும். (உண்மையான-உயர்வான நட்புள்ளவர் ஒருவரையொருவர் உடனிருந்து பலபடப் பாராட்டுதல் பொருந்தாது).

# 80. நட்பு ஆராய்தல்

உண்மையான நட்பு எது என ஆய்ந்தறிதல்.

791. "நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு."

ஒருவரது நட்பை ஆய்ந்தறிந்து ஏற்றவர்க்கு, ஏற்றபின் அதை விடும் நினைவு உண்டாகாது. ஆகவே, முன்பின் பாராமல் நட்புக் கொள்வதைவிடத் தீமை வேறில்லை.

792. "ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரம் தரும்."

பல முறைகளில், பல வழிகளில் ஆய்ந்து பாராமல் நட்பு கொள்பவன் நிலை, இறுதியில் உயிருக்கே ஆபத்துக்குரியதாக (பெருந்துன்பமாக) மாறிவிடக்கூடும்.

793. "குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்தியாக்க நட்பு."

நற்பண்பு, வாய்மைக்குடி (953)யில் பிறந்திருத்தல், உள்ள குறைபாடுகள், சுற்றத்தார் நிலை இவற்றை ஆய்ந்த பின்னரே நட்பை உருவாக்க வேண்டும்.

794. "குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு."

வாய்மைக்குடி பிறந்து, தனக்கு நேரக்கூடிய பழிக்கு அஞ்சு பவனை விலை கொடுத்தாகிலும் நண்பனாக்கிக் கொள்ள வேண்டும்.

795. "அழச்சொல்லி அல்லது இடித்து வழக்கறிய
வல்லார்நட்பு ஆய்ந்து கொளல்."

நன்மையல்லாததைச் செய்யும்போது கண்டித்து, மனம் மிக வருந்துமாறு அறிவுரை கூறி, சான்றோர் ஒழுக்க முறையை அறிய வல்லவரை நன்கு ஆய்ந்து அவரோடு நட்புக்கொள்க.

796. ''கேட்டினும் உண்டோர் உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல்.''

கேடு நிகழ்ந்தால் அதிலும் ஒரு நன்மை உண்டு. அஃது என்னவெனின், உண்மையான நண்பரை நன்கு அறிந்து கொள்ளும் அளவுகோலாக (அக்கேடே) அமைவதாகும். (மெய்யான நண்பர் கேடு நிகழ்ந்தாலும் பிரியார். பிரிந்தால் மெய்யான நண்பர் அல்லர். இதுவே அளவுகோல்).

797. ''ஊதியம் என்பது ஒருவற்குப் பேதையார்
கேண்மை ஒரீஇ விடல்.''

அறிவற்றவர் நட்பிலிருந்து விலகிக்கொள்வது ஒருவருக்கு பெரும் நன்மையாகும்.

798. ''உள்ளற்க உள்ளம் சிறுகுவ கொள்ளற்க
அல்லற்கண் ஆற்றறுப்பார் நட்பு.''

உள்ளத்தைச் சிறுகச்செய்யும் செயல்களைச் செய்ய நினைக்க வேண்டா. துன்பம் வரும் போது கைவிடுபவர் நட்பை ஏற்றுக்கொள்ள வேண்டா.

799. ''கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை
உள்ளினும் உள்ளம் சுடும்.''

துன்பம் வந்துற்றபோது கைவிடுபவர் நட்பு, சாவு வந்து தன்னைக் கொல்லும் நேரத்தில் நினைத்தாலும் உள்ளம் கொதிக்கும்.

800. ''மருவுக மாசற்றார் கேண்மைஒன் றீத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு.''

மனத்துக்கண் மாசில்லாதார் நட்பைத் தழுவுக. மாசற்ற வழியுடன் ஒவ்வாதவரை, அவர் வேண்டும் ஏதாவது கொடுத்தேனும் கைவிடல் வேண்டும்.

# 81. பழமை

முன்பு நண்பராயிருந்தவரோடு ஒழுகு முறை.

801. "பழமை எனப்படுவது யாதெனின் யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு."

பழமை எனப்படுவது யாதெனில் (பழைய நண்பர் என்னு முறையில்), நட்புரிமையோடு செய்ததைச் சிதைக்காமல் ஏற்றுக் கொள்ளும் நட்பாகும்.

802. "நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்கு
உப்பாதல் சான்றோர் கடன்."

நட்புக்குச் சிறப்பான அம்சம் உரிமை பாராட்டுவது. அவ் உரிமை பாராட்டுதற்குரிய முறையில் இனிமையாக ஒழுகுதலே சான்றோர்க்குரிய கடமை.

803. "பழகிய நட்பெவன் செய்யும் கெழுதகைமை
செய்தாங்கு அமையாக் கடை."

நண்பர் செய்யும் நன்மையைத் தாமே செய்தது போல எண்ணிப் பெருமை கொள்ளாவிடில் பழங்கால நட்பு என்று பேசுவதில் பயன் என்ன? (நண்பர் செய்யும் அரியதொரு செயல் குறித்துப் பொறாமைப் படக்கூடிய நண்பரும் உளராதல்பற்றி இங்ஙனம் கூறப்படுகிறது).

804. "விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின்."

நட்பினர்க்குரிய உரிமையைப் பயன்படுத்தி, ஒருவர் தம்மைக் கேட்காமலே ஒரு காரியத்தைச் செய்தாலும் உண்மை நண்பர் அது விரும்பத்தக்க காரியமே என்றெண்ணுவர். (நட்பினர் சாதாரணமாக எக்காரியத்தையும் ஒருவரை ஒருவர் கலந்தாலோசித்தே செய்வர் என்பதால்).

805. ''பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க; நட்டார் செயின்.''

பழைய நண்பர் ஒருவர் வருந்தத்தக்க காரியம் செய்தாலும், அது அறியாமை என்றுமட்டுமே கருதாமல், பேருரிமை என்றும் கருதுக.

806. ''எல்லைக்கண் நின்றார் துறவார் தொலைவிடத்தும்
தொல்லைக்கண் நின்றார் தொடர்பு.''

(நட்பின் வரம்பைக் கடவாமல்) அதன் எல்லைக்குள் நிலைத்து நின்றவர், தமக்குத் தொல்லை, துன்பம் வந்த போதும் தம்மோடு நிலையாக நட்பில் நிலைத்தவரது பழைய நட்பை, அழிவே வரினும் கைவிடார்.

807. ''அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர்.''

உண்மை அன்பில் நெடுநாள் பழகி வந்த நண்பர் மிகக் கேடான செயல்களைச் செய்தாலும் அவரிடம் கொண்டிருந்த அன்பு அற்றுப் போகும்படி விடார்.

808. ''கேளிழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்கம் நட்டார் செயின்.''

பழமையான நண்பர் செய்த தவற்றைத் தாமாக அன்றிப் பிறர் சொன்னாலும்- கேட்காவிடினும், நட்புரிமை நன்கறிய வல்லவர்க்கு, அந்நண்பர் தவறு செய்த நாளும் நல்ல நாளே

809. ''கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையும் உலகு.''

பழைய நட்புரிமை கெடாத நிலையில் நின்றவரது நட்புறவை, அவர் செய்த தவறுபற்றி, விலக்கி விடாத அன்பரையே உலகினர் விரும்புவர்.

810. ''விழையார் விழையப் படுப பழையார்கண்
பண்பின் தலைப்பிரியா தார்.''

பழைய நண்பர் தவறு செய்தாலும், அவரது நட்புப் பண்பி னின்று நீங்காதவர் பகைவராலும் விரும்பப்படுவர்.

# 82. தீ நட்பு

தீய நட்புறவு, அதன் விளைவுகள்.

811. "பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்றல் இனிது."

அன்பின் மிகுதியால் நண்பரை அப்படியே விழுங்கிவிடுவது போல் தோன்றினும், தீய பண்பினர் நட்பு வளர்வதைவிடக் குறைவதே நன்று.

812. "உறின்நட்டு அறின்ஒரூஉம் ஒப்பிலார் கேண்மை
பெறினும் இழப்பினும் என்."

தமக்கு நன்மை உண்டாவதாயிருந்தால், நட்புச் செய்வது, உண்டாகாவிடில் விலகிவிடுவது நட்பாகாது. மன ஒருமைப்பாடு இல்லாதாரின் உறவைப் பெற்றால் என்ன? இழந்தால் என்ன? இரண்டும் ஒன்றே.

813. "உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர்."

தமக்கு வரும் பயனைமட்டும் அளந்து பார்க்கும் தன்மையுடைய நண்பரும் கொடுப்பவரை உள்ளத்தில் வையாது, கொடுக்கும் பொருளையே நோக்குபவரும் களவு செய்வதால் கிடைக்கும் பொருளைமட்டும் எண்ணுபவருக்கு ஒப்பாவர்.

814. "அமரகத்து ஆற்றறுக்கும் கல்லாமா அன்னார்
தமரின் தனிமை தலை."

போரில் தன்னை எப்படியும் தாங்கிக் காப்பதுபோலிருந்து, திடீரெனத் தன்னைக் கீழே தள்ளி விட்டு ஓடிப்போகும் பயிற்சியில்லாத குதிரையைப் போன்றவரோடு நட்புக் கொள்வதைவிடத் தனித்திருத்தலே நன்று.

815. "செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலின் எய்தாமை நன்று."

(தமக்குப் பாதுகாப்பாயிருக்கும் என நம்பி) நட்புச் செய்தாலும், இறுதியில் பாதுகாப்பாகாத கீழோர் நட்பைப் பெறுவதிலும் பெறாதிருப்பதே நன்று.

816. "பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுடையார்
ஏதின்மை கோடி உறும்."

அறிவில்லாதவனோடு கொள்ளும் நெருங்கிய நட்பைவிட அறிஞரின் பகைமையே கோடி மடங்கு நன்று.

817. "நகைவகைய ராகிய நட்பின் பகைவரால்
பத்தடுத்த கோடி உறும்."

வெறும் சிரிப்பிலும் மகிழ்வதிலுமே நட்பை வளர்க்க விரும்புவோருடைய நட்பைவிடப் பகைவரால் வரும் துன்பம் பத்துக் கோடி மடங்கு நல்லதாம்.

818. "ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்."

செய்யக்கூடிய காரியத்தையும் கெடுப்பவரது நட்பினை, அவர்க்குச் சொல்லாமலே சிறிது சிறிதாய்த் தளர விடுக.

819. "கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு."

சொல்வதொன்று, செய்வதொன்றாக உள்ளவரது நட்பு, கனவு நிலையில்கூடத் துன்பம் தருவது. (மிக மிகக் கொடியது).

820. "எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
மன்றில் பழிப்பார் தொடர்பு."

இல்லத்தில் அன்பர் போல் உறவாடி, வெளியே பலர் கூடியுள்ளபோது பழிப்பவரது நட்பு, ஒரு சிறிதும் தம்மை அணுகாமல் காத்துக்கொள்க.

# 83. கூடாநட்பு

வெளிப்படையாய் நண்பர் போலும், உண்மையில் நட்புற வின்றியும் ஒழுகுபவர் நிலைமை.

821. "சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு."

நேர்மையின்றி வெளிப்படையாக மட்டும் தக்க சமயம் வரும்வரை கலந்தொழுகுபவர் நட்பு, வாய்ப்புக் கிடைத்தால், இரும்பு முதலியவற்றைத் துண்டாக வெட்டுவதற்குத் துணை செய்யும் பட்டடைக்கு ஒப்பாகும்.

822. "இனம்போன்று இனமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்."

உறவு உள்ளவர் போலிருந்து உண்மையில் உறவு அற்ற வராய் ஒழுகுபவர் நட்பு, பெண்கள் மனம் போல (குறிப்பாக விலை மகளிர் மனம் போல) மாறிக்கொண்டேயிருக்கும்.

823 "பல நல்ல கற்றக் கடைத்தும் மனநல்லர்
ஆகுதல் மாணார்க்கு அரிது."

பல நல்ல நூல்களைக் கற்றபோதிலும், தீய குணம் படைத்தவர், மனம் திருந்தி உண்மை நண்பர் ஆதல் அரிது.

824. "முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா
வஞ்சரை அஞ்சப் படும்."

முகத்தில் இனிய புன்சிரிப்புக் காட்டி, அகத்தில் தீயதை வளர்ப்பவருக்கு அஞ்சுதல் வேண்டும்.

825. "மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்
சொல்லினால் தேறற்பாற்று அன்று."

உள்ளத்தோடு உள்ளம் பொருந்தாதவரது சொல்லுக்கு எள்ளளவும் மதிப்புத் தரலாகாது.

826. "நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்
ஒல்லை உணரப் படும்."

உண்மையான நண்பர் போல நல்லதையே பேசிடினும் (உள்ளத்தில்) ஒத்துப் போகாதவர் சொல் பயனற்றது என்பதை விரைவாகத் தெளிதல் வேண்டும்.

827. "சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான்."

வில்லின் வளைவாகிய வணக்கம் அது யார் மீது எய்யப்படுகிறதோ அவர்க்குத் தீமையைக் குறித்தலால், பொய் நட்புக் கொண்டவர் பணிவும் வணக்கமும் தீமையேயன்றி நன்மை பயவாது.

828. "தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து."

பொய் நண்பருடைய கைக்குள் கொல்லும் ஆயுதம் மறைந்திருக்கலாம். அதுபோல் உனக்காக முதலைக்கண்ணீர் வடிப்பவர் உன் எதிரியாகவும் இருக்கலாம்.

829. "மிகச்செய்து தம்எள்ளு வாரை நகச்செய்து
நட்பினுள் சாப்புல்லற் பாற்று."

வெளிப்படையாய் மிகமிக நட்புச் செய்து, உள்ளத்தில் இழிவாய் எண்ணுபவரிடம் தாமும் நட்புக் காட்டி மகிழச்செய்து, உள்ள நட்பு நீங்கும் வண்ணம் செய்வதே முறை.

830. "பகைநட்பாங் காலம் வருங்கால் முகநட்டு
அகநட்பு ஒரீஇ விடல்."

நண்பரல்லாதவர், தமக்கு நண்பராகும் நிலை வரின் (விழிப்புடனிருந்து) வெளிப்படையாய் நட்புக்காட்டி, (உண்மையான நட்பு அன்று எனத் தெரிந்தால்) உள்ளத்தில் மட்டுமன்று, வெளிப்படையாகவும் நட்பை விட்டு விடுக.

# 84. பேதைமை

அறிவும் பண்பும் சிறிதுமற்ற நிலை.

831. ''பேதைமை என்பதொன்று யாதெனின் ஏதங்
கொண்டு
ஊதியம் போக விடல்.''

பேதைமை என்னும் நிலைமை யாதெனின், கெடுதி யானதைப் பற்றிக்கொண்டு நன்மையானதை விட்டு விடுதலே.

832. ''பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்.''

பேதைமையுள் பேதைமை யாதென்றால், தகாத ஒழுக் கத்தின் மீது 'காதல்' கொள்ளுதல்.

833. ''நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.''

நாணுதற்குரிய செயல்களுக்கு நாணாமையும் ஆய்ந்து பார்க்க வேண்டியதை ஆராயாமையும் அன்புணர்வு இல்லாமையும் காக்கவேண்டியதை காவாமையும் பேதையின் செயல்கள்.

834. ''ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
பேதையிற் பேதையார் இல்.''

அறநூல்கள் கற்றுணர்ந்தும் அவற்றின் உட்பொருளைப் பிறர்க்கு எடுத்துச் சொல்லியும் தானே அவற்றிற்கேற்ப ஒழுகாத அறிவிலியைவிட வேறு அறிவிலி யாரும் இல்லை.

835. ''ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக் கழுந்தும் அளறு.''

(பிறர் சொல்லியும் திருந்தாமல் அறிவற்ற) ஒரே மன நிலையில் நிலைத்துச் செயல்புரியும் பேதை, வாழ்க்கையின் பல நிலைகளிலும் ஆழ்ந்த சேற்றில் அழுந்தி தவிப்பது போல் துன்புறுவான்.

836. ''பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்.''

கையாலாகாத பேதை ஒன்றைச் செய்ய மேற்கொண்டால், அது சீரழிவது மட்டுமன்று, தானும் குற்றப்படுவான்.

837. ''ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வம் உற்றக் கடை.''

பேதைக்குப் பெருஞ்செல்வம் உண்டானால், அவனோடு உறவற்றவர் அச்செல்வத்தை நிரம்ப அனுபவிக்கத் தம்முடையவர் பசித்துன்புறுவர்.

838. ''மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்
கையொன்று உடைமை பெறின்.''

பேதைக்குக் கையில் அரியதொன்று கிடைத்தால், பித்தம் பிடித்தவன் கள்ளுண்டு மயங்கினவன் போல் ஆவான்.

839. ''பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கண்
பீழை தருவதொன்று இல்.''

பிரிவின் போது எத்துன்பமும் நிகழாது என்னும் வகையில் பேதையின் நட்பு இனிதாம். (பிரிவது இனிது).

840. ''கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்.''

பேதை ஒருவன் சான்றாண்மையினர் குழுவில் வந்து புகுவது, கழுவாத காலைக் (புனித) கோவிலில் வைத்தது போலாம்.

# 85. புல்லறிவாண்மை

அறிவின்மையால் ஆளப்படுவாரது பண்பு.

841. ''அறிவின்மை இன்மையுள் இன்மை பிறிதின்மை
இன்மையா வையாது உலகு.''

இன்மை (வறுமை) யுள் கொடிதானது அறிவு இன்மை; பொருள் இன்மையைக் குறையாக (இன்மையாக) அறிஞர் கருதார்.

842. ''அறிவிலான் நெஞ்சுவந்து ஈதல் பிறிதுயாதும்
இல்லை பெறுவான் தவம்.''

அறிவு இல்லாதவன் மன மகிழ்வோடு ஒன்றைக் கொடுத்தால், அது பெறுபவன் செய்த தவமேயாம்.

843. ''அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்கும் செய்தல் அரிது.''

அறிவில்லார் தம்மைத்தாமே துன்புறுத்திக்கொள்ளும் துன்பத்தை, (அன்பில்லாப்) பகைவர் முதலாய் அவர்களுக்குச் செய்தல் அரிது.

844. ''வெண்மை எனப்படுவது யாதெனின் ஒண்மை
உடையம்யாம் என்னும் செருக்கு.''

முதிர்ச்சியடையாத அறிவு யாதெனின், உள்ளொளி மிக்க அறிவு எமக்குண்டு என்று எண்ணும் மடமையே.

845. ''கல்லாத மேற்கொண்டு ஒழுகல் கசடற
வல்லதூஉம் ஐயம் தரும்.''

நூற்களைக் கல்லாத போதும், கற்றது போலக் காட்டி ஒழுகுவது, அங்ஙனம் ஒழுகுபவர்க்கு இருக்கக்கூடிய சிறிதளவான அறிவுபற்றியும் ஐயுறுவதற்கு இடமாகும்.

846. "அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயின்
குற்றம் மறையா வழி."

தம்மிடத்துள்ள குற்றங்கள் மறையுமாறு செய்யாத அறிவிலார், மறைக்க வேண்டிய உறுப்புகளை மறைப்பதால் பயன் என்ன? அஃதாவது குற்றங்களை நீக்குவது எவ்வளவோ மேலான செயல்.

847. "அருமறை சோரும் அறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு."

பிறரிடம் வெளியிடக் கூடாத அரிய செய்திகளை மனத்திலேயே அடக்கிக் கொள்ளாமல் வெளியிட்டுவிடும் அறிவீனன், தானே தனக்குப் பெருந்தீங்கைச் செய்து கொள்பவனாகின்றான்.

848. "ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்
போஒம் அளவுமோர் நோய்."

அறிவீனன் நன்மையானதைப் பிறர் சொல்லியும் செய்வதில்லை; தானாகவும் அறிந்துகொள்வதில்லை. இத்தகையவன் தன் உயிர் போகும்வரை தனக்கும் பிறர்க்கும் கொடிய நோய் போல் உள்ளான்.

849. "காணாதான் காட்டுவான் தான்காணான் காணாதான்
கண்டானாம் தான்கண்ட வாறு."

அறிவில்லாதவனுக்கு அறிவு புகட்டப் புகுவோன், தானே அறிவற்றவனாய் (பிறர் முன்) காணப்படுவான். அறிவில்லாதவன் தன் வழியிலேயே நடப்பதால் (ஒருவேளை துன்பப்பட்டு) அறிவு பெறக்கூடும்.

850. "உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து
அலகையா வைக்கப் படும்."

மற்றெல்லாரும் 'உண்டு' என்பதை, 'இல்லை' என மறுக்கும் அறிவீனன் உலகில் பேய் எனக் கருதப்படுவான்.

# 86. இகல்

அன்புறவை அழிக்கும் மாறுபாடான மனப்பான்மை.

851. ''இகலென்ப எல்லா உயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கும் நோய்.''

எல்லோரிடமும் அன்பாய்ப் பழகுவதற்கு மாறாக, அவரிட மிருந்து பிரிந்து நிற்கும் பண்பற்ற நிலையை வளர்க்கும் ஒருவித உள்ளத்து நோய் 'இகல்' எனப்படும்.

852. ''பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
இன்னாசெய் யாமை தலை.''

பிரிந்து நிற்க நினைத்துப் பற்றன்பு இல்லாத காரியங்களை ஒருவன் செய்தாலும், அவனோடு மாறுபடுவதால் வரக்கூடிய தீமையை நினைத்து, அவனுக்கு எத்துன்பமும் செய்யாமையே தலையாய செயல்.

853. ''இகலென்னும் எவ்வநோய் நீக்கின் தவலில்லாத்
தாவில் விளக்கம் தரும்.''

மன வேறுபாடு என்னும் துன்பம் தரும் நோயை நீக்கினால், அஃது உண்மையான நீங்காப் புகழைத்தரும்.

854. ''இன்பத்துள் இன்பம் பயக்கும் இகலென்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்.''

துன்பங்களுள் பெருந்துன்பமாகும் இகல் என்னும் மன வேறு பாடு இல்லையானால், அதுவே இன்பங்களுள் மிகுந்த இன்பத் தைப் பயக்கும்.

855. ''இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்கும் தன்மை யவர்.''

இந்த மன மாறுபாட்டை எதிர்த்து (மன ஒருமைப்பாட்டின் பக்கம்) சாய்ந்து ஒழுக வல்லவரை மிஞ்சக்கூடிய வல்லமை யாருக்கு இருக்க இயலும்?

856. "இகலின் மிகலினிது என்பவன் வாழ்க்கை
தவலும் கெடலும் நணித்து."

இகல் மனப்பான்மையை வளர்ப்பதே இனிமை என்பவனது வாழ்க்கை, விரைவில் பெருங்குற்ற நிலையையும் அழிவையும் அடைந்தே தீரும்.

857. "மிகல்மேவல் மெய்ப்பொருள் காணார் இகல்மேவல்
இன்னா அறிவி னவர்."

மன வேறுபாட்டை மேற்கொள்ளும் சிற்றறிவினர், வெற்றியைப் பெற்றுத் தரக்கூடிய மெய்ப்பொருளை அறிய இயலாதவர் ஆவர்.

858. "இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம் அதனை
மிகலூக்கின் ஊக்குமாங் கேடு."

மனவேறுபாடு நிகழ்வதாயிருந்தால், அதை எதிர்த்து எதிர் பக்கம் சாய்வதே நன்மை பயக்கும். மாறாக அவ்வேறுபாட்டை மிகுதியாக வளர்த்தால், கேட்டினை வளர்ப்பதாகும்.

859. "இகல்காணான் ஆக்கம் வருங்கால் அதனை
மிகல்காணும் கேடு தரற்கு."

தனக்குச் செல்வம் வருவதானால், ஒருவன் இகல் மனப் பான்மையை நினையான். அம்மனப்பான்மையை மிகுதியாய் நினைப்பது தனக்குக் கேடு விளைவித்துக் கொள்வதற்கே.

860. "இகலானாம் இன்னாத எல்லாம் நகலானாம்
நன்னயம் என்னும் செருக்கு."

இகல் மனப்பான்மையால் துன்பமெல்லாம் நிகழும். ஒருமை மனப்பான்மையால் நல்நயம் என்னும் பெருஞ்செல்வம் உண்டாகும்.

# 87. பகைமாட்சி

பகைமையை எளிதில் வெல்லக்கூடியவனது சிறப்பு.

861. ''வலியார்க்கு மாறேற்றல் ஓம்புக ஓம்பா
மெலியார்மேல் மேக பகை.''

தம்மை விட வலிமையுடையவர்க்குப் பகையாகி அவர்களை எதிர்ப்பதை ஒழிக்க. (வெல்ல இயலாமல் துன்புற நேரிடலாம்). தம்மைவிட வலிமை குறைந்தவராயின் (நியாயமான காரணம் இருந்தால்) அவர்களை எதிர்க்க. (வெற்றி பெறக்கூடும்).

862. ''அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்துவ்வான்
என்பரியும் ஏதிலான் துப்பு.''

யார் மீதும் அன்பில்லாதவன்; வலிமையுள்ள துணையில்லாதவன்; தானும் வலிமையற்றவன்; இத்தகையவன் தன்னை எதிர்ப்பவனை எங்ஙனம் வெல்லுவான்? (பிறர் மீது அன்பு இருந்தால் உதவ வருவர் என்பது கருத்து).

863. ''அஞ்சும் அறியான் அமைவிலன் ஈகலான்
தஞ்சம் எளியன் பகைக்கு.''

அஞ்ச வேண்டியதற்கு அஞ்சும் அறிவு இல்லாதவன்; பிறரோடு மனம் ஒத்துப்போகாதவன்; ஈகை மனப்பான்மை இல்லாதவன்; இத்தகையவன் பகைவர் கையில் எளிதில் அகப்படுவான்.

864. ''நீங்கான் வெகுளி நிறையிலன் எஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கும் எளிது.''

சினத்தை விடாதவன், காப்பன காத்துக் கடிவன கடியும் மனத்திண்மை இல்லாதவன், இவனை வெல்லுவது எங்கும் எப்போதும் யார்க்கும் எளிது.

865. ''வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க்கு இனிது.''

பின்னர் நேரக்கூடியதைக் கவனியாதவன்; உள்ள வாய்ப்பு களைப் பயன்படுத்திக் கொள்ளாதவன்; தனக்கு நேரக்கூடிய பழியையும் நினையாதவன்; நற்பண்பு இல்லாதவன்; இத்தகையவன் எதிரிகட்கு ஏற்ற வாய்ப்பு அளிப்பவனாவான்.

866. "காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும்."

கண்மூடித்தனமான சினத்தைக் காட்டுபவனும் பேராசை யுள்ளவனும் பகைமையை வரவழைத்துக் கொள்வான்.

867. "கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்திருந்து
மாணாத செய்வான் பகை."

தன்னையடுத்திருந்து தகாதன செய்பவன் பகைமையைத் துணிவுடன் பொருள் கொடுத்தாவது ஏற்றுக்கொள்ள வேண்டும். (துணிவுடன் ஏற்கப்படும் அறைகூவல் போன்ற இது இறுதியில் பயன்தருவதாகக் கூடும்).

868. "குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்கு
இனனிலனாம் ஏமாப்பு உடைத்து."

நற்குணம் இன்றிக் குற்றங்கள் பலவும் செய்து, அதனால் தனக்குத் துணையாயிருக்கக்கூடியவர்களையும் இழப்பவன் நிலைமை பகைவர்க்கே துணைபுரிவதற்கு ஒப்பாகும்.

869. "செறுவார்க்குச் சேணிகவா இன்பம் அறிவிலா
அஞ்சும் பகைவர்ப் பெறின்."

(அரசியல்) அறிவு இல்லாதவரும் அஞ்சும் மனப்பான்மை யுள்ளவருமாகிய பகைவர்கள் உண்டானால், அவர்களை வெல் பவர்க்கு மேலான இன்பம் நீங்காது.

870. "கல்லான் வெகுளும் சிறுபொருள் எஞ்ஞான்றும்
ஒல்லானை ஒல்லாது ஒளி."

அறிவற்றவனைப் பகைத்தலால் எளிதாக அடையக்கூடிய பொருட் பொருளையும் அடைய இயலாதவனை, எந்நாளும் புகழ் அடையாது.

# 88. பகைத்திறம் தெரிதல்

பகைவருடைய நிலைமை-திறமை அறிந்து அவர்களிடம் நடந்துகொள்ள வேண்டிய முறையை அறிதல்.

871. "பகைஎன்னும் பண்பி லதனை ஒருவன்
நகையேயும் வேண்டற்பாற்று அன்று."

பகை என்னும் பண்பற்ற நிலையை ஒருவன் விளையாட்டுக்காகவும் விரும்பலாகாது.

872. "வில்லே ருழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை."

வீரர்களோடு பகைமை கொள்ள நேர்ந்தாலும் கொள்க; அறிஞர்களோடு பகைமை கொள்ள வேண்டா.

873. "ஏமுற் றவரினும் ஏழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்."

தனித்து நின்று பலரோடு பகைமை கொள்பவன் பித்தர்களைவிட அறிவற்றவன்.

874. "பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கண் தங்கிற்று உலகு."

பகைமை நிலையை நட்பு நிலையாக மாற்றி ஒழுகும் உயர் பண்பினன் தகைமையைக் கண்டு உலகமே அவனது ஆட்சிக்கு அடங்கும்.

875. "தன்துணை இன்றால் பகைஇரண்டால் தான்ஒருவன்
இன்துணையாக் கொள்கவற்றின் ஒன்று."

தனக்குத்துணை யாரும் இல்லாத நிலையில் இருவித பகைமைகளைத் தேடிக் கொள்ளற்க. அவற்றுள் ஒன்றை யாவது தனக்குச் சாதகமாக ஆக்கிக்கொள்க.

876. "தேறினும் தேறா விடினும் அழிவின்கண்
தேறான் பகாஅன் விடல்."

பகைவனை நன்கு ஆய்ந்து தெளிந்தாலும் தெளியா விடினும் தனக்குத் துன்பம் உற்ற காலை, அப்பகைவனைக் கூடாமலும், விட்டு நீங்காமலும் இருந்துவிடல் நலம்.

877. "நோவற்க நொந்தது அறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து."

தனக்குற்ற துன்பத்தை (முன் பின் யோசியாமல்) அறியாதவர்க்குச் சொல்ல வேண்டா; தனது தளர்ந்த நிலையைப் பகைவரிடம் காட்டாதிருக்க.

878. "வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கண் பட்ட செருக்கு."

காரியங்களைச் செய்ய வேண்டிய வகையறிந்து, அவற்றை முடித்தற்கேற்ப தன் வலிமையை அதிகரித்துத் தன்னைப் பாதுகாத்துக்கொண்டால், பகைவரிடம் உண்டாகும் செருக்கு ஒழியும்.

879. "இளைதாக முள்மரம் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த விடத்து."

முட்செடியை முளைக்கும்போதே பிடுங்கி எறிக. முற்றியபின் அதைப்பிடுங்கினால் பிடுங்குபவர் கையை வருத்தும். (பகைமை உணர்வைத் தொடக்க நிலையிலேயே கிள்ளி எறிக. இல்லையேல், அது வளர்ந்து உன்னை அழித்துவிடும்).

880. "உயிர்ப்ப உளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்."

தம்மைப் பகைப்பவரது செருக்கைச் சரியான நேரத்தில் அடக்காதவர் விரைவில் தம் உயிரையே இழப்பர்.

# 89. உட்பகை

உடனிருப்பவராலேயே உண்டாகும் பகை.

881. "நிழல்நீரும் இன்னாத இன்னா தமர்நீரும்
இன்னாவாம் இன்னா செயின்."

நிழலும் நீரும் துன்பத்துக்கு வழியாயின் தீமையே. அதுபோல தம்மோடுள்ளவர் பண்பும் துன்பம் தருவதாயின் தீமையாகும்.

882. "வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு."

கொல்லும் வாள்போல எதிரில் நிற்கும் பகைவரை அஞ்ச வேண்டா. உறவினர் போல் இருந்து பகைமை காட்டுபவர் தொடர்பை நீக்குக.

883. "உட்பகை அஞ்சித்தற் காக்க உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்."

உடனிருப்பவர் பகைமைக்கு அஞ்சி, தன்னைக் காத்துக் கொள்க. இல்லையேல் அப்பகை உறுதியற்ற மண்போல் இருந்தாலும், தான் சிறிது தளர்ந்துள்ள நிலையில் பேரழிவை அளிக்கும்.

884. "மனமாணா உட்பகை தோன்றின் இனமாணா
ஏதம் பலவுந் தரும்."

உள்ளம் உண்மையிலேயே திருந்தாமல் உள்ளுக்குள்ளேயே பகை வளருமானால், நல்லவர் பலர் தொடர்பு அறவே நீங்கச் செய்யும் குற்றங்கள் பலவும் நிகழும்.

885. "உறல்முறையான் உட்பகை தோன்றின்
இறல்முறையான்
ஏதம் பலவுந் தரும்"

உறவு முறையாலேயே உள் பகை தோன்றினால் அடியோடு அழிவுறச்செய்யும் குற்றங்கள் பல உண்டாகும்.

886. "ஒன்றாமை ஒன்றியார் கட்படின் எஞ்ஞான்றும்
பொன்றாமை ஒன்றல் அரிது."

தன்னைச் சார்ந்திருப்பவர்கள் பகைமை தோன்றினால், அழிவு ஏற்படாமல் தப்புவது அரிது.

887. "செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே
உட்பகை உற்ற குடி."

சிமிழும் அதன் மூடியும் பொருந்துவது போல், உறவினர் வெளிப்படையாகக் கூடியிருப்பதுபோல் காணப்படினும் உட்பகை நேர்ந்த குடும்பம் உண்மையில் கூடி வாழாது.

888. "அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது
உட்பகை உற்ற குடி."

உட்பகையுள்ள குடும்பம் அரத்தால் அராவப்பட்ட இரும்பு போலத் தேய்ந்து வலி இழக்கும்.

889. "எட்பக வன்ன சிறுமைத்தே ஆயினும்
உட்பகை உள்ளதாம் கேடு."

உட்பகை எள்ளின் பகுதிபோல மிகச் சிறியதேயாயினும் அதனால் கேடு விளைந்தே தீரும்.

890. "உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போடு உடனுறைந் தற்று."

மனப்பொருத்தம் இல்லாதவர் கூடி வாழ்வது குடிசையில் பாம்போடு வாசம் செய்வது போலாம்.

# 90. பெரியாரைப் பிழையாமை

பொருளாட்சி, அருளாட்சி இரண்டிலும் அவ்வாட்சியில் பெரியவராகக் கருதப்படுவோரிடம் பிழைபட ஒழுகாமை.

891. "ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாம் தலை."

('ஆற்றுவார் ஆற்றல் பணிதல்' (985) என்றது போல) ஆற்றலுள்ளவர் ஆற்றல் எப்போது சிறக்கிறதெனில், பிறரை இகழாதிருத்தலிலேதான். பிறரால் போற்றக் கூடிய செயல்களுள் இதுவே தலை சிறந்தது.

ஆட்சியில் உள்ளவர்க்கு அதிகாரம் உண்டென்பதால், பிறரை இகழ்வது எளிது. இது எவ் ஆட்சிக்குமே ஒவ்வாது. சிறப்பாக அருள் ஆட்சியோடு கடுகளவும் பொருந்தாது.

892. "பெரியாரைப் பேணாது ஒழுகின் பெரியாரால்
பேரா இடும்பை தரும்."

(அருளால் அல்லது பொருளால்) உயர்ந்தவரை மதியாமல் ஒழுகினால், அவ்வுயர்ந்தவரால் நீங்காத துன்பம் நேரும். இம்மை ஆட்சியில் அதிகாரம் கொண்டவர்களால் நேரடியாகத் தண்டனை கிடைக்கக்கூடும். அருள் ஆட்சியிலோ அவ்வாட்சி புரிவோர் நேரடியாகத் தண்டிக்காவிடினும், அருளையே அவமதித்ததால், இறைவனால் இறுதியில் தண்டனையடைந்தே தீருவர். அருளாட்சியிலும் சில சமயங்களில் சில குற்றங்களுக்குரிய தண்டனை இம்மையிலேயே நிகழலாம். அருளாட்சியில் அதன் சட்டங்களுக்குப் பணியாதவர்க்குச் சில ஆன்மீக தண்டனைகள் உண்டு. (உதாரணமாகக் குறிப்பிட்ட குற்றங்களுக்கு அருள் சாதனங்களைப் பெற உரிமை இழத்தல் நேரிடலாம்.)

("துன்பங்கள் இருமையிலும் தம்மாலும் பிற உயிர்களாலும் தெய்வத்தாலும் இடையறாது நேர்வன. அவை தாமே

தேடிக்கொண்டவை என்பது தோன்ற ஒழுக்கத்தை வினை முதலாக்கி, பெரியாரைக் கருவியாக்கிக் கூறினார்'' என்னும் பாவாணர் கருத்து மிகச் சிறப்பது காண்க).

893. ''கெடல்வேண்டின் கேளாது செய்க அடல்வேண்டின்
ஆற்று பவர்கண் இழுக்கு.''

கெட்டழிய விரும்பினால் மேலோர், பெரியோர் யாரையும் கேட்காமல் (ஆபத்துக்குரிய) செயலை மேற்கொள்க. எதிரிகளால் அழிவுறுவதை விரும்பினால், ஆற்றல் உள்ளவர்க்கு எதிராய் ஏதேனும் குற்றம் செய்க! இது சிறப்பாக இம்மை ஆட்சி ஆற்றல் படைத்தவர்க்குப் பொருந்தும். ஆனால், மறுமை அருள் ஆட்சியர்க்கும் பொருந்தும். ('.................. இருவகைப் பெரியாரையும் அறிந்துகொள்க' என்னும் பாவாணர் கருத்தை ஓர்க). மேற்குறளில் கூறியது போல அருள் ஆட்சியில் உள்ளவரால் அழிவு நேராதெனினும், தானே தேடிக்கொண்ட அழிவும் ஆகலாம்.

894. ''கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல்.''

ஆற்றல் உள்ள பெரியார்க்கு, ஆற்றல் இல்லாதார் தீமை செய்வது எமனை அப்போதே கை தட்டி அழைப்பது போலாம். (இஃது இம்மை ஆட்சியில் சிறப்பாக நிகழக்கூடியது).

895. ''யாண்டுச்சென்று யாண்டும் உளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர்.''

பெருவலிமை படைத்த ஆட்சியாளரின், சினத்துக்கு ஆளானவர், எங்குச் சென்றாலும் எங்கும் வாழ இயலாதவர் ஆவர். (அஃதாவது தண்டனைக்குத் தப்ப இயலாது). இது சிறப்பாக அருள் ஆட்சியில், அருளை மதிக்காமல் வாழ்ந்து அருள் வேந்தனாம் இறைவனின் சினத்துக்கு ஆளானால் இறுதித் தண்டனைக்குத் தப்பவே இயலாது. (குறள் 29 காண்க). இம்மை ஆட்சியில் சில சமயங்களில் தப்பினாலும் தப்பலாம்; மறுமை ஆட்சியில் இஃது இயலவே இயலாது.

896. ''எரியால் சுடப்படினும் உய்வுண்டாம் உய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.''

தீயினால் சுடப்பட்டாலும் உயிருக்கு ஆபத்தில்லை; மேற் கூறிய (குறள் - 895) பெரியாரை எதிர்த்து ஒழுகுபவர் உய்வ தில்லை.

897. ''வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னாம்
தகைமாண்ட தக்கார் செறின்.''

(இறையருளால்) தகைமை மிக்க முனிவர் சினந்தெழுந்தால் பல்வகையானும் மாண்புபெற்ற வாழ்க்கையும் சிறப்பாக வான் பொருளாகிய அருட்பொருளும் நீங்கிவிடும். அருளால் மிக உயர் நிலையை அடைந்தவரது நல்லுறவு அருள் வாழ்க்கைக்கு மட்டு மன்று, பொருட்பொருள் வசதியுள்ள வாழ்க்கைக்கும் ஆதார மாகக்கூடும். ஆகவே, அவரைப் பிழையாமை அவசியம்.

898. ''குன்றன்னார் குன்ற மதிப்பின் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து.''

உலகில் நிலைபெற்ற வாழ்வினர் எனக் கருதப்படுபவர் கேடுற வேண்டுமெனக் குன்று போல் உயர்ந்துள்ளவர் நினைப் பாராயின், குடும்பத்தோடு மாய்ந்து விடுவர். (பெரியோரது அருளாசி வாழ்வுக்குத் தேவை என்றவாறு).

899. ''ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.''

உயர்ந்த கொள்கையினர், முனிவர், பெருமக்கள் வெகுண் டெழுந்தால், ஆட்சிப் பதவியில் உள்ளவர் பதவி இழந்து சீரழிவர்.

900. ''இறந்தமைந்த சார்புடைய ராயினும் உய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின்.''

தவநெறியில் சிறந்து விளங்கும் முனிவர் வெகுண்டால், மிகுந்த பெருமை படைத்த துணைவரைக் கொண்டிருப்பினும் உய்தல் பெறார்.

# 91. பெண் வழிச்சேறல்

அரசியலார் மனைவியர்க்கு அடங்கி அவர் சொல் கேட்டுக் கடமை ஆற்றுவதில் தவறுதல்.

901. "மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளும் அது."

அரசியல் கடமைகளை ஆற்றுவதில் மனைவியை விரும்பியவராய் அவள் சொல் கேட்டு நடப்பவர், ஆட்சியில் உயரிய பயனை அடையார். இருமை ஆட்சியிலும் செயல் ஆற்ற விழைபவர்க்கு வேண்டாதது இது.

902. "பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்."

அறத்தைப் பேணாமல் அளவுக்கு மேல் பெண்மையைப்பற்றி நிற்பவனது பொருள் ஆக்கம், பெரிதும் நாணத்தக்க நிலையை உண்டாக்கும்.

903. "இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும்"

மனைவிக்குக் கீழ்ப்படிந்து கடமை செய்ய இயலாத நிலை, எப்போதும் நல்லோரிடையே நாணத்தக்கதாகும்.

904. "மனையாளை அஞ்சும் மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்தல் இன்று."

மனைவிக்கு அஞ்சி மறுமை வாழ்வுக்குரிய அருளையும் இழப்பவன், இம்மைக்குரிய செயலிலோ மறுமைக்குரிய செயலிலோ வெற்றி பெறுவதில்லை.

905. "இல்லாளை அஞ்சுவான் அஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல்."

இல்லாளுக்கு அஞ்சுபவன், நல்லோர்க்கு நன்மை செய்ய எப்போதும் அஞ்சுவான்.

906. "இமையாரின் வாழினும் பாடிலரே இல்லாள்
அமையார்தோள் அஞ்சு பவர்."

(தம் கடமையைச் செய்வதில் கண்ணாயிருப்பவர்) மனைவியிடம் கிடைக்கும் சிற்றின்பம் கிடைக்காமல் போகுமோ என்று அஞ்சினால் (தோளுக்கு அஞ்சுதல் - தோளில் சாய்வதால் வரும் இன்பம் குறையுமோ என்றஞ்சுதல்) அவர்கள் தேவர்கள் போல் வாழினும் பெருமை இல்லாதவரே.

907. "பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையின் நாணுடைப்,
பெண்ணே பெருமை உடைத்து."

மனைவிக்கு அல்லது வேறு பெண்டிர்க்குக் கீழ்ப்படிந்து நடப்பவரது ஆண்மையைவிட (அஃதாவது ஆண்மைக்குறைவினைவிட) நாணம் உள்ள பெண்ணின் பெருமையே பெரிது.

908. "நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங்கு ஒழுகு பவர்."

அழகிய நெற்றியையுடையவள் விருப்பப்படி நடப்பவர் நண்பர்களுடைய எக்குறையும் தீர்க்க இயலாது; வேறு நற்செயல்களும் செய்ய இயலாது.

909. "அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்
பெண்ஏவல் செய்வார்கண் இல்."

அறச்செயலும் அருட்பொருள், பொருட்பொருள் ஆகிய பொருள் செய்தலும், வேறு எச்செயலும் பெண் அடிமையானவர்க்கு இயலாதன.

910. "எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க்கு எஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை இல்."

சீரிய எண்ணங்கள் கொண்ட நெஞ்சத்திடன் உடையவர்க்கு, எந்நாளும் பெண்ணுக்கு அடிமையாவதால் உண்டாகும் பேதைமை இராது.

# 92. வரைவில் மகளிர்

கட்டுக்கடங்காத பெண்கள் (விலை மாதர்)

911. "அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்
இன்சொல் இழுக்குத் தரும்."

அன்பின் காரணமாக ஒருவனை விரும்பாது, அவனது பொருளை அடையும் நோக்கத்தோடு விரும்பும் பெண்களின் மாயச்சொல்லால் இழிவே உண்டாகும்.

912. "பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்தூக்கி நள்ளா விடல்."

ஒருவனிடம் உள்ள பொருளின் அளவையும் அதனால் தனக்குக் கிடைக்கக்கூடிய பயனையும் சீர்தூக்கி, நற்பண்பு இல்லாவிடினும் பண்புள்ளவர் போல் தங்களைக் காட்டிக் கொள்ளும் மகளிரால், தமக்கு மெய்யான நன்மை வராது என்று நன்கு உணர்ந்து அவர்களோடு சேராமல் விடுக.

913. "பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று."

ஒருவரது பொருளையே நாடும் பெண்டிரோடு சேர்வதால் உண்டாகக்கூடிய பொய் இன்பம், பிணங்கள் வைத்திருக்கும் இருட்டறையில் தமக்குச் சொந்தமல்லாத பிணத்தைத் தழுவியது போலாம்.

914. "பொருட்பொருளார் புன்னலம் தோயார் அருட்பொருள்
ஆயும் அறிவி னவர்."

பொருளாகிய பொருளை (இம்மைச் செல்வத்தை - பணத்தை) விரும்பும் மகளிரது உறவால் கிடைக்கக்கூடிய அற்ப இன்பத்தை, இருபொருளின் தன்மையும் ஆய்ந்தறிந்த அறிவாளிகள் விரும்பவே விரும்பார்,

915. "பொதுநலத்தார் புன்னலம் தோயார் மதிநலத்தின்
மாண்ட அறிவி னவர்"

கூர்த்த மதியால் சிறப்புற்ற அறிவாளிகள், பொது மகளிரால் வரும் பொய் இன்பமாகிய அற்ப இன்பத்தை விரும்பார்.

916. "தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்."

(ஆடல், பாடல், அழகு, இனிய பேச்சு என்னும்) பொய்த் தகைமையால் சிறப்புற்ற விலைமகளிர் பரப்பக்கூடிய அற்ப இன்பத்தை, தன் நற்பெயரையும் புகழையும் பரப்ப விரும்புவோர் வெறுப்பர்.

917. "நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்."

(உண்மையான அபுன் நீங்கலாக) வேறு பொருளைக் (பணத்தை) குறிக்கோளாகக் கொண்டு சிற்றின்பத்தில் ஈடுபடும் மகளிரது தோளை, அருளால் நிறைவுறாத நெஞ்சினரே விரும்பித் தீண்டுவர்.

918. "ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கென்ப
மாய மகளிர் முயக்கு."

ஒன்றை ஆய்ந்தறியக்கூடிய திறன் இல்லாதவர்க்கு, மாயக் கவர்ச்சியுடைய மகளிரைப்புணர்தல் மிகப்பெரும் வருத்தம் தருவதாகும்.

919. "வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு."

அரிய அணிகலன்களணிந்து கட்டுத்திட்டமில்லாதவராகிய மகளிரது தோள், அறிவில்லாத கீழ்மக்கள் தம்மையே ஆழ்த்திக் கொள்ளும் ஆழ்ந்த சேற்றுக்கு ஒப்பாகும்.

920. "இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு"

பொது மகளிரும் கள்ளும் சூதும் அருள் செவல்த்தை வேண்டாதவராய் வாழ்பவர்க்கு நட்பினர் போலாம்.

# 93. கள்ளுண்ணாமை.

921. "உட்கப் படாஅர் ஒளியிழப்பர் எஞ்ஞான்றும்
கட்காதல் கொண்டொழுகு வார்."

கள்ளின் மீது பெரு விருப்பம் கொண்டு ஒழுகுபவர், எந் நாளும் யாராலும் அஞ்சப்படார். உள்ளொளியையும் அதனால் வரும் மன எழுச்சியையும் இழப்பர்.

922. "உண்ணற்க கள்ளை உணில்உண்க சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார்."

கள்ளை உண்ண வேண்டா; சான்றோரால் மதிக்கப்பட விரும்பாதவர் உண்க.

923. "ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி."

கள்ளுண்டு தன் தாயின் எதிரில் நிற்பது அவளுக்குத் துன்பம் தருவதாயின், சான்றோர் முன் எத்துணை பழிப்புக்கு ஆளாவர் கள் உண்போர்!

924. "நாண்என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு."

பிறரால் விரும்பப்படாத இக் கள் உண்ணும் குற்றத்துக் காளாவாரைக் கண்டு, நாணம் எனப்படும் நல்லாள் வெட்கித் தன் முகத்தைத் திருப்பிக் கொள்வாள்.

925. "கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்."

பொருள் செலவு செய்து மயங்கி மதியிழந்து நிற்பது, செய்வது இன்னதென்று உணர இயலாதவருடைய செயல் ஆகும்.

926. ''துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.''

உறங்குபவர் இறந்தவர்போல் காணப்படுவர்; அவ்வாறே எப்போதும் கள் என்னும் நஞ்சை உண்பவர் மயக்கமுற்றுக் கிடத்தலால் அவர்களும் செத்தவரைப்போலக் காணப்படுவர்.

927. ''உள்ளொற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்
கள்ளொற்றிக் கண்சாய் பவர்.''

மறைவாகக் கள் உண்டு அறிவுக்கண் இழப்பவர், உள்ளூரில் உள்ளவர் அறிந்த பின், என்றும் நகைக்கப்படுவர்.

928. ''களித்தறியேன் என்பது கைவிடுக நெஞ்சத்து
ஒளித்ததூஉம் ஆங்கே மிகும்.''

கள்ளுண்டாலும் போதை இல்லை என்று சொல்ல வேண்டா. ஏனெனில், உன்னையும் அறியாமல் மறைந்துள்ள போதை வெளிப்பட்டு விடும்.

929. ''களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.''

கள்ளுண்டு போதையில் உள்ளவனுக்கு 'இது நன்றன்று' எனக்காரணம் காட்டுவது, நீருக்குள் மூழ்கிய ஒருவனை விளக்குக் கொண்டு தேடுவதை ஒக்கும்.

930 ''கள்ளுண்ணாப் போழ்தில் களித்தானைக்
காணுங்கால்
உள்ளான்கொல் உண்டதன் சோர்வு.''

குடியன் ஒருவன் குடிவெறியில் உள்ள ஒருவனைக் காணும் போதாகிலும், தான் உண்ணும் போது உண்டாகும் நிலையை நினைத்துப் பார்ப்பானா! (இல்லை).

# 94. சூது

931. ''வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.''

சூதாடுவதில் தனக்கு நிச்சயம் வெற்றி கிடைக்கும் என்ற நம்பிக்கை இருப்பினும் சூதாடுதலைத் தவிர்க்க. வென்றாலும் வென்ற பொருள், மீனால் விழுங்கப்பட்ட தூண்டில் போலாம். (இறுதியில் துன்பம் தருவதாகும்).

932. ''ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோர் ஆறு.''

முதலில் வென்று, பின்னர் பன்முறை தோற்றுப் பொருள் மிக இழக்கும் சூதாடிகளுக்கு நன்மையடைந்து வாழ்வதற்கு வழி ஒன்றுண்டோ? இல்லை.

933. ''உருளாயம் ஓவாது கூறின் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்.''

உருட்டும் கவற்றிற்குரிய பந்தயத் தொகையை மேலும் மேலும் சொல்லிக்கொண்டே சூதாடினால், உள்ள பொருளும் அதனால் வரக்கூடிய வருவாயும் தன்னை விட்டு வேறொருவனிடத்தில் சேர்ந்து விடும்.

934. ''சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்
வறுமை தருவதொன்று இல்.''

பல சிறுமைகளுக்கு ஆளாக்கி அடியோடு சீரழிக்கும் சூதைப் போல் வறுமை தருவது வேறில்லை.

935. ''கவறும் கழகமும் கையும் தருக்கி
இவறியார் இல்லாகி யார்.''

கவறும் சூதாடும் குழுவும் சூதாடுவதையே தொழிலாகக் கொண்டு அதை எந்நாளும் விடாதவரும் இறுதியில் ஒன்றுமில்லாதவரானார்கள்.

936. "அகடாரார் அல்லல் உழப்பர்சூ தென்னும்
முகடியால் மூடப்பட் டார்."

சூது என்னும் பழிப்புக்குரிய நிலையால் சூழப்பட்டவர், வயிறார உண்பதற்கும் வழியின்றி அல்லல்படுவர்.

937. "பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின்."

ஒருவனது வாழ்நாள் சூதாடிகள் நடுவில் கழிந்தால், முன்பிருந்த செல்வமும் நற்பண்பும் கேடுறும்.

938. "பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ
அருள்கெடுத்து
அல்லல் உழப்பிக்கும் சூது."

சூது என்பது ஒருவனது செல்வத்தைக் கெடுத்துப் பொய்யை மேற்கொள்ளச் செய்து, அருட்பொருளையும் இழக்கச் செய்து, துன்பத்தில் உழல வைக்கும்.

939. "உடைசெல்வம் ஊண்ஒளி கல்விஎன்று ஐந்தும்
அடையாவாம் ஆயம் கொளின்."

சூதாடும் பழக்கத்தை ஒருவன் மேற்கொண்டால் அறிவொளி, கல்வி, செல்வம், ஊண், உடை ஆகிய ஐந்தும் அவனை விட்டு நீங்கும்.

940. "இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்
உழத்தொறூஉம் காதற் றுயிர்."

துன்பம் மேலிட மேலிட இன்பத்தை விரும்பும் உயிர்போல, ஆட்டத்தில் தோற்கத் தோற்க மேலும் மேலும் சூதாட்டம் விரும்பப்படுகிறது.

# 95. மருந்து

மருந்தின் தன்மை, நோயின் காரணம், மருத்துவ முறை.

941. ''மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று.''

மருத்துவ நூலோர் கூறியுள்ளபடி வாதம், பித்தம், கபம் ஆகிய மூன்றும் மிகுந்தாலும் குறைந்தாலும் நோய் உண்டாகும்.

942. ''மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின்.''

உண்ட உணவு 'நன்கு செரித்தது' என அறிந்த பின்னரே மீண்டும் உண்டால், உடலுக்கு மருந்து என்பதே தேவைப் படாது.

943. ''அற்றால் அளவறிந்து உண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு.''

உண்ட உணவு செரித்த பின்னரும் தக்க அளவு அறிந்து உண்க. அதுவே உடம்பை நெடுங்காலம் வாழச்செய்யும் வழி.

944. ''அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.''

உண்ட உணவு செரித்ததை அறிந்த பின்னர், நன்றாகப் பசிக்கும்போது உடலுக்குப் பிடிக்காத உணவுகள் எவை என அறிந்து உண்ண வேண்டும்.

945. ''மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துண்ணின்
ஊறுபாடு இல்லை உயிர்க்கு.''

உடலுக்குப் பிடிக்காத உணவை உண்ணும் ஆசையை மறுத்து அளவோடு உண்டால், உயிருக்குக் கேடு விளையாது.

946. ''இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபே ரிரையான்கண் நோய்.''

அளவுமீறி உண்பதின் இழிவை உணர்ந்து உண்பவனுக்கு உடல்நலமாகிய இன்பம் நிலைக்கும். அதுபோல அளவின்றி உண்பவனுக்கு நோய் நிலையாய் இருக்கும்.

947. ''தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும்.''

பசித்தீயின் அளவுக்கு ஏற்றவாறு அன்றி மிக உண்டால், நோயும் அளவின்றி உண்டாகும்.

948. ''நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.''

நோயின் தன்மை அறிந்து, அதன் காரணத்தையும் அறிந்து, அதைத் தீர்க்கும் வழியும் அறிந்து ஏற்ற மருத்துவம் செய்க.

949. ''உற்றான் அளவும் பிணியளவும் காலமும்
கற்றான் கருதிச் செயல்.''

நோயுற்றவன் நிலை, வந்துற்ற பிணியின் நிலை, வந்துள்ள காலம் இவற்றை ஆய்ந்த பிறகே (மருத்துவம்) கற்றவன் மருத்துவம் செய்ய வேண்டும்.

950. ''உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செல்வானென்று
அப்பால்நாற் கூற்றே மருந்து.''

மருத்துவத்துக்கு நான்கு பிரிவுகள் உண்டு. நோயாளி, மருந்து, மருத்துவன், தக்க நேரத்தில் மருந்து கொடுத்துக் கவனிக்கும் தாதி.

# 96. குடிமை

'குடிமை' என்னும் சொல்லுக்கு உயர்ந்த குடியில் பிறந்த வரது இயல்பு, என்னும் பொருளில் ஆளப்படுகிறதென்றே உரையாளர் பெரும்பாலும் கூறுவர். ''இவ்வுயர்ந்த குடிப்பிறப்பு நால்வகை வருணத்தார்க்கும் இன்றியமையாது'' என்கிறார் பரிமேலழகர். ஆகவே, உயர்ந்த சாதியினரைக் குறித்ததே இவ்வதிகாரம் என்பது அவரது கருத்து. பிறப்பால் உயர்வு தாழ்வு என்பது திருவள்ளுவருக்கு ஏற்புடைய கருத்தன்று என்பது தெளிவு. (பிறப்புப் பற்றிய பகுதியைக் காண்க).

ஆகவே உயர்ந்த குடி, உயர்ந்த குலம் அல்லது உயர்ந்த சாதியினரைக் குறித்தன்று இக் 'குடிமை' அதிகாரக் குறட் பாக்கள் கூறுவது என்பது தெளிவு. ஆகவே, ஈண்டு 'இற்பிறந்தார்', 'குடிப் பிறந்தார்', 'குலத்திற் பிறந்தார்', 'வாய்மைக் குடி' என்னும் சொற்றொடர்களுக்குப் பொருள் என்னவென்று ஆய்ந்தறிதல் வேண்டும்.

இவற்றின் பொருளை அறிவதற்கு 'வாய்மைக் குடி' என்று கூறப்பட்டது துணை செய்கின்றது என்பது எம் துணிவு.

**வாய்மைக் குடி :**

இதற்குப் பொருள் 'எக்காலத்தும் திரிபில்லாத குடி' என்று பரிமேலழகர் பொருள் கூறுகின்றார்.

'மெய்ம்மையுடைய குலத்தார்' என்பது மணக்குடவர்.

'எஞ்ஞான்றும் தப்பு இல்லாக்குடி' என்கிறார் பரிப்பெருமாள்.

'எக்காலத்தும் ஒழுக்கம் தவறாத குடி' - என்கிறார் புலவர் குழந்தை.

'உண்மையான உணர் குடி' - சாமி சிதம்பரனார்.

சான்றாண்மைத் தூண்களுள் ஒன்றான 'வாய்மை' என்பது என்ன என்று வள்ளுவரே பொருள் கூறியுள்ளார்.

"வாய்மை எனப்படுவது யாதெனில் **யாதொன்றும் தீமை இலாத சொலல்**" என்கிறார்.

'வாய்மை' பற்றிய விளக்கத்திலும், 'செய்ந்நன்றி' பற்றிய விளக்கத்திலும் யாம் கூறியுள்ளதைக் காணுமாறு அழைக்கின்றோம்.

ஆங்குக் கூறப்படும் கருத்துக்கு இசைய **வாய்மைக்குடி** என்னும் தொடர்க்குப் பொருள் காண்போம்.

'யாதொன்றும் தீமையிலாத சொலல்' என்னும் அடிக்கும், 'தீமையில்லாத சொற்களையே பேசுதல்' என்று மட்டுமே பொருள் கொள்ளலாம். அல்லது தீமையான எதனோடும் எக்கலப்பும் இல்லாத ஒன்றைப் பேசுதல், முழுமையும் நன்மையானதை எடுத்துரைத்தல் என்றும் பொருள் கொள்ளலாம். தீமையோடு எக்கலப்பும் இல்லாத நிலை இறைவன் ஒருவனுக்கே உண்டு. அவன் ஒருவனே தீமை கலவாத சொல்லும் செயலும் நிறைவாகக் கொண்டுள்ளவன். இதனாற்றான் 'ஒருவன் செய்தி' என்று புறநானூறு கூறுகின்றது.

இந்த 'ஒருவன் செய்தி' ஏற்று, அச்செய்தி கொன்றால் உய்தி இல்லை என **ஆண்மையுடன்** பிறர்க்குச் **சான்று** பகர்பவனே **வாய்மைக்குடி** என்க. ஒரு வார்த்தையில் ஐந்தவித்தான் வாழ்ந்து காட்டிய 'பொய்தீர் ஒழுக்க நெறி'க்கும் (குறள்-6), அவனது ஆற்றலுக்கும் (குறள்-25), உலகிடை, பிறரிடை ஆன்ம வலிமையோடு (ஆண்மையோடு) சொல்லாலும் செயலாலும் சான்று பகர்பவனே **வாய்மைக்குடி** யாவான்.

இவ் 'வாய்மைக்குடி' இற்பிறந்தார் என்றும் வழங்கப்படுகிறான். இத்தொடரில் உள்ள 'இல்' என்னும் சொல்லுக்கு உள்ள முழுப்பொருளை 'இயல்புடைய மூவர்' விளக்கத்தில் காண்க. வாய்மைக்குடியான ஒருவனது இல்லத்தில் - இல்வாழ்க்கை - குடும்ப வாழ்க்கைக்கெல்லாம் மேல்வரிச் சட்டமும் ஆதிமூலமுமாகிய இறைவனையே முன் மாதிரியாகக் கொண்டு வாழும் 'இல்' வில் பிறப்பவனே 'இல்பிறந்தார்' என்க. அத்தகைய குடியில் - குடும்பத்தில் பிறந்தவரே 'குடிப் பிறந்தார்' என்று இவ்வதிகாரத்தில் கூறப்படுகின்றனர்.

1. இவர்களிடம் ஜெபமும் (அஃதாவது, நேர்மையான நடத்தையும் - நடுவு நிலைமையும்) நாணும் ஒருங்கே அமையும். 'நாண்' என்பது என்னவென்றறிய 'நாண்' எனும் பகுதியைக் காண்க (குறள் 951).

2. 'வாய்மைக் குடி' யாதலின் இவர்களிடம் ஒழுக்கமும் வாய்மையும் நாணும் குறைவு படா (குறள் 952).

3. முகமலர்ச்சியுடன் இன்சொல்லும், பிறரை இகழாமையும் இவர்களுக்குரிய சிறப்பான பண்புகள் (குறள்953).

4. கோடி கோடியாகப் பொருள் கிடைத்தாலும் சீர் கேடான செயல் எதற்கும் ஒருப்படார் (குறள் 954).

5. தம்மிடம் உள்ள பொருள் குறைந்தாலும் பழங்குடிமைப் பண்புள்ளவர்கள், பிறர்க்கு வழங்குவதை விடமாட்டார் கள் (955).

6. 'சலம் பற்றி' அஃதாவது வைராக்கியம், வெஞ்சினம் கொண்டவராய்ச், 'சால்பு' அஃதாவது 'சான்றாண்மை' யோடு பொருந்தாத செயல்களைச் செய்யார். 'மாசற்ற குலம்' அஃதாவது, 'வாய்மைக்குடி'ப் பிறந்தவர் யாம், அதற்கேற்ப ஒழுகுவோம் என வாழ்வர். சான் றாண்மைக்கு எடுத்துக் காட்டாக வாழ்வர்(குறள்956).

7. தம்மிடம் காணும் சிறு குற்றத்தையும் பெரியதொரு களங்கமாகக் கருதி விழிப்புடன் செயல்படுவர் (குறள் 957).

8. 'நலத்தின் கண் நார் இன்மை,' நன்மையானதின் மீது பற்றுதல் இன்மை தோன்றினால், அவன் 'குலத்தின் கண்' - குடிமைப் பண்பின் மீது ஐயம் ஏற்பட வேண்டியதே. அஃதாவது, வாய்மைக் குடியினர் நன்மையானதெல்லாம் செய்ய முனைவர். துன்பத்திடையும் விட்டுக் கொடார். நன்மை புரிவதன் மீதே கண்ணாயிருப்பர். (குறள் 958).

9. மாசற்ற குலம் எனப்படும் வாய்மைக்குடிப் பிறந்தார், வாய்ச் சொல்லே அவர்கள் எந்த அளவுக்கு வாய்மைக் குடி என்னும் பெயருக்குத் தகுதியுள்ளவர்கள் என் பதை எடுத்துக் காட்டும். (குறள் 959).

10. நன்மையே செய்ய வேண்டும் என விரும்பினால், நாண் உடைமை இன்றியமையாதது. வாய்மைக்குடியாக இருக்க வேண்டின் பணிவு வேண்டும் (குறள் 960).

'ஆற்றுவார் ஆற்றல் பணிதல்' (குறள் 985) என்னும் சான்றாண்மைக் கருத்துடன் இது இணைதல் காண்க.

இனி, 'குடி செயல் வகை' (103 அதி.) பகுதியில் 'குடி' என்னும் சொல்லை 'வாய்மைக்குடி' என்னும் பொருளில் விளங்கிக் கொள்ளல் வேண்டும்.

'குடி செயல்' என்பது 'வாய்மைக் குடி' களாக - சான் றாண்மை மிக்க சான்றோராக வாழும் வகை செய்தல் ஆகும்.

'குடிப்பிறத்தல்', 'குடிப்பிறந்தார்' என்று இவ்வதிகாரத்தில் கூறப்படும் கருத்து, திருக்குறளின் வேறு பகுதிகளிலும் காண் கிறோம்.

உதாரணமாக - குறட்பாக்கள் - 502, 601, 602, 603, 604, 608, 609, 681, 793, 794 இவற்றை நோக்குக.

மானம் காத்தல், பெருமை (பெருந்தன்மை), பண்புடைமை, நன்றியில் செல்வம் இவை இருமை ஆட்சியர்க்கும் பொது வானவை.

உழவு, நல்குரவு, இரவு, இரவச்சம் இவை சிறப்பாகப் பொருளாட்சியைச் சார்ந்தன.

இறுதியாக, **கயமை** இருவகை ஆட்சியினர்க்கும் பொருந்தும்; இருவகையினராலும் தவிர்க்கப்பட வேண்டிய தாகும்.

# குடிமை

## சுருக்கம்

நாட்டின் குடிமக்கள், அருளாட்சியில் வாய்மைக்குடி, இவர்கள் பண்புகள்.

951. "இற்பிறந்தார் கண் அல்லது இல்லை இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு."

நல்ல குடும்பத்தில் பிறர்ந்தவர்க்கே செம்மையான நடத்தையும் குற்றத்துக்கு அஞ்சி நடக்கும் நாணும் இருக்கும்.

சான்றாண்மையின் தூண்களுள் ஒன்றான வாய்மைக்குடி மக்களுக்கு மட்டுமே 'யாதொன்றும் தீமையிலாத' நிலையும் அதே சான்றாண்மையின் வேறொரு தூணான 'நாண்' என்னும் பண்பும் (அஃதாவது தீமை புரிந்தால் கருமத்தால் நாணுதலும்) உளவாகும்.

952. "ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார்."

நல்ல குடும்பத்தில் பிறந்தவர்கள் நல் ஒழுக்கத்தைக் கடைப்பிடிப்பர்; யாதொன்றும் தீமையிலாத சொல்வர்; செய்வர். தவறித் தீமை செய்து விட்டால், நாணித்திருந்துவர். அருளாட்சியில், வாய்மைக்குடிப் பிறந்தவர்க்குச் சிறந்த ஒழுக்கமும் யாதொன்றும் தீமை இலாத இறைவன் புகழ் புரிவதும் கருமத்தால் நாணுதலும் மிகச் சிறப்பாகக் குறைவின்றி உளவாகும்.

953. "நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகைஎன்ப வாய்மைக் குடிக்கு."

இன்முகம் காட்டுதல், இல்லாதவர்க்கு ஈதல், இனிய சொல், பிறரை இகழாமை ஆகிய நான்கும் வகையாக அமைதல் வேண்டும்.

இது மிகச் சிறப்பாக வாய்மைக்குடிக்குப் பொருந்தும்.

954. "அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர்."

கோடி கோடியாகப் பொருளைப் பெற்றாலும் வாய்மைக் குடிப் பிறந்தவர் (சான்றாண்மையினராதலால்) சால்பு நிலை குன்றும் எதையும் செய்யார். இது சிறப்பாகச் சான்றோர் ஒழுக் கத்தைக் காட்டும்.

நல்ல குடும்பத்தில் பிறப்பதால் மட்டுமே இத்தகைய ஆண்மை விளைவதில்லை. இதற்கு வானருட் சக்தி மிகமிகத் தேவை.

955. "வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பில் தலைப்பிரிதல் இன்று."

வழிவழியாக வந்த நற்குடியினர், தமக்கிருந்த பொருள் மிகக் குறைந்தாலும் நற்பண்பினின்று விலகார்.

அருள் ஆட்சிக் குடிமக்கட்கும் இது சிறப்பாகப் பொருந்தும்.

956. "சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்தும்என் பார்."

மாசற்ற வாய்மைக்குடிக்கேற்ப வாழ எண்ணுபவர், வறுமையால் வாடும்போதும் சால்பு (சான்றாண்மை)க்குப் பொருந்தாத செயல்களைச் செய்யார்.

957 "குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போல் உயர்ந்து."

வாய்மைக்குடிப் பிறந்தவரிடத்துக் காணப்படும் சிறு குற்றமும் வானத்தில் நிலவிடத்துக் காணும் களங்கம் போல் பெரிதாகக் காணப்படும். (அவர்க்குச் சிறிதும் பொருந்தா மையால்).

958. "நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும்."

நற்குடியைச் சார்ந்தவரிடத்து அன்பின்மை தோன்றினால், வாய்மைக்குடியினின்று பிறழ்ந்தவன் என ஐயுற வேண்டியதே. (சால்புத்தூண்களுள் அன்பு முதன்மையானது பற்றி).

959. ''நிலத்தில் கிடந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்தில் பிறந்தார்வாய்ச் சொல்.''

நிலத்தின் இயல்பை அதில் முளைக்கும் முளை காட்டும். அதுபோல் (வாய்மைக்) குலம் பிறந்தார் இயல்பை, அவர் பேசும் பேச்சே காட்டி விடும்.

960. ''நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும்
குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு.''

நன்மையை விரும்புவன் தீய கருமத்தால் நாணுதலைக் கொண்டிருக்க வேண்டும். உயர்ந்த நிலையையடைய வேண்டும் என விரும்பினால், பணிவை மேற்கொள்ள வேண்டும். (ஆற்றுவார் ஆற்றல் பணிதலாதலான்).

# 97. மானம்

961. ''இன்றி யமையாச் சிறப்பின ஆயினும்
குன்ற வருப விடல்.''

இன்றியமையாத சிறப்புடையனவாயினும், வாய்மை குன்றுமாறு செய்யும் செயல்களை விட்டு விடுக.

962. ''சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.''

புகழும் சான்றாண்மையாகிய பேராண்மையும் வேண்டுபவர், புகழ் பெறுவதற்காகச் சால்புக்கு ஏற்காத செயல்களைச் செய்யார்.

963. ''பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு.''

நற்குடும்பத்தில் (அல்லது வாய்மைக் குடிப்) பிறந்தார் புகழும் பொருளும் பெருகும்போதுகூடப் பணிவைக் கடைப் பிடிக்கவேண்டும். (ஆணவம் கூடாது). அப்புகழும் பொருளும் குறைந்தால், சால்புத்தாழ்வு வராமல் காத்துக்கொள்ள வேண்டும்.

964. ''தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை.''

வாய்மைக்குடிமக்கள் - நற்குடும்பத்தினர் - தம் உயரிய நிலையை விட்டுத் தாழ்ந்தவிடத்து, தலையினின்று உதிர்ந்து விட்ட மயிர்போல் எண்ணப்படுவர். (யாரும் மதியார்).

965. ''குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி அனைய செயின்.''

நற்குடி (வாய்மைக்குடி)ப் பிறந்தோர் மலைபோல் உயர்ந் தாராயினும், இழிசெயல் ஒரு குன்றிமணியளவு செய்தாலும் பெருமை குன்றுவர்.

966. "புகழ்இன்றால் புத்தேள்நாட்டு உய்யாதால்
இகழ்வார்பின் சென்று நிலை."  என்மற்று

தம்மை இகழ்வார் பின்சென்று ஒன்றை வேண்டி நிற்கும் நிலை புகழ் தராது; வானுலகத்தும் அவனை உய்விக்க மாட்டாது.

967. "ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று."

அன்பால் தம்மோடு ஒட்டாதவர் பின்சென்று வாழ்வதை விடத் தனக்குள்ள (புகழ் அற்ற) நிலையிலேயே இறந்தான் எனப்படுவது நன்று.

968. "மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த இடத்து."

நற்குடி (வாய்மைக்குடி)யோடு இணைந்த பெருமை தன் நிலையை இழக்குமானால், இறந்துபடுவதே மேல். அங்ஙன மின்றி ஊன் உடம்பை அப்போதும் போற்றி வாழ்வது, இழந்த பெருமையடைய மருந்தாகுமோ?

969. "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்."

ஒரு மயிர் நீங்கினும் உயிர் வாழ விரும்பாத கவரிமான் போன்று, மானம் வந்தால் உயிரையே விடுவர் சான்றோர்.

970. "இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழுது ஏத்தும் உலகு."

தாழ்வு வரின் உயிர் வாழ விரும்பாத மானம் உடையவரது புகழை உலகெல்லாம் தொழுதேத்தும்.

(அஃதாவது மானம் என்பது அவ்வளவு சிறப்புற்றது. எந்த விலை கொடுத்தேனும் அதைக் காக்க வேண்டும் என்பது கருத்து).

# 98. பெருமை

நற்பண்புகளால் வரும் உயர்வு.

971. ''ஒளிஒருவற்கு உள்ள வெறுக்கை இளிஒருவற்கு
அஃதிறந்து வாழ்தும் எனல்.''

ஒருவருக்குப் பெருமை தருவது (செயலில் இறங்கும்போது) ஊக்க மிகுதியே. சிறுமை தருவது 'அவ் ஊக்கத்தை விடுத்து வாழ்வோம்' எனல்.

972. ''பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்.''

மக்களுக்கெல்லாம் பிறப்பால் உண்டாகும் நிலை ஒன்றே; செய்யும் தொழிலால்தான் வேறுபாடு நிகழும். (தொழில் என்றது செய்யும் செயல்களின் நிலைமை. உயரிய செயல் களாயின் உயர்ந்தோர்; இழிந்த செயல்களாயின் தாழ்ந்தோர்.)

973. ''மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர்.''

மேலான பதவியில் இருப்பதால் மட்டுமே மேலோர் ஆய்விடுவதில்லை. தாழ்ந்த நிலையில் இருப்பதால் மட்டும் இழிந்தவர் ஆய்விடுவதில்லை.

974. ''ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு.''

உண்மையான பெருமை, ஒருமன நிலையுள்ள (கற்புள்ள) மாதரைப்போல உயர்நிலையில் தன்னைக் காத்துக்கொண்டு ஒழுகுவதால் விளைவதாகும்.

975. ''பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை உடைய செயல்.''

உயர்வு மனம் (பெருமை) உள்ளவர் அரிய செயல்களை ஆற்ற வேண்டிய முறையில் ஆற்ற வல்லவராவர்.

976. "சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேம்என்னும் நோக்கு."

உயர் பண்பால் பெருமை அடைந்தவரைத் துணையாகக் கொள்வோம் என்னும் கருத்துச் சிறுமதி படைத்தவரிடம் காண்பதில்லை.

977. "இறப்பே புரிந்த தொழிற்றாம் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்."

சீரிய பண்பற்றவரிடம் சிறப்பான நிலை ஏற்படின், அஃது அளவு மீறிய நிலைக்கு அவர்களை ஆளாக்கி விடும்.

978. "பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து."

உண்மையான உயர் பண்பு உள்ளவர் சிறப்பு உண்டான காலத்திலுங்கூடப் பணிந்து ஒழுகுவர். சிறு மதிபடைத்தவரோ தம்மைத்தாமே பெருமைப்படுத்திக்கொள்வர்.

979. "பெருமை பெருமிதம் இன்மை சிறுமை
பெருமிதம் ஊர்ந்து விடல்."

(ஈண்டுக் கூறப்படும்) பெருமையானது கர்வமில்லாமையே. சிறுமையாவது செருக்குக் கொண்டு ஒழுகுவதாகும்.

980. "அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்."

உயர்மதி படைத்தவர், பிறர் குற்றத்தை மறைக்கப் பார்ப்பர். சிறு மதியினரோ அதை வெளிப்படுத்திவிடுவர்.

# 99. சான்றாண்மை

"அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொ
டைந்துசால் பூன்றிய தூண்." (983)

என்கிறார் வள்ளுவர்.

இவ்வைந்து உயர்பண்புகள் இல்லையேல், **சால்பு** என்னும் மண்டபம் நில்லாது என்பது பொருள்.

திருக்குறள் நயவுரை குறிப்பிடுவதுபோல, "ஐந்துகால் மண்டபங்கள் மிகுந்த காலம்போலும் அது......அசோகத்தூண் முதலியன மிகுதியும் பேசப்பட்ட காலமது;" ஆகவேதான் இவ் உருவகத்தைக் கையாள்கின்றார்.

ஈண்டுக் கூறப்படும் இவ்வைம்பெரும் பண்புகளின் உண்மைக் கருத்தை முழுதுற அறிய வேண்டுமாயின், அவை தாங்கி நிற்கும் 'சால்பு' என்பதன் பொருளை நன்கு கண்டுணர்தல் வேண்டும்.

அதே சமயத்தில், 'சால்பு' என்பதன் உட்பொருளை நன்கு அறிய வேண்டுமாயின், அதனைத் தாங்கி நிற்கும் தூண்கள் ஒவ்வொன்றன் உட்பொருளையும் அலசிப்பார்த்தல் அவசியம். மண்டபத்தின் சிறப்புக்கு ஏற்றவையாகத்தான் தூண்கள் இருக்கும். தூண்களின் சிறப்புக்கு ஏற்றவாறுதான் மண்டபத் தைக் கட்டுவர்.

எனவே, **சால்பு** என்றால் என்ன? வள்ளுவர் **சால்பு** என்பதுபற்றிப் பேசுவது 'சான்றாண்மை' என்னும் அதிகாரத்தில் என்பது குறிப்பிடத்தக்கது. இந்த அதிகாரத்தில், சால்பு-சான்றாண்மை என்னும் சொற்களைப் பொருள் வேறு பாடின்றிப் பயன்படுத்துவதுபோல் தெரிகிறது. இதே அதிகாரத் தில் 'சான்றோர்' என்னும் சொல்லையும், 'சான்றவர்' என்னும் சொல்லையும் 'சால்பு,' 'சான்றாண்மை' என்னும் சொற்களுடன் இணைத்துப் பேசுவதைக் காண்கிறோம். ஆகவே, 'சால்பு, சான்றாண்மை, சான்றோர்' என்னும் சொற்கள் பொருள் தொடர்பு உடையன என்பது தெளிவா

கிறது. அஃதாவது, 'சால்புடையவர் சான்றோர், அவரது பண்பே சான்றாண்மை' என்று புலனாகிறது.

இக்கருத்தைப் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையவர்கள் தெளிவுபடுத்துகின்றார்.

"சான்றோன் என்பது சால்புடையவன் என்னும் பொருளுடையது. சால்பு என்பது **பண்பின் நிறை பொங்கல் மலர்ச்சி.** பண்பிற்சிறந்து, இயல்பாகவே **பண்புருவினனாகி,** பிற பண்பாளர்களுக்குச் சான்றாக, பின்பற்றும் மாதிரியாக இலக்கண மேல்வரிச்சட்டமாக நின்று, பண்பாளர்களிடமெல்லாம் சால்பலைகளையும் மற்ற எல்லாரிடமும் பண்பலைகளையும் பரப்பும் **பண்புடையவனே** - சால்புடையவனே சான்றோன்; அவன் பண்பே சான்றாண்மை."

(மணிவிளக்க உரை II - பக். 534).

ஆகவே, இவ்வதிகாரத்தில் கூறப்படும் கருத்துகளை ஆராய்ந்தால், **சால்பு** என்பதன் உட்பொருளை நன்கு அறிய இயலும்.

981. "கடனென்ப நல்லவை யெல்லாம் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு."

'நன்மையே செய், தீமை செய்யாதே' என்பது பகுத்தறிவுள்ள மாந்தர்க்கெல்லாம் பொதுவிதியாகும். இதை எல்லோரும் ஒரேவிதமாகவா மேற்கொண்டு ஒழுகுகின்றனர்?

1. எப்போதும் நன்மையே செய்பவர் உண்டு. அஃதாவது, தீமையே செய்யாதவர் உண்டு. தீமை செய்யாமலிருப்பதே ஒரு நன்மை என்றும் கூறலாம் அன்றோ?

2. எப்போதும் தீமையே செய்பவர்.

3. சில சமயங்களில் தீமை செய்பவர்;
சில சமயங்களில் நன்மை செய்பவர்.

4. தீமையானதெல்லாம் தவிர்ப்பதோடு, நன்மையானதெதுவோ **அதையெல்லாம்** தம் கடமைபோலப் பாவித்துச் செய்து முடிக்க நினைப்பவர்களும் உண்டு. தீமையானதெல்லாம்

தவிர்க்கக் கடமையுண்டு. நன்மையானதெல்லாம் செய்யவோ கடமை என்றில்லை. சாதாரண மக்கள் அஃதாவது, பண்பு நிறை வற்றவர்கள் இந்த அளவுக்கு முனைவதில்லை. இன்றியமை யாத கடமைகளை மட்டும் செய்து, அத்தோடு மன நிறைவு கொள்பவர்கள் அவர்கள். பண்பு நிறைவுடையவர்களோ 'நல்லவையெல்லாம் கடன்' என்றறிந்து அவற்றைச் செய்ய முனைந்து நிற்பர். இந்த முனைவே **ஆண்மை** என்க. இவர் களைக் குறித்தே இக்குறட்பாவில் கூறப்படுகிறது.

இந்த 'ஆண்மை' சான்றாண்மை எனப்படுகிறது. ஏனெ னில், 'பிற **பண்பாளர்களுக்குச் சான்றாக'**...... ஏன், **நன்மைக்கே** சான்றாக மேற்கொள்ளப்படுவதொன்றாகும். **நன்மைக்குச்** சான்று என்றால் பொருள் என்ன? நன்மை எல் லாம் செய்வதால் ஒருவன் எத்துணை மேன்மையடைகிறான்- அடையக்கூடும் - அதனால் பிறர்க்கு எத்துணை நன்மை விளை யக்கூடும் - விளைகின்றது - என்பதெல்லாம் தன் நடத்தையால், செயலால், முன்மாதிரியால் காட்டுவதாகும். தீயவர்க்கும் தீமைக் கும் சான்று பகர்வது எளிது. அஃதாவது, தீமை செய்வதால் ஏற் படக்கூடிய சிற்றின்பத்தைப் பிறரும் நுகருமாறு தன் தீய முன் மாதிரியினால் செயலாற்றுவது எளிது. ஆனால், நன்மையே என்றும் செய்து காட்டுவது, எல்லா நன்மையும் செய்ய முனை வது, அதுவே தன் கடமை என்று வாழ்வது எளிதன்று. ஆண்மை மிக்க செயல். ஆகவேதான், இது **சான்றாண்மை** எனப்படு கிறது என்க.

சுருங்கச் சொல்லின் - நன்மையானதெதுவும் கடமை போலக் கருதிச் செய்வது சான்றோர்க்கு - சால்புக்கு உரிய முதற்பண்பாகும்.

982. ''குணநலஞ் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத் துள்ளதூஉ மன்று.''

இக்குறளில், 'நலனே' என்னும் சொல்லில் காணும் ஈற்றே காரம் வெறும் அசையா? அன்றித்தேற்றேகாரமா? என்பது ஆயத்தக்கது. வெறும் அசையாய் மட்டுமிருந்தால் பொருள் ஒன்று; தேற்றேகாரமாயிருந்தால் பொருள் வேறாகும்.

'குணநலம் சான்றோர் நலன்' என்பதற்கும் **'குணநலமே சான்றோர் நலன்'** என்பதற்கும் பொருள் வேறுபாடுண்டு.

இக்குறட்பாவுக்கு உள்ள உரைகள் பெரும்பாலும் இரண்டாவதாகச் சொன்ன பொருளையே கூறுகின்றன.

**பரிமேலழகர் :**

"சான்றோர் நலமாவது குணங்களானாய நலமே."

**சிதம்பரனார் :**

"சான்றோர்களின் நன்மை குணங்களால் ஆகிய நன்மையே ஆகும்."

**தேவநேயன் :**

"சான்றோர் நலமாவது குணங்களான நலமே."

**கா. சுப்பிரமணியப்பிள்ளை ;**

"சான்றோர்களது சிறப்புக் குணச்சிறப்பே."

**மு. வ. :**

"சான்றோரின் நலம் எனப்படுவது அவருடைய பண்புகளின் நலமே."

**குழந்தை :**

"சான்றோர்களது நலமாவது நற்குணங்களாகிய நலமேயாகும்."

இதுவே இக்குறளுக்குப் பொருளாயின், வள்ளுவர் 'சான்றோர் நலனே' எனக்கூறியதன் காரணம் என்ன? **நலம்** என்னும் சொல்லைக் **குணம்** என்னும் சொல்லுடன் இணைத்துக் கூறும்போது, பொருள் அத்துணை சிறப்பாகத் தென்படவில்லை. சான்றோர்க்குள்ள சிறப்பெல்லாம் குணச்சிறப்பே என்பது எளிதில் புலப்படக்கூடியதேயன்றோ? அச் சொல்லைச் 'சான்றோர்' என்னும் சொல்லுடன் இணைத்துத் தேற்றேகாரத்தையும் சேர்க்கும்போது பொருள் சிறப்பதாகத் தெரிகிறது.

முந்திய குறட்பாவில், நன்மையானதெல்லாம் செய்வதே தம் கடமை என வாழ்க்கை நடத்துவதே சான்றோர் பண்புகளில் தலை சிறந்ததெனக் குறிப்பிடப்பட்டது. இதுவே

**சான்றோர்க்குரிய நலன்,** சான்றோரிடம் காணும் நன்மை
எனலாம். இந்தப் பண்பே ஒருவர்க்கிருக்கக்கூடிய குணங்களுள்
சிறந்தது என்றால், கருத்துச் சிறக்கிறதன்றோ? ஆகவே,
சான்றோர் வாழ்ந்து காட்டும் குணநலனே மெய்யான குண
நலம் என்னும் பொருள் கிடைக்கிறது. பிறநலன்கள் நலன் -
நன்மை என்னும் பெயருக்குத் தகுதியற்றவை. அஃதாவது,
நன்மையெல்லாம் செய்வதைத் தன் கடமையென ஒழுகுபவனின்
பண்புடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, தீமை செய்யாமலிருந்
தால் போதும்; ஏதோ ஒரு நன்மை செய்தால் போதுமே என
மனநிறைவு கொள்பவனின் பண்பு அத்துணை சிறப்பு எய்துவ
தில்லை என்க.

'பிறநலம்' என்னும் தொடருக்கு உரைகள் பெரும்பாலும்
'உறுப்புகளின் சிறப்பு' என்னும் பொருள் கொள்கின்றன. உடல்
உறுப்புகளின் சிறப்பு, உடலழகு அல்லது கல்வி, குடிப்பிறப்பு
முதலிய சிறப்புகள் இங்குக் குறிக்கப்பட்டுள்ளன என்றால் இவை
யெல்லாம் நலன்கள் அல்ல; குணச்சிறப்புத்தான் சிறப்பு என்று
வள்ளுவர் சொல்லித்தான் தெரிந்துகொள்ள வேண்டுமோ என
வினவ இடமுண்டு.

**சுருக்கம் :**

நன்மையானதெல்லாம் செய்ய முனைவது தம் கடமை
எனக்கருதும் சான்றோர் பண்பே 'சால்பு' என்னும் 'பண்பின்
நிறை பொங்கல் மலர்ச்சி' (மணி விளக்கவுரை) பிற பண்
பாளருக்குச் சான்றாக விளங்குவதற்கு ஏற்ற பண்பு. இதனோடு
ஒப்பிட்டால் பிற நற்பண்புகள் மங்குகின்றன.

983. ''அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
ஐந்துசால் பூன்றிய தூண்.''

'பண்பின் நிறை பொங்கல் மலர்ச்சி' என மணி விளக்க
உரைகூறும் 'சான்றோர் நலனே' அவர்கள் 'பண்புருவினர்'
ஆகும்படி செய்யும். இங்ஙனம் பண்புருவினர் ஆகுமாறு செய்யும்
குணச் சிறப்புகள் ஐந்து. இவையே 'சால்பின்' நிறைவை எய்தச்
செய்து, அதனைத் தாங்கும் தூண்களாகவும் உள்ளவை.*

* ஒவ்வொரு தூணுக்கும் விளக்கம் பின்னர் தரப்படும்.

984. ''கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.''

'எவ்வுயிரையும் கொல்ல மாட்டேன்' என்னும் விரதம் (நோன்மை), பூண்டு வாழ்ந்த மக்களின் காலம் வள்ளுவர் வாழ்ந்தக் காலம்.

வாய்ச்சுவைக்காக ஊன் தின்னுதல் பொருட்டாயினும், வேள்வியின் பொருட்டாயினும், 'ஒன்றன் உயிர் செகுத் துண்ணாமை நன்று' என்பது வள்ளுவரே தரும் படிப்பினை.

ஆனால், இத்தகைய விரதத்தைக் கடைப்பிடித்தவர்கள் உயிர்களின் உயிரை மாய்க்காவிடினும், உயிரினும் மேலான தாகக் கருதப்படவேண்டிய பிறருடைய பெயரைக் கெடுப்பதைப் பெரிதாகக் கருதவில்லை. பிறரைக் குறித்து அவதூறாகப் பேசுவதாலோ பிறர் செய்த குற்றத்தைப் பலரும் அறியப் பறை சாற்றுவதாலோ பிறருடைய வாழ்வு கெடுவதை நாம் பன்முறை பார்த்து வருகிறோம். நன்மக்கள் - சான்றோர் இங்ஙனம் செய்ய மாட்டார்கள். ஆகவேதான், 'பிறர் தீமை சொல்லா நலத்தது சால்பு' என்று படிப்பிக்கிறார் வள்ளுவர். உயிர்களைக் கொல் லாமையாகிய நன்மை பலரும் கடைப்பிடிக்கலாம். ஆனால், 'பிறர் தீமை சொல்லா' நோன்மை முன்னதைவிட மிகப்பெரிய நன்மை. அது 'சால்புடையார்' பின்பற்றும் கொள்கை என்கின் றார்.

சுருங்கக் கூறின், எந்நிலையிலும் பிறர்மீது தீமை கூறாமல் இருப்பது சால்புடையவர் பண்பென்க.

985. ''ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.''

இக்குறளில் 'ஆற்றுவார்' என்னும் சொல்லுக்குப் பலவித மாகப் பொருள் கூறப்படுகிறது.

1 **ஒரு காரியத்தை வெற்றி பெறச்செய்து முடிப் பவர்** - இது பரிமேலழகர், சிதம்பரனார், புலவர் குழந்தை, கா. சுப்பிரமணியப் பிள்ளை, தேவநேயன் இவர்கள் கூறும் பொருள்.

2. **பெரியார்** - மணக்குடவர், பரிப்பெருமாள் இவர்கள் தரும் பொருள்.

3. **நல்லோர்** - பரிதியார்.

4. **ஐம்புலன்களின் வேகத்தை ஆற்றுவார்** - காலிங்கர்

5. **ஆற்றலுடையவர்** - மு.வ. அவர்கள்.

எடுத்த காரியத்தை வெற்றி பெறச் செய்து முடிப்பவர்கள். (செயற்கரிய செய்வார் பெரியர் என்னும் குறட்பாவின்படி) **பெரியார்** ஆவர். அவர்களை நல்லோர் எனவோ ஆற்றலுடை யவர் எனவோ கூறுவதில் தவறில்லை. ஆகவே, 'செயற்கரிய ஒரு காரியத்தை வெற்றிபெறச் செய்து முடிப்பவர்' என்னும் பொருளே சிறக்கிறது. அவர்களைச் **செயலாற்றுவார்** எனினும் பொருந்தும்.

இங்ஙனம் வெற்றிபெறச் செயலாற்றுவதற்கு ஆற்றல் எங்கி ருந்து வருகிறது என்று வினவினால் 'பணிதலே அந்த ஆற்றல்' என்கிறார் வள்ளுவர்.

மக்கள் பெரும்பாலும் 'பணிதலை' ஆற்றல் என்று கருதார். யாரையும் பொருட்படுத்தாமல், யாருடைய துணையையும் தேடாமல் தாமாகவே ஒன்றைச் செய்து முடிக்க முனைந்தால், அதைத்தான் 'ஆற்றல்' என்பர். பிறர் துணையை நாடுவது ஆற்றல் இன்மைக்குச் சான்றாகக் கருதப்படுமேயொழிய ஆற்ற லுக்குச் சான்றாகக் கருநப்படமாட்டாது. இஃது உலக நடை.

ஆனால், வள்ளுவர் கூறுவது உலக நடைக்கு மாறாக உள்ளது. தாழ்மையுடன் பிறர் துணையை நாடுவதில் காணப் படும் 'பணிதல்' அவர்களது ஆற்றலாகப் பரிணமிக்கிறது என்கி றார். அதுவே அவர்களுடைய ஆற்றல் என்றும் சொல்லுகிறார்.

'பணிதல்' என்பதன் கருத்தும் 'ஆற்றல்' என்பதன் கருத்தும் ஒன்றுக்கொன்று முரணாயிருப்பதுபோல் தோன்றினாலும் 'பணி தலில்தான் சான்றோருடைய ஆற்றல் உள்ளது' என்பது வள்ளுவர் கருத்து.

இது எந்த அளவுக்கு உண்மை என்பதை மேலும் வலியுறுத்துகின்றார். பணிதலான இந்த ஆற்றல் எடுத்த காரியத்தை வெற்றி பெறச்செய்து முடிக்கக்கூடியது மட்டும் அன்று; அதைமுடிப்பதற்கு எதிரிகளால் தடைகள் ஏற்பட்டாலுங் கூட அவ்வெதிரிகளையும் மனம் மாற்றித் தம்பால் ஈர்த்துக் கொள்ளக்கூடிய வலிமை படைத்த கருவியாய் உள்ளது.

**சுருங்கக்கூறின்,** சான்றோர் தமக்கு ஏற்படக்கூடிய எவ்வித எதிர்ப்புகளையும் 'பணிதல்' என்னும் சால்பு நிறைபண்பினால் மேற்கொள்ள இயலும்.

இத்தகைய **சால்பு** சாதாரண மக்களிடம் எதிர் பார்க்க இயலாது. தன்னல உணர்ச்சிகள், கீழ்த்தர எண்ணங்கள் இவை உள்ளத்தில் தோன்றக் கருவிகளாய் உள்ள ஐம்புலன்கள், இவற்றின் போக்கையும் சிறப்பாக இப்புலன்கள் செயலாற்றும் வகையையும் நன்கு உய்த்துணர்ந்து தம்மனத்தை முற்றிலும் அடக்கி ஆளக்கற்றவர்களிடமே இத்தகைய சால்பு உளதாகும். இதையும் வள்ளுவர் வேறிடத்தில் குறிப்பிடுகிறார்.

'செயற்கரிய செய்வார் பெரியர்' என்னும் குறளுக்கு அடுத்தபடியாக,

> ''சுவையொளி ஊறோசை நாற்றமென் றைந்தின்
> வகைதெரிவான் கட்டே உலகு''

என்கிறார். இத்தகைய சால்புடையவர்க்கு உலகமே கட்டுப்பட்டு நடக்கும்போது, எடுத்தகாரியமோ எதிரிகளோ அடங்குவதில் வியப்பொன்றுமில்லை. இந்தக் கருத்தில் 'ஆற்றுவார்' என்னும் சொல்லுக்குக் **காலிங்கர்** கூறும் உரையும் பொருந்துவதாகவே தோன்றுகிறது.

986. ''சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல்.''

முந்திய குறளில், தாழ்மையுடன் பிறர் உதவி நாடும் பணிதலில்தான் சான்றோருடைய ஆற்றல் உள்ளது; இந்த ஆற்றல் எடுத்த காரியத்தை வெற்றிபெறச் செய்து முடிக்கக்கூடியது என்று கூறப்பட்டது.

இனி, எடுத்த காரியத்தை வெற்றிபெறச் செய்து முடிக்க ஆற்றல் இருந்தும், அதைப் பயன் படுத்தாமல் மிக உயர்ந்த ஒரு நோக்கத்தை உள்ளத்தில் கொண்டு, தோல்வியையும் வேண்டு மென்றே ஏற்றுக்கொள்வர். [பிற்சேர்க்கை - 1 காண்க].

இத்தகைய தோல்வியை மக்கள் எப்போது ஒப்புக் கொள்வர்? தம்மைவிட உயர்ந்தோர், தம்மைவிட வலியவர், தம்மைவிட ஆற்றல் மிக்கவர் இவர்களிடம் மட்டுமே ஒப்புக் கொள்ள ஒருப்படுவர். தம்மைவிட இழிந்தோர், தம்மைவிட மெலியவர், தம்மைவிட ஆற்றல் குன்றியவர் இவர்களிடம் தோல்வி கண்டால், அதை ஒப்புக்கொள்ள ஒருப்படார். அங்ஙனம் ஒப்புக்கொள்வாராயின், அது மிகமிக உயர்ந்த பண்பாகும். அதுவே சால்புக்குச் சான்றாகும்; சால்பு என்னும் பொன்னுக்கு உரைகல் போல் விளங்கும் இத்தகைய உயர்பண்பு உள்ளத்துப் பேராண்மை கொண்டவர்க்கே இயலும் என்க.

987. ''இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு.''

எந்நிலையிலும் பிறர்மீது தீமை கூறாமல் இருப்பது சால்புடையவர் பண்பென மேலே (4-ஆம் குறளில்) கூறப்பட்டது. எதிர்ப்புகள் ஏற்பட்டாலுங்கூடப் பணிதலே சால்புடையவர் மற்றொரு பண்பென 5-ஆம் குறளில் கூறப்பட்டது.

தம்மைவிட இழிந்தவரிடம் தோல்வி கண்டால்கூட, அத்தோல்வியை உயர்ந்ததொரு நோக்கத்துக்காக ஒப்புக் கொள்வர் சால்புடையவர் என்று 6-ஆம் குறளில் கூறப்பட்டது.

பிறர்மீது தீமை கூறாமலிருப்பதே கடினம்.

எதிர்ப்பு ஏற்படின் பணிதல் அதைவிடக் கடினம்.

இழிந்தவரிடமும் தோல்வியை ஒப்புக்கொள்வது அதனினும் கடினம்.

இனி, தமக்குத் தீமை செய்தோர், துன்பம் இழைத்தோர் இவர்க்குக்கூட நன்மை செய்தல், இனியவையே கூறுதல், இனியவையே செய்தல் அனைத்திலும் உயர்ந்த செயலாகும். இது சாதாரண மனிதர்க்கு இயலாதது; சால்பு எய்திய மக்களுக்கே இயலும்.

சால்புடையவர் எனத் தங்களைக் கூறிக்கொள்வோர் இன்னா செய்தவர்க்கும் இனியவையே செய்யாவிடின் அத்தகைய சால்பினால் பயனில்லை. அஃதாவது அது சால்பே ஆகாது!

988. ''இன்மை ஒருவற் கிளிவன்று சால்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்''

ஒருவனது வறுமை நிலை உலக நடை முறைப்படி இழிவான தாகக் கணிக்கப்படுகிறது. அதையும் தாங்கக்கூடிய மனத் திண்மை உண்டானால், வறுமையும் இழிவாகக் கருதப்படத் தேவையில்லை; இந்த மனத்திண்மையே சால்பு என்க.

989. ''ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார்.''

உலகமே பெயர்ந்தாலும் சான்றோர் நிலை பெயரார். சான்றாண்மைக்குக் கடல்போல் உள்ளவர்கள் அவர்கள்; பிறரால் அங்ஙனம் கணிக்கப்படுபவர்கள். சான்றாண்மையில் அத்துணை உயர்நிலை அடைந்தவர்கள் கடல்போல் பெரிதான ஆண்மை கொண்டவர்கள். காலம் தன் தன்மை குலைந்தாலும் சான்றோர் நிறைநிலை குலைவதில்லை.

990. ''சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை''

உலகமே நிலைகுலைந்தாலும் சான்றோர் நிலை பெயராலாகாது என்று முந்திய குறட்பாவில் கூறப்பட்டது. அப்படிச் சான்றோர் நிலைகுலைந்தால், என்ன நடக்கும் என்று இக்குறட் பாவில் கூறப்படுகிறது.

உலகம் நிலைபெற்று உய்வது யாரால்? எதனால்? என்னும் வினாவுக்குப் பலர் பலவிதமாக விடை கூறலாம். ஆனால், முதற்கண் அஃது இறைவனது அருட்சக்தியால்தான் நிலைபெற்று, அவனால்தான் உயர்வு பெறவியலும் என்பதற்கு மறுப்பில்லை என எவரும் ஒப்புக்கொள்வர்.

இந்த இறையருட்சக்தி, உலகினர் உய்யக் கிடைப்பது யாரால்? அல்லது எதனால்?

தாங்களே பண்புருவினர்களாகிப் பிற பண்பாளர்களுக்குச் சான்றாகி, பண்பாளர்களிடம் சால்பலைகளையும், எல்லாரிடமும் பண்பலைகளையும் பரப்பும் ஆண்மையுள்ளவர்களாய், நல்லவை எல்லாம் தம் கடன் என்றறிந்து, சான்றாண்மை மேற்கொண்டு, எந்நிலையிலும் பிறர்மீது தீமைகூறாமல், எதிர்ப்புகள் ஏற்படினும் பணிதலே நன்றென உயர்ந்த நோக்கத்துடன், தம்மைவிட இழிந்தவரிடமும் தோல்வி ஒப்புக்கொண்டு, தீமை செய்வோர்க்கும் நன்மையே செய்து, துன்பம் இழைத்தோர்க்கும் இனியவை புரிந்து இங்ஙனம் நன்மைக்கும், நன்மை வடிவினனான இறைவனுக்கும் சான்றாக விளங்கும் இந்த ஆண்மை குன்றினால், சான்றோரிடத்தே இந்தச் சான்றாண்மை குன்றினால், உலகில் மக்கள் நிலைபெற்று இன்புடன் வாழ வழியேது?

இங்ஙனம் நன்மைக்குச் சான்றாக விளங்கும் ஆண்மை படைத்தவர்கள் குன்றும்போது, உலகில் என்ன நடக்கிறது என்பதற்கு இன்றைய உலகில் நிகழும் ஒழுங்கீனமும் அவல நிலையும் நிலையற்ற சமாதானமுமே சான்றென்க.

ஆகவே, சான்றாண்மைக்கு ஆழிபோல் இருக்க வேண்டியவர் நிலை பெயர்ந்தால், சாதாரண மக்கள் நிலையும் தடுமாற வேண்டியதுதான். மக்கள் நிலை பெயர்ந்தால் மக்கள் வாழ் உலகமும் நிலைபெயரும்!

'இருநிலம் பொறை தாங்காது!', என்று குறட்பாவில் கூறுவது இக்கருத்தென்றே புலப்படுகிறது. ஊழிபெயரினும் தாம் பெயரலாகாது என்கிற ஆண்மையுடன் வாழவேண்டிய பொறுப்புடைய சான்றோரே நிலைகுலைந்து விட்டால், ஊழிபெயராமல் வேறு என்ன ஆகும்?

**'துலை அல்லார் கண்ணும் தோல்வி கொளல்'**

இஃது இயேசு கிறித்துவின் வாழ்க்கையில் சிறப்பாக நிறைவேறியதைக் காண்கிறோம். தம்மைக் கொல்ல வந்தவர்களை நொடிப்பொழுதில் முரியடித்து வெற்றிகொள்ளும் **வலிமை படைத்திருந்தும்** மானிடர்க்காகத் தம்மை பலியாக்கி,

அவர்கள் இழந்த அருட்செல்வத்தை மீண்டும் அவர்களுக்குப் பெற்றுத்தரவேண்டும் என்ற மிக உயர்ந்த நோக்கத்துக்காக, தன் உடலை (ஐந்தை) அவித்துப் பலியாக்கி மாந்தர் செய் தீவினைகளுக்கெல்லாம் கழுவாயாக அர்ப்பணிக்கத் திருவுளம் கொண்டார். இந்தஉயர்ந்த நோக்கத்துக்காக மிகப்பெரியதொரு தோல்வியை - தம்எதிரிகளால் தமக்குக் கிடைத்த அவமானத் தையும் அவல மரணத்தையும் தாழ்மையுடன் ஏற்றுக் கொண்டார்.

1. தம் எதிரிகளை முரியடிக்கத் தமக்கு வலிமை இருந்த தென்பதைப் பன்முறை காட்டியிருந்தார். உதாரண மாக ஒரு முறை நாசரேத்தூரில், அவர் பேசிய மொழி களைக் கேட்ட ஊரார் சினங்கொண்டு, ''வெகுண் டெழுந்து, அவரை ஊருக்கு வெளியே தள்ளி, அவ்வூர் அமைந்திருந்த மலை உச்சியிலிருந்து கீழே தள்ளிவிடக் கொண்டு சென்றனர். அவரோ அவர்களிடையே நடந்து தம் வழியே போனார்.'' (லூக். 4: 28-30).

2. வேறொரு முறை அவரைக் கல்லால் எறிந்து கொல்ல முயன்றனர். அவரைப் பிடிக்கப் பார்த்தனர். அவரோ, அவர்கள் கையிலிருந்து தப்பிச் சென்றார். (அரு. 10: 39). அப்படியே வேறொரு முறையும் செய்தார். (அரு. 8: 59).

3. ஆனால், குறித்த காலம் வந்தபோது, தம் எதிரிகள் தம்மைப் பிடிக்கவந்த நேரத்தில், தப்பப் பார்க்காமல் பிடிபடுவதற்கென்று எதிரே செல்கிறார். ''மனுமகன் (நான்) பாவிகள் கையில் ஒப்படைக்கப்படும் நேரம் நெருங்கிவிட்டது. எழுந்திருங்கள், போவோம்! என்னைக் காட்டிக்கொடுப்பவன் நெருங்கிவிட்டான்,'' (மத். 26: 45-46 காண்க) என்று தம் சீடரிடம் சொல் லிக்கொண்டே அவர்களிடம் செல்கிறார். தமக்கு விரும் பமானால் தப்பிக்கொள்ள இயலும் என்று காட்ட, பிடிக்க வந்தவர்களை ஒரு வார்த்தையால் மும்முறை தரையில் குப்புற விழச் செய்கிறார் (அரு. 18:2-9 வாசிக்க).

தாம் பிடிபடாதவாறு காப்பாற்றச் சீடருள் ஒருவர் வாளை ஏந்தித் தாக்க முற்பட்டபோது அவரைத் தடுத்து, தமக்கு விருப்ப

மானால் வான்படைகளையே தம் உதவிக்கு அழைக்க இயலும் என்கிறார். (மத். 26:51-53 வாசிக்க).

4. தம் உயிரைப் பறிக்க யாருக்கும் அதிகாரம் இல்லை யென்றும் தாமே விரும்பி, உன்னதமானதொரு நோக் கத்துக்காகத் தம்மைப் பலியாக்குவதாகவும் தெளிவாகக் கூறினார்.

''நல்ல மேய்ப்பன் தன் உயிரைக் கொடுத்தும் ஆடுகளை ஓநாயின் வாயினின்று காப்பாற்றுவான். அதுபோல மக்களுக் காக நானும் செய்கிறேன்'' என்றார்.

''நல்ல ஆயன் நான்; மேய்ப்பனின்றி அல்லலுறும் என் ஆடு களுக்காக (மனித இனத்தவர்க்காக) என் உயிரைக் கொடுக் கிறேன். என் கிடையைச்சாராத ஆடுகள் உள்ளன. அவற் றையும் நான் கூட்டிச் சேர்க்க வேண்டும். அவை என் குரலுக்குச் செவி கொடுக்கும்; ஒரே ஆயனும் ஒரே மந்தையும் உண்டாகும். (இதுதான் அவர் கொண்டிருந்த உயர்ந்த நோக்கம்). என் உயிரை என்னிடமிருந்து பறிப்பவன் எவனு மில்லை. நானாகவே என் உயிரைக் கையளிக்கிறேன். உயிரைக் கையளிக்கவும் எனக்கு அதிகாரம் உண்டு. அதனை மீண்டும் பெற்றுக்கொள்ளவும் எனக்கு அதிகாரம் உண்டு'' என்றார். (அரு.10: 14-18 வாசிக்க).

''என் ஆடுகள் நான் தரும் இறை உயிரை - பேரின்பமாம் அருள் உயிரைப் பெற்றுய்ய வேண்டுமென்றே நான் வந்தேன். இதற்காகவே என் உயிரைப் பலியாக்குகிறேன்'' என்றார். (அரு. 8:10 காண்க).

ஆதியில் நிகழ்ந்த தீவினையால், ஆதிப் பெற்றோர் இறைவன் தந்த 'நண்பென்னும் நாடாச் சிறப்பைப்' புறக் கணித்ததால், அதனால் ஏற்பட்ட கொடிய விளைவுகளால் மனித இனம் பிளவுபட்டுச் சிதறிப் போய்விட்டது. 'சிதறிக்கிடந்த கடவுளின் மக்களை ஒன்றாய்ச் சேர்ப்பதற்காகவே' - இந்த மிக உயர்ந்த நோக்கத்துக்காகவே இங்ஙனம் தாமாக விரும்பி, வெற்றி பெறக்கூடிய ஆற்றல் படைத்திருந்தும், தோல்வியை அரவணைத்தார் என்க.

## சான்றாண்மை

### சுருக்கம்

'யாதொன்றும் தீமையிலாத' இறைவனுக்குச் (ஐந்தவித்தானுக்கு) சான்று பகர்வதில் ஆண்மை (சால்பை) ஆளுதல்,

981. ''கடன்என்ப நல்லவை எல்லாம் கடன்அறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.''

இச் சான்றாண்மை மேற்கொள்பவர் தம் கடமைகளை நன்குணர்ந்தவராய், நல்லவை (நற்செயல்கள்) எல்லாமே தம் கடமை என நினைத்துச் செய்ய முனைவர். (கட்டாயமாகச் செய்ய வேண்டியதை மட்டுமன்று).

982. ''குணநலம் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத்து உள்ளதூஉம் அன்று.''

சான்றோர் மேற்கொள்ளும் சால்பு நலனே உண்மையான குண நலன். (சால்பற்ற) மற்ற நலன் எல்லாம் 'நலன்' எனப்படுவதற்குத் தகுதியில்லாதவை.

983. ''அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம்
வாய்மையொடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண்.''

அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்தும் சால்பு நிலையை (சான்றாண்மையை)த் தாங்கும் தூண்கள்.

984. ''கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.''

நோன்பு என்பது 'கொல்லாமை'ப் பகுதியில் கூறப்பட்ட சிறிய நலனாகும். சால்பு என்பது பிறர்மீது தீமையான ஒரு சொல்லும் சொல்லாதிருத்தல் ஆகும்.

985. ''ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.''

ஆற்றல் படைத்தவரது ஆற்றல் எதுவெனில் (எதிரிகளிடத்தும்) பணிந்து ஒழுகுவதே. அதுவே எதிரிகள் மனத்தை மாற்றக் கூடிய கருவியாகும்.

986. ''சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல்.''

சால்பு நிலைக்கு உரைகல் யாதெனில், தம்மைவிடத் தாழ்ந்தவரிடமும் (தமது ஆற்றலைக் காட்டாமல்) தோல்வியடைந்தவர் போலாதல்.

987. ''இன்னாசெய் தார்க்கும் இனியவே
செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு.''

தமக்குத் தீமை செய்தவர்க்கும் நன்மையே செய்யாவிடில் சால்பு நிலை பொருளற்றதாகும்.

988. ''இன்மை ஒருவற்கு இளிவன்று சால்பென்னும்
திண்மைஉண் டாகப் பெறின்.''

(அருட் பொருளால் வரும்) சால்பு என்னும் உள்ளாற்றல் இருப்பின், (பொருட்பொருள்) இன்மை ஒருவர்க்கு இழிவாகாது.

989. ''ஊழி பெயரினும் தாம்பெயரார்
சான்றாண்மைக்கு
ஆழி எனப்படு வார்.''

சான்றாண்மையை ஆழ்கடல் போல் (நிரம்ப) கொண்டிருப்பவர், உலகமே பெயர்ந்தாலும் சால்பு நிலையினின்று அகலார்.

990. ''சான்றவர் சான்றாண்மை குன்றின்
இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை.''

சான்றாண்மையினர் சால்புநிலையினின்று பிறழ்வாராயின், அதனால் ஏற்படும் மாபெரும் தீமையை உலகம் தாங்க இயலாது.

# 100. பண்புடைமை

நற்பண்புகளால் உண்டாகும் நயன்.

991. "எண்பதத்தால் எய்தல் எளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை என்னும் வழக்கு."

எவரிடத்தும் எளிமையாக ஒழுகுதலால் நற்பண்பினை அடைய இயலும் என்பர் மேலோர்.

992. "அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்
பண்புடைமை என்னும் வழக்கு."

(சால்புத் தூண்களுள் தலையாய) அன்புடைமை, நிறைவுற அடைவதற்கு வாய்மைக்குடிப்பிறத்தல் இவ்விரண்டும் உயரிய பண்புடைமைக்கு வழியாகும்.

993. "உறுப்பொத்தல் மக்களொப்பு அன்றால்
வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு."

உடலால் ஒத்திருப்பது நன்மக்கள் எனப்படுவதற்கு ஒப்பாகாது. மனவேறுபாடின்றிப் பண்பால் ஒத்திருப்பதே நன் மக்களுக்கு ஒப்பாகும்.

994. "நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டும் உலகு."

அன்பொடு நன்மை புரிந்து பிறர்க்குப் பயன்படுபவரது உயர் பண்பை உலகமே பாராட்டும்

995. "நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு"

பிறரை விளையாட்டாக இகழ்வதும் துன்பம் தரக்கூடியது. அவரவர் இயல்பறிந்து நடப்பவர் சில சமயங்களில் வெறுப் புணர்வு காட்டினாலும் அவரிடம் நற்பண்பே சிறக்கும்.

996. ''பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மன்.''

நற்பண்புள்ளவர் செயற்படுவதால் உலகியல் அழியாது நிலைத்துள்ளது. அத்தகையோர் இன்றேல் உலகம் மண்ணோடு மண்ணாய்விடும்.

997. ''அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர்.''

ஆறறிவுள்ள மக்களுக்குரிய பண்பு இல்லாதவர் கூரிய அறிவுடையவராயினும் ஓரறிவுடைய மரத்துக்கு ஒப்பாவர்.

998. ''நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை.''

நட்புறவு செய்யாதவர், தீயன செய்வார். இவர்களிடத்தும் பண்பற்ற வகையில் ஒழுகுதல் குற்றமாகும்.

999. ''நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன்று இருள்.''

அன்பும் மகிழ்வும் இன்றி ஒழுகுவோர் பகல் பொழுதிலும் இருள் படர்ந்த நிலவுலகுக்கு ஒப்பாவர். (அஃதாவது, மகிழ்ச்சியாகிய ஒளியைக் கெடுப்பவர்).

1000. ''பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யால்திரிந் தற்று.''

நற்பண்பில்லாதவன் அடைந்த செல்வம், நல்ல பால், அது வைக்கப்பட்டுள்ள கலத்தின் குற்றத்தால் கெட்டது போலாகும்.

# 101. நன்றிஇல் செல்வம்

இவறன்மை

1001. ''வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்தது இல்.''

வாய்த்த வகையெல்லாம் பெரும் பொருள் சேர்த்து வைத்தவன், அதைக்கொண்டு செய்யத் தகுந்ததெல்லாம் செய்யாவிடில் அவன் செத்தவனுக்கு ஒப்பாவான். (வாழ்ந்தும் பயனில்லை).

1002. ''பொருளானாம் எல்லாமென்று ஈயாது இவறும்
மருளானாம் மாணாப் பிறப்பு.''

பொருட்பொருளால் எல்லாம் கூடும் என்றெண்ணி, யாருக்கும் எதுவும் தராமலிருக்கும் அறியாமையால் மனிதப் பிறப்புப் பெருமை இழக்கும்.

1003. ''ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை.''

பொருளை ஈட்டுவதையே விரும்பி, (பொருளை நன் முறையில் செலவழிப்பதால் வரும்) புகழை விரும்பாத மக்கள் பிறப்புப் பூமிக்குப் பாரமே.

1004. ''எச்சமென்று என்எண்ணுங் கொல்லோ ஒருவரால்
நச்சப் படாஅ தவன்.''

(இவறன்மையால்) யாராலும் விரும்பப்படாதவன் தான் இறந்த பிறகு எஞ்சி நிற்பதாக எதைக் கருதுவானோ? (புகழ் என்னும் எச்சம் இராதன்றோ?)

1005. ''கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய
கோடிஉண் டாயினும் இல்''

தேவைப்படுவோர்க்குக் கொடுப்பதும், நன்முறையில் தாமே அனுபவிப்பதும் இரண்டும் இல்லாதவர்க்குப் பொருள் பலகோடி உண்டானாலும் என்ன பயன்?

1006. ''ஏதம் பெருஞ்செல்வம் தான்றுவ்வான் தக்கார்க்கொன்று
ஈதல் இயல்பிலா தான்.''

தானும் நுகரான், தக்கோர்க்குத் தரும் இயல்பும் இல்லாதவன், இவனிடம் உள்ள பெரும் செல்வம் ஒரு நோய்க்குச் சமம்.

1007. ''அற்றார்க்கொன்று ஆற்றாதான் செல்வம் மிகநலம்
பெற்றாள் தமியள் மூத்தற்று.''

பொருளற்றவர்க்கு ஒன்று கொடுக்காதவன் செல்வம், மிக்க அழகு கொண்ட பெண், கணவன் இன்றித் தனிமையில் வாழ்ந்து கிழவியாவது போலாம்.

1008. ''நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று''

யாராலும் விரும்பப்படாதவன் செல்வம், ஊர் நடுவில் நச்சு மரம் பழுத்து நிற்பது போலாம்.

1009. ''அன்பொரீஇத் தற்செற்று அறநோக்காது ஈட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்.''

அன்பென்பது இன்றி, தன்னையும் வருத்தத்துக்குள்ளாக்கி, அறம் என்பதை நோக்காமல் சேர்க்கப்பட்ட மிகுதியான பொருளை வேறு யாராவது கொண்டுபோய் அனுபவிப்பார்கள்.

1010. ''சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனையது உடைத்து.''

புகழ்பெற்ற செல்வரது ஈயாத்தன்மை, மேகம் மழை பெய்யாமல் வறண்டது போலாகும்.

# 102. நாண் உடைமை

நாண் உடைமையை வள்ளுவர் சால்பூன்றிய தூண்களுள் இரண்டாவதாகக் கூறுகிறார்.

''அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு
ஐந்துசால் பூன்றிய தூண்.'' (983)

என்கிறது குறள்.

**மணக்குடவர் :** அறம், பொருள், இன்பங்களில் பிறர் பழியாமல் ஒழுகுதல்.

**பரிதியார் :** நீதியல்லாதது கண்டால் நாணுதல்.

**புலவர் குழந்தை:** தமக்கு ஒவ்வாத காரியம் செய்ய நாணுடையராதல். அஃதாவது, இழிந்த செயல்களைச் செய்ய நாணுதல்.

**ஞா. தேவநேயன்:** உயர்குடிப் பிறந்து மானம், பெருமை, சால்பு, பண்பு ஆகிய குணங்களையுடையோர் தமக்குப் பொருந்தாத தருமங்களைச் செய்ய நாணும் தன்மை.

**சாமி சிதம்பரனார்:** செய்யத் தகாதவைகளைச் செய்ய நாணுதல்.

**மு. கோவிந்தசாமி :** அஞ்சுவதஞ்சும் அறிவுடையது நாணம்.

**மு. வ. :** தகாத செயல் காரணமாக நாணுவதே நாணமாகும்.

**கா. சுப்பிரமணியப் பிள்ளை :** ஒவ்வாத கருமங்களுக்கு இணங்காத இயல்பு. ஒவ்வாத காரியத்தைச் செய்யக் கூசுதல்.

இவ்வுரைகளினின்று இருவிதக் கருத்துகள் புலனாகின்றன'

**ஒன்று :** தகாத காரியத்தைச் செய்ய நாணுதல். இது எல்லா மனிதர்க்கும் பொருந்தக்கூடிய நியதி.

**மற்றொன்று :** உயர்ந்தோர் அல்லது உயர்குடிப்பிறந்து நற்பண்புகளையுடையோர், செய்யத் தகாத காரியத்தைச் செய்ய நாணுதல்.

இது குறிப்பிட்ட சிலருக்கே பொருந்தக்கூடிய நியதியாகத் தோன்றுகிறது. இத்தகைய பாகுபாடு ஏற்புடையதாகாது. ஏன்? இழிந்த செயல்களைச் செய்ய எவருமே நாணுதல் வேண்டும். மனிதர் அனைவர்க்குமே பொருந்தக்கூடிய நியதியாகவே இந்த 'நாண்' என்பது இருத்தல் வேண்டும். அஃது இல்லையேல் 'சால்பு' என்னும் நிறைவு இருப்பதற்கிடமில்லை. சால்புக்குத் தூணாக 'நாண்' உள்ளதன்றோ?

ஆகவே, இழிந்த செயல்கள் செய்ய நாணுதல் என்னும் கருத்தே சிறந்தது. மனிதர் அனைவர்க்கும் பொதுவான நியதியே இது என்க.

இனி, தகாத செயல்களைச் **செய்ய** நாணுதல் என்னும் கருத்து மட்டுந்தான் இங்கு உள்ளதா? **செய்த பின்னர் நாணுதலும்** உள்ளதா என்பது ஆயத்தக்கது.

'கருமத்தால் நாணுதல்' என்னும் சொற்றொடரில் 'கருமத்தால்' என்னும் சொல்லுக்குத் தரும் உரைகள் சில பின்வருமாறு:

— இழிந்த கருமம் காரணமாக.

— தாம் செய்யும் வினையினாலே.

— இழிந்த செயல்களால்.

வேறு சில உரைகள் :

தீவினை செய்ய வெட்கி ...... ...... ......

ஒவ்வாத காரியத்தைச் **செய்யக்** கூசுதல்............

என்கின்றன. தீவினை செய்வதற்கு **முன்பு** நாணுதலா? செய்த **பின்** நாணுதலா என்று இவ்வுரைகளினின்று தெளிவாகப் புலப்படவில்லை.

தீவினை செய்யும் முன்பு நாணுதல் எனின் தீவினை செய்ய அஞ்சுதல் என்றே பொருள்படும். இக்கருத்தைத் 'தீவினை அச்சம்' என்னும் அதிகாரத்தில் விளக்குகிறார். ஆகவே, 'நாண்' என்னும் இந்த அதிகாரத்தில், 'செய்த பின் நாணுதல்' பற்றியே கூறப்படுகிறது என்று முடிவு செய்யலாம்.

செய்த பின் ஏன் நாணுதல் வேண்டும் எனின், காரணம் கூறுகிறார்:

'நாணுடைமை மாந்தர் சிறப்பு' என்று முதற் காரணம் கூறுகிறார்.

'அன்பின் வழியது உயிர்நிலை' என்று வள்ளுவர் கூறியது, ஊண், உடை முதலியன பொதுவாகக் கொண்டிருக்கும் எல்லா உயிர்களைக் குறித்தன்று; அன்பு என்னும் சிறப்பான பண்பினைப் படைத்த ஆறறிவுயிர்களைக் குறித்தே. சால்புக்கு முதல் தூண் என விளங்கும் அன்பு இல்லையேல் மனித வாழ்வுக்கு இடமில்லை என்பது கருத்து. அன்பின் வழியதாக மனித உயிர்நிலை சிறக்கவில்லையேல் அங்கு மனிதப் பண்பே இல்லை என்க.

இனி, தீவினை செய்வோன் அன்பின் வழியது உயிர்நிலை என்னும் நியதிக்கு மாறாக ஒழுகுபவனாகின்றான். தீவினை என்பது அன்பை ஒழிப்பதாகும். ஏனெனில், 'அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் இலக்கணத்திற்கு மாறாகத் தீவினை செய்பவன் பிறர்க்குத் தீமையே செய்பவனாகின்றான். தீவினையெல்லாம் யாதாமொரு வகையில் அன்பைக் கெடுப்பதாகும். தீவினையாளன், 'என்பும் உரியர் பிறர்க்கு' என்பதற்கு மாறாக, 'பிறர் என்பும் தனக்குரியது' என்னும் முறையில் செயல்புரிகின்றான்! தீவினை என்பது அன்புறவைக் கெடுப்பது; அன்பையே ஒழிப்பது.

இனி, இத்தகைய தீவினை நிகழ்ந்தபின், ஒருவன் செய்ய வேண்டியது என்ன? பேசாமலிருந்துவிடலாமா? அன்பைக் கெடுப்பவன் அதனை மீண்டும் தோற்றுவிக்க வழியில்லையா? உண்டு. அதுவே 'நாண்' என்னும் நன்மை.

தீமையை ஒழிக்க, அதனை மேற்கொள்ள ஒரேயொரு சக்தியுண்டு. அதுவே நன்மையெனப்படுவது. நன்மையால் மேற்கொள்ள இயலாத தீமை எதுவுமில்லை.

ஓர் எடுத்துக்காட்டு: அருணனும் கருணனும் நெருங்கிய நண்பர்கள். அருணன் ஒருமுறை எங்ஙனமோ கருணனுடைய பெயரை அநியாயமாகக் கெடுத்து அவனது குடும்பத்துக்கே பெரியதொரு தீங்கை விளைவித்துவிட்டான். அதன் பின்னர் அருணன், தான் இழைத்த தீங்கை எண்ணி உள்ளம் வெதும்பி, 'இனிய நண்பனுக்கு இப்படித் தீங்கு இழைத்துவிட்டோமே!' என்று பெரிதும் நாணி, தான் செய்த அநியாயத்தைப் பலர் முன்னிலையிலும் சொல்லி மன்னிப்புக் கேட்டுக்கொண்டதோடு, எதிர்பாராததொரு பேருதவியைக் கருணனுடைய குடும்பத்துக்குச் செய்தான்.

தான் செய்த குற்றத்தை எண்ணி நாணுவதால், அக்குற்றத்துக்குத் தக்க கழுவாய் உண்டாவதை இதில் காண்கிறோம். ஆகவேதான், 'நாண் என்னும் நன்மை' எனப்படுகிறது. இந்த நன்மை சால்புடையார்க்குரியது என்றும் அறிதல் வேண்டும்.

'நாண் என்னும் நன்மை குறித்தது சால்பு' என்கிறார் வள்ளுவர்.

**நாணுதல் ஏன் ?**

தான் செய்த குற்றத்தை எண்ணி ஒருவன் நாணும்போது, நாணுமாறு அவனை உந்துவது எது ? எதுவாக இருக்க இயலும் ? எதுவாக இருத்தல் வேண்டும் ?

தீவினை என்பது அன்புறவைக் கெடுப்பது, அன்பையே ஒழிப்பது எனின், அன்பில்லாத உயிர்நிலை பொருளற்றதாயின், அத்தீவினை புரிந்த பின், பொருளற்ற வாழ்க்கை நடத்துபவனாகின்றான். 'அன்பகத்தில் உயிர் வாழ்க்கை' பற்றி வள்ளுவர் கூறுவது கவனிக்க. அன்பின் வழியது உயிர்நிலை என்றால், அன்பில்லாத வாழ்க்கை மனிதப் பண்புக்கு ஏற்றதாகாது அன்றோ ? ஆகவே, இந்த இழிநிலையை எண்ணி அவன் நாண வேண்டியவனாகின்றான். சால்பு என்பது அன்பில்லாமல் நிலைபெறாதாகையால், சால்பினை வளர்க்க வேண்டிய

சான்றோன் அன்பைச் சீர்குலைத்தால், 'நாணென்னும் நன்மை குறித்தது சால்பு' ஆதலின், நாண வேண்டியதேயன்றோ?

மேலும், தீவினை என்பது செருக்கு என்கிறார் வள்ளுவர் 'தீவினை அச்சம்' என்ற அதிகாரத்தில். ஆகவே, செருக்கு என்னும் தீவினை நிகழ்ந்தால், தன்னைத் தாழ்த்திக்கொள்வதே முறையன்றோ? இங்ஙனம் தாழ்த்துவதே 'நாண்' என்க.

இனி அன்பு, அன்புறவு என்னும்போது மனிதர் ஒருவர்க்கொருவர் செலுத்தவேண்டிய அன்புபற்றி மட்டும் பேச்சா? மனிதனுக்கும் இறைவனுக்குமுள்ள அன்புறவு பற்றியும் பேச்சா?

'அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்', என்று வள்ளுவர் கூறும் அன்பின் இலக்கணம் எந்த அன்புக்குச் சிறப்பாகப் பொருந்தும்? இறைவன் மனிதன்பால் செலுத்தும் அன்பிற்கா? மனிதன் மனிதன்பால் செலுத்தும் அன்பிற்கா?

மேலும், 'அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' என்பது யாருக்கு முற்றிலும் பொருந்தும்? இறைவனுக்கா? மனிதனுக்கா? **இறைவனுக்கே முழுதுறப் பொருந்தும்** என்று 'அன்புடைமை' என்னும் அதிகாரத்தில் விளக்கப்பெற்றது காண்க.

ஆகவே, இறைவனுக்கே முழுதுறப் பொருந்தும் இந்த அன்பை, ஒருவன் தன் குற்றத்தால் கெடுத்துவிடுவானாயின், என் செய்வது? அஃதாவது, மனிதன்பால் இறைவன் செலுத்திய—செலுத்தும் அன்புக்குக் கைம்மாறாக மனிதன் இறைவன்பால் அன்புறவுகொண்டு ஒழுக வேண்டும். அன்றோ? தீவினை செய்பவன் எவனும் அன்பைச் சீர்குலைக்கிறான் என்றால், அவன் இறைவன்பால் செலுத்த வேண்டிய அன்பையும் சீர்குலைக்கிறான்.

'அன்பின் வழியது உயிர்நிலை' என்னும் நியதி மனிதனுக்கு மட்டுமன்று; இறைவனுக்கும் பொருந்துவதாகும். இறைவனும் அன்பின் வழி நின்றே உலகையும் மனிதனையும் படைக்கின்றான். அன்பின் வழி நின்றே தன்னை ஐந்தவித்தான் ஆக்குகின்றான். அன்பின் வழி நின்றே 'என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் இலக்கணத்துக்கு ஏற்ற இலக்கியமாக விளங்குகின்றான்.

ஆகவே, அன்புறவைக் கெடுத்தவன், மற்றவர்பால் தனக்கிருக்க வேண்டிய அன்புறவைக் கெடுத்ததால் மட்டுமன்று; இறைவன்பால் தனக்கிருக்க வேண்டிய அன்புறவையும் கெடுத்ததாலும் நாணவேண்டியவனாகின்றான்.

அங்ஙனம் எல்லா நன்மை வடிவினனான இறைவன் முன் தீவினை என்னும் செருக்குச் செயலைப் புரிந்ததால், இறைவன் முன்னிலையில், தன்னைத் தாழ்த்திக்கொள்ள வேண்டியவனாகின்றான்.

சிறப்பாக, இது சான்றோர்க்குரிய பண்பாக விளங்க வேண்டும். சான்றோர்க்கு 'அணியன்றோ நாண் உடைமை!' 'அஃதின்றேல் பிணியன்றோ பீடுநடை!'

மேலும்,

> ''நாண்அகத் தில்லார் இயக்கம் மரப்பாவை
> நாணால் உயிர்மருட்டி யற்று.'' (1020)

என்று கூறப்படுவதும் கவனித்தல் வேண்டும்.

'அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை' வளம் பெறாது என்று கூறிய வள்ளுவர், அந்த அன்பைத் தீவினையால் சீர்குலைத்த பின், 'நாண் அகத்தில்லா உயிர் வாழ்க்கை' கயிற்றால் ஆடும் வெறும் மரப்பாவைபோல், என்று கூறுவது மிகப் பொருத்தமே.

அன்பகத் தில்லா வாழ்க்கை பயனற்றது. அங்ஙனமே சீர் குலைந்த அன்பை மீண்டும் பெறச்செய்யும் நாண் இல்லாவிடில், மனிதன் மனிதனேயல்லன். உயிருள்ளவன்போல் காணப்படினும், அவன் கயிற்றால் இயக்கப்படும் மரப்பாவைக்கு ஒப்பாவான்.

ஆகவே, 'நாண்' என்பது மனித உயிர்க்கு எத்துணை அவசியம் என்றால், உயிர்போனாலும் போகட்டும், நாண் என்னும் சால்பு இழத்தலாகாது என்னும் மன உறுதியுடன் வாழ்வான் என்கிறார் வள்ளுவர். ''நாணால் உயிரைத் துறப்பர். உயிர்ப் பொருட்டால் நாண் துறவார் நாண் ஆள்பவர்.'' என்கிறார்.

மனித வாழ்க்கைக்கு இன்றியமையாத பண்புகளில் நாண் என்பதும் ஒன்றாகியிருப்பதால், சிறப்பாக இறைவனுக்கும்

ஐந்தவித்தானுக்கும் சான்றுகூற வேண்டியவர்க்கு மிகமிகத் தேவைப்படுவதால், சால்பூன்றிய தூண் எனப்படுவதில் வியப்பில்லை.

சான்றாண்மையுடன் விளங்க வேண்டியவர்கள், இறைவனுக்குச் சான்று கூறவேண்டியவர்கள். அவன் தந்த நண்பென்னும் நாடாச்சிறப்பைப் பேணாது - அவனது பொருள்சேர் புகழைப் புரியாது குற்றம் புரிந்து ஆன்மீக வீழ்ச்சியடைய நேருங்கால், **நாண்** என்னும் சால்புத்தூண் அவர்களைத் தாங்கிக் கொள்ள வேண்டும்.

ஒருவன் தவறு செய்வதிலிருந்து விடுதலை பெற வேண்டுமானால், முதலில் அவனுக்குத் தான் செய்வது தவறு என்னும் உணர்வு வரவேண்டும். தவறு என்று உணரும் உணர்வே நாணத்தை உண்டாக்குகிறது. நாணம் அவனைப் பழைய வழியிலிருந்து திருப்பிப் புதுவழியாம் பொய்தீர் ஒழுக்க நெறிக்குக் கொண்டு வருகிறது.

இவ்வாறு மனிதனின் போக்கு, வேறு திசைக்கு, அஃதாவது, இறைவன்பால் திரும்பலே 'மனந்திரும்பல்' எனக் கூறப்படுகிறது. இதைக் கூறுவோர் யார்?

நாணுடைமையும் மனந்திரும்பலும் ஒரே நிகழ்ச்சியே. தன்னிடத்திலுள்ள தவறான செயல்களுக்காக நாணமடையும் ஒருவனுடைய மனம், பின்பு வேறு திசையில் திரும்பிச் செயல்படுகிறது.

இங்ஙனம் மனம்திரும்புதலையே தம் கொள்கைகளுக்கெல்லாம் அடிப்படையாக வைத்துப் போதித்தது யார்? "கடவுள் அரசு நெருங்கி விட்டது, மனந்திரும்பி, இந்நற்செய்தியை நம்புங்கள்" (மார்க். 1, 15) என்று தம் பணியைத் தொடங்குகிறார் ஐந்தவித்தானாகிய கிறித்து.

"மனந்திரும்பும்படி பாவிகளை அழைக்கவே வந்துள்ளேன்" (லூக். 5: 32), என்கிறார்.

"மனம் திரும்பாவிடில் நீங்கள் எல்லோரும் அழிவீர்கள் (லூக். 13: 5) என்றும் அவர் மக்களுக்கு அறிவுறுத்தினார்'

"மனந்திரும்பும் ஒரு பாவியைக் குறித்து வானகத்தில் மிகுந்த மகிழ்ச்சியுண்டாகும்" [லூக். 15: 7] என்றும் கூறினார்.

அவருடைய சீடர்களும் அதையே வலியுறுத்துகின்றனர். "உங்கள் பாவங்கள் ஒழியும்பொருட்டு மனம் மாறிக் கடவுளிடம் திரும்புங்கள்." (அப். 17:30 காண்க).

## நாண் உடைமை

### சுருக்கம்

சால்புத் தூண்களுள் ஒன்றாகிய 'கருமத்தால் நாணுதல்'

1011. "கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற."

இங்குக் கூறப்படும் நாண், செய்த இழிசெயலுக்கு வருந்தி நாணுவது; வேறு காரியத்துக்காக நாணுதல் பெண்களுக்குரிய நாணம் போன்றதாகும்.

1012. "ஊணுடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு."

உணவு, உடை முதலிய மற்றவையெல்லாம் எல்லா மக்களுக்கும் பொது; மக்களுள் உயர்ந்தவர் எனக் கருதப்படுபவர்க்குரிய சிறப்புப் பண்பு, செய்த தீச்செயலுக்காக நாணி வருந்துதலாம். இது மிகச் சிறப்பாக அருள் ஆட்சியிலுள்ள மக்களுக்குப் பொருந்தும். 'யாதொன்றும் தீமை இலாத' இறைவனை வாய்மைப் பணியால் அறிந்த பின்னர், அவனுக்கு எதிராகச் செய்யப்படும் தீச்செயலுக்கு நாணி வருந்துவது, சான்றோர்க்குரிய தனிச்சிறப்பு.

1013. "ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாண்என்னும்
நன்மை குறித்தது சால்பு."

உயிர்கள் எல்லாம் உடலைக் கொண்டன. சால்பு என்னும் உயிர், நாண் என்னும் உடலில் உறைதல் வேண்டும். இருள் சேர் தீவினை [பாவம்] நீங்க, அருள் சேர் நாண் இன்றியமையாதது. இறைவனது புகழைப் புரியாமல் தீவினை என்னும் செருக்குக்கு ஆளான பின்னர், அந்நிலை நீங்குவதற்கு வழி, செய்த தீவினைக்காக வருந்தி இறைவனிடம் மன்னிப்புக் கேட்பதே. இதுவே மீண்டும் அருளாகிய உயிரைத் தர வல்லது. சால்பு என்னும் இறையருள் நிலைக்கு நாண் என்பது உயிர் போன்றதென்க.

1014. ''அணிஅன்றோ நாணுடைமை சான்றோர்க்கு
அஃதின்றேல்
பிணிஅன்றோ பீடு நடை.''

சால்புநிலை நிற்பவர்க்கு மேற்கூறிய நாண் உடைமை விலை மிக்க அணியாகும். ஆன்மாவுக்குச் சிறந்த ஆபரணம் ஆகும். அஃதின்றிப் (அருளின்றி) பெருமிதத்தோடு இருப்பது பெரும்பிணியே.

பொருளாட்சியில் நல்லோர்க்கும் இது பொருந்தும்.

1015. ''பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு
உறைபதி என்னும் உலகு.''

பிறர் செய்யும் குற்றத்துக்காகவும், தாம் செய்யும் குற்றத்துக்காகவும் நாணி வருந்துவோர், நாண் என்னும் சால்பு நிலைக்கு உறைவிடம் எனப்படுவர்.

இது சிறப்பாக அருளாட்சிக்குப் பொருந்தும். இறைவனுக்கு எதிராக, அவன் பொருள் சேர் புகழ் புரியாமல், 'தான் செய்த குற்றமாயினும், பிறர் செய்யும் குற்றமாயினும்' மிக வருந்தி நாணுவர் சான்றாண்மையினர். இத்தகைய நாணினால் வரும் அருளுக்கு அவர்கள் உறைவிடம் போலாவர். அத்துணை மேன்மையுடையவர்.

1016. ''நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.''

(பொருளாட்சியில்) அதிகாரம் செலுத்துவோர் தம் ஆட்சி நிகழும் மிகுதியான நிலத்தை (அதில் கிடைக்கும் பொருளை) தமக்குப் பாதுகாப்பாகக் கொள்ளாமல், தீவினை செய்தலைத் தவிர்ப்பதையும், செய்தால் வருந்தித் திருந்துவதையுமே பாது காப்பாகக் கொள்வர். (தீவினை புரிந்தால் துன்பம் வந்தே தீரும்).

அருளாட்சியில் பொருளும் புகழும் பாதுகாப்பன்று. இறை வன் அருளும் அவ்வருளில் (தீவினை செய்யாமலும், செய்தால் நாணுவதால்) நிலைத்திருப்பதையுமே உண்மையான பாதுகாப் பாகக் கொள்வர் சான்றோராகிய மேலவர்.

1017. "நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்
நாண்துறவார் நாண்ஆள் பவர்."

உண்மையான நாண் உள்ளவர் எத்துன்பம் வரினும் அதைக் கைவிடாமல், அதன்பொருட்டு உயிரையும் விடத் தயங்கார். உயிர் போனாலும் போகட்டும். நாண் என்னும் சால்பு நிலை நீங்கலாகாது என வாழ்வர்.

பொருட் பொருளுக்காக இத்துணை தியாகம் தேவை யில்லை. நடைமுறையில் இது நிகழ்வதுமில்லை. பொருள் போனால் வேறுபொருள் அடையவியலும். உயிர் போனால் என் செய்வது என்பதே மக்களுடைய கருத்து. ஆனால், அருட் பொருளுக்காக ஒருவன் உயிரையும் தியாகம் செய்தல் அவசியம். இதில்தான் சான்று ஆண்மை விளங்குகிறது.

1018. "பிறர்நாணத் தக்கது தான்நாணா னாயின்
அறம்நாணத் தக்கது உடைத்து."

பிறரால் நாணத்தக்க செயலுக்காக ஒருவன் (தானே) நாணவில்லை எனில், அறமே 'நாணி' அவனை விட்டு நீங்கி விடும். இருமை ஆட்சிக்கும் இது பொருந்தும்.

1019. "குலஞ்சுடும் கொள்கை பிழைப்பின் நலஞ்சுடும்
நாணின்மை நின்றக் கடை."

சீரிய கொள்கைப் பிடிப்பின்றி ஒருவன் வாழ்ந்தால், அது 'மாசற்ற குலம்பற்றி வாழ்தும்' என்னும் நிலையைச் சீரழிக்கும். அங்ஙனம் வாழ்வதுபற்றி நாணமல் நின்றால், எல்லா நலனும் (பொருளும் அருளும் ஆகிய எல்லாமே) சீரழியும்.

1020. "நாண்அகத் தில்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று."

'மனத்துக்கண் மாசிலனாதல்' மறந்து, தீவினை செய்தோமே என்னும் நாண் (வருத்தம்) உள்ளத்தில் தோன்றாவிடில், இத்தகையோர் உயிருடன் வாழ்வது மரப்பதுமையைக் கயிற்றால் ஆட்டி உயிருள்ளதுபோல் காட்டிப் பார்ப்பவரை மயக்குவதாகும்.

இது மிகச் சிறப்பாக அருளாட்சிக்குப் பொருந்தும். அருள் இல்லார் உயிருள்ள நடைப் பிணங்களுக்கு ஒப்பாவர். சான்றோர்க்கு அருளே உண்மை உயிர். ஒருநாள் இழக்கப் போகும் இவ்வூன் உடல் உயிர், உயிர்போல் தோன்றினாலும் அஃது ஒரு வித மயக்கமே.

# 103. குடிசெயல் வகை

வாய்மைக்குடியை வளர்க்கும் வகை.

1021. "கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்
பெருமையின் பீடுடையது இல்."

செய்ய வேண்டிய கருமத்தைச் 'செய்யாமல் விடேன்' என்னும் பெருமை மிக்க மனநிலையைவிடச் சிறந்தது வேறில்லை.

1022. "ஆள்வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின்
நீள்வினையால் நீளும் குடி."

நாட்டின் குடிமக்கள் முயற்சி, ஆழ்ந்த அறிவு இவை இரண்டினால் உயர்வு அடைவர். அருளோடு இணைந்த முயற்சியும் பொய்தீர் ஒழுக்க நெறிபற்றிய ஆழ்ந்த அறிவும் வாய்மைக்குடி மக்களைச் சால்பு நிலையில் ஓங்கச் செய்யும்.

1023. "குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்."

நாட்டின் குடிமக்களை உயர்த்துவேன் என முனைந்து நிற்கும் ஒருவற்குத் தெய்வசக்தி, உடையை வரிந்துகொண்டு (தீவிரமாகத்) துணை செய்யும்.

வாய்மைக்குடியை உயர்த்த விரும்புபவர்க்கு இறைவன் அருட்சக்தி (வான்) தானே முன் வந்து நிற்கும். தானே முன் வருவது ஏன் எனில், மனிதன் தன் சொந்த வலிமையால் எந்த அருட் செயலையும் செய்ய இயலாதவன். வாய்மைக்குடியை உயர்த்துவது அருட் செயல்களுள் மிகச் சிறந்ததாகும்.

1024. "சூழாமல் தானே முடிவெய்தும் தம்குடியைத்
தாழாது உஞற்று பவர்க்கு."

குடிமக்களை உயர்த்துவதற்காகத் தளராமல் முயற்சி செய்வோர்க்குத் தாம் நினைப்பதற்கு முன்பே, நல்ல முடிவு உண்டாகும்; வெற்றி கிடைக்கும்.

அங்ஙனமே அருளாட்சியில் இறை அருளைத் துணை கொண்டு ஆள முயற்சி செய்வோர்க்கு வாய்மைக்குடி உயர்வு நிச்சயமாக உண்டாகும்.

1025. "குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு."

மனத்துள் மாசிலராக, (வாய்மைக்) குடிமக்களை உயர்த்தி வாழ்பவர், நெருங்கிய இனத்தவராக உலகினரால் கொள்ளப்படுவர். மக்களுள் (உண்மை உறவு இத்தகைய வாழ்க்கையால்தான் அமையக்கூடும்). இஃது இருமை ஆட்சிக்கும் பொருந்தும்.

1026. "நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல்."

உயரிய ஆண்மை எனப்படுவது அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நாற்பொருள்களுள், வீடு எனப்படும் இல்லத்தை உருவாக்கு முறையில், தான் பிறந்த வாய்மைக்குடியை (அருட் செயலால்) வளர்ப்பதாகும். இது சிறப்பாக அருள் ஆட்சிக்கே பொருந்தும்.

1027. "அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை."

போர்க்களத்தில் வீரர்கள் போல, வாய்மைக்குடி மக்களிடையேயும் அக்குடியை வளர்க்கும் பாரத்தை ஏற்றுக் கொள்ளுதல் அருட்சக்தி பெற்றவர்களுக்குரிய கடமையாகும்.

இது மிகச் சிறப்பாக அருளாட்சிக்கே பொருந்தும்.

1028. "குடிசெய்வார்க்கு இல்லை பருவம் மடிசெய்து
மானம் கருதக் கெடும்."

வாய்மைக்குடி உயர்த்தும் பணியில் ஈடுபடுவோர்க்கு, அதைச் செய்யும் காலம், நேரம் என்று ஒன்றில்லை. அசதியையோ அப்பணி செய்வதால் விளையக்கூடிய மானக்கேட்டையோ நினைத்துத் தயங்கினால் அக்குடி உயராது.

1029. "இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்றம் மறைப்பான் உடம்பு."

வாய்மைக் குடும்பத்தை மாசு எதுவும் அணுகாமல் காக்க முயல்பவனது உடல், துன்பத்துக்காளாமோ? (உடல் முதலாய் தீமையினின்று காக்கப்படும்).

1030. "இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்தூன்றும்
நல்லாள் இலாத குடி."

சரியும் சுவரை முட்டுக்கொடுத்துத் தாங்குவது போல, அருள் வாழ்வில் சரியும் நிலையிலிருப்பவர்களைத் தாங்கக்கூடிய உறுதி மனம் கொண்ட ஆட்கள் இல்லாத குடும்பமாகிய மரம், துன்பம் என்னும் கோடரி, அடியை வெட்டிச் சாய்க்க விழுந்துவிடும்.

# 104. உழவு

உழவுத் தொழிலின் உயர்வும், 'புயல் என்னும் வாரி'யால் உந்தப்பட்டு உழைப்பவர் சிறப்பும்.

இதனுள் இம்மை, மறுமைப் பொருள் இரண்டும் உள.

உழவு என்னும் சொல் 'உழத்தல்' என்னும் சொல்லிலிருந்து பிறப்பது எனக் கொண்டால், உழவுத் தொழிலையும் குறிக்கும்; கடின உழைப்பையும் குறிக்கும்.

1031. ''சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை.''

**இம்மைப் பொருள்:**

மக்கள், வேறு பல தொழில்களை மேற்கொண்டாலும் இறுதியில் உழவுத் தொழிலையே நாட வேண்டியுள்ளது. (உணவுப் பொருளுக்கு அஃது இன்றியமையாததால்). ஆகவே, எவ்வளவு கடினமானதாயினும், உழவுத்தொழிலே தலை சிறந்தது.

**மறுமைப் பொருள்:**

சான்றோர் (சால்பு நிலையைக் கடைப்பிடிப்பவர்) வேறு பல நற்செயல்களைச் செய்தாலும், வாய்மைக்குடி வளர்க்க மேற் கொள்ளும் உழைப்பே (இப்பணியை உழவுக்கு ஒப்பிடுகின்றது விவிலியம்) அனைத்தினும் சிறந்தது.

1032. ''உழுவார் உலகத்தார்க்கு ஆணிஅஃ தாற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து.''

**இம்மைப் பொருள்:**

உழவுத்தொழில் செய்வோர், (இவ்வின்றியமையாத தொழிலைவிட்டு) வேறு தொழில்களை மேற்கொள்வோரையும் தாங்குவது போல (அவர்களுக்குத் தேவைப்படும் உணவுப்

பொருளைத் தயாரிப்பதால்), மக்கள் வாழ்வென்னும் தேருக்குக் கடையாணி போல் உள்ளார்.

**மறுமைப் பொருள்:**

வாய்மைக்குடியை உயர்த்த உழைப்பவர், அப்பணியில் ஈடு படாதவர்களுடைய முயற்சிக்கு ஈடுசெய்வது போல உழைப்ப தால், அருள் வாழ்வுக்கு அச்சாணி போல் உள்ளார்.

1033. ''உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்.''

**இம்மைப் பொருள்:**

உடல் உழைப்பால் நிலம் உழுது அதனால் வாழ்பவரே உண்மையான வாழ்க்கை நடத்துபவர். மற்றவர், யாரையாவது வாழ்த்தி வணங்கி, அதனால் கிடைக்கும் சிறு ஊதியத்தைக் கொண்டு வாழ்பவர் ஆவர். இவர்கள் முன்னேறாமல் பின்னுக்குச் செல்வர்.

**மறுமைப் பொருள்:**

வாய்மைக்குடி உயர்த்த, இறை அருளோடு கடின உழைப்பை மேற்கொள்பவரே உண்மையான அருள் வாழ்வு வாழ்பவர். மற்றவர் அவ்வாழ்வை முழுதுமாகத் துய்க்க இயலாதவர். (பிச்சை எடுத்து வாழ்பவர் போல).

1034. ''பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்.''

**இம்மைப் பொருள்:**

உணவுப் பொருள்களுள் நெல் மிகச் சிறந்ததாகக் கருதப்படு வதால், அதை நிரம்பப் பெறுபவர், செழிப்பின் மிகுதியால், தம் நாட்டை மட்டுமன்று, (அச்செழிப்பற்ற) பிறர் நாட்டையும் தம் ஆட்சிக்குள் கொணர வல்லவராவர். (உழவுத்தொழிலால் வரும் செழிப்பின் மேன்மையும், அஃது இல்லாதார் தாழ்வும் கூறப் படுகிறது).

**மறுமைப் பொருள் :**

வாய்மைக்குடி உயர்வால் அருள் வளம் பெருகுவதால், உலகனைத்தையுமே அருளாட்சிக்குள் கொணர இயலும் என்றவாறு. ("உலகோர் அனைவரையும் எனக்குச் சீடர்களாக்குங்கள் - இறையருள் வளம்பெறச் செய்யுங்கள்" - எனத் தம் சீடருக்கு-வாய்மைப் பணியாளர்க்குக் கூறும் விவிலிய வசனம் காண்க).

1035. "இரவார் இரப்பார்க்கொன்று ஈவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்."

**இம்மைப் பொருள் :**

கையால் கடின உழவுத் தொழில் செய்து வாழ்க்கை நடத்துபவர், பிறரிடம் யாசிக்க மாட்டார். மாறாக யாசிப்பவர்க்கு வேண்டியதைத் தயங்காமல் தருவார்.

**மறுமைப் பொருள் :**

அருள்வளம் பெற்ற வாய்மைக் குடியினர் வேறு யாரையும் எதனையும் சார்ந்து வாழ வேண்டியதில்லை. (இறைவனையே சார்ந்துள்ளதால்) பிறர்க்குத் தாமே அருள் உதவி புரிய இயலும் நிலை அடைவர்.

1036. "உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கும் நிலை."

**இம்மைப் பொருள் :**

உழவு செய்வோர் கை வேலை செய்யாமல் வாளாவிருந்தால், சாதாரணமாக, தாங்கள் விரும்புவதை விட்டுவிட்டோம் என்று வாழும் துறவிகளும் அந்நிலையில் நிலைத்திருக்க இயலாது. (அத்துணை அவசியம் உழவுத்தொழில்).

**மறுமைப் பொருள் :**

அருள் வளம் பெருகுமாறு பணி செய்ய வேண்டியவர் தம் பணியைக் கைவிட்டால், இல்லறத்தார் மட்டுமன்று, துறவறத்தாரும் நிலை குலைவர்.

1037. "தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்."

**இம்மைப் பொருள் :**

உழு நிலத்தை ஒருபலம் காற்பலமாகும் வண்ணம் (அவ்வளவு நுண்மையாகும் வண்ணம் மீண்டும் மீண்டும் புரட்டிப் புரட்டி உழுது) உலர விட்டால் நல்லவிளைச்சல் பெற ஒருபிடி எருவும் தேவைப்படாது.

**மறுமைப் பொருள் :**

"நாங்கள் கடவுளோடு உழைப்பவர்கள், நீங்கள் கடவுள் பண்படுத்தும் :பண்ணை" என்னும் விவிலிய வாக்குக்கிணங்க, வாய்மைக் குடியினராகிய பண்ணையில் நன்கு உழைத்து, நல் விளைச்சல் கிடைக்குமாறு ஆன்மாக்களாகிய நிலத்தில் (புரட்டிப் புரட்டி உழுது உலர வைப்பது போல்) அருள் என்னும் எருவைச் சிறிது விட்டாலும் நிரம்பப் பயன் கிடைக்கும்.

1038. "ஏரினும் நன்றால் எருஇடுதல் கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு."

**மறுமைப் பொருள் :**

வாய்மைக் குடியினராகிய இறைவனின் பண்ணையில் மிக எழுச்சியுடன் (ஏரின்-குறள் 14) உழுதல் வேண்டும். (அவ்வாறு உழாஅர் உழவர் 'புயல் என்னும் வாரி வளம்' குன்றினால் குறள். 14) அஃதாவது, இறையருள் வாக்கை எடுத்துரைக்க வேண்டும். பின்னர் அருள் என்னும் எரு விடுதல் வேண்டும். அஃதாவது, புயல் என்னும் வாரி வளம் கிடைக்குமாறு அருட் செயல் புரிதல் வேண்டும். மேலும் தீச் செயல்களாகிய களைகள் எழாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். விழிப்புடன் ஆன்ம நோய் வராதபடி தடுக்க எல்லா அருள் முயற்சியும் செய்தல் வேண்டும்.

**இம்மைப் பொருள் :**

ஏரால் உழுதலைவிட எரு இடுதல் மிகவும் தேவை. அதன் பின் களையெடுத்தல் வேண்டும். பின்னர் நீர் பாய்ச்சினால் மட்டும் போதாது. எவ்வித நோயும் வராமல் பயிர்களை நன்கு பாதுகாத்தல் வேண்டும்.

1039. "செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும்."

**இம்மைப் பொருள் :**

நிலத்திற்கு உரியவன் பயிர்களைக் கண்காணிக்க அடிக்கடி செல்லாவிடில், கண்காணிப்பில்லாத மனைவி கணவனை விட்டுப் பிரிவது போல, நிலம் தக்க பயனைத் தராமல் போகும்.

**மறுமைப் பொருள் :**

வாய்மைக்குடி மக்கள் அருள் வாழ்வில் எப்போதும் கண் காணிக்கப்படல் வேண்டும். இல்லையேல், அருளைச் சிறிது சிறிதாக இழந்து விடுவர்.

1040. ''இலமென்று அசைஇ இருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும்.''

**இம்மைப் பொருள் :**

'எம்மிடம் பொருள் இல்லை' என்று சோம்பி இருப்பவரைக் கண்டு, நிலமகள் சிரிப்பாள். (உழைப்பின்றிப் பொருள் இராது).

**மறுமைப் பொருள் :**

எம்மிடம் அருட்பொருள் இல்லையே என வாளா இருப்பவர் நகைப்புக்கிலக்காவர். அவ்வருளை வேண்டினால் வேண்டிய அளவுக்குக் கிடைக்காமல் போகாது; இறைவனடி சேர்ந்தால் எல்லாம் ஆகும்.

# 105. நல்குரவு

பொருள் இல்லாத வறுமை - அருள் இல்லாத ஆன்ம வறுமை.

1041. ''இன்மையின் இன்னாதது யாதெனின்
இன்மையின்
இன்மையே இன்னா தது.''

பொருள் இன்மையைவிடத் துன்பம் தருவது யாதெனின், அருள் இன்மையே. அதைவிடத் துன்பம் தருவது வேறில்லை. ஏனெனில், ''பொருள் அற்றார் பூப்பர் ஒருகால், அருளற்றார் அற்றார் மற்றாதல் அரிது'' (குறள். 248).

1042. ''இன்மை எனஒரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும்.''

அருளின்மை என்னும் பாவி (பாவ நிலைமை) இம்மையில் இன்பமின்றி இருக்கச் செய்வதோடு, மறுமையிலும் பேரின்பம் இழக்கச் செய்யும். (வறுமையைப் பாவி எனல் பொருந்தாது).

1043. ''தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக
நல்குரவு என்னும் நசை.''

பொருளற்ற வறுமைநிலையால் விளையும் பொருளாசை, அருளற்ற வறுமைநிலை. அஃது எவனிடம் உள்ளதோ அவனுடைய பழைமைக்குடிப் பண்பையும் அதன் புகழையும் ஒருங்கே கெடுக்கும். (நற்குடியைப் பாழாக்கும் வறுமை என்றவாறு).

அதே சமயத்தில் வாய்மைக்குடியையும் அதன் புகழையுங் கூட, மிதமிஞ்சிய பொருளாசை கெடுத்துவிடும். (அருளாசை மாறாகக் காக்கும்).

1044. ''இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த
சொற்பிறக்கும் சோர்வு தரும்.''

(வீடு பேறு - இறைவன் இல் எனப்படும் நீடுவாழ்வுக்கு வழியாகும்) வாய்மைக்குடிப் பிறந்தவரிடத்தும் அருள் இன்மை யால் இழிவுக்குக் காரணமான சொல்லும் அதனால் மனச்சோர் வும் அருட் சோர்வும் உண்டாகும்.

நல்ல குடும்பத்தில் பிறந்தவர்க்கும் வறுமையால் மேற் கூறிய சோர்வு நிகழும்.

1045. "நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குறைத்
துன்பங்கள் சென்று படும்."

பொருளின்மையால் உலக வாழ்வில் பல துன்பங்கள் நிகழும். அருள் இன்மையால் மறுமையிலும் அளவில்லாத் துன்பம் நிகழும். (அருளில்லார்க்கு அவ்வுலகமில்லை).

1046. "நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும்
நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்."

பொருளில்லார் நற்கருத்தை நன்குணர்ந்து சொன்னாலும், வறிஞர் என்னும் ஒரே காரணத்துக்காக அவர்கள் சொல் ஏற்கப் படுவதில்லை. அருள் இல்லார்க்கு இது மிகச் சிறப்பாகப் பொருந்தும். (அருளில்லா வாழ்வு எள்ளளவும் மதிப்புப் பெறாது).

1047. "அறஞ்சாரா நல்குரவு ஈன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்."

வறிஞன் அறவழியில் செல்லாதவனாயின், தன்னைப் பெற்ற தாயாலும் அயலான் எனக் கருதப்படுவான்.

அருள் சாராத வறிஞன் அதற்கு மேலாக அவமதிக்கப்படு வான். அருள் நிலையில் வாழும் வறிஞன் பலராலும் மதிக்கப் படுவது யாம் காணும் ஒன்று. அருளில்லாத வாழ்வு வாழும் வறிஞன் மட்டுமன்று, செல்வனும் இகழப்படுவது காண்கிறோம். பொருள் நிறையக்கொண்ட செல்வன் சில சமயங்களில் போற்றப்படினும், சிறிது காலத்துக்கே அங்ஙனம் போற்றப் படுவான். இறுதியில் இகழ்ச்சிக்கு ஆளாகியே தீர்வான்.

1048. "இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலும் நிரப்பு."

"நேற்றுத் துன்பப்பட்டு வயிற்றை நிரப்பினேன்; இன்றும் அக்கொடிய வறுமை வருமோ? வந்தால் என் செய்வேன்?"- இது வறுமையால் வாட்டப்படுபவன் கூற்று. இஃது அருள் வாழ்வுக்குப் பொருந்தாது. ஏன் எனில், நேற்று இருந்த அருள் இன்றும் இருக்கும் - என்றும் நிலைத்திருக்கும் - மருளால் அருளை இழக்கும் வரை இருக்கும்.

1049. "நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்
யாதொன்றும் கண்பாடு அரிது."

நெருப்பின் நடுவில் உறங்குவதும் கூடும். ஆனால், வறுமை என்னும் கொடுமையால் உறக்கமும் கெடும்.

பொருள் இன்மையால் ஓரளவு மன நிம்மதியுடன் வாழ இயலும். அருள் இன்மையால் மன நிம்மதியே ஏற்படாது. தீவினை மனச்சாட்சியை எந்நேரமும் அரித்துக்கொண்டேயிருக்குமாதலின்.

1050. "துப்புரவு இல்லார் துவரத் துறவாமை
உப்பிற்கும் காடிக்கும் கூற்று."

(வறுமையால்) பொருள் ஏதுமில்லாதார் உலகையே முற்றும் துறந்துவிடக்கூடிய நிலை இருந்தும், இங்குமங்கும் யாசித்துக் கிடைக்கக்கூடிய பழங்கஞ்சிக்கும் உப்புக்கும் எமன் போல் ஆவானேன்? (கஞ்சியை உண்டு அழித்தலால் கஞ்சிக்குக் கூற்று என உருவகமாகக் கூறப்பட்டது.)

அருள் இல்லாதவரும் உலகைத் துறந்து, இழந்த அருளைத் துறவு நிலையில் மீண்டும் அடைவதே முறை. துறவு நிலையில் இஃது எளிதாக அடையலாமன்றோ? அஃதின்றி உலகில் கிடைக்கக்கூடிய சிற்றின்பத்திற்காக இங்குமங்கும் அலைவானேன்?

# 106. இரவு

யாசித்தலால் உண்டாகக்கூடிய நன்மை.

1051. ''இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்
அவர்பழி தம்பழி யன்று.''

யாசிப்பதற்குத் தகுந்தவரை யாசிக்க. அவர் ஒன்றும் கொடுக்காவிடில் அவர் மீது பழியேயன்றி, யாசிப்பவரின் குற்றம் அன்று. (யாசித்தும் ஒன்றும் அடையவில்லை என்னும் மானக் கேட்டைவிட, ஒன்று பெறுவதே மேல்).

1052. ''இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை
துன்பம் உறாஅ வரின்.''

தான் கெஞ்சிக் கேட்டதை ஓரளவு எளிதில் அடைந்தால், அதுவும் ஓரளவு இன்பமே.

1053. ''கரப்பிலா நெஞ்சின் கடனறிவார் முன்நின்று
இரப்புமோ ரேஎர் உடைத்து.''

வஞ்சகமில்லாத நெஞ்சினர், (இல்லார்க்குக் கொடுத்தல் வேண்டும் என்ற) தம் கடமை உணர்ந்தவர், இவர்கள் முன் நின்று ஒன்றை யாசித்தால், அதிலும் ஒருறப்பு உண்டெனலாம்.

1054. ''இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்
கனவிலும் தேற்றாதார் மாட்டு.''

கருமித்தனத்தைக் கனவிலும் கொள்ளாதவரிடம் யாசிப்பது, தானே ஒருவர்க்குக் கொடுப்பது போலாகும்.

1055. ''கரப்பிலார் வையகத்து உண்மையால் கண்ணின்று
இரப்பவர் மேற்கொள் வது.''

உள்ள பொருளை ஒளிக்காமல் கொடுக்கும் பண்புள்ளவர் உலகில் இருப்பதுதான், கூச்சமின்றி ஒருவர் முன் நின்று யாசிப்பதற்குக் காரணம்.

1056. "கரப்பிடும்பை இல்லாரைக் காணின் நிரப்பிடும்பை
எல்லாம் ஒருங்கு கெடும்."

கருமித்தனமாகிய துன்பநிலை இல்லாதவரைக் கண்டால், வறுமையால் வரும் துன்பம் எல்லாம் ஒருங்கே மறையும்.

1057. "இகழ்ந்தெள்ளாது ஈவாரைக் காணின்
மகிழ்ந்துள்ளம்
உள்ளுள் உவப்பது உடைத்து."

அவமதிப்பும் இகழ்வதுமின்றிப் பொருள் கொடுப்பாரைக் கண்டால், யாசிப்பவர் வெளிப்படையாக மட்டுமன்று, உள்ளத்தின் ஆழத்திலும் மகிழ்வுறுவர்.

1058. "இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று."

யாசிப்பவர் இல்லையெனின், இம்மாபெரும் உலகில் உள்ள மக்களுடைய வாழ்வு, கயிற்றின் ஊடே செல்லும் மரப் பாவையின் போக்குவரவு போலாம். (உள்ளத்தில் ஈரம் உள்ளவர் உலகில் இல்லாமல் இல்லை. அவர்களது பண்பு வெளிப்படுவது யாசிப்பவரால்தான் என்றவாறு).

1059. "ஈவார்கண் என்னுண்டாம் தோற்றம் இரந்துகோள்
மேவார் இலாஅக் கடை."

ஒன்றை யாசித்துப் பெற்றுக் கொள்வதை விரும்பாதவர் இல்லாவிடில், கொடுக்க விரும்புவோர்க்கு என்ன புகழ் உண்டாகும்?

1060. "இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை
தானேயும் சாலும் கரி."

யாசிப்பவனுக்குக் கொடுப்பவனிடம் சினம் தகாது. சினத்தால் தன் வறுமை நிலை நீங்கப்போவதில்லை. யாசிப்பவனுக்கு அப்போதுள்ள வறுமைத் துன்பமே இதற்குச் சான்று. (சினந்தாலும் சினம் கொள்ளாவிடினும் அவன் நிலை மாறப்போவதில்லை).

# 107. இரவச்சம்

எந்நிலையிலும் யாசிக்கக் கூச்சப்படுதல்.

1061. "கரவாது உவந்தீயும் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும்."

உள்ள பொருளை மறைக்காமல் மகிழ்ச்சியோடு கொடுக்கும் கண் போன்ற அருமையுடையவரிடத்தும் யாசிக்காமலிருப்பதே பெரும் நன்மை.

1062. "இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்."

பிறரிடம் யாசித்துத்தான் உயிர்வாழ்தல் வேண்டுமெனின். உலகியலைத் திட்டமிட்டவன் தானும் எங்கும் சுற்றித் திரிந்து ஒழியட்டும். (அஃதாவது, உலகியலை இயற்றியவன் இவ்வாறு திட்டமிடவில்லை என்றவாறு. உலகை இயற்றியவன் திட்டத் துக்குப் பணியாமல் தம் மனம் போல் ஆட்சி செய்வோரே ஈண்டு பழிக்கப்படுகின்றனர். இது பொருட்பால் — பொருளாட்சிப் பகுதி என்பதை ஓர்க. ஆட்சி நடத்துவோர் தம் கடமை நிறைவேற்றினால் இத்தகைய யாசகர் இரார் என்பது கருத்து).

உலகை இயற்றிய இறைவன் மீது வீசப்படும் பழியன்று இது. அவனது திட்டத்துக்குக் கட்டுப்படாத உலக ஆட்சியினர் மீதே இப்பழி வீசப்படுகிறது. இறைவன் நேரடியாக உலக நாடுகளை ஆள்வதில்லை. அவனது பேராலும் அதிகாரத் தாலுமே மக்கள், மக்களை ஆள்கின்றனர். "மேலிருந்துதான் உனக்கு அதிகாரம் உண்டு" என்று ஐந்தவித்தான், பிலாத்து அதிகாரி முன்னிலையில் கூறியது கவனிக்க. மேலும் "இறைவனிடமிருந்து வராத அதிகாரம் எதுவுமில்லை. இப்போதுள்ள ஆட்சிப் பீடங்களைக் கடவுளே நிறுவினார்" என்கிறது விவிலியம். அதிகாரம் பெற்றவன் தன் கடமை செய்யா விடில் அது, அதிகாரம் அளித்தவனது குற்றமா?

1063. "இன்மை இடும்பை இரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்டது இல்."

வறுமையால் ஏற்படும் துன்பத்தை, யாசித்து நீக்கிக் கொள்வோம் என்னும் இழிவான மனநிலையைவிட முரட்டுத் தனமானது வேறில்லை.

1064. "இடமெல்லாம் கொள்ளாத் தகைத்தே இடமில்லாக்
காலும் இரவொல்லாச் சால்பு."

இன்புற இடம் இல்லா நிலையிலும் யாசிக்க மனம் ஒருப் படாத சால்புணர்வு, உலகமே போற்ற இயலாத உயர் பண்பாகும்.

1065. "தெண்ணீர் அடுபுற்கை யாயினும் தாள்தந்தது
உண்ணலி னூங்கினியது இல்."

(சோற்றுப் பருக்கை அதிகமில்லாமல்) வெறும் தண்ணீர் போல் காணப்படும் கூழானாலும், அது தன் உழைப்பால் கிடைத்தது என்று எண்ணி உண்பதைவிட இனிமையான உணவு வேறில்லை.

1066. "ஆவிற்கு நீரென்று இரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்தது இல்."

பசுவுக்குத் (தனக்கன்று) தண்ணீர் வேண்டும் என்று யாசித் தாலும் அந்த யாசகத்தைப் போல் இழிந்தது வேறில்லை.

1067. "இரப்பன் இரப்பாரை எல்லாம் இரப்பின்
கரப்பார் இரவன்மின் என்று."

'யாசிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டால், கருமித்தனம் உள்ளவனிடம் யாசிக்க வேண்டா' என யாசிப்பவர் எல்லா ரையும் கெஞ்சிக் கேட்டுக்கொள்வேன்.

1068. "இரவென்னும் ஏமாப்பில் தோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்."

யாசகம் என்னும் பாதுகாப்பில்லாத தோணி, ஈயாத்தன்மை என்னும் கல், மனத்தைத் தாக்கினால் பிளந்து விடும். (யாசிப் பதையே தொழிலாகக் கொள்வது கேடு விளைவிக்கும்).

1069. "இரவுள்ள உள்ளம் உருகும் கரவுள்ள
உள்ளதூஉம் இன்றிக் கெடும்."

யாசிப்பதன் இழிவை எண்ணும்போது உள்ளம் நெகிழ்தல் வேண்டும். பொருள் உள்ளவரது ஈயாத்தன்மையை எண்ணும் போது நெகிழ்ந்த நெஞ்சம் உடைந்தே போய்விடும்.

1070. "கரப்பவர்க்கு யாங்கொளிக்குங் கொல்லோ இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர்."

கேட்பவர்க்கு 'இல்லை' என்று சொன்னவுடன் யாசிப்பவர் உயிரே போவது போல் இருக்கும். இல்லை என்று சொல் பவர்க்கு உயிர் எப்படித்தான் ஒளிந்துகொண்டு நிலைக்கிறதோ?

# 108. கயமை

எப்பண்பு மில்லாத கீழோர் தன்மை. (சான்றாண்மைக்கு நேர் மாறான நிலை).

1071. ''மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாங்கண்டது இல்.''

கயவர்கள் (உருவத்தில்) மற்ற மக்களைப் போலவே இருப்பர். ஆனால், அவர்களைப் போன்றவரை யாம் கண்டதில்லை. (அத்துணை இழிவானவர் என்றவாறு).

1072. ''நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத்து அவலம் இலர்.''

நன்மையானதையெல்லாம் அறிந்தவர்களைவிடக் கயவர் (ஒரு விதத்தில்) மேலான நன்மையுடையவரே! ஏன் எனில், நன்மை என்பதைப்பற்றிய எக்கவலையும் மனத்தில் அவர்களுக்கு இராது. ('திருவுடையர்' என்றது இகழ்ச்சிப் புகழ்ச்சி!).

1073. ''தேவர் அனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான்.''

தேவர்கள் போன்றவர் கயவர்! கயவர்களும் தேவர்களைப் போல் விருப்பப்படி ஒழுகுவதால்! (இதுவும் ஒருவித இகழ்ச்சிப் புகழ்ச்சி).

1074. ''அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்
மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ்.''

கீழ் மக்கள் தம்மைவிடக் கீழ்த்தரமாக, விருப்பம் போல் ஒழுகும் கீழ் மக்களைக் கண்டால், தாமும் கயமைத் தன்மையில் சிறந்தவர் என இறுமாப்புக் கொள்வர். (கீழோரிடம் காணும் மாபெரும் மடமை இது).

1075. ''அச்சமே கீழ்களது ஆசாரம் எச்சம்
அவாஉண்டேல் உண்டாம் சிறிது.''

கீழ் மக்களிடம் சிறிது ஒழுக்கம் காணப்படின் அதற்கு அச்சமே காரணமாகும். அச்சம் இன்றேல், பொருளின் மேல் ஆசை உண்டானால் ஒழுக்கமும் சிறிது காண நேரலாம்.

1076. ''அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க்கு உய்த்துரைக்க லான்.''

தாம் கேட்ட இரகசியங்களை (மறைவாக வைத்திருக்க வேண்டியவற்றை) பிறரிடம் கொண்டு போய்ச் சொல்வதால் கயவர் (எல்லாரும் செய்தியறியுமாறு) அடிக்கப்படும் பறை போன்றவராவர்.

1077. ''ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்கும்
கூன்கைய ரல்லா தவர்க்கு.''

தம் கன்னத்தை நொறுக்கும் கையுடையவர் அல்லாதவர்க்குத் தாம் உண்ட பின் கழுவிய கையும் உதற மாட்டார்கள்) (தம்மை வாட்டுவோர்க்கே ஏதாவது உதவி செய்வர் என்றவாறு.

1078. ''சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோல்
கொல்லப் பயன்படும் கீழ்.''

பிறர் துன்பநிலையைச் சொன்னவுடன் சான்றோர் ஏதாவது நன்மை செய்து பயன்படுவர். கீழ்மக்களோ கரும்பைப் போலக் கசக்கினால்தான் ஏதோ சிறு நன்மை செய்வர்.

1079. ''உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்
வடுக்காண வற்றாகும் கீழ்.''

பிறர் நன்றாக உடுப்பதும் உண்பதும் காணும்போது, கீழ்மக்கள் (அதைப் பொறுக்க இயலாமல் அவர் மீது) ஏதாவது குற்றம் சொல்ல முனைவர்.

1080. ''எற்றிற் குரியர் கயவரொன்று உற்றக்கால்
விற்றற்கு உரியர் விரைந்து.''

கீழோர் எதற்குப் பயன்படுவர்? ஏதாவது துன்பம் வந்தால், தம்மை விற்பதற்குக் கூட அஞ்சார். (விற்றாகிலும் உயிர் வாழ்வர்).

இன்பத்துபபால்

ஒரு வினா!

# காமத்துப்பாலா? இன்பத்துப்பாலா?

திருக்குறளின் மூன்றாம் பகுதிக்குப் பலர் 'காமத்துப்பால்' என்றும் சிலர் 'இன்பத்துப்பால்' என்றும் பெயர் சூட்டியுள்ளனர். ஏன் இந்த வேறுபாடு என்பதை ஆயுங்கால், வினாக்கள் சில எழுகின்றன. இவற்றைக் காண்போம்.

1. ''காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்'' (360)

எனத் தெளிவாக - அழுத்தமாகக் 'காமம்' என்னும் பெயரும் கூடாது எனக் கூறிய திருவள்ளுவரா, காமத்தையே விளக்கி - விரிவுபடுத்தி இருநூற்றைம்பது பாக்கள் பாடியுள்ளார்? இது என்ன முரண்பாடு?

2. சிற்றின்பம் பேரின்பம் என இருவகையாக விளங்கும் இன்பங்களுள் சிற்றின்பம் அழியக்கூடியது; பேரின்பத்தை விரும்புபவர்கள் சிற்றின்பத்தை விரும்புதலும் அதனால் அறனல்ல செய்தலும் கூடாது என்பதை விளக்கி,

''சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்'' (173)

எனக் கூறும் வள்ளுவரா சிற்றின்பத்தையே படிப்படியாக ஆழ்ந்து விளக்கி விவரிக்கின்றார்?

3. கள் குடித்தல் தவறு எனக் கண்டித்துக் கள்ளுண்ணாமை' கூறும் வள்ளுவர், கள்ளைக்காட்டிலும் மயக்கம் தரத்தக்க காமத்தை,

''உள்ளினும் தீராப் பெரும்கிழ் செய்தலால்
கள்ளினும் காமம் இனிது'' (1201)

எனச் சிறப்பித்துக் கூறக் காரணம் என்ன?

4. களவு, கற்பு ஆகிய இருவகையாக விளங்கும் அகப் பொருளில், 'புணர்ச்சி மகிழ்தல்' களவுக்காலத்தில் கூறப்படு மானால், அது உள்ளப் புணர்ச்சியாகவே கொள்ளப்படல் வேண்டும்; மெய்யுறுபுணர்ச்சி கூறப்படுமானால் அது தலை மக்களுக்கு இழுக்குத் தருவதாகவே அமையும் என, மற்றப் புலவர்கள் எல்லோரும் மெய்யுறு புணர்ச்சியை அருவருத்து நிற்கும் நிலையில் வள்ளுவர், களவுக் காலத்தில் மெய்யுறு புணர்ச்சியை,

> "கண்டுகேட்டு உண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
> ஒண்டொடி கண்ணே யுள" (1101)

என விரிவாகவே விளக்கிக் கூறியுள்ளார். அஃதாவது, மற்றவர்கள் கூறத் தயங்கி அருவருத்து நிற்கும் காமப்பகுதியை வள்ளுவர் பெருவிருப்புடன் விளக்கிச் சொல்லக் காரணம் யாது?

5. பொதுவாக, முப்பாலாக விளங்கும் திருக்குறளில் அறத் துப்பாலையும் பொருட்பாலையும் கற்பதும் கற்பிப்பதும் போலக் காமத்துப் பாலைக் கற்பதும் கற்பிப்பதும் இல்லை. தேவையுள் ளதாகவோ ஏற்றதாகவோ அஃது இல்லை என்பது பொதுவான எண்ணம்; அவ்வாறு பொதுவாகவே தள்ளப்படத் தக்க அப்பகுதியை வள்ளுவர் இயற்றியது ஏன்?

மேலே கண்ட வினாக்கள் யாவும் நெடுங்காலமாகவே பல ராலும் வினவப்பட்டு வருபவை. இவ்வினாக்களில் எழுந்த ஐயப் பாட்டின் காரணமாகக் 'காமத்துப்பாலை வள்ளுவர் பாடியிருக்க இயலாது. அறத்துப்பாலிலும் பொருட்பாலிலும் அவ்வளவு உயர்ந்த கருத்துகளைக் கூறிய வள்ளுவர், தாம் கூறிய கருத்து களுக்கு முரணாக அதே நூலில் கூறியிருக்க இயலாது. ஆகவே, காமத்துப்பால், திருவள்ளுவர் எழுதியது அன்று' என்ற முடிவுக்கு வந்தவர்களும் உண்டு.

திருக்குறளை முதன் முதலில் மேலை மொழியில் மொழி பெயர்த்தவர், காமத்துப்பாலை மொழி பெயர்க்காமல் விட்டதும், சிந்திக்கத்தக்கது. அறத்தையும் பொருளையும் என்றும் நிலைக்கும் வண்ணம் அழகுடன் ஆழமாகக் கூறிய திருவள்ளுவர் இத்தகைய இடர்ப்பாடுகளும் ஐயப்பாடுகளும் நிறைந்த காமத்துப்பாலை இயற்றக் காரணம் என்ன? இவ்வினாக்களுக்கு விடை காண்பது, யாம் கூறப்போகும் பேரின்ப விளக்கத்தை ஏற்க இன்றியமையாதது.

1. முப்பாலின் மூன்றாம் பால், 'காமத்துப்பாலே' எனக் கூறுகிறவர்கள் காட்டும் காரணம்:—

> ''காமம் என்னும் சொல் திருக்குறளின் மூன்றாம் பாலில் முப்பத்தெட்டு இடங்களில் ஆளப்பட்டுள்ளது. ஆகவே, பெரும்பகுதியாகக் கொள்ளப்படும் அச்சொல்லே பாலின் தலைப்பாகவும் இருத்தல் வேண்டும்,''

என்பதாகும்.

**விடை:**

'கடவுள்' என்னும் சொல்லே இல்லாத ஓர் அதிகாரம், 'கடவுள் வாழ்த்து' எனப் பெயர் பெறும் என்பதை உரை யாசிரியர்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர். திருக்குறளின் மூன்றாம் 'பாலில், 'காமம்,' 'இன்பம்' என்னும் இரு சொற்களுள் 'இன்பம்' குறைவான இடங்களிலும் 'காமம்' அதிகமான இடங் களிலும் ஆளப்பட்டிருக்கும் காரணத்தால், எண்ணிக்கையில் குறைவான இடங்களில் ஆளப்பட்டிருக்கும் 'இன்பம்' என்னும் பெயரால், தலைப்பைப் பெற்றிருத்தல் இயலாது என, அவர்கள் கொண்டுள்ளது பொருந்துவதாகத் தெரியவில்லை. மேலும் திருக் குறளின் மூன்றாம் பகுதியை முடித்துக் காட்டும் குறட்பாவில் காமம், இன்பம் ஆகிய இருசொற்களும் பயன்படுத்தப் பட்டுள்ளன.

> ''ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம்
> கூடி முயங்கப் பெறின்.'' (1330)

இங்குக் 'காமம்' என்னும் சொல் ஒருமுறையும், 'இன்பம்' என்னும் சொல் இருமுறையும், பயன்படுத்தப்பட்டிருப்பதோடு, இப்பாலின் முடிபுப் பொருளாக இன்பமே கூறப்பட்டிருத்தலும் நோக்கத்தக்கது.

2. உரையாசிரியர்கள் யாவரும், பரிமேலழகர் உட்பட அறம், பொருள், காமம் என எங்குமே கூறாது, அறம், பொருள், இன்பம் என்றே தங்கள் உரையில் கூறியிருக் கின்றனர். காமத்துப்பால் என வழக்கு இருந்திருக்குமானால், அறம், பொருள், காமம் என்றே குறித்திருப்பார்கள்.

3. நூலாசிரியராகிய திருவள்ளுவரும் இவ்வாறே குறிப் பிட்டிருக்கிறார்.

"அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்."
(754)

"அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கன்
திறந்தெரிந்து தேறப் படும்."
(501)

என எவ்வித ஐயத்திற்கும் இடமின்றி மூன்றாம் பகுதி 'இன்பம்' எனத் தெளிவாகக் கூறுவது காண்க.

4. உரையாசிரியர் காலத்தில் வழக்கில் இருந்த, அஃதாவது, உரையாசிரியர் காலத்திற்கு முன்னர் எழுந்த திருவள்ளுவ மாலையில்,

'**இன்பின்** திறன் அறிந்தேம்' (50)

'**இன்பு** சிறந்த நெய்' (47)

'**இன்பத்** திறம் இருபத்தைந்து' (37)

'**இன்பம்** பொருள் அறம் வீடு' (33)

'அறம் பொருள் **இன்பம்** வீடென்னும் அந் நான்கின்' (8)

என அறம், பொருள், இன்பம் என்னும் வரிசை முறையே குறிப்பிடப்பட்டுள்ளது.

5. தொல்காப்பியத்திலும் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றையும் கூறுமிடத்து இன்பம் என்றே கூறப்பட்டிருக்கிறது.

'இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை" (தொல்-களவு-1)

6. சங்க இலக்கியங்களிலும் அறம், பொருள், இன்பம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளனவேயன்றி அறம், பொருள், காமம் எனக் குறிப்பிடப்படவில்லை.

'அதனால், அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்
ஆற்றும் பெரும' —(புறம் 28)

'சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல'
—(புறம் 31)

**அப்படியானால், 'காமத்துப்பால்' என்னும் பெயர் இடைக்காலத்தில், அஃதாவது, உரையாசிரியர்கள் காலத்தில் ஏற்படக் காரணம் என்ன ?**

திருவள்ளுவர் 'தர்மார்த்த காம மோட்சா' என்னும் வட மொழிப் பாகுபாட்டையே பின்பற்றித் தம் நூலை எழுதினார் என வடமொழிச் செல்வாக்குப் பெற்ற இடைக்கால உரை யாசிரியர் நம்பினர். இடைக்கால வடமொழிச் சார்பான உரை யாசிரியர்களின் கருத்துப்படி, 'தர்மார்த்த காம மோட்சா' என்பதிலுள்ள காமத்தைக் கூறும் பகுதி, சிற்றின்பத்தையே கூறும். அதைப் பின்பற்றி எழுந்ததே 'காமத்துப்பால்' என்னும் பெயர். உரையாசிரியர் கூற்றுகளானும் இது விளங்குகின்றது.

> ''இவர் பொருட்பாகு பாட்டினை அறம் பொருள்
> இன்பம் என வடநூல் வழக்குப்பற்றி ஓதுதலான்......'' ।
> —பரிமேலழகர்.

''இவ்விலக்கணம் தமிழ் நடையாயின், அகப்புறமென்று கூறுதல் வேண்டும். அவ்வாறு கூறாது அறம், பொருள், இன்பம் என **வடநூல் வழியே கூறினாராதலின்,** இதற்கு இலக்கணம் 'வாத்ஸ்யாயனம்' என்னும் காம தந்திரத்துட் 'சுரத விகற்பம்' என்னும் அதிகரணத்துள் கண்டுகொள்க''.

—(பரிப்பெருமாள் தொடர்புரை).

வாத்சாயனரின் காம தந்திரத்தை வள்ளுவர் பின்பற்றினார் என்பதற்குக் காரணமில்லை. பின்பற்றினார் என்று உரை யாளர் எண்ணிக்கொண்டதால் இன்பத்தைக் காமம் என மொழி பெயர்த்தனர்.

வாத்சாயனரின் காம சூத்திரத்தை ஏன் வள்ளுவர் பின்பற்ற வில்லை என்பதற்கும் தகுந்த காரணம் கொடுக்கப்பட்டுள்ளது.

'காமசூத்திரம் வெறும் உடல் இன்பம்'
'குறள் அன்பின் வழிப்பட்ட இன்பம்'

ஆகவே, பரிமேலழகர் கூறும் இம்மையே பயப்பதாகிய காம இன்பத்தினைக் கூறும் நூல், வடமொழி மரபைக் கொண்ட வாத்சாயனரின் காம சூத்திரமேயன்றித் திருவள்ளுவரின் நூல்

அன்று என்பது தெளிவு. இதையே திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு வெளியிட்ட கி. வா. செகந்நாதனும் கூறுகிறார்.

''அறத்துப்பாலிலும் பொருட்பாலிலும் திருவள்ளுவர் தம் காலத்தில் வழங்கிய அறநூல்களையும் பொருள்நூல்களையும் ஆராய்ந்து தெரிந்துகொண்ட பல கருத்துகளை எடுத்தாண்டிருக்கிறார்............ ஆனால், காமத்துப் பாலின் திறத்தில் அவர் முழுக்க முழுக்கத் தமிழுக்கென்று அமைந்த தனி முறையையே தழுவியிருக்கிறார். அவ்வாறு செய்வதிலும் தமக்கென்றே உள்ள புதிய அமைப்பு ஒன்றையும் மேற்கொண்டிருக்கிறார்.

(திருக்குறள் ஆராய்ச்சிப் பதிப்பு, பக்கம்—26).

இக்கருத்தையே தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் பின் வருமாறு கூறுகிறார்:

''வாத்சாயனருடைய காமசூத்திரங்களைப் போல திருவள்ளுவருடைய திருக்குறள், ஆண் பெண் உடலுறவு பற்றி உள்ளதை உள்ளவாறு (Objective) ஆய்வறிவு சார்ந்த முறையில் (Scientific) நுணுகி ஆராய முனையவில்லை. மாறாக, நாயகனும் (இறைவனும்) நாயகியும் (ஆன்மாவும்) நினைவிலும் உணர்விலும் செயலிலும் உண்மையான அத்துவைத உறவில் ஒன்றாய் இணைவதாகிய உன்னதக் காதல்— அன்புபற்றி அரியதொரு கவிதைச் சித்திரத்தை நமக்கு வழங்குகிறார்.''*

இத்தகைய உன்னத அன்புறவை விளக்குவதே அகப் பொருள் இலக்கணத்தின் உண்மையான கருத்து என்பதைத் தெளிவாகவும் அழுத்தமாகவும் இறையனார் அகப்பொருள் விளக்கம் கூறுவது காண்கிறோம். அவர் கூறுவது:

---

* ஆங்கில மூலத்தில் : ''Like Vatsayana's Kama Sutras his (Thiruvalluvar's) Thirukkural does not attempt an objective and Seientific analysis of Sex topics Thiruvalluvar on the other hand gives us a poetic picture of Ideal love-the Beloved and the Lord Becoming one in true advaitic relationship.''

—Pageant of Tamil Literature.

"'கடுத்தின்னாதானைக் கட்டிப் பூசிக் கடுத்தீற்றியவாறு போலவும், கலங்கற் சின்னீர் தெருளாமையான் 'உண்பானை! அறிவுடையான் ஒருவன் பேய்த்தேரைக் காட்டி,' உதுக்காணாய்! நல்லதொரு நீர் தோன்றுகின்றது; அந்நீர் பருகாய்: இச்சேற்று நீர் பருகி என் செய்தி' என்று கொண்டுபோய் நன்னீர் காட்டி ளூட்டியது போலவும், தான் ஒழுகா நின்றதோர் வினை விழைச்சினுள்ளே மிக்கதோர் ஒழுச்சப் காட்டினான். காட்டவே கண்டு, 'இது பெறுமாறு என்னை கொல்லோ?' என்னும். எனவே, மக்கட் பாட்டினாலும் வலியானும் வனப் பானும் பொருளானும் பெறலாவது அன்று, தவஞ் செய்தாற் பெறல் ஆம். என்னை?

> "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
> ஈண்டு முயலப் படும்." (குறள் - தவம் - 5)

என்பதாகலான் என்பது. அது கேட்டு, இனியானும் தவஞ் செய்து இதனைப் பெறுவல் என்று அதன் மாட்டு வேட்கையால் தவஞ் செய்யும்; செய்யா நின்றானைப், 'பாவீ, இதன் பரத்ததோ வீடு பேற்றின்பம்?' என்று வீடு பேரின்பத்தை விரித்து உரைக்கும். அதுதான் பிறப்புப் பிணி மூப்புச் சாக்காட்டு அவலக் கவலைக் கையாற்றின் நீங்கி, மணியினது ஒளியும், மலரினது நாற்றமும், சந்தனத்தது தட்பமும் போல உள் நின்று எழுதரும் ஒரு பேரின்ப வெள்ளத்தது என்பது கேட்டு, அதனை விட்டு, வீடுபேற்றின் கண்ணே அவாவி நின்று தவமும் ஞானமும் புரிந்து வீடு பெறுவானாம் என்பது."

—(இறையனார் களவியல் உரை - சூத் - 1)

கசப்பான மருந்து மாத்திரையை உட்கொள்ள விரும்பாத வனுக்கு இனிமையானதை மாத்திரையின் மேல் பூசிக் கொடுப் பது போலும், கலங்கிய நீரைப் பருகுபவனுக்கு நீர் போல் தோன்றும் பேய்த்தேரைக் காட்டி, 'அதோ பார் நல்ல நீர், போய்ப் பருகு' என்பது போலும், ஒருவனுக்குப் பேரின்ப ஒழுக்க நெறியைக் காட்டுமாறு, சிற்றின்பத்தைக் காட்டி, அது முழுமை யாக மனநிறைவு தராமையால், "தவம் செய்தால் முழுநிறைவு தரும் பேரின்பத்தைப் பெறுவாய்" என்று பேரின்பத்தையும் அதை அடையும் நெறியாகிய தவத்தையும் உணர்த்த,

அப்பேரின்பத்தின் மீது ஆவல் கொண்டு தவமும் ஞானமும் புரிந்து, வீடு பெறுமாறு வழி காட்டுவதென்க.

தொல்காப்பியர், இறையனார் கூறும் ஆழ்ந்த விளக்கத்தை நோக்கும்போது, திருக்குறள் மூன்றாம் பாலின் முழு நோக்கம் பேரின்பத்தை விளக்குவதேயன்றி, சிற்றின்பத்தையன்று என்பதும், மக்கள் அனைவரும் நன்கறிந்து துய்க்கும் சிற்றின் பத்தை ஓர் உவமையாகவும் கருவியாகவும் ஆசிரியர் பயன்படுத் தினார் என்பதும் பெறப்படுகிறது. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் கூறுவது போல, யாவரும்அறிந்து துய்க்கும் சிற்றின் பத்தின் கூறுகளை இந்த அளவுக்கு நுணுகி ஆராய எண்ண வில்லை. "Like Vatsayana's Kama Sutras his (Thiruvalluvar's) Thirukkural does not attempt an Objective and Scientific analysis of Sex topics." ஆகவே, மூன்றாம் பாலுக்குப் பேரின்ப விளக்கமே முழுமையானது என்பது பெறப்படுகிறது.

இனி, தொல்காப்பியர், இறையனார் கருத்துப்படிப் பழம் நூல்கள் இயற்றப்பட்டனவா எனின், சிறப்பாகத் 'திருக்கோவையைக்' குறிப்பிடலாம்.

"திருக்கோவையார் நானூறு துறைகளில் தலைவன் தலைவிக்குரிய காதல் ஒழுக்கத்தைப் பாடும் பாவனையில் பேரின்பக் காதலை விளக்குகிறது. இறைவன் தலைவன்; ஆன்மா காதலி. **உலகின்பக் காதல் வழி இறைப் பேரின்பக் காதலை உணர்த்தும் திறன் போற்றற்குரியது.**"

(மு. சு. அருள்சுவாமி) தமிழ் இலக்கிய வரலாறு, பக்கம் 147).

ஆகவே, அகப்பொருளின் சிறப்புகள் யாவும் புற அகமாகிய உலகின்பக் காதல்வழி, அக அகமாகிய இறைப் பேரின்பக் காதலை உணர்த்தும் தன்மையிலேயே அடங்கியுள்ளன.

அகம், வெளியே கூற இயலாதது; விளக்க இயலாதது. ஆயினும், அதை வெளியே புறத்தில் விளக்கிக் காட்ட, புற அக மாகிய உலகின்பக் காதல் ஓரளவு பயன்படுகிறது. ஆகவே, கடவுளன்பர்கள் இறைவனிடத்தில் கொண்ட பேரன்பைக்

குறிக்க நேருங்கால், உலகின்பக் காதலுலகத்துச் சொற்களைப் பயன்படுத்துகின்றனர் என்பது டாக்டர் மு. வரதராசனார் அவர்களின் கருத்து ஆகும்.

கடவுளன்பர்களும் இறைவனிடத்தில் கொண்ட பேரன்பைக் குறிக்க நேர்ந்தபோது 'காதலாகிக் கசிந்துருகிக் கண்ணீர் மல்கி' என்று விளக்கியுள்ளனர். மாணிக்கவாசகர், நம்மாழ்வார் முதலானவர்கள் தம் பக்தியைப் புலப்படுத்த வேறு சொற்கள் இல்லையாதலின், காதலுலகத்துச் சொற்களையே பயன்படுத்தியுள்ளனர். தாயுமானவர் முதலிய மெய்யுணர் வாளரும் தம் வேட்கையைப் புலப்படுத்த உவமை நாடியபோது, காதல் மிகும் அணியிழையார் என வாடுற்றேன்' என்று காதலுலகத்தையே உவமையாக்கிக் கூறியுள்ளார்.''

(திருவள்ளுவர் - பக்கம் 69).

பேரின்பத்தை நீக்கிவிட்டுச் சிற்றின்பத்தை மட்டுமே நோக்குவது தமிழ் மரபு அன்று; சிற்றின்பத்துடன் பேரின்பத்தை இணைத்துப் பார்ப்பதே தமிழ் மரபு என்பது பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம் அவர்களின் கருத்து ஆகும்.

''ஒன்றான இறையருளில் பொருந்தும் பேரின்ப வாழ்வையும், தலைவன் தலைவியர், தம்மை மறக்கும் சிற்றின்ப வாழ்வையும் இணைத்துப் பார்க்கும் தமிழ் மரபை இந்த உண்மை நன்கு விளக்கும்.''

(வள்ளுவர் வகுத்த வாழ்க்கை நெறி — பக்கம் 29).

மகா வித்துவான் தண்டபாணி தேசிகர் கூறுவது :

காமப்பால் என வைத்த இருபத்தைந்து பதிகங்களுக்கும் காம நோக்காகப் பொருள் செய்தோரும், **இதற்கு வேறு ஒரு பொருளும் உளது** எனக் கூறியிருத்தலானும், அவை இயன் முறை அறத்திற்கு ஏற்பப் பொருள் தந்து நிற்றலாலும், அவ்வியன் முறையின் கடையில் அமைகலாயின'' என்பர் சுகாத்தியார்.

''இதனால் திருக்குறள் முழுதுமே அறநூல் என்பதும், முதலிற் கூறிய இல்லறப் பயனாகிய இன்பமே இறுதியிற் கூறப் பெறுகின்றது என்பதும், துறவறப் பயனாகிய பேரின்பப்

பயனும் இன்பப்பாலுக்கு வேறு ஒரு பொருள் உளது எனக் கூறுவதால் உணரலாம் என்பதும் பெறப்படுகின்றன.''

(திருக்குறள் அழகும் அமைப்பும் - பக்கம் 55).

திருக்குறளின் இறுதிக்கண் வள்ளுவர் நிறுத்திய இன்பம், காமவின்பமாகிய இல்லாளோடு கூடியிருந்து நுகரும் சிற்றின்பமேயன்றிப் பேரின்பம் அன்று, எனக் கூறி மறுக்கிறவர்களுக்கு மறைமலையடிகளார் கொடுக்கும் மறுமொழி :

''திருவள்ளுவர் இறுதிக்கண் நிறுத்திய இன்பத்துப்பால் காமவின்பத்தினையே நுதலுவதென்று அம்மறுப்புரைக்காரர் கூறியது பொருத்தமில் கூற்றாதல் காண்க. இறுதிக்கண் நின்ற இன்பத்துப்பால் இல்லறத்தின்பாலதான காதலின்பமொன்றனை மட்டுமே உணர்த்துவதன்று. **ஆழ்ந்து நோக்குவார்க்கு** அது துறவறத்தின்பாலதான திருவருளின்பத்தையும் ஒருங்கு உணர்த்துவதே யாகும் ................ இவ்வாற்றால் இல்லாளொடு கூடியிருந்து நுகரும் இன்பமே காமத்துப்பாலிற் சொல்லப்பட்டதென்னும் அம்மறுப்புரைக்காரர் கூற்று உள்ளீடில்லாப் போலியாய் ஒழிந்தமை கண்டு கொள்க.''

(பழந்தமிழ்க் கொள்கையே சைவசமயம் - பக் - 74).

இன்னமும் இதைத் தெளிவாக ஆணித்தரமாக நிலைநாட்டுவது, திருக்குறள் உரை, ஏட்டுச்சுவடியிலிருந்த தொடக்கக் காலத்தில், ஏட்டுச் சுவடியிலிருந்தவாறே அச்சிடப்பட்டுள்ள பழைய பரிமேலழகர் உரையின் இறுதியில், அஃதாவது, உரை முடிந்த பின், அதனுடன் இணைந்து காணப்படும் குறிப்பு :

''இக்காமத்துப் பாலுக்குக் காமத்தைக் குறித்துச் செம்பொருளாகச் சொல்லப்பட்ட இச்**சிற்றின்பப் பொருளேயன்றி** மோட்சத்தைக் குறித்துக் குறிப்புப் பொருளாகச் சொல்லப்பட்ட **பேரின்பப் பொருளும் உண்டு.**''

ஆம், தெள்ளத் தெளிய எவ்வித ஐயத்திற்கும் இடமின்றி இன்பத்துப்பாலுக்குப் பேரின்பப் பொருள் இருந்திருக்கிறது. இடைக்காலத்தில் அழிக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது அச்சாகி வெளிவரும் திருக்குறள் உரைகளில் மேலே கண்ட பகுதியும் நீக்கப்பட்டுள்ளமை மிகுந்த வியப்புக்குரியது.

இதுவரை நாம் நோக்கியவைகளிலிருந்து இன்பத்துப் பாலுக்குப் பேரின்ப உரை இருந்தது என்பது மறுக்க இயலா உண்மையாகிறது. ஆனால், இடைக்காலத்தில் அவ்வுரை அழிக்கப்பட்டது. இப்பொழுது அதைப்பற்றிய குறிப்புக்கூட அறிய இயலா நிலையில் இன்பத்துப்பால் காமத்துப்பாலாயிற்று. பேரின்பம் சிற்றின்பம் ஆயிற்று.

இவற்றையெல்லாம் மனத்தில் கொண்டே திருக்குறள் மூன்றாம் பாலுக்குப் பேரின்ப விளக்கம் எழுதத் துணிகிறேன்.

குறிப்பு : ஈண்டுக் கூறப்பட்டுள்ளவற்றிற்கு மேலும் விரிவான விளக்கம் வேண்டுவோர், புலவர் மு. தெய்வநாயகம் அவர்கள் இயற்றியுள்ள 'பொது மறையும் பொருள் இலக்கணமும்' என்னும் நூலை ஆய்ந்தறிக.

# முன்னுரை

திருக்குறளின் மூன்றாம் பகுதி சிற்றின்பமாகிய காமத்தையே விளக்குவது என்னும் கருத்து உரையாளரால் பெரிதும் வலியுறுத்தப்படுவதைக் காண்கிறோம். இது முற்றிலும் பொருந்துமா என்பது ஆழ்ந்த ஆய்வுக்குரியது.

இதன் உண்மைக் கருத்தை அறிய விரும்புவோர், புலவர் மு. தெய்வநாயகம் அவர்கள் இயற்றியுள்ள '**பொதுமறையும் பொருள் இலக்கணமும்**' என்னும் ஆய்வு நூலை முதற்கண் பயன்படுத்த வேண்டும்.

சிற்றின்பத்தை மட்டுமன்று, பேரின்பத்தையும் திருவள்ளுவர் இப்பகுதியில் விளக்குகின்றார் என்பது சிலருடைய கருத்து. ஏறக்குறைய மக்கள் அனைவரும் துய்த்தறிந்துள்ள—அறியக்கூடிய சிற்றின்பத்தை இத்துணை (250 பாக்களால்) 'பச்சை'யாகக் கூறவேண்டியதன் கருத்து என்ன என்பது புலப்படவில்லை. 'பேரின்பத்தையும்' கூறியிருக்கின்றார் என்றால், சிற்றின்பத்தைத்தான் சிறப்பாகக் கூறுகின்றார் என்றாகும். இஃது உண்மையா? ஏன் சிற்றின்பத்தை அத்துணைச் சிறப்பாகக் கூறவேண்டி இருந்தது என்னும் வினா எழும்.

பழங்கால இலக்கிய மரபைப் பின்பற்றி (தர்ம அர்த்த காம மோக்ஷ—அறம், பொருள், இன்பம், வீடு என்னும் இலக்கிய முறையைப் பின்பற்றி) ஆசிரியர் இங்ஙனம் தம் நூலை இயற்றியிருக்கலாம் என்று கூறலாம். இதற்கு விளக்கம் மேற்குறிப்பிட்ட புலவர் மு. தெய்வநாயகம் அவர்கள் நூலில் காணலாம்.

வடமொழியில் உள்ள 'காம' என்னும் சொல்லைத் தமிழர், 'இன்பம்' என்றே கொண்டுள்ளது கவனித்தற்பாலது. இச்சொல் மட்டுமே **சிறு** இன்பத்துக்கும் (சிற்றின்பத்துக்கும்) **பெரு** இன்பத்துக்கும் (பேரின்பத்துக்கும்) பொதுவாகப் பயன்படுத்தப்படுவதும் கவனிக்க. சிறு காமம், பெரு காமம் என்பது

இல்லாதுதொன்றாம். ஆகவே, இப்பகுதியை இயற்றும்போது வள்ளுவருடைய உள்ளத்தில் இருந்த கருத்து வேறாக இருந் திருத்தல் வேண்டும்.

இதனைப் பழங்கால இலக்கண நூல்கள் சுட்டுகின்றன.

உதாரணமாக, இறையனார் களவியல் உரைச்சூத்திரம் காண்க.

''கடுத்தின்னாதானைக் கட்டிப் பூசிக் கடுத்தீற்றியவாறு போலவும், கலங்கற் சின்னீர் தெருளாமையான் உண்பானை, அறிவுடையான் ஒருவன் பேய்த்தேரைக் காட்டி, 'உதுக் காணாய், நல்லதொரு நீர் தோன்றுகின்றது. அந்நீர் பருகாய்; இச் சேற்று நீர் பருகி என் செய்தி' என்று கொண்டுபோய் நன்னீர் காட்டி ஊட்டியது போலவும், தான் ஒழுகா நின்ற தோர் **இணைவிழைச்சினுள்ளே மிக்கதோர் ஒழுக்கம் காட்டினான்.** காட்டவே கண்டு, 'இது பெறுமாறு என்னை கொல்லோ?' என்னும்; எனவே, மக்கட்பாட்டினாலும் வலி யானும் வனப்பானும் பொருளானும் பெறலாவது அன்று; தவஞ் செய்தாற் பெறல் ஆம்; என்னை ?

''வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்'' (குறள் 265)

என்பதாகலான் என்பது. அது கேட்டு, இனி யானும் தவஞ் செய்து இதனைப் பெறுவல் என்று, அதன் மாட்டு வேட்கை யால் தவஞ் செய்யும்; செய்யா நின்றானைப், 'பாவீ, இதன் பரத்ததோ வீடு பேற்றின்பம்?' என்று வீடு பேரின்பத்தை விரித்து உரைக்கும். அதுதான் பிறப்புப் பிணி, மூப்புச் சாக் காட்டு அவலக் கவலைக் கையாற்றின் நீங்கி, மணியினது ஒளி யும் மலரினது நாற்றமும் சந்தனத்தது தட்பமும் போல உள் நின்று எழுதரும் ஒரு **பேரின்ப வெள்ளத்தது** என்பது கேட்டு, அதனை விட்டு, வீடு பேற்றின் கண்ணே அவாவி நின்று, தவமும் ஞானமும் புரிந்து வீடு **பெறுவானாம்** என்பது.''

அஃதாவது, யாவரும் அறிந்துள்ள, துய்க்கக்கூடிய சிற்றின்ப ஒழுக்கத்தை முன்வைத்துப் பேரின்ப ஒழுக்கத்துக்கு மக்களை அழைத்துச் செல்வதே இதன் உட்கருத்து என்க.

'பாவீ, இதன் பரத்ததோ வீடு பேற்றின்பம்'?

'உள்நின்று எழுதரும் ஒரு பேரின்ப வெள்ளத்தது'

'அதனை (சிற்றின்ப நோக்கை) விட்டு வீடு பேற்றின் கண்ணே அவாவி நின்று, தவமும் ஞானமும் புரிந்து வீடு பெறுவானாம் என்பது'— என்னும் கருத்துகளை உன்னித்துப் பார்க்க. ஆகவே, பேரின்பமாகிய வீடுபேற்றினை**யும்** விளக்கும் பகுதி என்னாமல், **சிற்றின்பத்தின் நிலையாமையை உணர்த்திப் பேரின்பமாகிய** வீடு **பேற்றின் கண்ணே** அவாவி **நிற்பதையே** விளக்கும் என்க.

இக் கருத்தை வலியுறுத்து முகத்தான் அண்மைக் காலத்துப் பேரறிஞர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் கூறுவது காண்க:

"Like Vatsayana's Kama Sutras his (Tiruvalluvar's) Tirukural *does not attempt an Objective and Scientific analysis of sex topics. Tiruvalluvar on the other hand gives us a poetic picture of Ideal Love-the Beloved and the Lord Becoming one in thought, feeling and action* in true advaitic relationship.

—'Pageant of Tamil Literature'

அங்ஙனமே திரு ஆனந்தகுமாரசாமியும் கூறுவது காண்க:

"In India, the Conditions of *human love*, from the *first meeting* of *eye to ultimate self-oblivion, have Seemed Spiritually Significant*, and there has always been a free and direct use of *Sexual imagery in religious Symbolism*."

—The transformation of Nature in Art. P. 44.

மகா வித்வான் **தண்டபாணி** தேசிகர் கூறுவது;

"காமப்பால் என வைத்த இருபத்தைந்து பதிகங்களுக்கும் காமநோக்காகப் பொருள் செய்தோரும், இதற்கு வேறு ஒரு பொருளும் உளது எனக்கூறியிருத்தலானும், அவன் இயன்முறை

அறத்திற்கு ஏற்பப் பொருள் தந்து நிற்றலாலும், அவ்வியன் முறையின் கடையில் அமைகலாயின'' என்பர் சுகாத்தியார்.''

''இதனால் திருக்குறள் முழுதுமே அறநூல் என்பதும், முதலிற் கூறிய இல்லறப் பயனாகிய இன்பமே இறுதியிற் கூறப் பெறுகின்றது என்பதும், துறவறப்பயனாகிய **பேரின்பப் பயனும் இன்பப்பாலுக்கு வேறு ஒரு பொருள் உளது** எனக் கூறுவதால் உணரலாம் என்பதும் பெறப்படுகின்றன.''

—திருக்குறள் அழகும் அமைப்பும் - பக்கம் 55.

**மறைமலை அடிகளாரும்** அங்ஙனமே கூறுகின்றார்:—

''திருவள்ளுவர் இறுதிக் கண் நிறுத்திய இன்பத்துப்பால் **காமவின்பத்தினையே நுவலுவதென்று அம்மறுப்** புரைக் காரர் கூறியது **பொருத்தமில் கூற்றாதல்** காண்க. இறுதிக் கண் நின்ற இன்பத்துப்பால் இல்லறத்தின் பாலதான காதலின்பமொன்றனை மட்டுமே உணர்த்துவதன்று, **ஆழ்ந்து நோக்குவார்க்கு, அது துறவறத்தின் பாலதான திருவரு ளின்பத்தையும்** ஒருங்கு உணர்த்துவதே யாகும்...... இவ்வாற்றால் இல்லாளொடு கூடியிருந்து நுகரும் இன்பமே காமத்துப்பாலிற் சொல்லப்பட்டதென்றும் அம்மறுப்புரைக்காரர் கூற்று உள்ளீடில்லாப் போலியாய் ஒழிந்தமை கண்டு கொள்க.''

—பழந்தமிழ்க் கொள்கையே சைவ சமயம். பக். 74.

**டாக்டர் மு, வரதராசனார்** கூறுவது:

''கடவுளன்பர்களும் இறைவனிடத்தில் கொண்ட பேரன்பைக் குறிக்க நேர்ந்தபோது' 'காதலாகிக் கசிந்துருகிக் கண்ணீர் மல்கி' என்று விளக்கியுள்ளனர். மாணிக்கவாசகர், நம்மாழ்வார் முதலானவர்கள் தம் பக்தியைப் புலப்படுத்த **வேறு சொற்கள் இல்லையாதலின், காதலுலகத்துச் சொற்களையே பயன்படுத்தியுள்ளனர்.** தாயுமானவர் முதலிய மெய்யுணர்வாளரும் தம் வேட்கையைப் புலப்படுத்த உவமை நாடியபோது, 'காதல் மிகும் அணியிழையார் என வாடுற்றேன்' என்று காதலுலகத்தையே உவமையாக்கிக் கூறியுள்ளார்.''

**பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம் :**

"ஒன்றான இறையருளில் பொருந்தும் பேரின்ப வாழ்வையும், தலைவன் தலைவியர் தம்மை மறக்கும் சிற்றின்ப வாழ்வையும் இணைத்துப் பார்க்கும் தமிழ் மரபை இந்த உண்மை நன்கு விளக்கும்."

—வள்ளுவர் வகுத்த வாழ்க்கை நெறி- பக். 29.

இறுதியாக, **சீர்காழித் தாண்டவராயர் :**

"பக்தி முக்திக்கு உவமை பெத்தம். பேரின்பத்திற்கு உவமை சிற்றின்பம் என வைத்து உடம்பையுடைய யோகிகள் பாலுற்ற சிற்றின்பம் அடங்கத் தன் பேரின்பமாக, பேரின்பமான பிரமக்கிழத்தியோடு ஓரின்பமான அன்பே சிவமாய், அருளே காரணமாக, சுத்தாவத்தையே நிலமாக, **நாயகி பரம் பொருளாக, நாயகன் பக்குவான்மாவாக,** தோழி திருவருளாக, தோழன் ஆன்ம போதகமாக, நற்றாய் பரையாக, திரோதாயி செவிலித்தாயாக, மேலும் **நாயகன் கூற்றெல்லாம் நாயகி கூற்றாகவும், நாயகி கூற்றெல்லாம் நாயகன் கூற்றாகவும்** நிகழ்ந்து வரும். நாயகியைச் சிற்றம்பலம் போல் வருணிக்கையில், நாயகி பரம் பொருளாயிற்று. பெறுவான் நாயகனும் பேறு நாயகியுமாக இரசமும் நாவும் போல் இருத்தலானும், சொத்தும் துறையும் கருப்பொருளும் உரிப்பொருளும் இடமும் எல்லாம் அருளின்பம் எனக் கொள்க."

—திருக்கோவையார் - குமரகுருபரன் - பதிப்புரை.

ஆகவே, திருக்குறள் இன்பத்துப்பாலில் நாயகன் - நாயகி உறவே பேரின்ப ஒழுக்கத்துக்கு வழிகோலும் இலக்கிய முறையாயிற்று என்க.

இனி, இன்பத்துப்பால் களவியலில் இறைவன் காதலி எனவும் (தலைமகளாகவும்) ஆன்மா காதலன் (தலைமகனாகவும்) எனவும் உருவகப்படுத்தப்பட்டுள்ளது காண்க.

**கற்பியலில் இறைவன் நாயகனாகவும், ஆன்மா நாயகியாகவும் கூறப்படுகின்றனர்.**

மேற்கூறிய சீர்காழித் தாண்டவராயர் கூறுவதும் இக்கருத்துடன் இணைகின்றது.

பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையவர்கள் கூறுவது:

''பண்டைத்தமிழரும் பாரசீகக் கவிஞரும் நீங்கலான பிறர் நாமறிந்தவரை இறைவனையே ஆணாகவும் ஆன்மாக்களையே பெண்ணாகவும் உருவகித்தனர். ஆனால், தமிழர் பழைய மரபு இறைவனையே பெண்ணாக உருவகித்து அதிலே முழுப் பொருத்தம் கண்டது ...... திருவள்ளுவரிடம் நாம் கடவுள் பெண் என்ற பழங்கருத்தை மிகுதியாகவும், கடவுள் ஆண் என்னும் பிற்பட்ட கருத்தினைச் சில இடங்களிலுமாக இரு கருத்துகளையும் காண்கிறோம்.''

—மணி விளக்கவுரை - I. பக்கம். 64.

மேலே கண்ட பலருடைய கருத்தினுக்கிணங்க திருக்குறள் இன்பத்துப்பாலின் களவியற்பகுதியில் இறைவனைப் பெண்ணாகவும், கற்பியல் பகுதியில் இறைவனை ஆணாகவும் திருவள்ளுவர் காட்டுகிறார் என நாம் கொள்ள நேரிடுகிறது. (விளக்கம் நூலினுள் கண்டு கொள்க).

# களவியல்

## 109. தகைஅணங்குறுத்தல்

தகை = அழகு. அணங்கு = வருத்தம், அச்சம், ஆசை.

உறுத்தல் = வற்புறுத்திக் கூறுதல்.

அஃதாவது, தலைமகளது அழகு, தன்னை வருத்துதலைத் தலைமகன் அழுத்தமாகக் கூறுதல்.

தலைப்புச் சொற்றொடர்க்குப் பொருள் இதுவென உரையாளர் கூறுவர். (புலவர் குழந்தை)

ஆனால், இக்களவியலின் முதற்குறட்பாவிலும் 'அணங்கு' என்னும் சொல் குறளுக்கு முதற்பதமாக வருகின்றது. ஈண்டு, 'வருத்தம், அச்சம், ஆசை' என்னும் பொருள் பொருத்தமாகத் தோன்றவில்லை. **ஆண்களை வருத்தும் பெண்பாற் காமத்தை அணங்கு** எனப் பெண்பாலாகக் கூறும் மரபுப் படியே அச்சொல் ஆளப்படுகின்றது என்றே கூற வேண்டியிருக்கிறது.

ஆகவே, 'அழகு மிகுந்த பெண்பால் காமத்தை அழுத்தமாகக் கூறுதல்' என்னும் பொருளே பொருத்தமாகத் தோன்றுகிறது. இப்பகுதியில் வரும் குறட்பாக்கள், இந்தப் பெண்பால் காமத்தையே வற்புறுத்துவது காண்கின்றோம்.

ஏன் பெண்பால் காமம்பற்றிப் பேச்சு? உலகியலிலும் அழகிய (தகைமைமிக்க) பெண்ணைக் கண்டு ஆண் மகன் மயங்கி, அவளை அடைய வேண்டுமென்னும் பேராவலால் உந்தப்படுகிறான். உடனே அடைவதற்கில்லையெனக் கண்டு வருந்துகிறான். ஆகவே, ஈண்டுக் கூறப்படும் 'அணங்கு' என்பதற்குப் பெண்பால் காமம் என்னும் பொருளே சிறக்கிறது.

ஆனால்,

'அணங்கு கொல்?'

'ஆய்மயில் கொல்?'

'கனங்குழை மாதர் கொல்?'

என 'என் நெஞ்சுமாலும்' - அஃதாவது 'என் உள்ளம் மயங்கு கின்றது! ஐயுறுகின்றது!' (மாலுதல் -மயங்குதல்) எனக் கூறப் படுவதன் கருத்தென்ன?

பேரழகு நிறைந்த பெண்ணொருத்தியைக் காணும் ஆண் ஒருவன், ''இவள் மானுடப் பெண்ணோ? (தெய்வப் பெண் களைப் பற்றிய புராணங்களைப் பின்பற்றி)- தெய்வப் பெண் ணோ?'' என ஐயுறுவதில் வியப்பொன்றுமில்லை. ஆனால், ஈண்டு அழகு மிக்க பெண்ணைக் கண்டு ஒருவன், ''இவள் தெய்வப் பெண்ணோ?* **ஆய்** (அழகிய) மயிலோ? அரிய குண்ட லங்கள் அணிந்த மாதோ?'' என வியப்பது காண்கிறோம்.

கனங்குழை மாதோ! ஆய் மயிலோ! அணங்கோ! என்று கூறியிருப்பின் கருத்து எளிதில் புலப்படுகிறது. வியப்புப் படிப் படியாய் உயர்வது காண்கிறோம். பெண்ணின் அழகைக் கண்டு மயங்குவது எளிதில் புரிந்துகொள்ளக் கூடியதே.

மேலும் 'கனம் குழை மாதர் கொல்' என்றதில் ஐயம் எங்குள்ளது? கனங்குழையணிந்த மாது கண்ணெதிரில் நிற்பவள்தானே! எதிரில் குழைகளை அணிந்தவளாய் நிற்கும் மாதினைக் கண்டு, இவள் 'கனம்குழை மாதுதானா?' என்று ஐயுறுவதன் கருத்தென்ன? 'இவள் வெறும் பெண்தானா? என்னும் பொருளில்தான் கூறப்பட்டுள்ளதோ? 'இவள் தெய்வப் பெண்ணா? அழகு மயிலா? வெறும் பெண்தானா?' என்பதன் சிறப்பு என்ன? இதில் மறைந்துள்ள கருத்தென்னவாயிருக் கலாம்?

---

* ஈண்டு 'அணங்கு' என்னும் சொல்லைத் தெய்வத் தன்மை கொண்டவள், தெய்வப் பெண் என்னும் பொருளில் ஆள்கிறோம்.

இவ்வின்பத்துப்பாலில், வெறும் பெண்காமம்பற்றி கூறப்படவில்லை. உலகியல் பெண்ணுக்கு மேற்பட்ட வேறொரு தலைமகள்பற்றியே கூறப்படுகிறது என்று வைத்துக் கொண்டால் கருத்துச் சிறப்பதாகத் தோன்றுகிறது.

சிற்றின்பத்தை உரைக்கும் பகுதியன்று இது. (அஃதாவது, காமத்துப்பால் அன்று) மனிதன் தேடும் இன்பத்தின் இம்மைக் கூறாகிய சிற்றின்பத்தை உவமைபோல் வைத்துக்கொண்டு, இவ்வின்பத்தின் மறுமைக் கூறாகிய பேரின்பத்தை விரித் துரைப்பதே இப்பகுதியெனக் கொண்டால், ஈண்டுக் கூறப்படும் 'அணங்கு, ஆய்மயில், கனங்குழை மாதர்' என்பவற்றின் முழுப் பொருளைக் காணவியலும் எனத் தோன்றுகிறது. இம்மூன்று சொற்களின் ஒழுங்குமுறையின் உட்கருத்தும் அப்போதுதான் புலப்படும் என்பது எம் துணிபு. எங்ஙனமென விளக்குவோம்.

மறுமைப் பேரின்பமாவது, இறைவன்பால் மனிதன் ஈர்க்கப் பெற்றவனாய் அவனுக்கு இயல்பாயுள்ள பேரானந்தப் பெருஞ் செல்வத்தில் பங்கு பெற்று, நீடிய - குறைவற்ற இன்பத்தில் திளைத்து நிற்பதாகும்.

சிற்றறிவுள்ளவனாய்ச் சிறுநோக்குடன் சிற்றின்பமே நாடும் மனிதன் அப்பேரானந்தப் பெருஞ்செல்வமுள்ள இறைவன்பால் ஈர்க்கப்படுவது எளிதன்று என்பது தெளிவு. பலத்த ஈர்க்கும் சக்தி செயல்பட்டால், அது நிகழக் கூடும். அத்தகைய ஈர்க்கும் சக்தி எங்குள்ளது? இறைவனிடமே அஃது உண்டு என்பது தெளிவு.*

---

* விவிலிய வாக்குகள் நோக்குக:

i) "என்னை அனுப்பிய தந்தை ஈர்த்தாலொழிய எவனும் என்னிடம் வர இயலாது."
என்கிறார் கிறித்து. (அரு. 6; 44)

ii) "நானோ உலகினின்று உயர்த்தப்பெற்ற பின் அனைவரையும் என்பால் ஈர்த்துக்கொள்வேன்" என்றும் கிறித்து கூறினார் (அரு. 12; 32). 'உலகி னின்று உயர்த்தப் பெற்ற பின்' என்றது சிலுவையில் தூக்கப்பட்டதைக் குறிப்பிட்டேயாம். அவரது பலியும், அதன் வாயிலாக எண்பிக்கப்பெற்ற தியாக அன்புமே மக்களை அவர்பால் ஈர்க்கின்றதென்க.

விவிலியத்தில் காணும் 'உன்னத சங்கீதம்' எனப்படும் நாயக-நாயகி (இறைவன்-ஆன்மா) உரையாடலில் "என்னை, உம் பின்னால் கவர்ந்திழுத்தருளும்" என்று ஆன்மா (மனிதன்) வேண்டுவது காண்கிறோம். இங்ஙனம் இறைவனே ஈர்த்தாலன்றி மனிதன் சிற்றின்பத்தில் ஆழ்ந்தவனாகவே இருப்பான்.

இனி, இறைவன் எங்ஙனம் ஈர்க்கின்றான் என்பதை விளக்குவோம். ஈர்க்கும் வகையைத்தான் இம்முதற்குறள் கூறுகின்றது. பேரழகு மிக்க பெண்ணைக் கண்டு ஆண் மயங்குகின்றான்; அவள் பின் ஓடுகின்றான். இறைவன் அளவிட இயலா அழகும் எழிலும் கொண்டவன். ஆனால், அது சிற்றின்பத்தில் நிகழ்வதுபோல புறக்கண்ணால் நோக்க இயலாதது. உடலழகு உடனே இழுக்கக் கூடியது. அதே சமயத்தில் அற்பக் காரணம் முன்னிட்டு பன்முறை அருவருப்பு விளைக்கக் கூடியது. மிக அழகுள்ள உடலில் ஏதாவது நோய் ஏற்பட்டால் அழகு குன்றிவிடும். அதனால் தொடக்கத்தில் இருந்த கவர்ச்சி குறைந்து விடுகிறது. இதை அடிக்கடி காண்கிறோம். இறைவனைப் பொறுத்தமட்டில் இது நிகழ இயலாது. ஆனால், அவ்வழகினைச் சுவைக்கக் கூர்த்த அகக் கண்கள் தேவை; அறிவுக் கண்கள் தேவை. இக்கண்களை இறைவனே மனிதனுக்குத் தந்துள்ளான். அவ்வகக் கண்களைக் கொண்டு அவன், பேரழகுமிக்க 'அணங்கெ'ன உலகில் காட்சியளிக்கின்றான். அவ்வழகைக் காணும் மனிதன் அவன்பால் ஈர்க்கப்படுகின்றான்.

இங்ஙனம், இறைவன் மனிதனை ஈர்த்தாலன்றி அவன் இறைவனையடையவியலாத நிலையில் உள்ளான்.

இதனாற்றான் இறைவனே தன் அளவில்லா அழகினால் மனிதனை ஈர்த்தல் வேண்டும். முதலில் அவன் ஈர்த்தாலன்றி மனிதன் அவன்பால் ஈர்க்கப்படமாட்டான். இதுதான் இறைவனின் **அருட்செயல்** என்பது. இதனால்தான் இன்பத்துப்பால் முதற்பகுதியாம் களவியலில் இறைவன் அழகிய அணங்கெனக் காட்சி தருவது காண்கிறோம். ஒருவிதத் தெய்வீகக் 'களவு'ம் அதில் உண்டு. (இது பின்னர் விளக்கப் பெறும்).

இனி, இறைவன் தன் எழிலை எங்ஙனம் வெளிப்படுத்தி ஈர்க்கின்றான் என விளக்குவோம்.

முதன் முதல், இறைவன் தான் படைத்த உலகப் பொருட்கள் வாயிலாகத் தன்னை வெளிப்படுத்துகின்றான். அவனால் படைக்கப்பெற்ற பொருட்களில் விளங்கும் எழில், அருமை, ஒழுங்கு, வலிமை முதலிய எல்லாமே படைத்தவனிட மிருந்து இரவலாகப் பெறப்பட்டவையன்றோ! கூறப்புகின், இறைவனே அப்பொருட்களுள் எல்லாமாய் இருக்கின்றான். இதைப் **பரிபாடல்** அடிகள் சில அருமையாக எடுத்துரைக் கின்றன:

'தீயினுள் தெறல்நீ பூவினுள் நாற்றம்நீ
கல்லினுள் மணியும்நீ சொல்லினுள் வாய்மைநீ
..............................................................................................
வெஞ்சுடர் ஒளியும்நீ திங்களுள் அளியும்நீ
அனைத்தும்நீ அனைத்தின்உட் பொருளும்நீ ..............

—(பரிபாடல் 3 : 63-68).

நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றுள
நின் தண்மையும் சாயலும் திங்கள் உள
நின் சுரத்தலும் வண்மையும் மாரியுள
நின் புரத்தலும் நோன்மையும் ஞாலத்துள
நின் நாற்றமும் ஒண்மையும் பூவையுள
நின் தோற்றமும் அகலமும் நீரினுள
நின் உருவமும் ஒலியும் ஆகாயத்துள ..... .........'

—(பரிபாடல் 4 :25-31).

வகை வகையான மலர்களில் காணும் எழில், பலவகையான கனிகளில் சுவைக்கப்படும் அருமை, வானமண்டலத்தில் காணும் ஒழுங்கு, (புயல்) காற்று, இடி, மின்னல், கதிரவனின் சூடு முதலியவற்றில் காணும் வலிமை முதலியனவெல்லாம் படைத்த வனிடத்தில் அளவின்றி இருத்தல் வேண்டும் என ஊகிக்க நம் பகுத்தறிவே துணை செய்கிறது.

அரியதொரு சித்திரத்தைக் காணும்போது, அதில் காணும் அழகும் அருமையும் வரைந்தவனின் அகத்தில் இருந்திருக்க வேண்டும் என ஊகிக்க இயல்கிறது. தன்னிடத்தில் இல்லாத தொன்றைப் பிறர்க்கு வழங்குதல் எங்ஙனம் இயலும்? அகத்தி லிருப்பதே புறத்தில் வெளிப்படும் அன்றோ!

ஆகவே, இறைவனுக்குரிய அழகு முதலிய எல்லாப் பண்புகளும் அவன் படைத்த பொருளில் புறத்தே காண்கின்றோம் என்பது ஓர் அடிப்படை உண்மை.

இயற்கையில் காணும் இப்பொருள் இத்துணை அழகாய் இருப்பின், இவற்றைப் படைத்தவனின் அழகு என்னென்பது? என மனிதன் வியந்து நிற்பதே இறைவனைச் சந்தித்தலில் முதற்படி எனலாம்.

அழகைப்பற்றிப் பேசுவோமானால், ஒரு பெண்ணின் அழகில் ஒருவன் தன் உள்ளத்தையே பறிகொடுக்கிறான் என்றால், வெறும் புறத்தழகு மட்டுமன்று, அகத்தழகையும் அளவின்றிக் கொண்டிருக்கும் இறைவனின் அழகில் மனிதன் எத்துணை அதிகமாகத் தன்னைப் பறிகொடுத்து விடல் வேண்டும் என்பதை அறிவு படைத்தவன் எவனும் உன்னிப் பார்த்தல் வேண்டும்.

தான் படைத்த பொருள்களில் மட்டுமன்று, உலகில் நிகழும் பல செயல்களிலும் இறைவன் தன்னை வெளிப்படுத்துகின்றான். மனித வரலாற்றை ஆதியிலிருந்து நடத்தி வருபவன் அவனேயன்றோ! அஃது இயற்கைச் செயல் என்பவ நாத்திகரேயாவர்.

இயற்கைக் காரணங்களாலும் செயற்கைக் காரணங்களாலும் நிகழ்த்தப்பட இயலாதவை, இறைவனின் சக்தியால் நிறைவேறுவதைப் பன்முறைகளில் மனிதன் பார்த்தே வந்துள்ளான். இதை யார் மறுக்கக் கூடும்?...... இத்தகைய அரிய செயல்களில் இறைவனின் அருமை, பெருமை, சக்தி முதலிய பண்புகள் விளங்கவில்லையா? இவற்றை உணர்ந்து கொள்வதும் இறைவனைச் சந்தித்தலாகும்.

ஆனால், படைப்புப் பொருள்களிலும் அவற்றுள் இறைவன் நிகழ்த்தும் வலிமை மிக்க செயல்களிலும் ஓரளவு மறைமுகமாகக் காண்பதிலும், அதனால் எழும் அகத்தின்பத்திலும் மனிதன் நிறைவு எய்துவதில்லை. ஓரளவு நேர்முகமாகவே அவனைக் காண விழைகின்றான்; அவனே நேர்முகமாக உலகில் காட்சியளித்தால் ஆகாதோ என எண்ணுகிறான்; ஏங்குகிறான்!

"உன் தரிசனம் தரலாகாதா?" என்று வேண்டுகின்றான். இயல்பாக மனிதனின் உள்ளத்தில் எழும் இந்த நினைவும் ஏக்கமும் நிறைவுற இயலாத ஒன்றெனக் கருதத்தேவையில்லை.

இறைவனே அந்த ஆர்வத்தை மனிதனின் உள்ளத்தில் உண்டாக்கியிருக்கிறான் என்று சொல்லவும் இடமுண்டு; ஆகவேதான், இறைவனை நேரில் காண மனிதனுக்குள்ள ஆசையை நிறைவேற்ற, அவனே தன்னை வெளிப்படுத்த முன் வருகின்றான்; வெளிப்படுத்தியுள்ளான். இதில் கருத்து மாறுபாடுகள் உள்ளன.

தீயோரை ஒறுக்கவும் நல்லோரை ஆட்கொள்ளவும் இறைவன் அவ்வப்போது உலகில் அவதாரம் செய்கின்றான் என்று ஒரு சாரார் நம்புகின்றனர்.

உண்மையான மனித உடல் எடுத்து உலகில் பிறந்து, தன் உடலைப் (ஐந்தை) பலியாக்கித் (அவித்து) தன் இரக்கத்தையும் அன்பையும் அகத்தழகினையும் வெளிப்படுத்தினான் என்று வேறொரு சாரார் கூறுவர்.

இம்மூவித வெளிப்படுத்தல்களிலும் எதில் இறைவனது எழிலும் அருமையும் சிறப்பாக வெளிப்படுகின்றது என்பது சிந்திக்கத்தக்கது.

முதற் கூறிய இருவித அழகினை **ஊகித்தறிந்தவனாய்,** மூன்றாவதாகக் கூறிய பேரெழிலை ஓரளவு நேரில் **கண்டவனாய்** மனிதன் இறைவன்பால் ஈர்க்கப்படவேண்டியவனாகின்றான்.

புறத்தழகினால் மதிமயங்கித் தன் உள்ளத்தைப் பறிகொடுத்து ஈர்க்கப்படும் தலைமகனைவிட, எத்தனையோ மடங்கு அதிகமாக இணையற்ற எழிலுடன் தன்னை ஒரு தெய்வப் பெண்ணென—ஆரணங்கெனப் பேரெழிலுடன் வெளிப்படுத்தும் இறைவன்பால் மனிதன் ஈர்க்கப்பட வேண்டுமன்றோ? அங்ஙனம் வெகு சிலரே ஈர்க்கப்படுகின்றனர் எனக் காண்கிறோம். ஏன்? இறைவனின் அகத்தழகு ஒரு பெண்ணின் புறத்தழகு போல் அவ்வளவு எளிதில் புலப்படுவதில்லை. எண்ணி எண்ணித் தியானித்து அடைய வேண்டியதொன்று.

மேலும், எளிதில் அடையக் கூடிய உலகச் சிற்றின்பத்தின் தன்மை உணர்ந்து, அதன் குறைபாடுகளை அறிந்து, சிறிது சிறிதாகச் சிற்றின்ப நிலையிலிருந்து பேரின்பத்துக்கு எழ முழு மூச்சுடன் முயலல் வேண்டும். இந்நோக்குடனேயே இக் 'களவியலை'ப் படித்தறிதல் வேண்டும்.

இறைவனின் அழகு எளிதில் புலப்படாமையால்தான், இக்குறளில் கூறியுள்ள 'மயக்கம்' ஏற்படுகின்றது. இக்கருத்தை விவிலியம் மிக அழுத்தமாகக் கூறுகின்றது. (ஞானாகமம் 13: 1-9 காண்க).

''கடவுளை அறியாத மனிதர் அனைவரும் இயல்பிலேயே மடையர்கள்.''

''கண்ணுக்குப் புலனாகும் நன்மைகளைக் கண்டு, இருக்கின்றவரை அறிந்து கொள்ள இயலாதவர்களாயினர்.''

கைவினைகளில் கவனம் செலுத்தி கைவினைஞரை அறிந்துகொள்ளாமல் போயினர். அதற்கு மாறாகத் தீயோ காற்றோ சூறாவளியோ விண்மீன் கூட்டமோ அலைமோதும் வெள்ளமோ வானத்தின் சுடர்களோதாம் உலகத்தை ஆளுகின்ற தெய்வங்கள் என்று எண்ணிக்கொண்டிருந்தார்கள்.

''இந்தப் பொருட்களின் அழகில் மயங்கி, இவற்றைத் தெய்வங்கள் என எண்ணினார்களாயின், இவற்றையெல்லாம் ஆளுகிறவர் இவற்றினும் எவ்வளவோ மேலானவர் என்பதை அறிந்து கொள்ளட்டும். ஏனெனில், அழகின் ஊற்றே அவற்றை உண்டாக்கினார்.

அவற்றின் வல்லமையையும் ஆற்றலையும் கண்டு மனிதர் வியப்பில் ஆழ்கிறார்கள் எனில், அவற்றையெல்லாம் ஆக்கியவர் அவற்றினும் எவ்வளவோ வல்லமையுள்ளவர் என்பதை அவற்றால் அறியட்டும்.

ஏனெனில், படைப்புகளின் பெருமையையும் அழகையும் கண்டு அவற்றைப் படைத்தவரைக் கண்டறியலாம்.''

ஆயினும் அந்த மனிதர்கள்மேல் அவ்வளவு குற்றம் இல்லையெனலாம். ஏனெனில், கடவுளைத் தேடிக் கண்டுபிடிக்க முயலும் போது, ஒரு வேளை அவர்கள் தவறியிருக்கலாம்.

அவருடைய படைப்புகளின் நடுவில் வாழும்போது, அவரைத் தேடிக்கொண்டுதான் இருக்கிறார்கள். ஆனால், அவர்களுக்குப் புலனாவதையே நம்பி விடுகிறார்கள். கண்ணுக்குப் புலனாகின்றவை அவ்வளவு அழகாயிருக்கின்றன.

இருப்பினும், இவர்களும் சாக்குப் போக்குச் சொல்ல இடமில்லை. ஏனெனில், உலகத்தைப்பற்றி ஆராய்ந்தறியும் அளவுக்கு அவர்களுக்கு அறிவாற்றல் இருக்கும் போது, இவற்றுக்கெல்லாம் காரணரான ஆண்டவரை எளிதில் கண்டறிய அவர்கள் தவறிவிட்டதெப்படி?

ஈண்டுக் கூறியுள்ளது போல், 'கண்ணுக்குப் புலனாகும் நன்மைகளைக் கண்டு,' கடவுளை அறிந்துகொள்ள இயலாதவர்களாயினர். தீயோ காற்றோ விண்மீன்களோ உலகை ஆள்கின்ற தெய்வங்கள் என்று எண்ணி, அவற்றின் அழகில் மயங்கி அவற்றையே தெய்வங்கள் என எண்ணினர்.

இந்த மயக்கத்தைத்தான் இம்முதற்குறட்பாவில் காணும், 'அணங்கு கொல்' என்னும் சொற்றொடர் குறிக்கின்றதோ?...... அஃதாவது, காணும் இப் பொருட்களே தெய்வத்தன்மை கொண்டனவா? ('அணங்கு கொல்!') நிறைவான தெய்வத் தன்மையின்றி, வெறும் மனிதத் தன்மைக்கு மேற்பட்ட 'தேவர்' எனப்படுவோரின் தன்மை கொண்டவையா? ('ஆய் மயில் கொல்!' என்பதன் உட் கருத்து இதுதானோ!) தெய்வத்தால் உருவாகி 'கனங்குழை' போல் அழகுற விளங்கினும் அவையெல்லாம் (சாதாரணப் பெண்ணைப் போல) வெறும் படைப்புப் பொருட்களா? என்று தெளிவாகப் புரிந்து கொள்ள இயலாமல் மனிதன் மயங்கிக் கிடக்கின்ற நிலையையே இக்குறள் வெளிப்படுத்துகிறது என்க. இதனாற்றான், 'கனங்குழைமாதோ, ஆய் மயிலோ, அணங்கோ' என்னும் ஒழுங்கில் கூறாமல் அணங்குகொல்.....என்று தொடங்கிப் படிப்படியாய் தாழ் நிலைக்கு வருவது காண்கிறோம்.

இம்மாபெரும் அழகிய உலகத்தைக் கண்டு மனிதன் மதிமயங்கி, முதலில் 'இது வெறும் படைப்புப் பொருளாக இருக்க இயலாது; தெய்வீகம் பொருந்தியதாக (அணங்கென) இருத்தல் வேண்டும். அல்லது குறைந்தது தேவர்கள் போல், வெறும் மனித நிலைக்கு மேற்பட்டவையாகவாவது இருத்தல் வேண்டும் என்று மயங்குகிறான் மனிதன். இப்பொருளில் கொண்டால்தான் இக்குறளின் உட்கருத்துப் புலப்படும் என்பது எம் துணிபு.

மேற்கூறிய 'மயக்கத்தை'க் கலைக்கத் தலைமகளாகிய இறைவன் செய்யும் அரிய செயலை 1082-ஆம் குறள் கூறுகின்றது. தன்னைச் சூழ்ந்துள்ள எழில்மிக்க உலகப் பொருள்களில் மறைந்து கிடக்கும் இறைவனின் எழிலை எளிதில் காண இயலாதவன் மனிதன். அவனது அகக்கண்களை இறைவன் தன் பேரொளியால் திறந்து விட்டாலன்றி அவன் எதையும் உணராதவனாகவே இருந்துவிடுவான். ஆகவே; இறைவன் மனிதன் மீது தன் 'கண்களை'த் திருப்புகிறான். மனிதனை உற்று நோக்குகிறான். அங்ஙனம் நோக்குகையில் மனிதன் தன் பார்வையை வேறு பக்கமாகத் திருப்ப இயலாத வனாய்த் தானும் தன் பார்வையை இறைவன்பால் திருப்பு கிறான்.

இறைவன் தன் கண்களைத் திருப்புகிறான் - மனிதனை உற்று நோக்குகிறான் - என்றது இறைவனின் **அருட்பார் வையைக்** குறித்தே. அவனது அருளும் ஒளியும் மனிதனின் ஆன்மாவில் பாயும்போது, அவன் உண்மையைக் கண்டவனாய், அருள்பெற்றவனாய் இறைவன்பால் தன் அகக் கண்ணைத் திருப்புகிறான்.

இந்த அருட்பார்வை — ஒளிபொருந்திய நோக்கு எத்தகையது? என்பதையே இக்குறள் கூறுகின்றது.

1082. "நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல்
தாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து."

நோக்கினாள் - நோக்கிய அவளது

நோக்கு - அழகு - (அஃதாவது, அழகுமிக்க அவள்)

நோக்கு எதிர் நோக்குதல் - என் பார்வைக்கு எதிரே பார்த்தல்.

தாக்கு அணங்கு - (அழகால்) என்னைத் தாக்கி வருத்தும் தெய்வப் பெண்ணாகக் காட்சியளித்த இவள்.

தானை - ஒரு படையையே

கொண்டன்னது உடைத்து - கொண்டு வந்தது போன்ற தன்மையை உடையதாகும்

இனி, அடைந்து இன்புறத் தகுதி படைத்த ஒன்றை அடைய வேண்டும் என்று பேரவாக் கொண்டால் — எளிதில் அடைய இயலாத ஒன்றாக அது காட்சியளித்தால் — வெகு தொலைவில் உள்ள ஒன்றாக அது காணப்பட்டால், அதனால் உள்ளம் வருந்தத்தான் செய்யும். இதை 'வருத்தும் அழகு' எனலாம்! அஃது அழகும் அருமையும் நிறைந்து விளங்குவ தொன்றானால், வருத்தம் வெகுவாய்ப் பெருகத்தான் செய்யும்! அவ்வருத்தம் உள்ளத்தை வாட்டி வதைக்கும்! இனி அவ்வழகும் அருமையும் இறைவனின் அழகும் அருமையுமாயின், அவ்வருத் தத்துக்கு அளவேயிராதன்றோ! அளவில்லா எழிலை ஓரளவு கண்ணுற்றாலும், அதனை அடைய வேண்டும் என்னும் அவா ஒருவனை ஆட்கொண்டேவிடும். அதை எளிதில் அடைய இயலாவிட்டால், அவ்வருத்தம் அளவில்லாததொன்றாக இருக்கும். இதையே குறள் 'தாக்கி வருத்துதல்' என்கிறது.

அளவில்லா எழிலுடன் இறைவனாகிய 'அணங்கு நோக்கினாள்' நானும் அவ்வெழிலை ஒரு சிறிது நோக்கினேன். அதனால் ஏற்பட்ட வருத்தம், ஒரு படையே வந்து என்னைத் தாக்கியது போல் தோன்றிற்று.

எவ்வளவுதான் அழகு மிக்கவளாயிருப்பினும் ஒரு மானிடப் பெண்ணின் எழில், இந்த அளவுக்கு ஒருவனின் உள்ளத்தை வாட்டி வதைக்கவியலாது! ஒருவன் ஒருத்தியாகிய இரு மானிடப் பிறவிகளும் மிக அளவுள்ள நிலையில் உள்ளவர்களே. ஆகவே, அளவுள்ள முறையில்தான் இவ்வழகு வருத்தவியலும்!

ஆனால், இறைவனின் அழகு அளவிட்வியலாததால், எதிர்க்க இயலாத படைபோலத் தாக்கி வருத்தும் வலிமை படைத்துள்ளது. இறைவனின் அழகு மனிதனின் எளிய மனத்தின் மீது 'உறுத்துங்கால், பெரும்படையே வந்து தன்னைத் தாக்குவது போல் ஆன்மா உணரும். ஆதலின், 'அணங்குறுத்தல்' என்றது மிகப் பொருத்தமே.

எத்துணை அழகினளாயினும் ஒரு மானிடப் பெண், ஓர் ஆண் மகனைத் தன் 'அழகால்' இந்த அளவுக்கு வருத்துகின்றாள் என்பதுதான் ஆசிரியர் மனத்துள் இருந்த முழுக் கருத்தெனல் பொருத்தமாகத் தோன்றவில்லை. ஒரு பெண்ணின் நோக்கை எதிர்த்து நிற்க இயலாமல் ஒரு ஆண் மகன் நிலை குலைந்து விட்டான் எனின், அவன் அத்துணை மன வலிமையற்றவன், பெண்ணடிமை, ஆண்மையில்லாதவன் என்று மட்டுமே பொருள்படும். இத்தகையதொரு கருத்தைச் சான்றாண்மையைக் கூறிய ஆசிரியர் வலியுறுத்துகின்றார் என்பது பொருந்தாது.

அளவில்லா எழில் கொண்ட இறைவனின் அருள் நோக்கு-அன்புப்பார்வை - காதல் நோக்கு - எதிர்த்து வெல்ல இயலாததொரு படைப்பலத்துக்கு ஒப்பிடப்படுகிறது. தொடக்கத்தில் ஆன்மா இறைவனின் அருள் நோக்கைப் புறக்கணித்துத் தன் விருப்பம் போல் வேறு திசை சென்றபோதிலும், இறுதியில் வெற்றிகொள்வது அவனது அருள் நோக்கே. அங்ஙனம் வெற்றி கொள்ளவில்லையேல், அஃது ஆன்மாவுக்குப் பெருந்தீமையாக அளவிட இயலாத துன்பமாக முடியும் என்க.

இறைவனது காதல் நோக்கைப் பெரும் படைக்கு ஒப்பிடுவதை விவிலிய நூலிலும் காண்கிறோம்.

"என் காதலர் முற்றும் ஒளிமயமாய் உள்ளார்......என் அன்பே! நீ முற்றும் எழில்படைத்தாய்; போர்க்கொடி தாங்கிய படை போல அச்சத்துக்குரிய உனது பார்வையை என்னிடமிருந்து திருப்பிவிடும். அஃதென்னைத் துன்புறுத்துகின்றது" என்கிறது, இறைவனுக்கும் ஆன்மாவுக்குமிடையே நிகழ வேண்டிய காதலைக் கூறும் 'உன்னத சங்கீதம்' (5: 10, 6, 4-5).

1083. ''பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன்
பெண்டகையால் பேரமர்க் கட்டு.''

முந்திய குறளில் கூறப்பட்ட 'தாக்குதல்' மேலும் வலியுறுத்தப் படுகின்றது இந்தக் குறளில்.

கூற்று - எமன் எத்தகையவன்? என அறிய விரும்பினால், அழகிய பெண்ணின் கண்களை நோக்கினால் போதும். எமன் உயிரை வாங்கி விடுவது போல அவளது கண்கள் ஆணின் உயிரை வாங்கும் அத்துணை வலிமை படைத்தனவாய் உள்ளன என்க.

இனி, இறைவனாகிய தலைமகளது அருள் நோக்கு உயிரைப் பறிப்பதன்று. உயிரைக் கவரும் அருளன்பின் நோக்கேயாம்.

உடலினின்று உயிரைக் கூறுபடுத்துபவன், அஃதாவது, பிரிப்பவன், 'கூற்றுவன்'. ஈண்டு இறைவனது அருள் நோக்குக் கூற்றுவனுக்கு ஒப்பிடப்படுகின்றது. ஏன்? அந்நோக்கு மனித உடலினின்று அவனது உள்ளத்தைப் பிரிக்கும் - அஃதாவது, கவர்ந்து செல்லும் தன்மைத்து என்னும் பொருளில் அமைந்துள்ளது எனத் தோன்றுகிறது. இறைவன் தன் அருளன்பால் மனிதனின் உள்ளத்தைக் கொள்ளைகொண்டு செல்பவன் என்னும் கருத்து ஞானாசிரியர்கள் கூறும் ஒன்றாகும்.

''என் அன்பே! இறைவா! என் இதயத்தைக் கவர்ந்து சென்றுவிட்ட பின், ஏன் என்னைத் தவிக்க விடுகிறாய்?'' என்னும் கருத்தில் அவர்கள் ஏங்குவது காண்கிறோம்.

இறைவனைப் 'பன்மாயக் கள்வன்' என வள்ளுவரே கூறுவது கவனிக்க (1258). இப்பகுதிக்குக் களவியல் எனப் பெயர் உள்ளதும் இக்கருத்தை வலியுறுத்தவே என்க.

எதிர்பாராத வண்ணம் கள்ளனைப்போல் கூற்றுவன், உயிர்களைக் கவர்ந்து செல்வது துன்பம் தருவதொன்றாம். இறைவன் மனித உள்ளத்தைக் கவர்ந்து செல்வதோ அவனை இன்பத்தில் ஆழ்த்தவே என்றறிக.

மானிடப் பெண் 'கண் வீசி' ஆடவனின் உள்ளத்தைக் கவர்ந்து செல்கிறாள். அவளது கண் பெருத்த அமரை (போரை) விளைவிப்பதொன்றாகத் தோன்றுகிறது. அஃதாவது, எளிதில் எதிர்க்க இயலாத வன்மை படைத்ததாகத் தென்படுகிறது. இறைவனின் கண்வீச்சோ, அஃதாவது, அருட்காதல் நோக்கோ பெண்தகைமையால் (அஃதாவது, பெண்ணுக்குள்ள தகைமைப் பண்புகளால்) விளையும் பேரமர்க் கண்ணையும்விட வலிமை படைத்தது; **எதிர்க்க இயலாதது.** இதைத் தொடக்கத்தில் ஆன்மா உணர்ந்தறிவதில்லை. உலகப் பொருட்களின் அழகில் மயங்கி நிற்பதால் அவ்வுணர்வு நிகழ்வதில்லை. இறைவனாகிய அணங்கு தன் எழிலால் மனிதனின் உள்ளத்தைக் கவரத் தொடங்கும்போது உணர்கின்றது. 'பண்டறியேன்.......... இனி யறிந்தேன்' என்றது இதனாற்றான்.

கூற்றுவன் உயிரைக் கவர வரும்போது, அவனுக்கும் உயிருக்குமிடையே ஒருவித 'அமர்' உண்டாகிறது எனலாம். ஆனால், எத்தகைய அழகோ கவர்ச்சியோ இல்லாதவனோடு நிகழ்கின்றது அந்த அமர். ஆனால், அருள் நோக்குடன் ஆன்மாவைத் தன்பால் ஈர்த்துக்கொள்ள வரும் இறைவனுக்கும் ஆன்மாவுக்குமிடையே ஏற்படக்கூடிய 'அமர்' அருள் அன்பின் அடிப்படையில் உண்டாவது. அஃதாவது, அன்பால் ஆன்மாவைக் கவர இறைவன் முயலும்போது, மருளும் இருளும் நிரம்பிய ஆன்மா - உலகப் போக்கினால் பெரிதும் பாதிக்கப்படும் ஆன்மா, இறைவனது அன்பை எளிதில் ஏற்ப தில்லை. அறிவீனமாக அவனது அன்பைப் புறக்கணித்து ஒதுக்கப்பார்க்கின்றது. ஆனால், இறைவனது அருளுக்கு எதிராக அமர் புரிந்து வெற்றி கொள்ளக்கூடியவன் யார்? தொடக்கத்தில் ஒருவித எதிர்ப்புத் தெரிவித்தாலும் இறுதியில் அவனது அருளுக்கும் அன்புக்கும் பணிந்தே தீருகிறது.

இக்கருத்து அடுத்த குறளில் மேலும் வலியுறுத்தப்படு கின்றது.

1084. ''கண்டா ருயிருண்ணும் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண்.''

பெண்தகை—பெண் அழகு மிக்கவளாகிய
பேதைக்கு—பேதைமையைப் பண்பாகக் கொண்ட
இவளுக்கு

கண்—உள்ள பார்வை

கண்டார்—தன்னைப் பார்ப்பவர்களின்

உயிர் உண்ணும்—உயிரையே வாங்கிவிடக்கூடிய

தோற்றத்தால்—(அவள் பார்க்கும்) பார்வையால்

அமர்த்தன—மாறுபட்டனவாயிருந்தது

பெண்ணின் பேதைமை மிக்க (காதல்) பார்வைக்கும் அப் பார்வை தன் (காதல்) வலிமையால் உயிரை வாங்கக்கூடிய நிலைமைக்கும் எங்ஙனம் பொருத்தம் உளதாகும்? எனவே, மாறு பட்ட பார்வையாயிருந்தது.

பேதைமை என்பது பெண்ணுக்குரிய பண்பு என்பர். இப் பேதைமை, சிறப்பாக அவள் ஆண்மகனது அன்பைப்பெற ஏங்கும்போது வெளிப்படுகிறது எனலாம். ஒருபுறம் அவள் தனது கண்வீச்சால் அவனுடைய உயிரையும் வாங்கிவிடக்கூடிய வலிமையை வெளிப்படுத்த இயலும். மறுபுறம் நாணம், மடம், அச்சம் முதலான பண்புகளுடன் காதலனுக்காக ஏங்கும் நிலையையும் வெளிப்படுத்தக் கூடும். இவ்விரு பண்புகளும் ஒன்றுக்கொன்று அமர்புரியும் பண்பின என்பது தெளிவு.

பெண்தகைமையுடைய பேதைப் பெண்ணுக்குள்ள கண்கள், அதே சமயத்தில் கண்டார் உயிரையும் உண்ணக்கூடிய பண்பின! ஆகவே, மாறுபட்ட பண்பின.

மானிடப் பெண்ணுக்குள்ள இம் மாறுபட்ட பண்புகள் இறைவனிடத்தும் காணப்படுவது கவனிக்கத் தக்கது.

இறைவனது அருள்நோக்கு ஒரே சமயத்தில் இவ்விரு பண்பு களையும் கொண்டதாகும். எல்லா இன்பமும் கொண்டவனாய், எதுவும் தேவைப்படாதவனாய் உள்ள இறைவன், எளிய

மனிதனின் அன்பைப் பெற ஏங்குகின்றான்.* 1093-ஆம் குறளில் 'நோக்கி இறைஞ்சினாள்' என்றதும் இப்பொருளி லேயே என்க. தன் அன்பை "ஏற்றுக்கொள்ள வேண்டுமென இறைஞ்சுதலாம்" என்று மு. கோவிந்தசாமியின் நயவுரை குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது. இது, தன் நிறைவுக்காக அன்று, மனிதன் நிறைவு பெறவேயாகும். தன் அன்பை ஏற்று வாழ்ந்தால்தான், மனிதன் உண்மையான உயிரை-வாழ்வைப் பெறவியலும். வாழ்வு-உயிர் என்று வழங்கப்படும் இவ்வுலக வாழ்வு மறைந்த பின்னரே, அவ்வுண்மை நீடுவாழ்வு-பேரின்ப உயிர் வாழ்வு உண்டு. இறைவனது அருள்நோக்கு மனிதனை இறுதியில் அப்பேரின்ப வாழ்வுக்கு அழைத்துச் செல்வதாகும். இச் சிற்றின்ப வாழ்வை மனிதன் இறைவனது அருளால் மாற்றியமைக்க வேண்டியவனாகின்றான். தான் படைத்த மனிதனின் அன்புக்காக ஏங்கி நிற்பது இறைவன் காட்டும் 'பேதைமை' என்பதில் குற்றமில்லை. ஆனால், அவனது அருள்நோக்கு, சிற்றின்பத்தை ஒழித்துப் பேரின்பத்தை அருள்வதாகும். ஆகவே, 'அமர்' புரிவதாகும். அஃதாவது, சிற்றின்ப நோக்கை எதிர்த்துப் போராடி வெற்றி பெற வேண்டும்.

அங்ஙனம் வெற்றி பெறாவிட்டால், ஆன்மாவுக்குப் பெருத்த ஆபத்தாகவும் தீங்காகவும் முடிந்துவிடும். புறக்கணிக்கப்பட்ட அன்பு ஒருவனுக்குச் சாபமாக முடிவது உலகிலும் காண்கிறோம். தாயின் அன்பைப் புறக்கணிக்கும் மகன் இறுதியில் தீங்குக்காளா கிறான்.

'மாதா மனம் எரிய வாழான் ஒரு நாளும்' என்னும் பழமொழியே சான்று. அங்ஙனமே நண்பனின் நட்புறவைப் புறக்கணிப்பவனுக்கும் நிகழக்கூடும். சாதாரண மனிதனின் அன்பைப் புறக்கணிப்பது தீங்குக்குக் காரணமாயின், இறைவனது அன்பைப் புறக்கணிப்பவன் கதி என்னாம்!

---

* இதுவே ஐந்தவித்தான் வரலாறு முழுவதும். "தாகத் துக்குத் தண்ணீர் தா!" என்று அவன், தீய வாழ்க்கை நடத்திய சமாரியப் பெண்ணிடம் கேட்டது, "என் அன்பை ஏற்று இன்புறு" என்றே பொருள்படும் (அரு. 4 அதிகாரம் காண்க) இறுதியில் அவளது அன்பைப் பெற்று அவளை நல்வழித் திருப்பிவிடுவது ஆங்குப் புலப் படும்.

வாழ்வை வளப்படுத்தக்கூடிய அன்பே, தீமைக்கு வழியாகக் கூடும் என்று இவ்விதம் மாறுபட்ட பண்புகளை விளக்குவதன் நோக்கம், மனிதனுக்கு அன்பு செய்ய அருள் கூரும் தலைமகளாகிய இறைவனது அன்பைப் புறக்கணிப்பது எத்துணை ஆபத்து! எத்துணை சாபம்! என்னும் கருத்தை வலியுறுத்தவே என்க.

1085. ''கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கம்இம் மூன்றும் உடைத்து.''

முந்திய இரு குறட்பாக்களில் தலைமகளாகிய இறைவனது 'பார்வை' உயிருண்ணும் கூற்றத்துக்கு ஒப்பிடப்பட்டது.

இக் குறளில் 'கூற்றமேதான்' என்று அழுத்தமாகச் சொல்வதற்கில்லை; ''கூற்றமாகவும் இருக்கலாம்; வெறும் பார்வை (கண்)யாகவும் இருக்கலாம்; இயல்பாக அஞ்சும் பெண்மானின் பார்வைக்கும் ஒப்பிடலாம்'' என்னும் கருத்துடன் 'கூற்றமோ கண்ணோ பிணையோ' என்று ஐயநிலையை வெளிப்படுத்துகிறது. இங்ஙனம் ஒன்றுக்கொன்று மாறுபட்ட மூன்று பண்புகளை ஒரே சமயத்தில் வெளிப்படுத்துவதைக் காண்கிறோம். இங்ஙனம் கூறுவதற்குப் போதிய காரணம் இல்லாமல் இல்லை.

'கூற்றம்' என்றதற்குக் காரணம் மேலே விளக்கப்பட்டது. 'கண்' என்றது 'இரக்கப் பார்வை — அருட்பார்வை'யாகும். கண் தனக்கு இயல்பாயுள்ள நோக்கினை வெளிப்படுத்துங்கால், அது சாதாரணமாக ஓரளவு இரக்கப் பார்வையாகத்தான் காணப்படும். கூற்றத்துக்குள்ள கோபம், கொடுமை, கன்னெஞ்சம் வெளிக்காட்டும் பார்வையாக அஃது இராது. பெரும்பாலும் பார்வையில் ஓரளவு அன்புதான் வெளியாகும்.

'அருட் செய்தலால் கண்ணோ?' என்று பரிப்பெருமாள் உரை கூறுவது கவனிக்கத்தக்கது.

தலைமகளாகும் இறைவனுக்கு இயல்பாயுள்ளது இரக்கப் பார்வை—அருள்நோக்கேயாகும்.

இரங்குவதும் அருள் கூர்வதும் இறைவனின் இயல்பு என்பதுபற்றி ஐயம் இருத்தலும் கூடுமோ?

“எல்லா அதிகாரமும் கொண்டுள்ள இறைவா! அருள் நோக்கும் தயவும் பொறுமையும் அளவில்லாத இரக்கமும் பொருந்திய கடவுளே!......” என்று விவிலியம் கூறுவது காண்க. (யாத். 34:7).

‘பிணை’ என்றது இயல்பாக அஞ்சும் பெண்மானைக் குறிப்பிட்டது; இந்த அச்சம் இறைவனுக்கு எங்ஙனம் பொருந்தும்? தனக்கு ஏதேனும் தீங்கு நேருமோ எனப் பெண்மான் இயல்பாக அஞ்சக் கூடும். இறைவன் எங்ஙனம் இக்கருத்தில் அஞ்சக் கூடும்? தனக்கு ஏதேனும் தீங்கு நேரக்கூடும் என்று இறைவன் அஞ்சுவதுண்டா? இல்லை. எனினும், தனது பேரின்பத்தில் பங்குபெற வேண்டும் என்று, தான் படைத்த மனிதனுக்குத் தீங்கு நேரக்கூடுமே! என அஞ்சுகின்றான். அஃதாவது, தான் தர விரும்பும் பேரின்பத்தை ஏற்காததால், பெருந்தீங்கினை எய்துவானே! என அஞ்சுகின்றான். இந்த அச்சத்துக்கு உண்மையான பெயர் ஏக்கம்; அன்பின் பெருக்கால் ஏற்படும் ஏக்கம். முந்திய குறளில் கூறப்பட்ட இறைவனின் பேதைமையே இஃது எனலாம்.

அன்பும் அருளும் எவர்மீதும் திணிக்கப்பட இயலாதவை; விரும்பி அருளப்படுபவை. யாருக்கு அளிக்கப்படுகிறதோ அவரால் விரும்பி ஏற்கப்படல் வேண்டும். அன்பின் பண்பே அப்படி. மேலும், இறைவன் தான் படைத்த படைப்பை எவ்விதத்திலும் கட்டாயத்துக்குள்ளாக்குவதில்லை. அறிதலும் விழைதலுமே பகுத்தறிவுள்ள மனிதனுக்கு இயல்பான பண்பு. இப்பண்பை, இறைவனே அருளினான். அறிந்து விழைந்து ஏற்கப்படவேண்டியதைக் கட்டாயத்தின்மேல் திணிப்பதென்றால், அது பொருளற்ற செயலாகும். தம் படைப்புகள் பால் இறைவன் காட்டும் இத்தகைய பண்பையும், பிணை என்னும் சொல்லால் குறிப்பிடலாம்.

ஏன் இங்ஙனம் மனிதனின் அன்புக்காக ஏங்குகிறான்? கவலையுறுகிறான்? என்பது முந்திய குறள் விளக்கத்தில் கூறப்பட்டது.

1086. “கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்கஞர்
செய்யல மன்இவள் கண்.”

கொடும் - கொடிய - வளைவான

கோடா மறைப்பின் - கோணுதலில்லாமல் தடுக்குமானால்

நடுங்கு அஞர் - நடுக்கத்தைத் தரும் **துன்பம்**

செய்யல - செய்ய மாட்டா

மன் - அசை.

கண்கள் முழுமையாகத் திறந்திருக்கும்போது, புருவங்கள் வளைவாக இருப்பது இயல்பு. கண்கள் மூடியிருக்கும்போது புருவங்கள் வளைவாயின்றி நேராக இருக்கும்.

பெண் கண்களை முழுநும் திறந்து பார்க்கும்போது, புருவங்கள் வளைந்திருக்கும். அந்த முழுப்பார்வை ஒரு வித அச்சத்தை விளைக்கும். பெண்ணின் முழுப்பார்வைக்கு மயங்கு பவர் இல்லையா? அப்பார்வையால் அப்படியே அவளுக்கு அடிமையாகிறவர்கள் இல்லையா? அத்துணை வலிமையும் ஈர்ப்புச் சக்தியும் கொண்டது அப்பார்வை.

ஆகவே தலைமகன், 'இவளது கண்களின் புருவங்கள் கோணுதல் இல்லாமல் - அஃதாவது, நேராக நின்று முழுப் பார்வையைத் தடுக்குமானால், அத்துணை அச்சமும் நடுக்கமும் (காதல்) துன்பமும் விளையாதே' என்று எண்ணுகிறான். இங்ஙனம் பெண்ணின் பார்வை குறித்துக் காதலன் எண்ணு கிறானோ இல்லையோ, இறைவனாகிய தலைமகளின் பார்வை குறித்து ஆன்மா இங்ஙனம் எண்ணுகிறது. ஏன்?

எந்நேரமும் சிற்றின்பத்தையே நாடுபவன் மனிதன். பேரின்பத்தை அதிகமாக நினைத்தால், எங்கே தன் சிற்றின் பத்துக்கு ஊறு விளையுமோ என்று அஞ்சக்கூடிய சிறுமதி படைத்தவன். அறியாமையால் விளைவதே இத்தகைய அச்சம் எனினும், சிற்றின்பத்தின் கவர்ச்சியும் இந்த விளைவுக்கு ஓரளவு காரணம். பேரின்பம் அந்த அளவுக்கு உள்ளத்தை ஈர்ப்பதில்லை. அதற்குப் பெரு முயற்சியும் அருளும் வேண்டும். இந்த அருளைத்தான் இறைவன் ஆன்மாவுக்கு வழங்கும் நோக்குடன், தனது அருள் பார்வையை ஆன்மாவின்பால் செலுத்துகிறான்? ஆனால், இறைவனது பேரின்பத்தில் பங்கு பெறுமாறு படைக்கப்பட்ட மனிதன் சிற்றின்பத்தையே

பெரும்பாலும் நாடி, பேரின்பத்தைப் புறக்கணிப்பவனா கின்றான். இஃது இறைவனையே புறக்கணிப்பதாகும்; தன்னைப் புறக்கணிக்கும் ஆன்மாவை இறைவன் புறக்கணிப் பதில்லை. தன்னைப் புறக்கணிப்பதால் இறைவனுக்கு ஏற்படும் சினத்தையும் மறைத்து அருள் புரிகின்றான். ஆன்மாவைக் கடைக்கண்ணால் நோக்குகின்றான். சினக்கண்ணை முற்றிலும் திறவாமல் அருட் கண்ணையே காட்டுகின்றான். இதனால் ஆன்மாவுக்கு நடுக்கம் தரக்கூடிய அஞர் எதுவும் இன்றி, இறைவன்பால் அன்பு செலுத்த முற்படுகின்றான். சினக் கண்ணையே காட்டினால், ஆன்மா அருள் பெற இயலா தன்றோ? ஆகவே, இறைவனது கண்புருவங்கள் போல் உள்ள அவனது அன்பருள் அவனது சினத்தை மறைத்து ஆன்மாவுக்கு அஞர் விளையாதவாறு தடுக்கின்றது.

ஆனால், மனிதன் அதற்கு இடம் கொடாமல் வேறுபக்க மாகத் தன் உள்ளத்தைத் திருப்பினால், இறைவன் அவ்வுள் ளத்தில் ஒரு வித அச்சத்தை உண்டாக்குகின்றான். தான் வழங்க விரும்பும் பேரின்பத்தைப் புறக்கணித்துவிட்டால், இறுதியில் நேரக்கூடிய பெருங்கெடுதியை ஆன்மாவுக்கு உணர்த்துகிறான். தன் அருள் ஒளியால் அங்ஙனம் செய்வது அவனால் இயலாதது அன்று. அத்தகைய அச்சத்தின் பயனாய், மருளால் மயங்கியிருக்கும் ஆன்மாவுக்கு — அஞ்ஞானத்தால் தாக்குண்ட ஆன்மாவுக்கு இறைவனின் ஞானம் உதயமாகிறது. 'இறைவனின் அச்சம் ஞானத்தின் தொடக்கம்' என்று விவிலியம் கூறுவதும் இது பற்றியேயாம்.

இத்தகைய அருளிரக்கப் பார்வையையே ஆன்மா விரும்பு கிறது. 'இறைவா! உன் முழுக்கண்ணையும் திறந்தால், எனக்கு அச்சமே விளைகின்றது. உன் முழு அருள்பார்வையை எளிய என் ஆன்மா தாங்க இயலவில்லை. அத்துணை சபல புத்தியுடையவன் நான். ஆகவே, உன் இரக்கத்தையே மேலிடச்செய். உன் அருள் பார்வையைச் சிறிது சிறிதாகக் காட்டுவாய்' என்று இறைஞ்சுவதுபோல் கூறுகிறது இக்குறள்.

1087. "கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகில்."

கடாக்களிறு - வெறியானை (கடா - யானை மதம்)

கண்படாம் - கண்களை மறைக்கும் முகபடாம்

படாமுலை - சாயாத முலை

(படாம் - சீலை)

இவளது சாயாத முலைமேல் உள்ள மேலாடையானது, வெறி யானையின் கண்களை மறைக்கும் முகமூடிபோல் உள்ளது.

யானையின் கண்களை மறைக்கும் சீலையை யானைப் பாகன் தவிர வேறு யாரும் தொடுவதில்லை. அவனது தொடுகையை யானை உணர்ந்து ஒன்றும் செய்யாது போலும்!

அங்ஙனமே காதலன் தவிர வேறு யாரும் காதலியின் முலைக் கச்சைத் தொடவியலாது. முலைமேல் துகிலைத் தொடுவதும் முலைகளைத் தொடுவதும் ஒன்றே. காதலின் இனிமையையும் பெருக்கையும் சுவைப்பதென்று பொருள்.

ஏன்? வேறு யாரும் இங்ஙனம் தொடலாகாது என்பதன் காரணம் எளிதிற் புலப்படுவதொன்று. காதலின் பண்பே அப்படி. அஃதாவது, காதல் என்பது பலருடன் பகிர்ந்து கொள்ளக் கூடியதன்று. பலருடன் பகிர்ந்துகொள்ளப்படுவது சுயநல இச்சை - காதல் என்பதோ வெறும் உடலிச்சையன்று; அன்பின் அடிப்படையில் எழுவதொன்றாகும். புனிதமானதும் கூட. அது புனிதமானதாக இருக்க வேண்டுமானால், வெறும் உடல் இச்சையாக மாறாமலிருக்குமாறு பார்த்துக்கொள்ள வேண்டும். அஃதாவது, ஒருவரோடுமட்டுமே உறவுகொண்டதாயிருக்க வேண்டும்.

மேலும், மனிதனின் இதயம் அளவுள்ளது. அளவிடவியலாத வகையில் அன்பையோ காதலையோ வெளிப்படுத்த இயலாதது. பலரோடும் பகிர்ந்துகொள்வதாயிருந்தால், அஃது ஆழ்ந்ததாயிருத்தல் இயலாது.

மேலும், காதல் என்பது திருமணத்தை இறுதி நோக்கமாகக் கொண்டு எழுவதாயிருத்தல் வேண்டும். காதல் முற்றினால் திருமணத்தில் முடிய வேண்டும். திருமணத்தை நோக்கமாகக்

கொள்ளாமல் உண்டாகும் காதல் வெறும் சிற்றின்பமே - கீழ்த்தரமான சுயநல இச்சையேயாகும். இனி, கிறித்துவக் கருத்தின்படி பார்த்தால், ஒருவன் வாழ்நாள் முழுவதும் ஒருத்தியோடு வாழவேண்டும் என்னும் அடிப்படையில் அமைவதே திருமணம். இப்படிப் பார்க்கும்போது, பலரோடு காதல் கொள்வதில் பொருள் இல்லை.

பொதுவாகக் காதல் பொறாமையுள்ளது. (Love is exclusive-love is jealous) என்பதன் கருத்தும் இதுவே. தனக்கே உரியவன் - உரியவள் என்று எண்ணும்போது வேறொருவரோடு காதலைப் பகிர்ந்துகொள்ளுங்கால் நியாயமான 'பொறாமை' ஏற்படுவது சரியே. அஃதாவது, அதைச் சகித்துக் கொள்வது சரியன்று என்பது எளிதில் புலப்படும்.

காதலைப்பற்றிக் கூறப்படும் இப்பண்பு 'அன்பு'க்குப் பொருந்தாது. அஃதாவது, மனிதரிடையே விளங்கவேண்டிய அன்பு "அன்பிலாரெல்லாம் தமக்குரியர், அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு" (72) என்னும் அடிப்படையில் எழுவது. அனைவர்க்கும் - பகைவர்க்குங்கூட அன்பு செய்தல் வேண்டும் என்பதால் மனிதரிடையே அன்புக்கு exclusiveness அல்லது jealousy - பொறாத தன்மை இருத்தலாகாது. 'அன்பின் வழியது உயர்நிலை'......'அன்புக்கு அடைக்கும் தாழ் இல்லை' யாதவின் இந்தப் பொறாமைக்கு இடம் எங்ஙனம் இருக்க இயலும்? ஆனால், இறைவனுக்கும் மனிதருக்குமிடையே இருக்கவேண்டிய அன்பின் இலக்கணம் ஓரளவு வேறுபட்டது.

மனிதன் இறைவன்பால் காட்டவேண்டிய அன்பு(பேரின்பக் காதல்) மேற்சொன்ன **பொறாமைப்** பண்புக்குட்பட்டதே. அஃதாவது, எங்ஙனம் காதலர் பிறருடன் தம் காதலைப் பகிர்ந்துகொள்வது இயலாதோ அங்ஙனம் இறைவனுக்குச் செலுத்த வேண்டிய அன்பை வேறு யாரோடும் பகிர்ந்துகொள்ள இயலாது. இதற்குச் சிறப்பாக இரண்டு காரணங்கள் உண்டு.

ஒன்று : இறைவன் மனிதனின் நிறை அன்புக்கு உரியவன். அவனுக்குச் சமமாகவோ உயர்வாகவோ யாரையும் எதையும் வைத்து அன்பு செய்தல் தகாது. இதனாற்றான், இறைவனுக்கு முழு உள்ளத்தோடும் முழு ஆன்மாவோடும் முழு

மனத்தோடும் முழு வலிமையோடும் அன்பு செய்தல் வேண்டும் என்பது இறைவனே தந்துள்ள கட்டளை. (மார்க்கு 12:30). குறைவாக அன்பு செய்வது அவனது அளவில்லாப் பண்புக்கு நாம் செய்யும் இழுக்காகும்.

இரண்டு : மனிதனின் இதயம் அளவுள்ளது. முழு இதயத் தோடு இறைவனுக்கு அன்பு செய்ய வேண்டுமெனின், வேறெதன் மீதும் வேறு யார் மீதும் அன்பு செலுத்த இயலாது.

இறைவனைத் தவிர பிறரையெல்லாம் பொருட்படுத்த லாகாது; பகைத்தல் வேண்டும்; எவ்விதத்திலும் நேசிக்க லாகாது என்பதன்று இதன் பொருள். இறைவனைத் தவிர மற்றவற்றையெல்லாம் அளவுடன் நேசிக்க வேண்டும்; அதுவும் அவன் பொருட்டு நேசிக்க வேண்டும். அவனே தந்த கட்டளைக் குக் கீழ்ப்படியும் வகையில் நேசிக்க வேண்டும் என்பதே பொருள்.

இனி, இறைவன் மனிதர்பால் காட்டும் அன்புக்கு இத்தகைய வரையறை இல்லை. ஏனெனில், அளவிடவியலாத அன்பே உருவானவன், தான் படைத்த எதையும் தன் விருப்பப்படி நேசிக்க உரிமை படைத்தவன்.

ஆகவே, அன்புக்குரிய இந்தப் 'பொறாமை' - அஃதாவது, தன்னோடு சமமாக வைத்து யாரையாவது, எதையாவது நேசிக்குமாறு இறைவன் மனிதனை விட்டுவிட இயலாது. இது மனிதர்க்கிடையே நிகழும் தவறான 'பொறாமை'யன்று; தனது அளவில்லாத் தன்மையினின்று எழும்பும் இயல்பேயாகும்.

இக் குறளில் கூறப்படும் 'பொறாமை' இத்தகையதே என்க. இரு காதலர்க்கிடையே 'பொறாமை' நிகழ்வது தவ றானது அன்று; உண்மைக் காதலுக்கு அவசியமானது. அள வுள்ள மனிதர்க்கிடையிலே இங்ஙனமாயின், அளவில்லாத இறை வன், தனக்குரிய அன்பை எவனும் படைப்புப் பொருளுடன் பகிர்ந்துகொள்வதை எங்ஙனம் பொறுத்துக்கொள்ள இயலும்!

இனி, முலைகளைத் தொடுவது காதலன்மட்டுந்தானா? குழந்தை தாயின் முலைகளைத் தொடுவது மட்டுமன்று, அவற்றி னின்று பாலைப் பருகுகிறதன்றோ? ஆனால், காதலன் முலை களைத் தொடுவதன் நோக்கமும், குழந்தை (பால் குடிக்கையில்)

தாயின் முலைகளைத் தொடுவதன் நோக்கமும் ஒன்றன்று. முன்னையது, காதற்பெருக்கைச் சுவைப்பதாகும். பின்னையது அன்னையின் பாசப் பெருக்கைச் சுவைப்பதாகும். முலைகளினூடே குழந்தை அன்னையின் பாலை மட்டுமன்று அன்பையும் பருகுகின்றது எனலாம்.

இவ்விரு பண்புகளும் இறைவனாகிய தலைமகளுக்குப் பொருந்துமா? ஆம், இறைவன் காதலனுக்குக் காதலியாகவும், மக்களுக்குத் தந்தையாகவும், தாயாகவும் உள்ளான். இறைவனாகிய தலைமகளின் முலைகள் அவனது அருட்பெருக்கைக் குறிப்பிடும். முலைகளினின்று அன்னை குழந்தைக்குத் தேவையான பாலைப் பெருக்கிப் பருக வைப்பதுபோல இறைவன் தன் அருட்பெருக்கை - அன்புப் பெருக்கைத் தன் மக்களாகிய மானிடர் நிரம்பப் பருகுமாறு அருள்புரிகின்றான். தொடக்கத்தில் இறைவனின் அன்பையும் அருளையும் சுவைக்கின்றான் மனிதன். தந்தை—மக்கள் என்னும் உறவு எவ்விதத்திலும் குறையாமல் - மாறாமல் - பழுதுபடாமல் அதே மனிதன் இறைவனுக்கு காதலனாகின்றான். காதற் பெருக்கைச் சுவைக்க முனைகின்றான். உலக வழக்கில் ஒரே சமயத்தில் ஒரே ஆளிடம் தந்தை மகன் என்னும் உறவும், காதலன் காதலி என்னும் உறவும் இருப்பதில்லை. பேரின்ப வாழ்வைப் பொறுத்தமட்டில் இதற்குத் தடையில்லை. இறைவனுக்கு நாம் மக்களாகவுமிருக்கிறோம்; காதலராகவும் இருக்கிறோம். அக்காதலையும் அன்பையும் சுவைக்கிறோம். இங்ஙனம் சுவைக்க ஆன்மா இறைவனது முலைகள் போல் உள்ள அவனது அருட்பெருக்கை — அன்புப் பெருக்கைத் தொட, அஃதாவது சுவைக்க முன்வர வேண்டும். மக்கள், காதலர் என்னும் உறவில் இறைவனோடு பழக ஆர்வம் கொள்பவர்களே இந்தப் பேற்றை அடையவியலும். பிறர்க்கு அஃது எட்டாக்கனியாகவே இருக்கும். இறைவனாகிய தலைமகள் மீது காதல் கொள்ளாதவன், அவன் அன்பைப் பருகி இன்புற இயலாது என்னும் கருத்தையும் இக்குறள் (1087) கூறுவதாகத் தோன்றுகிறது.

இறைவனது 'அன்பைப் பருகு'வதுபற்றி விவிலியத்தில் கூறப்பட்டிருப்பதும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

"எருசலேமுடன் அன்பு கொண்ட அனைவரும் அக்களியுங்கள். அவளைக் குறித்துத் துயரப்படும் நீங்கள் எல்லோரும்

அவளோடு சேர்ந்து அகமகிழுங்கள். அப்பொழுது ஆறுதல் தரும் அவள் கொங்கைகளில் பால் குடித்து நிறைவடைவீர்கள். அவளது மகிமைப் பெருக்கினின்று இன்பமாய்ப் பருகி மிகுதியாய்த் திளைத்திருப்பீர்கள். ஏனெனில், ஆண்டவர் கூறுகிறார்: இதோ! ஆற்றுப் பெருக்குப்போல் அவள் மீது சமாதானத்தைப் பொழிந்திடுவோம்...... அவள் பாலை அருந்துவீர்கள்; மார்போடு அணைக்கப்படுவீர்கள்; மடிமேல் சீராட்டப்படுவீர்கள். **தாய் தன் மகவைச் சீராட்டுவது போல் நாம் உங்களுக்கு ஆறுதல் தருவோம்.''**

தமது அருட் பெருக்கைச் சுவைத்த எருசலேம் நகரை முன்வைத்து, இறைவன் கூறுவது, தமக்கே நிறைவாகப் பொருந்தும் என்று காட்டத் தம்மைத் தாயாக வைத்துப் பேசுவது இறைவனின் தாயன்பை வெளிப்படுத்தவே என்றறிக.

1088. ''ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்குமென் பீடு.''

ஒள் + நுதல் = ஒளி பொருந்திய நெற்றி.

ஞாட்பு = படை, போர், போர்க்களம்.

நண்ணார் = பகைவர்

உட்குதல் - அஞ்சுதல், மடிதல், நாணுதல்.

பீடு - வலிமை

''போர்க்களத்தில் பகைவரும் அஞ்சக்கூடிய என் வலிமை இவளது ஒளி பொருந்திய நெற்றிக்குமுன் தோல்வியடைந்து விட்டது.''

போர்க்களத்திற்குச் சென்று வெற்றியுடன் திரும்பிய வீரனின் வாய்மொழியாக ஒலிக்கின்றது இக்குறள். ஏன் இங்ஙனம் கூறப்படுகிறது? தமிழ் இலக்கணத்தில் 'பொருள்' என்னும் பகுதி அகம், புறம் என்னும் இரு பெரும் பிரிவுகளைக் கொண்டுள்ளது.

அகப்பொருள் காதலையும், புறப்பொருள் வீரத்தையும் கூறும். போரை விளக்கும் பகுதி புறமாகவும் இன்பத்தை (காதலை) விளக்கும் பகுதி அகமாகவும் கொள்ளப்பட்டது.

இனி, போரில் வெளிப்படுவது உண்மை வீரம். போருக்குச் சென்று வீரம் காட்டி வெற்றி கண்டு திரும்பும் வீரன் ஒருவன், ஒரு பெண்ணைக் கண்டு, 'இவள்முன் என் வீரமெல்லாம் ஒடுங்கிவிட்டது. போரில் பிறரை வென்ற நான் இவள் முன் அடிமையாகிவிட்டேன்' என்றுரைக்கும் காதலுக்குள்ள வலிமை எத்தகையது என்பது கூறப்படுவது காண்க. காதலின் பெருமையை மேலும் உரைக்கும் குறளே இது.

'ஒளி பொருந்திய நெற்றி' குறித்துப் பேசப்படுவது, நெற்றிப் புருவங்களுள் அமைந்துள்ள கண்களே எனக் கொள்ளலாம். நெற்றியைப் பார்ப்பதும் கண்களைப் பார்ப்பதும் ஒன்றே. நெற்றி ஒளி பொருந்தியதெனக் கூறப்படுவது பார்வையைக் குறித்தே. கண்களின்றி நெற்றிக்கு ஒளியேது? முந்திய குறட்பாக்களில் பெண்ணின் பார்வை குறித்துக் கூறப் பட்டது, மேலும் இக்குறளில் வலியுறுத்தப்படுகின்றது. அப்பார் வைக்கு முன் வீரமும் தோல்வியுறும் என்னும்போது, வெறும் மானிடப் பெண்பற்றித்தான் பேச்சு என்பதற்கில்லை. வெறும் மானிடப் பெண் முன்னிலையில் வீரனும் இங்ஙனம் அடிமை யாகின்றான் என்பது வீரனுக்குப் பெருமையன்று. தலைமகள் எனக் காட்சியளிக்கும் இறைவனின் அருட்பார்வைக்கு முன் எவனும் பணிந்தேயாக வேண்டும் என்றால் பொருள் மிகச் சிறப்பது காண்கிறோம்.

ஏனெனில், இறைவனாகிய தலைமகள் வெளிப்படுத்தும் அருட்பெருக்கையும் அன்பின் வேகத்தையும் பொருட்படுத் தாமல், எதிர்த்து நிற்கக்கூடிய வலிமை எவனுக்கும் இல்லை. அவனது அருளையோ அன்பையோ புரிந்து கொள்ளாமல், அவன் அருள விரும்பும் பேரின்பத்தின் தன்மையை அறியாமல், மனிதன் தன் அறிவையோ திறனையோ பெரிதும் மதித்த வனாய், தன்பால் பெருமிதம் கொண்டு இறைவனது அருள் நோக்கை எதிர்க்கவும் முற்படுவதுண்டு. இறைவனையே, அவனது அன்பையே, எதிர்க்கக்கூடிய மனப்பான்மை- பேய்மனம் படைத்த, அளவு கடந்த முறையில் தன்மதிப்புக் கொண்ட மனிதப் பிறவிக்கு ஏற்படுவதை உலகில் பன்முறை காண்கிறோம். ஆனால், இறைவன் அளவிலாப் பரிவுடன் அவனது அறியாமைக்கு இரங்கி, உண்மையை வெளிப்படுத்து கின்றான். இருளடைந்த மனித உள்ளத்துக்கு ஒளி தருகிறான்,

தன் அருளையும் அன்பையும் ஏராளமாகப் பொழிகின்றான். இறைவனது நெற்றிபோல் உள்ள அவனது எழில் மிகு அருட் பார்வையினின்று ஒளியும் அருளும் வெளிப்பட, 'உட்கும் என் பீடு' என்கிறது ஆன்மா. 'அவன் அருளுக்கு முன் என் மமதை தோல்வியுற்றது' என்கிறது. இங்ஙனம் இறைவனது எழிலும் அருளும் மானிடரின் உள்ளங்களை வெல்லும் முறையில் வெளிப் பட்டது. சிறப்பாக அவன் ஐந்தவித்தானாக உலகில் காட்சி யளித்தபோது என்றும் உணர்க! 'அவனது மாட்சியைக் கண் டோம். அஃது இறைவனது மாட்சிமைக்கு நிகராய் இருந்தது' என்று ஐந்தவித்தானின் சீடர் கூறுவது காண்க. (அரு. 1:14).

1089. ''பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு
அணிஎவனோ ஏதில தந்து.''

பிணையேர்—பெண்மான் போன்ற

மடநோக்கு—அஞ்சும் பார்வை

ஏதில—வேறு

பெண்மான் போல் அச்சம் கொண்ட பார்வையும் நாணமும் உள்ள இவளுக்கு வேறு அணிகலன்களை அணிவது எதற்காக?

மானிடப் பெண்ணின் பார்வையால் நிகழும் இன்பத்தை மிகைப்படுத்திக் கூறுகிறது குறள் 1089. அப்பார்வையே போதும் இன்பத்தில் ஆழ்த்த: வேறு அணிகலன்கள் தேவை யில்லை.

எனினும், எவ்வளவுதான் 'பிணையேர் மட நோக்கை'ப் புகழ்ந்தாலும், உலக நடையில் அணிகலன்களும் தேவை என்பது யாவரும் அறிந்ததொன்று. அணிகலன் இல்லா மங்கை எளிதில் இகழப்படுவது காண்கிறோம். உள்ளத்தின் எழிலை மட்டும் சுவைப்பவர் எத்தனை பேர்? உடலின் அழகையும் விரும்பியே உலகில் காதல் நிகழ்வது கண்கூடு. மனிதனின் நிலையே அப்படி. வெளிப்படையாகக் காண்பதே எளிதில் கவர்ச் சியை விளைவிக்கிறது.

இனி, இறைவனைப் பொறுத்தமட்டில், வெளிப்படையான அணிகலன்கள் அவனுக்குத் தேவையேயில்லை; அவனே அவனுக்கு அணிகலன். அவனது அருள் நோக்கே

அனைத்தையும் ஆற்றுகின்றது. மனிதர் அவன்மீது காதல் கொள்வது அவனது அருள் நோக்கின் எழிலாலும், அவன் வெளிப்படுத்தும் அன்பின் கவர்ச்சியாலுமே என்பது தெளிவு.

எனவே, இக்குறளில் பேரின்பமே சிறப்பாகக் கூறப்படுவது போல் காணப்படுகிறது.

1090. "உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று."

'காமம்' என்றது பெண்ணால் விளையும் சிற்றின்பம். இவ் வின்பம் பெண்ணைக் கண்டதும் விளைவதன்று. பெண்ணைக் கண்டதும் உணர்வு எழலாம். ஆனால், இன்பம் தருவது உணர்வதால் அன்று, புணர்வதாலேயே.* எனினும் 'காமம் கண்டால் மகிழ் செய்யும்' என்கிறார் ஆசிரியர். எதனை மனத்தில்கொண்டு இங்ஙனம் கூறுகிறார்? 'காண்பதால்' மகிழ் செய்வது எது? அல்லது யார்? எந்த இன்பத்தைப் பொறுத்த மட்டில் 'காண்பது' என்பது அடுநறா உண்பது போல மகிழ் செய்யும்? சிற்றின்பம் அன்று என்பது தெளிவு; சிற்றின்பம் அன்றேல் **பேரின்பம்** என்பதே கருத்து. பேரின்பத்தைப் பொறுத்த மட்டில், 'காண்பது' அடுநறா உண்டு மகிழ்வது போல் என்பது உண்மை தானா? உண்மை என்றே புலப்படுகிறது. பேரின்பமாவது இறைவனது 'நோக்கி'னால் விளையும் இன்பம். இறைவனாகிய தலைவி, ஆன்மாவாகிய தலைவனைக் கண்ணோக்குதலானும், ஆன்மா இறைவனை நேர்முகமாகக் காண்பதாலும் விளையும் **பெரிய**, அஃதாவது **நிறைவான**, **முடிவற்ற**, **அகத்தின்பம்**; உடலும் உடலும் இணைவதால் விளையும் குறை இன்பமன்று.

இறைவனைப் பொறுத்த அளவில் 'புணர்வது' என்பது, (உடலும் உடலும் போல் அன்றி) அவனது அருள் நோக்கும் ஆன்மாவின் மருள் நோக்கும் இணைவதேயாம். இதுவே அகமும் அகமும் புணர்வதெனப்படும் அகஅகம். இது நிகழும் போது மருளடைந்த ஆன்மா இறைவனின் அருள் நோக்கால் ஒளி பெற்று, மருள் நீங்கித் தானும் ஒளி மயமாகி இறைவனுடன் இன்பம் துய்க்கும். இதனால் விளைவதே பேரின்பம்.

---

* "ஊடல் உணர்தல் புணர்தல் இவை காமம்
கூடியார் பெற்ற பயன்" (1109)
என்னும் குறளைக் காண்க.

> "இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
> மாசறு காட்சி யவர்க்கு." (352)

இங்ஙனம் புணர்வது, அகக் கண்ணால் இறைவனைக் காண்பதெனப்படும். பேரின்பத்தைப் பொறுத்த மட்டில் இங்ஙனம் இறைவனைக் காண்பது (அடுநறா உண்பது போல!) அவன் இன்பத்தைத் துய்ப்பதேயாம். இறைவனின் நேர்முக அகக்காட்சி எனப்படும் இக்காட்சி இம்மை வாழ்வில் தொடக்க நிலையிலும், மறுமை வாழ்வில் நிறைவான நிலையிலும் நிகழும். இதையே வள்ளுவர் 'இறைவனடி சேர்தல்,' 'நீடுவாழ்தல்' என்று முதல் அதிகாரத்திலேயே பன்முறை குறிப்பிட்டுள்ளார். மனிதனை அவ்வாழ்வுக்கு - பேரின்பத்திற்கு அழைத்துச் செல்வதே திருக்குறளின் உயரிய நோக்கமாதலின், சிற்றின்பத்தை மட்டும் அழுத்தமாகக் கூறி, பேரின்பத்தைக் குறித்து எதுவும் கூறாமல் விடுத்திருப்பாரோ? பேரின்பத்தை மனிதன் பெரிதும் நாட வேண்டும். சிற்றின்பத்தை மட்டுமே விரும்பினால், அறத்தை நன்கு வளர்க்க இயலாது என்னும் கருத்தை வலியுறுத்த,

> "சிற்றின்பம் வெஃகி அறன்அல்ல செய்யாரே
> மற்றின்பம் வேண்டு பவர்." (173)

என்று கூறிய வள்ளுவர், சிற்றின்பத்தை மட்டுமே எங்ஙனம் தம் நூலில் அவ்வளவு அழுத்தமாகக் கூறியிருப்பார்? ஆகவே, ஆசிரியர் 'இப்பாலில்' கூற விரும்புவது இன்பமே. அதில் சிற்றின்பம் என்பது குறைவான கருத்து. பேரின்பம் என்பதே நிறைவான கருத்து என்பது தெளிவாகிறது.

'காமம்' என்னும் சொல் பெரும்பாலும் உடல் இன்பம் என்னும் பொருளில்தான் ஆளப்படுகிறது. ஆனால், 'பேரார்வம்' என்னும் பொருளிலும் ஆளலாம். முன்னைய பொருளில் கொண்டால், மேற்கூறியது போல, பார்வையில் தொடங்கிய போதிலும் மெய்யுறு புணர்ச்சியில்தான் நிறைவுறுகிறது. பின்னைய பொருளில் கொள்வோமாயின், இறைவனது அருள் நோக்கினைக் காணப் பேரார்வம் மிகுந்தால், அஃதாவது, அந்நோக்கினால் அவன் வெளிப்படுத்த விரும்பும் அன்பின் பெருக்கைச் சுவைக்க ஆர்வமுடன் முனைந்து நின்றால் இன்பம் பெருகும். மேலும், பேரின்பம் என்பது உடலின்பம் அன்று;

உள்ளத்தின்பம். ஆகவே, இறைவனை நேர்முகமாகக் காண்பதால் விளைவது. உடலோடு இணையும் இன்பம் காமம்; உள்ளமும் உள்ளமும் இணைவது இன்பம். முன்னையது சிற்றின்பம்; பின்னையது பேரின்பம்.

## தகையணங்குறுத்தல்

### சுருக்கம்

இவ்வியலில் இறைவன் பேரழகு மிக்க அணங்காக உருவகிக்கப்பெற்று, ஆன்மாக்களைத் தன்பால் கவர்ந்துகொள்ளும் பான்மை கூறப்படுகிறது. இங்ஙனம் ஈர்க்கப்படும்போது ஆன்மாவின் உணர்வுகள் பின்வருபவை: இப்பகுதியில் பெண் பாலில் உள்ள சொற்கள் இறைவனையே குறிப்பிடும்.

1081. ''அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் நெஞ்சு.''

கனமான காதணியுடன் என்னை ஈர்க்கும் இவள் தெய்வப் பெண்ணா? சிறந்த மயிலா? வெறும் மனிதப்பெண்ணா? என் மனம் மயங்குகிறது. இப்படி இறைவனின் அளவில்லா எழிலை இயற்கையில் கண்டு அதிர்ச்சி அடைகிறது ஆன்மா.

1082. ''நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து.''

என்னை நோக்கின இவளது (அருட்) பார்வையை நான் ந்தித்தது, தன் அழகால் என் உள்ளத்தைத் தாக்கும் தெய்வப் பெண் போன்ற இவள் தன்னோடு ஒரு படையையும் கொண்டு வந்தது போல் இருந்தது. இறைவனின் அருட்பார்வை எதிர்க்க வியலாத படைபோன்றது.

1083. ''பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன்
பெண்தகையால் பேரமர்க் கட்டு.''

அப்பார்வை என் உயிரையே வாங்கும் எமன்போல் உள்ளது. முன்பு இதை நான் அறியவில்லை. இனி அறிந்தேன்.

அஃது அழகு மிக்க பெண்ணின் கண்போல் என் உள்ளத்தில் பெரிய போரை விளைப்பதாக உள்ளது.

1084. "கண்டார் உயிர்உண்ணும் தோற்றத்தால் பெண்தகைப்
பேதைக் கமர்த்தன கண்."

தன்னைப் பார்ப்பவர்கள் உயிரையே வாங்குமோ என்பதுபோல் உள்ள இவளது கண், இயல்பாகப் பெண்ணுக்குள்ள மென்மைக்கு மாறுபட்டதாயிருந்தது. இயற்கையில் காணும் இறைவனின் அழகு அத்துணை வலிமை கொண்டது.

1085. "கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கம்இம் மூன்றும் உடைத்து."

இவள் பார்வை அழகால், உயிர்வாங்கும் எமனின் பார்வை போலும் உள்ளது. ஆணை மயக்கும் பெண்ணின் பார்வை போலும் உள்ளது. அதே சமயத்தில் இயல்பாகவே மருளும் தன்மையுள்ள மானின் பார்வை போலும் உள்ளது. மூன்று தன்மைகளும் கொண்டது. இறைவனின் அருட்பார்வை, ஆன்மாவை முற்றும் அடிமைப்படுத்தக்கூடியது; ஈர்க்கக்கூடியது;

1086. "கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்கஞர்
செய்யல மன்இவள் கண்."

தன் முழுப்பார்வையால் என்னை வருத்தும் இவளது கண் புருவம் வளையாது நேராக நின்று (கண்பார்வை முழுதும் தெரியாமல்) மறைக்குமானால், நடுக்கம் போன்ற துயரத்தை எனக்கு விளைவிக்காது. இறைவனது அருட்பார்வை முழுமையாயிருந்தால், அஃது ஆன்மாவையே ஈர்க்கும் வலிமை மிக்கதாயிருக்கும்.

1087. "கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகில்."

இப்பெண்ணின் இளமார்பின் மீதுள்ள துகில், மதயானைமீது இட்ட முகபடாம்போல் உள்ளது. அத்துகிலைப் பாகன் தவிர வேறு யாரும் தொடவியலாது. அதுபோல காதலியின் முலைக்கச்சையைக் காதலன் தவிர வேறு யாரும் தொட்டு, அதனால்

விளையும் இன்பத்தைத் துய்க்க இயலாது. இறைவனாகிய காதலியின் முலைக்கச்சைத் (முலைகளை) தொடுவது, அவனது அளவில்லா இன்பத்தைச் சுவைக்கத் தொடங்குவது. இறைவன் மீது உண்மையான (பேரின்பக்) காதல் கொண்டவர்களே அத்தகைய இன்பத்தைச் சுவைக்க இயலும்.

1088. "ஒண்நுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்கும்என் பீடு."

போர்க்களத்தில் பகைவரும் நிலைகெடுதற்குரிய என் வலிமை, ஒளிபொருந்திய நெற்றியுடைய இவள் முன் வலியிழந்தது. இறைவனது பேரின்பக் காதலை எதிர்த்துப் போராட எவனுக்கு வலிமையுண்டு?

1089. "பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்
கணியெவனோ ஏதில தந்து."

மான்போன்ற அழகிய கூச்சப்பார்வையும் நாணமும் உடைய இவளுக்கு வேறு ஆபரணங்கள் அணிவது எதற்கு? அன்பும் இரக்கமும் உள்ள இறைவனது அருட்பார்வை ஒன்றே போதும் ஆன்மாக்கள் அவன்பால் ஈர்க்கப்பட.

1090. "உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று."

காய்ச்சப்பட்ட மது, அதை உண்டவர்க்கே இன்பம் தரும். அதைப்பார்த்த மட்டில் இன்பம் தருவதில்லை. இறைவனின் அருட்பார்வையோ, பார்த்த மட்டில் இன்பம் பயப்பது. பார்வையே இன்பம் தருவதாயின், உள்ளப்புணர்ச்சியை என்னென்போம்!

# 110. குறிப்பறிதல்

குறிப்பறிதலாவது - தலைமகன் தலைமகளின் காதற் குறிப்பை, அவளது பார்வையினின்றும் செயல்களினின்றும் உய்த்துணர்தலாம்.

1091. "இருநோக்கு இவள்உண்கண் உள்ளது
ஒருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து"

ஆண்மகனின் கவனத்தைக் கவர்ந்த பெண்ணின் நோக்கு இருவகைப்படும். ஒரு நோக்கால் அவன் உள்ளத்தில் ஒரு வித மனநோய் உண்டாகிறது. அதே பெண்ணின் வேறொரு நோக்கு, அம்மனநோய்க்கு மருந்தெனச் செயலாற்றி இன்பம் அளிக்கிறது.

ஒரு பெண்ணின் சிற்றின்ப நோக்குக்கு இவ்விரு பண்புகளும் உண்டென்றே வைத்துக் கொண்டாலும், எத்தனை பேர்க்குப் பெண்ணின் நோக்கு இறுதியில் நோயையே விளைவித்து விடுகிறது! எவ்வளவுதான் 'மருந்தெ'னச் செயலாற்றினாலும் நிறைவு அளிக்கவியலாத ஒரு நிலை இறுதியில் எத்தனையோ பேர்க்கு ஏற்படுவதை அன்றாட வாழ்க்கை அனுபவத்தில் கண்டு வருகிறோம். நிறைவு அளிக்கவியலாத நிலை மட்டுமன்று; எத்தனையோ முறைகளில் ஏமாற்றமே ஏற்படும் நிலையில்லையா? "என் உயிரையே உனக்காகத் தருவேன். அந்த அளவுக்கு உன் மேல் எனக்குக் காதல் உண்டு. உன் நோக்கால் என் காதல் நோயை நீ தீர்த்தாய்!" என்று தலைவன் தலைவிக்குக் கூறுகிறான். ஆனால், அதே தலைவன் நாளடைவில் வேறொருத்தியின் நோக்குக்காக ஏங்குகிறான். இந்நிலையில் ஒரு பெண்ணின் நோக்கு அவனுக்கு நோயையே உண்டாக்க வில்லையா?

இனி, மனிதனின் ஆன்ம நோயை முற்றிலும் நீக்கக்கூடிய மருந்து ஒன்று உண்டு. அஃது இறைவனாகிய தலைமகளின் பேரின்ப நோக்கு ஆகும். இறைவனின் நோக்கும் தொடக்கத்தில் ஆன்மாவுக்கு ஒரு விதத் துன்பத்தை விளைவிக்கும்.

சிற்றின்பம் தரும் பொருள்கள் மீது மனிதனுக்குள்ள அவாவினால் ஏற்படும் துன்பமே அது. அஃதாவது, இயல்பாக ஏற்படும் அவாவினை நிறைவுபடுத்த 'கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புல' இன்பத்தை நாடுகிறான் அவன். இவ்வின்பத்தைப் பெரும்பாலும் 'ஒண்டொடி'யிடத்து நாடுகிறான். அல்லது பணம், புகழ் முதலிய சிற்றின்ப சாதனங்களை நாடுகிறான். அவற்றைத் துய்க்க முனை கின்றான்.

ஆனால், அதே சமயத்தில், இறைவனின் 'நோக்கு' மனிதன்பால் செல்கின்றது. ''இச்சிற்றின்பச் சாதனங்களால் உனக்கு மன நிறைவு கிடைக்கும் என்று எண்ணுகிறாயா? உன் உள்ளத்திற்கு நிறைவு தந்து, உனக்குள்ள மனநோயை முற்றிலும் அகற்றக் கூடிய வலிமை எனக்கு மட்டுமே உண்டு. சிற்றின்பத்தையே நாடும் நீ, சிறியதொரு உயிர் அல்லை. எனக்குள்ள பேரானந்தப் பெருஞ்செல்வம் முழுதும் உனதே யாகக் கொண்டனுபவிக்கும் ஓர் அரிய நிலையை உனக்கு நான் அருளியுள்ளேன். எனக்குள்ள பேரின்பத்தில் பங்கு பெற்று இன்புறும் நிலையே அது. அதை நீ அடைந்து கொண்டால் அன்றி உன் மனநோய் தீராது,'' என்கிறான் இறைவன். சிற்றின்பக் கருவிகளை எளிதில் விட்டுவிட மனிதனுக்கு மனம் வருவதில்லை. விட்டுவிடுவது அவனுக்குக் கசப்பாக உள்ளது. இதுவே அவனது ஆன்ம நோய்! இறைவனது ஒரு நோக்கு இந்நோயை விளைவித்தது என்க. இந்நிலையில் ஆன்மாவின் மீது இறைவனாகிய தலைமகள் தன் அருள் நோக்கைச் செலுத்துகிறான். அந்நோக்கினால் அவன்,

> ''ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
> மெய்யுணர்வு இல்லா தவர்க்கு.'' (354)

என்னும் பேருண்மையை உணர்கின்றான். 'பொருளல்ல வற்றைப் (அஃதாவது, சிற்றின்பத்தை) பொருள் என்று (அஃதாவது, உண்மைப் பொருள் என்று) உணர்வது மருள்' எனத் தெளிகிறான். 'காமம், வெகுளி, மயக்கம் இவை மூன்றும்' ஒருவித நோய் என்றும், இவற்றின் 'நாமம் கெட' நோய் நீங்கும் என்றும் உணர்கிறான். 'சிறப்பென்னும் செம் பொருளா'கிய இறைவனைக் காண்பதே அறிவு. அஃதொன்றே, தன் மனநோய் நீங்க வழி என்றெல்லாம் உணர்கின்றான்.

செம்பொருளாகிய இறைவனைக் காண விழைகிறான்; பேரின்பத்தை நாடுகிறான். இறைவனின் அருள்நோக்கு அவனைப் பேரின்பத்துக்கு அழைக்கிறது. 'தன் நோய்க்குத்தானே மருந்து' ஆகின்றான் இறைவன்.

இறைவனின் இத்தகைய இரு நோக்கை விவிலியத்திலிருந்து அறிகின்றோம்.

''கொல்லுபவரும் உயிர்ப்பிக்கிறவரும் நாமே;

காயப்படுத்துபவரும் குணமாக்குபவரும் நாமே'' (உபாக. 32:39), என்னும் கருத்துப் பன்முறை கூறப்படுகிறது.

இனி, வள்ளுவர் ஈண்டுக் கூற விரும்பியது பெண்ணின் நோக்கினையா? இறைவனின் நோக்கினையா? ''எத்துணை அழகினளாயினும் ஒரு பெண்ணின் நோக்கு எவ்வளவுதான் மன நோய்க்கு மருந்தெனக் காணப்படினும், நிலையான மருந்தாக விளங்குவது இறைவனின் அருள் நோக்கே-பேரின்ப நோக்கே. ஆகவே, அதையே நாடுவாய் மனிதா!'' என்று அறிவுறுத்துகிறார் வள்ளுவர். இது தெளிவு.

இந்த அருள் நோக்கை - பேரின்ப நோக்கை மனிதன் நாடும் முறை யாது?

இறைவன் படைத்து, உலகில் வைத்துள்ள பொருட்களின் அழகிலும், அவற்றில் காணும் ஒழுங்கிலும் இறைவனின் அழகு மிக்க நோக்கினை உய்த்துணர முயல வேண்டும். அப்பொருள்களை அவன் படைத்தது, உலகப் படைப்புப் பொருள்களின் சிகரமென விளங்கும் மனிதன் மீது கொண்ட காதலே - அன்பே ஆகும். அவனுக்கென்றே - அவனுடைய உலக வாழ்க்கைக்குப் பயன்படவும், அவற்றின் வாயிலாய் இறைவனின் அழகைக் காண வேண்டும் என்றும் அவற்றைப் படைத்தான். அங்ஙனமே அவனுடைய செயல்களிலும், உலக நிகழ்ச்சிகளிலும் அவனது காதற் குறிப்பு விளங்குகிறது. இவற்றை மனிதன் உய்த்துணர வேண்டும்.

ஆனால், இவற்றிற்கு மேலாக மனிதன் இறைவனாகிய தலைமகளது அன்புள்ளத்தை, அவனே உலகில் மானிடர்க்காகத்

தன்னைப் பலியாக்க - ஐந்தவித்தானாய்த் தோன்றியபோது அறிய முடிகிறது. 'தன் நண்பர்க்காக உயிரைத் தருவதைவிட மேலான அன்பு இல்லை', என்று அன்புக்கு இலக்கணம் கூறிய அவர், ஆன்மாக்கள் (மாந்தர்)மீது தனக்குள்ள அளவிடவியலாக் காதலை-அன்பை வெளிப்படுத்தினார். இது நேரிலேயே காணக் கூடியது. உய்த்துணர்வதோடு நில்லாமல், நேரிலே அவனது அன்புள்ளத்தைக் காணும் அளவுக்கு அவன் தன்னை வெளிப் படுத்தியுள்ளதால், சிறப்பாக இக்குறிப்பை அறியவியலும்.

1092. ''கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்திற்
செம்பாகம் அன்று பெரிது.''

இவள் கண்கள் நான் காணாமலிருக்கும்போது என்னைக் கள்ளத்தனமாய்ப் பார்க்கும் சிறு பார்வையும், காமம் தரும் இன்பத்தில் பாதிக்கு மேலாகவேயுள்ளது. அஃதாவது, அச்சிறு காதற் பார்வையே ஏறக்குறைய நிறை இன்பம் தருவது போல் இருக்கின்றது. தலை மகளின் சிறு நோக்கும் இவ்வளவு புகழப் படுகின்றது. கள்ளத்தனமாகப் பார்க்கும் சிறு பார்வையே அவ்வளவு இன்பம் பயப்பதாயின், நேரான முழுப் பார்வை எத்துணை இன்பம் பயக்கும்!

இவ்வளவு புகழப்படினும் பெண்ணின் சிறு நோக்கும் முழுநோக்கும் முழு மன நிறைவை அளிப்பதாயில்லை என்பது அனுபவத்தில் அறியப்படுவதொன்று.

ஆனால், இறைவனாகிய தலைமகளின் சிறு நோக்கும் அஃதாவது, அவன் தரும் அருளின் ஒரு துளியும் ஆன்மாவுக்கு மிகுந்த இன்பத்தைத் தருவதாகும். 'கள்ளத்தனமாகப் பார்ப்ப தென்றால்' ஆன்மாவை அன்பால் கவர்ந்திழுப்பதெனப் பொருள் கொள்ளலாம். அவனது கடைக்கண் பார்வை யால் கிடைக்கும் அருளே - மிகுந்த இன்பத்தை அளிப்பதாகும். முழுக் கண்ணையும் திறந்து பார்த்தானாகில் அஃதாவது, தன் அருளை முழுதுற வழங்குவானாயின், அவ்வின்பத்தை என்னென்பது! மறுமையில் கிடைக்கும் பேரின்பத்தின் தொடக்கம் என்றே கொள்ளலாம். இம்மையில் இறைவனைக் காண்பது, மறைவில் திரைக்குப் பின்னால் நின்று காண்பது போல் எனலாம். இப்பொருளிலும் 'கள்ளத்தனமாக' எனலாம். திரை விலகி அவன் இருப்பது போல் நேர்முகமாகக் காணும்

போது, பேரின்ப வெள்ளம் ஆன்மாவில் வந்து பாய்கின்றது. "ஒரு பெண்ணின் சிறு நோக்குக்காக ஏங்கி நிற்கும் மனிதா! அதில் உன் காம இன்பத்தைப் பாதிக்கு மேலேயே நுகர்வதாக எண்ணும் மனிதா! இறைவனின் அருளை நீ நிறையப் பெறும் போது இம்மையிலேயே நீ பாதிக்கு மேல் பேரின்பத்தை அடைகின்றாய். அந்நிலையில் நீ மறுமைக்குச் செல்வாயானால், பேரின்பத்தை முழுதும் அடைவாய். இதை எண்ணி உன் நோக்கை இறைவனாகிய தலைமகள்பால் செலுத்து. மானிடப் பெண்ணாகிய தலைமகள்பால் உன்னை முழுதும் பறிகொடுத்து விடாதே!"— இதுவே இக்குறளின் கருத்து.

1093. "நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதவள்
யாப்பினுள் அட்டிய நீர்."

யாப்பு — அன்புக்கட்டு (ஈண்டு அன்புப் பயிர்)
அட்டுதல்—வார்த்தல்.

நான் பார்க்காதபோது அவள் அன்போடு என்னைப் பார்த்தாள். பார்த்துத் தலை குனிந்தாள் (இறைஞ்சினாள்). அங்ஙனம் பார்த்தது, எங்கள் 'இருவரிடத்தும் அன்பாகிய பயிர் வளர நீர் பாய்ச்சியது போலாயிற்று.

முந்திய குறளில் கள்ளத்தனமாகப் பார்த்தது ஏறக்குறைய முழு இன்பத்தைத் தந்ததாகக் கூறிற்று. இக்குறளில், அங்ஙனம் நான் பார்க்காதபோது, அவள் (கள்ளத்தனமாகப்) பார்த்துத் தலை குனிந்தது மேற்கூறிய பாதிக்கு மேலான இன்பத்தை மேலும் வளர்ப்பது போலாயிற்று—எனக் கூறப்படுகிறது. காதல் வளர்ச்சியடைவதும் அத்தகைய பார்வையாலேயே என்றது. இங்ஙனமே இறைவனாகிய தலைமகளின் அன்பும் வளர்ச்சி பெறுகிறது.

'நான் பார்க்காதபோது இறைவன் என்னைப் பார்த்துத் தலை குனிகிறான்' என்றால் பொருள் என்ன? மானிடப் பெண் நாணத்தால் தலை குனியலாம். இறைவன் வெட்கத்தால் அன்று, மனிதனின் பலவீனத்தை உணர்ந்தவனாதலால் தனது அருள் நோக்கை முழுதுறச் செலுத்தினால், மனிதன் தாங்க இயலாமல் போகலாம் என்று, இரக்கமுடன் செயலாற்றுவதைக் குறிக்கிறது. இரக்க முறுவதும் ஒரு விதத்தில் தலை குனிவது

போல்தான்! இறைவன் தலை நிமிர்ந்து-தன் முழு ஆற்றலுடன் செயல் புரிந்தால், எளிய மனிதன் உடனே அதை ஏற்றுக் கொள்ளப் போதிய பலம் இல்லாதவனாய் தவிக்கக்கூடும் என்றே இறைவன் இங்ஙனம் செயல் புரிகின்றான். விவிலியத்தில் காணும் பின்வரும் நிகழ்ச்சி இதை விளக்குகின்றது. மிகமிக உருவகமாகக் கூறப்படுகின்றது. எனினும் கருத்துத் தெளிவு.

"மோசே என்னும் இறைவனின் அடியான், அவரை நோக்கி 'உம்முடைய மாட்சியை எனக்குக் காண்பித்தருளும்' என்றார். அப்பொழுது அவர், 'நாம் உனக்கு முழு நன்மையைக் காண்பிப்போம். அன்றியும், நாம் உனக்கு முன் ஆண்டவ ருடைய (திருப்) பெயரைக் கூறுவோம். எவனிடம் பிரசன்னமா யிருப்போமோ அவன் மட்டில் இரங்குவோம். எவன்மீது இரக்கமாய் இருக்கத் திருவுளம் கொள்வோமோ அவன் மேல் இரக்கம் வைப்போம்' என்றருளினார். 'ஆனால், ஒரு மனிதனும் நம்மைக் கண்டபின் உயிரோடிருக்க இயலாதாகையால், நீ நம்முடைய முகத்தைப் பார்க்க மாட்டாய்' என்றார். திரும்பவும் ஆண்டவர், 'இதோ நம்மருகில் ஓர் இடமுண்டு. நீ பாறையின் மேல் நிற்பாய். பிறகு நமது மாட்சி கடந்து போகும்பொழுது நாம் உன்னைப் பாறைக் குகையில் இருத்தி நாம் அப்பாற் போகுமட்டும் நம்முடைய வலக்கையால் உன்னை மூடுவோம். பிறகு நாம் கையை எடுத்துவிடும்போது நீ நமது பின்புறத்தைக் காண்பாய். நம் முகத்தையோ நீ காணமாட்டாய்'' என்றார். (யாத். 33:18-23).

இங்ஙனம் இறைவன் இரக்கம் காட்டுவதும் அருள் புரிவதும், தம் அருட்பார்வையை அருளன்புடன் மனிதன்பால் திருப்புவதும் ஆன்மாவில் இறை அன்பை வளர்க்கவேயாம். முளைத்து வரும் இளஞ்செடிக்கு நீர் பாய்ச்சுவது, வளர்ந்த செடிக்குப் பாய்ச்சுவது போல் அன்று. சிறு குழந்தைக்கு உணவு ஊட்டுவது வளர்ச்சி பெற்ற குழந்தைக்கு ஊட்டுவது போல் அன்று. இளஞ்செடிக்கு மிகக் கவனமாக — நிதானமாக — சிறிது சிறிதாகப் பாய்ச்ச வேண்டும். பெரிய குடத்திலிருந்து மடமடவென்று செடிமேல் தண்ணீர் ஊற்றினால், இளஞ்செடி பழுதுபடலாம்; நசுங்கியும் விடலாம். அங்ஙனமே சிறு குழந்தைக்கு அவசரமாகக் கெட்டி யுணவு கொடுத்தால் ஆகாது. மென்மையான — இலேசான

உணவைச் சிறிது சிறிதாக ஊட்ட வேண்டும். இங்ஙனமே, பேரின்பமடைவதற்கேற்ற பாதையில் தவழ்ந்து கொண்டிருக்கும் ஆன்மாவுக்கு இறைவன் தன் அருளையும் அன்பையும் மிக அருமையாக ஊட்ட வேண்டும்; அருளாகிய நீரைப் பாய்ச்ச வேண்டும். அ அப்போதுதான் ஆன்மா அன்பில் வளர்ச்சியடைய இயலும்.

1094. ''யான்நோக்கும் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும்.''

நான் பார்க்காதபோது அவள் என்னைக் கள்ளத்தனமாக நோக்குகிறாள்; நான் பார்க்கும்போதோ அவள் என்னைப் பாராது தரையை நோக்குவாள். மீண்டும் நான் பார்க்கா விட்டால் என்னைப் பார்த்து, மெல்லப் புன் சிரிப்புடன் உள்ளுக்குள் மகிழ்ச்சியடைவாள்.

இவையெல்லாம் காதலர்கட்கிடையே நிகழும் சாதாரண நிகழ்ச்சிகளே; சிறப்பாகக் காதல் முற்றுவதற்கு முன்பு நடை பெறுபவைதாம்.

வெறும் மானிடக் காதலர்க்கிடையில் இஃது எளிதாகப் புரிந்து கொள்ளக்கூடியதே. இறைவனும் மனித ஆன்மாவுமாகிய காதலர்க்கிடையே இஃது எங்ஙனம் நிகழ்கின்றது?

எளிமையிலும் அருளிழந்த நிலையிலும் ஆன்மா இறைவனது அருள் நோக்குக்காக ஏங்கி, அவன்பால் தன் உள்ளக் கண்ணைத் திருப்பும்போது, இறைவன் 'நிலன் நோக்கு'வது போல் பாராமுகமாயிருப்பதுண்டு. வாழ்க்கையில் பன்முறை இங்ஙனம் நிகழ்வதை காண்கிறோம். ஆன்மாவின் மன நிலைபற்றியோ எளிமைபற்றியோ அவனுக்குச் சிறிதும் கவலையில்லையென்றன்று; தன் நிலையை மேலும் நன்குணர வேண்டும், இறைவனிடம் மட்டுமே தனக்கு ஈடேற்றம் உண்டு என்னும் ஒரே நம்பிக்கையில் அவனுடைய அருளுக்காகக் காத்திருத்தல் ஆன்மாவுக்கு நலனே என்று கருதி, இங்ஙனம் பாராமுக மாயிருப்பதுண்டு. எதிர்பார்ப்பது உடனே கிடைத்துவிட்டால் இறைவனைப் பற்றிக்கொண்டு நிற்கவேண்டிய மனம் எளிதாகக் குன்றிவிடக்கூடும். ஆகவே, இறைவன் இங்ஙனம்

செயல் புரிகிறான். பொதுவாக, உலக வாழ்க்கையில்கூட இவ்வாறு நிகழ்வதைக் காண்கிறோம். விலைமதிப்புள்ள, அல்லது மிக உயர்வான ஒன்றைப் பெற வேண்டுமாயின், மிக உழைத்து, வெகுவாய் எதிர்பார்த்து அடையவேண்டியுள்ள தன்றோ? எளிதில் கிடைக்கும் எதையும் நாம் அதிகமாக மதிப்ப தில்லை எனக் காண்கிறோம்.

இனி, மனிதன் அடையக்கூடிய நன்மைகளுள் இறைவன் தரும் அருள் - அன்புக்கு மேலானது எதுவுமில்லையல்லவா? ஆகவே, அவனிடமிருந்து இம்மாபெரும் நன்மையைப் பெறுமுன் பாராமுகமாயிருப்பதுபோல் அவன் காணப்படுவதும், ஆன்மா தன் முயற்சியை விடாமல் நம்பிக்கையுடன் எதிர்பார்ப்பதும் முறையேயன்றோ?

விரும்பியதை, எதிர்பார்ப்பதை உடனே அடையாவிட்டால், ஆன்மா ஒருவித சலிப்பும் மனத்தளர்ச்சியுமுற்று இறைவனையே நம்பிக்கையுடன் நோக்கும் மனப்பான்மையில் தளர்வுறக்கூடும். இது நிகழும்போது, இறைவன் சினம் கொள்வதில்லை; ஆன்மாவின் போக்கை வெறுப்பதில்லை. இறுதியில் தன் அருள் அதற்குக் கிடைத்தே தீரும் - நம்பிக்கையை விடாமல் தன்னை நோக்கிய வண்ணமாய் வாழ்க்கை நடத்தினால் நிச்சயமாக அவன் அருளும் அன்பும் நிரம்பப் பெற இயலும் என்று இறைவன் நன்கு அறிந்திருப்பதாலும், ஆன்மாவின் நன்மைக் காகவே இங்ஙனம் ஓரளவு பாராமுகமாயிருக்க வேண்டியிருப் பதாலும், அவன் எத்தகைய சினமோ, வெறுப்போ கொள்வ தற்கு மாறாக, 'மெல்ல நகும்'. அஃதாவது, "அஞ்சாதே, உன்னைக் கைவிடேன், பொறுமையாயிரு, அருள் பொழிவேன்" என்றவாறு கூறுகிறான். 'மெல்ல நகும்' என்பதற்கு இதுதான் பொருள் எனலாம்.

1095. "குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும்."

குறிக்கொண்டு நோக்குதல் = நேராகப் பார்ப்பது
சிறக்கணித்தல் - கடைக்கண்ணால் பார்த்தல்.

நேராக என்னைப் பார்த்துத் தன் காதலை வெளிப்படுத்த வில்லையெனினும், ஒரு கண்ணைச் சுருக்கினாற்போல் பார்க் காமல் போகவில்லை. அங்ஙனம் சுருக்கிப்பார்த்தபோதும்

மகிழ்ச்சியடையாமல் போகவில்லை. மகிழ்ச்சியால் புன்முறுவல் பூத்தவளாயினள்.

முந்திய குறளில் கூறப்பட்ட 'மெல்ல நகும்' என்றதற்கு இது மேலும் விளக்கம் எனத் தோன்றுகிறது.

முந்திய குறளில் இறைவனாகிய தலைமகள், ஏன் பாரா முகமாயிருக்கிறான் என்பது அழுத்தமாகக் கூறப்பட்டது. இக் குறளில் அங்ஙனம் பாராமுகமாயிருந்தபோதிலும் ஒரு சிறிதும் பாராமல் இருந்து விடுவதில்லை; ஓரளவேனும் அருள் கூர்கிறான் என்னும் கருத்து ஓரளவு வலியுறுத்தப்படுகின்றது. கண்ணைச் சுருக்கிப் பார்ப்பதுபோல அருள் நோக்கு ஒரு சிறிதேனும் இல்லாவிடில், ஆன்மா முற்றும் திகைப்புற்றுக் கதிகலங்கிவிடக்கூடும். ஆகவேதான், இக்கருத்து வலியுறுத்தப் படுகின்றது.

1096. "உறாஅ தவர்போற் சொலினும் செறாஅர்சொல்
ஒல்லை யுணரப் படும்."

உறாதவர் - அயலார்
செறுத்தல் - கோபித்தல்
செறுநர் - பகைவர்,
செறாஅர் - பகைமை இல்லாதவர்
ஒல்லை - விரைவில்

எவ்வுறவும் இல்லாத அயலார் போல் (கடும்) சொல் பேசிடினும், பேசப்பட்டது பகைமையையோ வெறுப்பையோ அடிப்படையாகக் கொண்டு எழுந்த சொல் அன்று (வேறு ஏதோ காரணத்தால் எழுந்தது) என்னும் உண்மை விரைவில் வெளிப்பட்டுவிடும்.

உறவற்றவர்போல் பேசுவதும், அஃது உண்மையில், வெறுப்பின் காரணமாக எழுந்தது அன்று என விரைவில் உணரப்படுவதும் இம்மைக் காதலர்களிடையே எந்த அளவுக்கு நிகழ்கின்றது என்பது வினவப்பட வேண்டியதொரு வினா. எந்நேரமும் அன்பும் பாசமும் நிரம்பிய சொற்களையே கேட்க வேண்டுமென்று எதிர்பார்ப்பதுதான் நடைமுறையில் பெரும் பாலும் நாம் காண்பது. கவனமின்றிக்கூட, பாசமற்ற ஒரு சிறு சொல் பேசிவிட்டாலும் எத்துணை சச்சரவுகள் நிகழ் கின்றன என்பது நாம் அடிக்கடிக் காண்பது. உள்ளத்தில்

உண்மையான அன்பையே கொண்டு, வெளிப்படையாக அவ் அன்பை வெளிப்படுத்தாத சொல் வாயினின்று எழும் போதுகூட, உள்ளக்கிடக்கையை முழுதுற அறியாத நிலையில்தான் பெரும்பாலும் உலகக் காதலர்கள் உள்ளனர் என்பது கண்கூடு. இவ்விதிக்கு விலக்காக இருப்பவர் மிக மிகச் சிலரேயாவர். இவ்வரிய விதிவிலக்கை மனத்தில் கொண்டு தான் இக்குறள் எழுதப்பட்டது என்பதற்கில்லை. மாறாக மறுமைக்குரிய பேரின்பக் காதலர் எனக் கணிக்கப்படக்கூடிய இறைவனுக்கும் ஆன்மாவுக்குமிடையே நிகழும் அன்புக்குத்தான் இக்குறளில் கூறப்படும் கருத்துச் சிறப்பாகப் பொருந்தும்.

எவ்வாறெனில், ஆன்மாவின் மீது இறைவனுக்குள்ள அன்பு இணையற்றது—ஐயத்துக்கு இடமில்லாதது. ஆன்மா (மனிதன்) இதனை முற்றுமுணர்ந்து, அவன் அன்புக்குப் பிரதியன்பு தக்க முறையில் செலுத்துவதில்லை என்பது யாவரும் ஒப்புக்கொள்ளப்படத்தக்கதே. சுயநலமும் இம்மை இன்பப்பற்றும், சிறப்பாகச் சிற்றின்ப நோக்கும் மேலோங்கும் உள்ளம் படைத்த எளிய மனிதன், அத்துணை இறை அன்புக்கு உண்மையில் சரியான அன்பைச் செலுத்த இயலாத நிலையில்தான் உள்ளான். பேதை ஆன்மாவுக்கு இதை நன்குணர்த்தவும் படிப் படியாக அன்பென்னும் சிகரத்தை அடையத் துணைபுரியவும் அருள் புரியவும் அன்பு வழி செலுத்தவும் படிப்படியாகச் சுயநலம், இம்மைப்பற்று முதலிய அனைத்தையும் விட்டொழித்து, இறைவனை மட்டுமே பற்றிக்கொள்ள அவனே ஆன்மாவுக்குப் பயிற்சி அளிக்கின்றான். இந்தப் பயிற்சியின் ஒரு முக்கிய அம்சமே இக்குறளில் கூறப்படுகிறது.

இறைவனுக்கு ஆன்மா மீதுள்ள அன்பு எந்நாளும் குறைவதில்லை - மறைவதில்லை. அந்த அன்பை ஓயாமல் காட்டிக் கொண்டேயிருந்தால், ஆழ்ந்த அன்பு வளர்வதற்கு இடமிராது. எந்நேரமும் அன்பென்னும் இனிமையையே சுவைத்துக் கொண்டே இருந்தால், அது மிக்க ஆழமானதாவதற்கு வழியில்லை. இனிமையைத் துய்ப்பது எளிது; அது நாம் எப்போதும் நாடுவதொன்று. ஆகவே, இனிமை மட்டுமே எந் நேரமும் துய்க்க இறைவன் வழி செய்வானானால், அதில்

மிகுந்த உயர்வோ மதிப்போ இருத்தல் இயலாது. அதற்குச் சிறிதேனும் துன்பத் துய்ப்பும் அவசியப்படுகிறது.

மென்மை உணவை உண்டுகொண்டிருக்கும் குழந்தை முழு வளர்ச்சியடையாது. கெட்டிப் பொருளும் உண்ண வேண்டியிருக்கும். உடல் உரன் அதிகம் தேவைப்படாத சிறு வேலைகளைச் செய்துகொண்டிருப்பவன் வலிமையடைவதற்கு வழியில்லை. அதுபோல இனிமையே சுவைத்துக்கொண்டிருக்கும் ஒருவனிடத்துச் சில குறைபாடுகள் இல்லாமல் போகா. உணவுப் பொருளிலும் சிறிது உவர்ப்பு, கைப்பு முதலியன இருப்பது உடலின் நலத்துக்காகத்தான். உடல் உரம் பெற இவை ஓரளவில் தேவைப்படுகின்றன. அங்ஙனமே வாழ்க்கையிலும் எப்போதுமே இனிய எளிய முயற்சி அதிகம் தேவைப்படாத செயல்களை மட்டுமே செய்பவனுடைய உடலும் உரன் பெறாது; உள்ளமும் பண்படாது. உடலாலும் உள்ளத்தாலும் அதிகம் உழைப்பவனே முழு வளர்ச்சியடையக்கூடும்; நிறைவு எய்த முடியும். ஆகவே, எப்போதுமே இன்பம் தரும் சூழ்நிலை மட்டும் இருந்தால், மனித உள்ளம் அதிகம் பண்படாது. சில நேரங்களில் துன்பம் தரும் சூழலும் தேவைப்படுகிறது. இதை அனுபவத்திலும் காண்கிறோம். கடின உழைப்பினால் ஓரளவு துன்பமும் ஏற்று, அல்லது பண்பட்டதொரு செயலை - அரியதொரு சாதனையை வெற்றிகரமாக முடிக்குங்காலை நமக்கு ஏற்படும் மகிழ்ச்சியும் பெருமையும் தனிப்பட்டதென்பதில் ஐயமில்லை. உடல் வருத்தத்துக்கோ சிறிது துன்ப நிலைக்கோ அஞ்சி எந்தச் சாதனையையும் மேற்கொள்ளத் துணியாத ஒருவனை யாரும் பாராட்டப்போவதில்லை. அஃது எவ்விதத்திலும் இழிவென்றே கருதுவோம்.

இந்த அடிப்படையில்தான் இக்குறளில் கூறப்படும் கருத்தையும் விளங்கிக்கொள்ள வேண்டும்.

பிறர் அன்பைச் சுவைப்பது இனிமை. அன்புடையாரது சிறு சொல்லும் செயலும் இனிமை பயக்கின்றது. அதற்காக ஏங்குகின்றோம். அச்சொல்லோ செயலோ குறைவுபட்டால், உடனே மனம் உடைந்து போகிறோம். உள்ளத்தில் ஆழமான அன்பை வைத்துக்கொண்டே வெளிப்படையாக ஒரு சிறிது பற்றின்மையைக் காட்டினாலும் துன்புறுகிறோம். ஆனால், மேற்கூறியவாறு எந்நேரமும் அன்பையே சுவைத்துக்கொண்

டிருந்தால் அஃது ஆழ்ந்த, உறுதியுள்ள, தெய்வீகமான அன்பாக மாறுவதற்கிடமிராது. ஆகவே, துன்பநிலை சிறிதேனும் தேவைப்படுகிறது. மேலும், எல்லாம் இன்பமாக நிகழும்போது காட்டப்படும் அன்புக்கும், துன்ப நிலையிலும் சிறிதும் குறைவு படாமல் காட்டப்படும் அன்புக்கும் எவ்வளவோ வேறுபாடு உள்ளது. முந்தியது மிகச்சாதாரண அன்பு; பிந்தியது வீர அன்பு. அன்பின் உண்மை இலக்கணத்தைக் காட்டும் அன்பு-பிறர்க்காகத் தியாகம் செய்யும் அளவுக்கு அன்பு காட்டுவதே இந்த இலக்கணம். அன்பை எதிர்பார்த்து அன்பு செலுத்துவதில் சிறப்பு ஒன்றுமில்லை. 'அன்பிலாரெல்லாம் தமக்குரியர்' என்று வாழ்வோரும், 'என்பும் உரியர் பிறர்க்கு' என்று வாழ்வோருமே இந்த இலக்கணத்துக்கு ஏற்றவர். இதைக் குறிப்பிட்டே அறிஞர் திரு. வி. க. அவர்கள்,

> ''அன்பினிலே குறையிருந்தால் அருஞ்செயலை ஆற்றல்
> ஆகாதே, ஆகாதே, அன்புடைய அறவோர்
> என்பும் பிறர்க்குரியரென எழுந்த மொழிக்குகந்த
> இலக்கியமாய் இலங்கி நிற்கும் யேசுகுருநாதா!''

என்று இறைஞ்சுகின்றார்.

'தன் நண்பர்க்காக உயிர் கொடுப்பதைவிட மேலான அன்பு இல்லை' என்று அந்த இயேசு குருநாதன் அன்புக்கு இலக்கணம் கூறியுள்ளதும் கவனித்தற்பாலது. இலக்கணம் கூறியவர் தாமே இலக்கியமாய் விளங்குவதும் கண்கூடு. அவரது வாழ்வெல்லாம் இந்த இலக்கணத்துக்குகந்த இலக்கியமேயாம். இதனாற்றான் கிறித்துவத்தில் அன்பு என்னும் போது தியாகத்துடன்கூடிய அன்பையே பெரும்பாலும் குறிப்பிடுகிறோம். ஓரளவேனும் தியாக உணர்வு, செயல் இல்லாத அன்பு நிறையன்பு ஆகாது என்பது கருத்து. மனிதரிடையே விளங்கவேண்டிய அன்பும் இத்தகையதாகத்தான் ஓரளவேனும் இருத்தல் வேண்டும். இல்லையேல் அது பெரும்பாலும் சுயநல நோக்குள்ள அன்பாகத்தான் இருக்கும். இஃது அனுபவத்திலும் அடிக்கடி நாம் காண்கிறோம். ஏதாவது நன்மை பெறக்கூடியவரையில் அன்பும் நட்பும் விளங்கும். அந்த நிலை மாறியவுடன் அன்பும் நட்பும் மறைந்தொழியும்.

இனி மானிடக் காதலரிடையும் இத்தகைய சுயநலமிக்க அன்பு மிகுந்தால் துன்பநிலை நிகழ்வது எளிது. சிறிதேனும் துன்பத்தைப் பிறர்க்காக (காதலன் காதலிக்காக, காதலி காதலனுக்காக) ஏற்றால்தான், அன்பு உரன் பெறும்; மற்றையது சிறிது சிறிதாகக் குறைந்து, இறுதியில் மறைந்தே விடும். மிக மிக நெருங்கிய காதலர்கள் பிரிவதன் காரணம் இதுதான். மணவாழ்க்கையில் இஃது அடிக்கடி நிகழ்வதைக் காண்கிறோம். ஆகவேதான்,

'அன்பெல்லாம் அன்பன்று, அன்பர்க்காய்த்
துன்புறும் அன்பே பேரன்பாகும்'

என்று கூறவேண்டியிருக்கிறது.

இனி, இறைவனும் ஆன்மாவுமாகிய பேரின்பக் காதலரிடையும் அன்பு இந்நியதிக்குட்பட்டுத்தான் வளர இயலும். இதை ஆன்மா அதிகம் உணராவிடினும் இறைவன் படிப் படியாக '**உறாஅதவர் போல்**' நடிப்பதால் உணர்த்துகின்றார். ஆன்மாவும் இதை விரைவில் உணராவிட்டாலும், இந்த 'அன்பு' முறைப் பயிற்சி, முதிர முதிர உணரப்படும்; மிகுந்த அருள் பெற்றவர்களால் 'ஒல்லை' உணரப்படும்.

1097. ''செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்
உறாஅர்போன் றுற்றார் குறிப்பு.''

செறாஅ - செறாத, ஏற்காத, உவப்பளிக்காத.

(செறுதல் - கோபித்தல்)

செற்றார் - பகைவர்

உறாஅர் - உறவினர் அல்லார், நண்பர் அல்லாதவர்.

உற்றார் - உறவினர், நண்பர்.

உள்ளத்தில் சினம் இல்லாதிருந்தும் (வெளிப்படையாக) சொல்லப்படும் அன்பில்லாச் சொல்லும், வெறுப்புள்ளவர்போல் (வெளிப்படையாக) பார்க்கின்ற பார்வையும், தொடர்பில்லாதவர்போல வெளியே தோன்றினாலும் அவை உள்ளத்தில் அன்புறவு கொண்டவர்களது அடையாளமாகும்.

1091 முதல் 1095 உட்படக் காதல் நோக்குக் குறித்துச் சிறப்பாகக் கூறப்பட்டது. குறள் 1096ல் காதற் சொல் குறித்துச் சொல்லப்பட்டது. இக்குறளில் சொல்லும் நோக்கும் தொகுத்துக் கூறப்படுகின்றன. முந்திய குறளில் 'சொல்' குறித்துக் கூறப்பட்ட விளக்கம் நோக்குக்கும் பொருந்தும்.

1098. "அசையியற்கு உண்டாண்டோர் ஏஎர்யான் நோக்கப்
பசையினள் பைய நகும்"

அசை இயல் - அசையும் தன்மையுள்ள பெண்.

(அசையும் மெல்லியலாள் - காதலி)

ஏர்-அழகு; எழுச்சி - தோற்றப்பொலிவு.

பசை - இரக்கம்

ஏஎர் - இசைநிறை அளபெடை.

ஏர் - ஆகுபெயர் (அழகுமிக்கவள்).

யான் (காதலன்) நோக்கும்போது இரக்கமுள்ள அவள் (காதலி) மெல்ல நகுவாள். அந்த நகையிலும் (புன்சிரிப்பிலும்) என் காதலியின் கண் ஓர் அழகு, எழுச்சியுடன் காணப்படும்.

இரக்கம் கொண்டு நகுவாள் எனினும் பொருந்தும். அதிலும் அழகு, அருள், எழுச்சி, அன்பு தோன்றும்.

இம்மைக்காதலியை 'இரக்கமுள்ள அவள்' என்றோ 'இரக்கம் கொண்டு' என்றோ குறிப்பிடுவது பொருந்துமா? இரக்கத்தால் உந்தப்பட்டுக் காதல் வெளிப்படுத்துவது இரக்கமேயன்றி எங்ஙனம் அன்பு ஆகும்? அன்பெனப்படுவது பிறர் மாட்டுள்ள, உள்ள நெகிழ்ச்சியால் அல்லது ஒருவர்பால் ஒருவர் ஈர்க்கப் படுவதால் உண்டாவதன்றோ? ஆகவே, மானிடக் காதலரைப் பொறுத்தமட்டில் காதலியின் இரக்கம் குறித்துப் பேசுவது காதலனுக்கு இகழ்ச்சியேயன்றி வேறென்ன? பெண்ணின் அழகினால் ஈர்க்கப்படுவது எவ்விதத்திலும் குறைபாடன்று. ஈர்க்கப்படும் ஆணிடம் தானும் ஈர்க்கப்பட்டால்தான் ஆணுக்கும் பெருமை. அங்ஙனம் ஈர்க்கப்படாமல் ஏதோ இரக்கம் கொண்டவளாகத் தன் இதயத்தில் அவனுக்கு இடம்

கொடுத்தால், அஃது ஆணுக்குப் பெருமையும் ஆகாது; உண்மைக் காதலும் ஆகாது.

மானிடக் காதலர்களைப் பொறுத்தமட்டில், இஃது உண்மையேயாயினும், இறைவனும் ஆன்மாவுமான காதலரிடையே இக்கருத்துச் செல்லாது. ஏனெனில், மானிடக் காதலர் மனித இயல்பில் சரி நிகரானவர்கள். ஆகவே, அவர்கள் காட்டக்கூடிய காதலும் எவ்வகையிலும் நிகரானதே. ஆண் காதல், பெண்காதல் என்பது ஆண் பெண் என்னும் வேறுபாட்டின் மேல் அமைந்துள்ளதால், ஓரளவு வேறுபட்டதாயினும், சமமானதேயாகும். 'இரக்கம்' என்பது உயர்ந்தவர் தாழ்ந்தவர் மீதும், வலிமை படைத்தவர் வலிமையற்றவர் மீதும் காட்டும் பரிவாதலால், சமமான இயல்புடையவர்களிடையே இந்த இரக்கத்துக்கு இடமில்லை. ஆனால், அளவில்லா மாண்பு மிக்க இறைவனுக்கும், அளவுள்ள தன்மை கொண்ட ஆன்மாவுக்குமிடையே இரக்கத்துக்கு இடமுண்டு. ஆன்மாவின் இழிநிலைக்கு இரங்கிப் பரிவு காட்டினால்தான் இந்தப் பேரின்பக் காதலுக்கு இடம் உளதாகும். இறைவனாகிய தலைமகள் இரக்கம் காட்டாவிடின்—அவனே முதனின்று அன்புறவைத் தொடங்கி வைக்காவிடின், இந்தப் பேரின்பக்காதல் என்னும் பேச்சுக்கே இடமிராது. ஆகவே, 'பசையினள்' என்று இக்குறளில் கூறப்படுவது சிறப்பாக, இறைவனாகிய தலைமகளுக்கே பொருந்தும் என்க. தொடக்கத்தில் விளக்கியது போல, அவன் தன் படைப்பின் அழகாலும் கவர்ச்சியாலும் ஆன்மாவை ஈர்த்தாலன்றி, ஆன்மா இறைவன்பால் ஈர்க்கப்பட வழியேயில்லை. இங்ஙனம் அவன் ஈர்ப்பதோ அவனது இரக்கச் செயலேயாகும். படைப்புப் பொருள்கள், எழிலால் மட்டுமன்று, தன் அருளாலும் மிகச் சிறப்பாக ஐந்தவித்தானாகி, 'அன்பிலார் எல்லாம் தமக்குரியர்' எனவும், தாம் 'என்பும் உரியர் பிறர்க்கு' எனவும் வாழ்ந்ததாலும், அவரது அளவில்லா இரக்கச் செயலை உணர்ந்து, அவன்பால் ஈர்க்கப்படுகின்றன.

1099. "ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள."

ஏதிலார் போல, அஃதாவது முன்பின் அறிமுகமாகாதவர் போலப் பொதுப்பார்வை (அஃதாவது, காதலோ பரிவோ

அதிகம் வெளிப்படாதது போன்ற பார்வை) பார்ப்பது காதலர்களிடையே நிகழ்வதொன்றாம்.

முந்திய குறட்களில் கூறப்பட்ட கருத்தே மீண்டும் வலியுறுத்தப்படுகிறது. தொடக்க நிலையில் இத்தகைய பொதுப் பார்வையே நிகழும். நாள் செல்லச் செல்ல ஓரளவு பரிவும் காதலும் அதிகமாகும். களவியலில் இதற்கு மேல் நிகழ்வதற் கில்லை. திருமணமான பின்னரே பொது நோக்கு மாறி, புணர்வு நிகழும்; அங்ஙனம் நிகழும்போது காதல் கனிந்து விடுகிறது. திருமணமான பின்னர்க் காதலர் என்று குறிப்ப தில்லை: கணவன்-மனைவி என்னும் பெயரே பொருந்தும். ஆகவே, இப் பொதுநோக்குக் காதல் நிகழும் களவியற் கட்டத் திற்கு உரியது என்னும் கருத்தே இக்குறளில் கூறப்படுகிறது என்க. மானிடக் காதலரிடையே இங்ஙனம் நிகழ்வது, இறை வனும் ஆன்மாவுமாகிய பேரின்பக் காதலரிடையிலும் நிகழ்வ தாகும். தொடக்கத்தில் இறைவன் அருள்நோக்குப் பொது வானதாகவே இருக்கும். அஃதாவது, அத்துணை பரிவுடன் விளங்காது. நாளடைவில்தான் மிகும். இதன் காரணம் முன்னரே விளக்கப்பட்டது.

1100. ''கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச் சொற்கள்
என்ன பயனு மில.''

**கண்ணிணை**—இருகண்கள்

காதலர் இருவருள் இருவருடைய கண்ணும் காதல் நோக்கு உடையன. ஆதலால், வாய்ச்சொல் தேவையே இல்லை.

சிற்றின்ப மானிடக் காதலரிடையே இஃது உண்மையாயின், இறைவனும் மனிதனுமாகிய பேரின்பக் காதலரிடையே வாய்ச் சொல் தேவையில்லை என்று மட்டுமன்று, அதற்கு இடமே இல்லை என்றே கூற வேண்டும். ஏனென்றால், சிற்றின்பக் காதலர் எவ்வளவுதான் காதல் நோக்குடையவராயினும், சமயா சமயத்தில் வாய்ச் சொல்லுக்கு இடம் கொடுத்தே தீருவர். மனிதர் இயல்பே அப்படி. நீண்டகாலம் வாய்ச்சொல் எதுவும் இராதாயின், காதலில் குறைவு ஏற்படலாம் என்னும் அச்சமும் இராமலிராது. சிற்றின்பத்தில் அகமும் அகமும்

இணைவதைவிடப் புறமும் புறமுமே அதிகமாக இணைகின்றது. இது தெளிவு. பேரின்பக் காதலிலே இறைவனைப் பொறுத்த அளவில் உடலுக்கு இடமே இல்லை. மனிதனைப் பொறுத்த அளவில் அவனது அகந்தான் இறைவனோடு உள்ளுறவு கொள்கின்றது.

மனமும் மனமும் உறவு கொள்வதே பேரின்பத்தின் சிறப்பு. இறைவனின் அருள் உள்ளமும் அன்பு மனமும் மனிதனின் எளிய உள்ளமும் முன் கூறியது போல, இறைவனின் இரக்கப் பார்வையால் இணையும்போதே இப்பேரின்பம் உதயமாகின்றது. இஃது அகநோக்கினால் மட்டுமே நிகழ்வது. இதைத்தான் இறைவனின் அருள்நோக்கு என்கிறோம். இறைவன் அருள் கூர்ந்து நோக்குவதும், அருள் அளித்து ஆட்கொள்வதும் அன்பினால் தன்னோடு பேதை ஆன்மாவை (அக உறவில்) இணைத்துக் கொள்வதுமே இறைவனின் அகக் 'கண்ணொடு' மனிதனின் கண்ணிணை நோக்கு ஒக்குதலாகும். இந்த 'ஒக்குதல்' வளர வளர உள்ளத்தின்பம் ஓரளவு உடலிலும் உணரப்படலாம். உள்ளமும் உடலும் மிகமிக நெருங்கிய வகையில் இணைந்திருத்தலால், ஒன்றில் நிகழ்வது மற்றொன்றில் ஓரளவேனும் உணரப்படாதிருத்தல் இயலாது. எனினும் உள்ளத்தின் செயலே முனைந்திருக்கும்.

இறைவனின் 'வாய்ச் சொற்கள்' இல்லவே இல்லை என்று கூறுவதற்கில்லை. அவ்வப்போது இரு காதலர்கள் வாயினால் பேசப்படும் சொற்களால் பரிமாறிக்கொள்வதுபோல் அன்றி, ஒரு காலத்தில் 'இறைவனின் அருள் வாக்கு' என எழுந்து எழுதப் பெற்றுள்ள விவிலியத்தின் வாயிலாகக் கேட்கப்படுவதுண்டு. இதை மனிதன் கேட்கவும், தானும் வாய்ச்சொல் அதிகமின்றி உள்ளத்தினால் இறைவனோடு உறவாடவும் இயலும். இதுதான் பிரார்த்தனை எனப்படும். 'பிரார்த்தனை' என்னும் சொல்லுக்குப் பெரும்பாலும் இறைவனிடம் வரம் கேட்பது என்னும் பொருள் மட்டுமே பலரால் கொள்ளப்படுகிறது. ஆனால், இது முழுப்பொருள் ஆகாது. ஏதாவது ஒன்றைக் கேட்டுக்கொண்டே இருப்பதால் மட்டும் அன்புறவு வளராது. தேவையான அளவுக்கு இறைவனின் அருளை வேண்டுவது இன்றியமையாததே எனினும், அருளல்லாத பொருளை எந்நேரமும் வேண்டுவது ஏதாவது கைம்மாறு கருதி மட்டுமே இறைவனுடன் உறவு கொள்வதாகும். இது முழுமையான

அன்புறவு ஆகுமா? தன் இக நலனுக்காக மட்டுமே இறைவனுடன் உறவு கொள்வது (பிரார்த்தனை செய்வது) இறுதியில் சுயநலத்துடன் பெயரளவில் கலந்துள்ள அன்பாகும். நிறைவான அன்பாகாது. இறைவனை நினைந்து, அவனது மேன்மையை, 'எத்துணை நம் அன்புக்கு உரியவன், ஏற்றவன்,' என்றெல்லாம் எண்ணி அவனுக்கு அன்பு செய்வதே உண்மையான அன்பாகும். இப்பேற்றினை அடைய வாய்ச் சொல் தேவையேயில்லை, பயனில்லை என்று கூறவியலாது. தொடக்க நிலையில் தேவைப்படும்; பயன்படும்; ஆனால், இந்த அன்பு உறவு வளர வளரச் சொற்கள் குறையும்; அதிகம் தேவையும் படா. அன்பு உச்சநிலையடையும்போது பயன் படுவதுமில்லை. அகமும் அகமும் முழுதுற இணைந்த பின்னர், புறச் சொற்களால் என்ன பயன் இருக்கவியலும்!

## குறிப்பறிதல்

### சுருக்கம்

1091. "இருநோக் கிவள்உண்கண் உள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து."

இவளது மையுண்ட கண்கள் இருவிதப் பார்வை பார்க்கும். ஒன்று வருத்தம் தருவது. மற்றது அத்துன்பத்தை நீக்குவது. இறைவனின் அருட்பார்வை ஆன்மாவில் பேரின்ப ஏக்கம் விளைவிப்பது. அதே பார்வை அந்த ஏக்கத்தை நீக்குவது.

1092. "கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தில்
செம்பாகம் அன்று பெரிது."

இறைவனது அருட்பார்வையை நான் கவனியாதபோது, அவன் ஆன்மாவை நோக்கும் கடைக்கண் பார்வை சிறிதான இன்பத்தையன்று, பெரிதான பேரின்பத்தை விளைவிப்பதாம்.

1093. "நோக்கினாள் நோக்கி யிறைஞ்சினாள் அஃதவள்
யாப்பினுள் அட்டிய நீர்."

இறைவன் என்னை அன்போடு நோக்கினான். என் அன்பை இறைஞ்சிக் கேட்பதுபோல் இருந்தது அப்பார்வை.

எனக்கும் அவனுக்குமிடையே முளைவிட்டிருந்த அன்புத் தொடர்பை மேலும் வளர்க்கும் நீர்போல் ஆயிற்று.

1094. "யான்நோக்குங் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும்."

இறைவனின் அருட்பார்வையை யான் சந்திக்க விரும்பும் போது, அவன் என்னைப் பார்க்காததுபோல் வேறெங்கோ பார்க்கிறான். சந்திக்க விரும்பாதபோது அவன் என்னைப் பார்த்து மெல்லப் புன்சிரிப்புச் செய்கிறான். உள்ளப்புணர்தலுக்கு முன் நிகழும் ஒருவிதப் பரிசோதனை இது.

1095. "குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும்."

நேரடியாக என்னைப் பார்க்கவில்லையே தவிர, என் மீது அவனது (அருட்) பார்வை இல்லை என்றன்று. ஒரு கண்ணைச் சுருக்கிப் பார்ப்பதுபோல நோக்கி அன்புப் புன்சிரிப்புச் செய்கிறான்.

1096. "உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்
ஒல்லை உணரப் படும்."

என்மீது கவலையில்லாதவன்போல் மட்டுமன்று, பகைமை கொண்டவன்போல் காணப்படினும், அவனது செயல், உள்ளத்தில் பகைமை இல்லாதவர் கடுஞ்சொல் கூறுவதுபோல் ஆகும். விரைவில்அஃது (உள்ளன்பு) உணரப்படும்.

1097. "செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்
உறாஅர்போன் றுற்றார் குறிப்பு."

உள்ளத்தில் பகைமையின்றிச் சொல்லப்படும் கடுஞ் சொல்லும், பகைமையுள்ளவர்போல் நடிக்கும் பார்வையும் உண்மையான அன்புறவு கொள்பவரிடம் காணப்படுவதொன்று.

1098. "அசையியற்கு உண்டாண்டோர் ஏஎர்யான் நோக்கப்
பசையினள் பைய நகும்."

யான் நோக்கும்போது உள்ளத்தில் பாசம் (அன்பு) உள்ள வனாகி மெல்லச் சிரிக்கின்றான். மன அசைவு (இரக்கம்) உள்ள அவனது அப்புன்சிரிப்பிலும் ஓர் அழகு உண்டு.

1099. ''ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே உள.''

முன்பின் அறியாதவர்போல (அன்பு ஆர்வம் இன்றி) பொது வாகப் பார்த்துக்கொள்ளுதல் காதலர்களிடம் காணப்படுவ தொன்று.

1100. ''கண்ணொடு கண்இணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல.''

பார்வையோடு பார்வை இணையும்போது வாய்ச்சொல் எதுவும் தேவையில்லை. உண்மையான அன்பு வாயினின்று வெளிப்படுவதன்று; உள்ளத்தின் ஆழத்தினின்று எழுவது. இது சிறப்பாக இறைவன்பால் செலுத்தும் அன்புக்குரியது.

# 111. புணர்ச்சி மகிழ்தல்

இறைவனாகிய தலைமகளும் ஆன்மாவும் ஒருவரை யொருவர் நோக்குதலான் தொடங்கிய காதலில் - அன்பில் உள்ளத்தால் சேர்தலாகும். உடலால் புணர்தலுக்கு ஆயத்தமும், அதன் இனிமை குறித்து விளக்குதலும் இப்பகுதியில் கூறப்படும்.

1101. ''கண்டுகேட் டுண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள.''

உயிர்த்தல்—மோத்தல் (மோந்து பார்த்தல்)

உறுதல்—தொடுதல்

ஐம்புலனும் என்றது ஐம்புலன்களால் நுகரப்படும் இன்ப உணர்வினை- வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு பொருட் களால் நுகரப்படும் ஐவகை இன்பத்தினை, ஒரே காலத்தில் பெண்ணிடம் நுகர இயலும் எனக் கூறுகிறது இக்குறள். இஃது ஆசிரியரே கூறும் கருத்தா? சிற்றின்பப் பெருக்கின் மயக்கத்தால் ஆண்மகன் கூறுவதாக உள்ளதா என்பது தெளிவாகப் புலப்பட வில்லை.

இங்ஙனம் சிற்றின்ப நோக்குள்ள மனிதன் கருதுகிறான். ஆனால், அதில் மயங்கிப் பேரின்பத்தை இழந்துவிடாதே, என்னும் பொருளில் இக்குறள் செய்யப்பட்டதாகத் தோன்றுகிறது.

'சிற்றின்பம் வெஃகி அறன் அல்ல செய்யாரே மற்றின்பம் வேண்டுபவர்' (173) என்று அவரே கூறுகிறார் அன்றோ? 'அறன் அல்ல' என்னும் சொற்களுக்கு, 'அறவாழ்வுக்கு ஏற்காத' என்னும் பொருள் மட்டுமே இருந்தாலும், மிதமிஞ்சிச் சிற்றின்பத்தை விரும்பினால், அறன் அல்லவற்றிற்கு வழி எளிதாகப் பிறக்கக்கூடும் என்னும் கருத்திலும் கொள்ளலாம். ஏன் எனில், மனிதன் வெறும் ஐம்புலன்களின் சேர்க்கையல்லன். ஆறாவது புலனாக உள்ள பகுத்தறிவும் படைத்தவன். இந்த அறிவுக்கு இன்பம் தருவது ஐம்புலச் சிற்றின்பம் அன்று என்பது தெளிவு.

"ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு" (354)

என்கிறார் வள்ளுவர். இங்கு மெய்யுணர்வு என்றது ஆறாவது புலனாகிய பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்டது. சிற்றின்பம் - ஐம்புல இன்பம் அளவு மீறினால் 'பொருளல்ல வற்றைப் பொருள்' என்று உணர்ந்தவனாய் 'மாசறு காட்சி' நீங்கிப் பேரின்பத்திற்கு வழியாகும் மெய்யறிவு இல்லாதவ னாகிடுவான் மனிதன். ஆகவே, சிற்றின்பமும் அளவுடன் நுகரப் படவேண்டியதாகும். அப்போதுதான், இறைவனாகிய தலை மகளிடம் எல்லா இன்பமும் ஒருசேர நுகர்பவனாவான். பேரின் பத்துக்கு உரியவனாகி ஐம்புலன்கள் தரக்கூடிய இன்பத்தை ஒரு பொருட்டாய் எண்ணான். அதுமட்டுமன்று; அப்பேரின்பத்தை நுகர்பவன் "இப்பெண்ணிடத்தில் நுகர்ந்த இன்பம் எத்துணை அற்பமானது! அதனால், எனக்குக் கிடைத்த உள்ள மகிழ்ச்சி ஒரு சில நொடிகள் மட்டுந்தானே நீடித்தது! * பேரின்பமோ முடிவே இல்லாதது; முழுதுற இன்பம் தருவது. பெண் இன்பமோ இயல்பாகவே நிறைவானதாயிருத்தல் இயலாதது. புலன்களோடு இணைந்த எதுவுமே நிறைவுள்ளதா யிருத்தல் இயலாது. உதாரணமாக, உணவு எவ்வளவு உண்டாலும் நிறைவு தருவதில்லை. வயிறு மேலும் ஏற்க இயலாததாலும், விடாமல் உண்பது உடலுக்கே ஊறு செய்யக் கூடுமாதலாலும், இது விலங்குகளும் செய்யாத ஒன்றாதலாலும், குறிப்பிட்ட நேரத்தில் நிறுத்திவிட வேண்டியிருக்கிறது. ஆனால், சிறிது நேரம் கழித்து மீளவும் உண்ணவேண்டியிருக்கிறது. பசியில்லாவிட்டாலும் உண்பவர்களும் உண்டு. சிற்றின்பத்தின் தன்மையே அப்படி. உடலுடன் தொடர்புகொண்ட எதுவும் அத்தன்மைத்தே. ஆகவே, அளவுக்குட்பட்டேயாக வேண்டும். இறைவனுடன் இணைந்த பேரின்பமே அளவுக்கு உட்பட இயலாதது. ஆகவே, சிற்றின்பத்தில் ஈடுபட்டவன், ஒருநாள் பேரின்பத்தை நுகருங்கால், "இத்துணை நிறைவான இன்பம்

---

* அத்தகைய சிற்றின்பம் நீடிக்க வேண்டுமாயின், ஒருவன் இத்தகைய பெண்ணின்பப் புணர்ச்சியில் எந்நேரமும் ஈடுபட்டவனாயிருத்தல் வேண்டுமன்றோ? இஃது இயற் கைக்கே எதிரானது; இயலாத ஒன்று. பெண்ணின்பப் பித்தன்கூட எதிர்பார்க்க இயலாதது!

தருவதொன்றை யான் தக்கமுறையில் மதியாது, பெண்ணின்பம் பெரிது! அதைவிட மேலானது எதுவுமில்லை என்று எண்ணினேன். ஆனால், அதில் நுகர்ந்த மகிழ்ச்சியெல்லாம் இப்பேரின்பத்தில், கோடி மடங்கு அதிகமாக இப்போது நுகர்கின்றேனே!'' என்றுணர்வான்.

ஆகவே, ''பேதை மனிதா, நீ வெறும் பெண்ணின்பத்துக்காகப் படைக்கப்பட்டவன் அல்லை. தெய்வத்தலைமகளாகிய இறைவன் மட்டுமே தரக்கூடிய அளவற்ற— முடிவற்ற இன்பத்துக்காகப் படைக்கப்பட்டுள்ளவன். ஆகவே, இச்சிற்றின்பப் புணர்ச்சியில் கிடைக்கும் சிற்றின்பத்தில் மயங்கி, 'எனக்குத் தேவையான இன்பமெல்லாம், அஃதாவது, என் புலன்கள் எல்லாம் ஒருங்கே நுகரக்கூடிய இன்பம் இப்பெண்ணிடத்திலேயே கிடைக்கும்போது, நான் வேறெந்த இன்பத்துக்காகக் கவலைப்பட வேண்டும்?' என்று ஏமாறி விடாதே. உன் இதயம் அத்துணை சிறியதன்று; இறைவனுக்காகவே உருவாக்கப்பட்டது. அவன் மட்டுமே அதை நிறைவுபடுத்த இயலும்; மறவாதே. ஆகவே, அந்த நித்தியானந்தத்தை நாடு.....'' என்று எச்சரிக்கிறது இக்குறள் !

1102. ''பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து.''

சாதாரணமாக ஒருவனுக்கு ஏற்படும் பிணிக்கு மருந்து அவனிடமே இருப்பதில்லை வேறோரிடத்திலிருந்துதான் கிடைக்க வேண்டும். இந்த அணியிழையான பெண் வருவிக்கும் நோய்க்குத் தானே மருந்தாகின்றாள்.

இக்குறளில் கூறப்படும் கருத்து :

''இருநோக்கு இவளுண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து'' (1091)

என்னும் குறளுடன் பொருந்தும். இக்குறளில் ஒரு நோக்கு நோயினைத் தருவதாகவும், மற்றொரு நோக்கு அந்நோய்க்கு மருந்தாகவும் உள்ளது எங்ஙனம் என்பது அக்குறளுக்குக் கூறப்பட்ட விளக்கத்தில் காண்க.

இக் குறளில், புணர்ச்சியினால் இன்பம் தந்தவள் அப்புணர்ச்சி நீங்கியமையால் துன்ப நோய் தருபவளாகின்றாள். மீண்டும் அவளே புணர்ச்சியால் வந்துற்ற நோய்க்கு மருந்தென மாறுகின்றாள் என்று கூறப்படுகிறது.

முந்திய குறளில் சொன்ன விளக்கத்தில் கூறப்பட்டதுபோல், பெண்ணின்பம் இடைவிடாமல் நுகரக்கூடியதன்று. அஃது இயலாதது; இயற்கைக்குப் பொருந்தாது. உடலுடன் கூடிய எப்புலனுக்கும் ஒவ்வாதது. சில சமயங்களில் மட்டுமே நுகரக் கூடியது. நுகர்ச்சி நீங்கியவுடன் மீண்டும் நுகர வேண்டும் என்னும் ஆசை எழுகின்றது. இதனால்தான் 'ஆசைக்கோர் அளவில்லை' என்றாரோ! சிற்றின்பம் அனைத்திற்குமே இப்பண்பு பொதுவானது. இத்தகைய ஆசை ஓயாமல் நிறைவேற இயலாததால், ஒருவித உள்ளப்பிணி எழுகின்றது. 'காமநோய்' என்னும் சொற்றொடர் வழக்கிலுள்ளது காண்க. இந்நோய் தீர வேண்டுமானால், முன்பு காம இன்பம் தந்த பெண்ணே மீண்டும் தேவைப் படுகிறாள். மீண்டும் புணர்ச்சி நிறைவேறுகையில் காமநோய் நீங்குகின்றது - சிறுபொழுது! மீண்டும் நோய் எழ, மீண்டும் புணர்ச்சி விரும்பப்படுகின்றது. இங்ஙனம் அணியிழை பிணியாகவும் மருந்தாகவும் அமைகின்றாள்.

இதன் உட்பொருள் என்ன? ...... 'மீண்டும் மீண்டும் பிணியாகவும், பிணிக்கு மருந்தாகவும் உள்ள பெண்ணின் மீது, உன் உள்ளத்தை முழுதும் செலுத்தாதே. உன் ஆன்ம தாகத்தையும் ஆன்மப் பசியையும் நிறைவுறத் தீர்க்கக் கூடிய தெய்வத் தலைமகளாகிய இறைவனின் பேரின்பத்தை நாடு. அஃது ஒன்றே இத்தகைய பிணியை விளைவிக்காது,' என்பதே உட்பொருள்.

1103. "தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு."

வீழ்வார்—விரும்பப்படுபவர்

தாமரைக்கண்ணான் உலகு—விஷ்ணு உலகம், வைகுண்டம்.

மனிதர் தேடும் இன்பம் எல்லாம், ஒருங்கே திரண்டிருக்கும் இருப்பிடத்தை வைகுண்டம் எனக் கூறும் வழக்கைப் பயன் படுத்தி, இக்குறளை ஆசிரியர் ஆக்கினார் என்பதில் குற்ற

மில்லை. அவ்வுலகை அவர் நம்பியே இங்ஙனம் கூறுகின்றார் என்பதற்குப் போதிய காரணம் இல்லை. குறிப்பிட்ட எந்தத் தெய்வத்தையும் வழிபடாமல் 'இறைவன், ஆதிபகவன்' என்று பொதுப்பட இறைவனை வழிபடுவதோடு தம் நூலைத் தொடங்குவது ஒன்றே போதிய சான்றாகும்.

'நான் பேராவலுடன் விரும்புகின்ற மெல்லிய தோளுடைய பெண்ணின் மீது சாய்ந்து துயில் கொள்ளும் இன்பத்தைவிட வேறின்பம் வைகுண்டத்திலும் இல்லை,' 'என்று பேதைமனிதா, நீ நினைக்கலாம். ஆனால், இது நீ நினைப்பது; உண்மை வேறு. அது பேரின்ப உலகம். இறைவன் அடி சேர்தலால் நிகழும் பேரின்பம். அதை நாடு' என்னும் பொருளில்தான் இக்குறள் செய்யப்பட்டது என்க. இஃது ஆசிரியரின் கருத்தன்று. தேவநேயப்பாவாணர் கூறுவதுபோல் இது 'பெண்ணின்பப் பித்தன் கூற்று.'

அஃதாவது, முன்பு கூறியதுபோல மிகைபடக்கூறியதாகும். பெண்ணால் வரும் இன்பத்தையே இத்துணை புகழ வேண்டுமானால், இறைவனால் வரும் இன்பத்தை என்னென்பது! என வியத்தலே முறை. இக்கருத்தினைத் தூண்டுவது இக் கூற்றின் நோக்கம்.

'பேரின்பத்திற்குரிய நீ இச்சிற்றின்பத்திற்கு இவ்வாறாதல் தகாதென்று' பார்ப்பான் கூறியதாகச் சொல்லப்படுவது உண்மையேயன்றோ! (புலவர் குழந்தை உரை).

இறைவனாகிய தலைமகளின் அன்பு, விரும்பி விரும்பிப் பெற வேண்டியதொன்று. உடனே பெறாத பொருள்களை விரும்பும்போதெல்லாம் ஓர் இன்பம் தோன்றுவது, அனுபவத்தில் கண்டறிந்தது. ஆர்வமுடன் விரும்பும் பொருள் நினைவுக்கு வரும்போது இன்பம் விளைகின்றது. அவ்வார்வம் பெருகுங்கால், உள்ளத்தில் ஒருவிதக் காதற்கனல் தோன்றும். அதை அன்புக் கனல் எனலாம். விரும்பப்படும் பொருள் ஒரு பெண்ணாயிருந்தாலே அக்கனல் அத்துணை இன்பம் தருமாயின், விரும்பப்படும் பொருள் இறைவனேயாயின், அஃது எத்துணை அதிகமாய் இருக்க வேண்டும்! மேலும் பெண்ணின் தோள் மேல் கொள்ளும் துயில் இத்துணை புகழப்படுமாயின், இறைவன் அன்புக்கரத்தில் அமர்ந்து கொள்ளும் துயிலாகிய இன்ப இளைப்பாற்றினை என்னென்பது!

“எருசலேமுடன் சேர்ந்து மகிழ்ச்சியடையுங்கள். அவள் மேல் அன்பு கொண்ட அனைவரும் அக்களியுங்கள். அவளைக் குறித்துத் துயரப்படும் நீங்கள் எல்லோரும் அவளோடு சேர்ந்து அகமகிழுங்கள். அப்பொழுது, அவளுடைய ஆறுதலின் கொங்கை களில் பால் குடித்து நீங்கள் நிறைவடைவீர்கள்; அவளுடைய மகிமையின் பெருக்கினின்று இன்பமாய்ப் பெருகி மிகுதியாய்த் திளைத்திருப்பீர்கள். ஏனெனில், ஆண்டவர் கூறுகிறார்: இதோ, ஆற்றுப் பெருக்குப் போல் அவள் மேல் சமாதானத்தை நாம் பொழிந்திடுவோம்; மடை புரண்டோடும் வெள்ளம் போல், அவள் மேல் மக்களினங்களின் மகிமையை ஓடச் செய்வோம். அவள் பாலை அருந்துவீர்கள்; மார்போடணைக்கப்படுவீர்கள்; மடிமேல் சீராட்டப் பெறுவீர்கள். தாயானவள் தன் மகவைச் சீராட்டுவது போல, நாம் உங்களுக்கு ஆறுதல் தருவோம். நீங்களும் எருசலேமில் தேற்றப்படுவீர்கள்” (இசை 66:10-13) என்னும் விவிலிய வசனங்கள் நோக்குக.

**குறிப்பு :** குறட்பா 1103ல் ‘தாமரைக் கண்ணான்’ எனக் குறித்துள்ளது, குறிப்பிட்ட ஒரு சமயம் எனத் தோன்றலாம். இதைக் குறித்தும், ‘இந்திரன்’, ‘அடியளந்தான்’, ‘தாமரை யினாள்’, ‘தவ்வை’ முதலிய பெயர்களைக் குறித்தும் கா. அப்பாத்துரையவர்கள் கூறுவது கவனிக்கத் தக்கது. அவர் கூறுவது :

“இவை திருவள்ளுவரால் பிற கருத்துகளை விளக்கவும் வற் புறுத்தவுமே பயன்படுத்தப்படுகின்றன. இவை அவரால் ஏற்கப் பட்ட அவரது அடிப்படைக் கருத்துகளல்ல. அதே சமயம், இவை அவரால் கண்டிக்கப்படுபவையும் அல்ல. பிறர் தம் மதமாகக் கொண்டு மேவப்பட்டு, இவை உவம உருவக அணி விளக்கங்கள் போலத் தம் பண்பு சுட்டி வலியுறுத்த அவரால் எடுத்தாளப் படுகின்றன. இவை திருவள்ளுவர் காலத்துக்கு முன்னிருந்தே பொது மக்களிடையே பரவி உலவிய கருத்துகள் என்பதில் ஐயமில்லை. ஆயினும் இச்சொற்கள், செய்திகள் இன்று சுட்டும் பொருள் மரபுகளில் எவை எவை எந்தளந்த அளவுக்கு அவர் நாள்களில் நிலவின என்று அறியாமல் அவற்றை நாம் அப்படியே ஏற்றுக்கொள்ள வழியில்லை. அத்துடன் எப்படியும்,

அவர் சுட்டிக்காட்டாத செய்திகளுடனொப்ப, இவையும் அவரது அடிப்படைக் கருத்துகளுக்குப் புறம்பானவையே என்பது தெளிவு.''

ஈண்டுக் குறிப்பிட்ட 1103-ஆம் குறளில், 'தாமரைக் கண்ணான் என மக்கள் கூறும் இறைவனின்' என்னும் பொருள் இருக்கலாம். அல்லது தாமரை என்பது அழகையும் புனிதத்தையும் குறிப்பிடக் கூடும். ஆதலின், ''பெண்ணை விட எழிலும் புனிதமும் உள்ள இறைவனின் மெய்யின்ப உலகை நாட வேண்டியிருக்க, பெண்ணின்பத்தைவிட வேறெந்த இன்பம் உண்டு என்று மதிமயங்கி நிற்கின்றாயே, பெண்ணின்பப் பித்தனே!'' என்னும் பொருளில் கூறுவதாகவும் இருக்கலாம்.

1104. ''நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்என்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள்.''

தெறுதல்—சுடுதல்

குறுகுதல்—நெருங்கி வருதல்

தன்னை விட்டு நீங்கினால் சுடுகின்றது; நெருங்கி வந்தால் குளிரடைகின்றது! இத்தகைய நெருப்பை இப்பெண் எங்ஙனம் பெற்றாள்?

நெருப்பின் தன்மை நெருங்கினால் சுடுதல், விலகினால் சூடு தணிதலாகும். ஆனால், இப்பெண்ணிடம் உள்ள நெருப்போ சாதாரண நெருப்புக்கு மாறாகச் செயலாற்றுகிறதே! இஃது என்ன விந்தை!

மானிடப் பெண்ணைப் பொறுத்த மட்டில் இஃது உண்மை தானா? என்னும் வினா முதற்கண் எழுகின்றது. பொதுவாகப் பெண்ணை நெருங்கும் போது காமக் கனல் பொங்கி எழுவது அனுபவத்தில் காண்பதாகும். விலகினால் சிறிது சிறிதாகத் தணிவது காண்கிறோம். எனினும், இக்குறளில் கூறப்படுவதும் ஒரு விதத்தில் உண்மையே. தொலைவில் இருக்கும் போது அல்லது பிரிந்திருக்கும் போது காதலியை நினைந்து நினைந்து உள்ளம் உருகும் போது, காதற்கனல் அதிகரிக்கலாம். விரைவில் காதலியை அடைய வேண்டும் என்னும் ஆவலால் அக்கனல் பெருகலாம். நாள் செல்லச் செல்ல இது பெருகிக்கொண்டே போகலாம். இதையே 'நீங்கின் தெறூஉம்' என்கிறார் ஆசிரியர்.

பின்னர் வாய்ப்புக் கிட்டியதும் நெருங்குங்கால் உடனே கனல் பொங்குவது போலிருப்பினும் காதலியைக் கண்ட மகிழ்வில் அல்லது புணர்ச்சி மகிழ்வில் ஓரளவு தணிவதுண்டு. இதையே, 'குறுகுங்கால் தண்' என்கிறார் ஆசிரியர். 'ஓரளவு' என்றேன். காரணம் இச்சிற்றின்பத்தில் முற்றும் தணிவு என்பது இல்லை என்று முன்னர்க் கூறப்பட்டது காண்க.

இனி, தெய்வப் பெண்ணாகிய இறைவனைப் பொறுத்த மட்டில் இக்குறள் முற்றிலும் பொருந்தும். இறைவன் ஆன்மாவைத் தன்பால் ஈர்க்கும் முறையை நன்கு புரிந்து கொள்ளுதல் அவசியம். ஒரு சாதாரணப் பெண், ஆணை ஈர்ப்பது போல் இறைவன் ஆன்மாவை ஈர்த்தல் சற்றும் பொருந்தாது. ஏனெனில், ஆண்-பெண் விசயத்தில் பெரும்பாலும் உடல், உடலை ஈர்ப்பதாகும். 'பெரும்பாலும்' என்றதின் கருத்து ஓரளவு உள்ளத்தின் ஈர்த்தலும் இருந்தே தீரும். எனினும், முனைந்து நினைப்பது புற அழகும் தோற்றமுமே; காமத்தின் உள்ளக் கனலேயாம்.

இனி இறைவனைப் பொறுத்தமட்டில் சடப்பொருளாகிய உடலுக்கு முற்றிலும் அப்பாற்பட்ட அருவப் பொருளாகிய இறைவனின் புலன்களைக் கடந்த, கடவுளது அக அழகை ஓரளவு மனத்தால் எண்ணிய ஆன்மா அகத்தால் அவன்பால் ஈர்க்கப்படுவதாகும். இத்தகைய ஈர்ப்பு, ஆண் - பெண் ஈர்ப்பு நிகழ்வது போல் தொடக்கத்திலேயே-(கண்டதுமே காதல் என்பது போல்!) நிகழ இயலாதது. மனத்தால், உள்ளத்தால் எண்ணியெண்ணி, ஆன்ம நெகிழ்ச்சியால் விளைவதொன் றாகும். ஆண் - பெண் ஈர்ப்பில் இயற்கையே செயலாற்றும். இதற்கு இயற்கைக்கு மேற்பட்டதொரு சக்தி தேவைப்படுவ தில்லை. ஆனால், இறைவன் - ஆன்மா ஈர்ப்பிலோ இயற் கையைக் கடந்த அருள்சக்தி இன்றியமையாதது. 'அவன் அருளால் அவன் தாள் வணங்கி' என்றது போல அவன் அருளால் மட்டுமே அவன்பால் ஈர்க்கப்பெறவியலும். இது தொடக்கத்தில் அத்துணை மன வேகம் நிரம்பியதாயிருக்காது. சாதாரணக் கனல் போல் முனைந்து நிற்காது. ஆனால், அருள் செயல் வளரவளர, உள்ளம் நெகிழநெகிழப் பேரின்பக் காதலும் வளரும். விண்ணினின்று இறங்கும் அருள்மாரி பொய்ப்பின் உள்ளத்துப்பசி உடற்றும். அம்மாரி பெய்யின் உள்ளப்பசி சிறிது சிறிதாக நீங்கி அன்புக் கனல் வளரும். 'புயல் என்னும் அருள்

வாரி' வளம் குன்றாமல் இருந்தால் 'சிறப்பொடு பூசனை செல்லும்;' இறைவனின் அன்பு வழிபாடு நடைபெறும். இது வளர வளர அன்புக் கனலும் அதிகரிக்கும். இவையெல்லாம் இறைவனும் ஆன்மாவும் நெருங்குவதற்கு முன்பே நிகழும். இறைவனும் மிகத் தொலைவில் உள்ளதுபோல் தோன்றினும் தன் அருளால் ஆன்மாவைச் சிறிது சிறிதாக ஈர்த்துக்கொண்டேயிருப்பான். ஆகவே, இன்னும் நெருங்காவிடினும் அன்புக்கனல் விளையாமல் போகாது. 'நீங்கின் தெறூஉம்' என்பதை இப் பொருளில் கொள்வதில் தவறில்லை. தொடக்கத்திலேயே இத்தகைய கவர்ச்சியுடன் இறைவன் செயல் புரியாவிடின், ஆன்மா இறைவனை அடையவேண்டுமென்னும் எண்ணத்தை விட்டு விடக்கூடும்; எட்டாத கனியென ஒதுக்கிவிடக்கூடும்.

இனிமைப் பண்டத்தைக் காட்டிக் குழந்தையை ஈர்ப்பது போல், இறைவனும் செயல்புரிகின்றான் எனலாம். ஆனால், வாழ்நாள் முழுவதும் இப்படியே செயல்புரிவதில்லை. தொடக்கத்தில் இருந்த கனல் குறையுமாறு செய்து, ஆன்மா தன்னை இன்னும் அதிக ஆர்வமுடன் நாட வேண்டுமென ஒருவித ஆன்மீகக் 'குளிரை'ச் சுவைக்குமாறு செய்வதுண்டு. சிறிது சிறிதாக அன்புக்கனல் பெருகிவரும்போது, அஃதாவது, இறைவனை நெருங்கி வருவதுபோல் ஆன்மா உணரும்போது, அக்கனல் தணியுமாறு இறைவன் செய்துவிடுவதுண்டு. அப்போது ஆன்மா, ''இஃதென்ன, 'குறுகுங்கால் தண்' என்றிருக்கிறதே'' என உணர்ந்து ஆர்வம் தணியக்கூடும். ஆனால் தணியலாகாது. தொடக்கத்திலிருந்த குழந்தை நிலை போன்ற பருவம் மாறி, தொடக்கத்திலிருந்த 'காதல் இனிமை' நீங்கி ஒருவித மனவறட்சி வந்தால்தான், ஆன்மா அப்பேரின்பக் காதலின் நிறைவினை எய்தவியலும். குழந்தை உணவையே ஊட்டிக்கொண்டிருந்தால், இனிமையானதையே சுவைத்துக் கொண்டிருந்தால், ஒருவன் முழுவளர்ச்சியடைதல் இயலாது. அங்ஙனமே ஆன்மீக வறட்சி எனப்படும் ஒருவித ஆன்மீகத் 'தண்நிலையை,' இறைவனை நெருங்கி வரவர அனுபவித்தே தீர வேண்டும். ஏனெனில், எல்லாம் இன்பமயமாகவே இருப்பின் முழு வளர்ச்சி அடைதல் இயலாது. கிறித்தவத் தத்துவத்தின்படி துன்பத்தின் வாயிலாகத்தான் உன்னத இன்பநிலை எய்த இயலும். துன்பத்தில் தோய்ந்த ஆன்மாதான் பேரின்ப சிகரத்தை அடையவியலும். இறைமகன் துன்புற வேண்டு,

மென்றும் அதன் வாயிலாகவே மாண்புபெற வேண்டுமென்றும் இருந்தது எனக் கிறித்துவே போதித்தார். இப்பேரின்பக் கருத்தையே இக்குறள் சிறப்பாக உணர்த்துகின்றது என்பதில் ஐயமில்லை.

1105. "வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள்."

விரும்பிய போதிலேயே அவையவை (விரும்பிய பொருள்கள் நினைவுக்கு வந்து இன்பம் தருவது) போல, காதலியின் தோள்களும் இன்பம் செய்யும்.

காதலியுடன் சேர்வது போல நினைத்த அளவிலேயே இன்பம் விளையும் என்றவாறு.

நினைத்த அளவிலேயே சாதாரணமாக எதுவும் இன்பம் தருவதில்லை. அடைந்து நுகர்ந்தால்தான் இன்பம் விளையும். ஆனால், காதலர்கள் ஒருவரையொருவர் நினைத்த அளவிலேயே இன்பம் உண்டாவது அனுபவத்தால் அறிவதொன்று. எனினும், இந்த இன்பம் மிகச் சிறியதே. மனநிறைவு அளிக்க இயலாதது. ஆகவே, நினைவுடன் நின்றுவிடாமல் காதலர் புணர்வதில் நோக்கம் கொள்கின்றனர். இஃது எங்ஙனமாயினும் இறைவனும் - ஆன்மாவுமாகிய தெய்வீகக் காதலரிடையே இந்நினைவே வாழ்நாளில் இன்பம் தருவதாகும். நினைவு என்னும்போது வெறும் நினைவு அன்று; அன்புடன் கலந்த நினைவு என்று கொள்க. வெறும் நினைவு மட்டும் இன்பம் தராது. ஒருவரைப்பற்றி நினைக்கும்போது, இன்னார் இன்ன இடத்தில், இன்ன பணி செய்கிறார் என்று மட்டும் நினைக்கலாம். 'இன்னார் என் நண்பர், என் அன்புக்குரியவர், என் ஆப்த நண்பர், அவரை நேரில் கண்டு வெகு நாள்கள் ஆகிவிட்டனவே. நேரில் கண்டு உரையாடினால் எவ்வளவோ நலமாகுமே. அவரும் என்னை நினைத்து உள்ளம் உருகிக் கொண்டிருப்பாரே......' என்றெல்லாம் நினைப்பது இதயத்தின் நினைவு—அன்பினால் விளையும் நினைவு—அன்பு கலந்த நினைவாகும். இத்தகைய நினைவு குறித்தே ஈண்டுப் பேச்சு. இத்தகைய நினைவுமட்டுமே இன்பம் தருவது.

இறைவனாகிய காதலியைப் பொறுத்த மட்டில், இத்தகைய நினைவு மட்டுமே இயலும். நினைந்து நினைந்து வெகுகாலம் உள்ளம் உருகிய பின்னரே புணர்தல்-இறைவனோடு ஒன்றிப்பு-நிறைவேறவியலும். நினைத்தவுடன் மானிடக் காதலியுடன் புணர்வதே அரிதாயின், இறைவனோடு புணர்வது எங்ஙனம் எளிதாகும்? அகமும் அகமும் புணரினும், மானிடக் காதலர் உடலும் உடலும் புணர்வது உடனுக்குடனே நிறைவேற இயலாதது. இறைவனைப் பொறுத்த மட்டில் அகமும் அகமும் மட்டுமே புணர்தல் இயலும். இதுவும் குறைவான அளவுக்கே இவ்வுலகில் இயலும். மறுமையில் மட்டுமே நிறைவுறவியலும்.

நினைந்து நினைந்து, விரும்பி விரும்பி இறைவனை நாடுதல் வேண்டும். வேட்டபொழுதின் எங்ஙனம் காதலியின் தோளைப் பெறுதல் இயலாதோ, அதைவிட அரிது இறைவனை நினைத்த வுடன் (வேட்ட பொழுதில்) அடைதல். ஆகவே, அந்நினை விலேயே வாழ்தல் வேண்டும். அதுவே மனித வாழ்வின் குறிக் கோள் என்பது இக்குறளின் கருத்து.

1106. "உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்
கமிழ்தின் இயன்றன தோள்."

உறுதல் - சேர்தல், தொடுதல்.

அமிழ்து - உயிரை வளர்க்கும் மருந்து.

பேதை - (ஈண்டு) காதலியின் உறவை ஆவலுடன் நாடி நிற்கும் காதலன் - அஃதின்றி வாடிய உள்ளத் துடன் வருந்துபவன்.

இங்ஙனம் வாடிய காதலனின் உயிர், புத்துயிர் பெறுமாறு (தளிர்ப்ப) காதலியின் தோளினைச் சேர்தலால், (அங்ஙனம் சேர்வதில் உயிர் தழைத்தலால்) இவளது தோள்கள் சாவா மருந்துக்கு ஒப்பானவையாகும்; என்றும் புத்துயிர் தந்து கொண்டிருப்பவையாகும்.

இம்மைக் காதலரிடையே அடிக்கடி நிகழக்கூடிய சோர்வு, பின்னர் சேர்தலால் நிகழும் புதுத்தெம்பு, புத்துயிர்பற்றிக் கூறும் இக்குறள்.

இத்தகைய சோர்வும் வாடுதலும் அடிக்கடி நேரடியாக் உறவாட வாய்ப்புப் பெற்ற இம்மைக் காதலரிடையே நிகழு மாயின், மறுமைக் காதலர் எனப்படும் இறைவன் — ஆன்மா இவர்களிடையே நிகழ்வதில் வியப்பொன்றுமில்லை. காதலியின் தோள்கள் (அணைப்பும் நெருக்கமான உறவும்) புத்துயிர் தரக் கூடுமாயின்—சாவாமருந்தென விளங்குமாயின், இறைவனின் அரவணைப்பும் அவனது அருட் கரங்களிடையே சரண் அடை வதும், அன்பால் அவனை அரவணைப்பதும், இதயத்தால் தொடுவதும், அவன் மடியில் (தாய் மடியில் குழந்தை போல) சேர்வதும், எத்துணை இன்பம் தருவதாகும்! பேதை மனிதா, இதை உணர்ந்து, இம்மறுமைக் காதலியை நாடிய வண்ணமாய் வாழ்வை நடத்துவாயாக!

1107. ''தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு.''

தம் இல் இருந்து-தம் வீட்டிலிருந்து.

பாத்துண்டல்-பகிர்ந்து கொண்டு அனுபவித்தல்.

அம்மா-அழகிய

அரிவை-பெண்

முயக்கு-புணர்ச்சி.

இக்குறட்பாக்களில் கூறப்படும் புணர்ச்சியானது, தன் வீட்டிலிருந்து தன் பொருளை எடுத்து இல்லாதவர்க்குப் பங்கிட்டு நுகர்ந்தது போல் உள்ளது.

இக்கருத்து வெறும் பெண் புணர்ச்சியோடு எங்ஙனம் பொருந்தும்? இப்புணர்ச்சி பிறரோடு பகிர்ந்துகொள்ள இயலாதது என்பது தெளிவு. அல்லது ஆண் பெண்ணுடனும், பெண் ஆணுடனும் பகிர்ந்து கொள்வதுபற்றிக் கூறப்படுகிறது என்போமா! தன் இல் என்றுள்ள உடலிலிருந்து ஆணும் பெண்ணும் தத்தமக்குள்ள உடல் கூறுகளுக்கு ஏற்பப் பகிர்ந்து கொள்கின்றனர் என்றால், ஓரளவு பொருந்தும் என்பதில் தவறில்லை என்றே வைத்துக்கொண்டாலும், இக்கருத்து இம்மைக் காதலர்களைப் பொறுத்த மட்டில் முழுமையாக நிறை வேறுகிறது என்று சொல்வதற்கில்லை. ஏன் என்றால்,

ஆணாகிலும் பெண்ணாகிலும் தங்கள் இயல்புடன் மிகமிகப் பொருந்திய அவ்வியற்கையே நாடுகின்றதொரு செயலைப் புரியும்போது தங்கள் 'இல்லிருந்து' பகிர்ந்து நுகர்கின்றனர் என்பதற்கில்லை. ஒரு விதத்தில் இயற்கையே தூண்டுகின்ற தொன்றைச் செய்கின்றனர். ஏன்? இயற்கை உணர்ச்சியை எதிர்க்க இயலாத நிலையில்தான் பெரும்பாலும் இச்செயல் (புணர்ச்சி) நிகழ்கின்றது. அதைத்தடுத்து நிறுத்தப் பெரும் பாலும் இயலாத நிலையில்தான் ஆண்பெண் எல்லோருமே உள்ளனர். தங்களுக்குரியதை (அஃதாவது தனக்குரிய ஆண்பால் சக்தியையும், பெண் தனக்குரிய பெண்பால் சக்தியையும்) பகிர்ந்து கொள்ள வேண்டும் என்னும் உணர்வு உண்டா என்பதே ஐயப்பாடு. பால் உணர்ச்சி வேகத்தில் இத்தகைய உயர்வான (பகிர்ந்து கொள்ள வேண்டும் என்னும்) சிந்தனை முனைந்து நிற்பது மிக மிக அரிதே. இதற்கு அனைவருடைய அனுபவமே சான்று.

இனி, இறைவன்—ஆன்மாவாகிய தெய்வீகக் காதலர்களை எடுத்துக் கொள்வோமாகில், இறைவன் மட்டுமே தமது அன்புறவை — பேரின்பக்காதல் உணர்வை — ஆன்மாவோடு பகிர்ந்துகொள்ளக் கூடியவனாயிருக்கின்றான். ஏனென்றால், எதையும் பகிர்ந்துகொள்ளக் கூடிய சக்தி அவனிடம் மட்டுமே உண்டு. பகிர்ந்துகொள்ளக்கூடிய பொருளும் (சிறப்பாக அருளாகிய பொருளும்) அவனிடம் மட்டுமே உண்டு. அவன் பகிர்ந்துகொள்ள விரும்பினாலன்றி ஆன்மாவில் எந்நலனும் இருக்க இடமில்லை. ஏனெனில், ஆன்மாவிடம் இயல்பாக இருக்கக்கூடிய நலன் எதுவுமில்லை—ஆன்மாவாக இருக்கும் இயல்பு நிலையே இறைவனிடமிருந்து வந்த நலனேயன்றோ? ஒரு மனிதன் மற்றொரு மனிதனுடன் தனக்குள்ளதை ஓரளவு பகிர்ந்துகொள்ளலாம். ஆனால், எல்லா நிறைவுமுள்ள இறைவன், தான் படைத்த மனிதனுக்குத் தன் நன்மையைப் பகிர்ந்துகொள்ள விரும்பலாமேயன்றித் தனக்குள்ள நலனை யெல்லாம் இறைவனிடமிருந்தே பெற்றுக்கொள்ள வேண்டிய நிலையில் உள்ள மனிதன் (ஆன்மா) இறைவனோடு பகிர்ந்து கொள்ளக் கூடியதொன்றுமில்லை. அவனிடமிருந்து பெற்றுக் கொள்ளக் கூடியதை ஏற்று மதித்து நுகர்ந்து இன்புற்று, நன்றி செலுத்துவதே அவன் செய்யக் கூடியதாகும். இக்கோணத்தில் நோக்கினும் இக்குறட்பாக்களில் கூறப்படுவது சிற்றின்பத்தை விடப் பேரின்பமே என்பது வலியுறுத்தப்படுகின்றது.

1108. "வீழும் இருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு."

இருவர்க்குமிடையே காற்றும் நுழையாதபடி இரண்டறத் தழுவிய புணர்ச்சி, நாம் இனி இருவரில்லை, ஒன்றாயினோம். ஆகவே, ஒரு பொழுதும் நீங்காத இப்புணர்ச்சியால் இனிமை அடைய வேண்டுமாயின், மணம் செய்து கொள்வோம்! என்றவாறு.

இது புணர்ச்சியில் நிகழும் நெருக்கத்தை விளக்குவது. இப் புணர்ச்சியினிமை திருமண நிலையில்தான் நிகழஇயலும் என்ற தால், மண நிலையை விரைவில் அடைவோம் என்று கூறுவ தாகும்.

இம்மைக் காதலர்க்கிடையே நிகழும் இந்நெருக்க நிலை எளிதில் புரிந்துகொள்ளக்கூடியது. இறைவன் - ஆன்மாவாகிய பேரின்பக் காதலரைப் பொறுத்த மட்டில் புறநெருக்கம் (உடல் நெருக்கம்) என்பது ஆங்கிருத்தல் இயலாது. அக நெருக்கத் துக்கு மண நிலை போன்ற அன்புறவு நெருக்கநிலை தேவைப் படும். இஃது ஆர்வமிக்க மனநிலையாலும், அன்புறவை மேன்மேலும் வளர்த்துக்கொள்ளச் செய்யப்படும் முயற்சியாலும் இறை அருள் அதிகரிப்பாலுமே நிகழக்கூடும். இதை நாடுவாய் மனிதா! என்கிறது இக்குறள்.

1109. "ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன்."

(புணர்ச்சி இன்பம் மிகும் பொருட்டு) ஊடுதலும், அவ் இன்பம் வேண்டும் என ஆவலுடன் உணர்தலும், அதன்பின் புணர்தலும்- இம்மூன்று நிலைகளும் - காமத்தால் கூடுபவர் பெறும் பயனாகும். இந்நிலைகள் மண நிலையில் மட்டுமே நிகழக்கூடும் என்றுணர்க. அந்நிலைக்கு ஆயத்தப்படுத்தும் விளக்கமாக இக்குறட்பாக்கள் அமைந்துள்ளமை காண்க.

உடற்புணர்ச்சி இடைவிடாது நிகழக்கூடிய ஒன்றன்று என்பது தெளிவு. ஆகவே, ஊடலாகிய பிரிவு அவசியம். ஊடல் மிகமிக, புணர்ச்சியின்பமும் மிகும் என்பது தெளிவு. ஆவலுடன் காத்திருந்த அரிய பொருள் ஒன்றை அடையும்போது இன்பம் மிகுவதுபோல, ஊடலின்போது காம உணர்வு மிகும். இதனால்

புணர்ச்சி பன்மடங்கு இன்பம் தரும் என்க. இம்மைக் காதலருள் இது நிகழ்வது சாதாரண நிகழ்ச்சி.

இனி, மறுமைக் காதலருள் இஃது எங்ஙனம் நிகழ்கின்றது? தொடக்கத்தில் ஆன்மா இறைவனையும் அவனது அளவில்லாப் பண்பினையும் அழகினையும் நன்கு அறியாமல், உணர இயலாமல் உள்ளது. இந்நிலையில் - மானிடப் பெண் தன் பேரழகால் ஆண்மகனைக் கவர்ந்திழுப்பது போல் இறைவன் ஆன்மாவைத் தன் அருளால் தன்பால் ஈர்க்கத் தொடங்குகின்றான். ஆன்மா அதற்கு இடம் கொடுத்தால் அன்புறவு - பேரின்பக் காதல் மலர் கின்றது. ஓரளவு வளர்கின்றது. அதனால் ஆன்மாவில் இன்பம் மலர்கின்றது. இறைவன்பால் கவர்ச்சி பெருகுகின்றது. ஆனால் இக்கவர்ச்சி பெருகிக் கொண்டே போவதில்லை. இறைவனது அருள் திட்டப்படிக் குறிப்பிட்ட சமயத்தில் ஒருவிதப் பிரிவு- ஊடல் - நிகழ்கின்றது. அப்போது ஆன்மா தளர்வடையக்கூடும். ஒருவித சலிப்பும் சோர்வும் எழக்கூடும். ஆனால், இத்தகைய ஊடல், பின்னர் வரப்போகும் பேரின்பப் புணர்தலுக்கு- பேரின்பப் பிணைப்புக்கு வழிகோலுவதாகும் என்றும், அப்பிணைப்பினால் நிகழக்கூடும் இன்பத்தைப் பன்முறை அதிக மாகச் சுவைக்க வழியாகும் என்றும் உணர்ந்து ஊடலைப் பயன் படுத்திக்கொள்ள வேண்டும். ஒரு சிறிதும் ஊடல் இன்றி இம்மைக் காதலருள் எங்ஙனம் கூடல் நிகழவியலாதோ, அங்ஙனமே இடைவிடாத அன்புறவுப் பிணைப்பும் அதனால் உண்டாகும் இனிமையும், இம்மையில் வாழும் வரையில் நிகழ வியலாது. அது மறுமைக்குரிய நீடு வாழ்வாகும் - முடிவற்ற பேரின்ப நிலையாகும். அது நிகழும் வரை ஆன்மா இத்தகைய ஊடலுக்கும், கூடலுக்கும் தன்னைப் பக்குவப்படுத்திக்கொள்ள வேண்டும். இடைவிடாத புணர்ச்சி எங்ஙனம் இருக்கவிய லாதோ அங்ஙனமே இடைவிடாத ஊடலும் இருப்பதில்லை. அங்ஙனம் இருந்தால், ஆன்மா அந்நிலையைத் தாங்கவியலாது. இந்நிலையை நன்கறிந்த இறைவன் ஊடலும் கூடலும் மாறி மாறி வருமாறு அருள் புரிகின்றான். ஊடலும் அவன் அருளே, கூடலும் அவன் அருளே. ஊடலால் கூடல் மீது ஆர்வம் அதிகரிப்பது அருளேயன்றோ!

ஆகவே, இந்நிலை 'காமங்கூடியார் பெற்ற பயன்.' அதே சமயத்தில் 'பேரின்பம் விழைவார் பெறும் பயனு' மாகும். காமம்- ஆர்வம் என்றும் பொருள் கொள்ளலாம்.

1110. ''அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு.''

உண்மை அறிவு வளர வளர ஒருவன் தன் அறியாமையைக் கண்டு உணர்வது போல, புணரப்புணர அதனால் தன் இன்பம் நிறையாமையை உணர்கின்றான். சுருங்கக் கூறின் இச் சிற்றின்பப் புணர்ச்சி ஒரு நாளும் மன நிறைவைத் தராது. இக் கருத்து மேலே வலியுறுத்தப்பட்டது. காமப் புணர்ச்சியின் இயல்பே அத்தன்மையது. உடல் தரும் இன்பம், உள்ளத்தை நிறைவுபடுத்துவது எங்ஙனமாகும்? மனிதனின் உள்ளம் இறைவனால் நிறைவுறவே உண்டாக்கப்பட்டது. வேறெதனாலும் நிறைவுறாத பண்புடன் அமைக்கப்பட்டது. ஆகவேதான், அது நிறைவற்ற இந்நிலையை உணர்கின்றது.

காமத்தில் இன்ப நிறைவு காண முயன்ற புனிதர் ஒருவர், இறுதியில் அந்நிறைவினை அடையவியலாமல், ''இறைவா! எம் இதயத்தை நீ உனக்காகவே உருவாக்கினை! ஆகவே, அஃது உன்னுள் அமைதியடைந்தாலன்றி வேறெதனாலும் அடையாது!'' என்றார்.

சிற்றின்பத்தைப் பெருமைப்படுத்துவதே இப்பகுதியின் சிறப்பு நோக்கமாயிருந்தால், அதன் நிறைவற்ற நிலையை, நிறைவுற இயலா நிலையை ஆசிரியர் இங்ஙனம் அழுத்திக் கூறுவானேன்?

''இது நிறைவு தராது. எனவே, நிறைவு தரும் பேரின்பத்தை நாடுவாய் பேதை மனிதா!'' என்றுணர்த்தவே என்க.

இக் கருத்து பன்முறை வலியுறுத்தப்பட்டது இப்பகுதியில் எனக் காண்க.

## புணர்ச்சி மகிழ்தல்

### சுருக்கம்

1101. ''கண்டுகேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்தொடி கண்ணே உள.''

கண், செவி, நா முதலிய ஐம்புலன்களாலும் துய்க்கப்படும் இன்பமெல்லாம் இறைவனது அருள் அன்பில் அடங்கியுள்ளது.

1102. ''பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து.''

உடல்நோய்க்கு மருந்து வெவ்வேறாக உள்ளது. அருள் அன்பு உருவாயமைந்த இறைவன்மீது கொள்ளும் (பேரின்பக் காதல்) நோய்க்கு அவனே மருந்து. வேறெங்கும் இல்லை.

1103. ''தாம்வீழ்வார் மென்தோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு.''

தாம் விரும்பும் பெண்ணின் மெல்லிய தோளைத் தழுவிக் கொண்டு துயில் கொள்ளுதல் போன்ற இன்பம் (தாமரைக் கண்ணான் என மக்கள் கூறும்) இறைவனை அணைதலால் உன்டாகுமோ என்று மதிமயங்காதே. முன்னையது சிறு பொழுதே நிலைக்கும்; பின்னையதோ நிலையானது. ஆகவே, அதையே நாடுவாய்.

1104. ''நீங்கின் தெறூஉங் குறுகுங்கால் தண்ணென்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள்.''

நெருங்கினால் தீயானது சுடும்; விலகி நின்றால் சூடு தணியும் தன்மையது. மானிடப்பெண் என்னும் தீயும் அத்தகையதே. அவளை நெருங்கினால் காமத்தீ பற்றிக்கொள்ளும். விலகி நின் றால் அவ்வளவு இராது; உண்மையான அன்பு இருந்தால் விலகி நின்றாலும் உள்ளம் அன்புக்கனலால் எரியும். இறைவன் மீதுள்ள அன்பு இத்தகையதே. வெகு தொலைவில் உள்ளவன் போல் இருந்தாலும் சிந்திக்கச்சிந்திக்க அன்பு பெருகும். மிக நெருங்கி ஒன்றிணைந்தால் - புணர்ந்தால் - சாதாரண தீயைப் போல அன்புக்கனல் பெருகும்.

1105. ''வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள்.''

பெண்ணின் தோளைச் சேர்வது விரும்பிய அளவுக்கு இன்பம் தருவதுபோல, இறைவனோடு உள்ளத்தால் இணைதலும் விரும்பிய அளவுக்கு- ஆர்வம் உள்ள அளவுக்கு இன்பம் தரும்.

1106. ''உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்
கமிழ்தின் இயன்றன தோள்.''

உடலோடு உடல் சேரும்போது புதுத்தெம்பு (உயிர்) உண்டாகிறது. ஆகவே, அமிழ்தம்போல் உள்ளது அச்சேர்க்கை. (உடல்புணர்ச்சி குறித்து மிகைபடக்கூறியது). இறைவனை அன்பால் அணையும் போது உண்மையாகவே புத்துயிர் பெறுவதால் அவன் அருளன்பே அமிழ்தம் எனப்படுவதற்கு ஏற்றது.

1107. "தம்மில் இருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு."

அழகிய பெண்ணைத் தழுவிக்கொள்வது, தம் இல்லத்திலிருந்து தமக்குள்ள பொருளை மற்றவர்களோடு பகிர்ந்து கொண்டு தாமும் துய்ப்பதுபோல் ஆகும். இது சிற்றின்பத்துக்கு அத்துணை பொருத்தமன்று. பேரின்பத்துக்கு முற்றும் பொருந்தும். பேரின்பம் நாடுகிறவன் தனக்கு மட்டுமேயன்றிப் பிறர்க்கும் பெரும் பயனை விளைவிக்கிறான்.

1108. "வீழும் இருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு."

காற்றும் இடையில் நுழையமுடியாத அளவுக்கு இறுகக் கட்டித் தழுவுதல் காதலர்க்கு மிக இனிமையாயுள்ளது. (இதுவும் மிகைப்படக் கூறியது). இதுவே அத்துணை இனிமையாயின், இறைவனை உள்ளத்தால் இறுகத் தழுவுவதன் இனிமையை என்னென்போம்?

1109. "ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன்."

ஊடல் (பிரிந்து நிற்றல்), பிரிவு நீங்குதல், புணர்தல் இவை காதலரிடை நிகழ்பவை. இறைவனை அணைவதிலும் சில காலம் நெருங்கியிருத்தலும், சிலகாலம் பிரிவு தாங்குவதும், சில காலம் ஓருயிர்போல இணைதலும் உண்டு.

1110. "அறிதோ றறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு."

அறிவு பெருகப்பெருக நம் அறியாமை தெளிவாவதுபோல, இவளைத் தழுவத்தழுவ, காம உணர்வு பெருகுகின்றது. (உடல் புணர்ச்சியில் இஃது உண்மைதானா என்பது சிந்திக்கத்தக்கது. சிற்றின்பம் பெருகப்பெருகச் சலிப்பு உண்டாவதும் உண்டு. இறைவன் மீது அன்பு பெருகப்பெருக நமது தகுதியின்மை தெளிவாவதுண்டு).

# 112. நலம் புனைந்துரைத்தல்

சிற்றின்பக் காதலின் நலத்தை மிகைபடச் சிறப்பித்துக் கூறு முகத்தான் பேரின்பக்காதலை வலிவுறுத்தல் - அதன் பெருமையை உணர்த்தல்.

1111. "நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள்."

அனிச்சமலரே! நீ மிகமிக மென்மையான நீர்மையுடையாய். ஆகவே நீ வாழ்க! ஆனால், எம்மால் பெரிதும் விரும்பப்படுபவள் உன்னைவிட மென்மையான பண்புடையவள்.

அழகு, வடிவம், பண்பு எல்லாம் மிகமிக மேன்மையானவை என்று காதலி வாழ்த்தப்படுகிறாள். மானிடப்பெண்ணுக்கு இவை பேரளவில் பொருந்தும் என்றே வைத்துக் கொண்டாலும், இவையெல்லாம் வெகுகாலம் நீடித்து நிற்பவை ஆகா. காதல் பருவத்தில் மட்டுமே இவை சிறந்து விளங்கும். மணமானபின், வயது முதிர முதிரச் சிறிதுசிறிதாகக் குறைவது காண்கிறோம். உடலுடன் பொருந்தியதெல்லாம் இத்தன்மைத்தே. நிலைத்து நிற்பது சடப்பொருளுக்கு அப்பால் உள்ள அருவப்பொருளே. சிறப்பாக இறைவனுக்கே இம்மேன்மையெல்லாம் பொருந்தும். அளவிட இயலாத எழிலும் இதய மென்மையும் மாறாத -குறையாத அருளும் அன்பும் கொண்ட இறைவனையும் அவனது பேரின்பக் காதலையும் நாடு மனமே!

இறைவனது உள்ளத்தின் மெல்லிய நீர்மையைப் புகழ்கின்றது ஆன்மா. தான் படைத்த பொருள் - தனக்கு எவ்வகையிலும் தேவையற்ற பொருள்; தன்னைவிட எத்தனையோ இழிந்தது. (இறைவனுக்கும் அவனது படைப்புக்குமிடையே அளவிறந்த வேறுபாடுண்டன்றோ? தான் படைத்த மனிதனைவிட இறைவன் அளவிட இயலாத வகையில் உயர்ந்தவன் அன்றோ?) - இவன் மீது தன் காதலைச் செலுத்த உள்ளம் கொண்டது இறைவனது இளகிய மனமும் இரக்கமும் அருளும் அன்புமேயன்றோ?

ஒரு பெண்ணின் நிலைக்காத அழகில் மயங்கி உன் இதயத்தைப் பறிகொடுக்காதே! இதுவே இக்குறள் கூறும் கருத்துச் சுருக்கம்.

1112. ''மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று.''

''பலவகை மலர்களைக் காணும்போது, 'என் காதலியின் கண்கள் அம்மலர்களை ஒக்கும்' என்று எண்ணி மயங்குகிறாய்! என்னே உன் அறியாமை!'' எனக் காதலன் தன்னையே நொந்துகொள்வதுபோல் கூறுகின்றது இக்குறள். அஃதாவது, ''என் காதலியின் அழகு அவ்வளவு சாதாரணமானதா? மலர்கள் எவ்வளவுதான் அருமையானவையாயிருந்தாலும் என் காதலியுடன் ஒப்பிடவியலுமா? அவள் அழகே அழகு. அதற்கு ஈடேயில்லை .....!'' என்றெல்லாம் மிகைபடக் கூறுகின்றான் காதலன்.

சிற்றின்பக் காதலியின் அழகுபற்றி ஈண்டுக் கூறுவது ஓரளவு பொருந்துமென்றே வைத்துக்கொண்டாலும், பேரின்பக் காதலியாகிய இறைவனின் எழில்சிறப்பொடு எவ்விதத்திலும் ஒப்பிடவியலாது என அறிவாய்! இம்மைக் காதலியின்பால் உள்ளத்தைப் பறிகொடுத்துவிடாதே! என்றவாறு.

1113. ''முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோள் அவட்கு.''

'வேய்த்தோள் (மூங்கில்போல் உள்ள தோளினை) உடைய அவட்கு நிறம் தளிர் போன்றது; பல் முத்துப் போன்றது; இயற்கைமணம் நறுமணம்; மையுண்ட கண் வேல் போன்றது,' என்று பலபடக் காதலன் தன் காதலியைப் புகழ்வதுண்டு. ஆனால், இவையெல்லாம் விரைவில் வாடிக்குறைந்து இறுதியில் மறைந்துபோவதைக் காண்கின்றோம். இத்தகைய வருணனையால் அளவுக்கு மிஞ்சி மயங்கிவிடாதே. உண்மை அழகை நோக்கு; அதுவே அழிவுறாப் பேரின்பக் காதலியாம் இறைவனின் அழகு!

1114. ''காணின் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்
மாணிழை கண்ஒவ்வேம் என்று.''

குவளைப் பூக்கள் காணும் புலன் அறிவு பெற்றால், "இப்பெண்ணின் கண்களுக்கு நாம் ஒப்பாக மாட்டோம்" என்று வெட்கித் தலை குனிந்து, ஏறெடுத்தும் பார்க்கத் துணியாமல் நிலத்தையே நோக்கும் அழகினைப் 'புனைந் துரைத்தல்' அதிகாரத்தில் இங்ஙனம் மிகைபடக் கூறுவது வியப் பொன்றுமில்லை.

"ஆனால், நெஞ்சே இதையே நீ நோக்கிக்கொண்டிராமல் உன் பார்வையை மேல் நோக்கி இறைவனாகிய காதலியின் அழகை எண்ணிப் பார்!" என்றவாறு.

1115. "அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை."

கால் களைதல் - காம்பு நீக்குதல்

பெய்தாள் - கூந்தலில் சூடினாள்

நுசுப்பு - இடை

அனிச்சம் மிக மிக மென்மையான மலர். அதன் காம்பும் மிக மெல்லியதே. அந்தக் காம்பை நீக்காமல் காதலி மலரைச் சூடினாள். அதனால் இக் காம்புகளின் சுமை தாங்கவியலாமல் அவளது இடுப்பு முரியும்; முரிந்தால் சாவே நிகழ்ந்துவிடும்; அப்போது நல்ல பறை ஒலிக்க மாட்டா. சாப்பறைகளே ஒலிக்கும்.

காதலியின் மென்மையை அளவுக்கு மிஞ்சி மிகைபடக் கூறியது இது என்பது எளிதிற் புலப்படும்.

சிற்றின்பக் காதலியின் மென்மையழகை எவ்வளவுதான் மிகைபடக் கூறினும், இறைவனாகிய பேரின்பக் காதலியின் மென்மை, அருள், அழகு, கவர்ச்சி இவற்றை எவ்விதத்திலும் மிகைபடக் கூறுதல் இயலாதே! என்பது இதன் உட்கருத்து. எத்துணை புகழினும், புகழ்ச்சிகளையெல்லாம் கடந்தவன் இறைவன் அன்றோ!

1116. "மதியும் மடந்தை முகனும் அறியா
பதியிற் கலங்கிய மீன்."

வானத்தில் ஒளிரும் மதிக்கும், காதலியின் முகமாகிய மதிக்கும் வேறுபாடு காணவியலாமல் விண்ணில் ஒளிரும் மீன்கள் நிலை கலங்குகின்றன!

'மதிமுகம்' என்று பெண்ணின் முக அழகை வருணிப்பது சாதாரணம். அதை இக் குறள் மிகைபடக் கூறுகின்றது. விண்ணில் உள்ள மீன்கள் நிலை கலங்கி நிற்கும் அளவுக்கு ஒரு மானிடப் பெண்ணின் முக எழில் உண்டா என்பது வினவக் கூடிய வினா. தெய்வீகப் பெண்ணாகிய இறைவனின் முக அழகைக் கண்டு, அவை கலங்கி நிற்கின்றன என்றால் பொருள் பொருந்தும். ஆனால், இறைவனுக்கு முகம் என்பதில்லையே! எனின், 'முகம்' என்பதால் ஈண்டுக் குறிக்கப்படுவது இறைவனின் அருவத் தோற்றம் - புலன் கடந்த அருளுருத் தோற்றம் எனக் கொள்ளலாம்.

1117. ''அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.''

அறு - அற்ற, குறைந்த

வாய் - இடம்

அறுவாய் - சந்திரனின் குறைந்த

அவிர்மதி - ஒளிர்மதி

சந்திரன் தேய்தலும் வளர்தலும் உள்ளது. அதில் மறுவும் (களங்கமும்) உண்டு. என் காதலியின் முகத்திலோ தேய்தலும் இல்லை; வளர்தலும் இல்லை; மறுவும் இல்லை. அஃதாவது, என்றும் குறையாத எழிலுடன் திகழ்கின்றது. ஆகவே, (முந்திய குறளில் கூறியது போல்) விண்மீன்கள் வேறுபாடறிய இயலாமல் உள்ளன. அதே கருத்துச் சிறிது வேறுபடக் கூறப் பட்டது.

1118. ''மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி.''

சந்திரனே நீ வாழ்க! யான் காதலிக்கும் மாதர் முகம் போல் தேய்தலும் வளர்தலுமின்றி ஒரே எழிலுடன் மறுவுமின்றி ஒளிவீச வல்லையாயின், நீயும் என் காதலுக்கு உரியை ஆவாய்.

இதுவுமதே, நலம் புனைந்துரைத்தலில் ஒரே கருத்து மேலும் மேலும் கூறப்படுகின்றது.

1119. ''மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றல் மதி.''

சந்திரனே! மலர் போலக் கண்களைக் கொண்டுள்ள என் காதலியின் முகத்தை நீ ஒத்திருக்க வேண்டுமானால், பலரும் காணத் தோன்றாதே. யான் மட்டும் கண்டு இன்புறத் தோன்று வாயாக. காதலுக்குள்ள தனிமைப் பண்பு ஈண்டுக் கூறப் படுகிறது. அஃதாவது 'என் காதலி எனக்கு மட்டுமே உரியவள். வேறுயாரும் அவளைப் பார்த்தலும் கூடாது,' என்றவாறு.

இக்குறட்பாக்களில் கண்களும் முகமும் சிறப்பாகக் குறிப் பிடப்படுகின்றன. இதன் பேரின்ப விளக்கம் பின்வருமாறு :

இறைவனது அருட்பார்வையைப் புகழ்ந்தபின் அவனது ஒளி வீசும் திருமுகமும் புகழப்படுகிறது. இன்முகம் காட்டுதல் அருள் புரிவதாகும். இறைவனின் முகம் மாதர் முகத்தைவிட அதிகமாக ஒளிவிடவல்லது அன்றோ! ஆன்மாவின் இருள் அகற்ற அவ் வொளியால் மட்டுமே ஆகும் என்பதால், அவன் முகம் ஒளிவிடவில்லையேல் ஆன்மா இறைவன் மீது காதற் செலுத்துதல் இயலாது.

எழில் மிக்க உலக மாதரிடத்தும் களங்கம் ஏற்படலாம். ஆனால், இறைவனாகிய தலைமகளிடத்து எத்தகைய களங்கமும் ஏற்பட இயலாது. மேலும் தேய்தலும் வளர்தலுமின்றி என்றும் ஒரேபடித்தானது. அவனது மேன்மையும் எழிலும் அருட் பண்பும் கொண்ட இத்தகைய மாறாக் காதலை உலகத்து எம் மாதரிடம் எதிர்பார்க்கவியலும்?

காதல் என்பது ஒருவன் ஒருத்தியுடன் என்றில்லையேல், குறைவுறும், பழுதுறும், இறுதியில் அழிவுறும். இறைவனோடு ஆன்மாவுக்கு இருக்க வேண்டிய அன்புறவும் இத்தகையதே.

இறைவனோடு வேறொரு பொருளைச் சமமாக வைத்து அன்பு செய்தல் இயலாது. (1123 குறள் காண்க).

அனைத்தையும்விட அதிகமாக இறைவனுக்கு அன்பு செய்தலே முறை. முழு அறிவுடன், முழு ஆர்வத்துடன், முழு நெஞ்சுடன், முழு பலத்துடன் இறைவனுக்கு அன்பு செலுத்தினால் ஒழிய, அஃது உண்மையான இறையன்பு ஆகாது. உண்மையாகச் சொல்ல வேண்டுமானால், மனிதன் தன் உள்ளத்தை ஒரு புறம் இறைவனோடும், மறுபுறம் அவன் படைத்த பொருள்களோடும் பகிர்ந்து கொள்ள இயலாது. அத்துணை குறைபாடுள்ளது அவனது எளிமை உள்ளம். ஆனால், இறைவன் தன் காதலை எல்லா ஆன்மாக்களோடும் பகிர்ந்துகொள்ளவியலும். ஏனெனில், குறைவற்ற நிறைவும் அளவில்லாப் பண்பும் கொண்டது அவன் உள்ளம்.

1120. ''அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்.''

அனிச்சமும் அன்னப்பறவையின் தூவியும் மென்மைக்கு எடுத்துக் காட்டாகக் கூறப்படும். எனினும், இவை மாதர் பாதங்களுக்கு நெருஞ்சி முள் போல வருத்தம் தரும். இதுவும் காதலியின் மென்மைத் தன்மையை மீண்டும் வலியுறுத்துமாறு கூறப்படுவது.

காதலின் இனிமை-மென்மை (extreme delicacy) பற்றியே இக்குறட்பாக்கள் பேரளவில் உரைக்கின்றன என்பது தெளிவு. இறுதியாக, வேறு யாரோடும் பகிர்ந்துகொள்ளவியலாத 'தனித் தன்மை' (exclusiveness of love) பற்றியும் கூறப்படுகின்றது.

உடலைச் சார்ந்த இனிமை - மென்மை (extreme delicacy)யைவிட உள்ளத்தைச் சார்ந்த இனிமை - மென்மை (extreme delicacy)பற்றியே இங்குக் கூறப்படுவது உணர்தல் அவசியம். இஃது இறைவனின் பேரின்பக்காதலுக்கே சிறப்பாகப் பொருந்தும் என்பது தெளிவு. இறைவன் மட்டுமே தரக்கூடிய பேரின்ப வெள்ளத்தில் மூழ்குவதினும் மேலான இனிமை வேறெங்குண்டு? அதுவும் நிலையான இனிமையும் (delicacy) இறைவனிடத்து மட்டுமே உண்டென்பதில் ஐயமில்லை. ஆகவே, முழு மூச்சுடன் அதை நாடுவாய் பேதை மனிதா! விரைவில் வாடி

வதங்கி மறைந்து போகக் கூடிய ஒரு பெண்ணின் கண்ணையோ முகத்தையோ பற்களையோ வேறு எதையோ கண்டு மயங்கி ஏமாறாதே என்கிறது குறள். இக்குறட்பாக்கள் ஆசிரியரே வலி யுறுத்துவதாகக் கொள்ள வேண்டியதில்லை. பெண்பித்தன் கூறுவதுபோல எழுதுமுறையொன்றைப் பயன்படுத்தி ஆசிரியர் கூறுகின்றார் என்றால் தவறு இல்லை.

## நலம் புனைந்துரைத்தல்
### சுருக்கம்

1111. "நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள்."

அனிச்சமலர் மிக மென்மையானது. அதனினும் மென்மை யானவள் எம்மால் காதலிக்கப்பெற்றவள். (சடப்பொருளாகிய உடலுள்ளது எதுவும் 'மென்மை' என எவ்வளவு போற்றப் படினும் சுத்த அருவப்பொருளாகிய இறைவனைவிட மென்மை யானது எதுவுமில்லை. அவனைக் காதலித்தல் மென்மையாகிய உள்ளத்தாலேயே).

1112. "மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்
பலர்காணும் பூவொக்கும் என்று."

நெஞ்சே! இவளுடைய கண் பலரும் காண்கின்ற வேறு பல மலர்களை ஒத்தது என மயங்கி நிற்கின்றாயே! அஃது எல்லாப் பூக்களிலும் சிறந்தது என அறியாயோ? (அளவிலா மென்மையும் அழகும் உருவான இறைவனின் அருட்பார்வைக்கு ஒப்பிடக் கூடியது எங்கேனும் உண்டோ?).

1113. "முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோள் அவட்கு."

ஒருத்தியின் உடல் எழில் இத்துணை ஈர்க்குமானால், அளவிடவியலா இறைவனின் அக எழில் எத்துணை ஈர்த்தல் வேண்டும்.

1114. ''காணிற் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்
மாணிழை கண்ஒவ்வேம் என்று.''

குவளை மலர்களுக்குக் கண்கள் இருப்பின் 'இவளுடைய கண்களோடு எம்மை ஒப்பிட இயலவில்லையே' என வெட்கித் தலை குனியும். (இறைவனது அக எழிலுக்கு எதையும் ஒப்பிட இயலாது).

1115. ''அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.''

அனிச்சப்பூக்களைக் காம்புடன் சூடினாள்; இடை முரிந்தது. (அவ்வளவு மென்மை அவளுக்கு). அதனால் மகிழ்ச்சிப் பறைகள் ஒலியா. (இறைவனது மென்மையை அறியாமல் சிற்றின்பங்களை நாடினால் மகிழ்ச்சியிராது).

1116. ''மதியும் மடந்தை முகனும் அறியா
பதியிற் கலங்கிய மீன்.''

விண்மீன்கள், இவளுடைய முகத்தையும் சந்திரனையும் பார்த்து வேறுபாடு உணரவியலாமல் கதிகலங்கின. (அத்துணை எழில். இறைவனின் எழிலுக்கு நிகரேது?).

1117. ''அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.''

குறைவதும் நிறைவதுமான சந்திரனிடத்தில் உள்ள களங்கம் இவள் முகத்தில் காணவில்லை. அத்துணையழகு! (மாசு மறு சிறிதும் இல்லாத அழகுவடிவே இறைவன்).

1118. ''மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி.''

திங்களே! இவளது முகம்போல நீயும் ஒளிவீச இயலுமாயின் என் காதலுக்கு நீ உரியை! (இறைவனது பேரின்பக் காதலுக்கு எல்லாவுயிரும் உரிமை பெறாது).

1119. ''மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றல் மதி.''

திங்களே! மலர்போன்ற கண்களையுடைய இவளது முகம் போல் இருக்க விரும்பினால், பலரும் காணும்படி தோன்றாதே. (ஆன்மாவின் அன்புக்கு உரியவள் இறைவன் ஒருவனே).

1120. ''அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்.''

அனிச்ச மலரும் அன்னத்தின் இறகும் இவளுடைய பாதங்கட்கு நெருஞ்சிமுள் போல! அத்துணை மென்மை. (இதைவிட மேன்மை இறைவனின் இதயம்!).

# 113. காதற் சிறப்புரைத்தல்

இம்மைக் காதலர் தம் காதல் சிறப்பைக் கூறு முகத்தான் மறுமைக் காதலராகிய இறைவன் - ஆன்மா தம் பேரின்பக் காதலை உரைத்தலாகும்.

1121. "பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயிறு ஊறிய நீர்."

பல்லில் ஊறிய நீர், பாலுடன் தேனைக் கலந்த சுவை போலும். பாலும் தேனும் மிகுந்த இனிமையை உணர்த்தும். அதுபோன்ற இனிமையைக் காதலர் சுவைப்பதுபற்றிக் கூறு கின்றது இக்குறள். அவ்வினிமை 'பல்லில் ஊறிய நீர்' எனப் படுகிறது. இங்ஙனம் நீர் ஊறுவது இருவருடைய உதடுகளும் பல்லும் சேரும்போதா? முத்தமிடுவதால் ஏற்படும் மிகுந்த இனிமையைக் குறிக்கின்றதா? இஃது இத்துணை இனிமை யையும் தருவதானால், இறைவனாகிய காதலியும் ஆன்மா வாகிய காதலனும் ஒருவரையொருவர் அரவணைக்கும்போது உண்டாகக் கூடிய இனிமையை எங்ஙனம் வருணிக்க இயலும்? இந்த அரவணைப்பு உடலுடன் தொடர்பு கொண்டதன்று என்பது தெளிவு. அகமும் அகமும் இணைவதே. சாதாரண முத்தத்தில் எவ்வளவுதான் இனிமை விளைந்தாலும், விரைவில் குறைந்துவிடுகின்றது. முத்தமிட்டுக்கொண்டே இருக்க எங்ஙனம் இயலும்? சிறிது நேர இன்பத்துக்குப் பின் பிரிந்தேயாக வேண்டும். அகமும் அகமும் இணைவது மட்டுமே பிரியாமல் அரவணைப்பிலேயே மூழ்கியிருக்க இயலும். இஃது இறைவ னோடு ஆன்மா அடையக்கூடிய அணைப்பால் ஏற்படும் இன்பத்தைக் குறிக்கும். 'இதைச் சுவைக்க முயலுவாய், இதையே நாடுவாய்' என்கிறது இக்குறள்.

1122 "உடம்பொடு உயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு."

ஈண்டு 'நட்பு' என்றது நெருங்கிய உறவு என்னும் பொருளில் எனத்தோன்றுகிறது. சாதாரணமாக நட்பு என்பது

நண்பர் இருவரிடையே உண்டாகும் அன்புறவு. காதலரிடையே உண்டாவது நட்பு அன்று; நட்பினும் நெருங்கிய உறவாகும்.

இவ்வுறவு எத்தகையதெனில், உடம்புக்கும் உயிருக்குமிடையே உள்ள உறவு போலும். 'ஈருடம்பு ஓருயிர்' என்னும் கருத்தில் கூறப்படுகிறது. உயிரற்ற உடம்புக்கு மதிப்பில்லை: உடம்புக்குப் பெருமை தருவது உயிரே. அது நீங்கினால், எஞ்சுவது பிணமே. உயிர் வேறு, உடம்பு வேறு என்று பிரிக்கவும் இயலாது. உயிருள்ள அளவில் ஒன்றையொன்று பிரியாமல் உள்ளன. அங்ஙனமே காதலனுக்குக் காதலி உயிர் போலும், காதலிக்குக் காதலன் உயிர்போலும் உள்ளனர். இறைவனுக்கும் ஆன்மாவுக்கும் இடையே உள்ள 'நட்பு' இதனினும் எவ்வளவோ மேலானது; நெருங்கியது; சிறந்தது. அதையே விரும்பித் தேடுவாய் மனிதா!

1123. "கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழும்
திருநுதற் கில்லை இடம்."

"என் கண்ணுள் இருக்கும் பாவையே நீ போய் விடு. யான் பெரிதும் விரும்பும் என் தலைவிக்கு அன்றி வேறு எதற்கும் யாருக்கும் என் கண்ணுள், அஃதாவது, என் மனத்துள் இடமில்லை" என்று தலைவன் தன் காதல் சிறப்பை வெளிப்படுத்துகிறான். தன் காதலைத் தன் காதலியுடன் அன்றி வேறு யாரோடும் பகிர்ந்துகொள்ள விரும்பவில்லை என்பது கருத்து.

தனக்கன்றி வேறு யாருக்கேனும் உள்ளத்தில் இடம் கொடுத்தால், தன் காதலிக்கு மனம் பொறாது என்னும் அடிப்படையில்தான் பெரும்பாலும் இத்தகைய 'காதற் பொறாமை' எழுகின்றது எனலாம். உடலழகின் மீது அமைந்த காமம் (விருப்பம், ஆர்வம், விழைதல்.....) வேறெங்ஙனம் இருக்க இயலும்? தான் விரும்பும் பெண்ணின் அழகைவிட வேறொருத்தியின் அழகு ஒருவனை எளிதில் கவர்ந்துவிடுவது பன்முறை நாம் காண்பதொன்றாகும். சிற்றின்பத்தின் நிலையற்ற பண்பே அப்படி. ஒருவருடைய உடலழகால் அன்றி உள்ளத்தழகினால் ஈர்க்கப்பட்டால், அத்தகைய கவர்ச்சியும் காதலும் ஓரளவு நிலை பெற்றதாயிருக்கக்கூடும். ஆனால், மனிதப் பிறவிகளைப் பொறுத்தமட்டில் உள்ளத்தழகு

உண்மையில் கொண்டவர்கள் எத்தனை பேர்? கொண்டிருந்தாலும், அவ்வழகைக் குறைவின்றி வெளிப்படுத்தக்கூடியவர்கள் எத்தனை பேர்? அப்படி வெளிப்படுத்தினாலும் அதைக் காதலர் விளங்கிக்கொண்டு வேறுபக்கம் கவனம் செலுத்தாமலிருப்பவர்கள் எத்தனை பேர்? ஆகவே, மனித உள்ளத்தின் நிறையற்ற—நிலையற்ற இந்நிலையில் வேறென்னதான் நிகழக்கூடும்?

ஆனால், பேரின்பக் காதலனாகிய இறைவனை எடுத்துக் கொள்வோம். அவன், தான் படைத்த பொருள்களின் அழகால் மயங்குபவன் அல்லன். ஒவ்வொரு மனிதனின் உள்ளம் முழுவதையும் ஆட்கொண்டு, ஒவ்வொருவன் மீதும் தன் 'காதலை' முழுதுறச் செலுத்த வலிமை படைத்தவன். அளவிலாப் பண்புள்ள அவனது காதலுக்கு இஃது இயலும். ஆகவேதான், மனிதன் மற்றெல்லாப் பொருட்கள் மீதும் செலுத்தக்கூடிய 'காதலை'விட இறைவன் மீது செலுத்த வேண்டிய 'காதல்' சிறந்து விளங்கவேண்டும். ஏன், தன் காதல் முழுதுமே அவனுக்கென **அர்ப்பணிக்க** வேண்டும். "வேறெப் பொருளுடனும், நான் உன் காதலைப் பகிர்ந்துகொள்ள இயலாது. உன் முழுக்காதலுக்கு உரியவனாகிய நான், வேறொருவருடன் உன்காதலைப் பகிர்ந்து கொள்வது என் இணையற்ற கடவுள் தன்மைக்கு, என் பேரின்ப நிலைக்கு இழுக்காகும். ஆகவே, **அனைத்திற்கும் மேலாக** நீ என்மீது காதல் கொண்டொழுகுதல் வேண்டும். என்னைவிட அதிகமாக வேறெதையும் வேறு யாரையும் 'நீ விரும்பலாகாது', என ஆன்மாவுக்குக் கூற வல்லவன், - கூற உரிமையுள்ளவன் இறைவன் ஒருவனே! ஆகவே, 'காதற் பொறாமை' எனப் படுவது இறைவனாகிய தலைமகள் ஒருத்திக்கே உரியது என்க. உண்மையில் அது 'பொறாமை' அன்று; இறைவனுக்கு மட்டுமே உரிய ஒரு தனி உரிமை.

கண்ணின் கருமணியில் பாவை 'அழுந்தி' நிற்பதுபோல, ஆன்மா இறைவனுள் அழுந்தி நிற்க வேண்டுமாயின், வேறெப் பொருளையும் தன் கண் முன் நிலையாய் நிறுத்தி வைத்தல் தகாது. தன் கண்முன், ஏன்-தன் கண்ணுக்குள்ளேயே இருக்கத் தக்கவள் இறைவனாகிய தலைமகள் ஒருத்தியே. வேறெதற்கும் யாருக்கும் என் நினைவில் - என் நோக்கில் இடமில்லை. யான்

வேறெதையும், அதை அடைந்து துய்க்கும் நோக்குடன் பாரேன்- நினையேன் என்றவாறு.

இக் கருத்து ஓரளவு குறள் 1119ல் கூறப்பட்டது.

1124. "வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை சாதல்
அதற்கன்னள் நீங்கு மிடத்து."

என் காதலி என்னுடன் சேரும்போது 'உயிர்க்கு வாழ்தல் அன்னள்' அஃதாவது, என் உயிர் உடம்புடன் கூடி வாழ்வது போல் இருக்கின்றாள். நீங்கும்போது, அவ்வுயிர் உடம்பை விட்டு நீங்குதல் (சாதல்) போல ஆகின்றாள். குறள் 1122ல் கூறப்பட்டது மேலும் அழுத்தமாகக் கூறப்படுகிறது.

1125. "உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்
ஒள்ளமர்க் கண்ணாள் குணம்."

காதலன், காதலியை மறந்து வாழ்வதரிது. அங்ஙனமே காதலி, காதலனை மறந்து வாழ இயலாது. என் காதலியின்-காதலனின் கண்ணொளி எந்நேரமும் என்மீது வீசிய வண்ணமாயுள்ளது. அவ்வொளி பஞ்சடைந்த கண்களின் ஒளி போலன்று; மங்கலானதுமன்று. உள்ளத்தை ஊடுருவக் கூடியதாய் உள்ளது. அதை நோக்குகையில் அவ்வொளி என் மீது அன்புப்போர் (அமர்) தொடுப்பதுபோல் உள்ளது. அன்பு (காதல்) கணைகள் என்மீது விழுவதுபோல் உணர்கிறேன். என் உள்ளத்தை எப்படியேனும் உரிமையாக்கிக் கொள்ளப் போரிடுவதுபோல் உணர்கிறேன். ஆகவே, எங்ஙனம் மறப் பறிவேன்? காதலியின் குணங்களை நினைத்துக்கொள்வேன் (உள்ளுவன்). அங்ஙனம் நினையாமல் மறப்பேனாயின் எங்ஙனம் வாழ்வேன்?

இம்மைக் காதலரிடை இத்தகைய மறப்பறியாப் பண்பு உளதாயின், தனக்கென்றே படைத்த மனிதனை இறைவன் எங்ஙனம் மறப்பான்? 'தாய் தன் மகவை மறப்பினும் நான் உன்னை மறவேன்!' என்ற இறைவன் நம் காதலி. தான் படைத்த படைப்பினை மறவாதிருக்க வேண்டிய தேவை எதுவுமில்லை இறைவனுக்கு. அவன் நம்மை மறவாதிருந் தால்தான், நாம் வாழ்வு பெறுவோம்; அருள் வாழ்வு கிடைக்கப் பெறுவோம். 'இத்துணை பேரின்ப அருட்காதலைக் காட்டும்

அவன்பால் உன் மனமெல்லாம் செலுத்துவாய் - அவனை நொடிப்பொழுதும் மறவாதே நெஞ்சே!' என்கிறது இக்குறள்.

'இறைவனாகிய தலைமகள் ஒருத்தியே என் கண்ணுள் நிலையாய் நிற்க வேண்டுமாயின், அவளது ஒளி என் மீது எப்போதும் வீசுதல் அவசியம். இல்லையேல், என்நோக்கு இருளின்பால் திரும்பிவிடக்கூடியது. என் நோக்கு என்றும் ஒளி பொருந்தியதாக நிலைத்திருக்க வேண்டுமாயின், என் கண்களை ஒளி பொருந்தியனவாய்ச் செய்யும் ஆற்றல் படைத்த கண்ணை யுடைய இறைவனின் (அமர்க்கண்ணானின்) ஒளிப்பண்புகளை என்றும் என் மனத்தில் கொண்டிருப்பேன்' என்றவாறு.

1126. "கண்ணுள்ளில் போகார் இமைப்பிற் பருவரார்
நுண்ணியர்எம் காத லவர்."

எம் காதலர் எம் கண்ணினின்றும் வெளியே போகமாட்டார். இமைத்தால் வருந்தவு மாட்டார் (பருவரார்). ஆதலால் அவர் **காணப்படாத நுண்ணியர்***

தலைவன் தலைவியைக் குறிப்பிட்டோ தலைவி தலைவனைக் குறிப்பிட்டோ 'நுண்ணியர் என் காதலவர்' என்று சொல்ல இயலுமா? சிற்றின்பக் காதலை நாம் எவ்வளவுதான் புகழ்ந்துரைத்தாலும், அது பருப்பொருளான உடலின் அழகின் மீதும் அது தரும் (புற) இன்பத்தின் மீதும் அமைந்த ஒன்றன்றோ?

உடலோடு தொடர்பற்ற, அகமும் அகமும் இணைவதற் குரிய முறையில் இடம் பெறும் காதலைக் குறிப்பிட்டு 'நுண்ணியர் எம் காதலவர்' என்று சொல்ல இடமுண்டு. இது சிறப்பாகப் பருப்பொருளுடன் சிறிதும் தொடர்பற்ற நுண்மை யினும் நுண்மைப் பொருளாய் விளங்கும் இறைவனாகிய காதலரைக் குறிப்பிட்டு— அவன் தர விரும்பும் பேரின்பக் காதலைக் குறிப்பிட்டு, ஆன்மா 'நுண்ணியர் எம் காதலர்' என்று முழுக் கருத்துடன் கூற இடமுண்டு. அங்ஙனமே ஓரளவு, இறைவன் மனிதனுடன் கொள்ள விரும்பும் பேரின்ப உறவைக் குறிப்பிட்டு 'என் காதலுக்குரியது நுண் பொருளாகிய மனிதனின்

---

* புலவர் குழந்தை உரை காண்க.

ஆன்மா!' என்னும் கருத்தில் 'நுண்ணியர் என் காதலர்' என்று கூறவும் இடமுண்டு. இறைவனின் அகமும் மனிதனின் அகமும் இணைவதே பேரின்பமாதலால் இங்ஙனம் கூறலாமன்றோ?

கண்ணினுள் பாவைபோல் இருக்க வேண்டுமாயின், ஆன்மாவும் இறைவனும் நுண்பொருளாயிருத்தல் வேண்டும். உலகத்துத் தலைமகளோ தலைமகனோ ஒருவரை ஒருவர் குறிப்பிட்டு, 'என் காதலர்— என் காதலி நுண்ணியர்' என்பதற்கில்லை. உடலோடு உடல் கொள்ளும் உறவும் புணர்வும் எங்ஙனம் நுண்மை பொருந்தியதாயிருத்தல் கூடும்?

'ஈருடல் ஓருயிர்' என்று சொல்லப்படுவதிலும் நுண்மைப் புணர்வு காண்கின்றதன்றோ! ஆனால், ஆன்மா நுண் பொருளாயிருப்பதாலும், இறைவன் நுண் பொருள்களுள் மிக உயர்ந்த நுண்பொருளாயிருப்பதாலும் ஒருவரை ஒருவர் குறிப்பிட்டு 'நுண்ணியர் எம் காதலவர்' என்பது முற்றிலும் பொருந்தும்.

இறைவனாகிய தலைமகள் ஆன்மாவைக் குறிப்பிட்டு 'நுண்ணியர் என் காதலவர்' என்று மிக்க மரியாதையுடன் சொல்ல வேண்டுமா? ஆகவே, இது பொருந்தாது என்றால், தாம் படைத்த மனிதனை இறைவன் எத்துணை மரியாதையுடன் நடத்துகின்றார் என்பது சிந்திக்கத்தக்கதொன்று. தமக்கு எவ்வகையாலும் தேவைப்படாத ஆன்மாவின் காதலைப் பெற அவர் ஆர்வம் கொண்டிருப்பது அதன் மேல் அவர் கொண்டுள்ள மதிப்பேயாகும். தாம் படைத்ததைப் புறக்கணிப்பவன் அல்லன் இறைவன். அதனை மதித்துப் பாராட்டுபவன். மனிதன் இதை உணராமல் தன்மீது இத்துணை காதல் கொண்டுள்ள இறைவனை மதியாமற் போவதுதான் வியப்பு! இறைவன் ஆன்மாவின் மீது காட்டுகின்ற இத்துணை மதிப்பும் மரியாதையும் ஆன்மா தன் உயர் நிலை உணர்ந்து கொள்ளவும், இறைவன் தரவிரும்பும் பேரின்பத்தைப் பெற்று உய்யவுமே யாகும்.

1127. "கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக் கறிந்து."

கரப்பாக்கு அறிந்து - மறைதலை அறிந்து

காதலர் என் கண்ணுள் எப்போதும் இருக்கின்றார். ஆதலால், மையினால் கண்ணும் எழுதமாட்டேன். எழுதுவதால் அவருக்கு வருத்தம் விளைவிக்க நேரிடலாம். இமைத்தலால் (1126) வருத்தம் விளையலாம் என்பதுபோல் இக்குறளில் 'மை எழுதலால்' எனப்படுகிறது. அத்துணை காதல் கனிவும் மென்மையும் கூறப்படுகிறது.

முந்திய குறளில் கூறப்பட்டதே ஈண்டும் வலியுறுத்தப்படுகின்றது.

1128. "நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து."

இமைத்தல், மை எழுதுதல்பற்றி முந்திய குறள்களில் கூறப்பட்டது. இதில் சூடான உணவை உண்பதுபற்றிக் கூறப்படுகிறது. அதனால் நெஞ்சில் உறைந்துள்ள காதலர்க்கு எத்துணை வருத்தமும் நிகழலாகாது என்றவாறு. காதற் சிறப்பைப் பலபடக் கூறும் பாக்கள் இவை. இறைவனோடு கொண்டிருக்க வேண்டிய பேரின்பக்காதல் எத்துணை மென்மையானது! அவ்வன்புக்கு ஒரு சிறிதும் ஊறு செய்யாமல் விழிப்புடன் இருத்தல் வேண்டும் என்பது கருத்து.

1129. "இமைப்பிற் கரப்பாக் கறிவல் அனைத்திற்கே
ஏதிலர் என்னும்இவ் வூர்."

காதலர் 'இமைப்பொழுதும் நெஞ்சில் நீங்காதவர்' என்பதால் அந்நினைவில் உணவும் தேவைப்படாது; உறக்கமும் தேவைப்படாது. முந்திய குறளில் உணவுபற்றிக் கூறப்பட்டது. இதில் உறக்கம்பற்றிக் கூறப்படுகிறது. அந்த அளவுக்குப் பிரியாமை இல்லையாயினும் 'அன்பிலர்' என்று பழி கூறுபவர் பிறர். (இவ்வூர் என்றது பிறர் என்க). ஒருபொழுதும் பிரியாதாரைப் பிரிந்தார் என்று பழிக்காதே என்பதாம்.

இறைவனோடு ஆன்மா எத்துணை பிரியாமல் வாழ்தல் வேண்டும் என்பது வலியுறுத்தப்படுகின்றது.

காதலரை நோக்கிக் கொண்டிருப்பதிலேயே இன்பம் காணும் ஆழ்ந்த காதலர், நிலையிது. ஒரு நிமிடமும் தம் காதலர்,

நினைவு அகன்றிருக்கப் பொறாதவர் அன்றோ உண்மைக் காதலர்கள்! இதனைப் பிறர் புரிந்துகொள்ளவியலாது. காதல் வயப்பட்டவர்கள் மட்டுமே அதன் சிறப்பை அறியக்கூடும்.

1130. ''உவந்துறைவர் உள்ளத்துள் என்றும் இகந்துறைவர்
ஏதிலர் என்னும்இவ் வூர்.''

காதலர் என் உள்ளத்தில் உறைவது மட்டுமன்று - உவப்புடன் உறைகின்றார். இதனையறியாது மக்கள், 'இகந்துறைகின்றார் - அன்பின்றி உறைகின்றார்' எனப் பழிக்கின்றனர்.

முந்திய குறளில் உள்ள கருத்து மேலும் அழுத்தமாகக் கூறப்படுகின்றது. 'இறைவன் ஆன்மாவில் இங்ஙனம் நொடிப் பொழுதும் நீங்காதவனாய் உவப்புடன் உறைவதனால், ஆன்மாவுக்கு எப்போதும் எக்குறையும் எத்துன்பமும் நிகழலாகாதே' என்று நினைக்கலாம். இறைவன் நம்மோடு உயிருக்குயிராய் இணைந்திருந்தால் துன்பம் என்பது எங்ஙனம் அணுக இயலும்? இஃது இயற்கையாக எழக்கூடிய வினா. ஆனால், வாழ்க்கையில் பன்முறை நிகழ்வது வேறு. மிகமிக அன்புறவில் இறைவனோடு நெருங்கி வாழ்வோருக்கும் துன்பம் நிகழ்வதைக் காண்கிறோம். இதன் மர்மம் என்ன என்று அறிய இயலாத நிலையில் இருக்கிறோம். இதற்கு ஐந்தவித்தானாகிய இறைவன் மட்டுமே விடை கூறுகிறான். எல்லாம் இன்பமயமாயிருக்கும்போது காட்டும் அன்புறவைவிடத் துன்பம் நிகழும்போது காட்டும் அன்பே, அன்பு என்னும் பெயருக்கு முற்றிலும் பொருந்தும். அன்பினை எண்பிக்கும் பொருட்டே தன்னை அவித்தவன் அன்புக்குத் தந்த இலக்கணம் அஃது என வேறிடத்தில் கூறப்பட்டது கவனிக்க. உண்மையில், துன்பம் மிகமிக இறைவனோடு உறவு - அவன் ஆன்மாவில் உறையும் அன்புறவு உறுதியடைகின்றது. துன்பம் என்பது ஒருவன் செய்த தீவினையின் பயன் என்பது மற்றெல்லாத் தத்துவங்களும் கூறும் கருத்து. துன்பம் என்பது ஒருவன் காட்டக்கூடிய அன்பின் சான்று என்றது ஐந்தவித்தானின் போதனை. இந்த அன்புக்குத் 'தியாக அன்பு' என்பது சிறப்புப் பெயர். தியாகமின்றி ஆழ்ந்த அன்புக்கு இடமில்லை என்பதை நன்கு மனத்தில் பதிய வைத்தல் அவசியம்.

## காதற் சிறப்புரைத்தல்
### சுருக்கம்

1121. "பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயிறு ஊறிய நீர்."

மென்மைக்குரலில் காதல்மொழி பேசும் இவளுடைய தூய பற்களில் ஊறும் நீர், பாலுடன் தேனைக் கலந்ததுபோல அத்துணை இனிமை வாய்ந்தது. (இறைவன் காட்டும் அன்புக்கு ஈடான இனிமை உண்டோ!)

1122. "உடம்பொ டுயிரிடை என்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு."

இவளோடு எனக்குள்ள காதல் உறவு, உடலுக்கும் உயிருக்கும் இடையே உள்ள தொடர்பு போல அத்துணை நெருங்கியது. (இறைவன் நம்மோடு கொள்ளும் உறவு அதனினும் நெருங்கியது).

1123. "கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழும்
திருநுதற் கில்லை இடம்.

என் கண்களில் உள்ள பாவையே! நீ போய்விடு. யான் விரும்பும் காதலியும் நீயும் ஒரே சமயத்தில் அங்கே இருக்க இடம் இல்லை. என் உள்ளத்தில் வேறு யாருக்கும் இடமில்லை. இறைவனுக்குத் தவிர).

1124. "வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை சாதல்
அதற்கன்னள் நீங்கும் இடத்து."

அரிய அணிகலன்களையணிந்த இவள் என்னோடு சேர்தல் உயிர்வாழ்தல் போன்றது; பிரிவதோ சாதல் போன்றது. (இறைவனது அருளும் அன்பும் இருந்தால்தான் உண்மை வாழ்வு).

1125. "உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்
ஒள்ளமர்க் கண்ணாள் குணம்."

தன் பார்வையால் என் காதலுனுக்காகப் போரிடும் இவளது அரிய தன்மையை] யான் மறப்பதில்லை. மறந்தால்தானே

மீண்டும் நினைக்கவியலும்? எந்நேரமும் ஓயாமல் என் உள்ளத்தில் குடிகொண்டுள்ளாள். (இத்தகைய இடையறா அன்பு இறைவனிடம் செலுத்துவதே முறை.)

1126. "கண்ணுள்ளிற் போகார் இமைப்பின் பருவரார்
நுண்ணியர்எம் காத லவர்."

என் காதலர் நுண்மை பொருந்தியவர். உலகத்துக் காதலர் எவரும் நுண்ணியர் அல்லர். இறைவன் ஒருவரே அத்தகையவர். நாம் அவர்பால் காட்ட வேண்டிய அன்பும் நுண்ணியதா யிருத்தல் வேண்டும்.

1127. "கண்ணுள்ளார் காதல் அவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக் கறிந்து."

என் காதலர் என் பார்வையிலேயே உள்ளார். கண்ணுக்கு மையிடும்போது மறைவாரோ என்றெண்ணி மையேயிடுவ தில்லை. (இறைவன்மீது நம்பார்வை எந்நேரமும் இருத்தல் வேண்டும்).

1128. "நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து."

அவர் என் நெஞ்சிலும் உறைகின்றார். தீப்போன்ற தீய செயலால், அவர் என்னை விட்டு நீங்காதவாறு எத்தகைய தீவினையும் செய்யேன்.

1129. "இமைப்பிற் கரப்பாக் கறிவல் அனைத்திற்கே
ஏதிலர் என்னும்இவ் வூர்."

காதலரை எண்ணி யான் உறங்குவதுஇல்லை. உறக் கத்தையும் கெடுக்கின்ற இவர் அன்பிலார், எனப் பிறர் தூற்று கின்றனர். (இறையன்புக்காக ஏங்கித் தியாகம் செய்வது பலருக்கு விளங்காதது).

1130. "உவந்துறைவர் உள்ளத்துள் என்றும்
இகந்துறைவர்
ஏதிலர் என்னும்இவ் வூர்."

அவர் எந்நேரமும் என் உள்ளத்தே மகிழ்வுடன் உறைகின்றார். இதையறியாதவர்கள் தூற்றுகின்றார்கள். (இறைவனை எண்ணி ஏங்கும் ஆன்மாவைப் பிறர் புரிந்து கொள்ளமாட்டார்கள்).

# 114. நாணுத்துறவுரைத்தல்

காதல் வலிமையால் நாணையும் துறப்பது காதலர்க்குரிய பண்பு என்று காட்டப்படுதல்.

1131. ''காமம் உழந்து வருந்தினார்க் கேமம்
மடலல்ல தில்லை வலி.''

காமம் உழந்து—இன்பம் நுகர்ந்து
ஏமம்—காப்பு
மடல்—(பனையோலை) மடல் ஏறுதல்

காதலின் சுவை நுகர்ந்து காதலியை அடைய இயலாமல் வருந்துவோர்க்கு ஒரே வழி மடல் ஏறுதலே. அஃதாவது, காதலியின் உருவத்தை எழுதி வைத்துக் கொண்டு, பனங் கருக்காலானக் குதிரை மேல் ஏறிக்கொண்டு, பலருமறியக் காதலிவதியும் ஊர் வழியே செல்லுதல். அதுகண்ட ஊரார் கூடிப் பேசத் தொடங்குவர். இதற்கு அஞ்சிப் பெற்றோர் அவனுக்கே மகளை மண முடிப்பர். இது செய்யுள் வழக்கு. மடல்மா எனப்படும். (மா = குதிரை).

நற்பண்பில்லாத எவரோ ஒரு சிலரிடை நடந்து வந்த இந்தத் தீய ஒழுக்கத்தைத் தொல்காப்பியர் தகாக்காமம் என விலக்கியுள்ளார். விரும்பியதை எங்ஙனமேனும் அடைய வேண்டும் என்ற மன வலிமை இதனால் குறிக்கப்படும் என்க.

உலகில் எவ்வளவு இன்பமாக வாழ இயலுமோ அவ்வளவு இன்பமாக வாழவே மனிதன் விரும்புகின்றான் - உழைக் கின்றான்.

இயன்றவரை பொருளும் போகமும் அனுபவிப்பதே பெரும் பாலும் அவனுடைய குறிக்கோளாயிருக்கின்றது. அங்ஙனம்

பொருளும் போகமும் தேடி அனுபவிக்கக் கவலைப்படாத சிலரை, மக்கள் 'வாழத் தெரியாதவர்,' 'உலக ஞானமற்றவர்' என்று இகழ்கின்றனர்.

'வாழ்வு வாழ்வதற்கே' என்று முழக்கமிடுகின்றனர் பலர். ஆகவே, உலகத்தோடு ஒட்ட ஒழுகல், பேரும் புகழும் பெற என்னென்ன செய்ய வேண்டுமோ அதையெல்லாம் செய்ய முனைந்து நிற்றல், நேர்மையற்ற முறையில் முன்னேற முயற்சித்தல் போன்ற செயல்களே உலகில் பெரிதும் பாராட்டப்படுகின்றன. இங்ஙனம் செயல் புரியத் தெரியாதவன் 'பிழைக்கத் தெரியாத பேதை' என இகழப்படுகின்றான்.

அத்தகைய இகழ்ச்சியினைப் பொருட்படுத்தாமல் மானத்தையும் துறந்து, பொருளும் போகமும் துறந்து, உலகம் தரக்கூடிய இன்பத்தைத் துறந்து இவ்வுலகம் தர இயலாததோர் இன்பத்தை (பேரின்பத்தை) நாடி, அதனையே சிந்தித்து, அதன் பொருட்டு எத்தகைய இகழ்ச்சியையும் தாங்கத் தயாராயிருப்பதாக உரைத்தலே நாணுத்துறவுரைத்தலாகும்.

ஆன்மா இறைவனது காதலைப் பெற்று இன்புறுவது, மிக எளிதாகப் பெறப்படும் பேறு அன்று. ஒரு பெண்ணின் காதலைப் பெறுவதே எளிதன்று எனின், இறைவனின் அன்பைப் பெறுவது பற்றி என்னென்பது! ஆனால், அது பெற முடியாததன்று. தீவிரமாய் முனைந்து, 'எப்படியும் அடைந்தே தீருவேன்' என்று உறுதி பூண்டு முயன்றால், வெற்றி காணவியலும் என்பதில் ஐயமில்லை. இறைவனை எப்படியும் அடைய வேண்டும் என்னும் ஆர்வம் ஆன்மாவில் தோன்றும்போது, அவன் தன் அருளைப் பன்மடங்கு தந்து ஆட்கொள்ள வாராதிருப்பானோ?

இக்கருத்துகளே 'மடலேறுதல்' என்ற உவமையால் விளக்கப்படுகின்றன. 'இறைவனை அடைந்தே தீருவேன்' என்னும் விரதத்தில் ஆன்மா பெரிதும் வலிமை பெறுகின்றது.

1132. "நோனா உடம்பும் உயிரும் மடலேறும்
நாணினை நீக்கி நிறுத்து."

முன் நுகர்ந்த காதல் இன்பத்தைப் பெற இயலாததால் உண்டான வருத்தத்தைத் தாங்க இயலாத (நோனா) உடம்பு'

நாணினை நீக்கிவிட்டு, 'இனி உயிர் வாழ்ந்தென்ன பயன்?' என்றவாறு. உடம்பு மட்டும் மடலேறுவதோடு நில்லாமல் உயிரும் சேர்ந்து ஏறியது என்றவாறு. எவ்வாறாயினும் நினைத்ததை அடைந்தே தீர வேண்டும் என்னும் கருத்தை வலியுறுத்துகிறது. அந்த மனோவலிமையால் இறைவனை அடைந்தே தீருவேன் என்றவாறு.

1133. "நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன்
காமுற்றார் ஏறும் மடல்."

முன்பு நாணமும் ஆண்மகனுக்குரிய ஆண்மையும் உடையவனாயிருந்தேன். இன்று காதல் பெருகிவர ஆண்மகனுக்குரிய ஆண்மையெல்லாம் போயொழிய மடலேறும் வலிமை மட்டும் கொண்டுள்ளேன். பெண்காதல் பொருட்டு இங்ஙனம் புரிகின்றேனாயின், இறைவன் காதல் பொருட்டு என்னதான் செய்யாமலிருக்கவியலும்? அதன் பொருட்டு 'ஆண்மையை - அஃதாவது, தன்மான உணர்வு' பிறரால் ஏற்படக் கூடிய இகழ்ச்சி முதலிய எல்லாம் ஒரு பொருட்டாய் எண்ணாமல் ஒரே நோக்குடன் பேரின்பத்தை நாடுவாயாக என்றவாறு. சிற்றின்பமே வாழ்வு என்று மக்கள் வாழ்கின்ற உலகில், ஒருவன் அதைப் புறக்கணித்துப் பேரின்பத்தை நாடினால், அதை இகழ்பவர்கள் இல்லாமல் இல்லை. ஆனால், அதை ஒருவன் பொருட்படுத்தலாகாது.

1134. "காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை."

முந்திய குறட்பாக்களில் கூறப்பட்ட நாணும், ஆண்மையும் காமம் என்னும் வெள்ளத்தில் பயன்பட இயலாப் புணைகள் போல் உள்ளன. காதல் என்பது அத்துணை வலிமையும் வேகமும் கொண்டது. எத்துணை இடையூறுகள் நேரிடினும் பொருட்படுத்தாது காதல் என்பது! சாதாரணப் பெண் காதலுக்கு இத்துணை வலிமை உண்டென்றால், இறைவனின் பேரின்பக்காதல் மீது தன் மனத்தைச் செலுத்திய ஆன்மாவுக்கு எத்துணை வலிமை இருத்தல் வேண்டும்! இறைவனின் அன்பு வெள்ளம், காதல் வெள்ளத்தைவிட எவ்வளவோ வலிமை வாய்ந்ததன்றோ! அதனை எய்திட எதற்கும் அஞ்சாதே என் நெஞ்சே! என்றவாறு.

1135. ''தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை உழக்கும் துயர்.''

தொடலை - மாலை

தொடலைக் குறுந்தொடி- மாலை போலத் தொடரும் சிறிய வளையல்களையுடையாள் - காதலி

மாலை உழக்கும் துயர் - மாலைப் பொழுதில் வருத்தும் துன்பம்.

நேர்யால் விளையும் வருத்தம் சாதாரணமாக மாலை நேரத்தில் அதிகரிப்பதுண்டு. இருள் மிகமிக, ஒருவித அச்சமும் திகிலும் ஏற்படுவதுபோலக் காதல் நோயும் மாலை வேளை வரும்போது அதிகரிக்கும் எனலாம். காதலியைப் பிரிந்திருக்கும் நேரம் அந்நேரம் அன்றோ? மணம் நிகழாத நிலையில் இரவில் சேர்ந்திருப்பது இயலாதன்றோ! ஆகவே, வருத்தம் அதிகரிக்க நேரிடும்.

பேரின்பம் தரும் இறைவனையடையும் பாதையிலும் இருள் மிகும் நேரமுண்டு. அஃதாவது, ஆன்ம ஒளி குறைந்து இருள் மிகுந்து திசை தெரியாத நிலையில் ஆன்மா தத்தளிக்கும். இஃது இறைவனின் திட்டத்தில் உள்ள ஓரம்சம் என்று முன்பே கூறப் பட்டது காண்க. எல்லாம் ஒளிமயமாகவும் இன்பமயமாகவும் இருப்பதில்லை. பேரின்பம் வந்தடையு முன்னர் சிறுதுன்ப மேனும் ஏற்றேயாக வேண்டும். இது மாலை போன்ற நேரம்- அஃதாவது துயர் மிகும் நேரம் என்க.

1136. ''மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற
படல்ஒல்லா பேதைக்கென் கண்.''

யாமத்தும் - நள்ளிரவிலும்

உள்ளுதல் - நினைத்தல்

கண்படல் - கண்உறங்குதல்

காதல் பெருக்கின் காரணமாக நான், இரவில் எல்லோரும் உறங்கும் நள்ளிரவிலும் உறங்காமல், மடல் ஊர்தலையே (அஃதாவது, மடல் ஏறிக் காதலியை அடைந்தே தீரவேண்டும்

என்னும் நினைவையே) சிந்தித்த வண்ணமாயிருப்பேன். இது காதலின் ஓயாத தீவிரத்தை உணர்த்தும் குறள்.

இத்தகைய தீவிர நினைவைப் பேரின்பக் காதலியாகிய இறைவன்பால் கொள்வதுண்டா? பேதை நெஞ்சே! என்றவாறு.

1137. "கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்."

"பெண் மடலூர்தலில்லை; காமத்தில், பெண் இருந்த இடத்தில் இருப்பவள். ஆணிடம் விரைந்தோடுவதில்லை. ஆனே பெண்ணிடம் ஓடுவான்; சுற்றித்திரிவான் என்பது, காமத்தை அடக்கி வைப்பதில் பெண் ஆற்றல் மிக்கவள்; காமநூலார் பலர் கண்ட உண்மை இது," எனப் புலவர் மு. கோவிந்தசாமி தம் நய உரையில் கூறுவது களவியலில் இறைவனாகிய பெண்ணுக்கு முற்றிலும் பொருந்துவது காண்க.

ஆன்மாவின் காதல் தனக்குத் தேவையென இறைவன் அதன் பின் ஓடுவதில்லை. மேலும், பெண் ஆணிடம் ஓடுவ தில்லை என்பது அக்காலத்தில் உண்மையாயிருந்திருக்கலாம். இன்றும் அஃது உண்மையா? இன்று காதல் இலக்கணமே மாறிவிட்டது போல் உள்ளதன்றோ? ஆனால், இறைவனாகிய பெண்ணைப் பொறுத்தமட்டில் அன்றும் இன்றும் என்றும் ஒரே படித்தாக, அவன் ஆன்மாவைத் தேடி அலையத் தேவை யில்லை. அப்பொருளில் அலைவதுமில்லை. ஆன்மாக்களின் அன்பை நாடி இறைவன் செல்வது, தன் தேவையை நிறைவு செய்ய அன்று; ஆன்மாக்களின் தேவையை நிறைவுபடுத் தவேயாம். அன்பின் பெருக்கால் நிகழ்வது. ஆகவே, 'மடலேறாப் பெண்' என்பது அவன் ஒருவனுக்கே முற்றும் பொருந்துவது காண்க.

மேலும், இறைவனாகிய தலைமகளோ, இத்தகைய நோன்பை (மடலேறுதலைத்) தெரிவிக்க வேண்டுவதில்லை. (1137) 'ஆன்மாக்களின் காதலை நான் அடைந்தே தீருவேன்' என்று இறைவன் உறுதிபூண எள்ளளவும் தேவையில்லை. எல்லா நிறைவுமுள்ள அவனுக்கு அக்காதலே தேவையில்லை யாதலின்! இறைவன் மீது ஆன்மா அன்பு செலுத்த உறுதி

பூணுவதால் பயனடைவது ஆன்மாவேயன்றி இறைவன் அல்லன்.

மேலும், இறைவன் என்றும் ஆன்மாக்கள் மீது இடையறாக் காதலைக் கொண்டவனாகவே காட்சியளிக்கின்றான். அதனை வெளிப்படுத்தியும் உள்ளான். தான் படைத்த ஆன்மாக்கள் தனக்கு அன்பு செய்யத் தூண்டியவனாய்ப் பல வழிகளைக் கையாள்கின்றான். அதற்குத் தேவையான அருளையும் ஏராளமாகத் தருகிறான். ஆகவே, இறைவன் 'மடலேறாப் பெண்ணாவாள்.

'மடலேறாப் பெண்' என்னும் பெயர் இறைவனாகிய தலைமகளுக்கே முற்றும் பொருந்துவது காண்க.

1138. ''நிறையரியர் மன்அளியர் என்னாது காமம்
மறைஇறந்து மன்று படும்.''

நிறை அரியர் - நிறை இல்லாதவர்
மன் அளியர் - மிக அன்பு செய்யத் தக்கவர்

காமம் மறை இறந்து - காம உணர்வு மறைந்திருக்கும் (களவொழுக்கமாயிருக்கும்) நிலை நீங்கி

மன்றுபடும் - வெளிப்பட்டு விடும்.

காமத்தை வெகுகாலம் மறைத்து வைத்திருக்க இயலாது. வெளிப்பட்டே தீரும். ஆண் பெண்ணிடம் கொள்ளும் காதல் மட்டுமன்று. பெண் ஆணிடம் கொள்ளும் காதலும் இங்ஙனமே வெளிப்பட்டுவிடும். முந்தியது வெளிப்பட்டு விடுவதில் இழிவு ஒன்றுமில்லை; அஃது எதிர்பார்க்கப்படுவதே. ஆனால், பிந்தியது (பெண் ஆணிடம் கொள்ளும் காதல்) வெளிப்பட்டு விடுவது பெண்ணுக்கு இழுக்காகும். எனினும், காதல் மிகப் பெருகிவிடின் இதுவும் நிகழ்வதுண்டு.

ஆனால், இறைவனாகிய தலைமகளின் (பேரின்பக்) காதல் (மானிடர் பால் கொள்ளும் அன்பின் தீவிர நிலை) வெளிப்படு மாறு அவனே செயல் புரிவதுண்டு. அங்ஙனம் செயல்புரியா விடில், ஆன்மா அதை அறிந்து கொள்ள இயலாது. இறைவன்

ஐந்தவித்தானாக உலகுக்கு வந்ததன் சிறப்பு நோக்கம் இதுவே என்க. மானிடப் பெண்ணுக்கு இஃது இழுக்காகலாம். இறைவனுக்கு இஃது எவ்விதத்திலும் இழுக்காகாதது மட்டுமன்று; தேவைப்படுவதுமாகும். இதை உணர்ந்தொழுகுவாய் மனிதா!

1139. ''அறிகிலார் எல்லாரு மென்றேஎன் காமம்
மறுகின் மறுகும் மருண்டு.''

மறுகில் - இவ்வூர்த்தெருக்களில்

மருண்டு - மயங்கி

மறுகும் - திரிகின்றது

'என் காதலின் பெருமையையும் தீவிரத்தையும் யாரும் நன்கு அறிவதாகக் காணோம். ஊரில் அஃது அவ்வளவு வெளிப்படையாகத் தெரியவில்லை'! என்று காதலி வருந்துகிறாள். இஃது இம்மைக் காதலர் விசயத்தில் எவ்வளவு உண்மை என்று சொல்வதற்கில்லை. சிறப்பாக இன்றையச் சூழ்நிலையில் இஃது ஏறக்குறைய இல்லையென்றே தோன்றுகிறது.

ஆனால், இறைவனாகிய தெய்வீகக் காதலியின் பேரின்பக் காதலைப் பொறுத்த அளவில் மானிடக்காதலர் அதைப் பெரும்பாலும் அறிந்துகொள்ள இயலாதவர்களாகவே உள்ளனர்! ஏன், அறிந்து உணர்ந்துகொள்ள விரும்பாதவர்களாகவே உள்ளனர். ஏனென்றால், உடம்பொடு இணைந்த காதலைப் போல் பேரின்பக்காதல் அத்துணை எளிதில் மனத்தைக் கவரக் கூடியதன்று. வெகுகாலம் சிந்தித்துச் சிந்தித்து, இறைவன் அருளையும் நாடி, ஆர்வமுடன் விரும்பி விரும்பி அடைய வேண்டியதொன்று. சிற்றின்ப வேட்டையிலேயே பெரும்பாலும் நாட்டம் கொண்டுள்ள மனிதன் அந்த அளவுக்குப் பேரின்பத்தை நாடுவதில்லை. ஆகவே, இறைவன் 'என் பேரின்பக்காதலை இப்பேதை மனிதர் யாரும் புரிந்துகொள்ள இயலாமல் சிற்றின்பத்திலேயே மயங்கித் திரிகின்றனரே!' என்கிறான். இதை எண்ணி உன் உள்ளத்தை அவன்பால் செலுத்துவாய் மனிதா! என்கிறது இக்குறள்.

1140. ''யாம்கண்ணில் காண நகுப அறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு.''

இவ்வளவாக யான் விரும்பித் தேடும் காதலைப் பெறும் விசயத்தில் யான்பட்ட வேதனையைத் தாங்கள் படாததால், காதல் பற்றிய சிந்தனையில்லாதவர், யான் காண என்னைக் கண்டு ஏளனம் செய்கின்றனர்.

இம்மைக் காதலர் விசயத்தில் இஃது ஓரளவு உண்மையே என்று கொள்ளலாம். ஆனால், மறுமைக் காதல் விசயத்தில் இது மிகச் சிறப்பாக நிறைவேறுகின்றது.

இறைவன் மீது ஆன்மா கொண்ட காதலின் விளைவாக (மேற் சொன்னவாறு) பல இகழ்ச்சிச் சொற்களைத் தாங்க வேண்டியிருக்கும். 'இவனுக்குப் பக்திப் பைத்தியம் போலும்,' 'இவன் ஒரு கடவுட் பித்தன்' இவை போன்ற இகழ்ச்சிப் பேச்சுகள் எழுந்தே தீரும்.

உண்மையாகவே ஒருவனுக்குக் கடவுள் மீது தீவிர பக்தி ஏற்படும்போது, வேறெதையும் கவனியாது - பொருட்படுத்தாது, இறைவனின் காதலைப் பெற்றுத் தீர வேண்டும் என முற்படுகிறான். அப்போது இப்படி இழி சொல்லுக்கு ஆளாகியே தீர வேண்டும். 'இவையெல்லாம் உண்மை அறிவில்லாதவர் பேசும் பேச்சு; என் எதிரிலேயே இப்படிப் பேசி ஏளனமாகச் சிரிக்கின்றனர். நெஞ்சே! இதையெல்லாம் பொருட்படுத்தாதே; ஏற்றுக்கொண்ட நோன்பை விடாதே' என ஆன்மா தன்னைத் தேற்றிக் கொண்டவாறு.

ஐந்தவித்தானாகிய இறைவனின் வாழ்க்கையும், செய்த போதனைகளும், காட்டிய முன் மாதிரியும் இதையே அடிப்படையாகக் கொண்டுள்ளன.

மானிடர் மீது தம் அன்பை எண்பிக்க ஐந்தவித்தான் ஏற்க **வேண்டிய** இழிசொல்லுக்கும் செயலுக்கும் அதிகமாக அவனது சீடர் படப் போவதில்லை!

# நாணுத்துறவுரைத்தல்
## சுருக்கம்

1131. "காமம் உழந்து வருந்தினார்க் கேமம்
மடலல்ல தில்லை வலி."

காதற்பெருக்கினால் வருந்துவோர்க்கு (அக்காதல்) இன்பம் பெறுவதற்கு மடலேறுவது ஒன்றே வலிமையுள்ள வழியாகும்.

**குறிப்பு :** மடலேறுதல்: ஆடை களைந்து, நீர்ச்சீலை யணிந்து, உடல் முழுதும் சாம்பலைப்பூசி, எருக்க மாலை அணிந்து, தான் காதலிப்பவளுடைய உருவம் எழுதிய படத்தைக் கையில் தாங்கி, அதையே நோக்கிய வண்ணமாக அவள் குடியிருக்கும் ஊர்வழியே எல்லாரும் காணத் தவக்கோலம் பூணுதல் ஆகும். ஊர்ப்பெருமக்கள் இதைக்கண்டு காதல் ஆய்விற்கு அவன் உடம்பட்டபின் அவனைப் பனங்கருக்கு மட்டையாற்செய்த குதிரைமேல் ஏற்றித் தெருவில் இழுத்துச் செல்வர். கருக்குப்பட்ட இடமெல்லாம் இரத்தம் தோன்றாது விந்துநீர் தோன்றினால் காதலியை அவனோடு கூட்டி வைப்பர். இன்றேல் கூட்டி வைப்பதில்லை. இஃது அநாகரிகக் காலத்தில் நடைபெற்றதாயிருக்கலாம். காதலியை அடையக் காதலன் பூணும் வைராக்கியத்தை வலியுறுத்தும் உவமையாக மட்டுமே இன்று கொள்ளலாம்.

சாதாரணக் காதலியை அடைய ஒருவன் இத்துணை வருந்துவானாயின், இறைவனாகிய காதலியை அடைய எத்துணை வருந்தினாலும் அது சிறியதே!

1132. "நோனா உடம்பும் உயிரும் மடலேறும்
நாணினை நீக்கி நிறுத்து."

(காதலியை அடைய இயலாத நிலையையும்) பொறுக்க இயலாத (நோனா = நோனுதல் - பொறுத்தல்) என் உடம்பு மட்டுமன்று, என் உயிருமே, மடலேறுதலாகிய நாணத்தையும் மறந்து விட்டன.

இறைவனை எப்படியும் அடைய வேண்டுமென்றால், பிறர் சொல்லக்கூடிய ஏச்சுப் பேச்சுக்கும் அஞ்சலாகாது.

1133. "நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன்
காமுற்றார் ஏறும் மடல்."

நாணமும் ஆண்மகனுக்குரிய பண்பும் முன்பு எனக்கு இருந்தன. (காதலால் உந்தப்படும்) எனக்கு இன்றுள்ளது மடலேறும் நிலையே. இறைவனின் பேரின்பக்காதலை உணராத காலத்தில் யான் வெறும் மனித இயல்புகளுக்கு அடிமையாயிருந்தேன். இன்று அக்காதலையடைய எதுவும் செய்யத் துணிந்து விட்டேன்.

1134. "காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு
நல்லாண்மை என்னும் புணை."

(மேற்கூறிய) நாணம், ஆண்மைப்பண்பு என்னும் தோணி, (பெருவெள்ளம் போல்) வந்து தாக்கும் காதல் வெள்ளத்தில் அடிபட்டுப் போய்விடுகின்றது.

இறைவனின் அன்பின் பெருக்கால் தவறான மனப்போக்கு வெல்லப்படல் வேண்டும்.

1135. "தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை உழக்கும் துயர்."

மடலேறும் வருத்தத்தோடு (இருள் கவியும் மாலை நேரத்தில் ஏற்படும் அச்சம் அயர்வு போன்று, மன இருள் கவிந்ததுபோல) துயரை, (மணியும் வளையலும் அழகுற அணிந்த) இந்தக் காதலி எனக்குத் தந்தார்.

இறைவனை எப்படியும் அடையவேண்டும் என்னும் ஆர்வத்தால் ஏற்படும் மனத்துயரை (காதலியாகிய) என் இறைவனே எனக்குத் தந்திருக்கின்றான். இறையன்பில் ஆன்மாவை உறுதிப்படுத்தி, அன்பின் பெருக்கால் ஏற்படும் துயரே, ஆழ்ந்த அன்புக்கு அத்தாட்சி - மேலும் வளர்க்கும் சாதனம் என்பது தெளியப்படத்தக்கதொன்று. இன்பத்தின் போது காட்டும் அன்பைவிட எத்துணையோ உயர்ந்தது துன்பத்தின்போது காட்டப்படும் அன்பு என்பது மனித வாழ்க்கையிலேயே காணும் ஒன்று.

1136. ‘‘மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண்.’’

(காதல் பெருகப்பெருக) மடலூர்தலை (அஃதாவது மடலூர்தல் போன்ற வருத்தத்தை) மாலை நேரத்தில் மட்டு மன்று, இரவிலும் நள்ளிரவிலுங்கூட ஓயாமல் நினைத்துக் கொண்டேயிருக்கிறேன். இதனால் என் பேதை நெஞ்சம் என்னை உறங்கவும் விட இயலாமலிருக்கிறது.

மனிதரிடைக் காதல் இத்துணை ஏக்கத்தை விளைவிக்கு மாயின், இறைவனையே காதலியாகக் கொள்ளும் ஆன்மாவுக்கு எத்துணை அன்பேக்கம் இருத்தல் வேண்டும்! இதை உணர்வாய் பேதை மனிதா!

1137. ‘‘கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.’’

காதல் பெருக்கால் கடல்போன்ற வருத்தம் விளைந்தாலும் காதலன் மடலேறுவானேயன்றிக் காதலி மடலேறுவதில்லை. இது பெண் பிறப்புக்கு எத்துணை பெருமை தருவது! (உலக வழக்கிலும் ஆணைத்தேடிப் பெண் ஓடுவதில்லை. அது பெண்ணுக்கு இழுக்கு).

இனி, ஆன்மா (மானிடப்பிறவி) இறைவனின் அன்புக்காக ஏங்க வேண்டுமேயன்றி, அதற்காக எத்துணை துன்பமும் ஏற்க வேண்டுமேயன்றி, இறைவனாகிய காதலி ஆன்மாவின் அன்பைப் பெற ஏங்குதல் அவனுக்கு இழுக்கு.

ஆனாலும், மானிடக்காதலன், காதலியின் அன்புக்காக ஏங்குவது அவர்க்குத் தேவைப்படுகிறது. இத்தேவையை ‘அன்பின் வழியது உயிர்நிலை, அஃதிலார்க்கு என்புதோல் போர்த்த உடம்பு’, ‘அன்புற்றமர்ந்த வழக்கென்ப, வையகத்து இன்புற்றார் எய்தும் சிறப்பு’, ‘அன்பீனும் ஆர்வமுடைமை’, ‘அன்போடு இயைந்த வழக்கென்ப’ ஆகிய குறட்பாக்களால் அறிக.

இறைவனும் ஒருவகையில் மனிதனின் அன்புக்காக ஏங்கு கிறான். இதுவே ஐந்தவித்தானின் வரலாறு முழுவதும். ஆனால்,

இங்ஙனம் ஏங்குவது இரக்கப்பெருக்கத்தால். 'அன்பிற்கு அடைக்கும் தாழ் இல்லை.' 'அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் அடிப்படையில்.

1138. ''நிறையரியர் மன்னளியர் என்னாது காமம்
மறையிறந்து மன்று படும்.''

(இது காதல் பெருகிய வழி தலைமகள் சொல்லியது). என் காதலர்-இவர் நிறைவு என்னும் மனத்திண்மை, உறுதிப்பாடு, ஆடுஉக்குணம் ஆகிய நற்குணங்கள் உடையவர். இவரை அடைவது அரிதே (நிறையரியர்); மிகுதியாக அன்பை அளிக்கத்தக்கவர் (மன்அளியர்) என்றெண்ணாமல் என் காதல் இனியும் மறைவாயிராமல் வெளியே (மன்று) காணப் படுவதாய்விட்டது.

காதலன் [காதலியை அடைய ஏங்கும்போது, காதலியின் உள்ளத்தில் தோன்றக்கூடிய ஐயப்பாடு இது.

இத்தகைய நிலை இறைவன்- ஆன்மா இடையிலும் காணக் கூடும். ஆனால், இது வேறுவிதமாக நிகழும். ''என் அன்பை இந்த ஆன்மா ஏற்குமோ, புறக்கணிக்குமோ என்னும் நிலை இறைவன் :உள்ளத்தில்! இறைவனாகிய என் காதலியின் அன்பை ஏற்க எனக்கு என்ன தகுதியுண்டு என்னும் நிலை மனிதனின் உள்ளத்தில்! இது நடைமுறையில் நிகழ்வது பேரின் பக்காதலின் சிறப்புப் பண்பாகும்.

1139. ''அறிகிலார் எல்லாரும் என்றேயென் காமம்
மறுகின் மறுகும் மருண்டு.''

(இதுவும் தலைமகள் சொல்லியது). காதலன் காதலியை அடைய முயன்றுகொண்டேயிருக்கும் நிலையில், தலைமகள் கூறுவது: என் உள்ளத்தை யான் மட்டுமே அறிவேன்; பிறர் யாரும் நன்கறியார், என்றெண்ணியவளாய், என் காதல் ஒரு வித மயக்கங்கொண்டு (மருண்டு) ஊர்த்தெருக்களில் (மறுகு) உலவுகின்றது. (மறுகுதல்) - அஃதாவது, முன்பு ஊரினர் வெளிப்படக்கூறாது முணுமுணுத்துக் கொண்டிருந்த நிலை மாறி அலராய்விட்டது. (அஃதாவது) ஊரார் வெளிப்படப் பேசிக் கொள்வதாயிற்று. (இனி களவாகிய மறைவுநிலை நீங்கி கற்பாகிய அறநிலை உருவாதல் வேண்டும் என்றவாறு).

இறைவனாகிய தலைமகளைப் பொறுத்தமட்டில் இத்தகைய மறைவுநிலை தொடக்கநிலையே என்க. கற்புநிலை அன்பில் உறுதிப்படும் நிலையாகும். களவுநிலை முற்றி மணமாகிய கற்புநிலை மானிடராகிய காதலருள் நிகழ்வதுபோல், இறை அன்பில் தொடக்க நிலை முற்றி இறைவனோடு மணமாகும் நிலை உருவாவது என்க.

ஊரார் முணுமுணுப்பது - பேரின்பக்காதலை உணர இயலாதவர் பேசும் வீண்பேச்சு.

1140. ''யாம்கண்ணில் காண நகுப அறிவில்லார்
யாம்பட்ட தாம்படா ஆறு.''

காதல்பெருக்கினால் காதலன் படும் வருத்தத்தைப் பார்த்து அறிவில்லாதவர் தம் முன்னிலையிலேயே நின்று நகைக்கின்றனர்; யான்படும் வருத்தத்தை அவர்கள் பட்டால்தானே!

பேரின்பக்காதலை அறியாதவர், அதனை உணர்ந்தவர் படும் வருத்தத்தைத் தாம் அறியாதவராய் ஏளனம் செய்கின்றனர். 'பக்தி பைத்தியம்' எனச் சிலர் இறையன்பில் அதிகம் ஈடுபட்டிருப்பவர்களைக் கண்டு நகைப்பதுண்டு! எத்துணை அறியாமை இது!

# 115. அலரறிவுறுத்தல்

காதலரது களவொழுக்கத்தை, ஊரினர் வெளிப்படக் கூறாது முணு முணுப்பது - அம்பல்.

வெளிப்படக் கூறுவது - அலர்

முந்திய அதிகாரத்தில் **அம்பல்** கூறப்பட்டது. இதில் **அலர்** கூறப்படுகிறது.

1141. ''அலர்எழ ஆருயிர் நிற்கும் அதனைப்
பலர்அறியார் பாக்கியத் தால்.''

'ஊரில் உள்ளவர் வெளிப்பட எங்கள் காதலைக் குறித்துப் பேசுவதால், (அ0தாவது அலர் எழுதலால்) இனி திருமணத் துக்கு வழி பிறக்கும் என்னும் நம்பிக்கையில் என் உயிர், நிலை பெற்றிருக்கிறது. இல்லையேல், என் உயிர் போய்விடும்போல் உள்ளது. இந்த நிலைமையைப் பலர் அறியாதிருப்பதே எமக்கு நலம்,' என்று நினைக்கின்றனர் காதலர்.

பேரின்பக் காதலைப் பொறுத்த மட்டில் இறைவனாகிய தலைமகளின் காதலைப் பெற ஆன்மா சில சமயங்களில் மேற்சொன்ன இகழ்ச்சிப் பேச்சுகள் சிலவற்றைப் பொறுத்துக் கொள்ள வேண்டிய நிலைமைக்கு ஆளாக நேரிடலாம்.

எனினும், ஆன்மாவை எப்படியும் அடைய வேண்டுமென்று தீவிர முயற்சியுடன் தேடுகின்ற இறைவன், ஐந்தவித்தானாக உலகில் தோன்றி, ஆன்மாக்களின் மீது தனக்குள்ள இணையற்ற காதலை வெளிப்படுத்தியதை நினைத்தால், அவன் காட்டிய 'பொய்தீர் ஒழுக்க நெறி' நின்றால் பெரும்பாலும் ஈண்டுக் கூறப் படும் தொல்லைகளைப் பட்டுத் திரவேண்டிய நிலைமைக்குப் பலர் ஆளாவதைக் காண்கின்றோம்.

''தன் தாயையும் தந்தையையும்விட எனக்கு அன்பு செய்யாதவன் ஏன், தன் உயிரையும்விட என்னை நேசியாதவன்

எனக்குத் தகுதியற்றவன்'' என்று கூறிய ஐந்தவித்தானாகிய இறைவன், ''எனக்காக நீங்கள் எல்லாராலும் பகைக்கப்படுவீர்கள்; என் பொருட்டுத் தாய் தந்தையரையும் மனைவி மக்களையும் உற்றார் உறவினரையும் எதிரிகளாக்கிக் கொள்வீர்கள்; என் பொருட்டு யாவராலும் இகழப்படுவீர்கள்'' என்றெல்லாம் கூறியிருப்பது கவனிக்கத்தக்கது.

நிகரற்ற நேயமும் கரையற்ற காதலும் அளவற்ற அன்பும்கொண்டு, தன்னையே தியாகப் பலியாக்கி உலகுக்கு எடுத்துக் காட்டிய அவரது காதலைப் பெற வேண்டும் என்னும் எண்ணத்தோடு தீவிர முயற்சியில் ஈடுபடுபவர் பலர், இன்னும் பல இன்னல்களுக்கும் தம்மவர் தூற்றுதலுக்கும், ஊரார் ஏசுதலுக்கும் ஆளாகி அவதிப்படுபவதையும், அத்தனையும் தாங்கித் தம் காதலராகிய இறைவனை - ஐந்தவித்தானை அடைந்து இன்புறுவதையும் கண்டே வருகிறோம். மனிதர், துன்பத்தைக் கண்டு அஞ்சுபவராதலின், இத்தகைய காதலரை அடையப் பலர் முன்வருவதில்லையெனினும், முன்வருவோர் இல்லாமல் இல்லை. ஆகவே, இந்நிலையில் அவதிப்படுகிற ஆன்மாவுக்கு ஈண்டுக் கூறப்படும் 'அலர்' சிறப்பாகப் பொருந்தும் என்க.

இந்த அலர் எனக்கும் இறைவனாகிய தலைமகளுக்கும் உள்ள காதற் தொடர்பு நீங்குவதற்குப் பதிலாக வளர்ப்பதற்கே பயன்படுகின்றது. இந்த அலரால் என் உயிர் போய்விடப் போவதில்லை. மாறாகப் புத்துயிர் வருவதுபோல் உள்ளது, எனக்கு இதனால்! இந்த அலரை எழுப்புவோர் இதனையறியாமல் உள்ளனர்.

1142. ''மலரன்ன கண்ணாள் அருமை அறியா
தலர்எமக் கீந்ததிவ் வூர்''

என்னால் பெரிதும் விரும்பப்பட்டுக் காதலிக்கப்பட்டவளின் அருமையை அறியாமல் இந்த ஊரினர் அலர் எழுப்பினர். இங்ஙனம் எழுப்பியதால் என் காதலியை அடைய அரியதொரு வாய்ப்புப் பிறந்தது என்பதை அவர்கள் அறியவில்லை. இஃது எனக்கு நன்மையே!

முந்திய குறளில் கூறப்பட்ட இகழ்ச்சிப் பேச்சு, எதிர்ப்பு முதலிய இடைஞ்சல்கள் எல்லாம் இறுதியில் திருமணத்தில் முடிந்தால் நலம்தானே!

இங்ஙனமே இடைஞ்சல்கள் பல ஏற்பட்டாலும், இறைவனின் பேரின்பக் காதலுக்கு உரியதாயின், ஆன்மா பேறு பெற்றதேயன்றோ!

என் உள்ளத்தைக் கவர்ந்த இறைவனாகிய (ஐந்தவித்தானாகிய) தலைமகளை அடைவதின் பெருமையையும் அருமையையும் அறியாதவர்கள், இந்த அலரை எனக்கு அளித்து (இகழ்ச்சியை உண்டாக்கி) என் காதலி என்னோடு மேலும் தொடர்பு கொள்ள உதவியிருக்கின்றனர். துன்பத்தினிடையே நுகரப்படும் காதலே மிகச் சிறந்தது - ஆழ்ந்தது- உண்மையானது. இத்தகைய காதலையே ஐந்தவித்தான் உலகுக்கு வெளிப்படுத்தியுள்ளான்!

முந்திய குறளில் கூறியது மேலும் அழுத்தமாகக் கூறப் பட்டது.

1143. "உறாஅதோ ஊரறிந்த கௌவை அதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து."

எங்களுக்கிடையே ஏற்பட்ட காதல் நிகழ்ச்சியை ஊரே அறிந்ததால், ஊரினர் வெளிப்படையாகப் பேசும் அலர், எம் காதில் விழாமலிருக்குமா? அதைக் கேட்கும்போது இன்னும் கூடாதிருந்தாலும், கூடும்போது உண்டாகக்கூடிய இன்பம் போன்றதொரு இன்பத்தை நுகர்கின்றோம். குறள் 1141ல் கூறப்பட்ட கருத்தே மீண்டும் கூறப்படுகிறது. அக்குறளில் உயிர் நிலைத்திருப்பதுபற்றி மட்டும் பேச்சு. இங்கு இன்பமும் கூட விளைவதுபற்றிப் பேச்சு. காதலர்களைப் பற்றிப் பிறர் பேசும்போதுகூட, ஒருவித இன்பம் ஏற்படுவதுண்டு. இதைவிட அதிகமாக இறைவனைப் பற்றியும் அவனது பேரின்பக் காதல்பற்றியும் பிறர் பேசும்போதும் இன்பம் விளைவதுண்டு.

1144. "கவ்வையால் கவ்விது காமம் அதுஇன்றேல்
தவ்வென்னும் தன்மை யிழந்து."

இக்காதல், இவ்வூரினர் கூறும் அலரினால் மேன்மேல் மிகுகின்ற தன்மையுடையது. அவ்வலர் இல்லையாயின், அத்தன்மை இழந்து சுருங்கிவிடும்.

பிறர் பேசப்பேசக் காதல் மிகுவது அனுபவத்தில் காண்ப தொன்று. பேரின்பக் காதலுக்கும் இது பொருந்தும்.

1145. ''களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்
வெளிப்படுந் தோறு மினிது.''

கள்ளுண்பவர்க்கு அதனால் இன்பம் மிகுவது போல, காதல் அலராகுந்தோறும் எனக்கு இனிதாய் உள்ளது. மேற்சொன்ன கருத்தே மீண்டும் கூறப்படுகிறது. அலர்மிகுதல் ஒரு விதத்தில் துன்பம் தருவதாயினும், காதலைச் சுவை மிக்கதாக்குகின்றது. உண்மைக் காதலை வளர்ப்பதாய் ஒருவித (கள்வெறி போன்ற) வெறியை விளைவிக்கின்றது. ஆழ்ந்த அன்பின் அறிகுறியாய் உள்ளது. துன்புற்றும் ஒருவருடைய அன்பைப் பெறுவதில் உலகில் காண இயலாததொரு தெய்வீகச் சுவை இருக்கத்தான் செய்கிறது. இது சிறப்பாக ஐந்தவித்தான் அன்புறவில் மிளிரும்.

1146. ''கண்டது மன்னு மொருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று.''

திங்களிடத்தில் காணும் களங்கத்தை மான் என்றும், முயல் என்றும் கூறுவர். கிழவி நூல் நூற்கிறாள் என்றும் கூறுவ துண்டு. திங்கள் மீது படும் ஞாயிற்றின் நிழலைப் பாம்பு தீண்டுதல் என்பது போல, நான் காதலரைக் கண்டது சிறு பொழுதே (ஒரு நாளே)யாயினும் அதனால் உண்டான அலர் திங்களைப் பாம்பு கொண்ட கதைபோல ஊரெங்கும் பரவிப் போயிற்று.

இறைவனாகிய ஐந்தவித்தான் மீது காதல் கொண்ட ஒருவன் அதைப் பிறர்க்கு வெளிப்படுத்தாவிடினும், விரைவில் பலருக்கும் தெரிந்து விடுகிறது. பலரும் தூற்றத் தொடங்குவது முண்டு. இதைப் பலமுறை அனுபவத்தில் காண்கிறோம்.

''என் பொருட்டு நீங்கள் பலரால் பழிக்கப்படுவீர்கள்'' என்று ஐந்தவித்தானே கூறியுள்ளான்.

1147. ''ஊரவர் கௌவை யெருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய்.''

ஊரார் கூறும் அலர் எருவாகவும், அதைக்கேட்டுத் தாய் கூறும் கடும்சொல் நீராகவும் காதல் என்னும் இப்பயிருக்கு அமை கின்றன. இதனால் காதல் செழிக்கின்றதேயன்றிக் குறைவதா யில்லை. அங்ஙனமே பேரின்பக் காதலும் வளர்கின்றது. யார் எவ்வளவு இகழ்ந்தாலும், தூற்றினாலும் அதனால் எத்தனை இடைஞ்சல்கள் ஏற்பட்டாலும் எல்லாம் இப்பேரின்பக் காதலுக்கு எருவாகவும் நீராகவும் அமைகின்றன.

1148. ''நெய்யா லெரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பே மெனல்.''

மேற்சொன்ன அலரினால் காதலை அவித்து விடுவோம் என்பது நெய்யினால் நெருப்பை அவித்து விடுவோம் என்பதற்கு ஒப்பாகும். அஃதாவது, இயலாது என்க. மாறாக வளரச் செய்வதாகும்.

அலராகிய துன்பம், தூற்றல் அதிகரிக்கப் பேரின்பக் காதலும் உறுதிபெறும்.

1149. ''அலர்நாண ஒல்வதோ அஞ்சல்ஓம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை.''

'நின்னைப் பிரியேன், அஞ்சவேண்டா' என்று பலரும் நாணும் வகையில் கூறி (இன்னும் மணம் நிறைவேறாமையின்) நீங்கியபின், ஊரார் கூறும் அலருக்கு நாண வேண்டியதேன்?'

ஆன்மாவில் காதல் ஏற்படவும் வளரவும் இன்றியமையாத துணையாயிருப்பது இறைவனாகிய தலைமகளின் செயலும் அருட்பார்வையுமாகும். அஃதின்றேல், ஆன்மா இறைவன் மீது அன்பு செலுத்த முற்படாது. அடைதற்கரிய பேறாகும் இறை வனின் அன்பை ஆன்மா வெகுகாலம் விரும்பி முயன்று எதிர் பார்த்துப் பெறத்தக்கது. மிகமிக உன்னதப் பேறாய் உள்ள தால், ஆன்மா எளிதில் நம்பிக்கை இழந்துவிடக்கூடும். ''இத் துணை மகத்தான பேற்றை எளியன் நான் அடையவும் இயலுமா?'' என்று தன்னையே கேட்டுக்கொள்ளக் கூடும்.

அதற்கு இறைவன், ''அஞ்சேல், நான் உனக்கு அருள் புரிவேன்'' என்று தேற்றுகின்றான்.

1150. ''தாம்வேண்டின் நல்குவர் காதலர் யாம்வேண்டும்
கௌவை எடுக்கும்இவ் வூர்.''

இது களவொழுக்கம் நிறைவுறும் சமயத்தில் கூறப்படுவது. தலைமகள் தலைமகனோடு அவனூர்க்குப் போகும் சமயம் நெருங்குகின்றது! இதற்கு இவ்வூரார் எடுக்கும் அலரே ஒரு விதத்தில் துணை செய்கின்றது. ''இவ்வூரார் இவ்வளவு தூற்று கின்றனர்; இனி நாம் ஒன்றாய்ப் போய்விட்டாலென்ன!'' என்னும் முடிவுக்கு வர, பேச்சும் தூற்றுதலும் துணை புரிகின்றன. இனி எம் காதலர் தீர்மானிக்க வேண்டியதுதான். அவர் விரும்பினால் உடன் போக்கை (அஃதாவது, இருவரும் தலைமகன் ஊருக்குப் போய் விடுதலை) எளிதில் ஒப்புக் கொள்வர்.

இது சிற்றின்பக் காதலரிடை பன்முறை நிகழ்வது. இதை உலகவியல் ஏற்றுக்கொள்ளலாம்! ஆனால், இதுதான் முறை என்போமா?

பேரின்ப உலகியலில் ஆன்மா நிரம்ப இறை அருளைப் பெற்ற பிறகு, இறைவனாகிய மணமகளைத் தன் இல்லத்தில்-தன் உள்ளத்தில் ஏற்றுத் துய்க்க-நிரந்தரமான ஒன்றிப்பில் வாழ முற்படும்.

''என் காதலராகிய இறைவனை என்னோடு அழைத்துச் செல்வேன்; அஃதாவது, அவருடன் பிரியாமல் வாழ்வேன்'' என்றவாறு.

'ஐந்தவித்தானோடு' தொடர்புபடுத்தி ஈண்டுத் தரப்படும் விளக்கம் உண்மையாயின், அவன் நெறியைப் பின்பற்றுவதாகக் கூறுபவர்கள் இறைவனின் காதலைப் பெறும் முயற்சியில் முனைந்து நின்று, இந்த அளவுக்கு 'அலர்'களைத் தாங்குவ தாகத் தெரியவில்லையே என்று வினா எழும்ப இடமுண்டு. மிக உன்னதப் பேரின்பக் காதலாகிய இந்நன்மையைப் பெரும்பாலும் மக்கள் நாடுவதில்லை. அதற்கு ஏற்ற முயற்சி முனைப்பு மேற் கொள்வதில்லை; மெய்தான். மிக உன்னதமானதாயிருப்ப தால் சிலரே அதற்காக முழு மூச்சுடன் முனைந்து நிற்பதைக் காண்கின்றோம். அனைவரும் இப்பேற்றுக்கு அழைப்புப் பெற்றுள்ளனர். எனினும், சிலரே அதை அடைய

முயல்கின்றனர். பலர் அதைப்பற்றிக் கவலைப்படுவதாகத் தோன்றவில்லை என்னும் காரணத்தால், யாருமே அதைக் குறித்துக் கவலைப்படவில்லை என்னும் முடிவுக்கு வர இடமில்லை.

## அலர் அறிவுறுத்தல்

### சுருக்கம்

1141. "அலரெழ ஆருயிர் நிற்கும் அதனைப்
பலரறியார் பாக்கியத் தால்."

(காதலர் பேசுவது) ஊரார் எம் காதலை வெளிப்படக் கூறுவதால் (அலர் எழ) எம் இருவருடைய உயிரும் (மணம் நிகழ இனி வாய்ப்பிருக்கும் என்னும் நம்பிக்கையால்) நிலைக்கும்; வருத்தத்தால் போய்விடாது. இந்த எம் மனநிலையை நல்ல வேளையாகப் பலர் அறியார். (அறிந்தால் ஏதாவது இடைஞ்சலை உண்டாக்கலாம்).

இறைவனுக்கும் ஆன்மாவுக்குமிடையே எழும் பேரின்பக் காதல் எளிதில் பலரும் புரிந்துகொள்ள இயலாதது. மறைவாகவே அது வளர்வதால் யாரும் தடங்கல் செய்யார் என்று நம்ப இடமுண்டு.

1142. "மலரன்ன கண்ணாள் அருமை அறியா
தலரெமக் கு ஈந்ததிவ் வூர்."

"மலர்போன்ற கண்ணழகுடைய என் காதலியின் அருமை அறியாமலேயே ஊரார் இங்ஙனம் எம் காதலை வெளிப்படையாகப் பேசினர். இஃது எனக்கு அவர்கள் செய்த உதவியே."

"என் பேரின்பக்காதலை (இறைவனின் அன்புள்ளத்தை) மக்கள் அறியாமலேயே பேசுகின்றனர். இதனால் அடைய வேண்டியது பயனே."

1143. "உறாஅதோ ஊரறிந்த கௌவை அதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து."

"(காதலர்) ஊரார் இப்படிப்பேசுவது (ஊரறிந்த கௌவை) எமக்குப் பயன்படாதோ? (பயன்படும்); அப்பயன் பெற வியலாதது போலிருந்தது. ஆனால், இப்போது பெற்றுவிட்டது போல் உள்ளது."

ஆன்மா அடைய விரும்பும் பேரின்பக்காதல் கிட்டுமோ கிட்டாதோ என்று தொடக்கத்தில் ஐயம் ஏற்படலாம். ஆனால், அதை மக்கள் வெளிப்படையாகப் பேசுவதால், இப்போதே கிட்டிவிட்டது போன்ற உணர்வு ஏற்படுகின்றது.

1144. "கவ்வையாற் கவ்விது காமம் அதுவின்றேல்
தவ்வென்னும் தன்மை இழந்து."

"ஊரார் இப்படிப் பேசுவதால் எம் காதல் வளர்கின்றதே யன்றிக் குறையாது. இத்தகைய நிலையில்லாவிடில் ஒரு வேளை குறையலாம் (ஊரார் பேச்சு ஒரு தூண்டுதல்போல)!"

பேரின்பக்காதலும் இவ்வகைப் பேச்சால் வளர்கின்றதே!

1145. "களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றால் காமம்
வெளிப்படுந் தோறும் இனிது."

காதல்பற்றி இங்ஙனம் ஊரார் பேச்சு வெளிப்பட வெளிப்பட அதனால் காதல் இனிமை பெருகுவதாகும். கள் உண்பவன் அதை உண்ண உண்ண மயக்கம் வளர்வதுபோல், காதலும் ஒரு விதக் கள்ளே!

1146. "கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று."

காதலரை ஒரே ஒருமுறை சந்தித்திருந்தாலும் ஊரார் அதை எங்கும் பரப்பிவிடுவர். (திங்களைப் பாம்பு கொண்டதுபோல! பழங்கால நம்பிக்கையை ஒருதாரணமாகப் பயன்படுத்துகிறார்).

பேரின்பக்காதலராகிய இறைவனுக்கு ஒரு சிறிது அன்பு செலுத்தினாலும் அதைப் பக்திப் பைத்தியம் என மக்கள் வீணாகப் பேசுவர்.

1147. "ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய்."

இக்காதல் நோய்க்கு ஊரார் பேச்சு, செடிக்கு எருபோல் உள்ளது. அவர்கள் பேச்சைக் கேட்டு அன்பைக் கடிந்து கொள்வது செடிக்கு நீர்போலாகும்.

பேரின்பக்காதல் வளர்வதற்குப் பிறர் பேசும் சொற்கள் எருவும் நீரும்போல் உள்ளன.

1148. "நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால்
கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல்."

ஊரார் பேச்சினால் காதலை அடக்கிவிடுவோம் என்பது, நெய்யால் நெருப்பை அவிப்போம் என்பதுபோல. (அணைவதற்கு மாறாக மேலும் எரியும்)!

பேரின்பக்காதலும் அங்ஙனமே. இடைஞ்சல்கள் வளரவளர இறைப்பற்று, மிகுதியாக வேண்டுமேயன்றிக் குறையலாகாது.

1149. "அலர்நாண ஒல்வதோ அஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை."

**தலைமகள் :**

தொடக்கத்தில் 'அஞ்சவேண்டா, நம் காதல் வளர்க' என்று கூறிய காதலர் இன்று, கண்டார் பலரும் நாணும் வகையில் என்னை விட்டுப்பிரிந்தால், அயலார் கூறும் பேச்சுக்கு (அலருக்கு) நாணக்கூடுமோ? கூடாதே.

தொடக்கத்தில் இறைவனுக்கு அன்பு செலுத்த உறுதி பூண்ட ஆன்மா, எந்த இடையூற்றுக்கும் அஞ்சாமல் முன்னேறிக் கொண்டேயிருத்தல் வேண்டும்.

1150. "தாம்வேண்டின் நல்குவர் காதலர் யாம்வேண்டும்
கௌவை எடுக்கும்இவ் வூர்."

தலைமகள் :

என் காதலர்க்கு யான் எடுத்துச்சொன்னால் என்னைத் தம் ஊருக்கு அழைத்துச் சென்று விடுவர். (நல்குவர்); ஊரார் பேசும் இப்பேச்சு இதற்குத்துணை செய்வதுபோல் உள்ளது.

இறைவனாகிய காதலியைத் தன் ஊருக்கு (உள்ளத்தில்லத்திற்கு) அழைத்து அங்கே அவனை அன்பால் வழிபடுவதற்கு என் பேரின்பக்காதலைத் தூற்றிப் பேசுபவர்களே துணைசெய்வது போல் உள்ளனர்.

## கற்பியல்

'கற்பியல்' என்பது களவொழுக்கம் முடிந்த பின்னர், காதலர் மணம் செய்துகொண்டு கற்புடன் இல்வாழ்க்கை நடத்துதல். களவியலில் அவர்கள் ஒருவரையொருவர் காதலிப்பதிலும் அக்காதலை வளர்ப்பதிலும் உள்ளத்தால் புணர்வதிலுமே ஈடுபட்டிருந்தனர். உடலால் புணர்ந்தால் தீயவொழுக்கம் ஆகிவிடுமன்றோ! இவ்வுடல் புணர்ச்சி மணமான பின்னரே நிகழ்தல் வேண்டும். உலகக் காதலர் அனைவரும் இத்துணைப் பண்போடு, தீய நடத்தைக்குச் சிறிதும் இடம் கொடாமல் நடந்துகொள்கின்றனர் என்பதற்கில்லை. அளவு மீறி நடந்துவிடுவது இன்று அடிக்கடி காண்பதொன்று. ஆனால், இது முறையன்று என்கிறது இன்பத்துப்பாலின் இக்கருத்துத் தொகுப்பு.

# 116. பிரிவாற்றாமை

களவொழுக்கத்தின்போது தலைமகன் தலைமகளைப் பிரிந்திருக்க வேண்டிய அவசியமிருந்தது. திருமணத்தின் பின்னரே ஒன்றுகூடுதல் நிகழக்கூடும். ஆனால், மணத்திற்குப் பின்னரும் பல அலுவல்களின் பொருட்டுப் பிரிந்திருக்க வேண்டியிருப்பது தேவையாகின்றது. இந்தப் பிரிவாற்றாமையையே இவ்வதிகாரம் கூறும்.

1151. "செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை."

"என்னை விட்டுச் செல்வதில்லை என்றால் அதை எனக்குச் சொல்; விட்டுப் பிரிந்து 'விரைவில் வருவேன்' எனச் சொல்வதாயிருந்தால், அப்பொழுது உயிரோடிருந்தால் சொல். அஃதாவது, 'என்னைப் பிரிந்து' போவதாயிருந்தால், உயிரோடிருக்க மாட்டேன்!" என்றவாறு. வாழ்க்கையின் பல தேவைகளை நிறைவு செய்யக் காதலர் பன்முறை பிரிந்து போவதும் மீண்டும் வருவதும் இன்றியமையாத நிலையாயிருக்க, காதலர் இங்ஙனம் கூறுவரோ என்று ஐயுற வேண்டியுள்ளது.

பேரின்பக் காதல் வாழ்வில் இறைவனாகிய தலைமகள், தன் அழகாலும் வேறு எழிற்பண்புகளாலும் ஆன்மாவைத் தன்பால் ஈர்த்துக்கொண்டதை இதுவரை சிந்தித்தோம். அவனது செயலால் அன்றி, ஆன்மா இறைவனைச் சிந்திக்கவும் ஆற்றலின்றி உள்ளது. 'அவன் அருளால் அவன் தாள் வணங்கி' என்பதற்கிணங்க அவன் அருளால் அவன் மீது காதல் கொள்ளத் தொடங்கிற்று.

இனி, அக்காதலை வளர்த்து இறுதியில் பேரின்பம் அடைய வேண்டியதே. எனினும், இஃது உடனே நிகழ்வதன்று. இவ்வுலக வாழ்வு உள்ளவரை இறைவனை முற்றிலும் அடைய வியலாதாகையால், அவனை நினைத்து நினைத்து, (பிரிந்துள்ள கணவனை நினைத்து நினைத்து ஏங்கும் மனைவி போல்!) ஏங்குதல் வேண்டும். வேறுபல துன்பங்களையும் பொறுத்தல் வேண்டும். இவற்றையெல்லாம் இனிக் காண்போம்.

உலகில் வாழும் வரை ஆன்மா இறைவனை முற்றும் அடையாமல் பிரிந்தே இருக்க வேண்டுமாதலால், அந்தப் பிரிவை ஆற்றவியலாமல் ஆன்மா வருந்துதலால் 'பிரிவாற்றாமை' எனப்பட்டது.

**இதுவரை தலைமகன் (ஆன்மா) தலைமகளை (இறைவனை) அடைய ஏங்குகின்றான். இனி தலைவி (இறைவன்), பிரிந்துள்ள தலைவனை மீண்டும் அடைய ஏங்குகின்றான்.**

தொடக்கத்தில் இறைவனாகிய தலைமகள், தன் அழகால் ஆன்மாவைத் தன்பால் ஈர்க்கத் தன் அருளால் செயல் புரிந்தான். ஓரளவு தன் காதலைச் சுவைக்கச் செய்தான். இறைவனின் அன்பைச் சுவைக்கத் தொடங்கிய ஆன்மா, அவனை நினைத்து ஏங்கத் தலைப்படுகிறது. ஆகவே, இப்பகுதியில் **ஆன்மா காதலியாகவும், பிரிந்து தொலைவில் நிற்கும் இறைவன் காதலனாகவும் உள்ளது காண்க.**

இம்மைக் காதலர் களவொழுக்கம் முடிந்த பின்னர் மணம் முடிப்பது போல் இறைவனும் ஆன்மாவும் மணம் முடிப்ப துண்டா என்றால், நெருங்கிய உறவு என்னும் பொருளில் மணவுறவு இறைவனுக்கும் ஆன்மாவுக்குமிடையே வளர வளர ஆன்மீகத் திருமணம் என்பது நிகழ்வதுண்டு. ஆனால், இது மிக மிக ஆழ்ந்த அன்பு - காதல் முதிர்ந்த பின்னரே நிகழும். திருமணம் என்பது வெறும் உடலும் உடலும் இணைவதன்று. உடலும் உள்ளமும் இணைந்தால்தான் மணவுறவு நிகழும். இல்லையேல் விலங்குகளுக்கிடையே நிகழ்வது போல் ஆகும். இப்பொருளில், இறைவன் நாயகனாகவும் ஆன்மா நாயகி யாகவும் உறவு கொள்வது விவிலியத்திற்குப் புறம்பானது அன்று; மிகப் பொருத்தமாவது காண்க.

கிறித்தவத்தில், பன்முறை இறைவன், தன்னைக் கணவன்- மணமகன் - வரன் எனக் குறித்துத் தன்னோடு மக்கள் உறவு கொள்ள வேண்டிய முறையை விளக்கக் காண்கிறோம். இது 'கிறித்தவத்தின் நிறைவு நிலை' எனப்படும். 'புதிய ஏற்பாட்டில்' மட்டுமன்று, கிறித்தவத்தின் தொடக்கநிலை எனப் படும் 'பழைய ஏற்பாட்டில்' கூடக் காண்கிறோம். இறைவாக் கினர் வாயிலாகக் கடவுள் கூறும் சில வாக்குகளைக் கவனிப்போம்.

தம் மக்கள் இஸ்ராயேலரை நோக்கி அவர் கூறுவது: "அஞ்சாதே...... ஏனெனில், உன்னைப் படைத்தவரே **உனக்குக் கணவன்**- சேனைகளின் ஆண்டவர் என்பது அவர் பெயர்..... உலகுக்கெல்லாம் கடவுள் என அழைக்கப்படுகிறார். கைவிடப்பட்டு மனம் நொந்தவளான **மனைவியை** அழைப்பது போலும், இளமை முதலே துணைவியாய் இருந்த ஒருத்தியை மணமுறிவுக்குப் பின் அழைப்பது போலும் ஆண்டவர் உன்னை அழைக்கிறார்" (இசை. 54: 5-6).

உலகுக்கெல்லாம் கடவுளானவர், உலக மக்களுக்கெல்லாம் கணவன் எனக் கூறப்படுகிறார். மக்கள் எல்லாம் 'மனம் நொந்த மனைவி' என உள்ளனர். அஃதாவது, துன்புற்று மனம் உடைந்துள்ளனர். கடவுள் அவர்களைத் தேற்றித் தம் அரவணைப்புக்கு அன்போடு அழைக்கின்றார். உலக வழக்கில் மணமுறிவு நிகழ்ந்தால் இருவருக்குமிடையே உறவு முற்றிலும் அற்றுப்போகும். ஆனால், இறைவனாகிய கணவன், இளமை முதல் அன்பு மனைவியாய் வாழ்ந்தவள், ஏதோ குற்றம் புரிந்து அன்புறவு முறிவு நிகழ்ந்து விட்டால் கூட, மீண்டும் தம் அரவணைப்புக்கு அழைக்கிறார். அஃதாவது, வெகுகாலம் இறைவனுடன் அன்புறவு கொண்டு வாழ்ந்த பின்னர், ஏதோ குற்றம் செய்து, அவ்வன்புறவைத் துண்டித்துக்கொண்ட பின்னரும், மீண்டும் அவ்வன்புறவைத் துய்க்குமாறு அழைக்கும் இரக்கப் பண்புள்ளவர் இறைவன். அஃதாவது, **இடைவிடாக் காதலனாகவே** காட்சியளிக்கிறார் இறைவன். அங்ஙனமே, இடைவிடாக் காதலியாக ஆன்மா திகழவேண்டும் என விரும்புகின்றார். மனிதக் குறைபாட்டினால், தவறு செய்து அக்காதல் உறவைக் கெடுத்துக் கொண்டாலும், மீண்டும் அதை எளிதில் பெறவியலும் என்னும் நிலையை இறைவன் வகுத்துள்ளான். 'புத்தேள் உலகத்துப் பெறலரிதா'ன ஒப்புரவு நன்மையே அவ்வழி. ஆகவே, உலகில் நிகழும் கணவன் - மனைவி அன்புக் காதல் உறவினும் மிகமிக உயர்ந்ததாகக் கருதப்பட வேண்டிய ஒன்று இறைவனாகிய காதலனுக்கும், ஆன்மாவாகிய காதலிக்கும் இருக்கக்கூடிய உறவு என்க.

இக்கருத்தையே பன்முறை வேறு இறைவாக்கினர்களும் அறிவுறுத்துகின்றனர்.

'தம் மக்கள்' எனத் தேர்ந்துகொண்ட இஸ்ராயேலரைப் பன்முறை 'விபச்சாரி' என இறைவாக்கினர் இறைவன் பேரால் அழைக்கின்றனர்.

இறைவனோடு திருமண ஒப்பந்தம் செய்துகொண்ட பின்னர், அஃதாவது, அன்புக்காதல் உறவை ஏற்படுத்திக் கொண்ட பின்னர், உண்மைக் கடவுளாகிய அவரை மறந்து, வேறு பொய்த் தேவர்களை வழிபட்டனர் அவர்கள். இங்ஙனம் திருமண ஒப்பந்தத்தை மீறியமையால், 'விபச்சார மக்கள்' எனப்பட்டனர். திருமணம் செய்த பின்னர், வேறொருவன்—வேறொருத்திப்பின் சென்றால், விபச்சாரம் எனப்படுவது போல! இதைக் கூறும் வாக்குகள் சில:

''வேசித்தனத்தில் ஈடுபடுவதற்காக ஆண்டவரை அவர்கள் கைவிட்டார்கள்...... விபச்சாரப் புத்தி அவர்களை நெறி தவறச் செய்தது; விபச்சாரம் செய்வதற்காக அவர்கள் தங்கள் கடவுளை விட்டகன்றனர்......'' என ஓசே இறைவாக்கினர் இஸ்ராயேல் மக்களைக் குறிப்பிட்டு உரைக்கின்றார் (4: 10- 12).

ஆனால், இத்தகைய விபச்சாரத்தால், தமக்குத் துன்பமே ஏற்பட்டது என்பதையும் மக்கள் பன்முறை உணர்கின்றனர். ஆகவே, இறைவனிடம் திரும்பி வரத் தீர்மானிக்கின்றனர். ''என் முதல் கணவனிடம் நான் திரும்பிப் போவேன். இப்போது இருப்பதைவிட, அப்போது மகிழ்ச்சியாய் இருந்தேன்!'' என்று (ஓசே. 2: 7) மனம் வருந்தி இறைவனிடம் வருகின்றனர். இறைவனும் அவர்களை மீண்டும் ஏற்றுக்கொள்கின்றார். ''முடிவில்லாக் காலத்திற்கும் உன்னை மணமுடிப்போம். நேர்மையிலும் நீதியிலும் நிலையான அன்பிலும் இரக்கத்திலும் நாம் உன்னைத் திருமணம் செய்துகொள்வோம். பிரமாணிக்கத்துடன் நாம் உன்னை மணந்து கொள்வோம், நாமே ஆண்டவர் என்பதை நீயும் அறிந்து கொள்வாய்''! என்கிறார் இறைவன், (ஓசே. 2: 19-20).

வேறு இறைவாக்கினர்களும் இந்தக் கருத்தைப் பன்முறை வலியுறுத்தி, மக்கள் இறைவனின் அன்புக்காதலை உதறி விடாமல் விழிப்பாயிருக்குமாறு எச்சரிக்கின்றனர்.

இந்த 'நாயக - நாயகி உறவு,' விவிலியத்துடன் மிக நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளதெனக் காட்ட, பழைய ஏற்பாட்டிலேயே, 'உன்னதக் காதற் கீதம்' எனப்படும் பிரிவு ஒன்று உண்டு. இதிற் கூறப்படும் சொற்கள் பல திருக்குறள் பாக்கள் போலவே ஒலிப்பதைக் காண்கிறோம். அவற்றுள் சில இதோ:

**தலைமகன் : (இறைவன்)**

எழுந்திரு, என் அன்பே! காட்டிடு உன் முகத்தை

**தலைமகள் : (ஆன்மா)**

என் காதலர் எனக்குரியவர், நான் அவருக்குரியவள் என் காதலரே, திரும்பி வருக! இரவு வேளையில் என் நெஞ்சத்தின் அன்புக்குரியவரைத் தேடினேன்; காணவில்லை. எழுந்து நகரத்தில் சுற்றி வந்து தெருக்களிலும் நாற்சந்திகளிலும் தேடினேன். காணவில்லை. நகரக்காவலர் என்னைக் கண்டார்கள். ''என் காதலரைக் கண்டீரோ?'' என்றேன். சற்று அப்பாற் சென்றதும் அவரைக் கண்டேன்; பற்றிக் கொண்டேன்; விடவேயில்லை.

**தலைமகன் :**

என் அன்பே! உன் கண்கள் நோக்கு
ஒன்றினால் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டாய்!
உன் காதலின்பம் எவ்வளவு இனிமை!
உன் நாவுக்கடியில் உள்ளது பாலும் தேனும்!

**தலைமகள் :**

உறக்கத்திலும் என் இதயம் விழித்துள்ளது.
இதோ என் காதலர் கதவைத் தட்டுகிறார்.

**தலைமகன் :**

கதவைத் திறந்து விடு, என்
காதலியே! என் அன்பே!

**தலைமகள் :**

என் காதலர் கதவுத் துவாரத்தின் வழியாய்க்
கை நீட்டினார்; நீட்டவே என்
உள்ளம் துள்ளி மகிழ்ந்தது.
கதவைத் திறக்க எழுந்திருந்தேன்; திறந்தேன்.

ஆனால், அவர் திரும்பிப் போய் விட்டிருந்தார்.
அவர் பேசியபோது என் உயிரே உருகிற்று.
அவரைத் தேடினேன்; காணவில்லை.
கூப்பிட்டுப் பார்த்தேன்; பதிலே இல்லை.
யெருசலேம் மங்கையரே, (தோழிகளே!)
என் காதலரைக் கண்டால்,
நான் காதல் நோயுற்றதாகச் சொல்லுங்கள்.
(உன்னதம் 5 : 4-6)

**மங்கையர் :**

மற்றக் காதலர்களினும் உன் காதலர்
எவ்வகையில் சிறந்தவர்?
(உன்னதம் 5 : 9)

**தலைமகள் :**

என் காதலர் பத்தாயிரம் பேர்களுள் சிறந்தவர்!
அவர் பேச்சு இணையிலா இனிமையுள்ளது;
அவர் முழுவதுமே கவர்ச்சி மிக்கவர்;
இவரே என் காதலர், என் துணைவர்;
நான் என் காதலர்க்குரியவள்;
அவர் ஆர்வமெல்லாம் என் மேலே;
என் காதலரே வாரும்............
(உன்னதம் 5 : 10-16)

**தலைமகள் :**

என்னை உன் இதயத்தின் மீது
முத்திரை போலப் பொறித்து வையும்.
காதல், சாவைப் போல் வலிமையுள்ளது!
பெருங்கடலும் அன்பைத் தணிக்க முடியாது.
வெள்ளப் பெருக்கும் மூழ்கடிக்க முடியாது.
(உன்னதம். 8 : 6)

இனி, புதிய ஏற்பாட்டுக்கு வருவோம். ஆண்டும் மனு உரு வெடுத்து உலகுக்கு வந்த இறைவன் - கிறித்து-ஐந்தவித்தான்-

'மணமகன்' எனப்படுகிறார். அவரால் ஏற்படுத்தப்பட்ட சபையினர் கூட்டம் அவருக்கு **மணமகள்** எனப்படுகிறது. இதை இயேசுவே சற்று மறைமுகமாகக் கூறினார். விண்ணக வாழ்வு, தன் மகனுக்குத் திருமணம் கொண்டாடிய அரசனுக்கு உவமையாகச் சொன்னார். (மத்தேயு நற்செய்தி 22அதி. காண்க). இக்கருத்தை அவரது அடியார்கள் (அப்போத் தலர்கள்) விரிவுபடுத்திக் கூறினார்கள். தம் உடல் போன்ற தம் 'சபையை'க் கிறித்து கணவன் என நேசித்தார். அதற்காகத் தம் உயிரையே பலியாக்கினார். அங்ஙனமே, அச்சபையினரும் மனைவியெனக் கிறித்துவுக்கு அன்பு செய்தல் வேண்டும் என விளக்கினர். (எபேசி. 5: 21-32).

இக்கருத்து மேலும் வளர்ந்து, புதிய ஏற்பாட்டின் இறுதிப் பகுதியாகிய 'திருவெளிப்பாடு' என்னும் பகுதியில் மிக அழுத்த மாகக் கூறப்படுகிறது. அப்பகுதியில் கிறித்து, 'செம்மறி' எனக் குறிக்கப்பட்டுச் செம்மறியின் திருமணம்பற்றிப் பேசப்படுகிறது. உலகின் பாவங்களுக்காகச் செம்மறியெனப் பலியானதால் இப் பெயர் அவருக்குத் தரப்படுகிறது. உலக வரலாற்றின் இறுதியில் நிகழப் போகும் செய்திகள் சிலவற்றைக் குறிப்பிட்டு விவிலியத்தின் இறுதிப் பகுதி கூறுவது:

''எல்லாம் வல்ல கடவுளாகிய ஆண்டவர் ஆட்சி செலுத்த லானார். அகமகிழ்ந்து களிகூர்ந்து, அவருக்கு மகிமை அளிப் போம். ஏனெனில், செம்மறியின் மணவிழா வந்துவிட்டது. அவருக்குரிய மணமகள் தன்னை அலங்கரித்துக் கொண்டாள். அணிவதற்குப் பகட்டானதும் தூயதுமான விலைமிக்க ஆடை அவளுக்கு அளிக்கப்பட்டது. அவ்விலை மிக்க ஆடையோ இறைமக்களின் நீதிச் செயல்களே.'' (திருவெளி 19: 6-8).

ஈண்டுக் கூறப்படும் 'மணமகள்' புனிதர்கள் (இயேசுவின் அடியார்கள்) தொகுதியாகும். புனிதச் செயல்கள் ஆடை அலங் காரமாகும். இத்தெய்வீக உறவும் அலங்காரமும் மீண்டும் ஓர் அற்புதக் காட்சியில் வெளிப்படுத்தப்படுகிறது. ''வா, செம்மறி யானவர் மணந்து கொண்ட மணமகளை உனக்குக் காட்டப் போகிறேன்'' என்று விண்ணினின்று குரல் வந்தது. (திருவெ. 21:9). இந்தச் செம்மறி ஐந்தவித்தானாகிய இறைமகன்; இந்த மணமகள் அவன் காட்டிய 'பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார்' ஆவர்.

ஆகவே, இன்பத்துப்பாலில் கூறப்படும் நாயக-நாயகி உறவு கிறித்துவத்துள்ளடங்கிய சிறந்ததோர் அம்சமென்க. இறைவன் தர விரும்பும் பேரின்ப வாழ்வு அரியதொரு மணவிருந்துக்கு உவமையாகக் கூறப்படுகிறது. 'ஐந்தவித்தானே' அத்திருமணத்தில் மணமகன் எனவும், மனித இனம் அனைத்துமே மணமகள் எனவும் கூறப்படுகிறது. இத்திருமண விருந்தை நோக்கியே இறைவனின் பழைய திட்டமும் புதிய திட்டமும் செல்லுவதும் காண்கிறோம். விவிலியம் முழுவதும் மேற்சொன்ன நாயக-நாயகி உறவை எடுத்துக் கூறும் நூலாகக் காட்சியளிக்கின்றது எனினும் மிகையாகாது.

1152. ''இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு.''

முன்பு களவு ஒழுக்கத்தின்போது, காதலர் பார்த்த பார்வை இனிய பார்வை (இன்கண்) யாயிருந்தது. இன்றோ கற்பொழுக்கத்தில், புணர்வு பிரிவார் என்று அஞ்ச வேண்டியுள்ளதால், துன்பம் (புன்கண்) விளைவிப்பதாய் உள்ளது. இது மண வாழ்க்கையில் நிகழும் செய்தி. இறைவனைப் பொறுத்தமட்டில், அவன் தலைமகள் என (தொடக்கத்தில்) ஆன்மாவைப் பார்த்த அருள்நோக்கு, இன்பமும் ஆறுதலும் தருவதாயிருந்தது. தொடக்கநிலை முடிந்த ஆன்மா தலைமகளாகச் செயலாற்றத் தொடங்கும்போது, 'என் கவனமின்மையால், செய்யக்கூடிய தவறுதலால், அல்லது பாவச் செயலால் இறைவனை (தலைமகனை)ப் பிரிவேனோ என்று அஞ்ச வேண்டியிருக்கின்றது.' ஆன்மாவுக்கு இயல்பாயுள்ள பலவீன நிலை, சபல மனப்பான்மை, எளிதில் மன மாறக்கூடிய நிலைமைபற்றி இங்ஙனம் ஆன்மா அஞ்சுவதால் நன்மையே விளையும்; பேரின்பப் புணர்வுக்குச் சிறிது சிறிதாக வழிகோலுவதாயிருக்கும். இத்தகைய அஞ்சுதல் - 'எங்கே இறைவனின் அருளன்பை இழந்து விடுவேனோ!' என்னும் அச்சம்-ஆன்மாவுக்கு மிகுந்த பயனளிப்பதாகும்.

1153. ''அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.''

மணமுடித்த பின், சிறப்பாகக் காதலர் ஒருவரையொருவர் பிரிதலாகாது என்று எவ்வளவோ ஆர்வமுடன் விரும்புகின்றனர்.

எனினும், ஒவ்வொருகால் (ஓரிடத்து) பிரிவு விளைந்தே தீரும். இஃது உலக வாழ்க்கையின் நியதி. இதை நன்கு அறிந்துள்ள காதலர்களும் 'உன்னைப் பிரியேன்' என்று ஒருவர்க்கொருவர் இனிமையாக-அன்பாகக் கூறிக் கொள்வது உண்மைதானா? என்று தெளிதல் அரிதாயிருக்கின்றது (தேற்றம் அரிது).

பிரிய வேண்டிய நிலை இருப்பது தெரிந்தும் 'பிரியேன்' என்று சொல்வது ஏன் என்பது விளங்கவில்லை என்றவாறு. காதல் பெருக்கில் நிகழும் பேச்சு இஃது என்றறிக. இறைவன்-ஆன்மாவாகிய பேரின்பக் காதலருள் ஆன்மா இறைவனை நோக்கி, 'உன்னை ஒருநாளும் பிரியேன்' என்று உறுதி பூண்டாலும் மனிதனுக்குரிய பலவீனத்தால் அன்புறவின் தீவிரத்தை நீக்கும் அல்லது குறைக்கும் தவறு இழைக்க நேரிடலாம்; நேரிடுவதுண்டு. இந்நிலையில் 'பிரியேன்' எனத் தான் கூறியது எவ்வளவு பொருத்தமற்றது—பொருளற்றது என்று ஆன்மா உணர்ந்து வருந்தி மீண்டும் அவ்வன்புறவை வளர்க்கும் நற் செயல்களில்—அருட் செயல்களில் ஈடுபடவேண்டும். ஆன்மா இறைவனை மேற் சொன்னவாறு பிரியாவிடில் இறைவன் ஆன்மாவை விட்டுப் பிரிதலே இல்லை. இஃது இறையருட் செயலின் சிறப்பு. சில சமயங்களில் அவ்வன்புறவை உறுதிப் படுத்தப் 'பிரிந்திருப்பது போல்' தோன்றலாம். ஆனால், அது பிரிவன்று; அன்பை வளர்க்கும் செயலே.

1154. "அளித்தஞ்சல் என்றவர் நீப்பிற் றெளித்தசொல்
தேறியார்க் குண்டோ தவறு."

எதிர்ப்பட்ட அன்றே முகமலர்ந்து இனியன கூறி(அளித்து), 'நின்னைப் பிரியேன், அஞ்சாதிரு' என்று உறுதி கூறியவர், அவரே இன்று விட்டுப் பிரிந்தால் (நீப்பின்), தெளிவாகச் சொன்ன (தெளித்த) சொல்லைக் கேட்டு அதை மெய்யென்று தெளிந்தவர் மீது (தேறியார்க்கு) குற்றம் உண்டோ? சொன்ன சொல்லைக் கேட்டு அதை முற்றும் நம்பியது தவறுதானோ?

முந்திய குறளில் கூறப்பட்டதே மீண்டும் கூறப்படுகிறது. காதலிப்பவர் இங்ஙனம் பலபடக் கூறி வருத்தம் தெரிவிப்ப தாகும்.

1155. ‘‘ஓம்பின் அமைந்தார் பிரிவோம்பல் மற்றவர்
நீங்கின் அரிதாற் புணர்வு.’’

‘என் உயிர் பிரியாமல் காக்கப்பட வேண்டுமாயின் (ஓம்பின்) அதைக் காதலால் ஆண்டு நடத்த அமைந்தவரான என் அன்பர் என்னை விட்டுப் பிரியாவாறு தடுப்பீராக. இல்லையேல் என் உயிர் நீங்கும்; நீங்கினால் மீண்டும் கூடுதல் எங்ஙனம்?' இதுவுமது.

1156. ‘‘பிரிவுரைக்கும் வன்கண்ண ராயின் அரிதவர்
நல்குவர் என்னும் நசை.’’

என் ஏக்கத்தை அறிந்துள்ள என் அன்பரே பிரிவுபற்றிக் கூறும் அளவுக்கு வன்னெஞ்சராயின், பின்பு வந்து, யான் விரும்பும் புணர்வைத்தருவார் என்னும் ஆசை வீணானதே. அந்த ஆசையை விட்டுவிட வேண்டியதுதானோ?

அதே ஏக்கத்தை உரைப்பதாகும்.

1157. ‘‘துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை
இறைஇறவா நின்ற வளை.’’

துறைவன் (காதலன்) என்னை விட்டுப் பிரிந்ததை, என் முன் கையில் இருக்க வேண்டிய இடத்திலிருந்து கழலும் (இறை இறவா) வளையலே எனக்கு அறிவித்துவிடுமே? வேறெதுவும் தேவையில்லையே! காதற் பெருக்காலும் பிரிவின் ஆற்றாமை யாலும் உடல் மெலிந்து விடுவதால், கையில் உள்ள வளையலும் நழுவிவிடும். இதைக் கொண்டே என் ஏக்கத்தைப் புரிந்து கொள்ள வேண்டும் என்றவாறு.

இதுவுமது.

1158. ‘‘இன்னாது இனன்இல்ஊர் வாழ்தல் அதனினும்
இன்னா தினியார்ப் பிரிவு.’’

தன் இனத்தினன் ஒருவனும் இல்லாத அயலூரில் வாழ்தல் துன்பம் தருவது (இன்னாது)—ஆனால், காதலரை (இனியார்) விட்டுப் பிரிந்திருப்பது அதனிலும் துன்பம் தருவதாகும்.

இதுவுமது.

1159. "தொடிற்சுடின் அல்லது காமநோய் போல
வீடிற்சுடல் ஆற்றுமோ தீ."

சாதாரணத் தீ தொட்டால்தான் சுடும். இக்காதல் தீயோ, தொலைவில் பிரிந்திருக்கும்போதும் சுடுகின்றதே! வருத்துகின்றதே!

1160. "அரிதாற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்."

தாங்குதற்கரிய பிரிவுக்கு உடன்பட்டு, அப்பிரிவினால் வரும் துன்பநோயைப் பொறுத்துக் கொண்டு, பின்னும் உயிர் வாழ்ந்துகொண்டிருக்கும் காதலரும் உண்டு.

காதல் ஏக்கத்தைப் பலபடக் கூறியும், வெளிப்படையாகக் காட்டியும், உண்மையான ஆழ்ந்த அன்பின்றி வாழ்பவரும் உண்டு. அது போலிக் காதல் என்க! இப்பாக்களில் கூறப் படும் அளவுக்கு ஒருவேளை இம்மைக் காதலர் சிலர் ஏக்கம் கொள்ளலாம். ஆனால், இந்த அளவுக்கு மனிதன் உலகில் இறைவனை நினைத்து ஏங்குவது உண்டா? என ஐயம் எழலாம். வெகு சிலரேயன்றோ அங்ஙனம் ஏங்குவது! இவ்வுல கத்துத் தலைவனைப் பிரிந்து தலைவி உயிர் வாழ்வது எங்ஙனம்? அந்த அளவுக்கு அவர்களிடையே காதற் பிணைப்பு உண்டோ என்போமாயின், இவ்வுலகத்துத் தலைவனைவிட எத்துணையோ உயர்ந்த எழிலும் பண்பும் அளவில்லாத வகையில் கொண்டுள்ள இறைவனைப் பிரிந்து, அவனை நினையாது மனிதன் வாழ்வதும், இவ்வுலக வாழ்க்கையில் அளவு மீறிப்பற்றுதல் கொண்டிருப்பதும் எத்துணை மடமை என் பதையே 'பின்னிருந்து வாழ்வார் பலர்' என ஓரளவு பகடியாகச் சொல்லப்பட்டது.

இறைவனோடு ஆன்மாவுக்குள்ள அன்புத் தொடர்பு, இவ்வுலகில் உள்ளவரை உலகக் காதலர் போல துய்த்தற்பால தன்று. இத்தொடர்பு அறுபடாமல் காத்துக்கொள்ள இயலும் எனினும், உலகில் காதலர் இருவருடைய அரவணைப்புப் போல் அத்துணைத் தீவிரமாகத் துய்த்தற்பாலதன்று. ஏனெனில்,

இவ்வுலகக் காதலர் விரும்பினால் ஒருவரை ஒருவர் பிரியாமல் இருக்கலாம். அதே அளவில் இறைவன் - ஆன்மா என்னும் காதலர் துய்க்க இயலாது. ஏனெனில், பேரின்பக் காதலின் சிறப்பே அது மறுமை வாழ்வுக்கென உளதாகும். அவ்வாழ்வில் மட்டுமே நிறைவும் நீங்காத் தன்மையும் எய்தவியலும். உலகில் வாழும் வரை பிரிவும் குறைவும் இருந்தே தீரும். பேரின்பம் ஒன்றே இடையறாத இன்பமாகவும், நிறைவானதாகவும் இருத்தல் வேண்டும் என்பது அதன் இலக்கணம். ஆகவே, அதை இம்மையிலேயே எந்நேரமும் துய்த்துக் கொண்டிருக்க வேண்டுமென்பதில் பொருள் இல்லை.

பேரின்பம் என்பது வீட்டு நிலையாகும். வீட்டு நிலைக் குரியதை வீடு என்பதற்குத் தகுதியற்ற இம்மைக்கு உரியதா யிருக்கவேண்டுமென விரும்புவதில் பொருளில்லை.

மேலும், பேரின்பம் இறுதி நிலையாகும். இறுதி நிலைக் குரியதை இப்போதே உலகில் அடைய வேண்டும் என்பது பொருந்தாது. இவ்வுலக வாழ்க்கையை நாம் பேரின்பத்துக்கு வழியாகவும், தொடக்கமாகவும் அமைத்துக்கொள்ள முழு மூச்சுடன் முயல்வதே முறை. அஃதாவது, அதன் பெருமையையும் அருமையையும் அறிந்து, ஓரளவு இப்போதே சுவைத்து, அதன் மீது மேன்மேலும் ஆர்வத்தை வளர்த்து, அதனை எப்படி யாகிலும் அடைய வேண்டுமென முனைந்து நின்று, அதை அடைவதற்கு இன்றியமையாத இறைவனின் அருளை இடைவிடாமல் வேண்டி நிற்பதே முறை.

இம்மைக் காதலர் இருவர் விரும்பினால் ஒருவரை ஒருவர் பிரியாமல் தம் காதலைத் துய்த்துக்கொண்டிருக்கலாம் என்று மேலே சொல்லப்பட்டது. இதுவும் ஓரளவு உண்மையே எனினும், எவ்வளவுதான் விரும்பினாலும் பிரிவு என்பது விளையவே விளையாமல் தடுத்து விடுவது இயலாத செயலாகவே உள்ளது. உலக வாழ்க்கையின் நிலைமையே அப்படி. வாழ்க்கைத் தொல்லைகளின்பொருட்டுப் பிரிவதும் சேர்வதும் தவிர்க்கவியலாததாகிறது.

மேலும், உடலுறு புணர்ச்சியாயினும், உள்ளப்புணர்ச்சியா யினும், ஒரு நிமிடமும் அறுபடவியலாததாயிருக்கவியலாது

உள்ளக் காதலை ஓரளவு அறுபடாமல் காத்துக் கொள்ள வியலும் எனினும், இடையறாத உடற்புணர்ச்சி என்பது மிருகத் தன்மைக்கும் கீழ்ப்பட்டதாகிவிடும். இயற்கைக்கு மாறு படுவதோடு, இயலாததாய்விடும். ஆகவே, பிரிவு என்பது இவ்வுலக வாழ்வில் தவிர்க்கவியலாதது.

இத்தகைய பிரிவாற்றாமை இவ்வுலக வாழ்வில், இறைவனை விட்டுப் பிரிந்திருக்க வேண்டிய நிலை, ஆன்மா வுக்கும் உண்டு. இருக்க வேண்டும். இருக்குமாறு ஒவ்வொரு வனும் முயல வேண்டும். அதற்காக இறையருளை இறைஞ்ச வேண்டும்.

இவ்வுலகத்துக் காதலர், எவ்வளவுதான் தொடக்கத்திலே நுகர்ந்த புணர்வை நினைத்து வருந்தினாலும், எவ்வளவுதான் அதற்காக ஏங்கினாலும் "இனிப் பிரியோம்; இனி நாம் ஈருடல் ஒருயிர்" என்றெல்லாம் உறுதி மொழி கூறிக்கொண்டாலும், எத்தனையோ முறை மிக மிக இழிவான முறையில் விட்டுப் பிரிதலும், ஏமாற்றம் விளைத்தலும் உலகில் காண்கின்றோம்.

ஆனால், இறைவனாகிய தலைவன், தான் தந்த வாக்கை ஒருக்காலும், தவறுபவன் அல்லன். "உன்னை ஆட்கொள்வேன்; உன்னிடமிருந்து பிரியேன்; அஞ்சவேண்டா" என அவன் தந்த வாக்குறுதி ஒருக்காலும் உறுதியழியாதது.

ஆன்மா தன் குற்றத்தால் இறைவனைப் பிரிந்தால் ஒழிய, இறைவன் ஆன்மாவைப் பிரிவதே இல்லை. பன்முறைகளில் தன்னை விட்டுப்பிரியும் ஆன்மாவை வலிமை மிக்க அன்பின் கயிற்றால் தன்னிடம் ஈர்த்துக்கொள்வதுமுண்டு. ஆகவே, இறைவனைப் பொறுத்த அளவில் 'இறைவன் என்னைப் பிரிவானோ?' என்னும் அச்சம் தேவையில்லை. 'நான் அவனைப் பிரிவேனோ!' என்னும் அச்சமே தேவை! ஆகவே, அவன் மீது நம்பிக்கை உறுதிப்படவேண்டுமேயன்றி, தளர்தல் கூடாது. 'தன் மீது நம்பிக்கை கொள்ளத் தொடங்குதலே, பெருந்தீமை!- அகங்காரம்' எனப்படுவது. இதையொழித்தால் இறைவன் ஒருநாள் தன்னுடன் ஆன்மாவையும் சேர்த்துக் கொள்வான் என்பதில் ஐயமில்லை.

இதற்கிடையே, உலகில் வாழும் வரை அவனை நினைத்து உருகி, அவன் தரும் பேரின்பத்தை அடைய ஏங்கி நிற்பதே தேவைப்படுகின்றது.

கற்பியலில் இறைவன் தலைமகனாகவும் (பேரின்பக் காதலனாகவும்) ஆன்மா தலைமகளாகவும் (காதலியாகவும்) கருதப்படுவது கவனிக்க. தொடக்கத்தில் இறைவன் தன் அளவில்லா அழகால் ஆன்மாவை ஈர்க்கின்றான். பின்னர் ஆன்மா அவன் அன்பை மிக நாடி அடைதல் வேண்டும். இறை அருள் துணையால் இது நடைபெற வேண்டும். 'மிக நாடுதல்' பற்றியே இப் பகுதி கூறும்.

## பிரிவாற்றாமை
## சுருக்கம்

1151. ''செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.''

(ஆன்மா) 'என்னை விட்டுப்பிரிந்து போவதில்லையெனில் எனக்குச் சொல்லும்; போய்வந்து விடுவேன் என்பதாயிருந்தால், நீர் வரும்போது உயிரோடிருப்பவர்க்குச் சொல்லும்.' அஃதாவது, என்னைப் பிரிந்தால் இப்போதே மடிந்து விடுவேன். (பேரின்பக்) காதல் மிகுதியால் மிகைபடக்கூறியது இது. பேரின்பக் காதலனாகிய இறைவன் ஆன்மாவை விட்டு நீங்குவதில்லை - அருளும் அன்பும் உள்ளவரை. ஆனால், தன் அருட் பிரசன்னத்தையும் அதனால் உளதாகும் இன்பத்தையும் உடனே வெளிப்படுத்தி விடுவதில்லை. அன்பிலும் அருளிலும் ஆன்மா மேலும் மேலும் வளர்ச்சியும் முதிர்ச்சியும் அடைவதற்கு இத்தகைய 'மறைவு, பிரிவு' தேவைப்படும்.

1152. ''இன்கண் உடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்கண் உடைத்தால் புணர்வு.''

தொடக்கத்தில் பேரின்பக்காதலன் காட்டிய காதல் அன்புப் பார்வை (அருள் நோக்கு) எவ்வளவோ இனிமையாயிருந்தது. இன்று என்னை விட்டுப் பிரிந்து நிற்பதுபோல் உள்ளது.

என்னை விட்டுப்போய் விடுவாரோ என்னும் அச்சத்துக்கு என்னை உள்ளாக்குகின்றது.

1153. "அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்
பிரிவோர் இடத்துண்மை யான்."

இறைஅருள் அன்பு வளரத்தொடங்கும் காலத்தில் 'இறைவன் என் காதலர் என்னைப் பிரியமாட்டார்; நானும் அவரைப் பிரியேன்; பிரிந்தால் வாழ்வது துன்பம்,' என்றெல்லாம் உறுதிப்பாடு (அறிவு) உளதாயிருப்பினும் (மேற்சொன்ன காரணத்தால்) 'இறைவன் பிரிவும், மறைவும்' ஆன்மா காதல் கலக்கமுற்று "இறைவனாம் என் காதலர்க்கு என்மீது உண்மையான காதலன்பு உள்ளதா?" என எளிதில் தெளிவாக அறிந்து கொள்ள இயலாத நிலையில் உள்ளது.

1154. "அளித்தஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்தசொல்
தேறியார்க் குண்டோ தவறு."

'அன்பைக்காட்டி அஞ்சவேண்டா' என்று (தொடக்கத்தில்) கூறியவரே (இறைவன் - காதலன்), என்னை விட்டுப் பிரிவாரானால் (அஃதாவது அன்பில்லாதவர்போல் காட்டினால்), அவர் முன்பு கூறிய (தெளித்த) சொல்லை மெய்தானா என்று ஐயுறும் என்மீது (தேறியார்க்கு) குற்றம் உண்டோ?' (காதற் பெருக்கினால் கூறப்படும் ஏக்கமே இது).

1155. "ஓம்பின் அமைந்தார் பிரிவோம்பல் மற்றவர்
நீங்கின் அரிதால் புணர்வு."

"(என் உயிர் போகாமல்) காத்துக்கொள்ள வேண்டுமாயின் (ஓம்பின்), என்னை அன்பால் ஆட்கொள்ள அமைந்தவரது பிரிவை எப்படியாகிலும் தடுத்துக்காக்க. இல்லையேல், (அவர் பிரிந்தால் மீண்டும்) அன்பால் ஒன்றிப்பது இயலாது.

இறையன்பை இழப்பதன் கனாகனத்தைக் கூறும் குறள் இது. ஆன்மா தன் நெஞ்சோடு பேசுவதாக, அல்லது வேறொரு

வரோடு (தோழியுடன் தலைமகள்போல) வாய்விட்டுப் பேசுவதாகக் கொள்ளலாம். மீண்டும் ஏக்கத்தின் குரல் ஒலிக்கிறது.

1156. ''பிரிவுரைக்கும் வன்கண்ணர் ஆயின் அரிதவர்
நல்குவர் என்னும் நசை.''

'இங்ஙனம் அன்புகாட்டி இப்போது பிரிவு காட்டும் அன்பற்ற தன்மையுள்ளவராயின் (வன்கண்ணராயின்), மீண்டும் வந்து அன்பு காட்டுவர் என்னும் என் ஆசை வீணானதே.' (இதுவும் ஏக்கப் புலம்பலே).

1157. ''துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை
இறைஇறவா நின்ற வளை.''

'அன்புத்தலைவன் என்னைவிட்டுப் பிரிந்ததை, என் கையில் உள்ள வளையல்கள் இருக்கும் இடத்திலிருந்து கழலும்போது நானே அறிந்துகொள்வேனே; யாரும் எனக்குச் சொல்லவேண்டியதில்லை.' (உடல் மெலிவால் கழல்வது என்க).

வளையல்கள் கழல்வது - ஆன்மாவைப் பொறுத்தமட்டில் ஏக்கத்தால் உள்ளம் மெலிந்து வாடுவதைக் காட்டும்.

1158. ''இன்னா தினன்இல்லூர் வாழ்தல் அதனினும்
இன்னா தினியார்ப் பிரிவு.''

'சாதாரண உறவுகொண்ட சுற்றத்தாரை(இனன்)ப் பிரிந்து வாழ்தலே மகளிர்க்குத் துன்பம் தரும். தம் இனிய காதலரை (இறைவனை)ப் பிரிந்து வாழ்வதுபற்றி என்ன சொல்வது!' (இதுவுமது).

1159. ''தொடிற்சுடின் அல்லது காமநோய் போல
விடிற்சுடல் ஆற்றுமோ தீ.''

'சாதாரண நெருப்பு தொட்டால்தான் சுடும். இக்காதல் தீயோ, (காதலரை) விட்டுப் பிரிந்தபோதே உள்ளத்தை வாட்டும் நோய் போல் எரிக்கின்றதே!' (சினப்பெருக்கால் உள்ளம்

எரிவதுண்டு. அன்பாலும் இதயம் பற்றி எரிவதுண்டு). உண்மையான இறையன்பின் ஏக்கத்தால் உள்ளம் எரியும் என்றவாறு.

1160. "அரிதாற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்."

'பொறுத்துக்கொள்வதற்கரிய பிரிவாகும் அல்லல் (மன) நோயைப் பொருட்படுத்தாமல் நீக்கி, காதலர் பிரிவையும் பொறுத்துக்கொண்டு (கவலையுறாமல்) வாழ்பவரும் உண்டு.' இஃது எத்துணை கேவலம் என்றவாறு! உண்மையான ஆழ்ந்த காதல் உள்ளவர்க்கு இஃது இயலாது. இறையன்புக் காதற் பெருக்கால் உயிரே போவதுபோல் வருந்துவர்!

# 117. படர்மெலிந்திரங்கல்

பிரிவாற்றாமையின் விளைவாக ஏக்கமும் காதல் தவிப்பும் மேலிட உளம் மெலிந்து வருந்துகின்றது ஆன்மா. (படர்-வருத்தம்).

ஆன்மாவாகிய தலைமகள், இறைவனாகிய தலைமகனை மேற்கூறியவாறு நினைத்து ஏங்கித் தவித்தலால், உள்ளம் மெலிந்து வருந்துதல். உலகக் காதலர் ஒருவரை ஒருவர் நினைத்து, ஒருவர்க்காக மற்றொருவர் ஏங்கி வருந்த வருந்த, சில சமயங்களில் களைப்பும் சலிப்பும் ஏற்படக்கூடும். மனிதன் மனிதனுக்காகக் காட்டக்கூடிய ஏக்கம், சில சமயங்களில் மிகப் பெரிதானதாகக் காணப்படினும், அளவிடவியலாததன்று. மனிதன் அளவுள்ளவன்; அவன் உள்ளம் அளவுள்ளது. அதனின்று வெளிப்படக் கூடிய ஆசை, ஆர்வம், அன்பு முதலிய உணர்வுகள் அளவுள்ளவையே! மேலும், எந்த மனிதனும் வேறொரு மனிதப் பிறவியின் மீது அளவிட இயலாத காதலை வெளிப்படுத்தக் கடமையும் கொண்டவனல்லன். அளவில்லா அன்புக்கு முற்றிலும் உரிய இறைவன் ஒருவனே அத்தகைய அளவிலா அன்பைக்காட்டக் கடமைப்பட்டுள்ளான்.

எவ்வளவுதான் முயன்றாலும், அளவுள்ள மனிதன் இறைவன்பால் அளவிடவியலாத அன்பை வெளிப்படுத்த இயலாதவனாகவே இருப்பான். ஆனால், அவன் தன்னால் இயன்றவரை, தன் முழு உள்ளத்தோடும் பலத்தோடும் உணர்வோடும் முயற்சியோடும் இறைவனுக்கு அன்பு செய்ய முற்படும்போது, இறைவனது பேரருள் அவனுக்குத் துணை நிற்க, அவனது பேரன்பே அவனுள்ளத்தில் ஊற்றெனக்

கிளம்ப,* அவன் தன் ஆற்றலுக்கும் மிகுதியான அன்பை வெளிப்படுத்தவியலும்.

மேலும், இறைவன் ஆன்மாவின் மீது, தன் இயல்புக்கு ஏற்ப, அளவிலா அன்பை வெளிப்படுத்தி உள்ளான். (ஐந்தவித் தானின் வரலாறு முழுதுமே இதுதான்).

இந்த அளவற்ற தியாக அன்பை நினைக்குந்தோறும் ஆன்மாவுக்கு இறைவன் மீது ஏக்கம் பெருகுமே தவிர குறைவு படாது. உலகில் தலைமகள் தலைமகனை நினைத்து ஏங்குவதை- அந்த ஏக்கத்தின் உயர்வைத் தலைமகன் அறிந்து கொள்ள வழியில்லை. 'என் காதலி எனக்காக ஏங்கிக்கொண் டிருக்கிறாள்!' என்று அவன் நினைத்துக்கொண்டாலும், இந்த அளவுக்கு அவளது ஏக்கம் பரிணமித்திருக்கிறது என்று அறிய இயலாது. உள்ளங்களை ஊடுருவி அறியக்கூடியவன் இறைவன் ஒருவனே. ஆகவே, ஆன்மா தன்னை எண்ணி எண்ணி ஏங்க ஏங்க அதன் காதலை இறைவன் மதித்து, அதை இன்னும் அதிகமாக்குகின்றான்.

அஃதாவது, அந்த ஏக்கத்தையே தான் அளிக்க விரும்பும் பேரின்பமாகப் பரிணமிக்கும் முறையில் தம் அருட்செயலால் துணை புரிகின்றான். எனவேதான், அஃது ஊற்று நீர் போல

---

* விவிலியத்தில் - இயேசு சமாரியப் பெண்ணுக்குக் கூறியது கவனிக்க : ''கடவுளுடைய கொடை இன்ன தென்பதையும், 'தண்ணீர்கொடு' என்று உன்னிடம் கேட்பவர் இன்னாரென்பதையும் நீ உணர்ந்திருந்தால், ஒருவேளை நீயே அவரிடம் கேட்டிருப்பாய். அவரும் உயிருள்ள தண்ணீரை உனக்களித்திருப்பார்.'' (அரு 4:10) அதி. 4. முழுதும் வாசிக்க. ''நான் என் தந்தையின் செயல்களைச் செய்யாவிடில், நீங்கள் என்னை விசுவாசிக்க வேண்டாம். ஆனால், நான் அவற்றைச் செய்தால், என்னை விசுவாசிக்காவிட்டாலும் என் செய்கைகளையாவது நம்புங்கள். இங்ஙனம் தந்தை என்னிலும் நான் தந்தையிலும் இருக்கிறோம் என்று நீங்கள் அறிந்து கொள்வீர்கள். அவ்வறிவில் நிலை கொள்வீர்கள்'' என்றார். (அரு. 10: 37-39).

மிகும் எனப்பட்டது. அங்ஙனம் மிகுமாறு அவன் செயல்புரிகிறான். (குறளைக் கவனிக்க).

1161. ''மறைப்பேன்மன் யானிஃதோ நோயை
இறைப்பவர்க்
ஊற்றுநீர் போல மிகும்.''

'என் காதல் நோயை - ஏக்கத்தைப் பிறர் அறிதற்கு நாணி, மறைத்தாலும், அஃது-அவ் ஏக்கம் இறைக்க இறைக்க ஊறும் ஊற்றுப்போல அதிகரிக்கின்றது.'

இம்மைக் காதரிடை இது நிகழ்வதற்கு மேலாக மறுமைக் காதலரிடை இது சிறப்பாக நிகழ்கின்றது. இறைவனை நினைந்து உள்ளம் ஏங்க ஏங்க, அவன் மீது அன்பு பெருகிக் கொண்டே இருக்கும். இறையடியார்கள் பெறும் அனுபவம் இது.

ஆன்மா தன்தெய்வக் காதலனாகிய இறைவனை நினைத்து ஏங்குகின்றது. இதைக் காதலன் அறிந்தே உள்ளான். எந்த அளவுக்கு அந்த ஏக்கம் நாள்தோறும் அதிகரித்துக்கொண்டிருக்கிறது என்பதையும் அறிவான்.

இந்த ஏக்கம் என்னும் மனநோயை அவனே விளைவிக்கிறான் எனினும், மிகையாகாது. ஆன்மா, பேரின்பத்துக்குத் தன்னைத் தயாரிக்க இந்த ஏக்கமும் மனநோயும் மிக அவசியம்.

1162. ''கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய்
செய்தார்க்
குரைத்தலும் நாணுத் தரும்.''

இக்காதல் நோயை - ஏக்கத்தை மறைக்கவும் இயலவில்லை; இந்நோயை விளைவிக்கும் காதலர்க்கு இதை எடுத்துச் சொல்லவும் வெட்கமாயிருக்கின்றது! இவ்வெட்கம் இயல்பாகப் பெண்களுக்குள்ளதே.

ஆனால், இறைவனாகிய காதலனுக்கு இவ்வேக்கத்தை எடுத்துச் சொல்லச் சற்றும் வெட்கப்படத் தேவையில்லை. ஏன்? அடிக்கடி எடுத்துச் சொல்லுமாறு அவன் எதிர்பார்க்கின்றான்.

அங்ஙனம் சொல்வது ஆன்மாவின் பலவீனத்தையும் குறை பாடுள்ள நிலையையும் அறிவிக்கும். இதில் வெட்கப்படுவதற்கு ஒன்றுமில்லை. மாறாக இறைவனாகிய பேரின்பக் காதலன் மீது தனக்குள்ள பற்றினை வெளிப்படுத்துவதோடு அதை மேலும் வளர்க்கத் துணைபுரியும்.

1163. ''காமமும் நாணும் உயிர்காவாத் தூங்குமென்
நோனா உடம்பின் அகத்து.''

'இக் காதல் ஏக்கமும், அதை எடுத்துச் சொல்ல இயலாத நாணமும் அவற்றைச் சுமக்க இயலாத என்னிடத்தே, என் உயிரையே காவடித் தண்டாகக்கொண்டு அதன் இருமுனை களிலும் தொங்குகின்றன!'

இஃது ஆன்மாவை இருதலைக் கொள்ளி எறும்புபோல் இடர்ப்படுத்துவதாகும்.

இறைவன் தரும் பேரின்பத்தை அடைவது சிறிய காரிய மன்று. அதை எளிதில் அடைந்துவிட்டால், அதன் அளவிட வியலா மதிப்பைப் புரிந்துகொள்ள இயலாத நிலை ஏற்பட்டு விடும்.

ஒருநாள், தன் பாடங்களைச் சரியாகப் படித்த மாணவ னுக்கு இலட்சம் ரூபாய் கிடைத்தது போலாகும்! தன் கடமையை ஒரே ஒரு நாள் செய்வதற்கு இத்துணை பரிசா? என்று வினவத் தோன்றுமில்லையா?

ஆன்மா இறைவனுக்கு அன்பு செய்ய அளவிலாக் கடமைப் பட்டுள்ளது. இவ்வுலக வாழ்வில் ஒரு சிறிதே அக்கடமையை நிறைவேற்ற இயல்கிறது. இருந்தபோதிலும் இதற்கா இத்துணை பேரின்பம் என்று வினவத்தோன்றுகிறது! எனினும், இறைவனது அளவிட இயலா அன்புப் பெருக்கும், அருட்பெருக்கும் தக்க பதில் அளிக்கின்றன. மேலும், தான் தரப் போகும் பேரின்பத்துக்கு ஓரளவேனும் தகுதி பெறும்பொருட்டு ஆன்மாக்களை இறைவன் பல துன்பங்களுக்கு ஆளாக்கி (பொன்னை நெருப்பில் புடமிடுவது போல்-யாக். 1:4-7) மேலும் மேலும் புனிதப்படுத்த வேண்டும். இத்தகைய துன்பங் களுள் மிகக் கொடியது, இறைவன் சில சமயங்களில்

ஆன்மாவைத் தனியாகத் தவிக்க விடுவதாகும். உண்மையில் அவன் என்றும் யாரையும் தனியாகத் தவிக்கவிடுவதில்லை. தான்படும் பெருந் துன்பத்தினிடையே தன் காதலன் தன்னைக் கைவிட்டது போல தோன்றும்! தனியாக நடுக்கடலில் அகப் பட்டுக் கொண்டது போல! எனினும், ஆன்மாவுக்குத் தன் மீதுள்ள காதல் மேலும் வலிமை பெறவே இறைவனாகிய காதலன் இங்ஙனம் செய்கிறான்.

இங்ஙனம் (நடுக் கடலில் போல) தவிப்பதைக் குறட் பாக்கள் 1164, 1167 கூறுகின்றன.

1164. ''காமக் கடல்மன்னு முண்டே யதுநீந்தும்
ஏமப் புணைமன்னு மில்.''

என் காதல் ஏக்கம் கடல் போல் உள்ளது. அதைக் கடந்து செல்வதற்குப் பாதுகாப்பான புணை இல்லை!

1165. ''துப்பின் எவனாவர் மற்கொல் துயர்வரவு
நட்பினுள் ஆற்று பவர்.''

'இன்பம் தருதற்குரிய நட்பிலேயே துன்பம் விளையுமாறு செய்யக் கூடியவர், துன்பம் (துப்பு) தரக்கூடிய பகைமை விளைந்தால் என்ன செய்வாரோ?'

இன்பமே தரக்கூடிய காதல் நட்புறவில் (என்னைப் பிரிந் ருப்பதால்) துயர் வருமாறு செய்யக் கூடிய என் காதலர், என்மீது செலுத்தும் காதலில் ஒருகால் குறைவு (பகைமை) ஏற்பட நேரிடு மானால், என்ன தான் நிகழாது! அந்த இன்பம் கடல் போலப் பெரிது. ஆனால், பிரிவு ஏற்படும் போது ஏற்படும் துன்பம் கடலினும் பெரிது - அஃதாவது தாங்கவே இயலாதது.

1166. ''இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதடுங்கால்
துன்பம் அதனிற் பெரிது.''

என்றதன் கருத்தும் இதுவே. 'இன்பம் தரக் கூடியதே துன்பம் தருவதானால், துன்பம் தரக் கூடியதுபற்றி என்ன சொல்வாம்!'

இம்மைக் காதலில் இது நிகழுமானால், மறுமைப் பேரின்பக் காதலில் இது பன்மடங்கு அதிகமாகவே நிகழும் என்க. அஃதாவது இன்பம் தரும் இறைப்பற்று, அவன் மீதுள்ள காதல் இறுதியில் நன்மையே பயக்கும். இறைவன் மீதுள்ள காதலன்பு, வலிமையும் வளர்ச்சியும் உறுதியும் அடைந்து இம்மை வாழ்வு முடிந்த பின் பேரின்ப வெள்ளமாகப் பரிணமிக்க வழி செய்கிறது.

1167. ''காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே உளேன்.''

'அக் காதலாகிய கடலை எப்படியும் நீந்த வேண்டும் என முயன்றாலோ, நீந்திப் பார்த்தும் கரை காண முடியவில்லை. இக்காதல் மிகுந்து என்னைத் துயரினுள் சிறப்பாக ஆழ்த்து கின்ற நள்ளிரவிலும் நான் தனித்தே இருக்கின்றேன். காதலனோடு சேரும் வழிகாண இயலவில்லை'.

நம்மீது அன்பில்லாதவர் நம்மைத் துன்புறுத்தினால், அஃது அதிசயமில்லை; நம்மீது அதிக அன்புள்ளவர்களும் நமக்குத் துன்பத்தை விளைவிப்பார்களானால், அதில் ஏதோ பெரிய மர்மம் அடங்கியிருக்கிறதென்றே பொருள்.

இத்தகைய துன்பத்தைத்தான் இறைவன் ஆன்மாவுக்கு விளைவிக்கின்றான். ஆன்மாவின் மீதுள்ள அன்புக் காதலினால் விளைவிக்கப்படும் துன்பமாதலின், அதுவும் அன்பின் அறி குறியேயாகும்.

அன்பினால் துன்பம் விளைவிப்பது இவ்வுலகில் சாதா ரணமாக நிகழ்வதில்லையென்று நினைக்கலாம். ஆனால், உண்மையன்று. கசப்பான மருந்து கொடுக்கும்போது- அறுவைச் சிகிச்சை செய்யும்போது, தண்டித்து மகனைத் திருத்தும் போது (எபிரே: 12; 4-9) அன்பினால் அன்றோ துன்பம் விளைவிக்கிறோம்.

சாதாரண மனிதனுக்கே இந்த அளவுக்கு அறிவு இருக்கிறது என்றால், இறைவனுக்கு எத்துணை அதிகமாக இருக்க வேண்டும் இந்த அறிவு?

1168. "மன்னுயி ரெல்லாம் துயிற்றி அளித்திரா
என்அல்ல தில்லை துணை."

'எந்த நோயும் இரவுப்பொழுதில் அதிக வருத்தம் தருவதைக் காண்கிறோம். காதல் மன நோயும் தனியாகக் கிடக்க வேண்டிய இராப்பொழுதில் மிக மிக வேதனை தரக் கூடியது. இக் கருத்தையே அடுத்த குறளும் கூறும்.

1169. "கொடியார் கொடுமையில் தாம்கொடிய இந்நாள்
நெடிய கழியும் இரா."

காதலரோடு இன்புற்றபோது இரவு குறுகியதாயும், பிரிவாற்றாமல் துன்புறும்போது நெடியதாயும் உள்ளது. எவ்வளவு நேரம் இன்புற்றாலும் பொழுது விரைவில் முடிவடைவது போலவும், சிறிது நேரம் துன்புற்றாலும் வெகு நேரம் போலவும் காணப்படுவது அனுபவத்தில் அறிந்த தொன்று.

'என்னைப் பிரிந்து சென்ற என் காதலருடைய கொடுமையைவிட இந்த இரவுகளே அதிகக் கொடுமை செய்வது போல் உள்ளன.'

1170. "உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோவென் கண்."

பிரிந்திருக்கும் காதலன் உள்ள இடத்திற்கு மனம் போலச் செல்ல இயலுமாயின், என் கண்கள் (அழுவதால்) இங்ஙனம் வெள்ளமாகிய நீரை நீந்த வேண்டியதில்லையே!

இறைவன் மீது மிக மிகத் தீவிரமான காதல் கொண்டுள்ள ஆன்மாவுக்கு உறக்கமும் இளைப்பாறுதலும் அமைதியும் அளிக்கக் கூடியவர், தன் காதலராகிய இறைவனே என்று ஆன்மா உணர உணர இத்தகைய உறக்கமின்மையும் தனிமை உணர்வும் அதிகரிக்கும். இறைவனுடன் சேர்ந்தாலன்றி ஆன்மா இவ் வுலகில் தனிமைதானே! ..... ......

இந்நிலையில் ஆன்மா இவ்வுலக வாழ்வை விடுத்துத் தன் காதலன் உள்ள வீட்டுக்குச் செல்ல மேலும் ஆர்வம் கொள்ளும். இறைவன் மீது மிக மிகக் காதல் கொண்டவர்கள் இத்தகைய உணர்வுக்கு உள்ளாவது உலகம் அறியாததன்று.

## படர்மெலிந்திரங்கல்

### சுருக்கம்

பிரிவு வருத்தத்தால் மெலிந்து உளம் உருகுதல்.

1161. "மறைப்பேன்மன் யானிஃதோ நோயை
இறைப்பவர்க்கு
ஊற்றுநீர் போல மிகும்."

'காதல் மிகுதியை வெளிப்படச் செய்வது சில சமயங்களில் நாணுதற்குரியதாயிருக்கலாம். ஆனால், அதை மறைக்க மறைக்க அது, இறைக்க இறைக்க ஊறும் ஊற்றுப்போல் இருக்கும்.' இறையன்பு மிகுதியானால் வெளியில் காணப் படாமல் போகாது. அப்போது பிறர் அதைப் பக்திப் பைத்தியம் என்று ஏளனம் செய்யக்கூடும். ஆனால், அவ்வன்பு பெருகிக் கொண்டேயிருக்கும்.

1162. "கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய்
செய்தார்க்
குரைத்தலும் நாணித் தரும்."

'காதல் நோயை மறைக்கவும் இயலவில்லை; காதலர்க்கு உரைக்கவும் நாணமடைகின்றேன்! இனி என் செய்வேன்!' இறையன்பு மிகுந்தவர்களுக்கும் இத்தகைய வேதனை ஏற்படக் கூடும். தன் காதலை இறைவனுக்கு உரைத்து ஆறுதல் பெறச் செய்யப்படும் முயற்சியும் விரும்பும் அளவுக்குப் பயன் தருவ தில்லை. (மிகத்துன்புற்று எண்பிக்கப்பட்ட ஐந்தவித்தானின் அன்பைப்பெற முயலும்போது, 'இறைவா! நான் இங்ஙனம் துன்புறுகின்றேனே, உனக்குக் கவலையில்லையா?' என உரைத்தல் நாணுதற்குரியது. ஏனெனில், ஐந்தவித்தான் ஏற்ற துன்பத்துக்கு மேலாக எந்த ஆன்மாவும் துன்புற இயலாது. ஏதோ ஒருசிறு துன்பமே நிகழும். அதைத் தாங்கிக்கொள்ள இயலாமல் முறையிடுவதுபோல் உரைப்பது நாணுதற்குரியதே யன்றோ!).

1163. "காமமும் நாணும் உயிர்காவாத் தூங்குமென்
நோனா வுடம்பின் அகத்து."

'இக்காதல்நோய், அதனால் (அதைப்பிறர் அறியுமாறு வெளிப்படுவதால்) உண்டாகும் நாணம், இவையிரண்டையும் பொறுக்கமாட்டாத (நோனா) என் உடலில் (ஏற்கெனவே மெலிவுற்றிருப்பதால்) உள்ள உயிர் (காவடித்தண்டின் இரு முனைகள்போல) ஊசலாடுகின்றன.'

முந்திய குறளில் கூறப்பட்டதே மீண்டும் அழுத்தமாகக் கூறப்படுகிறது.

1164. ''காமக் கடல்மன்னும் உண்டே அதுநீந்தும்
ஏமப் புணைமன்னும் இல்.''

'இக்காதல் நோய் கடல்போல் உள்ளது. அதை நீந்துவதற்குத் தேவையான பாதுகாப்புப் புணை எதுவுமில்லை.'

சிற்றின்பக் காதலருள் ஏற்படக்கூடிய காதற்பெருக்கை விடப் பேரின்பக் காதலராகிய இறைவனுக்கும் ஆன்மாவுக்குமிடையே உண்டாகக்கூடிய அன்புப்பெருக்கம் அடைவதற்கு எளிதானதன்று. (ஐந்தவித்தான் காட்டிய வழியில் பெருந்துன்பங்களைக் கடந்தாலன்றி அடைய இயலாதது).

1165. ''துப்பின் எவனாவர் மற்கொல் துயர்வரவு
நட்பினுள் ஆற்று பவர்.''

'காதலன்புறவு கொண்டுள்ளபோதே துயர் வருமாறு செய்யும் காதலர், அன்பு பகைமையாக மாறுமேல் (துப்பின்) வரும் துயர் எத்துணை பெரிதாமோ!'

இறைவனோடு (பகைமையாகிய) பாவ உறவு உண்டாகும் போது துன்பம் விளைவது வியப்பன்று. ஆனால், அன்புறவு கொண்டிருக்கும் போது ஏன் இத்துணை துயர்? (பேரின்பக் காதலுக்குள்ள சிறப்புப் பண்பிது).

1166. ''இன்பம் கடல்மற்றுக் காமம் அஃதடுங்கால்
துன்பம் அதனில் பெரிது.''

'தீவிரக்காதலால் (காமம் - அதிக ஆர்வம்) வரும் இன்பம் கடல்போல் பெரிது. ஆனால், பிரிவால் விளையும் துன்பமோ அதைவிடப் பெரிது.' இன்பத்தால் விளையும் மகிழ்ச்சியைவிடத் துன்பத்தால் விளையும் துயரம் பெரிதாகக் காணப்படுவது உலக அனுபவம். பேரின்பக்காதலிலும் இது நிகழும். இறைவனைப் பிரிந்திருப்பது அவனுடைய அன்பில் உண்மையாகவே ஈடுபட்டிருப்பவர்க்கு மிகமிகத் துயர் தருவதாம்.

1167. ''காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே உளேன்.''

பேரார்வமாகும் காமக் (காதல்) கடலை நீந்தியும் கரை காண இயலாமல் நாயகனின்றித் தனியே தவிப்பது, இறைவன் அன்பைத் துய்க்காத நிலையில், ஆன்மா நள்ளிரவு போன்ற இருளில் துணையின்றித் தவிப்பதைக் குறிக்கும்.

1168. ''மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்திரா
என்னல்ல தில்லை துணை.''

'மற்றெல்லோரையும் தூங்க வைத்து என்னை மட்டும் தனக்குத் துணையாகக் கொண்டிருப்பதுபோல் உள்ளது இந்த நள்ளிரவு! மிக அருமையே இது!' (இகழ்ச்சிப் புகழ்ச்சி!).

மேற்குறளில் கூறிய தனிமையை மேலும் வலியுறுத்துகின்றது.

1169. ''கொடியார் கொடுமையின் தாம்கொடிய இந்நாள்
நெடிய கழியும் இரா.''

'காதலரோடு இன்புற்ற இரவு விரைவில் கழிந்துபோவது போலும், அவரைப் பிரிந்து நிற்கும் இத்தனிமையான இரவுக்கு முடிவே இல்லாததுபோலும் காணப்படுகின்றது.'

அன்பின் இனிமை விரைவில் முடிவுறுவதுபோலத் தெரிவதும் பிரிவின் துயரம் முடியாததுபோல் காணப்படுவதும் அநுபவம். இறைவனது காதல் அன்பைச் சில சமயங்களில் (தொடக்க நிலையில்) சுவைப்பது விரைவில் முடிவதுபோல் தோன்றும். அச்சுவை நீங்கி ஆன்மா துயரத்தில் ஆழ்வது சிறுபொழுதாயினும், நீண்டகாலம்போல் தோன்றும் இங்குக் கூறப்படும் இரவு,

ஆன்மாவின் இரவுப்பொழுது (Dark night of the soul) எனக் கிறித்தவ ஞானிகள் கூறுவது காண்க.

1170. ''உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோவென் கண்.''

'மனம்போலக் காதலரின் பிணைப்பால் வரும் இன்பத்தைச் சுவைக்க இயலுமாயின், என் கண்கள் கண்ணீரில் நீந்த வேண்டியதில்லை.' ஆனால், மனம்போலக் காதலருடன் ஒன்றித்திருப்பது எப்போதும் இயலாது. சில சமயங்களில் பிரிந்தே நிற்றல் வேண்டும். அன்புறவின் வளர்ச்சிக்கு இப்பிரிவு மிகத்தேவை.

# 118. கண்விதுப்பழிதல்

மேற்கூறிய ஏக்கமும் காதல் தவிப்பும் மேலிட மேலிடத் தலைவி தலைவனை நேரில் காண விழைவதுபோல் ஆன்மா (அகக் கண்ணால்) இறைவனை நேரிலேயே விரைவில் காண விழைந்து, அஃது இயலாததால் வருந்துதல். (விதுப்பு — விரைவு. அழிதல் - வருந்துதல்).

1171. ''கண்தாம் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாம்காட்ட யாம்கண் டது.''

'தீராத இந்தக் காதல் நோயை யான் அடைந்தது, என் கண்கள் அன்று காதலரைக் காட்டியதால் அன்றோ? ஏன் இன்று அதே கண்கள் காதலரைப் பார்க்க வேண்டுமென்று அழுகின்றன?

பெண்ணை நாடி ஆண் வந்த போதிலும் ஆண்மகனாகிய காதலனைக் காதலிக்குக் காட்டியது காதலியின் கண்கள்தாமே? ஆகவே, அவற்றை நொந்துகொள்கிறாள்! இஃது ஏக்கத்தின் வருணனை.

தொடக்கத்தில் தனது அழகையும் எழில் மிக்க பண்புகளையும் ஆன்மாவுக்கு வெளிப்படுத்தியவன் இறைவனே யாவான். அவனது தொடக்கச் செயலால் அன்றி, ஆன்மா ஒன்றுமே செய்யவியலாது. ''அங்ஙனம் தன்னை வெளிப்படுத்தித் தன்பால் என்னை ஈர்த்துக்கொண்ட அவன்தானே இப்போது நான் அவனை நேரில் காண உதவவியலும். என்னால் ஆவது என்ன?'' என்று புலம்புகிறது ஆன்மா.

1172. ''தெரிந்துணரா நோக்கிய உண்கண் பரிந்துணராப்
பைதல் உழப்ப தெவன்.''

'பின்பு விளையப் போவதை (அஃதாவது பிரிவு ஏக்கத்தால் வேதனையடைவோமே என்பதை) முன்பே உணராமல், காதலர் மீது கண்களைச் செலுத்திய இக்கண்கள் இன்று இத்துன்பம்

தம்மால்தான் வந்தது என உணராமல் துன்புறுவது எதற்காக? இதுவுமது.

1173. ''கதுமெனத் தாம்நோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்க துடைத்து.''

'முன்பு இக் கண்கள் காதலரைத் தாமே தீவிரமாக நோக்கி, இப்போது அழுவது நகைப்புக்கிடமானதே!'

இதுவுமது.

1174. ''பெயலாற்றா நீருலந்த உண்கண் உயலாற்றா
உய்வில்நோய் என்கண் நிறுத்து.''

'என் உயிரே போகும்படியான இக்காதல் நோயை எனக்கு விளைவித்து, அது நீங்காதவாறு நிலைத்திருக்கச் செய்யும் இக் கண்கள், ஏக்கத்தால் அழுது அழுது கண்ணீரே வற்றிப் போகும்படி செய்துவிட்டனவே!'

இதுவுமது.

1175. ''படல்ஆற்றா பைதல் உழக்கும் கடலாற்றாக்
காமநோய் செய்தஎன் கண்.''

'கடலினும் பெரிய இக்காதல் நோயை, எனக்குத் தந்த இக் கண்கள் இப்போது தூக்கமும் இன்றி வருந்துகின்றன.'

இதுவுமது.

1176. ''ஓஒ இனிதே யெமக்கிந்நோய் செய்தகண்
தாஅம் இதற்பட் டது.''

'எனக்கு இந்நோயை விளைவித்த கண்கள் இப்போது தூங்காமல் அழுவது, படவேண்டிய வருத்தந்தான்; படட்டும் இது வருத்த மிகுதியால் கூறப்படும் பொருளற்ற சொல்.

நமக்குத் துன்பம் விளைவித்த யாராவது துன்பப்பட நேர்ந்தால் 'ஒரு வித மகிழ்ச்சி' கொள்கிறோம் இல்லையா? அதுபோல, இஃது அன்பின் இலக்கணத்துக்குப் பொருந்தாது. எனினும், நடைமுறையில் பன்முறை காண்பது.

இதுவுமது.

1177. "உழந்துழந்து உள்நீர் அறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண்."

'விரும்பி உள்நெகிழ்ந்து விடாமல் அன்று காதலரைக் கண்ட கண்கள், இன்று வருந்தி வருந்தி, உள்ளத்தினின்று பொங்கி எழும் (கண்) நீர் அற்றுப் போவதாக.'

இதுவுமது.

இதுவரை, காதலரைக் கண்ட கண்கள் கூறும் துன்பத்தை உரைத்தன இவ்வதிகாரத்துக் குறட்பாக்கள். காதலர் செயல் எல்லாம் கண்களின் செயலில்தான் தொடங்குவது அறிவோம். பார்வையிலிருந்துதான் உள்ளத்தில் ஆசை, காதல் எல்லாம் உருவாகும்.

இறைவனது பேரின்ப விசயத்திலும் அவனது அருள் நோக்கில்தான் எல்லாமே தொடங்குகின்றன. இது தொடக்கக் குறட்பாக்களில் விரித்துரைக்கப்பட்டன.

தனது அழகால் ஆன்மாவைத் துன்புறுத்தித் (தகையணங் குறுத்தி) தன்பால் ஈர்த்துக்கொண்ட பின்னர், பேரின்பம் வந்தடையும் வரை அத்தகைய துன்புறுத்தல் எங்ஙனம் நிகழாமலிருக்க இயலும்? இஃது ஆன்மா நன்குணர்ந்துகொள்ள வேண்டியதொன்று.

எத்தகைய துன்பமுமின்றிப் பேரின்பம் அடைந்துவிட இயலும் என்று நினைப்பது அறியாமையே! சிற்றின்பம் துய்ப்பதிலேயே இத்துணை துன்பமும் ஏக்கமும் இருக்கிறதெனின், அதைவிட அளவிட இயலா வகையில் உயர்ந்த ஆன்மா, பேரின்பத்தை அடையுமுன்னர் பல இன்னல்களும் ஏக்கமும் கொள்ள வேண்டியது முறையே அன்றோ?

1178. "பேணாது பெட்டார் உளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண்."

காதலின் பெருமையை எவ்வளவுதான் புகழினும் நெஞ்சில் உண்மையாகவே விரும்பாது வெறும் சொல்லினால் மட்டும்,

வெளிப்படையாகக் (ஒரு வேளை ஏதாவதொரு சுயநல நோக்குடன்-உதாரணமாகப் பணம்படைத்த குடும்பத்தினரை!) காதலிப்பவர் உலகில் இல்லாமல் இல்லை. அத்தகையவரையும் 'காணாமல் கண்கள் அமைதியடைய இயலவில்லை' என்று வெளிப்படையாக மட்டும் ஏக்கம் கொள்பவர் உண்டு. என்னே உலக மாயம்!'

ஆனால், நெஞ்சத்தில் நேயம் கொள்ளாது வாய்ச் சொல்லால் மட்டும் ஆன்மாவை விரும்புகின்றவர் அல்லர் கடவுள். தான் படைத்த ஆன்மாக்கள் மீது அளவு கடந்த காதல் கொண்டுள்ள இறைவன், வெறும் வாய்ச்சொல்லால் ஏமாற்று பவர் ஆகார். நெஞ்சத்தில் ஆழ்ந்த காதலைக் கொண்டுள்ளவர்.

சுயநல நோக்குடன் அன்பு செய்பவராயிருத்தல் இறைவனுக்குப் பொருந்தாது. ஆன்மாக்களிடமிருந்து அவர் பெறக் கூடிய நன்மை எதுவுமில்லை. தனக்குள்ள அளவற்ற நன்மையைப் பகிர்ந்து கொள்வதே அவரது பேரின்பக் காதலின் முழு நோக்கம்.

1179. ''வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை
ஆர்அஞர் உற்றன கண்.''

'காதலர் வராவிடில், வரவு எதிர்பாத்தவாறு கண்கள் உறங்குவதில்லை. வந்து விட்டால் மீண்டும் பிரிய நேருமோ என்னும் கவலையால் தூங்குவதில்லை. இருவழியிலும் என் கண்கள் பெருந்துன்பமே உறுகின்றன.'

பேரின்பக் காதலரைப் பொறுத்த மட்டில், 'நுண்ணியர் எம்காதலர்' என்பதற்கேற்ப இறைவன் நுண்பொருட்காதலர். பருப்பொருளாகிய உடம்புடன் கூடிய ஆன்மாவில் அவர் குடி புகுவதும், அதனை உறைவிடமாகக் கொண்டு வாழ்வதும் புலனால் உணரக்கூடியதன்று. அறிவுக்கும் எளிதில் எட்டாத தொன்று. ஆகவே, அவன் வருகைக்காக விழிப்புடன் (ஆர்வத் துடன், பாவமில்லா உள்ளத்துடன்) காத்திருத்தலும் வந்த பின்னர் தன் குற்றத்தால், ஆர்வமின்மையால் 'எங்கே என்னை விட்டு நீங்கி விடுவாரோ! என்ற ஏக்கத்துடன் அவரைத் தன் மனத்துள் வீற்றிருக்கச் செய்தலும் அவசியமாகின்றன.

1180. "மறைபெறல் ஊரார்க் கரிதன்றால் எம்போல்
அறைபறை கண்ணார் அகத்து."

அகத்தில் உள்ள காதல் பெருக்கை என் கண்களே ஊரார் எல்லாரும் அறியப் பறை சாற்றுகின்றன. ஆகவே, அதுயாவரும் பார்க்கக் கூடியதே. எனினும் உள்ளத்தில் நிகழும் உணர்வுகளை யாருடனும் பகிர்த்துகொள்ள இயலாதன்றோ?

பேரின்பக் காதலருக்கும் இங்ஙனமே நிகழும். விவிலியம் கூறுவதுபோல் "என் காதலர் எனக்கு, நான் என் காதலர்க்கு" என்னும் அடிப்படையில்தான் இவையெல்லாம் நிகழும்.

## கண்விதுப்பழிதல்
### சுருக்கம்

காதலரைக் காணக் கண்கள் விரைந்து, காண இயலாததால், வருந்துவது கூறப்படுகிறது.

1171. "கண்தாம் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாம்காட்ட யாம்கண் டது."

'இத்தீராத காதல்நோயை யான் அடைந்தது என் காதலரைக் காட்டிய இக்கண்களால்தான். காட்டிய பின்னர் இப்போது கண்ணீர் பெருக அழுவதெதனால்?' இறைவனது அளவில்லா அழகை எனக்குக் காட்டியது இவ்வுலகில் என் கண்கள் காணும் எழிலும் தோற்றமும். இதனால்தான் என் உள்ளத்தில் பேரின்பக்காதல் பிறந்தது; இனி ஏன் நான் இப்படித் துன்புற வேண்டும்?

1172. "தெரிந்துணரா நோக்கிய உண்கண் பரிந்துணராப்
பைதல் உழப்ப தெவன்?"

இறைவனது அருட்பார்வையைப் பெற்று, அவனது அன்பைப் பெறவேண்டுமானால், ஆன்மா அவன்பால் ஈர்க்கப் படுவது வியப்பன்று. அதனால், சில துன்பங்கள் வந்தே தீரும். (ஐந்தவித்தானின் படிப்பினையும் முன்மாதிரியும் இக்கருத்

தையே கூறும்). அதற்காக ஏன் துன்புற வேண்டும்? 'துணிவுடன் முன்செல்' என்றவாறு.

1173. "கதுமெனத் தாம்நோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்க துடைத்து."

இறைவனது அன்பும் அருளும் பெறவேண்டுமென ஆன்மா தொடக்கத்தில் ஆர்வமுடன் (கதுமென) தானே விரும்பியது. அப்பெரும் பேற்றினை அடைவதற்குச் சில துன்பங்கள் ஏற்றே தீரவேண்டும் என்றுணர்ந்ததும் உள்ளம் அழுகின்றது. (கலுழும்). இது பரிதாபத்துக்குரிய நிலையே. (நகத்தக்கது).

1174. "பெயலாற்றா நீருலந்த உண்கண் உயலாற்றா
உய்வில்நோய் என்கண் நிறுத்து."

'அருள் ஒளியிழந்த என் உள்ளப் பார்வை (உண்கண்), மன நிம்மதியோடு உயிர்வாழ இயலாதவாறு (உயலாற்றா) என் உள்ளத்தில் தீராத (உய்வு இல்) பேரின்பக்காதல் நோயை, என்னை விட்டு நீங்காதவாறு செய்து (நோய் என் கண் நிறுத்து), நான் செயலிழந்து நிற்குமாறு (செயலாற்றா) காதற் கண்ணீர் முழுதுமே வற்றிப்போனதுபோல் ஆய்விட்டது.'

1175. "படலாற்றா பைதல் உழக்கும் கடலாற்றாக்
காமநோய் செய்தவென் கண்."

இங்ஙனம் எனக்குக் கடல்போன்ற தாங்கவியலாத (கடலாற்றா) காதல் நோயை (காமநோய்) உண்டாக்கிய என் உள்ளம் (கண்) தூங்கவும் இயலாதவாறு (படலாற்றா) பெருந் துன்பம் செய்கின்றது.

இதுவுமதே.

1176. "ஓஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்
தாஅம் இதற்பட் டது."

இறைவனின் அருட்பார்வையைச் சந்தித்ததால் உண்டான இவ் ஆன்மநோய், (எமக்கிந்நோய் செய்த கண்) எளிதில் நீங்காமல் தானே (உள்ளம்) இப்படி அவதியுறுவது (தாம் இதன் பட்டது) மிகமிக நன்று (ஓஒ இனிதே).

இகழ்ச்சிப் புகழ்ச்சிபோல் காணப்படினும், இறைவனை நினைந்து ஏங்கித் துன்புறத்துன்புற அவனது அளவிலா அன்பின் இனிமையை ஆன்மா சுவைக்கின்றது.

1177. "உழந்துழந் துள்நீர் அறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண்."

'தொடக்கத்தில் இறைவனின் அன்புக்காக விரும்பி உருகும் (விழைந்து இழைந்து) அவனது அருட்பார்வையைப் பெற்ற ஞானக்கண்கள் (வேண்டி அவர்க்கண்ட கண்), இன்று அத்தொடக்கநிலை நீங்கி வளர்ச்சி நிலை உருவாகுகையில் மேலும் மேலும் துன்புற்றே (உழந்துழந்து) உள்ளக் கண்ணீர் அற்றுப் போகட்டும் (உள்நீர் அறுக). அஃதாவது துன்பத்தால் அன்பு பெருகட்டும்.'

குறிப்பு: இக்குறளில் 'உள்நீர்' என்றுள்ளது வெறும் சாதாரணக் கண்ணீரையன்று; உள்ளத்தின் உருகுதலையே உணர்த்தும்.

1178. "பேணாது பெட்டார் உளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண்."

இப்பேரின்பக் காதல்பொருட்டு யான் (ஆன்மா) படும் துன்பத்தை நினைக்கும்போது "உன்னைக் காதலிக்கிறேன்" என்று சொல்லால் மட்டும் விரும்பும் காதலன்போல் உளர். (பேணாது பெட்டார் உளர்), தொடக்கத்தில் அவரது அருட்பார்வையைச் சந்தித்த என் உள்ளம் மீண்டும் அதை அடைய எவ்வளவோ விரும்புகின்றது. காணவியலாமல் உள்ளமும் துன்புறுகிறது. அவர் காணாது கண் அமைவில.

1179. "வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை
ஆரஞர் உற்றன கண்"

'இறைவன் (என் அன்பர்) என்னைக்காண (அருள்புரிய) வராவிட்டால் (வாராக்கால்) வரவை எதிர்பார்த்து நிம்மதி யடையாது என் உள்ளம் (கண் துஞ்சா). வந்தெனக்குத் தம் அன்பின் சுவை காட்டினால் (வரின்) மீண்டும் போய் விடுவாரோ

என அஞ்சி அவதிப்படும் (துஞ்சா). இருவழியிலும் (ஆயிடை) என் உள்ளம் (கண்) துன்புறுகின்றது (அஞர் உற்றன). ஆர்வ மிக்க அன்பின் ஏக்கநிலை இது.

1180. ''மறைபெறல் ஊரார்க் கரிதன்றால் எம்போல்
அறைபறை கண்ணார் அகத்து.''

'கண் பார்வையால் வெளிப்படுத்தப்படும் (காதல்பெருக்கு) பறைசாற்றுவது போல் (அறைபறை) உள்ளது. ஆனால், பார்வையால் எவ்வளவுதான் வெளிப்பட்டாலும் மனத்தில் ஆழமாகப் புதைந்திருக்கும் காதலின் பெருக்கைப் பிறர் யாரும் அறிய இயலாது (மறைபெறல் ஊரார்க்கு அரிது).

இறைவன்பால் ஏற்படக்கூடிய அன்பு, பெரும்பாலும் வெளிப்படையாகக் காணப்பட இயலாதது. எளிதாக வெளிப் பட்டால் ஆழ்ந்ததாயிராது. அஃது உள்ளத்தில் ஆழமாய்ப் பதிந்திருக்க வேண்டியதொன்று.

# 119. பசப்புறு பருவரல்

விரும்பியவாறு இறைவனை விரைவாகக் காண இயலாமையால் ஏக்கம் மிக, உள்ளத்தில் மட்டுமன்று, உடலிலும் வெளிப்படையாகச் செழுமை, வலிமை, தெம்பு ஆகிய பண்புகள் குன்றும். (பசப்பு - மேனியின்கண் உண்டாவதொரு நிற வேறு பாடு; பசுமை நிறம். பசப்புறுதல் - பசுமை நிறம் தோன்றுதல் - பொதுவாக நிற வேறுபாட்டைக் குறிக்கும். உள்ளத்தில் ஏற்படும் வருத்த மிகுதியால் முகம் வெளிறுதல் முதலியன நிகழ்வது நாம் அறிந்ததே. பருவரல் - வருத்தம்).

1181. "நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தஎன்
பண்பியார்க் குரைக்கோ பிற."

'காதலர் பிரிவினால் ஏற்பட்ட பசந்த என் நோயை யாருக்குச் சொல்வேன்?'

இம்மைக் காதலரிடை இப்பசப்புறுதல் ஓரளவு உண்மையே. என்றாலும் மறுமைப் பேரின்பக் காதலை அடைய விரும்பும் ஆன்மாவாகிய தலைமகள், இறைவனாகிய தலைமகனை நினைத்து ஏங்க ஏங்க, உடலிலும் அழகு, வலிமை, செழுமை ஆகிய பண்புகள் குன்ற வருந்துதல். உளத்தில் நிகழும் உணர்வு களின் மிகுதியால் - சிறப்பாக ஆழ்ந்த கவலை, காதல், ஏக்கம் முதலிய உணர்வுகளின் மிகுதியால் உடலிலும் தளர்வு, நோய் முதலிய மாற்றங்கள் நிகழ்வது அனுபவத்தில் அறியக் கூடிய தொன்று. 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்'. 'கடுத்தது காட்டும் முகம்' முதலிய பழமொழிகள் எழுந்தது இதனாற்றான்.

ஆகவே, தன்னைப் போன்றதொரு பிறவியின் காதலைத் துய்க்க வேண்டுமென ஒருத்தி ஒருவனை எண்ணி ஏங்குகையில், மேனி பசத்தல் நிகழுமாயின், தன்னைவிட எத்துணையோ உயர்ந்த எழில் மிக்க - அனைத்து அன்புக்குமுரிய இறைவனை நினைந்து ஏங்குகையில் உடல் முழுவதுமே மேற்சொன்ன மாற்றங்களை அடைவதில் வியப்பென்ன? அவனது காதலை எப்படியும் பெற வேண்டும் என்னும் நோக்குடன் நோன்பிருத்த லாலும் இது நிகழலாம்.

''உலகில் வாழும் வரை நீ என்னைப் பிரிந்தே இருக்க வேண்டும்! மறுமைக்குரிய பேரின்பத்தை இம்மையிலேயே துய்த்தல் இயலாதாதலால்!'' ......, என்றான் தலைமகனாகிய இறைவன் ஆன்மாவுக்கு. ''அஃதன்றி வேறுவழியில்லையேல், ஆகட்டும்!'' என்றது ஆன்மா.

''இனி, வந்துள்ள இப்பசலை நோயை - உடலே மாறக் கூடிய அளவுக்கு ஏற்பட்ட இந்த ஏக்கப் பெருக்கத்தை யாரிடம் சொல்லித் தீர்த்துக்கொள்வேன்!'' என்றவாறு.

1182. ''அவர்தந்தார் என்னும் தகையால் இவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு.''

''எனக்கு ஏற்பட்டுள்ள இப்பசப்பு நோய், 'உன் காதலால் தான் நான் உண்டானேன்' என்று பெருமிதத்துடன் என்னை நோக்கிக் கூறுவதுபோல் என் உடம்பின் மீது ஊருகின்றது.''

முன் சொன்ன கருத்து மேலும் உருவகப்படுத்திக் கூறப் படுகின்றது.

1183. ''சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையும் தந்து.''

''இப்பசலையின் காரணமாக என் மேனியழகினையும் காதலால் விளையும் நாணினையும் என் காதலர் கொண்டு போய்விட்டார். கைம்மாறாக இக்காதல் நோயையும் பசலையையும் தந்தார்! இனி அவர் வந்து தந்தாலன்றி, அழகும் நாணும் ஆகா. பசலையும் காதல் நோயும் போகா.''

ஆன்ம நோயை விளைவிப்பவரும் அவரே. அதைத் தீர்க்கக் கூடியவரும் அவரே. காதலைத் தோற்றுவிப்பவரும் அவரே. அதனால் விளையும் ஏக்கத்தைத் தீர்த்து வைப்பவரும் அவரே.

''முன்பிருந்த அழகையும் அதை இழந்தால் ஏற்படும் நாணை யும் அவர் கொண்டார். அஃதாவது தம்முடன் கொண்டு போய் விட்டார். அவர் திரும்பி வந்தாலொழிய அஃதாவது, அவரை நேரில் கண்டாலொழிய என் முன்னைய அழகும் அருளும் திரும்பா'' என்றவாறு.

1184. ''உள்ளுவன் மன்யான் உரைப்ப தவர்திறமால்
கள்ளம் பிறவோ பசப்பு.''

''நான் எந்நேரமும் நினைப்பது அவர் சொற்கள்; உரைப்பது அவர் திறம். அப்படியிருக்க இப்பசப்பு நோய் எப்படியோ கள்ளத்தனமாக வந்து விட்டதே!''

''அவர் வருமளவும் அவருடைய காதற் சொற்களைச் சிந்திப்பதோடு அவரது எழில் திறன்களையும் எடுத்துரைத்த வண்ணமாய் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். இருந்த போதிலும், அஃதாவது மனமும் வாயும் அவரை மறவாதிருந்த போதிலும் அவ்விரண்டுடனும் தொடர்பு கொண்டுள்ள உடம்பில் பசப்பு வந்துவிட்டதே!'' என்கிறது ஆன்மா.

தலை மகனாகிய இறைவனின் காதற் சொற்களும் அவனது திறமைகளும், ஐந்தவித்தானாகிய காதலனைப் பொறுத்த அளவில் அவனைப்பற்றிய நற்செய்தி நூலில் காணக்கிடக் கின்றன. அவன் **திரும்பி வரும் வரை** அவனது சொற் களையும் செயல்களின் மாண்பையும் தியானித்த வண்ணமாக வாழ்வு நடத்த வேண்டியவன், **கிறித்தவன்** எனப்படும் ஐந்தவித்தானின் சீடன்.

1185. ''உவக்காண்எங் காதலர் செல்வார் இவக்காண்என்
மேனி பசப்பூர் வது.''

உவக்காண் = உங்கே(அண்மை குறித்தது).

இவக்காண் = இங்கே.

'என் காதலர் என்னைப் பிரிந்து சற்றுத் தொலைவு சென்றாரோ இல்லையோ என் மேனி பசந்துவிட்டது.'

1186. ''விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.''

'விளக்கு அதிக ஒளியாயின்றி மெலிதாய் ஒளி விடுத்தால் இருள் நெருங்கிவிடும். அதுபோல் தலைவன் என்னை இறுகத் தழுவாதிருக்கும் நேரம் பார்த்து (முயக்கத்தின் மெலிவைப் பார்த்து) இப்பசலை வந்து விட்டது.'

இதுவுமது.

1187. ''புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு.''

'முன்னொரு நாள் காதலரைத் தழுவிக் கிடந்த நான் என்னையுமறியாமல் சற்று விலகினேன். உடனே இப்பசப்பு, கையால் அள்ளிக் கொள்வது போல் வந்து நிறைந்துவிட்டது.'

பிரிவாற்றாமையை எவ்வளவு மிகைபடக் கூறவியலுமோ அவ்வளவு கூறப்படுகின்றது.

இம்மூன்று (1185, 1186, 1187) குறட்பாக்களிலும் கூறப்படும் பேரின்பக் கருத்து பின்வருமாறு:

காதலனின் மீதுள்ள ஏக்கம் மிகமிகப் பெருகுமானால், அவன் காதலியை விட்டுச் செல்வது வெகு தொலைவாயினும், சில சில அடித்தொலைவாயினும், வெகுகாலமாயினும், சில நாழிகையேயாயினும் இப்பசலை நோய் தோன்றக்கூடும். அங்ஙனமே, இறைவன் ஆன்மாவுக்குத் தன் காதலைச் சற்றும் வெளிப்படுத்தாத முறையில் வெகு தொலைவு சென்று விட்டது போல் நடித்தாலும், ஒரு சிறிதே வெளிப்படுத்துவது போல் சிறிது தொலைவே சென்றது போல் நடித்தாலும் ஆன்மாவுக்கு ஏக்கமாகிய பசலை நோய் வருவதுண்டு. சிறப்பாக இறைவன் மீது காதல் தலை தூக்கி நிற்குமானால் ஆன்மாவுக்குப் பசலை நோயால் (ஒரு விதமான நோய், ஏக்கப் பெருக்கம்) உடலும் ஒருவித வேதனை கொள்வதாகும்.

1188. ''பசந்தாள் இவளென்ப தல்லால் இவளைத்
துறந்தார் அவர்என்பார் இல்.''

'பிரிவாற்றாமை மிகுதியால் பசலையுற்றாள் என்று காதலியைத்தான் பழி கூறுவாரேயன்றி, தன் காதலியைப் பிரிந்து போயினரே எனக் காதலனைக் குறை கூறுவார் ஒருவருமில்லை.'

1189. ''பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலையர் ஆவ ரெனின்.''

'என்னைப் பிரிந்து சென்றவர் நல்லவர் என்றால், என் உடம்பு எவ்வாறேனும் பசப்பதாக.' அவர் நல்லவர் அல்லர் என்றவாறு. முந்திய குறளில் 'அவரைக் குறை கூறுவார்

ஒருவருமில்லை' என்று கூறப்பட்டது. இக்குறளில் காதலியே குறை கூறுகின்றாள்.

இதுவுமது.

இறைவனை நினைத்து ஏங்கித் தவிப்பது ஆன்மாவேயன்றி, இறைவன் அல்லன். இன்னும் அடைந்திராத பேரின்பத்தை நினைத்து ஏங்கவேண்டியது ஆன்மாவேயன்றி, பேரின்பத்தின் உறைவிடமும் ஊற்றும் ஆகிய இறைவன் அல்லன். மேலும், இறைவன் ஆன்மாவைக் கைவிட்டார் என்ற பேச்சுக்கே இடமில்லை. 'இவளைத் துறந்தார் அவர் என்பார் இல்'.

1190. ''பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றா ரெனின்.''

'அன்று குறை நயப்பித்துக் கூடியவர் இன்று அருளாமையை, நட்டார் தூற்றாராயின், பசலையுற்றாள் என்னும் பேர் பெறுதல் எனக்கு நல்லதே.'

ஆன்மா இறைவனை அடைய வேண்டுமென்னும் ஆர்வத்தைவிட, இறைவன் ஆன்மாவை அடைந்து அதைப் பேரின்பத்தில் ஆழ்த்தவேண்டுமென்று அதிக ஆர்வத்தைக் கொண்டுள்ளான் என்பது உண்மையிலும் உண்மை. இதைச் சிற்றின்பத்தின் சார்பாகவே வாழும் மனிதன் எளிதில் உணர இயலாதவனாய்க் கிடக்கிறான். எனினும், உண்மை அஃதே.

ஆதலின், இறைவனது அருளின்மையைப்பற்றி யாரும் குறை கூறுவதற்கிடமில்லை. ஆன்மா, பசலை நோயுற்றுக் கிடப்பது, அதன் குறையுற்ற நிலையேயன்றி வேறு அன்று.

## பசப்புறு பருவரல்
### சுருக்கம்

பிரிவாற்றாமையால் உடலில் ஏற்படக்கூடிய மாற்றம், அதனால் விளையும் வருத்தப்பெருக்கம்.

1181. ''நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற.''

'என்னை விரும்பி ஏற்றவர்க்கு (நயந்தவர்க்கு), அன்பால் விளையும் இன்பம் நல்காமையை ஏற்றுக்கொண்டேன். (நேர்ந்தேன்). அதனால், இப்போது ஏற்பட்டுள்ள இவ் வேதனையை (பசந்த என் பண்பு) யாரிடம் சொல்வது?

தொடக்கத்தில் இறைவனின் பேரின்பக்காதல் உடனே முழுமையாகப் பெறக்கூடியதன்று என அறிந்தும் ஏற்றுக் கொண்டேன். அம்முழுமையை உடனே பெறாமையால், வரும் வேதனையை யாருக்குச் சொல்வேன்? 'தன் நோய்க்குத் தானே மருந்து' என உள்ள அவனிடமே கூறுவேன்' என்றவாறு.

1182. "அவர்தந்தார் என்னும் தகையால் இவர்தந்தென்
மேனிமேல் ஊரும் பசப்பு."

'மேனிப் பசப்பாகிய மனவேதனை அவரே (இறைவனே) தந்தார் என்னும் மேன்மையுடையதால், என்னை விட்டு எளிதில் நீங்காது (மேனிமேலூரும் பசப்பு).'

பேரின்பக் காதலில் ஆன்மா மிக மிக ஆழ்ந்து பெரும் சிறப் படைவதற்கு இப்பசப்பென்னும் மனவேதனை (சில சமயங் களில் உடல் வேதனையும் கூட) தேவைப்படுகிறது. இதை இறைவனே வருவிக்கலாம்; அல்லது ஆன்மா வேறு பல காரணங்களால் துன்புற அனுமதிக்கலாம். எதுவாயினும், அஃது இறைவனின் அருள் திட்டம்; அவன் செயலே என ஏற்பதே பேரின்பத்துக்கு உண்மையான வழி.

1183. "சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையும் தந்து."

"ஏக்க மிகுதியால் ஏற்படக்கூடிய உடல்மெலிவு வருத்தமும் (சாயலும்) 'பக்திப்பைத்தியம்' எனப் பிறர் ஏசும் பேச்சினால் விளையக்கூடிய மனவேதனையும் (நாணமும்) என் காதலர் (இறைவன்) என்னைப் பிரிந்தபோது (அஃதாவது பேரின்பக் காதல் இனிமையை எடுத்துவிட்டபோது) தம்மோடு கொண்டு சென்றார் (அவர் கொண்டார்). அஃதாவது அந்நிலையைத்

தாங்க அருள் புரிந்தார். ஆனால், அதே சமயத்தில் 'கைம்மாறாக' எனக்கு மேலும் காதல் நோயும் உடல் மெலிவும் அதிகரிக்கச் செய்தார்.'' (நோயும் பசலையும் தந்து).

1184. ''உள்ளுவன் மன்யான் உரைப்ப தவர்திறமால்
கள்ளம் பிறவோ பசப்பு.''

எந்நேரமும் யான் இறைவனையே நேசிக்கின்றேன் (உள்ளுவன்); அவனது வியத்தகு செயல்களையே உரைக்கின்றேன் (உரைப்பது அவர்திறம்). ஆகவே, இந்த உடல் மெலிவு, வேதனை எல்லாம் (பசப்பு) எங்ஙனம் (கள்ளம்) வந்தது? இறைவனைத் தியானிக்கத் தியானிக்க, அவனது அருஞ்செயல்களை (சிறப்பாக ஐந்தவித்தான் ஆற்றிய மீட்புச் செயலை) (வாய்மையால்) உரைக்க உரைக்க மனம் ஆறுதல் பெறவேண்டியிருக்க, ஏன் வேதனையுறுகின்றது? (தன்னையு மறியாமல் நிகழ்வதால் 'கள்ளம்' எனப்படுகிறது).

1185. ''உவக்காணெம் காதலர் செல்வார் இவக்காணென்
மேனி பசப்பூர் வது.''

'என் காதலர் (இறைவன்) என்னைப் பிரிந்தாரோ இல்லையோ (உவக்காண் எம் காதலர் செல்வார்) இவ் உடல் மெலிவு வருத்தம் தோன்றிவிட்டது' (இவக்காண் என் மேனி பசப்பூர்வது). மேற்கூறியதே மேலும் வலியுறுத்தப்படுகிறது. இறையன்பைச் சுவைப்பது நீங்குவதற்கும் துன்பம் தோன்றுவதற்கும் இடையே உள்ள தொடர்பு உரைக்கப்படுகிறது.

1186. ''விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.''

'விளக்கின் ஒளி குறையக்குறைய (அற்றம்)அதைப் பார்த்து இருள் வந்து சூழ்வதுபோல், இறைவனது அருள்ஒளி மங்க மங்க (அஃதாவது, மங்குவது போலக் காணப்பட) அவனது (கொண்கன்) அன்பு குறைவது போலக் காணப்படுவதால் வேதனை (பசப்பு) மிகும்.'

ஆன்மா, இறைவனது அருளன்பைத் தன் குற்றத்தால் மட்டுமே குறையச்செய்யவோ நீங்கச் செய்யவோ கூடும்.

அங்ஙனமின்றிக் குறைவது போல் காணப்படுவது காதல் பெருகு வதற்கு இறைவன் வகுத்த வழியாகும். (மேலே, போல என்றது இதனால்தான்). இறைவன் ஆன்மாவை விட்டுப் பிரிந்துவிட்டது போலத் தோன்றும்; ஆனால், அது வெறும் தோற்றமே. அன்பைப் பெருக்கவே அங்ஙனம் நிகழ்வது.

1187. ''புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு.''

முன்பு ஒருமுறை காதலரைத் தழுவிக் (புல்லி) கிடந்த நிலையில் என்னையுமறியாமல் சிறிது ஒருபக்கமாக (புடை) விலகினேன்; அவ்வளவுதான்; உடனே பசப்பு என்னும் வேதனை என்னை அப்படியே அள்ளிக்கொண்டது— அஃதாவது, அத்துணை வேதனை கொண்டேன்; இன்று தழுவு வதற்கே வழியின்றிப் பிரிந்து நிற்கையில் என் வேதனைக்கு அளவெங்கே இருக்கும்? இறைவனது காதல் அன்பைச் சுவைத்தபின் சிறிது பிரிவு நேர்ந்தாலும் (அதன் சுவை குறைந் தாலும்) தாங்கவியலாத என் உள்ளம் இப்போது என்னை விட்டுப்போய்விட்டதுபோல் உள்ள நிலையில் என்ன பாடுபடும்? இறைவனோடு உள்ளப்புணர்ச்சியின் இன்பம் கூறும் நேரத்தில் பிரிவின் துன்பம் ஓரளவு மிகைப்படுத்திக் கூறப்படுகிறது.

1188. ''பசந்தாள் இவளென்ப தல்லால் இவளைத்
துறந்தார் அவரென்பார் இல்.''

'நான் (என் ஆன்மா) அளவுமீறித் துன்புறுவதைப் பார்த்து என்னை இகழ்கின்றனரேயன்றி, என்னைப்பிரிந்த காதலரைக் (இறைவனை) குறை கூறுவார் இல்லை.'

இஃது ஏக்கத்தால் எழும் ஓலம்!

1189. ''பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலையர் ஆவர் எனின்.''

'என்னைப் பிரிந்து சென்றவர் (இறைவன்) நல்லவர்தான், (நான்தான் அவர் காதலுக்கு முற்றும் உரியவள் அல்லேன்) என் றால் எவ்வேதனையாகிலும் என்னை வாட்டுக.' (இறைவனையே

நொந்து கொள்ளும் இந்நிலையும் ஏக்கத்தின் விளைவாக எழும் ஓலம், மிகைபடக்கூறியது).

1190. ''பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றார் எனின்.''

'நயமாக என்னைப் பிரிந்த என் காதலரின் (இறைவனின்) அருளன்பில்லாத் தன்மையைப் பிறரும் தூற்றாமலிருப்பார்களானால், நான்படும் (பசப்பு) வேதனை நன்றே.' இறைவனைத் தான் நொந்து கொள்வதோடு பிறரும் நொந்துகொள்ள வேண்டும் என விழைகிறது ஆன்மா. (இது காதற்பிரிவு ஓலக் குரலின் சிகரம் என்க).

# 120. தனிப்படர் மிகுதி

இறைவனுக்குத் தன்மீது எக்கவலையும் இல்லை எனவும், தனக்கு மட்டும் (தனிப்படர்) அவன் மீது காதல் மிகுதி உண்டு எனவும் ஆன்மா எண்ணி வருந்துதல். (தனியாகிய படர்மிகுதி - தனியாகிய வருத்த மிகுதி).

1191. ''தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி.''

தம்மால் காதலிக்கப்படும் தலைவரால் தம்மைக் காதலிக்கப் பெற்ற மகளிரே, காம நுகர்ச்சி என்னும் விதையில்லாத கனி போன்ற முழு இன்பத்தை அடைவர். இருவருக்கும் இந்த ஏக்கம் இருக்க வேண்டும். ஒருவருக்கு மட்டும் இருந்தால், அக்காழில் கனியைப் பெற இயலாது.

இறைவன் மீது ஆன்மாவுக்கு ஏற்படக்கூடிய ஏக்கம் எத்துணை பெருகக் கூடும் எனின், ''இவ்வளவு ஏங்கி நின்றாலும் அவன் என் மீது கவலையற்றவன் போலிருக்கிறானே! அவனுக்கு என்மீது உண்மையாகவே அன்பிருந்தால், அதனை எனக்கு உணர்த்த இயலாதா? எல்லாம் வல்லவனாயிற்றே அவன்!'' என்று வருந்துதலால் பெருகக்கூடும். ஆனால் இறைவனோ, ''உனக்கு என் மீதுள்ள அன்பும் ஏக்கமும் இன்னும் குறைவுள்ளதாகவே காணப்படுகின்றது. பரம்பொருளாகிய என்மீது உனக்கிருக்க வேண்டிய அன்பும் ஏக்கமும் ஒரு விதத்தில் அளவிடவியலாததாயிருத்தல் வேண்டுமன்றோ? பரம்பொருளல்லாத வேறு எப்பொருளின் மீதும் நீ வைக்கக்கூடிய காதலைக் காட்டிலும் என்மீது வைக்கும் காதல் எவ்வளவோ அதிகமாய் - உயர்ந்ததாய் இருக்க வேண்டுமன்றோ?

ஆகவே, உன் காதலை இன்னும் அதிகமாக்குவேன். உன் உள்ளத்தில் ஏக்கத்தைப் பெருக்குவேன் ; எனக்கு உன் மீது கவலையில்லாதது போல் காட்டிக்கொள்வது என்மீது உனக்கு மேலும் கவலையையும் காதலையும் அதிகரிப்பதற்கே! ஆகவே,

வீண் சிந்தனைகளுக்கு இடம் தர வேண்டா. பெறுதற்கரிய பேரின்பமாதல் பற்றிக் 'காழில் கனி' * யெனப்படத் தக்க இறைவனின் காதலைப் பெறுவேனோ? என்று ஐயுறவேண்டா.

1192. "வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி."

தம்மை விரும்பும் மகளிர்க்குக் கணவர் காலத்தே வந்து காட்டும் அன்பு, தன்னையே நம்பி வாழ்பவர்க்கு வானம் தக்க காலத்தில் பெய்யும் மழை போன்றது.

இறைவனது அன்பென்னும் அருள் மாரியின்றித் தவிக்கும் ஆன்மாவின் மீது, அவன் அவ்வருள் மழையைப் பொழிவானோ இல்லையோ என அஞ்ச வேண்டா. நிச்சயமாகப் பொழிவான்; தவிக்க விட்டுவிட மாட்டான்.

1193. "வீழுநர் வீழப் படுவார்க்கு அமையுமே
வாழுநம் என்னும் செருக்கு."

தாம் விரும்பும் கணவரால் விரும்பப்படும் மகளிர்க்குக் காதலர் பிரிந்து சென்றாராயினும், தன்னை நினைந்து விரைவில் வருவார், வந்தால் இன்புடன் வாழ்வோம் என்னும் தெம்பும் பெருமிதமும் நீங்குவதில்லை.

அங்ஙனமே இறைவனாகிய காதலரை உள்ளன்புடன் நேசிக்கும் ஆன்மாவுக்கும் இங்ஙனமே நிகழும். தன்னை அவன் பிரிந்திருப்பதுபோல் காணப்படினும், உண்மையாகவே பிரிவதில்லை. விரைவில் தம் அன்பைக் காட்டி இன்பத்தில் மூழ்கச் செய்வார் என்னும் உறுதியான நம்பிக்கை இருந்தே தீரும்.

1194. "வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅர் எனின்."

உலகில் ஆண்களால் விரும்பப்படும் மகளிரும் தாம் விரும்பும் ஆண்மகனால் விரும்பப்படவில்லை எனின் துன்புறுவர். இறைவன் மீது பேரன்பும் ஏக்கமும் கொண்டொழுகும்

---

* தேவநேயன் உரை காண்க.

ஆன்மாவைப் பிறர் பெரிதும் மதிக்க நேரலாம். ''பிறர் மதித்துப் பயன் என்ன? நான் விரும்புவது அஃதன்று. என் காதலரின் மதிப்பு ஒன்றையே! அவர் என்னிடம் திரும்பி வந்தால், அதுவே அவர் என்னை மதிக்கிறார் என்பதற்கு அத்தாட்சி,'' என்று பெருமூச்சு விடுகிறது.

1195. ''நாம்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாம்காதல் கொள்ளாக் கடை.''

1196. ''ஒருதலையான் இன்னாது காமம்காப் போல
இருதலை யானும் இனிது.''

1197. ''பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றுஒழுகு வான்.''

''காதல் என்பது காதலர் இருவரிடையும் நிகழ வேண்டிய தொன்று. ஆகவே, ஆன்மாவாகிய நான் மட்டும் இறைவன் மீது காதல் கொண்டு ஏங்கிஏங்கித் தவித்து நிற்க, அவன் என் மீது எந்தக் கவலையும் இல்லாதவன் போல் உள்ளானே!'' என்று மேலும் தன் வருத்தப் பெருக்கத்தை உவமைகளால் தெரிவிக்கின்றது ஆன்மா.

1198. ''வீழ்வாரின் இன்சொல் பெறாஅது உலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில்.''

தம்மால் விரும்பப்படும் காதலரிடமிருந்து வரும் இனிமை மிகுந்த சொற்கள் நிறைந்த செய்திகூட பெறாமல், பிரிவையும் தாங்கிக்கொண்டு உயிர் வாழ்கின்ற மகளிர்போலக் கொடியவர் உலகில் இல்லை.

1199. ''நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்
டிசையு மினிய செவிக்கு.''

இதுவுமது.

1200. ''உறாஅர்க் குறுநோய் உரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு.''

உன்னோடு காதல் உறவு கொள்வதுபற்றி அதிகம் கவலையில்லாதவரிடம் உனது நோயைச் சொல்லிக் கொண்டிருக்கிறாயே; அதை விட்டுக் கடலைத் தூர்க்கப் பார்! (அஃதாவது, நீ செய்வது வீண்!)

"விரைவில் தாமே என்னிடம் வந்து சேர இயலவில்லையெனின், ஒரு தூதினையாவது அனுப்ப இயலவில்லையா? ஆறுதல் தரக்கூடிய செய்தியாவது அனுப்ப இயலவில்லையா?" என்று மனம் நொந்து வாடுகின்றாள் தலைமகள்.

இறைவனாகிய காதலனைப் பொறுத்த அளவில் இத்தகைய தூதினை - செய்தியை அனுப்பியேயுள்ளார். மேற்சொன்னது போல் படைப்புப் பொருள்கள் எல்லாமே இறைவனின் அன்பை அறிவிக்கும் தூதுவர்கள். (சங்கீதம், 8 -ல் காண்க).

ஆனால், அவற்றை எல்லாம் விட மேலான தூதுவரை இறைவன் உலகுக்கு அனுப்பியுள்ளார். ஆன்மாக்கள் மீது தமக்குள்ள அளவற்ற அன்பையும் இரக்கத்தையும் அறிவிக்க வேண்டுமென்றே தம் மகனை, ஐந்தவித்தானாக உலகுக்கு அனுப்பினார். (அரு. 3; 15, 17). இவற்றையெல்லாம் உணராது ஆன்மா, இறைவனாகிய காதலன் தன்னிடம் தூது விடுக்க வேண்டுமென நினைப்பதில் பொருள் இல்லை. ஈண்டு இறைவனாகிய காதலனை அன்பில்லாதவனாகக் கூறியிருப்பது ஆன்மாவின் எளிய நிலை - அறியாமைபற்றிய உயர்வு நவிற்சியேயாகும்!

## தனிப்படர் மிகுதி

### சுருக்கம்

காதலரைப் பிரிந்து தனியாய்க் கிடப்பதால் துன்பமிகுதி, தனிமையின் கொடுமை.

1191. "தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி."

இறைவனால் அன்பு செய்யப்பெற்ற ஆன்மாக்களே பேரின்பமென்னும் விதையில்லாக் கனியைப் பெற்றவராவர்.

பேரின்பம் என்பது விதையில்லாக்கனி. அஃதாவது, யாராலும் விதைக்கப்பெற்று காய்க்கப்பெறும் கனியன்று. அதற்கு முழுமுதல் காரணம் இறைவர் ஒருவரே. மனிதனின் எம்முயற்சியு மன்று. இறைவனே முன்வந்து ஆன்மாக்கள்பால் அன்பு செலுத்தினாலன்றி, ஆன்மா நன்றியோடு ஏற்றுக்கொள்வது தவிர, செய்யக்கூடியது வேறொன்றுமில்லை. (இங்ஙனம் ஏற்பதே கிறித்தவத்தில் விசுவாசம் எனப்படும்.)

1192. ''வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி.''

தம்மை ஆர்வத்தோடு விரும்பும் ஆன்மாக்களுக்கு இறைவன் தாம் குறித்துள்ள காலத்தில் வந்து அன்பு செய்வான். இது வானம் நோக்கி வாழும் மக்களுக்கு வானம் பொழியும் மழை போலாகும்.

1193. ''வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுநம் என்னும் செருக்கு.''

தாம் இவ்வளவு ஆர்வத்தோடு விரும்பும் ஆன்மாக்களுக்கு இறைவனாகிய காதலர் பிரிந்து சென்றாராயினும் 'நம்மை மறவார்; விரைவில் வருவார்; இன்பம் பெறுவோம்' என்னும் பெருமிதம் உளதாகும். (இதைக் கிறித்தவத்தில் 'நம்பிக்கை' என்பர்).

1194. ''வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅர் எனின்.''

இம்மை (சிற்றின்ப) வழக்கிலும் தம்மால் விரும்பப் படுபவர், தம்மை விரும்பவில்லையெனின் அது மிகப்பெரும் இழுக்காகும். இது மறுமைப் பேரின்ப வழக்கில் பன்முறை இழுக்காகும். இறைவனால் (தலைவனால்) விரும்பப்படும் ஆன்மா (தலைமகள்), இறைவனை விரும்பவில்லையெனின், அதைவிடப் பேரிழுக்கு இருத்தல் கூடுமோ! ஆன்மா இறைவனை விரும்பாததைவிடக் கேடு உண்டோ (இறை வனுக்கு அன்பு செய்யும் பெருங்கடமை கூறப்படுகிறது).

1195. "நாம்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாம்காதல் கொள்ளாக் கடை."

நம்மால் அன்பு செய்யப்பெற்ற இறைவன் நமக்கு அன்பு செய்யவில்லையேல், நாம் செய்வதொன்றுமில்லை. இறைவன் நம்மீது அன்பு செலுத்தவேண்டுமென்றில்லை. அங்ஙனம் செய்வது அவன் இரக்கமே - அன்பின் பெருக்கே. பிறரோடு பகிர்ந்து கொள்ளும் தன்மையது அன்பு. எல்லாம் தனக்கென்றே வைத்துக்கொள்வது அன்பின் இயல்பன்று. (என்பும் உரியர் பிறர்க்கு - என்பது அதன் இலக்கணம்).

1196. "ஒருதலையான் இன்னாது காமங்காப் போல
இருதலை யானும் இனிது."

அன்பு ஒருதலையாக மட்டும் இருப்பின் இன்பமாகாது. இருதலையாக, அஃதாவது இறைவன் ஆன்மாவுக்கு அன்பு செய்வதும், ஆன்மா இறைவனுக்கு அன்பு செய்வதும் தேவை. இறைவனது அன்பை ஆன்மா புறக்கணித்தால் தீமையிலும் தீமை. ஆன்மா அவனருளாலன்றி அவனுக்கு அன்பு செய்தல் இயலவே இயலாது.

1197. "பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றொழுகு வான்."

இறைவன் ஆன்மாவுக்குக் காட்டும் அன்பு, இறைவனது இரக்கப்பெருக்கம், அருள், அன்பு இவற்றின் பயன். (இப்பொருளில் இறைவனை தெய்வீகக் 'காமன்' என்பது பொருந்தும்). ஆன்மாவோ இறைவன் காட்டும் அன்பை ஏற்பது மட்டுமே செய்யலாம். இறைவனது அன்பைப் பெறுமள வுக்கு ஆன்மா ஈர்க்கப்படுகின்றது. இம்மைக்காதலில் ஆண் காமன்) ஈர்க்கப்படுகின்றான். மறுமைக்காதல் முறையில் ஆன்மாவாகிய பெண் ஈர்க்கப்படுகின்றாள்! இங்ஙனம் ஈர்க் கப்பட இடம் கொடாவிட்டால் துன்பமிகுதியும் பசப்பு எனும் உடல்மெலிவு வருத்தமுமே ஆன்மா காணும்.

1198. "வீழ்வாரின் இன்சொல் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணார் இல்."

தம்மால் ஈர்க்கப்படும் தெய்வீகக்காதலரது (இறைவன்) வாயினின்று வரும் இனிய சொல்லை (அன்பை) ஏற்காமல், மனத்தைக் கடினப்படுத்திக்கொள்ளும் மனிதனைப்போல் வன்நெஞ்சன் உலகில் இல்லை! அந்தோ! இத்தகைய வன்னெஞ்சர் உண்டே!

1199. ''நசை இயார் நல்கார் எனினும் அவர்மாட்
டிசையும் இனிய செவிக்கு.''

நம்மால் பெரிதும் விரும்பப்பட்ட தெய்வக்காதலர் நமக்கு அருள்புரிந்து அன்பைப்பொழியவில்லை எனினும், அவர் பேசும் ஒரு சொல்லும் எத்துணை இன்பம் தருகின்றது; இத்துணை இனிய சொல் பேசுவது நம்மைத் தம்பால் ஈர்த்து அருளன்பு பொழியும் நோக்கத்தோடு என்றறிக.

1200. ''உறாஅர்க் குறுநோய் உரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு.''

உன்னோடு அன்புறவு இல்லாதவர்போல் உள்ள இறைவனிடம் உன் உள்ளத்தின் நோயினைக் கூறும் நெஞ்சே, நீ வாழ்க! அங்ஙனம் செய்வதால் பயனில்லை. கடல்போன்ற உன் துயரைத் தூர்க்க முயல்வாய். முறையிடுவதற்கு மாறாக இறைஞ்சுவாயானால் பயனடைவாய்.

# 121. நினைந்தவர் புலம்பல்

தொடக்கத்தில் இறைவன் தன்மீது காட்டிய காதலின் இன்பத்தைச் சுவைத்திருந்த ஆன்மா, இப்போது அந்த இனிமையை அடைய இயலாமல் தவிப்பதை நினைத்துத் தனித்து விடப்பட்டதாக எண்ணி வருந்துதல்.

1201. "உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினும் காமம் இனிது."

பிரிவின்போதும் முன்பு நுகர்ந்த இன்பத்தை நினைத் தாலே இன்பம் மிகுகின்றது. கள்ளோ உண்ணும்போது மட்டுமே இன்பம் தரும்.

ஆன்மாக்களைத் தன்பால் ஈர்த்துக் கொள்ளுமாறு இறைவன் செய்யும் சூழ்ச்சியாவது, தன் அன்பின் இனிமையை ஓரளவு ஆன்மாவுக்குத் தொடக்கத்திலேயே உணர்த்துதலாம். அறியவியலாததொரு பொருளை யாரும் தேடார். ஒரு பொருளின் இனிமை இத்துணை பெரிதென்று அறியப்படா விடின், யாரும் அதை நினைத்து ஏங்கமாட்டார்கள்.

எளிதில் அறியப்படாத - எளிதில் நுகரப்படாத பொருள் களுள் இறைவன் முதலிடம் பெறுகிறான். அறியப்படாத-நுகரப்படவியலாத பொருளின் இனிமையை யாரேனும் கொணர்ந்து தந்தால் அன்றி அஃது எட்டாததாகவே இருந்து விடும்.

இறைவனாகிய பரம்பொருளை வேறு யாரேனும் கொணர இயலாது. அவனே தன்னைச் சுவைக்குமாறு வெளிப்படுத்தி யருள வேண்டும். இதைத்தான் இறைவன் செய்கிறான். ஓரளவு தன்னைச் சுவைத்துப் பார்க்குமாறு ஆன்மாவுக்கு அருள் புரிகின்றான். அதன் பின்னர், ஆன்மா அச்சுவையை நினைத்துக்கொண்டு, அவனை எப்படியாகிலும் முழுதுறச் சுவைத்திடவேண்டும் என்று முனைந்து நிற்றல் வேண்டும்.

தொடக்கத்தில் காட்டிய ருசி ஓரளவேயாயினும், அதன் இனிமையை நினைக்குந்தோறும் ஆர்வமும் முனைப்பும் பெருகியே தீரும். உருசி கண்ட பூனையைப்போல், ஆன்மா இறைவனை நோக்கித் தாவ முயலும். முன்பு, தான் சுவைத்த அந்த இனிமைக்கு ஈடாக உலகில் எதுவுமே இல்லை என்று ஆன்மா நினைத்துக் கொள்ளும்.

1202. "எனைத்தொன்று இனிதேகாண் காமம்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில்."

தம்மைப் பிரிந்த காதலரை, பிரிந்திருக்கும் நேரத்திலுங் கூட, நினைத்துக்கொண்டாலே போதும்; இன்பம் உண்டாகும்.

அங்ஙனமே இறைவனாகிய காதலர் ஆன்மாவைப் பிரிந் திருப்பதுபோலக் காணப்படினும், அவரை அன்போடு நினைத்துக்கொண்டாலே போதும்; அந்த நினைவொன்றே வாழ்க்கையில் ஏற்படக்கூடிய துன்பம் எல்லாம் ஒன்றுமில்லாமல் போய்விடச் செய்யும்.

1203. "நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும்."

தொலைவில் உள்ள சுற்றத்தார் நினைத்தால், தும்மல் வரும் என்னும் வழக்குப்பற்றிக் கூறப்பட்டது.

தும்மல் வந்து உடனே அடங்கிவிடும். அதுபோல் தொலைவிலுள்ள என் காதலர் என்னை ஒரு நொடிப்பொழுது நினைத்துக்கொண்டார் போலும். ஒரு நொடிப்பொழுது தானே நினைத்துக்கொண்டார். அதற்குப் பின் என்னை நினைக்கவில்லையே என்று வருந்துகிறாள்.

இறைவனோ ஆன்மாவை எந்நேரமும் நினைத்துக் கொண்டிருக்கிறான்! அவன் நினையாவிடில் நாம் உயிர் வாழ்வதே இயலாதன்றோ!

1204. "யாமும் உளேம்கொல் அவர்நெஞ்சத்
தெம்நெஞ்சத்
தோஒ உளரே யவர்."

"என் நெஞ்சில் என் காதலர் எந்நேரமும் உள்ளார். அவ்வாறே அவர் நெஞ்சிலும் யான் உள்ளேனோ? இல்லையோ?

காதல் மிகுதியால் ஏற்படும் ஏக்கமே இது. என் நெஞ்சில் எந்நேரமும் அவர் இருக்குமாறு இறைவனை யான் நினையாவிடினும், அவர் நெஞ்சில் யான் எந்நேரமும் உள்ளேன் என்பதில் ஐயமில்லை.

1205. "தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார்
நாணார்கொல்
எந்நெஞ்சத் தோவா வரல்."

"தம் நெஞ்சில் யான் சேராமல் காத்துக்கொண்ட என் காதலர் (அஃதாவது, பிரிவினால் என்னிடம் வந்து சேராமல் பார்த்துக்கொண்டவர்) என் நெஞ்சில் இடைவிடாமல் வந்து குடிகொள்ள நாணமாட்டாரா?"

இறைவனது உள்ளத்தில் ஆன்மா அன்போடு குடிகொள்ள ஆசித்தாலும், அந்த அன்புறவை விரும்பாதவர் போல் அவர் காணப்படுகின்றார். அஃதாவது, ஆன்மாவின் விருப்பம்போல், அன்புறவை நிரம்பச் சுவைக்குமாறு விடுவதில்லை. ஓரளவு அதை விரும்பாதவர்போலக் காட்டிக்கொள்வதுண்டு; அன்புறவில் ஆன்மாவை உறுதிப்படுத்த!

ஒருவேளை இம்மைக் காதலர் இத்தகைய சூழ்நிலையில் பிரிந்துள்ள நிலையை விடுத்துக் காதலியிடம் திரும்பி வந்து மீண்டும் பிரியா வண்ணம் இடைவிடாமல் நெஞ்சில் குடிகொள்ள விரும்பலாம். அல்லது இடையில் வேறொருவர்பால் ஈர்க்கப் பட்டுத் திரும்பி வராமலும் போகலாம். ஆனால், இறைவனைப் பொறுத்த மட்டில் என்னையும் அறியாமல் என்னுள்ளத்தில் அவர் வந்துகொண்டே இருக்கிறார். அதனால், அவர் வருவதன் பயனாய் யானும் தன் நெஞ்சில் வருமாறு அருள் புரியாமல் இருக்கமாட்டார்.

1206. ''மற்றியான் என்னுளேன் மன்னோ அவரொடியான்
உற்றநாள் உள்ள உளேன்.''

''அவரோடு முன்பு புணர்ந்த நாள் இன்பத்தை நினைத்துக் கொண்டே இப்போது யான் உயிர் வாழ்கின்றேன். அதுவு மில்லாவிடில் எப்படி உயிரோடிருப்பேனோ!''

தொடக்கத்தில் இறைவனோடு ஆன்மா நுகர்ந்த அன் புறவின் இனிமையை மீண்டும் மீண்டும் நினைத்துக்கொண்டே அவ்வன்புறவை வளர்த்துக்கொள்ள வேண்டும். அவரது நினைவு ஒன்றே என்னை (ஆன்மாவை) உயிரோடு வைத் திருக்கின்றது.

ஆன்மீக அருள் வாழ்வில் குறிப்பிட்ட ஒரு கட்டத்தில் ஆன் மாவுக்கு ஆறுதலும் மன உறுதியும் தருவது இத்தகைய நினைவு என்பது அனுபவத்தில் அறியக்கூடியது.

1207. ''மறப்பின் எவனாவன் மன்கொல் மறப்பறியேன்
உள்ளினும் உள்ளம் சுடும்.''

இதுவுமது.

1208. ''எனைத்து நினைப்பினும் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யும் சிறப்பு.''

''என் காதலரை நான் எவ்வளவு நினைத்தாலும் அவர் என் மீது சினங்கொள்ள மாட்டார். காதலர் என்றால் அந்த அளவுக்கு என்னை நினைந்து இன்புற வேண்டும்.''

இம்மைக் காதலரைப் பொறுத்த அளவில் இது வெகுவாய் மிகைபடக் கூறியதாகும். முதற்கண் காதலரை எந்த அளவுக்குக் காதலி நினைவில் கொண்டிருப்பாள் என்பது யாருக்குமே எளிதில் புலப்படுவதன்று. ஒருவர் நினைவு மற்றொருவர்க்கு எங்ஙனம் புலப்பட இயலும்? மேலும், காதலால் உந்தப்பட்டுக் காதலரை நினைத்து நினைத்து உருகுவதால், காதலர்க்கு எங்ஙனம் சினம் உண்டாகும்? ஆகவே, இது மிகைப்படக் கூறியதேயன்றி வேறன்று.

மறுமைக் காதலராகிய இறைவனைப் பொறுத்தமட்டில், ஆன்மா எந்த அளவுக்குத் தன்னை நினைத்து நினைத்து மனம் உருகுகின்றது என்பதை அவன் நன்கு அறிவான். நினைக்க நினைக்க இறைவன் மகிழ்ச்சி கொள்வானேயன்றி சினங் கொள்ள மாட்டான். தன்னை நினைக்க நினைக்கப் பயனடைவது, (அஃதாவது அன்பில் உறுதி பெறுவது) ஆன்மாவே என அறிவதால் ஏற்படும் மகிழ்ச்சியே அது. ஆன்மா தன்னை அதிகமாக நினைத்தாலும், சிறிதே நினைத்தாலும், இறைவனாகிய காதலர் ஆன்மாக்களைக் குறித்து நினையாத நேரமேயில்லை எனத் தயக்கமின்றிக் கூறலாம். அவன் ஆன்மாவை நினைத்தாலன்றி அதற்கு எந்நலனும் விளையாதன்றோ! அவன் நினைத்தாலன்றி ஆன்மாவுக்கு அருள் கிடைக்குமாறில்லை; அருளின்றிப் பேரின்பக் காதலும் வளருமாறில்லை. ஆகவே, இறைவன் ஆன்மாக்களை எந்நேரமும் நினைத்து உருகுகின்றான்.

சிறப்பாக ஆன்மாக்கள் தன் அன்புறவைப் புறக்கணித்துத் தீவினை செய்யும்போது இறைவனுடைய அன்புருவான உள்ளம் வருந்தாமல் எங்ஙனம் இருக்கும்? இஃது எங்ஙனம் என்று நமக்குப் புலப்படாது. இன்பப் பெருக்காகும் இறைவனுக்கு வருத்தம் எங்ஙனம் உண்டாகும் என்று சிற்றறிவு படைத்த மனிதனுக்கு எங்ஙனம் புரியும்? எனினும், இஃது உண்மை. ஆனால், இந்த வருத்தம் மனிதப் பிறவிகளாகிய நாம் படும் வருத்தம் போலன்று. தான் தர விரும்பும் பேரின்பத்தை ஏற்றுக்கொள்ள மறுக்கும் ஆன்மாக்களின் அறியாமை, நன்றியின்மை, அதனால் அவற்றிற்கு ஏற்படப்போகும் இழப்பு இவற்றையெல்லாம் நினைப்பதால் ஏற்படக்கூடிய ஒருவித உள்ள நெகிழ்ச்சியேயாம். இக்கருத்து ஐந்தவித்தானைக் குறித்த முழு உண்மையறிந்தவர்க்கு ஓரளவு அதிகமாகப் புலப்படும்.

அவன் (கிறித்து) மனித இனத்தைத் தன்னோடு, தலையுடன் உறுப்புகள் இணைந்துள்ளதுபோல் இணைத்துக் கொண்டுள்ளான். உறுப்புகள் வருந்தும்போது தலை வருந்தாமல் இருப்பதில்லை. ஏறக்குறைய அதைப்போலவே மனிதராகிய உறுப்புகள் இறைவனது பேரின்பத்தில் பங்கு பெறாமல் வருந்துகையில் தலையாகிய கிறித்து - இறைவன் வருந்தாமல் இருக்க இயலாது. இது முற்றும் நம் அறிவைக் கடந்ததொன்று எனினும், முரண்பட்ட கருத்தன்று என்று கூறுகிறது கிறித்தவம்.

1209. "விளியுமென் இன்னுயிர் வேறல்லம் என்பார்
அளியின்மை ஆற்ற நினைந்து."

"நாம் இருவரும் ஒன்று, என முன்பு உறுதி கூறியவர் இப்போது என்னை முற்றிலும் மறந்துவிட்டார் போலும். இத் துணை அன்பின்மையை நினைத்தே என் வாழ்நாள் கழிய வேண்டுமோ!"

இறைவனோடு என் ஆன்மா இணைய வேண்டும் எனப் பன்முறை நான் நினைத்தேன். இன்றும் நினைத்துக்கொண் டிருக்கின்றேன். ஆனால், அவன் என்னை மறந்துவிட்டானோ என்று ஏங்கிய வண்ணமாக என். வாழ்நாள் கழிய வேண்டுமோ?

நினைத்தவுடன் அடையக் கூடியதன்று பேரின்பக்காதல் உறவு. வாழ்நாள் முழுதுமே ஏங்கிஏங்கி, நினைத்து நினைத்துப் பெற வேண்டியதொன்று.

1210. "விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி."

"என் நெஞ்சில் அன்று குடிகொண்டவர் என்னை விட்டுப் போய்விட்டார். நீயாகிலும் எனக்குத் துணை செய்வாயா?"

பெண்ணின் அழகை வருணிக்க முழு மதியை உவமையாகப் பயன்படுத்துவது சாதாரணம். ஆகவே, இதன் பொருள் : 'நிலவே! என் காதலர் உன்னைக் காணும்போது என்னை நினைத்துக் கொள்ளலாம். ஆனால், நீ மறைந்துவிட்டால், என்னை மறந்துவிடலாம். ஆதலால், நீ மறையாதிரு என்ற வாறு. இறைவனின் எழில், படைப்புப் பொருள்கள் எல்லா வற்றிலுமே விளங்குவதுபற்றி முன்பு கூறப்பட்டது. இவற்றின் துணைகொண்டு இறைவனைக் காண ஆன்மா முயல்வதுபற்றி ஈண்டுக் குறிப்பிடப்படலாம்.

# நினைந்தவர் புலம்பல்
## சுருக்கம்

தொடக்கத்தில் இறைவனும் ஆன்மாவும் துய்த்த உள்ளப் புணர்ச்சியின் இன்பத்தை எண்ணித் தனிமையில் வருந்துதலாம்.

1201. "உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினும் காமம் இனிது."

அத்தகைய இன்பத்தைப் பிரிவின்போது நினைத்தாலே போதும் மிகுந்த மகிழ்ச்சியுண்டாகிறது. உண்டால்தான் மது மகிழ்ச்சி தரும். மதுவை நினைப்பதால் மகிழ்ச்சி உண்டாவதில்லை. ஆகவே, இப்பேரின்பக் காதல் மதுவைவிட, அஃதாவது, எத்தகைய சிற்றின்பத்தையும்விட மேலானது.

1202. "எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில்."

"பேரின்பக்காதலால் எவ்வகையிலும் இன்பமே நிகழும். இறைவனாகிய காதலரைப் பிரிவின்போது நினைத்தாலும் இன்பமே. அஃதாவது, ஆன்மாவைப் பிரிந்து நிற்பதுபோலத் தோன்றினும், அவனை உள்ளத்தால் நினைத்தால் இன்பமே."

1203. "நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும்."

தும்மல் சில சமயங்களில் உண்டாவதுபோல் தோன்றும். ஆனால், உடனே அடங்கிவிடுவதுண்டு. அதுபோல் என் காதலர் என்னை நினைப்பதுபோல் நினைத்து உடனே மறந்து விடுவது போல் காணப்படுகிறார். பேரின்பக்காதல் முறையில் இது சிறப்பாக நிகழ்வதுண்டு. இறைவன் ஆன்மாவை நினைவில் கொள்வது அவரது அன்பின் பெருக்கால். சில சமயங்களில் இஃது உணரப்படுகிறது. ஆனால், வெகுகாலம் நீடிப்பதில்லை. இன்பம் காட்டிச் சிறிது சிறிதாக ஆன்மாவில் அன்பு பெருகத் துன்பநிலையைக் கொணரும் ஐந்தவித்தானின் திட்டம் இது.

1204. ''யாமும் உளேம்கொல் அவர்நெஞ்சத்
தெம்நெஞ்சத்
தோஒ உளரே அவர்.''

தன் பேரின்பக் காதலரையே எண்ணி உருகும் ஆன்ம நிலை இது. ''யான் எந்நேரமும் அவரை நினைத்தவண்ணம் வாழ்கிறேன். அவ்வாறே அவரும் என்னை நினைக்கின்றாரா? துன்பம் வரும்போது என்னை அவர்தம் நெஞ்சில் கொண்டிருப்பதுபோல் தோன்றவில்லை.''

1205. ''தம்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார்
நாணார்கொல்
எம்நெஞ்சத் தோவா வரல்.''

''தம் நெஞ்சில் யான் சேராமல் தடுத்த என் காதலர் என் நெஞ்சில் எங்ஙனம் வந்து சேர்வார்?'' (நெஞ்சில் சேர்தல்-அன்பு செலுத்தல்)-தன்மீது அன்பு காட்டாத நிலையை, நெஞ்சில் சேராமல் தடுத்தது என்றதும் 'நாணார்கொல் எம்நெஞ்சத் தோவா வரல்' என்றதும் மிகைபடக் கூறுதலின் அன்பினாலுண்டான ஓலக் குரலின் சிகரம்போல் உள்ளது!

1206. ''மற்றியான் என்னுளேன் மன்னோ
அவரொடியான்
உற்றநாள் உள்ள உளேன்.''

''தொடக்க நிலையில் இறைவனோடு உள்ளத்தில் புணர்ந்த நாளில் அடைந்த இன்பத்தை எண்ணிக்கொண்டே இருப்பதால்தான் உயிர் பிரியாமலிருக்கின்றது. வேறெவ்விதத்திலும் யான் வாழ்வதற்கில்லை.'' இதுவும் இறையன்புபற்றி மிகைபடக் கூறியது.

1207. ''மறப்பின் எவனாவன் மன்கொல்
மறப்பறியேன்
உள்ளினும் உள்ளம் சுடும்.''

இதுவுமது. ''அன்று சுவைத்த பேரின்பக்காதலை மறப்பதற்கில்லை. ஆகவே, இன்று இங்ஙனம் இறைவன் பிரிந்து நிற்பதுபோல் உள்ளதால், முன்னாள் இன்பத்தை மறப்பேனாகில் எப்படி உயிர் வாழ்வேன்?''

1208. ''எனைத்து நினைப்பினும் காயார்
அனைத்தன்றோ
காதலர் செய்யும் சிறப்பு.''

''என் காதலரின் பிரிவை நினைத்து எவ்வளவு வருந்தினாலும் அவர் என்மீது சினம் கொள்ளார். அதுவும் அவர் என்மீது கொண்டுள்ள அன்பின் அத்தாட்சியேயன்றோ?''

1209. ''விளியுமென் இன்னுயிர் வேறல்லம் என்பார்
அளியின்மை யாற்ற நினைந்து.''

தொடக்கத்தில் இறைவனும் ஆன்மாவும் உள்ளத்தால் இணையுங்கால், ''யாம் வேறல்லேம், ஒன்றானோம் என்ற பின்னர், என்பால் அன்பு காட்டாததுபோல் (அளியின்மை) உள்ளதை நினைத்து என் உயிர் கழிகின்றது'' (விளியும் என்னுயிர்).

1210. ''விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்
படாஅதி வாழி மதி.''

''முதலில் என் நெஞ்சை விட்டு நீங்காதிருந்தவர் இப்போது பிரிந்து சென்றுவிட்டார். நான் அவரை எப்படியும் (உள்ளத்தால்) காணவேண்டும். ஆகவே, வானிலுள்ள மதியே! உன்னை வாழ்த்துகிறேன். உன்னை அவர் கண்டால் என்னையும் காண விழைவார்! ஆகவே, மறையாதே.''

இம்மைக் காதலனுக்கு மதியின் எழில் காதலியின் அழகை நினைவூட்டக்கூடும். இறைவனைப் பொறுத்தமட்டில் இது பொருந்தாது; அவன் எதன் அழகையும் பார்த்து மயங்குபவன் அல்லன்.

பேரின்பக்காதலைப் பொறுத்தமட்டில், 'மதி' என்னும் சொல்லால் குறிக்கப்படும் உலகப் பொருள்களின் அழகு, அவற்றைப் படைத்தவனின் எழிலைக்காட்டும். அவற்றின் வாயிலாக ஆன்மா இறைவனைக் காண விழைவதே பொருத்தம்.

# 122. கனவு நிலை உரைத்தல்

காதலனின் நினைவு மிகுதியால் எந்நேரமும் அவனையே நினைத்து ஏங்குவதால் ஏற்படக் கூடிய மனநிலையைக் கனவுக்கு ஒப்பிடலாம். நனவு நேரத்தில் தீவிரமாகச் சிந்திப்பதே உறக்கத்திலும் கனவாக வரக்கூடுமாதலின், இத்தகைய கனவும் இத்தலைப்பின் கீழ் அடங்கலாம்.

இத்தகைய நிலைகள் இறைவனாகிய காதலனின் நினைவு மிகுதியால் ஆன்மாவுக்கு நிகழக்கூடுமாதலின், அஃது ஈண்டு உரைக்கப்படுகின்றது.

''படைப்புப் பொருள்கள் எல்லாமே என் காதலரின் தூதென உள்ளன. அவற்றின் வாயிலாக, அவை பேசாமல் பேசும் சொல்லாலே, என் காதலருக்கு என் மீதுள்ள அன்பைப்பற்றிய நினைவு என் மனதில் உறுதியடைகின்றது.''

''ஆனால் அதைவிட அதிகமாக என் மனத்துள் அவனது உண்மைக் காதல் உறுதிப்படக் காரணமானவன், அவனே அனுப்பிய தூதுவன் - ஐந்தவித்தானே ஆவான். என்மீது அவனுக்கு உண்மையான அன்பு உண்டு என எண்பித்தது அவனது வருகையும் செயலுமேயாகும். அந்த அன்பினைக் காட்ட வேண்டுமென்றே அவன் இறைவனிடமிருந்து தூது வனாக வந்தான்.''

இங்ஙனம் வந்தவனுக்கு நான் என்ன விருந்து படைப்பேன்!

1211. ''காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து.''

''அவனே எனக்கு விருந்தாக அவியுணவாக வந்துள்ளதால், என் கனவிலும், 'உன் காதலை வளர்க்கவே யான் இங்ஙனம் மறைந்துள்ளேன்' என்னும் செய்தி (தூது) யோடு வந்த அவனுக்கு யான் விருந்தாகப் படைக்கக் கூடியது இவ்வுலகைச் சார்ந்த எதுவுமில்லை. ''என் உள்ளத்திலிருந்து பொங்கி எழும் காதலேயாம்! அதனைப் பெறவேண்டுமென்றே அவன்-பசியுற்ற பின் உணவைத் தேடி ஓடுவது போல-ஏங்குகின்றான்.'' ''நான் தாகமாயிருக்கிறேன்!'' ''தாகத்திற்குத் தண்ணீர் தா!''

என்று அவன் சொன்னதன் கருத்து இஃதேயாகும். ஆகவே, "நான் என் காதற்பெருக்கினால் அவனது தாகத்தைத் தீர்த்து வைப்பேன்" என்று ஆன்மா தனக்கே அறிவுரை கூறிக் கொண்டவாறு.

1212. "கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன்."

"என்னுடைய மீன் போன்ற கண்கள் என் வேண்டுகோளுக்கு இணங்கி உறக்கம் கொள்ளுமானால், உறக்கத்தின்போது கனவில் வரக்கூடிய என் காதலர்க்கு என் நிலையைக் கூற இயலும். அதுவும் இயலவில்லையே!"

மீனின் கண்கள் மூடுவதேயில்லை. (ஆகவே, உறங்குவதே யில்லை!) அதுபோல காதலியின் கண்கள் எந்நேரமும் மூடுவதில்லை; உறங்குவதில்லை. ஆகையால், ஓயாமல் அவள் காதலனை நினைத்தவாறு இருக்கின்றாள் என்பது பொருளா? என்னதான் காதலின் பெருக்கை மிகைப்படக் கூறினும் இஃது உலகில் பெரும்பாலும் நிகழாதது என்பது தெளிவு. ஆனால், இறைவனைப் பொறுத்த மட்டில் அவன் உறங்குவதே யில்லை. எந்நேரமும் ஆன்மாக்களின் நலனை நினைத்தவாறு உள்ளான் என்பது உண்மை. இதை ஆன்மாக்கள் உணர்ந்து ஒழுக வேண்டும்.

1213. "நனவினால் நல்கா தவரைக் கனவினால்
காண்டலின் உண்டென் உயிர்."

1214. "கனவினால் உண்டாகும் காமம் நனவினால்
நல்காரை நாடித் தரற்கு."

1215. "நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே இனிது."

1216. "நனவென ஒன்றில்லை யாயின் கனவினாற்
காதலர் நீங்கலர் மன்."

இவற்றின் உட்பொருள் ஒன்றே.

"விழித்திருக்கும் போது - நினைவில் - வந்து எனக்கு இன்பம் தராத என் இறைவனைப் பகற்கனவிலும், இரவுக்

கனவிலும் கண்டு ஓரளவு இன்பமடைவதால்தான் இன்னும் உயிரோடிருக்கிறேன்.''

''இந்தக் கனவு நிலையில் பெறும் இன்பம் ஏதோ ஓரளவு முன்பு நனவு நிலையில் பெற்ற இன்பம் போன்றே உள்ளது. தொடக்கத்தில் இறைவன் எனக்குக் காட்டிய அத்தெய்வீகச் சுவை, அஃதில்லாத (அவன் என்னை நீங்கி வெகு தொலைவில் இருப்பது போலக் காட்டிக் கொள்வதால் ஏற்பட்டிருக்கும்) இக்கனவு நிலையிலும் பெரிதும் ஆறுதல் தருவதாய் உள்ளது.

1217. ''நனவினால் நல்காக் கொடியார் கனவினால்
என்னெம்மைப் பீழிப் பது.''

''அதே சமயத்தில் அவர் என் கனவில் தோன்றுவது எனக்கு வருத்தமும் தருவதாய் உள்ளது. ஏன் இப்படிக் கனவில் வந்து வருத்துகிறார்?''

''ஆம், தெரிகிறது. நான் மேலும் மேலும் தன்னை நினைத்து ஏங்க வேண்டுமென்றே இந்த வருத்துதலை அவர் செய்கிறார். இக்கனவு முடிந்ததும் வரவிருக்கும் முடிவுறாத நனவு நிலையில் மீண்டும் கனவே இல்லாத நிலையில் - பேரின்பத்தை அவர் அருளப்போவதால், என்னை அதற்குத் தக்க முறையில் தயாரித்துக்கொண்டிருக்கிறார்.''

''அதிகப் பசியுற்றவன் உண்ணும் உணவு பன் மடங்கு சுவையுடன் விளங்குவதுபோல், அந்தப் பேரின்பத்தின் மீது பசியும் தாகமும் அதிகமாக அதிகமாக - அங்ஙனம் அதிகமாகும் படி இறைவன் கனவில் நெருங்காமல் - வெகு தொலைவில் உள்ளது போலக் காணப்படக் காணப்பட - எனக்கு அப்பேரின்பத்தின் மீது உண்மை அவா ஏற்படுகின்றது.''

1218. ''துஞ்சுங்கால் தோள்மேல ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்த ராவர் விரைந்து.''

1219. ''நனவினால் நல்காரை நோவர் கனவினால்
காதலர்க் காணா தவர்.''

1220. ''நனவினால் நம்நீத்தார் என்பர் கனவினால்
காணார்கொல் இவ்வூ ரவர்.''

இவற்றின் உட்கருத்து:

"நினைவு மிகுதியால் ஏக்கம் மேலீடுவதால் நிகழும் பகற் கனவு போன்ற நிலையில் அல்லது உறக்க நிலையில் - இரவுக் கனவு நிலையில் என் காதலராகிய இறைவன் என்னை (தோள் அமர் காதலரென) மிக நெருங்கி வருவதை மனத்தால் காண் கின்றேன்; உணர்கின்றேன்; ஆனால், அக்கனவு நிலைகள் நீங்கி யதும் அவன் என் ('தோளை' விடுத்து) நெஞ்சில் புகுந்து கொள் கின்றான்! அஃதாவது, என்னோடு கொண்ட அந்நெருங்கிய காதல் உறவு நீங்கிவிட்டது போல் உணர்கின்றேன்."

எனினும், அவன் எந்நேரமும் ஆன்மாவின் உள்ளத்தில் தான் உறைகின்றான். இதை ஒருவேளை சரியாய் அறிந்து கொள்ளாத ஆன்மா, நினைவு மிகுதியாலும் ஏக்க மேலீட்டாலும் பகற் கனவிலோ இரவுக் கனவிலோ கண்டறியாத நிலை யிருக்கலாம்.

இத்தகைய ஆன்மா, தனக்குக் காதலர்மீது அதிக நினைவும் ஏக்கமுமில்லை எனத் தன்னையே நொந்துகொள்ள வேண்டுமேயன்றி, தன் காதலர்க்குத் தன்மீது அன்பில்லை என்றோ தன்னைக் கைவிட்டார் என்றோ நொந்துகொள்வது சரியன்று.

ஏக்கம் மேலிட்டாலன்றிக் காதலரைக் கனவில் காணுவ தெங்ஙனம்? ஆகவே, ஆன்மாவுக்கு இறைவன் மீது ஏக்கம் பெருக வேண்டும் என்றவாறு.

## கனவுநிலையுரைத்தல்
### சுருக்கம்

கனவு நிலையிலும் இறையன்பை நினைந்துருகும் பான்மை.

1211. "காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து."

காதல் பெருக்கினால் கனவிலும் காதலர் வருவதுண்டு. வரும்போது "யான் உன்னை மறந்து விட்டதாக நீ நினைக் கின்றாய். மறக்கவில்லை. மறைந்துள்ளேன். உன் காதலை வளர்க்க இங்ஙனம் செய்வது தேவை. வருந்தாதே," என்னும் செய்தியோடு (தூதொடு) வரக்கூடும். இங்ஙனம் வரும்போது

என் காதலர்க்கு யான் என்ன விருந்து செய்வேன்? எங்ஙனம் வரவேற்பேன் என்றவாறு. 'கனவிலும் மறக்கமாட்டேன்' என்று பாசப்பெருக்கால் மக்கள் கூறுவது வழக்கு. இதை அடிப்படையாகக்கொண்டு எழுந்த கருத்துகளே இப்பகுதியில் வருபவை.

பேரின்பக்காதலன் இங்ஙனம் கனவில் வருவதுண்டா? என்பதன்று வினா. எந்த அளவுக்கு அக்காதல் வளரவேண்டு மென்னும் கருத்தை உணர்த்தவே இங்ஙனம் கூறப்படுகின்றது. கனவிலும் நனவிலும் வரும் பேரின்பக்காதலர்க்கு ஆன்மா தரக் கூடிய விருந்து மேலும் தன் அன்பை அதிகரிப்பதொன்றே. அதற்காக எத்துன்பமும் தாங்கி, அதனால் விளையும் வேதனைக்கும் தன்னை அர்ப்பணிப்பதே பேரின்பக் காதலர்க்கு ஏற்ற விருந்து என்க.

1212. "கயலுண்கண் யானிரப்பத் துஞ்சின் கலந்தார்க்
குயலுண்மை சாற்றுவேன் மன்."

"காதல் ஏக்கத்தால் தூங்காமலேயிருக்கும் என் கண்களை உறங்குமாறு யான் கெஞ்சி வேண்ட, அவை உறங்குமாயின், என் கனவில் என்னோடு கலந்தார்க்கு (காதலர்க்கு), என் நிலைமையை உரைப்பேன். அஃதாவது, அவனது அன்புப் பிணைப்பின் இன்பம் இன்றி யான் பொறுமையோடு காத்திருப் பதையும் இப்பிணைப்பினால் மட்டுமே யான் உய்தல் கூடும் (உயல் உண்மை) என்பதையும் எடுத்துரைப்பேன்."

1213. "நனவினால் நல்கா தவரைக் கனவினால்
காண்டலின் உண்டென் உயிர்."

"விழித்திருக்கையில் வந்து எனக்கு அன்பு காட்டாதவரைக் கனவிலாவது கண்டால்தான் யான் உயிர்வாழ இயலும்." இதுவும் ஏக்கக்குரலே.

1214. "கனவினான் உண்டாகும் காமம் நனவினான்
நல்காரை நாடித் தரற்கு."

நனவில் வந்து அன்பு காட்டாத என் காதலரை மனத்தால் தேடியலைந்து, கனவிலாவது வந்து காட்டுமாறு செய்தால், கனவிலாவது இன்பம் பெறலாம்.

இறைவனை ஆன்மா எப்படி ஆர்வத்தோடு நாடுதல் வேண்டும் எனக்கூறுவது.

1215. "நனவினாற் கண்டதூஉம் ஆங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே இனிது."

முன்பு நனவில் இறைவனை (உள்ளத்தில்) கண்டபோது-நுகர்ந்தபோது இனிதாயிருந்தது. இப்போது கனவில் காணும் பொழுதும் இனிதாகவே உள்ளது.

இம்மைக் காதலர்க்கு இது பொருந்தாது. இவர்கள் நனவில் நேராகக் காணும் வாய்ப்புள்ளது. இறைவனையோ நினைவால் மட்டுமே காண இயலும். நினைவால் தியானித்து அடையும் இன்பம் எப்போதும் ஒன்றே. அஃதாவது, நேர்முக தரிசனம் பெறும்வரை, கனவிலும் நனவிலும் நினைவால் மட்டுமே காணும் போதுங் கூட............

1216. "நனவென ஒன்றில்லை ஆயின் கனவினால்
காதலர் நீங்கலர் மன்."

"நனவுநிலை இல்லையாயின், எந்நேரமும் கனவிலேயே கண்டு இன்புற்றுக்கொண்டிருப்பேன்."

இதுவும் இம்மைக் காதலர்க்குப் பொருந்தாது. உலகில் வாழும்வரை மறுமைக் காதலனைப் பொறுத்தமட்டில் (மேற்கூறியவாறு) நினைவில் மட்டுமே அவரை எப்போதும் காண இயலும். (இதுவுமது).

1217. "நனவினான் நல்காக் கொடியார் கனவினான்
என்னெம்மைப் பீழிப் பது."

"நனவுநிலையில் அன்பு காட்டாதவர் கனவில் வந்து துன்புறுத்துவது ஏன்?"

பேரின்பக்காதலன் எந்நேரமும் தன் தெய்வீகக்காதலைப் பகிர்ந்துகொள்ளுமாறு ஆன்மாவை வருந்தியழைப்பதை இது கூறுகின்றது."

1218. ‘‘துஞ்சுங்கால் தோள்மேலர் ஆகி விழிக்குங்கால்
நெஞ்சத்தர் ஆவர் விரைந்து.’’

உறங்கும்போது நெருங்கத் தழுவுபவராயினும், விழிக்கும் போது நெஞ்சில் மட்டுமே இருப்பவர் என் காதலர்.

காதற்பெருக்கில், உறங்கும்போது உடலை நெருங்கத் தழுவப்பெறும் இம்மைக்காதலனைப் போல் இன்பம் தருபவராகவும் விழித்திருக்கும்போது உள்ளத்தை மட்டும் தழுவுபவர் போலும் பேரின்பக்காதலர் உள்ளார்.

இக்குறளில், ‘துஞ்சுங்கால்’ என்றது, உலகவாழ்வின் முடிவையும், முடிவில் அடையக்கூடிய பேரின்ப நிலையையும் குறிக்கலாம். இப்பேரின்பம் நெருங்கத் தழுவப்பெறும் உடலின்பத்தோடு ஒரு சிறிதும் ஒப்பிடவியலாதது. ‘விழிக்குங்கால்’ என்றது இவ்வுலக வாழ்வைக் குறிக்கலாம். (விவிலியத்தில் துஞ்சுதலுக்கு இப்பொருள் உண்டு).

1219. ‘‘நனவினான் நல்காரை நோவர் கனவினான்
காதலர்க் காணா தவர்.’’

காதல் உண்மையாகவே பெருகியிருந்தால், கனவிலும் காதலரைக் காண்பர். அப்படிக் காணாவிடில் காதல் மிக ஆழ்ந்ததென்பதற்கில்லை. அப்படிக் கனவில் காணாதவரே நனவில் வந்து அன்பு காட்டாதவரை நொந்துகொள்வர்.

இறையன்பு மிகுந்தால், எந்நிலையிலும் அதன் இன்பம் சுவைக்கவியலும் என்றவாறு.

1220. ‘‘நனவினான் நம்நீத்தார் என்பர் கனவினான்
காணார்கொல் இவ்வூ ரவர்.’’

‘‘நனவில் நம்மை விட்டுப்பிரிந்தாரே எனப்பிறர் குறையாகக்கூறுவர். ஆனால், கனவிலும் வருவதைப் பிறர் எவ்வாறு அறிவர்?’’ (இதுவுமதே).

# 123. பொழுதுகண்டிரங்கல்

ஆன்மாவுக்கு மாலைப் பொழுதெனப்படுவது, இறைவனாகிய தலைவனால் கைவிடப்பட்டதுபோல், தனிமையில் வேறு எந்த ஆறுதலும் துணையுமின்றி அவதிப்படுவதாகும். ஒளியாகிய மகிழ்ச்சி குன்றி, இருளாகிய துன்பம் மேலிடும் நிலை அது. ஆன்மாவில் ஒளி நீங்கி இருள் படர்வதுபோல் துன்பம் நிகழ்வதாவது, இருள் படர்வதால் எப்பக்கம் செல்வதென அறியாமல் ஆன்மா திகைப்புறும் நிலை. இந்நிலையில் ஆன்மா வருந்துதலே பொழுது கண்டிரங்கல் என்க.

1221. "மாலையோ அல்லை மணந்தார் உயிர்உண்ணும்
வேலைநீ வாழி பொழுது."

இறைவனாகிய காதலனைப் பிரிந்து நிற்கும் நாள் எல்லாம் ஆன்மாவுக்கு 'உயிருண்ணும் வேலை'யாக (தன்னைக் கொல்லாமல் கொல்லும் நிகழ்ச்சியாக) உள்ளது. இதனால் வாழ்க்கை மிகக் கசப்பாக மாறி 'உயிர் வாழ்தல்' என்னும் பெயருக்கே தகுதியற்றதாகிவிடுகிறது. இதை அடியார்கள் பலர் நன்கு உணர்ந்து கூறியுள்ளனர்.

1222. "புன்கண்ணை வாழி மருண்மாலை
யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் துணை."

இப்பிரிவாற்றாமையால் ஆன்மாவுக்கு ஒருவித மருள்-மயக்கம் ஏற்படக்கூடும். தன் நிலை தனக்கே தெரியாமல் மயங்கி நிற்கும் நிலை . இந்நிலையில் ஆன்மா அம் மருளையும் அதனால் வரும் துன்ப நிலையையும் நோக்கி "ஏன் என்னை வாட்டுகின்றாய்? உனக்கு இரக்கமில்லையா?" என்று புலம்புகின்றது.

1223. "பனியரும்பிப் பைதல்கொள் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்."

1224. "காதலர் இல்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும்."

1225. ''காலைக்குச் செய்தநன் றென்கொல்
எவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை.''

''இறைவனாகிய என் நாயகரது அன்பினை முன்பு சுவைத்து இன்புற்றேன். அப்போது எனக்கு எல்லாமே இன்பப் பொருளாய் இருந்தன. இப்பொழுதோ எனக்கு வாழ்க்கையில் கசப்பும் வெறுப்பும் தோன்றி எப்பொழுதும் துன்பப்பொழுதாகவே உள்ளதே! ஏன், என் உயிரையே பறித்துக்கொண்டு போகும் பொழுதாகவே உள்ளதே!

நான் அத்துணை அவதியுறுகின்றேனே! ஏன் இங்ஙனம் அவதிப்பட 'வேண்டும்? என்னைத் துன்புறுத்தும் இத்துன்பப் பொழுதிற்கு நான் என்ன தீங்கு செய்தேன்?''

1226. ''மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத
காலை யறிந்த திலேன்.''

''தொடக்கத்தில் எனக்கு எவ்வளவோ இன்பம் தந்த இறைவனின் காதற்புணர்வு, அன்று நான் சுவைத்துப் பார்த்த அவனது அன்பின் இனிமை, இன்று எனக்குத் துன்பமே தருவதாய்விட்டதே! இப்படி இருக்கும் என நான் எதிர்பார்க்க வில்லையே!''

''அந்த அன்பின் இனிமையை இடைவிடாமற் சுவைத்துக் கொண்டிருப்பேன்'' என எதிர்பார்த்தது ஆன்மா. ஆனால், அஃது அறியாமையால் நிகழ்ந்தது. இடைவிடாமல் இன்பம் நுகர்வது இவ்வுலக வாழ்வுக்குரியது அன்று என்பதும், இவ் வுலகில் நிகழும் துன்பமும் பேரின்பத்தைப் பெருக்கத் துணை செய்ய வேண்டும் என்பதும் (துன்பத்திலிருந்தும் இன்பத்தைக் கொணரக்கூடிய வல்லமை படைத்த) இறைவனின் திருவுளச் செயல் என்பதும் அறியாமல் அங்ஙனம் எதிர் பார்த்தது; ''இனி உண்மை அறிந்தேன்!'' என்றவாறு.

1227. ''காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய்.''

1228. ''அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை.''

1229. "பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து."

1230. "பொருள்மாலை யாளரை உள்ளி மருள்மாலை
மாயுமென் மாயா உயிர்."

இறைவனைப் பிரிந்து நிற்கும் இப்பிரிவாற்றாமையாகிய மனநோய் என்னும் பூ, துன்பப் பொழுதாகிய மாலைப் பொழுதில்தான் மலராக விரியும். அஃதாவது, முழு எழிலுடன் விளங்கும். ஆகவே, துன்பம் இதற்குத் தேவை என்றவாறு. துன்பமில்லா வாழ்க்கை, பேரின்பமாகிய எழில் மலராவதற்குத் தடைசெய்யும் என்னும்போது, யாவரும் வெறுப்பதாகிய துன்பத்தை இத்துணை பெரும் காரியத்துக்குப் பயன்படுத்தும் இறைவனின் அருட்சக்தியை என்னென்போம்!

அவனது அருட்சக்தி, இங்ஙனம் (மனிதருடைய திட்டங்களுக்கு எதிர்மாறாக) செயல் புரிவதால், முன்பு (ஆயன் குழல் போல) இன்பம் தந்ததும் இப்போது துன்பமாய் மாறிவிட்டது. அஃதாவது, உலகில் இன்பம் தரக்கூடிய பலவும், இறைவனை எண்ணி எண்ணி ஏங்கும் ஆன்மாவுக்கு மேலிடும் ஏக்கமாகிய துன்பத்தையே விளைவிக்கும் என்க. (இதன் உட்காரணத்தை அறியாதவர்கள் எனக்காக வருந்த நேரலாம்).

இந்நிலையில் பிரிந்து நிற்கும் இறைவன் என்றுதான் வருவாரோ! என்று ஏங்கி ஏங்கிச் சாகாமல் சாக வேண்டியது தானே!

## பொழுது கண்டிரங்கல்
### சுருக்கம்

இறைவனது அன்பைச் சுவைக்க விரும்பும் ஆன்மா, இருள் படரும் மாலைப்பொழுது போன்ற உள்ளத்து இருள் நிலையை (அருள் மங்குவது போன்ற நிலையை)க் கண்டு வருந்துதல்.

1221. "மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது."

இத்தகைய 'இருள் படர் நிலை'யாகிய அப்'பொழுதை' நோக்கி 'நீ வெறும் இருள் நிலையல்லை; பேரின்பக் காதலால் தெய்வீக மணம் புரிந்துகொண்டவர்களுடைய (அஃதாவது எனது) உயிரை வாங்கும் கருவி-கடல் போல் ;அளவிடவியலா வருத்தம் தருகின்றாய். ஆகவே, நீ வாழ்க!' (இகழ்ச்சி வாழ்த்து).

1222. ''புன்கண்ணை வாழி மருள்மாலை எம்கேள்போல்
வன்கண்ண தோநின் துணை.''

''ஒளி மங்கிய நேரமே நீ வாழ்க! நீயும் என்னைப் போல் ஒளி மங்கியுள்ளாய். உனக்குத் துணை போலிருந்து இருள் படராமல் காக்க வேண்டிய ஒளி, என் துணைவரான கணவர் எனக்கு இரக்கம் காட்டாமல் உள்ளதுபோல், உள்ளதோ?''

தம் மனத்துயரை மாலைப்பொழுதின் மேலிட்டுக் கூறியது. ஆன்மாவுக்குப் பேரின்ப ஒளியாகிய இறைவன் ஓரளவு மறைந் துள்ளதால் ஏற்படும் துயரை வெளிப்படுத்துவதாகும்.

1223. ''பனிஅரும்பிப் பைதல்கொள் மாலை துனிஅரும்பித்
துன்பம் வளர வரும்.''

''காதலரோடு கூடாதபோது பசப்பு நோயால் வாடுவது நான்; கூடும்போது இம்மாலைப்பொழுதே பசப்பு நோயால் வாடுவது போலாம். அங்ஙனம் துன்புற்ற மாலைப்பொழுது இன்று எனக்குத் துன்பம் மிகச் செய்கின்றது''.

பேரின்பக் காதலரோடு சேராமல் தடுக்கும் (மாலை போன்ற) ஒளியற்ற நிலை தன்னை வாட்டுவதைக் கூறுகின்றது.

1224. ''காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து
ஏதிலர் போல வரும்.''

காதலர் உடன் இருக்கும்போது இன்பம் பெருகுமாறு செய்த, இம்மாலைப் பொழுது, அவர் இல்லாத போது என் உயிரை வாங்குவது போல் வருகின்றது. (இதுவுமதே).

இறைவனோடு அன்பில் மூழ்கும் போது ஆன்மாவுக்கு இன்பம் பெருகும். அவ்வன்பு குறைவது போல் காணப்படும் போது இன்பம் குறைகின்றது. உயிரையே வாங்குவது போல் காணப்படுகின்றது. இறைவன் மீது அன்பு மேலீட்டால் ஏற்படக்கூடிய நிலை இது.

1225. "காலைக்குச் செய்தநன்று என்கொல்
எவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை."

காலைப்பொழுது காதலர் பிரிவைக் குறிக்கும். மீண்டும் கூடுவதை இரவுப் பொழுது குறிக்கும். இம்மைக் காதலரிடை நிகழ்வது இது. பேரின்பக் காதலர்க்குப் பிரிவு நேரமாகிய காலைப்பொழுது காதலைக் குறைப்பதன்று; வளர்ப்ப தாகும். பிரிவாற்றாமையில்தான் பேரின்பக் காதல் வளர்வது அக்காதலுக்குரிய சிறப்பான பண்பு. அங்ஙனமே பேரின்ப ஒளி மங்கும் மாலைப் பொழுது போன்ற நேரம் துன்பம் தருவதாகும்.

காதலை வளர்க்கும் பிரிவுக்கு (காலைக்கு) எந்நன்றி செலுத்துவேன்! அன்பொளி மங்கச் செய்யும் மாலைப்பொழுது போன்ற நிலையை அடைய நான் செய்த தீமை யாது? என்று ஆன்மா வருந்துகின்றது.

1226. "மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத
காலை அறிந்தது இலேன்."

"பேரின்பக் காதலர் என்னை விட்டகலாத போது, (மாலை போன்று) அருள் ஒளியில்லாத நிலையின்றி, ஒளி பெற்று இன்ப மடைந்தேன்".

1227. "காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய்."

இக்காதல் நோய் நாளெல்லாம் துன்பம் தருவது; காலையில் (மலர் போல) மலரத் தொடங்கி, பகல் எல்லாம் விரிந்து கொண்டே போய், மாலையில் முழுமையாக மலர்வது; உள்ளத்தில் பேரின்ப ஒளி மங்குவதால் துன்பம் பெரிதா கின்றது.

1228. ‘‘அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை.’’

‘‘இறைவனாகிய என் காதலர் விடுக்கும் அழைப்பு, ஆயன் ஊதும் புல்லாங்குழல் போல் உள்ளது. ஆனால், அவ் அழைப்பு அதிகரிக்க அதிகரிக்க அவனது குரல் என்னைக் கொல்வது போல் உள்ளது.’’ (அரு. 10; 3-6 காண்க). தம் அன்பைச் சுவைக்குமாறு பேரின்பக்காதலன் விடுக்கும் அழைப்பை ஏற்காவிடில் மிஞ்சுவது துன்பமே என்றவாறு.

1229. ‘‘பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து.’’

மதி மயங்கும் வண்ணம் இம்மாலை (இருள் படர்) நேரம் வரும்போது யான் படும் காதல் துன்பத்தை ஊரார் கண்டால் எல்லாருமே துன்புறுவர். உண்மையாகவே இறைவனது அன்புக்காக ஏங்குபவரைக் கண்டு எவருமே வியப்புறுவர்.

1230. ‘‘பொருள்மாலை யாளரை உள்ளி மருள்மாலை
மாயும்என் மாயா உயிர்.’’

அருட்பொருளை இயல்பாகக் கொண்ட என் பேரின்பக் காதலரை நினைக்க நினைக்க, வேறு வகையில் மாயாத என் உயிர், அவரைப் பிரிந்துள்ளமையால் மாய்வது போல் காணப் படுகின்றது.

# 124. உறுப்பு நலன் அழிதல்

பிரிவாற்றாமை மீதூரக் காதல் நினைவு அதிகரிக்க அதிகரிக்க, உடல் உறுப்புகள் மெலிந்து, சோர்வுகொண்டு உரு வழிதல் உண்டு.

1231. "சிறுமை நமக்கொழியச் சேட்சென்றார் உள்ளி
நறுமலர் நாணின கண்."

பிரிவாற்றாமை நீங்கா வண்ணம் நெடுந்தொலைவு சென்று விட்ட காதலரை நினைத்து நினைத்து, அழுது அழுது கண்கள் ஒளியிழந்து நாணிவிட்டன. (முன்பு கண்களைக் கண்டு மலர்கள் நாணின; இப்போது மலர்களைக் கண்டு கண்கள் நாணு கின்றன-காதற் பெருக்கினை மிகைப்படக் கூறியது).

1232. "நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாரும் கண்."

இதுவுமது.

1233. "தணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள்."

மணந்த அன்று நிகழ்ந்த அரவணைப்பினாலும் அதனால் உண்டான இன்ப மிகுதியாலும்'பெருத்த'(அஃதாவது, பெருமித மடைந்த) தோள்கள் (அஃதாவது, தோளுடன் இணைந்த கரங்கள் எல்லாமே) இன்று பிரிவினால் மெலிவடைந்து விட்டன.

இறைவனுடைய அரவணைப்புப் போன்ற அன்பின் பெருக்கைச் சுவைத்த தொடக்கத்தில் உள்ளம் மிகமிகப் பெரு மிதம் கொண்டது. இப்போது அப்பெருக்கு குறைந்தது போல் உள்ளதால், இதயம் சோர்வடைந்துள்ளது.

1234. "பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்."

துணைவர் பிரிவால் தோள்கள் மெலிந்து, கையில் வளை களும் கழலுகின்றன.

1235. ''கொடியார் கொடுமை யுரைக்கும் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.''

இதுவுமது.

1236. ''தொடியொடு தோள்நெகிழ நோவல் அவரைக்
கொடிய ரெனக்கூறல் நொந்து.''

வளையல்கள் கழலுமாறு தோள்கள் (கரங்கள்) மெலிந் தாலும், காதலரைக் கொடியவர் எனக் கூற மனம் ஒப்பவில்லை.

1237. ''பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து.''

''தோள்கள் மெலிவதாலும் வளையல்கள் கழலுவதாலும் நான் படும் வேதனையை ஊரில் பலர் அறிவதால், இந்தப் பூசல் செய்தியைக் கேட்டுக் காதலர் திரும்பி வருவார் என, என் நெஞ்சே நினைக்கின்றாயா? அங்ஙனம் வரும்போது நீ மேம்பாடு பெறுவாய்.''

1238. ''முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல்.''

காதலியை இறுகத் தழுவியதால், கைகள் நோகுமென்று அன்று சிறிது தளர்த்தவே, அப்போதே அவள் நெற்றி பசந்தது!

1239. ''முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண்''.

இதுவுமது.

1240. ''கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு.''

இதுவுமது.

காதற் பெருக்கால் உடல் உறுப்புகள் இங்ஙனம் துன்புறுவதை மிகைப்படக் கூறுகின்றன இக்குறட்பாக்கள்.

இறைவனை நினைத்து உள்ளம் உருகுவதாலும், அவன் மீது ஏற்படும் காதல் பெருக்கினாலும், மிகமிக உயர்ந்த பற்றுத லாலும், ஏக்கத்தாலும் உடலின் அழகு குறைதலும் உருவழி தலுமாம். வேறெதனையும் சிந்தியாது, இறைவனையே எந்நேரமும் தியானித்து ஏங்குவதால், ஒரு சிலர்க்கு இத்தகைய உடல் உருவழிதல் நிகழ்வதுண்டு.

இவ்வுலகத்தில் ஒருத்தி ஒருவனை நினைத்து ஏங்குவதால், இத்தகைய உருவழிதல் நிகழக் கூடுமாயின், இணையற்ற இறைவனை எண்ணி ஏங்குவதால், ஏன் உடல் உருவழியாது?

பெரும்பாலானோர்க்கு இத்தகைய எதுவும் நிகழ்வ தில்லையே ஏன்?...... ஏனெனில், 'கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் ஐம்புலனும்' கொண்டுள்ள ஒருத்தியின் மீது கொள்ளும் ஏக்கத்தைப்போல் கண், செவி முதலிய புலன் களுக்கு எட்டாத இறைவன்பால் அத்துணை காதல் கொள்ளுதல் மனிதர்க்கு எளிதாயில்லை என்பதால்தான்.

இஃது எத்துணை பேதைமை என உணர்ந்துகொண்டு, சிற்றின்பத்தைவிடப் பேரின்பக் காதலை அதிகமாக நாடுவாய் என்றவாறு. இறைவனின் பேரின்பக் காதலில் முன்னேறும் ஆன்மாக்கள் இங்ஙனம் வேதனையுறுவதைப் புனிதர்கள் பலபட விரித்துரைக்கின்றனர்.

## உறுப்பு நலனழிதல்

### சுருக்கம்

இறைவனை நினைந்து அகம் மட்டுமன்று, புறமும் எழிலிழந்து ஏக்க மிகுதியால் காதலி வருந்துதலைப் பிறர் கண்டு இரங்குதல் - உறுப்பு நலன் அழிதலை உவமையாகக் கொண்டு உள்ளம் தவிப்பதை உணர்த்தும் குறட்பாக்கள் இவை.

1231. "சிறுமை நமக்கொழியச் சேட்சென்றார் உள்ளி
நறுமலர் நாணின கண்."

இறையன்பைச் சுவைக்க இயலாத சிறுமை (வருத்தம்) நீடித்திருக்க, நெடுந்தொலை சென்றுவிட்டவர் போலக்

காணப்படும் அன்பரை எண்ணி அழுதலால் உன் கண்கள் ஒளியிழந்து நாணமுற்றுள்ளன. (முன்பு மலர்கள் உன் எழில் கண்டு நாணின. ஆனால், இப்போது நீயே நாணுகின்றாய் என்றவாறு). இறைப்பற்று ஏக்கத்தின் பெருக்கம் கூறப் படுகிறது.

1232. ''நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாரும் கண்.''

இறையன்பு ஏக்க மிகுதியால் - பசப்பு நோயால் வாடி, கண்ணீர் பெருக்கியுள்ளன நின் கண்கள். நீ எவ்வளவோ விரும்பி ஏங்கியும், உன் (பேரின்பக்) காதலர் மனம் இரங்காமல் உன்னைச் சேராதிருத்தலைக் கூறுகின்றன போலும்.

1233. ''தணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள்.''

திருமண நாளில் பெற்ற இன்ப மிகுதியால் பெருமிதத்தோடு விளங்கிய உன் தோள்கள் இப்போது காதலரைப் பிரிந்து நிற்பதால் மெலிவடைந்துள்ளனவோ!

1234. ''பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.''

துணைவருடைய பிரிவால், தழுவப்பெறும் தோள்கள் பெருமிதம் இழந்ததோடு, கைகளும் மெலிவுற்று வளைகள் கழல் கின்றன. இதுவுமது.

1235. ''கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.''

இங்ஙனம் வாடிய தோளும், மெலிவுற்ற கையும் காதலர் எத்துணை வன்னெஞ்சம் கொண்டவர் (பிரிந்து நிற்பதால்) என வெளிப்படுத்துகின்றன. அன்பு மிகுதியால் வாடும் ஆன்மா, சில சமயங்களில் ''இறைவன் ஏன் இங்ஙனம் பிரிவால் வாட்டு கிறார்?'' என முறையிடும்! பிரிவாற்றாமையால் ஏற்படக்கூடிய மனநிலை மிகைப்படக் கூறப்படுகிறது.

1236. ''தொடியொடு தோள்நெகிழ நோவல் அவரைக்
கொடியர் எனக்கூறல் நொந்து.''

வளையல்கள் கழலுமாறு தோள்கள் (கரங்கள்) மெலிந்தாலும் என் காதலர் கொடியவர் என நினைக்கவும் வருந்துகிறேன்.' ஆன்மாவின் தவிப்பு நிலை இது.

1237. ''பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோள் பூசல் உரைத்து.''

'நெஞ்சே! என்னைப் பிரிந்ததால் என் உடல் (தோள்) மெலிந்து மன வாட்டத்துக்கு ஆளாக்கியிருக்கும் என் காதலர்க்கு, இவ்வூரார் கூறும் பேச்சை உரைத்துப் பெருமையடைய மாட்டாயா?' இறையன்பைச் சுவைக்கத் தன்னைத்தானே தேற்றிக் கொள்ளுதல்.

1238. ''முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல்.''

'என்னை இறுகத் தழுவிய கைகளைக் காதலர் சற்றுத் தளர்த்தவே என் உடல் பசப்பு நோயால் தாக்குண்டது - ஒரு நாள்! இன்று பிரிந்து நிற்பதால், யான் படும் துயரை யார் அறிவார்?'

இறையன்புச் சுவை சிறிது குறைந்தாலும் ஆன்மா அனுபவிக்கும் துயரை மிகைப்படக் கூறியது.

1239. ''முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண்.''

'தழுவிய கைகளைச் சிறிது தளர்த்தியதால் கைகளுக்கும் எனக்கும் இடையே காற்று மிகச் சிறிது நுழையவே, அத்துணை சிறிய பிரிவையும் ஆற்றவியலாத நான், இப்பிரிவால் எத்துணை துயர் உறுகிறேன்!' (இதுவுமதே).

1240. ''கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு.''

உடல் (ஒளி பொருந்திய நெற்றி) பசப்பு நோயால் தாக்குண்டதைக் கண்ட கண்களும் வருந்தின. (மேற்கூறிய கருத்தே மேலும் அழுத்தமாகக் கூறப்படுகிறது).

# 125. நெஞ்சொடு கிளத்தல்

இறைவனின் பிரிவாற்றாமை மீதூர, தனக்கு உலகில் எவ்வித ஆறுதலும் கிடைக்காத நிலையில், செய்வதறியாது, ஆன்மா தன்னுள்ளத்தில் பலவாறு பேசிக்கொள்ளுதல்.

1241. "நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே
எனைத்தொன்றும்
எவ்வநோய் தீர்க்கும் மருந்து."

'நெஞ்சே, தீராத இக்காதல் நோயைத் தீர்க்க மருந்து ஒன்றைச் சொல்லமாட்டாயா?'

1242. "காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழிஎன் நெஞ்சு."

"நாம் அவரை எண்ணி இவ்வளவு ஏங்கியும் அவருக்குச் சிறிதும் நம்மீது அன்பில்லாததுபோல் தோன்றுகிறதே! இனி நாம்தான் ஏன் நொந்து வருந்த வேண்டும்?"

1243. "இருந்துள்ளி யென்பரிதல் நெஞ்சே பரிந்துள்ளல்
பைதல்நோய் செய்தார்கண் இல்."

"நெஞ்சே அவரிடம் சொல்லவும் இயலவில்லை. இறந்து விடவும் இயலவில்லை. இங்கிருந்துகொண்டு அவர் வரவை நினைத்து வருந்திக்கொண்டிருப்பதில் பயன் என்ன? நம்மிடத்தில் இந்த நோயை உண்டாக்கிவிட்டு நம்மைப்பற்றிக் கவலையே இல்லாதவர்போல் இருக்கிறாரே? இனி நாம்தான் அவரிடம் செல்ல வேண்டும் போலும்!" என்றவாறு.

உண்மையில் ஆன்மா இறைவனை முழுதுற நேரில் முகமுகமாய்க் காண இவ்வுலக வாழ்வை நீத்து, அவரிடமே செல்ல வேண்டும். நேரில் அவர் உள்ளது போலக் கண்டு அக்காட்சியில் விளையும் மகிழ்ச்சியில் மூழ்குவதே பேரின்பமாகும். இதையடைய அவர் நம்மிடம் வருவதற்கு மாறாக, நாம்தான் அவரிடம் செல்ல

வேண்டும். அஃதாவது, நாம் இவ்வுலக வாழ்வை நீத்து, அவ்வுலக (மறுமை) வாழ்வுக்குச் செல்ல வேண்டும்.

இனி, இறைவனும் ஆன்மாவும் நேரில் சந்திப்பதே 'சாவு' எனப்படும். அதுவே பேரின்பத்தின் தொடக்கம். அஃதாவது, அவனை நினைத்து வாழ்நாளில் ஏங்கி ஏங்கி, அவனது காதலில் நிலைத்து நின்றிருந்தால், சாவு என்பது உண்மையாகவே மெய் யான வாழ்வின் தொடக்கமே ஆகும். மெய்யான என்றால், 'நீடித்த முழு இன்பமும் தரும் - குறைவின்றி என்றும் நிலைத் திருக்கும் - பிரிவே அறியாத' என்பதே பொருள்.

1244. ''கண்ணும் கொளச்சேறி நெஞ்சே யிவைஎன்னைத்
தின்னும் அவர்க்காண லுற்று.''

காண வேண்டும் என்னும் பேராவல், பிடுங்கித் தின்னும் ஆசைக்கு ஒப்பிடப்படுகிறது.

1245. ''செற்றா ரெனக்கை விடல்உண்டோ நெஞ்சேயாம்
உற்றா லுறாஅ தவர்.''

'நம்மை வெறுத்தவர் போல் காணப்பட்டாலும் உண்மை யாகவே அவர் நம்மை வெறுப்பதில்லை. ஆகவே, அவரை நாம் விட்டு விலகுதல் தகுதியோ?'

1246. ''கலந்துணர்ந்தும் காதலர்க் கண்டாற் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்திஎன் நெஞ்சு.''

''தொடக்கத்தில் இறைவன் (ஆன்மாவுக்குத்) தன்னையும் தன் இணையற்ற எழிலையும் ஓரளவு வெளிப்படுத்தித் தன் காதலின் இனிமையை நான் (ஆன்மா) ஓரளவு சுவைக்குமாறு செய்த போது, எத்துணை மகிழ்ச்சி வெள்ளத்தில் நீந்தினேன்! அவனது பிரிவாற்றாமையால் துன்பக் கடலில் மூழ்கி அவதிப் பட்டுக்கொண்டிருக்கும் இந்நேரத்தில் அவன் எதிர்பாராத விதமாய்த் தன்னை வெளிப்படுத்தி, தொடக்கத்தில் நான் துய்க்கக் கிடைத்த அந்த இனிமையை மீண்டும் ஒருமுறை சுவைக்கக் கொடுத்தானானால், இதுவரை என்னை வாட்டிய பிரிவாற்றாமையை முழுவதும் மறந்து விடுவேன் அன்றோ? அப்படி இருக்க, இப்போது 'அவன் கொடியவன், என்னை

மறந்து விட்டான்' என்றெல்லாம் கூறி அவனை வெறுப்பது போல் காட்டுவது வெறும் நடிப்பேயன்றோ! ஆகவே, இந்த நடிப்பை விட்டுவிட்டு அவனிடம் செல்வேனாக!'' என்றவாறு.

1247. ''காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு.''

''என் நெஞ்சே, உன் காதலனாம் இறைவனை, நீ எப்படியாவது அடைய வேண்டுமென்று விரும்பினால், அவன் உன்னிடம் வரும்வரை காத்திருக்காமல் நீயே ஏன் அவனிடம் செல்லலாகாது? உன்னைத் தடுப்பது எது? நாணமா? அப்படியானால், அவன் வரும்வரை காத்திருப்பதே நல்லது.

1248. ''பரிந்தவர் நல்கார்என் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதைஎன் நெஞ்சு.''

''அல்லது நான் இங்ஙனம் பிரிவாற்றாமையால் அவதியுறுவது உன் காதலருக்குத் தெரியாதென்று நினைக்கிறாயா? நெஞ்சே! அதைத் தெரிவிக்க அவரிடம் செல்ல விரும்புகிறாயா? என்ன பேதைமை!''

1249. ''உள்ளத்தார் காத லவராக உள்ளிநீ
யாருழைச் சேறிஎன் நெஞ்சு.''

''இப்படி எல்லாம் ஏங்குவது-அவர் உன்னிடம் வரவேண்டும்; அல்லது நீ அவரிடம் செல்ல வேண்டும்! என்றெல்லாம் எண்ணி ஏங்குவது எதற்காக? அவர் உனக்குள்ளேயே இருப்பதை நீ உணரவில்லையா? உன்னுள்ளேயே இருப்பவரை வேறிடத்தில் தேடுவது அறியாமையன்றோ?''

1250. ''துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
இன்னு மிழத்துங் கவின்.''

உண்மையில் இறைவன், தனக்கு அன்பு செய்பவர்களது உள்ளத்தில் அன்புடன் குடிகொண்டிருக்கின்றார் என்பதை எந் நேரமும் மறத்தலாகாது. அதை உணர உணர மேற்சொன்ன ஏக்கமும் ஓரளவு குறையும்.

ஆகவே, உள்ளத்தில் வதியும் அவரை எந்நேரமும் கண்முன் கொண்டிருப்போம். நெஞ்சிலேயே வைத்திருத்தால் புறத்துறுப்பு நலனழியத் தேவையில்லை. அகநலனும் இழக்கத் தேவை யில்லை.

## நெஞ்சொடு கிளத்தல்
### சுருக்கம்

தன் வேதனையைத் தனக்கே;சொல்லிக்கொள்ளுதல்.

1241. ''நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே
எனைத்தொன்றும்
எவ்வநோய் தீர்க்கும் மருந்து.''

''நெஞ்சே, தீராத இக்காதல் வேதனையைத் தீர்க்க ஒரு மருந்தை எப்படியாவது அறிந்துகொண்டு எனக்குச் சொல் வாயா?'' (யாரிடத்தும் சொல்ல இயலாமல் தனக்கே சொல்லிக் கொள்ளுதல் வேதனையின் தாங்கொணாத் தன்மையை உணர்த்தும்).

1242. ''காதல் அவரில ராகநீ நோவது
பேதைமை வாழிஎன் நெஞ்சு.''

''உன் காதலர் உன் மீது அன்பு மிகக் கொண்டுள்ளார் என எண்ணுகிறாய்; அஃது உண்மையா? இல்லை. ஆகவே, அதை நினைத்து வருந்தும் என் நெஞ்சே! நீ வாழ்க!'' (வேதனையால் உண்டாகக்கூடிய மன மாறாட்டம்!).

1243. ''இருந்துள்ளி என்பரிதல் நெஞ்சே பரிந்துள்ளல்
பைதல்நோய் செய்தார்கண் இல்.''

''இங்கே இருந்துகொண்டு பிரிவை நினைத்து நினைத்து வருந்துவது எதற்காக? இத்துன்ப நோயை உண்டாக்கியவர் உன்மீது பரிவு காட்டுவதாகத் தெரியவில்லையே;'' (இறையன்பு மிகுந்தவர்க்கு இத்தகைய எண்ணம் தோன்றுவது மிகுதியான பிரிவாற்றாமையைக் காட்டவே).

1244. ''கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவையென்னைத்
தின்னும் அவர்க்காண லுற்று.''

(இத்துன்பமெல்லாம் தொடக்கத்தில் காதலரைக் கண்டதால்தானே!) ''அவரை எந்நேரமும் நெஞ்சில் கொண்டிருக்கும் நீ, இக்கண்களையும் எடுத்துச்செல்! அவரைக் காண விரும்பி இக்கண்கள் என்னைக் கடித்துத் தின்பதுபோல் இருக்கின்றன.'' (இறைவனது அருட்பார்வையையும் அதனால் விளையும் அன்பு மிகுதியையும் உணரும் ஆன்மா இங்ஙனம் துன்புறும்).

1245. ''செற்றா ரெனக்கை விடல்உண்டோ நெஞ்சேயாம்
உற்றால் உறாஅ தவர்.''

ஆன்மாவை இறைவன் சில சமயங்களில் வெறுத்து ஒதுக்குவதுபோல் காணப்படலாம். அன்பின் பெருக்கால் ஆன்மாவுக்கு ஏற்படக்கூடிய ஒரு பிரமையே அது. அதற்காக ஆன்மா இறைவனை விட்டுவிடல் தகுதியாமோ?

1246. ''கலந்துணர்ந்தும் காதலர்க் கண்டால் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்திஎன் நெஞ்சு.''

''உன்னைச் சேர்ந்து, தன் காதல் பெருக்கை உணர்த்தக் கூடிய உன் (பேரின்பக்) காதலரைக் கண்டால், மனம் வேறு பட்டு நிற்க மாட்டாய். உடனே சேர்ந்துவிடுவாய். ஆனால், இப்போதோ அவர் மேல் வெறுப்பும் சினமும் கொண்டிருப்பது போல் பேசுகிறாய். இது மெய்யாகவே வெறுப்பன்று; பொய்யானதே உன் சினம்!''

1247. ''காமம் விடுஒன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேன்இவ் விரண்டு.''

''நெஞ்சே! ஒன்று காதலை விடு; அல்லது நாணத்தை விடு. ஒரே சமயத்தில் இரண்டையும்:தாங்க என்னால் இயலவில்லை.'' (இஃது இறையன்புக்காக உள்ளத்தில் நிகழும் போராட்டம்).

1248. ''பரிந்தவர் நல்காரென்று ஏங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதைஎன் நெஞ்சு.''

''உன் மீது பரிவுகொண்டு அன்பைக் காட்டமாட்டார் என்று நினைத்துக்கொண்டே, உன்னைப் பிரிந்துவிட்டதுபோல் காட்டிக்கொள்ளும் இறைவன் மீது, ஏக்கம் கொள்கின்றாய்! இஃது எத்துணை பேதைமை, என் நெஞ்சே!'' (இதுவுமதே).

1249. ''உள்ளத்தார் காத லவராக உள்ளிநீ
யாருழைச் சேறிஎன் நெஞ்சு.''

''பேரின்பக் காதலராகிய இறைவன் உன் உள்ளத்திலேயே வாசம் செய்யும்போது, யாரைத் தேடி வெளியே செல்ல விரும்புகின்றாய்!'' (இஃது இறைவனுக்கே பொருந்தும். 'மலர்மிசை ஏகினான்' அவன். சிற்றின்பக் காதலர் எவர்க்கும் இது முழுமையாகப் பொருந்தாது).

1250. ''துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா
இன்னும் இழத்தும் கவின்.''

''உன்னைச் சேராமல் உன்னை விட்டுப் பிரிந்தவர்போல் காணும் இறைவன் (மேற்கூறியவாறு) நெஞ்சிலேயே உறையுமாறு பார்த்துக்கொள். இன்றேல், புற அழகை இழப்பதுபோல் மட்டுமன்று, அக எழிலையும் இழக்க நேரிடும்.''

ஆன்மாவின் அழகெல்லாம் இறைவன், உள்ளத்தில் உறைவதில் உள்ளது. அதை மறவாமல் அவனோடு அன்புறவாடுதல் வேண்டும்.

# 126. நிறையழிதல்

இறைவன் மீதுள்ள வேட்கையால், ஆன்மா மனத்துள் அடக்கி வைக்க வேண்டிய செய்திகளையும் வெளியே எடுத்துச் சொல்லுதல்.

1251. ''காமக் கணிச்சி யுடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.''

1252. ''காம மெனவொன்றோ கண்ணின்றென் நெஞ்சத்தை
யாமத்து மாளும் தொழில்.''

'உள்ளத்தின் நிறைவினின்று வாய் பேசும், என்பதற்கேற்ப, நெஞ்சில் அன்பு நிறைந்திருந்தால், அதை முழுவதும் அடக்கி வைத்தல் இயலாது. சமயா சமயத்திலேனும் வாய்விட்டுப் பேச வேண்டிய நிலை ஏற்படாமற் போகாது. அந்நிலையில் உள்ளத்தில் அடக்கி வைத்திருக்க வேண்டிய செய்திகளும் வெளியே வர நேரிடலாம். ஏன் இப்படி நிகழ்கிறதென்றால், காதல் பெருக்கும், அன்பில் வேகமும் உள்ள இடத்தில், அடக்கம் என்பது சில சமயங்களில் இயலாத ஒன்றாகிவிடும்.

1253. ''மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போல் தோன்றி விடும்.''

1254. ''நிறையுடையே னென்பேன்மன் யானோவென் காமம்
மறையிறந்து மன்று படும்.''

இதுவுமது.

''தும்மல் எதிர்பாராமல் நிகழ்ந்துவிடும் ஒன்று. முன்பெல்லாம் காதல் வேகத்தை அடக்கவியலும் என எண்ணியிருந்தேன். ஆனால், அஃது எந்த அளவுக்கு வளர்ந்துவிட்டது எனின்- இறைவன்மீது பற்றுதலும் அன்பும் எவ்வளவு பெருகிவிட்ட தெனின், அதை ஏதாவது ஒரு விதத்தில் வெளிப்படுத்தாமல் இருக்க இயலாத அளவு வளர்ந்துவிட்டது. கட்டுக்கடங்காததாகி விட்டது.

இதன் விளைவாகச் சில சமயங்களில் வெளிப்படுத்த எண்ணாத செய்திகளையும் எடுத்துச் சொல்லிவிட நேருகிறது.''

1255. ''செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
உற்றா ரறிவதொன் றன்று.''

1256. ''செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
எற்றென்னை யுற்ற துயர்.''

இதுவுமது.

காதல் நோயால் வருந்துபவர் 'பிறர் என்னைக் குறித்து என்ன நினைப்பாரோ? என்னை இழிவாக நினைத்துவிடுவார்களோ?' என்றெல்லாம் எண்ணுவதில்லை. காதல் நோய் இல்லாதவர்களே அங்ஙனம் எண்ணிக் கவலைப்படுவர்.

1257. ''நாணென வொன்றோ அறியலம் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின்.''

1258. ''பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை.''

1259. ''புலப்ப லெனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்
கலத்த லுறுவது கண்டு.''

இதுவுமது.

1260. ''நிணம்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல்.''

இதுவுமது.

இறைவனாகிய காதலன் ஆன்மாவைத் தன்பால் ஈர்த்து, இறுதியில் கவர்ந்துகொள்ளும் பான்மை எளிதில் அறிய இயலாதது. தொடக்கத்தில் ஆன்மாவுக்கு அவன் தனது காதலின் இனிமையை ஓரளவு வெளிப்படுத்திச் சுவை காட்டுவான் - குழந்தைக்குத் தாய் பாலூட்டுவதுபோல - மார்பில் அணைத்துக் கொஞ்சுவது போல ஆன்மாவுக்கு இனிமையைத் தருவான்,

ஆனால், உலகில் உள்ளவரையில், எப்போதுமே, இடை
விடாமல் அந்த இனிமையைச் சுவைக்குமாறு அருள்வதில்லை.
குழந்தைக்குத் தாய்ப்பாலூட்டுவது சிறிது காலம்தான். மார்பில்
அணைத்துக் கொஞ்சுவதும் சிறிது காலந்தான். தக்க வயது
வந்தவுடன் கடின உணவு உண்ணுமாறு செய்துவிடுவாள்.
கொஞ்சுவதும் குறைந்து விடும். இதனால் தாய்க்குத் தன்
மகவின் மீது பாசம் குறைந்துவிட்டது என்றோ அகன்று
விட்டது என்றோ பொருள் அன்று. குழந்தையின் முழு வளர்ச்
சிக்கு அது தேவைப்படுகிறது என்றே பொருள்.

நடத்துகின்றான்.
இறைவனும் நம்மை இங்ஙனமே
தொடக்கத்தில் இனிமையைச் சுவைக்குமாறு தன் காதலை
வெளிப்படுத்திய பின்னர் (கடின உணவு போன்ற) சில துன்ப
நிகழ்ச்சிகளுக்கு ஆளாகுமாறு விட்டுவிடுகிறான். அன்பால் கொஞ்சு
வதை நிறுத்தி விட்டு, துன்பத்தால் அவதியுறுமாறு விட்டுவிடு
கிறான். ஆனால், தனியே விட்டுவிட்டுப் போய்விடுவதில்லை.
அருகிலேயே இருந்துகொண்டு துன்பங்களிடையே வளர்ச்சி
பெறத் துணைபுரிகின்றான். துன்பங்களால் அன்பு முதிர்ச்சி
யடையுமாறு செயல் புரிகிறான். தன் காதலியாகிய ஆன்மாவின்
மீது கோபித்துக் கொள்வது போல் நடிக்கிறான். அதன் மீது
தனக்கு அன்பே இல்லாதது போல் 'பாசாங்கு' செய்கிறான்.
தன்னந்தனியே அவதிப்படுமாறு விட்டுவிடுகிறான். இதனால்
ஆன்மாவுக்கு அவன் மீது ஒருவித வெறுப்புக்கூட ஏற்படக்கூடும்.

இதன் விளைவாக ஆன்மா, "இனி அவர் வந்தால் கூட,
நான் அவரைக் கவனியாது ஊடுவேன்," என்று தனக்குள்ளே
தீர்மானித்துக் கொள்ளும். ஆனால், எதிர்பாராத நேரத்தில்,
தொடக்கத்தில் தான் சுவைத்த அந்தக் காதல் இனிமை,
ஆன்மாவுக்கு உண்டாக அவன் செயலாற்றுகிறான். அந்த
இனிமை எத்துணை கவர்ச்சியானதாய் இருக்கிறதென்றால்,
ஆன்மா முன்பு, தான் தீர்மானித்தவாறு ஊடுதல் செய்வதை
அடியோடு மறந்து விட்டு, அவனோடு கூடிக்கொள்ளும்!

இதையெல்லாம் ஆன்மா 1257 - 1260 குறள்களில் வெளிப்
படுத்துகின்றது. பல விதங்களில் எதிர்பாராத வகையில்
ஆன்மாவுக்குத் துன்பமும், அதே சமயத்தில் இன்பமும் தரும்
இறைவனது திருவிளையாடலைக் குறிப்பிட்டு அவனைப்
'பன்மாயக்கள்வன்' எனக் கூறுவது குறிப்பிடத் தக்கது.

# நிறையழிதல்

## சுருக்கம்

பிறரால் அறியப்படாமல் மறைந்துள்ள காதல் வேட்கையின் மிகுதியை அடக்க இயலாமல் வெளியிடுதல். ('நிறை எனப் படுவது மறை பிறர் அறியாமை' - கலி. 123).

1251. "காமக் கணிச்சி உடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு."

(காதலையாவது விட வேண்டும்; அல்லது நாணினை யாவது விட வேண்டும் என்னும் குறள் 1247 கருத்துக்கேற்ப) நாணாகிய தாழ் இட்டுப் பூட்டிய நிறை என்னும் கதவை, காதல் பெருக்கென்னும் கோடரி வெட்டிப் பிளக்கக் கூடும். இது சிறப்பாகப் பேரின்பக் காதல் பெருகுமிடத்து நிறைவேறுவது; அத்தகையோர் நாண் முதலிய எதற்கும் அஞ்சார். இறைவனின் அன்பைப் பெறுவதற்காக எத்தகைய தடையையும் தகர்த் தெறிவர்.

1252. "காம மெனஒன்றோ கண்ணின்றென் நெஞ்சத்தை
யாமத்தும் ஆளும் தொழில்."

காதல் என்பது இரக்கம் (கண்ணோட்டம்) இல்லாதது. யாவரும் ஓய்வு கொள்ளும் நள்ளிரவிலுங்கூட என் நெஞ்சை வாட்டுகின்றது. அன்புப் பெருக்கால் ஏற்படும் ஓய்வின்மை-ஆர்வமிகுதி. இறையன்புக்கு இது மிகச் சிறப்பாகப் பொருந்தும்.

1253. "மறைப்பேன்மன் காமத்தை யானோ
குறிப்பின்றித்
தும்மல்போல் தோன்றி விடும்."

இக்காதல் பெருக்கை மறைத்து வைக்க நினைத்தாலும், திடீரென (தும்மல் வருவது போல) முன் குறிப்பு இன்றித் தோன்றி விடும். இது பேரின்பக்காதல் நீளும்போது நிகழக் கூடியது.

1254. "நிறையுடையேன் என்பேன்மன் யானோஎன்
காமம்
மறையிறந்து மன்று படும்."

இதுவரை என் காதல், பிறர் அறியாவண்ணம் மறைந்து நிறையுடையதாகக் காணப்பட்டது. ஆனால், இப்போது அது மறைவாயிருந்த நிலை நீங்கி, எல்லார் முன்னும் காணப்படுகின்றது. (அந்த அளவுக்கு அன்பின் பெருக்கு வலிமை பெற்றது).

1255. "செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
உற்றார் அறிவதொன்று அன்று."

பிரிந்து சென்ற காதலர் பின்னேயே செல்லாவிடினும், மேற் கூறிய 'நிறைவு' அவரிடத்துண்டு. இது காதல் நோய் உற்றவர் மட்டுமே அறியக்கூடியது. பிரிந்து நின்றாலும் காதல் பெருக்கம் குறைவதில்லை. பேரின்பக் காதலர் இதைச் சிறப்பாக அறிவர்.

1256. "செற்றவர் பின்சேறல் வேண்டி அளித்தரோ
எற்றென்னை உற்ற துயர்."

"என்னைப் பிரிந்து சென்றவர் பின்னேயே யான் செல்ல வேண்டுமென விரும்புதலால், என்னை வந்தடைந்த காதல் துயர் எத்தகையதாயிற்று!" (இதுவுமதே).

1257. "நாணென ஒன்றோ அறியலம் காமத்தால்
பேணியார் பெட்ப செயின்."

நம்மால் இத்துணை விரும்பப்பெற்ற காதலர் திரும்பி வந்து காதலை நிறைவேற்றினால், நாணம் என்பது தானாக மறைந்து விடும்.

இறைவனின் பேரின்பக் காதல் நிறைவுறும் வரை ஆன்மா, நாணம் என்னும் துன்ப நிலைக்கு ஆளாகியே இருக்கும்.

1258. "பன்மாயக் கள்வன் பணிமொழி அன்றோநம்
பெண்மை உடைக்கும் படை."

பலவித அருட்செயல்களால் நம் உள்ளங்களைக் கவர்ந்து கொள்ள விரும்பும் (ஐந்தவித்தானாகிய) இறைவன், தன்னைத்

தாழ்த்திச் செய்த செயலும், கூறிய சொல்லும் பெண்மை எனப் படும் நாணை உடைக்கும் படை போலாம். எத்தடையையும் வென்று ஆன்மா நிறைவு பெறச் செய்வது.

1259. "புலப்ப லெனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்
கலத்த லுறுவது கண்டு."

"என்னைக் காதற் பெருக்கால் துன்புறச் செய்யும் இறைவன், மீண்டும் தம் காதலை வெளிப்படுத்தினால், உடனே இணங்காமல் (என்னைத் துன்புறச் செய்ததால்) 'பிணங்குவேன்' என்றெண்ணிக் கவனத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டேன். ஆனால், என் நெஞ்சம் அவ்வாறு பிணங்குவதைத் தாங்கிக்கொள்ள இயலாமல், அன்பு மேலீட தழுவிக்கொண்டேன்." இதுவுமதே.

1260. "நிணந்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ
புணர்ந்தூடி நிற்பேம் எனல்."

இறையன்பைத் துய்த்த ஆன்மா, தீயிலிட்ட கொழுப்புப் போல் உருகும் தன்மையது. ஆகவே, அவ்வன்புக் காதலர் நெருங்கி வர (அஃதாவது, தம் அன்பைச் சுவைக்குமாறு அருள் புரியுங்கால்) ஊடி (பிணங்கி) நிற்பேன் எனக் கூறுதல் இயலாது. (இதுவுமதே).

# 127. அவர் வயின் விதும்பல்

குறைவனும் ஆன்மாவும் ஒருவரையொருவர் காண விரைதல்.

இதுவரை ஆன்மா இறைவனை நினைந்து ஏங்குவது பற்றியே பெரும்பாலும் கூறப்பட்டது. (தலைவி தலைவனைக் கண்டு இன்புற ஆர்வமுடன் ஏங்கி நின்றது போல).

தலைவன் தலைவியை நினைந்து ஏங்குவதுபற்றி ஒன்றும் கூறப்படாததைக் கவனிக்க.

இறைவனாகிய தலைவனைப்பற்றிப் பேசுவோமானால், அவன் ஆன்மாவைக் காண ஏங்குவதுபற்றிப் பேச்சே எழ இயலாது. ஆன்மா இறைவனை அடைய வேண்டுமென ஏங்கலாமேயன்றி இன்பமே உருவான, எதுவும் யாரும் தேவைப் படாத இறைவன் ஆன்மாவை அடைய வேண்டும் என எங்ஙனம் ஏங்குதல் நிகழக்கூடும்?

எனினும், இறைவனை அடைய வேண்டுமென்று ஆன்மா கொள்ளும் ஏக்கத்தைவிட, எத்துணையோ மடங்கு அதிகமாக இறைவன் ஆன்மாவை ஈடேற்றி, அதற்குத் தன் பேரின்பத்தில் பங்கு வழங்க வேண்டுமென ஆர்வம் கொண்டுள்ளான் என்பதை நாம் பெரும்பாலும் உணர்வதில்லை. தனக்கு நன்மையானதை யடைய மனிதன் ஏங்குவதைவிட இறைவனே அதிகமாக ஏங்கு கின்றான் என்பது உண்மை.

உலகில் மக்கள் பலவிதத் துன்பங்களுக்கு ஆளாகி அவதிப் படுவதைக் காணும்போது, அவர்களைப்பற்றி இறைவனுக்குக் கவலையே இல்லாதது போல் தோன்றக் கூடும்.

தான் தர விரும்பும் பேரின்பத்தைப்பற்றி எத்தகைய கவலை யும் இல்லாமல் சிற்றின்பத்தையே வாழ்க்கையின் குறிக்கோ ளாகக் கொண்டு ஒழுகும் மக்கள் மீது இறைவன், தான் விரும்பும் பேரின்பத்தைக் கட்டாயமாகத் திணிக்க வேண்டுமா?

பகுத்தறிவுள்ள மனிதன் எதையும் விரும்பி ஏற்றால்தான் இறைவன் அதை அருளவியலும். மனிதன் உலகில் அவதிப்படு வதன் முக்கிய காரணம் இறைவனைப்பற்றிக் கவலைப்படாததே ஆகும் என்க.

இத்தகைய மக்களுக்குத் தம் அருளை வாரி வழங்கி ஈடேற்ற இறைவன் எவ்வளவோ ஆவல் கொண்டுள்ளான். ஆகவே, ஆன்மா இறைவனைக் கண்டு, பேரின்பம் அடைய வேண்டும் என ஏங்குகிற அதே நேரத்தில், இறைவனும் அந்த ஆன்மாவுக்கு விரைவிலேயே ஈடேற்றம் தரப் பெரிதும் விழை கின்றார். இதை ஆன்மாக்கள் அறிந்துகொள்வது அவசியம்.

1261. "வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்."

நாளெண்ணுதலும் வழிபார்த்தலும் காதலர்க்குரிய ஏக்கத்தை வெளிப்படுத்துவதாகும். பிரிந்த நாள்களைச் சுவரில் குறியிட்டு, அவற்றைத் தொட்டுத் தொட்டு எண்ணும் வழக்கத்தைக் குறிப்பிட்டு, அதனால் என் விரல்களும் தேய்ந்து விட்டன என்று மிகைப்படக் கூறுகின்றாள் காதலி.

வெகு காலமாக இறைவனை நினைந்து நினைந்து வருந்திய ஆன்மா, "இனி என் நாயகர் விரைவிலேயே வந்து விடுவார். இன்னும் சில நாள்களே உண்டு! விரைவிலேயே எனக்கு ஈடேற்றம் உண்டு. விரைவிலேயே இவ்வுலக வாழ்வின் துன்பம் நீங்கிப் பேரின்ப வாழ்வின் இன்பம் கிட்டும்" என்று எண்ணிக்கொண்டு நாயகனைத் தீவிரமாக எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்.

1262. "இலங்கிழா யின்று மறப்பின்என் தோள்மேல்
கலங்கழியும் காரிகை நீத்து."

1263. "உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன்."

இதுவுமது.

1264. "கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் நெஞ்சு."

இதுவுமது.

''எப்படியும் விரைவில் திரும்புவார் என் காதலர் என்னும் நினைப்பில்தான் நான் இன்னும் உயிர் வாழ்ந்துகொண்டிருக்கிறேன்'' என்கிறது ஆன்மா. (1262-1264).

''இவ்வெல்லைக்கண் நினைந்தால் மறுமைக்கண் அவரை எய்தி இன்புறலாம். அதனால், மறக்கற்பாலனல்லேன்''— என்னும் 1262-ஆம் குறளுக்கு ஞா. தேவநேயன் அவர்கள் தரும் உரை, பேரின்பத்தைப் பொறுத்த அளவில் பொருத்தமாகவே உள்ளது! இவ்வுலக வாழ்வின்போது ஆன்மா இறைவனை நினைந்து ஏங்குகின்ற அளவுக்கே மறுமை வாழ்வில் இன்பம் இருக்கும். இது முற்றும் உண்மையே. ஏக்கத்துக்கு ஏற்பவே அருள் கிடைக்கும்; அருள் அன்புக்கு ஏற்பவே இன்பம் பெருகும்.

1265. ''காண்கமன் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்
நீங்குமென் மென்றோட் பசப்பு.''

1266. ''வருகமன் கொண்க னொருநாட் பருகுவன்
பைதல்நோ யெல்லாம் கெட.''

இதுவுமது.

1267. ''புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின்.''

இதுவுமது.

இறைவன், ஆன்மாவை ஈடேற்ற வருவார் என்பது உண்மையே. இஃது ஐந்தவித்தான் வாயிலாகக் கேட்டு அறிந்த உண்மை என்க. ஆனால், ''கேட்டறிந்ததால் மட்டும் என் காதல் நோய் நீங்காது. அவரைக் (அகக்) கண்ணால் கண்டாலன்றி (1265)-என் உள்ளமும் உடலும் முழுதுற அவரைத் துய்த்தாலன்றி (1266) என் ஆசை தீராது; என் நோய் நீங்காது.''

''ஆகவே, நான் எதிர்பார்த்த வகையில் விரைவாக அவர் வராமையால், இறுதியாய் வரும்போது அவர் மீது சினந்து கொள்ளாமல், ஊடாமல் கூடுவேன்'' (1267).

இறைவனுக்கும் உலகில் உள்ள பல தீய சக்திகளுக்கு மிடையே பெரியதொரு போராட்டம், என்றும் நடைபெற்றுக் கொண்டே வருகிறது. சில சமயங்களில் தீய சக்திகளே வலுப்பதுபோல் காணப்படுகின்றன. அதனால், மனிதர் பலர் இறைவனையும் அவர் தர விரும்பும் பேரின்பத்தையும் விடுத்துத் தங்கள் சுய நலத்துக்கே மதிப்புக் கொடுத்து, இறைவனின் ஆன்மீக ஆட்சி தங்கள் உள்ளங்களில் நிகழாதவாறு தடுத்து விடுவதைக் காண்கிறோம்.

1268. "வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை அயர்கம் விருந்து."

1269. "ஒருநாள் எழுநாள்போல் செல்லும்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு."

இதுவுமது.

1270. "பெறினென்னாம் பெற்றக்கால் என்னாம்
உறின்என்னாம்
உள்ளம் உடைந்துக்கக் கால்."

இதுவுமது.

மனிதருடைய உள்ளங்களைக் கோயிலாகக் கொண்டு, அவற்றில் இறைவன் ஆட்சி செய்ய விடுவதே மனித வாழ்வின் உன்னதக் குறிக்கோளாகும்.

இது நன்கு நிறைவேறவே ஈண்டுக் கூறப்படும் இறைவனின் (பேரின்பக்) காதல் தொடர்பு கூறப்படுகிறது. தலைமகனாகிய அவன், ஆன்மாவாகிய தலைமகளைப் பிரிந்து இருப்பதும் அதற்காகவே (1268).

ஐந்தவித்தானாகிய இறைமகன், உலகில் மேற்சொன்ன இறைவனின் ஆட்சியை மனிதர் உள்ளங்களில் நிறுவ வந்தவரே என்பது கவனிக்க. 'இறைவனின் அரசு' என்னும் பேச்சு அவரது நற்செய்தி வரலாற்றில் எங்கும் வழங்கப்படுவதும் கவனிக்க.

அரசர்க்கெல்லாம் அரசரும், நாடுகளுக்கெல்லாம் நாயக னாகிய இறைவனும், தம் விண்ணகத் தந்தையும் ஆனவரது அரசை, உலகில் நிறுவித் தீய சக்திகளைத் தோற்கடித்து, அனைத்தையும் அவனது அன்பின் ஆட்சிக்குள் கொணரவே-அந்த வெற்றியை இடைவிடாத் தெய்வீக விருந்தால் கொண் - டாடவே ஐந்தவித்தான் தோன்றினார். இக்கருத்தும் இக்குறளில் மறைந்துள்ளதுபோல் தோன்றுகிறது.

நீடிய பிரிவுக்குப் பின்னர், உலகில் மக்கள் உள்ளங்களில் இறைவனது ஆட்சி நிறுவப்பட்ட பின்னர், தீய சக்திகளெல்லாம் தோற்கடிக்கப்பட்ட பின்னர், தலைமகளாகிய ஆன்மாவுடன் இணைந்து (அரிய விருந்தென) அளவில்லா மகிழ்ச்சி கொண்டாடவியலும்.

ஆகவே, தன்னையே நினைந்து, தனக்காகவே ஏங்கி நிற்கும் ஆன்மாவை - உள்ளமுடைந்து இறந்துபடுவதற்கு முன் ஈடேற்ற வந்தே தீர்வான் இறைவன்.

## அவர் வயின் விதும்பல்

### சுருக்கம்

பேரின்பக் காதலர் பக்கம் ஆன்மா விரைந்து செல்லுதல்.

1261. "வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்."

காதலர் வரவை எதிர்பார்த்து, நாளைச் சுவரில் குறியிட்டு விரல்கள் தேய்ந்துவிட்டன. வரவைப் பார்த்துப் பார்த்துக் கண் களும் ஒளியிழந்து போயின. இஃது ஆர்வத்தை மிகைப்படக் கூறியது. இறைவனது பேரன்பைச் சுவைக்க ஆன்மா இத்தகைய பேரார்வம் கொள்ளுதல் அவசியம்.

1262. "இலங்கிழாய் இன்று மறப்பின்என் தோள்மேல்
கலங்கழியும் காரிகை நீத்து."

இறைவனை ஒருபொழுதேனும் மறப்பேனாயின், என் உடல் தன் எழிலை இழப்பதாக. எந்நிலையிலும் பேரின்பக் காதலரை நினைவில்கொண்டே வாழ்தல் வேண்டும். ஆர்வத்தை வளர்ப் பதில் கருத்தாயிருப்பது கூறப்படுகிறது.

1263. ''உரன்நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார்
வரல்நசைஇ இன்னும் உளேன்.''

திரும்பி வருவோம் எனத் தயக்கமின்றி உறுதியான உள்ளத்தோடு சென்றவர், நிச்சயமாக வருவார் என்னும் எண்ணத்தில் உயிர் வாழ்கின்றேன். இறையருள் அன்பு, சிலசமயங்களில் நீங்கி விட்டது போல் காணப்படினும், அது வெறும் தோற்றமே. ஆன்மா உறுதியுள்ளத்துடன் அவ்வன்பை எதிர்பார்த்து, அதைச் சுவைக்க இயலும் என்னும் நினைவில் வாழ்தல் வேண்டும்.

1264. ''கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறும்என் நெஞ்சு.''

''பிரிந்து போனவர் காதல் பெருக்கோடு திரும்பி வருதலை நினைந்து, ஏங்கி ஏங்கித் தவிப்பது, மரத்தின் மேல் ஏறித் தன் காதலர் வருகின்றாரா எனக் காதலி நெஞ்சம் பார்க்கிறது. காதல் பெருக்காகும் ஏணி மேல் ஏறி இறைவன் அருளுக்காக ஏங்கி நிற்றல் வேண்டும்.

1265. ''காண்கமன் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்
நீங்கும்என் மென்றோள் பசப்பு.''

''அருளாலும் அன்பின் பெருக்காலும் யான் மணந்து கொண்ட இறைவனாகிய பேரின்பக் காதலனைக் காண்பேனாக. அப்போதுதான் என் நோயெல்லாம் தீரும்.'' (இஃது இறைவனது பேரின்பத் தரிசனைக்காக ஏங்கும் ஆன்மாவின் கூற்று).

1266. ''வருகமன் கொண்கன் ஒருநாள் பருகுவன்
பைதல்நோய் எல்லாம் கெட.''

அருளால் மணப்பிணைப்புக் கொண்ட என் இறைவன் (தலைவன்) வரட்டும்— விரைவாகவே வரட்டும். வந்தால்தான் என் உள்ளத்தின் நோய் எல்லாம் தீர அவனது அன்பை, ஆனந்த ஊற்றிலிருந்து பருகுவதுபோல் பருகி இன்புறுவேன். (இதுவுமதே).

1267. ''புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ
கலப்பேன்கொல்
கண்அன்ன கேளிர் வரின்.''

''அருட்கண் காட்டும் தெய்வத் திருமண மகன் வரும்போது, தாமதமாக வந்தமைக்காகச் சினப்பேனோ? (புலப்பேனோ?) அல்லது கட்டித் தழுவுவேனோ? (புல்லுவேனோ?) அல்லது இரண்டும் செய்வேனோ?'' (ஆன்மாவின் ஏக்கமும் கலக்கமும் ஒரே நேரத்தில் கூறப்படுகிறது).

1268. ''வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை அயர்கம் விருந்து.''

''என்னை ஆட்கொண்ட தெய்வநாயகன், மேற்கூறிய புலம்பலும் புல்லுதலும் கலந்த செயலை யான் வெற்றியுடன் துய்க்கச் செய்யட்டும். இருள் படரும் (மாலை போன்ற) நேரத்தில் என் உள்ளமாகிய மனையில் என்னோடு சேர்ந்து ஆன்மீக விருந்து நடத்தி இன்புறுவோம்.''

1269. ''ஒருநாள் எழுநாள்போல் செல்லும்சேட் சென்றார்
வருநாள்வைத்து ஏங்கு பவர்க்கு.''

''மிக மிகத் தொலைவில் உள்ளதுபோல் காணப்படும் என் தெய்வக் காதலரை யான் ஒரு நாள் காணாதது (அஃதாவது அருட் கண்ணால் கண்டு இன்புறாதது) எனக்குப் பல நாள்போல் காணப்படுகின்றது.'' ஏக்கம் அத்துணை பெரிதாய் உள்ளது.

1270. ''பெறின்என்னாம் பெற்றக்கால் என்னாம் உறின்என்னாம்
உள்ளம் உடைந்துக்கக் கால்.''

இம்மைக்காதலி, காதலன் பிரிவைத் தாங்க இயலாமல் உள்ளம் உடைந்து இறந்து போனால், அதன்பின் காதலன் திரும்பிவரின் என்ன? திரும்பாவிட்டால் என்ன? பயன் இல்லை. இறந்த பின் சேர்ந்து இன்புற இயலுமா? ஆன்மா இறைவனை நினைந்து ஏங்கும் நிலையை அவன் தேவையான அளவுக்கே அனுமதிப்பான். மனமுடைந்து போகுமுன் வந்து அணைத்துக் கொள்வான் என்னும் கருத்தையே இக்குறள் கூறுவதாகத் தெரிகிறது.

# 128. குறிப்பறிவுறுத்தல்

வெகு தொலைவிலிருப்பதாகத் தோன்றிய தலைமகனாம் இறைவன், ஆன்மாவுக்குத் தன்னை வெளிப்படுத்தும்போது (ஆன்மாவைச் சந்திக்கும்போது) ஒருவர் குறிப்பை மற்றவர்க்குச் சொல்லுதலாம்.

இவ்வுலக வாழ்வு முடியும் வரையில் இறைவன் ஆன்மாவுக்கு வெகு தொலைவிலிருப்பதாகவே காட்சியளிப்பான். தொலைவிலிருப்பதுபோல் மட்டுமன்று; தன்னைக் கைவிட்டது போலவும் காட்சியளிப்பான். ஏன், தன்னைக் காண - கண்டு இன்பம் தர மீண்டும் வராமலே இருந்து விடுவானோ? என்று ஐயுறும் அளவுக்கு ஆன்மா அவதியுறும். என்று வருவானோ! வந்து மீண்டும் பிரியாமல் என்னை அணைத்துக்கொள்வானோ! ஆட்கொள்வானோ? என்றெல்லாம் எண்ணி, அளவு கடந்த ஏக்கத்துடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தபின், ஒருநாள் அவன் ஆன்மாவுக்குத் தன்னை வெளிப்படுத்துகிறான். அதனை நெருங்கித் தன் வரவால் அளவில்லா மகிழ்ச்சியளிக்கிறான். இத்தகைய மகிழ்ச்சியில் மூழ்கி எழுந்தவுடன் மீண்டும் கவலையும் அச்சமும் வந்துவிடுகிறது!

எவ்வளவு காலம் நீடிக்கும் இந்த மகிழ்ச்சி? என்ற கவலை! ''ஏதாவது தவறு செய்து என் காதலராகிய இறைவனது சினத்திற்கு ஆளாகி விடுவேனோ என்ற அச்சம்!'' ஆன்மா இங்ஙனம் அச்சமுறுவதில் வியப்பில்லை. இவ்வுலகில் உள்ள வரை ''எக்காரணத்தை முன்னிட்டும் இனி என் காதலராகிய இறைவனைப் பிரியவே பிரியேன்!'' என்ற மனஉறுதி ஏற்படுதல் அரிது. ஏனெனில், ஆன்மா இகவாழ்வில் உள்ள வரையில் ஏதாவது ஒரு குறைபாட்டுக்கு ஆளாகக் கூடும். அசதியால் அல்லது தன் உண்மைக் காதலரல்லாத (இறைவனல்லாத) வேறொரு பொருள் மீது, ஆள்மீது தன் காதலைச் செலுத்தி, இறைவனது சினத்துக்கு ஆளாக நேரும். அவனது காதலை இழந்துவிடவும் கூடும். (பரத்தையின் மீது தன் காதலையெல்லாம் செலுத்தும் தலைமகன் போல! அல்லது வேறொருவன் மீது தன் காதலைத் திருப்பி விடும் தலைமகள் போல!).

இத்தகைய நிலை நீங்குவது மறுமை வாழ்வில் மட்டுந்தான். மறுமையில் இறைவனுள் ஆன்மா அழுந்தி, நீக்கம் அறியாத காதலால் பிணைக்கப்பெற்று, குறையறியாத வேறு பொருளின் பால் கவர்ச்சி ஏற்படக்கூடிய இழிந்த நிலையே இல்லாத பேரின்பத்தில்தான் அத்தகைய நிறைவும் பெருமையும் உளதாகும்.

பேரின்பத்தில் அழுந்திய ஆன்மா வேறொரு பொருளின் பால் ஈர்க்கப்படுவது இயலாததொன்று. இறைவனைவிடக் கவர்ச்சிகரமான பொருளோ, ஆளோ இருத்தலும் இயலாது. ஆகவே, அந்த நாள் மறுமை வாழ்வு - வருமளவும் மேற் சொன்ன கவ்லைக்கும் அச்சத்துக்கும் ஓரளவு உட்பட்டுத் துன்புறும் நிலை இருந்தே தீரும்.

இந்த அச்சத்தையும் கவலையையும் ஆன்மா ஈண்டுக் குறிப்பாக வெளிப்படுத்துகிறது.

1271. ''கரப்பினும் கையிகந் தொல்லாநின் உண்கண்
உரைக்க லுறுவதொன் றுண்டு.''

இந்த அச்சத்தையும் கவலையையும் வெளிப்படையாகச் சொல்ல நாணுகிறது.

1272. ''கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட்
பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது.''

1273. ''மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வதொன் றுண்டு.''

இதுவுமது.

1274. ''முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு.''

இதுவுமது.

இப்போதுதானே காதலனை அடைந்து இன்புற்றேன்! இதற்குள் அவனை நீங்குவதுபற்றிக் கவலையை வெளிப்

படுத்துவது எப்படி? என்னும் கூச்சம் இருந்தாலும் அந்தக் கூச்சமும் அச்சமும் பார்வையில் வெளிப்படுகிறது.

இந்தக் கவலையும் அச்சமும் கூச்சமும் பெண்ணிறைந்த நீர்மை எனப்படுகின்றன (1272). உலகில் உள்ளவரை இத்தகைய கவலையும் அச்சமும் ஆன்மாவுக்கு அணிபோல் இருக்கும். இறைவனது அன்பை இழந்துவிடாமல் தன்னைக் காத்துக்கொள்ள ஓரளவு துணையாகவுமிருக்கும்.

"மனத்திட்பம் அற்றவள் நான்; நல்லது எதனிலும் மனத்தை அழுந்த விடுவது அத்துணை எளிதான காரியமா யில்லை எனக்கு! எளிதாக மனம் அல்லற்படுகிறது, வேறெதன் மீதேனும் மனத்தைப் பறி கொடுத்துவிடும் நிலை எனக்கு ஏற்படக்கூடும். என் இழிநிலை உணர்ந்து விழிப்புடன் இருத்தல் வேண்டும், அதே சமயத்தில் இறைவனின் காதலில் அழுந்தி நிற்க அவனது அருளையே நாடுவேன். அவனது அன்பை இழக்க அஞ்சுகிறேன்."

"ஆகவே, இறைவா, என்மனம் உன்னுள் அழுந்திவிடத் துணை செய்யும்!" என்று ஏங்குவதே இவ்வுலக வாழ்வு முடியும் வரை ஆன்மாவுக்குரிய நிலை. (பெண்ணிறைந்த நீர்மை). இத்தகைய நிலையே ஆன்மாவுக்கு அரண்போலும் உளது. அதே சமயத்தில் அதன் பிரிவாற்றாமை நோயைத் தீர்க்கும் மருந்தாகவும் அமைகின்றது. பின்வரும் குறட்பாக்கள் கருத்து இது.

1275. "செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கும் மருந்தொன் றுடைத்து."

1276. "பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து."

1277. "தண்ணந் துறைவன் தணந்தமை நம்மினும்
முன்ன முணர்ந்த வளை."

இதுவுமது.

1278. "நெருநற்றுச் சென்றாரெம் காதலர் யாமும்
எழுநாளேம் மேனி பசந்து."

இதுவுமது.

''உண்மையில் இறைவனாகிய என் காதலரின் அன்பை, நான் என் அசதியால் - இயல்பான பலவீனத்தால் - குறைபாட்டினால் - என் காதலை வேறுபக்கம் தவறான திசையில் திருப்பிவிடுவதால் இழந்துவிடக் கூடும் என்று அஞ்சுவதும், விழிப்புடன் தன் உள்ளுணர்வுகளைக் காத்துக்கொள்வதும், அவனது அருளை வேண்டுவதுமே இந்நோய்க்கு மருந்தாகும்.''

மேற்சொன்ன ஏக்கம், அச்சம் இவற்றால் உண்டாகும் துயரமே இதற்கு மருந்தாகும் என்று ஆன்மா உணர்தல் வேண்டும்.

நீக்கம் அறியா இன்பமே உண்மையான இன்பம். சிறிது நேரம் இன்பத்தில் ஆழ்த்திப் பின்னர் நீங்குவதால் துன்பமே மேலீடும். எவ்வளவுக்கெவ்வளவு இன்பம் நுகரப்படுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு துன்ப உணர்வு மேலிடும். அந்த இன்பம் நீங்கிவிடுமாயின், அங்ஙனம் நிகழும்போது ''எனக்கு இன்பம் அளித்த என் காதலர் (இறைவன்) எத்துணை வன்னெஞ்சர்! இன்பம் தருவதுபோல் தந்து நீங்கி விட்டாரே!'' என்று (1276) புலம்பும் ஆன்மா இறைவனது அன்பின் பெருக்கைச் சிறிது சுவைப்பினும் அதற்கு ஏற்படும் உணர்வு இத்தன்மையது! இத்தகைய உணர்வால், உள்ளம் தன்னையுமறியாமல் வளைகள் கழல்வது போலும் (1277) அவதியுறும்.

காதலரின் அன்பைச் சுவைத்த பின்னர், நீங்குவது சிறு பொழுதேயாயினும் யுகம் போலிருக்கும் (1278) அன்பின் மிகுதியால் நோயுற்றிருக்கும் ஆன்மாவுக்கு.

1279. ''தொடிநோக்கி மென்தோளும் நோக்கி யடிநோக்கி
அஃதாண் டவள்செய் தது.''

1280. ''பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி இரவு.''

என் காதலர் என்னை நீங்குவாராயின், நானும் அவருடன் செல்ல வேண்டியதே! இல்லையேல் என் உடல் (தோள்வளை, பாதம்) உயிருடன் நில்லா (1279).

இந்த நோயைக் காதலரிடம், வாய்விட்டுச் சொல்லாமல் கண்ணினால் மட்டும் உணர்த்தி எப்படியாயினும் அதைத் தீர்க்க வேண்டுமென்று இரக்கின்றது ஆன்மா. அச்சம், கூச்சம், ஏக்கம் ஆகிய பெண் தன்மையினும் பெண் தன்மையாக உள்ளது, இத்தகைய நாணச் சிறப்பு; — இவ்வளவு கூச்சத்துடன் தன் காதல் நோயை உணர்த்துகின்றது (1280).

## குறிப்பறிவுறுத்தல்
## சுருக்கம்

காதல் குறிப்பைப் பேரின்பக்காதலராகிய இறைவனும் ஆன்மாவும் ஒருவர்க்கொருவர் அறிவித்தல்.

1271. ''கரப்பினுங் கையிகந் தொல்லாநின் உண்கண்
உரைக்க லுறுவதொன்று உண்டு.''

இறைவன் ஆன்மாவைக் கூடும்போது, ஆன்மாவை நோக்கி, ''நீ உள்ளத்தில் அநுபவித்த துயரை நான் அறியாம லில்லை. உன் நினைவும் போக்கும் செயலும் அதை எனக்கு அறிவித்தவண்ணமாகவே இருந்தன'' என்று இறைவன் கூறுவது போல் என்க.

1272. ''கண்நிறைந்த காரிகைக் காம்பேர்தோட்
பேதைக்குப்
பெண்நிறைந்த நீர்மை பெரிது.''

ஆன்மாவின் துயரைக்கண்டு இரங்கி இறைவன் சில சமயங் களில் அதைச் 'சந்தித்து' ஆறுதல் கூறுவது உண்டு. இல்லையேல் உள்ளம் முழுதும் உடைந்துவிடக் கூடும். அந்நேரத்தில் ஆன்மா அனுபவிக்கும் இன்பம் பெரிது. அவ்வின்பம் அப்படியே நீடிக்க வேண்டும் என விரும்புவதால், மீண்டும் எங்கே பிரிந்துவிடப் போகிறானோ என்று அஞ்சுகிறது. பிரியாமல் பன்னாள் அவ்வின்பத்தில் மூழ்கியிருப்பதாயிருந் தாலும், ஆன்மா அதையறிய இயலாததால், 'எங்கே பிரிந்து விடப் போகிறானோ.' என நினைத்துக்கொள்வது, அறியாமை-மடமை. இவற்றையெல்லாம் வெளியே சொல்ல இயலாமல் உள்ளேயே வைத்துக்கொள்வது நாணம். இந்த அச்சம்,

மடமை, நாணம் பெண்களுக்குரிய பண்புகள் (பெண்ணிறைந்த நீர்மை) ஆதலால், ஆன்மாவின் மீதும் ஏற்றிக் கூறப்படுகிறது.

1273. ''மணியில் திகழ்தரு நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வதொன்று உண்டு.''

கண்ணாடி மணிகளுக்குள்ளே இருந்து வெளியே தெரிகிற நூலைப் போல ஆன்மாவின் அகத்து அழகுக்குள்ளே கிடந்து வெளியே புலனாகிறதொன்று உண்டு. உள்ளத்தில் கிடக்கும் அன்பு ஏக்கம் பற்றிக்கூறியது. இதுவுமதே.

1274. ''முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதொன்று உண்டு.''

மலர் முகைக்குள் இருந்து வெளியே புலனாகாத மணம் போல எளிய ஆன்மாவின் ஏக்கப் புன்முறுவலில் அதன் காதல் பெருக்கம் தென்படுகிறது. இதுவுமதே.

1275. செறிதொடி செய்திறந்த கள்ளம் உறுதுயர்
தீர்க்கு மருந்தொன்று உடைத்து.''

இஃது இறைவன் கூறுவது: ''நான் என் காதலியாகிய ஆன்மாவைப் பிரிந்து போய்விட்டதாக நினைத்துக்கொண்டு, நான் இரக்கமற்றவன் என எண்ணி, அதை வெளியே கூறாமல் மறைத்து வைத்திருக்கும் ஆன்மாவின் இம் மனப்பான்மையே அதற்குற்ற துயரைத்தீர்க்கும் மருந்தாக உள்ளது.'' 'என்னை என் இறைவன்மறந்தானோ கைவிட்டானோ' என்று ஏங்கிக் கிடப்பதே ஆன்மீக துயருக்கு ஏற்ற மருந்து! ஏக்கத்தின் பெருக்கே ஏக்கம் தீர்க்கும் மருந்தாகின்றது. இது பேரின்பக் காதலின் ஒரு சிறப்பு அம்சம் என்க. இதுவுமதே.

1276. ''பெரிதாற்றிப் பெட்பக் கலத்தல் அரிதாற்றி
அன்பின்மை சூழ்வது உடைத்து.''

பேரின்பக் காதலனாகிய இறைவன், பிரிவினால் மிகத் துயருறும் எளிய ஆன்மாவுக்கு ஆறுதல் தந்து உள்ளத்தில் கலந்து, முன்பிருந்த துயரைத் துடைக்கும் அதே நேரத்தில் 'இதுவரை என்னைப் பிரிந்திருந்தானே, என்னே கொடுமை'

என நினைக்குமாறு செய்யக் கூடியதாய் இருக்கும். பிரிவும் கலத்தலும் இத்தகைய மன மாறாட்டங்களுக்கு இடம் தருவது வியப்பில்லை.

1277. "தண்ணந் துறைவன் தணந்தமை நம்மினும்
முன்னம் உணர்ந்த வளை."

இறைவனது காதலன்பைச் சில சமயங்களில் ஆன்மா முழுமையாக உணர்வதில்லை. அவ்வன்பின் அனல் வெளிப்படாதவாறு ஒருவித ஆன்மீகக் குளிர் நிலையில் இருப்பதாகத் தோன்றும். அஃதாவது, தன்னை விட்டு நீங்கியது போலத் தோன்றும். இத்தகைய மனநோயால் உடலும் (குறளில் கூறப்படும் வளைகள் போல) அவளது பிரிவை உணர்ந்தது போலத் தோன்றக்கூடும். சில சமயங்களில் உள்ளம் உணர்வதற்கு முன்னமே உடல் உணர்ந்து துன்புறக்கூடும். அன்பின் பெருக்கால் நிகழக்கூடிய பலவித நிலைகள் கூறப்படுகின்றன.

1278. "நெருநற்றுச் சென்றார்எம் காதலர் யாமும்
எழுநாளேம் மேனி பசந்து."

இறைவனின் பிரிவுத் துன்பம் சிறிது காலம் மட்டுமே இருப்பினும் காதல் மிகுதியால் அது பல நாள் போல் தோன்றும்.

1279. "தொடிநோக்கி மென்றோளும் நோக்கி அடிநோக்கி
அஃதாண்டு அவள்செய் தது."

இப்பிரிவு நிலையில் உடல் மெலிவை நோக்கும்போது, காதலர் விரைவில் வந்து சேர்வாரா இல்லையா என்று ஐயுறுவதும் அதனால் வேதனையுறுவதும் நிகழும்.

1280. "பெண்ணினால் பெண்மை உடைத்தென்ப
கண்ணினால்
காமநோய் சொல்லி இரவு."

தன்னைப் பிரியாதவாறு காதலி காதலனை பெண்ணுக்குரிய கண்பார்வையால் பார்த்துக் கெஞ்சுவது போல, ஆன்மா இரக்கமும் பரிவும் கலந்த வண்ணம் உள்ளக்கண்ணால் பார்ப்பதும் அன்புக் குறிப்பாகும்.

# 129. புணர்ச்சி விதும்பல்

மேற்கூறிய அளவுக்குத் தன் காதல் நோயைக் குறிப்பால் உணர்த்தியும் காதலன் பிரிகின்றான். அதன் பின்னர், மீண்டும் என்று வருவானோ! என்று புணர்வானோ! என்று ஆன்மா வருந்தி விரைதல்.

இம்மை வாழ்வில் உள்ளவரையில் ஆன்மாவுக்குத் தன் அன்பின் இனிமையை இறைவன் உணர்த்திக்கொண்டே இருப்பதில்லை. அங்ஙனம் செய்வாராயின், பேரின்பத்தின் மீது ஏற்பட வேண்டிய ஏக்கம் ஓரளவு குறைந்துவிடக் கூடும். மேலும், இறைவன் மீது ஏற்பட வேண்டிய ஏக்கத்தைவிட, அவன் தரும் இன்பச் சுவையின் மீது ஏற்படும் ஏக்கமே அதிகமாகிவிடக் கூடும். இஃது ஆன்மாவுக்கு நல்லதன்று.

அனைத்திற்கும் மேலாக, இறைவனை நாட வேண்டுமே யன்றி, அவன் தரும் இன்பத்தையன்று.

ஆகவேதான், தன்னை மேலும் மேலும் நாடவும், தன்னை நினைந்து ஏங்கவும் இறைவன் ஆன்மாவை விட்டுவிடுகிறான், தனக்கு அதன்மீது கவலையில்லாதது போல!

இறைவனாகிய தன் காதலன் செய்யும் இந்தத் தெய்வீகச் சூழ்ச்சியின் கருத்தை ஆன்மா நன்கு உணர்ந்து, இறைவனை நினைந்து ஏங்குவதை மேலும் மேலும் வளர்த்துக்கொள்ள வேண்டும்.

1281. ''உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்திற்கு உண்டு.''

காதலனை எண்ணி, உள்ளத்தில் களித்தலும் காண மகிழ்தலும் காதலுக்குண்டு. இஃது அன்பு செய்வோர்க்குரிய பண்பு. கள்ளுக்குக்கூட அத்துணை வலிமை யில்லை.

1282. ''தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்துணையும்
காமம் நிறைய வரின்.''

இத்தகைய காதல் மகிழ்ச்சி நிறைவாகச் சுவைக்கப்பட வேண்டுமாயின், 'தினைத்துணையும் ஊடாமை வேண்டும்.'

''என் காதலர்க்கு என்மீது அன்பில்லை போலும். என்னைக் குறித்து அவருக்குக் கவலையில்லை என்றே தோன்றுகிறது. இவ்வளவு ஆவலுடன் அவரது அன்பைச் சுவைக்கக் காத்திருக்கும் என்னிடம் அவர்வரச் சிறிதும் நினைவின்றி இருக்கிறாரே! வரட்டும், இனி அவர் வரும்போது, எனக்கும் அவர்மீது அன்பில்லாதது போல் காட்டிக் கொள்வேன்,'' என்று ஆன்மா பலவாறு எண்ணக் கூடும். தனக்குள்ள இயல்பான பலவீனத்தின் காரணமாக- உலக வாழ்வில் ஏற்படும் துன்பத்தின் சுமையால், இப்படி 'ஊடுதல்' கூடும். ஆனால் இது நல்லதன்று.

1283. ''பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்
காணா தமையல கண்.''

தன் நாயகன் எவ்வளவுதான் அன்பற்றவர் போலக் காட்டிக் கொண்டாலும் அஃது உண்மையன்று. ஊடல் எனத் தோன்றுவதுகூட உண்மைக் காதலை வளர்ப்பதாக அமைய வேண்டும்.

ஆகவே, ''என் அகக் கண்கள் அவரையே எந்நேரமும் நோக்கிய வண்ணமாயிருக்க நான் ஊடுவது எங்ஙனம்''?

1284. ''ஊடற்கண் சென்றேன்மன் தோழி அதுமறந்து
கூடற்கண் சென்றதென் நெஞ்சு.''

''அவர் வந்து என்னை மகிழ்விக்கும் முன்னர், அவர் எனக்கு உண்மையில் தவற்றையே செய்கிறார் என நினைத்து, என் அளவிறந்த ஆவலைப் புறக்கணித்தவர் போலச் செயல்படும் அவர், இனி வந்தால் ஊடுதலையே மேற்கொள்வேன்; ''ஊடற்கண் சென்றேன் மன்தோழி'' என்று நினைத்துக் கொண்ட போதிலும் அவரைக் கண்டதும், ''அது மறந்து கூடற்கண் சென்ற தென் நெஞ்சு''

1285. ''எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து.''

''அவரது அழகும் அன்பும் எத்துணை வலிமையும் இனிமையும் கொண்டனவெனில், என் உள்ளம் என்னை யறியாமல் அவரது காதலில் சிக்குண்டது. அதனால் அவர் இது வரை எனக்குச் செய்த தவற்றை (அஃதாவது, என்னை மறந்து என்னிடம் வராததை) அவரைக் கண்ட அந்த நேரத்தில் முழுதும் மறந்து போனேன். என் கண்ணுக்கு அப்போது தென்படவேயில்லை.''

1286. ''காணுங்கால் காணேன் தவறாய காணாக்கால்
காணேன் தவறல் லவை.''

''என்ன விந்தை இது! என் அன்பரைக் காணும் போது அவரிடம் எக்குறையும் காண்கிறேனில்லை. காணாத போது அவர் வன்நெஞ்சர்; என் காதலைப் புறக்கணிப்பவர்; என்னைக் காரணமின்றி வாட்டுகிறவர் என்றெல்லாம் குறை கூறுகிறேன்! இக் குற்றங்களெல்லாம் அவரைக் கண்டதும் முற்றிலும் மறைந்துவிடுகின்றனவே''

1287. ''உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோல்
பொய்த்த லறிந்தென் புலந்து.''

''இஃது இறைவன் தரும் இனிமைக்குரியதொரு பண்பு. அதன் வலிமை எத்துணை பெரிது! அது வேகமாய் ஓடுகின்ற பெரியதொரு வெள்ளம் போன்றது. அதில் பாய்பவரை வெள்ளம் இழுத்துக்கொண்டு போகாமல் விடுமா? இதையறிந்தும் ஒருவன் அதில் பாய்ந்தால் என்ன நேரிடும்? அது போலவே இறைவனது காதல் வெள்ளத்தை எதிர்த்து நிற்க என்னால் இயலாது.''

''ஆகவே, அவன் என்னைத் தன் காதலால், தன்பால் ஈர்த்துக் கொள்ளும்போது அதை எதிர்த்து நிற்க, ஊடுதல் செய்ய வலிமை எனக்கு எங்கிருந்து வரும்?''

1288. ''இளித்தக்க இன்னா செயினும் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.''

"மேற்சொன்னவாறு என் காதலர், எனக்குத் தவறு செய்பவராகவே காணப்படினும், அதனால் எனக்கு வருத்தமும் ஏக்கமும் மேலிட்ட போதிலும் என்னால் அவர் மேன்மேலும் விரும்பப்படுவதன் மர்மம் என்ன?

இத்தகைய விருப்பம் உண்டாகுமாறு அவர் செய்யும் மாயத் தொழில் என்ன? தன்னைத் தழுவுவதால் (மார்பு) ஏற்படும் இன்பம் அத்தனை வலிமை படைத்ததாய் இருப்பதெங்ஙனம்? என்னையும் அறியாமல் என் உள்ளத்தைக் கவர்ந்து செல்லும் இந்தக் கள்வனை என்னென்பது''?

1289. ''மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
செவ்வி தலைப்படு வார்.''

காமம் என்பது பெரும்பாலும் உடல் புணர்ச்சியுடன் தொடர்புள்ளதாகக் கொள்ளப்படுகிறது. ஆனால் வேட்கை, ஆர்வம் என்னும் பொருளில் அச்சொல்லைப் பயன்படுத்துவோமாயின், 'மலரினும் மெல்லிது காமம்' என்னும் சொற்றொடருக்குப் பொருள் புலப்படும். மெய்யுறு புணர்ச்சி மலரினும் மெல்லிது என்பதை விட, 'உள்ளப்புணர்வு' மலரினும் மெல்லிது என்பதே பொருந்தும். இரு மனித உள்ளங்கள் உண்மையிலேயே மலரினும் மெல்லியவை. ஈருடல்கள் புணர்வது அன்று; ஈருயிர்களை இணைக்கும் இணைப்பே மலரினும் மெல்லிது. ஏனெனில், அவற்றை இணைப்பது அன்பு. அன்பைவிட மெல்லிது வேறுண்டா? அஃதாவது, ஒருவர் மீது மற்றவர்க்குள்ள வேட்கை, ஆர்வம், காதல் இருவரையும் இணைக்கும் வலிமை கொண்டவை. இவ்வலிமை மிகமிக நுண்ணிது; மலரினும் மெல்லிது!

உலகில் ஆணும் பெண்ணுமாகிய இருவரிடையே உள்ள காதற் பிணைப்பு இத்துணை மெல்லியது என்றால், நுண் பொருளாகிய ஆன்மாவையும் பரம நுண் பொருளாகிய இறைவனையும் இணைக்கும் சக்தியை என்னென்போம்!

இத்தகைய 'மலரினும் மெல்லிதாகிய காமத்தை நுகர்பவர் சிலர்' என்கிறார்.

இஃது உலகக் காதலர்களுக்குப் பொருந்துவதைவிட, ஆன்மா - இறைவனாகிய நுண் பொருள் காதலர்க்கே நன்கு பொருந்தும். உண்மையில் இறைவனோடு இத்தகைய நுண்ணிய இணைப்பை நுகரும் ஆன்மாக்கள் வெகுசிலவே! 'சிலரதன் செவ்வி தலைப்படுவார்'.

1290. ''கண்ணின் துனித்தே கலங்கினாள் புல்லுதல்
என்னினும் தான்விதுப் புற்று.''

இதுவுமது.

## புணர்ச்சி விதும்பல்
### சுருக்கம்

1281. ''உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்திற்கு உண்டு.''

மதுவினை உள்ளத்தால் நினைத்தவுடன் மகிழ்ச்சியடைவதும், கண்ணால் கண்டதும் களிப்புறுதலும் நிகழ்வதில்லை. காதலரை நினைத்ததும், கண்ணால் கண்டதும் பெரு மகிழ்ச்சி நிகழ்வதுண்டு. பேரின்பக் காதலரைப் பொறுத்த மட்டில் இவ்வுலக வாழ்வில் உள்ளவரை அவரை நினைத்தாலே போதும், இன்பம் பொங்கும். மறுமையில் நேர்முக தரிசனை பெறும்போது அளவில்லாப் பேரின்பம் உண்டாகும்.

1282. ''தினைத்துணையும் ஊடாமை வேண்டும்
பனைத்துணையும்
காமம் நிறைய வரின்.''

இறைவனைப் பொறுத்த 'மட்டில் மேற்கூறிய மகிழ்வு வேண்டுமாயின், ஒரு சிறிதும் (தினையளவும்) பிணங்குதல் (பிரிதல்) நிகழலாகாது. மனத்தாலும் பிரிதல் ஒவ்வாது. காதல் (பனை போல்) பெருகும்போது இத்தகைய பிணக்கம் நிகழ்வதற் கில்லை. ஆகவே அன்பு எந்நேரமும் பெருகுமாறு உன்னிப்பாயிருத்தல் வேண்டும்.

1283. ''பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்
காணாது அமையல் கண்.''

பேரின்பக் காதலர் (இறைவன்) தம் திட்டப்படி ஆன்மாவை விரும்பாதது போல், தம் விருப்பப்படிச் செயல் புரிந்தாலும், ஆன்மா அவரை உள்ளத்தால் நினைந்து நினைந்து ஏங்குதலை விடலாகாது.

1284. ''ஊடற்கண் சென்றேன்மன் தோழி அதுமறந்து
கூடற்கண் சென்றதுஎன் நெஞ்சு.''

''பேரின்பக் காதலர் என்னை விரும்பாதது போல் காணப் படும்போது பிணங்குதலை மேற்கொண்டேன். ஆனால், அவர் மீண்டும் என்னை விரும்புவது போல் அருள் புரியத் தொடங்கும் போது முன்பிருந்த ஊடலை மறந்து உடனே அவரோடு கூடுதலை மேற்கொண்டேன்.

இறைவனது அருள் அன்பு எதிர்க்க இயலாதது.

1285. ''எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல்
கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து.''

எழுதும்போது எழுதும் கோலின் மீது கவனம் செல்லுவதில்லை. எழுத்தின் மீதே செல்லும். அதுபோலப் பேரின்பக் கணவனைக் கண்டதும் கவனமெல்லாம் உடனே அவன்மீது சென்றது. (உள்ளத்தால்) காணாத போது கவனம் எங்கெங்கோ செல்லும்.

1286. ''காணுங்கால், காணேன் தவறாய காணாக்கால்
காணேன் தவறல் லவை.''

இறைவனாகிய காதலனை ஞானக் கண்ணால் காணும் போது அவனிடத்தில் எக்குறையும் காண இயலவில்லை— கண்டதால் ஏற்படும் இன்பத்தின் விளைவால். அங்ஙனம் காணாத போது எல்லாமே அவனிடத்துத் தவறாகத் தெரிகின்றது (ஒரு வித மனமாறாட்டத்தினால்); அஃதாவது, அவன் இரக்கமற்றவன்; என் கவலையைக் காணாதவன் என்றெல்லாம் குற்றம் காண்கின்றேன் என்றவாறு.

1287. ''உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல்
பொய்த்தல் அறிந்தென் புலந்து.''

'ஒருவன் தன்னை இழுத்துக் கொண்டுபோகக்கூடிய வெள்ளத்தில் பாய்வதுபோல், காதலரிடம் பிணங்குவதால், எப்பயனுமில்லை என அறிந்தும், என்னை ஆபத்துக்குள்ளாக்கக் கூடிய அந்நிலைக்கு என்னை ஆளாக்கிக்கொள்வது எத்துணை அறியாமை'. அவனது அருள் திட்டத்தை அறியாமல் இறைவனோடு பிணங்குவதால் தனக்கே பேராபத்து.

1288. ''இளித்தக்க இன்னா செயினும் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.''

''என் உள்ளத்தைக் கவர்ந்துகொண்ட தெய்வீகக் கள்வனாகிய இறைவா! தன்னை உண்டு களிப்புற்றவர்க்கு இழிவு தரக்கூடிய துன்பமே செய்திடினும், கள்ளை மேன்மேலும் விரும்புவது போல, உன் காதலுறவு எனக்குப் பலமுறை அச்சமும் கவலையும் தந்தாலும் நீ மேன்மேலும் அன்பு செய்யப் படுவதற்கு உரியவன்!'' (மார்பு என்றது நெஞ்சில் ஊற்றெடுக்கும் அன்பே).

1289. ''மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
செவ்வி தலைப்படு வார்.''

பேரின்பக் காதலன்பு, இம்மைக் காதலர் அன்பினும் மெல்லிது - மேன்மையானது - துல்லியமானது - புனிதமானது; அதைப் பெறுபவர் சிலரேயாவர். (பலரும் அதைத் துய்க்க முயல வேண்டும் என்றவாறு).

1290. ''கண்ணின் துனித்தே கலங்கினாள் புல்லுதல்
என்னினும் தான்விதுப் புற்று.''

இறைவன் கூறுவது: ''என் காதலி (ஆன்மா) என் பிரிவை ஆற்றாமல் ஒன்றும் சொல்லவில்லை. கண் சிவக்குமாறு வருந்தினாள். ஆனால், நான் பிரிவை நீக்க வந்தபோது, என்னோடு சேர்ந்து இன்புற அவள் மிக மிக விரும்பியதால் முன்பிருந்த வருத்தத்தையெல்லாம் மறந்து விட்டாள்.'' (ஆன்மா இறைவனை அடைய விரும்பும் அளவுக்கே அவன் ஆன்மாவை நெருங்குகிறான். அந்த அளவுக்கே பிரிவாற்றாமையும் குறையும் என்றவாறு).

# 130. நெஞ்சொடு புலத்தல்

ஆன்மா, இறைவனை அடைய விரையும் நெஞ்சுடன் பிணங்குதல்.

1291. "அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீஎமக் காகா தது."

"இவ்வளவு ஆர்வமுடன் நீ அவனை (இறைவனை)அடைய விரும்பியும் அவன் உன்னை நினைந்து உனக்கு உதவ வராமல் இருப்பது கண்டும், நெஞ்சே! நீ மட்டும் ஏன் அவனை நினைத்த வண்ணமாய் வருந்துகிறாய்?"

"இறைவனை இன்னும் அடைய இயலவில்லையே! அவர் எனக்கு இன்னும் அருள் கூரவில்லையே! அவரை இவ்வளவு நினைந்து நினைந்து உருகியும் அவர், எனக்குதவ இன்னும் மன மிரங்க வில்லையே" என்னும் ஏக்கத்தால் எழும் குரல் இது.

இறைவன் மீது கோபிக்கும் குரல் அன்று. அவன் மீது உள்ள பேரன்பால் எழும் குரல். அவன் மீது குற்றம் கூறும் குரல் அன்று.

ஏற்ற நாள் வரும்வரையில், ஆன்மா பேரின்பத்துக்குத் தன்னைச் சரியான முறையில் தயாரிக்கும் வரையில், இறைவன் ஆன்மாவை ஆட்கொள்ள வாரார். இதையுணர்ந்து பொறுமை யுடன் அவரது வருகைக்காகக் காத்திருப்பதே முறை.

1292. "உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்
செறாஅரெனச் சேறிஎன் நெஞ்சு."

"இறைவன் என் மாட்டு அன்பில்லாதவர் போல் தோன்று கிறார். எனினும், நான் அவரிடம் சென்றால், சினவாமல் சேர்த்துக் கொள்வார்! அத்துணை இரக்கமும் அன்பும் அவரிடம் உள்ளது. அன்பில்லாதவர் போல் தோன்றுவது சிறிது காலத்திற்கே!"

1293. ''கெட்டார்க்கு நட்டார்இல் என்பதோ நெஞ்சேநீ
பெட்டாங்கு அவர்பின் செலல்.''

''நெஞ்சே! நீ என்னை விட்டு, என்னைப்பற்றிக் கவலையுறாது என் காதலரிடம் செல்ல விரைகின்றாயே, ஏன்? நான் நொடித்துப் போனவள்; நொடித்தவர்க்கு உறவில்லை என்னும் உலக நடையின் காரணமோ?

1294. ''இனிஅன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று.''

இதுவுமது.

1295. ''பெறாஅமை அஞ்சும் பெறின்பிரிவு அஞ்சும்
அறாஅ இடும்பைத்தென் நெஞ்சு.''

மிகுதியான துயரத்தில் எழும் துயரக்குரல் இது; வேறன்று. இறைவனை அடையாதபோது, ஆன்மா அவனை அடையாமையால் துன்புறுகின்றது. அடைந்த பின்னர் மீண்டும் ஏற்படக் கூடிய பிரிவை எண்ணி வருந்துகிறது. இங்ஙனம் 'என் உள்ளம் தீராத துன்பத்தையுடையதாயிருக்கின்றது' எனப் புலம்புகின்றது.

1296. ''தனியே இருந்து நினைத்தக்கால் என்னைத்
தினிய இருந்ததுஎன் நெஞ்சு.''

1297. ''நாணும் மறந்தேன் அவர்மறக் கல்லாஎன்
மாணா மடநெஞ்சிற் பட்டு.''

1298. ''எள்ளின் இளிவாம்என்று எண்ணி அவர்திறம்
உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு.''

நீக்கமற நிலைத்திருக்கும் பேரின்பம் கிட்டும் வரையில் இதுவே ஆன்மாவின் தவிப்பு நிலை. ஆர்வமுடன் இறைவனின் அன்புக்கு ஏங்கி நிற்கும் ஆன்மாவுக்கு, அவன் சமயா சமயங்களில் ஆறுதல் தர வருகிறான். ஒரு சிறிதேனும் தன் அன்பை அவன் ஆன்மாவுக்கு உணர்த்தி ஆறுதல் அளியாவிடின், ஆன்மா உலக வாழ்வின் துன்பத்தால் - தனிமையால் - (1296) அவதியுற்று அவநம்பிக்கைக்கு உள்ளாக நேரிடலாம். மனிதனின்

அவல நிலையையும் பலவீனத்தையும் நன்கறியும் இறைவன், அவன் மீது இரங்கி இத்தகைய ஆறுதலைச் சமயா சமயங்களில் வருவிக்கின்றான். இதனால், ஆன்மா புதுத்தெம்புடன், உலக வாழ்வின் துன்ப நிலையைப் பொறுமையுடன் ஏற்றுக்கொள்ளத் துணிகிறது. இங்ஙனம் ஆன்மா இறைவனை அடையும் அச்சிறு பொழுதில் இன்பம் அடைகின்றது. ஆனால், அடுத்து இறைவன் ஆன்மாவை விட்டு நீங்கும்போது - அந்த இன்பத்தை எடுத்துவிடும்போது - ஆன்மா மீண்டும் துன்பத்துக் காளாகிறது. இங்ஙனம் மாறி மாறி வரும் இன்ப நிலையும், துன்ப நிலையும் இவ்வுலக வாழ்வு நீடிக்கும் வரை ஆன்மாவுக்குத் தேவைப்படுகிறது.

இவ்வுலகிலேயே மாறாத இன்பத்தை அளித்துவிட்டால், 'இவ்வுலகமே சதம்' என்றிருந்துவிடும் ஆன்மா. மறுமையை அதிகம் நினையாதிருந்து விடும். பேரின்பத்துக்கு ஒரு நல்ல பயிற்சியே இத்தகைய நிலை என்றறிக.

இந்நிலையில் ஆன்மா ''என் காதலர் என் ஏக்கத்தைப் பொருட்படுத்தாது விட்டாரே''! எனச் சினந்து, ''இனி நானும் அவரை பொருட்படுத்தாது விடுவேன்''! என எண்ணக் கூடும். ஆனால், (மேற் சொன்ன காரணங்களை மனத்தில் கொண்டு) விரைவில் ''அங்ஙனம் நானும் அவரைப் பொருட்படுத்தாமற் போவேனாயின், அஃது எனக்குத்தான் இழிவு!'' எனத் தெரிந்து, அவர் திறம் 'உள்ளும்' அவர் பக்கமே தன்சிந்தனையைச் செலுத்தும். அவரது அருள் திறத்தை எண்ணும்.

உண்மையில் ஆன்மா, இறைவனைப் பொருட்படுத்தாவிடின் அஃது ஆன்மாவுக்கு இழிவேயன்றி இறைவனுக்கன்று. இழிவு மட்டுமன்று; இழப்புங்கூட; என்ன நேரினும் இறைவனை. மனத்திருத்தலில் ஆன்மா, அழுந்த முயல வேண்டுமேயன்றி, கைவிடலாகாது. கைவிட்டால் அதனால் குறைவெய்துவது ஆன்மாவேயன்றி இறைவன் அல்லன்.

ஆகவே, இறைவன் ஆன்மாவைத் தன்னோடு இணைத்துக் கொள்ளும் இத்திட்டத்தில் அவனது திருவுளத்துக்குப் பணிந்து நடத்தலே முறையாகும்.

குழந்தைக்குக் கசப்பான மருந்து தரும்போது, 'என் அன்னைக்கு என் மீது சிறிதும் அன்பில்லை!' என்றுதான் குழந்தை நினைக்கும். ஆனால், அந்த அன்பை வெளிப்படுத்தும் முயற்சியாகவே உள்ளது அந்தக் கசப்பான மருந்துதரும் செயல். ஆன்மாவின் காதல் நோய் தீர இறைவன் இத்தகைய கசப்பான மருந்தைப் பயன்படுத்த வேண்டியிருக்கின்றது. அஃதாவது, வேளா வேளைகளில் காதலினால் விளையும் சுவையை நீக்கிவிட வேண்டியிருக்கிறது. உலக வாழ்வின் கசப்பை ஓரளவு சுவைத்துத் தீர வேண்டியிருக்கிறது. இந்த நிலையில் ஆன்மா உண்மை உணர்ந்து, தான் வரிந்து கொண்ட தெய்வக் காதலரின் நினைவு தன் நெஞ்சில் அகலாமலிருக்குமாறு பார்த்துக்கொள்ள வேண்டும்.

இதற்குத் துணை செய்யக் கூடியது, இறைவன் அருளொடு கூடிய தன் நெஞ்சமேயாம்.

1299. ''துன்பத்திற்கு யாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சம் துணையல் வழி.''

1300. ''தஞ்சம் தமரல்லர் ஏதிலார் தாமுடைய
நெஞ்சம் தமரல் வழி.''

''நான் துன்புறும் வேளையில் என்நெஞ்சே! நீயும் எனக்குத் துணை நின்றாய் இல்லையே!'' என்று ஆன்மா தன்னைத் தேற்றிக்கொள்ள வேண்டும்.

இங்குக் கூறப்படும் பிரிவாற்றாமையை, ஆன்மா, தனக்குள்ள இயல்பான வலிமையால் தாங்கிக்கொள்ள இயலாது. எனினும், 'அருள் சேர்ந்த நெஞ்சில்' இத்தகைய வலிமை பிறக்கும். இறைவனைப் பிரிந்து நிற்பதால் நிகழக் கூடிய ஆற்றாமையைத் தாங்கிக் கொள்ளத் தன் நெஞ்சே தனக்குத் துணை செய்ய வேண்டும். இதற்குத் தன் காதலரே துணை செய்கின்றார்.

உலகத்துக் காதலரால் இஃது இயலாது. இறைவனால் இயலும். அஃதாவது, துணை செய்யுமாறு தம் அருட்சக்தியால் ஆன்மாவை (நெஞ்சினை) நிரப்ப இயலும். 'யாரே துணையாவார்?' (1299) என்னும் வினாவுக்குப் பதில் இல்லாமல் இல்லை. என் காதலரே எனக்குத் துணையாவார்' என்றறிக.

# நெஞ்சொடு புலத்தல்

## சுருக்கம்

தன் நெஞ்சொடு தானே புலம்புதல் - வருந்துதல் -(தேடும் இன்பத்தை அடைய முடியாததால்).

1291. ''அவர்நெஞ்சு அவர்க்காதல் கண்டும் எவன்நெஞ்சே
நீஎமக்கு ஆகா தது.''

''நெஞ்சே! என் காதலருடைய நெஞ்சம் என்னை நினையாமல் தமக்குள்ளே அடங்கிக் கிடப்பது போல் உள்ளதை நீ காண்கிறாய். இருந்தும் நீ என்னை நினையாமல் அவரையே நினைத்துக் கொண்டிருக்கிறாயே!'' (தானும் தன் நெஞ்சும் வேறாக உள்ளது போல் கற்பனை செய்து தன்னையே நொந்து கொள்வதாகும்). 'இறைவன் நம்மைக் கவனியாமல் இருப்பது போல் தோன்றினும், நெஞ்சம் எந்நேரமும் அவன்பால் ஈர்க்கப்படவேண்டும்' என்னும் கருத்தை வலியுறுத்துமாறு இங்ஙனம் கற்பனையாகக் கூறப்படுகிறது.

1292. ''உறாஅ தவர்க்கண்ட கண்ணும் அவரைச்
செறாஅரெனச் சேறிஎன் நெஞ்சு''

''முன்பு உன்னை அணைக்காதவரை (உன்னிடம் அன்பற்றவர் போல் தம்மைக் காட்டியும்) இப்போது சென்றால் என்னைப் புறக்கணிக்க மாட்டார் என எண்ணி மீண்டும் அவரை நெருங்குகின்றாயே! என்ன இது? பேதை நெஞ்சே!'' (பேரின்பக் காதலர், அன்பு காட்டாதவர் போல் தோன்றுகிறாரேயன்றி, உண்மையில் புறக்கணிப்பதில்லை. ஆன்மா இறைவனைப் புறக்கணித்தால்தான் அவனது காதல் தடைபடும். ஆகவே, எந்நிலையிலும் அவரது அன்பை நாடு என்றவாறு).

1293. ''கெட்டார்க்கு நட்டார்இல் என்பதோ நெஞ்சேநீ
பெட்டாங்கு அவர்பின் செலல்.''

நெஞ்சே! கெட்டவர்க்கு அஃதாவது, தீமை செய்து பின்னர் திருந்துவோர்க்கு (இடைவிடாக் காதலனாகிய இறைவன் தவிர வேறு) நண்பர் யாரும் இரார் என்னும் காரணத்தால்தான் நீ இப்படி மீண்டும் மீண்டும் அவரிடம் செல்கிறாய். (உண்மையில்

கெட்டவர்களை இறைவன் அணைப்பது போல் வேறு யாரும் இல்லை. தன் குற்றம் உணர்ந்து அவனை அணுகுவதொன்றே நிபந்தனை).

1294. ''இனிஅன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று.''

''நெஞ்சே! உன் இறைவன் உன்னைக் கவனியாது இருந்ததை நினைத்து அவருடன் பிணங்கினால், உனக்கு இன்பம் வேறு எங்ஙனம் கிடைக்கும் என்று நினைக்கிறாய்? ஆதலால், நீ பிணங்குவது தவறு என உனக்கு எடுத்துரைப்பவர் யார்?'' (இறைவனது அருளுக்காக எந்நிலையிலும் ஏங்கி யிருத்தலே முறை. நினைத்தவுடன் அவரது அன்பின் இனிமை கிடைப்பது இம்மையில் இயலாதது).

1295. ''பெறாஅமை அஞ்சும் பெறின்பிரிவு அஞ்சும்
அறாஅ இடும்பைத்தென் நெஞ்சு.''

''என் நெஞ்சம் ஓயாத துன்பம் தருவது! காதலர் அன்பைப் பெற்று இனிமை சுவைக்க இயலாவிடில் அச்சத்தால் தவிக்கும். மீண்டும் பெற்றால் 'எங்கே இழந்து விடுவேனோ' என்று அஞ்சு கின்றதே!''

இறைவனது நீங்காத அன்பு இவ்வுலகில் இல்லை. மறுமையில் மட்டுமே உண்டு. இம்மை வாழ்வில் பாவம் செய்து இழக்கக்கூடும் என்னும் அச்சத்தில் வாழ வேண்டும் என்பது கருத்து.

1296. ''தனியே இருந்து நினைத்தக்கால் என்னைத்
தினிய இருந்ததுஎன் நெஞ்சு.''

''தனிமையில் நின்று இறைவனின் பிரிவை எண்ணும் போது, துன்பம் என்பது என்னை அப்படியே தின்றுவிடுவது போல் உள்ளது.'' பிரிவாற்றாமை என்பது தனிமையில் - யாருடைய ஆறுதலும் இன்றி அனுபவிக்க வேண்டிய ஒரு பரிதாபத்துக்குரிய நிலை. பேரின்பக் காதல் முதிர்ச்சிக்கு இது தேவை.

1297. ''நாணும் மறந்தேன் அவர்மறக் கல்லாஎன்
மாணா மடநெஞ்சிற் பட்டு.''

''அவரை மறக்கவேவியலாத நிலையில் அறிவற்ற என் நெஞ்சம் எதை எதையோ நினைக்கின்றது - செய்கின்றது. சில சமயங்களில் நாணமின்றிக்கூடச் செயல்புரிகின்றது!'' (காதல் பெருக்கில் பன்முறை நிகழும் 'பைத்தியச் செயல்கள்' போன்றவை கூறப்படுகின்றன).

1298. ''எள்ளின் இளிவாம்என்று எண்ணி அவர்திறம்
உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு.''

ஆன்மாக்கள் மீது அளவில்லாக் காதல் கொண்டுள்ள இறைவனை எப்போதாவது (பிரிவாற்றாமையின் காரணத்தால்) இகழ்ந்தால், அஃது ஆன்மாவுக்கே கேடு. எந்நிலையிலும் அவரது காதலையும் அதன் பேரின்ப ஆற்றலையும் நினைப்பதே முறை.

1299. ''துன்பத்திற்கு யாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சம் துணையல் வழி.''

துன்பம் வரும்போது அதை நீக்க தம்முடைய நெஞ்சமே துணை செய்யாவிட்டால் வேறு யார் துணை செய்வார்? இறைவன் செய்வார் என்றவாறு. எத்துன்ப நிலையிலும் துணை செய்யக்கூடிய வலிமை நம்மிடம் இல்லை; அவனிடமே உண்டு; அதையே நாடு என்றவாறு.

1300. ''தஞ்சம் தமரல்லர் ஏதிலார் தாமுடைய
நெஞ்சம் தமரல் வழி.''

தன் நெஞ்சமே தனக்கு உதவாத போது, தன்னோடு உறவு கொள்ளா அயலார் யார் உதவுவர்? ஆகவே, அவர்கள் அல்லர் உனக்குத் தஞ்சம். இறைவனை மட்டுமே தஞ்சமாகக் கொள்.

# 131. புலவி

ஆன்மா இறைவனோடு புலத்தலும், இறைவன் ஆன்மாவோடு புலத்தலும் கூறப்படும். 'புலத்தல்' பற்றிய இலக்கணமும் இதில் அறிவுறுத்தப்படுகிறது.

1301. "புல்லா திராஅப் புலத்தை அவருறும்
அல்லல்நோய் காண்கம் சிறிது."

"இறைவனாம் என் காதலர் என்னை விரைவில் அடையாது என்னொடு புலந்து, என்னை மிகு துன்பத்துக்கு உள்ளாக்கினார். இனி யானும், அவரோடு புலந்து, அவர் உறும் அல்லல் நோய் சிறிது காண்போம்" என்று ஆன்மா இறைவனோடு புலக்கின்றது.

இப்படியும் நிகழுமா? நிகழக்கூடுமா? என வினவலாம். நிகழலாகாதெனினும், குறிப்பிட்ட சில சூழ்நிலைகளில் நிகழக் காண்கிறோம்.

இறைவனுக்கு அன்பு செய்து, தீமையைத் தவிர்த்து, நன்மையே செய்பவர்கூட, சில சமயங்களில் எதிர்பாராத துன்பத்துக்காளாவதைக் காண்கிறோம். அநியாயம், அக்கிரமம் செய்பவர், இறைவனை மதியாதவர், நாஸ்திகர் பலர் பெரும்பாலும் இன்பமுடனும் பெருமிதத்துடனும் வாழ்வதைக் காண்கின்றோம்.

இத் தலைகீழான நிலையைக் காணும்போது, நல்லவர்கள் "நான் ஏன் துன்புற வேண்டும்? நாள்தோறும் நான் இறைவனை வேண்டுகிறேன். அவனுக்கு அன்பு செய்து கொண்டிருக்கிறேன். அப்படி இருக்கும் எனக்கு ஏன் இத்துன்பம்? இறைவா! உன் மனம் என்ன கல்லா? இரும்பா?*

* உதாரணமாகத் தனக்கு ஒரே ஊன்றுகோலாக அல்லது ஒரே அன்புக் குழந்தையாக இருந்த ஒருவர், எதிர்பாராத விபத்தில் அகப்பட்டு அவலமாக மடியும்போது, இத்தகைய மனக்கொதிப்புச் சொற்கள் சொல்லத் தோன்றுவதுண்டு.

அக்கிரமம் செய்வோர் இன்பமாய் வாழ, நல்லவர்கள் அவதிப் படுவது என்ன நீதி? இனி நான் கோவிலுக்குப் போவதில்லை. இனி நான் உன்னை வணங்கப் போவதில்லை,'' என்றெல்லாம் எண்ணி அவன் மீது சினந்துகொண்டு, அவனோடு புலப்பவர்கள் இல்லாமல் இல்லை!

இவ்வுலகக் காதலர் ஒருவரோடு ஒருவர் புலத்தலால், உண்மை யாகவே இரு திறத்தாரும் துன்பத்துக்கு ஆளாகி வருந்த நேரிடலாம். ஆனால், அவ்விரு திறத்தாருள் ஒருவர் இறைவனாக இருந்தால் மற்றவர் (ஆன்மா) புலத்தலால் இறைவனுக்குத் துன்பம் ஒன்றும் விளையப்போவதில்லை. அதனால் துன்புறுவது ஆன்மாவே! அறியாமை, துன்பத்தின் கொடுமை, மன உறுதி யின்மை இவை காரணமாக ஆன்மா இங்ஙனம் புலக்கும்போது, அதன்மீது ஒரு நாளும் குறைவுபடாத காதல் கொண்டுள்ள இறைவன் ஓரளவு வருந்துகிறார் எனினும், மிகையாகாது. வருந்துவதோ தனக்காக அன்று; தான் இவ்வளவாகக் காதலிக்கும் ஆன்மாவுக்காக! பரிவிரக்கத்தால்.

இக்கருத்தில் இறைவன் ஐந்தவித்தானாகித் துன்புற்றதை எண்ணும்போது, இஃது எவ்வளவு உண்மை! 'பாவம் என்னும் கொடுமையினை ஆன்மா செய்து - இறைவனோடு மிக மிகப் புலந்து எத்துணை துன்பத்தை ஐந்தவித்தானாகிய இறைவனுக்கு இழைத்தது என்பதை எண்ணும்போது, இக்குறளில் கூறியுள்ளது அவ்வளவும் உண்மையென்றே புலப்படவில்லையா? இறைவ னுக்குத் தன் பாவத்தால் துன்பத்தை விளைவிக்க ஆன்மா எண்ணும் கொடுமையை என்னவென்பது? எனினும், இடைவிடாக் காதலனாகிய அவன் எப்படியும் ஆன்மாவை ஈடேற்றவே நினைக் கின்றான்!

பிணங்கினவர் கூடும்போது ஏற்படும் இன்பம் இரு மடங்கு சுவைக்கற்பாலது. இஃது அனுபவத்தில் நாம் அறிந்தது. இஃது இறைவனுக்கும் ஆன்மாவுக்குமிடையே (மேற் சொன்னவாறு) ஏற்படக் கூடிய புலத்தலைக் குறித்தும் சொல்லக் கூடும். நீக்க மற்றது, பிரிவாற்றாமையை அறியாதது மறுமைப் பேரின்பம் ஒன்றே.

இம்மை இன்பம் நிறைவறியாதது; துன்பம் கலந்தது என்னும் இலக்கணத்திற்கு ஒப்ப இந்தப் புலத்தல் இவ்வுலகில்

உள்ள வரையில் நிகழ வேண்டியதொன்றாகும். ஆகவே, புலத்தலுக்குப் பின்னர் (துன்பத்திற்குப் பின்னர்) வரும் இன்பம், உணவுக்கு உப்புப் போன்றதென்பது பொருத்தமே!

ஆயினும், உப்பு மிகுந்து விட்டால் (1302) சுவை பாதிக்கப் படுவது போல, மறுமை வாழ்வு வரும் முன்னர், இவ்வுலக வாழ்வு உள்ள வரையில், புலத்தல் அறியாத இன்பம் ஒன்றே நீடித்திருந் தால், அதுவும் ஒரு விதத்தில் சுவையற்றதாகிவிடும். அஃதாவது பேரின்பத்துக்குப் பயன் தரக்கூடிய, பேரின்பத்தைப் பன்மடங்கு சுவைக்க உதவக்கூடிய இன்பமாகாது.

எவ்வளவுக்கெவ்வளவு இம்மையில் ஒருவன் இன்பத்தையே நாடி, துன்பம் சிறிதும் பொறுக்காமல் இருப்பானோ, அவ்வளவுக் கவ்வளவு அவனுக்கு மறுமை வாழ்வின் இன்பம் பரிணமிக்காது எனலாம். மாறாக, ஒருவன் இம்மையில் ஐந்தவித்தானின் துன்ப வாழ்க்கையை நினைந்து, தானும் உலக வாழ்வின் துன்பத்தை ஏற்கும் அளவுக்கு முனைந்து நின்றால், மறுமையில் பேரின்பச் சுவை பரிணமிக்கும் என்க.

1302. ''உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல்.''

இனி, ஆன்மா இறைவனோடு அளவுக்குமேல் புலத்தலும் தீமை பயக்கும். அளவுக்குமேல் அஃதாவது, தன் நிலையை உணராமல், தாழ்மையுடன் அவனது அருளை இறைஞ்சுதற்குப் பதிலாக, அவன் மீதே குற்றம் சுமத்துவதுபோல் நடந்துகொள்வ தாகும். இங்ஙனம் நிகழும்போது, இறுதியில் ஆன்மாவுக்குத் துன்பமே உண்டாகும்.

1303. ''அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.''

அங்ஙனமே இறைவன், அறியாமையாலோ பலவீனத் தாலோ தம்மோடு புலக்கும் ஆன்மாவை அப்படியே விட்டு விட்டால் துன்பத்தின் மேல் துன்பமே வந்து விழும்.

1304. ''ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று.''

1305. ''நலத்தகை நல்லவர்க்கு ஏஎர் புலத்தகை
பூஅன்ன கண்ணா ரகத்து.''

1306. ''துனியும் புலவியும் இல்லாயின் காமம்
கனியும் கருக்காயும் அற்று.''

இதை நன்கறிந்தே இறைவன் தம்மைப் பிரியும் ஆன்மாவை விட்டு விடுவதில்லை! அதை எப்படியும் ஈடேற்றவே விழை கின்றார். இந்த ஈடேற்றத் திட்டத்தின் ஓர் அம்சமே சமயா சமயங்களில் இறைவன் ஆன்மாவுக்குத் துன்பம் அளிப்பதாகிய புலத்தல் என்க. இறுதியில் இன்பமே அளிப்பதாயினும், அதிலும் 'ஒரு துன்பம் உண்டு.' இப்புலவி நிலையே இனி தான கனிபோல், இன்பம் தருவதற்கேற்றதென்பதாம்.

1308. ''நோதல் எவன்மற்று நொந்தாரென்று அஃதறியும்
காதலர் இல்லா வழி.''

1309. ''நீரும் நிழலது இனிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது.''

ஆனால், இப்புலவி தன் காதலரின் நோயையறிந்து அவர் மீது அன்பு சிறிதும் குறைபடாமற் காத்துக்கொண்டாலன்றித் துன்பத்துக்கே ஏதுவாகும்.

ஆன்மாவின் பேரின்ப நலன் கருதிச் சில சமயங்களில் அதனைத் துன்பத்துக்கு உட்படுத்த வேண்டியிருப்பினும், அங்ஙனம் செய்வது அவனுக்கு வருத்தத்தையே விளைவிக்கும். அவனவன் செய்த பாவச் செயல்களுக்குக் கழுவாயாக, ஐந்தவித்தானையும் அவனது தியாக அன்பையும் நினைந்து சிறிது காலம் சிறு துன்பங்களையேனும் ஆன்மா பட்டுத் தீர்ந் தாலன்றிப் பேரின்ப நிலைக்குச் சரியான பரிபக்குவம் பெறாது. (இஃது, அவனது மீட்புத் திட்டத்தைச் சார்ந்தது) என்பதால், இங்ஙனம் ஆன்மா துன்புற வேண்டியிருக்கிறது.

மேலும், விரைவில் தான் தரவிருக்கும் பேரின்பத்தை ஆன்மா நுகர்ந்து, தன் அன்பில் அமிழ்ந்து நீக்கமற்ற இன்பத்தைச் சுவைக்க வேண்டுமென இறைவனாகிய காதலர் எவ்வளவோ ஆர்வமுடன் விரும்புகின்றதையும், அதனால் அவனுக்கு ஏற்படும் ஒருவித நோயையும் ஆன்மா எளிதில் புரிந்துகொள்ள இயலாமலிருக்கிறது.

1310. ''ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சம்
கூடுவே மென்ப தவா.''

இதை ஆன்மா நன்கு புரிந்துகொண்டு, ''எவ்வளவுதான் என் காதலர் இன்னும் என்னோடு ஊடினாலும் விரைவில் நெஞ்சம் கூடுவேம்'' என்று பேராவலுடன் எதிர்பார்க்க வேண்டும்.

## புலவி
### சுருக்கம்

பேரின்பக் காதலைத் துய்க்கும் விஷயத்தில் நிகழக்கூடிய பிணக்கச் செய்திகள்.

1301. ''புல்லா திராஅப் புலத்தை அவர்உறும்
அல்லல்நோய் காண்கம் சிறிது.''

நினைத்த போதெல்லாம், நினைத்தவாறு தெய்வக் காதல் இனிமையைச் சுவைக்க இயலாததால், ஆன்மா தெய்வக்காதலர் மீது 'கோபிப்பது போல'ப் பிணங்குவதைக் கூறுகிறது குறள். இஃது ஆன்மாவின் ஒருவித மாறாட்ட நிலை - பலவீன நிலையே. இதனால் தெய்வக்காதலர் வருத்தம் சிறிது படட்டும் என்பதும் மாறாட்டத்தின் விளைவே. ஒரு நாளும் இறைவன் எந்நிலையிலும் வருத்தத்துக்குள்ளாவதில்லையன்றோ?

1302. ''உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல்.''

உணவுக்குச் சுவை ஊட்டுவது உப்பு. காதலுக்கு இனிமை தருவது இத்தகைய 'பிணக்க நிலை.' அஃதாவது, அன்பு

இல்லாதது போல் காட்டிக்கொள்ளும் நிலை. இந்நிலை நீடிக்க நீடிக்க அன்பு உறுதிபெறும். ஆனால், ஆன்மாவின் பலவீனத்தை இறைவன் அளவுக்கு மேலாகப் பரிசோதிப்பதில்லை. அங்ஙனம் செய்தால் உப்பு மிகுதியாகச் சேர்த்துக்கொண்டால் உணவு கெடுவது போல, ஆன்மாவின் துன்பநிலை மிக மிக நீடித்தால் மனம் உடைந்து விடும் - காதல் நீங்கி விடலாம்.

1303. ''அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.''

இறைவன் மீது ஒருவிதக் 'கோபம்' கொள்ளும் ஆன்மாவை இறைவன் புறக்கணித்து விட்டால் - அன்பால் அணைத்துக் கொள்ளாவிட்டால், அளவுக்கு மிஞ்சிய துன்பம் நிகழ்ந்துவிடும். (இதுவுமதே).

1304. ''ஊடி யவரை உணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று.''

இத்தகைய நிலையில் ஆன்மாவை இரக்கமுடன் அணைத்துக் கொள்ளாமை, ஏற்கெனவே வாடியுள்ள கொடியை அடியோடு அறுத்து விட்டது போலாகும். இறைவன் அங்ஙனம் செய்வதில்லை. ('நெரிந்த நாணலை முரியார்!' என்று இறையருட் செயலைப்பற்றிக் கூறுகிறது விவிலியம்). ஆகவே, மனம் தளர விடாமல் பேரின்பத்தை நாடிய வண்ணமாகவே இருத்தல் வேண்டும் என்றவாறு.

1305. ''நலத்தகை நல்லவர்க்கு ஏஎர் புலத்தகை
பூஅன்ன கண்ணா ரகத்து.''

ஆன்மாக்களுக்கெல்லாம் (காதல்) தலைவன் - எல்லா நற்பண்புகளும் உடைய இறைவனுக்கு இன்பமாவது, பூப்போன்ற மெல்லிய நெஞ்சினர் உள்ளத்தில் நிகழும் பிணக்கமேயாகும். ஏனெனில், அதுவே காதற் பெருக்கினை மிகுதியாக நுகர்வதற்குக் காரணமாகும். (இத்தகைய பிணக்கமே அன்பை வளர்ப்பது என முன்பு கூறியதைக் காண்க.)

1306. ''துனியும் புலவியும் இல்லாயின் காமம்
கனியும் கருக்காயும் அற்று.''

ஈண்டுக் கூறப்படும் பிணக்கம், மன வேறுபாடு போன்ற துன்பநிலை இன்றேல், காதல் அழுகிய கனி போலும் முதிராத இளங்காய் போலுமிருக்கும். அஃதாவது, துய்த்தற்குப் பயனற்றது என்க. காதல் தக்க பருவமடைய இந்நிலை தேவை என்றது.

1307. ''ஊடலின் உண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொல் என்று.''

காதலரை அணைந்து இன்புறும் நிலை நீடித்திருக்குமோ, விரைவில் நீங்குமோ என்று நினைக்கத் தொடங்கினால், ஊடலிலும் துன்பம் உண்டு; கூடலிலும் துன்பம் உண்டு; ஐயப் பாட்டினால் ஏற்படும் துன்பம்.

1308. ''நோதல் எவன்மற்று நொந்தாரென்று அஃதறியும்
காதலர் இல்லா வழி.''

நம் வருத்தம் கண்டு அனுதாபப்படுகின்றவர் இல்லாத போது வருந்துவதால் பயன் ஒன்றுமில்லை. இஃது உலக வழக்கில் நேர்வது. பேரின்பக் காதலரைப் பொறுத்த மட்டில் நம் வருத்தம் கண்டு அனுதாபப்படாமல் இருப்பவர் அல்லர் அவர். குறித்த நேரத்தில் விரைந்து வந்து அணைத்துக் கொள்வார். ஆகவே, மனம் தளராதே.

1309. ''நீரும் நிழலது இனிதே புலவியும்
வீழுநர் கண்ணே இனிது.''

நிழலில் இருக்கும் நீர், வெம்மையிலும் குளிர்ந்துள்ளதால் பருகுவதற்கு இனிதாகும். அங்ஙனமே அன்பு மிக்கவரிடத்துப் பிணங்குதலும் (அன்பின் இனிமையை மேலும் சுவைக்கத் துணை புரிவதால்) இறுதியில் இனிமை பயக்குவதாகும்.

1310. ''ஊடல் உணங்க விடுவாரோடு என்நெஞ்சம்
கூடுவேம் என்பது அவா.''

மேற்கூறிய பிணக்கத்தினால் வருந்தும்படி விட்டு வைத்திருப் பவருடன் (இறைவனுடன்) எப்படியும் கூடுவோம் என்பது அவன் மீதுள்ள அவாவின் பெருக்கேயாகும். அன்பு மிகுந்தால் பிணக்கத் தால் தீமை நிகழாது.

# 132. புலவி நுணுக்கம்

ஆன்மாவாகிய தலைமகள், இறைவனாகிய தலைமகனுடன் பேரின்பப் புணர்ச்சி (ஒன்றிப்பு) எய்துவதுபற்றிய இவ்விலக்கியத்தில் (இன்பத்துப்பாலில்) 'புலவி' என்பது ஓர் உன்னத இலக்கணமாக அமைகின்றது. 'ஊடல் இலக்கணம்' என்று இதனைக் குறித்தல் பொருத்தம். இது பற்றி முந்தின அதிகாரத்தில் கூறப்பட்டது. இவ்வதிகாரத்தில் அதே ஊடல் இலக்கணத்தின் சில நுணுக்கங்கள் விரிவாகக் கூறப்படுகின்றன.

'ஊடல் இன்றிக் கூடல் இல்லை' என்று சுருக்கமாகக் கூறலாம் இவ்விலக்கணத்தின் உட்பொருளை. ஊடல் இன்றிக் கூடலின் இனிமை நிறைவுறத் துய்க்க இயலாது; ஏன்? விளக்குவோம்.

ஆன்மா, இறைவனுடன் இடைவிடா அன்பில், புணர்ந்து, (ஒன்றித்து) பிரிவு என்பதே இராமல், அப்பிரிவினால் ஆற்றாமை என்னும் துன்பம் ஒரு சிறிதுமின்றி நீக்கமில்லா இன்பமே துய்த்துக்கொண்டிருக்கும் நிலை இம்மையைச் சார்ந்ததன்று. மறுமையில் மட்டுமே உள்ள பேரின்ப நிலையைச் சார்ந்ததாகும். அத்தகைய இடைவிடாத இன்பத்தை இம்மையிலேயே சுவைத்துக் கொண்டிருப்பது இறைவனது திட்டத்தில் இல்லை. ஏன் இந்த நிலை என்பது 'ஐந்தவித்தான்' பற்றிய உட்கருத்தை ஏற்பவர்க்கே விளங்கும். ஏனெனில், துன்பத்தின் வாயிலாகவே இன்பத்தை அடையவியலும் என்னும் கொள்கையினை உலகில் நிலை நாட்டியவர் அவர் ஒருவரே. இக்கொள்கை உலகில் ஏற்படக் காரணமாயிருந்தவனோ மனிதன். இறைவனது 'பொருள் சேர் புகழ்புரி'யாமல், பொருளற்ற தற்புகழையே விரும்பி, மருளின்பாற்பட்டு, இருள்சேர் தீவினை புரிந்ததன் விளைவாகவே துன்பம் என்னும் வினையும் உலகில் நுழைந்தது. ஆதியில் இறைவன் மனித இனத்துக்கு அருளிய இன்ப நிலையை அவன் இழந்தான்.* இந்த இழப்பு

---

* இக்கருத்துகளை எமது 'மனித இன ஒருமைப்பாடு' என்னும் நூலில் விரிவாகக் காணலாம்.

நிலையினின்று மீட்கவே இறைவன் 'ஐந்தவித்தான்' ஆனான் தன் தீவினையால் தான் வரவழைத்துக்கொண்ட துன்ப நிலையைப் பயன்படுத்தியே மீண்டும் பேரின்ப நிலையை அவன்- மனித இனம் - எய்துதல் வேண்டும் என்று திட்டமிட்டான். இத்திட்டத்தின் பயனே, 'துன்பத்தின் வாயிலாய் இன்பம்' என்றது. 'என்பும் உரியர் பிறர்க்கு,' என்றபடி, தியாகமும் துன்பமும் பிறர்மீது உள்ள அன்பினை எண்பிக்கும் உயரிய சாதனம் என்பதை அதே ஐந்தவித்தான் தன் பலிவாழ்வினால் காட்டினான். 'என்பும் உரியர் பிறர்க்கு' என்னும் இலக்கணத் துக்கு இலக்கியமானான்.

இத்துன்பத்தின் ஓர் அம்சமே, **ஊடல்** என்பதும்; அவ்வூட லினால் உளதாகும் மனநோயும். அன்பின் உச்சநிலையை எய்து வதற்கு இவ் 'ஊடல்' என்பது அரியதொரு சாதனம் என்பது உலகியலிலிருந்துகூட அறியவியலும். இரு நெருங்கிய நண்பர்கள் - ஒருவர் ஏதோ தவறு இழைத்துவிட்டார். இருவ ரிடையே புலவி ஏற்பட்டுவிட்டது. இருவரும் வருந்துகின்றனர். உண்மையான அன்பு இருக்குமிடத்துப் புலவி என்பது நிலைத் திருக்க இயலாதாகையால், சிறிது காலத்துக்குப்பின் தவறு இழைத்தவர் தவறு உணர்ந்து கழுவாய் தேடுகின்றார்; ஊடல் நீங்குகிறது. அன்பும் இன்பமும் முன்பைவிடப் பெருகுகிறது. எத்தவறும் இழைக்காமலே, ஏதோ தவறு நிகழ்ந்துவிட்டதாகத் தவறாக எண்ணி, இப்புலவி நிகழ்ந்தது என்று வைத்துக் கொள்வோம். சிறிது காலத்திற்குப் பின்னர் தவறாக எண்ணிய தவற்றுக்காக மனம் நோவதால், அன்பும் இன்பமும் மேலும் பெருகுவதைப் பன்முறை உலகியலிலேயே காண்கிறோம் அன்றோ! ஆகவே, பிறர் அன்புக்காக ஏங்கித் துன்புறுவதில் விளையும் இன்பத்துக்கு இணையே இல்லையெனலாம்.

இந்த அடிப்படையில்தான் ஆன்மா - இறைவனாகிய காதலரிடையிலும் புலவி நிகழ்கின்றது சில வேறுபாடு களுடன். அவையாவன:

1. **இறைவன்** எவ்விதத் தவறும் இழைத்தல் இயலாது. அவன் செய்வதெல்லாம் நன்மையாகத்தான் இருக்கும். அச்செயலை விளங்கிக்கொள்ள இயலாத ஆன்மா இறைவன்மீதே குற்றம் சுமத்துவது போலக் காட்டப்படுகிறது; இந்தப் 'புலவி

நுணுக்க' அதிகாரத்தில். இக்கூற்றுகள் எல்லாம் மிகைப்படக் கூறப்பட்டவை; அல்லது உருவகமாகக் கூறப்பட்டவையேயாகும்.

2. ஆன்மா உண்மையாகவே தவறு இழைக்கக்கூடும். அதற்காக வருந்திக் கழுவாய் தேடினால் இறைவன் அவ்வான்மாவின் மீது முன்னைவிட அதிகக் காதல் வெளிப்படுத்த முன்வருவதைத் துய்த்துணர்ந்தவர்கள் கூறவியலும். தான் செய்த குற்றத்தின்பொருட்டே இந்த ஊடல் நிகழ்ந்ததெனினும், அதனால் இறுதியில் இன்பமே பெருகுகின்றதைக் காண்கிறோம். இதுவே ஈண்டுக் கூறப்படும் புலவி நுணுக்கமும் அடுத்த அதிகாரத்தில் கூறப்படும் ஊடல் உவகையும் என்க.

ஆகவே, ஊடல் இன்றி உண்மைக் கூடல் இல்லை; ஊடல் துன்பம் இன்றிக் கூடல் என்னும் அன்புச்சிகரம் எய்துதல் இல்லை. இஃது ஆன்மீக வாழ்வில் ஞானாசிரியர்கள் கண்ட அனுபவம். இதைக் கிறித்தவ ஞானாசிரியர்கள் (சித்தர்கள்) 'ஆன்மீக இரவு' என்பர். அஃதாவது, 'கூடல்' என்னும் இன்ப ஒளியின்றி, ஊடல் என்னும் துன்ப இருளில் ஆன்மா (சிறிது காலம்) தவிக்கும் நிலை. தவிப்பு நிலையெனினும் இறுதியில் அடையக்கூடிய காதற்கொடுமுடியை எண்ணி— அன்பின் உச்ச நிலையின் பெருமையை எண்ணி, உள்ளுணர்வு நன்கு பெற்ற ஆன்மா அதை விரும்புகின்றது. இந்த 'இரா' நீடித்தாலும் நலனே; அவ்வளவுக்கும் பேரின்பக் காதல் மிக மிக உச்ச நிலை அடையும். அஃது எனக்கு இறுதியில் மிகப்பெரிய நன்மையே யன்றோ! துய்த்தற்கரிய இன்பப் பெருக்கேயன்றோ! 'அன்பைப் பெருக்கி நம் ஆருயிரைக் காக்க வந்த இன்பப் பெருக்காகும் இறைவன்' வகுத்த திட்டம் எத்துணை மகத்தானது என்பது இப்போது ஓரளவு புரிகிறதன்றோ? அவன் 'வகுத்த வகை யல்லால்' வேறுவழியில்-இன்பவழியில் கோடி தொகுத்தார்க்கும் உன்னதப் பேரின்பம் துய்த்தலரிதே! இக்கண்ணோட்டத்தி லேயே இப்புலவி நுணுக்கங்களை ஆராய்ந்தறிதல் வேண்டும்.

1311. ''பெண்ணியலார் எல்லாரும் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு.''

இந்நுணுக்கங்களுள், முதலாவது கூறப்படுவது, காதலர்கள் ஐயமற வெளிப்படுத்தும் 'காதற் பொறாமை' யாகும். ''என் காதலர் எனக்கு மட்டுமே! வேறு யார்பாலும் ஒரு சிறிதும் ஈர்க்கப்

படப் பொறேன்'' என்பது அவர்கள் மனநிலை. வேறு யாராவது அவ்வன்பைக் கவர்வதாக ஒரு சிறிது ஐயம் நிகழ்ந்தாலும், அதன் பின்னர், தான் அதை நுகர 'எண்ணுவது', 'எச்சிலை' நுகர்வதெனக் கருதுவர். இத்தகைய பொறாமை எந்த அளவுக்குத் தீவிரமாகச் செயலாற்றக் கூடும் எனின், ''பெண் தன்மை யுடையவரெல்லாரும் தம் கண்ணாற் பொதுவாக நுகர்வர்'' என்று உலகியலில் கூறப்படுவது, இறையியலுக்கும் பொருந்துவது போல் ஆன்மா தன் உணர்வினை வெளிப்படுத்துகிறது. அஃதாவது, இறைவன் தன்னைத் தவிரப் பிற ஆன்மாக் களுக்குக் காட்டும் காதலும் அன்பும் தன்னை ஓரளவு இழிவு படுத்துவது போல் வீணாக எண்ணி அவதியுறுகிறது. இஃது ஒரு மயக்கமே. உலகக் காதலர்கள் அளவுள்ள காதலையே வெளிப் படுத்த இயலும். ஒரே ஒருவரைத் தவிர வேறொருவர் மீது அன்பு செய்தால், எளிதில் அது தன் வேகத்தை இழந்துவிடக் கூடும்; அல்லது அவ்வேகம் குறைவுபடவாவது செய்யும். அளவுள்ள மனிதத் தன்மையின் குணச் சிறப்பே அது. இறைவனுக்கு இத்தகைய குறைபாட்டு நிலை இல்லை. அவன், அத்தனை பேரையும் உலகனைத்தையும் அளவில்லா அன்பால் அரவணைக்க வலிமை கொண்டவன். அனைவருக்கும் மனநிறைவு அளிக்கக் கூடிய வகையில் தன் பேரின்பக் காதலைப் பகிர்ந்து கொள்ளக் கூடியவன். அதன் காரணமாக இறைவனின் காதலிலிருந்து, ''நண்ணேன் நின் மார்பு'' என்று சொல்லியுள்ளது. உலகக் காதலருள் இப் 'பரத்தை' நாட்டம் நடைபெறக் கூடியது. இறைவனின் காதலைப் புறக்கணிப்பதும் அவனிடத்தில் வேறெப் பொருளையாவது, ஆளையாவது வைத்து வழிபடுவதும், காதலிப்பதுமே 'பரத்தை'யின் நடத்தையாகும் என்க.

1312. ''ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாம்தம்மை
நீடுவாழ் கென்பாக்கு அறிந்து.''

தும்முதல் தீடீரெனப் பிறர் கவனத்தை ஈர்க்கக்கூடிய ஒரு செயல் எனக் கருதலாம். குறிப்பாகத் தம்மால் அன்பு செய்யப் பட்டாரது கவனத்தை என்க. அறியாமையாலோ சிறுபிள்ளைத் தனப் புத்தியாலோ ஆன்மா இறைவனுடன் பிணங்க நேரிடலாம். இறைவனோ ஆன்மாவின் சபல புத்திக்கு இரங்கிச் சில சமயங் களில் எதிர்பாராத வகையில், ஆன்மாவின் கவனத்தை ஈர்க்க ஏதேனும் ஓர் அருட் செயலைப் புரியக்கூடும். உள்ளத்தை உறுத்தக்கூடிய அரியதொரு செயலாக அஃது அமையலாம்.

ஓர்ளவு அற்புதச் செயலாகவோ நன்மையாகவோ இருக்கலாம். இதனை ஆன்மா நன்கு புரிந்துகொள்ள வேண்டும். இறைவனின் காதலை உணர்ந்துகொள்ள வேண்டும். ஊடலைத் திருத்த உதவியாக அமையுமாறு கவனித்தல் வேண்டும். இக்குறளின் முழுக்கருத்து இஃதென்று புலப்படுகிறது.

1313. "கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்
காட்டிய சூடினீர் என்று."

சாதாரண ஒப்பனைப் பூச்சூடுதல், ஈண்டு இறைவனாகிய தலைவன் ஆன்மாக்களுக்குக் காட்டக்கூடிய அன்புச் சின்னங்கள்-காதல் அடையாளங்கள் எனலாம். இவை 'அருள்' உதவிகளாகவோ சிறு அன்புச் சின்னங்களாகவோ இருக்கலாம். எல்லா ஆன்மாக்களுக்கும் நாயகனாம் இறைவன் தன் விருப்பம் போல் இவ்வரங்களை-அருளன்புச் சின்னங்களைத் தரும்போது, ஆன்மா இறைவனின் அளவில்லாப் பண்பையும், அனைத்து ஆன்மாக்களுக்கும் நாயகன் என்பதையும் உணராமல் சிறுபிள்ளைத் தனமாக - யோசனையற்ற வகையில், தன்னையும் தன் நிறைவையுமே அளவுக்கு மீறிச் சிந்தித்த வண்ணமாய்ப் பிணங்குகிறது. எனக்கும் இத்தகைய அருளன்புச் சலுகைகளைத் தராதது ஏன் என்று அர்த்தமின்றிப் பிணங்குகிறது. தான் பெற்றுக் கொண்ட சலுகைகளை முழுதுற மதித்துப் பயன்படுத்தாததே இதற்குக் காரணம். ஒரு வீட்டில் தாய், தன் பிள்ளைகளுக்கு ஒரேவிதமான விளையாட்டுப் பொருள்களைத் தருகிறாள். எல்லாம் அழகாகத்தான் இருக்கின்றன. ஆனால், பிள்ளைகளுள் இரண்டொருவர் "அம்மா எனக்குக் கொடுத்தது அவ்வளவு நன்றாயில்லை. அதோ அந்தப் பொருள் இதைவிட அழகாக இருக்கிறது" என்று அர்த்தமற்ற விவாதத்தில் இறங்கிவிடுவதை நாம் காண்கிறோம். ஆன்மீக வாழ்விலும் சில ஆன்மாக்கள் இப்படி ஒழுகுகின்றன.

அப்படி இறைவன் உனக்கு அருளியுள்ளதைவிட அதிகமாக வேறொருவருக்கு அருளுகிறார் என்றே வைத்துக் கொள்வோம். தம் வரங்களைத் தம் விருப்பம் போல் வழங்க இறைவனுக்கு உரிமையில்லையா? அதைக் கண்டு ஆன்மா பொறாமைகொள்ள உரிமையேது? நம் அறிவுக்கெட்டாத முறையில் இறைவர் செயலாற்றுபவராய்த் தம் நன்கொடைகளை அவர் அவர்க

ளுடைய தேவைக்கும் மனப்பான்மைக்கும், தம் சொந்த விருப்பத்திற்கும் ஏற்ப அருளினால், அவர் தருவதை நன்றியுடன் பெற்று அவற்றால் பயன் அடைய முயல்வதே முறை. பொறாமையால் பொருமுவது, ஊடல் தெரிவிப்பது பொருந்தாது.

1314. ''யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று.''

''கணவர், மனைவியர் வேறு யாரினும் நாம் மிகுந்த காதலுடையோம்'' என்று தம் காதல் மிகுதியைத் தலைவன் வெளிப்படுத்துகின்றான். தம் இருவரையும் குறிப்பிட்டே இங்ஙனம் கூறப்பட்ட போதிலும், காதற் பொறாமை சற்று அதிகமாகவே கொள்ளும் பண்புடைய தலைமகள், தலைமகனிடம் கூறுகின்றாள்: ' 'யாரினும் காதலம்! என்றீரே, நீர் வேறு மகளிர்ப் பலரைக் காதலிக்கின்றீர் போலும். அவர்களுள், யாரை மிகுதியாய் காதலிக்கின்றீர்!'' என்று பொருள் படைத்துக்கொண்டு எக்காரணமுமின்றி ஊடுகின்றாள்.

மிகுந்த காதல் உள்ளவர்கள் வெளிப்படுத்தும் 'காதற் பொறாமை' என்று இதைக் கூறலாம்; பிறர் நலம் காணப் பொறாத பண்பு அன்று இது; பிறர் (காதலர்) அன்பை இழந்து விடுவோமோ என்ற ஓர் அச்சம், இந்த இழப்பை அஞ்சிக் காவல் காக்கும் ஒருவித ஐயுறவு, காதலுக்கும் தீவிர அன்புக்கும் உரிய காப்பு விழிப்புடைமை எனலாம்.

சபல புத்தியுடைய - எளிதில் மனத்தை மாற்றிக்கொள்ளக் கூடிய - மிகச் சிறிய கவர்ச்சியாலும் வேறு பக்கம் இழுபடக் கூடிய உள்ளம் படைத்த இம்மைச் சிற்றின்பக் காதலரிடை இத்தகைய ஓயாக் காதல் ஐயுறவு நிகழ்ந்தால், அதில் பெருவியப்பு ஒன்று மில்லை. பேரின்பக் காதலராகிய இறைவன் - ஆன்மா இவர்களிடையும் இத்தகைய ஐயுறவு நிகழ்கிறதென்றால் அது வியப்பன்றோ? ஆனால், மெய்யாகவே நிகழ்கின்றதா? ஆம், நிகழ்கின்றது. எப்பொருளில்?

இங்ஙனம் ஐயுற்று வேதனைப்படுவது தலைமகள் என்று இக்குறளில் குறிப்பிட்டுள்ளது. இனி, பேரின்பக் காதலருள் தலைமகன் என உள்ள இறைவன் இத்தகைய ஐயுறவுக்கு ஆளாக இயலுமா என்பது வினா.

தன் அன்புக்குரிய காதலியாகிய ஆன்மாவின் அன்பை எங்கே இழந்து விடுவோமோ என்னும் அச்சமோ ஐயுறவோ எல்லா நிறைவும் உள்ள இறைவனுக்கு ஏற்பட இயலாது. உலகக் காதலர்க்கு மட்டுமே அவை தேவைப்படுகிறது. பேரின்பக் காதலராகிய இறைவன், ஆன்மா இவர்களுள் ஆன்மாவுக்கு மட்டுமே இறைவனின் காதல் தேவைப்படுகிறது. அஃதின்றேல் ஆன்மாவுக்கு - மனிதனுக்கு நிறைவில்லை; இன்ப மில்லை - துன்ப மிகுதியே உளதாகும்; முடிவில்லா இருளே உளதாகும். 'இறைவனது பொருள் சேர் புகழ்புரிந்தாரை மட்டுமே இருள்சேர் வினையோ இருளோ சேராவாகும் அன்றோ!' ஆகவே, ஈண்டுக் காதல் ஐயுறவுகொண்டு, வேதனைப்பட வேண்டியவன் - ஊடுதல் செய்ய வேண்டியவன் இறைவன் அல்லன்.

'ஆன்மாவாகிய காதலியின் அன்பை இழந்துவிடுவோமோ' என்னும் அச்சம் இறைவனுக்கு இருத்தல் கூடாதெனினும், 'தன்னை இன்பத்தில் ஆழ்த்தக்கூடிய என் பேரின்பத்தை இழந்து ஆன்மா அவதியுறக் கூடுமே!' என்னும் இரக்கம் இறைவனுக்கு இருந்தே தீரும். ஏனெனில், ஆன்மாக்களை உய்விப்பதில் அளவு கடந்த ஆர்வமும் அக்கறையும் உள்ளவன் அவன். தான் படைத்த ஆன்மாக்கள் தம் இன்பத்தில் பங்குபெற வேண்டும் என்றே தம் 'நண்பென்னும் நாடாச் சிறப்பை' அவர் களுக்கு அளித்தான். அதற்காகவே 'அன்பிலார் எல்லாம் தமக் குரியர்' என்னும் இலக்கணப்படி, 'அன்பீனும் ஆர்வமுடைமை' யால் 'என்பும் உரியர்' பிறர்க்கு என ஐந்தவித்தானாகி' ஆன்மாக்கள் மீது தனக்குள்ள அளவில்லா ஆர்வத்தை எண்பித் தான். இந்த ஆர்வத்தால், 'தான் இவ்வளவாக அன்பு செய்த மனித இனம் தான் அளிக்க விரும்பும் பேரின்பத்தைத் தீவினையால் இழந்து விடுமோ!' என்று இரங்குவதில் வியப்பில்லை. உலகில் கண்ணையும் கருத்தையும் கவர்ந்து, பேரின்பக் காதல் வழியிலன்றிச் சிற்றின்பக் காதல் வழியில் திருப்பி விடக்கூடிய பொன்னும் பொருளும் போகமும் இருக்கின்றனவே! இறைவன் அல்லாத வேறு காதலர் பின் ஓடக்கூடிய அவலநிலை ஆன்மாவுக்கு இவ்வுலக வாழ்க்கையில் நேரலாமன்றோ! இக் கருத்தில்தான் இறைவன் ஆன்மாவுக்காக இரங்கி ஏங்கு கின்றான் என்க.

உலகக் காதலருள் ஒருவர் மற்றவர் மீது ஐயுறவு கொண்டால், அஃது அக்காதலருடைய காதல் தீவிரம் அளவுள்ளது என்னும் காரணத்தால் ஆகும். அஃதாவது, உலகில் எவனும் தன் காதலை-அன்பை அதிகம் பகிர்ந்துகொள்ள இயலாது. ஒருவரை உண்மையாகவே தீவிரமாகக் காதலித்தால், வேறு பலரையும் அதே தீவிரத்துடன் காதலித்தல் எளிதன்று. அத்துணை காதல் தீவிரமும் வலிமையும் சிறு நெஞ்சினரான மனிதர்க்கு இல்லை. ஏனெனில், மனிதன் அளவுள்ளவன். அவன் செய்யக் கூடியன வெல்லாம் அளவுள்ளனவே. ஆனால், இறைவனுக்கோ இந்த அளவில்லை. அவன் தன் காதலை எல்லா மனிதருடனும் நிறைவாகப் பகிர்ந்து கொள்ள இயலும். ஒவ்வோர் ஆன்மாவையும் அளவிட இயலா அன்பால் நேசிக்க ஆற்றல் உள்ளவன். ஆகவே, வேறு யாரையாவது நேசித்து விடுவானோ என்னும் அச்சம் இருக்கத் தேவையில்லை. ஆகவே, ஆன்மா அவசியமின்றி ஊடுதல் தேவையில்லை.

1315. "இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்
கண்நிறை நீர்கொண் டனள்."

"உயிர் உள்ள வரையில் உன்னைப் பிரியேன், வாழ் நாளெல்லாம் நம் காதல் நிலைத்திருக்கும்." இவை போன்ற உறுதிமொழிகளைக் கூறிக்கொள்வர் காதலர். இறைவனாகிய காதலனும் ஆன்மாவை நோக்கி இங்ஙனம் கூறுகின்றார் என வைத்துக் கொள்வோம். அதற்குப் பொருள்: 'உன்னை எப்போதுமே நேசிப்பேன்,' என்பது மட்டுமேயாம். எனினும்' ஆன்மா இறைவன் மீது கொண்டுள்ள சிறந்த அன்பின் காரணமாகவோ அந்த அன்பைத் தன் சபல புத்தியால் இழந்து விடக் கூடும் என்று அஞ்சியோ ஐயுறவு என்று மேலே கூறப்பட்ட ஆன்ம நிலையின் காரணமாகவோ, "அப்படியானால், உயிர் பிரிந்த பின் என்னைப் பிரிந்து விடுவீரோ? மறுமை வாழ்க்கையில் என்மீது அன்பு செலுத்த மாட்டீரோ? என்மீது உமக்கு நிரந்தர அன்பு இல்லையோ?" என்று பலவாறு மனங்கலங்கி அவதியுறுகின்றது.

1316. "உள்ளினேன் என்றேன்மற் றென்மறந்தீர் என்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள்."

அடுத்து வரும் குறட்பாக்களில் இந்த அவசியமற்ற ஐயுறவும், அதன் விளைவாக நேரும் ஊடுதலும் இவற்றின் நுணுக்கங்களும் கூறப்படுகின்றன. "Love is Suspicious; Love is foolish; Love is blind" என்றெல்லாம் கூறுவர். இக்குறட்பாக் களில் காதல் பொறாமை எந்த அளவுக்கு ஐயுறவையும் அதனால் ஊடலையும் விளைவிக்கின்றது என்பது கூறப்படுகிறது.

"நீ ஊடியிருந்த போதிலும், நான் உன்னை நினைத்து அன்பு செலுத்தினேன்" என ஆன்மாவுக்கு இறைவர் கூறு கின்றார். சபலமனமுடைய ஆன்மாவின் மீது இரங்கி, இறைவர் இங்ஙனம் கூறுகின்றார். 'நினைத்து அன்பு செலுத்தினேன்' என்பதைக் கேட்டதும் 'ஓகோ, முன்பு என்னை மறந்திருந்தீரோ'! என்று தவறாகப் புரிந்துகொண்டு வேதனையடைகிறது. காதல் தீவிரமுடையோர், மற்றவர் உள்ளத்தை ஊடுருவிப் பார்க்க இயலாத நிலையிலிருப்பதால், இங்ஙனம் ஐயுறவு ஏற்படுகிறது. இறைவன் - ஆன்மா என்னும் காதலரைப் பொறுத்த அளவில், இறைவனது அன்பின் ஆழத்தையும் அதன் இலக்கணத்தையும் நன்கறியாத ஆன்மா இங்ஙனம் கூறுவதில் வியப்பில்லை.

1317. "வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீர் என்று."

இவ்வாறு அவதியுறு நிலையில், இறைவன் ஆன்மாவின் அவல நிலைக்கு இரங்கி, திடீரென வரும் தும்மல் போல எதிர் பாராததொரு நேரத்தில் தம் அன்புச் சின்னம் ஒன்றை வெளிப் படுத்துகிறார். தன்மீது இறைவனுக்கு இன்னும் அன்பு உண்டென்று ஆன்மா அறிந்துகொள்ளுமாறு செய்கிறார். இதைக் கண்ணுற்ற ஆன்மா, காதலன் தும்மினால் தன்னை நினைத் துத்தான் தும்முகிறான் என்று எண்ணி, "நீடு வாழ்க!" என்று (தும்முகையில் வழக்கமாகக் கூறப்படுவது போல) காதலி அத் தும்முதல் சின்னத்தை ஏற்றுச் சிறிது இன்புறுகிறாள். அங்ஙனமே ஆன்மாவும் திடீரென இறைவன் வெளிப்படுத்திய சிறிது அன்புச் சின்னத்தை ஏற்று, ஆறுதல் அடைகிறது. ஆனால், வெகு சீக் கிரத்தில் நிலை மாறிவிடுகிறது. "நீர் தும்மியது என்னை நினைத் துத்தானா? வேறு யாரோ ஒருத்தியை நினைத்தா?" என்று ஐயுறுகிறாள். அஃதாவது, 'நீர் எதிர்பாராது காட்டிய அன்புச் சின்னம் என்பொருட்டுத்தானா? அல்லது வேறு ஆன்மாவை

நினைத்தா' என்னும் பொருளில் ஆன்மா ஐயுறும் நிலைக்கு ஆளாகிவிடுகிறது. உண்மையில் இத்தகைய ஐயுறவு இறைவனைப் பொறுத்த மட்டில் எழ இடமிராது. எனினும், புலவியில் நிகழும் மனக்கலக்கத்தால் ஆன்மாவிற்கு நிகழக்கூடும். அந்த அளவுக்கு ஆன்மா இருளடையக்கூடும்.

ஆனால், இதில் வேறொரு கருத்தும் உள்ளடங்கி யிருக்கலாம். அஃதாவது, இறைவன் குறிப்பிட்ட ஆன்மாவுக்குக் காட்டும் காதற் சின்னம், அந்த ஆன்மாவுக்கென்று மட்டுமே இராமல், அந்த ஆன்மாவின் செயலால், பிற ஆன்மாக்களும் பயனுற வேண்டுமென்ற நோக்கத்தோடு இருக்கலாம். ஏனெனில் இறைவன், குறிப்பிட்ட சில ஆன்மாக்களுக்கு மட்டும் காதலனாகிப் பிறவற்றைப் புறக்கணிப்பவர் ஆகார். மனித இனம் அனைத்தையுமே தமக்கென வரிந்து கொண்ட இணையற்ற வரன் ஆவார். ஒருவன் ஒருத்தி இடையில் மட்டுமே உலகில் காணும் காதலும் காதற் பொறாமையும் காதல் ஐயுறவும் நிகழும். இறைவனைப் பொறுத்த மட்டில் குறிப்பிட்ட சில ஆன்மாக்கள் மீது விசேடக் காதல் - அன்பு காட்டினாலும் அதைச் சுவைத்த ஆன்மாக்களின் செயலாலும் தியாகத்தாலும் இப்புலவியின் விளைவாக ஏற்படும் வேதனை, ஐயுறவு, மனக்கலக்கம், உள்ளக் குழப்பம் இவையனைத்தையும் தாங்குவதாலும் பிறர் இறைவன் மீது காதல் கொள்ள, அதற் கேற்ற வரம் பெற்றுத்தர வாய்க்கால்களாக அமையக்கூடும். இவர்களைத் திருக்குறள் 'அருள் ஆள்வார்' என்று குறிக்கிறது. அருளை ஆள்வதில் இது மிக உயர்ந்த ஒரு படி எனலாம். ஐந் தவித்தானின் தனித் திட்டத்தைச் சார்ந்தது இவ்வழி. அவன் எங்ஙனம் மனித இனத்தின் மீது கொண்ட இணையற்ற காதலாலும் அதற்காக அவன் ஏற்ற அளவிட இயலா மனவேதனையாலும் மனித இனம் அனைத்திற்குமே அருள் ஆள்வாராக - அருள் பொழிபவராக - அருள் ஊற்றாக அமைந்தாரோ,* அந்த அளவுக்கில்லாவிடினும், ஓரளவுக்கு இறைவனின் காதலைச் சுவைத்தவர்கள், அதற்காக எத்தியா கமும் மனக்கலக்கமும் ஐயுறவு நிலையும் ஏற்றவர்கள், ஐந்தவித் தானுக்குத் துணைவர்களாய் அருள் அன்பு வேளாண்மை செய்ப

---

* எம் 'மனித இன ஒருமைப்பாடு' நூலில் இக்கருத்து ஓரளவு விளக்கப்பட்டிருக்கிறது.

வராதல் வேண்டும். ஆக்வே இறைவன், குறிப்பிட்ட ஆன்மா வுக்குக் காட்டும் அன்புச்சின்னம், அதற்கென மட்டுமே அமை ாமல், பிறர் நலனுக்கென அமைதலும் கூடும். இதை ஆன்மா புரிந்து கொள்ளாமல் பிணங்குதல் பொருளற்ற, காரண மற்ற ஐயுறவாகும் என்ப.

1318. "தும்முச் செறுப்ப அழுதாள் நுமர்உள்ளல்
எம்மை மறைத்திரோ என்று."

தும்முதலைத் தவறாகப் புரிந்துகொண்டு காதலி புலவியது பற்றி முற்குறள்களில் குறிப்பிடப்பட்டது. இக்குறளில் கூறப் படும் நுணுக்கம் மிக மிக நுட்பமானது. ஈண்டுத் திடீரென வரும் தும்முதலை அடக்கிக்கொண்டாலும் அதற்கும் ஒரு தவறான பொருள் கூறிப் புலத்தல் கூறப்படுகிறது.

"நும் காதலி யார்? வேறொருத்தி உம்மை நினைத்தலை மறைப்பதற்காக இங்ஙனம் தும்மலை அடக்கிக் கொள் கிறீரோ?" என்கிறாள் காதலி. பேரின்பக் காதலர்க்கு இது எங்ஙனம் பொருந்தக்கூடும்? பேரின்பக் காதலனாகிய இறைவன் தன் காதலியாம் ஆன்மாவுக்கு அஞ்சி மறைத்துக் கொள்ள வேண்டியதென்ன இருக்கவியலும்?

தும்மலை அடக்கிவிடுவது எதனைக் குறிப்பிடக் கூடும்? அன்புச் சின்னம் யாதானும் ஒன்றை இறைவன் சமயா சமயங் களில் காட்டுவதுபற்றி மேலே கூறப்பட்டது ஈண்டு அச் சின்னத்தையும் வெளிக்காட்டாமல் மறைத்துக் கொள்வதைக் குறிப்பிடலாம். இம்மை வாழ்வில் உள்ள வரையில் இறைவன் ஆன்மாக்களுக்குத் தம் அன்பையெல்லாம் வெளிப்படுத்தி விடுவது பேரின்பக் காதல் இலக்கணத் திட்டத்தில் இல்லை. ஏனெனில், அவனது நிறையன்பைச் சுவைத்துவிட்டால், அது மறுமை வாழ்வாகிவிடும். அந்நிறையன்பைச் சுவைப்பதற்கு ஒரு தயாரிப்பு நிலையாகவே உள்ளது இம்மை வாழ்வு. ஆகவே, இப்போதே அந்நிறைவினை ஏன் வெளிப்படுத்தக் கூடாது என்பது பொருந்தா வினா. மேலும் அன்பின் இலக்கணமே 'என்பும் உரியர் பிறர்க்கு' என வாழ்வதாகும். 'துன்பத்திலும் உரியோம் பிறர்க்கு' என்பதே இதன் உட்கருத்து. இப் 'பிறர்' என்பது மக்களாகிய பிறர் மட்டுமன்று; இறைவனுங்கூட. அனைத்திற்கும் மேலாக, 'என்பும் உரியோம் இறைவற்கு'.

ஆகவே, எத்துன்பமும் தியாகமும் அவ்வன்பின் நிறைவை எய்தும் சாதனமேயன்றி வேறன்று. இதுவே ஐந்தவித்தான் காட்டிய வழி. ஆகவேதான், இறைவன் ஆன்மாவின்மீது தனக்குள்ள நிறையன்பையும் இகவாழ்வில் வெளிப்படுத்துவதில்லை. ஓரளவு மறைத்தே வைத்துள்ளான். இதைக் குறிப்பிட்டே ஆன்மா புலக்கிறதுபோலும்! (1318). இக வாழ்வின் நிறைவற்ற இயல்பின் ஓர் அம்சம் இது. இதனால் ஆன்மா ஐயுறத் தேவையில்லை. மாறாக, அவனது அருள் திட்டத்தை உணர்ந்து போற்றி, அவன் வகுத்த வகையில் துய்க்க முனைய வேண்டும்.

"ஒரு வேளை வேறு ஆன்மாக்கள் மீது (காதலியர் மீது) உம் காதல் அன்பையெல்லாம் செலுத்துகின்றீரோ? என்னிடமிருந்து மறைத்து வைத்துப் பிறர்க்கு வெளிப்படுத்துகிறீரோ உம் காதலை," என்றெல்லாம் நினைத்துக் கலங்குவதையும் ஓரளவு சினந்து பிணங்குவதையும் விளக்குவதே இக்குறள்.

1319. "தன்னை உணர்த்தினும் காயும் பிறர்க்குநீர்
இந்நீரர் ஆகுதிர் என்று."

ஓரளவு சினந்து பிணங்குவதுபற்றிச் சற்று மேலே கூறப்பட்டது கவனிக்க. பொருளற்ற - எக்காரணமுமற்ற சினமே அது. எல்லாம் இறைவன் அருளாயிருக்க, அவன் சினத்தலும் அருளின் செயல் என விளங்கக்கூடும். ஆனால், காதல் ஐயுறவினால் ஆன்மாவில் எதுதான் நடக்கும், எது நடக்காது என்று சொல்வதற்கில்லை.

இனி, இறைவன் மீது சினந்து பிணங்குகின்ற ஆன்மாவை இறைவன் நடத்தும் முறை யாது? தன்மீது பொருளற்ற சினம் கொள்ளும் ஆன்மாவை இறைவன், 'இவ் ஆன்மாவின் மீது அன்பு செலுத்துவதால் பயன் என்ன'? என்று தானும் சினந்து பிணங்குவதில்லை. 'உனக்கு அன்பு செய்து ஒரு பயனுமில்லை. நீ எனக்குத் தேவையுமில்லை' என ஒதுக்கி விடுவதுமில்லை. எல்லா வல்லமையும் அறிவும் உள்ள அவன், அங்ஙனம் செய்ய இயலும் எனினும், அவன் செய்வதெல்லாம் பணிந்துரைத்தல் ஒன்றே. அஃதாவது, காரணமின்றிச் சினக்கும் ஆன்மாவுக்குத்

'தன்னை உணர்த்து' மாறு ஓரளவு தன்னைத் தாழ்த்துகின்றான் இறைவன். தன் படைப்பாகிய ஆன்மா, தன்மீதே சினக்கத் துணிந்தால், 'உன் விருப்பம் போல் நீ செல்லலாம். அதனால் எனக்கொரு குறையுமில்லை' என்று விட்டுவிடலாம். அவ்வாறு செய்யாது, தமக்கேயுரிய அளவிலாப் பரிவினால் உந்தப்பட்டு, அந்த ஆன்மாவை நெருங்கி, "நீ பிணங்குவது பொருளற்ற செயல், உண்மை இதுவே," என்று காதல் இலக்கணத்தை மேலும் உணர்த்துகின்றான். தானே குற்றம் செய்துவிட்டது போல், இந்த உணர்த்துதலைச் செய்கின்றான். இதுவே 'பணிதல்' எனப்படுகிறது. ஈண்டுக் கூறப்படுவது, 'ஆற்றுவார் ஆற்றல் பணிதல்' என்று சான்றாண்மைபற்றிக் கூறப்படுவதுடன் பொருந்துவது காண்க. இறைவனைவிட ஆற்றுவார் யாருண்டு? சான்றோரிடத்துக் காண வேண்டிய இப்பணிதலை நாம் 'ஆண்மை' எனப் போற்றுவோமாயின், சான்றாண்மைக் கெல்லாம் ஊற்றாகிய இறைவனின் பணிதலை என்னென்போம்! இத்தகைய அறிவுக்கெட்டாப் பணிதற் செயலை முழுதுற வெளிப் படுத்தியவன் ஐந்தவித்தானே என்பதையும் நினைவிற் கொள்க. ஆன்மாக்களின் அன்பை நாடி அவர்களிடம் பணிந்து, அவர்கள் பாதம் கழுவியதும், ஏற்ற பிற சிறுமைகளும் இப்பணிதலை வெளிப்படுத்துபவையே என்றறிக.

ஆனால், இறைவன் இத்தகைய 'பணிதலை'ச் செய்யும் போதும், ஆன்மா 'பிறர்க்கும் நீர் இந்நீரர் ஆகுதிர்' என்று மீண்டும் பிணங்கும் அஃதாவது, "என்னிடத்து மட்டும் இத்தகைய பணிதலை வெளிப்படுத்துவீராயின், உம் காதலை மனமார ஏற்பேன் ஆனால் காதலர் பலர் மீதும் (மனித இனம் அனைத்தின் மீதும்) இத்தகைய காதற் பணிதலை வெளிப் படுத்துவதால், நீர் என்மீது கொண்டுள்ளது உண்மைக் காதல் என்று எங்ஙனம் நம்புவேன்?" என்றவாறு.

இறைவனின் காதல் இலக்கணத்தை நன்கு விளங்கிக் கொள்ளாமையாலும், இம்மை அறிவு பெரி[illegible] கிபி[illegible] தா[illegible] [illegible] மே [illegible] இலக்கணத்தை அழுந்தமாகக் கூறும் [illegible]த்தான், [illegible]கப் படக் கூறுமுறை எனினும் பொருந்தும்

1320) "நினைத்திருந்து நோக்கினும் காயும் அனைத்துநீர் யாருள்ளி நோக்கினீர் என்று."

இங்ஙனம் இறைவன் 'பணிதலைச்' செய்து, தன்னை உணர்த்தி ஆன்மாவின் மீது ஒரே நினைவாயிருந்து, அருட்கண் நோக்கினாலும் ஆன்மா, அதற்கும் குற்றம் காண்கிறது. "யாரை நினைத்து நீர் நோக்கினீர்?" என்று முற்றும் பொருளற்ற வினாவை எழுப்புகிறது. "வேறு ஆன்மாக்கள் உம்மீது காட்டும் அன்பை நினைத்துக்கொண்டு அவர்களது ஆன்மீக அழகினைக் கண்டு மகிழ்ந்து 'அதுபோல நீ என்னைக் காதலிக்கிறாய் இல்லை. உன்னிடத்து அத்துணை அழகில்லை, என்று நினைத்தவாறு என்னை நோக்குகிறீரா? உம் நோக்குக் காதல் நோக்கா? அல்லது குறைகாணும் நோக்கா?" என்ற வாறு. இக்குறட்பாக்களில் கூறப்பட்டுள்ள கருத்துகள் எல்லாம் ஆன்மா இறைவன் மீது கொண்ட அல்லது கொள்ளத் துடிக்கும் காதல் பெருக்கினாலோ சபலபுத்தியினாலோ அறியாமை யினாலோ இவை மூன்றும் கலந்ததால் ஏற்படக்கூடிய ஒருவித மனக்கலக்கத்தினாலோ எழுபவையே. இப்புலவியின் நுணுக்கங் களால் ஆன்மா இறைவனையடைய எவ்வழி செல்ல வேண்டும் என்பது அறிவுறுத்தப்படுகிறது. ஞான ஆசிரியர்கள் இதை 'ஆன்மா செல்ல வேண்டிய இருட்பாதை' என்று கூறுவர். 'ஆன்மாவின் இரவு' என்றும் கூறுவர். இருளில் ஒருவன் தவிப்பது போல ஆன்மா இந்நிலையில் தவிக்கும் தவிப்பைக் கூறும் விளக்கம் என்க.

## புலவி நுணுக்கம்
### சுருக்கம்

தக்க காரணமில்லாமல் காதலரிடம் பிணங்குதல்.

1311. "பெண்ணியலார் எல்லாரும் கண்ணிற் பொதுஉண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு."

இறைவன் தன்னைத் தவிர பிற ஆன்மாக்களுக்குக் காட்டும் காதலும் அன்பும் தன்னை ஓரளவு இழிவுபடுத்துவது போல் வீணாக எண்ணும் ஆன்மா இறைவனை மட்டும் தம் ஒரே காதலராகக் கொள்ளாமல் பணம் போன்ற படைப்புப் பொருட்கள் மீதும் காதல் கொள்பவரை நோக்கி இறைவன் கூறுவது:

பாவி மனிதா! (பரந்த) உன் உள்ளம் எவ்வளவு எளிதாக வேறு பொருட்கள் மீது தாவுகின்றது - (பெண் இயல்புள்ளவர் எவரையும் பொதுவாகக் கண்ணால் கண்டு இன்வறுபுது போல!) ஆகவே, உன்னை எங்ஙனம் நான் முழு உள்ளத்தோடு நெருங்குவேன்? தமக்கேயுரிய அன்பை வேறு பொருள் மீது செல்லும்படி விட்டுவிடுவதில்லை. அனைத்திற்கும் மேலாகத் தமக்கு மட்டுமே அன்பு செய்ய வேண்டுமென்பது அவன் கட்டளை - விருப்பம்• அதுவே முறை. (இறைவனோடு ஒப்பிடக் கூடியது எது? - யார்?)

1312. ‘‘ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாம்தம்மை
நீடுவாழ் கென்பாக்கு அறிந்து.’’

‘‘காதலரோடு (இறைவரோடு) பிணங்கி இருந்தேன் ஆனால், அவர் என் கவனத்தை ஈர்ப்பதற்காக (தும்முவது போல்) ஏதோ அருட் செயல் புரிந்தார்.’’ (அப்படியாகிலும் ஆன்மா வேறு காரியத்தில் கவனம் செலுத்துவதை நிறுத்தி முழு அன்பையும் தன் மீது செலுத்துமென்று எண்ணுகின்றார்).

1313. ‘‘கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்
காட்டிய சூடினீர் என்று.’’

தான் எதிர்பார்க்கிற அளவுக்குக் காதல் இனிமையைச் சுவைக்க இயலாத நேரத்தில், ஆன்மா மிகச் சிறிய காரணத்துக்காகவும் இறைவன் மீது குறை கூற அல்லது முறையிடத் துணிவதுண்டு. ‘என் மீது உமக்கு உண்மையான அன்பு இல்லை’ என்று முறையிடுவது போல், காதல் மிகுதியால் ஏற்படும் ஒருவித ‘பொறாமை’ யை இது சுட்டும். மனிதன் மீது பொறாமை கொள்ளுதல் தவறு. இறைவன் தமக்கு மட்டுமே முற்றும் உரிய அன்பை, ஆன்மா தகாத முறையில் படைப்புப் பொருளோடு பகிர்ந்து கொள்ளும் போது இறைவனுக்கு ஏற்படும் இப் ‘பொறாமை’ பொறாமையன்று; உண்மைக்கு எதிரான நிலையைப் பொறுக்க இயலாத நிலை.

1314. ‘‘யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று.’’

இறைவன் சிலர் மீது சிறப்பாக அன்பு கூர்தல் உண்டு. அன்னாரை நோக்கி ‘மற்றெத்தனையோ பேரைவிட உன்மீது

எனக்கு அன்பு உண்டு' என்றால் ''யாரைவிட, யாரை விட''
என்று தவறாக விளங்கிக் கொண்டு வினா எழுப்பக்கூடும்!

1315. ''இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்.''

''உலக வாழ்வில் உன்னைப் பிரியேன்'' என்று இறைவன் கூறினால், 'அங்ஙனமாயின், மறுமை வாழ்வில் பிரிவீரோ!' என்று தவறாக எண்ணிப் பிணங்கலாம்! (மன மாறாட்டத்தின் விளைவே இது).

1316. ''உள்ளினேன் என்றேன்மற்று என்மறந்தீர் என்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள்.''

''நான் உன்னைப் பிரிந்து நின்றதாக நீ எண்ணிய போது கூட உன்னை மறக்கவில்லை'' என இறைவன் கூறுவானாயின், ''அப்போது மற்ற நேரத்தில் ஏன் மறந்தீர்?'' என்று வினவக் கூடும்.

1317. ''வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீர் என்று.''

எதிர்பாராத அருட்செயல் ஒன்று, தும்முதல் போல இறைவன் செய்தால், 'இதை எனக்காகத்தான் செய்தீரா? வேறு யாருக்காகவேனும் செய்தீரா!' என்னும் முறையில் ஆன்மா பிணங்கக்கூடும். ('என் காதலர் எனக்கேயுரியவர்' என்பது விவிலிய வாக்கு).

1318. ''தும்முச் செறுப்ப அழுதாள் நுமர்உள்ளல்
எம்மை மறைத்திரோ என்று.''

தும்மலை அடக்கிக் கொள்வது போல இறைவன் சில சமயங்களில் தம் திட்டப்படித் தாம் விரும்பும் அருளன்புச் செயலைச் செய்யாமல் விடுத்தால், ''வேறு யாரை நினைத்து இப்படிச் செய்தீர்?'' என்று பிணங்கலாம்.

1319. ‘‘தன்னை உணர்த்தினும் காயும் பிறர்க்குநீர்
இந்நீரர் ஆகுதிர் என்று.’’

இங்ஙனம் துயருறும் ஆன்மாவின் மீது இரக்கமுற்று அன்பால் அணைத்துக் கொண்டாலும், ‘‘பிற ஆன்மாக்களிடமும் இப்படித் தான் செய்வீரோ?’’ என்று கலக்கமுறும் ஆன்மா.

1320. ‘‘நினைத்திருந்து நோக்கினும் காயும் அனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீர் என்று.’’

ஆன்மாவை நினைத்துக்கொண்டே பேசாமலிருந்தாலும் சில சமயங்களில் ஆன்மாவுக்குச் சினம் ஏற்படக் கூடும். என்னைத்தான் நினைத்தீரா? வேறு யாரையேனும் நினைத்துக் கொண்டிருந்தீரா? எனக் கலங்கும். ‘என் காதலர் எனக்கு மட்டுமே உரியவர்’ என்ற அடிப்படையில் பெண்களுக்கிடையே நிகழக்கூடிய பொறாமையைப் பேரின்பக் காதலர் மீது ஏற்றி மிகைப்படக் கூறியது.

# 133. ஊடல் உவகை

ஊடலால் ஏற்படுவது மனவேதனையும் துயரமுமே. ஆனால், ஊடலுக்குப் பின் மகிழ்ச்சி பெருகுவதை உலக அனுபவத்தில் காண்கிறோம். உதாரணமாக, ஏதோ தவறான காரணத்தைக் கற்பித்துக்கொண்டு, இரு நண்பர் பிணங்குகின்றனர்; அல்லது இரு காதலர் ஊடுகின்றனர். நல்ல வேளையாய் உண்மை வெளிப்படுகிறது. அப்போது நட்பும் காதலும் பன்மடங்கு பெருக, உவகை அதிகரிக்கிறது; இதுவே 'ஊடல் உவகை'யாகும்.

இத்தகைய ஊடல் தொடங்குகையில் துன்பமாகவே காணப்படும். ஆனால், அதன் விளைவால் இறுதியில் இன்பமே உண்டாயிற்று— அதுவும் பன்மடங்கு பெருகிற்று என்பதை எண்ணுங்கால், ஊடலால் பெரும் நன்மையே விளைந்தது என்று சொல்ல வேண்டியிருக்கிறதன்றோ? ஆகவே, ஊடலும் நல்லதே என்று கருத இடம் ஏற்படுகிறதன்றோ?

1321. "இல்லை தவறவர்க்கு ஆயினும் ஊடுதல்
வல்லது அவரளிக்கும் ஆறு."

இனி உலகக் காதலரிடை தவறு ஏதேனும் எளிதில் நிகழக் கூடும். ஆனால், பேரின்பக் காதலனாகிய இறைவனைப் பொறுத்த அளவில் தவறு என்பது நிகழக் கூடாதது அன்றோ? ஆகவே, அங்கு ஊடல் என்பது ஏன் நிகழ்தல் வேண்டும் என்னும் வினா எழலாம். 'வல்லதவர் அளிக்குமாறு' என்கிறது இக் குறள். அஃதாவது, முன்பு அளித்த அருளை விட, வலிய அளியை (அருட்கொடையை) அளித்துத் தம் பேரின்பக் காதலை மேலும் வலிதாக்குமாறு என்க. அங்ஙனம் வலிதாக்குவதால் விளையும் பேரின்ப மகிழ்வும் பன்மடங்கு பெருகுமாறு என்பது கருத்து. [இது 'கூடல் இன்பம்' என்று ஞா. தேவநேயன் அவர்கள் உரை குறிப்பிடுகின்றது]. இறுதியில் இன்பத்தையே பெருக்கும் இத்தகைய ஊடுதலை 'அருள் ஊடுதல்' எனச் சிறப்பிக்கிறார் மணக்குடவர்.

ஊடலுக்குப் பின்னர்க் கூடல் இன்பம் ஆன்மாவுக்குப் பன்முறை பெருக வேண்டும் என்னும் 'அன்பு மிகுதியால்' விளைவ தொன்றெனக் காலிங்கர் குறிப்பிடுவதுபோலத் தோன்றுகிறது.

1322. "ஊடலின் தோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும்."

ஊடல் காரணமாக ஆன்மாவுக்கு இறைவன் மீது 'துனி' அஃதாவது வெறுப்புப் போன்ற ஓர் உணர்ச்சி (புலவர் குழந்தை உரை) ஏற்படக்கூடும் எனினும், அதனால் இறைவனது 'நல் அளி' ஒரு சிறிது வாடினும் அதனால் இறுதியில் இன்பமே பெருகும் என்பதால் 'பாடு பெறும்' எனப்பட்டது. (தேவநேயன் உரை காண்க).

1323. "புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து."

இவ்வாறு பேரின்பம் பெருகுவதற்கே புலத்தலும் ஊடலும் இறுதியில் பயன்படுவதாலும், அதுவே தெய்வீக இன்பமாய்ப் பரிணமிப்பதாலும் இதனினும், 'புத்தேள் நாடு உண்டா?' என்கிறது இக் குறள். இப்பேரின்பக் காதலரின் இணைப் புக்கு உவமையும் கூறுகிறது. 'நிலம்' என்பது ஆன்மா; நீர்- இறைவன். ஆன்மாவும் இறைவனும் இணைந்தால் அன்னார் அகமே புத்தேள் நாடு - பேரின்பமாம் நிலை என்க.

1324. "புல்லி விடாஅப் புலவியுள் தோன்றுமென்
உள்ளம் உடைக்கும் படை."

ஆனால், இந்த நிலை தானாகவே பரிணமிக்கக் கூடிய தொன்றன்று. அஃதாவது, நிகழ்ந்துவரும் 'புலவி' காலகிர மத்தில் தானாகவே நீங்கிவிடும் என்பதற்கில்லை. பேரின்பக் காதலனாகிய இறைவனின் செயலால் இது நிகழ்வதாதலால், அவனது செயலால் மட்டுமே அது நீங்கவியலும். அங்ஙனம் அவன் செயல்புரிய முன்வராவிடின் 'புல்லி விடாஅப் புலவி' உள்ளத்தையே உடைத்துவிடும் படைக்கலமாக மாறிவிடும். அஃதாவது, 'பேரின்பத்தின் இனிமை எனக்கினி ஏது?' என்னும் அவநம்பிக்கை நிலை ஏற்பட்டுவிடக்கூடும். எளிய நிலையி லுள்ள ஆன்மாவின் இந்த அவல நிலை நீங்கி, மீண்டும்

நம்பிக்கை தோன்ற வேண்டுமாயின், இறைவனின் அருள் அன்பு எனும் படை செயல் புரிய முன்வர வேண்டும். அப்போது உள்ளம் உடைந்துவிடக்கூடிய நிலையிலுள்ள ஆன்மா மீண்டும் உறுதியும் உள்ளத்தெழுச்சியும் பெற்றுத் தன் பேரின்பக் காதலனை அடைந்தே தீர வேண்டும் என்று முனைந்து நிற்கும்.

1325. "தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்தோள்
அகறலின் ஆங்கொன்று உடைத்து."

இப்புலவி, இறைவனாகிய காதலன் செய்யக் கூடிய தவற்றினால் நிகழ்வது அன்று என்பது முன்பே கூறப்பட்டது (1321). ஆனால், ஆன்மா செய்யக்கூடிய தவற்றின்பொருட்டு நிகழலாம் என்னும் கருத்து வெளிப்படுகிறது. இஃது உண்மையாகவே நிகழக் கூடியதொன்று. உள்ளத்தில் மறைந்து கிடக்கும் பேரன்பைச் சிறிதும் வெளிப்படுத்தாமல், தவறிழைக்கும் தன் மகனை ஒறுத்துத் திருத்தும் அன்னை தந்தை போல, இறைவன் தன்னை விடுத்து, தன் அன்பைப் புறக்கணித்துத் தவறான வழியில் செல்லும் ஆன்மாவைத் திருத்தும் நோக்குடன், தம் அன்பைச் சிறிது காலம் வெளிப்படுத்தாமல் இருக்கலாம்.

ஆனால், இத்தகைய தவற்றைச் செய்யாது, எந்நேரமும் இறைவன் அன்பிற்காகவே ஏங்கி நிற்கும் ஆன்மாவுக்கும் இந்தப் புலவி எனும் 'ஒறுப்பு' நிகழ்வதுண்டு. 'மென்றோள் வீழ்த'லாவது, மிகமிக நெருங்கிய காதல் இன்பம் நாடுவது-இறைவனது 'மென்றோள் வீழ்தலாகும்.' பேரின்பப் பெருக்கத்தை நாடும் ஆன்மா, அஃதின்றித் தவித்தலுக்கு ஏதோ பெரும் காரணம் உண்டு. 'அங்கொன்றுடைத்து' என்றது இக்கருத்தையே புலப்படுத்துவதாகத் தோன்றுகிறது.

1326. "உணலினும் உண்டது அறல்இனிது காமம்
புணர்தலின் ஊடல் இனிது."

உண்பதில் ஓர் இன்பம் உண்டு. ஆனால், உண்டுகொண்டே இருந்தால், அந்த இன்பம் நீங்கித் துன்பம் நிகழ்வதைக் காண்கிறோம்.

உடலுறு புணர்ச்சியிலும் இத்தகைய நிலை நிகழ்தல் கூடும். வெறும் உடற்புணர்ச்சியே நிகழுமானால், அஃது இன்பத்தைப் பெருக்குவதற்கு மாறாகச் சலிப்பையும் வெறுப்பையும் கொணரக் கூடும்.

இனி, இல்வுலகச் சிற்றின்பத்தைச் சாராத பேரின்பப் புணர்ச்சியாகும் இறைவனின் அன்பை அடைந்துகொள்ளும் விசயத்தில், மீண்டும் மீண்டும் அதைச் சுவைக்கச் செய்யப்படும் முயற்சியில் சலிப்போ வெறுப்போ ஏற்படுவதற்கில்லை முயற்சி மேலிட மேலிட இன்பமும் மேலிடும் பண்பு கொண்டது இந்தப் பேரின்பக் காதல் உணர்வு.

எனினும், உண்மையான பேரின்பத்தின் தொடக்க நிலை மட்டுமேயாய் உள்ள இவ்வுலக வாழ்வில், அவ்வின்பத்தை இடையீடின்றி, தொடர்ச்சியாக, குறைவின்றி, தடங்கலின்றிச் சுவைத்துக் கொண்டிருத்தல் என்பது இயலாதது. இது முன்பே கூறப்பட்டது. தொடக்க நிலையான இம்மை வாழ்வை, மறுமைக்கேற்ற நிறைவை அடைந்துகொள்ளும் வகையில், வளமாக்கிக் கொள்வதே முறை. இந்த முறையைச் சார்ந்ததே புலவி என்னும் இத்துன்ப நிலை. துன்பத்தில்தான் இன்பமும் மேன்மையும் பெருமையும் நிறைவும் ஆன்மா அடைகின்றது. இந்த நிறைவே ஊடலுக்குப்பின் நிகழும் உவகை என்க.

1327. ''ஊடலில் தோற்றவர் வென்றார் அதுமன்னும்
கூடலில் காணப் படும்''

'புலவி நுணுக்கம்' பற்றிக் கூறப்பட்டவையெல்லாம், பேரின்பக் காதல் நிறைவு பெற்று இன்பமுறும் முயற்சியில் 'தோல்வி' போல் காட்சியளிப்பது புலப்படும். ஆனால், இங்ஙனம் காட்சியளிப்பது தொடக்கத்தில்தான். தோல்வி போல் காணப்படும் பல காரியங்கள் இறுதியில் மகத்தான வெற்றியையே கொணர்வதை உலக இயலிலும் பன்முறை காண்கிறோம். அது போன்றதே இவ் ஊடல் தோல்வியும்! இதில் 'தோற்றவர் (அஃதாவது தோற்றவர் போல் காட்சியளிப்பவர் இறுதியில்) வென்றார்' ஆவர். அவ்வெற்றி கூடலினால் ஏற்படும் உவகையில் தெளிவாகும் என்க. உலகக் காதலரைப் பொறுத்த அளவில் இந்த வெற்றி எத்துணை புகழ்தற்குரியது என்பதை

அனுபவித்துப் பார்த்தவரே கூறட்டும். தொடக்கத்தில் ஓரளவு வெற்றியாகக் காணப்பட்ட காதல் எத்தனையோ முறைகளில் தோல்வியாகவே முடிவதைக் காண்கிறோம்! தலைகீழான நிலையே பெரிதும் காணப்படுகிறது.

பேரின்பக் காதலைப் பொறுத்த அளவில் தொடக்கத்தில் கவர்ச்சியற்றதும், சலிப்பைக் கொணர்வதுமாகவே தோன்றும். ஏனெனில், பேரின்பம் வேண்டுவோர் சிற்றின்பம் கைவிடுதல் வேண்டும். அறன் அல்லவை செய்யாதிருப்பதில் மட்டுமே முனைந்து நிற்றல் வேண்டும்.

"சிற்றின்பம் வெஃகி அறன்அல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்" (173)

என்று கூறும் குறட்பாவை நோக்குக. சிற்றின்பம் வெஃகாமல், அறத்தான் வரும் இன்பத்தையே எந்நேரமும் நாடி நிற்பது அத்துணை எளிதானதுமன்று; கவர்ச்சிகரமானதுமன்று! ஆனாலும், முயற்சியில் நிலைத்து நின்றால் இறுதியில் பெறும் இன்பம் ஈடும் எடுப்புமற்றதாகும்.*

உலக இன்பம் தொடக்கத்தில் சுவைக்கும்; ஆனால், வரவரக் கசக்கும்; சலிப்புத் தரும். இறைவன் தரும் இன்பமோ தொடக்கத்தில் கசக்கும்; செல்லச் செல்ல இனிக்கும் என்று கூறப்படும் கூற்றினையும் நோக்குதல் நலம்.

1328. "ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலில் தோன்றிய உப்பு."

ஊடுவதிலும் ஓரின்பம் உண்டு என்பது குறிப்பிடத்தக்கது. ஊடுதல் முடிந்த பின்னர், நிகழக்கூடிய இன்பம் இருமடங்காகும் என்னும் காரணத்தால், அதையடைய வேண்டும் என ஏங்கிக் காத்திருப்பதில் ஓர் இன்பம் - ஓரினிமை இல்லாமலா போகும்! ஆனால், இந்த இன்பம் உப்புப் போன்றது என்னலாம். உப்பினால் விளையும் இனிமையும், சர்க்கரை போன்ற வேறு இனிப்புப்

---

* அஃதாவது, அதைப் 'பெற்றுவிட்டால்,' இதனால்தான் இன்பத்துப்பால் - இறுதிப்பாவில் 'பெறின்' எனக் கூறப்பட்டுள்ளது கவனிக்க.

பண்டங்களால் விளையும் இனிமையும் ஒன்றன்று. எனினும் இனிமையே!

ஊடல் நேருங்காலை ஏற்படக்கூடிய இனிமையும், கூடலில் நேரும் இனிமையும் இனிமைதான். ஆனால், இருதிறப்பட்ட இனிமை என்பது தெளிவு.

'நுதல் வெயர்ப்ப' என்றது பொதுவாகத் துன்ப நிலையைக் குறிப்பிடலாம். நுதல் வெயர்ப்பது பெரும்பாலும் துன்பமான சூழ்நிலையில்! 'நெற்றி வியர்வை நிலத்தில் விழ' என்னும் பழமொழி நோக்குக. ஆனால், எதிர்பாராத, மிதமிஞ்சிய இன்பம் நேரும் போதும் நுதல் வெயர்ப்பது நிகழக்கூடும். ஈண்டுக் கூறப்படுவது, இறைவனும் ஆன்மாவும் பேரின்பத்தில் இணையும் நிலை குறித்தே எனத் தோன்றுகிறது. புலவியும் ஊடுதலும் முடிந்த பின் அடையும் கூடல் இன்பத்தில் விளையும் 'உப்பு'க்கு இணை என்பது இல்லை என்பது உட்கருத்து. இந்த இணைப்பு நிகழ்ந்த பின், ஊடல் என்பது இருக்க இடமில்லை. அந்த ஊடலின்போது துய்த்த இன்பத்தை (உப்பு) கூடலில் தோன்றும் இன்பத்துடன் ஒப்பிட இயலாது. இக்கருத்து இவ்வுலகத் துன்பங்கள் அனைத்தும் இனிவரும் மறுமை இன்பத்துடன் ஒப்பிடத் தகுதியற்றவை என்னும் விவிலியக் கருத்துடன் ஓரளவு பொருந்துவதாகத் தோன்றுகிறது.

1329. ''ஊடுக மன்னோ ஒளியிழை யாம்இரப்ப
நீடுக மன்னோ இரா.''

'ஒளியிழை' ஈண்டு இறைவனது அருள் ஒளியெனும் தெய்வீக அணிகலனை அடைந்து விளங்கும் ஆன்மாவினைக் குறிக்கும். 'யாம் இரப்ப' என்றது, அவ்வான்மாவின் அளவிலா நன்மையைக் கோரி இறைவன் விடுக்கும் அழைப்பினைக் குறிக்கக் கூடும். தனது பேரின்பத்தில் பங்கு கொள்ளுமாறு மனித இனத்துக்கு இறைவன் விடுத்துள்ள அழைப்பினை நினைவுறுத்துக. அந்த அழைப்பினால்தான் தனக்கெவ்வுரிமையும் இல்லாத ஆன்மா இறைவனின் பேரின்பக் காதலை நாட இயல்கின்றது அன்றோ?

இனி 'யாம் இரப்ப' என்றது, இக்குறளில் 'ஊடுக' என்றும் முடியலாம்; 'நீடுக இரா' என்றும் முடியலாம்.

'யாம் இரப்ப ஊடுக' எனின், ''யாம் விடுத்துள்ள அழைப்புக்கு ஏற்ப, அவ்வழைப்பின் பயனை ஆன்மா நிறைவுறப் பெற வேண்டுமாயின், ஊடுதல் தொடர்க!'' என்று பொருள்படக் கூடும். ஊடுதலால் காதல் உறுதியடைந்து பெருகும் என்பதால், இறைவன் இங்ஙனம் 'ஊடுதல் தொடர்க!' என்று 'இரப்ப'தில் வியப்பில்லை. அதே பொருளிலேயே 'நீடுக இரா!' என்றும் கூறப்படுவது போல் தோன்றுகிறது. ஊடுதல் நிலையை ஒளியற்ற - சுவையற்ற - மகிழ்ச்சி குறைந்த-தளர்வு விளைக்கும் இரவுக்கு ஒப்பிடலாம்.* இத்தகைய ஆன்மீக இரா நீடுவதால், அதன் பின் ஏற்படும் ஒளி இன்பமும் பெருகுமன்றோ? இம்மை வாழ்வைத் துறக்கு முன்னர், ஆன்மா மறுமைப் பேரின்பத்தைப் பெற்றுத் துய்க்க எவ்வளவுக்குத் தன்னைத் தயாரித்துக்கொள்ள வியலுமோ, அவ்வளவுக்கும் முயற்சி செய்க என்பது கருத்து. இத் தயாரிப்புச் சிறப்பாக இந்த ஊடுதலாகிய இரா என்பதால், அது 'நீடுக' என்பது புரிகிறது. நீடுவதால் தயாரிப்பும் தீவிர மடைகிறது. அதனால், பேரின்பமும் பெருகுகின்றது. இப்பொருளில் ஞா. தேவநேயன் கூறுவது மிகப் பொருத்த மாகத் தோன்றுகிறது. ''பின்னர், பேரின்பம் பெறக்கூடுதல் உறுதியாதலின் இவ்விரா முழுதும் ஊடலே நிகழினும் நன்றே!'' என்கிறார் அவர்.

1330. ''ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்.''

ஆகவே, 'ஊடுதல் காமத்திற்கு இன்பம்'. ஈண்டுக் 'காமம்' என்னும் சொல் ஆசை, ஆர்வம் என்னும் பொருளில் ஆளப்படுகிறது. பேரின்பக் காதலின் பேரார்வ நிலையைக் குறிக்கின்றது. இத்தகைய ஆர்வம் பொங்கிப் பெருக, ஊடுதல் ஒரு வழியாகிறது! தடையாவதற்கு மாறாக...... ஆனால், இந்தப் பேரார்வத்துக்கும் மேற்பட்ட இன்பம் இறைவனோடு இணைவதாம்!...... சிற்றின்பத்தில் இஃது எளிதில் நிகழ்ந்து விடுவது. பேரின்பத்தைப் பொறுத்த அளவில் உலகக் காதலரிடையே நிகழ்ந்துவிடுவது போல எளிதாக நடைபெறுவதன்று. இறைவனின் அருளை நம்பி, அதனை மதித்து, அடைந்து, வாணாள் எல்லாம் அவனையே எண்ணி, அவன் மீதே அன்பெல்லாம் செலுத்தி, அவனது அன்பில் திளைத்து வாழ்ந்த

* ஆன்மீக வாழ்வு நிலைகளைப்பற்றிக் கூறும் (கிறிஸ்தவ) ஞானாசிரியர்கள் இத்தகைய நிலையை 'Dark night of the Soul' என்றே கூறுவர்.

பின்னர், அந்நிலையில் இம்மை **வாழ்வை நீத்தால்தான் பெறவியலும்**. இதனாற்றான் 'பெறின்' என்று முடிக்கிறார்.

இறைவனை அடைவது இயற்கையாக எளிதாக நிகழ்ந்து விடக்கூடியதொன்றன்று எனவும், இப்பேரின்பக் காதலை வளர்த்துக்கொள்ள ஆர்வமும் முயற்சியும் அவனே தரும் அருளும் இணைந்து செயல்பட வேண்டும் என்பதையும் இக்குறள் கூறி, இன்பத்துப்பால் எனும் இப்பகுதியை முடிக்கிறது.

இத்தகைய உயரிய நோக்கத்துடன் எழுதப்பெற்ற இந்த 'இன்பத்துப்பாலை', அடைதற்கெளிதான, பெரும்பாலும் அனுபவமான சிற்றின்பத்தின் இலக்கணத்தையே 250 பாக்களில் இத்துணை விரிவாக எழுதினார் என்பது சற்றும் ஏற்புடைய தாகத் தோன்றவில்லையன்றோ?

## முடிவுரை

இப்போது விளங்குகிறது, ஏன் இக்குறள் ஆசிரியர் வீடு பேறாகிய **வைப்பினை வரன்** என்கிறார் என்பது.

(வைப்பு = ஈண்டுக் காட்டப்படும் அறவொழுக்கத்தைக் கடைப்பிடிப்பவர்க்கு மறுமை வாழ்வில் சேம நிதியென வைக்கப் பட்டுள்ளது). (மத்: 6, 19-20: 1 கொரி. 2, 9).

இந்த வைப்பு இறைவனாகிய வரனே ஆவர். அவனுக்கு வெளியே ஆன்மாவுக்கு நிறைவு தருவது ஒன்றுமில்லையன்றோ? 'வரன் என்னும் வைப்பு' என்னும் சொற்றொடர் வரும் இடமும் கவனிக்கத்தக்கது. பாயிரத்தில், நீத்தாரைப்பற்றிய பகுதியில் ஐந்தவித்தானின் ஆற்றலைப்பற்றிக் கூறும் குறளுக்கு முன் உள்ளது.

ஐந்தவித்தானின் ஆற்றலைக் கொண்டு, (ஆற்றல் = உரன் என்னும் தோட்டி), தன்னை அலைக்கழிக்கும் ஐம்புலன்களைக் காப்பவனே, இறைவனை வரனென அடைவான். இதை அறிவுறுத்தவே நூல் இயற்றப்பட்டது என்க.

**குறிப்பு :** 'புலவி நுணுக்கம்' 'ஊடலுவகை' எனும் இவ்விறுதி இரு அதிகாரங்களுக்கு, மற்றெல்லா அதிகாரங்களுக்குத் தரப்பட்ட விளக்கத்தைவிட அதிக விரிவான விளக்கம் தரப்பட்டது ஓரளவு வியப்பாகத் தோன்றக் கூடும். இவ்விரு அதிகாரங்களில் நுணுக்கங்கள் பல இருப்பதே இதற்குக் காரணம்.

# பிற்சேர்க்கை- 1

## இறை அடியார்களுள் ஒருவர்* இயற்றிய
## பேரின்பக் காதல் கீதம்

ஆன்மா (தலைமகள்)

1. எங்கு ஒளிந்தென் அன்பே உள்ளனை!
ஏன் என்னை நீ கைநெகிழ்ந்தனை
உனைக் காணாமல் உள்ளம் துயருற
என்னை விட்டு எங்குச் சென்றனை?
என்னைக் காயப்படுத்தி விரைவாய்
எங்கோ சென்று விட்டனையே நீ!
புலம்பலுடன் உன்னை யெங்கெங்கே
தேடினேன் எங்கும் காணவில்லை நீ!

2. கானகத்தில் அடர்ந்து நிற்கும்
மரமே! புதரே! தரையில் காணும்
பசும் புல் பூண்டு, மணங்கமழ் பூக்காள்!
சொல்வீர் என்றன் காதலரை நீர்
கண்டீரோ எனச் சொல்வீர் எனக்கு!
கண்டால் சொல்வீர் நான் கிடக்கும்
அவல நிலையை அவர்க்குச் சொல்வீர்
ஏங்கி ஏங்கி உருக்குலைந்தேன்
உயிர் போவதுபோல் அவதியுற்றேன்
என் காதலர்க்கு இதனை எல்லாம்
சொல்வீர் சொல்வீர் விரைவாய்ச் சொல்வீர்.

### (படைப்புகள் பதில்)

3. கண்டோம் உன்றன் காதலரை யாம்
கண்டோம் அவரது எழில் முகத்தழகை
சோலைகள் ஊடே அவர் நடந்து
அழகினை எங்கும் விதைத்ததை யாம்
கண்டோம் கண்டோம் யாம் கண்டோமே

---

* புனித சிலுவை அருளப்பர் என்பார்.

செல்லு மிடமெலாம் தமது நோக்கால்
அருளும் அன்பும் நிறை பார்வையினால்
அனைத்தையும் அவர் நோக்கியதை யாம்
கண்டோம் அதனால் சோலைகள் புலங்கள்
பாலைகளும் மேலுலகத் தழகால்
பூத்துக் குலுங்கியது எங்கும் கண்டோம்.

**தலைமகள் :**

4. காய முற்று நான் வருந்து கின்றேன்
தனிமையால் வாடிக் கிடக்கின்றேன் நான்
சுகம் எனக்குத் தருவோர் யாரோ?
என் காதலரைக் காண ஏங்குகிறேன்
கண்டா லன்றிச் சுகம் எனக்கில்லை!
அன்பே வருக மிகு விரைவாக
நேரில் நீரே வருக வருக!
தூதுவர் வேண்டாம் உமது பெருமையை
எனக்குக் கூறி வாழ்வெனக் களிக்க
வலிமை அவர்க்கு எங்ஙனம் இருக்கும்?

5. தத்தம் இடத்தில் இருந்த படியே
படைப்புகள் எல்லாம் என்னை நோக்கி
உன் அழகினையே எடுத்துரைத்து
இடைவிடாமல் பறை சாற்றிடுமே
அஃதென் உள்ளத்தில் விளைந்த வடுவினை
பெரிதாக்கி எனை மேலும் வருத்தும்!

6. அன்பெனும் அம்புகளாலே எனது
இதயத்தைத் தைக்கின்றீர் காதல! வினிவேற்றுமை
விண்ணக அருளால் என் இதயத்தின்
காயத்தைக் குணமாக்க விலையே!
என் இதயத்தைக் கவர்ந்த கள்வ!
முழுதுற அதனை எடுத்துச் செல்வாய்!

7. துன்பம் பெருகிடும் துயரம் பெருகிடும்
விடுதலை அளிப்பவர் நீரே ஒருவர்!
ஆதலின் அமைதி ஆறுதல் தாரும்

என் கண் உன்னை நோக்கிட அருளும்
உன் அருள் இன்றிக் காண்டல் இல்லை
உமக்குரியவை உன் படைப்பு (அ)வை
உமக்கென்றே அவற்றைக் காத்தேன்.

8. நம்மிடையிருந்து காட்சியைத் தடுக்கும்
இருளின் படலம் நீங்குவதாக
உம்திரு முகத்தை எனக்குக் காட்டும்
அவ்வெழில் காட்சியில் உயிர்பிரிந் திடுக
பேரின்பம் தரும் எழில்மிகு காட்சி
ஒன்றே காதல் நோய்க்கு மருந்தாம்.

9. மாண்புறு மலைகள், தாழ் கணவாய்கள்
கடலில் மிதந்திடும் தீவுகள் பலவும்
சலசல வென்னும் நீரோடைகளும்,
புயலும் தென்றலும் பேசும் நாதமும்
எல்லாம் என்றன் காதலர் காட்சி!
எல்லாம் அவனைக் குறித்துப் பேசிடும்.

10. இரவின் அமைதி பகலின் ஒண்மை
இவையுமாவார் என்றன் காதலர்
ஓசையில்லா இசை அவர் ஆவார்
தனிமைப் பாலையில் இன்குரல் ஆவார்
மகிழ்ச்சி யூட்டும் விருந்தென வருவார்
காதல் நெஞ்சம் இன்புறச் செய்வார்.

தலைமகன் :

உன் துயர் கண்டேன் இதோ வந்தேன்
உன் மீதிரங்கிக் கை கொடுத்தேன் காண்!
உன்னை அன்பால் வரிந்து கொண்டேன்
அன்றொரு நாள் உன் பேதை அன்னை
அலகை விரித்த கண்ணியில் விழுந்து
கொணர்ந்த கொடுமை உலகினில் தீர
என் உயிர் கொடுத்து உன் உயிரினையே
மீட்டுக் கொணர்ந்தேன் அறிந்திடுவையோ!

**தலைமகள் :**

1. மீட்டுக் கொணர்ந்து அரவணைத்தார்
தம் திருவடியில் அமரச் செய்து
உன்னத ஞான உயர் மறை பொருளை
என்றன் காதலர் எனக்கு ஓதினர்
எத்துணை இனிமை அவரது படிப்பினை!
படிப்பினை ஏற்று மறைபொருள் உணர்ந்து
''காதலர்க் கேற்ற காதலியாக
என்றும் வாழ்வேன் உண்மையும் உறுதியும்
விளங்கு நற்றிரு மணவாட்டியென
வாழ்வேன்'' என்று வாக்கினைத் தந்தேன்
அதன்படி இன்றும் என்றும் வாழ்வேன்.

2. என் மணவாளர் என் இறைவனே!
எத்துணை இன்பம் எத்துணை இனிமை
சொல்லும் செயலும் நினைவும் நேரமும்
அறிவும் விழைவும் ஆற்றலும் எல்லாம்
இனி அவர்க்கே என்று வாழ்ந்திடுவேன்
மேலு மேலும் அவருக்கன்பு
செய்வது இனி என் ஒரே வேலை!

3. எத்துணை பேறு இனி என் வேலை!
அவர் மேல் என்றன் பார்வை செலுத்தி
அன்பால் அவரது நெஞ்சை உறுத்தல்
எத்துணை பேறு இக்காதல் அலுவல்!

4. அன்பரே உம் பார்வை என்மேல்
இன்புடன் செலுத்த இசைந்தபோது
கண்டேன் அவற்றின் அழகினைக் கண்டேன்
விண்ணக எழில் அதில் விளங்கக் கண்டுன்
அன்பும் என்உளம் பாய்ந்திட உணர்ந்தேன்
உம்மிடம் கண்டதை உம் எழில் முகத்தை
வணங்கி வழிபட அருளும் அடைந்தேன்.

5. மாசும் குறையும் மல்கியவள் யான்
எத்துணை இழிவு என் பவ நிலைமை!
விலக்கிட வேண்டா என வேண்டுகிறேன்
உன் திருப்பார்வை திருப்பிட வேண்டா!
முன்னைய பாவ மாசுகள் எல்லாம்
உன் ஒரு பார்வையில் மறைந்தே போயின
அத்திருப் பார்வை என்னிட மிருந்து
அன்றிலிருந்து திருப்பவே யில்லை!

**தலைமகன் :**

என் காதலியைக் கானகம் அழைத்துத்
தனிமையில் வதியும் அருளைத் தந்தேன்
அன்பெனும் அம்பால் தைக்கப் பெறவே
பாலை நிலத்தில் தவித்திட அழைத்தேன்.

**தலைமகள் :**

அன்பரே வாரீர் காதற் சிகரம்
ஏறிச் செல்வோம் ஆண்டு இருவரும்
உமது எழிலில் ஒருவரை யொருவர்
காண்போம் கண்டு இன்பம் கொள்வோம்
அறிவுக்கெட்டா மறைபொருள் வாழ்வில்
நுழைந்து இன்பம் நுகர்ந்திடு வோமே.

2. காரிருள் கவ்விய குகையில் நுழைவோம்
ஒளியே நுழையா இடத்துட் செல்வோம்
உலக வாழ்வின் இருளைச் சுவைத்து
உண்மைக் காதல் இலக்கண மறிந்து
உலகினர்க்கு வழி காட்டிடுவோம்.

3. இருள் படர் குகையில் நுழைந்து உண்மைக்
காதல் இலக்கணம் யான் அறிந்த பின்
இறைவா என்றன் இதய நாதா
எதனைக் காண ஏங்கினேனோ
அதை எனக்கு நீயே காட்டுவை!
உயிருக்குயிராம் இறைவா உன்னுள்
நான் வாழ்ந்திட அருள் தந்திடுவை!

# பிற்சேர்க்கை - 2

## இறைவனை ஆன்மா அடையும் வழியில் பத்துப்படிகள்

ஆன்மா இறைவனை அன்பால் அடைவதற்கு
ஏற வேண்டிய ஏணிப்படிகள் பத்து—என
ஆன்மீக வாழ்வினை விளக்கும் ஞானாசிரியர்கள் கூறுவர்.

முதற்படி : **ஏக்கம்**

இந்நிலையில், இறைவனை அடைவதற்குப் பெருந் தடையாயுள்ள **பாவம்** என்னும் கொடுமையை எண்ணி, ஆன்மா பெரிதும் வருந்தி வெதும்பும். இறைவனல்லாத எப்பொருளும் ஆன்மாவுக்கு ஒருவித வெறுப்பையே ஊட்டும்.

நோயாளிக்கு உணவின்மீது விருப்பம் உண்டாவதில்லை; அவன் உடலும் வெளிறிவிடும். அங்ஙனமே இறைவன் மீது ஏக்கம் கொண்ட ஆன்மாவுக்கு, வேறெதன் மீதும் விருப்பம் செல்லாது. ஏக்கமிகுதியால் உடலும் நலியக் கூடும்.

(இதிலிருந்து இந்த ஏக்கம் உண்மையில் மிக மிகத் தீவிரமானது என அறிக). இது கடவுள் தியானத்தில் உயர்ந்த நிலையாகும். தொடக்கத்திலேயே கிட்டும் பேறு அன்று. வெகு காலம் கடவுள் தியானத்தில் திளைத்த பின்னரே, ஆன்மா இந்த ஏக்கத்தைச் சுவைக்கக்கூடும்.

இரண்டாம்படி : **தீவிர முயற்சி**

இறைவனை அடைவதற்கு ஆன்மா செய்யும் தீவிர முயற்சி, ஓயாமல் சலியாமல் இதே எண்ணத்தில் அமிழ்ந்து செயலாற்றும். இந்த முயற்சியில் ஆன்மா எந்த அளவுக்கு ஈடுபட்டுள்ளதெனில் நினைவு, சொல், செயல் எல்லாமே அவனைப்பற்றியதாயிருக்கும். எங்கும் எப்பொழுதும் தன் ஆன்ம நாயகனையே நாடி நிற்கும். உண்டாலும் உறங்கினாலும் விழித்தாலும் அவரைப்பற்றிய கவலையாகவே இருக்கும். தன்னைப்பற்றிச் சிறிதும் மன நிறைவு அடையாமல் அங்கலாய்க்கும். அம்பினால் தைக்கப்பட்டது போலத் துடி துடிக்கும். ஏதோ ஒரு நெருப்புத் தன்னைச் சுட்டெரிப்பது போல உணரும்.

மூன்றாம்படி : தன் இழிநிலை உணர்தல்

இப் படியில், ஆன்மா இறைவனுக்காக எவ்வளவு செய்தாலும் போதாதென்று நினைக்கும். எத்துணை பெரிய காரியங்களைச் சாதித்தாலும், அவற்றையெல்லாம் ஒரு பொருட்டாக எண்ணாது. இறைவன் அளவில்லா மதிப்புக்கும் அன்புக்கும் உரியவர் என்னும் எண்ணம் ஆன்மாவைப் பெரிதும் ஆட்கொண்டிருப்பதால், தான் அவருக்குச் செய்யும் சேவையும் காட்டும் அன்பும் எவ்வளவு அற்பமானது என்று கருதும். கருதுவதோடு, இதை எண்ணி எண்ணி, மிகுந்த வேதனைக்குள்ளாகும். 'நான் ஒன்றுக்கும் பயன்படாத ஆன்மா, என் வாழ்வு பயனற்றதொரு வாழ்வு; நான் செய்வதும் பயனற்றது!' என்று மனம் வெதும்பும். இத்தோடு நில்லாமல், 'என்னைவிடக் கேடுகெட்டவர், என்னைவிட இழிந்தவர் இருக்கவும் இயலுமோ?' என்று எண்ணி வருந்தும். 'இறைவனுக்குச் செலுத்த வேண்டிய அன்பும் மதிப்பும் நான் செலுத்தவில்லையே!' என்று வருந்தி, நாணித் தலை குனியும். தன்னைப்பற்றிப் பெருமையாகவோ, மனத்திருப்தியுடனோ எண்ணுவதற்கு இடம் தராது. இறைவன் தன்மீது காட்டிய, காட்டிவரும் அன்பை எண்ணும்போது, தன் இழி நிலையை நன்குணரும்.

நான்காம்படி : துன்பத்தில் ஆழ்தல்

இப் படியில் ஆன்மா, ஒருவிதத் துன்ப நிலையில் ஆழ்ந்துவிடும். எனினும், தன் காதலரை நினைந்து மனம் உருகுமேயன்றிச் சலிப்படையாது. அன்புள்ள இடத்தில் அனைத்தும் எளிதாகும் என்னும் கூற்றுக்கு ஏற்ப வருத்தமும் வேதனையும் தருவதுகூட இந்நிலையில் விரும்பத்தக்கதாகிவிடுகிறது.

இந்நிலையில் சகசமாக ஏற்படும் கீழ்த்தர ஆசைகள் தலை தூக்கி நிற்பதில்லை. ஓரளவு அடங்கிவிடும்.

வருத்தம் எவ்வளவு மிகுந்தாலும் தன் காதலர் தரக்கூடிய ஆறுதலையும் இனிமையையும் தேடி நிற்காமல், 'அவருக்கு எங்ஙனம் நான் முழுதும் உகந்த ஆன்மா ஆவேன்!' என்னும் ஒரே எண்ணத்தில் முழு முச்சுடன் பணிபுரியும். 'இவ்வளவு நன்மையை - அவரது காதலைப் பெற்றுக்கொண்ட பின்னர்,

அவருக்குத் தக்கநன்றியும் கைம்மாறும் செய்ய வேண்டாவா!' என்று ஒரே கருத்தாய் உழைக்கும்.

''என் ஆசை நாயகனே, உமக்கு அன்பு செய்வதால், என் சொந்த லாபத்தைக் கருதாமல் உம்மையே நாடி, உமக்கென்றே வாழ அருள்புரியும்!'' என்பதே ஆன்மாவின் வேண்டுதலாய் இருக்கும்.

ஐந்தாம்படி: **ஏக்கமிகுதி**

இப் படியில் ஆன்மா இறைவனை அடைய மேலும் ஏங்கு கிறது. அவர்மீது தணிக்க முடியா ஆவல் கொள்கிறது. தன் காதலரை அரவணைத்து அவரோடு இணைந்து வாழ எவ்வளவு ஏங்குகிறதென்றால், உலகில் வாழும் ஒவ்வொரு கணமும் நீண்ட தொரு வேதனையாய்த் தோன்றும். 'என் அன்பரை அடைந்து விட்டேன்!' என்று நினைக்கிற அளவுக்குத் தான் இறைவனை நெருங்குவதாக உணரும். ஆனால், அவர் இன்னும் பெருந் தொலைவில் உள்ளவராகவே உள்ளதை எண்ணிப் பரிதவிக்கும். இதனால் உள்ளத்தில் அன்பு பெருகுகிறதேயன்றி குறைவ தில்லை.

ஆறாம்படி : **இறைவனை நோக்கித் தாவுதல்**

இப் படியில் ஆன்மா இறைவனை நோக்கித் தாவி ஓடுகிறது. இறைவனும் ஆன்மாவை, அரியதொரு முறையில் பல முறை 'தொடுகிறார்.' இந்தத் தொடுதலாவது உள்ளத்தில் உணர்வைப் பெருக்குவதாகும். இதன் விளைவாக இறைவன்பால் ஆன்மா தீவிரமாக இழுபடுகிறது. இங்ஙனம் ஆன்மா இறைவனை நோக்கித் தாவுவதன் காரணம், ஆன்மா இந்த நிலையில் மிக மிகப் புனிதமாகியுள்ளதே. இறைவனை நெருங்க நெருங்க ஆன்மா, தீயை நெருங்கும் இரும்புத்துண்டு தீ மயமாவது போல், இறைவன் மயமாகிறது எனலாம். இறைவனைப் போல் மாற மாற, ஆன்மா இறைவனை நெருங்க வேண்டியதுதானே!

ஏழாம்படி : **தெய்வீகத் துணிச்சல்**

இப் படியில் ஆன்மாவுக்கு ஒருவித தெய்வீகத் துணிச்சல் உண்டாகிறது. துணிவுடன் இறைவனிடம் பெரிய வரங்களைத் தருமாறு மன்றாடும். தனக்காக அன்று இங்ஙனம் வேண்டுவது;

தான் அன்பு செய்யும் இறைவனின் திருநாமம் அனைவராலும் போற்றப்படவேண்டும்; அவரது அன்பை அனைவரும் உணர்ந்து அவருக்குரிய அன்புக்கடனை அவருக்குச் செலுத்த வேண்டும்; ஆன்மாக்கள் எல்லாமே அவரை நெருங்கி, அவரது தெய்வீகக் காதலைச் சுவைத்து, அவரது அன்பில் திளைக்க வேண்டும் என்றெல்லாம் இறைஞ்சி மன்றாடுகிறது. தனக்குத் தேவையான வரங்களையும் துணிவுடன் கேட்டுப் பெறுகிறது. இந்த நிலையில் தன்னுள் விவரிக்க இயலா அக்களிப்பும் பெரு மிதமும் எழுவதாக உணர்கின்றது ஆன்மா.

எட்டாம்படி : **இறைவனின் அரவணைப்பு**

இங்கு, ஆன்மா தன் காதலராகிய இறைவனை அரவணைத்து இன்புறும். 'நான் தேடிய நாதனைக் கண்டேன்; இனி அவரை விடேன்!' என்று அவரது அரவணைப்பில் நிலைத் திருக்கத் தீவிரமாக விரும்பும். ஆனால், இத்தகைய அரவணைப்பும் இன்பமும் எப்போதும் நீடிப்பதில்லை. நீடிப்ப தாயிருந்தால், இவ்வுலகமே மறுவுலக இன்பமாக மாறிவிட்டது என்று பொருளாகும். இஃது இயலாத காரியம். இவ்வுலகில் வாழும் வரையில் இறைவனின் இன்பத்தை நீடித்த விதமாக அனுபவிக்க இயலாது. இடைவிடாத இன்பம் மறுமைக்கு மட்டுமே உரியது. அதனால்தான் அதைப் **'பேரின்பம்'** என்கிறோம்.

ஒன்பதாம்படி : **அன்பால் பற்றி எரிதல்**

இந்நிலையில் ஆன்மா ஒருவித தெய்வீக அனலால் பற்றி எரிகிறது. இறைவனுக்குள்ளேயே ஆன்மா நுழைந்துவிட்டது போல இருக்கும். இந்தப்படியில் ஆன்மா துய்க்கும் இன்பம் எளிதில் உணரவும் இயலாது; விவரிக்கவும் இயலாது. ஆன்மா இறைவனுடன் இணைந்து, அளவிட இயலாத இனிமையைச் சுவைக்கிறது. இந்த நிலை உண்மையாகவே புனிதமடைந்த ஆன்மாக்களுக்குரியது. உலகின் மாசு ஒரு சிறிதும் இன்றி, பாவத்தோடு எவ்விதத் தொடர்புமின்றி, மிகமிக உயர்ந்த நிலையில் இருக்கும் இத்தகைய சால்பு நிலை அடைபவர்கள் சிலர் என்றே சொல்ல வேண்டும். ஆனால், உண்மையான ஆர்வமுடன் இறைவனை நாடினால் அடைய இயலாததன்று!

பத்தாம்படி : பேரின்பம்

இப் படி, இவ்வுலக வாழ்க்கைக்குரியதன்று. மறுமைப் பேரின்ப நிலை - இறைவனை நேர்முகமாகக் கண்டு அளவிட இயலா இன்பத்தில் ஆழ்ந்த நிலை. இறைவனை உள்ளது போலவே அகக்கண்ணால், அவரே தரும் ஒளியால் காணக் கூடிய நிலையாகும்.

## ஊடல் உவகை
### சுருக்கம்

மேற்கூறப்பட்ட பிணக்கினால் இறுதியில் உண்டாகும் பேரின்பம்.

1321. ''இல்லை தவறவர்க்கு ஆயினும் ஊடுதல்
வல்லது அவர்அளிக்கு மாறு.''

அவரிடம் குற்றம் எதுவுமே இல்லை. எனினும் பிணங்குதல் அவரை நம்மிடம் இன்னும் அதிக அன்பு காட்டுவதற்கு உள்ள அருள் திட்டமாகும். இது குற்றம் எதுவுமே இல்லாத பேரின்பக் காதலர்க்கு மட்டுமே பொருந்துவது காண்க.

1322. ''ஊடலில் தோன்றும் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும்.''

மேற்கூறிய 'பிணங்கு'தலால் உண்டாகும் துயர் சிறியதே. ஆனாலும், பேரின்பக் காதலர் காட்டும் அரிய அன்பு வாடுவது போல் தோன்றினும், அது வெறும் தோற்றமே. உண்மையில் அது பெருகுகின்றது. (இம்மைக் காதலரிடை இது நிகழ்கிறதோ இல்லையோ, பேரின்பக் காதலன் - ஆன்மா இவர்களிடை இது நிகழ்வதுண்டு).

1323. ''புலத்தலின் புத்தேள்நாடு உண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து.''

நிலத்துடன் நீர் கலப்பது போன்ற ஒன்றிப்புள்ள காதலரிடம், இப்பிணக்கத்தால் நிகழும் இன்பத்துக்கு இணையானது தெய்வ லோகத்திலும் இல்லை. மறுமை வாழ்வில் இத்தகைய பிணக்கமும் இராது. அதனால் அன்பும் அருளும் வளர்வதும் இராது. இவ்வுலகில் உள்ளவரையே இறைவனுக்

காக (ஐந்தவித்தானைச் சிந்தித்த வண்ணமாக) சிறிது துன்புற்று அன்பைப் பெருக்கவியலும்.

'அன்பைப் பெருக்கி நம் ஆருயிரைக் காக்க வந்த இன்பப் பெருக்கு ஆகும்' இறைவன் அவனேயன்றோ! அன்பெல்லாம் அன்பாகிவிடாது. பிறர்க்காக - சிறப்பாக இறைவனுக்காகப் படும் துன்பமே அன்பிற்கு உன்னத அத்தாட்சியாகும்.

1324. "புல்லி விடாஅப் புலவியுள் தோன்றுமென்
உள்ளம் உடைக்கும் படை."

இறைவனாகிய காதலரை இடைவீடாமல் அணைப்பதற்கு ஆயத்தம் போன்றுள்ள இப்பிணக்க நிலையே, என் உள்ளத்தின் பாவ நிலையை உடைத்து அவரிடம் முடிவின்றி ஈடுபடுத்தக் கூடிய ஆயுதம் ஆகின்றது.

1325. "தவறில ராயினும் தாம்வீழ்வார் மென்றோள்
அகறலி னாங்கொன்று உடைத்து."

இறைவன் எத்தவறும் இலராயினும், தம்மால் விரும்பப் படும் ஆன்மாக்களைத் தழுவாமல் நீங்கியிருக்கும் நிலையிலும் இனம் தெரியாத ஓரின்பம் உள்ளதை அறிதல் வேண்டும் - இவ்வின்பம் ஆன்மாவுக்கும் உண்டு. அன்பு செய்யப்பட்டார்க் காகத் துன்புறுதலால் இறைவனுக்கும் உண்டு. இத்தகைய நிலையால் அன்பு பெருகும் என்பதால்.

1326 "உணலினும் உண்டது அறல் இனிது காமம்
புணர்தலின் ஊடல் இனிது."

உண்பதிலும் உண்டதைச் சீரணித்தல் நன்று (இல்லையேல் துன்பம்). அங்ஙனமே ஆர்வமிக்க காதலுக்குக் கூடி மகிழ் வதைவிட, ஊடி (கூடாமல்) அன்பை வளர்ப்பது இனிதாகும்.

1327. "ஊடலில் தோற்றவர் வென்றார் அதுமன்னும்
கூடலில் காணப் படும்."

பிணக்க நிலையில், எல்லாம் இழந்தோம் என தளர்ச்சி யடையாதவரே வெற்றி பெற்றவராவர். அவ்வெற்றி கூடுதலில்- ஒன்றிப்பில் காணப்படும். தளர்ச்சியடைந்தால் பின்னர் கூடுவது இயலாததாகிவிடும்.

1328. ''ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
கூடலில் தோன்றிய உப்பு.''

இறைவனும் ஆன்மாவும் கூடும்போது உண்டாகும் இனிமை (உப்பு) பிணக்கத்தால் மறைந்துவிடுகின்றது. மீண்டும் அவ்வினிமையைத் துய்க்க, அஃதாவது இறைவனோடு இணைய ஆன்மா விழைதலைக் கூறும் குறள். பிரிவதும் சேர்வதும் இன்றி ஒரே நீடித்த இன்பத்துக்காக ஆன்மா ஏங்குவதைக் கூறுவது.

1329. ''ஊடுக மன்னோ ஒளியிழை யாம்இரப்ப
நீடுக மன்னோ இரா.''

ஆன்மா இறைவனோடும், இறைவன் ஆன்மாவோடும் பிணங்கி (பிரிந்து) நிற்கும் நிலை தீரும்படியாக 'இரந்து' கொண்டிருப்பதே ஆன்மா இனி செய்ய வேண்டியது. ஆன்மா ஒருவித இருள் படர்ந்த நிலையில் இவ் 'இரத்தல்' சிறப்பாக அமைதல் நன்று. விடாமல் இரந்து, கெஞ்சி மன்றாடி இறைவனின் அருள் அன்பைப் பெற முயன்றுகொண்டே இருத்தல் வேண்டுமென்பது கருத்து. பேரின்பம் நெருங்கி வருங் காலத்தில் இதுதான் ஆன்மா செய்ய வேண்டியது.

1330. ''ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்.''

'பிணங்கு' வதால் காதல் பெருகி இன்பம் அதிகரிக்கும். அதைவிட மேலான இன்பம் வாழ்க்கை இறுதியில் நீடு வாழ்வு மலர்கையில் இறைவனோடு முடிவில்லா இன்பம் பெறுதல். அந்த இன்பத்தைப் பெற்றால்தான் (பெறின்) மனித வாழ்வின் இறுதிக்கதி நிறைவேறும்; வீடு பேறு கிடைக்கும். 'பெறின்' என்றது சிற்றின்பத்தில் மூழ்கியிருந்தால் பெற இயலாது என்பதை உணர்த்த (இம்மைக் காதலரைப் பொறுத்த மட்டில் 'பெறின்' என்பதில் பொருள் இல்லை).

''சிற்றின்பம் வெஃகி அறன்அல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.''

(173)

என்னும் குறளுக்குப் பேரின்பம் வேண்டாதவர் அறன் அல்ல செய்வார். அன்னார் இறைவனோடு கூடி இன்புறுதல் இயலாது என்றவாறு.

முற்றும்.

  

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

(எண் : பக்க எண்)

